திருச்சிற்றம்பலம்.

கோனேரியப்ப நாவலரியற்றிய

# உபதேசகாண்டம்.

திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீன மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ




## அம்பலவாண தேசிக சுவாமிகள்

கட்டளையின்படி,

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் மாஜி தமிழ்ப்பண்டிதரும்,
உரையாசிரியரும் சைவப்பிரசாரகருமாகிய

ராக்காடு

## இரத்தினவேலுமுதலியாரவர்களாற்

பொழிப்புரை யெழுதுவித்து,

## மேற்படி மூலமும் உரையும்

தமிழ்ப்பண்டிதர்

## வல்லி-ப-தெய்வநாயக முதலியாரவர்கள்

பார்வையிட்டு,


சென்னை
பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்திற்
பதிப்பித்தனர்.

பரிதாபி ஞு மகரரவி.

1913.


 [இதன் விலை ரூபா. 4-8-0.

# நூலாசிரியர் சரித்திர சங்கிரகம்.



சான்றோர்மலிந்த தொண்டைநாட்டில் பெருஞ்சிறப்பமைந்த காஞ்சி நகரத்தில், இற்றைக்குச் சுமார் 1126-வருடங்கட்கு முன்னர்ச் **செங்குந்தர்** மரபில், **சிவானந்தமுதலியாரும்** அவர் மனைவி **அமுதாம்பிகையாரும்** சிவபக்திமிக்காராயிருந்தவர்கள் மகப்பேறின்றிக் குகாலயமொன்றமைத்து, அதனருகே ஒருதீர்த்தங் கண்டு அதனைக் **குகனேரி**யெனப் பெயரிட்டு வழிபாடியற்றிப் பன்னெடுநாட் பின்னர், தாம்பெற்ற புதல்வனுக்குக் **குகனேரியப்ப**னென நாமகரணஞ்செய்தனர். குகனேரியென்பது கோனேரியெனப் பிற்காலத்து மருவியது போலும்.

இவர் ஐந்தாமவயதில் வித்தியாரம்பஞ்செய்யப்பெற்று பண்டைப்புண்ணியத்தாற் கற்றுவல்லுநராய், தமது குலகுருவும் அக்காலத்திற் குமரகோட்டத்தருச்சகரும் குமாரக்கடவுளின் திருவருளுடையருமாகிய ஸ்ரீ **கச்சியப்ப சிவாசாரியர்**பாற் சமயதீக்ஷைபெற்றுத் தேவார திருவாசகமுதலிய திருமுறைகளையும் வடமொழியில் இதிகாசபுராணாதிகளையுந் தேர்ந்து உபயகலாவல்லுநராயினர். பின்னர் விசேஷதீக்ஷைபெற்றுக்கொண்டு சைவசித்தாந்த சாஸ்திரங்களைக்கற்று, சிவபூசைபெழுந்தருளச்செய்துகொண்டு குகப்பெருமான் சந்நிதியிலும் ஆசிரியர் சந்நிதியிலும் அணுக்கத்தொண்டராயமர்ந்திருந்து, சிலகாலத்திற்குப்பின்னர் நிர்வாண தீக்ஷையெய்திச்சிவாகமங்களையாராய்ந்து சிவத்தியானபரராய் வீற்றிருக்கையில், இவரதாசிரியராகிய ஸ்ரீகச்சியப்ப சிவாசாரியசுவாமிகளைக் குமரகோட்டத்திறைவர் "திகடசக்கரச்செம்முகமைந்துளான்" எனமுதலடி தந்தருள, அஷ்டாதசமகாபுராணங்களிலொன்றாய ஓரிலக்ஷங்கிரந்தமுடையதாய ஐம்பதுகாண்டங்களுடையதாய விளங்கும் ஸ்காந்தமகாபுராணத்தின் சநற்குமாரசங்கிதை சூதசங்கிதை சங்கரசங்கிதை விஷ்ணுசங்கிதை பிரமசங்கிதை சூரியசங்கிதையெனும் ஆறுசங்கிதைகளிலொன்றாகிய சங்கரசங்கிதையின் பன்னிருகண்டங்களிலொன்றாகிய சிவரகசியகண்டத்தின் உட்பிரிவுகளெனுஞ் சப்தகாண்டங்களில், உற்பத்திகாண்டம் அசுரகாண்டம் மகேந்திரகாண்டம் யுத்தகாண்டம் தேவகாண்டம் தக்ஷகாண்டமென்னும் ஆறுகாண்டங்களையும் தமிழ்ச்செய்யுட்களாகப்பாடிமுடித்து, இறுதியதும் ஏழாவதுமாகிய இவ்வுபதேசகாண்டத்தை அங்ஙனமே தமிழ்ப்பாக்களாற்பாடும்படி இவருக்குக் கட்டளை தந்தனர்.

ஆசிரியர் கட்டளையைச் சிரமேற்றாங்கிய இவர் தமிழ்நாடு தழைத்தோங்க நவரசாலங்காரசொற்சுவை பொருட்சுவைகளோடு 4348 செய்யுட்களாகப்பாடிமுடித்து, ஆசிரியர் விருப்பின்படி குமரகோட்டச்சந்நிதியில் வடமொழித் தென்மொழிப்பண்டிதர்களும் பிறரும் நிரம்பிய பெருஞ்சபையில் அரங்கேற்றினர். பின்னர், பலகாலம் சிவாநுபூதிச்செல்வராக வாழ்ந்திருந்து நற்றவப்பேறுற்று சிவபெருமான் திருவடி நீழலில் இரண்டறக்கலந்தனர்.

### கச்சியப்ப முனிவரருளிய வெண்பா.

"அன்றாழி நின்றுதித்த வாரமுதை யொப்பிடுவர்
பொன்றாமைக் கேயதுவாம் புந்திநினை - தொன்ற
வுகுநேரிற் றாருவென லொக்குமலால் வேறென்
குகனேரி நாவலனுக் கு."

குகப்பெருமான் பிரமோற்சவதினமொன்றிற் பெருமழைபெய்து உற்சவந் தடைபடுவதுநோக்கி, இவர் "காக்கு மழைக்குங் கவலேங் கடுஞ்சிறையாற், சூர்க்குடைந்த விண்ணைச் சுகத்திருத்தி-யூர்க்குள்விடுங், கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்த, லந்தமோ வாகண்டலா" எனப்பாடித்தடுத்தனரென்றும் இன்னுஞ் சிற்சில அமையங்களில் சாதுரியமாகவும் அற்புதமாகவும் பலசெய்யுள்களியற்றியுள்ளாரென்றுங் கூறுவர்.

உ

கடவுள் துணை.

# உபதேசகாண்டச் சருக்க அட்டவணை.


| நெ. | சருக்கம். | பக்கம் | பாடற்றொகை. |
|---|---|---|---|
| | விநாயக வணக்கம். | 1 | 1 |
| | வாழ்த்து. | 2 | 2 |
| | கடவுள் வாழ்த்து வணக்கம். | 2 | 7 |
| | அவையடக்கம். | 5 | 2 |
| 1 | கைலைமான்மியச்சருக்கம். | 6 | 75 |
| 2 | சூராதிகளொடுக்கச்சருக்கம். | 25 | 137 |
| 3 | அயமுகிசருக்கம். | 58 | 82 |
| 4 | மாயைசருக்கம். | 75 | 12 |
| 5 | விபூதிமான்மியச்சருக்கம். | 78 | 209 |
| 6 | உருத்திராக்கமான்மியச்சருக்கம். | 124 | 254 |
| 7 | பஞ்சாக்கரமான்மியச்சருக்கம்.. | 182 | 138 |
| 8 | சிவநாமமான்மியச்சருக்கம் | 213 | 174 |
| 9 | சிவவிரதமான்மியச்சருக்கம் | 248 | 414 |
| 10 | சிவபுண்ணியமான்மியச்சருக்கம். | 346 | 426 |
| 11 | சிவபுராணமான்மியச்சருக்கம் | 445 | 57 |
| 12 | சிவத்துரோகிகளெய்துமநரகவேதனைச்சருக்கம். | 459 | 504 |
| 13 | சிவபூசைமான்மியச்சருக்கம் | 575 | 117 |
| 14 | மச்சாவதாரச்சருக்கம். | 603 | 26 |
| 15 | கூர்மாவதாரச்சருக்கம். | 610 | 105 |
| 16 | வராகாவதாரச்சருக்கம். | 634 | 34 |
| 17 | நரசிங்காவதாரச்சருக்கம். | 642 | 52 |
| 18 | வாமனாவதாரச்சருக்கம். | 656 | 68 |
| 19 | பரசுராமாவதாரச்சருக்கம் | 673 | 56 |
| 20 | இராமாவதாரச்சருக்கம். | 687 | 17 |
| 21 | பலபத்திராமாவதாரச்சருக்கம். | 692 | 2 |
| 22 | கிருஷ்ணாவதாரச்சருக்கம். | 693 | 3 |
| 23 | மாயன்வரம்பெறுசருக்கம். | 694 | 30 |
| 24 | நரகாசுரன்வதைச்சருக்கம். | 701 | 40 |
| 25 | திருமால்சிவார்ச்சனைச்சருக்கம். | 711 | 48 |
| 26 | பிரமன்சிவார்ச்சனைச்சருக்கம் | 724 | 47 |
| 27 | இந்திரன்சிவார்ச்சனைச்சருக்கம். | 735 | 72 |
| 28 | திரிபுரவிசயச்சருக்கம் | 754 | 279 |
| 29 | அந்தகாசுரன்வதைச்சருக்கம்.. | 818 | 36 |
| 30 | பண்டாசுரன்வதைச்சருக்கம்... | 827 | 72 |
| 31 | அரிபிரமாதியர்பூசனைச்சருக்கம். | 843 | 40 |
| 32 | சனகாதியர்சிவார்ச்சனைச்சருக்கம். | 854 | 150 |
| 33 | வாணாசுரன்பூசனைச்சருக்கம். | 889 | 233 |
| 34 | மன்மதன்சிவார்ச்சனைச்சருக்கம். | 944 | 43 |
| 35 | கிருதுசிவார்ச்சனைச்சருக்கம். | 953 | 19 |
| 36 | இலக்குமி, பூமிதேவி, சகத்திராமார்ச்சனைச்சருக்கம். | 959 | 30 |
| 37 | சிவார்ச்சனைமான்மியச்சருக்கம் | 966 | 17 |
| 38 | குருமான்மியச்சருக்கம். | 970 | 33 |
| 39 | சரியையாதிமான்மியச்சருக்கம். | 977 | 50 |
| 40 | மூர்த்திவிசேடச்சருக்கம். | 991 | 35 |
| 41 | சிவகாட்சிப்பேற்றுச்சருக்கம். | 998 | 93 |

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந்துணை.

# உபதேசகாண்டம்.

## மூலமும் உரையும்.



### காப்பு.

விநாயகவணக்கம்.

கலிநிலைத்துறை.

குழவி வெண்பிறை மிலைச்சியோற் குனித்தமா தவத்தி
னிழைத்தட் டப்புன லருவிதா ழிமயமீன் றளித்த
மழைம தர்த்தகண் மரகதப் பசும்பிடி பயந்த
தழைம டற்செவித் தந்திபொற் சரணமே சரணம்

(இ-ள்) வெள்ளிய இளஞ்சந்திரனை (சடையில்) அணிந்த சிவபிரானை நோக்கிச் செய்த பெருந்தவத்தால், ஊர்கின்ற மிக்க நீரானது அருவியா யொழுகும் இமயாசலமன்னன் பெற்ற, குளிர்ந்து மதர்த்த விழிகளையுடைய மரகத நிறந்தங்கிய பசிய பிடியானை போன்ற (நடையினை வாய்ந்த) உமாபிராட்டியார் ஈன்றருளிய, தழைத்த மடல்போலுந் திருச்செவிகளையுடைய யானைமுக விநாயகப்பெருமானது அழகிய திருவடிகளே எனக்குப் புகலிடம். எ-று.

தக்ஷப்பிரசாபதியின் சாபத்தால் தன் கலைகள் குறைந்து பல தேவராலும் நீக்க முடியாது எஞ்சியவொரேகலையுடன் தம்மையடைந்த சந்திரனைச் சிரமீசை யணிந்து அஃதாங்கிருத்தலால் வளர்வும் தக்ஷசாபத்தால் தேய்வும் வரமளித்த வராகலிற் சிவபிரானை "குழவி வெண்பிறை மிலைச்சியோன்" என்றும், இமயாசலமன்னன் மலைவடிவாகலின் அதற்கிணைய உமாபிராட்டியாரை "ஈன்ற மரகதப்பசும்பிடி" என்றும், விநாயகப்பெருமானைப் பிடிபயந்த என்றுங் குறிப்பாலும், அவரது உத்தமாங்கமாகிய சிரம் யானைவடிவாதலாலும் "தழைமடற் செவித்தந்தி" என்றுங் கூறினார். இஃது உருவகவணி.

"முராரியாதிய தேவர்கண் முதலுறு முழுதுல கினிலுள்ளோர், விராவி யாதொரு காரியமாயினும் விளங்குறச் செயவென்றே, பராவி யுன்னருச் சனைசெய்வோர் மனத்துறு பான்மைதந் தருளுநன்னன், பிராது செய்பவர் காரிய மூறுசெய் திடுதியென் றிவைசொன்னான்" எனும் விநாயகபுராணத்தின்படி முதற்கண் வணங்கப்படு கடவுள் விநாயகராதலின், இந்நூலாசிரியர் தாமெ டுத்துக் கொண்ட காரியம் முட்டின்றி முடியக்கருதி இச்செய்யுள் கூறியதாம்.

# பாயிரம்.



## வாழ்த்து.



### கலிநிலைத்துறை.

திங்களஞ்சடை யெம்பிரான் றிருவருள் பெருக
பொங்கு திங்கண்மும் மாரியும் பொழிகபூ தலத்தி
லெங்க ளையகன் றிருக்கூட்டத் தொண்டர்சீ ரேற
தங்கு நான்மறைச் சைவநூ லோங்கறந் தழைக.

(இ - ள்) சந்திரனை யணிந்த அழகிய சடையையுடைய எமது சிவபிரானது திருவருள் பெருகுக. மிகுந்த மும்மாரி மாதந்தோறுஞ் சொரியக்கடவன. எங்களிறைவராகிய பரமேச்சுவரனது உண்மையடியார்கள் பூலோகத்தில் ஓங்குக. பொருந்திய நான்கு வேதங்களின் கருத்தாகிய இருபத்தெட்டுச் சிவாகமங்களிற் கூறப்பட்ட சிவபுண்ணியங்கள் தழைக்கக்கடவன. எ - று.

சிவபிரான் திருவருட் பெருக்கத்தாலேயே மாதம்மும்மாரி பெய்தலும், அடியவர் சீரேறுதலும், வேதசிவாகமதருமங்கள் செழித்தலும் உண்டாக வேண்டுதலின், அவ்வடைவுபெற இவ்வாழ்த்துக்கூறியதாம். (க)

மான வெண்குடை யிறைவனசெங் கோனெறி வளர்க
வேனை மன்பதை மன்னுயிர் சிறக்கவெவ் ஞான்றும்
வான மீச்செலுங் கடவுளி ருவரும் வாழ்க
பேன வாரிதி நெடுநிலப் பலவளம் பெருக.

(இ - ள.) மாட்சிமைபெற்ற சந்திரவட்டக் குடையின் கீழ்ச்சிலுள்ள மன்னவன் செங்கோல் முறைப்படி வளரக்கடவது. மற்றைய மனிதர்களும் நிலைபெற்ற சீவராசிகளும் சிறப்புறுக. எக்காலத்திலும் ஆகாயவழியே செல்லாநிற்குஞ் சூரிய சந்திரர் (எனும் பிரத்தியட்ச தேவர்) இருவரும் வாழக்கடவர். நுரைபொருந்திய நெடிய அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற பெரிய நிலவுலகத்திலுள்ள பல வளங்களும் அதிகமாகுக. எ - று.

பேனம் = நுரை. (உ)

---

## கடவுள்வணக்கம்.

### சிவபெருமான்.

விரவு மாயிரந் திருமுகப் பகீரதி விரிக்கு
முரவு வெண்டிரை யொருபுறங் கலிப்பவொண் சடைமே
லரவ கன்பண மொடுங்குற வருநடம் புரியும்
பரம னங்கதப் பரிபுரப் பதம்பணி குதுமே.

(இ - ள்.) ஒளிபொருந்திய சடையின்மேல், ஆயிரந் திருமுகங்களையுடைய கங்கையானது பரவச்செய்யும் ஓசைபொருந்திய அலைகள் ஒரு பக்கத்தில் மோதவும், (அதைக் கண்டமாத்திரத்தே பயந்து) அச்சடையிற் பொருந்திய

சர்ப்பங்கள் படர்ந்த படங்களைச் சுருக்கிக்கொள்ளவும், அரிய ஆனந்தத்தாண்டவ மியற்றியருளும் சிவபெருமானது சாப்பமாகிய சிலம்பணிந்த திருவடிகளைப் பணிவோம். எ - று.

அருநடமென்றது பஞ்சகிருத்தியங்களும் நிகழச்செய்யும் நடனமாதலின். இதனை "தோற்றந் துடியதனிற்றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமா, ஊன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி, நான்ற திருவடியி னாம்." — என்னும் உண்மை விளக்கத்தானறிக. பகீரதனாற் கொண்டு வரப்பட்டதாகலிற் கங்கை பாகீரதி யெனப்பெயர் பெற்றது. (௩)

### உமாதேவியார்.

உலகு மேருவு மண்டமு முறைமுறை யுதவி
யலகில பலவுயி ரளித்தவைக் களவையி னருளி
நிலவு வெண்பிறைச் சடிலமற் றோர்புடை நின்றாள்
மலர்சிலம்படி வழுத்துபு கருத்துற மதிப்பாம்.

(இ - ள்) எல்லாவுலகங்களையும், மேரு முதலிய மலைகளையும், எண்ணிறந்த அண்டங்களையும் வழிவழியாகத் தந்து, குற்றமில்லாத பலவகைச் சீவராசிகளையுங் காத்து, அவற்றிற்கு (புண்ணிய பாவங்களின்) அளவாக (போகாதிகளை) அநுக்கிரகித்து, சந்திரிகை வீசும் வெள்ளியபிறைச் சந்திரனை யணிந்த சடையையுடைய சிவபெருமானது வாமபாகத்தில் விளங்கும் உமாதேவியாரது சிலம்பணிந்த மலர் போன்ற திருவடிகளைத் துதிசெய்து மனத்தில் தியானிப்போம். எ - று. (௪)

### சுப்பிரமணியர்.

பூத்த கற்பகப் பொன்னுல கிமையவர்க் கிரங்கிக்
காத்த சேவகன் கடம்பணி பன்னிரு தடந்தோ
ளேத்து நாடொறுந் தழும்புமென் னாத்தட வரலாற்
சேர்த்த கிண்கிணிச் சிறடி சென்னிசேர்த் துதுமே.

(இ - ள்) மலர்ந்த கற்பகச்சோலை புடைசூழ்ந்த பொன்னுலகவாசிகளாகிய தேவர்களுக்குத் திருவுளமிரங்கி (அவர்க்குற்ற அசுரர் பயத்தினின்றும்) காத்தருளிய தேவசேனாதிபதியாகிய குமாரக்கடவுளின் கடம்ப மலர் மாலை தரித்த விசாலமான பன்னிரு திருத்தோள்களையும் நாடோறுந் துதி செய்வதால், தழும்பு பெறுகின்ற நமது நாவினை ஊர்தலினாலே, சிலம்பு கிண்கிணி மாலை யணிந்த அவ்விறைவரது சிறிய திருவடிகளைச் சிரசின்மேற் சேர்ப்போம்.

துதித்தலினிமித்தம் திருவடிகள் நாவிற் குடிகொள்ளுதலின் இவ்வாறு கூறினார். தடவரலாற்சேர்த்த சிறடி என வியையும். சிறு + அடி = சிறடி. ஆதி நீண்டது. இது சிற்றடியெனவும் வரும். (௫)

### திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

தெள்ளருந்தமிழ் வேட்கையிற் செலுத்துமென் சிறியே
னுள்ள மோர்தொறுஞ் சுவைப்பன வுமைதிரு முலைப்பால்
வள்ளமவாக்கினு னட்டிட மாந்திய கர்கிய
பிள்ளை சீறடித் தாமரை காதலம் பிரசம்.

(இ - ள்.) உமாபிராட்டியார் தமது திருமுலைப்பாலினைப் பொன் வட்டிலிற் பெய்து (சிவஞானத்துடன் மட்டித்து) பருகுவிக்கப் பருகியருளிய, சீகாழிப்பதியில் திருவவதாரஞ் செய்தருளிய ஆளுடைய பிள்ளையாரது சிறிய அடியாகிய தாமரை மலரில் துளித்து விரும்பினைச்செய்யும் அழகியதேன், தெளிந்த அருமை தங்கிய தமிழ்வேதத்திருப்பாசுரங்களில் ஆசையாற் செலுத்தும் தாழ்ந்த சிறியேன் மனம் உணருந்தோறும் இனியாநிற்கும். எ - று.

காழியெனும் நாகம் பூசித்த தலமாகலின் அது சீகாழி யெனப்பெயரெய்தியது. அருந்தமிழென்றது அதன் அற்புதங்களை விளக்கி. (சு)

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

முப்பி ணைத்திற மூவரிற் காட்டியோர் முதலாய்க்
கப்ப னைத்துமா ருயிரொன்கக் கவைத்தரு வாறே
கொப்ப னைத்திரு நாவினுக் கரசெனு மொருபே
ரப்ப னைத்தொழு தகற்றுது மும்மலத் தவலம்.

(இ - ள) முக்கிளைகளின் தன்மையை மும்மூர்த்திகளின் இயல்பால் விளக்கி, தானே மூலமாகி, அக்கிளைகளிற் கிளைக்கும் யாவும் அரிய உயிர்த்திறமாகக்கிளைத்த ஒரு தாரு [விருட்ச] ரூபமான பரமேசுவரனுக்கு உரிமையுடையவரும், திருநாவுக்கரசென்னும் ஒப்பற்ற திருநாமத்தை வகித்தவருமாகிய அப்பர் சுவாமிகளைப்பணிந்து (ஆணவம் காமியம் மாயை யென்னும்) மும்மலத்தாலுண்டாகிய துன்பங்களை விலக்குவாம். எ - று.

மரமெனச் சிவபெருமானைக் கூறியதற்கேற்ப, முக்கிளையென மும்மூர்த்திகளையும், கப்பு என உயிர்களையும் இனம்பற்றி உருவகஞ் செய்துளார். கப்பனைத்தும் என்றது வளர்ச்சி முதலிய அதன் சிறப்புக்களை. (எ)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

உரவு மென்னுளத் தறிகடிந் தொருவல தாகி
விரவு முத்தமிழ் மும்மதச் செருக்கொடு மேவுந்
தரவ ருங்களி மீக்கொளச் சங்கிலி யகற்றிப்
பரவை யிற்படிந் தாடுறு மொருதனிப் பகடு.

(இ - ள்.) சிவபெருமானுற் கொடுக்கப்பெற்ற சந்தோஷம் மதிகரிக்க, சங்கிலியைப்பிரித்து, பரவையில் மூழ்கி இன்புற்ற ஒப்பற்ற சிறந்த ஆண் யானை [சுந்தரமூர்த்தி சுவாமிகள்] மிகவும் வலிய என் இதயமாகிய கட்டுத் தறியை விட்டு நீங்காததாகி, கலந்துள்ள (இயலிசை நாடக மெனும்) முத்தமிழாகிய மும்மதத்தைச் சொரிந்துகொண்டு ஆநந்தித்திருக்கும். எ - று.

சங்கிலி - சங்கிலி நாச்சியார். பரவை - பரவை நாச்சியார். சுந்தரமூர்த்தி சுவாமிகளை யானை யென்றதற்கிணங்க, அதன் இயற்கையாகிய சங்கிலியகற்றலும் பரவையிற் படிதலும் தறியிற் கட்டுண்டு கிடத்தலும் மும்மதஞ் சொரிதலுங் காட்டிச்சிலேடைப் பொருட்படுத்தினர். இதுவும் உருவகம். (அ)

**மாணிக்கவாசகசுவாமிகள்.**

வரும்ப ரிக்கருள் வழுதிபாற் பொருடனை வரதன்
பெருந்து றைபபணி விடைக்குரித் தாக்கிய பெருமான்
திருநது வாதவூர்ச செம்மொழிப் புலவனைத திருததாள்
பொருநது மன்பினுற போறறிவைத தநுதினம புகழ்வாம்.

(இ - ள்.) குதிரைவாஙகி வரும்படி அரிமாததன பாணடியனளிதத பெருநதிரவியததை, திருப்பெருநதுறையில் சிவாலயத திருப்பணிககு உபயோகிததவரும், திருவாத வூரிற் றோன்றிய செவவிய வாக்கினையுடைய வருமாகிய மணிவாசகப் பெருமானை, அவா திருவடிகளிலுணடான உணமையன்புடன் வணஙகி, மனததிலிருத்தி நாடோறுந துதி செய்வாம். எ - று.

இச்செயயுளின் இறுதியடி "பொருநதினேன றனைப் போறறி நப்புனமை போககுதுமே" எனறும்பாடமுணடு. (௯)

---

**அவையடக்கம்.**

எழுப சுமபரி நுகமபிணித் தியககுவா னிரவி
மழைதொ டுஞசிகை வடவரை வலமவர ஞெககி
யிழுதை மடபரி யிசைபபது போலுமற றெளியேன்
முழுது ணாநதவா முன்னரின் மொழிதருந துணிபே.

(இ - ள்.) பசிய எழுபுரவியை நுகத்திற் பூட்டிய தேரினை ஆகாயவழியிற் செலுததுஞ் சூரியன், மேகமணடலமளாவிய சிகரஙகளையுடைய மகமேருவைப் பிரதக்ஷிணஞ் செயவதைககணடு, ஓரறிவிலலான் (தானும அஙஙனஞ்செயய அவாவி) மணணாற்செய்த குதிரையைத தேரிற்கட்டுவது போலும, முத்தமிழ் முழுதுணர் புலவா முன்னே, யானும் இப்புராணததைப் பாடவநத துணிபு (இருககுமன்றிப்பிறிதன்று), எ - று.

வடவரை - வடககின கணணுள்ள மலை. மேரு.

எழுபரி - எழுகுதிரைகளெனறும, சப்தா எனறும் பெயரையுடைய தொரு குதிரையெனறும நூலகள் மாறுபடககூறுகின்றன. (௧௦)

விளங்கு மாமணி மாசிடை மேவர வதனைத
துளஙக வேகடி தூரிசறுத தடுககுவா னதுபோ
லுளங்கொண் மேலவ ரென்கவிப புன்மையோாந தொதுக்கிக்
களங்க றுததுமற றெம்பிரான் கதையுணர்ந திவபபார்.

(இ - ள்.) ஒளிவிடுகினற பெரிய இரததினததினிடையே குற்றமிருகக, அதனை யொளிசெய்யும்படி [வேகடி] இரததினஙகளின் மாசு தீாப்போன் அக்குற்றததைப்போக்கி அடுககுவதுபோல, மதிககததக்க மேலோர்கள் அடியேன் பாடலிலுள்ள இழிதகைமையைத தெரிநது அவற்றை விலககித்திருததமாக்கி, எமது சிவபெருமான் சரிதையையுணர்நது களிப்பெய்துவார்கள். எ - று.

களஙகறுத்து = களஙகு + அறுத்து. (௧௧)

**பாயிரமுற்றிற்று.**

ஆ காப்பு உள்பட திருவிருததம் - ௧௨.

# நூல்.

முதலாவது

## கைலாசமான்மியச் சருக்கம்.



### நைமிசாரணியச் சிறப்பு.

**கலிநிலைத்துறை.**

சேண்மதித்திரு முகத்தியர் காமமுந் தெருளாக்
கோண்மதிபடு வெகுளியு மயக்கமுங் குறைத்தோர்
வாண்மதித்துறை மாதவத் தலைவரிற் பொலியு
நாண்மலர்ப்பொழிற் பொதும்பர்சூழ் நைமிசா ரணியம்.

(இ - ள்) புதியமலர்கள் பொருந்திய மரச்செறிவுகளமைந்த சோலை சூழ்ந்த நைமிசாரணியமானது, ஆகாயத்திற் சஞ்சரிக்கும் (பூரண) சந்திரன் போன்ற அழகிய முகத்தையுடைய மங்கையர்மையலும், குற்றமுள்ளமனதிற் றோன்றிய கோபமும், மயக்கமும் நீங்கி, ஒப்பற்ற ஞானப்பிரகாசத்தை நாடிய பெரிய தவத்தலைவர்கள் வாசத்தினால் விளங்கிக்கொண்டிருக்கும். எ - று.

காம வெகுளி மயக்கமென்னு முக்குற்றமு நீங்கிய முனிபுங்கவர் வாசஸ்தான மென்பது கருத்து.

ஒரு காலத்தில் சவுநகாதி முனிவர்கள் பிரமதேவரையடைந்து தவம்புரிதற் குரிய புண்ணிய பூமியொன்றனை எங்களுக்குத் திருவாய்மலர்ந் தருளவேண்டு மெனப்பிரார்த்திக்க, பிரமதேவர் ஒரு தருப்பையைச் சக்கராகாரமாகச்சுருட்டி அதனை நிலத்திலுருட்டி அது தங்கிய பூமியே உங்களுக்குத் தகுந்த பூமியென விடுப்ப, அவர்கள் அதன் பின்னே சென்றுஅது தங்கிய விடத்தே நின்றனர். அதுவே நைமிசவனம். நேமி - சக்கரம். நேமி சம்பந்தம் நைமிசம். இது தத்திதாந்த நாமம். (க)

**கலிவிருத்தம்.**

அத்தலத்துவி சேட மருமபொருண்
முத்தமிழ்த்துறை யிற்சொல முற்றுமோ
வெத்திறத்தது வேனுமி யன்றவா
றுய்த்தசிந்தைய றிந்த துணர்த்துவாம்

(இ - ள்.) அத்தகைய நைமிசாரணியத்தின் விசேஷத்தையும், அங்குள்ள அரும்பொருள்களையும், முத்தமிழ்க்கவிகளாலும (அளவிட்டுச்) சொல்லமுடிவு பெறுமோ? எவ்வகைப்பட்ட சிறப்பினதாயினும் எம்மாற் கூடியவரையில், பொருந்திய மனத்தினால் அறிந்தவரையிற் சொல்லுகின்றோம். எ - று.

முத்தமிழ்வல்ல பேரறிஞா யாவராயினுங் கூற எல்லையில தாகுமெனுங் குறிப்புணாதத "முத்தமிழ்த்துறையிற் சொல முற்றுமோ" எனக்கூறிய தன்றி, தாமே கூறலாகுமெனக் கல்விச்செருக்காற்கூறிய தெனல் அடாது. தெரிந்த வகையிற் கூறுதுமெனல்கருத்து. (உ)

முனிக ரும்பென நின்றவன் மொய்கணை
முனித ருந்தவ ரோம்புமு ழுங்கழன்
முனியெ ழுமபுகை வானெறி முந்துறு
முனிவ ரங்கணி மைத்துற முற்றுமால.

(இதன்பதப்பொருள்) கரும்பு - கரும்பை, முனி என நின்றவன் - வில்லாகக்கொண்ட மன்மதனுடைய, மொய்கணை - கூட்டமாகிய (தாமரை மா அசோகு முல்லை நீலமென்னும் ஐந்து) மலர்ப்பாணங்களை, முனிதரும் தவர் - கோபிக்கின்ற தவசிகள், ஓம்பு - வளர்க்கின்ற, முழுங்கு அழல் - ஒலியோடு கூடிய யாகத்தீயினின்றும், மு(ன்)னி எழுமபுகை - முற்பட்டுக்கிளம்பிய புகையானது, வான நெறி முந்துறும - ஆகாயவழியாகச் சஞ்சரிக்கின்ற, முனிவா அம் கண - முனிவாகளுடைய அழகிய கண்களை, இமைத்துற முற்றும் - இமை கொட்டும்படி (நிறைந்து) படரும். எ - று. (ரூ)

ஆக மங்க ளருமறை யாதிய
தாக மங்கல மாகக்கொண் டறைதலா
லாக மங்கமெ னந்தணாக் காரவதி
யாக மங்கை பங்க னளிக்குமால.

(இ - ள்.) ஆகமங்கள் - (இருபத்தெட்டுச) சிவாகமங்களும, அருமை மறை - அரிய வேதத்தையே, ஆதி ஆக - முதன்மையாகக்கொண்டு விளங்க, மங்கலம ஆகக்கொண்டு அறைதலால - (இவவுணமையையறிந்து) மங்கலமாகக் கொண்டு (எககாலத்தும) ஓதுதலால, ஆகம - (இவா) திருமேனி (வேதமும்), அங்கம - (இவா) அவயவங்கள (ஆகமங்களும ஆம), என அந்தணாககு எனக் கூறப்படும வேதியருககு, ஆரவ தியாகம் - நிரம்பு வனவாகிய தியாகங்களை, அங்கனை பங்கன அளிக்கும - உமாதேவியைப் பாகமாகவுடைய சிவபிரான (எககாலமும்) அநுக்கிரகிப்பா. எ - று. (சு)

வேழ மாவரை மேய விளமபிடி
வேழ மாவரை மேய விளம்புவார்
வாழி முற்றவ மாதவ யோகுசெய்
வாழி முற்றவ மாதவ யோகரே.

(இ - ள்.) வேழம் - கரும்பையும். மா - மாந்தளிரையும், வரை - மூங்கிலையும், மேய - விரும்பிய, இளமை பிடி - இளமைதங்கிய [பிடி] பெண்யானைகளையும், வேழம் - ஆணயானைகளையும், மா வரை மேய - பெரிய மலைகளில் மேயும்படி, வாழிமுற்ற-மங்கல முதிர, தவயோகுசெய - தவயோகம் புரிகின்ற, முன் தவம் - பண்ணிடைத்தவமுடைய, மாதவ யோகா - பெருமைபொருந்திய, மிகக மேன்மையுடைய முனிவாகள, விளம்புவாா - கட்டளை செயவாாகள்.

மூன்றும் அடியில அம்மாவெனும் வியப்பிடைச்சொல், இடைகுறைந்து அமா என நின்றது. நான்காம் அடியில வாழி ஏ அசைச்சொற்கள்.

விலங்குகளும் முனிவர்கட்டளை வழி நிற்கும் என்பது கருதது. (௫)

விரத மேலவ ராவையின் மேவிய
விரத மேலவ ராவையின் மேவுவார்
வரத ருபபைத ருவன மநதியே
வரத ருபபைத ருவன மநதியே.

(இ - ள்) விரதம் மேலவர்-விரதானுஷ்டானததை மேறகொணட முனிவர்கள், ஆவயின் மேவிய - (அவவிரத முடிவில விண்ணுலகினின்றும) அஙகடைநத, இரதம் மேல் வரா - இரததத்தின்மீதூாநது சென்று, ஐயின மேவுவாா - தலைமை பெற்றுப் பொருநதுவாாகள. வர தரு - சிறநத விருக்ஷஙகள, பை தருவனம் - அழகைத தரும அவவனததிலே, மநதி - குரஙகுகள, தருப்பை - (மறுதினததிற்குவேணடிய) தருப்பையை, அநதியே வர - (முதற்றினததின்) அநதியிலேயே வநதுசேர, தருவன - (கொயது கொணடுவநது) தருவன. எ - று.

வயின் - ஏழனுருபு. இது வையின எனப்போலியாகியது. அ+வயின= ஆவயின். சுட்டு நீணடது. (௬)

ஊறு மாமறை யோதிய தததையே
யூறு மாமறை யோதிய தததையே
நாறு பூமலா நநதவ னஙகளே
நாறு பூமலா நநதவ னஙகளே.

(இ - ள்.) ஊறும மாமறை- பெருகுதலுடைய சிறநத வேதததை, ஓதிய - உணாநத, தததை-கிளிப்பிள்ளை, உறும-தானவசிககினற, மா - மாமரததிலே, மறை - மறைநது நின்று, ஓதியது அததையே - அவவேதததினையே ஓதுவதாம், நாறு பூ மலா - மணஙகமழும மலாகள விகசிதத, நநதவனஙகள் - நநதவனஙகளிலே, நாறு பூ - தோனறிய (பூ) இடஙகளிலுள்ள, வனஙகள் - ஜலஙகள், மலா - விரிநத, நநத - சஙகுகளையுடையனவாம, எ - று.

இரணடாம அடியில ஊறுமெனபது உறுமென்பதன நீட்டல். இது எதுகை நோககியும யமகநோககியும நிகழநதது

நாறுதல - முளைததல. ஈணடுத தோன்றல. (௭)

மெயதத வததா விளமபின மென்கிளி
மெய்தத வபபொரு ளனறி விளம்புவ
கைதத சிநதைய ரோதிய காவியங
கைதத டஞசினைப பூவை கழறுவ.

(இ - ள்) மெய் தவததர் - உடலளவாகிய தவததையுடைய முனிவர்கள், விளம்பின - பேசிய வேதப்பொருளை, மெனகிளி - மெனமைதங்கிய மதலைச் சொல்லையுடைய கிளிகள், மெயதத அ பொருள் இனறி - உண்மையாகிய அப்பொருள் (அருமையை நோககுதல) இல்லாமல் [இலேசாக], விளம்புவ - (சொன்மாததிரையாகப்பொருளுணராது) சொலலுவன. கைதத - (பநதஙகளை யெல்லாம்) வெறுதத, சிநதையா - மனதையுடைய தவசிகள். ஓதிய காவியம்- ஓதிய காவியஙகளை, கைதடம் சினை - கை போலும் விசாலிதத மரக்கிளைகளிலுள்ள, பூவை - நாகணவாய்ப் புட்கள், கழறுவ - சொல்லுவன. எ - று.

மெய்த்தவத்தர் - தாங்கொண்டதவம் முடிவின்றி உடல்நீங்குமெல்லையுங் கொண்டோர். அல்லது. தவத்தின்கண்ணே ஒருப்பட்டமனமுடையரெனக் கொண்டு தவத்து மெய்யரெனச் சொல்வகை செய்யினும் பொருந்தும். (அ)

> உழைம றிக்குல மொள்ளுகிர் வெம்புலி
> யுழைம டிப்பய முண்டு களிப்பன
> விழைபு லிப்பெடை மென்பறழ் நவ்விய
> விழைசு ரைப்பய மேயினி தாடுமால்.

(இ - ள்.) உழை மறி குலம் - மான் குட்டியின தொகுதிகள், ஒள் உகிர் வெம் புலி - ஒளிபொருந்திய நகத்தையுடைய கொடிய புலிகளின், மடியுழை பயம் - மடியிலுள்ள பாலை, உண்டு களிப்பன - பருகிச்சந்தோஷிப்பன. புலி பெடை - பெண்புலிகளின், விழை மெல் பறழ் - விரும்பத்தக்க மெல்லிய குட்டிகள், நவ்விய - மானினுடைய, இழை சுரை - இழைதலோடுகூடிய முலையிலுள்ள, பயம் மேய - பாலைக்குடித்து, இனிது ஆடும் - இனிமையாக அவ்விடத்தில் விளையாடும். எ - று.

இழைத லென்றது பால சுரந்து மடிபூரித்திருத்தலால் அசையில் உராய்தலை. உழை - மான். மறி - மானிலோர் பிரிவு. (௯)

> மன்ற னாறுகோ டீர மதுமலர்க்
> கொன்றை யேந்திக் கொடியிடந் தாங்கலா
> லன்றொ ரேனமு மன்னமு நேடுவா
> னின்ற முக்க ணிமலனை யொக்குமால்.

(இ - ள்) மன்றல் நாறு கோடு - வாசம் வீசும் மலையின் சிகரங்கள், ஈரம் மது மலர் கொன்றை ஏந்தி - குளிர்ச்சி தங்கிய தேனைச் சொரியும் மலர்களையுடைய கொன்றையை (முடியில்) ஏற்று, கொடி இடம் தாங்கலால் - கொடியைத்தம்மிடத்தே கொண்டு நிற்றலால், அன்று - முற்காலத்தில், ஓர் ஏனமும் அன்னமும் - ஒப்பற்ற (திருமாலாகிய) பன்றியும், (பிரமதேவராகிய) அன்னமும், நேடுவான் நின்ற - (முறையே திருவடியையும் திருமுடியையும்) தேடும்படி (சோதிமலை வடிவாக) விளங்கிய, முக்கண் நிமலனை ஒக்கும் - (சூரிய சோம அக்கினிகளை) திரிநேத்திரங்களாக வுடைய மலரகிதரான சிவபிரானை யொத்திருந்தன. எ - று.

கோடீரமென ஒரு சொல்லாகக்கொண்டு சடையென்றும், கொடியென்பதைக் கொடிபோலும் இடையையுடைய உமாபிராட்டி யென்றுங் கொண்டு சிலேடை காண்க. (௧௦)

### கலிநிலைத்துறை.

> அனைய மாதவத் துறையுளி னருந்தவத் தலைவர்
> வினையி னீங்கிய சூதனை வரன்முறை வினவி
> யெனைய கேட்டுமிக் கேள்வியி னுணர்ந்தது திருந்த
> நினைவி னீதியி னொருங்குற வுணர்குவா னினைந்தார்.

(இ - ள்) அத்தகைய பெருந்தவத்திற் கிடமான நைமிசாரணியத்தில் வசிக்கும் தவமுநிவோர் யாவரும், இருவினைத்தொடக்கினின்றகன்ற சூத முனிவரிடத்தில் தாங்கள் வரன்முறையாகக் கேட்கையில், கேட்டு முடியாதனவாக இருந்தவை யெவையோ, அவற்றைக் கிரமமாக முழுவதும் அறிந்துகொள்ள மனதிற் கருதினார்கள். எ - று.

கேட்டு முடிந்தவை - சம்பவ காண்டமுதலிய ஆறும், இனிக்கேளாது நிற்பது இவ்வுபதேசகாண்டமேயாம். இது மேற் செய்யுளால் விளங்கும். (௧௧)

துரிச றுத்துநின் றியற்றிய வருந்தவச் சூத
வரிய சம்பவ காண்டமே முதலிய வாறுந்
தெரிய வெம்மனோர்க் குணர்த்தினை மற்றது தெரிப்பான்
பரியு நெஞ்சினே நின்னல தியாவரோ பகர்வார்.

(இ - ள்.) (காமவெகுளி மயக்கங்களாகிய) குற்றத்தை விலக்கி (ஞானநெறியில்) நின்று முடித்த அரியதவத்தையுடைய சூதமுனிவரே! அருமையாகிய [சம்பவ] உற்பத்திகாண்ட முதலாகிய ஆறு காண்டங்களையும் உணர்ந்து கொள்ளும்படி எங்களுக்குத் தெரிவித்தீர். (அவற்றின் பின்னுள்ளதாகிய) உபதேசகாண்டத்தையும் தெரிவிக்கும்படி விரும்பிய எண்ணமுடையோம். தேவரீரையன்றி வேறெவர்தாஞ் சொல்லவல்லவர். எ - று. (௧௨)

வான ளந்தெழு வடவரை மேருவின் வடபால்
மேனி வந்தெழு மண்டபித் திகைப்பட மேவி
யன்ன மாபெருங் கயிலையொன் றுளதென வறைந்தாய்
ஞான நாதவக் கிரிவள மறிகுவா னயந்தேம்.

(இ - ள்.) ஆகாய மளாவியுயர்ந்த வடக்கின்கண்ணுள்ள மலையாகிய மேருவின் வடதிசையில், மேலோங்கியுயர்ந்த அண்டச்சுவர்படும்படி பொருந்தி, பெருமைபெற்ற மகாகைலாயமொன்றுளதென்று திருவாய்மலர்ந்தருளினீர். ஞானநாயகரே! அக்கைலாய மலையின் சிறப்புக்களைத் தெரிந்துகொள்ள விரும்பினேம். எ - று. (௧௩)

அன்ன மாபெருங் கயிலையி னகற்சியு நிவப்பு
மன்னு திண்கிரி வளங்களு மவணுறை வனப்பு
மின்ன வாகுமென் றிசைத்தருளென வவ ரிசைப்பப்
பன்னு மாதவக் கொழுந்தவாக் கின்னன பகரும்.

(இ - ள்.) அப்படிப்பட்ட பெருமைதங்கிய பெரிய கைலாயகிரியின் அகலமும் உயரமும், அம்மலையில் நிலையாயுள்ளவளப்பங்களும், அங்குள்ள அலங்காரங்களும் இத்தன்மையன வெனக்கூறியருளவேண்டுமென், அந்நைமிசாரணிய முனிவர்கள் வேண்டிக்கொள்ள, துதிக்கத்தக்க பெருந்தவக் கொழுந்துபோன்ற சூதமுனிவர் அவர்கட்கு இவ்வாறு சொல்லலாயினார். எ - று.

## கைலாயச்சிறப்பு.

வயங்கு நெட்டிலை வேற்படை மாமயிற் பெருமா
னுயங்கு மாதவக் குறுமுனிக் குணர்த்தன மேனாண்
முயங்கு மக்கிரிப் பெருமையை யறிந்தன மொழிவா
மியங்கு வெண்பிறைக் கண்ணியோற் கினிதுறு மிருக்கை.

(இ - ள்) உலாவுகின்ற வெள்ளிய பிறைச்சந்திரனை மாலையாகக்கொண்ட சிவபெருமானுக்கு இனிய வாசஸ்தானமாகப்பொருந்திய அம்மகாகைலாயத்தின் சிறப்பை, விளங்குகின்ற நெடிய இலைவடிவமைந்த வேலாயுதமேந்திய சிறந்தமயில்வாகனக்கடவுளாகிய சுப்பிரமணியப்பெருமான், மிகுந்ததவத்தை வருந்திச்செய்த அகத்தியமுனிவருக்குப் பூர்வத்தில் திருவாய்மலர்ந்தருளி யுள்ளார். அவற்றில் யாமறிந்தமட்டிற் சொல்லுவோம். எ - று.

குறுமுனி - குறுகியவடிவுடையமுனிவர். குருமுனியெனப் பாடமாயின் செந்தமிழ் மொழிக்குக் குருவாயிருந்த முனியெனப் பொருள்கொள்க.

இளைய பிள்ளையாரே பூர்வம் திருவாய்மலர்ந்தருளிய சிறப்பினதாதலின், அதனைமுற்றும் தாம்கூறவல்லரல்லரென்றுணர்த்தியவாறு "அறிந்தன" என அவற்றுட்சிறிதினைச் சொல்வோமெனக் குறிப்பினுணர்த்தினர். (௧௫)

மாக ணங்களும் புனிதரும் வரன்முறை வணங்க
ஏக நாயக னினிதுறு வடபெருங் கயிலை
மீகொள் யோசனை நாற்பது கோடிமே னிவந்த
தாக யோசனை யதிற்படும் பாதியி னகற்சி.

(இ - ள்) பெருமை பொருந்திய சிவகணங்களும் (பரிசுத்தராகிய முனிவர்களும் முறைப்படி வணங்க, ஏக நாயகனாகிய சிவபெருமான் இனிமையாக எழுந்தருளியிருக்கும் வடதிசையிலுள்ள அம்மகாகைலாய மலையானது, அளவில் உயர்ந்த நாற்பதுகோடி யோசனைதூரம் மேல் உயர்ந்தது. அகலமானது அதிற் பாதி [இருபதுகோடி யோசனை] யாகும். எ - று.

ஏகநாயகன் - தனக்குமேல் நாயகனில்லாதவன். மகாதேவன். (௧௬)

தெய்வ மாலவரை மீப்பொலி நெடுமுடிச் சிகரம்
பொய்யில் கேள்வியர் புலமையி னளப்பினும் புலவா
வெய்ய வார்குலக் கொடுமுடி நடுவுற விளங்கிச்
செய்ய பன்மணிக் காந்திவிட் டெறிப்பதோர் சிகரம்.

(இ - ள்) தெய்வீகம்நிறைந்த அம்மகாகைலாயத்தின் நெடிய உச்சியிலுள்ள சிகரங்களை, உண்மை யறிவுடையவர்கள் தம்முடைய அறிவினாலே அளவிடுச்சொன்னாலும் அளவுக்கடங்காதன. மிகநீண்ட அக்கொடுமுடித் தொகுதிகளினிடையே உயர்ந்திருப்பது, செம்மையான பலவகை இரத்தினவொளியை வீசும் ஓர் சிகரம். எ - று. (௧௭)

பத்துக் கோடி யோ சனையகன் றுள்ளது பாங்கர்
ஒத்துக் கோடிய தின்றிநான் மதிலொழுங் குடைத்தாய்
வைத்துக் கோடிய மரகதக் கொடுங்கையால் வயங்குஞ்
சத்துக் கோடியர் வதிந்தபொன் மாளிகைச் சயிலம்.

(இ - ள்.) பத்துக்கோடியோசனை அகலமுற்றுள்ளது. அதன்பக்கலில் நான்கு மதில்கள் ஒரேதன்மையாய வேறுபாடின்றி ஒழுங்கமைந்து, மரகதத் தால் வளைந்த கொடுங்கைகள் செய்யப்பட்டு விளங்குஞ்சிகரம். அதுவே கணக் கிறந்த பெரியோர் வசிக்கும் பொன் மாளிகைகளையுடையது. எ - று. (௧௮)

ஒழுகு நீண்மதி ளூடுநத் தவச் சிகரத்தி னுச்சி
தழுவு ஞானரூ பப்பெருந் தனித்திருக் கோயின்
முழுது கோடியோ சனையுள முழுமணித் தவிசி
னெழுதி முற்றுருச் சதாசிவ மினிதுவீற் றிருக்கும்.

(இ - ள்) மீதுயர்ந்த நெடியமதில்களாற் சூழப்பட்ட அச்சிகரத்துச்சியிலிருக்கும் ஞானரூபமுடைய பெரிய ஒப்பற்றதிருக்கோயிலில், குறைவில்லாத கோடியோசனை விசாலமான முழுமணிகளாலிழைக்கப்பெற்றபீடத்தில், எழுதி முடியாத (திருவுருவமைந்த) சதாசிவப்பெருமான இனிமையாக வீற்றிருந்தருளுவர். எ - று.

"எழுதிமுற்றுரு" என்றது, உலகமே திருமேனியாதலின். (௧௯)

மூல மீறிடை யென்பன மும்மையுங் கடந்து
கால நீடிய கணக்கறு கற்பனை கழிந்து
ஞால மேமுதற் பூதங்கள் யாவையு நல்கி
வால சூரிய ரளவொழிந் திமைத்தலபோல் வயங்கும்.

(இ - ள்.) அப்பெருமான், ஆதிமத்தி அந்தமெனனும் மூன்றையுங் கடந்து காலங்கள் கழியக்கணக்கில்லாத கற்பனைகளையுங் கடந்து, பிருதிவிமுதலிய ஐம்பூதங்களையும் பிறதத்துவங்களையும் சிருஷ்டித்து, இளஞ்சூரியாகள் கணக்கில்லாதவாகள் (ஒருகாலத்தில்) பிரகாசிப்பதுபோல வீற்றிருந்தருளவா. எ - று.

வெளிவி ளைந்தருள பழுதத்துமே லெவற்றிறகு மேலாய்க்
களிவி ளைந்துகாண் பரிதெனக் கட்புலங் கதுவா
தளிவி ளைந்தபே ரடியவாக் கருளினு னந்த
வொளிவி ளைந்தெழு முகங்களை யைந்துபெற் றுளதால்.

(இ - ள்) வியாபகரூபமாகிய பரசிவத்தினின்றும் (அச்சதாசிவப் பெருமான்) திருவுருக்கொண்டு திருவருள்மிகுந்து பழமையான பொருள்கட்கெல்லாம் பழமையான பொருளாய், செருக்குற்றுக்காணடற்கரும பொருளாய், கட்புலனுக்குப்புலப்படாது மறைந்து, பேரன்பு மிகுந்த உணமையடியாாகட்குக்கருணையுடனே சிதானந்த ரூபமாய் விளங்கி நிற்கும் (ஈசானாதி) பஞ்சமுகங்களோடு இலகுவா. எ - று.

"ஒளிவிளைந்தெழு முகங்களையைந்து பெற்று" என்பதை முகங்கள் ஐயைந்து எனக்கொள்ளாது, ஐந்து முகங்களை யெனக்கூட்டுக. அன்றேல் ஐயைந்து முகங்கள் மஹாசதாசிவனுக்காமாதலின் இங்கே மேலைச்செய்யுளில "திருக்கரங்களோர்பத்து" என்பதற்கியையாது நிற்கும்.

ஐந்துமுகங்கள்:—ஈசானம் தற்புருஷம் அகோரம் வாமதேவம் சத்தியோஜாத மென்பன. (உக)

திருக்க ரங்களோரா பத்தினிற் சிறந்தது சிவணி
முருக்கு முத்தலைச் சூலமே முதலிய தாங்கி
யுருத்தி ரப்பெருங் கணங்களோ டுறைந்துயிர்க் குதவி
யருத்தி கூர்தரப் பஞ்சசத் திகட்கினி தருளும்.

. (இ - ள்.) திருக்கரங்கள் பத்திலும் உயர்ச்சித்தன்மைகளமைந்து (எவற்றையும்) அழிக்கத்தக்க முத்தலைகளையுடைய சூலாயுத முதலியவற்றையேற்று, பெரிய உருத்திரகணங்களுக்கிடையே பொருந்தி ஆன்மகோடிகளுக்குஅநுக்கிரகித்து ஆசைமீக்கூர, பஞ்சசத்திகளுக்கும் இனிதாக அநுக்கிரகஞ்செய்யவா.

பஞ்சசத்திகள் - பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி. அவற்றுட் பராசத்தி பரமசிவத்தில் ஆயிரத்தொருகூறுகொண்டது. ஆதிசத்தி பராசத்தியில் ஆயிரத்தொருகூறுகொண்டது. இச்சாசத்தி ஆதிசத்தியில் ஆயிரத்தொருகூறுகொண்டது. ஞானசத்தி இச்சாசத்தியில் ஆயிரத்தொருகூறுகொண்டது. கிரியாசத்தி ஞானசத்தியில் ஆயிரத்தொருகூறுகொண்டது. (உஉ)

அப்பெ ருமபொரு ளுறைசிக ரத்தினுக் கயல்சூ
ழொப்ப ருஞ்சிக ரங்கள்பன் னொன்றுள வுயர்சி

முப்பெ ருந்தலை வர்க்குமெட் டாதன மொழிபிற
கப்பி ளங்கதி ரொளியெறி சூரிய காந்தம்.

(இ - ள்.) அந்தப் பெரும்பொருளாகிய சதாசிவமூர்த்தி எழுந்தருளியிருக்குஞ் சிகரத்தினருகே சூழ்ந்துள்ள ஒப்பில்லாத சிகரங்கள் பதினொன்றுள்ளன. அவற்றின் உயர்ச்சி, திரிமூர்த்திகளாலுஞ் சொல்லமுடியாது. அச்சிகரங்கள் ஒன்றுகூடிய பால சூரியர்களின் ஒளியை வீசுஞ் சூரியகாந்தக் கற்களாலமைந்தன. எ - று. (உங)

பருதி காந்தமென் றுரைத்திடு பன்னொரு சிகரத்
துருகு காதலி னுருத்திர ரினிதுறைந் துவப்பா
ரருகு சூழ்ந்துநூற் றெட்டுள கொடுமுடி யவைதாங்
கருகி ருட்படாந் தொலைத்தெறி சந்திர காந்தம்.

(இ - ள்.) சூரியகாந்தமெனப்பட்ட அந்தப்பதினொரு சிகரங்களில், உருகுகின்ற அன்புடைய (ஏகாதச) ருத்திரர்கள் இனிமையாகக் களித்து வசிப்பர். அவற்றருகே சூழ்ந்து நூற்றெட்டுக் கொடுமுடிகளுள்ளன. அவையாவும் கருகிய இருட்டொகுதியை விலக்கி ஒளிசெய்யுஞ் சந்திரகாந்தத்தாலானவை.

ஏகாதசருத்திரர்:—மகாதேவர் ஹரர் உருத்திரர் சங்கரர் நீலலோகிதர் ஈசானர் விஜயர் வீமதேவர் பவோற்பவர் கபாலி தேவதேவரெனப்படுவர். (உச)

ஆங்க வற்றினைம் பத்தொரு சத்திக ளருநூ
லோங்கு சிந்தைய ரெம்பிரா னுருவுகொண் டுடையோ
ரோங்கு சிற்றிடைக் கொடிநவ சத்திக ளிவையோர்
பாங்க மாந்தருட் சதாசிவங் கருத்துறப் பணிவார்.

(இ - ள்.) அந்த நூற்றெட்டுக் கொடுமுடிகளில் ஐம்பத்தொரு சத்திகளும், அரிய நூலாராய்ச்சியா லுயர்ந்த சிந்தையராகிச் சிவசாரூபமுற்றவர்களும் (தனபாரம் பொறுது) துவளுகின்ற கொடிபோலும் சிறிய இடையினையுடைய நவசத்திகளும் ஆகிய இத்தன்மையார், சதாசிவப் பெருமான் பக்கலிற் பொருந்தி மனமியைந்து வணங்குவார்கள், எ - று. (உரு)

இவற்றை முற்றிய வாயிரத் தொருமுடி யென்ப
வவற்றை யோதுறி னழலொளி யிமைத்துநின் றவிரவ
தவத்த ருமபெருந் தாண்டவஞ் சத்தகோ டிகளாய்க்
கவாசசெய மந்திர முருவு கொண்டிருப்பன கருதில்.

(இ - ள்.) இந்த நூற்றெட்டுக் கொடுமுடிகளைச் சுற்றிலும் ஆயிரத்தொரு கொடுமுடிகளிருக்கின்றன. அவற்றைச் சொன்னால் தீயொளிவீசிக்கொண்டு பிரகாசிப்பன. ஆலோசிக்குமிடத்தில், அவற்றுள் அருமையுடன் பெருமை தங்கிய தாண்டவங்களும் சத்தகோடிகளாகப் பிரிந்துள்ள மந்திரங்களும் தமது தவத்தினால் திருவுருக்கொண்டு வீற்றிருக்கின்றன. எ - று.

சத்தகோடி - ஏழுகோடி. கோடி - முடிவு. (உசு)

அனைய சூழ்தரு முடிபதி னாயிரத் தொன்று
நினையி னன்னவை படிகமற் றுங்கவ ணெடுங்கைக்
கனைம தக்கரி முகவனு முருகனுங் கருணை
வினைசெய் மூவருஞ் சாத்தனுங் கணங்களும் விரவி

(இ - ள்.) அவ்வாயிரத்தெட்டுக் கொடுமுடிகளைச் சூழ்ந்திருக்குங் கொடுமுடிகள் பதினாயிரத்தொன்று. உணருமிடத்தில் அவையாவும் படிகத்தாலாயின. அவற்றில், நெடிய துதிக்கையுடனே ஒலிக்கின்ற மதஞ்சொரியும் யானை முகமுடைய விநாயகக் கடவுளும், முருகக்கடவுளும், கிருபையுடன் முத்தொழிலியற்றும் மும்மூர்த்திகளும், அரிய புத்திரனும், சிவகணங்களுஞ் சேர்ந்திருக்க, எ - று.

இது முதலிரண்டு செய்யுள்கள் குளகம். "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது சூத்திரம். வாவி - வினையெச்சத்திரிபு. (உ௭)

நவைபொ ழித்தருள் வயிரவ னந்திபிங் கிருடி
சிவகு மாரருங் காளருந் தேனுவும் விடையு
மிவர்கொ டும்படைத் தாக்கையுஞ் சத்திகள் யாருந்
தவமு யற்சியி னினிதிருந் தப்பதஞ் சரிப்பார்

(இ - ள்.) குற்றங்களை விலக்கிக் கருணைபுரியும் வயிரவரும், நந்திதேவரும், பிங்கிருடியும், சிவகுமாரர்களும், மகாகாளரும், காமதேனுவும், தருமவிடையும், எழுச்சியுடைய கொடிய ஆயுதங்களைத் தரித்ததாக்கையும், எல்லாச் சத்திகளும், தவமுயற்சியோடு இனிமையாக அப்பதவியில்வீற்றிருந்து வாழ்வார்கள்.

சிவ குமாரர்கள் தொகையால் நாற்பத்தெண்ணாயிரவர். இவர் தாருவன முனிமங்கையர். பிக்ஷாடனராகவந்த பெருமானைக் காமுற்றுப் பெற்ற புத்திரர். இவர்களெல்லாரு மிருடிகள். (உ௮)

இலக்க மொன்றுபெற் றுடையன கொடுமுடி யிவைசூழ்ந்
தலப்பி லாமணி மயத்தவாய்க் கடுங்கதி ருமிழ்வ
நிலத்த மேற்றிசை நாரணர் கோடியர் நிறைவார்
மலத்தி னீங்குவார் தனிமுதற் சிறப்பரம் வணங்கி.

(இ - ள்.) இந்த ஆயிரத்தொரு கொடுமுடிகளைச் சூழ்ந்து இலட்சத்தொரு கொடுமுடிகள் கெடுதலில்லாத இரத்தின மயமுடையனவாய்ச் சிறந்த கிரணங்களைச் சிந்துவன. அவற்றின் மேற்றிசையிலே, கோடிவிஷ்ணு மூர்த்திகள் (ஆணவாதி) மலபந்த நீங்கவேண்டியவர்களாய், ஞானரூபமாய் எல்லாவற்றிற்கும் முதற்பொருளாகிய ஒப்பற்ற சிவபெருமானை வணங்கிக்கொண்டு நிறைந்திருப்பார்கள். எ - று. (உ௯)

உத்த ரத்தன கொடுமுடி யுச்சியி னொருவார்
முத்தி வேண்டுவ ரளவறு முருமுதற் பிரம
ரித்த ரத்தன கொடுமுடி கீழ்த்திசை யிவற்றி
லத்த னைத்தொகை யளவறு மிந்திர ரமைவார்.

(இ-ள்.) (இன்னும்) வடபக்கத்திலுள்ள கொடுமுடிகளின் சிகரத்தில், முதன்மைவகித்த அளவிடப்படாத தொகையினராகிய பிரமதேவர்கள் நீங்காதவர்களாயிருந்து முத்தியைவிரும்பி வசிப்பார்கள். கீழ்ப்பக்கத்திலும் இவ்வளவினதான கொடுமுடிகளிருக்கின்றன. இவற்றில் எண்ணிறந்த இந்திரர்கள் பரிசுத்தஞான சிவபெருமானை வணங்கி வசிப்பார்கள். எ - று. (௩0)

தென்பு லத்துறை கொடுமுடி நெடுமுடிச் சிகரத்
தென்பு ருக்கிய கணபதரு மிருடி யாரு

மன்புருகிட்ட வுருகிய கருத்தின ராகித்
துன்புறுத்துநின் றருமறைத் தலைவனைத் தொழுவார்.

(இ-ள்.) தென்பக்கலிலுள்ள கொடுமுடிகளின் நீண்ட உச்சியில் என்பு நெக்குருகிய சிவகணநாதர்களும் இருடிகளெல்லாரும் அன்பானது உருக்க உருகிய உள்ளமுடையவராய்த் துன்பத்தையொழித்து நின்று அரிய வேதங்கட்கிறைவராகிய சிவபெருமானை வணங்குவார்கள். எ-று. (௩௧)

ஒன்று பத்திலக் கத்துட னமைபருங் குடித்தா
பொன்றிகழ்ந்திடுங் கொடுமுடி யாங்கவை பொருந்தக்
கன்று பூதசே னாதிப ருருத்திர கணங்கள்
சென்ற சித்தர்வித் தியாதரர் கருடர்கந் தருவர்

(இ-ள்.) பதினோரிலட்சமென்னுந் தொகையுடன் பொன்மயமான கொடுமுடிகள் அக்கொடுமுடிகளின் பக்கலிலே சூழ்ந்துவிளங்கும். அவற்றில் பொருந்தும்படி கோபிக்கின்ற பூதகணநாதர்களும், உருத்திரகணங்களும், உயர்ந்த சித்தர்களும், வித்தியாதரர்களும், கந்தருவர்களும். எ-று.

இதுமுதல் இரண்டுபாடல்கள் குளகம். (௩௨)

சூலமேமுதற் கருவியுஞ் சுரபியு மணியுங்
காலமோர்ந்தருணிதிகளுங் கற்பகத் தருவும்
மேல்வார்குழற் கணிகைய ரீட்டமு மெம்மான்
சாலு மோருருத் தரித்தவர் யாவருஞ் சரிப்பார்.

(இ-ள்.) சூலமுதலிய ஆயுதங்களும், காமதேனுவும், சிந்தாமணியும், காலமறிந்து உதவுகின்ற (சங்கநிதி பதுமநிதி யெனு இரு) நிதிகளும், கற்பக விருக்ஷமும், மணங்கமழ்ந்து நெருங்கியிருக்குங் கூந்தலையுடைய உருத்திரகணிகையர்கூட்டமும், எமது சிவபெருமானது சாரூபமடைந்தவர்களும் ஆகிய எல்லோரும் வாசஞ்செய்வார்கள். எ-று. (௩௩)

இன்ன தன்மைய கொடுமுடிக் கீழ்வளைந் திருப்ப
மின்னு வெள்ளியங் கொடுமுடி யவற்றினை விரிக்கின்
மன்னு கோடியு மொன்றுமாய் வயங்கொளி படைப்ப
வன்ன வற்றிடைச் சரிப்பன வரன்முறை யறைவாம்.

(இ-ள்.) இத்தன்மையினவாகிய கொடுமுடிகளுக்குக் கீழே பிரகாசிக்கின்ற வெள்ளிக்கொடுமுடிகள் சூழ்ந்துள்ளன. அவற்றின் சிறப்பை விளக்கிச் சொல்லுகையில், ஒருகோடியு மொன்றுமாகப் பிரகாசிக்கும். அவற்றில் வசிப்பனவற்றை முறையே சொல்லுவோம். எ-று. (௩௪)

வெள்ளை வாரண மோரிரண் டாயிரம் வியப்பி
னுள்ள மோர்வரும் பிரணவத் துருவுகொண் டுறைவ
தெள்ளு நான்மறை யுருவுகொண் டுளபரித் திரளக்
ளெள்ள ருஞ்சது முகற்குமோர் கணக்கள் விறந்த.

(இ-ள்.) ஈராயிரம் வெள்ளையானைகள் வியந்து மனத்தாலறிதற்கு அருமையாகிய பிரணவ வடிவங்கொண்டு வசிக்கும். தெளிந்த நான்கு வேதங்களின் உருவமைந்த குதிரைத்தொகுதிகள் இழிவற்ற பிரமதேவனுக்கும் எண்ணிக்கை செய்யத்தக்க கணக்கைக் கடந்தன. எ-று. (௩௫)

ஒற்றைத் தாளின மூன்றுடைத் தாளின வுரைக்கும்
பொற்றைத் தாளபல வுடையன பொருந்துதா ளொழிந்த
கற்றைச் செம்மயி ருடையன கணங்கணக் கிறந்த
மற்றைக் கைகளு மன்னதன் மையவென வழங்கும்.

(இ - ள்.) ஒவ்வொரு காலகளுடையவும், மும்மூன்றுகால்களுடையவும் மலைபோன்று சொல்லத்தக்க (பெரிய) பலகால்களுடையவும், பொருந்திய கால்களற்றவும், தொகுதியாகிய செம்மயிர்ப்பங்கியுடையவுமாகிய கணங்கள் எண்ணில்லாதன. மற்றையகைகளும் அவ்வளவினவேயாகச் சஞ்சரிக்கும். எ - று.

ஒருமு கத்தன விரண்டுதீ முகத்தன வொருவாக்
கருகு மூன்றுடை முகத்தன முகமிலாக் கணங்க
டிருகு சீற்றவெங் கணங்களு மின்னணஞ் சிறந்த
மருவு தண்பிறை யெயிற்றின பிலம்படு வாய

(இ - ள்.) ஒருமுகங்கொண்டனவும், அக்கினிபோலும் இருமுகங்கொண்டனவும், நீங்காதகரிய மும்முகங்கொண்டனவும், முகமில்லாதனவும், கூட்டமாகிய கொடியகணங்களும் இவ்வகையாகச் சிறந்துள்ளன. அவை குளிர்ந்த பிறைச்சந்திரன் போலும் வக்கிரதந்தமுடையனவும் பிலம்போல ஆழமாகிய வாயையுடையனவுமாயப் பொருந்தும். எ - று. (கள)

மானி டத்தவா முகத்தன பறவைமா முகத்த
வானை மாமுகம புலிமுக முடையன வழல்வாய்க்
கான மாளரி முகத்தன கரடிமா முகத்த
வேனை மாமுக முடையபூ தங்களெண் ணிறந்த.

(இ - ள்.) மனிதமுகமுடையவும், பெரிய பறவைமுகமுடையவும் மாட்சிமைதங்கிய யானைமுகமுடையவும், புலிமுகமுடையவும், அக்கினி சொரியும் காட்டிற் சஞ்சரிக்கும் சிங்கமுகமுடையவும் கரடிமுகமுடையவும், பிறமிருக முகமுடையவுமாகிய பூதங்கள் கணக்கில்லாதன. எ - று.

யானைமா கரடிமா என்பவற்றில்,மா=மிருகம். இப்பெயர்களை முன்னையது சிறப்பும் பின்னையது பொதுவுமாகக்கொண்ட இருபெயரொட்டுப்பண்புத்தொகை யெனக்கொள்க. அரிமான என்றது மானரியெனநிலைமாறி இலக்கணப் போலியாயது. (கஅ)

இனைய யாவையு மெம்பிரா னாணையி னியங்கி
யனைய வெள்ளியங் குவட்டிடைச் சரிப்பன வன்றிப்
புனைசெய் தேரொடு மானமும் பொருந்துவ பொருந்தா
வினையி னீங்கிய தேவர்க்கு மதனெறி விளங்கா.

(இ - ள்.) இத்தகையகணங்கள் யாவும் எமது சிவபெருமான் கட்டளைப்படி நடந்து அந்தவெள்ளியங்கிரியாகிய கைலாயத்தில் வசித்திருப்பன. இவையேயன்றி அலங்கரிக்கப்பெற்றதேர்களோடு விமானங்களும் பொருந்தியுள்ளன. வினைப்போகத்தை (அநுபவித்து) நீங்கியதேவர்களுக்கும் அதன்சிறப்பு விளங்காது. எ - று.

"வினையினீங்கிய தேவர்" என்றது தேவர்கள் கேவலம் புண்ணியகருமமேயுடையவரும், நரகரைப்போல பாபகருமமும், பூலோகவாசிகள்போலப் புண்ணிய பாபங்களாகிய மிசிரகருமமும் உடையரல்லருமாகலின். (கக)

வாழி மாபெருங் கயிலையை மருங்குடுத் தயர்ந்த
பூழில் பூத்தலர் கற்பகப் பொதும்பரின் கீழ்போய்ப்
பாழி மாநிலந் தாங்கிய படம்படப் படர்ந்த
கோழி லைக்கொழுந் தண்டமுந் திசைகளுஞ் சூலாய.

(இ - ள்.) சிறந்த அந்த மகாகைலாயத்தினைச்சூழ்ந்து பக்கத்திலுள்ள பூமியில், மலர்ந்து விகசித்திருக்கும் கற்பகச்சோலையினது வேர்கள்போய், வலியபெரிய உலகினைத்தாங்கும் (ஆதிசேடனுடைய) படங்களிற் படும்படி படர்ந்திருக்கும். கொழுமைவாய்ந்த இலைத்தளிர்கள் ஆகாயமும் திசைகளுக்குப்புறமும் அடைந்துவிளங்கும். எ - று.

பூழில் - பூமி. (௪0)

மாதி ரத்தொடு மணவுறு வான்சினை வகுத்த
போதி ணர்த்துவான் கயிலையை யிருள்படப் பொதிந்த
நீதி லங்கொளி முழுமணி யவ்விருள் விழுங்கி
யாத வற்குமோ ரதிசயங் காட்டிநின் றலர்ந்த.

(இ - ள்.) திசைகடோறுங் கலந்த நெடிய கிளைகள் பிரிந்தன. மலர்க்கொத்துகளையுடைத்தாயச் சிறந்தகைலையை இருள்படும்படி மறைத்துள்ளன. தம்மிடத்து விளங்குங்காந்தியுடைய சிறந்த இரத்தினங்களால் அவ்விருளையகற்றிச் சூரியனுக்கும் ஓரதிசயத்தைக் காட்டிக்கொண்டு மலர்ந்துள்ளன. எ - று.

மரங்கள் பொன்மயமும், அரும்புகளும் பூக்களும் இரத்தின மயமுமாக விளங்கி, சூரியனாலும் நீக்கற்கரிய இருளைப்போக்கி நிற்கும் என்பது கருத்து. ()

கள்ள விழ்ந்திழி நறுமலர்த் தாதினங் கவிழ்ப்பக்
கொள்ளை வானந்தொட நிவந்தெழு கொடுமுடிக் குவைகள்
வெள்ள ரும்பசும் பொற்குழம் பங்கையா லேந்தி
யள்ளி யப்பின வாமெனப் பொலிந்தவ் வசலம்.

(இ - ள்.) (முறுக்கு) அவிழ்ந்து தேன்சொரியும் வாசனைமிகுந்த மலர்கள் மகரந்தத்தைச்சொரிய, ஆகாயமளாவ உயர்ந்தோங்கிய கொடுமுடித் தொகுதிகள், இகழ்தற்கரிதாகிய பசியபொன்னுருக்கிய குழம்பை, உள்ளங்கையிற் கொண்டு அள்ளியப்பினதுபோல விளங்கின. எ - று.

அங்கை=அகம்+கை "அகமுனர்ச்செவிகை வரினிடையனகெடும்" (சஉ)

விரிந்தி லங்கிய வடபெருங் கயிலையை மேலோர்
தெரிந்த தெய்வமென் றறிந்தனர் சினைக்கரங் கூப்பிப்
பரிந்த பூநறா மஞ்சன மாட்டிமென் பனிப்பூச்
சொரிந்து தாழ்நின் றேத்துவ போன்றவச் சோலை.

(இ - ள்.) பரந்து விளங்கும் அவ்வடபெருங்கைலையை, மேன்மக்களால் அறியப்படுந் தெய்வமென்றுணர்ந்தனவாய், அச்சோலைகள் கிளைகளாகிய தமது கைகளைக்குவித்து, அன்புகொண்டு மலர்த்தேனைத் திருமஞ்சனமாக அபிடேகித்து மெல்லிய குளிர்ச்சிவாய்ந்த மலர்களானர்ச்சித்துத் தாழ்ந்து நின்று பூசிப்பனபோல விளங்கின. எ - று. (௪௩)

மணிகு யிற்றின மரகத மிழைத்தன வயிரத்
துணியு றுத்தின பவளமென் கொடியொடுந் தொடர்ந்த

தணிப சும்பொனிற் பொதிந்தன சினைதொறுந தழீஇ
யணிம ணிக்குவை துவன்றின தருவிரு ளறுப்ப.

(இ - ள.) மாணிக்கங்கள் பதித்தனவும், மரகதங்களிழைத்தனவும், வயி ரத்துணகளை பொருந்தினவும், மெல்லிய கொடிப்பவளங்கள்பதிந்தனவும், அழ கிய பசும்பொன்னாற் பொதிந்தனவும், கிளைகளிலெல்லாம் நெருங்க அழகிய இரத்தினக குவியல்கள் செறிந்தனவுமாகிய அவ்விருட்சங்கள் (பலவகையாக வெய்திய) இருளை யொழிப்பன. எ - று. (சச)

கால மின்றியே கனிவன கணமலா ழகிழா
வாலு நெடடிலை யவிரொளிப பசுமபொனு லலாந்த
போலு நாண்மலா நறைபகி ரண்டமுமம பொதிந்த
சோலை நீழலிற றகையறு மிரவிதோத் துரகம்.

(இ - ள்.) கால நியதியிலலாமல (எபபொழுதும) பழுஙகட்டுவன. தேன் சொரியும மலாகளை கூமபாதன. அசைகினற நெடிய இலைகள் பிரகாசிககும் ஒளிபொருந்திய பசுமபொனனுல விளஙகுவன போலும். புதிய மலாகளின மணம வெளியணடஙகளிலும நிரமபுவன, (இததகைய) சோலையின நீழலில சூரியன் தேரிற்பூட்டிய குதிரைகள [தளாவு நீககும] இளைப்பாறும். எ-று. ()

உருளு நேமியொன றுடைய பசுமபரி யுததயோ
னருகு போதலி னயாவுயிாந தருந்தகை யகறறும
பொருவு சீதளத துடனடுக குறறனன போவான
கருகு கஙகுலிற போதருங கலைமதிக கடவுள.

(இ - ள்.) உருளுகின்ற ஒற்றைச்சககரததேரிற பச்சைப்புரவியைப்பூட்டிச் செலுததுஞ் சூரியன் அச்சோலையருகே செலலுதலால இளைபபாறிததனனு டைய தளர்ச்சியை நீககிககொளளுவான். இருணட இராககாலததில உதிககும (பதினாறு) கலைகளையுடைய சநதிரன (குளிாநதவனாயிருநதும்) இணையிலலாத குளிர்ச்சியோடுமெ உடல் நடுககமுற்று (அசசோலைவழி) போவான. எ - று. ()

அன்ன சோலையி னகன்சினை யூழ்த்திடு நறும்பூத
துன்னு வானிகந திழிதொறு மலமரு தோறற
முன்னை யூழ்முறை யநுபவ முறறுற முடிநதா
ருன்ன ருமபத மிழுநதிழி வாரையொத துளதால.

(இ - ள்.) அநதச்சோலையின அகனற கிளைகள சிநதுகின்றவாசமிகக பூக்கள், மிகுநத உயரததினினறும இறஙகுமபோது சுழலுங தோற்றமானது, முற்பட்ட ஊழின் வினைபபயனை நுகாநது முடிததவர்களாய, எண்ணுதற்கரி தாகிய சிறநத பதவியைவிட்டு இறஙகுவாரைப் போனறிருககும். எ - று. (சஎ)

அப் சோலையி னணிமலாக குபபைவீ ழருவி
யேய மால்வரை யுசசியெம மருஙகினு மிழிதன
மேய செல்வனை வேண்டுநா வேண்டுநா விருமபித
தூய நாண்மலர்த தொடைபுனைந் தனவெனத தோன்றும்.

(இ - ள்) இத்தகைததான அச்சோலையின அழகிய மலாததொகுதி களோடு இழிகின்ற அருவியானது, அப்பெரிய கைலாய மலையினுச்சியில் எப் புறத்திலும் இறஙகுநதோற்றம், செல்வமுடையவனை விரும்பினவர் ஒவ்வொரு வரும் ஆசைகொணடு புனிதமான புதிய மலர்மாலைகளைததரித்தன போலக காணப்படும். எ - று. (சஅ)

நாரந்த நாறின நறுமலர்ச் சந்தனங் கமழ்ந்த
குருந்த மட்டுயிர்த் தலர்ந்தன குங்கும மணந்த
செருந்தில வாசநாறின செழுஞ் செண்பகம் விரைத்த
பொருந்து தண்சினை நெடுங்குர வலர்தொறும் பூத்த.

(இ - ள்.) நாரத்தைகள் மணக்கின்றன. நல்ல பூக்களையுடைய சந்தன மரங்கள் வாசம் வீசுகின்றன. குருந்தமரங்கள் தேனைச்சிந்திப் பூத்தன. குங்கும மரங்கள் மணம் வீசின. செருந்தி மரங்கள் பரிமளஞ்சிந்தின. செழிய சண்பக மரங்கள் மணக்கின்றன. குளிர்ச்சி பொருந்திய கிளைகளையுடைய குரா மரங்கள் புட்பித்தன. எ - று.

நெடுங்குரவு பொருந்துதண் சினைதொறும் அலர்பூத்த எனினும் பொருந்தும். குராமலரைக் குராப்பாவை யென்பது வழக்கு. (௪௯)

அருவி தேக்கிய படுகரிற் பொதுளிய வாம்பல்
மருவு வெள்ளியங் குவட்டொளி கதுவுற மலர்ந்த
பொருவில் மாலவரைப் பொற்குவட்டிளவெயில் பொரலான்
முருகு வாய்மடுத் தொடுக்கிதழ் மலர்ந்தன முளரி.

(இ - ள்.) அருவிகளது தேங்கிய பள்ளங்களிற் பொருந்திய ஆம்பல்கள், அழகிய வெள்ளியிலையாகிய கைலாயத்தின் ஒளி தம்பால் வீச (சந்திரகிரண மென) மலர்ந்தன. தாமரையானது ஒப்பில்லாத அப்பெரிய கைலையின் பொன் மயமான உச்சியின் இளங்கிரணம் மோதுதலால் (சூரியகாந்தியென்று) தேன் பொருந்திக் குவிந்திருந்த இதழ்களை விகசித்தன. எ - று.

ஆம்பல் சந்திரன் வருகையாலும், தாமரை சூரியன் வருகையாலும் மலருவது இயற்கை. (௫0)

காலத் தூழ்பல முறைமுறை கழிதர வயிர்த்துச்
சாலக் காரொளி தழைதரத் தனித்தனி யரும்பி
யேலத் தம்முழைக் கருங்கொழுந் தெழுந்தென நீலக்
கோலப் பாறையி னகன்சுனை நிரம்பின குவளை.

(இ - ள்.) அழகமைந்த நீலக்கற்பாறைகளிலுள்ள அகன்ற சுனைகளில், அவற்றிற் பொருந்திய கரிய பிரகாசமானது மேலோங்கி யெழுந்தாற்போலப் பொருந்தும்படி குவளை மலர்களானவை, காலமுடிவுகள் கணக்கிறந்தன முறைப்படி கழிய, அழகு பொருந்தி, மிகுந்த கருமை நிறத்தைப் பரப்பும்படி தனித்தனி பூத்து நிரம்பியுள்ளன. எ - று.

கோல நீலப்பாறையின் அகன்சுனை தம் முழை கருங்கொழுந்து எழுந்தென குவளையயிர்த்து அரும்பி நிரம்பின எனக்கூட்டுக. (௫௧)

அயிர்பெற் றோங்கிய தமனியத் தறையறை தோறு
மெயில்பெற் றோங்கிய பொற்குவட் டிடந்தொறுஞ் சார்ந்த
செயிரற் றேந்திய பொற்றகட் டழுந்துறச் செறித்த
வயிரப் பாளமொத் திமைப்பன தெளிபுனன் மடுக்கள்.

(இ - ள்.) தெளிந்த நீர்நிறைந்த மடுக்கள், நுண்மணல் பெற்றுயர்ந்த பொற்பாறைகளொவ்வொன்றிலும், மதில்களையுடைத்தாய் ஓங்கியிருக்கும் பொன்மலைச் சிகரங்களொவ்வொன்றிலும், தம்மிடம் பொருந்தக் குற்றமறப் பதிக்கப்பட்ட பொற்றகட்டில் அழுந்தும்படி பதித்த வயிரப்பாளங்களைப் போன்று ஒளிவிடுகின்றன. எ - று. (௫௨)

ஆட்டு வாரதிரை யலேத்திட வுடையரக் காம்ப
னீட்டு நீரதடத தொசிநதன கிடபபவந நெடுநீர்
மாட்டு வாரதிரை வாவிய வாளைவா லடிப்பக
கோட்டு நீரராக குருதிகொப புளிப்பன போலும.

(இ - ள்.) அசைகின்ற நெடிய அலேகள் அலேகக, அவற்றால் அழிநதுள்ள செவ்வாம்பன் மலாகள் நீளமான நீர நிறைநத தடாகஙகளில வளைநது கிடக்கின்ற தோற்றமானது, அப்பெரு நீரிலுணடான நெடிய அலேகளிற்பாயும வாளை மீன்கள தம்முடைய வாலகளாலடிகக, வளைநதுள்ள அநநீரில வசிககும நீாப்பாம்புகள் உதிரங கொபபுளிகக இருப்பதுபோலும விளஙகும். எ - று. ()

தெளிககு மீரமபுனற் றடநதுறை நறுமலா சிவணிக
களிசசு ருமபின நானமறை யலலன கழறு
வொளிபபு தைதினன புடைபவாக குளபபடும பதவி
யளிககு மஞசெழுந தலலது மிழறறில வனனம.

(இ - ள.) தெளிவாங்ககுளிாநத நீரையுடைய தடாகததிலிருககும வாசந தங்கிய மலாகளில பொருநதிக களிப்பெயதும வணடு கூட்டஙகள நானகு வேதஙகளை யலலாதனவறறை ஒலிககமாட்டா. (அஙகுளள) அனனஙகளெல லாம் தெளிநத அறிவினிடததில மெயயனபுடையவருககு, அவாகளாற கருதப் படும் பதவிகளை யளிககவல்ல பஞசாககரததையலலது பகரமாட்டா. எ - று. ()

அபபெ ருஙகிரி நவநதி யருஙகதி புரககு
முபபெ ருநதலே வாககுமெட டாதன முயலா
வொபப ருஙதுறை குடைபவாக கோஙகிரும பததி
னெபபெ ருஙகதி யளிககுமோ வறிநதில மினனும.

(இ - ள.) அம்மகா கைலாயததிலுளள நவநதிகளும், அரிய பதவிகளைப் பாதுகாககும பெருநதலேவாகளாகிய திரிமூாததிகளுககுஞ சொலலமுடியாப் பெருமையுடையன. ஒப்பிலலாத அரிய அநத நதிததுறைகளில மூழ்குபவருககு உயாநத பெரிய பதவியில எததனமைததான பெரிய பதவியைககொடுககுமோ அதனை இதுகாறும அறிநதிலோம. எ - று. (௫௫)

பாஙகா வைகிய வனநதொறு மருநதவம பயிலவா
ரோஙகு மாதவ ரெபபத முணாநதுகொ ளுணரோம
வாஙகு வாாசடைப புனிதனோ மலாபபத மலலால
யாஙக ணுநதெரிந துணரினும பதவிமற றிலலே.

(இ - ள்.) வளைநது நீணட சடையையுடைய சிவபெருமானது ஒப்பற்ற தாமரை மலாபோன்ற திருவடியே யலலாமல, எஙகுநதேடியாராயநதாலும அதிற சிறநத பதவி பிறிதொனறிலலே. (இஃதிஙஙன மிருக்க) பககலிலுள்ள வனஙகளிலெல்லாம் அருநதவஞ செயவாாகள(ஆகிய) அப்பெருநதவசிகள எநதப்பதவியைககருதியோ அறியோம. எ - று. (௫௬)

அனைய கானகத தருமபொறி யயிலெயிற றரவ
முனையெ யிறறுறை யமுதல தூறறுறு முழுஙகி
வினைசெய் வாளரி பிணையொடுங குழைவன விரும்பி
நினையு நெஞசமு மஞசெழுந தலலது நினையா.

(இ - ள்.) அததகைய வனஙகளிலே அரிய பொறிகளையும் கூரிய பற்களையுமுடைய சாப்பஙகள், தமது முனைப்பற்களிலே துளிகளாக அமுதையேயன்றி

(விடத்தை)ச் சொரியமாட்டா. கர்ச்சனை செய்து கொடுமைபுரியுஞ் சிங்கங்கள் பேடைகளுடன் விரும்பிக்கலந்து கருதுகின்ற அவற்றின் மனமும் பஞ்சாட்சரத்தை யன்றி (மற்றொன்றையும்) கருதமாட்டா. எ - று. (ருள)

வனத்து வைகுறுங் குடம்பைய வாசிறைப் பறவை
யினத்த கிளைக ளிசைப்பன செவிமடுத் தொப்பில
புனற்கொ டுஞ்சடை யெம்பிரா னருள் பொருந்தி
யனைத்து மாகமச் சரிதைமற் றலதொன் றறையா.

(இ - ள்.) அவ்வனங்களிலுள்ள கூட்டில் வசிப்பனவாகி நெடிய சிறகுகளையுடைய பறவைத்தொகுதிகள் யாவும், கிளிப்பிள்ளைகள் பேசுவனவற்றைக் கேட்டு, சமானமில்லாத கங்காசலம் பொருந்திய சடையையுடைய எமது சிவபெருமான் திருவருளையடைந்து, ஆகமசரிதங்களையன்றிப் பிறிதொன்றனையும்பேசமாட்டா. எ - று. (ருஅ)

விழைந்த மாதவர் விரும்பிய வளமெலா நுகர்ந்துந்
தழைந்த மாவனத் தருந்தவந் தவறுறு திழைப்பார்
குழைந்த வெண்ணிலாக் குழவியஞ் சிமிலியைக் குணியா
விழைந்த சிந்தையி னவனுரு வேண்டினரிருப்பார்.

(இ - ள்.) விரும்பிய பெருந்தவத்தையுடையோர் தாம் இச்சித்த பலவளங்களையும் அநுபவித்தும், தழைந்துள்ள அச்சிறந்த வனத்திலே தங்கள் அருந்தவங்களைத் தவறுபடாது செய்பவர்களாய், வளைந்த வெண்ணிறந்தங்கிய இளஞ்சந்திரனை யணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானைத்தியானித்து அச்சிவசாரூபத்தை விரும்பி வசித்திருப்பார்கள். எ - று.

சிமிலி - சடை. (ருகூ)

இன்ன தன்மைய கயிலையின் கொடுமுடி யிலக்கம்
பன்னு கோடியொன் றெடுத்தபன் னொரிலக் கத்தை
மன்னு மாயிர மொன்றுபத் தவற்றொடு மருவித்
துன்னு நூற்றிரு பத்தொடு மைந்தெனச் சொல்வார்.

(இ - ள்.) இப்படிப்பட்ட இயல்பமைந்த அம்மகா கைலாயத்தின் கொடுமுடிகளினுடைய தொகை கோடியே பதினொரிலட்சத்துப் பதினோராயிரத்து நூற்றிருபத்தைந்து என்று (பெரியோர்கள் தம் விசாரணையால்) சொல்வார்கள். எ - று.

இச்செய்யுள் மேற்காட்டிய தொகையிணங்க அடைமொழிகள் சேர்த்து அமைந்துள்ளது. (சுO)

மொழித ருமபெருங் கயிலையைக் கீழுற மூயற்றி
யிழிவ றும்பசுந் தமனியத் திருநில மிதன்பா
லொழிவ றுங்கணக் கிறந்தன கணங்களோ டொழியாப்
பொழியு மன்பின ருருத்திர ராயிரர் பொலிவார்.

(இ - ள்.) (துதித்துப்) பேசப்படுகின்றன மகாகைலாயத்திற்குக் கீழே பொருந்தச்சூழ்ந்த இழிவில்லாத பசும்பொன்மயமான பெரிய பூமியிலே, நீக்கமில்லாத எண்ணிறந்த கணங்களோடு அழிவின்றிப் பெருகுகின்ற அன்பின்மிக்க ஆயிரம் உருத்திரர்கள் விளங்குவார்கள். எ - று. (சுக)

ஆட கத்தளத் தளவொரு கோடியோ சனையா
மாடு முற்றுற வெள்ளிவெண் மதிளுடுத் திருக்கு

மூடு சுற்றிய தமனிய விஞ்சியொன றுளதா
னீடு வாரமதிற பெருமையி னிலேநிகழ்த் துதுமால்.

(இ - ள்.) அப்பொன்மயமான பூமியின் அளவு ஒரு கோடியோசனை விஸ்தீரணமாம். அதன் பக்கலில முழுவதும வெள்ளியமதில் சூழ்நது கொணடிருககும். அம்மதிலூடு சூழ்நத பொன்மதிலொன்றிருக்கின்றது. மிகவும் நீண்டுள்ள அநதமதிலின் சிறப்பைச்சொலலுவோம். எ - று. (சுஉ)

கோடி யோசனை யிடமுள கோடியிற் கோடி
யூடு போககியே மேககுற நிவநதன வோஙகி
நீடு கோபுர மெடடுள நெடுநிலே வாயின்
மாடு காபபவ ரிவரென வரன்முறை வகுப்பாம்.

(இ-ள்.) அம்மதில்கள் கோடியோசனை யகலமுள்ளன. மேலோஙகி அதிக உயர்வாகககோடி கோடியோசனை வளாநதிருககும். அவற்றில உனனதமான எட்டுக் கோபுரஙகள் உளளன அநநெடிய கோபுரவாயிலகளில் காவல் புரிபவாகள் இவ்விவரொன்பதைக கிரமமாகப்பிரிததுச் சொலலுவோம். எ - று. (சுங)

பூரு வததிடைக கணபதி பொஙகெரிய புறதது
வீர பததிரன் றென்றிசை நநதிமேன் மூலேக
கூர பிறபடை வயிரவன மேறறிசைக குமரன்
மாரு தநதிசை வைரவி வடககுமா காளா.

(இ - ள.) கீழ்ததிசையில கணபதியும், அதிகரிககினற [அக்கினி] தென்கீழ்ததிசையில் வீரபததிரரும், தெனறிசையில திருநநதிதேவரும், தென்மேற்கு மூலேயில கூாமையதஙகிய சூலாயுதமேநதிய வைரவரும், மேறறிசையில குமாரசுவாமியும், [வாயு] வடமேறகுததிசையில துாககையும, வடதிசையில மகா காளரும. எ - று.

இது முதலிரணடுபாடல்கள ஒருதொடா. (சுச)

வடகி ழக்கினி லரியா புததிரன் மறஙகூ
ரடுசி னத்தெறு கணஙகளோ டவணவண் புரப்பாா
நெடுமு டிபபெருங கயிலேயி னிலேயிது பகாநதே
முடனி வழறினே வளேநதிடு மரணமொன றுள்ளதால்.

(இ - ள.) வடகீழ்த்திசையில ஐயனுருமை, கடுமைமிகுநத (பகைஞரை) அழிககும் கோபமபொருநதிய கணகளுடனே அவவவவிடஙகளிற் காவல செய்வாாகள. நெடியகொடுமுடிகளேயுடைய மகாகைலாயததின நிலேமை இவ்வாறு சொனனேம். இதனேடு இவறறைச் சூழ்நதிருககும் மதிலொன றுணடு. எ - று. (சுரு)

வனம ணிககுலந துவன்றின வானுற நிவநத
சினவ ரககரா னிருதராற செலறகருந திறதத
கனேபெ ருநதிரைப பிரளயஞ் செலற்கருங காவ
லனேய மாபெருங கயிலேயி னிலேயிதெனை றறைநதான்.

(இ - ள்.) (அம்மதிற்புறஙகள்) அழகிய இரததினததொகுதிகள் பதிக்கப்பட்டன. ஆகாயமட்டும் உயர்நதன. கோபமுடைய இராககதராலும் அசுரராலும் செல்லுதற்கரிய தன்மையுடையன. ஒலிககினற பெரிய அலேகளோடு கூடிவரும் பிரளய வெள்ளமும் உட்புகுதற்கரிதாகிய காவலுடையன. அமமகாகைலாயத்தின் நிலேமை இஃதாகுமென்று இயமபினா. எ - று. (சுசு)

சூத மாமுனி வாசகங கேடடலுந துளங்கிச
சீத மெனபுனல விழிவழி யொழுகுறத் திருநதும

போத நெக்குற மயிர்ப்புறம் பொடித்தனர் புலமை
மாத வத்தினை சொன்புடைங் துருகினா மயங்கி.

(இ - ள்.) (இவ்வாறு திருவாய்மலர்ந்தருளிய) சூதமுனிவருடைய வாக்கியங்களைக் கேட்டவுடனே, மெய்ஞ்ஞானமுதிர்ந்த அப்பெருந்தவசிகள் நடுங்கெய்தி, குளிர்ச்சிபொருந்திய மெல்லிய ஆனந்தக்கண்ணீர் தமது கண்களின் வழியே சொரிய, திருந்தியதங்கள் உள்ளம் நெக்குவிட்டுருக, உடல்முழுதும் மயிர்க்கூச்செறிய, மயக்கெய்தி, எலும்பும் உருகினார்கள். எ - று. (௬எ)

அன்ன காலையி னன்னவாக கருந்தவத் தலைவன்
மன்னு மாதவத் துறையுளீர் கேட்கென வகுப்பான்
சொன்ன மாபெருங் கயிலைவீற் றிருக்கும் தொல்லோன்
மன்னு மாருயிாக குயிரெனத் திருவருள வழங்கும்.

(இ - ள்.) அந்தக்காலத்தில், அரியதவத்தலைவராகிய சூதமுனிவர், நிலையாகிய பெரியதவத்துறையிலிருப்பவர்களே! கேட்பீர்களாகவென்று அம்முனிவர்கட்குச் சொல்லுகின்றார். நாம்சொல்லிய அம்மகாகைலாயத்தில் வீற்றிருந்தருளும் பழமையாகிய சிவபெருமான், உலகிற்பொருந்திய சீவான்மாக்கட்கெல்லாம் பரமான்மாவாகவிருந்து திருவருள்புரிவார். எ - று. (௬அ)

கண்ணுங் கட்புலங் கதுவிய வொளிகளுந் சிவந்த
விண்ணும் விண்ணிடை வழங்கிய கதிர்களு மேலோ
ரெண்ணு மெண்ணிய பொருள்களும் யாவையுந் தானாய
நண்ணு நாயகனிருப்பது கயிலைமா நகரம்.

(இ - ள்.) கண்களும் கண்களுக்குள்ளே விளங்கிய ஒளிகளும், மேலுயர்ந்த ஆகாயமும் அவ்வாகாயத்திற் சஞ்சரிக்கும் (சூரியசந்திரர்களாகிய) இருசுடர்களும், மேலோருடைய எண்ணங்களும் அவர்களெண்ணுகின்றபொருள்களும் ஆகியவிவையெல்லாம் தாமாகவே விளங்குகின்ற சிவபெருமான் எழுந்தருளியிருப்பது அம்மகாகைலாயம். எ - று. (௬௯)

தெய்வ மேருவின் றெனபுலத் திருப்பெருங் கயிலைத்
தையல் பாகனமுத் தலைநெடுஞ் சூறபடைப் பெருமா
னைய னுலமுண் டிருண்டகண் டத்தின னமாவான
வையம யாவையும் படைத்தளித் தழிக்குமவ் வரதன்.

(இ - ள.) தெய்வீகந்தங்கிய மேருமலையின் தெற்கிலுள்ள சிறந்த அம்மகாகைலாயத்தில், பார்வபதியைப்பாகமாகவுடையவரும், முத்தலைகளையுடைய நெடிய சூலாயுதமேந்திய பெருமானும், (சர்வலோகங்கட்கும் சர்வதேவர்கட்கும்) தலைவரும், ஆலாலத்தை யமுதுசெய்து கறுத்தகண்டத்தையுடையவரும், உலகமுழுவதையுஞ் சிருட்டித்துக்காத்து அழிப்பவருமாகிய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளுவர். எ - று. (எ0)

உரைத்த தெய்வமாக கயிலைக ளிணையவோ ரிரண்டு
மருத்தி ஞானமா மயமென லாகுமிக் கயிலை
யுருத்தி ரபபெருங் கணங்களு முலகளிப் பவருந
திருத்த மாதவத் தலைவருஞ் சிந்தைசெய் திருப்பார்.

(இ - ள.) இங்கே சொல்லிய தெய்வீகமமைந்த இவ்விருபெருங்கைலைகளும் யாவர்க்கும் விருப்பத்தை யுண்டுசெய்யும் ஞானசொரூபமென்று சொல்லலாகும். இக்கைலைகளைப் பெரிய உருத்திரகணங்களும் (வைரவா முதலிய) உலகபாலகர்களும், திருத்தமாகிய சிறந்த தவத்தலைவர்களும் எக்காலத்திலும் தியானஞ்செய்து கொண்டிருப்பார்கள். எ - று. (எக)

இயங்கு வாயுவு மெரிகதிர்க் கடவுளு மெழுந்து
வயங்கு திங்களும் வளரொளிக் கனலியு மரபான்
முயன்று திறம்பன விவரருட் பெருமையான் முழுவுந்
நயங்கு திண்புயத் திந்திரன் பரவுமத் தகையே.

(இ - ள்.) சிவபெருமான் திருவருட்பெருமையினால், எங்கும் சஞ்சரிக்கின்ற வாயுவும், சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனும், மேலெழுந்து விளங்குகின்ற சந்திரனும், அதிகரிக்கின்ற காந்தியையுடைய அக்கினியும் தங்கள் தொழின்முறையே வணங்கிக்கொண்டிருப்பார்கள். மத்தளம்போல (திரண்ட) வலிய புயங்களையுடைய இந்திரனும் அவ்வண்ணமே வணங்கிக் கொண்டிருப்பான். எ - று. (எஉ)

இந்த மாபெருங் கைலையி னியற்கையைப் புலித்தா
டந்த மா முனி தனதுபன் மனியற் குரைப்ப
வந்த மாமுனி தாமரைக் கண்ணவற் கருள
விந்தை நாயகன் பாண்டவர்க் குரைத்தனன் மேனாள்.

(இ - ள்.) இந்த மகாகைலாயத்தின் நிலைமையைப் புலிக்கால்களை வேண்டிப்பெற்ற மழமுனிவர் தம் புதல்வராகிய உபமன்னிய முனிவர்க்குபதேசிக்க, அந்த உபமன்னிய மகாமுனிவர் செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய கிருஷ்ணமூர்த்திக்குபதேசிக்க, திருமகள் கொழுநராகிய அக்கண்ணபிரான் முற்காலத்தில் பாண்டவர்களுக்கு உபதேசித்தனர். எ - று.

மழமுனிவர் பத்திர புஷ்பங்களெடுக்க மரமேறுகையில் கால்சறுக்காமற் புலிக்காலும் புலிக்கையும், அம்மலர்களிற் குற்றங்காண விரல்களில் கண்களும் சிவபெருமானிடம் பெற்று வியாக்கிரபாதரென்னும் பெயரெய்தியவர். (எங)

அறிந்த மூவகைத் தலைவருங் கயிலைபெற் றடைந்தார்
செறிந்த வார்சடை யந்தணிர் நீவிரு நினைவிற்
செறிந்த வேட்கையிற் சிவனடி சேவைசெய் திடுமி
னெறிந்த பேரொளிக் கைலையே கதிபிறி திலலை

(இ - ள்.) (இவ்விதமாக) உபதேசிக்க உணர்ந்த மூவகைத்தலைவரும் கைலாயபதவியடைந்தார்கள். நெறிப்புற்ற நீண்டசடையையுடைய முனிவர்களே! நீங்களும் நினைவில் பெருவிருப்பத்துடன் சிவபெருமான் திருவடியைச் சேவிப்பீர்களாக. மிக்கவொளியைச்செய்யும் கைலாயமே கதி. வேறு கதியில்லை.

என்று கூறிய தொருங்குகேட் டுந்திய பனைத்தும
வென்ற மாதவ ரிருந்தவச் சூதனை வியந்தா
ரின்று நாமிவ ணியற்றிய தவப்பெரும் பேறு
சென்று பெற்றவர் கிடைத்தன மெனவகஞ் சிறந்தார்.

(இ - ள்.) என்று திருவாய்மலர்ந்தருளியதை, பஞ்சேந்திரியங்களையும் வென்ற அம்முனிவர் யாவருங் கூடியிருந்து கேட்டுச் சூதமாமுனிவரை வியந்தார்கள். நாம் இந்த நைமிசவனத்தில் வசித்துச் செய்தபெருந்தவப்பயனை, கைலைக்கு நேரேசென்று பெற்றார்போல இவ்விடத்திலேயே இன்றுபெற்றோ மென்று களித்தார்கள். எ - று. (எச)

கைலைமான்மியச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அஎ.

## இரண்டாவது

# சூராதிகளொடுக்கச் சருக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

உள்ள மோர்ந்தனை கேட்டுழி யெர்முறை யொருங்குணர்ந்
தொருங்காகப், பள்ள வார்மடைப் புனலெனத் தொகுத்ததனை யாம்
தன் பயனருய்த்தேம், வெள்ளெள் ளிறற்வெஞ் சூரனை முதலியோர்
விளிந்தபின் னவராவிக், கொள்ளை வேற்படை யொடுக்கிய தன்மை
யைக் கூறுதி யெமக்கென்றார்

(இ - ள்) (நைமிசாரணிய முனிவர்கள் சூதமுனிவரை நோக்கி) எங்கள்
[illegible] பள்ளத்தை நாடி வந்த மடைசலம் போலத்
திருவாய்மலர்ந்தருளினீர், நாங்கள் அதன் பலனை யநுபவித்தோம். வெள்ளிய
பற்கள் பொருந்திய வெவ்விய சூரபன்மன் முதலானவர்கள் இறந்தபிறகு,
அவர்கள் உயிரை, உயிர்க்கொள்ளை கொள்ளும் வேலாயுதமானது ஒடுக்கிக்
கொண்ட சரித்திரத்தை உபதேசிக்க வேண்டுமென்று வேண்டினார்கள் எ-று.

பன்னு மாதவத் தாறையுளோர் கேட்டுழிப் பழவினைப் பகை
வென்றோன், பின்ன லஞ்சடை நெடுமுடி துளக்கின னுவகையிற்
பெரிதுற்று, னன்ன காரண மறைகுதுங் கேண்மினென் றறைகுவா
னொருகாலம், பொன்ன லங்குதாரப் பன்னிரு தடம்புயப் புங்கவ
னெங்கோமான்.

(இ - ள்.) புகழ்ந்து சொல்லத்தக்க பெருந்தவநெறியினராகிய அம்முனி
வர்கள் கேட்டபோது, ஊழ்வினையாகிய பகையைவென்ற சூதமுனிவர், பின்
னல்செய்த அழகிய நெடிய சடைமுடியை யசைத்து மிகவுங் களிப்பெய்தி
அவ்வரலாற்றினைச் சொல்லுவோம். கேட்பீர்களாகவென்று திருவாய்மலர்ந்
தருளுகின்றார். ஒருகாலத்திலே பொன்மயமாக அசையும் மாலையணிந்த
விசாலமான பன்னிருதிருப்புயங்களையுடைய குமாரக்கடவுள். எ - று.

இது முதலிரண்டு பாடல்கள் ஒருதொடர். (௨)

கான வண்டறாக் கற்பகப் பொதும்பர்சூழ் கந்தமா தனநின்று
மான வேலொடு பசுந்தக் கலாபமா மயிற்புற மினிதேந்த
வேனை மாநிலத் திருவிளை யாடலுக் கெழுந்தரு ளியஞான்று
ஞான நாயக னுமையொடு மினிதுறை கயிலையை நண்ணுற்றான்.

(இ - ள்.) பண்பாடும் வண்டுகள் அகலாத கற்பகச்சோலை சூழ்ந்த கந்த
மாதனகிரியிலிருந்து, மாட்சிமை தங்கிய வேற்படையுடன், பசுமை நிறந்
தங்கிய தோகையையுடைய பெரிய மயிலானது தன் முதுகில் இனிமையாகத்
தாங்க, பிறவுலகங்களில் இயற்றவேண்டிய திருவிளையாடல்களுக்காக எழுந்
தருளிய நாளில், ஞானசொரூபியாகிய சிவபெருமான் உமாபிராட்டியுடன்
இனிதாக வீற்றிருக்கும் திருக்கைலாயகிரியையடைந்தனர். எ - று. (௩)

உற்ற காலையிற் களிமயிற் புறமிழிந் தொலிதரு சிறுதண்டைச்
சிற்றடித் துணை நோவர மென்மெலச் சென்றவச் சிறுகாலை

கொற்ற வாரகொடி மயிலொடுங் கயிலையின் னீழுறக் குமரேசன்
கற்றை வார்கதிர்க் கயிலைசென் றிறைஞ்சினன் பன்னிரு கரங்கூப்பி.

(இ - ள்.) அவ்வாறடைந்தபொழுது, களிப்புடைய மயிலின் முதுகினின்றிறங்கி ஒலிக்கின்ற சிறு தண்டையணிந்த சிறிய திருவடிகள் வருத்தமெய்த மெலமெல்ல நடந்தருளிய அச்சிறுநேரத்தில், வெற்றிபொருந்திய நெடிய கொடி (ஆகிய சேவலும்) மயில் (ஆகிய) வாகனமும், கைலாயத்தின் அடிவாரத்திலிருக்க, குமார சுவாமியானவர் தொகுதியாகி நீண்ட கிரணங்களைப்பரப்புங் கைலையையடைந்து தமது பன்னிரு திருக்கரங்களையுங் குவித்துப்பணிந்தனர். எ - று. (௪)

கறுத்த கண்டனைக் கண்ணுதற் பரமனை யடியவர் கருத்தீமை
வெறுத்த நாதனை வெண்ணிலாச் சடிலனை வெருவலர் புரந்தீய
வெறுத்த வாணகைப் புனிதனைக் கண்டுகண் களித்தன னுளநெக்கான்
மறுத்து வார்குழன் மரகதக்கொம்பனை வணங்கினன் மகிழ்பெற்றான்.

(இ - ள்.) கருநிறமமைந்த கண்டமுடையவரும், நெற்றிக்கண்ணையுடைய மேலானவரும், அடியவர் பிறவிநோயை நிவிர்த்திக்குந் தலைவரும், வெண்மை தங்கிய சந்திரனையணிந்த சடையை யுடையவரும், பகைஞர்து முப்புரங்களை யெரியும்படி கோபித்த ஒளிரிய நகையுடைய பரிசுத்தருமாகிய சிவபெருமானைத்தரிசித்துக் கண்களிகூர்ந்து மனமுருகினர். மறுபடியும் நெடிய கூந்தலையுடைய மரகதக் கொம்பினையொத்த உமாபிராட்டியைப்பணிந்து சந்தோஷமிருந்தனர். எ - று. (௫)

வருக மூறுசிறு தண்டையஞ் சிறடி மைந்தனை யெதிர்நோக்கி
யுருகு காதனமிக வெழுந்தன னுமையவ ளுமைபரிந் தலைகின்றான்
றிருந டம்புரிந் தனனது நோக்கினன் சிந்தையென் பொடுநெக்கா
னருகு நின்றனன் மெய்பொடிந் தரும்பின னயர்ந்தன னக்காலை.

(இ - ள்.) தம்பால் வந்த வீரக்கழலையும் சிறு தண்டையையு மணிந்த சிறிய பாதங்களையுடைய குமாரக்கடவுளை நேரே பார்த்து, தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமான் உருகுகின்ற ஆசைமிகுந்து சந்தோஷமேலீட்டினால் திருநடனமியற்றியருள, இளைய பிள்ளையார் அதனைத்தரிசித்து மனமும் எலும்புடன் உருகி அருகே நின்று உடல்முழுதும் மயிர்க்கூச்செறிந்து பரவசமாயினர். அச்சமயத்தில். எ - று. (௬)

முடங்கு வெண்டிரை பொருந்திருப் பாற்கடன் முனைறிலின முடத்துத்திப, படங்கொள பாம்பணைக் கண்டுயில படலையம் பசுந்துழாய் மணிமார்பன, றடங்கொ டுஞ்சிறை யுவணமீப பொலிந்தொரு மேருவின் றலைமுந்நீ, ரிடங்கொள் கார்மழை முளரிபூத் தனவென வெழுந்தனள் வருகின்றான்.

(இ - ள்.) மறிகின்ற வெள்ளிய அலைகள்மோதுகின்ற திருப்பாற்கடலின் முகப்பில், வளைந்த படப் பொறிகளையுடைய ஆயிரம் பணாமுடிகளமைந்த சேஷசயனத்தில் (யோக) நித்திரை புரியும் வரிசையாகிய பசிய துளவமாலையணிந்த (கவுஸ்துப) மணி பொருந்திய திருமார்பினையுடைய திருமால், பரந்த வலிவாகிய சிறகினையுடைய கருடன்மீது விளங்கி, ஒப்பற்ற மகமேருவின் மீது, கடலை யிடமாகக்கொண்ட கரிய மேகமானது தாமரை மலர்களையலர்ந்தாற்போல ஆரோகணித்து வந்தனர். எ - று. (௭)

தேவி வாழிய திருமறு மார்பினன் சென்றுறு திசைநோக்கித்
தூவி யன்னமொன் றுகைத்தன னான்முகச் சுருதியெம் பெருமானு
மேவு கற்பக நறுநிழ லினிதுறை விண்ணவர் கணஞ்சூழ
மூவெ யிற்புர ஞெற்றவ னுற்றுறை கயிலையை முடுகுற்றார்.

(இ - ள்.) சீதேவி வாழ்கின்ற அழகிய திருமறுமார்பினனாகிய விஷ்ணு மூர்த்தி சென்றடையுந் திசையினை நோக்கி, நான்முகனாகிய வேதங்களைச் சொன்ன எம்பெருமானான பிரமதேவனும் தூவியையுடைய அன்னத்தில் ஆரோகணித்து, பொருந்திய நல்ல கற்பக நீழலில் இனிதாக வசிக்கும் தேவர் கூட்டம் புடைசூழ, (பொன் வெள்ளி இரும்பென்னும்) மும்மதிலுடைய திரிபுரத்தை யெரித்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கைலாயத்தை யடைந்தனர் (அவ்விருவரும்) எ - று. (அ)

ஆழிமாயனு மருமறைக் கிழவனு மவணிழிந் தயலாகப்
பாழி வெண்சிறை யுவணமு மன்னமு மொழிந்தனர் படாநின்று
றூழி பற்பல காணினும் பிரளய வொடுக்கினு முலவாத
மூழி மால்வரைக் கயிலைமீச் சென்றனர் திருநடந் தொழுதேத்த.

(இ - ள்.) சக்கிராயுதமேந்திய திருமாலும் அரிய வேதங்களையுணர்ந்த பிரமதேவரும் அங்கே (தங்கள் வாகனங்களினின்று) இறங்கி, வலிய வெண்ணிறத்த சிறகினையுடைய கருடனையும் அன்னத்தையும் பக்கத்தில் நிறுத்திச்செல்வாராய், கணக்கிறந்த கற்பகாலங்கள் கழியுங்காலத்தும் மகாப்பிரளய வொடுக்கத்திலும் அழியாத சிகரத்தையுடைய பெரிய கைலாய பர்வதத்தின்மேல், திருநடனத்தைத் (தரிசித்து) வணங்கித் துதிக்கச் சென்றார்கள். எ - று. (கூ)

தொழுத கையினர் துளங்கிய மெய்யின ருருகிய நெஞ்சொடு
மழுத கண்ணின ரன்பினர் சென்றுழி யணிநெடு மணிவாயின்
முழுது மார்ந்தறி நந்திகைப் பிரம்படி முடிதொட நெருக்குற்று
வழுவி யேகினர் திருநடந் தொழுதனர் வருத்தின ரயனின்றார்.

(இ - ள்.) கூப்பிய கையையுடையவரும், நடுக்கமெய்திய சரீரமுடையவரும், மனதுருகுந்தன்மையோடு அழுத கண்ணினையுடையவரும், அன்புடையவருமாகி அவர்கள் சென்றபோது, அழகுற்ற நீண்ட ரத்தினங்கள் பதித்த முற்ற கோபுரவாயிலில் முற்றத்தெரிந்த திருநந்திதேவரது திருக்கரத்தேந்திய பிரம்படி முடிகளிற்பட நெருக்கத்திலே கடந்து சென்று திருநடனத்தை (தரிசித்து) பணிந்து துதித்துப் பக்கலில் நின்றார்கள். (எ - று.) (க0)

மறைமு ழங்கிய முழக்கொலி யெல்லையின் மாதிரங் கிழித்தோட
வறைக ருங்கழ லரிமுதற் பிரமரோத் தண்டகோ ளகையோங்க
விறைதி ருப்பதச் சிலம்பொலி மன்னுயிர்க் கினிதளித் திடரோட்ட
நிறைபெ ருங்கண மரகர வெனுந்தொனி பெருநெடு நிலம்போர்ப்ப.

(இ - ள்.) வேதங்களொலிக்கும் முழக்கொலியானது எல்லையில்லாத திசைகளைக் கிழித்துச்செல்லவும், ஒலிக்கின்ற வலிய வீரகண்டாமணி யணிந்த திருமால் பிரமன் முதலானோர் செய்யுந் தோத்திரவொலியானது அண்டகோளகையின் மேலோங்கவும், இறைவராகிய சிவபெருமானுடைய அழகிய திருவடிச்சிலம்பின் ஓசையானது நிலைபெற்ற உயிர்கட்கெல்லாம் இன்பத்தை யனுக்கிரகித்துத் துன்பத்தையகற்றவும், நிறைவுற்ற பெரிய தேவகணங்கள் (துதிக்கும்) அரகரவென்னுந் தொனி பெரிய பூலோகமுழுவதும் மூடவும். எ - று.

இது முதல் மூன்று கவிகள் ஒருதொடர். (கக)

தேவ துந்துபி முரட்டொடு பஃறொளைச் சில்லரிச் சிறுபாண்டில்
பாவு கண்படு மரம்படு திமிலைவெம் பல்லியத் தொகையார்ப்ப
மேவ ருஞ்சடைப் பகீரதி யுவட்டெழ விண்ணவர் கணஞ்சூழ்த
தாவி னந்திகைப் பிரம்பினு லிமையவர் முடிமணி தகர்ந்தோட.

(இ - ள்.) தேவ துந்துபிகளும், மாறுபட்டதொளைத்த பல துவாரங்களில் சில பருக்கைக்கற்கள் பொருந்திய சிறு கைத்தாளங்களும், பரந்த இடமகன்ற கண்களையுடைய அழகு பொருந்திய பம்பையும், திமிலைகளும், பெருமை தங்கிய பல வாத்தியத்தொகுதிகளும் ஆர்ப்பரிக்கவும், சடையிற் பொருந்திய கங்காநதி ஊற்றெடுக்கவும், தேவர் கூட்டஞ் சூழவும், கெடுதலில்லாத திருநந்தி தேவர் திருக்கையிலேந்திய (பொற்) பிரம்பினால் தேவர்கள் கிரீடத்திற்பதித்த நவரத்தினங்கள் பெயர்ந்து சிந்தவும். எ - று. (௧௨)

பணிப்ப டாம்பொதி யிமயமீன் றளித்தருண் மரகதப் பசும்பாவை
கனித்த சிந்தையி னருகுநின் றியற்றிய கமலமென் கரப்பாணி
தொனித்த பண்முறைச் சதிவழி சீர்தொறுந் தூக்கிசை செவிதூங்கக்
குனித்த நாயகன் றிருநடந் தொழுதனர் விண்ணவர் குழாத்தோடும்.

(இ - ள்) பனிப்படல மூடிய இமாசலமன்னன் பெற்றருளிய மரகதம் போலும் பசுமை நிறமமைந்த உமாபிராட்டியார், கனிவுற்ற திருவுள்ளத்துடன் அருகிலிருந்து இயற்றிய தாமரைபோலும் மெல்லிய கரதாளம் ஒலித்த சதியின் முறைப்படி, பாடுகின்ற பாடல்களின் ஓசையானது சீர்தோறும் திருச்செவியி லேறவும், திருநடனஞ்செய்கின்ற சிவபெருமானது திருநடனத்தை (தம்முடன் வந்திருந்த) தேவர் கூட்டத்துடன் பணிந்தார்கள். (பிரம விஷ்ணுக்கள்) எ - று.

குழைந்த சிந்தையர் குமிழ்விட் டொழுகிய கண்ணினர் குழையாநின்
றிழைந்த வன்பின ருருகிய வென்பினர் புகழ்த்தகை யிணைவாங்கார்
விழைந்த வேட்கையி னின்றன ரயர்ந்தனர் மெய்பொடித் துளநெக்கார்
தழைந்த செஞ்சடைப் பரமனை யாடல்கண் டுவப்பொடுங் கலந்தின்றார்.

(இ - ள்.) குழைவுற்ற மனமுடையவர்களும், நீர்க்குமிழிகள் துளிக்கும்படி ஆநந்த பாஷ்பஞ்சிந்தும் விழிகளையுடையவர்களும், குழைந்து கசிந்த அன்புடையவர்களும், உருகிய எலும்பினையுடையவர்களும், (சிரமிசைக்) கூப்பிய கையை எடாதவர்களும், விரும்பிய வாஞ்சையோடு நின்றும், சோர்ந்தும், உடல் புளகித்தும், மனநெக்கு விட்டும், தழைந்து செந்நிறம் வாய்ந்த சடை பொருந்திய சிவபெருமான் றிருநடனத்தைத்தரிசித்து அன்பின்மேம்பட்டு நின்றார்கள்.

இன்ன ரின்னண மாடல்கண் டுவப்புழி யெறிகதிர்க் கயிலைக்கீழ்
மன்னு சேவலு மரகதக் கொடுஞ்சிறை மயூரமு மினிதுற்ற
வன்ன காலையிற் சூரனும் பதுமனு மரிமுகத் தவனுங்கூட
மின்னு வெள்ளெயிற் றடுசினத் தாருக னெனப்படு வெய்யோனும்,

(இ - ள்) இவர்கள் இவ்வகையாகத் திருநடன தரிசனஞ்செய்து களிப்புற்ற திருக்கையிலையில், பிரகாசிக்கின்ற கிரணத்தையுடைய மகாகைலாயத்தின் அடிவாரத்தில், பொருந்திய சேவலும் மரகதரத்தினம்போலும் வளைந்த சிறகினை வாய்ந்த மயிலும் இனிமையாயிருந்தன. அந்த வேளையிற் சூரனும் பதுமனும் சிங்கமுகனும் கூர்மைவாய்ந்து பிரகாசிக்கும் வெள்ளிய பற்களையுடைய கொலைத்தக்க கோபமுடைய தாருகனென்று சொல்லப்பட்ட கொடியவனும்,

பூத வெங்கணக் குலத்திவர் நால்வரும் பொறிமயிற் கருகேகிய
பாத கிண்கிணிப் பங்கயம் பொறுத்தநின் பெருந்திறல் சொலற்பாற்
கேத னத்திறற் குக்குடத் தடுதிறல் எவர்கிளத் துவர் கெட்டேன் [றோ
போதி னான்முகத் தலைவனு நும்மடி போற்றுத லெளிதன்றே.

(இ - ள்.) பூதகணக்கொடுங் குலத்திலுதித்த இவர்கள் நால்வரும், புள்ளிகளையுடைய மயிலுக்கருகே போய குமாரக்கடவுளின் திருவடியாகிய கிண்கிணிமாலையணிந்த தாமரை மலர்களைச் சுமந்த உன்னுடைய பெரிய வல்லபம் (ஒருவரால்) சொல்லுந் தகுதியுடையதோ? துவசமாகிய வெற்றி பொருந்திய சேவலின் பேராற்றலை எவர்தாஞ் சொல்லவல்லவர்? ஐயோ! தாமரை மலரையிடமாகக்கொண்ட நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனும் உங்கள் பாதங்களைத் துதித்தல் எளிதல்லவே. எ - று. (கசு)

இவையறிந் துமற் றறிகிலரமென வெறுழ்வலிக் குடையோர்போற்
கவர்கொடுஞ்சிறைக் கலுழனு மன்னமுங் கருத்துற மதியாவா
யவமதித்தன வறிந்திலிர் போலுமற் றும்மொடும் மடுபோர்க்கென்
றுவைசெ றுப்புழி நும்மொடு நால்வரு முருத்தெழுந் துடனிற்பேம்.

(இ - ள்.) இவற்றையெல்லாந் தெரிந்தும் அறியாதவையென்று (கண்டோர்) கூறும்படி, பெருவல்லபத்திற்கு உரியவர்களைப் போன்று, பிரிந்து நீண்ட சிறகையுடைய கருடனும் அன்னமும் தங்கள் மனத்திற்பொருந்த மதியாதவைகளாய உங்களை அவமதித்திருக்கின்றன. இவை உங்கட்குத் தெரியாது போலும். உங்களோடு அவ்விரண்டும் வெற்றிபெறத்தக்கபோருக்கு எதிர்க்குஞ் சமயத்தில், உங்களுடன் நாங்கள் நால்வரும் கோபித்து உடனாக (துணை) நிற்போம். எ - று. (கஎ)

எனமொழிந்தன விருசெவித் தொளைபுகவெரிப்பொறி விழிகால
வனமயிற்குலச் சிறைபுடைத் தெழுந்தது வாரணஞ் சினஞ்சீறிப்
புனைபுடைச்சிறை யடித்தெடுப் போர்க்கடு போர்த்துணிந்தது பூதத்
தினவிழிக்குலம் வடவைக்க கியவுருத் தெழுந்தன வெதிர்நோக்கி

(இ - ள்) என்று கூறிய சொற்கள், இரண்டு செவித் தொளைகளிலும் புகுந்தவுடனே, கண்கள் நெருப்புப்பொறிகளைச் சிந்தும்படி, அழகிய மயிலானது தன் திரு சிறகுகளையும் அடித்துக்கொண்டெழுந்தது. சேவலும் கோபமிகுந்து அலங்காரமுடைய இருபுறச் சிறகுகளும் பாதத்திற்பட விரித்துவெற்றிபெறத்தக்க போர்க்குத்தொடங்கியது. பூதகணத்தினர் கண்கள் வடவாக்கினியைச் சிந்தி அவைகளை உற்றுப்பார்த்த வண்ணமாய்க்கோபித்தெழும்பின.

உருவு சிற்றமொத் தெதிர்வர நோக்கிய வுவணமு முலகோங்கிய
பொருபெ ருந்திரைப் பிரளயஞ் சுவற்றிய புடைச்சிறை புடைத்தார
விருகொ டுஞ்சிறை மலரய னன்னமு மெதிர்நடந் ததுதம்மிற் [ப்ப
செருவி ளைத்தடு திமிலமிட் டுரப்பின திருகினர் சினஞ்சீறி.

(இ - ள்.) கோபமே உருவெடுத்தாற் போன்று எதிர் வருவதைக்கண்ட கருடனும், உலகத்திற்கு மேற்பட்டு மோதும் பெரிய அலையோடு கூடிய பிரளய வெள்ளத்தையுஞ் சுவறச்செய்யத்தக்க இரு சிறகுகளையும் அடித்துக்கொண்டு ஆரப்பரிக்க, கமலாசனனாகிய பிரமதேவனுடைய இருபெருஞ் சிறகுகளையுடைய அன்னமும் எதிரே நடந்து வந்தது. இவை தம்முள் விளைத்த கோபம் மேலிட்டுப்போர் புரிந்து வெற்றிபெறத்தக்க பேரொலியோடு கர்ச்சித்தன. எ - று. (கஅ)

## மேற்படி வேறு.

தெழித்தனவு ரப்பினசி னத்தனக னற்பொறிதெ றிப்பவெதிரோ
விழித்தனக டித்தனமி தித்தனவ லங்குதிரைவேலைசிறையாற
சுழித்தனவு வடபெடழுநெ டுங்கிரிமு டித்தலைது ளக்கியதிரக்
கொழித்தெழுநிலத்துகள்கொழுந்தொடுபடாதுதிசைகொண்டுமறுக.

(இ - ள்.) இவ்விரண்டின சிறகையடித்துக்கொண்ட காற்றினால், அசைகின்ற அலைகளையுடைய கடலானது சுழித்துப்பெருக்கெடுக்கவும், நெடிய மேரு பர்வதமானது கொடுமுடிகளாகிய தனது சிகரங்களை யசைத்ததிரவும், கொழித்தெழுகின்ற நிலத்தின் புழுதிகள் கொழுந்தாகப்படாது திசைகளிற் சுழலவும், பேரொலி செய்தன காச்சித்தன கோபித்தன நெருப்புப் பொறிபறக்க அவைகளை எதிர்த்துப்பார்த்தன, பறகள் கடித்தன. பூமியை அழுத்தி மிதித்தன. (எ - று.) (௨௰)

ஆதவனொ ளித்தனன சும்புறப சும்பொனுல கண்டர்வெருவிப்
போதரநி னைத்தனரி டிக்குலமி டிப்பொடுபொ ரிந்துதிருமான்
மீதொடுநெ டுஞ்சிகர மாயிரநி ரைத்தவட மேருவரையு
மாதிரமு ழக்கவரு மாருதமெ னப்பதறி மம்மருறுமால்.

(இ - ள்) சூரியன் மறைந்தனன. வழுக்குதலுடைய பசும்பொன் மயமான தேவலோகத்தில் வசிக்கும் தேவர்கள் அஞ்சி அவ்விடம் விட்டு நீங்கக் கருதினார்கள். இடிக்கூட்டங்கள் இடித்துக்கொண்டு பொரிந்துதிர்ந்தன. மேலோங்கிய நெடிய ஆயிரஞ்சிகரங்களையுடைய வடதிசையிலுள்ள மேருமலையும், திசைகளெல்லாம் கலங்கவருஞ் சண்டமாருதத்தைக் கண்டதுபோலப் பதைபதைத்துத் துக்கிக்கும். எ - று. (௨௧)

வாளெயிற துக்கியக ணத்தலைவர் நாலவரும னஞ்சி னவினர்
கோளுறுசி றைக்கலுழ னோடெதிர மைந்தமர்கொ டுத்தனர்கள்மாற
ருளொடுசெ டித்தலைக டித்துதறி டச்சிகித டஞ்சி றையினால்
மூளுறுசி னக்கலுழ னப்பிடர்பு டைத்துமு ழக்கமெழவே.

(இ - ள.) ஒளிபொருந்திய பற்களைக்கடித்த அந்த நான்கு கணத்தலைவர்களும் மனத்திற கோபமிகுந்தவர்களாய், வலிதங்கிய சிறகுகளையுடைய கருடனோ டெதிர்த்துப் போர்செய்தார்கள். கோபமிக்க கருடனுடைய கால்களோடு முருட்டுத்தலையையுங் கடித்துத்தறவேண்டுமென்று, மயிலானது தனது பெருஞ்சிறகினாற் பேரொலியுண்டாகும் வகையாக அதன் கழுத்திலடித்தது. எ-று.()

ஆரணமு தற்றலைவ னேறியத டஞ்சிறைய னத்தி னுடனே
வாரணநெ டுங்கொடிம லைந்ததிற லிதெனவு ழங்கவசமோ
கூரடியு கிரச்சுவடு கொண்டெகின நெஞ்சுகுறை பட்ட குறைவாய்ச்
சோரியுக ளித்தெழவ யச்சிறைபு டைத்தது றக்கமதிர.

(இ - ள.) வேதங்களை யுரைத்த முதல்வனாகிய பிரமதேவன் ஏறுகின்ற பரந்த சிறகுகளையுடைய அன்னத்தோடு, நீண்டகொடியாகிய சேவல் போர் செய்த ஆற்றலை இவ்வகையென்று சொல்லவியலுமோ? தனது கூரிய கால்களின் நகக்குறியினால் அன்னத்தின நெஞ்சைக்குத்திய அக்காயத்தினின்றும் உதிரம் பெருகியொழுகும்படி தேவலோகமும் அதிரத்தக்கதாய்த் தனவலிய சிறகாலடித்தது. எ - று. (௨௩)

இத்தலைய ருஞ்சமரி ழைத்தகரு டக்கொடியி ழந்து மங்குவான
மொய்த்தசிறை தட்டியெழ வோதிமம தன்பிறகு முந்து றுவதாற்
கைத்தலநெ டுங்கதைபொ றுத்தெறிக ணத்தலைவர் கண்டு கதழ்வார்
சித்திரம யிற்கொடிய குக்குடம வற்றின்வழி சென்று தொடரா.

(இ - ள்.) இவ்விடத்திற் பெரும்போர் செய்தகருடன் வலியிழந்து பெரிய ஆகாயமார்க்கமாய்த் தன்னிரு சிறகையும் புடைத்துக்கொண்டு பறந்தோட, அன்னமும் அதனைப்பின்றொடர்ந்து பறக்கின்றமையால், அழகியமயிலும் கொடியாகிய சேவலும் அவற்றின்பின்னே சென்று துரத்த, கைகளில் நீண்ட கதாயுதமேந்திய பகைஞரைவெறியும் பூதகணநாதர் அதுகண்டு மனங்கொதிக்கின்றார்கள். எ - று. (உச)

சென்றிடுபெ ருந்திசையு மண்டமுமதிர்ந்துயிர்சி தைந்து மறுக
மன்றன்மல ரோனுலக டைந்தெகின மறைந்துறுவ யக்க லுழனு
நின்றெழுந் துறுகொடுமு குந்தனுல கத்திடைநி மிர்ந்து மறையக்
கன்றியசி னத்தொடுதொ டர்ந்தடிப டர்ந்ததுக லாப மயிலே.

(இ - ள்.) அன்னமானது தான் செல்லுந்திசைகளும் அண்டகோடிகளும் அதிர்வெய்தி அங்குள்ள சீவராசிகளும் அழிந்து துக்கிக்க, மணங்கமழுந் தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனுடைய சத்தியலோகத்தை யடைந்து மறைந்துவிட்டது. வெற்றிதங்கிய கருடனும் அங்கிருந்துண்டாகிய பயத்துடன் விஷ்ணுமூர்த்தியின் வைகுந்தத்திலே யோடி மறைந்துவிட, தோகையையுடைய மயிலானது மிகுந்தகோபத்துடன் பின்றொடர்ந்து சென்றது எ - று. (உரு)

ஆயிரமி தழ்த்தா மரைமி சையமர்ந் துருமுதி யுலகிற்
பாயதுக ணத்தினில னைத்துயிர்செ குத்தது படர்ந்து நெடுவா
னேயதுமு குந்தனுல கெய்தியவி ருஞ்சிறைவ யக்க லுழனைப்
போயுயிர்ப றித்ததுமு குந்தனுல கம்பொடிப டச்சி தறியே.

(இ - ள்) ஆயிரம் இதழ்களையுடைய தாமரைப்பீடத்திலிருக்குஞ் சதுமுகனுடைய சத்தியலோகத்தில் முதலிற்பாய்ந்தது. ஒரு கணப்பொழுதிற்குள்ளாக அனைத்தினுயிரை யகற்றியது. அங்கிருந்து சென்று, நீண்ட ஆகாயவழியாக வைகுந்தமெய்தி அவ்வைகுந்தம் தூளபடும்படியழித்து, அங்கே மறைந்திருந்த பெரிய சிறகுகளையுடைய வெற்றிபொருந்திய கருடனையணுகி அதன் உயிரைப் போக்கியது எ - று. (உசு)

அங்கணம ராகக்குமுத ணையகன்மு குந்தனுல கத்தை யழியாச்
செங்கமல நாயகனி ருந்தவுல கப்பதவி சிந்தி டமுனிந்      [ரிசூழ்
தெங்கணுமவெ குண்டுகொடி வாரணமு யிர்ப்பொறைகொ றித்த தெ
வெங்கணிகல வாளெயிறு டைத்தலைவ ரெங்கணுமவெ குண்டு முனிவார்.

(இ - ள்) கொடியாகிய சேவலானது, அவ்விடத்திலே தேவர்களுக்கு முதற்றலைவராகிய விஷ்ணுவின் (வைகுந்த) லோகத்தையழித்து, செந்தாமரைமலரிலெழுந்தருளிய பிரமதேவன் பதவியாகிய சத்தியலோகமு மழியும்படி கோபித்து, இவ்விருபதவிகளிலுமுள்ள பலசீவராசிகளையுங் கோபித்துப் புசித்தது. அக்கினிசூழ்ந்த கொடிய கண்களையும் வலியமைந்து ஒளிசெய்யும் பற்களையுமுடைய கணத்தலைவர்கள் நாலவரும் எங்கெங்கும் கோபித்துச் சீறுவர்.

இப்படிய ருஞ்சமரி ழைத்திடுமெ திர்ப்பினிலெ ழுந்த விசையோர்
கப்படிவி றற்பதமு றுத்தநெடி தோடினாக லக்க முறுவா

றொப்படியி னிக்குடியி ருப்பதென விம்மலினி ரங்கி வெருவா
மைப்படிக ளத்தனட னம்புரித ருங்கயிலை வந்த ணுகினார்.

(இ - ள்.) இவ்வண்ணமாகப் பெரும்போர் செய்யும் அதிர்ச்சியால் பயந்தோடிய தேவர்கள், தம்பாதங்களிலுள்ள கிளைகளைப்போன்ற விரல்கள் நிலத்திற் பதிய விரைந்தோடிக்கலங்கி, இனிநாம் எங்ஙனங் குடியிருப்போமென்று விம்முதலுடன் துக்கமெய்தி, ஆலாலவிடந்தங்கிய நீலகண்டத்தையுடைய சிவபெருமான் ஆனந்த நடனமியற்றும் திருக்கைலாயமலையைச் சேர்ந்தார்கள். எ-று.

"கப்படி விரற்பதம்" என்பதை, "அடிகப்பு விரற்பதம்" என மாற்றுக. ()

அன்னவர் திருக்கயிலை யண்மினர்கொ டுஞ்சமர டாத்த மயிலும்
மின்னெயிறு டைக்கணமு மாரணமு மக்கயிலை வெற்பு மருவி
மன்னியொரு பாகமுற முந்தமர ரம்பொனணி வாயி லினுறு
வின்னலினி யாரொடுமெ ளம்புதுமெ னத்தனியி ரங்கி மொழிவார்.

(இ - ள்) அந்தே வர்கள் திருக்கைலையை யடைந்தார்கள். பெரும்போர் புரிந்த மயிலும், மின்னுகின்ற பற்களையுடைய பூதகணத்தலைவர்களும், சேவலும் அக்கைலாயகிரியை யடைந்து ஒருபக்கலிற் பொருந்தியிருக்க, முற்படவந்த தேவர்கள் அழகிய பொன்னாலாகிய திருவாயிலையடைந்து, நாங்குற்றத்துன்பத்தை இனியாவரோடும் விண்ணப்பிப்போமென்று தனித்தனி இரக்கமெய்தினார்கள். எ - று.

"யாரொடும் விளம்புதும்" என்றது - கருடனும் அன்னமும் அழிந்ததுடன் வைகுந்தமும் சத்தியலோகமும் பாழ்படுத்தப்பட்டமையின் அவற்றின் இறைவர்களான திருமால் பிரமன் இவர்களோடு முறையிடுவதா, துன்பிழைத்த மயிலும் சேவலும் குமாரசுவாமியின் வாகனமுங் கொடியுமாகலின் அவர்பால் முறையிடுவதா, சூரன் பதுமன் சிங்கன் தாரகனென்னும் கணத்தலைவர்கள் சிவபெருமானுடைய ஆட்களாகலின் அவர்பால் முறையிடுவதாவென்று தேருந்துவருந்தினரென்பதாம். (௨௯)

ஆயதுநி கழ்ந்தபொழு தாரணமு தற்பரனை யாடல் பரவிச்
சேயொளிவி ரித்தபத பங்கயம்வ ணங்கினர்தி ருப்பி வரனும்
மாயனையெ திர்ந்துநெடு வானவர்கு ழாமொடுவ ணங்கி வழிபா
டேயதுபு ரிந்துவெரு வந்தபடி தங்குறையி ரந்து புகல்வார்.

(இ - ள்.) ஆகிய இச்செய்தி நிகழ்ந்த காலத்தில், வேத முதல்வராகிய சிவபெருமானை நடன காலத்தில் தரிசனஞ்செய்து, செவ்வொளிபரப்பிய பாததாமரையைப் பணிந்தவர்கள் திரும்பிவரவும், மிகுதியாகிய வானவர்கூட்டமாக விஷ்ணுமூர்த்தியைக் கண்டு வணங்கி, தகுதியாகிய வழிபாடுகளைச்செய்து பயங்கொண்டு தமக்குற்ற குறைகளை முறையிட்டு யாசித்து விண்ணப்பஞ்செய்யத் துதிப்பாராயினர். எ - று. (௩௰)

**தரவுக் கொச்சகக்கலிப்பா.**

மூவா முதலே முளரித் திருநாபிப்
பூவா னுலகளித்த புண்ணியனே யெம்முயிரைக்
காவா யெனிலெவரே காப்பார் கடலுறங்குந்
தேவா பசுந்துழாய்ச் சென்னிப் பெருமானே.

(இ - ள்.) அழியாத முதற்பொருளே! திருவுந்தி யாகிய செந்தாமரை மலரினால் எல்லா வுலகங்களையும் படைத்த புண்ணிய மூர்த்தியே! நீ எங்களுயிரைக் காவாது விடுவாயாகில வேறெவர்தாம் காக்கவல்லவர்? க்ஷீராப்தியில் அறிதுயில்புரியுந் தேவனே! பசிய துளவமாலையணிந்த திருமுடியையுடைய கடவுளே!

அன்றோ களிறுதி மூல மெனவழைப்பச
சென்றோடி யோடா விடாதீர்த்த சேவகனே
குன்றோ டினங்காத்த கோவே யுலகளந்து
நின்றோ யெரிவிழிக்கு நேமிப் பெருமானே.

(இ - ள்) முன்னாளில், ஒரு யானை [கஜேந்திரன்] ஆதிமூலமேயெனக் கூப்பிட விரைந்தோடிச்சென்று நீங்காத துன்பத்தைத்தொலைத்த சேவகமுடையவரே! (கோவர்த்தன மென்னும்) குன்றினால் பசுமந்தையை (இந்திரன் பெய்வித்த சோனைமாரியினின்றும்)காத்தருளிய தலைவரே! உலகத்தை (திரிவிக்கிரமாவதாரங்கொண்டு) அளந்து நின்றவரே! தீயைப்போலப் பிரகாசிக்கும் (சுதரிசனமென்னும்) சக்கிராயுதமேந்திய பெருமானே! எ - று. (௩௨)

ஐயோ வமரு ருலகிறந்த தாழியாய்
வெய்யோ மெமைக்காப்பா ருன்னையன்றி வேறுளரோ
மையோடு மேனி மயூரங் கடுஞ்சிறையால்
செய்யா ளுறைநின் றிருநாடுஞ் சிந்தியதே.

(இ - ள்.) ஐயோ! சக்கரதாரியே! தேவலோகம் அழிந்தது- கொடியோங்களாகிய எம்மை உன்னையன்றிக்காப்போர் வேறொருவருண்டோ? மேகம்போலும் நீல நிறமேனியையுடைய மயிலின் வலிய சிறகினால், திருமகள் வசிக்கும் உன்னுடைய திருநாடாகிய வைகுந்தமும் அழிந்தது. எ - று. (௩௩)

வாழி மலரோ னிருக்கு மலர்க்கோயில்
பூழி படச்சிதைந்து போயினதே புங்கவரு
மாழி வரைப்புறத்தோ வண்டத்தி னப்புறமோ
ஊழி யளந்தா யெளியே முணரோமால்.

(இ - ள்.) தாமரை மலரிலிருக்கும் பிரமதேவன் எழுந்தருளிய சத்தியலோகமும் புழுதியாகச் சிதைந்துபோயிற்று. (அவ்விடங்களிலிருந்த) தேவர்களும், சக்கரவாளகிரியின் அப்புறமோ இவ்வண்டத்திற் கப்புறமோ [சென்றார்கள்.] ஊழிக்காலங்களை யளவிட்டவரே! அடியேங்கள் அறிந்திலோம். (௩௪)

நீரோறு தாமரையோ னேறு நெடுந்தூவிச்
சீரோறு மன்னஞ் சிதைந்ததால் றேந்துளவக்
காரோறு பூங்கமலக் கண்ணா கடல்வண்ணா
போரோறே நீயேறும் புள்ளரசும் போயிற்றால்.

(இ - ள்.) தேனறுளிக்கும் துளவமாலையணிந்த கருநிறமமைந்த செந்தாமரைக்கண்ணையுடையவரே! கடல்போலுநீல வண்ணமுடையவரே! நீரிலுள்ள தாமரையில் வசிக்கும் பிரமதேவன் ஊர்ந்து செலுத்தும் நெடிய தூவியையுடைய சிறப்புத்தங்கிய அன்னம் மடிந்தது. நீ ஏறிச்செலுத்தும் பட்சிராஜனாகிய கருடனும் உயிர்போயது. எ - று. (௩௫)

வெண்பாற பிறையெயிற்று வெவ்வாய்க் கணநால்வ
ருண்பா ரவர்க்கிவ் வுலகடையப் போதுமோ
வெண்பா லடங்குமோ வெம்மோ ரிறப்பெல்லாங்
கண்பார் கருணை சிறிதுளவேற் காண்பேமால.

(இ-ள்.) பால்போலும் வெண்மையாய், பிறைபோலும் வளைந்த பற்களையும், கொடிய வாயையுமுடைய கணநாதர் நால்வரும் உணணப்புகுந்தால் அவர்கட்கு இவ்வுலகமுழுவதும் போதுமோ? (போதாது) எம்மனோர் இறந்தல் கணக்கிலடங்குமோ? திருக்கண் நோக்கியருளக. சிறிது கருணையிருக்குமாயின் இறந்தோரை மீண்டு காணப் பெறுவோம். எ - று. (ருசு)

என்று வணங்கி யிமையோ ரெதிர்நிற்ப
பொன்னுண் முளரிப புயல்பூத்த தனையோனும
பன்னுண் மலர்க்கமலப் பண்ணவனு மபோயினர்
மின்னு மலங்கிலைய வேலோற் குறுகினார்.

(இ - ள.) என்று தேவர்கள் பணிந்து எதிர்நிற்க, பொன்னிறமமைந்த அன்றலர்ந்த தாமரைபோலும் அவயவங்களவாய்ந்த மேகமபோலும் நிறந்தங்கிய திருமாலும, யாவரும் துதிக்கின்ற புதியதாமரை மலர்ப்பீடத்தையுடைய பிரமதேவனுஞ்சென்று, மின்னலைவீசி யசைகின்ற தகட்டுவடிவாகிய வேற்படையேந்திய குமாரசுவாமிபால அடைந்தார்கள எ - று. (ருஎ)

கண்டா ரிருகண் களிகூர்ந்தா ரோமருங்கு
தண்டா மரைமேக மனைன றனிநின்று
ணெண்டா மரைதுதவிசு வீற்றிருப்பகு மோதிமத்தோன
விண்டா னுழந்தபரி செலலாம விளமபுவான.

இ - ள) இருவிழிகளாலும் தரிசித்து ஆனந்தமிகுந்தார்கள. குளிர்ச்சிபொருந்திய தாமரை மலர்ந்த மேகத்தையொத்த திருமால ஒருபக்கலில தனித்து நின்றார். ஒளிபொருந்திய கமலாசனத்தில எழுந்தருளியிருக்கும அன்னவாகனனாகிய பிரமதேவன தேவலோகம பட்டபாடு முழுவதையும விண்ணப்பிக்கலாயினன். எ - று. (ருஅ)

வாரார் முலையுமையா ளீன்ற மகவேயெம்
போரேறே வானுலகங் காத்தளித்த புண்ணியனே
தாரோ ரியகடப்பந் தாரோய சமர்கடந்த
வீரா மயூரா விளங்கிலைய வேலோனே.

(இ - ள்) கச்சணிந்த குயங்களையுடைய உமாபிராட்டியார ஈன்றருளிய குழந்தாய்! போர்க்களத்தில எங்கள ஆண்சிங்கமே! தேவலோகத்தைக் காத்திரட்சித்த புண்ணியசுரூபியே! கடப்பமலர்களாற்கோத்த மாலையணிந்தவனே! (அசுரர்களோடாற்றிய) யுத்தத்தை வெற்றிகொண்ட வீரனே! மயில்வாகனனே! பிரகாசிக்கின்ற இலைவடிவானவேலாயுதனே! எ - று. (ருகூ)

தேவே புரந்தரனார் செல்வமே செங்கமலப
பூவே யெனக்கும் பொருள்விரித்த புண்ணியனே
தூவே யலங்கிலைய வேலோய் சுருதியறுக
கோவே கடம்பலரும் பன்னிருதோட் குன்றமே.

(இ - ள்.) கடவுளே! இந்திரனுக்குப் (பகைவரான சூரனாதியரையகற்றிக் கற்பகநாட்டை முறைப்படியளித்த) செல்வம் போல்வானே! செந்தாமரை மலரில் வசிக்கும் அடியேனுக்கும் வேதப்பொருளைவிளக்கிய புண்ணியவானே! பரிசுத்த மெய்யிற்பிரகாசிக்கின்ற தகட்டுவடிவாகிய வேற்படையேந்தியவனே! வேதத்தினிறுதியும் நீங்காத தலைவனே! கடப்பமாலை விளங்குகின்ற பன்னிரு புயங்களையுடைய சிறுகுன்று போல்வானே! எ - று. (௪௦)

நாதா வொருதனியே நான்மறையே நாப்புரட்டி
யோதா மறையே பிரணவத்தி னுண்மய்மே
பூதாதி நின்றும் புலப்படாப் போரகளிறே
வேதாக முத்துறையே தண்கருணை வெள்ளமே.

(இ - ள்) தலைவனே! ஒப்பற்ற ஏகனே! நான்குவேத சொரூபியே! நாவைப்புரட்டிச் சொல்லப்படாத மறைபொருளே! பிரணவத்தில் நிறைந்த பூரணமே! பூதாதிகளிலிருந்தும் காணப்படாத போர்புரியும் யானைபோல் வானே! வேதசிவாகமங்களின் துறையே! குளிர்ச்சிபொருந்திய கிருபைப் பெருக்கமே! எ - று. (௪௧)

தேங்கு திரைத்தும்பு நெண்ணீரின் மெய்ஞ்ஞான
மோங்கி நிரம்பு சரவணத்தி னுற்பவமே
தாங்கு சிறியதண்டைத் தாளோ யிடையறுப
பூங்கருணை யாறு முகமபூத்த பொற்கிரியே.

(இ - ள்.) தேங்குகின்ற அலைகள் ததும்புகின்ற தெளிந்தநீரில் மெய்ஞ்ஞானம் பெருகிநிரம்பிய சரவணப்பொய்கையில் திருவவதாரஞ்செய்தவனே! சிறியதண்டைசூடிய திருவடிகளையுடையவனே! நீங்காத திருவருள் பெருகும் ஆறு திருமுகங்களையுடைய பொற்கிரிபோல்பவனே! எ - று. (௪௨)

கூற்ற முரணறுக்கு மாறெழுத்தாக கொண்டாடியேம
போற்று மெளியாய் வலியாய் புராதனனே
யாற்ற லருமபுலத்தை வென்றோ ரகநதெளிய
நோற்றிழைத்த வெண்ணூ லுடைநகுடணி மார்பனே.

(இ - ள்.) கூற்றுவனுடைய வலிமையையகற்றும் சடக்ஷர மநுவைத் தியானஞ்செய்து அடியேங்கள் துதிசெய்கின்ற எளிமையானவனே! வலி யோனே! பழையோனே! வெல்லுதற்கரிய வலியமைந்த ஐம்புலன்களை வென் றவர்கள் மனந்தெளியும்படி தவஞ்செய்தியற்றிய வெள்ளிய உபவீதமசையுந் திருமார்புடையவனே! எ - று. (௪௩)

என்று பலவு மெடுத்தேத்திக் கைகூப்பி
நின்று மலர்வாய் புதையா நிகழ்த்துவான்
கன்று சினக்கணமுங் கரமயிலுங் குக்குடமுஞ்
சென்றெதிர்ந்த தோடுங் கலுழனொடுஞ் சீறினவால்.

(இ - ள்.) என்று பிரமதேவன் பலவகையாகவும் எடுத்துத் துதித்துக் கைகுவித்து ஒருபக்கத்தில் நின்று வாய்பொத்திக்கொண்டு சொல்லுகின்றான். மிக்க கோபமுடைய பூதகணங்களும், கரியமயிலும் சேவலும்போய் அன்னத்துட னும் கருடனுடனும் போர்செய்தன. எ - று.

(௪௪)

சீறுஞ் செயலொழிந்த திண்சிறைய வன்கலுழ
னேறுந் தமியே னெனைத்தாங்கு மோதிமத்தோ
டாறுஞ் சிறகோய்ந் தலமந் தமரிழந்து
மாறனு சினவாய்ப் புறங்கொடுத்து வானடைந்த.

(இ - ள்.) போர்புரிதலற்ற வலிய சிறகிணைவாய்ந்த கருடத்தலைவனும், அடியவனாகிய என்னைத்தாங்குகின்ற அன்னத்துடன் அசைந்துகொண்டிருக்குஞ்சிறகுகளோய்ந்து வருந்திப் போர்புரிதலை விட்டுப்பகைவர்க்குப் பயந்தவைகளாய்ப் புறமுதுகுகாட்டித் தேவலோகமெய்தின. எ - று. (௪௫)

பின்போ யெனதிருக்கை மாளப் பெரிதிழைத்து
வன்போடென் னோதிமத்தை மாயத்து வயக்கலுழ
னென்போ டொடிய முடித்துமறுத் தேகினவாற்
பொன்போ லுருவா யரியுலகும் போயிறுல.

(இ - ள்.) பொன்போலுந் திருமேனியை யுடையவனே! அவைபின்றொடர்ந்து சென்று என்னுடைய பீடம்முதலியவை அழியும்படி மிகத்தீங்கிழைத்து, வலிமையுடனேயடியேன் (வாகனமாகிய) அன்னத்தை அழித்து வெற்றியுள்ள கருடனது எலும்புகளும் ஒடியும்படி கொன்று திரும்பிப்போயின. திருமாலினுலகமாகிய வைகுந்தமும் அழிந்துபோயிற்று. எ - று. (௪௬)

வானோ ரநேகரிறந்தாரவ் வானோரி
னேனோ ரடவரையும் பலவரையு மெய்தினார்
யானோ புகல்வே னிவர்பிழைத்தா ரிங்குற்றார்
தேனோ டினவண் டுழுந்தெரியலாய்.

(இ - ள்.) தேவர்களில அநேகர் இறந்து பட்டார்கள். அத்தேவரில் மற்றையோர் மேருமலையையும் பலமலைகளையுஞ் சென்றடைந்தார்கள். (அவ்விடயத்தை) அடியேனோ சொல்லவல்லவன்? இவர்கள்தான் பிழைத்தவர்கள். (என்னுடன்) இங்குவந்தார்கள். [தேன்] பெணவண்டுகளுடனே கூட்டமாகிய ஆண்வண்டுகளும் குடைந்துகொண்டிருக்குங் கடப்பமலர் மாலையணிந்தவனே!

என்றுரைத்த வெல்லாந் திருச்செவிதாழ்த் தெம்பிரான்
குன்றுருவ மன்ன கணத்தோர்க் கொணர்கென்று
னின்ற கணத்தோர் நெடிதோடிக் கூவுறலு
மன்றிழைத்த சூரன் முதலோரவந் நண்மினார்.

(இ - ள்.) என்றிவ்வாறு எமது பெருமானாகிய குமாரசுவாமி, கூறியவற்றையெல்லாம் திருச்செவியிற்கொண்டு, மலைபோலும் வடிவமைந்த அப்பூதகணங்கள் நால்வரைக்கொண்டுவருகவென்று கட்டளையிட்டனர். அருகிருந்த கணத்தவர்கள் விரைந்தோடிக்கூப்பிடவும், தீமையிழைத்தசூரன் முதலானோர் வந்து சேர்ந்தார்கள். எ-று. (௪௭)

நாவாய் வறப்பக் குறுந்தா ணடுநடுங்க
வோவாத திறலோய்ந் துயிர்நடுங்கி யுள்ளழிந்து
மேவா வெருவெருத்து நின்றனரால் வெங்காலத்
தீவாய் விழித்தவிழி பாலிற் றிகழ்ந்தனவால்.

(இ - ள்.) நாவும் வாயும் வறளவும், குறுகியகால்கள் நடுங்கவும், நீங்காத வல்லபமும் நீங்கி, உயிர்நடுக்கெய்தி மனககலககமுற்று, மிகப்பயந்து வந்து நின்றார்கள். வெவ்விய சுழல்காற்று ஊழித்தீயுடன்கலந்ததுபோன்ற தன்மையுற்றுப் பார்த்தவிழிகள் பால்போல் வெளிதாய் விளங்கின. எ - று. (௬௬)

வந்தா ரடியற்ற மாமரம்போல் வீழ்ந்துபணி
தந்தா ரவரைத தனிவே லிறைநோக்கிச
செந்தா மரையுலகு மேலுலகுஞ் சேதித்தீா
நந்தா வலிதொலைத்து வானவாத நாடழித்தீா.

(இ - ள்.) வந்து அடியற்ற பெருமரம்போல வீழ்ந்து பணிந்தார்கள். அப்பூதகணங்களை யொப்பற்ற வேற்படைதாங்கிய இறைவன கணடு, சத்தியலோகத்தையும், அதன்மேம்பட்ட வைகுந்தத்தையும் பாழாக்கினீர்கள். தேவர்களது கெடாதவல்லபத்தை யகற்றி,அவர்கள உலகத்தையும் அழித்தீர்கள்.எ-று.

நீவி ரினிப்போய் நெடுநீர்ப பெருநிலத்துப
பாவ நிருதாகுலத் துறபவித்துப பன்முறையாற
றேவ ரிவர்க்கிடுக்கண் செயவீா கடைமுறையெம
பூவிலைய வேலாற றொலைந்து கதிபுகுவீா.

(இ - ள்.) நீங்கள இனிப்பெரிய கடல்சூழ்ந்தவிசாலமான பூலோகத்திற்போய்,பாவச்செயலையுடைய அசுரர்குலத்திற்றோன்றி,பலவகையாலும் தேவர்களாகிய இவர்களுக்குத்துன்பஞ் செயவீர்கள. இறுதியில் எம்முடைய அழகிய அச்ச வடிவாகிய வேலாயுதத்தாலுயிரிழந்து கதியடைவீர்கள. எ - று. (௬௭)

என்னுங் கடுஞ்சாபங் கேளா விகறபூதா
மின்னுஞ் சுடரிலை வெள வேலோற பதம்போற்றி
மன்னுங் கொடியே நிருதர்குலம வைகுறினு
நின்னன் பகலாத நெஞ்செமக்கு வேண்டுமால.

(இ - ள்) எனகின்ற கடுமையாகிய சாபவார்த்தையைககேட்டு வலிபொருந்திய பூதகணங்கள, பிரகாசிக்கின்ற வொளிபொருந்திய வெள்ளிலைபோன்ற வேலாயுதமேந்திய குமாரக்கடவுளது திருவடிகளைத்துதித்து, கொடியேங்களாகிய நாங்கள் அசுரர்குலத்திலிருந்தாலும் தேவரீருடையபத்தி நீங்காத மனத்தையடியேங்களுக்கு அநுக்கிரகிக்கவேணடும். எ - று. (௬௮)

ஈதன்றி மற்றொன் றுனதா லெளியோங்கள
போதுங் குலத்துப் புரிதவத்தா னெட்டிலைவேல்
காதுந் திறத்திறக்குங் காலை மயிலாகிப
பாதம பொறுக்கக் கொடியாகப பாலிப்பாய்.

(இ - ள்.) இஃதல்லாமல், மற்றோர்வேணடுகோளுமுளது. (என்னெனில்) அடியேங்கள் பிறக்குமசுரர்குலத்திற்செய்கின்றதவத்தால்,நெடியஇலைபோலும் வேலாயுதங் கொல்லுந்தன்மையால் இறக்குங்காலத்தில், மயில்வாகனமாய்த் தேவரீர் திருவடியைத் தாங்கவும், (சேவலாகித் தேவரீருக்குத்) துவசமாகவும் வரந்தந்தருளவேண்டும். எ - று. (௬௯)

ஆய வரமிரண்டு மெம்பா லருடியெனத்
தூய முறுக்கெயிற்றுச் சூரன் பதுமனொடு

மேய வுவகையொடும பெற்றா மிகுதவததான்
மாயை வயிற்றிலிவா நாலவோரும வைகினா.

(இ - ள்.) ஆகிய இரண்டுவரங்களையும் அடியேங்களுக்கு அருளுகவென்று வெள்ளிய வளைந்த பற்களையுடைய சூரனென்பவன பதுமனோடு பொருந்திய சந்தோஷமாயப் பெற்றுககொணடனன். மிககதவத்தினால இந்நாலவரும் மாயையின் வயிற்றில் கருவடைந்தாாகள். எ - று.

"சூரன்பதுமனோடு மேய உவகையொடும் பெற்றான்" என்றது சூரன பதுமனெனனு மிவவிருவரும் ஓாவடிவாயப் பிறககவரம் பெற்றுக கொணடமையின். இது காரணததினாலேயே சூரபதுமனெனனும்பெயா விளங்கலாயது.

மாளா வலிதொலைந்து மாண்ட வயககலுழன்
றாளா ரரவிந்த னேறுந தனிமெகினந
தூளாய முடிந்த சுரருலக மெமபிரான்
றாளா திரணடுடையான சொலலினிலை பெற்றனவால்.

(இ - ள்.) அழியாதவலலப மழிந்திறந்த வெற்றிதங்கிய கருடனும, நாள தையுடைய தாமரையைப பீடமாககொணட பிரமதேவனேறிச்செலுததும் அன்னமும், தூசுபட்டழிந்த தேவலோகமும், எமது பெருமானாகிய பனனிரு திருப்புயங்களையுடைய குமாரககடவுளின திருவாககினால பணடைய நிலைமை யுற்றன. எ - று. (௫௫)

மூரிக கமல விழியாற்கு மூதுணாந்த
வேரிக கமலத தயற்கும விடையருளி
வாரிக கருணைப பெருமான மயிலுகைததுப
பாரித்த கந்தப பனிவரையிற போயினன.

(இ - ள்) பெருமைதங்கிய செந்தாமரைபோலும் விழியையுடைய திருமாலுக்கும் தேனபொருந்திய கமலாசனத்தையுடைய மூதறிவு பொருந்திய பிரமனுககும விடைகொடுத்தனுப்பி, கருணைககடலாகிய குமாரசுவாமி மயில் வாகன மேறிச்செலுததி மிகபபெரிதாயுளள குளிர்ச்சி வாய்ந்த கந்தமாதன கிரிக கெழுந்தருளினா. எ - று. (௫௬)

என்று மிளையா னியமபு மொழிதிறமபாத
துன்று துணைததடந்தோட சூரன பதுமனொடு
மொன்று தனிவயிற்றி னொருருவாயுற்பவிததா
நின்ற விருவ ருடனபிறந்தா நிணிலததில.

(இ - ள்.) எககாலமும இளையவன சொலலும் வார்த்தையைத தடுக்காத நெருஙகிப்பரந்த இருதோளகளையுடைய சூரனும, பதுமனெனபவனும, பொருந்திய மாயையின் ஒப்பற்ற வயிற்றில ஒரேவடிவமாய இபபூமியிலுதித்தார்கள். மற்றையவிருவரும் (தனிததனியே) உடன்பிறந்தார்கள். எ - று.

சூரனாதிய நால்வா மூவராய பிறந்தாாகளெனக. (௫௭)

சூலப் படைபொறுத்த சூரபன்ம னெனவொருவன்
சீலக குணமொழிந்த சிங்கமுக னென்றொருவன்
சாலத் தவமிழைத்த தாருகனென் றொருவன்
ஞாலத் தசுரகுல மன்னவராய நண்ணினா.

(இ - ள்.) சூலாயுதமேந்திய சூரபன்மனென்றொருவனும், நற்குணநீங்கிய சிங்கமுகனென்றொருவனும், மிகத்தவஞ்செய்த தாரகனென்பவன் ஒருவனும் (ஆகவிம்மூவரும) பூலோகத்தில அசுரகுல மன்னவர்களாகப் பிறந்தார்கள்.

பூவிற் பொலியும் புனைகழலோன் போர்வேலாற்
காவற் கணத்தோ டிருவர் கலந்தொழிந்தார்
தூவிற் பொலிசூலச் சூர னுயிரிறந்து
சேவற் கொடியு மயிலுமெனச் சென்றொழிந்தான்

(இ - ள்) தாமரைமலர்போலும் விளங்கும் அழகமைந்த திருவடியையுடைய குமாரக்கடவுளின் யுத்தத்தில வேற்படையாலிறந்து, (சிங்கமுகன் தாரகன் என்னும்) இருவரும் திருக்கைலையின் காவற்கணத்தோடு கலந்து போனார்கள் பரிசுத்தமான வொளிவீசும் சூலாயுதந்தாங்கிய சூரபன்மன்உயிர் நீங்கி, கொடியாகிய சேவலாகவும் (வாகனமாகிய) மயிலாகவும் வடிவங் கொண்டனன். எ - று. (௫௯)

ஏது நிருதர்பிரா னெய்தியவா றிக்கதையை
யாதி முதல்வ னருளியதா மென்றருளிச்
சூத னுரைத்தபரி சொல்லாந் துரிசறுத்த
மாதவத்தோர் கேட்டு வழுத்தி மகிழ்சிறந்தார்.

(இ - ள்.) நிருதரான அசுரமன்னனாகிய சூரபன்மனடைந்தவகை அச்சரித்திரம் முதற் கடவுளாகிய சிவபெருமான திருவாய் மலர்ந்தருளியது என்று சூதமுனிவர் கூறியவகை முழுவதையும், (ஆணவாதி) முக்குற்றங்களை யொழித்த பெருந் தவசிகளாகிய நைமிசாரணிய முனிவர்கள் கேட்டுத்துதித்துக் களிகூர்ந்தார்கள். எ - று. (௬0)

**அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.**

ஈங்கிவணி பரிசாய தெனவுணர்ந்த வுணர்ந்தனம்யா மினிநீ யையா
வாங்குபிறை வளையெயிற்று வாளவுணர் மூவரொழிய மடிந்த ஞான்று
வீங்குதுணை பணைத்த முலை யயமுகியு மிவட்பயந்த வெய்ய வேற்கட்
டாங்குகருங் குழன்மாயை யெனுமவளு மொழிந்தவழி சாற்றவேண்டும்

(இ - ள்.) ஐயனே! நாங்கள் இவ்விடத்தில இச்சரித்திர மிவ்வாறாயிற் றென்று தெரிவிக்கத் தெரிந்தோம். இதன்மேல வளைந்த பிறைச் சந்திரன் போலும் பிரகாசிக்கின்ற வளைந்த பற்களையுடைய அசுரர்கள் மூவரும் உயிர் நீங்க இறந்தகாலத்தில், பருத்து விம்மித்த இரு தனங்களையுடைய அயமுகி யென்பவளும் இவளைப்பெற்ற கொடிய வேல்போலுங் கண்ணையும் கரிய கூந் தலையுமுடைய மாயையென்று சொல்லப்பட்டவளும் இறந்தவகையினைத் திருவாய்மலர்ந்தருளவேண்டும். எ - று. (௬௧)

என்றுமுனி வரரியம்ப விருந்தவத்தி னருங்கொழுந்தா யெழுந்த சூதன், வென்றுபுலன் களையிகந்த மாதவத்தீர் கேண்மினென விளம்புமேனாட், பொன்றிகழுங்கிண் கிணிமுளரித் தண்டையந்தாண் முருகனெம்மைப் பொருத ஞான்றின், மன்றலெழுங் குழன்மாயை கதிர்ப்பகைக்கோர் மறையமைந்து மறைந்து போனாள்.

(இ-ள்.) என்று முனிசிரேஷ்டர்கள் பிரார்த்திக்க, [illegible] அரிய கொழுந்தாக முளைத்த சூதமுனிவர், பஞ்சேந்திரியங்களையும் வென்றுத் துச் செயித்த பெருந்தவத்தினரே! கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார். முற்காலத்தில் பொன்மயமாக விளங்கும் கிண்கிணியையும் சதங்கையையும் அணிந்த தாமரைமலர் போன்ற அழகிய திருவடியையுடைய முருகக் கடவுளோடும் சூரனுதியர் போர்செய்த யுத்தபூமியில், மணம் வீசுகின்ற கூந்தலையுடைய மாயையென்பவள் பானுகோபனுக்கு ஓரிரகசியங் கூறி மறைந்து சென்றாள். எ - று. (௩௨)

போயநெறித்தலைப்பயந்த மகட்புணர்ந்துன் னுடும்பிறந்த புதல்வர்க்கெல்லா, மேயவிற லினிப்புகுதா தொருகுமரன் றிருக்கைவடிவேலால் வீவா, ராயதுவந் துறுமளவு மிவணிருத்தி மந்தரவெற்படைகின் றேன்யான், றீயநெறிக் கொடுஞ்சூரன் முதலியோர் களத்துலக்குறு செயனீ யோர்வாய.

(இ - ள்.) (இவ்வாறு) போகின்ற வழியிலே தான் பெற்ற புதல்வியாகிய அயமுகியைச் சேர்ந்து, உன் உடன்பிறந்த புத்திரர்களுக்கெல்லாம் (இதுகாறும்) பொருந்திய வெற்றி இனி யுண்டாகாது. ஒப்பற்ற குமாரக்கடவுளின் திருக்கரத்தேந்திய வேற்படையால் (அவர்கள்) இறப்பார்கள். ஆகிய வச்செய்தி வந்தடையுமெல்லையும் நீ யிங்கிருக்கக்கடவை. நான் மந்திரகிரிக்குச் செல்கின்றேன். கொடு நடையுடைய வலிய சூரன் முதலானோர் போர்க்களத்தில் இறக்குஞ் செய்தியை நீ யறிந்திருக்கக் கடவாய. எ - று. (௩௩)

மந்தரவெற் பினையடைந்து சீகுலமாப் பருப்பதத்து வருகின்றேன்யா, னிந்தநெடுங் கொடுஞ்சமரி னிவரிறப்பத் துணர்ந்துபின்னரிவணுறாது, வந்தெதூதி வருந்தலைநீ சீகுலவெற் பினைநோக்கி வருதியென்னு, வந்தரவா னவர்கருதித் தநகைவிளைப்ப மாயையவணகன்று போனாள்.

(இ - ள்.) யான் மந்தரகிரியை யடைந்து பெரிய சீகுலபர்வதத்திற்கு வருகின்றேன். இப்பொழுது நிகழும் பெரிய வலிய போரில் இவர்கள் இறப்பதைத் தெரிந்துகொண்டு அதன் பின்னர் இவ்விடத்திலில்லாமல் வந்துவிடுக. இவர்கட்காக நீ வருந்தவேண்டாம். சீகுல பர்வதத்தைநோக்கி வரக்கடவாயென்று ஆகாய வாசிகளாகிய தேவர்கள் உணர்ந்து நகை செய்யும்படி மாயையென்பவள் ஆங்கிருந்து நீங்கிப்போயினள். எ - று. (௩௪)

பொருசினத்த வாளவுணர் கிளைமுழுது மடுகளத்துப் புலவுவேலாற, செருவொழிய வுயிரிறந்தார் மாயைதனைப் பயந்தளித்த தீயோனேடுங், தருவுலகஞ் சிறைபடுத்த சூரனரு ளிரணியன்பா தலத்துசசார்ந்தா, னுருகியசெம பொனதெளிந்த கண்ணியய முகியரற்றி யோடினளால.

(இ - ள்.) போர்செய்கின்ற கோபத்தையுடைய வாளேந்திய அசுரக்கூட்ட முழுவதும் யுத்தபூமியில் புலால் மணங்கமழும் வேற்படையினால் யுத்தம் நீங்க உயிர் இறந்தார்கள். மாயையென்பவளைப் பெற்றெடுத்த கொடியோனாகிய [illegible]ரேந்திரனோடும் கற்பகத்தருவையுடைய தேவலோகத்தைச் சிறைசெய்த சூரபன்மன் பெற்ற இரணியன் பாதலலோகத்தை யடைந்தனன். உருகிய

செம்பு தெளித்தாற்போன்ற கண்ணை யுடையவளாகிய அயமுகி அழுதுகொண்டே ஓட்டமெடுத்தாள். எ - று. (௬௫)

மலைத்தலைமைவம முனைத்தலத்தி னிடியெனத்தன் கரமபுடைக்கு மருளு மேங்குமம, பிலபபகுவாய் திறநதுமுக டதிரவெடுத த தழுதரற்றும பினபாரத் தோடுங, கொலைததலைமுத தலைபபடையோன் கொடுததவர மினறளவோ வென்று கூறு, மலைததலைகின றுருகுமெழு கெனக்குழைநது தனையீன்ற ளுறையு ளுற்ருள்.

(இ - ள்.) மலையின் சிரத்தை யொதத வலியதனததினிடததில் இடியென்று சொல்லும்படி தன் கையினுல அடிததுககொள்ளுவாள், மயஙகுவாள, ஏககமடைவாள, பிலமபோலப் பிளவுபட்ட வாயைத்திறநது ஆகாய முகடுமெ அதிருமபடி உரதத சததததோடு அழுது புலமபுவாள, பினபுறம பாரத்துக கொணடே ஓடுவாள, கொலைததொழிலிற் றலைமைபெற்ற முததலை வேலாகிய சூலாயுததததைத தாஙகிய சிவபெருமான் கொடுததருளியவரம இன்றளவு தானேவெனக கூறுவாள, உலைககளததினின றுருகுகினற மெழுகுபோல வுருகித்தன்னைபபெற்ற மாயையெனபாள இருககுமிடததிற் சென்றுள். எ-று.

சீருலமாப பருபபததது னழுதரற்றிச செலவாளை யெதிரநது செலலா, மாருலமுற றுறபுயுநத தெனவுணாநத மாயைநெடு மணணிலவீழநதாள, சோகமெடுத தலைபபமறறை யயமுகியு மவளடியிற றயாநது வீழ்நதா, ளாகுலததுக கொருநிலைய ருலகதிரத தழுவியழு தரறறி னுரால.

(இ - ள.) பெரிய சீருலபாவததில் அழுதுபுலமபிச் செல்கினற அயமுகியை யெதிரகொணடு செனறு பெரிய குலமுழுவதும அழிநதுவிடடது, என்று தெரிநதுகொணட மாயையெனபவள பெரிய பூமியிலே வீழநதாள். துனபமதிகரிதது வருதத, அயமுகியும அமமாயையின காலில துககமுற்று வீழ்நதாள் துககததிற்கு ஓர இருபபிடமாகிய (அயமுகி மாயையெனனும்) இவவிருவரும ஒருவரை யொருவர கட்டிககொணடு உலகமதிருமபடி அழுது புலமபினுாகள. எ - று. (௬௭)

அநதரவானவரபணித்த பணிதலைககொண டியற்றுமுடமபயாவு தீர்நதார, கநதருவ ரியககாசித்தா விஞ்சையாதந தீராத கவலை தீரநதாா, சுநதரிமங கலநதாவி நெஞசுதொடடு முறுவலித்தத் துயரந தீாநதா,ரிநதிரனை முதலினேோ காறறமுமபுங கரததழுமபு மிழநதாரன்றே.

(இ - ள்.) சுவர்க்கலோகத்துள்ள தேவாகள, கட்டளையிட்ட கட்டளையைச் சிரமேற்றுங்கி நடததுகின்ற தஙகள உடல வருததந தீர்ததாாகள். கநதர்வர், இயககா, சித்தா விததியாதரா (ஆகிய இவாகள) தஙகளுடைய இடையறாத துன்பததை நீஙகிப்பெற்றுர்கள. இநதிராணி தனது மஙகல சூத்திரததைத தடவிப்பார்தது நெஞ்சையுந்தொட்டுப்புனனகைசெயது துன்பந்தீர்ந்தாள். இநதிரன் முதலானவாகள் தஙகள் காற்றழும்புங கைததழும்பும் போககினுர்கள.

பொருவருவெண் குடைநிழறறிப் பொதுககடிந்து பல்லண்டப் புவனமெலலா, மருவரமபெற றினிதளிதத வசுராகுல மொருகளததி னவிநது மாளத,தருவிழநத விநதிறசென றடுகளததி னெதிர்நது

புறந் தந்து மானச, செருவிழந்த தலைவரினி முகமலர்ந்து தமதுபதஞ் செலுத்து வாரால்.

(இ - ள்.) சமானமற்ற வெண்குடை நிழற்றிப்பொதுத்தன்மை நீக்கி, பல வண்டங்களையும் (அருமையான வரத்தால்) இனிதாக ஆண்டிருந்த அசுரர் குலம் ஒரேயுத்த களத்தில் அழிந்திறந்தமையால், கற்பகத்தருவையிழந்த இந்திரனோடுபோய்ப் போர்க்களத்திலெதிர்ந்து புறங்காட்டியோடிப்பயங்கரமான போரையிழந்த தலைவர்கள் யாவரும் இனி முகமலர்ச்சிகொண்டு தங்கள் ஆளுகையைச் செலுத்துவார்கள். எ - று. (௬௯)

அரிமுகவ னெடுத்துரைத்த மொழியுணரா யண்டமுற்று மளந்த செங்கோ, லெரியினுக்கத் தனைபோலும் பெருவாழு மெறுழ்வலியு மிழந்தாய் போலு, முரியவுயிர்த் துணைவனென வோருயிரா யினிப்பிறப்பா ருளரோ கெட்டேன், விரிகருக்கற் பகநீழ லிந்திரனு ராசுகொண்ட வெகுளி வேலோய.

(இ - ள்.) சிங்கமுகன் எடுத்துச் சொன்ன நன்மொழிகளை யறியாமற் போயினை, அண்டங்கள் முழுவதையும் அரசாட்டிய செங்கோலைத் தீயிலெறிந்தனைபோலும் (பெறுதற்கரிய) பெரிய வரங்களையும் மிக்க வல்லமையையும் இழந்தனைபோலும் பொருந்திய உயிர்த்துணைவர் என்றுசொல்ல (இருவரும் கூடி) ஒருருவாயப் பிறப்பவருண்டோ? ஐயோ! விரிந்தகற்பகத்தருவின் நீழலிலுள்ள இந்திரனது அரசாட்சியையுங் கைக்கொண்ட கோபந்தங்கிய வேலேந்தியவனே! எ - று. (௭௦)

ஒழியாத பெருவளனு மூவர்க்குஞ் சலியாத வுரனு மென்று, மழியாது பெறுவரனு மழிந்தனைமற் றுனதெழிலு மழிந்ததேயோ, சுழியாறு சடைக்கரந்தோன் மதலையிவ னென்றுரைத்த சொற்கேளாயாற், பழியாவி சுமந்துநும்மை யிழந்திருந்தே னுடன்பிறந்த பரிசு நன்றே.

(இ - ள்.) நீங்காத பெருஞ்செல்வத்தையும் மும்மூர்த்திகட்கும் பின்னிடாத வல்லமையையும் எக்காலத்திலு மழியாதிருக்கப்பெற்ற வரத்தையும் அழியப்பெற்றாய்! உன்னழகும் அழிந்துவிட்டதோ! சுழிபொருந்திய கங்கையாற்றினைச்சடையில் மறைத்த சிவபெருமானுடைய குமாரனிவன் என்றுணர்த்திய வார்த்தையைக்கேளாமற் போயினை. உங்களையிழந்தும் யாவரும் பழிக்கும் படி பிராணனைச் சுமந்துகொண்டிருக்கின்றேன். யானுங்களோடுதித்ததன்மை நன்றாயிருந்தது. எ - று. (௭௧)

எனவரற்று மயமுகிகட் குமிழ்ந்தெடுத்த தெறிபுனலை யிருகை மாற்றி, மனமயக்க மொழிதியென மாயைமகட் கருகிருந்து மம்மர் தீர்ப்பாள், புனைமயிலுங் கொடியுமெனப் பெறற்கரும பேறினிதுபெற் றுப் பொலிந்தான முன்னோ, னனமுகைக்கு நான்முகனு மரியுமிவ னடிதொழுதற் கணிய வன்றே.

(இ - ள்.) என்றுவருந்தும் அயமுகியின் கண்களினின்று குமிழ்விட்டெழும் (துக்க) பாஷ்பத்தைத் தன்னிருகைகளாலுந் துடைத்து, இனி மனமயக்கநீங்கக்கடவாயென்று மாயையானவள் அயமுகிக்கருகிலிருந்து மயக்கத்தை நீக்குபவளாய், உன் மூத்தோனாகிய சூரபதுமன் அலங்காரமுடைய மயில் வாகனமும் (சேவற்) கொடியுமாக வொருவரும் பெறுதற்கரிய பதவியை

இனிதாகப்பெற்று விளங்கினன். அன்னத்தைச் செலுத்தும் பிரமதேவனும திருமாலும் வணங்குதற்கு இவன் பாதங்கள் அருகிருப்பனவல்ல. எ - று (எஉ)

பண்டிழைத்த மாதவத்தாற கிடைததனன்மற் றிஃதிதன்மேற் பதவி யுண்டோ, தண்டையணிசீ றடிகதவுந துகளிழுகப் பெற்றன னெத தவமோ வென்ன, வணடிமிரபைந துணரோதி யன்னையுழைத தனளவளை வதன நோககிக, கெண்டையயங க ணயமுகியுஞ் சிறிது மனக கவலொழிந்து கிளபப தாளுள.

(இ - ள்.) முனனேயியற்றிய பெருந்தவததினல் இப்பதவியை யடைநத னன், இதன்மேல வேறு பதவியுமுளதோ? தணடையணிநத வழகிய சிறிய பாதங்களிற் பொருநதிய பராகங்கள தனமீது படியப பெறறனன. இஃதெனன தவமோவெனறு வணடுகளொலிககும் பசியமலாகளொதது பொருநதிய கூநதலையுடைய தாயாகிய மாயை கூறினள. சேறகெணடைபோலும் அழகிய கணணையுடைய அயமுகியும சிறிது மனததுயரமகனறுதாயின முகததைப துச்சொலலுகினறுள. எ - று. (எங)

சூரபன்ம னடுகுருதிப புகாமுகதத வேலினுரந தொலைநது வெறறி, வீரநெடுஞ் சிறைமயிலுஞ் சேவலுமா யினனென்ன விளமபி னுயது, தாரகனு மரிமுகனுஞ் சென்றடைநத திசையுணரேன் றமியே னன்றோ, சோரிசொரி முததலைசூன மறலிவலைப பட்டனரோ சொலக வென்றுள.

(இ - ள.) சூரபன்மனனவன, கொல்லுகினற வுதிரககறை பொருநதிய முகததையுடைய வேலினல வலிகுன்றி, வெறறியும வீரமுமுடைய நெடிய சிறகமைநத மயிலுஞசேவலுமாக வாயினனெனறு கூறினே. அநததாரகனும சிஙகமுகனும போயச்சோநத திசையை அடியேனறியேன. அவாகள உதிரஞ சிநதும முததலைச் சூலநதாஙகிய இயமனது காலபாசததி லகபபட்டனரோ? சொலலவேணடு மெனறுள. எ - று. (எச)

ஆயதுமுற றுணாநதறிவா னுரைககினறே னயமுகிமற றநதி யெனன, மாயையுழைத திடுமனேயோா கயிலைவரு கணததினெடும வாழநதா ரெனனந, தீயவிளைத திடுமிவரிப பெறறகருமபே றடைநத தெனசெபபு கெனறு, டாயெனஙின றிவடபயநதா ளவடகறிநத முறையனைததுஞ சாறறலுறறுள.

(இ - ள்.) அவாகளெயதிய கதியை முழுதாராய்ந்து நீ யறியும்படி சொலகின்றேன. அயமுகியே! அறிநதுகொளகவெனறு மாயை கூறுகினறுள, அவவிருவரும மகா கைலாயததிலுளள கணஙகளோடு வாழநதாாகளெனறு சொலல, கொடுமையையே செயதுகொண டிருநத இவாகள இவவணணமான அடைதற்கரிய பதவியையடைநத வகை யாதெனறு சொலலவேணடுமென்ற னள. தாயாகவிருநது இவளைபபெற்ற மாயை அவவயமுகிககுத்தானறிந துள்ள சரிதமுழுவதுஞ் சொலலுவாளாயினள. எ - று. (எரு)

முன்னெழிநத நெடுங்காலத் தினொதினொகின றுவட்டெகுமுரி முநீா, தன்னகதது நவதீவிற் சாகததீ வொன்றுளதா லதனுட் டோன்றி, மன்னியசெங் கோலோசசி யொருகுடையி னுயிாடமக்கு மன்னா மன்னன், பொன்னவிர்பைங் கழற்காற்பிர பாகரனென் றுளனெருவன் புலவு வேலோன்.

(இ - ள்.) ஒலிக்கின்ற அலைகள் நிரம்பி உவட்டெடுக்கும் பழைமையான கடல் புடை சூழ்ந்த பூமியிலுள்ள நவதீவுகளில் சாகத்தீவென்பதொன்றுளது. அத்தீவினுள், கடந்த வெகு காலத்திற்கு முன்னே பிறந்து, நிலைபெற்ற செங் கோலைச்செலுத்தி ஒப்பற்ற வெண் கொற்றக்குடை நீழலில் எல்லாவுயிர்களை யுங்காத்த அரசர்களுக்கரசனும், பசும் பொன்னால் விளங்கும் வீரக்கழலணிந்த காலையுடையவனும், புலால் மணங்கமழும் வேலாயுத மேந்தியவனுமாகிய பிரபாகரனெனும் பெயரினனொருவனிருந்தான். எ - று. (எசு)

அனையவனுக் குயிரனையா ளொருத்தியக மாட்சிபுரந் தளிப்பா
ளன்னாள், புனைமணிமே கலையளசுகு மாரியெனும் பெயருடையாள்
பொற்பி னீங்காள், கனைகழற்கா லரசனெறி முறைதிறம்பா ளருந்த
தியிற் கற்பி னிற்பாள், வினையரிவ ரளவிறந்த நெடுங்கால மரசுபுரிந்
திருந்தா ரன்றே.

(இ - ள்.) அப்பிரபாகரனுக்கு உயிர் போன்றவளாகிய மனைவி இல்லறத் தருமங்களைச் (சரியாகப்) பாதுகாப்பவளும், அலங்கரிக்கத்தக்க நவமணிகளி ழைத்த மேகலாபரண மணிந்தவளும் சுகுமாரியென்னும் பேருடையவளும், அழகிற் குறைவுபடாதவளும், சத்திக்கின்ற வீரக்கழலணிந்த மன்னவன் செங் கோன்முறை மாறுபடாதவளும், அருந்ததிபோலக் கற்புநெறியில் நின்ற வளுமாவள். இத்தகைய (கணவன் மனைவி) இருவரும் கணக்கில்லாத பெருங் காலம் அரசுரிமை நடத்தி வாழ்ந்தார்கள். எ - று. (எஎ)

ஈங்கிவர்க ளிழைத்தபெருந் தவப்பயத்தா லினிதுவப்பி னெடு
த்து மோப்பத், தீங்குதலை மதலையரோர் நால்வர்பிறந் துளரிவர்க்குச்
செங்கோல் வேந்த, னோங்குதிறற் சூரனென்றும் பதுமனென்று மிர
ட்டையருக் குரைத்தே [illegible] சிங்கனென்றுந்
தாரகனென் றும்புனைந்தா னரும்பேர் மேலோன்.

(இ - ள்.) இவர்களிருவரும் நிலைபெறச்செய்த பெருந்தவப்பயனால், இனிமையோடு சந்தோஷித்தெடுத்து முகந்து கொள்ளும்படி, மதுரமான மழலைச்சொல்லையுடைய ஒப்பற்ற புதல்வர் நால்வர் பிறந்தனர். மலர் மாலை சூடிய வேலாயுத மேந்திய செங்கோனடாத்தும் பிரபாகரன் வல்லமை மிகுந்த சூரனென்றும், பதுமனென்றும், முன் பிறந்த இரட்டைப் பிள்ளைகட்குப் பெயரிட்டு, மற்றையோருக்கு வீரக்கழல் தரித்த சிங்கனென்றும் தாரகனென் றும் பெயர் சூட்டினன். எ - று. (எஅ)

தங்குலத்து முதியோர்பே ரீன்றெடுத்த மதலையர்க்குத் தந்த பின்
னர்ப், பொங்கொளிப்பைங் கழலிவர்க்குண் முன்பிறந்த சூரனுக்குப்
புரவு நல்கிச், சிங்கவா சனத்திருத்தித் தேவியொடு மருந்தவத்திற்
சென்றா னன்னோ, னங்கணவ னுலகுபுரந் தொருகுடையி னுயிர்க்கு
தவி யருளி னானால்.

(இ - ள்.) தங்கள் குலத்திலிருந்த முன்னோர் பெயர்களைத் தான் பெற்ற புதல்வர்களுக்குத் தரித்த பின்னே, மிக்க வொளியையுடைய பசிய வீரகண்டா மணி தரித்த இந்நால்வருள், முதலிற் பிறந்த சூரனுக்கு அரிசுரிமையையளித் துச், சிங்காதனத்திலமர்த்தி, அம்மன்னவன் தன் மனைவியாகிய சுகுமாரியோ டும் தவநிலைமேற்கொண்டு சென்றனன். அந்தச்சூரன் ஒப்பற்ற சந்திரவட்டக் குடை நீழலில் உலக முழுவதுங்காத்து உயிர்கட் கெல்லாம் இதஞ்செய்து

(எகூ)

அறநெறிச்செங் கோலோச்சி யவனிபுரந் தினிதளிக்கு மந்நாட் டென்பாற், குறுமுனிகுண் டிகைதூக்குங் கரத்தினனாய்த் தரித்திடு கைக்குடைய னாகி, மறைத்தவத்தோ ருருவுகொண்டு வந்தனையோன் றனதிடத்து வரவு நோக்கி, முறைமையினி துயிர்புரக்குஞ் சூரனருந் தவற்கெதிர்போய் முறையிற் றாழ்ந்தான்.

(இ - ள்.) தருமமுறையோடு செங்கோல் செலுத்தி உலகத்தை இனிதாகக் காத்து இரட்சித்துவரும் அக்காலத்தில், தென்றிசையிலுள்ள குறுகிய வடிவினையுடைய அகத்திய முனிவர் கமண்டலமேந்திய இடக்கையும், சிறு குடையேந்திய வலக்கையு முடையவராகித் தவசிகள் வேடந்தரித்துவந்து அச் சூரனிடம் வரவும், மநுமுறையோடு இனிதாக உயிர்களைக் காக்குஞ் சூரன் கண்டு அருந்தவஞ்செய்த அகத்திய முனிவருக்கெதிர் சென்று நமஸ்கரித்தான்.

அருந்தவமே யருந்தவத்தோர்க் கருமருந்தே யாரணமே யளியேம் பெற்ற, பெருந்தவமே முழுஞானக் கலைக்கடலே யெழுந்தருளப் பெற்றே னெந்தை, திருந்துமல ரடிதீண்டக் கடற்கிடந்த தீவுஞ்செய் திறனன் றென்னாக், குருந்தமலர் தமிழ்ப்பொதியக் குறுமுனியைத் தன்கோயில் கொண்டு புக்கான்.

(இ - ள்.) அரியதவமே! அரியதவசிகட்கு அருமருந்து போல்பவரே! வேதமே! அடியேங்கள் செய்த பெருந்தவமே! பூரணஞான ஸார சமுத்திரமே! தேவரீர் எழுந்தருளப்பெற்றேன், எமது தந்தையின் திருந்திய தாமரை மலர் போன்ற திருவடிகள் தீண்டப்படி கடலிலழுந்திய இத்தீவும் செய்திருந்த புண்ணியம் நன்றாயிருந்ததென்று, குருந்தமலர்கள் விகசிக்கும் தமிழ் விளையும் பொதிய வரையில் வீற்றிருக்கும் அகத்திய முனிவரைத் தனது மாளிகைக்கு அழைத்துக்கொண்டு புகுந்தனன். எ - று. (அக)

புக்கமுனி வனைத்தரளங் குயிற்றுமரி யாசனத்தி னிருத்திப் போற்றித், தக்ககடன் முறையாவுந் தம்பியொடு மினிதியற்றத் தமிழ்ன் வேந்தன், மிககெழுந்த பேருவகை வெள்ளமுளத் தவட்டெறிய வியந்து நோக்கிப், பக்கமரு கிருத்திரென்னத் தொழுதிருந்தா ரனையவர்க்குப் பகர லுற்றான்.

(இ - ள்.) (அரண்மனைக்கு) எழுந்தருளிய அகத்திய முனிவரை முத்துக்கள் பதித்த சிங்காதனத்திலிருத்தித் துதிசெய்து செய்யத்தக்க (அர்க்கிய பாத்திய முதலிய) ஷோடசோபசாரங்களையுந் தன் தம்பியுடன் இனிதாகச் செய்ய, தமிழ்மொழியின் தலைவராகிய அகத்தியமுனிவர் அதிகரித்தோங்கிய பேரானந்தத்தின் வெள்ளம் பிரவகிக்க வியப்போடு பார்த்து, ஒரு பக்கலில் அருகே யிருங்களென்றுகட்டளையிட, அவர்கள் அவரைப்பணிந்திருந்தார்கள். அப்போது அகத்தியமுனிவர் அவர்கட்குச் சொல்லலாயினர். எ - று. (அஉ)

### கலிநிலைத்துறை.

ஆய வெண்குடை நீழலி னவனிகாத் தளிக்குந்
தூய சிந்தையிற் றுரிசறு பெருங்குண முடையீர்
மேய நுங்களைக் காண்குறும் விருப்பொடு மடைந்தே
மேய நுண்பொரு ளொன்றுள தியம்புதுங் கேண்மின்.

(இ - ள்.) வெண்கொற்றக் குடைநிழலிலே உலகத்தைக் காத்திரட்சிக் கின்ற பரிசுத்தமான மனத்தினாற் குற்றமற்ற பெருங்குண முடையவர்களே!

இங்குள்ள உங்களைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் நாம் இங்கு வந்தோம். தகுதியுள்ள நுட்பமான பொருளொன்றுள்ளது. சொல்கின்றோம் கேட்பீர்களாக. எ - று. (அரு)

அறிவி னுளங் தூயவர்க் கன்றிமற் றறிவிற்
சிறிய சிந்தையிற நீட்டுவ தன்றது தெரிக்கின்
மறுவின் மாட்சியின மந்திர வுபநிடத் துச்சி
யுறுவ தியாரினும புலப்படா தொருபொரு ளுளதால்.

(இ - ள்.) அவ்விரகசியஞ் சொன்னால், அறிவுடன் மனப்பரிசுத்தமுடையவர்களுக்கல்லது, அறிவில்லாத சிறியமனதில அழுத்துவதன்று. குற்றமில்லாத பெருமையுடனே வேதங்கள் உபநிடதங்கள் இவற்றின் உச்சியில விளங்குவது எல்லாருக்குமபுலப்படாத ஒரு பொருளாயிருப்பது. எ - று. (அசு)

கண்ணிற காணபன யாவையுங் கட்புலங் கதுவா
தெண்ணிற காணபது மெண்ணுறு புலங்களு மெண்ணும்
விண்ணிற காணபது மேலெனு மெவற்றிற்கு மேலாய
நண்ணிற காணபது மப்பொரு ளலலதார் நவிலவார்.

(இ - ள்.) கண்ணுற பார்ப்பனயாவும், கண்ணிற்குப் புலப்படாதுமனததினாற்பார்ப்பதும், எண்ணுகின்ற ஐம்புலன்களும், எண்ணமும, ஆகாயத்திற் காணப்படுவதும மேலென்று சொலலப்படுவன எவற்றிற்கும மேலாய்ப்பார்ப்பதும், நாம் (உங்கட்குச்) சொலலும அப்பொருளையன்றி (வேறெப்பொருளை) யவர் சொல்லுவார். எ - று. (அஎ)

திருமு கங்களோ ராறுளன் றீவினை யனைத்தும
பொருது வெனறுள பனனிரு புயமுளனபுலரிப்
பரிதி யாயிர மென்னஙன றிமைப்பது பணியார
குருதி யூறநெடு வேறபடை திருக்கரங கொளளும.

(இ - ள்.) (அப்பரம்பொரு ளானவர்) ஆறு திருமுகங்களையுடையவர், தீவினைத்தொடக்கு முழுவதையும போர்புரிந்து சயித்த பன்னிரண்டு திருப்புயங்களையுடையவர், உதயகால சூரியர் ஆயிரவர் (உதித்தாற்) போல ஒளிவீசிப்பிரகாசிப்பதாகி, தம்மை வணங்காதவரது உதிரத்தை ஊறநெடுகின்ற வேலாயுதத்தைத்திருக்கரத்திலேந்தியவர். எ - று. (அஅ)

தெய்வமாமயி லொன்றவன சேவடி தாங்கு
மைய வம்மயிற பெருவலி யாரளந் தறிவார
வைய முற்றவுங் கொறிக்குமோர் வாரணக் கொடியன்
பொய்யில் கேளவியீ ரதனறிறம யாவரோ புகலவார.

(இ - ள்.) தெய்வீகம் பொருந்திய பெரிய மயிலொன்று அவ்விறைவனது சிவந்த திருவடிகளைத்தாங்கி நிற்கும். அழகிய அம்மயில் வாகனத்தின் மிக்க வலிமையை எவர்தாம் அளவிட்டுணர வலலவர்? (அன்றியும்) உலகமுழுவதையுங் கொறிக்கத்தக்க சேவற் கொடியையுடையவர். உண்மையாகிய நூற்கேள்வியுடையவர்களே! அதன் வலலபத்தை எவரோ சொல்லவல்லவர்?எ-று.

முருக நாயகன் சீறடி முளரியிற் சிறுதாள
பொருவின் முக்கணன் புயங்களு முமைமுலைப் பொருப்பு
மருவி வாழ்ந்தன சிறிதுநாண் மாமயிற் பெருமா
[illegible] பொரு[illegible]க்கன னென்னிலென் னுரைக்கேம்.

(இ - ள்.) முருகக்கடவுளுடைய அறுய பாததாமரையினின் றுதிர்ந்த சிறு தூசுகள், ஒப்பில்லாத திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் திருத்தோள்களிலும், உமாபிராட்டியாரது தனபாரமாகிய மலைகளிலும் சில காலம் பொருந்தி வீழ்ந்தன. பெரிய மயிலாகிய தலைவனோ நீக்கமின்றி நாடோறும் பரித்தனனென்றால் வேறு என்னென்ப்புகழ்வோம்? எ - று. (அஅ)

மூவ ராகிய முப்பெருந் தொழிலுடை யவர்க்குந்
தேவர் யாவர்க்கு மருந்தவஞ் செய்திபற் றுநர்க்கு
மோவி லொண்குணத் தனையனை யுளத்தமைத் தலலால்
யாவ தாகுவ தன்னவர்க் கெடுத்தியா மியம்பில்.

(இ - ள்.) யாமமுடிவாகச்சொன்னால், திரிமூர்த்திகளாகிய (சிருட்டி திதி சங்காரமெனனும்) மூன்று பெருந்தொழில்களையுடையவர்களுக்கும், எல்லாத் தேவர்களுக்கும், (பூர்வம்) அரிய தவங்களைச்செய்து (இப்போது தவம்) புரிவோர்களுக்கும், நீக்கமில்லாத சிறந்த குணத்தையுடைய அக்குமாரக்கடவுளை மனதி லமைத்தாலன்றி அவர்கட்கு ஆகவேண்டிய எக்கருமங் கைகூடும்.

ஈது ளப்படுத் திருத்திரீ ரெம்பிரா னிருதாட்
போது வைகலும் போற்றுதி ரென்றனன் புகலா
வாதி நாயகற் குவமைசா லருந்தவத் தலைவன்
வேத வேதிய னுசிகண் மொழிந்தனன் வியப்பின.

(இ - ள.) இவ்விடயத்தை நீங்கள் மனதிற் பதித்திருக்கக்கடவீர்கள். எமது முருகப்பெருமான உபய திருவடித்தாமரைகளை நாடோறுந் துதிக்கக்கடவீர்கள் என்று கூறி, ஆதிதேவனாகிய சிவபெருமானுக்கு ஒப்பான அருந்தவ சிரேஷ்டரும் வேதங்களை யறிந்த அந்தணருமாகிய அகத்திய முனிவர் சந்தோஷத்துடன் ஆசீர் வசனங்கூறினார். எ - று.

சாக தீவினின் றருந்தவத் தமிழ்முனி தணவா
யோக நாயக னொருவழிப் புகுந்தன னுவர்கள்
தோகை வாகன மெம்பிரானா சேவலந் துவச
மாகல வேண்டுநா மெனறுதம் மருமனத் தடைந்தார்.

(இ - ள.) அருந்தவமாற்றிய தமிழ் முனிவராகிய அகத்தியர், சாகத் தீவினின்றும் நீங்கி ஒரு வழியாகச்சென்றனர். அவர்கள் (இருவரும்) முருகக்கடவுளுக்கு மயில் வாகனமும் சேவற் கொடியுமாக நாம் ஆகுதல் வேண்டுமென்று தங்கள் அருமையாகிய மனத்திற் கருதத்துற்றார்கள். எ - று. (௯௧)

திரண விந்துவென் றொருமுனி சென்றனன் றிரைநீ
ரரண வேலியச் சாகத்தீ வாங்கவற் கெதிர்போய்ச்
சரண பங்கயம் பணிந்தனன் றாரகன் சிந்தை
முரண கற்றரி முகவனும் பணிந்துகை முகிழ்த்தான்.

(இ - ள்.) திரணவிந்து எனும் பெயர்கொண்ட ஒரு முனிவர், அலைகளையுடைய தண்ணீரையே காவலாகிய வேலியாகப்பெற்ற அந்தச்சாகத்தீவிலடைந்தனர். தாரகன் அம்முனிவர்க்கெதிர் சென்று அவரது பாததாமரைகளைப்பணிந்தனன். மனக்கோணுதலகற்றிய சிங்கமுகனும் அவரை வணங்கிக் கைகூப்பி நின்றான். எ - று. (௯௨)

முகிழ்த்த கையின ருருகிய சிந்தையர் முனிபா
னெகிழ்ந்த நெஞ்சினர் புனற்படு கண்ணினர் நிறைந்த

மகிழ்ச்சி கூர்தர மாமதிட் கோயில்கொண் டணைந்தா
ரிகழ்ச்சி யல்லதோர் முழுமணித் தவிசக மிருத்தி.

(இ - ள்.) அத்திரணவிந்து முனிவரிடத்தில் உருகிய சித்தமுடையவர்களாயும், கனிந்த மனமுடையவர்களாயும், ஆனந்தபாஷ்பஞ்சிந்தும் விழிகளையுடையவர்களாயும், சிரமிசைக் குவித்தகைகளையுடையவர்களாயும், பூரணமான சந்தோஷமடைந்து, பெரிய மதிலையுடைய தமது அரண்மனைக்கழைத்துச்சென்று, தாழ்வில்லாத ஒப்பற்ற உயர்ந்த இரத்தின பீடத்தில் இருக்கச்செய்து. எ - று.

இது முதலிரண்டு பாடல்கள் குளகம். (கூக)

செய்ய வேண்டுவ வரன்முறை யாவையுஞ் செய்தா
ரைய நின்னடி தொழப்பெறு மருந்தவம் யாதோ
வையம் யாவையும் புரந்தன மாயினு மறுமை
வெய்ய தீவினை யொழிந்தனம் யாமென வியந்தார்.

(இ - ள்.) அம்முனிவருக்குச் செய்யவேண்டிய ஷோடசோபசாரங்களையுங் கிரமப்படி செய்தார்கள். ஐயனே! தேவரீர் பாதங்களை அடியேங்கள் பணியப்பெற்ற அருமையான தவம் ஏதோ? நாங்கள் பூமி முழுவதையும் அரசு புரிந்திருந்தோமாயினும், மறுமைக்கு (வித்தாயிருந்த) கொடிய தீவினைகளையொழியப்பெற்றோமென்று மகிழ்வு கொண்டார்கள். எ - று. (கூச)

அன்ன மன்னவர்க் காசிசொற் றங்கையா லமைத்து
மன்னு யிர்க்கினி தோர்குடை நீழலின் வகுத்தீர்
பன்னு நான்முறை திறம்புறு தறநெறி பயந்தீ
ரின்னு மொன்றுள துமக்கெடுத் தியம்புவா னியைந்தேம்.

(இ - ள்) அத்தகைய அரசர்களுக்கு ஆசீர்வாதஞ்சொல்லி அழகிய கையினுைய அபயந்தந்து ஒரே சந்திரவட்டக்குடை நீழலில் நிலைபெற்ற உயிர்கட்கெல்லாம் இனிமையை உண்டாக்கினீர்கள். சொல்லிய நீதி நூல்களின் முறை (சிறிதும்) தவறாமல் தரும வழியைப்பெருகச்செய்தீர்கள் (ஆயினும்) இன்னுமொன்றுள்ளது (அதனை) உங்களுக்கு எடுத்துச்சொல்ல விரும்பினேம். எ-று.

அதுக ருத்துணர்ந் தற்குதி ரரியாற் கெனவோர்
மதலை தோன்றினை மாநிலத் துயிர்புரந் தளிப்பான்
விதுமு டிச்சடை யவனையும் வேரிவண் டரற்றும்
புதுந றுந்துழா யவனையு மொழிந்துயிர் புரப்பான்.

(இ - ள்.) அதனை மனத்திற்றெரிந்தறியக்கடவீர்கள். பெரிய உலகத்திலுள்ள உயிர்களைக்காத்தி ரட்சிக்கும்படி அரியாகிய விஷ்ணுவுக்கும் அரனாகிய சிவபிரானுக்கும் ஓர் புத்திரனென்று றபவித்தான். சந்திரனைத்தரித்த சடாமுடியையுடைய சிவபெருமானையும், தேனைப்பருகி வண்டுகளொலிக்கும் புதிய மணமுள்ள துளவமாலை சூடிய விஷ்ணுமூர்த்தியையும் நீக்கியே உயிர்களைக்காப்பான். எ - று.

சிவபெருமானையும் திருமாலையும் நீக்கிப்புரப்பானென்றது - அரியரபுத்திரனது காத்தற்றொழிலைச்சிறப்பித்த உபசாரவாக்கென்க. (கூக)

அவனு கைக்குமோ ரழிமதக் கலுழிமால் யானை
புவன முற்றுற விடிபடுத் தண்டமேற் புரட்டி

யிவர்த டந்திரைப் பிரளய நடப்புறி னெதிர்போய்க்
கவர்தொ ளேக்கரத துதிஞ்சிகின் னுருயிர் காக்கும்.

(இ - ள்) அவன் ஊர்ந்து செலுத்துகின்ற, உலகினையழிக்கத்தக்க மதப் பெருக்குடைய பெரிய ஒப்பற்றயானை, உலகங்கள் எல்லாவற்றையும் இடித்து, மேற்பட்ட அண்டங்களையும் நிலைமாற்றி, அப்பிரளயத்திற்கெதிர் நடந்து, பிளவுற்ற துவாரந்தங்கிய துதிக்கையினால், அப்பெருக்கத்தையுறிஞ்சித் தானழியாதிருந்து, நிறைந்த உயிர்களைக் காக்கும். எ - று. (௯௭)

அன்றி யின்னுமோ ரருமறைப் பொருளெனத் தகுவாள்
குன்று பெற்றெழு மரகதக் கொழுங்கொடி யுருவாய்
மின்றி ரித்தனைய முத்தலை வேற்படை பொறுத்தாள்
பொன்றி கழ்ந்திடு மேருவும் வையமும் புரந்தாள்.

(இ - ள்) அல்லாமலும், மற்றோர் அருமையான வேதப்பொருளென்று அதையுஞ்சொல்லவோம். இமாசலமன்னனால் பெற்றுவிளங்கிய கொழுமை தங்கிய மரகதக்கொடி போன்ற உமாபிராட்டியார் வடிவினளாய், மின்னலைத்திரித்தாற்போன்ற முத்தலைச்சூலப்படை தாங்கினவள், பொன்மயமாக விளங்கும் பெருமலையையும் பூலோகத்தையுங்காப்பவள். எ - று. (௯௮)

புரந்த மாநிலம் பலவையு நரிவையும் பொறுத்துக்
கரந்து பலவுயி ரனைத்தையு மொருநெறி காப்பாள்
சுரந்த கங்கையஞ் சடையினு டனடந் தொடுத்தாள்
பரங்கு றித்திடி லவளல தியார்துணை பகரார்.

(இ - ள்) பெரிய பூலோகத்தை அவ்வாறு காத்து, கேடகமும் வாட்படையுந்தாங்கி, மறைந்து நின்று, பலவகைப்பட்ட எல்லாவுயிர்களையும் ஒரேவகையாகக்காப்பவள். ஊற்றெடுக்கின்ற கங்கையை யணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானுடன் நடனஞ்செய்தவள். மேன்மைபெற விரும்பின் உயர்ந்தவர்கள் அவளையன்றிச்சொல்லார்கள். எ - று. (௯௯)

அனைய நூபுரத் தளிரடி தாங்குவா ளரிக்குப்
புனைய நான்மறை நாற்பத மெனுந்தவம் புரிந்த
சினவு வளருகி னனத்தவம் புரிந்தது திங்கள்
கனலி யீறநெடு ருப்பினு மெதிருற்றிக் கவரும்.

(இ - ள்) அவளது நூபுரந்தரித்த பாதங்களாபோலும் திருவடிகளைத்தாங்கும் ஒளிய சிங்கத்திற்கு நான்கு வேதங்களும் நான்கு பாதங்களென்று சொல்லும்படி தவம் புரிந்தன. சந்திரன் அப்பாதங்களிலுள்ள நகங்களாகும்படி தவஞ்செய்தனன். மகா சங்காரத்தில் வடவாக்கினியே தோன்றியெதிர்த்தாலும், அச்சிங்கம் எதிரேபோய்க் கிரகித்துக்கொள்ளும். எ - று. (௧00)

நமக்கு வேண்டுவ திக்கதி நோக்கிமற் றினையோர்
தமக்கு வேண்டிய பூசனை வரன்முறை தந்து
சமர்த்த லைப்பகை கடந்துபின் பிறவிநோய் தவிர்ப்ப
தெமக்கு வேண்டிய திதுவென மொழிந்தன னெழுந்தான்.

(இ - ள்) உங்களுக்கு வேண்டுவது இப்பரவியே. இவ்வரிய பயுத்திரனுக்கும் காளிகாதேவிக்கும் செய்யவேண்டிய பூசைகளை முறைப்படியேசெய்து,

யுத்தபூமியிலே எதிர்த்த சத்துருக்களைச் சயித்து, இழிவாகிய பிறவிநோயைத் தவிர்த்துக்கொள்வதாகிய இதுவே எமக்கு வேண்டப்படுவதென்று கூறியெழுந்தருளினர். எ - று. (௧௦௧)

முனைவ னேகிய பின்னரு நாலவரு முயலாத்
தனையர் பாலுல களித்தனர் தவஞ்செயத் துணிந்தார்
புனையு மாமயில் வாரண மவாளரி புகாமா
நினையு நெஞ்சின ரப்பதம் பெறுகுவா னினைந்தார்.

(இ - ள்.) திரணவிந்துமுனிவர் சென்றருளியபின்னர், அரிய அரசால் வரும் முயற்சியுற்று, தங்கள் புதல்வரிடம் அரசுரிமையைக் கொடுத்துவிட்டுத் தவஞ் செய்தற்கென்று, அலங்கரிக்கின்ற சிறந்த மயில்வாகனத்தையும், சேவற் கொடியையும், ஆண்சிங்கத்தையும், புள்ளிகள் பொருந்திய யானையையும் கருதிய மனத்தினர்களாய அப்பதவிகளையடைய எண்ணினார்கள். எ - று. (௧௦௨)

மஞ்சி யங்கிய பருப்பத வனத்திடை வைகிப்
பஞ்ச வக்கினி நாப்பணின் றருந்தவம் பயில்வார்
செஞ்சு டாகத்தி பொழிமழை யிரும்பனித் திவலை
நஞ்செ திரப்பினு மநங்கலை யலல நடுங்கார்.

(இ - ள்.) மேகந்தவழுஞ் சிகுலபர்வதத்தை யடுத்தவனத்தில்தங்கி, பஞ்சாக்கினிமத்தியிலிருந்து அரியதவம் புரிபவர்களாய, செந்நிறந்தங்கிய சூரியகிரணமும், சொரிகின்ற மழையும், பெரிய பனித்துளிகளும், விஷஜாதிகளுமாகிய இவை தமது தேகத்திற்றுக்கினும் அத்தவநிலையையன்றி நடுங்கமாட்டார்கள். எ - று. (௧௦௩)

இக்க ணின்னண மருந்தவ மியற்றிடு மெல்லை
தொக்க நான்முக னரிமுதல வானவர் துவன்றிப்
புக்கி யாமளை புதல்வன்மற றரியரன் புதல்வன்
முக்க ணனறிரு நடநதொழுக் கைலையின் முன்னி.

(இ - ள்.) இவ்விடத்தில் இவ்வகையாக அருந்தவஞ் செய்யுங்காலத்தில், கூட்டமாகிய பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்களும், உமாபுத்திரராகிய குமாரக்கடவுளும், அரிபுத்திரனும், திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான திருநடனத்தைத் திருக்கைலையில் வணங்கத்தொகுதியாகப்போய. எ - று. ()

தத்த மூர்தியைக் கைலையின் மருங்குறத் தணவா
வத்த னைத்திரு நடநதொழுக் கைலைவெற் படைந்தா
ரித்த லைச்சிறைக் கலுழனு மனனமு மெதிரந்த
சித்தி ரக்கலா பமயிலினை யடைந்தன செப்பும்.

(இ - ள்.) தங்கடங்கள் வாகனங்களைக் கைலாயத்தின் சாரலிலிருக்கவிடுத்து, சிவபிரான் திருநடனத்தைப் பணியத் திருக்கைலாயமலையை யடைந்தார்கள். இவ்விடத்தில் சிறகுகளையுடைய கருடனும் அன்னமும் தமக்கெதிரேயிருக்கின்ற அழகிய கலாபத்தையுடைய மயில்வாகனத்தையடைந்து சொல்கின்றன. எ - று. (௧௦௫)

சாக தீவகத் தரசரோர் நால்வருந் தழுவித்
தோகை யுங்கொடிச் சேவலுந் தூர்க்கைவா ளரியும்.

வேக வெம்பரிச சாதகனின் றுகைக்கும்வெங் களிறு
மாக வேண்டின் றருந்தவ மழன்முகத திழைப்பார்.

(இ - ள்.) சாகததீவிலிருக்கும் ஒப்பற்ற அரசர்கள் நால்வருஞ்சேர்ந்து, மயிலும், கொடியாகிய சேவலும், காளியின்வாகனமான சிங்கமும், அரியபுததிரன ஏறிச்செலுத்தும் கடுவேகமுடைய வாகனமாகிய பெரியயானையும், ஆக வேண்டுமென்று பஞ்சாக்கினிக்கிடையிலிருந்து அருந்தவஞ் செய்கின்றார்கள்.

வருட நாறபதி னாயிரஞ் சென்றன மதியி
ரருட ருமபத முஙகளுக கிழக்குநா ளடுத்த
பொருவி னும்பத மின்றுகொ ளுளைகொல புகுவார்.
வெருவ ருமபுனல வருமுன மணைசெயல வேணடும.

(இ - ள) (அவாகள தவ்ந்தொடஙகி) நாற்பதினாயிரவருடஙகள் கழிந்தன. புத்திமான்களே! திருவருளைப பாலிககத்தகக இப்பதவிகளைக கைவிடததகக நாள உஙகட்குச் சமீபிததன. ஒப்பிலலாத உங்கள்பதங்களுககு அவாகள இன்றோ நாளையோ வரப்போகிறாாகள. அச்சந்தரும வெள்ளம்வருமுனனரே அணைகோலுதல அவசியம. எ - று.  (௪௦௭)

என்னக் கூறிய கலுழனு மன்னமும மேக
வனனக காரயினை முதலிய வாகனங ருழமித
தின்னச சிறிய வாமெனு மடுசினந திருகிக
கனனற போதினி லவருமழைக கடுஞ்சின்ங கனலா.

(இ - ள்.) என்று சொல்லிப கருடனும் அன்னமும் போக, கருநிறங் கொணட மயில்முதலாகிய வாகனஙகள ஒனறுசோநது, அவாகளைப்புசிககக் கோபிததனவென்று சொலலததகக பெருஙகோபமிகுநது ஒரு கணபபொழுதிறகுள அந்நாலவாகளிடததிலுஞ் சோநது கொடுமையான கோபததோடுசேறு.

கனல்வி ழிததன வனமெலாம பொடித்தன கதுவி
யனனமு கநதுநீ ரருநதவ மிழைததவா றறைவீ
ரெனவு ரபபுரை செவிபுக நாலவரு மேஙகி
மனநடுககுற வரனமுறை நினைந்தவா வலிநதயா.

(இ - ள்) தீப்பொறி சிதறப்பாாததன. அவவனமுழுதுந தூளிபடுததின. விடாதுபறறிப் பஞசாககினியிடையிலிருநது நீஙகள அருநதவஞ்செய்த காரணததைச் சொலலுஙகளென்றுகூறிய உரப்புவாாததைகள தங்கள் காதுகளில பட்டவுடனே, அவாகள் நாலவரும ஏககமெயதி மனநடுககமடைய வரிசையாகத தாம எண்ணியவகையே உரககச்சொலலினா. எ - று.  (௪௦௮)

அசசொற கேட்டலு மயின்முதற கூடிய வணைததும்
விசசை மாதவம புரிநதருள வேநதரை வெகுளா
விசசை யெமபதம விருமபினி ராதலி னினிநீா
கொசசை மாகணக் குலததொடுங் கலததிரொன் றுரையா.

(இ - று.) அவ்வார்த்தைகளைக கேட்டவுடன், மயில் முதலாகச்சேர்ந்துள்ள யாவும், ஞானத்தையுடையாராயப் பெருந்தவஞ்செய்யும் நான்கு அரசர்களையுங கோபித்து, நீஙகள் இச்சைகொண்டு எமது பதவிகளைப்பெறுதலை

புத்திரர்கள். ஆனால் இனி நீங்கள் மேன்மையான பெருங்கணத்தோடுங் கலக்கக்கடவீர்களென்று (சாபமொழி) கூறி. எ - று. (கக0)

மீண்டு மடைந்தன சயிலையின் மருங்குற வேந்தர்
மாண்ட வெங்கணத் தலைவராய் வதிந்தனர் மறு
மீண்டு மாமயின் முதலிய வலற்றொரு மெளியேம்
வேண்டு மாதவ முறுங்கொலென் றிரந்தனர் விளம்ப.

(இ - ள்) அவை திருக்கைலையின் சாரலைப்பொருந்தத் திரும்பின. (அவர்கள்) மாட்சிபெற்ற பெருங்கணத்தலைவராய் வசித்தார்கள். மறுபடியும் அவ்விடத்தில் பெரிய மயில் முதலியவற்றுடன் எளியேங்கள் விரும்பிச்செய்த பெருந்தவப்பயன் கைகூடுமோவென்று குறையிரந்துயாசிக்க. எ - று. (ககக)

மயிலுஞ் சேவலு முதலிய மனநெகிழ்ந் திரங்கிக்
கயிலை மாகணத் திருந்துநீர் நாள்பல கழித்தால்
முயலு றுந்தவப் பயனெலா முறுமெனு மொழியைப்
புயனி றக்கண மண்டவா பரணனிற் புகுந்த.

(இ - ள்.) மயிலுஞ் சேவலு முதலிய நான்கும் மனங்கசிந்து இரக்கமெய்தி, நீங்கள் திருக்கைலாயகிரியிலிருந்து பெருங்கணத்துடன் பலகாலங்கழித்தால், முயன்றுசெய்த உங்கள் தவப்பலன் யாவையும் அடையப்பெறுவீர்களென்று சொல்ல, மேகநிறந்தங்கிய அர்ச்சனைகுகணங்களும், தலையாலையை யாபரணமாக வணிந்த சிவபிரான திருக்கோயிலிற் சேர்ந்தன. எ - று. (ககஉ)

மாய னூர்தியு மலரய னூர்தியும் வனத்தி
னேய நந்தவ மழிப்பதற் கியற்றின வெனத்
தீய சிந்தையிற் கடந்தியக் கணத்தவர் சினவி
மேய தோகையுங் கருடனு முடற்றுபோர் விளைத்தார்.

(இ - ள்.) திருமால்வாகனமாகிய கருடனும், தாமரைப்பூவிலிருக்கும் பிரமன் வாகனமாகிய அன்னமும், காட்டிற்செய்த திருந்த தவத்தை யழிப்பதற்கு (மார்க்கம்) உண்டாக்கினவென்று, அக்கொடுமையை மனத்திலடைத்துக்கொண்டு, அக்கணத்தவர் நால்வரும் கோபங்கொண்டு, அங்கிருந்த மயிலும் கருடனும் எதிர்த்தக்க போரினை உண்டுசெய்தார்கள். எ - று. (ககங)

முக்க ணன்றிரு நடந்தொழு முதன்மையோர் யாரு
மக்க ணத்தினிற் றம்பதி யடைந்தனர் தன்பின்
மிக்க நால்வரு மறுமுக னருளால் விரிநீர்
தொக்க மாநிலத் தசுரரிற் றோன்றினர் தொடர்பால்.

(இ - ள்.) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது திருநடனத்தைப் பணிந்து நின்ற தலைவர்கள் யாவரும் தங்கடங்கள் பதவிகளைச் சேர்ந்தார்கள். அதன்பின்பு, மேம்பட்ட இந்நான்குகணங்களும் சண்முகப்பெருமான் திருவருளால், விரிந்த சமுத்திரஞ்சூழ்ந்த இப்பெரிய நிலவுலகத்தில் அசுரகுலத்தில் [illegible] தோன்றினார்கள். எ - று. (ககச)

[illegible] தன்மையி னடைந்திடுந் [illegible] றோன்றின ரென்றுஞ்
[illegible] வானவர் தங்க [illegible] மைசெய் [illegible]

னைய காரண மென்கொலம் மத் தியம்புதி யென்றாள்
மாயை தன்மக ளயமுகிக் குணர்த்துவா னதற்கும்.

(இ - ள்.) அந்தத் தன்மையாகிய அசுரகுலத்திற் பிறந்தாரென்று சொன்னால், செம்மையாகிய தேவர்களைத் தீமைசெய்து வருத்தும்படி நேர்ந்த காரணம்யாது? அதனையுஞ்சொல்லவேண்டுமென்று (அயமுகி) கேட்டனள். மாயை மீண்டும் தன்மகளாகிய அயமுகிக்கு (அவற்றை) உணர்த்துகின்றான்.

பூத ராமிவர் கணத்தொடும் பொருந்திய மேனாட்
காது வெஞ்சினத் தசுரரு மமரருங் களத்தின்
மோத வானவர் பேரம ரிழந்தனர் முறிந்தார்
பாது காப்பிரென் றிவரைவந் தடைந்தனர் பதறி.

(இ - ள்.) பூதர்களாகிய இவர்கள் கணத்தோடு கலந்திருந்த அம்முற்காலத்தில், கொல்லத்தக்க கொடியகோபமுடைய அசுரர்களும் தேவர்களும் யுத்தபூமியிலெதிர்க்க, தேவர்கள் தங்கள் பெரிய யுத்தத்தையிழந்து அழிந்து எங்களைப்பாதுகாக்கக் கடவீர்களென்று, இந்நாலவரிடம் வந்து பதைத்து அடைக்கலம் புகுந்தார்கள். எ - று. (ககசு)

அன்று வானவர்க் குதவுவா னகனிலந் தடைந்து
குன்று ருந்தெனக் குவலயப் பூதரிற் குழுமிச்
சென்று ருந்தெழு நிருதர்வெஞ் சேனையைச் செருவிற்
கொன்று வானுல கிந்திரற் குய்த்தன ரால.

(இ - ள்.) அக்காலத்தில், தேவர்கட்கு உதவிபுரிய, பரந்த நிலவுலகமடைந்து மலைகளெதிர்ந்தன வென்னக்கூற, பூலோகத்துப் பூதகணம்போலக் கூடிச்சென்று, எதிர்த்துப்போர்க்கெழுந்த அசுரர்களின் கொடிய சேனையை யுத்தத்தில் மாய்த்து இந்திரனைத் தேவலோகத்திற் குடியிருக்கச்செய்தார்கள், எ-று.

அந்த ரத்தவர்க் குதவிவான் கயிலையை யடைந்தார்
சந்த வார்புயத் தசுரர்கோ னிடரொடுந் தமித்து
வந்தி றைஞ்சிய வண்டவா பரணனை வழுத்தி
யெந்தை கேண்மதி யெங்குறை யுளதென விசைப்பான்.

(இ - ள்) (இப்படித்) தேவர்கட்குதவிபுரிந்து பெரியகைலாயமலையை யடைந்தார்கள். அழகிய நெடியதோள்களையுடைய அசுரத்தலைவன் விசனத்தோடே தனித்துவந்து துதித்து, சிரமாலையையாபரணமாகப்பூண்ட அச்சிவபிரானைத் துதிசெய்து, எமது தந்தையே! எங்கள் குறையொன்றுள்ளது. அதனைக் கேட்டருள்கவென்று விண்ணப்பஞ் செய்கின்றான். எ - று. (ககஅ)

நின்ன தாணையி னிலைஇய பூதரோர் நால்வ
ரென்ன தாகிய சேனையை யுயிர்செகுத் திறுத்துப்
பின்ன ரீங்கிவ ணடைந்தன ரென்றனன் பிழையோர்ந்
தன்ன காலையிற் பூதநா யகன்வெகுண் டனனால்.

(இ - ள்.) தேவரீர் ஆக்ஞையில் நிலைபெற்ற ஒப்பில்லாத பூதகணர் நால்வர், அடியேனுடைய சேனையை உயிர்போகமாய்த்து, பின்னே இவ்விடத்திற்கு வந்துவிட்டார்களென விண்ணப்பித்தான். பூதநாதராகிய சிவபெருமான் அவர்கள் குற்றத்தையுணர்ந்து அப்பொழுது கோபங்கொண்டனர். எ - று. ()

வருதிர் நால்வரு நீவிரென் னாணையை மதியா
தொருவி வானவர்க் குதவிசெய் தவுணரை யொறுத்தீர்
குருதி வாளெயிற் றசுரர்வெங் குலத்திடைத் தோன்றித்
தருவி னாட்டவர்க் கிடும்பைசெய் தவனிலஞ் சரிப்பீர்.

(இ - ள்.) நால்வரும் வாருங்கள். நீங்கள் எமது கட்டளையை மதியாமல் இவ்விடம் நீங்கித் தேவர்கட்குதவிசெய்து அசுரரைக் கொன்றீர்கள். (ஆதலால்) உதிரம்பொருந்திய வாட்படைபோலுங் கூர்மைதங்கிய பற்களையுடைய கொடிய அசுரகுலத்திற் பிறந்து, கற்பகத்தருவையுடைய தேவலோகத்திலுள்ள தேவர்களுக்குத் துன்புசெய்து நிலவுலகத்திற் சஞ்சரிக்கக்கடவீர்கள். எ-று. ()

என்று ரைத்தன னண்டர்பா ரணன்மற் றிவர்
மன்ற வன்சொலுஞ் சாபத்தா லம்பரர்க் கவர்க்குக்
கன்று வெஞ்சினத் திடும்மைமுற் றிழைத்தனர் கண்டார்
யன்று தொட்டவ ரிழைத்திடு மிடும்மையின் றகன்ற.

(இ - ள்.) என்று சிவபெருமான் கட்டளைதந்தனர். இவர்கள் அக்காலத்தில், சிவபெருமான் கூறியசாபத்தால், தேவலோகவாசிகளுக்கு விசேடித்த கடுங்கோபத்தினாலே முழுவதும் துன்புசெய்தார்கள். அவர்கள் அக்காலந்தொடங்கிச்செய்துவந்த துயரங்கள் இன்று நீங்கின. எ-று. (௧௨௧)

இவணி கழ்ந்தன வின்னண மீங்கிதன் மேனாட்
டவறின் மாதவ மியற்றிய சாகத்தீ வாச
ரவரை மாதவ மழித்தனன் றிருவுளத் தடையாக்
கவரொ ளிக்கழன் முருகவேள் வெகுளியிற் கழறும்.

(இ - ள்.) இங்கே யிவ்வாறு நடந்தன. இதற்கு முற்காலத்தில், குற்றமில்லாத பெருந்தவஞ்செய்த சாகத்தீவாசர்கள் நால்வரை, பெருந்தவமழித்தனவற்றைத் திருவுளத்திலடைந்து, ஒளிகளைக் கவர்ந்த்தக்க வீரக்கண்டாமணிதரித்த குமாரக்கடவுள் கோபங்கொண்டு கூறுகின்றார். எ-று. (௧௨௨)

கொடியெ னப்பிடித் துயரிய சேவலைக் கொழுங்கார்
நெடிய தோகைமா மயிலினை நீவிர்போ யுருத்து
முடிவின் மாதவ முயற்சியை யொழித்தனி ரதனாற்
கடிய பாதக மடைந்தனி ரெனமனங் கறுத்தான்.

(இ - ள்.) தாம் கொடியாகப் பிடித்துயர்த்திய சேவலையும், மிகக்கறுத்து நீண்ட சிறகுகளையுடைய பெரிய மயிலையும் பார்த்து, நீங்களிருவரும்போய்ப் போர்புரிந்து, எல்லையில்லாத பெருந்தவமுயற்சியை அழித்துவிட்டீர்களாதலால், கொடும்பாவமெய்தினீர்களென்று மனத்திற்கோபங் கொண்டனர். எ-று.

இறைவ நாண்முதல் லெம்மடி தாங்கலை யினிநீ
கொற்ற வார்கொடி யல்லையென் றிவற்றினைக் குறித்துச்
சொற்ற வாசகங் கேட்டலுங் கொடியொடுந் தோகை
வெற்றி வேலவற் பணிந்தன ரினையன விளம்பும்.

(இ - ள்.) இன்று முதலாக நீ எமது திருவடியைத்தாங்க வேண்டாம், இனிமேல் நீ வெற்றிபொருந்திய நெடியகொடியல்லையென்று இவ்விரண்டினையுநோக்கி, சொன்னவாசகங்களைக்கேட்ட மாத்திரத்திலே கொடி (யாகிய

சேவல், வாகனமாகிய) மயில் இவ்விரண்டும், வெற்றிபொருந்திய வேலாயுதந் தாங்கிய குமாரக்கடவுளை நமஸ்கரித்து எதிரேநின்று இவைபோல்வனசொல்லின்றன. எ - று. (கஉச)

இன்று காறுநின் னிணையடித் தொண்டுபூண் டிருந்தே
மென்று நின்னடி புகுதுவ தெம்மனத் துணரோம்
வென்றி பூத்தொளிர் விளங்கிலை வேற்படைப் பெரும
வொன்றி யேழையேம் புரிகுவ துரைத்தியென் றிரப்ப.

(இ - ள்.) இற்றைவரையில், தேவரீர் உபயபாதங்கட்குந் தொண்டுசெய்திருந்தோம். மீண்டு எந்நாள் தேவரீர் திருவடியையடைவது. எங்கள் மனத்தி லறியோம். வெற்றிமிகுந்துவிளங்கும் பிரகாசமுடைய தகட்டுவடிவாகியவேலாயுதக்கடவுளே! ஏழையேங்கள் பொருந்திச்செய்யத்தக்கதைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று யாசிக்க. எ - று. (கஉரு)

கஞ்சி மாநக ரடைந்துநீ ரெமையுணர் கருத்தான்
மஞ்சு தோய்வரை மாதவம் புரிகுதிர் புரிந்தா
றஞ்சு மெம்மடி தருகுது மெனச்சென்று சாரா
வஞ்சி லம்படி நினைந்துநின் றவனடி யடைந்த.

(இ - ள்) நீங்கள் காஞ்சிமாநகரையெய்தி எம்மையுணர்கின்ற கருத்தினால் மேகங்கள் படிகின்ற மலையிற் பெருந்தவஞ் செய்யுங்கள். அப்படிச்செய்தால், அபயமாக எமது திருவடிகளைத் தந்தருள்வோமென்று திருவாய் மலர்ந்தருள, அவ்வண்ணமே சென்றடைந்து, அழகிய சிலம்பணிந்த அவ்விறைவர் பாதங்களைத் தியானித்துத் தவத்தினின்று, அம்முருகக்கடவுள் பாதங்களையெய்தின.

பயிலுஞ் சூரனும் பதுமனு மியற்றிய தவத்தான்
மயிலுஞ் சேவலு மாயினர் வாளரி முகனு
மியலுந் தம்பியு நினைந்தன முடிப்பான் கெண்ணிப்
புயலுண் டேகுறுங் கயிலையி னந்திபாற் புகுந்தார்.

(இ - ள்) (ஒன்றாய்ப்) பிறந்த சூரனும் பதுமனும் தாங்கள் செய்த தவப்பயனால் மயிலுஞ் சேவலுமானார்கள். சிங்கமுகனும் அவனுக்கிளைய இளையவனாகிய தாரகனும் தாம் நினைத்தவற்றை முடிக்கக்கருதி, மேகங்கள் நீர் பருகிச் செல்லுந் திருக்கைலாயத்தில் திருநந்திதேவரிடஞ் சென்றார்கள். எ - று. ()

நந்தி நாதநின் னளிர்கழற் பங்கய மடைந்தேம்
புந்தி கூர்தர நாள்பல கழித்தரப் புரிந்தேம்
விந்தை யூர்தியும் வெள்ளணிச் சூற்படைச் சாத்தன
றந்தி யூர்தியு மாகுவ மெனமனந் தரிந்து.

(இ - ள) திருநந்திதேவரே! தேவரீரது குளிர்ச்சிதங்கிய திருவடித்தாமரையை யடைந்தோம். அடியேங்கள் காளியின் வாகனமாகிய சிங்கமும், வெள்ளிய நிணம்படிந்த சூலாயுதந்தரித்த அரியரபுத்திரன் வாகனமாகிய யானையும் ஆவோமென்று மனத்திற்கொண்டு, வெகுகாலம் புத்திபூர்வமான தவத்தைச் செய்தோம். எ - று. (கஉஅ)

அளிய மாற்றிய வருந்தவ மவப்படா தருளி
யொளிய நீறணி யெம்பிரா னருடியென் றுரைப்ப—

வெளிய வாளெயிற் றிவர்முக நோக்கினன் வியவார்
தெளியு நான்மறை நந்திமற் றினையன செப்பும்.

(இ - ள்.) பிரகாசந்தங்கிய திருவெண்ணீற்றினைத் தரித்த எமது தலைவரே! அடியேங்களியற்றிய அருந்தவமானது பலனற்றதாகாமல் அநுக்கிரகஞ் செய்து, அருளவேண்டுமெனப் பிரார்த்திக்க, வெண்ணிறந்தங்கிய ஒளிபொருந்திய பற்களையுடைய இவர்கள் முகத்தைப்பார்த்து வியந்து, தெளிந்த நான்கு வேதங்களையுடைய திருநந்திதேவர் இவ்வகையாகச்சொல்லுகிறார். எ - று.

நீறணிந்தரு ளெம்பிரா னேறிய நெடுங்கோட்
டேற வாக்குள வூர்திகட் கிருங்கதி கொடுக்குங்
காறு மெம்முறை யிருத்தியென் றுரைத்தனன் கருதி
வேறு கொண்டில ரிருவருந் தம்முளம் வியந்தார்.

(இ - ள்.) திருவெண்ணீற்றினை யணிந்த எமது சிவபெருமானுக்கு வாகனமாகிய நெடிய கொம்புகளையுடைய இடபமாகிய திருநந்திதேவர், காளிக்கும் அரியபுத்திரனுக்குமுள்ள வாகனங்கட்குப்பெரும்பதவி(ஆகிய முத்தி)அருளுமெல்லையும் நீங்கள் எம்மிடத்திலிருப்பீர்களாக வென்றநுக்கிரகித்தனர். அவர்களிருவரும் அதைக்கருதிக்கொண்டு வேறொன்று நினையாதவர்களாய் மனமகிழ்வுற்றார்கள். எ - று. (௧௬௦)

இப்பெருங்கதை கேட்டுழி யயமுகி யென்பாள்
கப்பி னந்தனச் சுமையுடைத் தாயொடுஞ் சமைந்தோட்
டொப்ப ருந்திற லேறதி னூர்திக ளனைத்துந்
தப்பில வானகதி பெறுவன சாற்றெனச் சாற்றும்.

(இ - ள்.) அயமுகி யென்பவள் இப்பெருஞ் சரிதையைக்கேட்ட காலத்தில், கிளைத்த இளமை தங்கிய தனபாரமுடைய தனது தாயாகிய மாயையுடனே, இரண்டாகப்பிரிந்த கொம்புகளையுடைய ஒப்பற்ற வல்லமை வாய்ந்த இடபமாகிய திருநந்திதேவரால் எல்லா வாகனங்களும், தவறுதலில்லாத பெருங்கதி பெறுகின்றனவற்றைச் சொல்லவேண்டுமெனக் கேட்க, (மாயை அயமுகிக்கு மேலும்) சொல்லுவாள். எ - று. (௧௬௧)

வெள்ளி யங்கிரிக் கோட்டமேவரு மிறைவன்
வள்ளி நுண்மருங் குமையிடைத் தாக்கையை வருத்திப்
புள்ளி வண்டறை துளவணி முகிலிடைப் புலவு
னள்ளி லைப்படைச் சாத்தனை வருத்தின னதுநாள்.

(இ-ள்.) அழகிய வெள்ளிமலையின் சிகரத்திலே வீற்றிருக்குஞ் சிவபெருமான், கொடிபோலும் நுண்ணிய இடையையுடைய உமாதேவியாரிடத்தாக கையை வருவித்து; புள்ளிகளையுடைய வண்டுகளொலிக்குந் துளவமாலைதரித்த மேகம்போன்ற திருமாலபால புலால்கமழும் மாமிசநிறைந்த அச்சமாகிய இலைபோன்றசூலாயுதந்தாங்கிய அரியபுத்திரனை வருவித்தனர். அக்காலத்தில்.

இனையர் போந்தன ரெம்பிரான் றிருவடி யேத்தி
வினைய வூர்திமற் றெங்களுக் கருளென வேண்ட
வனைய வேறறினை யமைத்திவாக் கூர்திநீ யருள்வா
யெனவு ரைத்தலு மெழுமுழ வத்தி துணைமருப் பிடபம்.

யையுடைய திருநந்திதேவர் துணித்திருந்து தந்து திருவுள்ளத்தி லாலோசித்து அவ்விருவரையும் விருப்பத்துடன் (அவர்கள் விருப்பு நிறைவேறும்படி) வாகனங்களாகக் கொடுத்தருளினார் எ - று.

தாரகன் சிங்கமுகனென்று மிருவரும் பூர்வகாளி அரியபுத்திரனிவர்கட்கு வாகனமாகத் தவஞ்செய்தவர்களாதலின், புணையுடையவாகனமிரண்டையும் நாதனகாளி அரியபுத்திரனுக்குக் கொடுப்பித்து, இவர்களை அவர்கள் விருப்பின்படி பூர்வகாளி அரியபுத்திரனுக்கே கொடுப்பித்தன ரென்க (௧௩௮)

சூராதிகளொடுக்கச்சருக்கம் முற்றிற்று,



ஆக சருக்கம் ௨-ம் திருவிருத்தம் - ௨௨௪.



மூன்றாவது

# அயமுகி சருக்கம்.



கலிநிலைத்துறை.

ஈது கேட்டுநின் றயமுகி யின்னரு மினிநீ
காது வார்குழ லன்னையென் னிலைசொலத் தகுமென்
றோத வோதுவன் கேண்மதி யென்றன ளுவாப்பாள
சீத வார்பெருங் கடலகத் துளதொரு தீவு.

(இ - ள்.) இதனைக்கேட்டு அயமுகி மேனேநின்று, மகரந்தம் நிறைந்த கொடிய கூந்தலையுடைய தாயே! இதன்மேல், நீ என்வரலாற்றினைச் சொல்ல வேண்டுமெனக்கேட்ப, சொல்கின்றேன். கேட்பாயாகவென்று சொல்கின்றாள். குளிர்ந்த நீண்டபெருங்கடலுக்குள் ஒரு தீவு உள்ளது. எ - று. (௧)

தெங்கு தண்புனற் கிடந்தகோ மேதகத் தீவின்
வாங்கு நான்மறை விசிட்டனென் றுளனொரு மறைபோ
னுங்க வன்றனிச் சுவேதையை வேட்டன னவள்பா
லோங்கு மாதவத் துதித்தனள் சித்திர ரேகை.

(இ - ள்) தேக்கமுற்ற குளிர்ச்சிதங்கிய கடலகத்துள்ள கோமேதக தீவிலே நான்குவேதங்களையு முணர்ந்த விசிஷ்டனெனும் பெயர்கொண்ட வேதியனொருவனுண்டு. அவ்விசிஷ்டன் ஒப்பற்ற சுவேதை யென்பாளை மணஞ் செய்துகொண்டனன். அவளிடத்தில் உயர்ந்த பெருந்தவத்தால் சித்திர ரேகை யென்பாள் பிறந்தனள். எ - று. (௨)

அழகெ லாந்திரண் டொருருக் கொண்டன வளையாள்
குழவி மானிளம் பிடியெனத் தவழ்தொறுங் குழைவாள்
மழலை வாய்மொழிக் குதலையிற் கேட்பினு மரனுங்
கனைய லாங்கன வாயினு மரும்பின தழைக்கும.

(இ - ள்) (பெண்களுக்குரிய) அழகுகளெல்லாவும் ஒன்றுசேர்ந்து வடிவெடுத்ததைப்போன்றவள். இளங்கன்றாகிய பெண்மான்போலத் தவழுந்தோறுங் குழைவுறுவாள். இளம்வாயின் மழலைச் சொல்லைக்கேட்டாலும், இலைகள் முற்றுமுலர்ந்திருக்கும் மரங்களுந் தளிர்விட்டுத்தழைக்கும். எ - று. (௫)

குழைத்த செம்பொனு லியற்றிய புனைந்தகுன் சிலம்பு
தழைத்த சிலவொலி தளிப்புறத் தளர்நடை பயின்று
விழைத்த மாதவத் தன்னைகண் களித்தன விருபப
மழைத்த வார்குழ லேழ்வய தெய்தினள் வளர்நாள்.

(இ - ள்.) இளக்கிய பசும்பொன்னாலாகிய அலங்காரஞ்செய்த வளைந்த சிலம்புமிகுந்த சிற்றொலியொலிக்கத் தளர்நடைபழகினள். பெருந்தவம்புரிந்த தாயாகிய சுவேதை கணகள் களித்திருக்க, மேகவண்ணமுற்றதாய நீண்ட கூந்தலையுடைய அச்சித்திரரேகை ஏழுவயதெய்தி வளர்ந்து வருகையில்.

அனைய தீவகத் தயல்கிடந் துளதொரு நகரந
தனையு ரைத்திடிற் றயங்குபூச் சக்கர மதன்பா
லினைய நான்மறைக் குலத்தரி சனமனோ நெறியோன்
மனைவ யிற்றிடைத் தோன்றினா னொருதனி மதலை.

(இ - ள்.) அந்தக் கோமேதகத்தீவின் சமீபத்தில் ஒரு நகரமுண்டு. சொல்லுமிடத்தில், அதனைப் பூச்சக்கர நகரமென்பார்கள். அதனிடத்தில், எண்ணத்தக்க நான்குவேதங்கட்குரிய வேதியர் குலத்தில், ஒப்பற்ற சனமார்க்கமேற்கொண்ட அரிசனமனென்பவன் மனைவியின் வயிற்றில் ஒப்பற்ற ஒருபுத்திரனுதித்தனன்.

புனித மாதவன் புண்டரீ கப்பெரும் பெயரான்
றனிம றைப்பெருந் தலைவனத் தையலை மணந்தா
னினிது கொண்டுபோய்த் தனதகத் திருத்தின னிவளோ
வனைய னங்குழை புதுவனப் பொருங்குற வளர்வாள்.

(இ - ள்.) பரிசுத்தமான பெருந்தவஞ் செய்தவனும், புண்டரீகனென்னும் பெருமைதங்கிய பெயர்பெற்றவனும், ஒப்பற்ற வேதப்பெருந் தலைவனுமாகிய அப்புதல்வன், அச்சித்திரரேகையை விவாகஞ்செய்துகொண்டு, இனிமையாக அழைத்துச்சென்று தனமனையில் இருத்திக்கொண்டனன். அலங்கரித்த மேகத்தாற் செய்ததுபோன்ற கூந்தலையுடைய அவள் புதிய அழகுகளெல்லாவும் ஒன்றுபச் சேரவளர்வாளாயினள். எ - று. (௬)

எரியு நஞ்சமு மமுதமு மெடுத்துறக் குழைத்துப்
பரிவி னீட்டின கிடத்தின வாமெனப் பழுத்த
வரிப ரந்தன வயலபிறழ்ந் தணிகுழை நடந்த
கரிய வாயின வெளியவா யினதடங் கண்கள்.

(இ - ள்.) தீயையும் அமுதத்தையும் விடத்தையும்படுத்து ஒன்றாயத் கூட்டி அன்போடு நீட்டிக்கிடத்தினவெனச் சொல்லத்தக்கதாய், பழுப்புடையனவும், செவ்வரிப்பரந்தனவும், பக்கலிற்புரண்டு காதோலைவரையில் நடந்தனவும், கருநிறமுற்றனவும் வெண்ணிறமுற்றனவுமாயப் பரந்த கண்களையுடையவள். எ - று. (௭)

ஆரி ருடபிழும் பொருக்குவிட் டனையதோ கமனுரூற
காரி ருட்கொழுந் தொருவழிக் கானறதோ கமழ்ந்த

வேரி யஞ்சன மயிரென விழுதுவீழ்ந் ததுவோ
வாரி ணர்ச்சுருளோதியை யாதென மதிப்பாம்.

(இ - ள்.) பொருந்திய இருட்குழம்பை யொழுகவிட்டது போன்றதோ? கருக்கொண்ட மேகத்தின் இருட்கொழுந்து ஒரேவழியிற் கக்கியது போன்றதோ? மணம்வீசிய சுகந்த மையானது மயிரெனச்சொல்ல விழுதுவிட்டது போன்றதோ? நீண்ட மலர்க்கொத்துகளைச் சூடிய அவளது சுருண்ட கூந்தலை யாதென்று நிச்சயிப்போம்? எ - று. (அ)

முளைத்த வான்பிறை முத்தின முற்றிய பின்னர்க்
கிளைத்த வாரிருட் கீழ்வடிம் பிணைபெறக் கிடத்தித்
தளைத்த வாமெனக் கரும்புருவத்தொடுந் தயங்குந்
திளைத்த சிந்துர வாணுதல் யாதெனத் தெரிப்பாம்.

(இ - ள்) ஆகாயத்தில் முளைத்த சந்திரன் மூன்றுநாட்கள் கலைகள் முற்றிய பிறகு, நிறைந்தவிருள், கீழ்வடிம்பிலே இருபக்கலிலும் சரியாயிருக்க வைத்துக் காவற்படுத்தியதற்குச் சமானமென்று (கண்டோர்) சொல்லும்படி, கரியபுருவத்துடனே விளங்குஞ் சிந்துரப்பொட்டணிந்த ஒளிதங்கிய நெற்றியை யாதெனச் சொல்லுவோம்? எ - று. (கூ)

பயிறசெய் கானக மரகதப் பசும்பணித் தோகை
மயிற்கு லங்குழீஇ மயங்கின சாயலின் மயங்கு
முயிர்த்த பூந்தழை மாங்குயின் புடனுறைந் திசைக்குங்
குயிற்கொ ழுங்குர லாந்தொடுங் கூட்டினக் குதலை.

(இ - ள்) பழகியுள்ளகாட்டில் மரகதம்போலும் பசியகுளிர்ந்த கலாபத்தையுடைய மயிற்கூட்டங்கள் சேர்ந்து இவள்சாயலால் மயக்கமுற்றனவாய் மயங்கும். கொழுமைதங்கிய குரலென்னும் அமிர்தத்துடன் சேர்த்த இவள் குதலைச் சொற்களுக்கு அழகிய தழைகணிறைந்த மாங்கிளையில் வசித்தொலிக்குங் குயில்கள் பெருமூச்செறிகின்றன எ - று. (க0)

முழுத்த பானிலாப் பித்திகத்தன முறைமுறை திருத்தி
யழுத்தி வைத்தவோ வமிழ்தினை யருமபென லாக்கிப்
பழுத்த வெண்ணிலாப் படுத்திவைத் தனகொனமற் றறியோ
மொழுக்கு வாண்மை யாதென வுணர்ந்தில மினனும்.

(இ - ள) கலைகணிறைந்த வெள்ளியசந்திரனைப் பகிர்ந்து வரிசைவரிசையாய்த் திருத்தியழுத்திவைத்தனவோ, அமிர்தத்தை யரும்புபோற்செய்து மிக்க வெள்ளியசந்திரிகையைப் பரப்புபடிவைத்தனவோ, யாதோ நாமறியோம். ஒழுங்காயுள்ள பிரகாசிக்கின்ற பற்களையாதென்று இதுகாறுந்தெரிந்திலோம்.

வட்ட வார்சுருளோலையிற் பொலிந்தன வள்ளை
கெட்ட காமனுக் கனறுயிர் கொடுத்ததிக் கிளையே
தொட்ட வார்திரைப் பரவைமா நிலத்துயிர் சூறை
யிட்ட ருந்துற மறலிகைத் திருத்திய விலக்கே.

(இ - ள்.) வட்டமாகச் சுருண்ட நீண்டபொன்னோலையில் விளங்குவனவாகிய வள்ளை (இலைபோலுங்காதுகள்) அக்காலத்திலே அபசயமுற்ற மன்மதனுக்கு உயிரையளித்தது. அவனுக்குறவாயுள்ள அவையே (சகா) தோண்டிய நெடிய அலைகளைப் பொருந்திய கடல்சூழ்ந்த பெரிய பூமியில் உயிர்களைக் கொள்ளைகொண்டுண்ண இயமன் தனகையால் திருத்தி[illegible]த்த குறியாயுள்ள பொருளுமாம். எ - று. (கஉ)

இலவு பூத்ததிற் பவளமென கொழுநதொளி யிருத்தி
மலர்மு ருக்கி தழ்ச் சேயொளி வழித்ததின் விரவிக்
குலா றுங்கனி வீழியிற கொடுத்தன வெனலா
யலைக டற்படு மாரமு தரும்புசெவ விதழாள.

(இ - ள்.) பூத்த இலவமலரில் மெல்லிய பவளக்கொழுந்தின் பிரகாசத்தை யமைத்து, முருக்கமலரிதழின் செந்நிறத்தை வழித்து அதிற்கூட்டி, நிறத்தோடுகூடிய நல்ல வீழிப்பழத்திற்குக் கொடுத்தன போன்று சொல்லத்தக்கதாய், அலைகள் பொருந்திய பாற்கடலிலுதித்த நிறைந்த தேவாமிர்தஞ் சிந்துஞ் சிவந்த அதரத்தினை யுடையவள். எ - று. (௧௩)

அரும்பு கண்கறுத் தாரமு தகம்பொதிந் தமிழ்ந்தின
குரும்பை யொத்தணி திதலேமீ பொடிந்தறக் குழைந்த
மருங்கி னுக்கிரங் காதிரு மருங்கொளி பழுத்து
முருங்கு தன்மைபெற றெழுந்தினை முகிழ்த்தவெம முலையாள்.

(இ - ள்.) அரும்பையொத்த கண்கள் கறுப்பெய்தி, உள்ளிடத்தில் நிறைந்த பால்பரவி, தென்னங்குரும்பையையொத்து, மேலே அழகிய தேமல் படர்ந்து, மிகமெலிந்துள்ள இடைக்குத் தளர்வெய்தாமல் இருபுறங்களிலும் மிக்க ஒளிவீசி, கொலைத்தன்மை வாய்ந்தோங்கிக் குவிந்து பூரித்த இருதனங்களையுடையவள். எ - று. (௧௪)

மறுவின் மென்கலே சுருக்கவக் கலேயொடு மயங்கி
யுறுவ தின்மைபெற றுலகெலா மயக்கிய மார
னிறுதி பெறறபின னெடுத்தவோ ருருவென லாகிச
சிறிய சிற்றிடை யவனுயி ராமெனத் திகழும.

(இ - ள்) குற்றமில்லாத மெல்லிய ஆடையைக் கட்டுதலும், அவ்வாடையுடன் கலந்து தானுள்ள தோற்றமேயில்லாது, உலகமுழுவதையும் மயங்கச் செய்த மன்மதன் இறந்தபின்னர் எடுத்த (அருவமாகிய) ஓர்வடிவென்று சொல்லத்தக்கதாய், அற்பமாகிய சிறிய இடையானது, அம்மன்மதனுயிரெனச் சொல்ல விளங்கும். எ - று. (௧௫)

அரும்பி னந்தனத் தாருயி ரளித்தவ ராசை
விருப்ப மெவ்வள வவ்வள வாகிய விரிவா
யுருத்து ருத்தமு துறறிருந் தன்னவ ருளம்போற்
பெருத்த றக்கனிந் தகலிய வல்குலபெற றுடையாள.

(இ - ள்.) அரும்புபோல இளமையாகிய தனமுடையாளிடத்தில், தமது நிறைந்த உயிரைக்கொடுத்தவர்களின் ஆசையெவ்வளவினதோ அவ்வளவினதாகிய விரிவையுற்றதாய், சுரந்து சுரந்து அமுதமூற்றெடுத்து, அக்காமுகர்களின் மனமெவ்வண்ணம் பரந்திருக்குமோ அவ்வண்ணம்பரவி, மிகக்கனிந்து விசாலித்த அல்குலையுடையவள். எ - று. (௧௬)

பாயொ ளிப்பனித் தாமரை பரிதிவிட டுமிழுங்
காயொ ளிக்கதிர் படப்படக் கருகுவ கதுவா
மீயொ ளிப்பட மென்மையுந் தண்மையும விரவிச்
சேயொ ளிப்படச் சிவந்தன சீறடிச் சிலம்பு.

(இ - ள்.) சூரியன் தன்பானின்று பரப்பும் வெப்பமாகிய ஒளிதங்கிய கிரணங்கள் தாக்குந்தோறும், கருகிப்போகும் பரந்த தாமரையினுள்ள ஒளிச்சி

வாய்ந்த தாமரையைப் போலாகாது, சிலம்புகளின் மிக்கஒளி தாக்குதலால் மென்மையுங் குளிர்ச்சியுங் கலந்து செவ்வொளியுடைச் சிவந்திருக்குஞ் சிற்றடியையுடையவள். எ - று. (கஅ)

சாந்தமாகிய பொதியின் றுயிர்ப்புறத் தவழ்ந்து
போந்த தென்றலங் குழலி யோர் தளர்நடை போலு
மாந்த ராருயிர் மயக்கிய மடநடைக் குவமை
கூந்த லம்பிடி யனறிமற் றேதெனக் குறிப்பாம்.

(இ - ள்.) சந்தனமரங்களுயர்ந்த பொதியாசலத்திருந்து பெருமூச் சுண்டாகத் தவழ்ந்துவந்த தென்றலென்னும் அழகிய குழலமைதயின் ஒப்பில்லாத தளர்நடையைப்போல, புருஷர்களின் அரியவுயிரை மயங்கச்செய்த அவளது இளநடைக் குபமானமா, [கூந்தல்] கழுத்தடிமயிரையுடைய அழகிய பெண்யானையையன்றி வேறேதென்று குறிப்பிடுவோம். எ - று, (கஅ)

இவளை யின்னுயிர்க் குயிரெனத் தழுவின னிருந்தான்
புவன முண்டுமிழ்ந் தானந்தவ னிணையடி போற்றித்
தவமு யற்சியி னொழுகுவா னறநெறி தவறா
னுவர்க்க ருங்கட லுலகமொத் தொழுங்குற வாழ்வான்.

(இ - ள்.) இச்சித்திரரேகையைத் தனது இனிய உயிர்க்குயிராகத் தழுவியிருந்து, உலகமுண்டுமிழ்ந்தவராகிய விஷ்ணுமூர்த்தியின் உபயபாதங்களைத் துதிசெய்து, தவமுயற்சியில் ஒழுகுவோனாய, நீதிமுறை தவறாதவனாய், உவர்ப்பாகிய கருங்கடலால் சூழப்பெற்ற உலகத்தோடொத்து முறையாக வாழ்ந்திருந்தான், எ - று. (கக)

துளப மார்பினன் சுருக்கிய வுத்தரீ யத்த
னளவு தாமரை மணியின னாரமு தனைந்த
கிளவி மென்குயி லமடியத் திருமகள் கேள்வ
னுளநி னைந்திடு மியல்வுத் தலைமைபெற் றுடையோன்.

(இ - ள்.) துளசிமாலைதரித்த மார்புடையவனும், சுருக்கித்தரித்த உத்தரீயமுடையவனும், கணக்கிட்ட தாமரைமணி மாலைதரித்தவனும், குயிலின் குரல்போன்ற தேவாமிர்தங்கலந்த மெல்லிய சொற்களையுடையவளாய தாமரைப்பீடத்திலுள்ள திருமகள் கொழுநனை மனதில் தியானஞ்செய்யும் வைணவத்தலைமை அடைந்தவனுமாவன். எ - று. (உ0)

பொருவின் மாதவப் புண்டரீ கப்பெரும் பெயரான்
மருவு சித்திர ரேகைபூண் வனமுலை மயங்கி
யொருவு றுவருங் காமவெங் கடற்படிந் திருந்தான்
றிருகு சிந்தைய ளிவனொடுஞ் சிறந்தனள் சிலநாள்.

(இ - ள்.) ஒப்பில்லாத பெருந்தவமுடைய புண்டரீகனென்னும் பெருமை பொருந்திய பெயரை யுடையவன். தான்மணந்த சித்திரரேகையின் ஆபரணமணிந்த அழகிய தனங்களில் மயங்கி, எப்போதும் அகலாத அருமையான காமமென்னுங்கொடிய கடலில் மூழ்கிக்கிடந்தான். மாறுபட்ட மனமுடைய சித்திரரேகை இவனோடு கூடிச்சிலகாலம் வாழ்ந்திருந்தனள். எ - று. (உக)

மறைக்கு நாயக னீங்கிவண் வறுமைகண் டிரங்கி
நறைப்ப சுந்துழாய் நாயக னொருமணி நலக
நிறைத்த மாநிதிக் குபமையங் கதுதர நின்றான்
செறித்த வாயிரஞ் சிட்டருங் கருணினன் சிறந்தான்

(இ - ள்) வேத நாயகனாகிய இப்புண்டரீகனது வறுமையைப் பார்த்துத் திருவுள்ளமிரங்கி மணமுமழும் புசிய துளவமாலை சூடிய திருமால், ஒரு மணியைக் கொடுத்தருள, அம்மணி நிறைந்த பெருந்திரவியக் குவியல்களைத் தரப்பெற்ற அப்புண்டரீகன், தன்னையடுத்த ஆயிரக்கணக்கான சீடர்களுக்கு உதவிசெய்து சிறப்புற்றிருந்தனன். எ - று. (௨௨)

இவன கத்திருந் தில்லற மாட்சியி னிழிந்தா
ளவன டித்துணைச சீடரை யவாவின ளணைந்தாள்
குவிமு கிழ்த்துணைக் கொங்கையாள் குறிப்புவே றுகிக்
கவரு ளத்தினள காமமிக் கூர்தரக் கவல்வாள்.

(இ - ள்) சித்திரரேகை இவனமனையிலிருந்து இல்லற தருமத்தவறிய வளாய், அப்புண்டரீகன் திருவடியைப்பணியுஞ் சீடர்களை விரும்பிப்புணர்ந் தாள். குவிந்த அரும்பையொத்த இருதனங்களையுடைய அவள் மனந்திரிந்து வஞ்சகமனமுற்றுளாய்க் காமமிகுந்துப் பெருகுதலால வருந்துவாள். எ - று.

வாள ரிததடங் கண்களா லுயிருக மருட்டு
மூளை ரிககடுங் காமமெ ந நோய்கெட முயங்கு
நாளொரா நாழிகை யாயினு மொழிவுறு ணயப்பால்
வேளவி கற்பமே யலலது வேண்டுழி வேண்டாள.

(இ - ள்.) வாள்போன்று அரிபடர்ந்த பரந்தவிழிகளால் உயிர்சோரும்படி மருட்டுவாள், மூண்டெரியுங் கடுங்கோபமாகிய கொடுநோய் கெடப்புணருவாள், ஒருநாளில ஒருநாழிகையேனும் ஒழியாதவளாய மதனலீலையையேயிச்சிப்பாள். பிறவற்றை வேண்டிக்கொண்டாலும் இச்சியாள. எ - று. (௨௪)

அள்ளல் வாரகட லசனிலத் தாடவ ரநேக
ரொளளி றைபபொழு தொழிவுறு தியற்றினுந் தமித்தாற்
களள வாணெடுங் கணணித னநுபவக கலவி
யுளள மோரந்துமெய் பொடித்திருங காமமிக கொழுகும்.

(இ - ள்) சேறுநிறைந்த நெடிய கடல் சூழ்ந்த பரந்த உலகத்திலுள்ள ஆட வரநேகர், மிககக்குறைந்த இமைப்பொழுதும் ஓயாது புணர்ந்தாலும், பிரிந்த காலத்தில் வஞ்சகமாகிய வாளபோல் நீணடவிழிகளையுடைய அச்சித்திரரேகை தன் அநுபவமாகிய புணர்ச்சியை மனத்திற்கருதி உடலபுளகித்துக் காமமீறா மிகுதியாக ஒழுககுவாள எ - று. (௨௫)

கோட்டி ரும்புனற கொள்ளையக் கோடிற முறித்து
நீட்டி நீடொறு மாயிரங் கவாததலை நிமிரும
வாட்ட டங்கணு மனையன மாநதரிற படருந்
தோட்ட லங்கலாள சிநதையு மவவழித் தொடரும்.

(இ - ள்.) கரையையுடைய மிககநீர்ப்பெருககு அககரையழியவுடைத்துப் பெருகுந்தோறும் கணககில்லாத கால்களாகப்பாயும். (அதுபோல) வாள் போன்ற பரந்த விழிகளையுடைய சித்திரரேகையும் கணக்கில்லாத சோரபுருஷ ருடன் கலப்பாள். இதழ்களோடுகூடிய மலர்மாலையணிந்த அவள்மனமும் அவ் வண்ணமே பின்றொடர்ந்து செல்லும். எ - று. (௨௬)

மனையி ழந்தனர் மாநிதி யிழந்தனர் மயங்கி
நினைவி ழந்தனர் நெஞ்சிழந் தனர்நிலை யிழந்தார்

## உபதேசகாண்டம்.

ணைசெய் மாநகர் மாந்தரி லவளொடும் புணர்ந்தா
ரினைய் பொன்பெரு நியங்கிய வாக்கையி னிளைத்தார்.

(இ - ள்.) அலங்கரிக்கின்ற அந்தச்சிறந்த நகரத்திலுள்ள ஆண்மக்களில் அவளோடு கலந்தவர்கள் வீடுகளை யிழந்தார்கள், சிறந்த செல்வத்தையிழந்தார்கள், மயக்க மெய்யதிதரங்கள் நற்கருத்தை யிழந்தார்கள், மனவுண்மை யிழந்தார்கள், தங்கள் நிலைமைகளை யிழந்தார்கள், இத்தன்மையர் (மேலும்) எலும்புகள் வெளியே தோன்றிய தேகமுடையவர்களாக இளைத்தார்கள். எ - று. (உஎ)

### கலிவிருத்தம்.

ஆய வின்னண மவ்வழி யெய்துழி
மேய வேத வயிணவ வேந்தனை
நேய நெஞ்சொடு நீண்மறை யோரொடுந்
தூய சிந்தைத் துருமுனி யெய்தினான்.

(இ - ள்) ஆகிய அசசித்திரரேகை இவ்விதமாக அவ்வழியில் நடந்துவருகையில், அவள் கணவனான வேதமுணர்ந்த வைணவகுலவனான புண்டரீகனிடத்தில், அன்புடைய மனதோடும் திரளான அந்தணர்களோடும் பரிசுத்த மனமுடைய துருவாசமுனிவர் வந்தருளினார். எ - று. (உஅ)

சென்று வந்துரு வாசற் கெதிர்செலா
வொன்று சிந்தை யுருக வுருகினோ
னின்று நீவர வெத்தவஞ் செய்தனன்
வென்றி மாதவ வென்று விளம்பினான்.

(இ - ள்.) வந்தருளிய துருவாச முனிவருக்கு எதிர்சென்று, ஒருப்பட்ட மனமுருக உடலுருகினவனாய், வெற்றிதங்கிய பெருந்தவமுனிவரே! தேவரீர் இத்தினத்தில் இங்கெழுந்தருளுவதற்கு யாதுதவம்செய்தேனெனக் கூறினன். (அப்புண்டரீகன்) எ - று. (உகூ)

பொய்யின் மாதவப் புங்கவ னைத்தொழு
தைய பொன்னடி சாத்தினை யாதலி
னெய்து மென்னக மெத்தவஞ் செய்ததோ
செய்த மாதவ வுண்மை சிறந்தனன்.

(இ - ள்.) பொய்மை நீங்கிய பெருந்தவமுடைய துருவாச முனிவரைப் பணிந்து, ஐயரே! தேவரீர் திருவடிகளைச்சாத்தியருளினீரானபடியால், அடியேன் குடில் யாது தவம்புரிந்ததோ? யானியற்றிய பெருந்தவத்தின் உண்மைப் பலனை யெய்தப்பெற்றேன். எ - று. (௩0)

என்னு மன்பினொ டுத்தெடுத் தேத்துபு
வுன்ன ருந்தன் னுறையுள்கொண் டேகினான்
றுன்ன ருந்துரு வாசனொ டுஞ்சுடர்
மன்னு மாமணி மண்டபம் வைகினான்.

(இ - ள்.) என்று சொல்லும் அன்புடன் பலவாறாக எடுத்துத் துதிசெய்து நினைத்தற்கரிய தன் வீட்டிற் கழைத்துக்கொண்டுபோய், அடைதற்கரிய துருவாசமுனிவருடன் ஒளிதங்கிய சிறந்த ரத்தினங்களிழைத்த மண்டபத்தில் இருந்தனன். எ - று.

ஆசனந்தந் தருச்சனை செய்தபின்
போசனஞ்சொற் றமைக்கப் புகுந்தனன்
பாசிழைக்குப் பரிந்துரைத் தானவள்
மாசகற்றிய மைத்தனை மாட்சியின்.

(இ-ள்.) ஆசனமளித்து அர்ச்சனைசெய்த பின்னர், திருவமுது செய்யும்படி பிரார்த்தித்து (அவர்சம்மதிக்க) அதனையமைக்கப்புகுந்து, பசியபொன்னாபரணமணிந்த தன்மனைவிக்கு அன்புடன் சொன்னான். அவளும் குற்றமின்றிச் சிறப்போடு (உணவாதிகளைச்) சமைத்தனள். எ-று. (௩௨)

இயலு மன்பி னடிசிலமைத்தபின்
பயன றுங்குழல் கொண்டனை போவெனக்
கயனெ டுங்கட் கரும்புகொண் டேகினா
டுயிலு நெஞ்சிற் றுயிலவளா வான்றனை.

(இ-ள்) இயன்றஅன்போடு அமுதமைத்தபிறகு மேகம்போலக்கறுத்த மணங்கமழுங் கூந்தலையுடையாளே! (துருவாச முனிவரை) அழைத்துவரப்போவென்று (கணவன்) சொல்ல, சேலமீன்போலும் நீண்டவிழிகளையுடைய கரும்புபோல்வாளாகிய சித்திரரேகை அச்சொல்லைமேற்கொண்டு துயில்புரிபவரை.

கண்டு வெஃகியக் காமக் கலவியுட்
கொண்டு வீழ்ந்து குலத்தோ டழுவினா
ளண்ட ரேத்து மருந்தவ னனவிழி
விண்டு நோக்க வெருவர வோடினை.

(இ-ள்) (சித்திரரேகை துருவாச முனிவரைக்) கண்டு விருப்பமுற்று, அந்த விருப்பத்தாற்றக்க புணர்ச்சியை மனங்கொண்டு மேல்வீழ்ந்து இரண்டு புயங்களையுந் தழுவினாள். தேவர்களுந் துதிக்கும் அருந்தவமுடைய அம்முனிவர் தமது கண்களைத்திறந்து பார்க்கவும், பயந்து ஓட்டமெடுத்தனள். எ-று. ()

ஓடி நாற்சந்திக் கத்துய ராலடி
கூடி னாள்செந் துருவைக் குழாத்திடை
நீடு மாதவ னின்று வெகுண்டுதன்
சீடனைக்கடிந் தன்னவட் டேடென்றான்.

(இ-ள்.) அப்படியோடி, நாற்றெருக்கள் சேருமிடத்தில், உயர்ந்து வளர்ந்த ஆலமரத்தடியிலுள்ள செம்மறியாட்டு மந்தையிற் சேர்ந்தனள். மிக்க பெருந்தவஞ்செய்த துர்வாச முனிவர் கோபித்து நின்று, தன் சீடனைக் கடிந்து அச்சித்திரரேகை (சென்ற வழி)யைத் தேடுகவெனக் கட்டளையிட்டருளினர். எ-று. (௩௩)

விரும்பு சீடன் விரைவிற் றிருவியு
மரும்பு கொங்கையை யவ்வழிக் கண்டிலன்
திரும்பி மாமுனி தன்னொடுஞ் செப்பினா
னிருந்த மாதவன் றன்னுளத் தெண்ணினான்.

(இ-ள்.) விருப்பமுடைய புண்டரீகனெனும் அச்சீடன் விரைந்து தேடிப்பார்த்தும்; அரும்பிய தனங்களையுடைய சித்திரரேகையை அவ்விடத்திற் காணாதவனாகித் திரும்பிவந்து, பெருமை தங்கிய துருவாச முனிவரிடஞ் சொல்லினன். அங்கிருந்த முனிவர் தம்மனத்தில் எண்ணிப்பார்த்தனர். எ-று.

தழுவி நாலு சதுக்கந் தருதெரு
வெழுவு மாவி னிருந்ிழற் றுஞ்சியே
குழுவு பணீகைகு ழாததட கரநனள
வழுவி னின்று வரமபு சிதைநதுளாள்.

(இ - ள்.) தீய வழியிலிருந்து கற்பின் வரம்பை யழித்த சித்திரரேகை, நாலு வீதிகள் கூடுமிடமாகிய தெரு நிறைய ஓங்கி வளர்ந்துள்ள ஆலமரத்தின் அகன்ற நிழலிற் கூடியிருக்கும் ஆட்டுமந்தையுள் ஒளித்துக்கொண்டனள்.

தவறி னில்லறத தாறிழிந தாடனைக
குவளை யுண்கட் பொதுமகட் கொண்டுபோ
யிவாத டஞசினை யாலிடத் தேற்றியுன
றவமு யறசியைக் காட்டுதி தன்மையோய்.

(இ - ள்.) இல்லற தாமங்கெட்டதனால் இழி வெய்திய, குவளை மலர்போலும் மையுண்டகண் பொருந்திய அப்பொது மகளை யழைத்துச்சென்று, விசாலமான கிளைகள் நெருங்கிய அவ்வாலமரத்திலேற்றி, உனதவ மகிமையைக்காட்டுக, பெருந்தன்மையுடைய புண்டரீகனே! எ - று. (௬௯)

சேறி யென்றவத் தீதறு சிந்தையோன
கூறு சொற்றலைக் கொண்டு குணத்தவன
வேறு கொண்ட விருப்பின ளைப்பிடித
தேறு தொன்மரத் துச்சியி னேற்றினன.

(இ - ள்.) செல்வாயாகவென்று, நீங்கிய குற்றங்களற்ற மனத்தையுடைய துருவாச முனிவர் சொல்லிய வார்த்தையைச் சிரமிசையேற்ற நற்குணமுடைய புண்டரீகன், வேறு விருப்புற்ற சித்திரரேகையைக் கண்டுபிடித்து, ஓங்கி வளர்ந்த ஆலமரத்துச்சியில் ஏற்றினன். எ - று. (௬௬)

ஊடு வாடை யுறுந்தொறு மென்சினை
யாடு தோறு மலமந்தல் றுவாள
கோடு பற்றிக் கிடந்து குலுங்குவா
ணீடு நெஞ்சி னிழிய நினைந்துளாள்.

•(இ - ள்.) அவ்வாலமரத்திலிருந்து இறங்கக்கருதிய அச்சித்திரரேகைக்கு நேராக வாடைக்காற்று அடிக்குந்தோறும், அக்காற்றால் மெல்லிய கிளைகள் ஆடுந்தோறும் வருந்தியழுவாள், அம்மரக்கொம்பைப்பற்றியிருந்து குலுங்கிக் கொண்டிருப்பாள். எ - று. (௭0)

மான மாநகா மைந்தரு மாதருங
கான வார்குழற் கன்னியைக் கண்டுவிண
போன மாமரத் தெவவணம் போயினள
மோன ஞானி மொழிகொடி தென்றனா.

(இ - ள்.) அந்தச்சிறந்த பெரு நகரிலுள்ளபுருடர்களும் பெண்டிர்களும் மணங்கமழும் நெடிய கூந்தலையுடைய சித்திரரேகையைக் கண்டு, ஆகாய மளாவிய இப்பெரு மரத்தில் இவள் எவ்வாறேறினள்? ஞானவரம் புணர்ந்த அம் முனிவர் சொல் கொடிது என்றார்கள். எ - று. (௭௧)

அறிந்த வடகுயி ராகிய வந்தணன்
பிறிந்தி ருக்கப் பெறுகிலன் பேரருட்
செறிந்த மாதவச் செல்வனை யேத்தரு
மறிந்து வீழ்ந்த மரமென வீழ்ந்தனன.

(இ - ள்.) அவளுக்கு உயிராக விளங்கும் புண்டரீகன இதனை யறிந்து, அவளைப் பிரிந்திருக்கப் பெறுதவனாகி, பேரருணமிகுந்த பெருந்தவச்செல்வராகிய துருவாச முனிவரைத் துதிசெய்து, முரிந்து வீழ்ந்த பெரு மரம்போல அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். எ - று. (சஉ)

ஐய நின்னரு ளின்மையென் னாயிழை
வையம் யாவும் வழுச்சொல வைகினாள்
வெய்ய வாலை விடுத்திழி தறகருள
செய்ய வேண்டுந் திருவருள் செய்கென்றான்.

(இ - ள்) ஐயரே! தேவரீர் அநுக்கிரகமில்லாததால் எளியேன் மனைவி உலக முழுதும் நிந்திக்கும்படியிருக்கின்றாள். கொடிய அவ்வாலினை விட்டு இறங்கும்படி யருள்புரியவேண்டும். திருவருள் பாலிக்கவெனப் பிரார்த்தனை செய்தான். எ - று. (சங)

இல்ல றத்தை யிகழ்ந்தொழி வாளிவள்
புல்லொ ழுக்கம் பொருந்துறு புன்மையோய்
வல்ல றாத்த வனமுலை மாநிலத்
தெல்ல வாக்கு மினிதளித் தாளரோ.

(இ - ள்.) இல்லற வொழுக்கத்தை யிகழ்ந்து பரபுருடரை விரும்பும் இவளுடைய தீயொழுக்கத்தைச் சம்மதிக்கும் இழிதகையோனே! இவள் சூதினைக் கிழித்த அழகிய தனங்களைப் பெரிய பூமியிலுள்ள யாவர்க்கும் இனிதாக வுதவினள். எ - று. (சச)

இன்ன தன்மை யிவளை யுனக்கெனு
வன்னி முன்னர் வழங்கின ராலவ
டன்ன லம்பிறர்க் காக்கச் சமைந்தன
ளுன்னை யோர்பொழு துள்ளுகி லாளென்றான.

(இ - ள்.) இத்தகைமையாகிய இவளை உனக்கென்று அக்கினி சாட்சியாக (அவளைப் பெற்றோர்) கொடுத்தார்கள். அவளோ தன்னுடைய இன்பத்தைப் பிறர்க்காகச் சமைந்துள்ளாள். உன்னை ஒரு காலத்திலும் நினைத்தாளில்லை யென்று சொல்லினார். எ - று. (சரு)

ஏது குற்ற மிழைத்தன ளேனுமம்
மாது குற்ற மனக்கொள லையநீ
மீது யாந்த வடதரு விட்டிவள்
போத வொன்று புகலுதி யென்றனன்.

(இ - ள்.) ஐயரே! அவள் எவ்வகைக்குற்றஞ் செய்தபோதிலும், தேவரீர் அக்குற்றங்களைத் திருவுள்ளத்திற் கொள்ளவேண்டாம். மேம்பட்டோங்கிய ஆலமரத்தை விட்டு இவள் கீழே இறங்கி வரும்படி ஒரு வார்த்தை உரைத்தருளவேண்டுமென்று வேண்டினன். எ - று. (சசு)

கற்பி னின்ற கனங்குழை யாயினின்
சொற்ப டிக்குயர் தொன்மர நீங்குவா
னெற்ப டுஞ்சிலை பற்றி யிறங்குவாள்
முற்ப டப்போய் மொழிகுதி நீயென்றான்.

(இ - ள்.) கற்பு நிலையிலிருந்த மேகம் போன்ற (கரிய) கூந்தலுடைய வளாயின், உன் சொல்லின்படி உயர்ந்த ஆலமரத்தினின்று வர, சூரிய மண்டல மளாவிய இளையினைப்பற்றி யிறங்குவாள். ஆனதால் நீ அவள் முன் சென்று (இறங்கிவா வென்று) சொல்லென்றார். எ - று. (௪௭)

வந்து நின்றென் மனைவி வருகெனச்
சந்த வார்முலை நாலடித் தாழ்ந்தன
ளிந்த வெல்லை யிறங்கய படாதென்றாள்
குந்தி யோடினன் மாதவற் கூடினான்.

(இ - ள்.) (அவர் கூறியவாறே புண்டரீகன் ஆலமர நிழலில்) வந்து நின்று, என் மனையாளே! இறங்கிவரக்கடவாயெனக் கூப்பிட, அழகிய கச்சணிந்த முலையையுடைய சித்திரரேகை நாலடியிறங்கி, இதனைத்தாண்டி யிறங்க முடியாதென்றாள் [குந்தியோடி] இருந்திடமாயோடி முனிவரையடைந்தான்.

நால டிச்சிலை தாழ்ந்தன ளம்பவென்
னேல வார்குழல பின்ன ரிறங்கிலள்
மால டிக்கொண்ட மம்மரி னேனினிச்
சீல மாதவ செய்குவ தேதென்றான்.

(இ - ள்.) புனிதமான பெருந்தவமுடையவரே! சிவபெருமானை யொத்தவரே! அடியேனுடைய மணம் வீசும் நெடிய கூந்தலையுடைய மனைவி இளையினின்று நாலடித்தூரமே யிறங்கினள். அதன் பின் இறங்கமுடியவில்லை. ஆசை மிக்க மயக்கமமைந்த மனமுடைய அடியேன் இனியென்ன செய்குவேனென்றான். எ - று. (௪௯)

மங்கை கொங்கை மயங்கி முயங்கினா
ரங்கண் மாநிலத் தாடவ ராவரும்
பொங்கு மாலடி போந்திறங் காயெனி
னங்கை கீழ்வரு மென்ன நவிற்றினான்.

(இ - ள்.) காமாதுரத்தினால் மயக்குற்று அம்மங்கையின் குசங்களை யணைந்தவர்களாய், மிகப்பரந்த நிலவுலகிலுள்ள ஆடவரனைவரும், பெருத்த அவ்வாலமரத்தின் கீழ்ச்சென்று இறங்குகவெனச் சொல்வார்களாயின் அப்பெண் கீழே யிறங்குவாளென்றனர். எ - று. (௫௦)

மைய லொன்று மனக்கொ டிருந்தவர்
தைய லைப்புணர்ந் தாரவ ராரையும்
வெய்தி னோடிக் கொணர விளித்தன
ரெய்து மாமரம் பாதியி றங்கினாள்.

(இ - ள்.) அவளைப்பார்த்து மயக்குற்ற மனமுடையவர்களும் அவளைக் கூடினவர்களுமாகிய வெல்லோரையும், 'அதிவேகங்கொண்டோடி அழைத்துக்'

கொணடு வரவும், அவர்கள் யாவரும் அவனையழைத்தார்கள். அதனால் அவன் அப்பெரிய மரத்தில் அசைப்பாக மிறங்கினன். எ - று. (௬௧)

இப்பு றத்தி னிறங்கலி தாயவ
டப்பு றத்தமு விசசினை சாாதலு
மொப்ப றுதத முனியரு கோடினை
குப்பு றுதத முகத்தினன கூறுவான.

(இ - ள்.) அப்பாதிககுககீழே அவன் இறஙகமாட்டாமல் கீழே விழாத வணணம் ஒரு கிளையைத தழுவிக்கொண்டிருககையில், ஒப்பற்ற அமமுனிவ ரருகே வநது புணடரீகன குனிநத முகததுடன கூறுகின்ருன. எ - று. (௬௨)

என்னை யிவ்வணங கண்டனை யேயினிக
கன்னி பாற்கிருக கண்ணருள செய்யென
னின்ன ருடபெறு வாாஙின்று கூவிலுன
பொன்ன ளுரு மிறங்குவள் போவெனறுன்.

(இ - ள்.) அடியேனை இவ்வகையாகக கஷடபபடுததுகின்றீரே. இனி யேனும தேவரீா அப்பெணணினிடங கிருபா நோககம வைததருளல் வேணடு மென வேணட, உன சீடர்கள வநதழைததால் திருமகள்போலும் அழகுடைய உன மனைவி யிறங்குவாள. போ வென்றனா. எ - று. (௬௩)

அன்ன சீடருந் தானு மடைந்துதன்
பன்னி தன்னை யழைககப பகாநதனன்
பின்ன ரன்னவா கூவப் பெருமர
மன்ன டிககவை வந்திருந தாளரோ.

(இ - ள்.) அததகைய சீடாகளுந தானுமாக வநது, தன் மனைவியை யழைக்கும்படி சீடர்களுககுச் சொலல, அவாகளும் அப்படியே யழைகக, அதனபின அபபெரிய மரததின் அடிககிளையில வநதிருநதாள். எ - று. (௬௪)

கூண்ட பின்னற் குடுமி யலைநதிடப்
பூண்ட தாமரை மாலை புரண்டிட
வீண்டு துன்பத திரைததிட வோடினுன்
மீண்டு மாதவ வேநதனை நண்ணினன

(இ - று.) கூட்டமாகிய பின்னலோடு சோநத குடுமியலையவும், பூணடு கொணடிருககும தாமரை மணிமாலை புரளவும, தனககுற்ற துன்பததோடு இரைபபெடுகக ஓடி, மீணடும் பெருநதவ வேநதராகிய அம்முனிவாபால் அடைநதான். எ - று. (௬௫)

கவாத ருளுசினைக் கப்பி னிறங்கிற
ளிவளை முறறு மிறஙகப பணிததியென
றவனை யேததி யிரநதன னநதணான்
புவன மேதது முனிபுகல் வானரோ.

(இ - ள்.) பிளவுற்ற கிளைகளாகிய கொம்பினின்றிழிநத இவளை முழுதும் இறஙகும் வணணம் கட்டளை செய்யவேணடுமென்று அததுருவாச முனிவரைத் துதித்துப்பிரார்த்தனை செய்துகொண்டான். (அவன் துதிகளைக்கேட்டு) உலக முழுவதும் தோததிரஞ்செயயததகக அததுருவாசமுனிவர் உரைககின்றனர்.

பேதை தன்னைப் புணர்ந்தவர் பேரெலா
மோதி யோதி யுணர்த்தி யிறங்குமென்
றோதி வேத மளந்தவன் சொற்றலும்
வேத வேதியன் பின்னரு மீண்டனன்.

(இ - ள்.) அப்பெண் தன்னைச்சேர்ந்தவர்களுடைய பெயர்களை யெல்லாஞ் சொல்லித்தெரிவித்தாளாயின், கீழே இறங்கி வருவாளென்று முதன்மையாகிய வேதங்களை அளவிட்டறிந்த முனிவர் கூறியபோது, புண்டரீகனென்னும் வேதியன் மீண்டும் (மனைவியிருக்குமிடத்திற்குத்) திரும்பினன். எ - று.

ஏடி நின்னிளங் கொங்கை யிணைத்தடங்
கூடி னார்பெயர் முற்றுறக் கூறினீ
தோடு வார்ந்த தொடுசினை விட்டடி
யோடி றங்குவை யென்று மொழிந்தனன்.

(இ - ள்.) அடிபெண்ணே! உன் இளமுலையிரண்டையும் கலந்தவர்களது பெயர்கள் முழுவதையும் நீயே சொல்வாயாகில், நீ பற்றிக்கொண்டிருக்கும் இதழ்கள் நெருங்கிய கிளையின் மூட்டைவிட்டு விலகிக்கீழே இறங்கி வருவா யென்று தெரிவித்தான். எ - று. (௫௮)

இன்ன வாசகங் கேட்டலு மேந்திழை
யன்ன கேள்வர் நேகரை யெண்ணினள்
பின்ன ரந்தப் பெருங்கவை நீத்ததின்
மன்னு கீழ்க்கவை வந்து வதிந்தனள்.

(இ - ள்.) இவ்வார்த்தையைச் சித்திரரேகை கேட்டவுடனே அத்தகைய புருஷர்கள் எண்ணில்லாத பெயரையும் (ஒவ்வொன்றாகச்) சொன்னாள். அதன் பின்னர் அப்பெருங்கிளையினின்றும் விலகி அதன் கீழிருக்குங் கிளையில் வந்திருந்தாள். எ - று. (௫௯)

எவற்றி னாலு மிறங்கிலா ளினிச்
சிவத்தி றக்கெரி நீயவட் சென்றிடில்
கவர்த்த டம்பணை கைவிடு மெய்தவாய்
தவப்பெ ருங்கட லேசர ணென்றனன்.

(இ - ள்.) எவ்வாற்றாலும் அவள் பூமியிலிறங்கவில்லை. இனி, சிவத்திற முணர்ந்த தேவரீர் அங்கெழுந்தருளினால், பிளந்து விசாலித்த கிளையானது கைவிட்டு விலகும். பெருந்தவக்கடல்போலபவரே! தேவரீர் ஆங்கடையவேண்டும். தேவரீருக்கடைக்கலமென்று கூறினன். எ - று. (௬௦)

மூர லித்த முகத்தின னந்தண
னாவ நோக்கி யகநெகிழ்ந் தாரணச்
சீர ளந்தச் சிட்டர் குழாத்தொடும்
பார வெம்பழு வத்தரு கெய்தினன்.

(இ - ள்.) துருவாசமுனிவர் புன் சிரிப்புகொண்ட முகத்துடன், அப்புண்டரீகனுடைய ஆசைப்பெருக்கத்தைப்பார்த்து மனமிளகி, வேதத்தின் சிறப்புக்களையெல்லா முணர்ந்த தமது சீடர் தொகுதியோடு, மிகவும் பரந்துள்ள அந்த ஆலமரத்தருகே எழுந்தருளினர். எ - று. (௬௧)

(இ-ள்.) என்றிவ்வாறு பலபடப் பிதற்றிக்கொண்டு தனியேவருந்தித்துன் பப்படும் மலைபோன்ற தோளையுடைய புயபலனைப் பார்த்து அவ்வூரார் மயங்கி னவர்களாய் நெருங்கினார்கள். கழுதையையும் அறுக்காமற்போனார்களேயென்று வலியமைந்து கொலைசெய்துகொள்ளத்தக்க கோபமுதிர்கிறக்கப் புயபலன் தலை கவிழ்ந்துகொண்டான். எ-று. (அஉ)

காலழுகிக் கையழுகி முடைநாற்றங் கவர்ந்தபின்னர்
மேலெழுநல் வினையிருந்த கடைப்பிடியால் வேந்தற்கு
வேலெறிபுண் புலர்ந்துநெடு வீதிதொறு மிரப்புற்று
ஞலியபொற் கலத்தருந்து மவனோட்டி லருந்துவான்.

(இ-ள்.) காலழுகியும், கையழுகியும், முடைநாற்றஞ் சுற்றிக்கொண்ட பிறகு, அப்புயபலனுக்கு மேலேதோன்றிய புண்ணியபலன் கைகூடியகாரணத்தி னால், வேலைச்செருகிய புண்ணைப்போல வருந்தி, பெரியதெருக்கடோறும் யாசித்தான். அகன்ற பொற்பாத்திரத்தி லுண்ணும்அவன் ஓட்டிற் புசிப்பானான்.

இந்நகரத் தெருத்தலைவா யிரந்திரந்து நுகர்ந்திடுநாட்
டுன்னருங்கா னகத்திழந்த தூங்கிலாப் பனிமூரல்
பொன்னுருவங் கருகிமுன்னைப் பொலிவழிந்து போந்தனளா
லந்நகரத் திடைப்புக்கா ரிருவருமற் றறிவயர்ந்தார்.

(இ-ள்.) அந்நகரத்தின் தெருக்களில் அலைந்து யாசித்துப் புசிக்குநா ளில், அடைதற்கரிய காட்டில் விட்டுப்பிரிந்த பரிசுத்தமாகிய சந்திரிகையை வீசுமகுளிர்ந்த பற்களையுடைய திருமகள்போலவாளது மேனிகருகி, பண்டைய வழகு நீங்கி வந்தனள். அந்த நகரத்திற் பிரவேசித்த (அவர்கள்) இருவரும் (ஒருவரையொருவர்) அறியாராயினார். எ-று. (அ௪)

ஆங்கவளும் பெரும்பசிதொட் டலைப்புறநின் றுற்றும
லோங்குதெருப் பெருமனையி னுடபுகுந்து கரந்திடலுந்
தூங்குகருங் குழலிவளைத் தொடர்ந்துகா வலர்பிடித்தார்
வீங்கிருளிற் பாசத்தால் விசித்திட்டார் விடிவளவும்.

(இ-ள்) அவன் மனைவியும் பெரும்பசி தொடர்ந்து வருத்தப்பட்டுச் சகிக் கமாட்டாளாய், உயர்ந்த தெருவில் பெரிய வொரு வீட்டினுள் மறைந்து புகுந்து விடவும், அந்நகரக்காவலாளர், தொங்குகின்ற கரிய கூந்தலையுடைய இவளைப் பின்றொடர்ந்து பிடித்து அம்மிக்க இருளில் கயிற்றால் கட்டி, விடியுமெல்லை யுஞ் (சிறையில்) விட்டார்கள். எ-று. (அ௫)

விடிந்தபொழு தெழுந்துநறை விரிமலர்ப்பூங் குழலாளைக்
கடிந்தகடுஞ் சினத்துறுக்கிக் கடிகாவற் புறங்கொடுபோய
வடிந்தகுழை கொடிமூக்கு வனமுலையோ டரிந்தனரா
லொடிந்துவிழு மரம்போனின் றலறிநிலத் துறவீழ்ந்தாள்.

(இ-ள்.) பொழுது விடிந்தபிறகு எழுந்து தேனொழுகு மலரணிந்த அழகிய கூந்தலுடையவளைக் கடுங்கோபமுறுஞ் சொற்களாற் பயப்படுத்தி, பெரிய சிறைச்சாலையினின்றும் வெளியேகொண்டு சென்று தொங்கியகாதணி

யணிந்த அவளது நீண்ட மூக்கையும அழகியமுலையையுமறுத்தார்கள். ஒடிந்து விழுந்தமரம போலநின்று அலறிக்கொண்டு பூமியிற்பட வீழ்ந்தாள். எ-று.()

தேக்குயரு நெடுவனத்துக் கொலைவேடன் றீண்டியநா
ளுக்கழிவு தந்தேனென் னுளழிவு தந்திலனு
லாக்கியதன் புகழ்வேந்தே யுனைக்காணு மாசையாற
பேராக்கியமூக் குடனிருக்கப் புலையாவி பொறுத்தேனே.

(இ - ள்.) தேக்கமரங்களுயர்ந்துள்ள பெரிய வனத்தில் கொலைத்தொழில் செய்யும் வேடுவன் என்னைத் தீண்டியபொழுது வீணே பிரலாபித்துவாயபோக கினேன். என்னுயுளுக்கு அழிவு தேடினேனல்லன் குளிர்ந்த புகழை யுண்டாக கிய அரசனே! உம்மைப்பார்க்கவேண்டிய விருப்பத்தினால அறுக்கப்பட்ட மூக்கோடிருந்தாலும் என்னிழிவாகிய பிராணனைத் தாங்கினேன. எ-று.(அஎ)

ஒறுத்தாரை யொறுத்துமறத் துடனொழுகா தவ்வறத்தைக்
கறுத்தாரைக் கறுத்துநின்ற செங்கோனமைக் கடனீதோ
வெறுப்பாய கடுஞ்சினத்தேன வெம்முலையுங கொடிமூக்கு
மறுப்பாருக் கெளிதுற்றே னெவ்வுழைக்கண் டறிவாயே.

(இ - ள.) விரோதித்தவர்களை விரோதித்தும், தருமவழியிலொழுகாது அத்தருமத்தைக் கெடுத்தோரைத் தண்டித்தும் வந்த செங்கோன் முறைமையின முடிவு இது தானோ? வெறுக்கத்தக்கதாகிய கொடுங்கோபமுடைய யான, வலிய முலையையும நெடிய மூக்கையும அறுக்கின்ற காவலாளர்க்கு எளிய ளாயினேன், என்னை எங்ஙனம் கண்டு அறிந்து கொள்ளுவீர்? எ - று. (அஅ)

இல்லரணுந் தனிக்குடையும பகைவேந்தற் கீந்திறக்கும
புல்லரணம புரிந்தவிதிக் கதுகொண்டு போதாதோ
நெல்லரண நீர்நாட்டு நினைவணங்கா நிலவேந்தர
வல்லரண மிடிபடுத்துச செருக்கெழு மால யானையாய்.

(இ - ள்.) நமது அரண்மனையையும், ஒப்பில்லாத வெண்கொற்றக்குடை யையும் பகை மன்னருக்குக்கொடுத்து, வேண்டுகின்ற மஞ்சத்தைப்புல்லாகச் செய்த தலைவிதிக்கு அது வரையிற போதாதாயிற்றோ? நெற்பயிர வேலி யுடைய நீர்வளமமைந்த நாட்டிலே, உம்மை வணங்காத பிறதேச மன்னரின வலிய கோட்டைகளையிடித்து மதச்செருக்குற்ற பட்டத்து யானையுடையவரே.

ஆடருவி நெடுவரையு மருவிகளு மருவிதுறுங்
காடளவு மாகயனிற றனித்திரிந்துங் கண்டிலே
னேடணைந்தா யெனப்பரவி நனுகுற்றே னறவுயிர்க்கு
மேடவிழ்பூந் தெரியலாய் கடைமுறையீங் கிதுபெற்றேன்.

(இ - ள்.) அருவிதவழும் பெரிய மலைகளிலும காட்டாறுகளிலும அவ் யாறுகள் பாயும் நாடுகளெல்லாவற்றிலும, பெரிய கயங்களிலும தனியாகத் திரிந்தும் உம்மைப்பார்த்திலேன். மணங்கமழும் இதழ்களோடு விகசித்த மலா மாலை யணிந்தவரே! இந்த நாட்டில அடைந்திருப்பீரென அங்கிருந்து வந்து இங்கே சேர்ந்தேன். கடைசியாக இப்படி அவயவ பங்கமுற்றேன். எ - று. ()

ஏனையவெல் லாம்பிதற்றி யிருங்கூந்தல் புறஞ்சோர
மானனையா ளிருகரங்க ணிலத்தழுதாய் வரவிருந்து

தேனணைய கொழுங்குதலை வேறுபடத் தெருமந்தா
ளானபெருந் துயாககடறகோர் புணைகாணு தலமந்தாள்.

(இ - ள்.) (என்றிவ்வாறு) எல்லா மற்ற வற்றையுங்கூறி, நெடிய அளக மானது முதுகில் துவள, மான போன்ற விழியையுடைய அம்மங்கை, தன னிருகரங்களும் பூமியைததுழாவ(உட்காாநது, தனககுறற)மிகக துனபககட லுக்கு ஓர் புணையின்றி வருநதியவளாய, கேட்போர்கருத தேன்போலினிய நல்ல மழலைச்சொற்கள மாறுபடப் பிரலாபிததனள். எ - று. (கூக)

இத்துயரம் பெரிதுழவாப பசிததுயர மெரிமூட்ட
மெய்த்துயரத துடனெழுநது வீதிபுகுந் திரககுறுநா
ளதநெருவிற புயபலனு மநதணாதந தெருசசாாநதான்
சுததமறை முழுதுணர்நத சுசீலனகட் புறமடைநதான.

(இ - ள.) இவவகைததுன்பததால மிகவும வருநதி, பசிததுயரானது தீப்போல உளளே கொளுதத, உடற்றுககததுடன அங்கு நின்று வீதிவழி சென்று யாசிததுணணுங காலததில, புயபலனும் அதநெருககளுக்குளளே அநதணாதெருவை யடைநது, புனிதமானவேதஙகளெலலாவற்றையுமுணாநத சுசீலருடைய வீட்டின புறததைச்சோநது. எ - று. (கூஉ)

ஐயநீ சிறுகூழ்மற றளிததனையே லிவணுவி
யுயவனே யெனவிரபப வோஙகருநான மறைத்தலைவன்
செயயநீற் றினையிகழநது செருககுமநதத திரைவேலி
வையமயா வையுமபுரககும வங்கவேந தினைபபோலும.

(இ - ள்.) ஐயரே! தேவரீா சிறிதுணவு உதவுவீராகில் இப்போது உயிர் பிழைப்பேனென யாசிகக, உயாநத வேதஙகளுணாநத தலைவராகிய சுசீலா, பூாவததில,செவ்வையாகிய திருவெணணீறறினை யிகழ்ச்சிசெயது அகஙகரிதத சமுத்திரததை வேலியாகவுடைய பூமி முழுதும அரசுசெயத அநத வஙக நாட்டரசன் போலிருககினறது. எ - று. (கூக)

என்றெண்ணி மனததிறோ்ந தியாவனீ யெனககேட்பக்
குன்றன்ன தடநதோளா னஃதொனறுங கூறிலான
மின்றுன்னு நூன்மாாபன வியபபெழுநது விளமபுவான்
பொன்றுன்னுங கழலவஙகப புயபலனீ போலுமால.

(இ - ள்.) என்றெணணித தமது மனதில் ஆலோசித்து, நீ யாவனெனக் கேட்க, மலைபோலப்பூரிதத தோளையுடைய புயபலன் அதறகுபபதிலொனறுஞ் சொல்லவில்லை. ஒளிமிகுநத உபவீதமணிநத மாாபினராகிய சுசீலா ஆச்சரிய மிககுககூறுகின்றா. பொன்னாறசெயத வீரகணடாமணி தரிதத வஙக நாட்டு மன்னனாகிய புயபலன் நீ போலிருககினறாய். எ - று. (கூச)

அகநதெளிநத மறையவாககன் றருநிதிதா னமபுரிநா
ளுகநதுநின தருகியா முயாதானம பெறுமெலவை
முகநதிருநீ றிலதென்று மொழிநதனமெம மொழிசிறி
யிகந்தனைநீ யல்லையோ வெனவுரைபப விகலவேலோன்.

(இ - ள்.) உள்ளநதெளிநத அநதணருககு அரும்பொருள்களை நீ தானஞ் செய்த அககாளில, யாம் மனவிருப்போடு உனனிடததில உயாநத தானம்

வாங்குஞ் சமயத்தில், உன் முகத்தில் திருவெண்ணீறில்லையென்று கூறினேம். எமது அவ்வார்த்தையைக்கோபித்து வெறுத்தவன் நீயல்லையா வெனக்கூற, வலிதாங்கிய வேற்படை தாங்கிய புயபலன். எ - று. (கூறி)

அருந்துயிலிற் கண்டகனு விழித்தபின ரறிவான்போற்
றிருந்தமனத் துணாந்தனன்ன றுளவெல்லாஞ் சிந்தித்தா
னிருந்துயர மெய்தினமாங் கதனுலென் றெண்ணினன்
பொருந்துமறை யவனிருதாள விழுந்திரந்து போற்றினன்.

(இ - ள்.) பெருநித்திரையிற்றேன்றிய கனவைத்தூக்கம் விழித்த பின்னர் அறிபவன் போன்று, திருத்தமுற்ற தன்மனதிற் கவனங்கொண்டு, அக்காலத்தில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எண்ணிப்பார்த்தும், அதனாலே தான் இவ்வகைக் கடுந்துயரெய்தினே மெனக்கருதி, அச்சுசீலருடைய உபய பாதங்களிற் பணிந்து குறைகூறியாசீர்வதித்துத் துதிசெய்தான். எ - று. (கூகூ)

பொறுத்தருணீ யையவெனப் புன்கணீர் புறஞ்சோரக்
கறுத்ததிரு வுளமிரங்கக் கடவையெனக் கைகூப்பி
வெறுத்ததிரு வெண்ணீறாால விளைந்ததிந்த வினையென்றான்
பெற்றகருநான் மறைவேந்தே நின்னுரையும் பிழைக்குமோ.

(இ - ள்.) துக்கத்தினாற் கண்ணீர் வெளிப்பட்டொழுக, ஐயரோ! தேவரீர் பொறுத்தருள்கவென்றும், அப்போது கோபமெய்திய திருவுள்ளம் இப்போது இரக்கப்பட வேண்டுமென்றும், இருகரங்களையுஞ் சிரமிசைக்குவித்து, ஒருவராலும் அடைதற்கரிய நான்கு வேதங்கட்குந் தலைவரோ! தேவரீர் வார்த்தையும் தவறுமோ? என்றும், அடியேன் அவமதித்த திருவெண்ணீற்றினாலே தான் இத்தகைத்துன்பங்கள் நிகழ்ந்தனவென்றுங் கூறினன். எ - று. (கூஎ)

எனப்பலபட் டனவெல்லா மெடுத்துரைத்து வணங்குவான்
மனக்கருணை சிறிதுபுரிந் தளியவென்பால வழங்குதியா
னினக்கபய மடைந்தனனவெண் ணீறருள வேண்டுமெனச்
சினக்கதிர்நெட் டிலைவேலோன் செங்கரமொன் றேந்தினனால.

(இ - ள்.) என்று பல்வேறுபட்டமொழிகளை மிகுதியாகக்கூறிப்பணிந்தவனுய, தேவரீர் திருவுள்ளக்கருணையிற் சிறிது, எளியேனுகிய அடியேன் பால் அநுக்கிரகிக்க வேண்டும். தேவரீருக்கு அடைக்கலம். இப்போது திருவெண்ணீறு பிரசாதித்தல் வேண்டுமென்று, கோபிக்கின்ற ஒளிதங்கிய நெடிய இலை போலும் வடிவமைந்த வேலைத்தாங்கிய புயபலன் சிறந்த தனதுகையை நீட்டினன். எ - று. (கூஅ)

சுருதிநூன் முதற்றலைமைச் சுசீலனுள மிகவிரங்கி
வருதிநீ யெனவருளித் திருநீறு வழங்குதலு
மரசர்கோ னுடலடங்கப் பூரித்தா னக்கணத்திற்
குருதிபோக் குறவரிந்த கரத்தொடுகால கூடியதே.

(இ - ள்.) வேதநூலுணர்ந்த முதற்றலைமை பொருந்திய சுசீலர், தமது திருவுளத்தில் மிகவும் இரக்கமெய்தி, சமீபித்து வருகவென்று கூறி, திருவெண்ணீறு கொடுத்தவுடனே, அரசர்க்கரசனை புயபலன் உடலமுழுதும் புளகித்தான், அப்பொழுதே இரத்தமொழுக அறுத்த கையோடு காலும் வளர்ந்தன.

அரிந்திட்ட கரங்கால்வந் தந்நிலையிற் கூடுதலும்
புரிந்திட்ட பேருவகை மீககொண்டு பொருமினுன்
பரிந்திட்ட பெருமபிணிபோய்ப் பண்டையினு மெழில்பெற்முன்
விரிந்திட்ட தாமரைபோல் விளங்கினவக கரஙகாலும்.

(இ - ள்.) அறுபட்ட கை கால்கள் வளரப்பெற்று அப்பொழுதே கூடிய வுடன், விரும்பபபட்ட பெருஙகளிப்பு மிகுநது பூரிததான். துனபப்படுததிய பெருவியாதி யொழிநது முன்னிருந்ததைககாட்டிலும் அதிக அழகடைநதான். அவனது கையும் காலும் விகசிதத தாமரை மலர்களபோலப் பிரகாசிததன.

பொங்கியநீற் றொளிபொதிநத புலனுருவம புயபலறகு
வெங்கதிரா யிரமிமைக்கும பசுஙகதிரபோ லிலகமலாச
செங்கமலத் தயனனையான் றிருவாயி லிவணிறபக்
கொங்கையொடு மூககிழநதா ளமமறுகிற் குறுகினுள்.

(இ - ள்.) புயபலனுககு மிகுநத திருவெணணீற்றின காநதி பொருநதிய அற்ப வுருவானது, வெவவிய ஆயிரங கிரணஙகளோடு பிரகாசிககும் பால சூரியனபோல் விளஙக, செநதாமரையிலெழுநதருளியிருககும் பிரம தேவனைப் போன்ற சுசீலா திருமாளிகையின வாயிலில இவனிற்கும்போது, தனமோடு மூககு மறுபட்ட அவன மனைவி அவவீதிவழியே யடைநதாள. எ - று. ()

கண்டனளின் னுயிரனைய கொழுநனைத்தன் கண்களாற
பண்டையினல் லுருபபெறறு னிவனெனனுமபரிவினளாய்
விண்டகுரற் போதிரப்ப விரைநதலறி யடிவீழ்நதா
ளண்டரினு மெழிலபெறறு னிவளாரென றையுறலும்.

(இ - ள்.) தன்னுடைய இனிய வுயிரபோன்ற கணவனைககணகளாற் கண் டாள். இவர முன்னுளிலும் இப்போது நல்லழகுற்றுள்ளாரென்றும விருப் புற்றவளாய்த தன் வாயினின் றெழுஙகுரலைக காட்டிச்சென்று யாசிககுமபடி அதிவிரைவாக அழுது அவன் பாதஙகளிற் பணிநதாள். தேவரிலும் மிகக அழகுற்ற புயபலன் இவள் யாவளென்று சநதேகப்படவும். எ - று. (௧0௨)

இவ்வினையென் னெழில்கவர வெனையுணரா யானுனது
மைவரைததிண் டோள்புணர்நத மாதவததே னிமமறையோர்
தெய்வநீ றுதவிடிலென செய்தபிழை தீரவனெனப்
பெயவளைநீ செய்தபிழை பேசுகெனப பேசுவாள்.

(இ - ள்.)இததீவினையானது அடியாளழகைக் கிரகிகக, என்னை யறியா மற் போனீர். அடியாள் கரிய மலைபோலும் வலிய உமது தோளைப்புணாந திருநத பெருநதவமுடையாள். இவவநதணர் தெயவீகம பொருநதிய திரு வெணணீறு பிரசாதித்தால், பண்டு புரிநத என் பாவ மகலப்பெறுவெனெனக் கூற, பெணணே! நீ யியற்றிய பாவத்தை யியம்புகவெனககேட்க, (அவற் றைச்) சொலவாளாயினுள். எ - று. (௧0௩)

அரிசுமக்கு மாசனத்துத் தனியரசு செலுததுநாட்
டுரிசறுதத பெருங்குணத்திற் றென்மறையோர் தோன்றினுர்
விரிதவளத் திருநீறு வேண்டலைநீ யிவர்போத
முரிதுருமபு மூககிழைத்துத் தும்மினேன் முடிவோரோன்.

(இ - ள்) நீர் ஜெகங்கள் சுமந்த ஆசனத்தில் வீற்றிருந்து ஒப்பற்ற அரசுரிமை நடாத்துங்காலத்தில், குற்றமொழிந்த சிறந்த குணமுடைய பெரியோராகிய இவ்வந்தணர் வந்தனர். வெண்மை மிகுந்த விபூதியைத்தரிக்க நீர் தடுத்தமையால் இவர் திரும்பிப்போக, அடியாள் மேல் வருவது தெரியாமல், முரிந்த ஒரு துரும்பை யெடுத்து மூக்கில் திருகித்தும்மினேன். எ - று. (௧௦௪)

அன்றிழைத்த மதசெருக்கா லரசிழந்தோ மரசிழந்து
குன்றிழைத்த பெருங்கானர் குறுகினோங் கொடும்பாவ
நின்றிழைப்ப வேறுகி நீங்கினே னிற்காண்பா
னின்றிழைத்த நல்வினையொன் றிருந்தவா வெய்தினேன்.

(இ - ள்.) அப்பொழுது செய்த அகங்காரமாகிய செருக்கினால் அரசுரிமையை யிழந்தோம், மலைகள் நெருங்கிய பெருங்காட்டி லடைந்தோம்; யானியற்றிய கொடும்பாவம் நடுவே நின்று பிரிக்க, யான வேறுபட்டுத் தனித்து நீங்கினேன்; உம்மைக்காணும்படி பண்டையநல்வினை யொன்றிருந்தபடியால் வந்தடைந்தேனென்று கூறினள். எ-று. (௧௦௫)

ஆங்கவனின் றுரைத்தமொழி யறிந்தனனை யுறவொழிந்தான்
பூங்குழலா ளவடகண்டு விழிபனிப்பப் பொருமினன்
றேங்கமழு நறுந்தெரியற் சிவ்டமறையோ னுளநெக்கா
னீங்கிவாக ளிலையோரந்தார் யாவரோ யிரங்காதார்.

(இ - ள்.) அவ்விடத்தில் அவளுரைத்த மொழிகளையறிந்து சந்தேக நீங்கினன். அழகிய கூந்தலையுடைய அவளை நோக்கிக் கண்ணீரொழுகத் துக்கப்பட்டான். மணம் வீசுஞ் சிறந்தமாலை யணிந்த ஆதிசைவவேதியராகிய சுசீலரென்பவர் இவற்றால் மனமுருகினார். இவர்கள் இருவருடைய பழையவரலாறுகளை யறிந்தவர்களெவர் தாம் துயரெய்தாதவர்கள். எ-று. (௧௦௬)

வங்கவேந் தணிபுரிநூன் மறையோனை யடிவணங்கி
யெங்களு யகமுழுது மிரங்குதியென் றிரந்தேற்பப்
பொங்கியவெள் ணீறவட்கும புரிந்தனனப் பழமறையோன்
மங்கைதிரு வுருப்பெற்று மறையோனை வணங்கினாள்.

(இ - ள்.) வங்கநாட்டிறைவனான புஷ்பலன் அழகிய பூணூல் தரித்த சுசீலருடைய பாதங்களிற் பணிந்து, எங்கள் தலைவரே! முற்றுங் கிருபை புரியவேண்டுமென்று குறைகூறிப் பிரார்த்திக்க, அச்சுசீலர் மிகப்பெருமையமைந்த திருவெண்ணீற்றை அவளுக்கும் பிரசாதித்தனர். அவள் இலக்குமிபோலும் அழகுவாய்க்கப்பெற்றுச் சுசீலரை வணங்கினள். எ-று. (௧௦௭)

அந்நிலையி னீங்கிவர்கண் முன்னையுரு வடைந்தனரான்
மின்னிலைய முப்புரிநூன் மறையோனை வீழ்ந்திறைஞ்சி
நின்னிலையுற றுணராது நீறிகழ்ந்தோ மிதுபட்டே
மின்னருளி னீறுதரித் தீங்கிதுபெற் றனமென்றார்.

(இ-ள்.) அச்சமயத்தில், அவ்விருவரும் பண்டையவடிவெய்தினார்கள். ஒளிதங்கிய உபவீதந்தரித்த அந்தணராகிய சுசீலர் பாதங்களிற் சாஷ்டாங்கமாக வணங்கி, தேவரீர் தன்மையை யோசித்துணராதவர்களாய்த் திருவெண்ணீற்றை யவமதித்தோம். அதனால் இத்தகைத் துன்பங்களனுபவித்தோம். தேவ

ரீர் திருவருளால் திருவெண்ணீறு கொடுக்கத்தரித்து இப்பண்டையவடிவம் பெற்றோம் என்றார்கள். எ-று. (௧௦அ)

அந்தமா நகர்சிறந்தா ரதுநோக்கி யகமகிழ்ந்தார்
சந்தவார் தடநெடுந்தோட் டனிசெங்கோல் விதர்ப்பர்கோ
னுந்துறுபே ருவகையுட னதுகேட்டங் குடனடைந்தான்
சிந்தைகூர்ந் தினிதுவந்து சுசீலரடி சென்னிவைத்தான்.

(இ - ள்.) அந்தச் சிறந்த விதர்ப்ப நகரத்தில் தகுதியுடையோரெல்லாரும் அதைப்பார்த்து மனங்களித்தார்கள். களபப்பூச்சணிந்து பரந்து நீண்ட புயங்களையும், ஒப்பற்ற செங்கோலையுமுடைய விதர்ப்பநாட்டரசன் இச்செய்தி கேட்டு, முன்னே யனுப்பினற பெருமகிழ்ச்சியுடன் உடனே அவ்விடத்திற்குவந்து மனங்களித்து இனிமையோடு விரும்பிச் சுசீலருடைய பாதங்களைச் சிரமிசைச்சூடிக் கொண்டான். எ-று. (௧௦௯)

தேவரா யுறைந்தோரும பல்லுயிர்க்குச சிறந்தளிக்கு
மூவராய் நின்றாரு நீயாதி மூதணாந்தோய்
பாவியேன் றிறம்பியதொன் றுளதெனினப பழியொழித்துக்
காவலபூண் டருளுதியென றிரந்தனனக கழலவேந்தன்.

(இ - ள்.) அப்படிப்பணிந்த வீரகண்டாமணி தரித்த விதர்ப்ப நாட்டரசன், பேரறிவாளரே! தேவர்களாயுள்ளவர்களும் பல சீவராசிகளுக்குச்சிறப போடு வரங்களுதவுந் திரிமூர்த்திகளாயுள்ளவர்களும் தேவரீரே யாவீர். பாவியாகிய அடியேன் யாதாயினும் தவறிய துண்டானால் அப்பாவத்தையும நீக்கி அடியேனையுங்காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன. எ - று. (௧௧௦)

கனைகழற்கா லினனின்ற தனிசசெங்கோற் காரோறு
துனைபரித்தேர்த் தானையனெம் மாதுலனிற றோன்றினு
னினையனையொற றரையேவி யெவவுலகுந் தேடினே
னனையவர்தங கட்புலத்தி னெய்தாமை யடைந்தனரால்.

(இ - ள்.) ஒலிக்கின்ற வீரக்கழலணிந்து நிற்பவனும், விரைந்து செல்லுங் குதிரை பூட்டிய தேரையும சேனையையுமுடையவனும், ஒப்பில்லாத செங்கோல் தரித்தவனும், கரிய மேகம்போனற கொடையாளியுமாகிய இவன், அடியேனுக்கு மருமகனாக வந்தவன. இவனுக்காகத் தூதுவரையனுப்பி எந்நாட்டிலுந் தேடிப்பார்த்தேன. அவர்கள் பார்வைக்குத் தோன்றாமையால் திரும்பி வந்து விட்டார்கள். எ - று. (௧௧௧)

அந்தணரின் றிருவருளா லிந்நகர மடைந்தனனுன்
முந்தையுடைக் கவினுடனின் னருள்பெற்றா னெனமொழிந்தச
சந்தநெடும புயபெலனை யுறவணைத்துத் தழீஇக்கொண்டு
புந்திமகிழ்ந் தனையோனைத் தேவியொடுங் கொடுபோனான்.

(இ - ள்.) அந்தணரே! இந்த நகரத்திற்குத் தேவரீர் திருவருளால் வந்து சேர்ந்தான். அல்லாமலும், பண்டிருந்த தேக வழகுடனே தேவரீர் திருவருளையும் பெற்றுக்கொண்டானென்று சொல்லி, களபப்பூச்சணிந்த நெடிய புயங்களையுடைய புயபலனை மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு, மனக்

களிப்புற்றவனாய், அவனை அவன் மனைவியோடு அழைத்துக்கொண்டு சென்றான. எ - று. (ககஉ)

மழையாடு மதிற்கோயின் மண்டபத்தி னரியணைமேற்
குழையாடு முகத்தியொடு மினிதிருத்திக் குலவேந்தன்
றழையாட கததுடுக்கை முதலவெல்லாந் தந்தளிபப
விழையாடு தடமபுயததான சிலவைக லவணிருநதான்.

(இ - ள) மேகந்தவழும் மதில்களையுடைய அரண்மனையிலுள்ள மண்டபத்திலிருக்குஞ் சிங்காதனத்தின்மேல், காதணியசையும் முகமுடைய அவன மனைவியோடும் இனிமையாக விருத்தி, அவவிதாப்ப நாட்டரசன விசேடமான பீதாம்பரங்கள் முதலிய எவையுங்கொடுத்தாதரிக்க, ஆபரணங்கள விளங்கும பருந்த தோளையுடைய புயபலன சில காலம அங்கேயே இருந்தனன். எ - று.

இபபரிசிங் கிவணிகழ்நத திவணிருநத புனனாட்டை
யொபபருமன் னவாகொணடா ரவரையொழித தோரரக்கன்
செபபரிய கொடுங்கோன்மை செலுததிஞ னதுகேளா
வெபபெழுநத வெகுளியினை விதாபபநாட் டிகலவேநதன.

(இ - ள.) இவவாறாக இங்கே நடந்தது. இப்புயபலன அரசு செயது கொணடிருந்த நீாவள மமைநத வங்க நாட்டை முதலிலே ஒபபு சொலலுதற கரிய அரசாகள கைப்பற்றினாகள. வேறோா அரககன அவவரசரை யகற்றி, ஒருவராலுஞ் சொல்லமுடியாத கொடுங்கோலரசு செலுததினன். அதனைக கேள்விப்பட்ட கடுங்கோப மெயதியவனாகிய விதர்ப்ப நாட்டையாளும் வலி தங்கிய மன்னவன. எ - று. (ககச)

புயபெலனுக கடுகளிறுங் கொய்யுளைய புரவிகளும்
வயவரொடு நெடுந்தானை மன்னவரு மளவொழிநத
கயவளகக ரோரேழு மொன்றுபடக கலந்தவெனத
துயல்வருகாாப படையணிகத தொகைநிரபபிச சொல்லுவான்.

(இ - ள்.) புயபலனுககு, கொல்லததகக வலியயானைகளும், கததரிததபுற மயிருடைய குதிரைகளும், போர்ச் சேவகரோடு பெருஞ் சேனையுடைய அரசர்களும், அசைநது செலலததகக காலாட்களுமாகிய இவற்றை, அளவில்லாத ஆழமுள்ள சத்தசமுததிரஙகளும் ஒனறாயககூடின வெனறு சொல்லும்படி அனிகமென்னுங கணககாகததொகுததுக கொடுத்தான். எ-று.

அனிகம் எனபது மூனறு சஙகததின தொகை. சஙகம்—நூறுகோடி யெனவழஙகும. (ககரு)

எம்முடைய பெருஞ்சேனை யுடனேகி யிகலரக்கன்
வெம்முனையி னெதிரநடநது போர்மாய விளித்துனை
செம்மைதரு தனிசசெங்கோல செலுத்துகவென றேயினன்
பொமமெனவின் றெழுஞ்சேனை குறிததவனும பூரிததான்.

(இ - ள்.) என்னுடைய இநதப் பெருஞ்சேனையோடு சென்று, பகைத்த அரககன் செயயுங கொடிய யுததததிலெதிர்த்து, அவன்யுத்த மழியும்படிமடித்து, பண்டுபோல உன்செஙகோலைச் செலுததக கடவையெனறனுப்பினன்,

பொம்மென்னும் சத்தத்தோடுகூடிப்புறப்பட்ட சேனையைப்பார்த்துப் புயபல னும் மனமகிழ்ந்தான். எ - று. (௧௧௬)

கலிநிலைத்துறை.

புரைசெய் மாகளிறு கோடியிரு பொங்க ருவிதாழ்
வரைசெய் தன்னவை நிரைநதன வயப்பு ரவியுந்
திரைசெய் வாரிதி யெனசசிலவு கண்டு செறியக்
கரையெ டுத்தபுற வாழிபொரு சேனை கஞல.

(இ - ள்.) [புரைசெய] கழுததணி கயிற்றையுடைய பெரியயானைகள் கோடி பெரிய அருவிகளொழுகுகின்ற மலைகள்போல வரிசையாக நடநதன. விரைநது செலலுஙகுதிரைகளும அலையோடு கூடியகடலெனச சொல்ல உலா விககொண்டு நெருஙக, கரையறற பெருமபுறககடலபோனற காலாட்சேனை விளஙக. எ-று. (௧௧எ)

வாசி யெண்டிசை குலுக்கிடு சிரிபபு வயவெங
காயசி னககளிற திரநதிடு மதிரசசி கதுவும
பூச லஞ்சிலையி னொலி புடைசகு முரசோ
டாசை கொண்டுகக னந்தொட நிமிாநத வமலை.

(இ - ள்.) எட்டுத்திக்குக்களையும் குலுககுகின்ற குதிரைகளின கனைப்பும், வெற்றிதரும் கடுஙகோபமுடைய யானையின் அதிரகினற காச்சனையும, யுததஞ் செய்தற்கு வரிநதிருககும் அழகிய விலலின் குணதவொனியும, மோதுகினற பேரிகைத்தொனியுடனே கூடிய இவவோசைகள திசைகளில நிரமபி ஆகாயம் வரையில் உயாநதன. எ - று. (௧௧அ)

மீயொ ளிக்கதிர் பதைததிட விதிர்த்த வடிவாட்
சேயொ ளிப்பொறி மிடைநதன தெறிதத திசைபோய்
மாயி ருட்படல நககின வயதத வருரப
பாய வெண்டிசை யடைததன வெடிதத தவனி.

(இ - ள்.) அதியுயரததில பிரகாசிககின்ற சூரியகிரணஙகள பதைக்கும் படி வீசிய வடித்தவாட்படையின் செவ்விய ஒளிப்பொறிகள் நெருஙகினவாயச் சிதறுண்டன. திசைகளிலெல்லாம் பரவிப்பெருதத இருட்படலததை யகறறி விட்டன. வீரர்களின் காச்சனை அஷ்டதிசைகளையுஞ் செவிடுபடுததின. பூமி வெடிபட்டன. எ - று. (௧௧௯)

இன்ன சேனைகொ டெழுநதன னெழுநது கணிநூல
சொன்ன போதொடு சுசிலனை யெழுநது தொழுதா
னனன வனறருவி பூதிநுதல கொணட னனணிக
கனனி மாநக ரொழிநதிடை கடநது புகுவான.

(இ - இ.) இவவகைச்சேனையோடு வெளிப்பட்ட புயபலன், சோதிட நூலிற்சொல்லிய முகூர்த்தத்திற் சுசீலரைவணங்கி, அவராலளிககப்பெற்ற திருவெண்ணீற்றினை நெற்றியில் தரித்துககொண்டு, காவலோடுகூடிய அழக மைநத சிறநத விதர்ப்பநாட்டை விட்டு இடையிலுள்ளவழிகளைத் தாணடிச செல்கின்றான். எ - று. (௧௨0)

வெய்ய சேனைகொ டுடன்புகு விசித்ர தரனை
யைய நிற்றியென வன்பினொடு புல்லி யகலா
வொய்யெ னக்கடி தெழுமபடையொ டேகி யொலிநீர்
மொய்கொள வேலிபடு தன்னகர முன்ன நிருதன்.

(இ-ள்.) வலிய சேனையை யழைத்துக்கொண்டு உடன்சேர்ந்துவந்த விசித்திரதரனென்பானை, ஐயா! நீ நிற்க வென்று அன்போடு தழுவிப்பிரிந்து அதிகவிரைவோடு வேகமாக ஒலிக்கின்ற நீர் நிறைந்த வேலியையுடைய தனது வங்கநாட்டையடைய, இராக்கதன். எ - று. (கஉக)

வன்ப டைத்தலைவ ராக்கடி தூ வமமி னெனலு
மின்ப டைசகுலமொ டமைமினா வெகுண்ட திறலோ
ரன்ப டைத்தறிவி லாமுரண டைத்த கொடியோர
துன்ப டைத்துயிரக ளுக்குறுது னுகக மிடுவார

(இ - ள.) வலிதங்கிய சேனைத்தலைவர்களை விரைவில வரக்கடவீரெனச் சொல்லவும், கோபங்கொள்ளும் வலிதங்கியவர்களும், அன்பின வழியடைந்த மதியீனர்களும் மாறுபாடு நிறைந்த தீயோர்களும துன்பத்தைப்பெருக்கி ஆன மாக்கட்குப பொருந்திய நடுக்கமுண்டு செய்பவர்களுமாகிய வீரர்கள், பிரகாசிக்கின்ற ஆயுதங்களோடு அங்கடைந்தார்கள். எ - று. (கஉஉ)

வெள்ள வெமபடை மிடைநதொரு வழிபபு குதரத்
தளளில் வாளரவ நநதனமுடி தடட ழிவதாற
கள்ள வெஞசின வரககனவிழி ககக்கும வடவை
யொளளொ ரிபபொறி கலிததது சலிதத துலகம.

(இ - ள.) பெரிய வெள்ளக்கணக்காகிய சேனைகள் நெருங்கி ஓரிடத்திற் சேர்ந்ததனால, யாவராலும விலக்கற்கரிய ஒளிதங்கிய சாபபமாகிய ஆதிசேடன்பணமுடி தடுமாற்ற மடைகின்றது. கள்ளத்தனமைபொருந்திய கடுங்கோபமுடைய அவ்வரக்கன விழிகள ககக்குகின்ற வடவாக்கினியானது பிரகாசந்தங்கியநெருப்புப்பொறி யொலித்தது. உலகமுழுவதும சலித்தது. எ-று.

கோல முத்தலை யயிறபடை யெடுத்த னாகொடுங
கால சககர மெடுத்தனா கதைபப டையொடு
நீல மைககட னெருபபொடு மருந்து நிமிரு
மால மொததன ரரககனுரு மொதத திருவான்.

(இ - ள) அழகிய முத்தலைச் சூலத்தையெடுத்தார்கள். கொடுமைசெய்யத்தக்க காலசக்கிரத்தை யெடுத்தார்கள். கதாயுதத்தோடு நீலம்போலுங் கருநிறமமைந்த சமுத்திரத்திலுள்ள வடவாக்கினியோடு காச்சித்தோங்கிய ஆலகாலத்தை யொத்தார்கள். அதுகண்டு அரக்கனனவன இடியென்று சொல்லக் காசசித்தான். எ - று. (கஉ௩)

எழுவு சேனையுடை கொண்டன னெழுந்த னனெழுந
தொழுகு சேனைறி படாநதன னுடற்ற நினைவான
மன்றமு ழுககெழ விதர்பபாபடை மண்டி யெழலு
முழைவ யபபுலியெ னசசினவ ரககன் முனிவான்.

(இ - ள்.) எழுகின்ற சேனைகள் புடைசூழ வெளிக்கொண்டுவந்து, ஒழுங்காக அதிதூரஞ் சென்று போர்செய்யக்கருதுகையில், விதாப்பநாட்டரசன சேனைகள் மேகம்போலொலித்து நெருங்கிவரவும், கோபமுடைய அவ்வரக்கன், குகையிலிருக்கும் வெற்றியமைந்த புலிபோலக்கோபிக்கின்றான். எ - று.

வில்லும் வேல்களு மிடைந்தன மிடைந்து விரவக்
கல்லொ லிப்பட வெழுங்குருதி காளி மிரவோர்
வல்லெ யிற்றாங்ரு தன்ற றுவி வங்க விறைமேற்
செல்லு றத்திருவெ ணீறரச னெற்றி திகழ.

(இ - ள்.) வில்லும் (வில்லும்) வேலும் (வேலும்) நெருங்கின. அப்படி நெருங்கிக் கலத்தலால் கல்லெனும் ஒலியுண்டாகப் பெருகக்கெடுக்கும் உதிரம் வாய்க்காலபோன்றோட, ஒப்பற்ற கடியபற்களையுடைய அரக்கன் அடங்காக் கோபமுற்று, வங்கநாட்டரசன மேல எதிர்த்துச்செல்ல, திருவெண்ணீறு அப்புயபலனுடைய நெற்றியிற் பிரகாசிக்க. எ - று. (கஉசு)

கண்ட னன்றிருவெ ணீறருள கனிந்து ருகினான்
மண்டு சேனையை விலக்கினன மதித்த னனமனக்
கொண்ட காதலினெ டுந்திருகை யுச்சி குவியாத்
தொண்ட னென்றுதனி சென்றனன்வி ழுந்து தொழுதான.

(இ - ள்.) (புயபலன நெற்றியில) திருவெணணீற்றினைக் கண்டான. கனிவுற்று மனமுருகினான். நெருங்கிவந்த சேனைகளைத் தடுத்துவிலக்கினான், தனமனத்திலுண்டான பேராசையால் இருகரங்களையும் உச்சியிற் கூப்பி, தானே தனியாகச்சமீபித்து, யான உமதடிமை என்றவன பாதங்களிற சாஷ்டாங்கமாக வணங்கினான். எ - று. (கஉஎ)

வங்க மன்னவநி னைப்படவ ளைந்து மறலி
பொங்கு செங்குருதி நுங்குதல்பு ரிந்த புலையே
னிங்கு நின்னையெதிர் கொண்டுறலு மென்பு ருகினே
னெங்க ளையகபு குந்தபரி சென்கொ லுணரேன.

(இ - ள) வங்கநாட்டரசனே! உம்மைக்கொல்லச் சூழ்ந்து, இயமனவிசேடித்த செவந்த உதிரங்குடிக்க விரும்பிய புலைத்தன்மையுடைய அடியேன இங்கு உமமை நேரேகண்டமாத்திரத்தில எனபுகள நெகிழ்விட்டுருகினேன; எங்கள இறைவரே! எனக்குண்டாய விதயயாதோ? அறிகிலேன. எ - று. ()

வனறொ ழிற்புலைய ரக்கர்குல மன்னி யுவெனக்
கின்று நிற்றொழுது தெய்வவுரு வெய்தி யதுவென்
புன்றொ ழிற்றறுக ணெவவுழைபு குந்த தணரோ
னெனற டிக்கடிவ ணங்கினனெ ழுந்து பணிவான.

(இ - ள.) கொடுந்தொழிலும் புலைத்தனமையுமுடைய அரக்கர் குலத்தி லுதித்த அடியேனுக்கு, இன்று தேவரீரை வணங்கியமாத்திரமே தெய்வத்தேகமுண்டாய தென்னகாரணம்? அற்பத்தனமைவாய்ந்த தொழிலாகிய என கொடுமைகளெல்லாம எங்கேசோந்தனவோ அறிகிலேன என்று, அடிக்கடி தண்டாகாரமாக வணங்கியெழுந்து கைகுவித்தான. எ - று. (கஉகூ)

அன்ன தன்மையனே யன்புருகி வங்கர் பெருமா
னின்ன தன்மையிது வென்னையென் னின்ற திசயித்
தன்னை யுள்ளபரி சோர்சிறிது முற்று ணர்கிலேன்
முன்னை யூழ்முறைமொ ழிந்திடுதி யென்று மொழிய.

(இ - ள்.) அத்தகையினனாகிய அரக்கனிடத்தில், வங்கநாட்டரசனான புயபலன் அன்பால் மனமுருகி, இஃதிததன்மையால் உண்டாயிற்றென்றுணராது யோசித்து வியந்து நின்று, உன்னுடைய உண்மையான தன்மையிது வென்று சிறிதும் யோசித்தறிந்திலேன். உன் பூர்வசன்மத்தின் விதியைச் சொல்லவேண்டுமெனக் கேட்ப. எ - று. (கருo)

கால முற்றியது காய்சினவ ரக்கர் தறுகட்
சீல மறறதுன சேவடிதெ ரிநத பொழுதே
மூல முறறனவ னைததுமடி தொட்டு மொழிவே
னேலு நினனகமொ ழுநதருடி யெனறு தொழுதான்.

(இ - ள்.) தேவரீர் திருவடிகளைத்தரிசித்த மாத்திரத்திலேயே அடியேனுக்கு நற்காலம் பிறந்தது. கடுங்கோபமுள்ள அரக்கர் குலத்திற்கடுத்த குரூரத்தன்மைகளவிலகின. எனக்குப்பூர்வத்தில் விளைந்த எல்லாக்கொடுமைகளையும முதலுமீறுமாக மொழிகின்றேன். தேவரீர்க் குரித்தான வங்கநாட்டிற்கு எழுந்தருளகவென வணங்கினன். எ - று (கருக)

இருவ ழிப்படும னீகமுமெ ழுந்த திரைநீ
ரொருவ ழிகொடுநி மிர்ந்ததென வுறறு மிடையப்
பொருகொ டித்திரண்மு கிற்றொடநி வந்து பொதுளுந்
திருந கர்த்தனது கோயிலுழை சென்று திகழுவான்.

(இ - ள்.) இருதிறப்பட்டசேனைகளும், அலைவீசுகின்ற கடனீர் ஒருவழிக் கொண்டு பரந்ததெனசசொல்லும்படி சோந்து நெருங்க, மோதுகின்றகொடிக் கூட்டங்கள் மேகமண்டலத்தையளாவ, ஓங்கிப்பிரகாசிக்கும் அழகிய தன் நகரிலுள்ள அரண்மனைக்குப் போயவசித்தான். எ - று. (கருஉ)

கலிவிருத்தம்.

அன்ன வற்கன் றரகக ருருவொரீஇப்
பொன்னுருககொண் டிலங்கும பொலிவினன்
மன்னு சோதிடஞ் சொற்ற வரன்முறை
முன்னை நாளின் முடிபுனைந தானரோ.

(இ - ள்.) அப்புயபலனுக்கு, அரககர் வடிவகன்று பொன்போலுந்திருவுருவமைந்து விளங்கும் பொலிவையுடைய அவன, நிலைபெற்ற சோதிடநூலிற் சொல்லிய முறையாகவே, அரசாகள் ஆதிகாலத்தில் முடி சூட்டுவதுபோல் முடி சூட்டினன். எ - று. (கருரு)

தூய மாமுடி சூட்டிய பின்னரி
ளுய தன்னிலை யன்னர்க் கறைகுவான்
மேய மேறறிசைக் காப்புடை வேநதன்யான்
மாயி ருமபுவி காக்கும வருணனே.

(இ - ள்.) புனிதமாகிச் சிறந்த மகுடாபிஷேகஞ் செய்தபின்னர், 'தன் பூர்வவரலாற்றினைப் புயபலனுக்குச் சொல்லுவான்: யான் மேற்றிசையை அரசுசெய்யும மன்னனும் மிகப்பெரிய இப்பூலோகத்தைக்காக்கும் வருணனு ரும். (என்றறிக) எ - று. (கரு௪)

என்ன தாகிய நாட்டை பெறுழ்வலி
மின்னெ யிற்று நிருதா விளித்தனர்
துன்ன மர்க்குத் தொடங்குவ னேவலர்
கன்ன லொன்றிற் கரபபா கருங்கடல.

(இ - ள்.) என்னுடையதாகிய நாட்டை, மிக்கவலிமையையும் ஒளிதங் கிய பற்களையுடைய அரக்கர் அழித்தாாகள். அவாகளோடு நெருஙகியுத்தத் திற்குத தொடஙகுவேனுனல், அவ்வரக்காகள் ஒருநொடிப்பொழுதில் கரிய கடலுள்ளே ஒளிததுககொள்வாாகள். எ - று. (கருகு)

நாளு நாளுமென் னுடு நலிந்திட
வாளெ யிற்று நிருதாசெய் மமமாாற்
கோளி மைழத்த குறிபபிற் குலிசபபுத
தேளி ருக்குந திருநக் ரெய்தினேன்.

(இ - ள்.) நாடோறும் என்னுடு அழிவுறும்படி, வாள்போற்கூரிய பற் களையுடைய அரக்கர்செய்யுந துன்பததினுல், கொள்கையமைநத குறிப்போடு, வச்சிராயுதநதாஙகிய இநதிரனவசிககுந தேவலோகததிற்குச் சென்றேன். ()

நான நாண்மலர்க் கற்பக நாறிய
மான நீழன் மடங்க லிருமபிட
ரான செமபொ னவிாமணி யாசனத்
தூன மின்றி விளங்கிய வுமபாின்.

(இ - ள்.) கஸ்தூரிபோலும் அன்றலர்நத கற்பகமலர்கள் வாசனைவீசும் பெருமைதங்கிய நிழலிலே, சிஙகததின் பெரியமுதுகிற் பொருநதியுள்ள பசும் பொன்னுற்செயது பிரகாசிககும இரததினபீடத்தில், கெடுதலின்றிவிளஙகும் உச்சியில எ - று. (கருஎ)

கண்ணொ ராயிரந் தாமரை காட்டிட
வண்ண மேகலே மங்கையர் சூழ்தரத்
தண்ண றுமலாத் தண்பணைக கறபகத்
தெண்ண றுநறுண் டிவலே தெரிபபவே.

(இ - ள்.) ஆயிரஙகண்களும் (ஆயிரம்) தாமரைபோலப் பிரகாசிக்கவும், பலநிறததோடுங் கலநத மேகலாபரணமணிநத மஙகையா புடைசூழவும், குளி ர்ச்சியகலாத பூக்களையுடைய கிளைகளமைநத தட்பமாகிய கற்பகமலர்களின் தெளிநத தேனின் சிறுதுளிகள் தெறிககவும். எ - று. (கருஅ)

பன்னி றக்கதிர்க் காசு பரப்பிய
மின்னி றககதிர்க் கற்றை விரவலாற்
றென்னி றசசுடர் மாமுடி யன்னவன்
வினனி றசசுடர்க் கற்றை விழுங்கவே.

(இ - ள்.) பல நிறந்தங்கிய கிரணங்கள் பொருந்திய பொற்காசு வீசுகின்ற மின்னல் நிறம்போன்ற ஒளிக்கூட்டங்கள் கலத்தலால், அவ்விந்திர னுடைய பழமையான நிறத்துடன் கலந்த ஒளியமைந்த சிறந்த கிரீடத்தின் இந்திர வில்லின் நிறம்போன்ற ஒளிக்கூட்டங்கள் மழுங்கவும். எ - று.

பூசற் றும்பி புலம்பிய மென்குழ
லாசைச சிந்தைய ரம்பையர் சாமரை
வீசக் கற்றை விரிந்தெழு தென்றலின்
வாசக் கற்பக மாலை துயல்வர.

(இ - ள்) போர்செய்யும் வண்டுகளொலிக்கின்ற மெல்லிய கூந்தலை யுடைய, யாவர் மனதிலும் ஆசையை யுண்டுசெய்யும் அரம்பாஸ்திரீகள் சாமரையிரட்டவும் அச்சாமரைத்தொகுதியால் மிகுதியாயுண்டாகும் தென்றற் காற்றினால் மணங்கமழுங் கற்பகமலர்மாலை யசையவும். எ - று. (க௪௦)

மழலை வானவர் மங்கையர் நலலியா
ழெழுந ரம்பி னணிவிர லெற்றுழி
யொழுகு பாட லிருசெவி யூடுபுக
கிழுகு தோறு முவகை யெடுப்பவே.

(இ - ள்.) மழலைச்சொற்களைப் பேசுந் தேவமாதர்கள் நல்ல வீணையி னிடத்திலுள்ள நரம்புகளெழையும் விரல்களினாற்றடவுதலாலுண்டாகும் பண பாடல்கள், தன்னிரு செவிகளிற் புகுந்தூறுந்தோறும் பெருங்களிகொள்ளவும்.

முல்லை மூரன் முருக்கிதழ் மங்கையர்
கல்லெ னச்சிறு தண்டை கலிப்புறப்
பல்ல வப்பதம் போதொறும பாடிய
மெல்லி சைக்கிளை பொம்மென விம்மவே.

(இ - ள.) முல்லை யரும்புபோன்ற பற்களையும், முருக்கம் பூவைப்போன்ற இதழையுமுடைய அத்தேவமாதர்கள், சிறு தண்டைகள் கலலென வொலி செய்யத் தளிர்போன்ற தமது பாதங்களைப் பெயர்க்குந்தோறும் பாடிய மிருதுவான இசைகளின் கிளைகள் பொம்மென்று மேம்படவும். எ-று. (க௪௨)

வீற்றி ருந்தனன் கற்பக மென்னற
வூற்றி ருக்குந் தெரியலி னும்பர்கோ
னேற்றெ திர்ந்தற வெய்திய வென்னையு
மாற்ற ருஞ்சொல் வரப்பணித் தானரோ.

. (இ - ள்) மிருதுவான தேன் ஊற்றெடுக்குங் கற்பக மலர்களாலாகிய மாலை தரித்த இந்திரன் வீற்றிருந்தனன். அவனுக்கெதிரே போய்ச்சேர்ந்த அடியேனையும் மரியாதை மாறுபடாத தன அரிய சொற்களால் வருகவெனக் கட்டளை தந்தனன். எ - று. (க௪௩)

சென்றி ருந்தென் னிருங்கவல செப்புழிக்
குன்றி ருந்த குறுமுனி யெயதினை
னன்றி ருந்தவற காயது செய்தபி
னென்றி லங்கரி யாசனத் தேற்றினன்.

(இ - ள்.) (கட்டளைபோலச்) சென்று உட்கார்ந்து எனக்குற்ற பெருந் துயரைச் சொல்லுகையில், பொதியாசலத்தில் வசிக்கும் குறுமுனிவராகிய அகத்திய முனிவர் ஆங்கெய்தினார். அப்பெருந் தவசிக்குச் செய்யத்தக்க உபசாரங்களைச் செய்தபின்னர். சூரியன்போல் விளங்குஞ் சிங்காதனத்தில் எழுந்தருளச்செய்தான், எ - று. (கசச)

கும்ப யோனிதி திருவருள் கூர்ந்தினி
தும்பர் கோமகற் காசி யுரைத்தன .
னிம்ப ரெய்தி யிருத்தி யெனுந்தமிழ்
நம்ப னோக்கர நாண்மலர் நீட்டினன்.

(இ - ள்.) குடத்திலுதித்த அவ்வகத்திய முனிவர் திருவருண்மிகுந்து, இந்திரனுக்கு இனிமையாக ஆசி கூறினார். பிறகு அவர் இவ்விடத்தில் நீ உட்காரக்கடவையென்று தமது வலக்கரமாகிய தாமரையை நீட்டிக் காட்டினார். எ - று. (கசரு)

முனிவ னீது மொழியத் தருநிழற்
புனித னுங்கொரா தனிசிற பொலிந்தன
னினிய சொற்றுறு மெலலையிற றொல்லையோ
னனித் ருந்தவ நாரத னண்ணினன்.

(இ - ள்.) அகத்தியமுனிவர் இப்படிக் கட்டளையிடவும், கற்பக விருக்ஷ நீழலிற் பொருந்திய இந்திரன், அங்குள்ள ஒப்பற்ற சிங்காசனத்திலிருந்து இனிய வார்த்தைகளைக் கூறுகையில், மிகப் பழையோராய விசேடித்த பெருந் தவமியற்றிய நாரதமுனிவர் அங்கெய்தினார். எ - று. (கசசு)

நண்ண ருந்தவ நாரதாக் கும்பர்நாட
டண்ண லெய்தி யருச்சனை யாற்றுப
வண்ண வார்மலை யம்முனிக் கங்கொரபார
லெண்ண ரும்பொற் றவிசி னிருத்தினன்.

(இ - ள்.) பெறுதற்கரிய தவத்தையுடைய நாரதமுனிவருக்குத் தேவலோக மன்னனாகிய இந்திரன் எதிர்சென்று வழிபாடு செய்து அழகிய நெடிய பொதியமலையி லெழுந்தருளிய அகத்திய முனிவருக்கொருபக்கலில், நினைத்தற்கரிய பொன்மயமான சிங்காதனத்தில் எழுந்தருளியிருக்கச் செய்தான். ()

வான விந்திரன் மாமுனி நாரத
னான மூவ ரளவளவிக்களி
மோன ராக விருந்துழி முற்றுணர்
ஞான நான்மறை நாரதன் கூறுவான்.

(இ - ள்.) தேவராசன் (சதத விருடியரிற்) சிறந்த அகத்தியமுனிவர் நாரதமுனிவர் ஆகிய விம்மூவரும் ஒருவரோடொருவர் கலந்து பேசிச் சந்தோஷித்து மௌனமாயிருக்கையில் ஞானமயமான நான்கு வேதங்களையும் முற்றுமுணர்ந்த நாரதமுனிவர் சொல்வாராயினார். எ - று. (கசஅ)

தொன்னி லத்திடைத் தோன்றுமோ ரற்புதம்
பொன்னி லத்துமக் கோதப் புகுந்தன

னன்ன தன்மை யறைகுவ னம்புவிக்
கன்னல் சூழ்தரு காசமி ரதேதுளான்.

(இ - ள்.) பழமைவாய்ந்த நிலவுலகத்திலே யுண்டான ஓர் திசயத்தைத் தேவலோகத்திலுள்ள உங்களுக்குத் தெரிவிக்கவந்தேன். அவவிசேடத்தைச சொல்லுகின்றேன்: பூமியில் கரும்பின் வேலிசூழ்ந்த காஸமீரதேசத்திலிருப்பவன். எ - று. (கசகூ)

ஆர வாரி யகனில மோர்குடை
யீர நீழ லினிது புரந்துதற
சேர லாரைத திறைகவாந துறறனன்
வார்த டஞ்சிலை வசசிர தேயனே.

(இ - ள்.) ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த விசாலமான இப்பூலோக முழுவதையும் ஒப்பற்ற வெண்கொற்றக் குடையின் குளிர்ச்சிதங்கிய நிழலிலே இனிமையாகக் காத்து செடிதாகி விசாலித்த விலலேததாங்கிய வச்சிரதேயனென்னும மன்னவன் சததுருககள்பாற் கப்பங்கொண்டு வாழ்ந்திருந்தனன். எ-று. (கரு0)

மன்னர் மன்னவன் வாசற்பு ரோகிதன்
றுன்ன ருஞ்சொற சுதன்மனென் பானவன்
பன்னு சொற்கலை கற்றும பயனிலா
னன்ன வன்றனை நோககி யரசர்கோன்.

(இ - ள்.) இராசராசனுன அவ்வச்சிரதேயனது அரண்மனைவாயிற் புரோகிதன் கடுஞ்சொல்லையுடைய சுதன்மனெனப்படுவன். அவன பலராலுந துதிககப்படும் நூல்களை யுணர்ந்தும் அவற்றின் பலனைப் பெறாதவன. அவனை அவ்வரசன் பார்த்து. எ - று. (கருக)

கற்றி லாய்கலை கறறுண ராாமுக
முற்று நோக்கின் மயானததை யொக்குமால்
பெறறு ளாாபெறும பேறுதங காதலா
சொற்ற கல்வியிற றாயமொன றேதலே.

(இ - ள்.) நீ சாஸ்திரங்களை யுணாநதிலை. கற்றறியாதவாகள் முகத்தை உற்றுப் பார்த்தால் அது மயானத்தை யொததிருககும். தமமககள யாவரும் புகழத்தக்க கலவியான் மேம்பட்டோரென்று பலருங கூறுதலே புதலவரைப் பெற்றோர் பெறும்பேறும். எ - று. (கரு௨)

என்று வேந்த னியம்புறக் கேட்டபின
பொன்ற யங்கு புரிநூற புயததினன
ஒன்று நானுண ராககலை யுளளதோ
வெனறி யாயவிளங கபெறு கிறறிலேன்.

(இ - ள்.) என்று வச்சிரதேயன் கூறககேட்டபின்னர், பொனனொளி வீசும் பூணூலணிந்த புயத்தையுடைய சுதனமன், வெற்றியுடையோனே! யானுணராத நூல் ஒன்றுமினு மிருககின்றதோ? அப்படியிருகக அவற்றைத தெரிந்துணரப் பெற்றிலேன். எ - று. (கருந)

இற்றை நாண்மூத லேம்படை யேந்திய
வெற்றி நாரணன் மென்மலாத் தாடொழாப்
பெற்ற கல்விய னுகப பெறுவன்யான்
கொற்ற வேந்தவென் றோதினன கோதிலான்.

(இ - ள்.) வெற்றிதங்கிய அரசனே! இனறுமுதற்கொண்டு பஞ்சாயுத மேந்திய வெற்றிபொருந்திய விஷ்ணுமூாத்தியின் மெல்லிய தாமரைமலர் போலுந திருவடிகளை வணங்கி நான கலவியில தெளிவுற்றவனுவேனென்று குற்றமற்ற சுதன்மன் சொலலினன். எ - று. (கருச)

தண்ண றுந்துள வோனடி தன்னுளத
தெண்ணி யேதது றவெநதைபி ராமெனதிர்
நண்ணி நாற்கலை நல்கின னுன்மறைப
புண்ணி யன்றிருப் பாறகடற போயினுன்.

இ - ள்.) தட்பமாகியமணமுள்ள துளசிமாலை பூணட விஷ்ணுமூாத்தியின் பாதஙகளைத தன்னுள்ளததிற்றியானிததுத துதிசெய்ய, எமது தநதையாகிய திருமால் சுதன்மனுககுப் பிரததியட்சமாகி (அறமபொருள இன்பம் வீடெ னும) நால்வகை நூல்களேயுந தெளிவாக விளககி, வேதததிற்குரிய புணணிய சொரூபியாகிய திருமால் க்ஷீராப்தியடைநதனா. எ - று. (கருரு)

நான்ம றைததனி நாயக னன்குணர்
நூன்மு றைககலை முறறுணா நோனமைமையைத
தேன்ம றைததின வண்டடை தேனறொடைக
கோன்மு றைததனி வேநதவை கூறினுன.

(இ - ள்.) நான்கு வேதஙகட்கும் ஒப்பறற நாயகராகிய திருமால் நன்றாய்த்தெளிவிக்க,முறைப்படி எல்லாநூல்களேயும் முறறுமறிநத வகைமையை, தேனே மறைததுககொண்டு தொகுதியாகிய வணடுகள அடைகாககும மண முளள மாலைதரிதத செஙகோன முறை திறயபாத சிறநத வச்சிரதேயன சபையிற் சொனனுன. எ - று. (கருகா)

ஞால முறறு நடததுசெங கோனமுறை
மாலை வெண்குடை வசசிர தேயனும
வேலை மாநில நான்மறை வேநதரை
யேல வமமி னெனவுரைத தானரோ.

(இ - ள்.) உலகமுழுதுஞ் செலுததிய செஙகோன முறையும், வெற்றி மாலையும், வெணகொற்றக குடையுமுடைய வச்சிரதேயனும், கடல சூழ்நத பெரிய பூமியிலுளள நானமறை யுணாநத வேதியாகளை ஒருசேர வருமபடி கட்டளை செயதான. எ - று. (கருஎ)

வநத நானமறை வாணரை யிஙகிவன்
சிநதை யோாகவெ னசசில செபபலு
மநத ணுள ரளநதறிந தாரவன்
தநத கலவி முடிவெவர் சாற்றுவார்.

(இ - ள்.) அவ்வாறு வநது சேர்நத நானமறை தோநத அநதணாகளைக் கண்டு, இச்சுதனமன் கலவியுணாவை ஆராயகவெனச் சிலவாாததை சொலல

வும், அவ்வந்தணர் அச்சுதன்மன் கல்வியுணர்வை ஆராய்ந்தறிந்தார்கள் அவன் தெளிந்த கல்வியின் அளவை யெவர்தாங் கூறவல்லவார்? எ -று. (கஙிஅ)

முற்று ணர்ந்த முழுமறை வேதியர்
கற்ற தின்மையெ னக்கடிந் தானவன்
மற்று நாவலர் வந்தவ ராரையுஞ்
சொற்றி றத்துச் சுதன்ம னொழித்தனன்.

(இ - ள்.) நான்கு வேதங்களையும் முழுதுணர்ந்த வேதியர்களை, நன்றாகக் கற்கவில்லை யென்று சுதன்மன் கோபித்தான். அல்லாமலும், கற்றுணர்ந்தவர்களாக வந்தவேதியர்களை யெல்லாம், மிக்க சொல்வன்மையுடைய சுதன்மன் நீக்கி விட்டான். எ - று. (கஙிகூ)

மொழிந்த மூர லிவன்முக நோக்கில
ரழிந்த சிந்தைய ராயகன் றாரவ
ரிழிந்த மேன்மைய ராகியி ருங்கலை
யொழிந்த தொன்று மிவற்கெடுத் தோதிலார்.

(இ - ள்.) அவ்வேதியர்கள் புன்னகையோடு கூடிய இச்சுதன்மன் முகத்தைப்பாராதவர்களாயும், மனம் வருந்தினவர்களாயும் அகன்று போனார்கள். தங்கள் பெருமை குன்றினவர்களாக இவனாலறியப்படாத பெரு நூல்களி லொன்றையேனும் இவனுக்கு எடுத்துச்சொன்னாரில்லை. எ - று. (கசுo)

ஏது ணர்ந்தன னிந்த்ர மாயிரப்
போதி ருந்தபு ராதனன் றன்னுடன்
மீது பாவத் திரைந்த விருத்தனா
யோது நான்மறைச் செல்வனை யுற்றனன்.

(இ - ள்.) இவனிப்படி யகங்கரித்திருத்தலை, குளிர்ச்சி தங்கிய ஆயிர விதழ்களையுடைய தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவன் உணர்ந்து, தன மேனியிற் பரவிய திரையையுடைய விருத்தனாய், நான்மறை தேர்ந்த அந்தணனாகி வந்தனன். எ - று. (கசுக)

உற்ற காலைச் சுதன்மனை யுற்றுநீ
கற்ற கல்விக் கழகிலை கற்றுளோர்
முற்று நன்கு மொழிவ தழகதன்
பெற்றி யீறு பிறக்கப் பெறுவரே.

(இ - ள்.) வந்தபோது சுதன்மனையடைந்து, நீகற்ற கல்விக்கேற்ற அழகு உன்னிடத்திலில்லை. கற்றோர் யாவரும் நல்லொழுக்கமுடையானெனக் கூறுவதே யழகாம். அதத்னமை முழுதுணர்ந்த காலத்திற் பெறுவர்கள்.

என்ன வென்னுளங் கற்றன வெண்ணில
மன்னு மைம்புலத் தாறும யங்கலான்
முன்னர் நின்று மொழிந்தனை மூப்பினோ
யுன்ன ருங்கலை யொன்றுண ராயென்றான்.

(இ - ள்.) எனக்கூறவும், என் மனத்தெளிவோடு கற்றுள்ளவை கணக்கற்றன. விருத்தனே! நீ நினைத்தற்கரிய நூல்களொன்று முணராதவன். உன்பாலுள்ள ஐம்புலச்செயல்கள் மயங்கிக்கிடத்தலின் நீ யென் முன்னின்று இவ்வண்ணம் உரைத்தனை யென்றான். எ - று. (கசுஉ)

அக்கணேசொ லவனுரைத்த தேகனு
முக்கு ணங்கடி நான்முக முன்னவன்
ஒருக்க நான்முகந் தோன்றிடத் தோன்றினன்
மிக்கெ ழுந்து கொளுந்து வெகுளியான்.

(இ - ள்) அக்கொடுமொழியைக் கூறிச்சுதன்மன் போகவும், முக்குணங் களைச்சயித்த பிரமதேவன், கூட்டமாயுள்ள சதுர் முகங்களுந் தோன்றும்படி நோக்கின்று, அதிகரித்தெழுந்து சொலிக்குங் கோபமுற்றவனாய். எ - று. ()

கற்று ணர்ந்த கலைப்பெரி யோர்களை
முற்க டிந்து மொழிந்தனை யாதலிற்
சொற்க டந்தனை நாவிழச் சொற்றநீ
நிற்க வூமரி னென்று நிகழ்த்தினன்.

(இ - ள்) நூல்களைக்கற்றுத்தேர்ந்த பெரியோர்களை முற்பட்டுக்கடுஞ் சொற்கூறினையானபடியால், அப்படிக்கூறிய நீ அச்சொற்களைச்சொல்லிய உன் நாவானது விழுந்துபோக ஊமை போலாகுகவெனச் சபித்தனன். எ - று.

வேத நான்முக னோதிய வெம்மையா
லோது நாவயர்ந் தூமரி னாயினன்
மாது யர்க்கொடு வச்சிர தேயனு
மேது செய்து மெனவிருந் தானரோ.

(இ - ள்.) வேத முணர்ந்த நான்முகனாகிய பிரமதேவருரைத்த சாபத் தினால், பேசுகின்ற நாவானது சோர்ந்து ஊமையாய் விட்டான். வச்சிரதேய னும் பெருந்துயரெய்தி யாதுசெய்வோமெனக் கருதியிருந்தான். எ - று. ()

தொல்லை வேதச் சுதன்மனை நோக்கினின்
றல்ல லுற்றன னாகி யழுங்குவான்
வல்லை யன்னவன் றம்பியை வாவென
வொல்லை கூயக்கொண் டுணர்ந்துவ தாயினன்.

(இ - ள்) பழைமையான வேத முணர்ந்த சுதன்மனை நோக்கி, நோ நின்று துயரமெய்தி வருந்துவோனாகிய வச்சிரதேயன், விரைவில் அவன் தம்பி யை வாவென்று சீக்கிரத்தில் அழைத்துச்சென்று கூறுகின்றான். எ - று. ()

மூந்து ணர்ந்தநின் முன்னனை யூமனாய்ப்
போதி யென்றய னோதிய புன்மொழித்
தீது தீர்தரத் தெய்வப் பசுந்துழாய்ச்
சீத ரன்றனைச் சிந்தைசெய் வாயென்றான்.

(இ - ள்.) முற்றுமறிந்த வுன்றமையனை யூமையாய்ப் போகுகவெனப் பிரமனுரைத்த சாபத்தின் துன்பம் விலக, தெய்வீகந்தங்கிய பசுமை பொருந் திய துளவமாலை தரித்த விஷ்ணுமூர்த்தியைத் தியானஞ்செய்கவென்றான்.

வேந்த னவ்வுரை கூறலும் வேதியன்
போந்து செங்கட் புனிதனைப் போற்றினன்
சேந்த தாமரைச் செல்வத் திருமகள்
காந்த னந்நிலைக் காட்சிதந் தானரோ.

(இ - ள்.) வச்சிரதேயன் அவ்வார்த்தையுரைத்த மாத்திரத்தில் சுதன்ம னுடைய சகோதரன் அதற்கிணங்கி, செந்தாமரைக் கண்ணையுடைய பரிசுத்த

ளுகிய விஷ்ணுமூர்த்தியைத் துதித்தான். செந்தாமரையில் எழுந்தருளி யிருக்குஞ் செல்வியாகிய திருமகளின் கணவரான திருமால் அப்பொழுது தரிசனந் தந்தனர். எ - று. (கசுகூ)

ஆழி நாத னடியிணை போற்றிமற்
றாழி வேத மெனக்கு முணர்த்தியென்
வாழி முன்னவற் கோதிய மாமலாச
சூழ னுன்முகன் சாபந் துடைத்தியால்.

(இ - ள்.) சக்கிராயுதமேந்திய திருமாலினுபயபபதங்களைத் தோத்திரஞ்செய்து, பழைமையான வேதங்களை யடியேனுக்கு விளங்கச்செய்து, என் தமையனுக்குப் பதுமாசனத்தானுகிய பிரமன் கொடுத்த சாபத்தையும் நீக்க வேண்டும். எ - று. (கஎ0)

இவையி ரங்கி யளித்தரு ளென்னனுங்
கவரொ ளித்திகி ரிக்கரும் கண்ணனு
மவையி ழந்தநின் முன்னவன யாரையு
நவைமொ ழிந்தது நன்றல வென்றனன்.

(இ - ள்.) இவவிருவரங்களையும் திருவுளமிரங்கி யனுக்கிரகிக்கவேண்டும் என்பபிரார்த்திக்கவும், எவவகையொளியையுங் கவர்ந்தக்க சுதரிசனமேந்திய கருநிறமமைந்த திருமாலும், உன் தமையன், சபையை யவமதித்துப் பலரையுங் குற்றங்கூறியது நன்றன்றென்றனா. எ - று. (கஎக)

நான ளித்திடுங் கல்வியி னல்லறி
வான பேரை யவமதித் தானது
தானு ணர்ந்தயன் சாபமிட் டானவ
னுன மென்று லொழிக்கத்த காதெனரான்.

(இ - ள்.) நானனுக்கிரகித்த கல்வியறிவினால், நல்லறிவுடைய பெரியோரை யவமதித்தனன். பிரமதேவன் அதனையறிந்து சபித்தான். ஆனதால் அவனுக்குற்ற ஊனத்தை யொழிக்க வென்றால் முடியாது என்றனர். எ - று.

இதுவு ணர்ந்தவி சுதத னிரந்துநீ
யதும னத்தில டைந்தனை யலலையாய்ப்
புதித ளித்தரு ளென்னப புனத்துழாய்
மதும லாததொடை யோனை வணங்கலும்.

(இ - ள்.) இதையறிந்த (சுதன்மன் சகோதரனை) விசுத்தன் என்பவன் குறையிரந்து தேவரீர் தனைத் திருவுள்ளங்கொள்ளாது, இப்போது புதிதாகக் காத்தருள்கவென்று, கொல்லையில வளருந்துளபத்தையுந் தேன் நிறைந்த மலர்மாலையையுமணிந்த திருமாலை வணங்கவும். எ - று. (கஎங)

மீண்டு மககலை விஞைசை புரிந்திடி
லீண்டு வேதனை யின்னு மிகழுமென்
றுண்டு சிநதை யளந்தன ளுகியே
நீண்ட மேனி நிமல னிகழ்த்துவான்.

(இ - ள.) மறுபடியும் அக்கலைஞானத்தை யருள்புரிந்தாலும் இங்குள்ள வேதியனை யின்னுமிகழ்ச்சி செயவானென்று தமது திருவுள்ளத்தில் ஆராய்ந்தவராய், நெடிய திருமேனியையுடைய விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார். எ - று.()

ஆச றுங்கலை கற்றறிந் தாரவ
னேசி னுள்ள மிரங்கி யொடுங்கிறுற்
பூசை செய்வர் புலமையுள் ளோரிவன்
மாசில சாப வழுவக லாதென்றான்.

(இ - ள்.) குற்றமற்ற நூல்களைக் கற்றறிந்தவர்களவனைக்கண்டு இகழ்வார்களாயின், மனந்தளர்ந்து கீழ்ப்படிந்தால், அக்கற்றறிந்தவர்கள் இவனைப் பூசிப்பார்கள். அது வரையில் இவனுடைய களங்கமற்ற சாபக்கொடுமை நீங்காதென்று கூறினர். எ - று. (க௭௫)

ஆதி நாத னருளிய கேட்டலும்
வேத சிந்தை விசுத்தன் விளம்புவா
னீத விரத்திலை யாகினி னன்பினேன்
றீது தீர்ப்பதி யாரெனச் செப்புறு.

(இ - ள்.) தேவர்களுள் முதல்வராகிய திருமால் திருவாய்மலர்ந்ததைக் கேட்டவுடன் வேதமறிந்த மனத்தையுடைய விசுத்தன் சொல்லுகின்றனன்: உமதன்பனாகிய வென்தமையனது தீமையைத் தேவரீர் விலக்காவிடின் வேறே விளக்குபவராரா? என்று கூறி. எ - று. (க௭௬)

மாபெ ருஞ்சொல் வசிட்ட னுரைத்திடுஞ்
சாப முற்றதரி சங்குவென் பான்றனைப்
பாப நீக்கிப் பதவியு ளுய்த்தனன்
கோப நீத்தருள் கோசிக னென்பரால்.

(இ - ள்.) சிறந்த பெருங்கீர்த்தி வகித்த வசிஷ்ட முனிவர் சொல்லிய சாபத்தையேற்ற திரிசங்குவென்னுமரசனைக் கோபத்தைத்தவிர்த்து அருள் செய்யத்தக்க கௌசிக முனிவர் (சாபத்திற்குக்காரணமான) பாவத்தை விலக்கிச் சுவர்க்கத்திற் சேர்த்தாரென்று பெரியோர் கூறுவர். எ - று. (க௭௭)

நின்ன டித்துணை நெஞ்சுகொண் டேமம
தின்ன னீக்குநர் யாரென் றிசைத்தலும்
பொன்னொ டும்பொலி கார்முகில் போலுமா
றன்னு ளங்கறுத் தின்னன சாற்றுவான்.

(இ - ள்.) தேவரீருடைய வுபய பாதங்களை மனங்கொண்டவர்களாகிய வெங்கள் துன்பத்தை நீக்குபவர் யாரென்று சொல்லவும்; திருமகளோடுங் கலந்த நீலமேகம் போலும் விளங்குந் திருமால், தமது திருவுள்ளத்திற் கோபமுற்று இவ்வாறு கட்டளையிடுகின்றார். எ - று. (க௭அ)

என்னை நிந்தைசெய் தீதுப காந்தனை
யுன்னு றுப்பிற குறையுள வாகநின்
முன்ன வன்றனிச் சாபமு டிந்துறு
தின்ன லுற்றுழப் பீரென் றியம்புறு.

(இ - ள்.) எம்மை நிந்தித்தது இவ்வித வார்த்தைகளைச்சொன்னாய். ஆனபடியால், உன்னவயவங்களில் குறைவு உண்டாகுக. உன் தமையனுக்குற்ற பெருஞ்சாபம் முடிந்து படாமல் துக்கமுற்று வருந்துவீர்களென்று திருவாய் மலர்ந்து. எ - று. (க௭௯)

நீங்க ருங்கடுஞ் சாபநீ கழ்த்திய
தேங்க மழ்ந்தது மூரய்புனை சென்னியோ
னீங்கொ ழிந்தன னேகவி சுத்தனு
மோங்கு றுப்பிழந் தின்னலு ழந்தனன்.

(இ - ள்.) நீங்கற்கரிய கொடுஞ்சாபமுண்டாகத மணங்கமழுந் துளவமாலை தரித்த திருமுடியுடைய விஷ்ணுமூர்த்தி யவ்விடம் விட்டு எழுந்தருளவும், விசுத்தனென்பவனும் விசேடித்த அவயவங்களிழந்தவனாய்த் துயரெய்தினன்.

மன்னர் மன்னவன் வசசிர தேயனு
மன்ன தன்மைய றிந்தல மந்தன
னென்ன செய்துமி தற்கென வெண்ணினன்
பின்ன ருற்றுநி கழ்ந்தன பேசுவாம்.

(இ - ள்.) இராஜ ராஜனாகிய வச்ரதேயனும் அத்தகைய தன்மையை யறிந்தவனாகி வருத்தமெய்தி யினி யிதற்கு யாதுசெயவோமென்று சிந்தித்துக் கொண்டிருந்தான். அதன் பின்னர் உண்டாகிய நடந்தனவற்றைக் கூறுவாம்.

### கலிநிலைத்துறை.

பணிபொ திந்தமெய்ஞ் ஞானநல் லொளிதிசை பரப்பி
நணியு யர்ந்தரு மாதவர்க் குறைவிட நல்கிப்
புனித மாதவர் கணத்தொடும் போற்றுறப் பொலிந்து
தனிமு தற்பர னிகாத்தது தயங்குகே தாரம்.

(இ - ள்.) குளிர்ச்சிபெற்று, சிறந்த மெய்ஞ்ஞான வொளியைத்திசை களிற் பரவச்செய்து, மிகமேம்பாடுற்று, அருட்பெருந் தபோதனர்க்கு வசிக்கத்தக்க விடங்கொடுத்துப் பரிசுத்தமான பெருந்தவமுடையோர் தமது கூட்டத்தோடு துதிக்கும்படி விளங்கி தனி முதற் கடவுளாகிய சிவபெருமானை யொத்துள்ளது விளக்கந்தங்கிய திருக்கேதாரம். (கஅஉ)

அத்த லத்துறை யிறைவனைப் பணிந்தரு ளடைவான்
மெய்த்தி றந்தரு முவகையின் விருப்பினன் வேந்த
னெத்தி றத்தினு மிவரிடர் நீக்குவ னென்னா
வுய்த்து டன்கொடு புகுந்தன னந்நகர் ருற்றான்.

(இ - ள்.) அந்தத் திருக்கேதாரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை நமஸ்கரித்து அவர் திருவருளைப்பெற, உண்மைத்தன்மை பொருந்திய மனக் களிப்போடு வசிரதேயன் விருப்புற்று, எவ்வகையிலாயினும் இவர்கள் துன்பத்தைப் போக்குவேனென்று ஆலோசித்தவனாய், அவர்களை யழைத்துச்சென்று அத்திருக்கேதாரத்தை யடைந்தான். எ - று. (கஅங)

தேவ தேவனைச் சென்னிதாழ்ந் திறைஞ்சின னிமயப்
பூவை நாயகன் சினகர முனறிலிற் பொருந்தி
யோவ ருந்துணை மறையவ ரிவரொடு முற்றான்
மேவ ருமபெருஞ் சாபநீந் தொழிந்துற விரும்பி.

(இ - ள்.) தேவதேவனாகிய சிவபெருமானைத் தன் சிரத்தைத்தாழ்த்திப் பணிந்தனன் இமயமலை யரசகுமாரியாகிய வுமாதேவிக்குக் கணவராகிய அச்சிவபெருமான திருக்கோயிலின் முகப்பிற்றங்கி விலக்குவதற்கரிய துணைவர்களான சுதன்மன் விசுத்தன் என்னும் வேதியரிருவரோடும் யாவருமடைதற்

கரிய பெருஞ்சாபத்தை விலக்கி யொழிக்கும்படி விருப்பெய்தித் தங்கியிருந்தான். எ - று. (கஅச)

மோன ஞானிக ளருந்தவர் மும்மூர்த்த லனையார்
ஞான நாதனைத் தொழுதனர் வருந்தொறு நலிந்த
வேனை யீங்கிவர் சாபநீத் திடுதியென் றிரப்பச்
சேனை வேந்தநீ கேட்டியென் றுரைப்பரச் செயலோர்.

(இ - ள்) மௌன நிலையிலுள்ள ஞானிகளாகவும் அரிய தவநிலையிலுள்ளவர்களாகவுமிருக்குந் திரிமூர்த்திகளை யொத்தவர்கள், மெய்ஞ்ஞான விறைவராகிய சிவபெருமானைப் பணிந்துகொண்டு திரும்பி வரும்போதெல்லாம், வருந்திக்கொண்டுள்ள இவ்விருவர் சாபத்தை விலக்கி யருளவேண்டுமென்று குறையிரத்தலும், அத்தவசிகளனைவரும், சதுரங்க சேனையையுடைய அரசனே! கேட்பாயாக வெனக்கூறுகின்றார்கள். எ - று. (கஅரு)

உலகெ லாமளந் துண்டுமிழ்ந் தருளிய வொருவன
மலராமி சைப்பொலி நான்முகன் வழங்கிய சாப
மலகில் பேரருட் கறைமிடற் றெம்பிரா றகன்றி
யிலகு வெண்குடை வேந்தமற் றெமக்கொன் றெளிதோ.

(இ - ள்.) திரிலோகங்களையும் அளவுபடுத்தி, திருவமுது செய்து உமிழ்ந்தருளிய ஒப்பற்றவராகிய திருமாலும், கமலாசனத்தில் எழுந்தருளியுள்ள பிரமதேவனுங்கொடுத்த சாபமானது, அளவில்லாத பேரருளாளராகிய நீலகண்டமுடைய எமது சிவபெருமானுக்கலலாது, விளங்குகின்ற வெண்கொற்றக் குடையையுடைய அரசனே! எப்போல்வார்க்கு எளிதானதோ? எ - று. ()

எனவு ரைத்தவ ரேகலு மெம்பிரா னருளிற்
றனையு ணர்ந்தத தீசியா மருந்தவன் சார
வனைக ருங்கழன் மன்னனு மறைமுழு துளர்ந்த
வினைய விஞ்ஞைய ரிருவரு மவனடி வீழ்ந்தார்.

(இ - ள்) என்று கூறி, அத்தவசிகள் போகவும், எமது சிவபெருமான் திருவருளால் தமது நிலையையுணர்ந்த ததீசி முனிவர் ஆங்கெழுந்தருள, அலங்கரித்த பெரிய வீரகண்டாமணி தரித்த அரசனும், வேதமுழுதும் ஓதியுணர்ந்த அதிவிநயத்துடன் கூடிய வேதியர்களிருவரும் அத்ததீசிமுனிவர் பாதங்களில் வணங்கினார்கள். எ - று, (கஅஎ)

பணங்க ளாயிரப் பாமபணைப பாறகட லவனு
மணங்கொ டாமரைப பிரமனும வழங்கிய சாபங்
குணங்கொ ணின்னருட் பெருமையி னொழிப்பது குறித்தே
மணங்கு மித்துய ரொழித்தியென் றடிக்கடி பணிந்தார்.

(இ - ள.) ஆயிரம் பணாமுடிகளையுடைய சேஷசயனத்தில் எழுந்தருளிய விஷ்ணுமூர்த்தியும், மணங்கமழுங் கமலாசனனாகிய பிரமதேவனுங் கொடுத்த சாபத்தை, விசேஷ குணமுடைய தேவரீர் திருவருட்பெருமையால் நீக்கிக் கொள்ளக்கருதினோம். நாங்கள் வருந்துகின்ற இத்துயரத்தை நீக்கி விடுவீரென்று அடிக்கடி பணிந்தார்கள். எ - று. (கஅஅ)

ஐய நீற்றுள பெருமையு முருத்திர வக்கத்
தெய்வ மாட்சியுந் தெண்ணிலாக் கைலையிற் சிறந்த

பைய ராவணி கம்பரன் பெருமையும் பகுத்து.
மெய்யு ணர்ந்தவா நின்னல தியாருளர் வியப்பின்.

(இ - ரு.) ஐயரோ! திருவெண்ணீற்றின் பிரபாவத்தையும் உருத்திராக்கத்தின் தெய்வீகம் பொருந்திய சிறப்பையும், தெளிந்த நிலவைப்போன்று பிரகாசிக்குந் திருக்கைலாயத்தின் கண் சிறப்போடெழுந்தருளியிருக்கும் படத்தோடு கூடிய சாப்பாபரணராகிய சிவபெருமான் சிறப்பையும் வியப்போடு பகுத்து உண்மையாகத் தெளிந்தவர்கள் தேவரீரையன்றி யாவரிருக்கின்றனர்?

மறைமொ ழிந்திடு நாவிவற் கொன்றினும் வழங்கா
திறைவ தன்னுறுப பொழிந்தன னீங்கிவ னிவற்கு
நிறைபெ ருங்குணத் தருடியே னின்னடி மறவா
துறைவ ரென்றெடுத் துரைத்தன னுலகெலாம் புரப்போன்.

(இ - ள்.) இவருக்கு வேதமோதும் நாவானது எவ்வாற்றானும் உதிக்கவில்லை. இவர் அவயவங்குறைந்துள்ளார். இவ்விருவருக்குந் தேவரீருடைய சிறந்த பெருங்குணத்தால் திருவருள் புரிந்தீரானால், தேவரீர் திருவடியை மறவார்களென்று, உலகமுழுவதையுங்காக்கின்ற வச்சிரதேயன் சொன்னான்.

உரைத்த வாசகங் கேட்டலு மொருங்குணர் முனிவ
னிரைத்த பேரருள் வெள்ளநின் றுவட்டெழ விரங்கி
விரைத்த வெள்ளொளி நீறெடுத் தளித்தனன் வேந்தன்
வரைத்த டம்புய மண்ணுற வணங்கினன் வாங்கி.

(இ - ள்.) யாவுமறிந்த ததீசி முனிவர், அவ்வரசன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டவுடன், ஒலிக்கின்ற பெரிய திருவருட்பெருக்கம் மூவட்டெடுக்கத் திருவுளமிரங்கி, மணம்வீசுகின்ற காந்தியுடைய திருவெண்ணீற்றைத் தமது திருக்கரத்தால் அள்ளி அளித்தனர். அவ்வரசன் தனது மலைபோலப் பூரித்த புயங்கள் பூமியைத் தொடும்படி வணங்கி வாங்கி. எ - று. (கககூ)

வாங்கு நீற்றினை மறையவர்க் களித்தனன் மறையோ
ரோங்கு தத்தம துடம்பறப் பனைந்தன ருவந்தார்
தேங்கு நான்மறை யிசைத்தனன் முன்னவன் சிறியோ
னீங்கு தன்னுடற குறையெலா நிரப்பின னின்றான்.

(இ - ள்.) அப்படி வாங்கிய திருவெண்ணீற்றை அவ்விருவேதியருக்குங் கொடுத்தான். அவ்வந்தணர் பூரித்த தங்களுடம்பில் பொருந்தத்தரித்துக் களித்தார்கள். உடனே மூத்தவன் (நாவரப்பெற்று) நான்கு வேதங்களையு மோதினான். இளையவன் தன்னுடலில் (நீங்கிய) அவயவக் குறைவெல்லாம் நிரம்பப்பெற்றிருந்தான். எ - று. (கஙஉ)

சாற்ற ருந்தவத் ததீசியை யடிக்கடி தாழ்ந்தார்
நூற்ற டம்புய முனிவனு மாசிக ளுவன்றான
போற்றி மூவருங் காசசிமி ரப்பதி புகுந்தா
ரேற்ற மாதவத் தலைவனை வழுத்தின ரிருந்தார்.

(இ - ள்.) சொல்லமுடியாத தவத்தையுடைய ததீசிமுனிவரையடிக்கடிப் பணிந்தார்கள். உபவீதமணிந்த பரந்த தோளையுடைய ததீசிமுனிவரும் ஆசிவசனங் கூறினர். (அரசனும் அந்தணரும் ஆகிய) மூவரும் ததீசிமுனிவரைத்

துதித்துத் தங்கள் காஷ்மீரநாட்டை யடைந்தார்கள். தகுந்த பெருந்தவ முடைய ததீசிமுனிவரைத் தோத்திரஞ் செய்திருந்தார்கள். எ - று. (ககஙங)

ஆதி நாயக னணிதிரு நீற்றின் றருமை
யோதி லெம்மனோர்க் கெளிவர வுரைசெயுமா றெளிதோ
வேத நாயகன் றிருமக ளுயகன் விளம்பு
நீது நீத்தத்தங் கதனிலை யாவரே தெரிப்பார்.

(இ - ள்.) முதற்கடவுளாகிய சிவபெருமானணிகின்ற திருவெண்ணீற்றின் சிறப்பைச் சொல்லுமிடத்தில் எம்போலவார்க்கு இலேசிற் சொல்ல வெளிதானதோ? வேதமோதிய தலைவனாகிய பிரமதேவனும் இலக்குமிமணாளனாகிய திருமாலுங் கூறிய சாபம் போக்கியது அத்திருவெண்ணீற்றின் றன்மையை யெவர்தாம் விளக்க வல்லவர்கள்? எ - று. (ககூச)

என்று நாரத னிந்திர னினிதுகேட் டுவப்பக்
குன்றி ருந்தவ னென்புநெக் கன்பொடுங் குழைய
வன்று ரைத்தலு மதிசய மடைந்தன ரனையார்
மன்று ளாடிவெண் ணீற்றின் றருமையார் வகுப்பார்.

(இ - ள்.) என்று நாரத முனிவர், இந்திரனினிமையாய்க்கேட்டுக் களிக்கவும், பொதியாசலத் தலைவராகிய அகத்திய முனிவர் எலும்பு நெக்குவிட்டு அன்புடனே குழையவும், அன்று கூறிய வுடனே அவ்விருவரும் வியப்புற்றார்கள். ஆனபடியால், சிற்சபையிலே ஆனந்த திருநடனஞ்செய்யும் சிவபெருமானது திருவெண்ணீற்றின்றருமையை யெவர்தாம் வகுத்துரைப்பவர்? எ - று.

பொன்னன் காக்கிறை முதலினோர் மூவரும் பொருந்தி
யின்ன சொற்றுழி யென்னதூழ் வினையிடை நிகழ
மின்னெ யிற்றுவா ளரக்கரு மசுரரும் வெகுண்டு
மன்னு யிர்த்தொகை செகுத்தன ருணர்த்துவான் வந்தேன்.

(இ - ள்) அமராவதிக்கிறைவனாகிய இந்திரன் முதலிய மூவருஞ் சேர்ந்து இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், அடியேனுடைய ஊழ்வினையானது இடையிலே சம்பவித்ததினால், மின்னலை வீசும் பற்களையுடைய அரக்கர்களும் அசுரர்களுங்கோபித்து நிலைபெற்ற ஜீவராசிகளைக் கொன்றார்கள். அதனைத் தெரிவிக்கும்படி யடியேன் வந்தேன். எ - று. (ககூரு)

அதுகி டக்கமற் றணிதிரு நீற்றின் றருமை
யிதுமொ ழிந்தனி ரினிச்சிற் றொழிதியென் றமைத்து
மதுகை வாளெயிற் றரக்கரை வல்லையி னொழித்தற்
கெதுகொல் செய்துமென் றிந்திரன் றனனோடு மியம்ப.

(இ - ள்.) அடியேன் வந்தகாரிய மிருக்க அழகிய திருவெண்ணீற்றின் இந்த அற்புதமாகிய சரித்திரத்தைச் சொன்னீர்கள். இனிச்சற்றதனை நிறுத்துங்களென்று கையமைத்து வலிமையுள்ள கூரிய பற்கள் வாய்ந்த அரக்கர்களை விரைவிலழிப்பதற்கெதைச் செய்வோமென்று தேவேந்திரனோடு சொல்ல.

குறுமு னிப்பெய ரருந்தவன் வெகுண்டனன் கொதித்து
மறுவி னீற்றியல் புகன்றனன் மறுத்தனீ வருணை
தறுகண் வாளெயிற் றரக்கரை குதியெனச் சபித்து
நறும லர்த்தொடை யிந்திரன் றனனோடு நவிலும்.

(இ - ள்.) குறுமுனி யென்னும் பெயரினையுடைய அருந்தவஞ்செய்த அகத்திய முனிவர் கோபித்துக்குற்றமில்லாத திருவெண்ணீற்றின் சிறப்பைப் பேசிக்கொண்டிருந்தோம். அதனைத்தடைப்படுத்திய வருணனே! நீ அஞ்சாமையையுங் கூரிய பற்களையுமுடைய அரக்கனுக்கவென்று சபித்து, வாசனை தங்கிய கற்பகமலர்மாலை யணிந்த இந்திரனோடு சொல்லுகின்றனர். எ - று.()

எம்பி ரான்றிரு நீற்றின துண்மைமற் றிதுவோ
வம்பொ னங்கையி னெல்லியி னறிகுதி வருகென்
றும்பர் கோமகன் றன்னொடு நாரத னொடுமபோய்க்
கும்ப மாமுனி நெடுந்திரைப் பரவைநீர் குறுகி.

(இ - ள்.) எமது சிவபெருமானது திருவெண்ணீற்றின் சிறப்பிமமட்டோ? அழகிய பொன் போன்ற வுள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனிபோலத் தெரிந்துகொள்வாய், என்னுடன் வரக்கடவாயென்று அவ்விந்திரனோடும் நாரதரோடும் போய் அகத்திய முனிவர் நெடிய அலைகளையுடைய கடலின்கணுள்ள நீரையடைந்து. எ - று. (கசுசு)

செங்க ணேற்றுடை யெம்பிரா னணிதிரு நீற்றை
யங்கை யள்ளியிட் டறலொடுங் குழைத்தன னணிந்தான்
பொங்கு வாரிதி வாவெனக் கூடங்கையுட் புகுத
துங்கி னுள்ளத் தரனடித் தாமரை நோக்கி.

(இ - ள்.) சிவந்த கண்ணுள்ள இடபத்தை வாகனமாகவுடைய எமது சிவபெருமானணிகின்ற திருவெண்ணீற்றைத் தமது வுள்ளங்கையிலெடுத்து வைத்து நீர் சேர்த்துக்குழைத்து அணிந்துகொண்டு, பெருகுகின்ற சமுத்திரமே வாவென்றழைத்த வுடனே கடல் குறுகி உள்ளங்கையிற் சேரவுந் தமது இதயத்தில் சிவபெருமானது பாததாமரையைத் தரிசித்துப்பருகினர். எ - று. (உ00)

வயங்கு வச்சிரப் படைகொடு கடற்பட மறைந்து
முயங்க ரக்கரை முடித்திடென் றொருகர முளரித்
தயங்கு நீறளித் தருளின னவனது தரித்தான்
கயங்க ரந்துறை யரக்கரை முடித்தனன் கணத்தின்.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற வச்சிராயுதத்தால், கடலில் மறைந்து கலந்துள்ள அரக்கரை யழிக்கக்கடவை யென்று, தமது ஒப்பற்ற கமலமலர் போன்ற திருக்கரத்தால் பிரகாசிக்கின்ற திருவெண்ணீற்றினைப் பிரசாதித்தனர். அவ்விந்திரன் அதனையணிந்துகொண்டு, சமுத்திரத்துள் மறைந்து வசிக்கின்ற அரக்கர்களை ஒருவிநாடியிலழித்தனன். எ - று. (உ0க)

பொதுவ றத்தனி நோற்றருள் குறுமுனி போகா
மதும லர்த்தொடை யிந்திர னவனடி வணங்கி
யெதுவு ணர்ந்தன னீங்கிவ னிவற்கிடு சாப
மதுவொ ழித்திடென் றடிக்கடி வணங்கின னவனும்.

(இ - ள்.) பொதுத்தன்மைநீங்கித் தனியாகத் தவஞ்செய்த அகத்திய முனிவர் எழுந்தருளவும், தேன்சொரியுங் கற்பகமலர்மாலை தரித்த இந்திரன் அவ்வகத்திய முனிவருடைய பாதங்களிற் பணிந்து, இங்குள்ள இவ்வருணன் தேவரீர் சிறப்பைத்தெரியாதவன். இவனுக்குத் தேவரீர்பணித்த சாபத்தை

விலக்கி யருளவேண்டுமெனப் பிரார்த்தித்து மீண்டும் பலமுறை வணங்கினான். அப்போது அகத்திய முனிவரும். எ - று. (உ0உ)

வேலை வேலிசூழ கிடந்தவம் மேதினிப் புறத்து
ஞால மேத்துறும் புயபல னாட்டினை நணுகி
மாலை வெண்குடை யரசுகொண் டிருப்பவம் மன்ன
னாலி ரும்படை யிவனொடு முடற்றுவா னணைவான்.

(இ - ள்.) சமுத்திரமே வேலியாகச் சூழ்ந்துள்ள அந்நிலவுலகத்தில், அவ்வுலகத்தார் புகழும் புயபலனென்னும் மன்னவனது வங்கநாட்டை யடைந்து, வெற்றி மாலையும் வெண்கொற்றக் குடையுமுடையவனாய் அரசு செய்கையில், அப்புயபல மன்னன் ஒலிக்கின்ற பெருஞ்சேனையையுடைய இவனோடெதிர்க்க வருவான். எ - று. (உ0௩)

அவனெ திர்ந்ததமை யறிந்தன னாகிநெஞ் சழலா
லிவனி ரும்படைச் சேனையோ டடைந்திடு மேல்வைச்
சிவனி னைந்தவ னணிதிரு நீற்றொளி தெரியப்
பவமொ ழிந்துமுன் னுருப்பெறு மிவனெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) அப்படி அவனெதிர்த்ததைத் தெரிந்தவனாய் மனம்புழுங்கி, இவ்வருணனும் தன் பெரிய ஆயுதங்களையுடைய சேனையோடு எதிர்த்த சமயத்தில் சிவபெருமானைத் தியானித்து அப்புயபலன் அணிந்துகொண்டுள்ள திருவெண்ணீற்றின் காந்தி வீசுதலால், இவனுடைய பாவநீங்கிப் பண்டைய வுருவைப்பெறுவானென்று திருவாய் மலர்ந்தனர். எ - று. (உ0௪)

அந்த மாமுனி யுரைத்தநற் காலமவந் தடைந்தே
னிந்த நின்முக நீறுகண் டவ்வுரு விழந்தேன்
றந்தை நீதனித் தாயுநீ யெனறடி தாழா
மந்த ரம்பொரு புயபலற் குரைத்தனன் வருணன்.

(இ - ள்.) அந்தச்சிறந்த அகத்திய முனிவர் அருள்புரிந்த நற்காலம் வந்தடைந்தபடியால், இங்கே வந்து சேர்ந்து, தேவரீர் திருமுகத்திலுள்ள திருவெண்ணீற்றினைத் தரிசித்து அவ்வரக்கவடிவத்தை யகற்றினேன். ஆகையால் எமது தந்தையும் தேவரீரே! ஒப்பற்றதாயும் தேவரீரே! என்று, பாதங்களில் வணங்கி, மந்தரமலை போன்ற புயபல மன்னனுக்கு வருணனுரைத்தனன். எ - று. (உ0௫)

மீண்டு தன்னுடைச் சேனையோ டொருதனி மேற்பா
லாண்டி ருந்தனன் வருணனமற் றுங்கவ னுரைப்ப
வேண்டு நீற்றுடைப் பெருமையை வியந்தனன் விரும்பி
யாண்டு மத்திரு நீறலா தணிகில னிறைவன்.

(இ - ள்.) வருணன் தன் சேனையோடு திரும்பி, மிகவுயர்ந்த மேற்றிசையில் திசைக்காவலரில் ஒருவனாய் அரசு புரிந்திருந்தனன். கூறிய யாவராலும் வேண்டப்படும் திருவெண்ணீற்றின் பிரபாவத்திற்கு அதிசயித்தவனாய், அப்புயபலன் அன்று தொடங்கி விருப்பத்தோடு எவ்விடத்திலும் அத்தகைச்சிறப்புடைய திருவெண்ணீற்றையன்றிப் பிறிதொன்றையும் அணிய மாட்டான்.

பூசொ ளித்திரு நீற்றினா லிருந்தி புதல்வர்
வாச நான்மலர்க் குழலியர் மாபெருஞ் சேனை

யேசில் செல்வமுற் றிருந்தனன் புயபல னென்பா
னாசை நீத்தனன் கடைமுறை கைலைசென் றடைந்தான்.

(இ - ள்.) அப்புயபலன் தரித்துக்கொண்டிருக்கும் பிரகாசந்தங்கிய திருவெண்ணீற்றினாலே, விசேட திரவியங்களும், புதல்வர்களும், மணம் வீசும புதிய பூக்களையணிந்த கூந்தலுடைய மனைவியர்களும்,மிகப்பெரிய சேனைகளுமாகிய குறைவற்ற செல்வமுற்றிருந்தனன். இறுதிக்காலத்தில, இப்பொருள்களிலுள்ள ஆசைகளை யகற்றியவனாய்த் திருக்கைலாயத்தை யெய்தினான.

பூதி பூசினும பூதியின் றன்மைகேட் டுறினும்
யாது பாதக மியற்றினும பாதவ மெனினுந்
தீது றுந்துயர் தொலைவன வாதலிற் சிறந்த
வாதி நீற்றின துண்மையை யாவர்பெற் றறிவார்.

(இ - ள்.) திருவெண்ணீறணிந்தாலும, திருவெண்ணீற்றின் பிரபாவங்களைக் கேட்டாலும், யாது பாவம செய்திருந்தபோதிலும், [பாதவம்] மரங்களென்றாலும கெடுதியை யுண்டுசெய்யும துன்பங்கள அகன்றனவாம. ஆதலின சிறப்பமைந்த சிருபெருமானுடைய திருவெண்ணீற்றின உண்மைத்தன்மையை யாவர்தாம் அடைந்தறியத்தக்கவர்? எ - று. (௨0அ)

எழுது றுமறை மொழிதரு நீற்றியற் சரிதை
முழுது ணர்ந்தவை யுணர்த்தினன சூதமா முனிவன்
வழுவு றுவழி கேட்டனர் முனிவரர் மகிழ்ந்தார்
தழுவு சிந்தையி னன்பொடு தனித்தனிச் சிறந்தார்.

(இ - ள். எழுதாக்கிளவியாகிய வேதத்திற் சொல்லப்படும திருவெண்ணீற்றின் பிரபாவமாகிய சரித்திரத்தை முழுவதுமுணர்ந்து அவ்வளவையும சிறந்த சூதமுனிவர் திருவாய மலர்ந்தருளினர். நைமிசாரணிய முனிவர்கள் குற்றமெய்தா வண்ணமாகக்கேட்டுச் சந்தோஷித்து அன்புற்ற மனதோடு ஒவ்வொருவரும சிறப்புற்றார்கள். எ - று. (௨0௬)

விபூதிமான்மியசசருக்கம முற்றிற்று.



ஆகச்சருக்கம ௫-இ திருவிருத்தம் - ௫௨எ.



ஆறாவது

# உருத்திராக்கமான்மியசருக்கம்.



**கலிநிலைத்துறை.**

இலங்கொ ளித்திரு நீற்றின தியற்கையை யிசைத்தே
மலங்கு கங்கையோன் கண்ணெனு முருத்திர வக்கந்
துலங்கு மேன்மைபெற் றுணர்ந்தன வுணர்த்துதுந் தொலையா
நலங்கொண் மாதவத் திறையுளீர் கேட்கென நவிலும.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற ஒளியையுடைய திருவெண்ணீற்றின் பிரபாவத்தைச் சொன்னேம். அசைகின்ற கங்காநதியை யணிந்த சிவபெருமானது திருநேத்திரமென்று சொல்லப்படும் உருத்திராக்கத்தினுடைய விளக்கந் தங்கிய பெருமையில் ஆசிரியரால் உபதேசிக்கப்பெற்று நாம் அறிந்தவற்றை யறிவிக்கின்றேம். அழியாத நன்மை தங்கிய பெருந்தவ நிலையுள்ள முனிவர்களே! கேளுங்களென்று சூதமுனிவர் சொல்கின்றனர். எ - று. (க)

மொழிவ தறகரு மிதனுடைத் தன்மையை மொழியப்
பழுது றுவழி கேட்டுறிற கேட்டவை பகரி
னொழிவ ருமபெரும பாதக மடைந்துளோ ரெனினு
மழிவ றும்பெருங் கயிலையுற் றிருங்கதி யடைவார்.

(இ - ள்) சொல்லுதற்கரிய இவ்வுருத்திராக்கத்தின் சிறப்பை எவரேனுஞ் சொல்லத்தவறுபடாதவகையாகக் கேட்டாலும், கேட்டவற்றைப் பிறர்க்குச்சொன்னாலும், நீங்குதற்கரிய மகா பாதகங்களைச் செய்தவர்களானாலும் அழிவற்றிருக்கும் மகா கைலாயமடைந்து பெரிய பதவியை யுறுவார்கள். எ-று.

இதனை யன்பொடு தரிக்கினு மன்பில ராகி
யதனி லோரமணி தரிக்கினு மாடலஞ் சிலைக்கை
மதனை வென்றருளெம்பிரான கண்ணென வரலாற்
பத மனைத்தையு முதவுமத் தனிமுதற பரமன்.

(இ - ள்.) இவ்வுருத்திராக்கத்தை அன்புடன் தரித்தாலும், அன்பில்லாதவர்களாய் அம்மணியிலொன்று தரித்தாலும், வெற்றிதங்கிய அழகிய கருப்புவில்லைக்கையிற்றங்கிய மன்மதனை வென்ற எமது தலைவராகிய சிவபெருமானது திருவிழியென்று வருதலால், அவ்வொப்பற்ற முதற்கடவுளாகிய சிவபெருமான் எல்லாப்பதவிகளையும் அநுக்கிரகிப்பார். எ - று. (ங)

மணிக ளாயிரந் தரித்தரற பணிகுவா னவனே
பணிகொள செஞ்சடைப பரமனென றேத்திடப படுமா
லணிபு யத்துமுப பானிரண டணிமணி கரத்தி
லிணையின மாமணித் தொகையறு நானகெனத் தரிப்பார்.

(இ - ள்.) ஆயிரமணிகளையணிந்து சிவபெருமானை வணங்குகின்றவனே, சாப்பத்தை யணிந்த செவந்த சடையையுடைய சிவபெருமானென்று துதிக்கப்படுவான். அழகிய புயத்தில் முப்பத்திரண்டு மணிகளும், அணியத்தக்க மணிக்கட்டுகளில் ஒப்பற்றுச்சிறந்த இருபத்துநான்கு மணிகளுமெனக் கணக்காகத்தரிப்பார்கள். எ - று. (ச)

உச்சி யொன்றிரு காதினிற பன்னிரண் டுவந்த
வச்சி ரத்தினி னாற்பதெண் ணான்கணி களத்துச
செச்சை மார்பினூற றெட்டெனச சிறந்தணி பவரே
பச்சி ளமபிடி யிடத்தனென் றேத்துறப பணிவார்.

(இ - ள்.) உச்சியில் ஒன்று, இருசெவிகளிற பன்னிரண்டு, விரும்பிய சிறந்த சிரத்தில் நாற்பது, அழகிய கழுத்தில முப்பத்திரண்டு, மார்பில் நூற்றெட்டெனக்கணக்கிட்டுச் சிறப்போடு தரிப்பவர்களே. பசுநிறமமைந்த இளமை தங்கிய பெண்யானை போலும் உமாபிராட்டியாரை வாமபாகத்துடைய சிவபெருமானென்று துதிக்கப்படுவார்கள். எ - று. (ரு)

தழைமி லாமணி பவளமொன் றின்னன தயங்க
விழைப டத்தொடுத் தணியினு மிடையிடை படிகம்
புழைப டுத்தன தொடுத்தன புனையினு மொளிருங்
குழைப சும்பொனிற் புனையினுங் குலக்கதி பெறுவார்.

(இ - ள்.) மிக்கவெண்மையுடைய முத்து பவளம்இவற்றில் ஒன்று விளங்கும்படி ஒற்றுமைப்பட இடையிற் கோத்தணிந்தாலும், இடை யிடையே படிகத்தைத் தொளைப்படுத்தினவாய்க்கோத்தவைகளை யணிந்தாலும்,ஒளிவீசும் இளகிய பசும்பொன் சோத்தணிந்தாலுங் கதிகளெல்லா மடைவார்கள். எ-று.

தெய்வ மாமணி கரந்தரித் தொருமனுச செபித்தா
லைய மில்லுரு வொன்றொரு கோடியா மன்றிப்
பொய்யின் மாமணி முடிபொறுத் தீரமபுனல குளிப்பின்
றுய்ய கங்கைநீர் துளைந்ததா மெனமறை சொலலும்.

(இ - ள்.) தெய்வீகம்பொருந்திய சிறந்த வுருத்திராக்க வடத்தைக் கையிலெடுத்து ஒரு மந்திரத்தைச்சபித்தால, சந்தேகமின்றி யோருரு கோடியுருவாகும். அல்லாமலும் பொய்படாதசிறந்த உருத்திராக்கமணியைச் சிரசிலணிந்துகொண்டு குளிர்ந்த ஜலத்தில் மூழ்கினால் புனிதமான கங்காஜலத்தில் ஸ்நானஞ் செய்ததற்குச் சமானமாமென்று வேதங்கள் கூறும். எ - று. (எ)

இன்ன மாமணி மஞ்சனம புரிந்திடா திரங்க
மன்னு மாகம விதிமுறை பூசனை வருபபாா
பன்ன கக்குழைப பரமனை வழிபடும பதவி
நன்ன லமபெறப பெறுகுவா கயிலையை நணுகி.

(இ - ள்) இத்தகைய மேமபட்ட வுருத்திராக்கமணிந்து ஸநானஞ்செய்து கனிவெய்தி, நிலைபெற்ற சிவாகமமுறைப்படி பூசித்து வருபவாகள், சாபபமாகிய குண்டலமணிந்த சிவபெருமானைத் திருக்கைலாயகிரியிலடைந்து பூசிக பதவியை நன்மையுறும்படி யெறுவாாகள். எ - று (அ)

ஒருமு கத்தது முகங்களைந் துடையது கருணைத்
திருமு கங்களபன் னொன்றுள தருளொடுஞ் சிறந்த
வருமு கங்களீரேழுள தனையமா மணிகள்
கருதி யாசசனை புரிந்தவா பெருவளங் கலப்பாா.

(இ - இ.) ஒருமுக முள்ளதும் ஐம்முகமுள்ளதுங் கிருபையையுடையபதினொரு திருமுகமுள்ளதுந் திருவருளோடு மேன்மையுள்ள பதினான்கு முகமுளளதுமாகிய இவைபோன்ற பெருமை தங்கிய வுருத்திராக்க மணியை யெககாலமுந் தியானித்துப் பூசைசெயதவாகள் பெருமபாக்கிய மெயதுவாாகள் எ - று

மன்னு சின்மய வுருத்திர வக்கமா மணியின்
முன்னி கழ்ந்துள தோாகதை யககதை மொழிவாம்
பினன லஞ்சடை யந்தணீ ரென்றினிப பிறவாத
தொன்ன லந்தரு சூதமா முனிவரன் சொலலும.

(இ-ள்.) நிலைபெற்ற ஞான மயமாகிய சிறந்த வுருத்திராக்க மணியாற் பண்டைக்காலத்தில் நடந்த வோா சரித்திர முள்ளது. பின்னலோடு கூடிய வழகிய சடையையுடைய வேதியர்களே! அச்சரித்திரத்தைச் சொலகினறோ

மென்று இனிப்பிறவியை யடையாத பூர்வ புண்ணியமாதலங்கிய சூத முனிவர் சொல்லத்தொடங்கினர். எ - று. (கO)

நந்தி யென்றுநான் மறைவலோ ரறையுமா நகர
மந்த மாநக ராலயத் தடியருளொருத்தி
செந்து வர்க்கனி மழலைவாயச சேயரிக் கருங்கட்
பைநது ணாக்குழ னநதையென் றொருபெயா படைத்தாள்.

(இ - ள்.) வேதியாகளவசிக்கும் நநதியென்று சொல்லப்பட்ட சிறந்த நகரமொன்றுள்ளது. அப்பெரிய நகரிலுள்ள ஆலயத்தின் [தேவதாசி] அடியருள்ளே யொருத்தி, சிவநதபவளம்போலும அதரத்தையும, இனிய மழலைச சொலலையுடைய வாயையும், செவ்வரிபடாநத கருநிறம் பொருநதிய கணணையும, பசிய மலாகளெொத தணிநத கூநதலையுமுடையளாய் நநதையெனனும பெயருற்றிருநதாள். எ - று. (கக)

வள்ளை வார்குழை சேவலோர் வானர மிவற்றை
யுளள வாசையின் வளாத்தன ளாங்கவைக ளெொருங்கே
யெளளின் மாமணியுருத்திர வக்கமுத திடைகோத
தள்ளு செமபொனிற பொதிநதன ளுவகையி னணிவாள்

(இ - ள்.) வள்ளையிலை போன்ற காதில் நெடிய குண்டலத்தையுடைய நநதையென்பாள் ஒருசேவல் குரஙகு ஆகிய இவவிரணடையும மனவிருபபோடு வளாத்தாள. அவவிரணடிற்கும இகழ்வில்லாது சிறநதமணியாகிய வுருத்திராக்கத்தை முத்துகளிடையே கோத்து விசேடித்த பசுமபொனனிலே பதிய வைத்து ஆசையோடு தரிப்பாள். எ - று. (கஉ)

காத ணிநதனள் கழுத்திடைச சாத்தின ளுசசி
மீது சுற்றினண் மென்கையிற பிணித்தனள விருமபி
யோது சேவலங குழையினும புனைநதன ளுவபபா
லாதி நாயகன் கண்ணெனு முருத்திர வக்கம்.

(இ - ள்.) ஆதிதேவனாகிய சிவபெருமானது திருவிழியென்று சொல்லப்படும் அவ்வுருத்திராக்க மணியைச் சநதோஷத்தால் அககுரஙகின காதுகளிற் றரித்தாள். அவ்விரணடின கழுத்திற் கணிநதாள. அககுரஙகினுச சிககுமணிநதாள். மெல்லிய கைகளுககுங்கட்டினாள். முன்சொல்லிய வச்சேவலினழகிய கொண்டைககு மாசையாலணிநதாள. எ - று. (கங)

கூத்து நூன்முறை பயிறரப பயிற்றினள் குறித்துப்
பாாத்த கண்களுங் களிகொள்வா ளாங்கவை பனனு
ணீத்து முன்னைவூழ் வினைப்படி தமமுயிா நீஙகிப
பூதத சூட்டிடை வாரணங் குரஙகொடும போன.

(இ - ள்.) பரதமும் அநநூன் முறைப்படி செய்யக கற்பித்தாள். அவவாறுபழகி அவையாடும்பொழுது அவற்றைப் பார்த்துக கண்களிரண்டுங் களிப்பாள். குரஙகும், மலர்நத வுச்சிககொணடையுடைய சேவலும் ஆகிய விரணடும பலகாலமிப்படிககழிநது பண்டைய வூழ்வினையளவாக வுயிர் துறநதிறநதன.

சிறந்த வாமணி தரித்தலா லுயிருகச செல்லா
விறநது காசசிமி ரபபதி யெறழ்வலி வேந்தன

பறந்த லேத்திறற் பத்திர சேனனோர் மனைவி
யறஞ்செய தன்மையால வாரண மவள்வயிற் றுதிப்ப.

(இ-ள்.) மிகச்சிறந்த வுருத்திராகக மணியைத் தரித்திருந்ததினால் உயிர் துரந்திறந்துபோய, காஸமீர நாட்டையாண்ட வலிய வரசனாகவும், போர்ககளத்தில் வெற்றியடையும் பராக்கிரம சாலியாயுமிருந்த பத்திரசேனனுடைய வொப்பற்ற மனைவி செய்த புண்ணியத்தின் வசத்தால் சேவல் அவள வயிற்றிற் பிறக்கவும். எ-று. (கரு)

மற்றை வானர மன்னவ னமைச்சனோ மனைபாற்
பெற்ற பேறெனச் சென்றவ தரித்தது பிறபபக
கொற்ற மன்னவன றன்னுடைக குழவியைக் குறித்துச
சொற்ற ருஞ்சுதன் மாவென வருமபெயா சொற்றுன.

(இ-ள்.) மற்றையதாகிய வானரம அப்பத்திரசேனன மந்திரியின் ஒப்பற்ற மனைவியிடத்தில் அவன் புரிந்த தவத்தாற் பெற்ற பேற்றினை யொத்துப்பறந்தது இவவாறு சேவல் வானரமெனனு மிரணடும பிறககவும, வெற்றி தஙகிய பத்திர சேனன தன குழந்தையை மதித்துப் புகழ் தரத்தகக சுதனமா வென அருமையான பெயரிட்டான எ-று. (கசு)

சுதன்மா-இந்திரன் வசந்த மணடபம், நற்றரும முடையவன.

காலமோாந்தறி யமைச்சனு மீன்றகான் முளைககுச
சாலு நனமையிற றாரக னெனுமபெயா தந்தா
னேனு மீஙகிவா கறபன வெவவற்றையு முணாந்தா
வால வேனிலா னெனபபொலி வெழிலொடும வளாந்தார.

(இ-ள்.) ஜனனகாலத்தை ஆலோசித்தறிந்த அவன மந்திரியும தான பெற்ற புதல்வனுககு விசேடித்த நனமையாலேதாரகனெனறு பெயரிட்டான. பொருந்திய இவாகளிருவரும, கறகபபடுவன வாகிய அனைத்தையுங கற்று, பாலியபருவமுற்றமன்மதனெனச சொலலுமபடி பிரகாசிககின்ற அழகோடு வளாந்தாாகள. எ-று. (கஎ)

குரும ணிககலன் பலவுள புனைகிலா கொடுஙகோ
லொருவி நினறருண் மனனவ னுயிரையொத் துணாந்தா
ரிருவ ராவியு முடலுமொத் தியஙகுவா ரெமமான
கருத்து ருத்திர வககமே வேணடுவா கருத்தால,

(இ-ள்.) நிறந்தஙகிய நவமணிகள் பதித்த பலவகையாபரணஙகளை அணியாதவாகளாய, கொடுஙகோல நீஙகி நிலைத்து அரசாளும் பத்திரசேனனெனனும் மன்னனது உயிரபோலத் தெளிந்தவாகளாய, சுதனமா தாரகனெனும் இருவா உடலுமுயிருமபோலச் சஞ்சரிபபவாகளாய, எமது சிவபெருமானது கருத்ததகக உருத்திராகக மணியையே நினைபபுடன் இசசிப்பாாகள. எ-று.

பொன்செய் மாமுடி யரசமைச சுரியராய்ப புகுந்து
முனசெய நலவினைத் தொடாபினுன் முபபுரஞ் செகுத்தோற்
கனபு செய்தன ருருத்திர வககமே யணிவாா
மனப தைககினி தளித்துல களித்தனா மரபால.

(இ-ள்.) பொன்னாற் செய்த சிறந்த மகுடந்தரித்த அரசனாகவும் மந்திரியாகவும் தக்கபருவமெய்தியவாகளாய்ப் பிரவேசித்து, சென்ற பிறவியிற்

செய்த புண்ணியத்தொடர்பினாலே, திரிபுரங்களை யெரித்தவராகிய சிவபெரு மானுக்கு அன்பு பூண்டவர்களாகவும், உருத்திராக்க மணியையே தரிப்பவர்க ளாகவும், தம்மரசுரிமையிலுள்ள குடிகளுக்கு நன்மைபாலித்து முறைப்படி உல கத்தை யரசுசெய்தனர். எ - று. (க௯)

உலகெ லாமபொது வறப்புரந் தோம்பிய பின்ன
ரலகில் செல்வமு மாயுவுந் துறந்தரா வணிந்த
புலவு முத்தலைச் சூலிவெண் கைலையிற் புகுந்தார்
திலக வாணுத னந்தையு மகத்தி சிறந்தாள்.

(இ - ள்.) உலகமுழுவதையும் பொதுத்தன்மையினின்று நீக்கி [தமக்கே யுரிமையாக்கி] அரசு செலுத்திய பிறகு, எல்லையில்லாத செல்வத்தையும் ஆயுளையும் நீங்கப்பெற்றவர்களாய், சர்ப்பாபரணம் பூண்ட புலால் மணங் கமழும் முத்தலைச்சூலமேந்திய சிவபெருமானது வெண்மை தங்கிய கைலாய கிரியிற் சேர்ந்தார்கள். திலகமணிந்த ஒளிதங்கிய நெற்றியையுடைய நந்தை யென்பாளும் அக்கைலாயபதவியை யடைந்தாள். எ - று. (௨0)

கேட்கு நன்கதை யின்னுமொன் றுளதது கேண்மின்
வாட்க டுந்திறற் புட்கர தேயத்து மன்னன்
கோட்கொ ளுந்திறற் சவுமியன் குலமனை யொருவி
நாட்க ழித்தனன் பிறமனை நலனுகர் நயப்பால்.

(இ - ள்.) கேட்கத்தக்க நல்ல சரித்திரம் மற்றொன்றுண்டு அதனையுங் கேளுங்கள். வாட்போரில் மிகமேம்பட்ட வலிமைதங்கிய புட்கரதேசமன்னனாகிய யாவரும் மதித்தெண்ணத்தக்க பராக்கிரமமுடைய சௌமியனென்பவன் தனது குலபத்தினியைப் பிரிந்து ஏனைமாதர்களின் புணர்ச்சி யின்பத்தை நுகரும் ஆசையாற் பலகாலங்கழித்தான். எ - று. (௨க)

நலமெலா முழுக்கெனு மொழுக்கினை மறந்தன னகைக்கும்
புலமெலா முழுக்கினை ஸ்ரீதத் திலலெனப் புரிவான்
வலமெலா முழுக்கிள வனமுலை மனைவிபான் மணவா
னலமெலா முழுக்கிய வுளத்தனு யுலகுகொண் டளிப்பான்.

(இ - ள்.) சன்மார்க்கமெனும் ஒழுக்கத்தை மறந்து, நகைக்கத்தக்க துன் மார்க்கத்தை இதனிற் சிறந்த மார்க்கமில்லை யென்றுசெய்வான். சூதாடுகரு வியைத் தோற்கச்செய்யும் இளமைவாய்ந்த அழகிய முலைகளையுடைய பத்தினி யிடஞ்சேரான். களங்கந்தங்கிய மனமுடையவனாய் உலகத்தை யரசாட்சிசெய் வான். எ - று. (௨௨)

வார்க ருங்குழல் வசுமதி யெனுமவன் மனைவி
யூர்த ருங்கர வளையின ளுயிர்ப்பெறி துயராள்
கூரு மைங்கணை படப்படத் தனுவுளாங் குழைவாள்
வேரி மென்மலர்ப் பாயலுந் தழலெழ வெதும்பும்.

(இ - ள்) நீண்ட கருமைவாய்ந்த வசுமதியென்று சொல்லப்படும் அவன் மனைவி, நழுவுகின்ற கைவளையலையணிந்தவளாயும், பெருமூச்சு விடுந்துன்ப முடையவளாயும், (மன்மதனது) கூரிய பஞ்சபாணங்களைத் தைக்குந்தோறும்

பறநத லேத்திறற பததிர சேனனோர் மனைவி
யறஞ்செய் தனமையால வாரண மவளவயிற றுதிப்ப.

(இ - ள்.) மிகச்சிறநத வுருததிராக்க மணியைத் தரிததிருநததினால் உயிர் துறநதிறநதுபோய், காஸ்மீர நாட்டையாணட வலிய வரசனாகவும், போர்க்களததில் வெற்றியடையும் பராககிரம சாலியாயுமிருநத பததிரசேன னுடைய வொப்பற்றமனைவி செய்த புணயததின் வசததால சேவல அவள வயிற்றிற் பிறககவும். எ - று. (கரு)

மற்றை வானர மன்னவ னமைசசனோ மனைபாற்
பெறற பேறெனச சென்றவ தரிததது பிறபபக
கொற்ற மன்னவன் றன்னுடைக குழவியைக குறிநதுச
சொறற ருஞ்சுதன் மாவென வருமபெயா சொறறுன.

(இ - ள்.) மற்றையதாகிய வானரம அப்பததிரசேனன மநதிரியின் ஒப்பற்ற மனைவியிடததில அவன புரிநத தவததாற பெறற பேறறினை யொத துப்பிறநதது இவவாறு சேவலவானரமெனனு மிரணடும பிறககவும, வெறறி தங்கிய பததிர சேனன் தன குழநதையை மதிநதுப் புகழ் தரததகக சுதனமா வென அருமையான பெயரிட்டான எ - று. (கசு)

சுதன்மா-இநதிரன் வசநத மணடபம், நற்றரும முடையவன.

காலமோாநதறி யமைசசனு மீன்றகான் முளைகருச
சாலு நனமையிற றாரக னெனுமபெயா தநதா
னேலு மீஙகிவா கறபன வெவவறறையு முணாநதாா
வால வேனிலா னெனபபொலி யெழிலொடும வளாநதாா.

(இ - ள்.) ஜனனகாலததை ஆலோசிததறிநத அவன மநதிரியும தான பெற்ற புதலவனுககு விசேடிதத நனமையாலேதாரகனெனறு பெயரிட்டான. பொருநதிய இவாகளிருவரும், கறகப்படுவன வாகிய அனைததையுங கறறு, பாலியபருவமுறறமன்மதனெனச் சொலலுமபடி பிரகாசிககினற அழகோடு வளாநதாாகள. எ - று. (கஎ)

குருமணிக்கலன் பலவுள புனைகிலா கொடுஙகோ
லொருவி நின்றருண் மனனவ னுயிரையொத துணாநதா
ரிருவ ராவியு முடலுமொத தியஙகுவா ரெமமான
கருதது ருததிர வககமே வேணடுவா கருததால,

(இ - ள.) நிறநதஙகிய நவமணிகள் பதித்த பலவகையாபரணஙகளை அணி யாதவாகளாய, கொடுஙகோல நீஙகி நிலைததது அரசாளும் பததிரசேனனென னும மனனனது உயிாபோலத தெளிநதவாகளாய, சுதனமா தாரகனெனும் இருவா உடலுமுயிருமபோலச் சஞ்சரிபபவாகளாய, எமது சிவபெருமானது கருதததகக உருததிராகக மணியையே நினைபபுடன இசசிப்பாாகள. எ - று.

பொன்செய் மாமுடி யரசமைச சுரியராய்ப புகுந்து
முனசெய நலவினைத தொடாபினை முபபுரஞ் செகுத்தோற்
கனபு செய்தன ருருததிர வககமே யணிவாா
மனப தைககினி தளிததுல களிததனா மரபால.

(இ - ள.) பொன்னாற் செய்த சிறநத மகுடநதரிதத அரசனாகவும் மநதிரி யாகவுந தக்கபருவமெயதியவாகளாய்ப் பிரவேசிதது, சென்ற பிறவியிற்

செய்த புண்ணியத்தொடர்பினாலே, திரிபுரங்களை யெரித்தவராகிய சிவபெரு மானுக்கு அன்பு பூண்டவர்களாகவும், உருத்திராக்க மணியையே தரிப்பவர்க ளாகவும், தம்மரசுரிமையிலுள்ள குடிகளுக்கு நன்மைபாலித்து முறைப்படி உல கத்தை யரசுசெய்தனர். எ - று. (கக)

உலகெலாம்பொது வறப்புரந் தோம்பிய பின்ன
ரலகில் செல்வமு மாயுவுந் துறந்தரா வணிந்த
புலவு முத்தலைச் சூலிவெண் கைலையிற் புகுந்தார்
திலக வாணுத னந்தையு மகத்தி சிறந்தாள்.

(இ - ள்.) உலகமுழுவதையும் பொதுத்தன்மையினின்று நீக்கி [தமக்கே யுரிமையாக்கி] அரசு செலுத்திய பிறகு, எல்லையில்லாத செல்வத்தையும் ஆயுளையும் நீங்கப்பெற்றவர்களாய், சர்ப்பாபரணம் பூண்ட புலான் மணங் கமழும் முத்தலைச்சூலமேந்திய சிவபெருமானது வெண்மை தங்கிய கைலாய கிரியிற் சேர்ந்தார்கள் திலகமணிந்த ஒளிதங்கிய நெற்றியையுடைய நந்தை யென்பாளும் அக்கைலாயபதவியை யடைந்தாள். எ - று. (உ0)

கேட்கு நன்கதை யின்னுமொன் றுளதது கேண்மின்
வாட்க டுந்திறற் புட்கர தேயத்து மன்னன்
கோட்கொ ளுந்திறற் சவுமியன் குலமனை யொருவி
நாட்க ழித்தனன் பிறமனை நலனுகர் நயப்பால்.

(இ - ள்.) கேட்கத்தக்க நல்ல சரித்திரம் மற்றொன்றுண்டு அதனையுங் கேளுங்கள். வாட்போரில் மிகமேம்பட்ட வலிமைதங்கிய புட்கரதேசமன்ன னாகிய யாவரும் மதித்தெண்ணத்தக்க பராக்கிரமமுடைய சௌமியனென்ப வன் தனது குலபத்தினியைப் பிரிந்து ஏனைமாதர்களின் புணர்ச்சி யின்பத்தை நுகரும் ஆசையாற் பலகாலங்கழித்தான். எ - று. (உக)

நலமெலா மொழுக்கெனு மொழுக்கினை மறந்தன னகைக்கும்
புலமெலா மொழுக்கினை யிழைத்தலி லெனப் புரிவான்
வலமெலா மொழுக்கிள வனமுலை மனைவியா மணவா
னலமெலா மொழுக்கிய வுளத்தனு யுலகுகொண் டளிப்பான்.

(இ - ள்.) சன்மார்க்கமெனும் ஒழுக்கத்தை மறந்து, நகைக்கத்தக்க துன் மார்க்கத்தை இதனிற் சிறந்த மார்க்கமில்லை யெனறுசெய்வான். சூதாடுக்கரு வியைத் தோற்கச்செய்யும் இளமைவாய்ந்த அழகிய முலைகளையுடைய பத்தினி யிடஞ்சேரான். களங்கந்தங்கிய மனமுடையவனாய உலகத்தை யரசாட்சிசெய் வான். எ - று. (உஉ)

வார்க ருங்குழல் வசுமதி யெனுமவன் மனைவி
யூர்த ருங்கர வளையினளுயிர்ப்பெறி துயராள்
கூரு மைங்கணை பட்டபட்ட தடங்களுற்றுங் குழைவாள்
வேரி மென்மலர்ப் பாயலுந் தழலெழ வெதும்பும்.

(இ - ள்.) நீண்ட கருமைவாய்ந்த வசுமதியென்று சொல்லப்படும் அவன் மனைவி, நழுவுகின்ற கைவளையலையணிந்தவளாயும், பெருமூச்சு விடுந்துன்ப முடையவளாயும், (மன்மதனது) கூரிய பஞ்சபாணங்களை தைக்குந்தோறும்

மனம் வருந்துவாள். தேனோடு கூடிய மெல்லிய புஷ்பசயனமும் சூடுமிக வெப்பமெய்தும். எ - று. (உரு)

செய்யதா மரைநா யகியி வளெனச் சிறந்தாள்
வெய்ய வேந்தனைத் துணைப்புயந் தழுவுவான் விரும்பி
மைய னுண்மருங் கெனத்தன தங்கமெலிந் தயர்ந்தாள்
கைய றுந்துய ருழந்துளம் பலபடக் கவல்வாள்.

(இ - ள்.) செந்தாமரை மலரிலெழுந்தருளிய இலக்குமி இவளேயென்று சொல்ல அழகின் மேம்பட்ட வசுமதி, கொடியோனாகிய அரசனுடைய இரு தோள்களையும் அணைவதற்கு ஆசைகொண்டு, (உண்டில்லையெனச்) சந்தேகிக்கும் நுண்ணிய தன்னிடைபோல உடல் வருந்திச் சோர்ந்தவளாய், நீக்க மற்ற துன்பமெய்தி மனம் பலவாறு கருத வருந்துவாள். எ - று. (உச)

அன்ன காலையி லடுதிற லரசர்கோன் றனக்குப்
பன்னு நான்மறைப் புரோகித னுள்ளனவன் பன்னி
யுன்னு கற்பினள் சத்திய விரதையென் றொருத்தி
தன்னை வந்துற வுரைத்தன ளாங்கவள் சார்ந்தாள்.

(இ - ள்.) அத்தருணத்தில், போர்வல்லமையுடைய அம்மன்னர் மன்னனுக்கு, சொல்லுகின்ற நான்கு வேதங்களையுமுணர்ந்த புரோகிதனொருவனுண்டு. அவன் மனைவி, யாவரும் எண்ணற்குரிய கற்புடைய சத்தியவிரதை யென்னும் பெயர் கொண்ட ஒருத்தியை வரும்படி சொல்லியனுப்பினள். அவள் அங் கெய்தினள். எ - று. (உ௫)

அரச னென்றனை யிகழ்ந்தனன் பிறர்க்குள மளித்தான்
வரைசெய் திண்புய னெனதுள நீங்கலான் வருந்திக்
கரைசெ யற்கருங் காதலங் கடலிடைக் கிடந்தே
னுரைசெ யிங்கிதற் குபாயமென் றழுதழு துரைப்ப.

(இ - ள்.) (அவளோடு அரசன் மனைவி) அரசனென்னை வெறுத்து அன் னியமாதர்மேலாசைவைத்தான். (ஆனாலும்) மலைபோலும் வலிய தோளை யுடைய மன்னவன் என்மனத்தைவிட்டு நீங்கினானில்லை. வருத்தமெய்தி அள விடற்கரிய ஆசைக்கடலிலமிழ்ந்தேன். இதற்கோருபாயஞ் சொல்லுகவென்று புலம்பிப் புலம்பிச்சொல்ல. எ - று. (உசு)

பெற்ற மேறிய வெம்பிரான் றிருவிழிப் பிறப்பென்
றுற்ற வாறுரைத் துருத்திர வக்கமொன் றுதவிக்
கற்றை வார்குழ லீங்கிது தரித்தியேற் கழற்கால்
கொற்ற வேந்தனுன் வசம்வரும் பிராமணி கூறுகாள்.

(இ - ள்.) இடபவாகனத்தி லாரோகணித்த எமது சிவபெருமான் திரு நேத்திரத்திலுதித்ததென்று, அவ்வாறு தோன்றிய சரித்திரத்தைச் சொல்லி, உருத்திராக்க மொன்றினைக் கொடுத்து, தொகுதியாக நீண்டிருக்குங் கூந்த லுடையாளே! இதனை நீ தரிப்பாயாகில், வீரக்கழலணிந்த காலையுடைய வெற் றிதங்கிய அரசன் உனபால் வருவான். ஏனைமாதரையடையான். எ-று. (உஎ)

நலமெ லுற்பிறந் திலங்குவை நனமகப் பெறுவை
தொலலை மால்விடை யெம்பிரான் றிருவரு டோய்வை

யில்ல றத்தினின் றிருஞ்சிறப் பெய்துவை யினிநீ
புலவெ லுதுடன வாழ்கெனப புகனறனள போனுள்.

(இ - ள்.) நல்ல அழகுண்டாகி விளங்குவாய். நற்புத்திரனைப் பெறுவாய். மழைமுதங்கிய பெரிய இடபத்தையுடைய எமது சிவபெருமான் திருவருளைப் பெறுவாய. இல்லறத்திலிருந்து மிகப்பெருமைபெறுவாய. பொலிவழிந்திராது இனி நீ வாழக்கடவாயென்று சொல்லிப்போயினன். எ - று. (உ அ)

தொழுத கையினள் வாங்கின டரிகதன டயில்போ
யழுத கணணிணை யரிபரந தாெழி லமைநதா
ளழுதை மனனவ னிணையளை நோககின னிரங்கி
யொழுகு சிநதனை யிவட்கல தியாவாககு முதவான.

(இ - ள்.) (அதுகேட்டவசுமதி) வணங்கிய கையுடையவளாய அவவுருத்திராக்கத்தை யேற்றுத்தரித்தாள நித்திரையிலலாது அழுதுகொணடிருநத இருவிழிகளும செவவரிபடாநது நிறைநது அழகு வரபபெற்றாள. அற்பனாகிய அவவரசன இவவசுமதியைககணடு மனமிரஙகி, முறைமையாய அமைநத நினைவு இவளிடத்திலலலாமல வேறொருவாபாலுஞ செலுததான. எ - று.

முகிழ்நத வெமமுலை முகததிடை முகமபுதைதத தொருவா
னெகிழ்நத சிநதையி னனையளு மவனபுய நீஙகாண
மகிழசசி கூாதர மாரனு மிரதியும போலவா
ரிகழசசி செய்தனா பிறாமனை யினனண மிருநதாா.

(இ - ள.) குவிநத வலிய தனஙகளையுடைய வசுமதியின முகததிலே முகததையழுததிபபிரியான. உருகிய மனததுடன வசுமதியும அவவரசன தோளைப பிரியாள சநதோஷமதிகரிகக (அவவிருவரும) மனமதனையும இரதியையும போலவாரகி அயலாாடனையை வெறுததவாகளாய இபபடியிருநதாாகள.

நாநத நாறுபூங குழலொடு மகததுறை நாளிற
புரிநத வோலகக மிறநதனன வெளளிடைப புகுநதான்
சுரநத வெமபடைத தானையந தொகுதியைப புரவான
பரநத சேனையுந திசைதொறுஞ் சென றது பாறி.

(இ - ள) கததூரிகமழுங கூநதலையுடைய வசுமதியோடு தனதரணமனையிலிருககுநாளில,ஒருநாள தானவிருமபிய கொலுச்சபையையகனறு அயலூருக்குப போயினன. பெருகிய வலிய ஆயுதஙகளைததாஙகிய சேனைத தொகுதியைககாககவிலலை. அதனுல, பரநத சேனையும திககுகடோறும ஓடிப்போயின. எ - று. (கூக)

சேனை போயது நோககின ரடுபடைத் திறலோா
கான நாணமலாக கழனிசூழ நாடெலாங கவரா
வேனை மாநகாக கொடிநுடங கிஞசிசூழந திறுததாா
மான வேறகா னென்செயகே னினியென மதிததான்.

(இ - ள.) சேனையோடிபபோனதை, போாசெயயததகக சேனையையுடைய வேறறரசரறிநது, சோலைகளும புதுமலாகளையுடைய கழனிகளுஞ் சூழ்நத அம்மனனவன நாடுமுழுவதையும் கவாநதுகொணடு, மற்றுளள இராஜதானி நகரததிலே கொடிகளசையும மதிலைசசுற்றிலுஞ சோநதாாகள. அச்சநதரும

வேற்படைதாங்கிய கையையுடைய அம்மன்னவன இனி யென்செயவே னென்று கருதினன். எ - று. (கூ௨)

அளந்த சேனைகொண் டவாகெதி ருடற்றுவா னகன்று
கிளாந்த மன்னவா சேனையைக குறுகினன் கிட்டி
யுளங்க டுத்தனன் பொருதன னன்னவாக் குடைந்தான்
வளைந்த விஞ்சிசூழ் மாநகா புகுந்தனன வருந்தி

(இ - ள்) கணக்கிட்ட சேனையைககொண்டு அவ்வரசாகளெதிரே போா செய்யச்சென்று, மனமகிழ்ச்சியுடைய அவ்வரசா சேனையை நெருங்கியடைந்து மனதிற கோபமுற்றெதிாத்தான அவ்வரசாகளுக்குத்தான் தோற்றுன. அதனுல வருத்தமெய்தி வளைந்த மதில சூழ்ந்த பெரிய தனது நகரத்திற பிரவேசித்தனன். எ - று. (கூகூ)

கொடிது டஙகிய கோயிலுட புகுந்துளங் குழைந்து
வடிநெ டுங்குழை மனைக்கம ரிருந்தவா வகுத்து
நெடிது நெஞ்சுகொண் டினைந்தனன வெருவர னிங்கான
கடிம லாககுழ லாஙகது கண்டனள கழறும.

(இ - ள்.) துவசங்களசைகின்ற அரண்மனையிற் பிரவேசித்து, மனங்கசிந்து, மிக நீண்ட கூந்தலையுடைய மனையாட்டிக்கு, தானயுற்றதற்றோற்றமையைக்கூறி, மிகவும மனவருத்தங்கொண்டு பயமகலாதவனு யிருந்தான. மணம பொருந்திய மலாமாலையணிந்த கூந்தலையுடைய அவனமனைவி அதனை நோக்கிச் சொலலுவாள, எ - று. (கூச)

ஏழை யாயினு மென்னுரை மனக்கொளி னிகலா
பூழி யாகுவா நினகுடை யொருதனிப பொலியும
வாழி மஙகைய ருணாத்துசொற கோடலே வழுவென
ருழி மாநிலம புகலவது மேறகொள லைய

(இ - ள.) அடியாள் பெண்பாலாயினும என சொலலை மனதிற கொண்டால, சத்துருக்கள சாமபராவாாகள. உமமுடைய வெணகொறறக்குடையே! ஒப்பற்றதாக விளங்கும மாதாகளுணாத்துகின்ற சொறகளைக கொளளறக தவறென்று, கடலசூழ்ந்த பெரிய நிலவுலகத்தாா சொலவதை மேறகொளள வேணடாம். தலைவரே! எ - று. (கூரு)

உருத்தி ரறகிரு கண்ணெனு முருத்திர வககந
தரிபப துணடெனி லெவவுல குமபெறத தகுமான்
முருககு தெவவரு முனனிலாா முருங்குவ ரிதுநீ
யருத்தி கூாதர மேலவாக கேடடுணாந் தறிதி.

(இ - ள) உருத்திர மூாத்தியின் இருவிழிகளென்று சொல்லும உருத்திராக்கமணியைத தரிப்பீராஞல எலலா உலகங்களையும அடையலாகும். வருத்துகின்ற பகைவரும் முனனின்று எதிாக்கமாட்டாது அழிவாாகள். இதனைத தேவரீா ஆசைமிகும்படி பெரியோாை விசாரித்து ஆலோசித்தறியக் கடவீா.

என்வு ாைத்தசொற கேட்டுளத துணாந்துயி ரன்ன
மனைவி சொற்றசொன மறுத்திலனுகிமா மறைநூல்
வினைய மோாந்தறி புரோகிதற கொணாகென விளித்தா
ணைய னெய்தின னவனுாை யாங்கவற கறைந்தான.

(இ - ள்) என்று வசுமதிகூறிய வார்த்தையைக்கேட்டு மனதில் யோசித்து, உயிர்போன்ற மனையாட்டி சொல்லியசொற்களைத் தடுக்காதவனாகி, சிறந்த வேதநூல்களை நன்கு கற்றுணர்ந்த புரோகிதனைக் கொண்டுவருகவென ஆளவிட்டு, அப்புரோகிதன் வந்தனன். தன் மனைவியின் வார்த்தையை அப்புரோகிதனோடு சொன்னான். எ - று. (௩௭)

கேட்ட வேதிய னுவகையிற் கிளர்ந்தன னாகித்
தோட்ட டங்களு முள்ளமுந் துணுக்குறச் சொல்வா
னோட்டு வெள்விடை யவனணி யுருத்திர வக்கம்
பூட்டி டுங்கல னாமென வான்முறை புனையின்.

(இ - ள்.) சொல்லக்கேட்ட புரோகிதன், சந்தோஷத்தில் மிகுந்தவனாகி, பரந்ததோள்களும் மனமும் நடுங்கச்செய்யத்தக்க சொல்லுகின்றான். செலுத்துகின்ற வெள்ளிய இடபவாகனமுடைய சிவபெருமானது அழகிய உருத்திராக்கமானது அணியத்தக்க ஆபரணமாக விதிப்படி யணிந்தால். எ - று. (௩அ)

மாறு நீங்குவை யளவொழி மாநிதி வளர்ப்பை
யூறு நீங்குவை யும்பருந் தொழுவர்மற் றுனையே
யேறு யர்த்தவ னிணையடி பெறுகுவை யிதனைக்
கூறு சொன்முறை புனைகுதி யென்றனன் குரவன்.

(இ - ள்) பகைவரைத்தவிர்வாய். எல்லையில்லாத பெருஞ் செல்வத்தை விர்த்தி செய்வாய். துன்பகலுவாய். உன்னைத் தேவர்களும் வணங்குவார்கள். இடபத்தைக் கொடியாக உயர்த்திய சிவபெருமானது உபயபாதங்களை யடைவாய். இதனை நாம் சொல்லுகின்ற கட்டளையின் முறைப்படி யணியக் கடவா யென்று புரோகிதன் கூறினன். எ - று. (௩௯)

தீதி லான்மறைப் புரோகிதன் சொன்முறை தெரிந்தா
னாதி நாயகன் கண்ணெனு முருத்திர வக்கம்
பேதி யாதுகொண் டாயிரம் பொறுத்தனன் பின்னர்
மாது மத்துணை பொறுத்தன ளவ் வானுளோர் மதிக்க.

(இ - ள்) குற்றமில்லாத நான்கு வேதங்களையுமுணர்ந்த புரோகிதன் சொல்லிய முறையை யுணர்ந்தான். (அப்படியே ஆதிநாயகனாகிய) சிவபெருமானது திருவிழியென்னும் உருத்திராக்க மணியை மனவேறுபாடின்றி விருப்போடு ஆயிரம் அணிந்தான். அதன்பின்னர், அவன் மனைவியும் தேவர்கள் துதிக்கும்படி அவ்வளவினவாகிய உருத்திராக்க மணிந்தனள். எ - று. (௪0)

பின்ன ரன்னவன் சேனையி னுடனெழீஇப் பெருவான்
மன்னு பொற்கொடி நுடங்கிய கொடிஞ்சிமான் றேர்மே
லன்ன மன்னளைப் பாகென வமைத்திக லமர்க்குத்
துன்ன ருங்கடுஞ் சினந்தலைக் கொண்டனன் றொடர்ந்தான்.

(இ - ள்.) பின்னர், அவ்வரசன் தன்சேனையோடு புறப்பட்டு, பெரிய ஆகாயத்தில் நிலைபெற்ற அழகிய துவசங்கள் அசையுங்கொடிஞ்சியையுடைய, குதிரை பூட்டிய தேர்மிசையூர்ந்து, அன்னம்போல்வாளாகிய தன்மனைவியைச் சாரதியாக நிறுத்தி வலிதங்கியபோருக்கு, அடைதற்கரிய பெருங்கோபமிக்கவனாய்ச் சென்றனன். எ - று. (௪௧)

தொடர்ந்த சேனையு ந தானுமாய்த தோன்றலுந் தொடர்ந்து
படர்ந்த சேனைகொண் டெதிாந்தனர் பகைபபுல வேநதா
மிடைந்த சேனையின் றெதிரெதி ருடற்றலும் வெகுளாக
கடந்த வெமபுலத தலையலா புறநதரக கடிந்தான்.

(இ - ள்) தன்னைப் பின்றொடர்ந்த சேனையுநதானுமாகக காணப்படவும், பகைபபுலமனனாகள் தஙகள பரவிய சேனையோடு எதிர்ததுப்போாசெயதார்கள. நெருஙகிய இருதிறச் சேனைகளும் எதிாநின்று ஒனறோடொன்று போாசெயயவும், அவவரசன் கோபமுறறுத் தன் கட்டளை கடநத மறுபுலபபகைஞரை முதுகுகாட்டியோடத துரததினன. எ - று. (சஉ)

போன போனதிக கறிநதில ரெதிரமா புரிநதார்
மான வேந்தனு மன்னவா பெருநிலம வவவித
தானை காவலாக களிததனன் றனகை ரடைநதான்
ஞான நாயகன் விழிமணிப பெருமையாா நவிலவுரா.

(இ - ள.) அவாகள சென்ற சென்ற திசைகளை ஒருவரும அறியவில்லை. அச்சததையுணடு செயயும்வேலேநதிய அரசனும அபபகைமனனருடைய பெரிய பூமியைக கைப்பறறிச் சேனாநாயகாகட்குக கொடுததுத தனனகரமடைநதான். ஆனபடியால ஞானநாயகனாகிய சிவபெருமானுடைய உருததிராககமணியின பிரபாவததை எவாதாம சொலலவலலவா ? எ - று. (சந)

தனிபபெ ருங்குடை பொதுவற நிழறறினன் றனது
கனிதத சிநதையி னுருததிர மணியணி கழறறான்
பனிபபெ ருஙகட லுடுததகன் மாநிலப பரபபி
னனைதது ளோாையு மமமணி பொறுததிரென் றறைநதான.

(இ - ள.) தனிமையாகிய வெணகொற்றககுடையைப பொதுததனமை நீககிததானே நிழறறினன. தன கனிவுறற மனததோடு உருத்திராகக மணிவடததைக கழற்றுதவனாகி, குளிர்ச்சி தஙகிய பெரிய கடல சூழநத பரநத பூலோக முழுவதும் யாவரையும் அவவுருததிராகக மணியை அணியுஙகளென்று கட்டளையிட்டான. எ - று. (சச)

உலகம யாவையு முருததிர மாமணி புனைவித்
தலகில் வெண்குடை யரசளித தினிதுறை யருநாள
மலாத ருநதொடைச சௌமியன் றனககெழின மைநத
ரிலகு மாமணிப பெருமையிற றோன்றின ரிருவா.

(இ - ள்) உலகிலுளளோ ரெல்லாரையும உருத்திராகக மணியையணியச்செயது, குற்றமில்லாத வெணகொற்றக குடை நிழலில் இராசரிக நடததஇனிதாக வசிததிருககுங காலததில், மலாமாலை யணிநத சௌமியனெனும் அவ்வரசனுககுப் பிரகாசிககின்ற உருத்திராகக மணியின் சிறப்பினால் அழகிய புத்திரிகள் பிறநதாாகள். எ - று. (சரு)

இவரை யன்றியு மிருமகட பயநதன னென்ப
தவமு யறசியிற றருமிரு மைநதர்க டமககன
றவிர தன்னதி ரதனெனப பெறுமபெய ரறைந்தான்
கவிகை மன்னவன் பினனிரு மகளிாபோ கழறுமம.

(இ - ள்.) இவவிரண்டு புததிரர்களையல்லாமலும் இருபுததிரிகளையும் பெற்ருனென்று (முனனோர்) சொல்லுவார்கள். தவமுயர்சியாற் பெற்ற இருகுமாராகளுக்கு அவீரதன் அதிரதனெனறு பெயரிட்டான். வெணகொற்றககுடையையுடைய அரசன் அதன பின்னா இருகுமாரததிகட்கும் பெயர்சொல்லுகினருன. எ - று. (சகூ)

காலஞானியென் ெருருமகட குமைததனன் களிகூர்
வால சிததிராங் கனெயென மறறவட் குமைததா
ளுலு மககளு முருததிர நன்மணி தரிககச
சாலு மெனறவை கொடுததிட வாஙகுபு தரித்தாா.

(இ - ள.) காலஞானியெனறு ஒரு குமாரததிககுப பெயாவைததான். ஆசைமிகக இளமை தஙகிய சிததிராஙகனெயெனறு மற்ெருருகுமாரததிககுக கூறினன். நான்குகுழநதைகளும் நலல உருததிராககமணி தரிககததகுமெனறு கொடுகக, அவாகள அஙஙனமே அவற்றை வாஙகித தரிததாாகள. எ - று.

இததி றததின ரிவரிவ ணிருநதன ரிபபான்
மைதத டமபொழில் வளவய லுடுததமே ளுட்டு
மெயதத நனனெறிப பிரமநா தனனெனும வேநதன
முதத வெணகுடைக கனகழ லொருதனி முதலவன.

(இ - ள.) இவாகள் இததிறததினராகி இப்படி இருநதாாகள். இதன் மேல், மேகநதவழும விசாலமான சோலைகளும வளாநதஙகிய வயலகளுஞ் சூழ்நத மேனுட்டிலே, உணமையாகிய நலலொழுககமுடைய பிரமநாதன எனும் மனனவன, வெளளிய முததுககுடையையும, ஒலிககினற வீரகணடாமணியையு முடைய ஒரு ஒப்பறற அரசனிருநதான. எ - று. (சஅ)

அனைய மன்னவ னருந்தவ முயறசியி னளிதத
தநய ஞகிய தாமரைக கண்ணனத தனிககோற
புனைபொ லனகழற சௌமியன் றவநதரு புதலவி
வனைக ருஙகழற காலஞா னியைசசென்று மணநதான.

(இ - ள) அததகைய பிரமநாதனுடைய அருநதவப் பிரயததனததாற் பெற்ற புதல்வனுகிய கமலாககனென்பவன, அநத ஒப்பறற செஙகோலையும அலஙகரிககினற பொனனுலான வீரககழலையுமுடைய சௌமியனுடைய தவப் புதல்வியாகிய அழகிய கரிய கூநதலையுடைய காலஞானியைச சென்றுமணஞ் செயதான். எ - று. (சகூ)

வன்னி முன்னரின் மணநதனன் மணவினை முறறி
யின்ன லநதரு மணவினை யவளொடு மெயதிக்
கன்னி நன்னலங் காமுற வாஙகது கருதிப
பினன கநதரு தொடையின ளவற்கெதிா பேசும.

(இ - ள்.) அககினியின முன்பாக மணஞ்செயதவன, விவாகச்சடஙகுகள் முடிநது இனிய சுகததைதத தரததகக மனையாட்டியோடு தன்னகரடைநது, அப்பெணணின் கலவியினபததை விரும்ப, பினனலினகண பலமலா மாலையணிநத காலஞானி அககமலாக்கனுககெதிா சொலலுகினருள். எ - று. (நo)

அரசா தொல்குலத துதிததனை யாயினு மரச
வுரைசெ யறகருந தன்மைய வுருததிர வக்கஞ

சிரமணிந்தனை நீணுடுதியலலையேற நீணடேல
வரைசெய திண்புய மறுத்தனன வேண்டலை மணந்தல.

(இ - ள்.) அரசனே! பழமையாகிய க்ஷத்திரிய குலத்திற் பிறந்தாயென்றாலும், சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய உருத்திராக்கமணியைச் சிரசிற் றரித்துக்கொண்டு என்னைப்பரிசிக்கக்கடவாய்; அல்லாவிடில் என்னைப் பரிசிக்க வேண்டாம். மலைபோலும் வலிய தோளைத்தழுவவேண்டாமெனத் தடுத்தாள்.

என்னக் கேட்டுழி முறுவலித் திருங்கழல வேந்தன்
பொன்னிற் பூண்பன வேண்டுவ வுளவெனப புகலா
நின்னிற பூணுதி யென்றுநீ நிகழ்த்திய மணிதான்
மன்னாக காவதொன்றனறென வுரைத்தெதிர் மறுத்தான.

(இ - ள்) என்று சொல்லக்கேட்டபோது, வலிய வீரக்கழலணிந்த கமலாக்கன் புன்னகைசெய்து பொன்னாபரணங்களிலணியத்தகுவன கணக்கின்றி யிருக்கின்றன வெனக்கூறி, உன்னாலணிக வென்று நீகூறிய உருத்திராக்கமணியானது அரசர்களுக்கு உரித்தான தொன்றன்று எனக்கூறி எதிராகத் தடுத்தான். எ - று. (௩௨)

ஆய மாமணி யுருத்திர வக்கமுற் றணிந்தார்
மாயி ருமபுவிச செலவராய மன்னரிற சிறப்பா
ரேய வெள்ளியங் கைலைவீற றிருப்பரீ திகழ்ந்தோர்
பாய வெண்டிரை நிலத்துழல பஞ்சபா தகரே.

(இ - ள்.) (காலஞானி சொல்லுகின்றாள்.) உருத்திராக்கமாகிய சிறந்த மணியையுடல் முழுதுந்தரித்தவர்கள் சிறந்த பெரிய பூலோகத்தில் தனவான்களாய அரசர்களாய் மேம்படுவார்கள். பொருந்திய வெள்ளிமலையாகிய திருக்கைலாயத்தில் வீற்றிருப்பார்கள். இதனை நிந்தித்தோர் பரந்த வெள்ளிய அலைகள் சூழ்ந்த பூமியில் அலையும் பஞ்சமாபாதகர்களாவார்கள். எ - று. (௩௩)

ஆகமத்துறை முற்றுணர்ந் தறிந்தவர்க் கொணர்ந்து
யோக நாயகன விழிமணிப பெருமைகேட் டுணர்ந்து
நீக வன்மொழி சிந்தனை நிரம்பியொத் தனையே
லேகன மாமணி புனைகுதி யென்றன ளிறைவி.

(இ - ள்.) ஆகமநூல்களில் முழுதுணர்ந்த அறிஞர்களை விளித்து, யோகநாயகனாகிய சிவபெருமானது உருத்திராக்கமணியின் பிரபாவத்தை விசாரித்தறிந்து, நீ மயங்கிய அறிவை நிரம்பியொப்புவாயாகில், ஏகநாயகனாகியசிவபெருமானது சிறந்த உருத்திராக்கமணியை யணிகுக வென்றரசி கூறினள். எ-று.

யாவ ராயினு நாடுனெடுத் துரைப்பவர்க் கொண்டு
பாவை நீயத னிலைமையைப பகர்தரப பணித்தாற
பூவை நானுனக் கெனக்குநீ புருடனா குதியென
மேமொழி லூழ்வினை வலியினா லுணர்ந்தில னுரைத்தான.

(இ - ள்.) நான் சொல்பவர்கள் எவரையாயினுங் கொண்டு நீ யவவுருத்திராக்கத்தின் சிறப்பைச் சொல்லச் செய்வாயாயின், பாவைபோல்வாளே! நானுனக்கு மனைவி. நீ யெனக்கு நாயகனாகுக வென்று, கெடாத ஊழ்வினைவசத்தால கமலாக்கன் றியாது கூறினான். எ - று. (௩௫)

கன்னி யவ்வணம பொருநதினள் கழிநதது கங்கு
லன்ன மெனனடைக கருஙகுயி லீனயவ ளோடும
பொனன லங்கொளி மண்டபம் புலரியிற் புகுந்தான்
பனனு நானமறை யவரொடு மரசரும படாநதார்.

(இ - ள்.) காலஞானியும அவ்வகைக கிணஙகினள. இரவு நீஙகிற்று, அன்னம்போன்ற மெல்லிய நடையையுங கரிய குயில்போனற குரலையுமுடைய காலஞானியோடும காலையில பொனனுலலஙகரிதது விளஙகுங கொலுமணடபததில அரசன் பிரவேசிததான். சொல்லுகின்ற நானகு வேதமுணாநத அநதணருமரசருமாஙகுற்றாகள. எ - று. (கூக)

இவாசொற் றலது தேறுது மென்றுநீ குறிதத
வவரைக காட்டுதி யெனறன ளாயிழை யரசன
சுவரிற நீட்டிய மாயவன் றுயிலுருச சுட்டி
யிவரைக கொணடுநீ பகாவியெனை றிசைததன னிகலி.

(இ - ள.) ஆராயநத ஆபரணஙகளை யணிநத காலஞானி, இவாகள சொனனுலதனை யுணாவோமெனறு, நீ குறிபபிடட அவரைக காட்டுகவென றாள. அரசனுகிய கமலாககன கோபிதது, சுவாததலததிலெழுதிய திருமா லின சயனகோலததிருவுருவைச் சுட்டிககாட்டி யிவரைக கொணடு நீ சொலலு விப்பாயாகவெனறு கூறினன. எ - று. (கஎ)

நிலேக லஙகல ளீனயநற கிசைநதன ணின்று
ளலேத டஙகட லிருவிழி துயிறறுமோ ரவனைத
தொலேவின மாமணிப பெருமையைச சொலசசொலி யருளென்
றிலகு வெணமதி யணிநரும புனிதனை யிரப்பாள.

(இ - ள) மனநிலேகலஙகாதவளா யதறகுச்சமமதிததுநினறு, அலேவீசும விசாலமான திருப்பாற்கடலில இருகணகளுந துயிலுகின்ற வொப்பறற அத திருமாலேக கெடுதலிலலாத சிறநத உருததிராககமணியின சிறப்பையுரைககும படி யுபைததருளவேணடுமெனறு, பிரகாசிககின்ற வெள்ளிய (பிறைச்) சந திரனையணிநத சிவபெருமானைப் பிராாததிப்பாள. எ - று. (கஅ)

கோச்சகக்கலிப்பா.

வெண்ணீ றணிநத விமலா விரிசடைமேற
றெணணீா பொறுதத சிவானநத வெளளமே
பண்ணீா மொழியொருததி பஙகா கடுவொடுககு
மொணணில கணடா வுயிாககுதவ வேணடுமால.

(இ - ள) திருவெணணீறு தரிதத மலரகிதனே! பரநத சடையின்மேல் தெளிநத கஙகாசலததைததாஙகிய சிவானநதப் பெருககமே! பணணின்றன மையமைநத சொலலேயுடைய உமாபிராட்டியை யொருபாகததிலுடைய வனே! ஆலால விடததையொடுககிய வொளிதஙகிய திரு நீலகணடனே! அடியேனுடைய உயிருககுதவி செயயவேண்டும். எ - று. (கக)

எனப வொருபபா யனமா யிருநிலனும
வானத் தளவு மருண்டார்க்குடி வநதிலா

பூனெக்க வன்பாக் குடனிறபா யெனபதெலாங
காணக குழல்பஙகா விததலையிற காணம்பறை.

(இ - ள) மலைபோன்ற பன்றியா யனனமாய்ப் பெரிய பூமிமுழுவதும ஆகாயம வரையும மயக்குற்ற திருமால பிரமாகளுககுங காணபபடாதவனே! எனபுகள் நெக்குவிட்டுருகிய அடியாாகளுககுடனே தோன்றுபவனே! [உட னிருப்பவன்] என்று சொல்லுவதெலலா ம மனை ம வீசுங கூநதலையுடையவுமா தேவிபாகனே! இவவிடததிற காணபபோகினறேன. எ - று. (சுo)

மையாா கனததாய மறியாய் மழுபபடையாய்
பையா டரவணைய பாயவிடையா யனபிலாககுப
பொயயாய் பிறநதிறவாப புணணியா வெனமபாலவாா
மெய்யாய் நினைததேன முடிததருள வேணடுமால.

(இ . ள.) விடமபொருநதிய கணடததையுடையவனே ? மானேநதிய வனே! மழுவாயுதந தாஙகியவனே! படமவிரிததாடும ஆதிசேடனுகுகு சாப்ப சயனததையுடைய பாயநது செலலுமிடபததை வாகனமாககொணடவனே! அனபில்லாதவாககுப பொயயானவனே! பிறதத லிறத்தலிலலாத புணணிய சொரூபியே! என்போனறவாகளுககு மெயயானவனே! அடியானொன்று கருதினேனததை நிறைவேற்றவேணடும, எ - று. (சுக)

என்று விழிமுகிழ்ததுக கையேந்தி யெக்குறறு
நின்று வருநது நிலைபுணாநதா னெமபிரா
னன்று சுவமொழுது மாடரவிற கணடுயிலுங
குன்றமெடுததோ னெழுநதுவிழி கொட்டினன்.

(இ . ள்.) என்று கண்களை மூடிக் கையையேநதி யேககமடைநது நின்று வருநதுகினற நிலைமையை யெமது சிவபெருமானறிநதனர். அப்பொழுது அச்சுவாததலததில சிததிரிததிருநத படமெடுததாடும பாம்பணையில அறிது யில் கூருங கோவாததனமலை யெடுததிருமால எழுநது நின்று கணகளை யிமைததனா. எ - று. (சுஉ)

பாடினு னெஞ்சம பதைப்பொழிநதா னுச்சிகரஞ்
சூடினுள பசுந துழாயமௌலித தூயோனைக
கூடினு னெநதா யுலகளநது கொணடருள
நீடினுய் நினற நிமலா சரனெனறுள.

(இ - ள்.) (காலஞானி) தோததிரஞ்செயதாள. மனநடுககமகன்றுள. உச் சியில் கைகளைக்கூப்பினுள். பசிய துளபமாலையணிநத திருமுடியையுடையபுனி தராகிய திருமாலைச் சமீபிததாள். எநதையே! உலகததையளநது கொளளும் பொருட்டு விசுவரூபங்கொணடவனே! (காட்சிதநது) எதிர்நின்ற மலரகிதனே! அடைக்கலமென்றுள். எ - று, (சுரு)

ஓதற் கரிய வுருததிரவக் கப்பெருமை
பூதாக் கறிவான புலபபடுத்தி யென்றருள
மாதர்க் காசே சௌமியர்கோன மாதவமே
யோதக கொழுநதே யுரைககே னெனபபுகல்வான்.

(இ - ள்.) சொல்லுதற்கருமையாகிய வுருத்திராக்கத்தின் சிறப்பை என் னுயிரா போலவார் அறியும்படி யறிவிப்பாயென்று பிரார்த்திக்க, பெண்கள் நாயகமே! சௌமியனென்னு மரசன் புரிந்தபெருந்தவமே! ஞானச்சுடரே! சொல்கின்றேமெனச் சொலவாராயினார். எ - று. (சுச)

ஊனுறு சூலி யுருத்திரவக் கப்பெருமை
யானோ புகலவே ளெனக்குமெளி தாயிற்றோ
வானு நதுபொரு ததாரக் கண்டா ரணிகைலைக்
கோனுகித் தேவர் குழாமபோற்ற நிற்பரால்.

(இ - ள்.) புலான மணங்கமழுஞ் சூலப்படைதாங்கிய சிவபெருமானது உருத்திராக்கத்தின் பெருமையை நானோ சொல்லவல்லேன்? எனக்கும் அது எளிதாக நின்றதோ? எளிதன்று! அதனையணிந்தவர்களைத் தெரிசித்தவர்கள் அழகிய கயிலாசபதியின் சாரூபமுற்றுத் தேவர்கூட்டங்கள் துதிக்கவிளங்கு வார்கள். எ - று. (சுரு)

சென்மித்த நாண்முதலாய்த் தீநெறிகட் சென்றுசென்று
வன்மித்த நெஞ்சராயக் கொன்றுண்ட வனகணுரு
நின்மித்த நான்ருணிமணிமலிமியி லொன்றணிந்தா
லென்மற றவாபெறுமபே றெமபனோக கெய்துவதே.

(இ - ள்.) பிறந்தநாண் முதலாகத் தீயொழுக்கங்களில் நடந்து நடந்து கடி னசித்தமுடையராய்க் கொன்றுபுசித்த வனகணருப, நியதிசெய்துகொ ண்டு சிவபெருமானருளிய பெருமைமிக்க வுருத்திராக்கமணியில் ஒன்றனைத் தரித்தாலவர்களடையும் பேறு எனபோலவார்களுக்கடையத்தக்கதோ! எ - ன.

யாது தவமிழைத்தா ராலு மிம்மணியோர்
போது தரித்திலரே லத்தவமும் பொய்யமையே
பூதி யுலோக முருக்கியுவா சிந்தூரத்
தாது கொடுத்திலரே லென்னுமத் தன்மையதே.

(இ - ள.) எத்தகைத் தவத்தைச் செய்தவர்களானாலும் இவ்வுருத்திராக்க மணியை யொருகாலமும் அணியாதிருப்பார்களானா லத்தத்தவமும் பொய்யே யாம் உலோகங்களை மூசையிலிட்டுருக்கினவர் வேதிச்சிந்தூரம் என்னும் பரிச வேதியை யதனுட்சோக்காவிடி லென்னபயனுண்டு? அதுபோலவேயாம். ()

அன்ன மணிப்பெருமை யென்னு ளளப்பரிதான
முன்னாப பிறந்திறவா மூாத்திமுகக கண்ணுகித்
தொன்மை யனவா யொழியாப பவந்தொலைக்கும்
தன்மை யுனைப்போ லெவருணாந்தா தையலே.

(இ - ள.) பெண்ணே! அத்தகைய உருத்திராக்கமணியின் மகிமையை என்னுலளவிட்டுச்சொல்ல முடியாது. பிறந்து இறக்குந்தன்மையற்ற சிவ பெருமானது முகத்தின்கண்ணுள்ள கண்ணுகி முதலிற்றோன்றி, பழமையாய் நீங்காது தொடரும் பிறவியை அது தொலைக்குந்தன்மையை உன்னைப்போல் யார்தாம் அறிந்துள்ளார்? (ஒருவருமிலர்) எ - று. (சுஅ)

என்னுடைய பலவு மெடுத்தோதி யெம்பிரான
பண்ணு கண்ணைப்புறத்து முன்போற றுயிலபயினருன

முன்னுன் மறையோர் முடிவேந்த ரெல்லோரும்
பொன்னுண் முளரிமயி லன்னவளைப் போற்றினர்.

(இ - ள்.) என்று (அவ்வுருத்திராக்கத்தின்) பல சிறப்புக்களையும் எடுத்துச்சொல்லி, எமதுபெருமானுகிய விஷ்ணுமூர்த்தி பண்டுபோல, விடப்பல்லையுடைய சேஷசயனத்தில் யோக நித்திரையிலிருந்தனர். முனிவராகிய நால்வேதமுணர்ந்த அந்தணர்களும் மகுடமணிந்த மன்னர்களும் ஆகிய அங்கிருந்த யாவரும், பொன்மயமாகிய அன்றலர்ந்த தாமரைமலரிலெழுந்தருளிய மயிலின் சாயலையுடைய திருமகள்போலவாளைத் துதிசெய்தார்கள்.

கண்டிதுவென் னென்று திகைத்த கமலாக்கன்
கொண்ட வதிசயத்தி னின்றுன குலத்தரசன்
ஒண்டொடித்தற சூழ்ந்த வுயிர்ப்பாங் கியர்குழுமிந்
திண்டிறல்வேன் மன்னாக கெதிர்நோக்கிச் செப்புவார்.

(இ - ள்.) இதனைப்பார்த்து என்ன அதிசயமென்று திகைப்பெய்திய கமலாக்கன் அதிசயங்கொண்டு நின்றுன. உயர்குலத்தரசனுன கமலாக்கன மனைவியாகிய காலஞானியைச்சூழ்ந்து நின்ற தோழியர்கள் கூடி, மிக்க வலி தங்கிய வேலேந்திய அரசனை எதிர்நோக்கிச் சொல்லுகின்றார்கள். எ - று. ()

வேந்தர் குலத்துதித்து வெண்குடையிற் பாரபுரக்கு
மாந்தரில் யாதொருவ னென்று மனநினையேல்
காந்தையரில் யாதொருத்தி யெனனுங் கருத்துளையாய்ப்
பூந்தளவ மூரலா ரினனுருவாய்ப் போதுதியால.

(இ - ள்.) அரச குலத்திற்றோன்றிவெண்கொற்றக்குடை நீழலில் உலகத்தைக்காக்கும் மானிடரில் யானுமொருவனென்று உன் மனத்திற் கருதாதே. அரச மங்கையர்களில் யாதொருத்தியென்னுங் கருத்துட்கொண்டு அழகிய முல்லையரும்புபோன்ற பல்வரிசையையுடைய மங்கையரது இனிய வடிவமாய் வருவாயாக. எ - று. (எக)

என்று ரவரை யெதிர்நோக்கான கீழ்நோக்கி
நின்று னுளத்து நிலையழிந்து செப்புவான்
குன்று ரிளமுலையா ளாளுருவங் கொண்டனளேற்
பின்றூழ் குழல்வனிதை யாவனெனப் பேசினுன.

(இ - ள்.) என்று கூறிய அம்மாதர்களை (அரசன்) நேர்நோக்காதவனாய்த் தலையிறங்கிப்பார்த்து நின்று, மனநிலைமை தவறிச்சொல்கின்றான். மலைபோன்று பூரித்த இளமைவாய்ந்த தனங்களையுடைய காலஞானி ஆணவடிவு மேற்கொள்வாளாகில் யானும் பின்னேதொங்கும் கூந்தலையுடைய பெண் வடிவமாவேனென்று சொன்னுன். எ - று. (எஉ)

அக்காலை யன்னவளு மாண்பாலா யானுறுப்பின
மிக்கா ளிவனுமொரு பெண்பாலாய் மேயினுன்
றொக்கா ரிவர்பெயரு மமமுறையே சூடினார்
முக்கா லமுமுணர்ந்தோர் மொய்குழலை வாழ்த்தினர்.

(இ - ள்.) அப்பொழுது காலஞானியும் ஆண்வடிவாகி ஆண்டன்மைக குரிய அவயவஙகளிற் சிறநதனள், இநதக்கமலாக்கனும் ஒரு பெண்வடிவைப் பொருநதினன். ஒன்று கூடிய அவ்விருவரும் தங்கள் பெயரைததாம் மேற் கொணட வடிவிற்கேற்பத் தரிததார்கள். திரிகால வாததமானஙகளையுமறிநத ஞானிகள் காலநேமியை வாழ்த்தினார்கள். எ - று. (எரு)

மாறு நலனுகர்ந்தா ரீங்கிருவர் மாநிலததோர்
கூறுப பழிசுமநதான மேனாட்டுக கோவேநதன்
சீறுக் கருணைச சவுமியனுந தனசெவியி
னேறுப பெரிதுவநதான் சென்ற விடைசிலநாள.

(இ - ள்.) இவர்களிருவரும் நீஙகாத இனப மநுபவிததார்கள் மேனாட்டுச் சககிரவாததியாகிய பிரமநாதன் பெரிய நிலவுலகததோா சொல்லும் பழிப்பை யடைநதான். சினஙகொளளாத கருணையையுடைய சௌமியனும் இச்செயதி கேளவியுற்று மிககக்களிப்படைநதான. இவவாறு சில நாட்கள கழிநதன.

கொங்கன் குடநாடா கோமான் சவுமியனு
மங்க ணரசுழிசசென் றையாவெங கோமகனா
மங்கையென நினமகளோா மைநதனெனப போபுனைநதாா
துங்க விதிநிலைமை யாரோ துடைததொழிபபாா.

(இ - ள.) கொஙகு நாடுடையவனும் மேனாட்டிறைவனுமாகிய பிரம நாதன, சௌமியன ஆள்கின்ற இராச சபையிற்போய, ஐயனே! என் சிறநத குமாரன் கமலாக்கன பெணணெனவும, உன குமாரததி காலஞானி ஒப்பற்ற ஆடவனாகவும பெயா தரிததுககொண்டாாகள. வெற்றிபொருநதிய விதியின் நிலைமையை யாாதாம் நீககி விலககுவோா? எ - று. (எ௬)

என்ப துரைத்தாங் கவறகிளையோ னென்னநின்ற
மின்பொருத வேலோன் விபூதன றனககுநீ
யன்பி னளிததசிததி ராங்கனையை நலகுதியே
லின்பப பெருமணஞ்செய் தினனே முடிததுமெனன.

(இ - ள்.) என்னும் விடயததைக்கூறி, இககமலாக்கனுககு இளையோனாகவு ளள மினனல் வீசும வேலேநதிய விபூதனுக்கு, நீ அன்போடுபெற்ற சிததிராங கனை யென்னுங கனனிகையைத தருவாயாயின, இனபநதருஞ சிறநத மண வினையைச்செயது இப்போதே முடிப்போமெனக கூற. எ - று. (எகு)

தம்மி லியைந்து மணமொழிநது தண்டரளக்
கொமமை வனமுலையைத தனமகறகுக கொண்டபினனர்ச
செமமைத தனிக்கோற குடநாடன் சேரலாகோன்
வெம்மைச சுரங்கழிய மேனாடு புககனனால.

(இ - ள்.) தமககுள் சம்மதிததது மணமபேசிக குளிாந்த முத்துமாலை யணிநத குவிவாகிய அழகிய தனமுள்ள சிததிராஙகனையைத தன் குமாரன் விபூதனுககு மனைவியாகக கொண்டபின்னர், ஒப்பற்றசெஙகோலுடைய மே னாட்டரசனாகிய சேரர்களின்றலைவன் [பிரமநாதன்] பெரியகாடுகளை யெல்லாங கடநது சேரநாட்டையடைநதான். எ - று. (எஎ)

மின்னிலைய வேலோன விபூத னொடுபரிய
தன்ன மனையசித்தி ராங்கனையும வைகினு
னுன்னருஞ்சீ ருலகு முருத்திரவக்க கந்தணிவார்
மன்னு பெருஞ்சிறப்பி னுடகழித்தார மாநிலத்தில்.

(இ - ள்.) மின்னலை வீசும் வேலையுடைய விபூதனோடும் அன்னம் போல் நடையையுடைய சித்திராங்கனையும் பிரியாமல் வாழ்ந்திருந்தாள். நினைத்தற் கரிய சிறப்பைக்கொடுக்கும் உருத்திராக்கமணியை நீங்காதவர்களாய இப்பெரிய பூமியில நிலைபெற்ற பெருஞ் சிறப்போடு தங்கள வாணாள் கழித்தார்கள.

குடக்கோனு மற்றைச சவுமியனுங் கோலக
கடற்கோ விருநிலத்துச செங்கோற கடனிறம்பா
துடற்கோவி யிட்ட வுருத்திரவக்க கத்தால
விடக்கோலக கண்டத்தான றென்கைலை மேயினா.

(இ - ள்.) சேரநாட்டிறைவனான பிரமநாதனும் மற்றவனாகிய சௌமிய னும அழகிய கடல்சூழ்ந்த பெரிய பூமியில செங்கோலை முறைதவறாமற் செலுத்தி, தங்களுடலிற் சூழ்ந்திருக்கும்படி தரித்த உருத்திராக்கமணியினால விடந்தங்கிய அழகிய கண்டத்தையுடைய சிவபெருமானது சிறந்த கைலாய பதவியை யடைந்தார்கள். எ - று. (எகூ)

என்று நிகழ்ந்தக்கதை யெனறு விருடிகட்குச
சூத னுரைத்தா னதுவுணர்ந்தார் தொன்மையோ
ராதி யுருத்திரவக்க கத்தி னணிபெருமை
யோதுவது நீர்கேட்க வினனு முளவென்றான.

(இ - ள) இது முன்னடந்த சரித்திரமென்று நைமிசாரணிய முனிவர்கட்குச் சூதமுனிவர் கூறியருளினார். பழமையாயுள்ள அம்முனிவர்கள் அதையறிந்தார்கள. முதற்கடவுளாகிய சிவபெருமானது உருத்திராக்கத்தினழகிய பெருமை நீங்கள கேட்கும்படி சொல்லத்தக்கது மற்றொன்றுண்டென்று சூதமுனிவர் சொல்லுகின்றார். எ - று. (அ0)

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொருதிரை புரட்டி மறுகிவீழ் பரவை புடைபடு நெடுநிலப் பரப்பிற்
றருதரு வுலகி னலவளஞ் சுரப்பத் தமனிய விஞ்சிசூழ் கிடக்குந்
திருந்திய திறற்பூச சக்கர மெனனுந் திருநக ரந்நகர சிறந்தோன
மருந்தினு மினிய சுப்பிர தீப னெனனுமோர் மறையவ னுளனால்.

(இ - ள்.) மோதுகின்ற அலைகள் புரட்டிச் சுழன்றுவீழுங் கடலசூழ்ந்த பெரிய பூலோகத்திலே, கற்பகத் தருவால வேண்டியவற்றைக் கொடுக்கப்பட்ட தேவலோகத்தைப்போல நல்லவளப்பங்கள விசேடிக்கப் பொன்மதில்கள் சூழ்ந்திருக்கும் திருத்தமான வலிதங்கிய பூச்சக்கர மென்னும் பெயர் தாங்கிய சிறந்த நகர மொன்றுள்ளது அந்நகரத்தில பெருமையமைந்தவனாகிய அமிழ்தினு மினிய சுப்பிரதீபனென்னும் அந்தணனொருவனிருந்தான். எ - று. (அக)

ஆங்கவ னருஞ்சீர் வளத்தொடுஞ் சிறக்கு மந்தண னன்னவன் றனக்குப, பூங்குழ லலங்கன மைந்தரு மவர்க்கு மைந்தரும பொலிதர

நின்றான், றேங்கம ழிழ்சு சென்னியா னடிக்கீழ்ச் சென்னிதாழ்ந்
திறைஞ்சுறுந் திறனு, மோங்கரு மறைதோந் துருத்திர வக்க மல்லது
புனைவதற் குணரான்.

(இ - ள்) அச்சுப்பிரதீபன அரிய சிறப்புற்ற வளங்களோடு பெருமை
வாய்ந்த அந்தணன, அவ்வந்தணனுக்கழகிய வீரக்கழலணிந்த புத்திரர்களும
அவர்களுக்குப் புத்திரர்களும் விளங்கும்படி வாழ்ந்தான. மணங்கமழுங் கொன
றைமாலையணிந்த முடியையுடைய சிவபெருமானது திருவடிகளில் சிரசைத்
தாழ்த்திப்பணிதலும பெருமைமிக்க அருமையாகிய வேதங்களுணர்ந்து உருத்
திராக்கமணியை யணிவது மல்லாமல் மற்றொன்றறியான எ - று (அஉ)

தனதகத தொழுகு மனைவியு மகாருந் தன்குலக் கிளைஞரும பசும
பொன், மனவிழைத் தணியு மணிவெறுத் தனரா யுருத்திர மணியொ
டுரு சிறப்பார, ரனையமா மணிபெற றணிகுநர்க் கல்லா லாரமு தளித்
திடான் மறையோ, னினையதோர் காலை யிவனையோ காங்க னென்னு
மோர் முனிவர னெதிர்ந்தான்.

(இ - ள்.) தன் வீட்டில வசிக்கும மனைவியும புதல்வரும தன்மரபினரா
கிய பந்துக்களும, பசும்பொன்னில இரத்தினங்களிழைத்துத் தரிக்கின்ற ஆப
ரணங்களை வெறுத்தவர்களாய உருத்திராக்கமணி யணிந்தே சிறப்படைவார
கள். அந்தச்சிறந்த உருத்திராக்கமணியைத் தரிப்பவர்கட்கே யல்லாமல
பிறர்க்கு நல்ல உணவையளிக்கமாட்டான. இப்படிப்பட்ட காலத்தில, இவ
வந்தணனை யோகாங்கரென்றொரு ஒப்பற்ற ஒருமுனிவர் கண்டார். எ - று.(அங)

ஆயமா தவத்தோ னெதிர்ந்து நோக்கு மருமறைச் சுபபிர தீபன,
றாயமா தவத்தி னொழுகின னெனினும பசியொடுந் துயரின னெனி
னும, போயநா ளுடையோ னுருத்திர மணியொன றணிந்திலாப புன
மையை னிவற்கு, மெயதோர் பிச்சை யளிக்கினும பாவ மென்றுளத்
துணர்ந்தனன வெகுண்டான.

(இ - ள்.) அத்தகைய யோகாங்க முனிவர் வருதலும், அவரைக்கண்ட
அரியவேதமுணர்ந்த சுப்பிரதீபர், இவன் மிக்க வயதுடையவனானாலும், உருத்
திராக்கமணி யொன்றேனும பூணடில்லாத அற்பனாயிருக்கின்றான் புனித
மான பெருந்தபோ மார்க்கத்தில நடந்தவனானாலும பசியோடு வருந்துகின்றவ
னானாலும இவனுக்கு இயைந்த ஒரு பிச்சையிடினும பாவமென்று தன மன
திற றெரிந்துகோபித்தார். எ - று. (அச)

எரிபெரும் பசியின் கடுவென வெடுக்கு மிருந்தவ னின்றிரந்
திரப்பப, புரியுமா தவத்தீ ருருத்திர மணியொன றணிந்திலீர் போ
கெனப புகன்று, னரிதுறும பசியி னின்றயோ காங்கன போகல னுங்க
வன் றன்னைத், தெரிதரு மறையோன சிறாவரைந் துரப்பித் தள்ளலும
வெகுண்டவன் செப்பும.

(இ - ள.) விடம்போல வயிற்றிலெரிகின்ற பெரும்பசியோடு பெருந்தவ
முடைய யோகாங்க முனிவர் நின்று நின்றுயாசிக்க, (சுப்பிரதீபர்) பெருந்தவ
முடையீர்! உருத்திராக்க மணியொன்றேனு மணிந்திலீர். போகுக வென்க
கூறினார், அரும்பெரும்பசியால வருந்திய யோகாங்கர் போனாரில்லை, அத்னைத

தெரிந்த அவ்வேதியருடைய சிறுவர்கள் அவயோசாங்கரைச் சூழ்ந்துகொண்டு கோபித்துத்தள்ளவும், அவயோசாங்கா கோபித்துக்கூறுவார். எ - று. (அ௫)

இரப்பவாக் கிரங்கி யீகலே மறுத்தா யெனதுமுத் தண்டு தொட்டிழுத்தாய், பரபபுநான் மறையோர் குலத்தினிற் றோன்றிய பாதகம பயின்றனை யென்று, வுரைத்தனள புறமபோய்த் தொடுகட லாடையுலகெலா மொருகுடை நிழறறப, புறகருமந நகரத தரசுழிச சென்றுனிவணிழைத் தனவெலாம புகன்றான்.

(இ-ள்.) யாசிப்போர்கரு மனமிரங்கிக் கொடுத்தாயில்லை; தடுத்தாய், என் திரிதண்டத்தைக கையாற் பிடிததிழுததாய். பரவிய நான்கு வேதமுணர்நத அநதணர்குலததிற் பிறநது பாவஞ் செயதாயெனககூறி வெளியே சென்று, தோணடப்பட்ட கடலாற் சூழப்பட்ட பூமிமுழுவதையும் ஒப்பற்ற சநதிர வட்டகுடை நிழல் செய்யககாககினற அநநகரததரசனபாறசென்று, இச் சுப்பிரதீபா செயதனவற்றை யெலலாஞ் சொலலினா. எ - று. (அ௬)

கொற்றவெண் குடையோ னதுவுளத தடைதது வெகுளிமீக் கொண்டனன் கொதித்து, மற்றையம மறையோன சுபபிர தீபற கொணாகென மருஙகுநின் றவாபோய்ச, சொறறன ரவனு மடைநதன னென்னை தூயமா முனிவனிவ விருதத, னுறறன னெனறு னுருபபரோ பெரியோய் நினதருட குடன்படா திதுவே.

(இ - ள்) வெற்றிதஙகிய சநதிரவட்டக குடையையுடைய அரசன்அதனை மனஙகொண்டு சீறிப்பெருங்கோப மெயதி, அவவாறியற்றிய சுப்பிரதீபனெனும அநதணனைக் கொணடுவருக வெனககூற, அருகே நின்றவாகள சென்று சுப்பிர தீபருககுச் சொலலினா அதனால் சுப்பிரதீபா அஙகெய்தினர். ஐயா பெரியோரே! புனிதமாகிய இப்பெரு முனிவன் விருததன வநத விடததில் கோபிக்கலாமோ? என்ன? இஃதுனகருணைககுததககதன்று. எ - று. (அ௭)

எனமுதற் றனிக்கோ லிறையெடுத தரைபப வெழுதரு மறைமுழு துணாநதோன, மனுநிலத துதிக்கு நராகளெலாம புனைவா னுருததிரமாமணி வேண்டு, மனையது புனையாக் காணகினு மவர்ககே யருநாகதுபுனைந திலரேல, வினைசெய்மா தவததி னுயாநதவ ரெனினுந தென்றிசை யவாக்கென விரிததான்.

(இ - ள) என்று முதன்மைவாயநத ஒப்பற்ற செஙகோலை யேநதிய அரசன் எடுததுச்சொல்ல, எழுதிதற்கரிய வேதங்களையுணாநத சுப்பிரதீபர், மாநுடர்க்குரிய பூமியிற்றோன்றிய மாநதா யாவர்கரும் சிறநத உருததிராக்க மணியணிதல் வேண்டும். அதனை யணியாதவாகளைப் பார்த்தாலும் பாாததவாகளுக்கு அரிய நரககதியுண்டாம். உருததிராககமணியணியாராயின் புணணிய வகூத்தாற் செயத பெருநதவததால் உயர்நதவர்களானுலும் யமபுரமேயடைவரெனக்கூறினர். எ - று. (அ௮)

அவ்வனது புகல நின்றயோ காங்க னருஞ்சின மடைந்தனன் மற்றீங், கிவனுடை மணியு மென்னுடைத் தவமு மிந்நிலை பகுத்தறி யிறைவ, பவனமிச் சடங்கொண் டேகியைந் தருவிற் பணிமலர் கொணர்குவனென்று, னுவனுமற றதுசெய் தளிக்குமேற் கேட்டி யென்றன னுங்கவனுரைபபான.

(இ - ள்.) சுப்பிரதீபர் அவ்வாறுசொல்ல, யோகாங்கர் பெருங்கோப மெய்தி, இப்பொழுது இவருடைய உருத்திராக்கமணியினையும் என்னுடைய தவத்தினையும் இந்நிலையிலே பகுத்தறியக்கடவாய். அரசனே! இவ்வுடலோடு தேவலோக மெய்தி, பஞ்சதருவின் குளிர்ச்சிவாய்ந்த மலரைக்கொண்டு வருவேன் என்றார். அச்சுப்பிரதீபரும் அப்படிச் செய்வாராகிற் கேட்பா யென்றன்ன் அதற்குச் சுப்பிரதீபர் சொல்லுகின்றார். எ - று. (௮௯)

முறுவலரும்பத் தொளிரு முகத்தின னாகி முழுமதி வெண்குடை வேந்த, குறுகிவிண் ணுலகத் தருவைப்போர் பூவை கொணர்தரப் புரிகுவ னினனே, யிறையிது பொழுதி னறிதியென் றிசைத்தா னின்ற யோ காங்கன்முன் னியற்று, மறுவறு யோகத் துயர்நிலை யடைந்தான் கொணர்ந்தனன் கற்பக மலர்ப்பூ.

(இ - ள்.) புன்னகையரும்பிப் பிரகாசிக்கும் முகமுடையவராய், பூரண சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையையுடைய அரசனே! ஒருபூவையானது தேவலோக மடைந்துகற்பகத்தருவைக் கொண்டுவரச்செய்வேன். இதனை இப்போதே க்ஷண நேரத்திற் காணக்கடவா யெனக்கூறினார். அருகிருந்த யோகாங்கர் முன்னே பயின்ற குற்றமற்ற யோகத்தினால் தேவலோகஞ் சார்ந்து அழகிய கற்பகமலர்களைக் கொண்டுவந்தனர். எ - று. (௯௦)

ஒருதனிச் செங்கோ லரசுகண் டுவந்தா னின்றன ருவந்ததி சயித்தார், மருமறை தெளிந்த சுப்பிர தீபன் றனமனை யகத்துறை பூவை, தருகென நின்ற மதலையோ டினப் பூவையைக் கொணர்ந்தவட் சார்ந் தான், கருணையெம் பெருமா னுருத்திர வக்கம் புனைந்துள தியாவருங் கண்டார்.

(இ - ள்.) ஒப்பற்றுச் சிறந்த செங்கோலையுடைய அரசன் கண்டு சந்தோஷித்தான். அருகிருந்தவர்கள் அதிசயமுற்றார்கள். அரிய வேத முணர்ந்த சுப்பிரதீபர் தம் வீட்டிலுள்ள பூவையைக் கொண்டுவருகவென, அங்கிருந்தபிள்ளை யோடிச் சென்று, அப்பூவையைக்கொண்டுவந்து அவர்பா லடைய, அதுகிருபா மூர்த்தியாகிய எமது சிவபெருமானுடைய உருத்திராக்கமணியணிந்த திருத் தத்தையாவருங் கண்டார்கள். எ - று. (௯௧)

கொணர்ந்தவப் பூவை தன்னொடு நீபோய்த் தேவர்கோன் கொடி நக ரடைந்து, மணந்தரு தருவி னொருதருக் கொணர்தி யென்றனன் வானபுக விடுப்ப, வுணர்ந்தவப் புலவர் கோமக னத்தருத் தனிமணி விமானமொன் றுய்த்து, நிணங்கொளக் குலிசி வெள்ளைவா ரணத்தி னெதிர்ந்திரு நெடுங்கரங் குவித்தான்.

(இ - ள்.) அவ்வாறு கொண்டுவரப்பட்ட பூவையுடன், நீ போய் இந்திரனுடைய கொடிகள் கட்டிய நகரத்தைச் சார்ந்து, மணம் வீசும் பஞ்சதருக்களில் ஒருதருவைக் கொண்டுவருக வென்று, ஆகாயவழியிற் செல்லும்படி விடுப்ப, இதனையறிந்த அத்தேவராசனாகிய இந்திரன் அப்பூவைக்கு ஒப்பற்ற இரத்தின விமானமொன்றனுப்பி, மகிழ்ந்தோய்ந்த அந்த வச்சிரபாணி ஐராவதமூர்ந்து எதிர் சென்று நெடியதன்னிருகைகளையுங் கூப்பி வணங்கினன். எ - று. ()

உருத்திர மணியிற் பொலிதிரு வுருவ னோக்கின னுள்ள நெக்குருகி, யிருக்குணர்ந் தளந்த சுப்பிர தீப ரினிதிருந் தருளினார் கொல

லென், றாருந்நியின் வினவியெடுத்தணைத் துசசிமோந்தனன் மடியகத் தருளிற, பொருநதிநீ போநத தெனனையென் றுைாபபப புகுநதவா றுரைத்ததப பூசை.

(இ - ள்.) உருத்திராக்கமணியோடு விளஙகுகின்ற திருவுருவததைக்கண்டு, மனம் நெகிழ்ந்துருகி, வேதஙகளைககற்று அளவுபடுத்திய சுபபிரதீபா இனி மையாக இருநதருள்கின்றீரா ? என்று ஆசையோடு கேட்டு, அப்பூனையை வாரியெடுதது மாரபோடணைதது உச்சிமோநது தன்மடியில் அனபுடனிருததி நீ யிங்குவநத காரணம் யாதெனக கேட்ப, அப்பூனையானது நடநதவரலாற றினைச் சொல்லியது. எ-று. (கூரு)

கேட்டுழி மகிழ்ந்து மனங்களி சிறநதீங் கிதுபெறக கிடைததன மென்று, வாட்டிறற றேவ சிததனை நோககி வருதிநந தருவிலோர் தருவை, மூடடொடு மெடுததுச செல்லுதி யென்று முழுமணி மான மொன் றுதவித, தாட்டுணை தொழுதப பூசையைப போதி யென்றன னிமையவா தலைவன்.

(இ - ள்.) தேவாகட் கிறைவனாகிய இநதிரன் (பூனையின விாத்தாந்தத் தைக்) கேட்டவுடனே மகிழ்வெய்தி மனஙகளிகூாநது, இபபுண்ணியததினை அடையப்பெற்றோமென்று, கீர்த்திதஙகிய வலியுள்ள தேவசித்தனைப்பாாதது, வருக, நீ நமமுடைய பஞ்சதருககளில ஒருதருவை வேருடன எடுததுப்போருக வெனறு கட்டளையிட்டு, சிறநத இரத்தின விமானமொனறு கொடுதது, அப பூனையைப பாதஙகளிற் பணிநது செலலுக வெனறனன. எ - று. (கூச)

மானநின் றிமைககுங் கதிரொளிக் கற்றைப் பரிதிசெங் கதிரொளி மழுக்கி, யேனைமா நிலததின யாவருங காண மெனமெல விறங்கிய விதனைத, தானிழிந திறஙகித் தருவொடுந தேவ சிததனென பவனொடுந தழுவி, மேனிவந திலஙகு வெணகுடை வேநத னரசவை மேவிநின் றுளதால.

(இ - ள்.) அவவிமானததிலிருநது பிரகாசிககுங் கிரணங்களோடு கூடிய பிரகாசததொகுதியானது செவநத சூரிய கிரணஙகளையு மழுஙகசசெயது, ஏனையபெரியபூமியிலுளள யாவருங காணுமபடி பையப்பைய விறஙகிவருகின றது. பூனைவிமானததினின்றுங கீழிறஙகிக கற்பக தருவோடும தேவசிதத னென்பவனோடுஞ் சோநது, மேலோஙகிபபிரகாசிககும் வெணகொறறககுடை யையுடைய அம்மனனவன சபையையடைநது நினறது. எ - று. (கூரு)

கண்டன னரச னுசசிகை கூப்பி நின்றனன் கருணையிற பூசை, யெ ண்டருந தவத்துச சுபபிர தீபன் றனைவலமபுரிநதரு கிருபபத, திண்டிற றேவ சிததனுந தொழுது நின்றனன றேவனின னருளால, விண்ட லம்புரபப தென்றனன றொழுதே னென்றனன விண்ணவா பெருமான்.

(இ - ள்.) மன்னவன் அதனைககணடு உசசியின்மேற் கையைக் குவித்து நின்றனன். பூனையானது கிருபையோடு எணணுதற்கரிய தவததையுடைய சுப் பிரதீபரைப் பிரதட்சிணஞ் செயது சமீபததிலிருக்க, மிககவலிதஙகிய தேவ சித்தனும் வணஙகினின்று, தேவனே! உமது திருவருளால் தேவலோகததை யரசாள்வதென்றும் உம்மை நமஸ்கரிததேனென்றும் இநதிரன கூறினன். ()

என்றினி துவந்த தேவசித் தனுமற் றிருஞ்சினைக் கற்பகத் தருவு, மன்றுவே தியனை வலந்திரிந் தாங்க ணவனுழை யிருப்பமா மேருக், குன்றிரு தடந்தோ ளரசரா சோமகனுங் குறித்தன னதிசயங் கொண் டான், மன்றலந் தெரியல் வெண்குடை வேந்த னெழுந்தனன் பின்ன ரும வணங்கி.

(இ - ள்) என்று இனிமையோடு மகிழ்வெய்திய தேவசித்தனும், பெருங் கிளைகளையுடைய கற்பகவிருக்ஷமும் அப்பொழுது சுப்பிரதீபரைப் பிரதக்ஷிணஞ் செய்து அவ்விடத்தில் அவர் அருகில் இருக்க, மகமேருகிரியைப்போன்ற பூரித்த இருதோள்களையுடைய இராசராசனும் அதிசயமெய்தினன். மணம் வீசும் அழ கிய மாலையணிந்த வெண்கொற்றக்குடையை யுடைய அவ்வரசனெழுந்து நமஸ்கரித்தது. எ - று. (கூஎ)

பொன்னகர்ப் புகுந்த பூசையை நோக்கிப் பொன்னகர் புகுந்துள வாறு, மந்நகர்ப் பெருமா னினக்கரும் பூசை யளித்துவந் தருளிய வாறு, மின்னலர்ச் சினைப்பூங் கற்பகங் கொணர்ந்து [illegible] மிசைப்பர், யென்னவப் பூசை மறையவர்ப் பார்ப்பட்ப பகுதி யென் றன னிசைக்கும்.

(இ - ள்) தேவலோகத்திற்குப்போன பூனையைப்பார்த்து, நீ தேவலோ கத்திற்குப்போன வகையும் அந்நகரிற்குத்தலைவனான இந்திரன் உனக்கு அரிய வழிபாடு செய்து மகிழ்ந்த வகையும், இனிமையான மலர்கள் பொருந்திய கிளை களையுடைய கற்பகவிருக்ஷத்தைக்கொண்டுவந்த வகையும் ஆகிய இவற்றையெல் லாம் சொல்லுகவென்று கேட்க, அப்பூனையானது சுப்பிரதீபரைநோக்க, அவர் சொல்லுகவென, பூனை சொல்லுகின்றது. எ - று. (கூஅ)

அலங்கொளி விரிக்கு முழுமணி மான மடைந்தன னந்தரம் புகுந் தே, னிலங்கொளிக் குலிசி வெள்ளைவா ரணங்கொண் டெதிர்ந்தன னென்னையதி னிருத்திப், பொலங்கதிர் நவைமந்த விண்ணுல கடைந்தான் பூசனை வேண்டுவ புரிந்தா, னலங்கிளர் மருமந் தெடுத்தெடுத் தணைத்தா னுச்சிமோந் தருளொடு நயந்தான.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற ஒளியைப் பரவச்செய்யும் முழுமணிகளாலாக் கப்பட்ட விமானத்தில் ஏறிவாந்து தேவலோகமடைந்தேன். ஒளிவிளங்கும் வச்சி ராயுதமேந்திய இந்திரன் வெள்ளையானையாகிய ஐராவதத்தைக் கொணர்ந்து எதிர்வந்து, என்னை அதன் மிசையிருக்கச்செய்து, அழகிய கிரணங்கள் மிக்க விண்ணுலகு சேர்ந்து வேண்டுவனவாகிய பூசைகளைச் செய்து, நன்மைமிகுந்த மார்பில் எடுத்தெடுத்தணைத்து உச்சிமோந்து அன்போடு சொல்லுகின்றான்.

எமமுழை விருமபிய பொன்ன [illegible] தெனறென னென்றன [illegible], னுமமுழை யவைவி னிருந்தவை யவனுங் குரைத்தன னுங் கவ னுவந்து, பைம்மலர்த் தருவு மானுரும புரிந்து விடுத்தனும பணைத தற வீங்குங், கொம்மைவெம் முலையா ளன்னவன் றேவி யடைந்தன ளதிசயங் கொண்டாள்.

(இ - ள்.) எம்மிடத்தில் விருப்புற்று தேவலோகமாகிய இப்பொன்னக ரையடைவதற்குக் காரணமென்னவென வினவ, அரசனாகிய உம்முடைய

சபையில் நடந்தவற்றை இந்திரனுக்கியான் சொன்னேன். அதற்கவன் சந்தோஷித்து, பசியமலர்களையுடைய கற்பக விருட்சத்தையும் விமானத்தையும் விரும்பிக் கொடுத்தவுடனே, களித்து மிகவும் பூரித்த சிகரம்போன்ற ஆசையைவிளக்கும் தனத்தையுடைய அவ்விந்திரன் மனைவியாகிய இந்திராணி கண்டு அதிசயமுற்றாள். எ - று. (௬௦௦)

சுழல்விழிப் பூசைக் குரியதொன் றன்றி வரன்முறைப் பூசனை தொகுத்தார், யழலரக் கென்னின் றன்புமிக் குருகிக் கற்பக முதலொடு பளித்தாய், நிழலணி புனைந்தா ரீங்கிதற் கென்னை பவித்திர நிகழ்த்தென நிகழ்த்தக, குழலிசைக் குதலை மதியொடு நுடங்குங் கொம்பரன் னவட்கவ னுகூறும்.

(இ - ள்.) சுழல்கின்ற விழிகளையுடைய பூனைக்குச் செய்யவேண்டியதொன்றல்லது, தானமுறையே பூசைசெய்தீர். தீயிற்பட்ட அரக்குப்போல அன்புமயமாக நின்று மிகவும் மனமுருகி, கற்பகவிருட்சத்தை வேரோடுகொடுத்தீர் ஒளி வீசும் ஆபரணங்களைச் சூட்டினீர். இதற்கு அவ்வகைய தூய்மைத்தன்மை யாதோ சொல்லுகவெனச் சொல்ல, வேய்ங்குழல்போலுங் குதலைச்சொல்லோடும் சந்திரனோடும் அசைகின்ற பூங்கொம்பு போல்வாளாகிய இந்திராணியோடு இந்திரன் சொல்லுகின்றான். எ - று. (௬௦௧)

அரனிரு விழியொத் திருவினைக் கொடாச்சி யகற்றிய வுருத்திர வக்கம், வரன்முறை தரித்த மாட்சியின் யாமோ மூவரும் வணங்குதற் குரித்தால், விரவிய களப முகிண்முலை பொறுத்த மெல்லிடை யுருத்திர மணியைப், பரமுணர்ந் தறிவோ ரறிகுவ ரவரும் பரமெனச் சென்னிதாங் குவரால்.

(இ - ள்.) களபப்பூச்சணிந்த அரும்பிய முலைகளைச் சுமந்த நுண்ணிய இடையை யுடையாளே! சிவபெருமானது இருவிழிகளைப்போன்று இருவினைச் சம்பந்தத்தை விலக்கிய உருத்திராக்கத்தை முறைப்படி யணிந்த பெருமையால் யாம்மட்டுமோ திரிமூர்த்திகளும் வணங்குதற்குரியதாம். உருத்திராக்கமணியின் மேன்மையைத் தெரிந்துணர்ந்தவர்கள் உணர்வார்கள். (அத்தகையினரும் இப்பூனையைக் காணின்) மேலானதென்று சிரமிசை வைத்துக்கொள்ளுவார்கள். எ - று. (௬௦௨)

புண்ணிய மணியி னிலையினைப் புகல்கேம் புலோமசை யினதுகேட் டறிதி, யண்ணலங் கைலை நென்னலெம் பெருமா னருநடம் பரவுதற் கடைந்தேன், றுண்ணெனக் கனைக்குங் கவையடிப் பகடு தூர்ந்தடு தென்றிசைக் கிழவன், வண்ணவார் கணக்குச் சித்திர குத்தன் றனொடு மரனடி வணங்கி.

(இ - ள்.) புண்ணியசொரூபமாகிய வுருத்திராக்க மணியின் றன்மையைச் சொல்லுவோம். புலோமன் மகளாகிய இந்திராணியே! இனிதாகக் கேட்டுணர்வாயாக. பெருமைபொருந்திய அழகிய கைலையிலுள்ள வெமது சிவபெருமானது அரிய திருத்தாண்டவத்தை நேற்றுத்தொழுதற்குச் சென்றேன். அச்சந்தரும்படி கனைக்கின்ற பிளவுபட்ட அடியையுடைய எருமைக்கடாவைச் செலுத்தி யுயிர்களைக் கொல்லுகின்ற தென்றிசைக் கிறைவனான இயமன் பகுதிக்கமைந்த நெடிய கணக்கிற்குரிய சித்திரகுத்தனென்பவனோடுஞ் சிவபெருமான் திருவடிகளைப்பணிந்து, எ - று. (௬௦௩)

### கலிநிலைத்துறை.

இருநி லத்துள வுயிர்தஞ் செய்கை யாவையு மியற்று
மருவி னைப்பய னவ்வழி யாங்கவைக் கருள
மருவு நாற்கதி பற்பல பதவியும் வகுத்தாய்
வெருவு தென்புலத் தடுந்தொழி னரகமும் விதித்தாய்.

(இ - ள்). பெரிய பூமியிலுள்ள ஆன்ம கோடிகளெல்லாஞ் செய்கின்ற அரிய வினைப்பயன்களை யப்படியே அவ்வான்மகோடிகளுக்கு அருளபுரிய, பொருந்திய (தேவர் நரகர் மனிதர் விலங்கு) என்னும் நான்கு கதிகளையும், (கைலாயம், வைகுந்தம், சத்தியலோகம், அமராவதி, சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சிய முதலிய) எண்ணிறந்த பதவிகளையும் ஏற்படுத்தினீர். அச்சந்தரத்தக்க தென்றிசையில் கொலைத் தொழிலையுடைய நரகங்களையும் உண்டுசெய்தீர். எ - று. (கச0௪)

தீய செய்தனர் யாவருந் தென்புலத் தென்பா
லாய தீவினை யனுபவம் பெறுவதற் கருளி
மேய நல்வினைப் பயனுளோர் நின்னடி விரும்பித்
தூய சேவடித் துணைபெற வளி நனை தொல்லோய்.

(இ - ள். கொடுந்தொழில் புரிந்தோர் யாவரும் தென்றிசையிலுள்ள வென்னிடத்தில் தீவினைக்கேற்ற நரகப் பிராப்தி பெறும்படி கட்டளையிட்டு, பொருந்திய நல்வினைப் பயனுள்ளவர்கள் தேவரீர் திருவடியை யிச்சித்து அப்புனிதமாகிய செவ்விய வுபயபாதங்களைப் பெறும்படி யருக்கிரகித்தீர். பழமையானவரே! எ - று. (கச0௫)

அளித்த நின்றிரு வாணையி னியற்றின னைய
தெளித்த நல்வினை மேலவர்ப் பூசனை செய்துங்
களித்த கண்மய மில்லவாக் காயெரி நிரயத்
தொளித்து மின்றள வொருநெறிச் சென்றன னென்றான்.

(இ - ள்). ஐயனே! அவ்வாறருள்செய்த தேவரீர் கட்டளைப்படி தெளிவடைந்த நல்வினையுடைய மேலோரைப் பூசித்துங் களிப்பெய்திய தாட்சண்ய மில்லாதவர்களைக் காய்ந்தெரிய நரகத்திலமிழ்த்தியும் இன்றுவரையு மொரு மார்க்கத்திலொழுகினேனென்றான் எ - று. (கச0௬)

மறலி யவ்வுரை நின்றிரந் துரைத்தலும் வழிநீர்
பிறைமு டித்தருள் ளெம்பிரான் றிருவருள் பெருகி
முறையி னும்புரி தொன்மையி னுயர்நின் முதன்மை
குறைவ துண்டெனி லுரைத்தியென் றருள்செய்து கூறும்.

(இ - ள்). இயமன் அவ்வார்த்தையைச் சிவபெருமான் முன்னின்று பிரார்த்தித்துக் கூறவும், வழிகின்ற கங்கா சலத்தையும் பிறைச் சந்திரனையுந் திருமுடியிலணிந்த எமது சிவபெருமான் திருவருள் மிகுந்து முறைமைப்படி நாம் நியமித்த பழமையாகிய வுன்னதிகாரங் குறைவுபடுதலுண்டாயின் சொல்லுகவென்று திருவாய்மலர்ந்தருளவும், இயமன் சொல்லுகின்றான் எ - று. ()

பிறந்த நாண்முதற் செய்தனன் பெற்றகரும பாவ
மறந்து றந்தன னருளில னருங்கொலைப் புலையன

மறந்தி ரண்டொரு வடிவுகொண் டன்னவ னவனை
யிறந்து ழிப்பிடித் தெரிநிர யத்துவீழ்த் திடலும்.

(இ - ள்) ஞானந்தினத்தொடங்கி யொருவருஞ் செய்தற்கரிய பாவங்களைச் செய்தவனும் தருமத்தை யறவே நீங்கியவனும் இருபையில்லாதவனுங் கொலைசெய்த புலையனுங் கொடுமைகளெல்லாஞ் சேர்ந்தோருருவெடுத்தாற் போன்றவனுமாகிய வொருவனை, அவனிறந்தபோது பிடித்துச்சென்று எரிகின்ற நரகத்திற் றள்ளியவுடன் எ - று. (கoஅ)

சிவக ணத்துளோ ரொன்னுடைத் தூதரைச் சீறி
யவனை மாமணி யவிரொளி மானமுய்த் தகன்று
ரிவரி ழைத்தவை நோக்கினின் றெய்தின னெள்ளென
றவரி ழைத்தில னீதவட் புந்துள தன்மை.

(இ - ள்.) சிவகணங்கள் அடிபேன றூதுவர்களைக் சோபித்து, அப்பாவியைப் பெரிய இரத்தினங்கள் மிகுப பிரகாசிக்கும் விமானத்திலேற்றிக் கொணடு சென்றார்கள். இச்சிவகணர் செய்தவற்றைப் பார்த்திருந் திங்குவந்தேன். அடியேன் குற்றஞ் செய்திலேன. இதுவே அங்கு நடந்ததன்மை.

என்று கூறிய கூற்றினுக் கெதிர்முக நோக்கி
மன்றன் மாலிகைச் சூறபடை வயிரவக் கடவுள்
புனமுற் றிறகொலை யலலது செய்திலன போலு
மொன்ற வோர்ந்துநின் றுணர்த்தியென் றுளளுறுத் துணர்த்தான்.

(இ - ள). என்றுரைத்த இயமனுக்கு நேராக அவன முகத்தை நோக்கி மணங்கமழும் மாலைதரித்த சூலாயுதந் தாங்கிய வைரவக் கடவுள அவன அற்பதன்மையுடைய கொலைத்தொழில நீங்க வேறொன்றுஞ் செய்யவிலலை போலும் பொருந்தியபடி ஆராயந்து பார்த்துச் சொலலென ஞாபகப்படக் கூறினார். எ - று. (கசo)

தரும னவவுரை கேட்டலு மிருவினை தவறு
தொருவ ழிபபட வுரைத்தருள சித்திர குத்த
னருகு நிறபுழி நோக்கினன வயிரவற் கறிவா
றொருமை நின்கணக் குரைத்தியென றனனவ னுரைப்பான்.

(இ - ள்). இயமனவவார்த்தை கேட்டமாத்திரத்தில, புண்ணிய பாவங்களைப் பிசகாமல் ஒரு படித்தாயச் சொலலுஞ் சித்திரகுத்தன் பக்கத்திலிருக்கையிலவனைப்பார்த்து, இவ்வைரவக் கடவுளுக்கறியும்படி யொரு வழிப்பட்டிருக்கும் கணக்கைச் சொல்லுகவெனக் கட்டளையிட்டான். அச்சித்திரகுத்தன் சொல்லுகின்றான் எ - று. (கசக)

மங்கை பாகனை வழுத்தினன் வைரவ குறித்துப
பொங்கு நீர்வயற் கலிங்கதே யத்தொரு புடையி
னங்க மாந்தர்தோர வியாக்கிர புரமென் றதனபா
றங்கு நான்மறைப் பெருங்குலத் திவனவ தரித்தான்.

(இ - ள்). பார்வதி பாகனாகிய சிவபெருமானைத் தோத்திரஞ்செய்து, வைரவக் கடவுளை நோக்கி, மிகக நீர் நிறைந்த வயல்சூழ்ந்த கலிங்க நாட்டின் ஓர் புறத்தில், அங்குள்ளோரால் விரும்பப்பட்ட வொப்பற்ற வியாக்கிரபுர

மொன்றுண்டு. அந்நகரத்தில் நிலைபெற்ற நான்கு வேதங்களையுமுணர்ந்த பெருமை தங்கிய அந்தணர் குலத்திலே இவன் பிறந்தான் எ - று. (கக௨)

பயந்த வன்னையும பரவச மாயபபலாப புணாநது
முயங்கு சூளையாய முடிந்தனண் முன்னைநாள வேட்டோ
னியங்கு நாளகழிந்த திறந்தன னீங்கிவ டனக்கு
மயங்கு சிந்தையன் களவினோர் மறையவ னுளனால்.

(இ - ள்). இவனைப்பெற்ற தாயுந் தன் கணவனை விடுத்துப் பிறரையப் பட்டு, பல புருடரைச் சோந்து தழுவுகின்ற வேசையாயினாள். அவளைப் பூர்வத்தில மணஞ்செயத இவன்றந்தை யாயுள்முடிந்து துயிர்நீங்கினான். இவளுக்கு மயங்குகின்ற மனமுடைய சோர நாயகனாகிய வொரு வேதியனிருந்தான்.

ஈன்ற தந்தையு மன்னையு மிறந்தபி னிவறகுத
தோனறு தநதையிற சிறந்தனன் களவழித தோய்நதோ
னேன்ற நாளபல கழிந்தன வீங்கிவன றனக்கு
மூனறு நூலபுனை மணவினை மறைமுறை முடித்தான.

(இ - ள்). இவனைப்பெறற பிதாவுந் தாயுமிறந்த பினனா, இவன் தாயைக களவிறபுணாந்த அந்தணன இவனுக்குத் தநதையாயிருந்தான். இப்படிப் பல நாட்களசுனறன. இவனுக்கு அப்பிதாவானவன முப்புரிநூல அணிவிக்கும் உபநயன விவாகச் சடங்கை வேதவிதிப்படி செயவித்தான் எ - று (ககச)

மைந்த னீங்கிவ னலதுமற றிலையென வளாத்தான்
சிந்தை காரிருட பிழமபெனச சிறந்தவந நீயோன
முந்தை மாநிலப பிறபொருள கவாந்தற முடித்தா
னந்த வாறுணா தந்தையென றுளங்கடிந் தகறற.

(இ - ள்.) புத்திரன இவனை நீங்க வேறிலலையென்று வளாத்தான். மன மானதுகரிய இருடபிழம பெனறு சொல்லத்தககதா யுளனான 'மிகுந்த அக் கொடியோன், முறபட்ட பெரிய பூமியிலுள்ள ஏனையோா பொருளகளை யபகரித்துத்தாமததை யழித்தான. அதனையறிந்த பிதாவாயிருக்குமந்தணன் அவனை யடித்துத்துரத்தவும். எ - று. (ககரு)

கோற லல்லது பயினறிலன் பிறாபொருள குறித்து
மாறி வவவினன மதுவொடு புலவுணு மறவோன
சீறு சிந்தையோன் றெய்வவே தியருறைப பிறந்து
மீறில் செயதனன் புனமைசா மித்திர னிவன்போ.

(இ - ள்) கொலைத்தொழிலல்லது பிறிது தொழில் பழகினானல்லன். அன்னியா பொருளையே விருமபி மாறுபட்டபகரித்தவன. மதுவுடன மாமிச பட்சணமுஞ் செயயுங்கொரேன. கடுங்கோபமுள்ள மனமுடையவன். தெய வீகந்தங்கிய அந்தணர் குலத்திற் பிறந்து தீமைகள கணக்கினறிச்செய்தான். இவன் பெயா சாமித்திரன. எ - று, (ககசு)

சோர தாதைதன் கைபபொருள கவாந்திடத் துணியா
வாரவ மினறிமற் றனனவ னுருயிா செகுத்தான
பாரி னீங்கிவன் செய்தமா பாதக மீனத்துந
தேரி னெனகணக களவ்வி னடஙகுமோ செபபின்.

(இ - ள்.) இவன் தனசோர தந்தையின் திரவியத்தை யபகரிக்கத்துணி ந்து அவன் பால் சிறிது மன்பின்றி யவனரிய வுயிரைக்கொன்றான். முடிவாகச் சொன்னால், இப்பூமியிலிவன செய்த பெரும்பாதகங்களையெல்லாம் தெளிய வேண்டுமாயில், அடியேன் கணக்கிலடங்குமோ? எ - று. (கசஎ)

சனித்த நாண்முதற பாதக மல்லது தனனாற்
குனித்த சிநதையி னறமெனக குணித்தது முளதோ
பனித்து மறறவன பெயாசொலி னெமமுடல பதறு
மினிசசெ யுமபவ மென்பதொன் றிலலென விசைத்தான்.

(இ - ள்.) பிறந்தநாள் முதலாகப் பாவங்களே யல்லாமல் தன்னாலிரக்க முள்ள மனதோடு தருமமெனறெணணியது முளதோ? அவன பெயரைச் சொன்னாலெமக்குடல் நடுங்கிப்பதைக்கும். இவன் இனிமேல செய்யததக்க பாவமென்பது ஒனறுமேயிலலை யென்று சொன்னாள். எ - று. (கசஅ)

ஒழுகு கங்குலிற பிறர்மனை கவாந்தன னொருநாள
வழுவி யேகலுங காவலா பிடித்துற வரிந்து
பொழுதி யங்கிடு முன்னமம மாணகாப புறம்போய்
மழுவி னாலெறிந தனனவ னாருயிா மாய்த்தாா.

(இ - ள்) ஒரு நாளிரவில பிறா மனைவியை விபசரிப்பவனாய் நடக்கையில் வழிதவறிச்சென்றவுடன காவலாளா இவனைக் கைப்பிடியாகப்பிடித்துச் சோந்துகட்டி, பொழுது புலர்வதற்குள் அப்பெரிய நகரத்தின் புறம்பேகொண்டு சென்று பரசாயுதத்தாலவனுயிரை யழித்தாாகள். எ - று. (ககக)

இறந்து நாலுநா ளிறநதன வீங்கிவன் றன்னை
மறந்த ருங்கடுங கடகொலை மறவனைத் தெய்வச
சிறந்த மாமணி மானமீ திருத்தினா சென்று
ரறந்த ருங்கணத் தலைவரொன றுரைத்தடி தொழுதான்.

(இ - ள்) இவனிறந்து நாலு தினங்களாயின. பாவத்தைச்செய்யுங்கொடுமைதங்கிய கொலைத்தொழிலுடைய குரூரனாகிய இவனை, புணணிய சொரூபிகளாகிய சிவகணத்தலைவா தெய்வீகம பொருந்திய யுயா குணங்களமைந்த சிறந்த இரத்தினங்கள பதித்த விமானத்திலேற்றிக்கொணடு சென்றார்க ளென்று விண்ணப்பஞ்செய்து திருவடிகளில வணங்கினான. எ - று. (கஉ0)

வகுத்து ரைத்தசொற் கேட்டலும வைரவக் கடவு
டொகுத்து ணாந்துமற றுங்கவற கினையன சொலவான்
பகுத்த பாவியென றிவனிலை பகாந்தது சரத
மிகுத்த நலவினைப பயனுள தொன்றது விளங்காய்.

(இ - ள்.) விவரித்துச்சொன்ன சித்திரகுத்தன் வார்த்தைகளை வைரவக் கடவுள் கேட்டவுடன். அவையனைத்தும் தொகுத்துணர்ந்து சித்திரகுத்தனுக்கிவ்வகை வார்த்தைகள் சொல்லுகின்றார். அளவு படுத்திய பாதகனெனறிவன் றன்மையைச் சொலலியது மெய்யே (ஆனால) விசேடித்த நல்வினைப்பயனொன்றுண்டு. அதனை நீ யுணாந்திலை. எ - று. (கஉக)

வலங்கொள் சக்கர வாகுவென் றுளனொரு மன்னன்
பொலங்கொ ளங்கசுந் தரியெனு மன்னவன் புதல்வி

யலங்கு திண்சினைப பொதும்பசூழ தடங்கரை யடைந்தாள
விலங்கு வெண்டிரைப புனல்விளை யாடலை விரும்பி.

(இ - ள்) சயங்கொண்ட சக்கரவாகுவென்றோர் ராசனுண்டு. அவ்வரசன் மகளாகிய அங்கசுந்தரியென்பாள் விலகிச்செல்லும் வெள்ளிய அலையையு டைய நீர்விளையாடலை விரும்பியவளாய், அசைகின்ற வலிய கிளைகள்பொருந் திய சோலை சூழ்ந்த விசாலமான தடாகக்கரையை யடைந்தாள் எ - று. (கஉஉ)

பாடு சுற்றிய சிலதியர் குழாத்தொடு மலர்த்தா
ளாட கச்சிலம்ப பரற்றுறப புனலரு கடைந்து
கோடு வெண்டிரை யிப்பிமுந் திடையிடை கோத்து
நீடு ருத்திர மணிவடங் கழற்றினா ளின்றாள்.

(இ - ள்) பக்கலிற் சூழ்ந்த தோழிமார் கூட்டத்துடன் தாமரை மலர் போன்ற பாதங்களிற் பொற்சிலம்பு அதிரும்படி, தடாகநீரின் சமீபத்திற் சேர்ந்து, வெள்ளிய அலைகளவந்து மோதுங்கரையினிடத்தில், இப்பியினிடத் துற்பவித்த முத்துக்களை இடையிடையே கோத்து நீண்டுள்ள உருத்திராக்க மணிகளாலாகிய மாலையைக் கழற்றிவைத்திருந்தாள் எ - று. (கஉ௩)

நீத்த மொத்தலை புனற்கரை நிரைசுரும் பரற்றப
பூத்த மவ்வலங் கொடியிடை யாங்கது பொருத்தி
மீத்த துமபிய புனலகுடைந் தாடுமவ் வேலை
யேத்து வெண்மணிச் சோறெனக் காகமவந் தெடுத்து.

(இ - ள்) வெள்ளம்போன்று அலைந்துகொண்டிருக்கும் நீர்க்கரையிலே, வந்த வரிசையாகவுள்ள வண்டுகள் ரீங்காரஞ்செய்ய மலர்ந்திருக்கும் அழகிய முல்லைக்கொடியையொத்த இடையையுடைய அவ்வங்கசுந்தரி, அந்தக்கரை யில மாலையைவைத்து, கரையின்மீது வழிந்தோடிய நீரில ஸ்நானஞ் செய்யுஞ் சமயத்தில், அம்மாலையிற் கோத்திருந்த முத்துக்களைச் சோறென்று கருதி ஒரு காக்கை வந்தெடுத்தது எ - று. (கஉ௪)

அலகு கோலிவீழ்ந் தெடுத்தவக் காகமவின் னடைந்து
சுலவி யெகலு மற்றிழி மாமணித் தொடையன
மிலைவ நாமென வீங்கிவன் சென்னிமேல வீழப
புலையொ ழிந்தன னுதலாற் கைலையிற் புகுந்தான்.

(இ - ள்) தன மூக்கைவளைத்து வந்தெடுத்த அக்காகமானது, ஆகாயத் திற்சேர்ந்து சுழன்று சென்றவுடனே, அறுந்து கீழே விழுகின்ற சிறந்த அவ் வுருத்திராக்க மணிமாலை, அணிவதுபோல இவன் தலைமேல வீழ்ந்தவுடனே புலைத்தன்மை யகன்றனன். அது காரணத்தினாலே இவன் மகா கைலாயத்தை யடைந்தான் எ - று. (கஉ௫)

ஆது னாநதிவீர் போலுமென் றவனிகழுந் தவர்பாற்
காது சூரபடை வைரவக் கண்ணுதல கழற
வீது மற்றவ னுயிரொழி யாக்கையி னியைந்து
தீது தீர்த்திருங் கதியினை யளிப்பதெத் தன்மை.

(இ - ள்) அதனை நீங்கள் அறியீர்போலுமென்று அச்சாமித்திரனை இகழ்ந்தவர்களாகிய இயமன் சித்திரகுப்தனுகிய இவர்களிடத்தில், கொல்லுங்

தன்மையுடைய சூலாயுதமேந்திய லவரவப்பெருமான் சொல்ல, இப்புண்ணி யம அச்சாமித்திரனது உயிர் நீங்கிய உடலிற் பொருந்திக கெடுதியை விலக் கிச் சிறந்த பதவியை யெவ்வாறு தருவது? எ - று. (கஉசு)

என்ன மாறுகொண் டிசைத்தனன் றெனபுலத் திறைவன்
பொன்னின் வாரகழ னந்திகேட டெதிர்மொழி புகலவான்
றுன்னு பாதகா சடத்துவெள ளென்புவெண டிவலே
மன்னு கங்கையிட் டுயநதில ரோவென வலித்தான.

(இ - ள்.) என்று, தென்திசைக கிறைவனான இயமன எதிர்த்துக கூறி னன். பொன்னாலாகிய நெடிய வீரககழலணிந்த நந்தி யெம்பெருமான கேட் டருளி, அதற்கு விடை திருவாயமலாகினறவராய, மிகக பாதகமுடையோரது உடலிலுள்ள வெள்ளிய எலும்புகளை வெண்ணிறத் துளிகளபொருந்திய கஙகா நதியிற்போட்டு, அப்பாதகஙகளொழியப பெற்றுப பிழைககவிலலையோவென றுரைத்துககூறினார எ - று. (கஉஎ)

நந்தி யவ்வழி மொழிதர நமனுட னடுங்கி
யநதி வெண்பிறை மிலைதரு மமலனை யன்பாற
சந்த வாரபுய முதலிய பொருநதுறத் தரைமேல
வநது வீழ்நதடி வணஙகின னெமபிரான வழஙகும்.

(இ - ள்) நந்திதேவர அவவாறுரைககவும இயமன, உடல நடுககமெய்தி, மாலைககாலத்திலுதிககும வெள்ளிய பிறைச்சந்திரனையணிந்த புனிதராகிய சிவபெருமானை, அழகிய நெடிய புயமுதலிய உறுப்புகள நிலமிசைப்படியும படி அனபோடுவந்து வீழ்ந்து திருவடியைப் பணிந்தனன். சிவபெருமான் திரு வாய்மலாகதருளுகின்றார எ - று. (கஉஅ)

அரிய மாதவர்க கருடரு முருத்திர வக்க
முரிய நீறிவை புனைநதுளோ ரோஙகரும பாவம்
புரியும வன்றொழிற புலையரே யாயினு மவரென்
றெரிச னத்துள ரெமதருட் குரியராய்ச சிறபபார்.

(இ - ள்.) அரிய பெருந்தவமுடையாாககு அநுககிரகிககுப உருத்திராக்கம் நமக்குரித்தாகிய திருவெண்ணீறு ஆகிய விவற்றைத்தரித்தவர்கள, உயாநத பெரும்பாவஙகளைச் செயயுங கொலைத் தொழிலையுடைய புலையாகளேயானு லும், அவர்கள எம்மைத் தரிசித்தவர்களாய எமது திருவருட் குரியவாகளாயச் சிறப்பெய்துவாாகள் (எ - று). (கஉகூ)

புனித மாமணி நீறிவை புனைநதவர்க் காண்கி
னினிது பூசனை வரன்முறை யியற்றுதி நீங்கின்
முனிக டுங்கணத் தூதாக்கு மவவழி மொழிதி
நனிவ ணங்குதி போதியென் றுனரு ளுதன.

(இ - ள்). பரிசுத்தமான சிறநத உருத்திராக்கமணியும் திருவெண்ணீறு மாகிய இவற்றையணிநதவர்களைக் கண்டால், நீ நியதிப்படி இனிமையாக அவர்களைப் பூசிக்கக்கடவாய், உன்னுடைய கோபநதங்கிய தூதகணஙகட்கும் அவ்வாறு சொல்லக்கடவாய். நன்றாய் வணஙகுக, போகுக என்று கிருபா மூர்த்தியாகிய சிவபெருமான் திருவாய்மலர்நதருளினர் எ - று. (கநo)

ஆல கண்டனன் கைலைசென் றீந்துணாந் தறிந்தே
னேல வார்குழ லாதலா லெதிர்வரும் பூனை
சீல மாமணி பூண்டந்தது கண்டெதிர் சென்றேன்
ஞால முய்வதிம் மணியினு லெனறிவை நவின்றான்.

(இ - ள்.) வாசம் வீசும் நெடிய கூந்தலையுடைய இந்திராணியே! விஷம் பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானது நல்லகைலாயமலைக்குப்போயிதனையாய்ந்தறிந்தேன். ஆனபடியால், எதிர்வந்த பூனையானது சிறந்த பெரிய வுருத்திராக்கமணி யணிந்திருந்தது பார்த்தெதிர்சென்றுபசரித்தேன். இவ் வுருத்திராக்க மணியினாலேயே யுலகமுச்சீவிக்கின்றதென்றிவற்றை இந்திரன் சொன்னான். எ - று. (கருக)

புகலு மிந்திர னுரைகொடு புலோமசை யென்பா
ளகநெ கிழ்ந்தன ளன்புமிகு குருகின ளாகி
மகர வார்குழை யெடுத்தெந்த தணைத்தனள வணங்கி
யகனி லத்தினை விடுவதற் கிசைந்தில ளாக.

(இ - ள்.) அப்படிச்சொல்லிய இந்திரன் வார்த்தையைக்கொண்டிந்திராணியென்பவள், மனங்கசிந்தன்பு மிகுந்துருகியவளாகி, நெடிய மகரகுண்டல மணிந்த அவ்விந்திராணி யென்னைப்பரந்த பூமியிற்செல்ல விடுதற்குச் சம்மதியாதவளாகப் பலமுறை யெடுத்தணைத்தாள். எ - று. (கருஉ)

யான டைந்தபொன னாட்டுள தன்மையீ தென்ன
மான வேந்தற்கு மறையவன் றனக்குள மகிழ
ஞான மாமணிப பூனைசெய்ன றிவையெலா நவில
வேனை யோரெலாங் கேட்டன ரதிசயித் திருந்தார்.

(இ - ள்.) யான் சென்ற தேவலோகத்தின் றன்மை யித்தகையதென்று மாட்சிமை பொருந்திய அரசனுக்கு சுப்பிரதீபனென்னு மந்தணனுக்கும் மனமகிழ்ச்சியுண்டாகச் சிறந்த ஞானமயமாகிய வுருத்திராக்கமணி யணிந்த பூனையானது நோ நின்றிவற்றையெல்லாஞ் சொல்ல, அங்கிருந்தவர்கள், யாவரும் கேட்டாச்சரிய மடைந்திருந்தார்கள். எ - று. (கருஈ)

வெள்ளை வெண்குடை நிழற்றிய வொருதனி வேந்தன்
கொள்ளை நான்மறைச சுப்பிர தீபனைக குறுகி
யெள்ள ருஞ்சிறப புருத்திர மாமணி யெளியேற
குள்ள வன்பினே டளித்தியென றிறைஞ்சின னுதவ.

(இ - ள்.) வெள்ளிய சந்திரவட்டக் குடையினிழலைச்செய்யு மொப்பற்ற அவ்வரசன், நான்கு வேதங்களையும் நன்குணர்ந்த சுப்பிரதீபரை யடைந்து இகழ்வில்லாத சிறப்புடைய வுருத்திராக்க மாமணியை யடியேனுக்கு மனவிருப்போடு கொடுத்தருளுகவென்று வணங்கினான். (சுப்பிரதீபா அங்ஙனமே) கொடுக்க. எ - று. (கருச)

பணிந்து வாங்கினன் பன்முறை யினியன பகர்ந்தா
னணிந்து சென்னியிற பொருத்தினன் பவித்திர மடைந்தான்
றுணிந்து ருத்திர மாமணித் தொடையலிற சிந்தை
தணிந்திருந்தனன் சாலங்க னென்னுமத் தலைவன்.

(இ - ள்) சாலங்கனென்னு மவ்வரசன் தொழுது (அவ்வுருத்திராக்க மணியை) வாங்கி யினிய வார்த்தைகள பலமுறை கூறி, சிரசிற்சூடித தரிததுக கொண்டனன். பரிசுத்தனுன்ன். புனிதமான வுருததிராககமணி மாலையினிடத தில் நீங்காத விருப்புற்றிருநதான். எ - று. (கரு௫)

அரச வைத்தலை யிருந்திவை யறிந்தயோ காங்கள்
மரபி ன்மாமணிச சுப்பிர தீபனை வணங்கிக
கரைசெ யற்கருங் காதலங் கடலொடுங் கனிநதா
னுரைசெ யற்கருந தன்மைநின் றனமையென் றுரைத்தான்.

(இ - ள்.) இராஜசபையின்க ணிருநதிவற்றை யெலலாநதெரிநத யோ காங்கள் சிறநத வுருததிராககமணிநத சுப்பிர தீபனை முறைப்படிபணிநது, அளவிடற்கரிய ஆசைக்கடலிலமிழ்நது உமது நிலைமையெடுததுச் சொல்லற் கரிய நிலைமையென்று சொல்லினா. எ - று. (கருசு)

அருகு நின்றிரந் தேததுடயோ காங்களை யவனி
வருபொ துக்கடிந தளித்தருண் மன்னனை மருங்கி
னிருமெ னபபகாந திருததின னன்னவாக கிசைய
மருவு ருத்திர மாமணிப பெருங்கதை வகுபபான.

(இ - ள்.) சமீபததிலிருநது, துதிககின்ற யோகாஙகளையும், உலகததைப் பொதுத்தன்மையினீககிககாதது வருகின்ற கிருபையுடைய சாலஙகனெனனு மரசனையும் பககலிலிருஙகளென்று கூறியிருககசசெய்து அவர்களுககிசைய, பெருமை பொருநதிய வுருததிராகக மணியைப்பற்றிய வொரு பெருஙகதை சுப்பிர தீபர் சொல்லுகின்றுா. எ - று. (கருஎ)

மாக ரப்பெருந் தேயமொன் றுததன் மருங்கி
னுக ரபபதி நகரமொன் றுளதத னகததிற
சாக ரபபெரு மறையவா குலதவ தரிததோன்
சேக ரககுலச சுபுததனென றுளனொரு செல்வன்.

(இ - ள்.) மாகரமென்னும் பெரிய நாடொனறுணடு. அந்நாட்டின் பக்கலில் ஆகரப்பதியென்னும நகரமொன்றுணடு, அநநகரததிலே ஸமுத்திர கடல்போலும் பெரிய அநதணர் குலததிலவதரிததவனும, அககுலததலைவனுகிய சுபுத்தனென்னுமோா வேதியச்செலவனிருநதான். எ - று. (கருஅ)

மறைப குத்தறி யாங்கவன் றனககுள மைநதர்
பெறல ருஞ்சிறப பைவரிற் பின்னரிற் பிறநதோன்
பொறைத ருங்குணன் சாந்திக னெனுமபெயா புனைந்தான்
சிறைத ருமபவந தொலைநதிடப் பிறநதவச செலவன்.

(இ - ள்.) வேதஙகளைப்பகுததுணர்நத அச்சுபுததனுக்கிருநத ஐநது புத் திரர்களில, ஐநதாவது புததிரன் அடைதற்கரிய சிறப்பமைநத பொறுமை தஙகிய குணமுளளவன், சாநதிகனென்னும் பெயர் பெற்றவன், துன்பததைத தரும் பிறவி யழியும்படி யுதித்த அச்செல்வப்புததிரன். எ - று; (கருகூ)

தெருவு நுண்மண லிழைத்திழைத் தாடுமச் சிறுநா
ளருகு ருசசிறப் பளித்தரு ளுருத்திர வக்க

மொருத னிசசிறு மணியெடுத தெழுநதகத் தோடிக்
கருதி நூலிடைக கோததன னணிநதனன் களத்தில்.

(இ - ள்.) தெருவிலுள்ள சிறுமணலைக்குவித்துக் குவிதது விளையாடும் அச் சிறுவயதில், அடைதற்கரிய பெருமையைததரும உருததிராகக மணிகளில், ஒப்பற்ற தனியாகிய சிறுமணி யொன்றனைக்கணடெடுதது, அவ்விடம விட்டு வீட்டிற்சேர்ந்து அதன மகிமையைச்சிநதிதது நூலிற்கோததுக கழுததில அணிநது கொணடான். எ - று. (கசo)

பெற்ற தந்தைசொற கேட்கிலன் முன்னரிற் பிறந்தான்
சொறற சொறகுட ன்கிலன வறிதிடை துரபபக
கொறற மாநக ரிரவினுக கிவருடன் கூடான
மறறை யன்னவா வாரபபன நுகாநதுள மகிழும.

(இ - ள்.) தன்னை யீன்ற தநதை சொலலைககேளாதவனும், தனக்கு முன் பிறநத தமையனமரா சொலலைககேட்டுடனபடாதவனுயும சில நாட்கள இப்படிச்செல்ல, வெற்றி பொருநதிய அப்பெரிய நகரததில யாசிப்பதறகாக இவருடன் கூடாதவனாய், அவாகள் தருவனவற்றையுணடு உள்ளங்களிப்பான.

இபபெ ருங்குல மறையவ னிஙஙன மிருப்ப
வபபெ ருநதமிழ்க கேரள நாட்டினோ ரரசன்
காப ருநதிறற சூறபடைக கடுநதிறற காளிக
கொப்ப ருஙகட னரபலி கொடுபபதற கோாநது.

(இ - ள்.) பெரிய குலததிற் பிறநத இவவநதணச்சிறுவன இஙஙனமிருக்கையில, மிகச்சிறநத தமிழ் வழஙகுங கேரள நாட்டிலுள்ள ஓரரசன், முக்கிளையோடு வலிதஙகிய சூலப்படையேற்ற கொடிய வெற்றி பொருநதிய காளிகா தேவிககு, தான் அளிப்பதாகச் செயதுகொணட அரிய பிராாததனையாகிய நரபலியைககொடுப்பதற்கு ஆலோசிததது. எ - று. (கசஉ)

மன்னன் வாயிலின் வைகிய புரோகித மறையோன்
றனனை யேயின னரபலி மைநதனைத தருவான
பொன்னொ கோடிகொண டேகெனப புகனறன னனையோன்
றொன்னி லததிவ ணுறறாபோய் மைநதரைத தருவ.

(இ - ள்.) அவ்வரசன் தனனரண்மனை வாயிலிலிருநத புரோகிதப் பிராமணனை, நரபலி செயதற்குரிய பிளளையைச்சேகரிககுமபடி கட்டளை தநது, ஒரு கோடி பொன் கொணடு செலலுகவெனக் கூறினன அவவரசனுடைய பழமையான கேரள நாட்டிலே இவனுடைய தூதாகள் சென்று (நரபலிக் கேற்ற) ஒரு குமாரனைததேட. எ - று. (கசஙு)

மகர மாநகர் புகுந்தனர் மறைவலோர் மறுகிற்
புகுது மேல்வையிற சுபுத்தனோ மனைபபுறம புகுந்து
மிகுதி மாநிதி தருகுதும வேண்டினா கொணடோர்
தகுதி மைநதனைத் தருதிரோ வெனவவர் சாறறு.

(இ - ள்.) சிறநத மாகர நாட்டிற் பிரவேசித்து அநதணர் வீதியிற் புகுஞ் சமயததில், சுபுததனென்பவன் வீட்டருகே சென்று, மிகுதியாகிய பெருஞ்

செல்வத்தைக்கொடுப்போம். விரும்பினவர்களைப் பெற்றுக்கொண்டு தகுதியாகிய ஒரு புதல்வனைக்கொடுப்பீர்களோ? என்று அவர்கள் சொல்ல, எ - று. (கசச)

இத்தெருத்தலை யிம்மொழி பகர்ந்திடே லென்று
வந்தெருத்திரு மறையவர் வெகுண்டவர்க் குறைய
வுய்த்த நல்குர வுடன்பிறந் துழந்திடு சுபுத்தன்
சித்தமோர்ந்து தன்றெண்ணினன் றன்னுளந் திகைப்பான்.

(இ - ள்.) இவ்வேதிய வீதியில் இவ்வார்த்தையைச் சொல்லவேண்டா மென்று, அவ்வீதியிலிருந்த சிறந்த அந்தணர் கோபித்து அத்தூதுவர்க்குச் சொல்ல, பொருந்திய தரித்திரத்தோடு பிறந்து வருந்துகின்ற சுபுத்தன், இத் தூதர் கருத்தை யறிந்து தன் மனந்திகைத்து ஆலோசித்தான், எ - று. (கசரு)

உள்ள மாறுற மலைந்தன னொருவழி நிறுத்திப்
பிள்ளை யைவரிற் பின்னவன் றனையவர்க் களிப்பான்
கள்ள நெஞ்சினன் கதுமென வெழுந்தனன் கனகக்
கொள்ளை மாநிதிச் சுமையினா வடமெனக் கூவி.

(இ - ள்.) மனம் வேறுபட மயங்கினான். அதனை ஒருவழியில் நிறுத்தி, தன் ஐந்து புத்திரரில் இளையவனை அவர்கட்குக்கொடுக்க வஞ்சக மனத்தோடு விரைந்தெழுந்து, பொன்னாலாகிய மிக்க பெருஞ்செல்வச்சுமையை யுடையோரை வருகவென்று விளித்து எ - று. (கசசு)

அருகு சென்றவன் கையெடுத் தழைப்பப்புழி யகன்ற
பெருகு மாநிதிச் சுமையினா மறுகிடைப் பெயர்ந்தார்
வருதி ரென்றவர்க் கிருப்பளித் துள்புகு மறையோன்
கருகு சிந்தையிற் கெணணினன் புலப்படக் கழற.

(இ - ள்,) அருகேபோய, அச்சுபுத்தன் கைகாட்டி யழைக்கையில், அங்கு நின்றும் போய்விட்ட மிக்க பெருந்திரவியச்சுமையுடைய அத்தூதர்கள் மீண்டும் அவ்வீதியில் வந்தார்கள். வாருங்களென்று அவர்கட்கு ஆசனங்கொடுத்து உள்ளே பிரவேசித்த அச்சுபுத்தன் வாடிய மனமுடைய தன் மனைவிக்கு இவ் விடயம் விளங்கச்சொல்லக் கருதினான் எ - று. (கசஎ)

அன்ன மன்னவ ளடமொழி கேட்டனு மயரா
ளுன்னு ளக்கருத் தல்லதொன் றெனக்குவே றுளதோ
வென்ன நால்வரு மாங்கதற் கிசைந்தன ரிசைத்தார்
பின்ன வன்றன தின்னுயிர் கொலைப்படப் பிறந்தான்.

(இ - ள்.) அன்னம்போன்ற நடையையுடைய அவன் மனைவி இவ்வார்த்தையைக் கேட்டவுடன் வருந்தாமல், உமது மனக்கருத்தை யன்றி எனக்கு வேறெண்ணமுண்டோ? எனக்கூற, நான்கு சகோதரர்களும் அதற்குச்சம்மதித்துச் சொன்னார்கள். இளையவனும் தன் இனிய வுயிர் கொல்லப்படுதற்குப் பிறந்தவனுமாகிய. எ - று. (கசஅ)

இளைய மைந்தனை வருதியென் றழைத்தன ராமே
யுளைய நல்குர வுழன்றன மருமபசி யுடற்றக்
கிளையொ டுந்துரந் துயிரொழி குதுமெனக் கிளத்தி
விளைவி திப்படி யொன்றிள தனக்கென விரிப்பார்.

(இ - ள்.) இளைய குமாரனை வாவென்று கூப்பிட்டு, நாமெல்லாரும் வறுமையானது வருத்துதலால் வருந்தினோம். கொடும்பசி தகிக்க அதனால் நம் கிளையோடும் உயிர் துறந்திறப்போம் என்று கூறி, உன் விதியின்படி உனக்குண்டாவதொன்றுண்டென உணர்த்துகின்றார்கள். எ - று. (கசக)

ஐந்து மக்களி லொருவனை மாநிதிக் கருளி
யுய்ந்து வாழுது மென்பது துணிந்தன முனக்கு
முந்தை யோரினோ புதல்வனைக் கொடுப்பது முறையோ
மைந்த நின்கருத் தெனக்கொலென் றறைந்திட மைந்தன்.

(இ - ள்.) ஐந்து பிள்ளைகளில் ஒரு பிள்ளையைப் பெருஞ் செல்வத்திற்காகக்கொடுத்து நன்றாகச்சீவித்து வாழுவோமென்று தீர்மானித்தோம். உனக்கு மூத்தோரில் ஒருவனைக் கொடுப்பது தகுதியோ? மகனே! உன் கருத்து யாது? எனக்கேட்க, சாந்திகன் எ - று (கடுo)

உலகி றப்பதி லொருதனி நாடிறந் தொழிதல்
குலவு நாடிறந் தொழிவதற் கொருநக ரிறந்த
லிலையின மாநக ரிறப்பதி லொருகுடி யழிந்
திலகு மோர்குடி யிறப்பதி லொருவனீ றினிதே.

(இ - ள்.) உலக மழிவதைக்காட்டிலும் ஒப்பற்ற ஒரு நாடு அழிதலும், பிரசித்தமான ஒரு நாடு அழிவதைக்காட்டிலும் ஒரு நகர மழிதலும், அளவில்லாத பெரிய நகர மழிதலும் ஒரு குடும்ப மழிதலும், விளங்குகின்ற ஒரு குடும்ப மழிதலினும் ஒருவனிறப்பதும் இனியதாம் எ - று. (கடுக)

தரவுக்கோச்சகக்கலிப்பா.

முற்றுந் முகிண்முலைப்பால் பிதிரந்தோட முன்சுமந்து
பெற்றாளுஞ் சிறிதிரங்கா ளிந்தற்கிசையப் பெற்றனளாற்
கற்றாவி னுளங்கழிந்த தாதைதறு கண்பெற்றான்
மற்றாவ ரெனக்கிரங்கி மறுத்துரைப்ப தறியேனால்.

(இ - ள்.) குவிந்த இளந்தனங்களில் பால் சுரந்தொழுகமுனனே (என்னை வயிற்றிற்) சுமந்து பெற்றதாயும், சிறிதும் இரக்க மில்லாளாய இச்செயலுக்கிணங்கினாள். கன்றையுடைய பசுவைப்போல மனக்கனிவுற்ற தந்தையுங் குரூரத்தன்மை யெய்தினான். மற்றவர் யாவர் எனக்காக மன்மிரங்கித்தடுத்துக் கூறுபவர்கள்? யான் அறிகலேன். எ - று. (கடுஉ)

முன்னீன்ற தாயர்பாற் றந்தையருண் முழுதிருத்தப்
பின்னீன்ற தநயர்பாற் றாயுவக்கும் பெரிதெனபா
ரென்னீன்ற தாயிடத்தொன் றிதுகாணே னிகல்வேந்தன்
பொன்னீன்ற பேராசை பலிக்களிக்கப் பொருந்தினார்.

(இ - ள்.) முதலிற்பெற்ற புத்திரரிடத்தில் தந்தை மிகவுங் கருணை கொண்டிருக்க, பிற்படப்பெற்ற புத்திரரிடத்தில் தாய் மிகவும் விருப்பாயிருப்பாளென்று பெரியோர் சொல்லுவர். என்னைப்பெற்ற தாயினிடத்தில் இந்தக் குணங் காணகிலேன். வலிதங்கிய மன்னவனுடைய பொன் கொடுத்த பேராசையாலே என்னைப்பலிக்குக்கொடுக்கும்படி மனமிசைந்தார்கள். எ - று. ()

பொன்பரவு தாமரைமேற் புண்ணியனே யெனையீன்ற
மின்பாவு முப்புரிநூல வேதியனே யணைகிடத்தி
யன்பாய முலைபிதுக்கி யளித்தவளோ வையகோ
வென்பாவ மோவெளியேற்கிது விளைத்த தறியேனால்.

(இ - ள்.) அழகு பரவிய தாமரை மலரிலெழுந்தருளிய பிரமதேவனே, என்னைப்பெற்ற மின்னலைப்பரப்பும் உபவீதமணிந்த அந்தணனே, அணையிற் கிடத்தி அன்பாகிய முலையைப்பிதுக்கிப் பால் கொடுத்ததாயோ, ஐயோ! என னுடைய பாவமோ. எளியேனாகிய எனக்கு இப்பொல்லாங்கினை யுண்டு செய்தது? அறிகலேன! எ - று. (கஙச)

என்றேங்கி யழுதிரங்கு மிவனைமுக நோக்கார்க
ளன்றேந்து பன்னூலு மறையவனுங் கொடுபோகி
நின்றேந்தி மாநிதிபெற நீங்கிவனை நோக்கிடடார்
மன்றேந்து முதியோரு மிளையோரு மறுகுற்றார்.

(இ - ள்.) என்றேக்கமெய்தி அழுது வருந்துகின்ற இவனை முகம் பாராதவர்களாய மலைபோலபபூரித்த இருதனங்களையுடைய தாயும் தந்தையுங் கொண்டுசென்று, தூதுவர்க்கு நோக்கின்று கையேந்திப் பெருந்திரவியத்தைப் பெற்றுக்கொண்டு இவனைக்கொடுத்து விட்டார்கள். இது பார்த்த வெளியி லிருந்த விருத்தர்களும் பாலியர்களும் மனமயங்கினார்கள். எ - று. (கஙரு)

பொன்னேய பேராசை யிருந்தவர் பொருபலிக்குப
பின்னேய மகறகொடுத்தான் பிரமகுலத் திவனும்மோ
முன்னேய மைந்தர்தற் குடனின்றார் முகம்பாரா
ரென்னேமற் றிவர்நிலையீங் கென்னுமென றிரங்கினார்.

(இ - ள்) பொன்னினபா லிவனவைத்த பேராசையால கொல்லத்தகக பலிக்கு இறுதியிறபெற்ற மகனைக்கொடுத்தான. இவன பிராமண குலத்தின னுவானோ? முன பிறந்த பிள்ளைகளும அதற்குடன பட்டார்கள். இருவரு மிவன முகத்தினைப்பார்த்திலர் ஏதென்ன? இவர் நிலைமை நன்றாயிருந்தது. இஃதெப்படியாமென்று வருந்தினார்கள். எ - று. (கஙசு)

கடுக்காது கடுமனத்தார் மகனையவர் கைப்பிடித்துக்
கொடுத்தாரக் குலமதலை யிணையடிவரைக் கும்பிட்டா
னெடுத்தேறும் வறுமையொழிந் திருந்திரென வெதிரேத்தித
தொடுத்தேறு வினையுணர்ந்தா னுங்கவர்பின் றொடர்ந்தனனால்

(இ - ள்,) கோபியாத கொடுமனமுடைய பிதாமாதாக்கள் தன் மகனைப் பிடித்துத் தூதாகையிற் கொடுத்தனர். அச்சிறந்த குமாரன் இவர்களிருவரை யுங் கும்பிட்டு இதுகாறும் விருத்தியாய்வந்த தரித்திரம் நீங்கி யிருப்பீர்களாக, வென்றெதிரே துதித்துத், தனக்குச் சம்பவித்ததிகரித்த தீவினைப்பயனை யுணர்ந்தவனாய்த் தூதர் பின்னே சென்றான். எ - று. (கஙஎ)

கோடாத நெறி[illegible]தன் கூட்டாடு கொடுசென்றார்
வாடாது முக[illegible]ர்ந்த மைந்தனையம மாமறைநூல்
வீடாத புரோ[illegible]தன்பால் [illegible]த்தனரம் மறையோனு
மேடாரு நறுங்[illegible]கரிய [illegible]சவைக்கொண்[illegible]ருந்தினன்.

(இ - ள்.) செங்கோன் முறை தவறாத அவ்வரசனுடைய சேர நாட்டிற்குக்கொண்டுபோய், முகவாட்டமெய்தாது மலர்ச்சியுற்றிருந்த அப்புத்திரனைச் சிறந்த வேதவொழுக்கந் தவறாத புரோகிதனிடம் விட்டார்கள். அவ்வேதியனும் இதழ்கள் பொருந்திய மணம் வீசுகின்ற மாலையணிந்த அரசன்சபையிற் கொண்டுபோயிருந்தினன். எ - று. (கசஅ)

மன்னவனு மெதிர்நோக்கி மனமகிழ்ந்தான் மாகாளிக்
கந்நிலையிற் பலிகொடுக்குங் கொலைநாளு மடுத்ததாற்
றொன்னிலையி னெய்யிழுகிப் புனலாட்டித் தோன்றலுக்கு
மென்னிலைய செஞ்சாந்துஞ் செம்பூவு மிலைந்திட்டார்.

(இ - ள்.) அரசனு மவ்வந்தணச்சிறுவனை நேரே கண்டு மனக்களிப்படைந்தான். மகாகாளிக்கு நரபலி கொடுக்குங்கொலைத்தின முமன்று வந்தது. பண்டைய வழக்கப்படி அப்பிள்ளைக்கு அப்பியங்கன ஸ்நானஞ் செய்வித்து மென்மைத்தன்மை பொருந்திய செஞ்சந்தனமுஞ் செம்மலர் மாலையு மணிந்தார்கள். எ - று. (கசகூ)

வேந்தவையி னீங்கியவனை யம்மறையோன் விடுத்ததற்பினு
சேந்ததிரு வுருநோக்கி யாசனைகளுஞ் சிறப்புற்றுன
பூந்தொடைய னெடுவேலோன் புனிதநீ ரினிதாடிச
சாந்திகனைக் கொடுகாளி திருக்கோட்டமுஞ் சார்ந்தனனால்.

(இ - ள்.) அரசசபையில இச்சாந்திகனைப் புரோகிதன் கொண்டுபோய் விடுத்தவுடன், அவனது செவ்வந்த வடிவினைப்பார்த்தரசன் மனங்களித்தான். அழகிய மாலையணிந்த நீண்ட வேலேந்திய அம்மன்னவன் புனிதமாகிய ஜலத்திலினிதான ஸ்நானஞ்செய்து சாந்திகனை யுடன்கொண்டு காளிகாதேவியின் அழகிய கோயிலை யடைந்தனன். எ - று. (கரு0)

குடவாயி னின்றதனிக் குடைவேந்தன் றிருக்கோயில்
வடவாயி லெதிரேத்தி மண்ணுற வீழ்ந் தடிவணங்கிப்
படதீப முதலாய பரிந்தியற்றிப் பலவாற்றான்
விடுசோரி யெடுத்திறைத்துப் புலவமுது மிசைவித்தான்.

(இ - ள்.) மேற்றிசையிலிருந்த வொப்பற்ற வெண்கொற்றக்குடையுடைய அரசன் அத்திருக்கோயிலின் வடவாயிலை யெதிரே துதித்துப் பூமி மேற்படிய வீழ்ந்து காளியம்மையின் றிருவடியைப்பணிந்து, நாகதீப முதலிய தீபாராதனைகளை யன்போடுசெய்து, பலவகையால் விடத்தக்க வுதிரங்களை யெடுத்திறைத்து, புலான் மணங்கமழு முணவையு நிவேதித்தான். எ - று. (கருக)

பூமாரி தொழுதிறைத்துப் புகன்றவரன் முறைபோற்றிக்
காமாரி திருமுன்னாச் சாந்திகனைக் காட்டுதலுந்
தேமாலை முத்தலைவேற் படைபொறுத்தான் சிறுவனணி
மாமாலை யுருத்திரமா மணிகண்டாண் மனநெகிழ்ந்தாள்.

(இ - ள்.) புஷ்பமாரி பொழிந்து பணிந்து ஆகமங்கள் கூறிய வரன்முறையே தோத்தரித்துக் காளிகாதேவியின் சந்நிதிக்கெதிரே சாந்திகனை நிறுத்தினவுடன், மணம்வீசும் மாலையணிந்த முத்தலைவேலாகிய சூற்படையைச் சுமந்த காளிகாதேவி யச்சாந்திகனணிந்திருந்த சிறந்த மகிமைதங்கிய வுருத்திராக்கமணி மாலையைப்பார்த்து மனமுகளைந்தாள். எ - று. (கருஉ)

ஈஙகிவனை யாரகொணர்ந்தா ரெனவிரங்கி யெதிரோடி
யோஙகருநான் மறைக்களிறறை யுசசிமோந தெடுதததணைத்துப்
பூங்கழற்காற் றுகணீவி நெற்றிநீ வினள்பொருமித
தேங்கியதன் றிருவருட்டக ணீராட்டிச சிறப்பிததாள்.

(இ - ள்.) இவனை யிவவிடததில யாவரழைததது வநதவொனறு வருநதி யெதிரோடிச்சென்று, விசேட அருமைதஙகிய நான்மறை யுணாநத ஆண யானைபோன்ற அச்சாநதிகனை யுச்சிமோநது எடுததணைதது, அழகிய வீரக கழலணிநத காலிற்பட்டிருநத தூசுகளைததடவி நெறறியிலிட்டு அழுதலினால் தேககெடுதத தன் திருவருளபொருநதிய கணணீராலவனை மூழ்குவிததுப் பெருமை செயதனள். எ - று. (கசு௩)

அரசாகோ னதுநோககி யதிசயிததா னயனினற
புரோகிதனை யெதிரநோககி யடசீறிப பொருமினள
விரைவினவன றலைதிருகிக குருதிகுடிதத தனளவிளிததாள
பரவியருட சாநதிகனுக கிவவாறு பகாகின்றாள்.

(இ - ள்) இராஜ ராஜனாகிய அவவரசன அதனைப்பாாததாச்சரியப் பட்டான். அவனருகேநினற புரோகிதனை யெதிாததுப் பாாததுககொலலும் படி கோபிதது வருநதி விரைவாக அவன்றலையைததிருகி யுதிரங்குடிததுக கொன்றனள். அருளமிகுநத சாநதிகனைவணஙகி அவனுககுச் சொலகினறாள்.

அரியமா தவாபுனையு முருததிரவக கமபுனைந்தாய்
பெரியனீ யுனைநோககி வெருவநதேன பேதையே
னுரியவாங் கேடடவர முதவுகினறே னுனககினனே
பரியவா யினவெல்லாங் கேடடியெனப பணிநினறாள

(இ - ன.) செயதறகரிய பெருநதவமுடையோாா அணியு முருததிராககத தினை நீ யணிநதாய, நீ பெரியவன், உனனைபபாாதது அஞசினேன். எளியே னுககுரியனவாகிய வரஙகளிற கேட்டவற்றைக கொடுககினறேன. உனககு விருப்புள்ளனவறறையெலலா மிப்பொழுதே கேடபாயாக வெனறவன கட் டளைககெதிர் நோககி நின்றாள. எ - று. (கசுசு)

நின்றாளை யெதிரநோககி நெடிதாய பவககுரமபை
வெனறானக குலமதலை வெருவொழிய விளமபுவான்
குனறாய பணைமுலையிக குலவேநத னரபலிமற
றின்றாய நாண்முதலா வேண்டலையா லென்மொழிநதான.

(இ - ள.) அப்படி நின்ற காளிகாதேவியை, அநாதியாகததொடாநத சரீரததோடு கூடிய பிறவியைககடநதவனாகிய அச்சிறநத சிறுவனேபோாத தச்சமகலச்சொல்லுகினறான். மலையை யொதத பூரிதத விருதனஙகளையுடை யாளே! இச்சிறநத வரசன கொடுககின்ற நரபலியை யிற்றைய நாள் முதலாக நீ விரும்பாதிருப்பாயாக (இதுவே என்வரம்) என்றான். எ - று. (கசுஎ)

அப்பணிதன் றலைக்கொண்டா ளரசனையாங் கயனோக்கி
யொப்பருநல் வரங்கேட்ட தவையனைத்து முனக்கீந்தே
னிப்புதல்வன் றனைக்கொணாந்த புரோகிதனி னுயிருண்டேன்
செப்பருமபா தகனவனறன் மனைமக்க ளுயிர்செகுத்தேன்.

(இ - ள்) அக்கட்டளையைச் சிரமேற்கொண்ட காளிகாதேவி யவ்விடத்திலே பக்கலில் நின்றிருக்குமரசனைப்பார்த்து ஒப்பற்ற நல்ல வரங்களாய்க்கேட்டனவற்றையெல்லா முனக்குக்கொடுத்தேன். இப்பிள்ளையைப் பலிக்குக்கொண்டு வந்த புரோகிதனுடைய உயிரைப்பருகினேன், சொல்லுதற்கரிய பாதகனாகிய அப்புரோகிதனுடைய மனைவி மக்களுயிரையுங் கொன்றேன். எ - று. ()

அதுகிடக்க வீங்கிவனை யடிபோற்றி யரசநீ
புதுமணிச்சிங் காதனத்தி னினிதிருத்தி நின்புதல்வி
வதுவைபிவற் களித்துவைகல் வணங்குதியா லுனைவேண்டி
யிதுபகர்ந்தே னுயிர்க்குறுதி யெனக்கோடி யிகல்வேந்தே.

(இ - ள்.) அரசனே! அஃதிருக்கட்டும். இப்புத்திரன் றிருவடிகளைத் துதித்துப் புதிய இரத்தின சிங்காதனத்திலிவனை யினிதாக விருத்தியுன்புத்திரியை யிவனுக்கு மணமுடித்து நாடோறும் வணங்கக்கடவாய். உன்னை விரும்பியிது சொன்னேன். இவ்வாக்கியம் உன்றுயிர்க்குறுதியெனக்கொள்க. வெற்றி தங்கிய அரசனே! எ - று. (கசுஅ)

அனறிவனை விலைகூறி யளித்துவாங் கியநிதியக்
குனமாகவாந் தடுசோரா கொடுபோகக் குலமறையோ
னென்றுமுள வறுமையொழிந் திலனாகி யெத்தெருவுஞ்
சென்றிரக்கு மக்களொடுந் தீவினைநல் வினையாமோ.

(இ - ள்.) அன்றைய தினத்திலிவனை விலைகூறி விற்றுவாங்கிய திரவியத்தைக் கள்வர்கள் கவர்ந்து போகவும், வேதியர் குலத்துதித்தவிவன் றந்தை தனக்கெக்காலத்திலுமுள்ள தரித்திர நீங்காதவனாய்த் தன் புத்திரரோடு செல்லாத்தெருக்களிலும் போயாசிப்பான். பாவம் புண்ணியமாகுமா? எ - று.

தேவர்க்கும் பவித்திரமாந் தெய்வமா மணியிதனை
யாவர்க்கும் புனைதருதற் கெளிதன்றே யிதுபுனைந்தார்
மூவர்க்கு முதலான முதன்மையோ ரதுவறிந்து
பூவர்க்க மிவனடிக்கே சொரிந்திவனைப் பூசிப்பாய்.

(இ - ள்) தேவர்களுக்கும் பரிசுத்தமாகிய தெய்வத்தன்மை தங்கிய சிறந்த இந்த வுருத்திராக்க மணியை யெல்லோர்க்கும் அணிந்துகொள்ளுவதற்கு எளிதன்று. இதனை யணிந்தவர்கள் திரிமூர்த்திகட்கும் மேலான முதன்மைத் தன்மையுடையோர். அதனை யறிந்து மலர்வகைகளை யிவன் பாதங்களிலே பெய்து பூசிக்கக்கடவாய். எ - று. (கஎ0)

என்றுமுத் தலைச்சூலி யிசைத்தமொழி மனக்கொண்டு
பொன்னுளை முளரிமயி லனையதனிப் புதல்வியினை
யன்னுணுக் குடனளித்தா னவிரொளிப்பன் மணிகுயிற்று
மின்னுரை நெடுவேலித் திருக்கோயின் மேவித்தான்.

(இ - ள்.) என்று முத்தலைச்சூலந்தாங்கிய காளிகாதேவி சொன்ன சொற்களை மனதிற்கொண்டு, பொன்போன்ற நாளத்தோடு கூடிய தாமரையில் வசிக்கும் மயிலின் சாயலையுடைய இலக்குமிபோன்ற தன் புத்திரியை யவ்வேதியச் சிறுவனுக்கு விரைவில் மணமுடித்து, பிரகாசிக்குமொளிதங்கிய பலவகை யிரத்தினங்கள் பதித்த விளக்கமுற்ற மதில் சூழ்ந்த தனதரண்மனையிற் பொருந்தியிருக்கச்செய்தான். எ - று. (கஎக)

அக்கோயி லவர்க்கருளி யவனையர னெனவைகன்
முக்காலுந் தொழுதுற்றான் சுதன்மனெனு முதல்வேந்தன்
மைக்கான கண்டனிரு விழியென்னு மாமணியைத்
தக்காரிற் பெரிதுறற சாந்திகனு யிரந்தரித்தான்.

(இ - ள்.) அவ்வரணமனையை யவ்விருவர்க்குங்கொடுத்துச் சுதன்மனென்னுந் தலைமைபெற்ற அரசன, அச்சாந்திகனையே சிவபெருமானுக்ககொண்டு நாள்தோறுங் காலையுச்சி மாலைகளில் வணங்கிவந்தான கரிய நீலகண்டராகிய சிவபெருமானது சிறந்த விழிகளென்று கூறு மேன்மைதங்கிய அவ்வுருத்திராக்க மணியை மேலோரிற்சிறந்த சாந்திகன் ஆயிரங்கணக்காகத் தரித்தான்.

தூநாறு சுடரிலைவேற சுதன்மனருள் புதல்வியொடு
மாறாத சாந்திகனு மின்னலமபெற றுருளகூர்ந்தா
ரீனுமை பெறறெழியா நோவுழந்தா ரிவரயந்தோா
தேனுறுந தெரியலா ரினிதிருந்த செய்யுணாந்தார.

(இ - ள.) புலான் மணங்கமழு பிரகாசமுற்ற அச்சவடிவான வேல தாங்கிய சுதனமனுடைய புதலவியுட, அவளைக்கலந்து நீங்காத சாந்திகனுமினிய நனமைகளையுற்று வாழ்ந்திருந்தாரகள பொருமையுளளவாகளாயத துன்புற்ற வாகளாகிய இவனைபபெறற தாயத தையருந்தேன மணக்குமாலை தரித்த சாந்திகன சுகத்தோடு வாழ்ந்திருக்குஞ்செயதியைத் தெரிந்தாரகள. எ - று. ()

இலலாமை யெனுஞ்சிறுமை யிருந்தவவா தாமிழைத்த
பொல்லாமை யுணாகிலரரயப புதல்வரொடும போதரலுஞ்
செலலாமை பெறறிருந்தா னலஞ்சி யெதிரசெனறு
னல்லாமை யிருளோதி யீனறவட னடிவீழ்ந்தான.

(இ - ள.) தரித்திரமெனனுஞ் சிறுமையில வருந்திய அவாகள தாஞ் செய்த துன்பத்தைத் தெரியாதவாகளாயத தம் புத்திரரோடு வந்தவுடனே யெதிர்கொண்டு போகாமல இறுமாப்புறறிராதவனுய எதிர்சென்றான. இருளின் காரணமாகிய மேகம்போன்ற கூந்தலுடைய தன் தாயின பாதத்தில பணிந்தான். எ - று. (களசு)

மல்கியகண் ணீாததும்ப வன்கண்மை புரிந்தனமென்
றல்கியசிந் தையனுகி யுளளுடைந்து மெலிவானை
நல்கியபே ரன்பினெடு பணிந்தனனு லந்நாலவ
ரல்கியசிந் தையராகிப புல்லினு ரவாபபணிந்தான்.

(இ - ள்.) மிக்க கண்ணீா துளிக்கும்படி, கொடூரச்செயல் செய்தோமென்று வருந்திய மனமுடையவனுய உள்ளம் நைந்து மெலிகினற தந்தையைத் தனக்குள்ள பேரன்போடுபணிந்தான். அந்நானகு சகோதரர்களும் தளா மனமுடையவராய்த் தழுவிக்கொண்டார்கள அவாகளபாற்பரிவுகாட்டினுன்.

பெருநிதிபெற் றிவன்பயந்த பிள்ளையென்றும பாராம
லருகியவன் பினராகி யளித்தனரென் பதுமதியா
னுருகியவன் பொடுபணிந்தான் வேண்டுவன வுவந்துதவிந்
தருநிழலின் திறற்குவமை யிவரெனத்தந் தளித்தனனால்

(இ - ள.) பெருஞ்செல்வம் பெற்றுக்கொண்டு, பெற்றமகனிவனென்றும் பாராமல் பட்சமில்லாதவர்களாயப் (பலிக்கு) கசொடுத்தார்களென்

பதையுடெண்ணுதவனுய், இளகிய அன்போடுபணிநது அவாகளுககுவேணடிய வற்றைச் சநதோஷித்துககொடுதது, கற்பக விருட்ச நீழலிலுள்ள இந்திரனுககுச் சமானமானவர்களிவர்களென்று சொல்லும்படியாதரித்தான். எ - று. (கஎசு)

தந்தையாககும் பயந்தளித்த தாயாககு முன்பிறநத
முநதையர்ககு மெமபிரான் மளரிமல ரடிபுகுவான்
றந்துமா மணிபுனையத தநதளித்தான கடையுறைபோ
யெநதைவான கைலைபுகுந் தினிதிருநதா னிவனோடும்.

(இ - ள்) தன் பிதாவிற்கும் தனனைப்பெற்று வளர்தத தாயிற்கும் தனமுன் றோன்றிய தமையன்மாாககுமெமது சிவபெருமானது தாமரைமலா போன்ற திருவடியிற் சேரும்பொருட்டு நூலிற்கூறத்த சிறநத வுருத்திராகக மணியணி யும்படிகொடுததுககாததுவநதான். இறுதிககாலததில் சென்று எமது சிவ பெருமானது திருககைலாயகிரியை யடைநதிவாகளோடு மினிதாக வீற்றிருந தான். எ - று. (கஎஎ)

ஒறைமா மணிபபெருமை யுணராது யெடுத்தணியப
பெற்றசாந திகன்பெறற பேறிதெனறுல யாமெடுத்துச
சொற்றமா மணியறிநது தொடுததணிநதாாக ராவசைதத
கற்றைவாா சடையான்றன் கழலைனறி நிழலின்றே.

(இ - ள்) ஒனறியாகிய சிறநத வுருத்திராகக மணியின பெருமையைத தெரியாதவனுய அதனை யெடுதது அணிநதுகொணட சாநதிகனடைந்த பதவி யிஃதென்று சொன்னால், நாமெடுத்துச்சொலலிய சிறநத அவ்வுருத்திராககத தின் மகிமையைததெரிநது மாலையாககோததணிநதவாகட்குச் சாப்பததை யனைககச்சாககட்டிய கூட்டமாகிய நீணட சடையையுடைய சிவபெருமானது திருவடியைத்தவிர நிழல வேறிலலை எ - று. (கஎஅ)

இப்பரிசிம மணிபபெருமை யெனவுணர வெடுததுரைதத
சுபபிரதீ பறபணிநது யோகாஙகன ளுருபூமிததகதி
யபபெருமா மணியவன்பா லருளபெறறுச சிவயோகத
துப்புாவு பெறறமலன் கைலைவரை துனனினுன.

(இ - ள்.) இவவுருத்திராகக மணியின சிறப்பு இத்தகைததென்று தெரி நதுகொளள விரிததுச்சொனன சுபபிர தீபனாயோகாஙக முனிவா னடைகரித துப்பணிநது துதிதது, அசசிறநத மகிமை தஙகிய வுருத்திராகக மணியை அச்சுப்பிர தீபா அன்போடு அருளசெயயபபெற்று, சிவயோகானுபவமெய்தி மலரகிதனுகிய சிவபெருமானது திருககைலாயததை யடைநதனா. எ - று.

தருவினிலம் புரநதளிக்குஞ் சாலங்க னெனுமவேநதன்
சுருதிமா தவததோனைச சுபபிரதீ பனைபபணிநது
மருவுசிவ மணிவாஙகி முடிபொறுநது மண்புாககுந
திருவருசெங் கோலோசசிப பின்னைநலை சென்றுற்றான்.

(இ - ள்) கற்பக தருவைப்போலும் கொடைததனமையுடையவனுய உல கததைக்காத்திரட்சிககுஞ் சாலஙகனென்னு மனனவன, வேதமறிநத பெரும் தவமுடையோராகிய சுப்பிரதீபரைப் பணிநதவாபாலுள்ள வுருத்திராகக மணி யைப்பெற்றுச் சிரசிற்றரிதது உலகினைககாககும் வளமிக்க செஙகோல் செலு த்தி நெடுங்காலத்திற்குப்பின் கைலாய மெய்தினன். எ - று. (கஅ0)

ஓரரச னவையகத்தி லினிதுணர்த்தி யுலவாத
வாரவமுட னகம்புகுந்த வருமறைசசுப பிரதீபன்
பாரபுகழ நலனுகர்ந்து பறபகல்வை கியபின்னாச
சார்தருவை யுசசினி மாகாளா தமக்கீநதான்.

(இ - ள்.) ஒப்பற்ற சாலஙகனென்னும் மன்னவன் கொலுச்சபையில் உருத்திராக்க மகிமையை யினிமைபெற விளக்கி,நீஙகாத அன்போடு தம்மனைக குச்சென்ற அரிய வேதஙகளை யறிநத சுப்பிர தீபா, உலகமுழுதுந துதிககும படி சகல சுகஙகளையு மநுவித்துப் பலகாலஞ்சென்ற பிறகு, தமககு தேவ லோகததிலிருநது வநத கற்பகதருவை உசசினிமாகாளாசகுககொடுததனா.

இநஙகாத தின்பநுகர்ந தில்வாழ்க்கை யினிதோம்பிப்
பின்னரருங் கிளையோடு மககளொடும் பெரிதுவப்புற்
றநஙகர மதிசயிபப வநதாதுந துமியாரபபப
பொன்னகாவேந தெதிரேததத திருக்கைலை வரைபுகுந்தான்

(இ - ள்.) இவ்வுலக வின்பஙகளை யனுபவிசது இலலற தருமததை நன்று ககாத்து அதன்பின்னா அரிய மாவினரோடு புதலவரோடும மிகக மகிழ வெயதிய தேவலோகமாச்சரிய மெயதவும, அநதரதுநதுமி யொலிககவும, பொனனகாககரசனுன இநதிரன் எதிாகொணடு துதிசெயயவுந திருககைலாய கிரி யடைநதனா. எ - று. (கஅஉ)

மன்னிகழ்ந்த கதையிதுவென் றெடுததுரைதது முனிவராக்குப
பினனிழ்நத வநனகாதை பிறிதொனறு பேசுறலும
பன்னுகணத் தவாபுகழநது பலவாறறுற பரசுறறுப
பொன்னவிரபுன சடைசசூத புகலவாயென் றடிபணிநதாா.

(இ - ள.) பூாவததினடநத சரிததிரமிஃதென்று நைமிசாரணிய வாசி கட்கு எடுததுசசொலலி, சூதமுனிவா பிற்காலததினடநத அவவுருததிராகக ணியின் மற்றொரு கதைசொலலத தொடஙகவும், பலருமவியநது சொலலும முனிவாகள புகழ்நது பலவித மாகத துதிசெயது பொனபோலவிளஙகும புன சடையையுடைய சூதமுனிவரே! இனனும திருவாய லாநதருளுகவெனறு அவா பாதஙகளில் நமஸகரிததாாகள. எ - று. (கஅ௩)

**கலிநிலைத்துறை.**

அடவி மால்வரை யகடுகீண் டொழுகிய வருவி
மடல விழ்நதுவீழ் நறுமலா மிதநதிட வரலாற
புடவி மாமகள புனைமலா மாலையிற பொலிநது
நடவு தன்மைபெற றொழுகிய நருமதை யாறு.

(இ - ள்) வனததிலுளள பெரிய மலைகளின வயிற்றைககிழிததொழுகும் அருவியானது முறுககவிழ்நது விழுநத மணநதஙகிய மலாகள்மேலே மிதககும் படிவருதலாலே, பெருமைதஙகியபூமிதேவி அணிநதுகொணடுளள மலர்மாலை போன்று விளஙகிப பாய்கின்றதனமையைப பெற்றுப பிரவாகிககும் நருமதை யாறு. எ - று. (கஅச)

கூல வாாககனைக கனியொடுங் குழைநதவான சினைய
சோலை யகநதி வணங்கின தொழுவன போன்ற

சால நீண்மருங் கெய்தியந் தடந்திரைக் கரத்தான்
மூல மூரிபுக் கெடுத்தெமை முடிக்கலை யென்னு.

(இ - ள்.) அவ்வாற்றின் குவிந்துநீண்ட கரையிலே, பழங்களோடுவிளைந்த உயர்ந்த கிளைகளையுடைய சோலைகள், மிக நீண்ட பக்கங்களிலெய்தி, அழகிய விசாலமான அலைகளென்னுங் கைகளால் எங்கள் வேரிற்புகுந்து எங்களை யெடுத்து முடித்துக்கொள்ளவில்லையென்று, அவ்வாற்றைப்பணிந்து அஞ்சலி செய்வனபோன்றிருந்தன. எ - று. (கஅசு)

மணிவ ரன்றியும் வைரமீந்த தொழுகியும் வனவே
யணிநி லாமணி யுந்திய மாகலி தூர்த்தன
மணம கனபுலத் துள்ளவை வானவர் கொளலாற்
றணியு மன்னவற் களிப்பது போன்றதந் தடநீர்.

(இ - ள்.) அப்பரந்த நீர்ப்பெருக்கானது மாணிக்கங்களை வாரிக்கொண்டு பாய்ந்தும், வைரங்களை யிழுத்துக்கொண்டோடியும், வனத்திலுள்ள மூங்கிலிற் பிறந்த அழகிய வெண்முத்தங்களைச் செலுத்தியுஞ் சமுத்திரத்தைத் தூர்த்தல், தன கணவனுகிய சமுத்திரத்திருக்கும் நவமணிகளைத் தேவர்கள் கொண்டமையின், செலவங்குறைந்த அந்நாயகனுக்குக்கொடுப்பதை யொத்திருந்தது எ-று.

வரைய கழ்ந்தெழு மாவொடு மாமதக் களிறுந்
திரைசெய் வேலைதொட டோத்தது செறிப்பது செப்பி
னிரைபெ ருங்கடற் களிற்றொடு தருவிழந் தேங்கக்
குறைபெ ருமபுன் னருமதை கொடுப்பது கடுக்கும்.

(இ - ள்.) மலைகளைப்பிளந்து எழும்பிய மரங்களோடு பெருமதஞ்சொரியும் யானைகளையும், கரை வரையில மோதும் அலைகளபறறி யிழுத்துச்சென்று கடலிற்சோப்பதைச் சொலலுமிடத்தில, ஒலிக்கின்ற பெரிய கடல் தன்பாலுதித்த வெள்ளை யானையையும் கற்பகதருவையும் இழந்தேங்கி யிருப்பதால் ஒலிக்கின்ற நீர்ப்பெருக்குடைய நருமதையாறு அக்கடலுக்குக்கொண்டுபோய்க் கொடுப்பது போலாம். எ - று. (கஅஎ)

தூய நாண்மலர்த் தாமரை யோதிமந் திவைப்ப
மேய தேனறுளி விரையொடு தென்றன்மோந் திரைக்கு
மாய வாரணை யருகுறத் திரிகரு மாக்கள்
சேயொ ளிக்கதி மார்பினுந் தோளினுந் தெறிப்ப

(இ - ள்.) பரிசுத்தமான அன்றலர்ந்த தாமரை மலரை அன்னப்பறவைகள் துவைத்தமையால வெளிப்பட்ட தேன்றுளிகளைத்தென்றற் காற்றானது போந்து வாசனையோடு வீசும். இதனால் அவ்வாற்றின் நீண்ட கரைக்கருகே சஞ்சரிக்கும் மனிதர்களது செந்நிறமபொருந்திப் பிரகாசிக்கும் மார்பிலுந்தோளிலுந் தெரிக்கின்றன. எ - று. (கஅஅ)

இனைய மாநதி யுடுத்திடு மாயிட மென்னும்
புனைசெய் மாநக ரொன்றுள தந்நகர் பொருந்தி
மனைவ ளந்தரு விசுவ சித்தனென் வணிக
னினையு நீதியி னீட்டறத் துறைவழி நின்றன்.

(இ-ள்.) இத்தகைய சிறந்த நருமதையாறு சூழப்பெற்ற அலங்காரத்தோடு கூடிய ஆயிடமென்னும் பெருநகரொன்றுண்டு, அந்நகரத்தில்வசித்து இல்லற

நடாததும் விசுவசித்தனெனனும ஒப்பற்ற வைசிய குலததவன், மதிககத்தக்க மநுமுறைப்படி மேம்பட்ட தருமமாககவழியே யொழுகினன். எ - று. ()

வேட நலலுருக காணடொறும வீழ்ந்தடி பணிநது
மாடி ருநதியாங் கவாககமு துதவியு மனையாாக
காடை கோவண மருததியி ளருளியு மயிற
றேட ருமபொரு டருமமொன றல்லது தேடான்.

(இ - ள்., சிவவேடமதாங்கிய நலல உருவஙகளைததரிசிதத பொழுதெல லாம் சாஷடாஙகமாக அவா திருவடிகளில் நமஸகரிதது, தனனருகே யெழுநதருளச்செயது அவாகடகுத திருவமுது ஊட்டியும், அததகையினாககு ஆடைகோவணம இவறறை ஆசையோடு கொடுததும, கிரமமாகததேடததகக பொருளகளில தருமததை நீககப் பிறிதொனறினையும தேடாதவன. எ - று.()

ஆற ருஞசுரத தருமபுனற பநதாசெய தமைதது
மூறு கூவனீள குரமபொடு கழனிசெய் துவநதுந்
தேறு கினறதிற சிவனடி யல்லது தேறு
ணீறி லாபபெருங் கருணையே யுருவெடுத தனையான.

(இ - ள) வழியிலுளள அரிய பாலைவனததிலே அரிய தணணீாப்பநதலை பேறபடுததியும, ஊறறு நீா சுரககும கிணறுகளையும, நீணட வரமபோடுகூடிய கழனிகளையமைததுக களிததும தேறவேணடியவறறில சிவபெருமான திரு வடியையனறி வேறொனறும தேறாதவனும முடிவிலலாத பேரருளே வடிவ மெடுததாற போனறவன. எ - று. (கககக)

கடவுண் மாபபெருங கஙகையா டுதுமெனக கருதி
யிடப வேறறொடு கததப மொட்டக மிவறறின
மிடைபெ ருஞசரக கேறறுவோன் வெசரிப புறதது
னடைத ருமபொதி யேறறின னுருததிர வககம.

(இ - ள) தெயவீகமாதங்கிய சிறநத மேனமையுடைய கஙகாஸநானஞ செயவோமெனறு கருதி, இடபததின மேலும கழுதையின மேலும ஒட்டகத தினமேலும விசேட விலைதஙகிய சரககுகளை யேறறுவோனும, கழுதையின முதுகில உருததிராககமணிகளாலாகிய மாலைகளின பொதியை யேறறினன

காதங காதமாய் வைகலுங கழிநதாக கழிததுப
போதந தனனைன பொருமபாசூழ் விநதியப பொருபபின
மீதந தேறலும வீழநதுமகோ கிறபாழி நமனா
தூதன் பறறினன றெனபுலத துடனகொடு தூர்ப்ப.

(இ - ள.) ஒரு காதம ஒனறரைகாதமாக நாடோறுஙகழியும்படி கடநது போய, அவவிசவசிததனெனும வணிகன சோலை சூழநத விநதகிரியின மேலே யேறவும, அககழுதை யேறமுடியாது தவறிவீழநது இறககும சமயததில இயம தூதனபறறித தெனறிசையிலுள்ள இயமபுரததிற்கழைததுககொணடு செலல.

கயிலை மாலவரைக கணததவா வெகுண்டனா கடுங்க
ணயிலெ யிறறிடு மறலிதன் றூதனை யடாதது
வெயிலி மைததெழு மானமீ திருததுற மீண்டு
சயில நாயகன் சநநிதிப் படுததினா தலைவா.

(இ - ள்.) பெரிய கைலாயகிரியிலுள்ள சிவகணததலைவர் கோபிததது, கொடிய மான விழிகளும் முட்போன்ற பற்களுமுள்ள கொல்லததக்க இயம தூதர்களை யெதிரததது, ஒளிவிட்டுப்பிரகாசிக்கும விமானததின்மே லேற்றிக்கொண்டு திரும்பி, கைலாச நாதராகிய சிவபெருமான் சந்நிதியிற் கொண்டுபோனார்கள்.

நூறு கற்பமங் கிருந்தது கணமென நூல்கோத்
தேறு ருததிர மாமணி சுமந்தலா னெவர்க்கும
பேற ளிக்குமிம மாமணி தரிததவர் பெருமை
கூறி னெமமுழை யடங்குறு மென்றனன் சூரவன்.

(இ - ள்) அக்கழுதை, நூல்களிற் கோதத உருததிராக்கமணி மாலைகளைச் சுமந்த விசேடததால, நூறு கற்பகாலம் வரையில்,ஒருகூண நேரமபோல அக்கைலாயததிலிருந்தது. எததகையினருக்கும உயர்கதியைத் தரும இச் சிறந்த உருததிராக்கமணியைத் தரிததவருடைய சிறப்பைச்சொல்லத தொடங்கினால் எமமால் முடிவுறுதென்றார் சூதமுனிவர். எ - று. (சகூகு)

கேட்ட ரும்புலங் களிப்புறு மாதவக கிழவர்
தோட்ட லங்கலாய் சூதநீ முனபுகல் விபூதி
நாட்ட ருங்கதி தருமென நவின்றனை யதனோ
டட்டி மாமணி புனையவேண டுவதென விசைததாய்.

(இ - ள்.) இவற்றையெல்லாங் கேட்டு,அரிய ஐம்புலன்களு மகிழ்வெய்திய பெருந்தவமுடையோராகிய நைமிசாரணியவாசிகள், இதழ்களோடு விகசிதத மலர்மாலை யணிந்த சூதமுனிவரே! தேவரீர முனனே யுபதேசிதத விபூதியே சொல்லற்கரிய மெய்க்கதியைத் தருமெனறுரைததீர். அதனோடு கூட்டி உருததிராக்கமணி யணியவேண்டுமெனறு இபபோது கூறுகினறீர். எ - று.()

ஒன்றி ருங்கதி தருமெனி லுருததிர வக்க
மின்று பூண்பதில வருபய னெனகொலோ வென்று
வனறு மாதவர் சூதனை வினவலு மனையான்
மின்றி ரண்டன மேவணியாக கின்னணம விளம்பும்.

(இ - ள.) அவவிபூதி யொன்றே பெருங்கதி தருமென்றால் உருத்திராக்கமணியை இப்போது அணிவதில வரும்பயன யாதோவெனறு, அப்போது நைமிசாரணிய வாசிகள் சூதமுனிவரை வினவவும், அச்சூதமுனிவர மின்னல்கள சேரந்திருந்தாற்போலுஞ் சடைமுடியையுடைய அந்நைமிசாரணிய முனிவர்கட்கு இபபடிக்கூறுகினறார். எ - று. (கசுஎ)

மெய்ய ருமபிய வேர்வையின் விரிபுன லாடடின்
மைய ருமபிய மழையினின் மக்களமெயந நெருக்கிற
றெய்வ வெண்டிரு நீற்றணி சிதைதருஞ் சிதைந்தால
வெய்ய பூதமவெங் கழுதரா லரக்கரான மெலிவார்.

(இ - ள்.) உடலிற்றுளிக்கின்ற வெயர்வையாலும், பரந்த நீர்விளையாட்டாலும், மேகங்கள் சொரிந்த மழையாலும, மனிதர்களுடைய உடல் நெருக்கததாலும் தெய்வீகந்தங்கிய வெள்ளிய திருநீற்றின் அணிதல அழியும். அப்படி யழிந்தால், கொடிய பூதர்களாலும பெரிய பிசாசுகளாலும் இராகு கேதுக்களாலும், இராக்கதர்களாலும் வருததமெயதுவார்கள். எ - று. (கசுஅ)

அலங்கு மாமணி யுருத்திர வக்கமொன் றணியின்
விலங்கெ யிற்றுவெம பூதயே முதலிய மேவா
புலங்கொண் மாமணி புனைதரிற் போககுறு திதனு
லிலங்கு மாமணி நீற்றெடும புணைவதற கிசையும.

(இ - ள்.) விளங்குகின்ற சிறநத உருததிராககமணி யொன்றணிநதால், கொரேமான பற்களையுடைய கொடிய பூதமுதலியன பொருநதா. ஞானந தரும் சிறநத உருத்திராககமணிமட்டுமே யணிநதாலும் அவற்றை யகற்றுது. அக்காரணத்தால் பிரகாசிககின்ற உருததிராககமணி திருவெணணீற்றேடுமெ அணிதற்கமையும். எ - று. (கசுகு)

கவர்க்கொ டுஞ்சடை யந்தணீ ரொருகதை கேண்மின்
சவித்து ருப்பெரு நாடெனு மொருதனி நாட்டிற
பவித்த சூரிய புரமெனு மோாபதி யதன்பாற்
குவப்பு யசிநது சேனனென் றுளனொரு கோமான்

(இ - ள்.) பிளவுற்ற வளைநத சடையையுடைய அநதணாகளே! வேறோர் சரித்திரங கேட்பீராகளாக. சவிததிருவென்னும் பெருநாடாகிய ஒரு ஒப்பறற நாட்டிலே, சிலாககியமான சூரிய புரமெனும் ஒரு நகரமுணடு அநநகரததில திரண்ட புயததையுடைய சிநதுசேனனெனும் ஓரரசனிருநதான. எ - று. ()

சிந்து நாட்டினிற் காகள நகருடைச சிங்கன்
வநது போாக்கறை கூவனுமெ வருநததநாற் படையை
யுநத மூண்டிரு சேனையு முடறறிடுங காலை
முநது தூசியின் முறிநதனன சிஙகனு முதலவன்.

(இ - ள்.) சிநது நாட்டிலே, காகள நகரததை யரசுடைமை கொணட சிஙகனெனு மன்னவன் எதிாதது வநது போருககழைததவுடனே, சிநது சேனன சதுரங்க சேனையையுஞ் செலுதத, இருவா சேனையும எதிரிட்டுபபோர் செய்கையில், சததுருவின் முற்பட்ட தூசிபபடையால் சிஙகனெனு மனனவன தோற்றனன். எ - று. (உ௦க)

சிங்க னென்னுமத் திறலுடை யொருதனிச செல்வன்
பொங்கு நாறபெருஞ சேனையைக களமபடப போககி
யங்க வன்றனித் தொருவனு யடவிபுக கடைநது
செங்கண் மாயனை நோககினன றருநதவஞ செய்தான்.

(இ - ள்.) சிஙகனெனனும் பெயா பெற்ற வலிய ஒப்பற்றவரசன், கோபிக்கின்ற தனது நாலவகைப்பெருஞ் சைநியததையும் யுதததில் மாளுயபடி யழித்து, அவ்வரசன் ஒன்றியாயததனிதது ஒரு வனததிற்போயசசோநது, தாமரைமலர்க கணகளையுடைய திருமாலைத தியானஞ்செயதிருநது அரிய தவம் புரிநதனன். எ - று. (உ௦உ)

சால நாள்பல கழிதரக் கழிநதபின் றுளப
மாலை மாாபினன புள்ளர சுகைததெதிா வநதா
னேனு மன்பொடு மென்புறக குழைநதுநின் றேதது
மூல மாமுதன் முகுநதனைப் பணிநதனன மொழிவான்.

(இ - ள்.) எணணிறநத நாட்கள் இப்படித தவஞ்செயது நீஙகிய பிறகு, துளசிமாலை யணிநத திருமார்பையுடைய திருமால், பட்சி ராஜனுகிய கருடன

மீதாரோகணித்துக காட்சி தநதனர். பொருந்திய அன்புடன் என்புகள் நெக்கு விட வுருகி நோ நின்று தோத்திரஞ்செய்து ஆதிமூலமாகிய திருமாலெனும் முதலவரை நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்கின்றன. எ - று. (உ0ந)

செருமு கத்தடு நிருபரால் திருநகர் நீநதே
னருவி மாலவரை யடைந்துநின் னருள்பெற வேண்டி
யொருவ ருந்தவத் தடைந்தன னுவந்தருள சுரந்தாய்
மருவ லாககடந் தியானர செய்துவான் மதிபபாய்.

(இ - ள) போர்முகத்தி லெதிர்த்த பகை மன்னரால் என் செல்வ நகரத்தைப்பிரிந்தேன. அருவிதவழும் இப்பெரிய மலையை யடைந்து தேவரீர் திருவருளைபபெறக கருதி நீக்கற்கரிய தவநிலை மேறகொண்டேன். தேவரீர் திருவுள்ளமுவந்து திருவருள புரிந்தீா. சத்துருக்களைச்சயித்து அடியேன் அரசுரிமை யெய்துமபடி திருவுள்ளம் பற்றவேண்டும். எ - று. (உ0ச)

என்ன வேந்தனின் றிரந்திரந் தெடுத்தெடுத் தியம்பப்
பொன்னி லங்கெழி லெமபிரான திருவருள் புரிந்து
தன்ன லங்கொளிச சககரந் தருதுநின றணவாத
துன்னு சேனைகொண் டேகிமற றடுபடை தொலைப்பாய்.

(இ - ள ) என்றிவ்வகையாக அவவரசன் திருமாலின் திருமுன்னின்று விண்ணப்பஞ்செய்து விளம்பவும், திருமகள் விளங்கும் அழகுடைய திருமால் திருவருள் கூர்ந்து, தனக்குத்தானே யொப்பாகிய இச்சக்கராயுதத்தைத் தருகின்றோம். உன்றுடைய பிரியாத நெருங்கிய சேனையை உடன்கொண்டு போய மாறறுன சேனையை யொழிப்பாய. எ - று. (உ0ரு)

விடுத்த காலினி வெம்முனை யடுபகை வீட்டி
யடுத்து நினகரத் தமமுறை யடையுமற றப்பாற்
கொடுத்த சக்கர மெமமுழை வருமெனக கொடுத்தா
னெடுத்த வெணகுடை வேந்தனே றெழுந்தன னிப்பால்.

(இ - ள் ) பிரயோகித்தபோது போரிலெதிர்த்த நின்கொடிய பலகவரை யழித்து, உடனே பண்டுபோல உனகையில வந்து தங்கும். அதன் பின்னர், நாம் கொடுத்த இச்சக்கரம நம்மிடத்தில் வந்தெய்துமென்று திருவாய்மலர்ந் தளித்தருளினா. வெணகொறறககுடை நிழல செயயும அமமனனவன அதனை வாங்கிக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான். இதன பிறகு. எ - று ()

பரிதி நல்கிய நேமியோன் பாற்கட லடைந்தா
னொருத னிககுடை வேந்தனுஞ் சேனைகொண் டுருத்தான்
செருமு ரட்கடுஞ் சிந்துசே னனைககளுஞ் செறுத்துப
பொருது தங்களின் மிடைந்தன ரெதிரெதிா புகுந்தார்.

(இ - ள்.) சக்கராயுதமளித்த திருமால க்ஷீராப்திககு எழுந்தருளினர். ஒப்பற்ற சந்திரவட்டக்குடையையுடைய சிங்கனெனும் அவ்வரசனும் தனது சிறு சேனையைச்சேர்த்துச்சென்றெதிர்த்தான். முருட்டுத்தனமுடைய கொடும் போா செய்யத்தக்க சிந்து சேனனை யுத்தத்திற்கிட்டி யெதிாத்து, இருதிறச் சேனைகளுஞ் சேர்ந்து எதிர்த்து யுத்தஞ்செய்யலானாகள. எ - று. (உ0எ)

ஆழி மாயவ னளித்தரு ளாழிவெம் படைக்கு
வாழி நாண்மலர்ப புனலொடு மருசசனை வகுத்துச

சூழு மிக்களச சிந்துசே னன்றெருகு சேனை
பூழி யாக்குதி யெனவிடுத தொருகைதோள் புடைந்தான்.

(இ - ள்.) க்ஷீராப்தியிற்றுயிலுந திருமால் கொடுததருளிய சககராயுதத் திற்குப் புதிய பூககளாலும் நீராலும் பூசிதது, இவ்யுதத பூமியிற் சூழ்நதுள்ள சிநது சேனனுடைய தொகுதியாகிய சேனையைப் புழுதியாகச்செய்யக்கடவா யென்று பிரயோகஞ்செய்து, தனது ஒப்பற்ற வலககையால் இடததோளைத் தட்டினன். எ - று. (உ0அ)

கடவுண் மாப்படை முள்ளுடைக் கடுவனங் கவர்நது
படவெ ரிததடு வடவையிற படாநதது பாரா
மிடைபெ ருமபடை முறறுற விரிததது வேநதன்
சுடர்மு னின்றெளி மழுஙகிய மதியெனத் தொலைந்தான்.

(இ - ள்.) தெய்வீகநதஙகிய சிறநத சககராயுதமானது, முள்ளுகளையுடைய பெரிய வனததைக்கவளீகரிதது அழிததுவிட்டுத தகிததற்குரிய வடவாமுகாக் கினிபோலப் பரவியதைப்பாாதது, நெருஙகிய பெருஞ்சேனை முழுதும அழிந தது. அரசனுகிய சிநது சேனனும சூரியனுககு முனனிருநது ஒளி மழுஙகிய சநதிரனைப்போன்று அழிநதான. எ - று. (உ0கூ)

தன்ன வாகிய சேனையுந தானுமாய்த தணநது
முன்னை நாடுகொண் டிருநதனன் சிஙகனு முதல்வ
னன்ன வன்றனி நாட்டையு மணஙகுற வலைததான்
பினனா சிநதுசே னன்றனித தனனகா பெயாநதான்.

(இ - ள்.) சிநது சேனன தனனுடையதாகிய சேனையுநதானுமாய் யுத்த களததை நீஙகிததன பழைய நாட்டை அரசு செயதிருநதான. சிஙகனெனு மரசன அச்சிநது சேனனுடைய ஒப்பற்ற நாட்டையும் துனபெயதுமபடி யழிததான. அதன் பிறகு, அச்சிநது சேனன ஒனறியாயத தன நகரததை விட்டுச்சென்றுன். எ - று. (உக0)

வெருவி யோடினன் கோசிகன் மேதகு வசிட்ட
னருகி ருநதநா ரதனிவா மூவரை யடையா
வுருகு காதலின் மண்ணுற வணங்கினி னுரைப்பான்
றிருகு சீற்றமு நாடுநீத திடுசிநது சேனன்.

(இ - ள்.) கடுஙகோபததையும் நாட்டையும் விட்டு நீஙகியோடிய சிநது சேனன், பயந்தவனுய, பெருமைதஙகிய கௌசிகா வசிஷடா அவாகளோ டிருநத நாரதரென்னும் இம்மூன்று முனிவரை யடைநது மனமுருகுகினற பேரன்போடு பூமியிற்பொருநதச் சாஷடாஙகமாக நபஸகரிதது அவாகட் கெதிா நின்று விணணப்பஞசெயகின்றுன். எ - று (உகக)

சிங்க னென்படைச் சேனையாற் செருவலி யிழந்து
பொங்கு கானிடைப புகுநதுசி தரனடி போறறிச
செஙகண் மாலவ னுழிபெற் றனனமா செறுததா
னங்க ளுழிபுக் கறுததுதென் சேனையை யனைத்தும்.

(இ - ள்.) சிஙகனென்பவன், எனது ஆயுதமேநதிய சேனையால் யுததஞ் செய்யும் வல்லபமறறு, பெரிய காட்டையடைநது, இலக்குமியை மாாபி

லணிந்த திருமாலைத்துதித்துத் தவஞ்செய்து, அத்தாமரைக்கண்ணனுடைய சக்கராயுதத்தைப்பெற்று மீண்டும் யுத்தத்திற்கு நெருங்கினேன். அவ்விடத்தில் அச்சக்கரம் நெருங்கி என் சேனை முழுவதையும் அழித்துவிட்டது. எ - று. ()

ஆண்டு நின்றெனை தருமபகை கடப்பதற் கஞ்சி
யீண்டு நும்மடி சரணெனப் புகுந்தன னெளியேன்
றாண்டு சிந்தையிற் றிருவருள் சுரந்தனி ராகி
வேண்டு மொன்றெனக் களித்திரென றவரடி வீழ்ந்தான்.

(இ - ள்.) அங்கிருந்து என பெரும்பகையை வெல்வதற்குப்பயந்து, இங்கே தேவரீர் திருவடிகளை அடைக்கலமாக அடைந்தேன். மெய்ஞ்ஞானமோங்கும் உங்கள் திருவுள்ளங்களில் திருவருள் சுரந்தவர்களாய விரும்பிய ஒருவரத்தை அடியேனுக்கு அநுக்கிரகிப்பீர்களென்று அம்முனிவர்கள் பாதங்களில் வணங்கினேன். எ - று. (உகங)

வேத நான்குமூ வுருவெடுத் தனையமெய்த் தவத்தோர்
காது வெஞ்சம ரஞ்சுமன் னவனகருத் துணரா
வோது முண்மையொன் றுளதுனக் குணர்த்துது முணர்வாய்
பூதி பூசிமற் றுருத்திர மாமணி புனைவாய்,

(இ - ள.) நான்கு வேதங்களுமே மூவுருவேற்று வந்தாற்போன்ற உண்மைத்தவத்தையுடைய கௌசிகாதி முனிவர்கள், கொலைத்தன்மை பொருந்திய கொடிய யுத்தத்திற்கு அஞ்சிய சிந்துசேனனெனும் மன்னவனுடைய வெண்ணத்தை யறிந்து, சொல்லத்தக்க உண்மைப்பொருளொன்றுண்டு. அதனை யுனக்குச்சொல்வோம் அறிவாயாக. திருவெண்ணீறு தரித்து உருத்திராக்கமணி யணியக்கடவாய. எ - று. (உகச)

நின்பெ ரும்படை யிறந்தநா ணினை னுயிர்க கிரங்கிற
றன்ப னாழிமற் றேதெனை வுணர்ந்திலை யையா
வுன்க லத்துழை யுருத்திர மாமணி யுளவான்
முனபு ணர்ந்திலை பார்த்தியென றனனவர் மொழிந்தார்.

(இ - ள.) உன் பெருஞ்சேனைகள் இறந்த காலத்தில, சிவபெருமானுக் கன்பராகிய திருமால் அநுக்கிரகித்த சக்கராயுதம், உனனுயிரை யகற்றாது இரக்கமுற்றிருந்தது என்ன காரணமென்று நீ யறிந்தாயில்லை. ஐயனே! உன் னாபரணங்களிற் சிறந்த உருத்திராக்கமணி யொன்றிருக்கின்றது. நீ யதனை முன்னே யறிந்திலை. இப்போது காண்கவென்று முனிவர்கள் கூறினார்கள்.

யான றிந்திடு முருத்திர மணிபிறி திலலை
மான வெம்படை நள்ளுற வருமோர் வணிகன்
பானி லாமணி முத்தணி யளித்தனன பாரே
னேனை மாமணித் தொடையலி னுளதுகொ லென்றான்.

(இ - ன்.) அடியேன் தெரிந்து தரித்த உருத்திராக்கமணி வேறேயின்று. அச்சமுற்றதரும் பெருஞ் சேனையினிடையே யான் வருகையில், ஒரு வணிகன் வெள்ளிய சந்திரனபோலப் பிரகாசிக்கும் முத்துமணிகள் கோத்த மாலையாகிய ஒரு மாலையைக்கொடுத்தனன். அதனையும் நன்கு பார்க்கவில்லை. என்னுடையதல்லாத அம்முத்துமாலையில் அவ்வுருத்திராக்கமணியுள்ளதோ அறியேன் எனக்கூறினன். எ - று. (உகரு)

என்று முத்தணி கழற்றின னேக்கின னிடையே
யொன்று ருத்திர மணிகரந் திருந்ததென் றுரைபப
வன்று மூவரு நோக்கின ரதிசயங் கொண்டார்
நின்ற வேந்தனு மதனுடைய பெருமையை நினைத்தான்.

(இ - ள்.) என்றிவ்வாறு சொல்லி, அம்முத்துமாலையைக் கழற்றிப்பார்த்தான். அதனிடையே உருத்திராக்கமணியொன்று மறைந்திருந்தது எனச் சொல்ல, அதனைக்கேட்ட அம்முனிவர் மூவரும் அதிசயப்பட்டார்கள். அவர் முன்னின்ற சிந்து சேனனும் அவ்வுருத்திராக்கத்தின் பிரபாவத்தைச்சிந்தித்தான். எ - று. (உகஎ)

மன்ன கேண்மதி நின்னுடைப் பூமியும் வளனு
நின்ன வாகுற வேண்டுமே னீறொடு மணியைச
சென்னி தாஙகுதி சிநதையி லிருததுதி செருவேட்
டுன்னு சேனையு மிவ்வழி புனையுமா றுரைபபாய்.

(இ - ள்.) அரசனே! கேட்பாயாக. சத்துருவாற்கைக்கொள்ளப்பட்ட உன் பூமியும் வளங்களும் உன்னுடையனவாகப்பண்டுபோற் பெறவேண்டுமாயின, திருவெண்ணீற்றோடு உருத்திராக்கமணியைச் சிரமிசையிருத்தி மனதிலுந் தியானஞ்செய்க. யுத்தத்தைச்செய்ய விரும்பி நீ யனுப்புஞ் சேனைகளுக்கும் இப்படியே யணியுமபடி கட்டளை தரக்கடவை. எ - று (உகஅ)

போவெ னசசொனு மநநிலே மாதவப் புனிதா
மூவா தாளிணை சென்னிசோத துருத்திர மூாததிக்
காவ திமமணி யருளவேண் டுதிரென வளிததாா
காவ லன்றொழு தேநதின னருநெறி கடநதான.

(இ - ள்.) இனிச்செலலுசவெனகூறிய அப்பொழுது, பெருந்தவமுடைய பரிசுத்தாகளாகிய கௌசிகா முதலிய மூன்று முனிவர்களுடைய உபய பாதங்களையுஞ் சிரசிற்சூடி, சிவபெருமானுக்குரிய உருத்திராக்கமணியாகிய இதனைத் தேவரீர் கொடுத்தருளவேண்டுமெனப்பிரார்த்திக்க, அம்முனிவர்களும் அங்ஙனமே கொடுத்தார்கள். அரசன் அவர்களைப்பணிந்து மணியைப்பெற்றுக் கொண்டு அரிய வனத்தைக்கடந்தான. எ - று. (உகக)

வந்து சேனையுந தானுமவ் வுருத்திர மணியைச
சிநதை செய்தணிந தணிதிரு நீறொளி சிறக்க
முநதை வெமபடைத் தலைவரோடவனகா முடுகிச
சிந்து சேனனுஞ் சிஙகனு மமரெதிா செறுத்தார.

(இ - ள.) தன்னகரமெய்தி, சேனையுந்தானுமாக அவவுருத்திராக்கமணியைத் தியானஞ்செய்து அணிந்துகொண்டு, அழகிய திருவெண்ணீற்றின் பிரகாசம் அதிகரிக்க, முன் போலவே பெரிய சேனை நாயகரோடு, சத்துருவாகிய அச்சிஙகனுடைய நகரத்தை யடைந்து, சிந்து சேனனும் சிங்கனுமாக எதிரெதிர் நின்று யுத்தஞ்செய்யத் தொடங்கினார்கள், எ - று. (உஉ0)

செறுத்த சேனையுட் சிங்கனு மடுசினந் திருகி
மறுத்துமவ் வநதன னெனவுாநத வெருநெதிா வந்தான்
கறுத்த நெஞ்சொடு கனலுமி ழாழிகைக் கொண்டா
னிறுத்த நீரொடு மலரொடு மருச்சனை யீந்தான்.

(இ - ள்.) நெருங்கிய சேனைகளுக்குள் சிங்கனென்பவனும் கடுங்கோப மிகுந்து, மீண்டும் வந்தானென்று கோபத்தோடு புறப்பட்டு எதிர்வந்து, வஞ்சக மனத்தோடு நெருப்பைச்சொரியும் சக்கராயுதத்தைக் கையிலெடுத்து சலத்தா லபிடேகித்து மலர்களாலர்ச்சனை செய்து பூசித்தான். எ - று. (உஉக)

கடவுண் மாப்படை யாழியை விடுத்தலுங் கனலகான்
றிடந்டந்தவத் திகிரியு மெய்ப்பிரான மணியை
யடலை நீற்றையுங் கண்டது வெருவொடு மகலாப்
புடைய வலனறிரிந் தாங்கவன் கரதலம் புகுந்த.

(இ - ள்.) தெய்வீகந்தங்கிய சிறந்த சக்கராயுதத்தை ஏவியவுடனே, நீயைச்சிந்துமபடி சென்ற அச்சக்கராயுதம், எமது சிவபெருமான உருத்தி ராக்கமணியையும் வெற்றியைத்தருந் திருவெண்ணீற்றையும் பார்த்து, அது அச்சத்தோடும் அங்கு நின்றகன்று, அச்சேனையைப்பிரதக்கணஞ்செய்து அச் சிங்கனுடைய கையிலடைய. எ - று. (உஉஉ)

சீற்ற வெம்படைச் சிந்துசே னன்சினத் தெழுந்தா
ற்றற லன்னவ னநீகவெஞ் சேனையை யடாத்துப்
பாறறி னங்களம படாதரப் பொருதன்ன பழநா
ளுற்றி ருந்தனன வனம்புகுந் தொருதனி நோற்றான்.

(இ - ள்) கோபத்தையுடைய வெவ்விய சேனையையுடைய சிந்துசேனன் கோபித்தெழுந்து, தன வலியையால் அச்சிங்கனுடைய பெருந்தொகையாகிய சேனையை அழித்து, பருந்து கூட்டங்கள யுத்தகளத்திற்பரவ யுத்தஞ்செய் தனன. அது கண்ட முன் தவஞ்செய்தவன காட்டிற் பிரவேசித்து ஒன்றியா கத்தனியே தவம்புரிந்தான். எ - று. (உஉங)

உருத்தி ரப்பெரு மணியினு நீற்றினு முடற்றுஞ்
செருச்சி றந்தன னன்னது நீரப்பனென் றெண்ணிக்
குரைக்க ருங்கட லிறைவனை வணங்கினன குறிப்ப
விரைக்க ருங்கட லிறைவனு மாங்கவற் கெதிர்ந்தான்.

(இ - ள்.) பெருமை தங்கிய உருத்திராக்கமணியாலும் திருவெண்ணீற் றாலும் செய்கின்ற போரில ஜயமடைந்தான. அந்தச்சயத்தை யொழிப்பே னென்று கருதி, ஒலிக்கின்ற கருநிறமுள்ள சமுத்திரராஜனான வருணனை வணங்கித்தியானஞ்செய்ய, சத்திக்கின்ற வருணனும அச்சிங்கனுக்குத்தரிசனை தந்தான். எ - று. (உஉச)

அரிது நோற்றனை யென்னைவேண் டுதியென வருளான்
விரிக ருங்கட லயகன கேட்புழி வேந்தன
பெரிது வந்தரு ளெந்தையென பெருவிருப் பெல்லாம்
புரிதி யாயினுய நினைதொறும் பொழிகுதி யென்றான்.

(இ - ள்.) அரிதாகத்தவஞ்செய்தாய். யாது வேண்டுமென்று கருணை யோடு, பரந்த சமுத்திரத்திற்குத் தலைவன் கேட்டபோது சிங்கன், மிகவுங் களிப்பெய்தி, திருவருள்புரிந்த எந்தையே! அடியேன பெருவிருப்பமெல்லாம அநுக்கிரகிக்கத் தொடங்குவீராயில், யான கருதும் பொழுதெல்லாம் மழை பெய்யச்செய்வீரென்று கேட்டுக்கொண்டான. எ - று. (உஉரு)

ஆங்க தாகவென் றளித்தன னலைகடற் பெருமா
னோங்கு வெண்குடைச சிங்கனுஞ் சேனைகொண் டொருங்கே
வீங்கு திண்புயச சிந்துசே னனையமர் விளைபப
ஞாங்க ரன்னவர் படையெலா மெதிரெதிர் நடந்த.

(இ - ள்.) அலைகளோடு கூடிய சமுத்திரராஜனை வருணன் அவ்வாறே யாகுகவென்று வரங்கொடுததான். சநதோஷ மிகக வெண்கொற்றக்குடையை யுடைய சிங்கனும் தன் சேனைகளை ஒருஙகு சேர்ததுக்கொண்டு, பூரித்த வலிய தோளையுடைய சிநது சேனனோடு யுததஞ்செய்ய, இருபக்கமாயிருநத அவர் கள் சேனை முழுதும் எதிரெதிராகப்போர்செய்தன. எ - று. (உஉசு)

எதிர்ந டந்திகல் சிந்துசே னன்படை யாவும
பொதியு நீறொடு முருத்திர மணியொடும பொலிந்த
கதுமெ னககணட சிஙகனீக கடவுளை நினைநதா
னதிரபெ ருமபுயல பொழிதர நனைநததுவ வநிகம.

(இ - ள்.) எதிரேறி வநது போர்செய்யுஞ சிநது சேனனுடைய சேனை முழுதும் தமது தேக முற்றிலும நிறைநத திருவெண்ணீறறோடும் உருததி ராககமணியோடும் விளஙகின. அதைககண்ட சிஙகன்விரைநது வருணனைத தியானிததான். இடிமுழககோடு கூடிய பெரிய மேகஙகள் மழை பொழிநத மையால் சிநதுசேனன் சேனைமுழுதும் நனைநதன. எ - று. (உஉஎ)

அதுக ணததினிற் சிங்கனோ ரங்கையிற் றிகிரி
கதுமெ னததுரந தனனரன் கணணெனு மணியைப்
புதித ணிந்தவாத் தொழுதுவெண் பொடிநனைந தழுநத
மதுகை வீரரை யாருயிர குடித்தது வளைததது.

(இ - ள்). அத்தருணததில் சிஙகன் அழகிய கையிலேநதிய ஒப்பற்ற சகக ரததை ஏவினான். அது உருததிராககமணியை நூதனமாகததரிததவாகளைப் பணிநது, திருவெண்ணீறு மழையினால நனைவுற்ற வெற்றி பொருநதிய சேனை களைச்சூழ்நது அவாகளை அரிய உயிரை யுண்டது. எ . று. (உஉஅ)

சிநது சேனைய னாகிய சிநதுசே னனும்போ
யிநது சேகரற குவமைசால் வசிட்டாமற் றிவரைச
செநத ளிரபபதம வணஙகிநின் றஞசலி செய்து
புநதி யுநதனி வதனமும புலாநதிது புகலவான.

(இ - ள்). கடல் போலுஞ சேனையையுடைய சிநது சேனன் உடனே சென்று, சநதிரனைச்சடையிலணிநத சிவபெருமானை யொதத வசிஷ்டா முதலிய மூன்று முனிவர்கள் செவ்விய தளிர் போன்ற பாதஙகளில் வணஙகி நேர் நின்று கைகூப்பி, மனமும் ஒப்பற்ற முகமும் வாடி இவ்வாறு சொல்லு கின்றான். எ - று. (உஉகூ)

நுணங்கு மாதவத் துறையுளீர் நுமமொழி தலைக்கொண்
டிணங்கு ருத்திர மணியொடும் விபூதிபெற றெளியேன்
கணங்கொள சேனைகொண் டெதிர்தலு மன்னவன் கடற்கோ
வணஙகி யேததுறப பொழிநதனன் பன்மழை வருணன்.

(இ - ள்) நுண்ணிய பெருநதவமாாககததிலிருப்பவர்களே! உங்கள் சொல்லைச்சிரசாகவகிததது, பொருததமான திருவெண்ணீற்றோடு உருததிராகக

மும் உங்கள் பாற்பெற்று, அடியேன் கூட்டமாகிய சேனைகளைக் கூட்டிக கொண்டு எதிாததபோது, அச்சிஙகன் சமுததிரராசனை வருணனை வணஙகித் துதிசெயய, வருணன் பல மழைகளைப்பெய்தான். எ - று, (உருo)

ஆதி மாமணி புனைநதனா சிலாசில ரணிநத
பூதி சாதன வெண்பொடி புயனனைத் தழிபபக்
காது நேமிவெம படைசில வொழிதரக கதுவி
மோது சேனையை முறறுற முடிததது முனிநது.

(இ - ள்.) சிவபெருமானது உருததிராககமணி யணிநதவாகள் சிலர், மற்றுஞசிலா அணிநதிருககினற விபூதிககாப்பாகிய திருவெண்ணீற்றை மேகங கள நனைததழிததுவிட்டமையால், கொலலுகினற கொடிய சககராயுதமானது சிலவறறை ஓடிப்போய விம்மபடிசெயது, கோபிதது நெருஙகிய ஏனைச்சேனை முழுவதையும் மாயததது. எ - று. (உருக)

எனமொ ழிநதனன் கேட்டருண் மாதவ ரிசைப்பார்
வனையு ருததிர மாமணி யாவரும வனைந்து
புனையு நீறறெடும பொருதிலா புயலபட நடநதா
ரனையா யாவரு மிறநதன ரரணமற றிலலாா.

(இ - ள.) என்று விணணபபஞசெய்து கொணடனன். அதனைககேட்ட முனிவா சொலலுவாா. அலஙகரிககினற உருததிராககமாகிய சிறநத மணியை எலலோரும் அணிநதுகொணடு அணிகின்ற நீறறணியோடு போா செய்திலா. ஆதலால், வேறு காப்பில்லாதவாகளாய மழை சொரிதலால் நனைநத யாவரும் இறநதாாகள. எ - று. (உஙஉ)

இன்னு மோாபொரு ளியம்புதுங கேட்டியா லிறைவ
மினமெ யிறறுவா ளசுராயா வருநதவம விருமபி
மனனு ருததிர மணியொடு பூதியும வனைவாா
துன்னு முபபுரத தகவையி னிருபபரத தொலலோர்.

(இ - ள) இன்னும் ஒருணமை சொல்லுவோம். அதனையுஙகேட்பாயாக. அரசனே! ஒளி வீசுகின்ற வாட்படைபோன்ற பறகளையுடைய அசுராகள் யா வருந தவச்செயலை யிச்சிதது நிலை பெறற உருததிராககமணியோடு திருவெண ணீறுந தரிப்பாாகள. அப்பழைய அசுராகள நெருஙகிய திரிபுரஙகளினுள் ளிருப்பாாகள. எ - று. (உருங)

அனைய தொன்மையோ ரரிமுதற பிரமரை முதலாம்
வினையி னீஙகிய தேவாககும வினைவிளைத துவபபாா
முனைமு கத்தவர்க குடைநதுமுப பததுமுக் கோடி
துனைபெ ருமபடை வானவ ராறறலா துய வாா.

(இ - ள்.) அததிறப்பழைய அசுராகள், பிரமனுக்கும் பிதாவான திருமால் முதலாகிய தீவினையினின்று கழிநத தேவாகளுககும் தீமை செய்து களிப்பாா கள். யுத்தததில் அவவசுரர்க்குததோற்று முப்பதது முக்கோடி தேவர்களும் ஆற்ற முடியாதவாகளாய் வருநதுவாாகள. எ - று (உருச)

அரியு நான்முகக் கடவுளுந் தேவர்கள் யாரும்
புரிய முப்புரஞ் செகுத்துறப புலமையி னோர்ந்தா

ரெரியும் வேள்வியொன் றேமபின ரவ்வெரி யிடைநின்
றுரிய பூதமும பேய்களும் பிறநதன வுலப்பில.

(இ - ள்). விஷ்ணுவும் பிரமனும் ஏனைய தேவர்கள் யாவரும், தமக்குத் துன்பு செய்யும் திரிபுரஙகளை யழிததுவிடத தஙகள் புததியால ஆலோசிததார கள். எரிகின்ற ஆபிசாரயாகமொனறுவளர்த்தாரகள அவயாகாக்கினியிலிருநது குரூரஞ்செய்யததகக பூதஙகளும் பேய்களுங கணககினறிததோன்றின. எ - று.

ஈண்டு குண்டவெந தழலிடை யெழுநதவெஞ சேனை
தூண்ட முபபுரஞ சுறறின கடுஞசமா தொடுதத
வாண்டெ திரநதவ ரணிநதரு ளுருத்திர வககம
பூணட பூதிகண் டெதிர்தொழு திறைஞசின போன.

(இ - ள்.) இவ்விடத்தில், அவயாக குண்டத்தின் கொடிய அக்கினியில் தோன்றிய கொடிய சேனையை யேவவும், அவை திரிபுரங்களைச்சூழ்நதுகொணடு கடும்போர்செய்தன. அஙகெதிரநத திரிபுர வசுரரகள அணிநதிருககும உருத திராக்கமணியையும் திருவெணணீற்றையும் பாரதது அவரகளை யெதிரகொணடு வணஙகிச்சென்றன. எ - று. (உ௬௯)

ஒன்றி னுலுமுப் புரத்தவ ரொழிகில ரென்று
மனற லநதுள வணிநதருண மாயவன மதிததுச
சென்று தானொரு பவுததரிற சிறநதன ளுகி
யனற வாககுவே றுணாததினன பேரறி வழிததான்.

(இ - ள்.) ஒரு வழியாலும இததிரிபுரர்கள் அழிநதிலரே யென்று, மணம்வீசுந துளசிமாலையணிநதருளும திருமால யோசிதது, தாமேயொரு சிறநத பவுததாசாரியராகப்போய, அவவசுரரகட்குப்பவுதத மாரககததை யுபதேசிதது அவரகளுடைய பெரிய ஞானததை யொழிததார. எ - று. (உ௭௦)

முப்பு ரததினா மணியொடு பூதியோரந தெடுதத
வபபு ரததினை வறுமபுர மாககின ரதுவோரந
தெபபு ரததினு முறைநதரு ளிமையவர பெருமா
னிபபு ரததழ னகைவிளைத திடவுயிர நீததார.

(இ - ள்.) திரிபுரவவுணரகளின உருததிராககமணியுடன் திருவெணணீற் றையும் முன்னே யணிநதிருநத அவவுடல்களை வெற்றுடல்களாககினாரகள். அதனை யறிநது எவவுலகஙகளிலும நிறைநதருளிய தேவநாயகனுகிய சிவபெரு மான், இததிரிபுரஙகளிற கோபச்சிரிபபுணடாகக அவரகள் உயிர விட்டார்கள்.

நீயு மவ்வழி யுருததிர மணியொடு நீறு
மேய சேனையோ டணிநதுமால விழிவளாந தருளும்
பாயி ருநதிரைக கடலெனப பெருமபடை பரபபிப
போய வனபடை வரவழைத தெதிரெழப பொருதி.

(இ - ள்.) அப்படியே, நீயும் பொருநதிய உன் சேனையோடு உருததிராக்க மணியையுந திருவெண்ணீற்றையுந தரிதது, திருமால் யோகநித்திரை புரியும், பாய்கின்ற பெரிய அலைகளையுடைய பாற்கடல்போலப் பெருஞ்சேனை பரவச் சென்று, அச்சிங்கன் சேனையை வரும்படி அழைததெதிர்த்து யுத்தஞ் செயயக கடவாய். எ - று. (உ௭௧)

பூசு பூதிதண் புயறபுன னனைநதுபோக் குறினு
மாச றபபுனே யுருததிர மாமணி யழியா
பேசி லீஙகிவை யிரண்டையும பெரிது றப் புனைநது
மூசு வண்டிமி வாகைபெற றெழுகென மொழிந்தார.

(இ - ள்.) அப்படிச்சென்றால், அணிநத திருவெண்ணீற்றை மேகஙகள் மழையால் நனைததுககலைதது விட்டாலும், குற்றமகலததரிததுள்ள சிறநத உருததிராக்கமணி நனைநதழியாதாதலால, சொல்லுமிடததில் இவ்விரணடனை யும மிகுதியாகத்தரிதது மூசுகினற வண்டுகளொலிசகும் வெற்றிமாலை யடை நது செல்கவெனக கூறினா. எ - று. (உசo)

அருநத வங்கிளைத தனையாசொற் றருளிய மொழியாற்
றிருநது சிநதைய னுருததிர மணியொடுஞ் சிறநது
பொருநது பூதியைச சேனையும புனைதரப புனைதந்
திருநத சேனைகொண் டெறுழுவலிச சிஙகன்மே லெழுந்தான்.

(இ - ள்.) அரியதவமே கப்புவிட்டதுபோன்ற அம்முனிவாகள் மொழிந தருளிய வாாததைகளால, திருநதிய மனததையுடைய சிநது சேன மன்ன வன், உருததிராககமணியோடு, சிறப்புற்றுப்பொருநதிய திருவெண்ணீற்றை யும, தன சேனையும அணிநதுகொளளத தானுமணிநது, தனபாலிருநத சேனை களைககூட்டிககொணடு, மிகக வலிதஙகிய அச்சிஙகனமேலெதிரககப் புறப்பட் டான. எ - று. (உசக)

எழுநத சேனைகொண் டேகலு மெய்திய சேனைக்
கொழுநது சிங்கனூரக கொடிமதி ளுடுததன வனையான்
புழுஙகு சீறறமோ ருருவுகொண டாலெனப புகுநதா
னழுநது பாறகடன மேல்விழு மதிமுகில பொருவ.

(இ - ள்) இவவாறு புறப்பட்ட சேனையை யுடன்கொணடு செல்லவும், சேனையின முதல வரிசைகள சிஙகனுடைய நகரததின துவசஙகட்டிய மதிலைச் சூழ்நது கொணடன. அச்சிஙகன, ஆழமாகிய க்ஷீராபதியின மேல்விழுங காச் சனையுடைய மேகததைப்போல, கடுஙகோபமே ஓா வடிவெடுத்ததெனறு சொலலுமபடி சேனையோடு வநதான. எ - று. (உசஉ)

இருவர் சேனையு மெதிரெதி ருடறறின விடையே
குருதி யாறெழுந தலைபபது பெருமபிணக குப்பை
யருகு யாநதன வெருவருஞ சிஙகனேற றடாநதா
னொருவ னிபபெருந திகிரிகொண் டருசசனை யுஞற்றி.

(இ - ள.) இருமனனவா சைனியமும் ஒன்றுடனொனறு எதிாத்துப் போா செயதன. இவவகைப் போாககிடையில உதிரவெள்ளம அலைததோடி யது. பெரிய பிணக்குவியலகள் அருகே மலைபோன் றுயாநதன. அச்சநத ரும அரிய சிஙகனெனபவன எதிர்ததுப போா செயதவனாய், ஒப்பற்றதாகிய பெரிய சககராயுததததைக கையிலேற்றுப் பூசிதது எ - று. (உசந)

விடுதத னன்றனித் திகிரியவ் வெண்ணிணத் திகிரி
யெடுதத சேனையி னிடையிடை கழிதர வேகித
தொடுதத மாமணிந தொடையுணாந தாஙகவாத தொழுது
மடுதத சேனையை வலனதிரிந தகனறது வாழ்ததி.

(இ - ள்.) ஒப்பற்ற சக்கராயுதத்தைப் பிரயோகித்தான். வெள்ளிய நிணந்தோய்ந்துள்ள அந்தச் சக்கராயுதம் சைநியங்களின் இடையிடையே விலகும்படி போய், அணிந்திருக்கும் சிறந்த உருத்திராக்கமணி மாலையைப் பார்த்து அவர்களைப் பணிந்து, நிறைந்த அச்சேனையைப் பிரதக்ஷிணஞ் செய்து தோத்திரித்துப்போயது. எ - று. (உசச)

சிங்க னென்னுமக் கடுஞ்சினத் திறலுடை வேந்தன்
பொங்கு வெண்டிரைக் கருங்கட லிறைவனைப் போற்ற
மங்கு லண்டமுற றிடிக்குரன் முழக்குடன் வந்து
துங்க வெமபடை விபூதிதோய்ந தழிதரச சொரிந்த.

(இ - ள்.) சிங்கனென்றுசொல்லுங் கடுங்கோபமும்வலிமையுமுடைய அவ்வரசன், விசேடித்த வெள்ளிய அலைகளையுடைய கருங்கடலுக்குத் தலைவனான வருணனைத் துதிசெயய, மேகங்கள் ஆகாயத்திற் பொருந்தி இடியாகிய குரன் முழக்கத்துடன் வந்து, புனிதமாகிய பெரிய சேனையின விபூதிக்காப்பை நனைந்தழியும்படி மழை சொரிந்தன. எ - று. (உசரு)

சொரிந்த காலையி னீறறொளி தொலைதரச சோதி
விரிந்த மாமணி விளங்குற நமக்கினி விறலே
தரிந்த நீாபபுன லருவரை யடைதுமென றடைநதான்
பரிந்த சேனையுந தானுமா யவவனம பயின்றான்.

(இ - ள்.) அப்படி மழைபெய்த சமயத்தில், திருவெண்ணீற்றொளி மறைய, ஒளிமிக்க சிறந்த உருத்திராக்கமணி பிரகாசிக்கப் பார்த்து, சிங்கன் இனி நமக்கு ஜெயமுண்டாவதெங்ஙனம? குளிர்ந்த நீரருவி பாயும் பெரிய மலையை யடைவோமென்று சோர்ந்து, தனபாற் பரிவுள்ள சேனையுந் தானுமாக மலையருகிலுள்ள வனத்திற் றங்கினான். எ - று. (உசசு)

தெண்ணி லாத்தனிக் கவிகைமே னிழற்றுறச சினங்கா
லண்ணல் வாரண மீப்பொலிந தருமபகை கடந்து
வண்ண வார்சிலைச சிங்கனு டடங்கலும வணங்க
வெண்ண ருமணி குயிற்றரி யாசனத் திருந்தான்.

(இ - ள்) தெளிந்த சந்திரிகையை வீசும் ஒப்பற்ற வெண்கொற்றக் குடை மேலே நிழலைச்செய்ய, கோபத்தைச் சிந்தும் பெருமை தங்கிய பட்டத்து யானைமேல் விளங்கி அரிய பகைவர்களை வென்று அழகமைந்த நெடிய விலலைத் தாங்கிய சிங்கனுடைய நாடு முழுவதையும் தன்னை வணங்கும்படி அளவற்ற நவமணிகள்பதித்த சிங்காசனத்திற் பொருந்தியிருந்தான். எ - று. (உசஎ)

செய்ய கோன்முறை பொதுவறச செலுத்தியந நாடும
பொய்யின் மாமணி நீற்றொடும புனைதரப பொலிந்தான்
வையம் யாவையு மொருகுடை நிழற்றினன் மனையாண்
மெய்யொ டுளஞ்சிறந் தருநல நுகர்ந்தனன மிகுநாள.

(இ - ள்) பொதுத்தன்மை நீங்கச் செங்கோன்முறையை நடாத்தி, அந்நாடுகளையும் பொய்மையில்லாத உருத்திராக்கமணியுடன் திருவெண்ணீற்றையும் அணியச்செய்து விளங்கினான், உலக முழுவதையும் ஒப்பற்ற சந்திரவட்டக

குடையால் நிழல்செய்து, மனைவியோடுகூடி வெகுகாலம் உண்மை நிலையுடன் பெருமைபெற்று அரிய சுகங்களை யநுபவித்தான். எ - று. (உசஅ)

விரும்பு நன்னலம் யாவையு நுகர்ந்தனன் வியந்தா
றிருந்து மைந்தரு மனைவியு நிதியமுளு சிறந்தா
னிருந்து நாள்பல கழிந்தபின் றன்குலத் தெவரும்
பொருந்து சேனையுந் தானுமாய்க் கைலைமீப பொலிந்தான்.

(இ - ள்.) விரும்பத்தக்க நல்ல இன்பங்களையெல்லாம் அநுபவித்துக் களித்து, திருந்திய புதல்வரும் மனைவியரும் செல்வமுமுடையவனாய்ச் சிறப்பெய்தி, அநேககாலங் கழிந்தபிறகு, தன் குலத்தாரெல்லாரும், பொருந்திய சேனையுந்தானுமாகச் சேர்ந்து திருக்கைலாயத்தில் விளங்கிவாழ்ந்தான். எ - று.

மாறு கொண்டிகல் வேந்தனும் வனம்புக வைகி
நீறு மாமணி யுருத்திர வக்கமு நீங்கான்
வீறு கொண்டுமால் விடையினன் றிருவருள் வேண்டி
யீறு பெற்றனன் கடைமுறை கைலைபெற் றிருந்தான்.

(இ - ள.) வேறுபட்டுப் பகைத்த அரசனாகிய சிங்கனும், வனத்திற் புகுந்து வசித்து, திருவெண்ணீற்றையும் சிறந்த உருத்திராக்கத்தையும் நீங்காதவனாய்த் திடசித்தமுற்று, திருமாலை இடபமாகக்கொண்ட சிவபெருமான் றிருவருளை விரும்பி முடிவெய்தினன். இறுதியாகக் கைலாயபதவியுற்று வாழ்ந்தனன். எ - று. (உகூ0)

பொன்னிற் சூழ்ந்தன செயமினிற பொதிந்தன புயல்வான்
மின்னிற றோனறிய வெள்ளியிற போர்த்தன விவற்றின்
பின்னற் கம்பியிற கோத்தன பெரிதணிந் தவப்பா
தன்னைத் தன்வினை யைத்தலை வனையுணர் தவத்தோர்

(இ - ள்.) பொன்னாற் கவசஞ் செய்யப்பட்டனவும், ஆகாயத்திலுள்ள மேகத்திலுண்டாகும் மின்னல்போன்ற வெள்ளியாற் சூழப்பட்டனவும், இவ்வுலோகங்களின் பின்னலாகிய கம்பியிற் கோத்தனவுமாக மிகவுந் தரித்துச் சந்தோஷிப்பவர்களே தன்னையும் தன் வினையையும் தலைவனையும் உணர்த்தக்க தவத்தினராவா. எ - று. (உகூக)

ஆத லாற்றிரு நீறொடு முருத்திர வக்க
மீத ணிந்திட வேண்டுமா லிவற்றுள விழுப்ப
மோது நான்மறை யோதுவ தன்றிமற் றொருவ
ராதி தோன்றிய விவற்றினை யெவருணர்ந் தறிவார்.

(இ-ள்.) ஆகையால், திருவெண்ணீற்றோடு உருத்திராக்கமணியை உடம்பிலணியவேண்டும். இவற்றிற்குள்ளனவாகிய மேன்மைகளை ஓதப்படும் நான்கு வேதங்களும் சொல்லுவதன்றி, ஆதியிலுற்பவித்த இவவிரண்டின் சிறப்புகளை. வேறே யாரொருவர் தெளிந்துணரத்தக்கவர்கள்? எ - று. (உகூஉ)

உரைத்த மாமணி யணிந்தவ ரெம்பிராற் குகந்தோ
ரிரைத்த கங்கையஞ் சடையவர்க் கிருவிழி யனையார்
திரைத்த வார்கட னெடுநிலத் திம்மணிச் சிறப்பை
நிரைத்த நூன்முறை கேட்பவ ரவாதமை நிகர்ப்பார்.

(இ - ள்.) சொல்லிய அச்சிறந்த உருத்திராக்கமணியை யணிந்தவர்கள் எமது சிவபெருமானுக்கு உவப்புடையவர்கள், ஒலிக்கின்ற கங்கையையணிந்த சடையையுடைய சிவபெருமானுக்கு இருவிழிகளையொத்தவர்கள். அலைகள் பொருந்திய நெடிய கடல்சூழ்ந்த பெரிய பூமியில், இவ்வுருத்திராக்கமணியின் மகிமையை வரிசையான நூல்களில் முறைப்படி கேட்பவர்கள் தம்மைத்தாமே யொத்தவர்கள், எ - று. (௨௫௩)

என்று சூதமா முனிவர ணியம்பிய தியாவு
நின்று ணாந்தமா முனிவர ருளளுற நெகிழ்ந்தா
ரன்றெடுத்தெடுத்துரைத்தரு ளுருத்திர வக்கத்
துன்று காதைமுற் றுணர்த்துமச சூதனைத் தொழுதார்.

(இ - ள்.) என்றிவ்வகையாகச் சூதமகாமுனிவர் திருவாயமலாந்தவற்றை யெல்லாம், நன்னிலையினின்றுணாந்த சிறந்த நைமிசவன முனிவாகள் மன முருகினவாகளாய, பூர்வத்தில் பலரெடுத்துசசொன்ன உருத்திராக்கமணியின் சரிதைகள் எல்லாவற்றையும் உணாத்தியருளிய அந்தச் சூதமுனிவரை வணங்கினார்கள், எ - று. (௨௫௪)

உருத்திராக்கமான்மியசருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எ௬௧.

ஏழாவது

# பஞ்சாக்கரமான்மியசருக்கம்.

கலிநிலைத்துறை.

முனிவா யாரினு முன்மொழி சூதமா முனிவ
னனித வமபுரி பெருமைசா னைமிசா ரணியத
தினிய மாதவாக கெம்பிரா னஞ்செழுத தியற்கைப்
புனித மாக்கதை யாவையும புலபபடப புகலும.

(இ - ள்.) முனிவர்களெல்லோருள்ளுந் தலைமையாகச் சொல்லப்படும் பெருமை தங்கிய சூதமுனிவா, மிகுதியாகிய தவத்தைச்செய்த மேன்மை மிகுந்த நைமிசாரணிய வாசிகளாகிய இனிய பெருந்தவசிகளுக்கு எமது சிவபெருமானது பஞ்சாக்கரத்தின் இயல்பாகிய புனிதமான சிறந்த சரிதங்களெல்லாவற்றையுந் தெரியும்படி உரைக்கின்றனா, எ - று. (க)

எந்தை யெமபிரா னருளையிவ் வெழுத்தெனப் பிரித்துத்
தந்த மந்திர மைந்தெழுத் தாமெனத் தகுமா
லந்த மந்திரத் தளவையைச சற்குரு வறிந்து
சிந்தை தேறுறத் தெளிபபதங் கதனிலை தெரிக்கில்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமான் தமது திருவருளையே இவ்வெழுத்துகளாக வகுத்துக்கொடுத்தருளிய மந்திரமானது பஞ்சாக்கரமென்று சொல்லத்தக்கது. அந்தப் பஞ்சாக்கர மந்திரத்தின் பிரமாணத்தை ஞானசிரியா நன்றாக வுணாந்து மனந்தெளியும்படி யுணாத்துவது. அம்மந்திர நிலைமையைச் சொல்லுமிடத்தில் எ - று. (உ)

இனைய மந்திரத் தியலபுணாந் தோாபொழு திசைபபோ
ரனையா தமமுழைப புணணியம யாவையு மடங்கும
வினையு நீங்குவா மேதினி புரந்தினி தளிபபாா
புனையு மேறபதம புகுவாமுத தேவாிற பொலிவாா.

(இ - ள்.) இத்தகைய மந்திரத்தின் இயல்பினைத் தோந்து ஒருகால் தியானஞ் செயவோாகள் யாரோ அவர்கள பால் எல்லாப புணணியங்களும சேரும். சகல வினைகளுமகல்வாாகள. உலகத்தை யரசுசெய்து இனிதாகக காப்பாாகள. அலங்காரமான உயாபதவி யடைவாாகள. திரிமூாத்திகளபோல விளங்குவாாகள எ - று. (ங)

புலாிக காலையு முசசியு மாலையும புனிதன்
பலாிக கிண்கிணிப பாதத்தா மரைமுறை பரவி
மலாிப புநதியிம மநதிர நினைபவா மனஞ்சூ
மூலாிக குஞசகத தவரையே சிவவடி வாககும.

(இ - ள.) விடியற்காலத்திலும் உச்சிககாலத்திலும மாலைககாலத்திலும், சிவபெருமானது பல மரகதங்களாலாகிய கிண்கிணிமாலை யணிந்த திருவடித் தாமரைகளை முறைபபடி துதித்து, தெளிந்த சித்தத்தோடு இப்பஞ்சாக்கர மந்திரத்தைத் தியானஞ் செயபவாகளது மனத்திற் சூழ்ந்து மலரச்செய்யும் இபபூமியில அத்தகையினரையே சிவசாரூப மடையச்செயயும எ - று. (ச)

அஞசெ ழுததெனு மருமறை மநதிர மதனை
நெஞச ழுததவா முழுமுதற றேவனை நிகாபபாா
பஞச பாதகா மீதுமற றவாநிழற படினுஞ
செஞசெ வேயவா காணசினும பவநதொலை செல்லும.

(இ - ள்.) பஞ்சாக்கரமெனறு சொலலப்படும அரிய இரகசியப்பொருளாகிய இம்மந்திரத்தை மனதிற்றியானஞ்செயவோா முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானுக்கு ஒப்பாவாாகள. அத்தகையினருடைய நிழலானது ஐம்பெரும்பாதகஞ்செயதோா மேற்பட்டாலும, (அபபாவிகள அவாகளைத்) தரிசித்தாலும், அதிதூரமாகப்பாவங்களெலலாம ஓடிபபோம். எ - று. (ரு)

சிற்ப ரநதெரி மநதிர மீங்கிதிற சிறநத
முற்பெ ருஙகதை யுளததுமொழிகுதுங் கேண்மின்
பொறப ழம்பதி காசிவாழ் வெணகுடைப புனிதன
மறப குந்தன தடம்புயன் வசசிர வாகு.

(இ - ள்.) ஞானரூபியாகிய சிவபெருமானைத்தெரிவிக்கும் மந்திரமாகிய இப்பஞ்சாக்கரத்தைப்பற்றி, மேலான சிறந்த பூாவசரிதை யொன்றுணடு, அதனைககூறுவோம் கேட்பீர்களாக, அழகமைந்த காசி யென்னும பழய நகரத்தில் வாழ்ந்திருந்த வெணகொற்றக்குடையையுடைய பரிசுத்தனும் வலிமை

யைப்பாகு படுத்தியது போலும் பரந்த தோள்களுடையவனுமாகிய வச்சிர வாகுவென்றொருவனுண்டு. எ - று. (௬)

வாழி மன்னவன் மனைவயிற் றோன்றினண் மகர
யாழி னின்னிசை பிறந்தென விமையவர்க் கெறிநீ
ராழி யாரமு தியாதென வருந்தமிழ்ப் பொதியகு
சூழி ருந்தமி ழீன்றென வொருதனித் தோகை.

(இ - ள்.) இச்சிறந்த மன்னவனுடைய மனைவியினிடத்தில், மகரயாழிலே இனிய இசைகள் பிறந்தாற்போலவும், தேவர்களுக்கு அலைவீசும் கடலானது அமுதத்தைப்பெற்றது போலவும், அருமையான இனிய பொதிய மலையானது உலகமுற்றும் பரவிய பெரிய தமிழைக்கொடுத்தது போலவும், ஒப்பற்றவொரு குமாரத்தி பிறந்தாள். (எ)

பருவ மங்கைய ரழகெலா மொருவழிப் படுத்தி
யுருவ மாக்கின னுறுப்பெனு மவயவத் துவமை
பொருவ மறறையோர்க் குள்ளபோற் படைத்திலன் புதுப்பூ
மருவி ருங்குழற் குவமைமே தியம்புமிவ் வையம்.

(இ - ள்.) பால்ய ஸதிரீகளின் அழகு முழுவதையும் ஒன்றுசேர்த்து ஒருருவமாக்கினன் பிரமதேவன். அவளுக்கு அங்கங்களென்னும் அவயவங்களுக்குரிய உவமானங்கட்குப்பொருந்த, மற்றப்பெண்கட்கிருப்பனவொன்று உண்டாக்கினனில்லை. அன்றலர்ந்த மலர் சூடிய அவளுடைய பெரிய கூந்தலுக்கு இவ்வுலகினர் எதனை உவமையாகச் சொல்லுவர். எ - று. (அ)

இத்தி றத்தொடும் வளர்தரு கலாவதி யென்பா
ளுய்த்து ரைத்துள கலையெலா மொருங்கினி துணர்ந்தாள்
முத்த வாணகை யிவடனை மணந்தனன் முரட்போர்
மத்த யானையோர் தனிக்குடை மதிக்குல வழுதி.

(இ - ள்.) இவவகை யழகோடும் வளர்கின்ற கலாவதியெனும் பெயர் பெற்ற அப்பெண், பெரியோர் தோந்து கூறிய நூல்களையெல்லாம் முற்றும் இனிதாகத்தேர்ந்தனள். முத்துப்போலும் ஒளி வீசும் பற்களையுடைய இவளை, மாறுபடுகின்ற யுத்தத்தில் வலிய மதங்கொண்ட பட்டத்து யானையையும் ஒப்பற்ற ஓர் சந்திரவட்டக்குடையையுமுடைய சந்திர குலத்தவனாகிய ஒரு பாண்டியன் மணஞ்செய்தனன். எ - று. (௯)

வதுவை முற்றினன் மாநகர் கொணர்ந்தனன் வழுதி
விதுமு கத்தின ளலநுகர் விருப்பொடு வெதும்பிப்
புதுமு லைத்தடம் புல்லலுற் றனனது பொழுதின்
மதும லர்க்குழ நீண்டனீ யென்றிடை மறுத்தாள்.

(இ - ள்,) அம்மன்னன் மணவினை முடித்துத்தன்னுடைய சிறந்த நகரத்திற்கழைத்து வந்தான். பூரண சந்திரன்போலும் முகத்தையுடைய அக்கலாவதியின் கலவிச்சுகத்தை விரும்பிக்காமத்தீயாற்றகிக்கப்பட்டு, பருத்த அவளுடைய இளந்தனங்களைத்தழுவத் தொடங்கினன். அப்போது தேன் சிந்தும் மலர்மாலை யணிந்த கூந்தலையுடைய கலாவதி தொடாதேயென்று தடுத்தாள்.

உலகம் யாவையு முள்ளன சராசர மனைத்துஞ்
சுலவி நிற்பது தொன்மைய தாயது சுருதி

யலகின் மந்திர வஞ்செழுத் தறிந்திலை யரச
புலவ ருநதினை பிறாமனை விருமபினை புகுநதாய்.

(இ - ள்) அரசனே! உலக முழுவதிலும் உள்ளனவாகிய சராசரப்பொருள் களிலெல்லாஞ் சூழ்ந்திருப்பதும், பழமையானதும், வேததநிற்சொல்லுங குற்றமில்லாத மந்திரமுமாகிய பஞ்சாக்கரத்தை நீ யறிநதாயில்லை. மாமிச பட்சணஞ் செய்திருக்கின்றனை, பிறா மனைவியரை விரும்பி அவா பாற்சுக மநுபவித்தனை. எ - று. (கக)

என்றெ டுத்தெடுத் தீதல பலவெலா மிசைத்தாள்
குன்றெ டுத்தமென் கொம்பரிற் குழைபடு நுசுபபாள்
மனற லந்தொடை வழுதிமா னுணாநதிகன் மார
னென்ற லாதன பலகணை சொரிந்துநின் றுருத்தான்.

(இ - ள்.) குனறுகளைச்சுமக்கும் மெல்லிய கொடிபோலத்துவளும் இடை யையுடைய அககலாவதி, இப்படியும் இதுவல்லாமற் பலவற்றையும் எடுதது்ச் சொலலினள். மணநதஙகிய அழகிய மலாமாலை யணிநத பாணடியனது காம விச்சையை வலிதஙகிய மன்மதனறிநது ஒனறல்லாதனவாகிய மலாபபாணங களை பலவற்றையும அவனமேற் பிரயோகிததுநேர் நின்று துன்பு செயதான்.

பார னம்புதொட் டீரதநெழ மமமரின் மயஙகு
மீர வாடைதொட டுழுகுற வெரியெழ வுயிாசகுங
காரி ருடபிழும் பொழிவது கற்பமென் றயரும
வேரி யநதொடை சாநதொடும் பொரிதர வெதும்பும்.

(இ - ள.) மன்மத பாணங்கள் பாயநது தைததுக காமம் அதிகரிததலால் காம மயககததோடு மயஙகுவான. குளிாநத வாடைககாற்று உடலைப்பரிசித துச்செலல, தீப்பொறி சிநதப் பெருமூச்செறிவான. கறுதத இருட்டொகுதி நீஙகுவது ஒரு கறப காலமெனறு வருநதுவான. வாசநதஙகிய அழகிய மாலை யும கலவைச்சாநதும் கருகிப்போக வெதுமபுவான். எ - று. (கங)

ஊது தென்றலவெற புயிாத்திட வுடனுயிாப் பெறியுஞ
சீத ளககலைத திங்களா ற றெருமருந திகைககுமு
போது மேறறிசை புகுதரப புகுநதபுன மாலை
மீதெ ழுநதழற செககரால வெதுமபுமெய் வெயாக்கும.

(இ - ள்.) பொதிய மலையிற்பிறககின்ற மிருதுவாக வீசுந தென்றறகாற்று வீசுதலால் உடனே பெருமூச்செறிவான. குளிாச்சி வாயநத கலைகளையுடைய சநதிரனால் மயககெயதித தியஙகுவான. சூரியன மேற்றிசையடைய உடனே தோன்றிய சிறுமாலைப்பொழுதில ஆகாயததிறறோனறுந தீமயமான செவ்வா னததால் உடல் வெப்பமெய்தி வெயாப்பான். எ - று. (கச)

கருகு வாாகுழ லறிவெலா நுகாநதது கமலத
தருகு வாாகுழை மனஙகவாந தனவவற றிடைபோய்ப்
பொருது லாவிமீண டொருகுமி ழிடறிய புலவுக
குருதி வேலெனெடுங் கண்கலென னுருயிா குடிதத.

(இ - ள்.) கலாவதியின் கரிய நெடிய கூநதல் எனனறிவு முழுவதையுங கவளீகரிததது. முகமாகிய தாமரைககு அருகேயுளள குணடலஙகள்பாற் போா

செய்து ஓடித்திரும்பி ஒரு குமிழம்பூ[illegible]யை படுத்தப்பட்ட புலான் மணம் கமழும் உதிரந்தோய்ந்த வேல் போலும் நெடிய விழிகள் என்னரிய உயிரைப் பருகின. எ - று. (கரு)

ஈர வாணிலா வெரியெழத் தந்தனை யிலவ
மூரல் வாணிலா வளித்திலை முடிப்பட முயன்றாய்
மார வேளெறி குவளையென் மருங்குற வைத்தா
யேரி தழ்க்கருங் குவளைநோக் களித்திலை யென்றான்.

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய ஒள்ளிய நிலவைத்தீப்பொற் சுடச்செய்தனை. இலவுபோன்ற இதழ்களினுள்ளிருக்கும் வெள்ளிய சந்திரிகையைத் தந்தாயில்லை. கொல்லத்தொடங்கியவளாய், மன்மதன் தொடுக்கும் நீலோற்பல மலரை என்பாலடையப்பொருத்தினை. ஒப்பற்ற இதழையுடைய கரிய நீலோற்பலம் போன்ற பார்வையைத்தந்தாயில்லை. எ - று. (கசு)

நஞ்சி ருத்திய கண்களு முளைத்தநாண் மதியப்
பிஞ்சி ருத்திய நெற்றியும் பிண்டிமென் றளிரிற்
பஞ்சி ருத்திய பாதமும் படைத்தொரு மருங்கு
நெஞ்சி ருத்திய விரக்கமும் படைத்தில னிமலன்.

(இ - ள்.) விஷத்தைப்பொருந்திய விழிகளும், தோன்றுவதாகிய மூன்று நாளாகிய பிறைச்சந்திரன் பொருந்திய நெற்றியும், மெல்லிய அசோகந்தளிர் போன்று செம்பஞ்சுக்குழம்பூட்டிய பாதங்களும் ஈசுவரன் படைத்து, ஒரு பக்கலில் மனத்தின்கண் இரக்கத்தினையும் ஏன் உனக்குப் படைத்தானில்லை?

இரங்கு நாளினி யென்றுள துரைத்திடு மெளியேன்
கரங்க ளும்முலை புதைத்திடுங் காலமு முளதோ
சரங்க ளெண்ணில துரந்தனன் மதனனச் சரத்தா
லரங்கு நெஞ்சொடு மயர்ந்தனன் றிருவுளத் தடைபீர்.

(இ - ள்.) உமது மனம் இரங்குந்தினம் என்றைக்குள்ளது? சொல்லும். என் கைகள் உம்முடைய தனங்களைத்தழுவுங் காலமுமுளதோ? மன்மதன் கணக்கில்லாதனவாகிய அம்புகளை விருத்தனன். அவ்வம்புகளால் வருந்துகின்ற மனத்துடன் சோர்ந்துள்ளேன். இவற்றை உம்முடைய மனதிற் கொள்ள வேண்டும். எ - று. (கஅ)

மாண்டி றந்திடு நாளிது மங்கலங் காத்தெ
னீண்டு துன்பொழித் திரங்கலி ரென்றெடுத் திரந்து
மூண்ட காமநோ யாற்றலன் முகிண்முலைத் தடத்துப
பூண்டு வீழ்ந்துறத் தழுவினன் மதிக்குலப் புதல்வன்.

(இ - ள்.) சந்திரவமிச குமாரனாகிய அப்பாண்டியன், இன்று நான் உயிர் நீங்கியிருக்குந்தினமாயிருக்கின்றது உமது மாங்கல்யத்தைக்காத்துக்கொண்டு எனக்குண்டாகிய துயரத்தை யகற்றி மனமிரங்க வேண்டுமென்று யாசித்துப் பன்முறை கூறி, அதிகரித்த காமநோயைச் சகியாதவனாகி, கோங்கரும்பு நிகர்த்த முலைகளினிடத்து விருப்புற்று மேல்விழுந்து மார்புறத் தழுவிக்கொண்டான். எ - று. (க௯)

அனைய மேனிநின் றனலெழ வாற்றல னாகி
வினைய முற்றுறு தறிலை வெருவர னீங்கி

கனைந ருங்குழ லல்லுருந் [illegible]டனும் வடவைத்
துனைக டுங்கனல் வெதுபபரிய தென்னெனச சொல்லும்.

(இ - ள்.) அக்கலாவதியின் திருமேனியிலிருநது அக்கினிச்சுவாலை யுண்டாக, சகியாதவனுகி, தன் வஞ்சக எண்ண முடிவுருமல் அச்சமயத்திற் பயத்துடன் நீஙகி, தேன் பொருநதி மணங்கமழும் கூநதலுடையாளே! உன்னழகிய உடலைத்தொட்ட வுடனே, வடவாக்கினியினும் வேகமாகிய கடுநெருப்பு தகித்தது. இஃதியாது? எனககேட்க, கலாவதி கூறுகின்ருள். எ - று. (உ0)

ஆதி நாயகன் றிருவரு ளாயவஞ் செழுத்து
மோதி யுசசரித் துணர்நதிலை யுளத்துறு மயக்காற்
பேதை யென்னுருத் தீண்டிமெய் வெதுப்பெழப பெற்ருய்
மாத வத்தர்பாற் கேட்டுணர்ந தென்னுழை வருதி.

(இ - ள.) முதற் கடவுளாகிய சிவபெருமானது திருவருளாகிய ஐந்தெழுததுககளையும் கற்றுச்செபிததுத் தெளிநதாயில்லை. உன் மனதிலுள்ள காம விகாரத்தால் பேதைமைத தன்மையோடு என்னுடலைப்பரிசித்து உன்னுடல் முழுதும் வெப்பமெய்தப்பெற்றனை இனி, பெருநதவசிகளிடம் அதனை யுபதேசிககப்பெற்றுததெளிநது, பின்னா என்னிடம் வருக. எ - று. (உக)

அல்லை யாகிமற் றென்னுழை விரும்புதி யாகின்
வலலை வெநதொழிந திறக்குவை யென்றனண் மனையா
ளெலலை மாநில மொருகுடை புரககுமவ் விறைவன்
றெல்லை மாதவக சுறகரைத தொழுதனன் றுணைத்தாள்.

(இ - ள்) அப்படிககல்லாது என்பால் இச்சிப்பையாயின் அதிவிரைவில் வெநது உயிா நீஙகுவைஎனக கலாவதி சொன்னுள், எல்லைக்குட்பட்டபாண்டிநாடு முழுவதையும் ஒப்பற்ற வெணகுடை நிழலிற்காக்கும் அவவரசன், பெருநதவமுடைய பெரியோராகிய சுற்கரைததரிசிதது, அவர் உபய பாதங்களை வணஙகினுன். எ - று. (உஉ)

தொழுத வேநதனை நோக்கினன் மாதவத் தூயோன்
முழுது மாநில மொருங்கெடுத தாண்டருண் முதல்வ
வெழுது பேரெழி லிழிநதனை யொளிமழுங் கினையாற்
றழுவு சிநதனை தளாநதனை யென்னெனச சாறறும.

(இ - ள்.) தம்மைப்பணிநத பாணடியனைப் பெருநதவமுடைய புனிதராகிய சற்க முனிவர் பார்த்தருளி, பெரிய பாணடிநாடு முழுவதையும் ஒன்ருய்ச்சேர்தது அரசுசெய்யும முதனமையுடையானே! சிததிரதெழுதத்தகக மிகக அழககன்று சோபித நீஙகினை அனறியும் களிப்போடுகூடிய மனம வருநதினை. யாது காரணம? என வினவ, அரசன் சொல்லுவான். எ - று. (உங)

இறறை நாள்வரை நாளவங் கழித்தன னெறிநீா
முறறு மாநிலம் புரந்தனன் முன்வினைப பயனுற
பெற்ற பேறிது பிழைபடா தொருநெறி மறைநூல்
சொறற வஞ்செழுத் துணாததெனப பின்னருந தொழுதான்.

(இ - ள்) இன்று வரையில், நாள்களை வீணுகக்கழித்தேன். தேக்கெடுக்கும் நீர்வளமுள்ள பாணடிநாடு முழுவதையும் அரசு செய்தேன், முற்பிறவியில்,

யான் செய்த தீவினைப்பயனால் அடையத்தக்க பயன் இதுவாயின் அது தவறாது ஒப்பற்ற வேதமார்க்கமாகிய சாத்திரங்களிற்கூறிய பஞ்சாக்கரத்தை யுபதேசிப் பீரென்று வேண்டி மீண்டும் வணங்கினான். எ - று. (உச)

கனித்த சிந்தையம் மாதவன் கண்ணருள் சுரந்து
தனித்த வானெறி யஞ்செழுத் தொருசெவித் தாரை
தொனித்து ணாத்தின னன்னவன் றன்னுழைத் தொடர்ந்த
பனித்த பாதகங் கருங்கொடி யுருக்கொடு பறந்த.

(இ - ள்.) கனிவாகிய மனமுடைய அகத்திய முனிவர் பெரிய திருவருள் மிகுந்து, ஒப்பற்ற சிறந்த மார்க்கமாகிய பஞ்சாக்கரத்தை, அப்பாண்டியன் வலக்காது வழியாய் உச்சரித்து உபதேசஞ்செய்தருளினர். உடனே அப்பாண்டி யன்பால் தொடர்ந்ததாய அவனை வருத்திய பாவங்கள் கரிய காக்கை வடிவாய்ப் பறந்தோடின. எ - று. (உரு)

பறந்து சென்றவப் பாதகப் படர்சிறைக் காகஞ்
சிறந்த வஞ்செழுத் தெரியினுற் செலவறக் கரியா
யிறந்து வீழ்ந்தன வீங்கிவன் பவித்திர மெய்தி
மறந்து ணாந்தன னுமென முனிவனை வணங்கி.

(இ - ள்.) பறந்தோடிய பாவங்களாகிய பரந்த சிறகுகளையுடைய அக்காக்கங்கள் சிறப்புப்பொருந்திய பஞ்சாக்கரமெனும் அக்கினியினால் பறத்தலி னின்று நீங்கிக்கரியாகி இறந்து விழுந்தன. இவ்விடத்தில் இப்பாண்டியன் புனிதமுற்று, நித்திரை விட்டெழுந்தவனைப்போல அகத்திய முனிவரை வணங்கி. எ - று. (உசு)

ஆசி பெற்றனன் முனிவரற் கருச்சனை யயர்ந்தான்
பூசல் வண்டறை தாரினன் றனனகா புகுந்து
பாசி ழைத்துணை பணை முலைக் கலாவதி பணைத்தோ
ளேசி லன்பொடு மின்னல நுகாந்தன னிருந்தான்.

(இ - ள்.) ஆசிர்வசனங்களை அவர் பாற்பெற்றுக்கொண்டு, வழிபாடியற்றி, போர்செய்யும் வண்டுகளொலிக்கும் மலர்மாலை சூடிய பாண்டியன் தன் நகரை யடைந்து, பசிய ஆபரணந்தரித்த பூரித்த இருதனங்களையுடைய கலாவதியின் மூங்கிலையொத்த இருதோள்களைத்தழுவி, குற்றமில்லாத உண்மையன்புடன் அவளது இனிய சுகத்தை அநுபவித்திருந்தான். எ - று. (உஎ)

வைகல் பற்பல கழிதரக் கலாவதி மணிநூல்
பெய்க லத்திள முகிண்முலைத் தலமபிரிந் திலனுய்ச்
செய்க லத்தொடு மகவொடு நிதியொடுஞ் சிறந்தான்
பைக லப்புறு நெடுநில நெடிதுநாட் பரித்தான்.

(இ - ள்.) பற்பல நாட்கள் இப்படிச்செல்ல, கலாவதியின் அழகிய மாங் கல்யதாரணமும் மிக்க ஆபரணங்களுமுடைய இளமைத்தன்மை வாய்ந்த அரும்பு போன்ற குசங்களைவிட் டகலாதவனும், செய்யப்பட்ட ஆபரணங் களுடனும் புத்திரர்களுடனும் சிறப்பெய்தியவனும், ஆதிசேடன்பண முடி யிற்றங்கிய பெரிய அப்பாண்டிநாடு முழுவதையும் பல காலம் அரசு செய திருந்தான். எ - று. (உஅ)

கரும முற்றிய காலம்வந் தடுத்தலு முலைகொண்
டருகு சிற்றிடைக கலாவதி தன்னொடு மரன்கூர்
திருவ ருட்பெறக கைலைபோய்ச சிறநதனன் சிலநா
ளுருகு காதலி னவளொடு மருங்கதி யுறறுன்.

(இ - ள்.) வினைப்போகம் முற்றுப்பெற்ற காலம் வநது சோநததும், முலை களைத்தாஙகி வருநதும நுணணிய சிற்றிடையையுடைய கலாவதியுடன், சிவ பெருமானுடைய திருவருளைப்பெறககருதித திருககைலைககுச்சென்று, சில தினஙகள சிறப்புற்றிருநது, மன வுருககததோடு கூடிய அனபுடையவனுய, அககலாவதியோடும் அரிய மோட்சபதவியை யடைநதான. எ - று. (உகூ)

இன்னு மோாபெருஞ சரிதைமற றுளதென வெடுதது
மன்னு மாதவச சூதமா முனிவரன் வருபபான
கன்னல வேலியுங கதலியுங கழனியுஞ சூழநத
துன்ன ரும்புக ழாடவ தேயமொன றுளதால.

(இ - ள்.) மற்றும் வேறொரு பெரிய சரிததிரமுளதென்று சொல்லத் தொடஙகி, நிலைபெற்ற பெருநதவததையுடைய சிறநத சூத முனிவா சொலலு கின்றார். கருமபும் வாழையுமே வேலியாகவுளளதும் கழனிகள் சூழ்நதுள்ளது மான யாவரும நினைததற்கரிய கீாததியமைநத ஆடவமெனனும் ஒரு தேச முணடு. எ - று. (௩0)

சாலி வேலியந நாட்டிடைத் தடநெடும் புரிசை
கோலி யிடடமா லியமெனுங கொடிநக ரதன்பா
லுலு மாமறை முறைதெளிந் துணாநதவ னாறு
நூலி யறகைமுற றுணாநதவன சுபுததன்முந நூலோன்.

(இ - ள்.) நெற்பயிரை வேலியாகவுடைய அவ்வாடவ நாட்டில், பரநது நீண்ட மதில்கள் சூழ்நதமைநதிருககும் கொடிகளை கட்டிய மாலியம் எனும் நகரததிலே, முப்புரிநூலணிநத வேதியராய, சிறநத நான்கு வேதஙகளையும் முறைப்படி ஓதி யுணாநதவராய, ஆறு சாத்திரஙகளின் தாற்பரிய முறறும் தெரிநதவராயச் சுபுத்தரெனும பெயரினரொருவரிருநதாா. எ - று. (௩க)

இருக்கு முற்றுணர்ந திவன்றவ மிழைததலு மிவன்பாற்
சுருககில் கேளவியன் றருமனென றொருமகன் றோனறப்
பெருக்கு மநநகர்ப பெருமறைக குலததொடு விபுல
னுருககு மெய்ததவத துதவினன மககளோ ரிருவா.

(இ - ள்.) இச்சுபுததர் வேதமுழுவது முணாநது தவம்புரிநது வருகையில் இவருககுப் பரநத நூற்கேள்வியுடைய தருமனென்று வொருபுததிரன் பிறகக, பெரிய அநத மாலிய நகரிலுள்ள சிறநத அநதணா குலததினராகிய விபுல ரெனபவர் மனவுருககததோடு கூடிய மெயததவததினுல் இருபுதல்வரைப் பெற்றனர். எ - று. (௩உ)

தநயன் முன்னவன் றரும்பெயர் சந்திர சேனன்
பினைய வன்பெயா மிருதுசந திரனெனப் பெற்று
னினைய மைநதரின் முன்னனுந தருமனு மியைநது
வினைக ளைந்தனா நண்புகொண் டொழுகினர் விரும்பி.

(இ - ள்,) அவ்விபுலர் புதல்வரில் முன்னவனுக்குக் கொடுக்கப்பட்ட பெயர் சந்திர சேனன். பின்னவன் தன் பெயர் மிருது சந்திரன் என்றழைக்கப்பெற்றான். இவ்விருபுதல்வரில் மூததோனாகிய சந்திரசேனனும் சுபுத்தர் மகனாகிய தருமனும் மனமியைந்து வஞ்சகம் நீங்கினவர்களாய் விருப்பெய்திச சிநேக முற்றிருந்தனர். எ- று. (கங)

பருவ மேழ்பிற கிட்டனர் பழமறை விதியா
லுருவ நூல்புனைந் தோதின ருணர்ந்தன ரொருங்கே
தரும நீதியு மொழுக்கமுந் தழுவினர் சான்றோர்
பெருகு மன்பினர் களிப்புற வளர்ந்தனர் பிரியார்.

(இ - ள்.) ஏழுவயது கழிந்தவர்களானார்கள். பழமையான வேதங்களை விதிப்படி, அழகிய உபவீதந்தரித்து ஓதி யுணர்ந்தார்கள். புண்ணியத்திற்குரிய நீதிகளையு மொழுக்கங்களையும் கடைப்பிடித்தார்கள். மேலோர்களுந் தம்பால் விசேட அன்புடையவர்களும் மகிழ்வெய்தும்படி யொருவரை யொருவர் பிரியாமல் வளர்ந்து வந்தார்கள். எ - று. (கச)

மறைக வர்ந்தெழு கொழுந்தென விவர்வளர் நாளி
லுறைத வத்துறை வித்தியா னந்தனென் றொருவ
னிறைம யக்கமுங் காமமும் வெகுளியு நீத்தோன்
றுறைகொள் பற்பல தவத்தினி லிலறந் துறந்தோன்.

(இ - ள்.) வேதங்களை விழுங்கி யுயர்ந்த கொழுந்துபோல விவ்விருவரும் வளருங்காலத்தில் உறுதியான தவநிலையுடையராய ஆத்மாக்களுக்கு மிகுந்துள்ள காமம் வெகுளி மயக்கம் என்னுமுக்குற்ற நீங்கினவராய அளவையுடைய வெண்ணிறந்த தவச்செயலால் இல்லறத்தை விடுத்தவராகிய வித்தியானந்தரென்னும் ஒரு முனிவரிருந்தார். எ - று. (கரு)

அந்த மாமுனி வரனடி யடைந்தன ரிவர்க
ளெந்தை யாங்களு மிலலறந் துறப்பதற் கியைந்தேஞ்
சிந்தை கூர்ந்தினித் திருவருள் புரிகெனச் செப்பி
மைந்த ராங்கவன் றுணமிசை வீழ்ந்தனர் வணங்க.

(இ - ள்.) இத்தருமன் சந்திரசேனனென்னும் புதல்வரிருவரும், சிறந்த அவ்வித்தியானந்த முனிவருடைய பாதங்களை யடைந்து, எமது தந்தையே! நாங்களு மில்லறத்தைத் துறப்பதற்குடன் பட்டோம். தேவரீர் திருவுள மிகுந்தினித்திருவருள் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து அம்முனிவர் பாதத்தில் வீழ்ந்து வணங்க. எ - று. (கசா)

புரிதும் யாமெனப் புதல்வருக் காசிகள் புரிந்து
பெரிது வந்தன னில்லறத் திழிபையும் பிரிந்தோ
ரரிது பெற்றுள பேற்றையு முணர்த்தினன் னனையார்
துரிச றுத்துணர் சிந்தையா விடைபெறத் தொழுதார்.

(இ - ள்.) நாமப்படியே செய்வோமென்று அவ்விருசிறுர்கரும் ஆசிர்வாதஞ் செய்து மிக மகிழ்ச்சியெய்தி யில்லறத்தினது இழிதன்மையையுந்துறவிகள் அரிதாகப்பெற்றிருக்கும் பேறுகளையும் அறிவித்தார், அவ்விருவருங் குற்றமறத்தெளிந்த மனமுடையராய் அவர்பால் விடைபெறப்பணிந்தார்கள்,எ-று.

வணங்கி மீண்டன ரீன்றவர்க் குரைத்தனர் மைந்தர்
பிணங்கு நூல்புனை விபுலனன் பொடும்பெரி துவந்தா
னிணங்கு மைந்தர்க ளிருவரி லொருவனில் லறத்தை
மணந்து வாழவு மற்றவன் றுறக்கவு மதித்து.

(இ - ள்) அவ்வாறு பணிந்து திரும்பித்தம் பெற்றோர்க்குச்சொல்லினர். அப்பெற்றோரில் நெருங்கிய உபவீதமணிந்த விபுலர் தமக்குவாய்த்தவிருபுதல்வரில் ஒருவன் இல்லறத்தைக்கலந்து வாழவும் மற்றொருவன் துறவியாகவும் யோசித்து அன்பொடு பெருமகிழ்ச்சி யெய்தினர். எ - று. (கூஅ)

நன்று சந்திர சேனநின் கருத்தென நயந்தா
னன்று மைந்தனும விந்தியா னந்தனை யடைந்து
தன்று ணைப்பெருங் கிளையொடு மில்லறந் தணந்தா
னென்று மூன்றுதண் டெடுத்தனன் மாதவத் துயர்ந்தான்.

(இ - ள்.) சந்திர சேனனே! நின் கருத்து நன்று யிருந்ததென்று மகிழ்ந்தார். சந்திர சேனனென்னுங் குமாரனும் அப்பொழுதே விந்தியானந்த முனிவரையடைந்து தன்றுணை வரையும் பெரிய வுறவினரோடு மில்லறத்தை விடுத்தான். பொருந்திய திரிதண்டத்தை யெடுத்துக்கொண்டான். சிறந்த தவத்தில் மேம்பட்டான். எ - று. (கூகூ)

ஐந்து மாபெரும் புலத்தின்மே லெழுதரு மவாவை
யிந்தி யங்களோ டொடுக்கினன் யோகமுற் றிழைத்தா
னந்த யோகத்தி னுயர்நிலைப் பதவிமுற் றறிந்து
சிந்தை யாரினுந் தெரிவுறாப் பரத்திடை செறித்தான்.

(இ - ள்.) பெரிய ஐம்பெரும் புலன்களின மீதுண்டாகு மாசையையுமைம்பொறிச்சேஷ்டையையு மொழித்தவனுயோக நிலையெய்தி யொழுகினன். அந்த யோகத்தின் உயர்ந்த நிலையிலுள்ள பதவி முழுவதையுந்தெரிந்து தன் மனதை யொருவராலு முணரப்படாத பரமாகிய சிவபெருமானிடத்திற் கலக்கச்செய்தான். எ - று. (சo)

மற்றை யோதனிப் புதல்வனுந் தன்மனத் தொருப்பா
டுற்ற தந்தையாஞ் சுபுத்தனுக் குரைத்தனு மொருநீ
கற்ற கல்வியைக் கமாவிடுத் தொழிதியோ தமியேம்
பெற்ற பேறினை யன்றியும பிள்ளைமற் றுளதோ.

(இ - ள்.) ஒப்பற்ற மற்றொரு புதல்வனாகிய தருமனுந் தன் மனவொருப்பாட்டைத்தன் பிதாவாகிய சுபுத்தருக்குச்சொன்ன வுடனே, ஒப்பற்ற நீ பயின்ற கல்வியை வெடிப்பிற் கவிழ்த்தொழித்தனையோ? தனியே யிருக்கு நாங்களிருவருமுன்னை யன்றிப்பெற்ற பிள்ளைகள் வேறுண்டோ? எ - று. (சக)

மட்டு லாவருங் குழலியை வதுவைசெய் மணநா
ளிட்ட மாலையுந் தோள்களுங் காணவென் றிருக்கேங்
கட்டு காவியந் துகிலொடு நீவரக் காணப்
பட்ட கண்களைப் பறித்தெறி யேன்கொலிப் பாவி.

(இ - ள்.) மணங்கமழு மளகத்தையுடைய வோர் கன்னிகையை மணம் புரியுந் திருக்கலியாண தினத்தில் நீயணிந்த மணமாலையையும், அதை யணிந்த

தோள்களையுங் காணவேண்டுமென்று விரும்பியுள்ளோம். கட்டுகின்ற அழகிய காவி வஸ்திரத்தோடு நீ வரக்காணப்பட்டவென் கண்களை இப்பாவியாகிய நான் பிடுங்கியெறிய மாட்டேனோ? எ - று. (௪௨)

ஈன்ற தாயினை யீன்றெடுத் திருபுயத் தணைக்கு
மான்ற தந்தையை யரந்தைசெய் தகன்றுபோ யடவி
தோன்றி மாதவந் தொடங்கினோ ரிவர்களைத் தொல்லை
மூன்று தேவரு முனிவுற நிரயமுற் றிழிவார்.

(இ - ள்.) பெற்ற தாயையும் பெற்றெடுத்து இருதோளினு மணைத்துக் கொள்ளுஞ் சிறந்த தந்தையையுந் துன்பப்படும்படி விட்டுச்சென்று வனத்தி லடைந்து பெருந்தவஞ்செய்யத் தொடங்குமிவர்களைப் பழமையான மும்மூர்த்தி களுங் கோபமடைய நரகத்திலடைந்து தாழ்வார்கள். எ - று. (௪௩)

என்னை நீத்துநீ யிற்றுறந் தேகினை யாயி
னுன்னை நீத்துநா னுயிர்பொறுத் துய்யுநா ளுளதோ
பின்னை நோற்றொரு மகப்பெறப் பெற்றிலே னென்று
வன்னை யாகுலித் தழுதன ளருகிருந் தரற்றும்.

(இ - ள்.) என்னைப்பிரிந்து நீ இல்லறத்தை விட்டுச் செல்வாயாயின், உன்னை நீங்கி நான் உயிர் சுமந்து பிழைத்திருக்கும் நாளும் உள்ளதோ? மீண்டுந் தவஞ்செய்து ஒரு பிள்ளையைப் பெறுவதற்கும் வலியிலலேன் என்று, தாயானவள் வருந்தி அழுபவளாய் அருகிலிருந்து அலறுவாள். எ - று. (௪௪)

தாயி ரங்கவுந் தந்தைநின் றிரங்கவுந் தமர்சூழ்ந்
தாயி ரம்பெய ரிரங்கவு மிரங்கில னனையான்
பாயி ரந்தொகு நூலுணர்ந் தில்லறம் பரியான்
போயி ரங்கரு விக்கிரி புகமனம் புரிவான்.

(இ - ள்.) தாய் வருந்தவும், தந்தை எதிர் நின்று வருந்தவும், உறவினர் பலர் சுற்றிக்கொண்டு வருந்தவும், அதற்குமனம் வருந்தாதவனாகி, பாயிரத்துடன் சேர்ந்த ஞான நூல்களை யுணர்ந்து இல்லறத்தைத் தாங்காதவனாகி, ஒலிக்கின்ற அருவியானது ஒழுகிக்கொண்டிருக்கும் மலைக்குப் போகும்படி மனங்கொண்டான். எ - று. (௪௫)

மைவ ருங்குழ லன்னையுந் தந்தையு மதலை
மெய்யு நீழலு மாமென விடுத்தில ரதுநாட்
செய்ய மாநக ரதனிடைப் பிருகுவாந் தெய்வப்
பொய்யில் கேள்வியன் புகுந்தன னவனுழைப் புகுந்தார்.

(இ - ள்.) மேகம்போலுங் கூந்தலையுடைய தாயும், பிதாவும், தமது குமாரனை ஒருடல் போலவும், தாங்களே அவ்வுடலின் நிழல் போலவும் அவனை நீங்காதிருந்தார்கள். அப்போது செப்பமாகிய சிறந்த அந்நகரத்தில், பிருகு வென்னுந் தெய்வீகந்தங்கிய மெய்யுணர்வுடைய முனிவர் எழுந்தருளினர். இவர்கள் அவர் சந்நிதியுற்றார்கள். எ - று. (௪௬)

அரிய மாதவத் தந்தணீ ரருந்தவம் வருந்திப்
புரியு நன்மையிற் பெற்றன மொருதனிப் புதல்வ
னெரியு நெஞ்சினே மிறந்துற விலலறந் துறந்து
பிரிவ தெண்ணுமற் றிவனல தில்லையோர் பிள்ளை.

(இ-ள்.) அரும் பெருந்தவமுடைய முனிவரே! நாங்கள் வருத்தத்தோடு அருந்தவஞ்செய்த புண்ணியத்தால் ஒப்பற்ற ஒரு புத்திரனைப்பெற்றோம், அத்தகைய இவன், வருத்தமெய்தும் மனமுடைய நாங்கள் இறந்து போம்படி இல்லறத்தைவிட்டுப் பிரிதலைக்கருதுகின்றான். இவனையல்லாமல் வேறொரு பிள்ளையும் எங்களுக்கில்லை. எ-று. (சஎ)

ஆங்க வன்றனை யருகழைத் தருக்கிய சிந்தை
யோங்கி மீசசெல வுரைத்தியென் றுரைத்தடி வணங்கத்
தேங்கு மாதவப் பிருகுவச் செலவனைச் சிறியோய்
பாங்கி ருத்தியென் றிருத்தின னினையன பகர்வான்.

(இ-ள்) ஆதலின், தேவரீர் அப்புத்திரனை யருகே யழைத்து, அவனுடைய அற்ப யோசனை விசேடித்துத்தீரக்கமாம்படி கூறியருளவேண்டுமென்று வேண்டி, அவர் பாதங்களிற் பணிய, பெருந்தவமுடைய பிருகு முனிவர், அச்சிறுவனை நோக்கி, பிள்ளாய்! பக்கலிலிருக்க வென்றிருக்கச்செய்து இப்படியுரைக்கின்றார். எ-று. (சஅ)

தருமமேமுத லாகிய நான்கையுந் தழுவி
யிருமை யும்பெறத் தருமுவ தில்லறம் பருதி
யருமை நல்லற மிழைக்கினு மத்தவத் துறையோர்
கருமமில்லையே லத்தவ மவத்தொடுங் கழியும.

(இ-ள்.) தருமமுதலிய நான்கு புருடார்த்தங்களையுந் தழுவி, இம்மை மறுமைப்பயன்களையுந்தருவது இல்லற தருமமாம். அத்துறவற மார்க்கத்தில் அருமையாகிய நல்ல புண்ணியங்களைச்செய்தாலும் ஓர் விடயத்தவறினால் அத்துறவறம் அப்பிரயோசனமாகி நீங்கும். எ-று. (சகூ)

நோற்ற ருந்தவ முயன்றுளோ ரத்தவ நோலார்
வேற்று வெவ்வினைத் துறையுளோர் தெய்வவே தியர்கண்
மாற்ற ருமபசித் தழலெழ வரவெதிர் வழங்கி
யாற்றி யத்தழ லவிப்பரேற் றீவினை யவிப்பார்.

(இ-ள்.) அருந்தவங்களை அநுஷ்டித்து முயன்றோர்களும், அவ்விதத்தவத்தை யநுஷ்டியாதவர்களும், இவற்றிற்கு வேறாயுள்ள கொடுந்தொழின் மார்க்கத்துற்றோரும், தெய்வீகந்தங்கிய அந்தணர்கள் ஒரு காலத்தில் தணிக்கமுடியாத பசித்தழலோடு வந்த வுடனே, அவர்களை யெதிர்கொண்டழைத்து உபசரித்து, அத்தீபாக்கினியைத் தணிப்பாராகில், தங்கள் தீவினையை யொழிப்பார்கள். எ-று. (ருo)

இன்று நோற்றுள தவமெலா மிவவுடம் பிகந்து
சென்று வேண்டுவ தினனலந் தெறிவதற் கன்றே
வன்று வேண்டுறு பிறப்பினிவ் விலலறத் தடைந்தோ
ரென்று மச்சிறப் பெய்துவ ரையமற் றில்லை.

(இ-ள்) இக்காலத்தில், நாம் நோற்குந் தவங்கள் யாவும், இத்தேகத்தைவிட்டுப்போய் (மேலைப்பிறப்பில்) வேண்டிய இன்ப சுகங்களைப் பொருந்துதற்கல்லவோ? அக்காலத்தில் விரும்பத்தக்க பிறவியிலே இவ்வில்லறத்தையடைந்தவர்கள், எக்காலத்திலும் அந்தச் சிறப்பினைப் பெறுவார்கள். வேறு சந்தேகமேயில்லை எ-று. (ருக)

வருத்த நுணைபொருள பெருநருளான வுற்றொருத் தநறை
றொருத்த ருபபொருள பெறுறனா பெருவளா துயபபா
பகுதத மேலவாக கிலவிருந துணபன பகுத்தா
புகுதத ருநதனிப பதவியந தெளிதுறப புகுவார்.

(இ - ள்) சொல்லிய நுணணிய சிவமெனனும் பொருளினிடததில அன பைப்பெருக்க இல்லறத்தை வெறுததலால், தொகுததுளள அவவருமபொரு ளைப் பெற்றவாகளாயப பெருஞ்செலவ மநுபவிபபாகள். உலகிற்பிறந்த பெரியோர்க்குத தாம் புசிப்பனவற்றைப பாகிததுததநதவாகள், எவருமபெறு தற்கரிய ஒப்பற்ற பதவியை இலேசில அடையபபெறுவாகள் எ - று. (௯௨)

ஈவ தீதரு மிருவினைப பகுதிமுற றிடையே
வீவ துணைமைநன மைநதரால வினையற நோலரா
யாவ ராயினுந தெனபுலத தெரிபடு நிரயம
போவ தினறிமற றுயபரி னுமபரிற பொலிவார,

(இ - ள்) அரிய இருவினைகளுந தருமஇயறகையிது. இவை முறறும் இடையே அழிநதுவிடுவது உணமை. தீவினையகலத தவஞ்செயயாா யாவரா யினும், யமபுரததில தீயமாகிய நரகததில அடைவதிலலாமல, புததிரப பேற்றினால மெனமேலும் உயாவாகிய பதவிகளையெய்தி விளஙகுவாகள. ()

## அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

என்பன பலவும் பனனித் தெருட்மனன் பிருகு வென்பான்
றன்பரி வுளளத தொனறு முணாநதிலன றறும னெனபோன
பொனபொதி யுளததோ ரெயதுமிரவலா புகனற வெலலா
மனபறத துறபபா னனன தனமைய னுயினனே

(இ - ள.) எனபனவாகிய பலவற்றையும் பிருகு முனிவா கூறித்தெரிவித தாா. தருமனோ தன பரிவுதஙகிய மனதில ஒரு சிறிதும உணாநதானிலலை. பொனனைமதித்த மனமுடைய செலவாகள தமபால யாசகா கூறினவனைத தும அனபறறு விட்டுவிடுவதுபோனற தனமையையுடையவனுயினன் எ - று.

ஞானமா முனிவ கேணமோ நளிதிரைப பரவை சூழ
மாநிலப பரபபி னுளள மனபதை யெடுதத வாககை
யூனொறுத துணவு வேண்டா தருநதவ முயறறி னுயவாா
யீனிவாய்ப படிவ ரனறே னுருளுடைச சகட மொபபாா.

(இ - ள்.) சிறநத ஞானமுனிவரே! கேட்பீராக. குளிாச்சிவாய்நத அலைக ளையுடைய கடல்சூழும் பெரிய பூமியிலுளள மாநுடரெடுதத வுடலின்றசையை வெறுத்தாகாரத்தை யிச்சியாமல் அருநதவம் முயனறு லுச்சீவிப்பாாகள. அல்லாவிடின் உருட்சியாகிய வடிவுடைய தோர்ச்சககிரததை யொததவாக ளாயப் பல யோனிகளிலுழுதிப்பாாகள் எ - று. (௯௩)

இல்லறத் தியற்றுந் தீமை யிருஞ்சிலை மருங்கு வீக்கித
தொல்லைவெம் பிறவிப பௌவங் கடககுமா றெவனோ தூயோ
யொல்லையின் வெகுளி காம மயககமென றவற்றை நீபபா
னில்லறத தவமே யன்றி யாருளர் நடுவு தீாபபாா.

தேவ ருந்தொழுஞ் சின்மய சிதம்பரத் தவையுண்
மேவ ருந்தவ வியாக்கிர பாதனோ பெயரை
யாவ றச்சுமந் திறந்தன னிவனை நீ யுறுத்தாய்
பாவி யாயினும் பயனதில்லை யப்பெயர் பாராய்.

தேவர்களும் வணங்குகின்ற சிதம்பரத்திலுள்ள ஞானமயமாகிய சிற்சபையிலே வசித்துத் தெரிசிக்கின்ற அருந்தவமுடைய வியாக்கிரபாதனது ஒப்பற்றபெயரை நீங்காமற் றரித்திருந்திறந்தான். நீ யிவனைத் தண்டித்தாய். இவன் பாவியானாலும் இவனுக்குரிய அப்பெயரைப் பாராமல் பயப்பட்டாயில்லை. எ - று. (௧௬௩)

ஆயி னின்னுழை யறப்பழு துளதென வருளும்
பாய்வி டைத்தனிப் பரமனைப் பின்னரும் பணிந்தே
னேய வெனப்பிழை பொறுத்தியென் றிவற்கரு கிருந்த
தூய வேற்படைச் சேவலங் கொடியினன் சொல்லும்.

(இ - ள்.) ஆனால் உன்னிடத்தில் நீதிவிரோதம் உண்டென்று அருள் புரிந்து, பாய்ந்து செல்லுமிடபத்தையுடைய வொப்பற்ற சிவபெருமானை, என்பாற் பொருந்திய தவறுபாட்டைப் பொறுத்தருளவேண்டுமென்று மறுபடியும் பணிந்தேன். அப்போது சிவபெருமானுக் கருகிலெழுந்தருளியிருந்த புனிதமாகிய வேலாயுதத்தையு மழகிய சேவற்கொடியையுமுடைய முருகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ - று. (௧௬௪)

மறந்தொ ழிந்தனை முன்னொரு காலத்து மறைநூற
றிறந்தெ ரிந்தருள் சதானந்த னெனுந்தவத் திறலோன்
கறங்கு வாரிதிரை யுலகெலாந் திரிதருங் காலை
யறன்கொள் சிந்தைய னின்னுடைத் தென்புல மடைந்தான்.

(இ - ள்.) நீ மறந்துவிட்டாய். முன்னொருகாலத்தில், வேதசாஸ்திரத்தினை யுணர்ந்த சதானந்தனென்னும் தவவலியுடையவன், ஒலிக்கின்ற நெடிய கடல்சூழ்ந்த உலகமுழுவதுந் திரிந்துகொண்டிருக்கையில், தருமங் குடிகொண்ட மனமுடைய உனது இயமபுரத்திற்கு வந்தான் எ - று. (௧௬௫)

மண்டு மாநிர யத்திடைக் கிடப்பவர் மறுக்கங்
கண்டு கண்புதைத் திரங்கின னவரைமெய்க் கதியிற்
கொண்டு போவனென் றுளத்தொடுங் குறித்தனன் கூவித்
தொண்டை விம்மஃன் றரகர கரவெனச் சொன்னான்.

(இ - ள்.) நெருங்கிய பெரு நரகங்களில் வீழ்ந்துள்ளவர்களது துன்பங்களைப்பார்த்து, கண்களை மூடிக்கொண்டு வருந்தினவனாய், இப்பாவிகளை உண்மையாகிய நற்கதியில் விடுவேனென்று தன் திருவுளத்திற் குறிக்கொண்டு, கழுத்து வீங்கும்படி அங்கே நின்று ஹரஹரஹரவென்று சொன்னான். எ - று. (௧௬௬)

அன்ன காலையி னிரயநீத் தெழுந்தன ரவர்க்குப்
பொன்னின் மானமவ் வேறெனப் புகுந்துள பொருதி
யென்னை யாளுடை யெம்பிரான் கயிலைவந் திறுத்தார்
கன்ன லொன்றிலாண் டெய்தினை நீயுமிக் கயிலை.

(இ - ள்.) அப்பாவிகள் அப்போது நரகத்தைவிட்டுப் புறப்பட்டார்கள். பொன்மயமான விமானங்கள் தனித்தனி வந்திருந்தன. அவைகளிலேறி

என்னை ஆளாகவுடைய எமது சிவபெருமானது கைலாயத்திற்குவந்து சேர்ந்தார்கள். ஒரு நாழிகைக்குள்ளாக நீயும் அங்கிருந்து, இக்கைலாயகிரியை யடைந்தனை. எ - று. (கசுஎ)

நிரய முற்றுற வறிதுபட் டனவென நிகழ்த்தி
யிரைபு னற்சடை யெம்பிராற் றொழுதுநின் றிசைத்தா
யரனு ரைத்தன வன்றுகொண் டயாத்தனை கொலலோ
நரக மில்லையென் னுமமோரந் தறிந்தவர்க் கென்னு.

(இ - ள்.) நரகங்களெல்லாம் வெறுமையாயுள்ளன வென்றுரைத்து, ஒலிக்கின்ற கங்காநதியையணிந்த சடையையுடைய எமது சிவபெருமானை வணங்கித் திருமுன்னே நின்று விண்ணப்பஞ்செய்தாய். அதற்குச் சிவபெருமான், என திருநாமங்களை யறிந்து தியானஞ் செயவோருக்கு நரகமில்லை யென்று அப்போது திருவாய்மலர்ந்தருளியதை மனங்கொண்டும் மறந்துவிட்டனையோ? எ - று. (கசுஅ)

எந்தை யெம்பிரான் றிருவரு ளுமமொன் றெடுத்துத்
தந்த நாவின ரெமமினித் தலைமையிற் சிறப்பா
ரந்த நாமமற் றிருசெவி குளிர்ப்புற வறிந்தார்
பைந்து ணாசசெழுங் கொன்றையான் றிருவடிப் பதிவார்.

(இ - ள்) எமது தந்தையாகிய சிவபெருமான் திருவருள்பொருந்திய திருநாமங்களுளொன்றனை யெடுத்துரைக்கும் நாவுடையவர்கள், எம்மைப்போல இவ்வகைய முதன்மையான சிறப்பெய்துவார்கள் அவ்வகைத் திருநாமங்களைத் தங்கள் இருசெவிகளும் குளிரும்படி கேட்டறிந்தவர்கள், பசிய பூங்கொத்தாக வுள்ளசெழிய கொன்றைமாலையுடைய சிவபெருமான் திருவடியிற்சேர்வார்கள்.

ஈத றிந்துமற றறிகில ராமென விழைத்தாய்
தீது செய்தனை செயத்தகு மெனபவை செய்யா
யாத லாலெதிர் நிற்கலை போதியென் றருள
மீது ளந்தனில் வெருவரத் தொழுதனன மீண்டேன்.

(இ - ள்) இதனை யறிந்திருந்தும் அறியாதவர்களைப்போல இவ்வகைக் காரியஞ்செய்தாய். செய்யத்தக்க காரியத்தைச் செய்தாயில்லை ஆதலால், நீ முன்னே நிலலற்க. செல்க எனத் திருவாய்மலர்ந்தருளியவுடனே, என் மனதில் பயம் உண்டாதலிற் பணிந்து அங்கிருந்து திரும்பினேன எ - று.

இவையெ லாமுனக் கெடுத்தெடுத் திசைத்தன னினிநீ
யவையெ லாமளந் தறிந்துதென் றிசைபுரந் தளிப்பாய்
நவையெ லாமபொறுக் கினுமரன் றனனுடை நாமந்
தவறி னபபிழை பொறுக்கலன் முனிவுதந் தருளும.

(இ - ள்.) இவையெல்லாவற்றையும் உனக்கு எடுத்தெடுத்துச் சொன்னேன். இனி நீ அவையெல்லாவற்றையும் மனத்திலுணர்ந்து இயமபுரத்தைக் காக்கக்கடவாய், சிவபெருமான் நாம செய்யுங் குற்றங்களையெல்லாம் மனம் பொறுத்திருந்தாராயினும், தமது திருநாமத்திற்குத் தவறு செய்வார்களாயின் அக்குற்றத்தைப் பொறாதவருய்க் கோபஞ்செய்தருளுவா. எ - று. (சஎக)

என்று கால னுக் கியமனோர்ந் துணர்த்தின னிதன்மேற்
சென்ற சிந்தையன காலனு மவவழிச் சிறந்தா

னன்று கொண்டெவர் சிவன்றிரு நாமத்தை நவின்று
ரன்றி யார்பொறுத் துளரவர் பெருமையா ரளப்பார்.

(இ - ள்.) என்று, இவ்விதமாகக் காலனுக்கு இயமன் அறிந்து தெரிவித்தான். இதன்பிறகு, தெளிந்த மனமுடைய காலனும் அப்படியே நடந்து சிறப்பெய்தினன் நன்னெறிலயக் கைக்கொண்டு சிவபெருமான் றிருநாமத்தை எவர்கள் ஓதுகின்றார்களோ அல்லது அந்த திருநாமத்தைத்தமது நாமமாகத்தரிக்கப்பட்டுள்ளார்களோ அவர்கள் பெருமையை அளவுபடுத்த வல்லோர் யார்? (ஒருவருமிலர்.) எ - று. (௧௭௨)

பூதி பூசினு முருத்திர மாமணிப் புனையன்
மீது கொண்டவர் மிலேயினு மஞ்செழுத் துண்மை
யோதி யோரினு மரன்றிரு நாமமோர்ந் துறினுந்
தீது தீர்த்தவர் முழுமுதற் றலைவரிற் சிறப்பார்

(இ - ள்.) திருவெண்ணீறணிந்தாலும், சிறந்த உருத்திராக்கமணி வடத்தை யுடலிற் பூண்டாலும், பஞ்சாக்கரத்தை உண்மையன்போடு ஜபித்துத் தெளிந்தாலும், சிவநாமங்களை ஆராய்ந்தறிந்தாலும், அவர்கள் தங்குற்றங்களகன்று முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானைப்போலச் சிறப்பெய்துவார்கள்.

எனவெ டுத்தெடுத் திருடிகட் கியமபினன் சூதன்
மனனு வந்தவர் வரன்முறை கேட்டுள மகிழ்ந்தார்
புனனெ டுஞ்சடைப் புங்கவற் கினிதுறு விரத
மினியு ரைக்குதுங் கேட்டிரென் றிருந்தவ னிசைப்பான்.

(இ - ள்.) என்றிப்படி, சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்கு எடுத்தெடுத்துக் கூறியருளினர். அவர்கள் மனமகிழ்ந்து முறைப்படிகேட்டுச் சிந்தை முவந்தார்கள். கங்கையாறு தங்கிய நெடிய சடையையுடைய சிவபெருமானுக்கு இனிமைசெய்யும் விரதங்களை இனிச்சொல்லுவோம் கேட்பீர்களாக வென்று பெருந்தவமுடைய சூதமுனிவர் சொல்லுவாராயினர் எ - று. (௧௭௪)

சிவநாமமான்மியச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம். ௧௦௬௩.

---

ஒன்பதாவது

# சிவவிரதமான்மியச்சருக்கம்.

---

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

தொல்லையவல் வினைகழித்துத் தருஞ்சோம வாரமா திரைநோன் பன்றிப், புல்லியவு மாமகேச சரஞ்சிவராத் திரிமுறையிற பொருந்த நோற்கப், பல்வினையுந் தொலைத்திடுகே தாரமண விரதமிவை பரமனுனைப்பு, கொல்லுறுசூற் படைவிரத மெனுமெட்டுஞ் சிவவிரதங் குணிக்குங் காலே.

(இ - ள்.) சிவவிரதங்களைச் சொல்லுமிடத்தில், பழமையாகிய தீவினைகளை நீக்கி, நன்மையைத்தரும் சோமவார விரதம் திருவாதிரை விரதம், இதுவேயல்லாமல் இதனோடு சேர்ந்த உமாமகேசுவர விரதம், சிவராத்திரி விரதம், சிவாகம முறைக்குப்பொருந்த அநுஷ்டித்தால் பல பாவங்களையும் போக்கிக் காக்கின்ற கேதாரநாதர் விரதம், திருமண விரதம் ஆகிய இவற்றுடனே, சிவபெருமானுக்குரிய விரதமாகிய பகைவரை யழிக்கத்தக்க பாசுபத விரதம், அஷ்டமி விரதத்துடன் எட்டுமாம். எ - று. (௧)

சித்திரைபூ ரணைபபக்கஞ் சுக்கிரவா ரம்பயில்வார் தீமை தீர்த்து
முத்திதரு மைப்பசியுத் திரத்தொடுமா நவமியிவை மூன்றும் பசைத்
தத்தைமொழி யுமைவிரதந் தந்திமுகன் விரதம்வெள்ளி சதுர்த்தி யன்றி
யொத்துறுமா கழிசட்டி யிவைமூன்று மாங்கவனுக் குரியநோன்பே.

(இ - ள்.) சித்திரைமாச பூர்வபக்ஷ சுக்கிரவாரமும், அநுஷ்டிப்போருடைய பாவங்களை விலக்கி மோட்சத்தைத் தரும் ஐப்பசிமாச உத்திர நக்ஷத்திரமும், மகா நவமியுமாகிய இம்மூன்றும் பச்சைக்கிளிபோலும் மொழியையுடைய உமாதேவி விரதங்களாம். யானைமுகமுடைய விநாயகக்கடவுளுக்குரிய விரதங்கள் சுக்கிரவாரமும் சதுர்த்தி திதியும் இவையன்றி மார்கழிமாசத்தில்வரும் சஷ்டி திதியும் ஆகிய இம்மூன்றும் அவருக்குரிய நோன்புகளாம். எ - று. (௨)

ஐப்பசிவெள ளிக்கிழமை கார்த்திகைகார்த் திகைச்சட்டி யனைய மூன்றுங், கொறபடுவேற் றனிக்குமர முருகவேள் விரதம்வெய்யோன் குலவு தையிற், சொற்படுஞா யிறுசித்தி ரைப்பரணி யைப்பசிப்பிற் மிருத்தக வந்நா, ளுற்பவிக்கு மிவைமூன் றும் வைரவற்குற் றிடுவிரத முறைகளென் மனனே

(இ - ள்.) ஐப்பசிமாச சுக்கிரவாரமும், மாசமதோறும் வரும் கார்த்திகை நக்ஷத்திரமும், கார்த்திகை நக்ஷத்திரத்துடன் கூடிய சஷ்டிதிதியும் ஆகிய இம்மூன்றும், வெற்றிதங்கிய வேற்படை தாங்கிய முருகக்கடவுளின் விரதங்களாம். சூரியன் மகரராசியில் பிரவேசிக்கும் தைமாதத்தில் சொல்லப்படும் ஆதிவாரமும், சித்திரைமாச பரணி நக்ஷத்திரமும், ஐப்பசிமாச பரணி நக்ஷத்திரமும் என்றுண்டாய இம்மூன்றும் சொல்லுமிடத்தில் வைரவக்கடவுளுக்குப் பொருந்திய விரதங்களாம் எ - று. (௩)

பரித்திடுசெவ வாய்விரதந் திறல்வீர பத்திரற்குப் பகுத்தநோன்பு. தெரித்தவரன் முறைநோற்று நிருநிலத்துப பெருநிதியச் செல்வ ராகி, விரித்தபெருங் கிளைகளொடு மக்களொடு நலந்துகாந்து மிகுநாள் வைகிப, புரித்தபெருஞ் சடைப்பெருமான் றிருக்கைலை புகுந்துகதி புகுது வாரால்.

(இ - ள்.) காக்கத்தக்க மங்களவார விரதம், வலிமைதங்கிய வீரபத்திரக் கடவுளுக்கு நியமித்த விரதமாகும். மேற்சொல்லிய முறைப்படி அநுஷ்டித்தவர்கள் பெரிய உலகத்திலே மிக்க ஐசுவரியந்தங்கிய செல்வர்களாகி, பரந்த பெரிய உறவினருடன் பிள்ளைகளோடும் இம்மைச் சுகங்களை யநுபவித்துப் பன்னெடுநாள் வாழ்ந்து, புரிந்துள்ள நெடிய சடையையுடைய சிவபெருமானது திருக்கைலாயகிரியிற் சேர்ந்து முத்தியை யடைவார்கள். எ - று. (௪)

ஈங்கிவைநோற் றிடுமுறைமை யின்னபரி சென்விசைத்து மினிது கேண்மி, னோங்கியசந் திரவாரங் கார்த்திகைத்திங் களிற் றொடங்க

வுதய காலம், வீங்குபுனற் குடைந்துமுன்னாக் குறைமுடித்துச சிவ
பூசை விருப்பிற் செய்து, பாங்கொாமறை யவனையன்னை யனனியையு
முடனழைத்துப பரிந்து போற்றி.

(இ - ள்.) இங்கு இவ்விரதங்களை ஆசரிக்கும் ஒழுங்கு இவவகைததென்று சொல்லுகின்றேம். இனிமையோடு கேட்பீர்களாக, பெருமை மிகக சோம வார விரதம் கார்த்திகை மாசததில் தொடங்கவேணடும. அன்று உதயகாலத்தில் மிகுந்த ஜலததில் ஸ்நானஞ்செய்து, முதலில் நித்திய காயங்களை முடித்துககொணடு, சிவபூசையை விருப்புடனே நிறைவேற்றி, நற்குணமடைந்த ஒரு வேதியனையும் அவன மனைவியையும் ஒன்றாக வருவித்து அனபோடு துதி செய்து. எ - று. (௫)

அன்னவனைச சிவனுகப பாவித்தாங் கவளையுமை யாகப பாவித்
துன்னருந்தண் டுலமுதல கொடுத்துத்தா னொருபோது நுகர வேணடு
மன்னுகதிா மறைந்தருந்தின மிகநன்று சிவபூசை வரமபி லாதார்
முன்னுரைதத வழிமுயனறு சிவபரனு லயமபுகுந்து முனனின் றேத்தி

(இ - ள்.) அவ்வேதியனைச் சிவபெருமானுகப் பாவனைசெய்தும, அவன மனைவியை, உமாதேவியாகப பாவனைசெய்தும, நினைததற்கரிய அரிசி முதலிய பொருளகளைத தானமாககொடுத்து, தான் ஒருவேளையுணவே கொளளவேணடும. நிலைபெறற சூரியன அஸதமித்த பிறகு (அவவொருவேளையை) புசித்தால் மிக விசேடம. சிவபூசை நியமமில்லாதவாகள முறகூறிய முறையே முடிதது, சிவபெருமானுடைய திருவாலயத்தையடைந்து சந்நிதியின முன னின்று துதிசெயது. எ - று. (௬)

அரனுக்குப பஞ்சவமிா தத்தினு லபிடேகஞ் செயவித் தந்த
வரனுககுப பனமலரால வழிபடடு மறையவாபோ சனமு நல்கிப
பரனைசசே வித்தொருபோ துணகினுமா முபவாசம பயினறு மறறை
யிரவிற்கண் டுயிலினுமா மிபபடிநோற பவாகயிலை யெய்து வாரே.

(இ - ள•) சிவபெருமானுககுப பஞசாமிர்ததினுல அபிஷேகஞ் செய வித்து, அவ்விறைவனுககுப பல புஷபங்களால அருச்சனை நடத்தி, பிராமண போசனமும் நடத்துவித்துச் சிவபெருமானைச் சேவைசெயது ஒருவேளையே யுணவுகொணடாலும் உத்தமமாம. அனறு முழுவதும உபவாசம [படடினி] இருந்து அன்றிரவில நித்திரை செயதாலும உத்தமமே. இவவாறாக அநுஷ் டிப்பவாகள திருககைலாய பதவியை யடைவாாகள. எ - று. (௭)

இதினிகழ்ந்த தொருகதைசீ மந்தினியென் றரசர்குலத் தெய்தி
நின்றுண், முதனிகழ்தது வரனமுறையாற சோமவிர தந்தவறுண் முய
ன்று நோறகும், புதுமறையோா தமையுமவா பனனியையு மரனுமை
யிற புகழ்ந்து போறறிப, பதிவிரத முறைதிறமபா ளிவவணண நலலொ
ழுக்கிற் படரு நாளில.

(இ - ள்.) இச்சோமவார விரத சம்பந்தமாக நடந்த ஒரு சரிதமுளது சீமந்தனியெனும் ஒருததி அரசா குலததில அவதரிததிருந்தாள. முற்சொல லிய முறைமைப்படி சோமவார விரதாநுஷ்டானத்தைத் தவறாது நடததிவந் தாள், புதுமை மிக்க அந்தணர்களையும அவா மனைவிமாரையும் சிவபெருமா

ளுகவும் உமாபிராட்டியாராகவும் புகழ்ந்து தோத்திரஞ்செய்து, பதிவிரதா தர்மததில் முறை தவறாதபடி, இப்படி நலலொழுககததில் நடககுங்காலத்தில.

பாராச னொருவனிவ ளுளததியறகை யளந்தறிவான் பரிவினோர் வா, னோரிருவ ரெனுமபிரம சாரிகளி லொருவனைபபெண ணுருவ மாக்கித, தாரிவருங் குழலிவளபாற நிஙகளினன றேவினனத தகைய ணோரநது, சீாகெழுபெண ணுமையென்னத தியானிபபப பெண்குறி யிற சிறநதா னன்றே.

(இ - ள்.) உலகினையாளும் ஒரு மனனவன் இச்சீமநதனியின் மனவுறுதியை அளவிட்டறியவேணடி அனபோடு தெரிநதுவர, இரணடு பிரமசாரிக ளில ஒருவனைப் பெண வடிவுடையவனாக அலஙகரிதது மலாமாலையணிநத கூநதலையுடைய இச்சீமநதனிபால அனுப்பினான். சீமநதனி அபபிரமசாரியைககணடு, சிறப்பு மிகுநதபெண வடிவினனை உமாபிராட்டியாகப் பாவனை செயததால அவன் பெணகுறியுற்றவனாயச் சிறநதான. எ - று.        (கூ)

வினையறநோற் றுளவசிட்டன சோமசனமன் றன்மவீ ரியனோர்க றக, னினையவிர ததினைநோற றருநததியை யரும்பொருளைக கதியை யீன்ற, தநயரைபபெற் றினிதுவநதா ரின்னுமொரு கதைநிகழ்நத தனமை சொலகே, னினமறைசசத தியசநதற் கொருமைநதன விராட னென்போ னெறியை நீததோன.

(இ - ள்.) தீவினைநீஙகத தவஞ்செயத வசிஷடரும் சோமசன்மரும் தனம வீரியரும் கற்கரும் இநதச் சோமவார விரததைத அநுஷடிதது, முறையே அருநததியையும பெருஞ்செலவததையும நறகதியையும் புதல்வர்களையும் பெற்று இனிதாக வாழநதாரகள். இனனுமொரு சரிதம முனபு நடந்துள்ளது. சொலலுகினறேன். தொகுதியாகிய வேதஙகளுணாநத சத்திய சநதனெனபவனுககு விராடனெனும பெயருடைய ஒரு குமாரனிருநதான. அவன சன்மாாககந தவறினவன. எ - று.        (கo)

களளுண்பான் புலவுதினபான காரிருளிற பிறாமனைபோய்க் கவரு மோரநாட, புளளுண்பூந தொடைககுழலாாக கெடுததபொருள் கொடுததணைவான் புகுத லோடும, வளளுணகோற சிலைவயவா காவலர் கண் டிடைதொடர மழையி னோடி, முளளுணகா னகம்புகுநதா னருமபசியா னுதரவஙகி மூள நினறான.

(இ - ள்.) அவன கடகுடிப்பான, புலால்புசிபபான, கரிய இருட்காலத்திற்போய அனனிய மாதரைக களவிற புணாவான. ஒருநாளில வணடுகள தேனுணணும மலாமாலையணிநத கூநதலையுடைய சோரமஙகையருக்குத தான திருடிய பொருளைககொடுததுக கலககுமபடி களவுசெயயச் சென்ற போது, கூரிய அமபுபூட்டி விலலேததாஙகிய வீராகளான காவலாகள இவனைப் பினதொடர, மழையில் நனைநதோடிச்சென்று முடகள நிறைநத காட்டிற் சோநதான. பெருமபசியால் உதராககினி மிககெரிய நினறான. எ - று. (கக)

அன றுகதி தருஞசோம வாரமத னுண்மையிவ னறியா னங்நாட், கன் றுசினப் படவரவம் பறபுதையக கடிததுவிடங காலபபட்டா, னெ னறுணாநத கடுமறலி விடுதூதா பாசமெடுத தெறிநது வீசிக், குன் றனைய பணைததடநதோள பிணிததிறுககி நெடுகிரிய கொடுஞ்செல் காலே.

(இ - ள்.) இது நடந்த அந்நாள் கிருஷ்ணபக்ஷத்து ஏகாதசியுடன் கூடிய சோமவாரமாம். அவ்வருஷவிசேஷத்தை யறியான். அந்நாளிலே அக்காட்டில் கோபமுற்றுப் படத்தோடு கூடிய பாம்பு தன்னைக் கடித்ததினால் விஷங்கொண்டு இறந்தான். இதனையறிந்த கொடிய இயமனால் விடப்பட்ட தூதர்கள் பாசத்தை வீசியெறிந்து, மலைபோன்ற பூரித்த தோள்களைச் சேர்த்துக்கட்டிப் பெரிய நரகங்களில் அழைத்துக்கொண்டு போகுங்காலத்தில். எ - று. (௧௨)

அறிந்தசிவ கணத்தலைவ ரெதிர்புகுந்தா றலைத்தவரை யடர்த்துச்
செம்பொற், செறிந்தமணி மானத்து விராடனையேற் றினாகயிலை செல
லுங் காலை, மறிந்தியம தூதரவற் கவையுரைப்பத் தென்றிசையோ
னவாபின் வந்தா, னெறிந்துயிர்கொன் றிடுபாவிக் கிதுசெய்வ தியலபல
வென றிசைத்துப் பின்னும்.

(இ - ள்.) இவற்றையறிந்த சிவகணத்தலைவர்கள் எதிர்சென்று வழி மறித்து அவர்களைக்கொன்று, செம்பொனினிற்பதித்த இரத்தினங்களாலான விமானத்தில், விராடனை யேற்றிக்கொண்டு திருக்கைலைக்குச் செல்லுங் காலத்தில், அத்தூதுவர்கள் திரும்பிச்சென்று இதனை இயமனுக்குச் சொல்லவும், இயமன் அத்தூதுவர் பின்னே தொடர்ந்துவந்து, ஆயுதங்களை யெறிந்து உயிர்க்கொலைசெய்யும் பாவிக்கு இப்படிச்செய்வது தகுதியன்றென்றுசொல்லி, பின்னும். எ - று. (௧௩)

பாதகமென் றுள்ளவைமற் றெவற்றினுக்கு மிவனொருவன் பற்றா
நின்றான், மீதகுபுன் றசையனைத்து மிறவுயிர்கொன் றெடுத்துமிசை
வீக்க மிந்தத், தீதகத்தோன் றெய்வவிமா னந்தொடுதற் கியலானென்
செய்தீ ருள்ளப், பேதகத்தி னிதுபுரிந்தீ ரிவனுறைபுண் ணியமுள
வேற் பேசு கென்றான்.

(இ - ள்.) பாதகங்களென்று சொல்லப்பட்டவை எல்லாவற்றிற்கும் இவனே ஒருபற்றுக்கோடா யிருந்தான், மிகுந்த இழிவாகிய மாமிசங்களையெல்லாம் பிறவுயிர்களைக் கொன்று தின்னும் விருப்பமுடைய இந்தக் கடின சித்தமுடையவன், தெய்வீகமவாய்ந்த விமானத்தைத் தொடுதற்கும் பாத்திரனுகான். யாது செய்தீர்கள்? மனவிகற்பத்தினாலேயே இப்படிச் செய்தீர்கள். இவனிடத்திற் புண்ணியகருமங்கள் இருக்குமாயின் சொல்வீர்களாக வென்றான். எ - று. (௧௪)

மேற்படி வேறு.

சோம வாரநா ளிருளிடைக் களைப்பெய் ரேய்ந்தனன் கடுங்கானிற்
காம ரொண்கனி கிழங்கிவை யருந்தின னுணப்பன காணாலை
வேம லங்கெரி விழிசொரி படவராக் கடித்துற வீந்துற்றான்
போம ருமபிறப் பருந்தவ மிருந்தவா கயிலையிற் புகுகின்றான்.

(இ - ள்.) சோமவாரத்தில் நடுராத்திரியில், காசசனையோடு கூடிய மழையிலே மூழ்கினான். கொடிய காட்டிலே உணவுப்பொருள்கள் கிடைக்காமல் அழகிய பிரகாசமிக்க கனிகள் கிழங்குகள் முதலிய இவற்றைப் புசித்திருந்தான். உட்டினமிக்கு அசைகின்ற தீப்பொறிகள் கண்களிற் சிந்தும்படி படத்தையுடைய பாம்பு கடித்ததலால் இறந்தான். அப்படியிறந்த அரிய அப்பிறவியில் மேம்பட்ட தவப்பயன் அவனுக்கு உண்டாயிருந்தபடியால், அவன் திருக்கைலைக்குப் போகின்றான். எ - று. (௧௫)

ஏழை பங்கினன் றிருவருள் பெற்றனன் கயிலையி னினிதூழி
வாழி வாழ்ந்து றுங் கடைமுறை யெம்பிரான் றிருவடி மலர்சேரும்
பாழி வெம்பகட் டூர்தக வெங்கொலைம் பிறகுறப் படருற்று
யாழி நிற்குதி யல்லையேற் பிழைவரு மென்றிசைத் தவர்போனார்.

(இ - ள்.) உமாசமேதராகிய சிவபெருமானது திருவருளைப் பெற்றான், கைலாயத்தில் கற்பகாலம்வரையில் இனிமையாக வாழ்ந்திருப்பான். இறுதியில் எமது சிவபெருமானது திருவடித் தாமரையைப் பொருந்துவான். வலி தங்கிய கொடிய எருமைக்கடாவை வாகனமாகவுடைய இயமனே! நீயேன் எங்கள்பின்னே தொடர்ந்து வருகின்றாய்? கட்டளைபோல நிற்பாயாக. அல்லாவிடிற் குற்றமுண்டாகுமென்று சிவகணங்கள் சொல்லிச்சென்றார்கள். எ - று.

செய்ய கோன்முறைத் தென்றிசைக் கிழவனுந் தன்றிசை செலலுற்றான்
றெய்வ மானமும் விராடனு மெம்பிரான் கயிலையிற் செலப்பெற்றான்
பைய ராவணி யான்றிரு வருளினா லூழிகள் பலபோக்கிப்
பொய்யில் வானகதி புகுந்தன னதனிலை யாவரே புகல்கிற்பார்.

(இ - ள்.) நீதியோடுகூடிய செங்கோலையுடைய இயமனும் தனது தென்றிசைநோக்கிச் சென்றான். தெய்வவிமானத்துடன் விராடனும் எமது சிவபெருமான் எழுந்தருளிய திருக்கைலையிற் போகப்பெற்றான். படத்தையுடைய சர்ப்பாபரணராகிய சிவபெருமான் திருவருளினால் பலவூழி காலங்கழித்து உண்மையாகிய சிவகதியடைந்தான். அச்சோமவார விரதத்தின் தன்மையை எவர்தாம் சொல்லவல்லவர்? எ - று. (கஎ)

சந்தி ரந்தனிப் பெயரினான் மறந்து நோற்றலுந் தனிநாதன்
வந்தி ரக்கமுற் றுவந்திருந் தருகினம் வேண்டுதி வரமென்னா
விந்தி ரப்பெரும் பதவியோ வன்றிமற் றெம்மடி யவர்பேறோ
சுந்த ரத்திரு நாயகன் முதலியோர் முதன்மையோ சொலகென்றான்.

(இ - ள்.) சந்திரனென்னும் ஒப்பற்ற பெயரையுடையவன், இச்சோமவார விரதத்தை ஆசிரயிக்கவும் ஒப்பற்ற சிவபெருமான் திருவருள்சுரந்து பிரசன்னராய் உன்பாலிரக்கமுற்றோம். வேண்டிய வரங்களைக் கேள் என்றும், இந்திரனது பெரிய பதவியோ அல்லது எமது அடியவர்கள் பதவியோ அழகுள்ள திருமகள் கொழுநனான திருமால் முதலியோரது தலைமைத் தன்மையோ? அதனையுடனே சொல்லக்கடவாயென்றனர். எ - று. (கஅ)

என்ன தாகிய பெயருடைக் கிழமையி னியலுகின் றிருநோன்பு
நின்ன தாகிய வருளினென் பெயரொடும் வழங்குவா னினைகின்றே
னன்ன வாறளித் தருளெனக் கேட்டலு மருள்புரிந் தருளிப்போய்ப்
பொன்ன லார்ந்தெழு கொன்றையஞ் சடையினான் கயிலையங் கிரிபுக்கான்

(இ - ள்.) அடியேன் பெயருற்ற வாரத்தில், பொருந்திய தேவரீரது சிறந்த விரதத்தைத் தேவரீர் திருவருளால் அடியேன் பெயரோடும் வழங்கி வரும்படி யெண்ணுகின்றேன். அவ்வாறே யநுக்கிரகிக்கவேண்டுமென்று விண்ணப்பிக்கவும், திருவருள்செய்து பொன்போல மலர்ந்து ஓங்கிய அழகிய கொன்றைமாலையணிந்த சடையையுடைய சிவபெருமான் திருக்கைலாயமலையையடைந்தனர். எ - று. (க௯)

பட்ட ராகனென் றொருதிரு மறையவன் வறுமையிற் புரிவுற்றான் [ற்
றொட்ட கார்த்திகைத் திங்கண்முற் றிங்களிற் றொடுத்ததியன்முறையானோ

றிட்டி ருமபொரு ளெய்தினன் பன்மகப் பெற்றன னிதழிப்பூ
மட்ட லாநதெழு வேணியான் கயிலைபோல மன்னிவான் கதிபெற்றான்.

(இ - ள்.) பட்டராகனென்னும் பெயாவாய்நத ஒரு சிறநத அநதணன் தரித்திரத்தால் வருநதினவனுகித் தொடர்நதுவரும் காாததிகைமாதம முதற் சோமவாரத்தில் ஆரம்பிதது விதிமுறைப்படி இவ்விரதாநுஷ்டானஞ்செய்து பெருந்திரவியமடைநது, பல புதல்வரைப்பெற்று, கொன்றைமலரின் மணமா னது மிகுநது விளங்குஞ் சடையையுடைய சிவபெருமானது திருக்கைலைககுப் போய் நிலைததுப்பெரிய முத்தியெய்தினன். எ - று. (௨௦)

ஆத லாலியற சோமவா ரத்தினை நோற்பவ ரகன்ஞாலத்
தீது தீாததனர் பல்வள நுகர்நதனா சேவுடைய பெருமானுக்
கோது மீதுபோ லுவநதெொன் றில்லையா லுவகையிற் றலைநின்ற
னீது நோறபுவ ரிககதை கேடபவா கயிலைவீற றிருபபாரே.

(இ - ள்.) ஆதலால், பொருநதிய சோமவார விரததததை யநுஷ்டிப்போர் இடமகன்ற பூமியில் துனபம நீஙகினவாகளாயப் பல போகஙகளையு மநுப வித்தவர்களாவார்கள். இடபவாகனமுடைய சிவபெருமானுககு இபபோது சொலலிய இச்சோமவார விரததத்தைப்போல விருபபமுளள விரதம் வேறொ ன்றுமில்லை. அவ்விறைவா இவவிரததததில் மிக்க விருப்பம வைததிருககின்றனா. இவவிரததததை யநுஷடிப்பவாகளும் இச்சரிதத்தைககேட்பவாகளுந திருககை லாயகிரியில் வீற்றிருப்பாாகள எ - று. (௨௧)

### கலிவிருத்தம்.

ஆதிரை நோன்புள தென்ற றைநதனந
தீதற நோற்றிடு முறைமை செபபுகே
மேதகு மாாகழித திஙகண மேவரு
கோதறு மாதிரை குறுகும வைகலின்.

(இ - ள.) திருவாதிரை விரதமொன்றுளதென்று சொன்னேம். அவ்விர தத்தைககுற்றமற நோற்கும வகையைச்சொலகினறோம். மேனமை தஙகிய மார்கழி மாசததில் வருங குற்றமற்ற திருவாதிரை நக்ஷததிரங கலககுநதினத தில். எ - று. (௨௨)

காலையி லீசனைக் கருததது ளோர்நதுநற்
கோலநீ ராடிய பினனாக கோதறு
வாலநீ றணிநதுசெய மரபு நோநதுசென்
றாலய மடைநதுசூழ்ந தரனைப போறறியே.

(இ - ள்.) பிராதககாலததில், சிவபெருமானை மனதில தியானஞ்செய்து, நல்ல அழகிய சலததில் ஸநானஞ்செயத பிறகு, குற்றமற்ற தாவள்யமான திருநீறு அணிநது செயயவேணடிய நிததிய காமஙகளை முடிததுககொணடு போய், சிவாலயததை யடைநது பிரதக்கணஞ்செயது சிவபெருமானைத துதி செயது. எ - று. (௨௩)

ஈசனுக் கருளபி டேக மேறறுவித்
தாசினெய் வேததியக காவ தீநதவற்

கேசறு நெய்விளக கேற்றி யீசனை
பூசனை யாற்றுவித தகததுப போற்றியே.

(இ - ள்.) சிவபெருமானுககு அபிடேகம் நடப்பித்து, குற்றமற்ற நிவேத னத்திற்கு வேண்டியவற்றைத் தந்து அப்பெருமானுககு ஏகுதலற்ற, திருநெய் விளக்கேற்றி வைதது அப்பெருமான் பூசையை முடிப்பிதது மனதிலுந தியா னஞ் செயது. எ - று. (உ௪)

இமமுறை தாண்டவேச சுரற்கு மேய்நதபின்
செம்மையி னவனடி சிநதை செய்துபோய்த
தமமனை புகுநதுண றவிர்நது வைகியே
வெமமைவெங கதிரெழும விடியல வைகலின்.

(இ - ள்) இவவகையாக நடராசபபெருமானுககுஞ் செயவிதத பின்னர், செவ்விய அபபெருமான் பாதஙகளைச் சிநதனைசெயது போய, தமது இருககை யடைநது உணவாதிகளை நீஙகியிருநது, வெபபமிகுநத சூரியோதயமாகும் விடியற்காலததில. எ - று. (உ௫)

தெணபுனல் குடைநதுநீ றணிநது செநதழற
கண்படு நுதலவற பணிநது கைதொழு
தெண்படு மறையவாக கடிசி லீநதுபி
னுண்பன பாரணை முவாது கொளவரே.

(இ - ள்.) தெளிநத நீரில ஸநானஞ்செயது, திருவெண்ணீறணிநது அக கினிககணணையுடைய நெற்றிவாயநத சிவபெருமானைப்பணிநது, மதிககததக அநதணருக்குககைகுவிதது வணஙகி அன்னமளிதது, அதன பினனாப் பாரணஞ் செயதற்கு (உணடற்கு) யோககியமானவற்றைச் சநதோஷிததுணபாாகள்.

செவவழிச சினபயச சிதமப ரததலத
திவவழி யிநதநோன் பியற்று வாரவர்
வெவவழித தன்மைய விணையி னீஙகிமற
றுயவழி யருஙகதி யொடுஙகு வாரகளே.

(இ - ள்.) செவவையாகிய வழியைககாட்டும ஞானமயமாகிய சிதம்பர க்ஷேத்திரத்திலே, இவவகையாக இநத விரததததை ஆசரிபபவாகள், கொடிய தனமை யனவாகிய தீவினைகளினின்றும நீஙகி, கடைததேறும் வழியாகிய அரிய முததியில ஐககியமாவாாகள். எ - று. (உஎ)

அநதமின் மாாகழித் திஙக ளாதிரை
வநதநாட் சிதமபரத தலதது மனனுவா
ாிநதிரன் முதலிய தேவா யாரினு
முநதுறு நாரதன் முதல மாதவா.

(இ - ள்.) அழிவில்லாத மார்கழி மாசததில் திருவாதிரை நட்சத்திரங் கலநத தினததில, சிதம்பர ஸதலததிலே இநதிராதி தேவாகளும் தவசிகளி லெல்லாம் முறபட்ட நாரதாதி மாதவாகளும நிலைததுவசிபபாாகள். எ - று.

இருடிக ளாயிர நாற்பத் தெண்மரு
மருடிக ழததலத தன்பி னெயதுவா

மருடிரி மேருவே முதல மால்வரை
யுருடிரைக கஙகையே முதல வொண்புனல்,

(இ - ள) நாற்பத்தெணணாயிரம் இருடிகளும், திருவருள் விளஙகும் அச் சிதம்பர ஸதலததில அனபோடு சேரவாாகள். மயக்கமொழிதத மகமேரு முதலிய மகாபாவதஙகளுமம, புரளகின்ற அலைகளையுடைய கஙகை முதலாகச் சொல்லப்பட்ட சிறநத தீரததஙகளுமம. எ - று. (உ௯)

ஏழ்திரைப பரவையு முருவ மெய்தின
சூழதரு மததலந தொழுது சூழுவ
கேழகிளா துமபுரு கருடா கினனரர்
வாழிய பனனகா மறைநது வைகுவார்.

(இ - ள்) அலைகள் பொருநதிய சப்த சமுததிரஙகளும் வெவ்வேறு வடிவ மெடுததனவாயப பிரதககணஞசெய்யததகக தகுதிவாயநத அததலததை வணங கிப்பிரதககணஞ செயவன. வலலபமிகுநத துமபுருவா கருடா கின்னரா நாகா கள ஆகிய விவாகளும மறைநது வசிபபாாகள. எ - று. (௩௦)

முறபடக் கழிநததோா மூனறு கததினுஞ
சொறபெயா வெளிபபடத தொழுது தோனறுவாா
பிறபடு கலிவெளிப படாது போறறுவார்
சிறபர ஞானமச சிதமப ரததலம.

(இ - ள்.) மேற்கூறியவாகள யாவருமம, முறபட்டுச்சென்றதாகிய ஒப்பற்ற (கிரேதாயுகம் திரேதாயுகம துவாபரயுகமெனனும) மூன்று யுகஙகளிலுமம, யாவ ருககுநதோனறுமபடி, சிறநத பரஞானததைததரும அச்சிதமபர ஸதலததிலே வணஙகியிருபபாாகள. இழிவாகிய கலியுகததிலே ஒருவருககுநதோனறாதபடி துதி செயவாாகள. எ - று. (௩௧)

கஙகைசூழ் காசியி னிறக்க முததியிப
பொஙகுமா நகாதொழ முததி பூஙகலைத
திஙகளோா சடையினோ னிருந டநதரத
தஙகுமிந நகாசசிறப பியாவா சாறறுவார்.

(இ - ள.) கஙகாநதியானது சூழ்நதுளள காசிப்பதியிலே இறததலாலே முததியுணடு. மிகச்சிறநத இநதச்சிதமபர ஸதலததைததொழுதலால முததி யுணடு. ஆதலால அழகிய பிறைச்சநதிரன தவழுஞ் சடையையுடைய நடராசப பெருமான திருநடனதரிசனந தநதருளுமபடி அழியாத இநதச்சிதமபர ஸதலத தின் சிறப்பை எவா சொலலவலலவா? எ - று. (௩௨)

முன்னைநா ளையின்முரு கேச னெமபிரா
னநநக ரிநதநோன பாறறி யேததியப
பொன்னொளி மானமீப பொலிநது போய்மதி
நனனுத லிடததனைக கயிலை நணணினன.

(இ - ள.) முனனோா காலததில், முருகப்பெருமான, எமது சிவபெரு மானுடைய சிதம்பர ஸதலததில இநததிருவாதிரை விரதமனுஷ்டிததுசசெயது துதிதது, சிறநத பொனமயமான விமானததின மேலாரோகணிததுசசெனறு. திருககைலையில் வீற்றிருககும மூனறாம பிறையைபபோலும நல்ல நெற்றியை யுடைய உமாதேவியைபபாகமாகவுடைய சிவபெருமானைககலநதருளினா.

மேற்படி வேறு.

வெள்ளை வாளுகிர் வியாக்கிர பாதனு
முள்ள மோர்ந்தித் நோற்றுப் மன்னியப்
பிள்ளை யாமெனப் பெற்றுமத் தொன்னகர்
முள்ள ருங்கதி பெற்றுறைந் தானரோ.

(இ - ள்.) வெள்ளிய கூர்மையான நகங்களையுடைய வியாக்கிரபாத முனிவரும் இவ்விரதமேன்மையை மனத்திற் றெளிந்து அநுஷ்டித்தது, உபமந்யு முனிவரைப் புத்திரராகப் பெற்றும், பழமையான அச்சிதம்பர ஸ்தலத்திற்றானே யினேர்த்தற்கரிய முத்தியடைந்து வாழ்ந்தனர். எ - று. (௩௪)

வேத ரூப விபுலனென் பானொரு
போத னந்நகர் நோற்றுப் பொருந்தினு
ஞாதி நாத னிமாசலை யாரெழின்
மாது பாக னுபய மலர்ப்பதம்.

(இ - ள்) வேத சொரூபமாயுள்ள விபுலனென்னும் ஒரு ஞானி, அச்சிதம்பரத்திலே இவ்விரதத்தை யநுஷ்டித்து; முதற்கடவுளாகியும், இமயாசல புத்திரியாராகிய அழகிய உமாபிராட்டியாரை வாமபாகத்துடையவராகியும் விளங்குஞ் சிவபெருமானது தாமரை மலர்போலும் உபய பாதங்களை யெய்தினன்.

இன்னு மெத்தனை பேரித் திருநகர்
மன்னி முன்னர் வரன்முறை நோற்றவ
ரன்னர் பெற்ற வருங்கதி முற்றுறப்
பன்னன் கேசனுங் கூறப் படுவதோ.

(இ - ள்.) இன்னம் இந்தச்சிதம்பர ஸ்தலத்தில் வதிந்து முற்காலத்தில் இத்திருவாதிரை விரதத்தை யநுஷ்டித்துப் பேற்றவர்கள் எத்தனை பேருளர் அவர்களெய்திய அருமையாகிய முத்திப்பேறுகளை நாகராசனாகிய ஆதிசேடனும் முடிவுபடுத்திச்சொல்லத்தக்கதோ? எ - று. (௩௫)

மார்க ழித்திரு வாதிரை மஞ்சனத்
தாரு யிர்க்கெலா மன்பி னடம்புரிந்
தோர்வ ருங்கதி நலகி யுமைபிடக்
கார்மி டற்றன் கருணை வழங்குமால்.

(இ - ள்) மார்கழிமாச திருவாதிரை நக்ஷத்திரத்திற் செய்கின்ற திருமஞ்சனத்தினால் உலகத்தில் நிறைந்த ஆன்மாக்களுக்கெல்லாம் அன்போடு பஞ்சகிருத்திய திருநடனஞ்செய்தருளி, அறிதற்கரிதாகிய முத்தியைக்கொடுத்து, உமாதேவியாரை வாமபாகத்திலுடைய நீலகண்டராகிய சிவபெருமான் திருவருள் பாலிப்பார். எ - று. (௩௭

நீற்று மேனி நிமலன் றிருநடம்
போற்றி யன்பு புரிந்தரு காரினரூர்
மாற்ற ருங்கதி வைகுவ துண்மையாற்
சாற்றி னேமிது சத்தியஞ் சத்தியம்.

(இ - ள்.) திருவெண்ணீறணிந்த திருமேனியையுடைய நிமலராகிய நடராசப்பெருமானது திருநடனத்தைத் துதிசெய்து உண்மையன்புமிகுந்து

மனமுருகுகின்றவர்கள், வேறுபடுத்தற்கரிதாகிய முத்தியின்பமெய்திவாழ்வது உண்மையாகும். இதனைச்சொன்னோம். இது சத்தியம் சத்தியம். எ-று. (௫அ)

திரளி ருஞ்சடை யான்றிரு வாதிரை
விரத நோன்மை விளம்பினம் வெள்விடை
வரத னுன்புமா மேசுர மாமுறை
சரத மின்ன பரிசெனச் சாற்றுவாம்.

(இ-ள்.) திரண்டிருக்கின்ற பெரிய சடையையுடைய சிவபெருமானது திருவாதிரை விரதத்தின் சிறப்பை இதுகாறுஞ் சொன்னோம். வெள்ளிய இடப வாகனத்தையுடைய சிவபெருமானது விரதமாகிய உமா மகேச்சுர விரதத்தின் முறையையும் அதன் உண்மையையும் இத்தன்மையதென இனிச் சொல்லுவோம். எ-று. (௫௯)

மேற்படி வேறு.

கார்த்திகைப் பூரணை யன்று காலையிற்
சேத்துரா நிடுமவற் சிந்தை செய்துமின்
பூத்துறு நறும்புனற் பொய்கை மூழ்கியின்
றேத்துறு கடன்முறை யாவுஞ் செய்தபின்.

(இ-ள்) கார்த்திகைமாச பௌர்ணமிதின உதயத்தில், இடபத்தை வாகனமாகச்செலுத்தும் சிவபிரானைத்தியானஞ்செய்து, ஒளிமிகுந்து விளங்கும் நல்ல நீர் நிரம்பிய தடாகத்தில் மூழ்கி, அதன் கரையிலிருந்து நித்திய கர்மாநுஷ்டானங்களை யெல்லாம் முறைப்படிசெய்து முடித்து. எ-று. (௬௦)

பொன்னினால் வெள்ளியா லிமயப் பூவையை
யன்னவட் பாகமவைத் தமைத்த வீசனை
யினனுரு வமைத்தொரு தலத்தை யீர்ம்புனன்
மன்னுகோ மயத்தினா னெழுக்கு மாற்றியே.

(இ-ள்) பொன்னாலேனும் வெள்ளியாலேனும், இமாசல புத்திரியாராகிய உமா பிராட்டியாரையும், அப்பிராட்டியாரை வாம பாகத்தில் வைத்துப் பொருந்திய சிவபெருமானையும் இனிய திருவமாகச்செய்து, ஓரிடத்தைக்குளிர்ந்த சலத்தாற் பசுவின் சாணங்கலந்து திருமெழுக்கிட்டு (சுத்திசெய்து) எ-று.

ஆங்கவ ணையிரு நாழி நெற்குவித்
தோங்கிய கும்பமீ திருத்தி யுள்ளுறப்
பூங்கமழ் நறும்புனல் பொழிந்து பூஞ்சினை
மாங்கமழ் நறுந்தழை வாய்ப்பெய் திட்டபின்.

(இ-ள்.) அவ்விடத்தில் பத்துநாழி நெல்லைக்கொட்டி, சிறந்ததொரு கும்பத்தை அந்த நெல்லின்மேல் வைத்து, அக்கும்பத்தினுள்ளே மலர் மணங்கமழும் சுத்த ஜலத்தைவிட்டு, அழகிய கிளைகளையுடைய மாமரத்தின் மணங்கமழும் நல்ல இலைகளை அக்கும்பத்தின் வாயில் வைத்த பின்னர். எ-று.

புதுக்கலை நான்மடிப் பாக்கிப் பூந்தழை
யதுக்குறக் கும்பமீ தமைத்து முன்புற
வொதுக்கிய விம்பமோ ரிரண்டை யொன்றெனப்
பொதுப்படு கெவியமோ ரைந்திற் போற்றியே.

(இ - ள்.) புதிய வஸ்திரத்தை நான்கு மடிப்பாக மடித்து அழகிய மாந் தழைகள் அழுந்தும்படி அக்கும்பத்தின்மீது வைத்து, முன்னமைத்து வைத் துள்ள உமாமகேசுவர மூர்த்தபிம்பங்கள் இரண்டனையும், ஒன்றாகக்கூட்டி உ வைத்துள்ள (பால். தயிர். நெய். கோமயம்=சாணம். கோசலம் ஆகிய) பஞ்ச கவ்வியத்தினால் அபிடேகஞ்செய்து, எ - று. (௪௩)

வகுத்தவோ ரிரண்டையு மடித்து வான்கலை
தொகுத்துவைத் தினியதோர் தூபங் காட்டிமென்
முகிழ்த்தபூச் சந்தன முடியிற் சூட்டிநெஞ்
சகத்துற வுருகியா ரமுது நீட்டியே.

(இ - ள்.) மேற்கூறிய வஸ்திர மடிப்புகளில் இரண்டினை உமாமகேசுவர மூர்த்திகள் இரண்டிற்கும் மேம்பட்ட வஸ்திரங்களாகத்தரித்து அலங்கரித்து வைத்து, இனிதாயச்சிறந்த தூபங்காட்டி, மலர்ந்த மெல்லிய மலர்களையும் சந்தனத்தையுஞ் சிரசிலணிந்து பொருந்தும்படி மனமுருகி நிறைந்த திருவமுது நிவேதனஞ்செய்து. எ - று. (௪௪)

மரபினான் மும்முறை வலஞ்செய் தீந்தருட்
பரமனை யுமையொடும் பணிந்து தம்முளம்
விரவிய வொருபொருள் விரும்பி வேண்டிப்போ
யரனுடை யாலய மணைந்து போற்றுவார்.

(இ - ள்.) முறைப்படி மும்முறை பிரதக்ஷிணஞ்செய்து, கிருபாமூர்த்தி யாகிய சிவபெருமானை உமாதேவியோடு நமஸ்கரித்து, தம்மனதிற்கருதிய ஒரு பொருளை விரும்பி யாசித்து, சிவாலயத்தையடைந்து சென்று தோத்திரஞ் செய்வார்கள். எ - று. (௪௫)

ஆலயத் தீசற்கு மந்த வாறிழைத்
தோலைவார் குழையொடு மரனை யுணர்ந்தினை
தேலவே தம்மனை யெய்தி யுறைவோர்
காலமுண் டப்பகல் கழித்த பின்னரின்.

(இ - ள்.) ஆலயத்திலெழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானுக்கும் அப்படியே பூசை நடத்தி, பொன்னோலை யணிந்த நீண்ட செவிகளையுடைய உமாபிராட்டியாரோடு சிவபெருமானையும் மனதில் தியானஞ்செய்து, பொருந் தும்படி தமது இருக்கையையடைந்து, அன்று ஒருகாலமே புசித்து, அன்றைய பகற்பொழுது நீங்கிய பிறகு. எ - று. (௪௬)

இனியதோர் பண்டமுண் டிரவு போக்கியே
நனிகதிர்ப் பகலெழும் பிறறை நாளிடைப்
புனிதநீ ராடித்தன் னியதி போக்கியப்
பனிவரும் குழலியைப் பரனைப் போற்றியே.

(இ - ள்.) இனிதாகிய ஒரு பண்டத்தைப்புசித்து இரவைக்கழித்து, மிக்க கிரணங்களையுடைய சூரியன் உதிக்கும் அடுத்த தினத்தில், சுத்தமான நீரில் ஸ்நானஞ்செய்து, தனது நித்தியமாகிய சந்தியை முடித்து, முன்கும்பத்தி லெழுந்தருளச்செய்துள்ள இமாசல புத்திரியாகிய உமாபிராட்டியையும் சிவ பெருமானையும் பூசித்து. எ - று. (௪௭)

மீண்டருச சனேபுரி குமப மேவிய
மாண்டரு பொன்னுரு விரண்டு மாமறை
யாண்டருள வேதியாக் கவறறொ டீநதபிற
கூண்டவே டததரோ டமுது கொளவரால்.

(இ - ள்) திரும்பவும் பூசிதத அகருப்பததில் எழுநதருளச்செய திருநத மாட்சிமை தஙகிய பொனனுலான அமமூர்ததஙகளிரணடினையும, அவவிடத திற் சிறநத வேத கோஷஞ்செய்து கொணடிருககும் அநதணருககு அககுமபம் வஸதிர முதலியவற்றுடன் தானமாககொடுதத பிறகு, தொகுதியாகிய சிவனடியவர்களோடுந திருவமுது செயவாாகள. எ - று. (சஎ)

இததிறந திறமபுறு தியல்பி னேற்றவர்
புததிர ரொடுமவளம பொருநதி வாழநதுபி
னததகை யவரொடு மமர ரேததப்போய
முததிசென றடைநதனா முதலவ ராகுவாா.

(இ - ள.) இவவகையாக முறைவழாமல விதிப்படி அநுஷடிததவாகள், புததிர பாககியததுடனே ஐசுவரிய மெயதிவாழ்நது, பிறகு புததிர பௌத திரகளததிரஙகளுடன் தேவாகள துதிசெயயசசெனறு முததியடையபபெறற வாகளாயச்சிவபெருமானுடைய சாரூபமடைவாாகள. எ - று. (சஅ)

**கலிநிலைத்துறை**

சீர்த்த மாதவத திரணவிந தெனஙெருரு செலவன்
பாாத்த கட்புலங் குழிபட வருநதினன பன்னு
ணேறற றிநதிது நோறறன னேறறனு நிவபபுற
ரூாதத கடபுலம பெறறனன கயிலைசென றடைநதான்.

(இ . ள்.) சிறநத பெருநதவமுடைய திரணவிநது எனும பெயருடைய ஒரு முனிவன் பாாததற்குரிய நேததிரேநதிரியம குறைவுற்றமையால பல காலம வருநதியிருநதான். இவவிரத மகிமையைததெரிநது இதனை யநுஷடித் தவுடனே, அம்மேனமையுற்று நிறைநத பாாவையைபபெறறவனுய இறுதியில திருக்கைலாயபதவி யெயதினுன. எ - று. (ருo)

பாக்கி யம்புரி தேவகி பயநதகோ பால
னுக்க மாதரெண ணுயிர விரடடிபெற றணைநதான்
கோக்கு மாராக ளொனபது கோடிபெற றுயாநது
தேக்கு வாாகட லுலகெலாம புரநதனன சிறநதான.

(இ . ள்.) புணணியஙகளைச்செயத தேவகி தேவி பெற்ற கிருஷ்ண மூாத்தி இவவிரதாநுஷடானததால் செலவம் பொருநதிய பதினாயிரம் மாதர்களைத தேவிமாராகப்பெற்றுககூடி, யதுகுலமைநதாகள ஒன்பது கோடி பேரைப்பெற்று மேம்பட்டு, தேககெடுககும நீரையுடைய நெடிய கடல்சூழநத உலக முழுவதையும் அரசு செயது சிறப்பெய்தினர். எ - று. (ருக)

மழலை வார்குழைக் கரும்புகா யததிரி வாணி
யொழுகு வாாசிலை நுதலிசா விததிரி யொளிகா
லிழைபொ ருநதன மூவரு மனேயெனச சிறநதான்
செழும லர்த்தவி சினிதுறை நானமுகச செலவன.

(இ - ள்.) செழுமை தங்கிய தாமரை மலர்த்தவிசில் இனிதாக வாழும் நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன், மழலைச்சொல்லையும் நெடிய காதையுமுடைய செங்கரும்பு போன்ற காயத்திரி, சரசுவதி, நீண்டு வளைந்த வில் போலும் நெற்றியையுடைய சாவித்திரியாகிய ஒளி வீசும் ஆபரணமணிந்த மூவரையும் தனக்கு மனைவிமாராகப்பெற்றுச் சிறப்பெய்தினன். எ - று. (௬௨)

ஈர நாண்மல ரிழிதா விருஞ்சினை விடுக்குந்
தாரு விந்திரன் சயந்தனைப் பயந்தன னவத்து
மேரு வன்னவோர் வசிட்டமா முனிவரன் விருப்பி
யோர்வ ருந்தனித் தெய்வமாச் சுரபிபெற் றுயர்ந்தான்.

(இ - ள்.) பெரிய கிளைகள் குளிர்ச்சி யெய்திப் புதிய பூக்களைக்கீழே விழச் சிந்துகின்ற கற்பக விருட்சத்தையுடைய இந்திரன் இவ்விரதாநுஷ்டானத்தால் சயந்தனை மகனாகப்பெற்றான். தவத்தால் மேருவை யொத்த வசிஷ்ட மகா முனிவர் விருப்பங்கொண்டு செய்து சொல்லுதற்கரிய ஒப்பற்ற தெய்வீகமுற்றுச் சிறந்த காமதேனுவைப்பெற்று உயர் வெய்தினர் எ - று. (௬௩)

கனக மாமதி லுடுத்தகல் கடிநகர் மிதிலைச்
சனக னுருயிர்த் தநயர்க ளின்மையி னளர்ந்து
வனச மேர்ருக மடந்தையை மகவெனப் பயந்தா
னினைய ரின்னண மவர்முறை விரதமீ திழைத்து.

(இ - ள்.) பொன் மயமான பெரிய மதில்களாற் சூழப்பட்ட விசாலமான காவலோடு கூடிய மிதிலையை யாண்ட சனகராசன், தன் அரிய உயிர்போன்ற புத்திரர்களில்லாமையால் மனம் வருந்தி அழகிய செந்தாமரை மலர் மங்கை யெனப்படும் சீதாதேவியைத் தன் புத்திரியாகப்பெற்றான். இவர்கள் யாவரும் இவ்வகையாக இவ்விரதத்தை யநுஷ்டித்தார்கள். எ - று. (௬௪)

சிலைத்த ழும்புடைத் திணிபுயச் சித்திர தேய
னிலைத்த நன்னெறி விரதமீ திழைத்தன னேராக
கொலைத்த வாணெடுங் கட்கடை யுருப்பசி குலத்தோண்
மலைத்த டந்தன மணந்தவண் மனையெனச் சிறந்தான்.

(இ - ள்.) வில்லேந்திய வடுவையுடைய சித்திர தேயனென்னும் வலி தங்கிய தோளையுடையவன், நிலைபெற்ற ஆக யோகத்யாக இவ்விரதத்தை யநுஷ்டித்து ஒருவருக்குங் கிடைக்காத கொலைத்தன்மை வாய்ந்த வாள்போன்ற நெடிய கடைக்கண்களையுடைய ஊர்வசியின் இரு தோள்களையும் மலைபோலப் பரந்த முலைகளையுந்தழுவி அவளையே மனைவியாகக்கொண்டு சிறப்பெய்தினன்.

பூத லத்திவ ளிவளொடு மணந்துறை பொழுதிற்
றூத விழத்தலர் கற்பக மிவனுழைச் சார்ந்து
மேத கப்பல வேண்டுவ வேண்டுவ புரியந்
தீத வித்தரு மைந்தரைப் பயந்தறஞ் சிறந்தான்.

(இ - ன்) பூலோகத்திலே இச்சித்திரசேனன் இவ்வூர்வசியோடு கூடி வாழ்ந்த காலத்திலே, மகரந்தப்பொடிகளைச்சிந்தி மலருங் கற்பக விருட்சம் இவனிடத்தே வந்து மேன்மை தங்கிய பற்பல செய்கைகளையும் அவன் விரும்

பிய வணணமே யியற்ற, தீமையை யகற்றிப் பல அரிய புதல்வரைப்பெற்று இல்லற வொழுக்கததில் சிறநதிருநதான. எ - று. (கூசு)

கால நீடுறு பற்பகல் கழிதரக் கழித்து
ஞால மன்னுயிா தன்னுயி ராமென நடாத்திக்
கோல வெண்குடை நிழறறினன் பின்னாவெண் குழவி
வால சநதிர மௌலிதன் கயிலைபோய் வதிநதான்.

(இ - ள்.) காலம் நீடித்து அநேக காலஙகள் கழியும்படி கழிதது, உலகிலுள்ள மன்னுயிர்களையெலலாந தன்னுயிா போல நடததி, அழகிய வெணகொற்றககுடை நீழலில் அரசு செய்தான். அதன் பின்னா, வெளளிய இளமைதஙகிய பிறைச்சநதிரனையணிநத முடியையுடைய சிவபெருமானது திருககைலையிற் சென்று வாழநதிருநதான். எ - று. (கூஎ)

வயஙகு முபபுரி நூறசுதன் மாவெனு மறையோன்
றயங்கு விஞசையிற நகவுறுக ருததில ஞகி
மயங்கி நாளபல கழிததனன் வையக மிகழ
முயஙகு விஞசைகேட டீஙகிது நோறறனன் முறையின்.

(இ - ள்) பிரகாசிககின்ற பூணூலணிநத சுதனமாவெனனும வேதியன், தான் கற்றறிய வேணடிய வேத பாராயணததில தகுதியாகிய மனமிலலாதவனாகி, உலகினா பழிககுமபடி மயககமெயதி நெடுநாள கழிததனன். இவ்விரததை அநுஷ்டிககும விதததையைக கேளவியுற்று இதனை முறைப்படி அநுஷ்டிததான. எ - று. (கூஅ)

விரத மீங்கிது நோற்றலும் வெளளைவெண் கமலை
வரம கிழ்நதெதிா தோனறிஞ ஞுதவிய வரததாற
பரவு நான்மறை முதலிய கலையெலாம பயின்று
சுரரு வபபுற வயறகுமோா மறைக்குரை சொலலும்.

(இ - ள) இவவிரததை யநுஷடிககவும, வெணணிறநதஙகிய கலைமகள் வீற்றிருததற்குத திருவுளஙகொணடு பிரசனனமாய் அநுககிரகிதத வரததினால துதிககததகக நான்கு வேதஙகள முதலாகிய எல்லா நூல்களையும் பழகி, தேவாகள மகிழுமபடி, பிரமதேவனுககும ஒப்பற்ற வேதததிற்கும பொருள் சொல்ல வலலவனானன். எ - று. (கூகூ)

ஓத வேட்டவாக கோதுவித தொருபொருள் விருமபான
மூது ணாநதவா யாவாககு மூதுணாத துறுமா
லீது ணாநதக னெடுநிலம புரநதரு ளிறைவா
தீது தீாததிரு நிதிதரப பெறறனன் செலவன்.

(இ - ள்.) நூல்களைககற்க விருமபினோருககுக கற்பிதது, ஒரு பொருளையும் விரும்பாதவனாய, நன்றாய ஓதிததோநதவாகள் எல்லாருககும் அதிகமாகத தெரிவிப்பான. இநநிலையை யறிநது உலகததை யாளும் அரசன, இவனது தரிததிரத்தையொழித்துப் பெரும்பொருள பரிசு கொடுக்கப்பெற்றான் அககல்விச்செல்வமுடைய சுதன்மன். எ - று. (சுo)

இகழ ருங்கலைக் கடலென மைநதரீன் றெடுத்தா
னகழி மாநிலத் தளவறு வளநுகாந தருளு

முகிழ்சி றந்தனன் கடைமுறை கயிலைவான் கணத்தோர்
புகழ வன்னவர் தலைவர்க்குந் தலைவனிற பொலிந்தான்.

(இ - ள்.) இகழ்தலற்ற கல்விக்கடலென்று சொல்லும்படி புதல்வர்களைப்பெற்முன். கடல் சூழ்ந்த பெரிய பூமியில் எண்ணில்லாத போகங்களை யநுபவித்து, நீங்காத களிப்பின் மேம்பட்டவனாய், இறுதியில் திருக்கைலாயத்திலுள்ள சிறந்த சிவகணத்தவர்கள் புகழும்படி, அக்கணங்களுக்குத் தலைவர்களுக்கெல்லாந் தலைவனாக விளங்கினான். எ - று. (சுக)

உந்து வெண்டிரைப புணரிநின் றுவட்டெழு முவரி
தந்த மாநிலப் பரப்பெலா நிழறறிய தகைசா
லிந்து வெண்குடைத் தனிச்சுட ராழியோ னெறிவே
லிந்து சேனனென் றுளனிகன மன்னவா திலகன.

(இ - ள்.) பாய்கின்ற வெள்ளிய அலைகள் அலைந்து பொங்கியெழுங் கடலாற் சூழப்பட்ட உலக முழுமையும் நிழல் பரப்பிய பெருமை தங்கிய வெண்ணிறமுற்ற வெணகொற்றக்குடையையும ஒபபறற ஆக்கினை சக்கரத்தையும் உடையவனாய், எறிகின்ற வேலேந்திய இந்து சேனனென்னும் வலிதங்கிய மன்னவா திலகனொருவனிருந்தான. எ - று (சுஉ)

அனைய னிந்நிலத் தாருயிா புரக்குநா ளவன்பால
வினைசெய் திணபரி வேற்படை மன்னவா வெருண்டு
முனைசெய காலையி னவாக்குடைந் தோடினன முந்நீாக்
கனைக ருங்கட லுடுத்போயக் கானக மடைந்தான.

(இ - ள்.) அவவிந்து சேனன இவவுலகில நிறைந்த உயிர்களையாளுங் காலத்தில, அவனோடு போர்த்தொழில் செய்யும வலி தங்கிய குதிரைகளையும் வேல தாங்கிய சேனைகளையுமுடைய மறு மன்னா பகைத்துப்போர்செய்த போது, அப்பகைஞாக்குத்தோற்றுப் புறமுதுகு காட்டிச்சென்று, (ஆற்று நீர் வேற்று நீா ஊற்று நீராகிய) மூன்று நீாகள நிறைந்து ஒலிக்குங் கரிய கடல சூழ்ந்த அந்நகரைவிட்டுக் காட்டை யடைந்தான், எ - று. (சுரு)

அரிதி யறறிய வறுசுவை யுண்டியி னமைத்த
கருனை வெணசுதை யுறவொடு மயினறவன் கனலா
யுருகு வெமபசி யுடறறற வொளளுகிா க்கரங்கள
குருதி போதத்தெழ மூணடக்க கனிகரங் கொளவான்.

(இ - ள்.) அரிதாகச்சமைத்த அறுசுவையுடைய உணவாகிய பாகப்படுத்தியபொறிக்கறியும் வெண்ணிறந்தங்கிய அமுதம போன்ற சாதத்தோடு புசித்து வந்த அம்மன்னவன், தீயயமாயுருகுகினற கொடிய பசிநோய் வருத்த, அழகிய நகங்களமைந்த விரல்களில் உதிரம பெருக்கெடுக்கும்படி, தாழைக்கனிகளைக் கையாலெடுப்பான. எ - று. (சுசு)

அடக்க விந்தன வுபபிலி யருந்தியு மகிழ்ந்து
புடவி கீண்டமென் கிழங்குமென றுமபசி போக்கான்
படாகொ மூந்தொடும பலகனி புசித்தனன படாந்த
விடபெ ழுங்கொடி தவழ்ந்தகொள கொமபெல லானுன்.

(இ - ள்.) வதக்கிய இலைக்கறிகளை உப்பிலலாது புசித்தும், பூமியைப் பிளந்து தோண்டி யெடுத்த மெல்லிய கிழங்குகளைத்தின்றும், பசி தணியாத

வனைய, மேலே படர்ந்த பலகொழுந்துகளையும் கீழே விழுந்த பல பழங்களையும் புசித்துக்கொண்டிருந்தான். ஆதலால், துன்பமென்னுங் கொடியானது சுற்றப் பெற்ற கொழுகொம்பென்று சொல்லற்கிடனானான். எ - று. (சுரு)

அரக்கர் வெங்கழு தயிலெயிற் றரவுதேள் மதமா
முருக்கு வெஞ்சின வாளரி முதற்பல விலங்கிற்
கருக்கி யாருயிர் பொறுக்கினன் றிரிந்தன னந்நாட்
செருக்கின் மாதவக் குறுமுனி யவ்வனஞ் சென்றான்.

(இ - ள்.) அசுரர்கள்-கொடிய பேய்கள்-கூரிய பற்களையுடைய பாம்புக தேள்கள்-மத யானைகள்-கொல்லுகின்ற கடுங்கோபமுள்ள சிங்கங்கள் முதலிய மிருகங்களுக்குப்பயந்து தன்னுயிரைத்தாங்கிச்சஞ்சரித்திருந்தான். அப்பொழுது பெருந்தவத்தினால செருக்கற்ற அகத்திய முனிவர் அவ்வாரணியத்தை யடைந் தனர். எ - று. (சுசு)

சென்ற மாதவத் தலைவனை யெய்தினன் சிறந்த
மன்றன மாமலர்த் தாளிணை வீழ்ந்தனன் வணங்கி
நின்று தன்னுடைக் குறையெலா நிகழ்த்தினன் மலயக்
குன்றி ருந்திடு முதுதமிழ்க் குறுமுனி கூறும்.

(இ - ள்.) அங்கெழுந்தருளிய பெருந்தவ சிரேஷ்டராகிய அகஸ்திய முனி வரை யடைந்து மணங்கமழுஞ்சிறந்த தாமரை மலர்போலுந் திருவடிகளிற் பணிந்து கும்பிட்டு நேர் நின்று தன் குறைகளை யெல்லாம் விண்ணப்பஞ்செய் தான். பொதிய மலையில் எழுந்தருளியிருக்கும் முதிர்ந்த தமிழ் முனிவராகிய அகஸ்திய முனிவர் கூகின்றார். எ - று. (சுஎ)

மதித்த நல்குறு மாமகேச சுரமெனும் விரதம்
விதித்த வாறுநோற் றனையெனில் வினையற விளங்கி
யுதித்த வெண்மதிக் குடைநிழ லரசுபெற் றுவப்பாய்
கதிக்கு நாயக னருளைவை கடைமுறை கயிலை.

(இ - ள்) எண்ணிய வரங்களைக்கொடுக்கும் உமா மகேசுவரமென்னும் விரதத்தை விதிப்படி யநுஷ்டிப்பாயாகில் உன் பாவங்களெல்லாம் நீங்கி யோங்கி உதிக்கின்ற வெள்ளிய சந்திரன் போன்ற வெண்கொற்றக்குடையின் நீழலில் அரசாட்சியை யெய்திச் சந்தோஷிப்பாய். தேகாந்தத்தில் கைலாய பதவிக்கு தலைவனாக ஆகுவை. எ - று. (சுஅ)

என்று ரைத்தசொற் செவிமடுத் தேத்தினன் னிறைவ
னன்று தொடங்கல விரதமீ தாற்றினன் முறையாற்
சென்று நாள்பல கழிந்தன சேவூர்த் தியமான்
கன்று மைழக்கையான் றிருவுள நெகிழ்ந்தது கருணை.

(இ - ள்.) என்று கூறியருளிய சொற்களை மன்னவன் கேட்டு, அகத்திய முனிவரைத் துதிசெய்து, அதுமுதல் சிறப்புற்ற இவ்வுமா மகேசுவர விரதத் தை முறைப்படி யநுஷ்டித்தான். இப்படிப்பல காலங்கள் சென்றன. இடபக் கொடியை யுயர்த்தியவரும் மானகன்றையேந்திய திருக்கரத்தையுடையவரு மாகிய சிவபெருமான் திருவுள்ளத்திற் கருணை மிகுந்தது. எ - று. (சுகூ)

ஓரி டப்புறத் தம்பிகை யுணர்ந்தனன் ளொருங்கே
யார ருட்கட லுவட்டெழ விருவரு மருளிற்
கூரி லைப்படைக் குபேரனை யழைத்துநீ குரைநீர்ப்
பாரி டத்திந்து சேனனுக் குதவெனப் பணித்தார்.

(இ - ள்.) ஒப்பற்ற வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் உமாதேவியாரும் இதனை யுணர்ந்தனர். சிவபெருமானும் உமாதேவியாரும் ஒன்றாய நிலறைந்த திருவருட்கடல பெருகும்படி, கிருபையோடு கூர்மைதங்கிய சூலாயுதமேந்திய குபேரனை வருவித்து ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பூலோகத்தில இந்து சேனனென்னும் மன்னவனுக்கு வேண்டிய பொருளைத்தருவாயாகவெனக் கட்டளையிட்டருளினா. எ - று. (எ0)

அளகை மாநக ரிறைவனு மக்கணத் தடைந்து
முளைவ னத்திந்து சேனனை யெதிர்ந்தனன் முழங்குந்
தொளைநெ டுங்கைமால் யானைமீப் பொலிதரத் துவன்றி
வளைந்த டங்கடற் சேனைகொண் டவனொடும் வந்தான.

(இ - ள்.) சிறந்த அளகாபுரிக்கிறைவனாகிய குபேரனும் அர்த்தக்ஷணத்திலேயே சென்று வனத்திலே தவஞ்செய்யும் இந்து சேனனை யெதிர்கொண்டு, காச்சிக்கின்ற நெடியதுதிக்கையையுடைய பெரியயானையின் மேல வணங்கும்படி, வளைந்த விசாலமான கடல்போலும் பெரிய சேனையை யுடன்கொண்டு அவ்விந்துசேனனோடும் வந்தான. எ - று. (எக)

செருத்த லைப்புறத் தரசெலா மருவரை சேர்ந்தா
ரொருத்தன மும்மதத் தோடைநீ டொருகரப் பொருப்பி
னெருத்த மீப்பொலி யிந்துசே னறகர சீந்தான
திருத்து மாமுடி புனைந்தன னளகையஞ் செலவன.

(இ - ள.) யுத்தத்தில முன்னேபுறங் கொண்ட மன்னாகள யாவரும் அரிய மலைகளையடைந்தாகள, யானையாகிய மும்மதத்தையும முகபடாத்தையுமதுதிக்கையாகிய நெடிய ஒரு கரத்தையுமுடைய மலையினபிடரிமேல் விளங்கிய இந்து சேனனுக்கு அரசளித்து, திருத்தமாகிய கிரீடந்தரித்து அரசுரிமையளித்தனன் அளகாபுரித்தலைவனாகிய குபேரன. எ - று. (எஉ)

மதிமு டிச்சடை யெம்பிரா னருளிய வரத்தா
லிதுவி யற்றின னீங்குனக் கெனநெடுத் தியம்பிப்
பொதிநி திக்குவை யளகைவேந் தளித்தனன் போனா
னதிரு மாகலி நிலமிவ னெடிதுநா ளளித்தான.

(இ - ள.) சந்திரனையணிந்த சடைமுடியையுடைய எமது சிவபெருமான் அநுக்கிரகித்தவரத்தினால், இப்போது இதனை உனக்கு யான் செய்தேன என்று சொல்லி, பொருந்திய நிதிக்குவைகளை அவனுக்குக்கொடுத்து, குபேரன் தன் அளகாபுரிக்குப் போயினன. ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகத்தை இவ்விந்து சேனன் நெடுங்காலம் அரசாண்டான். எ - று. (எங)

கடுத்த மன்னவ ரிருநிலங் கனவரைப் புயத்தா
லெடுத்த னனபொறுக் கடிநதன னுயிர்புரந் திருந்தா
னடுத்த காலமவந் தெதிர்ந்துழிக் கயிலைவா ழமலன்
விடுத்த மானமீச் சிறந்தனன் வெள்ளிவெற் படைந்தான்.

(இ - ள்.) பகைத்த அரசர்களுடைய பெரிய நகரங்களைத் தனது பெரிய மலைபோலுந் தோள்களிலே தாங்கிப் பொறுத்தன்மை நீக்கி உயிர்களைப் பாது காத்துக்கொண்டிருந்தான். முடிவுகாலஞ் சம்பவித்தபோது, திருக்கைலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் அனுப்பிய விமானத்திலேறி வந்து வெள்ளி மலையாகிய கைலாயத்தை யடைந்தான். எ - று. (எச)

அறுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தம்

எக்கு ணத்தினு மருந்தவ மல்லதொன் றிலலென வெடுத்தோதி
யக்கு ணத்துட னொழுகிய முனிவராக கருந்தவத் தலைநின்ற
முக்கு ணங்கடிந் தியற்றிய சூதமா முனிவரன் முறைநோக்கி
மெய்க்கு ணத்தவத் தலைவர்கா ளின்னுமோர் விரதமுண் டதுகேண்மின்

(இ - ள்.) முக்குணங்களைக் கடிந்து பெருந்தவஞ்செய்த சூத மகாமுனிவர் நைமிசாரணிய முனிவர்களை முறையோடுபார்த்து, எவ்வகைய நூலினும் அருந்தவத்தைக் காட்டிலும் வேறொன்றில்லையென விளக்கிக்கூறி, அத்தகைத் தவமாகக்கத்தோடு அநுஷ்டித்த முனிவர்களுக்குள் உண்மைக்குணமுள்ள தலைவர்களே! மற்றோர்விரதமுள்ளது கேட்பீர்களாக. எ - று. (எரு)

என்று ரைத்தவாக் கியமடியான மழவிடை யேறுகைத் திடுமெம்மான்
சென்ற சிந்தையிற் றிருவுள முவந்தது தேவரு முறைநோற்பார்
நன்றெ னுஞ்சிவ ராத்திரி யீங்கிது நோற்பவர் நறுங்கொன்றைப்
பொன்றி கழ்ந்திடு சடைமுடிக் கயிலையம் புனிதனிற் றொழுகிற்பார்.

(இ - ள்.) என்றுரைத்து அம்முனிவர்களுக்குக் கூறுகின்றனர். இளமை தங்கிய இடபவாகனத்தி லாரோகணிக்கும் எமது சிவபெருமான் மேம்பட்ட எண்ணத்தோடு திருவுள்ளத்திற்களித்தது, தேவர்களும் முறையோடு நோற் பாராய நல்விரதமெனச் சொல்வதும் சிவராத்திரிவிரதமாம். இச்சிவராத்திரி விரதத்தை யநுஷ்டித்தவர்கள் நறுமணங்கமழுங் கொன்றைமலராகிய பொன் பிரகாசிக்கும் சடைமுடியையுடைய சிவபெருமான் போன்று பலரும் வணங்க வாழ்வார்கள். எ - று. (எசு)

ஒற்றை யாழியங் கடவுளூர் வைகலி னுணவொழிந் துதயம்போய்
முற்று கங்குலின் யாமமோர் நான்கினு முறைமுறை துயிலொபோக்கிக்
கற்றை யஞ்சடைக் கடவுளை விதிமுறை யருச்சனைக் கடனாற்றிப்
பிற்றை வைகலிற் பாரணங் கூட்டுவார் பெறற்கருங் கதிசேர்வார்.

(இ - ள்.) ஒற்றைச்சக்கரமுடைய தேரைச் செலுத்துஞ்சூரியன் சஞ்சரிக் கும் பகற்பொழுதில் உணவைவிலக்கி, காலைமுதற் பகற்காலங் கழிந்தபிறகு, வருகின்ற இரவில் நாலுசாமங்களிலும் விதிமுறை நித்திரை நீங்கி, தொகுதி யாகிய அழகிய சடையையுடைய சிவபெருமானை விதிப்படி பூசித்தலாகிய கிரியையை முடித்து, அடுத்ததினங்காலையிற் பாரணஞ் செய்பவர்கள் அடை தற்கரிய பதவியை யடைவார்கள். எ - று. (எஎ)

வருட மொன்றினமூ வெட்டெனத் தொடாந்திடை வந்துறு பதினொன்
கருதி யிப்படி வரன்முறை நோற்பது கணக்கறு தவத்தீர்காள் [கிற
பொருவி னித்திய சிவநிசி யாகுவ பொங்கிருட் பதினான்கு
தருவ பன்னிரண் டெனுமிவை பக்கசிவ ராத்திரி யெனத்தக்க.

(இ - ள்) கணக்கிடப்படாத தவமுடையவர்களே! ஓராண்டில்இருபதது நான்காகத் தொடர்ச்சியாய் வரததகக பதினன்காவது திதியாகிய சதுர்தத சிததிதியில, ஞாபகததோடு இப்படி விதிமுறையால அநுஷ்டிப்பது ஒப்பற்ற நிததிய சிவராததிரியாகும். இவவிருபதது நானகினில, அமரபட்ச சதுாதத சிகளெனச் சொலலும பனனிரணடும மாசசிவராததிரிகளெனச் சொல்லத் தககன. எ - று. (எஅ)

வருட மொன்றிடை வருதின மனைத்தினு மதிக்கிழ மையிறரேன்றுங
கருகு கஙகுலு வாவரி லவவிராக கணறாத லிரவாகு
முருகு சிநதைமீ ருரைததிடி லாஙகது யோகராத திரியாகும்
பொருவி லறைநா ணேறறவா பெறறபே றெமமனோ புகல்வாரே.

(இ - ள்) ஒருவருடததில் வரும எல்லா நாட்களிலும் சோமவாரததின் இரவில அமாவாசை வருமாயின் அவவிரவும் சிவராததிரியாகும். உருகுகினற மனமுளள முனிவாகளே! அவசிவ ராததிரியைக் குறிததுச சொல்லப்புகுநதால் அது யோகசிவராததிரியெனறு சொலலலாகும. ஒப்பறற அததினததில, சிவ ராததிரிவிரததததை யநுஷடிபபவாகள பெறுமபயனை எனனையொததவாகள் சொலலுவாாகளோ? எ - று. (எகூ)

மகா திஙகளி னமரபக கததிடை வருபிர தமைமெய்திப [தாக்கிப
புகலு மனறுதொட டெதிாநதபன மூனறுநாட புசிபபதோர் பொழு
பகாத ருமபதி ஞனகிடை நோறபது பககராத திரியாகு
மிகப ரநதரு மாகமா ததநிடை நோறபது வியலபாமே.

(இ - ள்.) தைமாதததில அமரபக்ஷததில வரும பிரதமை திதிநோககிய அன்றைநாள தொடஙகி எதிாநது வரும பதினமூனறு நாடகளும ஒருவேளை யுணவுகொணடு, யாவரும புகழ்நது சொலலும சதுாததசிததிதிவரையில அநு ஷடிபபது பக்ஷசிவராததிரியாகும. இகததிலும பரததிலும பலனகளைததரும் மாசிமாததததில அநுஷ்டிப்பது இயறகையாகும. எ - று. (அ0)

அருட ருஞ்சிவ ராததிரி யிபபடி யைநதுபட டதுவாகு
முருகு காதலி னிஙகிவை நோறகுற றெனறெனுந திறமபாமல்
வருவி திபபடி யூண்டுயி லொழிநதிது வரனமுறை நோலாதார
பெருகு மாதவம புரிநதவ ராயினும பிழைததனா பிழையாதார்.

(இ - ள்) திருவருள பாலிககுஞ சிவராததிரி விரதமானது இப்படி ஐநது வகையினை யுடையதாம. மனமுருகிய அனபோடு ஒருவகையிலாவது குறைவுநே ராமல் இவவைநதுவகையினையும அநுஷடிககக கடவீாகள. சிவாகமஙகளிற் சொலலிய விதிபபடி ஆகார நித்திரைகளிலலாமல இதனைத தொடர்ச்சி யாக நோற்காதவாகள் சிறநதபெருநதவஙகளைச் செயதவாகளாலும அவர் கள் உச்சீவிததவாகளல்லா. எ - று. (அக)

இனன வாய்ங்கிழ்ந தெய்திய வருட்சிவ ராததிரி யெனுமங்நாண்
மன்னு காலையிற புனலகுடைந தவரவா வான்முறை கடனாற்றி
மின்னி ருஙகொடி மேவணியெமபிரானுறை கோயிலபோய் வியநதேத்தி
யனன வறகுநெய்த தீபமே முதலிய வாறறினின் றடிபோற்றி.

(இ - ள்.) இவ்வகையாக நடநதுவருகினற அருளதரத்தகக சிவராத்திரி யென்று சொலலப்படும் அநதததினததிலே, நிலைபெறற விடியற்காலத்திலே

ஸ்நானஞ்செய்து தங்கடங்கள் வருணாசிரமங்கட்கியைய நித்திய கருமங்களைச் செய்து முடித்து, நெடிய மின்னற்கொடிபோலும் சடையையுடைய எமது சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஆலயத்தையடைந்து சந்தோஷித்துத் துதி செய்து, அப்பெருமானுக்கு நெய்த்திருவிளக்கு முதலிய திருப்பணிகள் புரிந்து சந்நிதானத்தில் நின்று திருவடிகளை வணங்கி. எ - று. (௮உ)

உறக்க முண்பன வொழித்துமற் றெமபிரான் றிருநடத் துபயத்தா
ணறைப்ப சுந்துண ரருச்சனை புரிந்திரு நாலியா மமுமபோற்றி
பிறைக்கொ டுஞ்சடை யெமபிரா னருச்சனை யில்லவர் பெருமானைத்
திறத்து ணாந்திடு முளத்தராய்க் கோயிலசென றேத்துவா சிவகங்குல.

(இ - ள்.) நித்திரை ஆகாரமுதலியவற்றை நீக்கி, எமது சிவபெருமானது திருநடம் புரியும் உபயபாதங்களில், மணங்கமழும் பசிய மலர்க்கொத்துக்களால் அர்ச்சனைபுரிந்து (பகலிரவாகிய) எட்டு ஜாமங்களிலும் பூசிக்கக்கடவர். பிறைச்சந்திரனை யணிந்து வளைந்த ஜடையையுடைய எமது சிவபெருமான் பூஜை செய்யாதவர்கள் அப்பெருமானைத் தியான வல்லபத்தால் தரிசிக்கும் மனமுடையவர்களாய்த் திருக்கோயிலையெய்திச் சிவராத்திரிதினத்தில் தோத்திரஞ் செய்க. எ - று. (௮௩)

எடுத்து ரைத்தமற றீங்கிவை யைந்தையு மிப்படி முறைநோற்கத்
தொடுத்தி லாரெனில் விரதமொன றுயினு நோற்றுறி னவர் தூய்மை
யடுத்த நாவினுற் சொற்றுற்ற செழுங்கம லாலயத் தயனாலும்
விடுத்த கோடிகற் பத்தினு மமையுமோ யாரது விரிப்பாரே.

(இ - ள்.) இதுகாறும் எடுத்துக் கூறிய இச்சிவராத்திரி விரதங்களைந்தையும் இவ்வகையாகக்கிரமப்படி அநுஷ்டிக்கத் தொடங்காதவர்களானால், இவற்றில் ஓர்விரதத்தை யேனும் அநுஷ்டிப்பாராயின், அவர்களது சிறப்பை நாவினாற் சொல்லுமிடத்தில், செழுமைதங்கிய தாமரைப்பீடத்திலுள்ள பிரமதேவனாலும் கழிகின்ற கோடிகற்பங்களிலும் முடியுமோ? அதனை விரித்துச் சொல்லுவோரெவர்? எ - று. (௮௪)

ஆழி மாயவ னுயிர்புரந் தளிப்பது மம்புயத் திருக்கோயிற்
பாழி யெண்புய னெடுநில மின்னுயிர் படைப்பதும பசும்பொனாடு
ழேழி யிந்திரன் புரப்பதூஉ மளகையா னொழிவறு வளனீண்டி
வாழி பெற்றதும் விரதமீ திழைத்தலா லெனப்து மனக்கொள்வீர்.

(இ - ள்) திருப்பாற்கடலில் அறிதுயில்புரியும் திருமால் உயிர்களைக்காத்திரட்சிப்பதும், அழகிய தாமரைமலரிருக்கையையுடைய வலிய எட்டுத் திருப்புயங்களையுடைய பிரமன், நெடிய உலகத்தையும் அதிலுள்ள இனிய வுயிர்களையுஞ் சிருட்டித்தலும் பசிய பொன்மயமான தேவலோகத்தைஇந்திரன் அரசுசெய்வதும், அளகேசனாகிய குபேரன் ஒழிவில்லாத வளங்கள் சேரப்பெற்று வாழ்வெய்தியதும், இவ்விரதத்தை யநுஷ்டித்ததாலே யென்று மனதிற் கொள்வீர்களாக. எ - று. (௮௫)

மதிக வித்தென வெண்குடை நிழற்றுகன் மாடபா தனைப்பற்றி
விதிவ ழித்தொடர் பிரமகத் தியைவிடுத் தொழிப்பது விருமபுற்று
முதிய மாதவக் கௌதமன் சொற்படி யீங்கிது முறைநோற்றுக
இந்த ருந்தனித் தலைவனுய்ப் பாதக மெவற்றையுங் கடந்துற்றான்.

(இ - ள்.) சந்திரனைக் கவித்ததுபோலும் வெண்குடையால் நிழல் செய்கின்ற கன்மாடபாதனென்னும் அரசன் தன்னைப் பிடித்துக்கொண்டு விதிப்படி தொடர்ந்துவந்த பிரமகத்தியைப் போக்கவிரும்பி, சிறந்த பெருந்தவமுடைய கௌதம முனிவர் சொற்படி இவ்விரதத்தைக் கிரமப்படி செய்து, வேண்டிய வரத்தை யநுக்கிரகிக்கும் ஒப்பற்ற தலைவனுடைய தன்பாவங்களை யெல்லாம் விலக்கிப் புனிதனாயினன். எ - று. (அசு)

குனித்த வார்சிலைக் கரத்தினன் சுருட்டருங் குஞ்சியன் றிணிதோளான்
றுனித்த சிந்தையன் காரண மின்றியே சுடுசினக் கொலைவேடன்
பனித்த கங்குலி னடுகொலை வேட்டைமேற் படர்ந்தனன் படர்கானந்
தனித்து லாவினன் கிடைத்தில னொன்றையு மிருந்தனன் றனியோர்பால்

(இ - ள்.) வளைந்த நெடிய வில்லேந்திய கையை யுடையவனும் சுருண்ட தலைமயிரையுடையவனும் வலிய புயமுடையவனும் வருத்தும் மனமுடையவனும் காரணமின்றிக் கடுங்கோபத்தாற் கொல்பவனுமாகவுள்ள ஒருவேடன், பயத்தை விளைவிக்கும் ஓரிரவில், உயிர்போக்குங் கொலைத்தொழிலாகிய வேட்டைக்குச் சென்றான். பரவிய காட்டில் தனியே திரிந்தும் ஒன்றும் கிடையாதவனாய் ஓர்பக்கத்தில் தனிமையாயிருந்தான். எ - று. (அஎ)

அன்ற ரன்சிவ ராத்திரி யென்பது மறிந்தில னயனோக்கிக்
கன்று வெஞ்சின விலங்கினை வெருவியோர் வில்வமேற் கவையுற்றா
னின்றி ருந்துயி லுறந்தில மாயின்வீழ்ந் திடுதுமென் றுளத்தெண்ணி
மன்ற னுறுபத் திரம்பறித் திட்டன னிரவிதோ வருங்காறும்.

(இ - ள்.) அன்று சிவராத்திரியென்பதையும் உணராதவனாய்ப் பக்கத்திற் பார்த்து வருந்தத்தக்க கடுங்கோபமுடைய ஒரு மிருகத்திற்குப் பயந்து அதற்குத் தப்பும்படி அங்கிருந்த ஒரு வில்வமரத்தின் உயர் கிளையிலேறிக்கொண்டான். இன்றிரவு பெருநித்திரையை யொழித்திடாவிடின் தரைமேல் விழுந்துவிடுவோமென்று மனதிற்கருதி, சூரியன்றோ உதயமாகுமெல்லையும் மணங்கமழும் வில்வத் தளங்களைப் பறித்து எறிந்துகொண்டிருந்தான் எ-று. (அஅ)

பறித்த பத்திர மெம்பிரான் றிருமுடி வீழ்தலும் பனிக்கற்றை
வெறித்த வார்சடை யெம்பிரான் றிருவருள் புரிந்தனன் விறல்வேடன்
செறித்த பாதகங் கனற்படு பஞ்சியிற் றீர்ந்தன மறையாவுங்
குறித்த நாயகன் சேவடி புகுந்தனன் விண்ணவர் குலம்போற்ற.

(இ - ள்.) பறித்தெறிந்து வந்த அவ்வில்வபத்திரங்கள் எமது சிவபெருமான் திருமுடிமீது சேர்ந்தவுடனே, குளிர்ச்சியுற்றுக் கூட்டமாய் மணந்தங்கி நீண்ட சடையையுடைய எமது சிவபெருமான் அவனுக்குத் திருவருள் புரிந்தனர். வலிதங்கிய அவ்வேடனது நிறைந்த பாவங்களெல்லாம் தீப்பொறிப்பட்ட பஞ்சு மூட்டைபோலழிந்தன, வேதங்களெல்லாம் நாடியிருக்கும் சிவபெருமான் திருவடி நீழலில் தேவகணங்கள் துதிசெய்யும்படி சேர்ந்தனன் ()

இழிதொ ழிற்குலப் புலையரிற் றோன்றின ளொருத்திமற் றிரப்புற்றாள்
விழியி ழந்தனள் வறுமையிற் றேம்பினள் விரதமீ தறுமந்நாட்
கழிபெ ருங்கட லுலகுளோ ரெழுந்துகோ கன்னமெய் திடுங்காலை
வழியி ருந்தன ளொருகையேற் றிரந்தரும் பசியொடும் வருந்துற்றாள்.

(இ - ள்) மேலும், இழிந்த அசேதனச் செயற்குரிய குலமாகிய புலைச் சாதியிற் பிறந்தாளொருத்தி, யாசிப்பவளும் கண்ணொளி யில்லாதவளும் வறுமையால் வருந்துபவளுமாகி இச்சிவராத்திரி வந்ததினத்திலே, மிகப்பெரிய கடலாற் சூழப்பட்ட உலகினர் புறப்பட்டுக் கோகர்ண ஸ்தலத்திற்குப்போகுஞ் சமயத்தில் அவ்வழியிடை யிருந்துகொண்டு இருகைகளையும் பரப்பி யாசித்துக் கொடியபசியோடு வருத்தமெய்தியிருந்தாள். எ-று. (௬0)

அந்நெ றித்தலை யருட்சிவ ராத்திரி நோற்பகவென் றவணேகுஞ்
செந்நெ றித்தலை மாந்தரி லொருவனின் றவள்கரந் தீண்டாமற்
பன்னு பத்திர வில்வமிட் டேகின னுங்கது பசித்தீர்த்
தின்னு தற்கியைந் தன்வல வெனவெறிந் திட்டன டிசைநோக்காள்.

(இ - ள்) அவ்வழியிலே சிவராத்திரி விரதத்தை அநுஷ்டிக்கவேண்டுமென்று கோகர்ணத்திற்குச் செல்லும் நல்லவழியிலே சிறந்த மாந்தர்களிலொருவன், அங்கே நின்று அவள் கையைத்தொடாமல் யாவரும் புகழும் வில்வதளத்தை அவள் கையிற் போட்டுப் போயினன். அது தன் பசியடங்கத் தினுதற்குப் பொருந்தியதன்றென்று கருதி, திசையைப் பாராமல் எறிந்து விட்டாள். எ-று. (௬௧)

அனைய காலையிற் சுழித்தெறி காலெழுந் தாங்கவ ளெறிவில்வம்
புனித மேனியோ ரிலிங்கமுற் றுளதன் திருமுடி பொலிந்திட்ட
வினைய டுஞ்சிவ ராத்திரி யுறைநா ளாதலின் விடையூர்ந்தோ
னினைவ ருந்திரு வுளமிரங் கினனவள் கயிலைநன் னெறிசென்றாள்.

(இ - ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் சுழன்று வீசுங் காற்றினால் அவள் வீசியெறிந்த வில்வ பத்திரமானது போய், அங்கே புனிதமான திருமேனியையுடைய ஒரு சிவலிங்கப்பெருமான் இருந்ததனால், அப்பெருமான் அழகிய திருமுடியிற் பொருந்தியது அன்றையதினம் ஆன்மாக்களின் வினைகளை யொழிக்கும் சிவராத்திரி தினமாதலால், இடபவாகனத் தாரோகணித்த சிவபெருமான் திருவுள்ளமிரங்கினர். அப்புலைச்சி கைலாயமாகிய நல்ல பதவியைச் சென்றடைந்தாள். எ-று. (௬௨)

கலிநிலைத்துறை.

முடங்கு வெண்மதிக் கண்ணியன் முகிணமுலை யொருத்தி
யிடங்கொ ளெம்பிரா னிரவுநோற் றின்னருட் கட்பா
லடங்கி னோர்கதை யின்னுமொன் றுளதுமக் கறைவாம்
படர்ந்த புன்சடை யருந்தணீ ருணர்கெனப் பகர்வான்.

(இ - ள்.) வளைந்த சந்திரனை மாலையாக வுடையராய், அரும்புபோலுந் தனங்களையுடைய ஒப்பற்ற உமாபிராட்டியாரை வாமபாகத்திற் கொண்ட எமது சிவபெருமானுடைய சிவராத்திரி விரதத்தை யநுஷ்டித்து இனிய திருவருட் கடலில் மூழ்கினவரது சரித்திரம் வேறொன்றுளது அதனை யுமக்குச் சொல்லுவோம். படர்ந்துள்ள சிறு சடையையுடைய நைமிசாரணிய முனிவர்களே! தெரிந்துகொள்ளுங்களெனச் சூதமுனிவர் சொல்லலாயினர், எ-று.

சுரிமு கக்குல மெடுத்திரும் பவளவே துருவி
விரிதி ரைக்குலஞ் சுமந்துற வொழுகிமீ தூர்ந்து
வரிம டப்படங் குளிர்பபுற நடப்பது வானோ
தெரித ருமபுனற் சிந்துவென் றெருந்தி யுளதால.

(இ - ள்.) சங்குகளின்தொகுதியை மேலேதாங்கிக்கொண்டு, பெரிய பவளக்கொடிகளின் வேரைத்தேடிக்கொண்டு, பரவிய அலைத்தொகுதிகளையும் மேற்கொண்டு மேலேபொங்கி, வரிகளூற்று வளைந்திருக்கும் ஆதிசேடன் பணாமகுடங்கள் குளிர்ப்பெய்தும்படி பாயத்தக்க, தேவர்களும் தேடிக்கொண்டிருக்கும் நீர் நிரம்பிய சிந்து வென்றொரு நதியுண்டு. எ - று. (கூசு)

அன்ன மாநதிக் கரைமருங் கயல்வய லுடுத்த
பொன்னணி னிஞ்சிசூழ் கிடந்தது தேவரும் புகழ்தற
கின்ன லந்தரு குஞ்சரத் திருநக ரிதன்பால்
மின்னு வேற்படைக் குஞ்சக னுளனொரு வேந்தன்.

(இ - ள்.) அந்தச் சிறந்த நதிக்கரைக்கருகே அயலில் வயல்கள் சூழ்ந்த பொன்னாலாகிய மதில்கள் நாற்புறஞ் சூழ்ந்த நகரமானது தேவர்களுந் துதித்தற்குரிய இனிய இன்பத்தைத்தருங் குஞ்சரமென்னும் அழகிய நகரமாம். இந் நகரத்திலே பிரகாசிக்கின்ற வேற்படைதாங்கிய குஞ்சகனென்னும் மன்னவனொருவனிருந்தான். எ - று. (கூரு)

அனைய வேந்தனுக் காசிசொற் றிடுமொரு மறையோன்
றனைய ரின்றியே யருமபெருந் தவத்தொடுஞ் சரித்தான்
புனைநெ டுஞ்சடை யெம்பிரான் றிருவருள் புரியா
வனைத்த ருஞ்சுகு மாரனவந் துதித்தனன் வரத்தால்.

(இ - ள்.) அத்தகைய மன்னவனுக்கு ஆசி கூறும் ஒருவேதியன் புதல்வர்களில்லாமல் அரியபெருந்தவங்களைச் செய்துகொண்டிருந்தான் அலங்கரிக்கின்ற நெடிய சடையையுடைய எமது சிவபெருமான் திருவருள்புரிந்த வரத்தினால் அலங்கரிக்கத்தக்க சுகுமாரனென்னும் புத்திரன் தோன்றினன். எ-று.

வனப்பெ லாந்திரண் டொருவழிக் கொண்டென வளர்வா
னினக்கு நான்மறை முதலிய யாவையு மிசைத்தான்
சினக்கொ டுந்தொழில் வேனிலாற் குவமைபிற் சிறந்தான்
கனைக்க ருங்கட லுலகுளோர் காணொடோறுங் கவினும்.

(இ - ள்) அழகுமுழுவதுஞ் சேர்ந்து ஓர் வடிவெடுத்தாற்போல வளர்ந்து வருகின்ற சுகுமாரன், இன்மாயுள்ள நான்குவேதங்கள் முதலிய எல்லாவற்றையும் ஓதியறிந்தவனாய், கோபத்தோடு கூடிய கொடுந்தொழிலுடைய மன்மதனுக்குச் சரியானவனென்று ஒப்பிடப்படாமல் மேம்பட்டான். ஒலிக்கின்ற கருநிறங்கொண்ட கடல்சூழ்ந்த உலகினர் அவனைப்பார்க்குந்தோறும் அழகோடு விளங்குவான். எ - று. (கூஎ)

தகாந்த வெண்மதி திருத்திய முறுவலன் றாழாப்
பகர்ந்த மென்மொழி மயக்கினன் பணைத்தடம் புயத்தான்
சகந்தொ ழுத்தகுந் தன்மையான் றண்சிறைச் சுரும்பா
ருகாந்த தாரொடு மின்னென நுடங்குநூன் மார்பன்.

(இ - ள்.) பிளவுபட்ட வெள்ளிய சந்திரனை வரிசைப்படுத்தியதுபோன்ற பற்களையுடையவன். தாழ்ந்தவோசையோடு கூறும் மென்மொழிகளால் கேட்போர் யாவரையும் மயக்குகின்றவன். பருத்துப் பரந்த தோள்களையுடையவன். உலகினர் பணியத்தக்க ஒழுக்கமுடையவன். வண்டுகள் தேனுண்ணுந் தாமரை மலர்மாலையோடு மின்னல்போலசையும் உபவீதம் விளங்கும் மார்புடையவன்.

வருண நான்குள மாந்தரு மயங்குறு வனப்பி
னுருவ மெய்திய வுறுப்பினை ரோடரித் தடங்கண்
மருவ ருங்குழன் மகளிர்கண் கவர்தரு வதனன்
செருகு மென்மலர்க் குடுமிய னுடவா திலகன்.

(இ - ள்.) வருணங்கள் நான்கிலுள்ளாரும் மயங்கத்தக்க அழகுபொருந்திய வடிவோடுகூடிய அவயவங்கள் வாய்ந்தவன். காதளவும் ஓடிய அரிபடர்ந்த பரந்தவிழிகளையும் மணங்கமழுங் கூந்தலையு முடைய மங்கையரது விழிகளைக் கவர்ந்தக முகமுடையவன். மெல்லியமலர்சூடிய சிகையையுடையவன். ஆணமக்கட்கொரு திலகம் போன்றவன். எ - று. (௯௯)

மார நூல்வழி வரன்முறை தெரிந்தது வகுத்த
சேர லீறறலகோ தன்மையீ றிவற்றிடைத் தெரிந்த
வோரவ ருங்கர ணங்களுற் பத்தினெட் டுருக்கி
யாத ருஞ்சுவைப் பானமைந் தாறுமுற் றளந்தான்.

(இ - ள்.) காமாகமத்திற் சொல்லியுள்ள முறைமைகளெல்லாவற்றையும் தெரிந்து அதில் வகுக்கப்பட்டுள்ள சோதல்முதலாக உவகையிறுதியாகக் கூறப்படும் எட்டு அங்கிதங்களையும், இவற்றுள் வகுக்கப்பட்ட யாவரும் உணர்தற்கரிய கரணங்கள் நாற்பத்தெட்டினாலும் உருகச்செய்துணணும் நிறைந்திருக்கின்ற ஏகாதசமானங்களை முழுவதுந் தோந்தவன. எ - று. (௪00)

"சேரலாதி காதன்மை" என்பதை—"புல்லுதல் சுவைத்திடல் புணர்க்கக் குறி, பல்லுறல் மத்தனம் பயிலுந்தாடனம், ஒலலொலிகரணமோடுவகையாதிய, எல்லையில் புணர்நிலைக் கியைந்த வென்பவே" என்பதனுணாக இதன் விரிவு காமநூலுள்ளும் கந்தபுராணத்துள்ளுங் காண்க - விரிப்பிற்பெருகும்.

துஞ்சு கங்குலிற் பக்கமு மிருத்தையுந் தோய்ந்து
நஞ்ச மாரமு திடையிற் நடப்பன நாடி
யஞ்சி னத்துகிர்க் குறியெயிற் றுறுகுறி யளந்து
பஞ்சின் மெல்லடி மகளிரைத் தன்வயப் படுத்தான்.

(இ - ள்.) நித்திரைபுரியும் இராக்காலத்தில் பட்சத்தையும் திதியையும் உணர்ந்து, விடமும் அமுதமும் இடையே நில்லாமல நடக்குந்தன்மையறிந்து ஐந்துவிரல்களிலும் பொருந்திய நகக்குறியையும் பற்குறிகளையும் உணர்ந்து செம்பஞ்சுக்குழம் பூட்டிய மெல்லிய பாதங்களையுடைய மாதர்களைத் தன் வசஞ்செய்து கொண்டனன். எ - று. (௪0௧)

கொழுந ரன்றியோர் கடவுளைத் தளிர்க்கரங் குவியா
வழுவில் கற்புடை மடந்தையர் மனங்கனிந் துருகி
யொழுக நின்றனன் பிறமனை யெனப்பதொன் றுணரா
னெழுவு கோக்குலத் தொருதனி யேறெனத் திரிவான்.

(இ - ள்.) வேதியர் குலத்திற்கு ஒப்பற்று மேம்பட்ட ஆண்சிங்கம்போற் சஞ்சரிப்பவனாகிய சுகுமாரன், தங்கள் கணவரையல்லது பிறிதொருதெய்வத்தை மாந்தளிர்போலுங் கைகளைக் கூப்பிப்பணியாத குற்றமற்ற கற்புவாய்ந்த தன்மனைவிமார் மனக்கனிவுற்றவர்களாய் உபசரிக்கவிருந்தான. பிறமனைவியர்சையோகமென்பது ஒருசிறிது முணரான. எ - று. (௪0௨)

கன்னி மாடமுங் கடிமதிற் காவலுங் கழியத்
துன்னு மாரிருட் பிழம்பிடை யிவனடித் தொடர்வா
ரன்ன மன்னவாக் கலக்குற விலக்கினு மவையா
ரின்ன தன்மையி னீங்கிவை நிகழ்ந்துறு மேல்வை.

(இ - து.) கன்னிமாடங்களையுங் காப்பமைந்த மதிற்காவலுடைய வற்றை யுங் கடந்து மிகவிசேடித்த நடுராத்திரி இருளிலே, இவனைத்தேடிவரும் அன்னம்போலும் நடையையுடைய மாதர்களை இவன் கூடுதற்குத் தடுத்தாலும் அவர்கள் சம்மதியார்கள். இவ்வகையாக இவ்விடத்தில் இவை நடந்தேறிவருகின்றகாலத்தில், எ - று. (கoரு)

ஒளித்த காமமீக் கூர்சுகு மாரனென் றொருவன்
றெளித்த கற்புடை மகளிரை யழித்தபுன் செயலை
வெளிப்ப டுத்தின ராகிவந் திருநிலம் வியப்பா
லளித்த மன்னவற் கறைந்தனர் மானநீத் தயர்ந்தார்.

(இ - ள்) சுகுமாரனென்னும் பெயரையுடைய அதிகமாகிய காமத்தை மறைத்து வைத்துள்ள வொருவன், தெளிந்த கற்புறுமாதரை அவர்கள் நிலைமைதவறும்படி அழித்ததூர்செயலை வெளியிடுவோர்போலவந்து, இவனை விரும்பிப்பின்றொடர்ந்து தமது விருப்பம் கைகூடாதவர்களாய் மானம்விட்டு வெறுப்பெய்தியவர்கள், உலகினைக் காத்திருந்த அரசனுக்கு அபவாதமாகச் சொன்னார்கள். எ - று. (கoச)

கேட்ட மன்னவன் செவித்தொளை சுறுக்கொளக் கிளரா
வீட்டு சீற்றமிக் கெழுந்தவற் கொணர்மினென் றிசைப்ப
வாட்ட டக்கையோர் சென்றனர் கொணர்தர வந்தான்
றீட்டு பேரெழி ஞேக்கினன் குளிர்ந்ததச் சீற்றம்.

(இ - ள்.) கேட்டறிந்தஅரசன் செவித்தொளையிற் சுறுக்கென்றுதைக்கப் பொங்கியெழுந்த கோபமுண்டாகி, அவனைப்பிடித்துவருக வென்றுகட்டியாபிக்க, வாளாயுதந்தாங்கிய விசாலமானகையையுடைய காவலாளர் உடனே போயப் பற்றிவர அவனும் வந்தனன், மன்னவன் அவனது அழகிய சித்திரம் போலும் வடிவைப்பார்த்தான். அதனால் அவனுக்குண்டான கோபந்தணிந்தது. எ-று.

கொல்ல லாமெனுந் தகையனன் றிவனெழில் குறிப்பின்
றொல்லை நான்மறை யவருழைத் தோன்றியோ னிவனை
யொல்லை கொண்டனிர் போதிரெம் முயர்குடை நிழுலுகீ
ழெல்லை மாநிலங் கடத்திநீர் விடுந்திரென் றிசைத்தான்.

(இ - ள்.) இவனழகை யெண்ணிப்பார்த்தால், கொல்லலாமெனச் சொல் லத்தக்க தகுதிவாய்ந்தவனல்லன். பழமையாகிய நான்குவேதங்களையுணர்ந்த மறையவர் குலத்திற் சனித்தவன் இவனை, அதிவிரைவிற்கொண்டு சென்று நமது வெண்கொற்றக்குடைநிழலில் அரசுநடத்தும் பூமியின் எல்லையைக் கடத்து விட்டுவிடுகவென்ன உத்தரவளித்தான். எ - று. (கoசு)

அனைய ரவ்வுரை கேட்டலும் பற்றின ரகன்றூர்
கனைபொ லனகழன் மன்னர்கோ னகனிலங் கடத்தி

வினையு னகத்து விளைந்தவா றென்றனா விடுத்தார்
சினைய கானகத் தருவரை நெடுநெறி சென்றான்

(இ - ள்.) அத்தண்டலாளர் அக்கட்டளையைக் கேட்டமாத்திரமே, அவனைப்பற்றிச் சென்று ஒலிக்கின்ற பொன்னாலான வீரகண்டாமணிதரித்த இராசராசனுடைய பூமியின் எல்லையைக்கடந்து, இப்படி உனக்கு நேர்ந்தது உன் வினைப்பயனெனக் கூறிவிடுத்தார்கள். கிளைவழிகளையுடைய ஒரு காட்டிலிருக்கும் பெரியமலையின்மேல் வெகுதூரஞ்சென்றான். ஏ - று. (௧௦எ)

சென்ற கானகத் தடபுலி கொய்யுளைச் சீயங்
கன்று வெஞ்சின விடவரா வழிமதக் களிறு
துன்று மோர்நெறி முடுக்கரி னெடுவனஞ் சுழன்றான்
மன்ற லம்புனற் பொய்கையொன் றெதிர்ந்தனன் மறையோன்.

(இ - ள்.) அப்படிச்சென்ற காட்டிலே கொல்லத்தக்க புலிகளும், கத்தரித்தது போன்ற பிடரிமயிரையுடைய சிங்கங்களும், கொடூரமான கோபமுடைய பாம்புகளும், மதஞ்சொரியும் யானைகளும் நெருங்கிய ஒருவழியின் முடுக்கில் அகப்பட்டு, பெரிய காடுமுழுவதும் திரிந்துகொண்டிருந்த சுசுமாரனென்னும் வேதியன் மணந்தங்கிய அழகிய நீர்நிரம்பிய தடாகமொன்றை எதிரே கண்டான். ஏ - று. (௧௦அ)

அன்ன நாண்மலர்ப் படுகரி னளவைபெற் றறியேம்
துன்னு பன்மலர் மிடைந்தன வுடைந்துதேன் சொரியக்
கன்னி யன்னமே முதலிய தொகுதியிற் கலந்த
பன்னி றத்தெழு தியபடாம் படுத்தன கடுக்கும்.

(இ - ள்.) அத்தகைய புதியமலர்களையுடைய தடாகத்தின் அளவை நாம் சொல்ல அறியோம். அதில் நெருங்கிய பலவகைப்பூக்களும் ஒன்றுகூடியனவாய இதழ்கள் விரிந்து தேனைச்சொரிய, இளமை தங்கிய அன்னமுதலிய பறவைகள் கூட்டமாகக் கலந்திருக்கின்ற தோற்றமானது, பலவர்ணங்களோடமைத்த சித்திரவஸ்திரங்களை விரித்திருப்பனவற்றைப்போன்றிருக்கும். ஏ - று.

சில்லு கிர்ச்சிறு தாட்படு புள்ளியஞ் சிரலை
யெல்லை வானெழூஉந் திருங்கயல் கதுவவீழ்ந் திடலு
மொல்லை பாசடைக் கயலொளித் தொதுங்குற வோங்கி
மெல்லி ருஞ்சிறை விதிர்த்துவே றிருப்பது வெள்கி.

(இ - ள்.) சில நகங்களையுடைய சிறுகால்களையும் புள்ளிகள் தங்கிய சிறகுகளையுமுடைய அழகிய [சிச்சிலி] மீன்கொத்திக்குருவியை அத்தடாகத்திலுள்ள பெரிய கயல் மீன்கள் ஆகாயமளவும் எழும்பிப்பற்ற, அக்குருவி நிலமிசைவிழுந்தவுடனே, அக்கயல் மீன்கள் சீக்கிரத்தில் அத்தடாகத்திலுள்ள தாமரையின் பசிய இலைகளின் கீழேயொளித்துமறைய அக்குருவிமேலேபறந்து தன்மெல்லிய பெருஞ் சிறகுகளையடித்துக்கொண்டு வெட்கித்தனியிருக்கும்.

தாது நாண்மலர்க் குப்பையின் றுயிர்ப்புறத் தவழ்ந்து
போது காலொடு நறைகரந் தொதுங்குறப் புகுந்தோ
ரீது வாசமென் றறிவரி தாகிமற் றெல்லை
காத நாறின கடம்புடைக் கிடந்தவக் கானம்.

(இ - ள்,) அத்தடாகத்தைச் சூழ்ந்து வீசும்வாசனை, மகரந்தத்துடன் அன்றலர்ந்தமலராக குவியலிறபடிந்து மெல்ல வீசுங்காற்றோடு சிறிதுமறைந்து ஒளித்துக்கொண்டமையால, அவ்விடத்திற்கு வந்துசேர்ந்தவர்கள், இஃதின்ன மலா மணமென்று உணாவதற் கருமையாகிக காததூர விஸ்தீரணம் மணங் கமழ்ந்தன. எ - று. (கசக)

முளரித் தாதொடும பொமமென முழங்கிய சுரும்பா
களரிப பானலம பெடையொடு மணந்துறக கனலா
விளரிப பாடல்வண டடுசின மிழுறறின விரிநீா
தளரிக கொமபரின வாரலி ரெனசசினை தாழந்த.

(இ - ள்) தாமரைமலரின மகரந்தங்களில் பொமமெனனும ஒலியுடன் ரீங்காரஞ்செய்யும [சுரும்பா] ஆணவண்டுகள, கருங்குவளைமலரிலிருந்த [தேன எனனும] பெணவண்டுகளுடன் சோதலால, அததாமரைமலாகளிலிருந்தபெண வண்டுகள கோபமெய்தி விளரியெனனும பணணைபபாடின. மிகக நீாிலேதளாந திருக்கும் இககொமபில வராதீாகள எனறு, கருங்குவளை யரும்புகள கீழே நோக்கித தொங்கின. எ - று. (கசஉ)

பாளை வாளெயிற றிடங்காவாய்த தவறிய பகுவாய்
வாளை தாவுற வயவாகை வாடபடை மருடடுந
தாள தாமரை முகமபடு சுரிமுகச சஙகங
காள வேலவிழி மகளிாகைக கநதுகங கடுக்கும.

(இ - ள.) தெனனமபாளைபோலுங கூாமை தங்கிய பறகளையுடைய முதலைவாயினினறுந்தப்பிய பிளவுபட்டவாயையுடைய வாளைமீனகள அததடாகத திறசஞசாிக்குந தனமையானது, போாவீராகையிலேந்திய வாடபடையைமய ககாநிற்கும. தாளோடுகூடிய தாமரையினிடத்திலிருக்கும சுரிமுகச்சங்கங்கள நஞசூட்டியவேலபோலுங கணகளுடைய மங்கையாகரததிறறுங்கிவிளையாடும பநதுகளையொத்திருந்தன. எ-று. (கசங)

மடலு டைநதலா தாமரை யுழுககிமென மதுவாயக்
குடமு டைநதல ராபபலங காடிடை குழுபபி
முடவு வெணடிரை கிழித்துவாயத தவறிய முதுநீா
நெடுவ ராலினை த தொடாநதெழு மடுசின நீாநாய.

(இ - ள) இதழகள விகசித்தலாந்த தாமரைமலாகளைக கசககி, மெல்லிய தேன் நிறைந்த குடமானது உடைந்தாறபோல விகசிக்கும் ஆமபறபூககளினகூட் டத்திலே கலக்கி, வளைந்திருக்கும அலைகளைக்கிழித்து அவ்வலைகளைத்தப்பித் துககொணடு, அத்தடாகத்தின மிகக நீாிறசஞசாிக்கும பெரியவராலமீனகளைக கடுங்கோபமுற்ற நீா நாயகளபின தொடாந்து செலலாநிறகும. எ-று. (கசச)

அனங்கொ டுஞசிறைப புறவொடு புள்ளியஞ சிரலை
யினநத குருகுரு கிடையிடை நடபபன குரணடம
பனைநத வனனகம புடபடு சககர வாக
நனைநத மெனசிறை புலாததுவ புளினமே னடப்ப.

(இ - ள) அனனப்புட்களும் வளைந்தசிறகினையுடைய புறாக்களும் புள்ளி களபொருந்திய [சிச்சிலி] மீன்கொத்திககுருவிகளுமாகிய இவ்வகைக கூட்

டஙகளாகிய பட்சிகட்கிடையே கொககுகள் உலாவிததிரியும். அலங்கரித்தாற் போனற வானம்பாடிக்குருவிகளும அஙகுள்ள சககரவாஹப்பட்சிகளும் ஈரமாயுள்ள தங்கள மெல்லியசிறகுகளைப் புலாததுவதற்கு மணன்மேடைகளில் உலாவித்திரிவன. எ-று. (ககரு)

அன்ன தன்மைய வகன்புனற் படுகரின் பாங்க
ருன்ன ருங்கொலைப் புலைகுலந் தோன்றிய வொருததி
மன்னு தன்மனை நீக்கமுற் றிருநதனள் வநதா
ளின்ன தன்மையென் றவளவணப் பியமபுவ தியாரே.

(இ - ள்.) அத்தகைய பரவிய நீர்நிரம்பியதடாகத்தினருகே, எவராலும் எணணற்கரிய கொலைததன்மைவாய்நத புலையாகுலததிற் பிறநதவொருததி, தானவாசஞ்செயயும் தனவீட்டிற புறம்பாய் [பிரஷடையாய] இருநதவளாக வநதனள். அவளுடைய அழகு இததகைததெனறு எவாதாஙகூறவலலவா?

அள்ளி வாரிமற் றொருகையிற செருகிய வளகந
தொள்ளி நானநெய் யிழுகிய கருமையின் றோறறம்
வெள்ள வாரிமேற் படிநதெழு கருமபுயல் விரவி
யொள்ளி ருட்பிழம் பஞசனந தீற்றின வொக்கும.

(இ - ள்.) ஒருகையாற் சோததுப்பிடிததுச் செருகியகூநதலிலே, கஸ்தூரித்தைலததினுற் குழைநத சேறுனது ஒழுகிககொணடிருககும் கருநிறததின காட்சியானது, நீரப்பெருககுடைய சமுததிரததினமீது மூழ்கியெழுநத கார்மேகமானது மிககக்கருநிறநதஙகிய இருட்பிழமபோடுகூட்டி அஞ்சனததைத் தடவிககொண்டதற்குச் சமானமாகும. எ-று. (ககஎ)

எங்கொ ளிப்பது மருங்கெனக் கணக்கறுத திளகிப
பொங்கு வெமமுலை மீபபடப் பொடிததலா திதலை
யங்க திரபபக லிளஙகொழுந தளவிய பசுமபொற
செங்கு ருநதொளி யிடைபடச செறிததன சிவணும்,

(இ - ள.) இடையானது எஙகேயொளிததுககொளவதெனறு, தஙகள் கணகள் கருநிறமெயதி, இளகுதலுற்றுப்பூரிதத பெரியமுலைகளினமேல் பொடிப்பொடியாகவிளஙகுநதேமலகள, அழகிய கிரணஙகளையுடைய சூரியனது இளஙகொழுநதுகலநத பசுமபொனனிலே, இடையிடையே செவவயிரததின் காநதிநெருஙகியிருநததற்குசசமானமாகும. எ-று. (ககஅ)

ஒழுங்கு வாாகுழைத் திருததிய பொறசுரு ளோலை
யழுஙகு வாாகட லுலமெலா மடககிய மாரன
கொழுஙகு யிறகுரற குதலையாட் கெழுதினன் கொடுதத
தொழுநத கைததனிச சாதனங் கடுபபன சொலலின.

(இ - ள்.) ஒழுஙகாயுள்ள நெடிய காதுகளில் திருத்தியுள்ள பொனனுற் செய்த சுருளோலைகள், ஒப்புகூறுமிடத்தில, ஆழமாகிய நெடுஙகடல சூழ்நத உலகமுழுவதையும் தனககு ஐககியஞ் செய்துகொணட மன்மதன், கொழுவிய குயில்போயிலுங குரலமைநத குதலைமொழியையுடைய அப்புலைச்சிககுஎழுதிக கொடுதத ஒப்பற்ற வணககமுள்ள சாசனததைப்போன்றிருநதன. எ - று. ()

ஈர வாரமு தொழுக்கிய முழுமதிக் கிடையே
காரி ருட்கொழுந தெனவளா கருமபுரு ரத்தி
ஞேர நஞ்சிரண் டெனவகுத துறுததிய கொலலோ
வாரி மாநில முடிததிடச செருக்கிய வடிககண்.

(இ - ள்.) கடல் சூழ்நத உலகினை யழிக்கும்படி மதாததுள்ள ஙாவடுப் போன்ற அம்மஙகையினகணகள், குளிரச்சியுற்றுநிறைநத அமுததததைத்துளிக்கும் பூரணசநதிர னுககிடையே, கருநிறநதஙகிய இருட்பிழமபுபோல் வளாந துளள கரிய புருவஙகளின் ஓரததில, இரணடு விஷஙகளெனறு சொலலுமபடி பிரிததுச் செலுததியனவோ? (அறிகலேன) எ - று. (கஉ0)

இனைய ளெய்துற நோககினன் வெய்துயிரப் பெறிநதான்
புனைக ருஙகுழ லீஙகிவள யாரெனப புலமபா
நினையு நெஞசொடு மணஙகென வயிாததன னின்றுன்
வனைசி லமபடி மணணுறத தெளிநதனன மயககம.

(இ - ள) இததகையளான புலைச்சி ஆஙகடைய, சுகுமாரனென்னும அநதணன் கணடு பெருமூச்சு விட்டவனுய, அலஙகரிககினற கரிய கூநதலை யுடைய இவள யாவளென வருநதிககருதும மனதோடு [அணஙகு] தெய்வப் பெணணெனச் சநதேகிதது நினறுன. ஆனுல, சிலமபணிநத அவளுடைய பாதஙகள நிலமிசைப்படிதலால (மானுடப்பெணணேயெனறு) தன மயககம தெளிநதனன். எ - று. (கஉக)

தாம ரைபபொகுட் டாசன மிகந்தொரு தனியே
காமா பூமக ணினறன ளாமெனக கவலா
வேம ருநதுயா நெஞசினன வெதுபபுறு விரகின
வாம மேகலைக கருகுறப பைபபைய வநதான்.

(இ - ள.) தாமரை மலாபபொகுடடாகிய பீடததைவிலகி அழகிய திருமகளே, ஒன்றியாகவநது நினறுளென விருமபி, வருநதிநையுங கொடுநதுயா தஙகிய மனமுடைய அச்சுகுமாரன, தனனைத தகிககினற காமததினுலே அழகிய மேகலாபரணமணிநத அபபுலைச்சியினருகே மெலலமெலலப போயினன.

வநத பொற்சுகு மாரனைக கண்டனள வனமபோந
திநத நலனுருக காடசிதந தனனிவ னெனனு
வுநது சிநதையள வெளகினள வலலியென றுதுஙகித
தநத காமநோய் புலபபடா தொருதனி தளாவாள.

(இ - ள் ) அப்படிதத தன்னருகே யடைநத அழகிய சுகுமாரனைப் புலைச்சியானவள் கணடு, இவன இநதககாட்டிலெயதி, இததகைய அழகிய வடிவினைக காணபிததானெனறு, அவன பாறசெனற மனமுடையவளாய வெட்கமுற்று, ஓா பூஙகொடிபோலத துவணடு, அவனளிதத காமநோய ஒருவருககுந தெரியாதவகையாகத தனியேயிருநது வருநதுவாள. எ- று. (கஉங)

முநதை யூழவினை முறைததொடா பிருநதவா முதியோன்
றநத நானமறைக குலததுளோன் புலைககுலஞ் சாாநத
கநத வாாகுழற குருகிய கருததின ஞறை
னநத நானமுகன விதிபபடி தவிாபபவா யாரே.

(இ - ள்.) முற்பிறப்பிற்செய்த தீவினை வழியின் தொடக்கிருந்தமையால், அறிவின் மேம்பட்டவனும் நான்கு வேதங்கட்குரிய வேதியர்குலத்திற் சனித்தவனுமாகிய சுகுமாரன், புலையர் குலத்துப்பிறந்த மணமிகுந்த நெடிய கூந்தலையுடைய அப்புலைச்சியின் கலவிக்கும் மன்முருகத்தக்க கருத்துடையவனுனன். சிறப்புற்ற அந்த நான்கு முகங்களையுடைய பிரமதேவன் விதித்த முறைமையை நீக்கவல்லவர் யாவர்? (ஒருவருமிலர்). எ - று. (கஉச)

நிலவு வாணகைக் குடைந்ததென் னெஞ்சக நெடுங்காற்
கலவ மாமயிற் சாயலிற் களித்தவென் கண்க
டிலக வாணுத லின்னுயிர் செகுத்தது செழுந்தே
னிலவ மென்னுழை யென்செயு மறிந்தில னின்னும.

(இ - ள்) சந்திரிகை வீசும் ஒளிதங்கிய உன் பற்கட்கு என மனங்கரைந்தது. நீண்ட காலகளையுங் கலாபத்தையுமுடைய சிறந்த மயில்போன்ற உன் சாயலைக்கண்டு என்விழிகள் மகிழ்ந்தன. திலகமணிந்த ஒளிபொருந்திய உனது நெற்றியானது என அரியவுயிரை யழித்தது. செழிய தேன் நிறைந்த இலவமலர்போன்ற உன் இதழ்கள் என்பால் யாது செய்யுமோ? அதனை இன்னும் அறிகிலேன் எ - று. (கஉரு)

புரங்க ளெத்தவ னெற்றியந் தழலிடைப் பொடிந்தோன்
சரங்க ளெப்பன வெமதுயிர்ப் பொறையெலாந் தமியேற்
கிரங்கு நாளுள தென்றுமற றறிகிலே னெரிவா
யரங்க ளெந்தவேற் கட்கடை சிறிதளித் தருளீர்.

(இ - ள்) முப்புரங்களைப் பொடிபடுத்திய சிவபெருமானது அழகிய நெற்றியின் கண்ணுள்ள தீக்கண்ணினுற் சாம்பராயவிட்ட மன்மதனது பாணங்கள் என உயிர்ச்சுமையைத் தகிக்கின்றன. அடியேனுக்கு மனமிரங்கு நாள் என்றே அறியேன். தீயிற்காயப்பிடட்டுத்த அரங்களையுந் தகிக்கத்தக்க வேற்படை போன்ற உன் கடைக்கண் பார்வையைச் சிறிது கொடுத்தருளவேண்டும். எ-று.

குதலை கேட்புறி னுயிர்தளிர்த் துடறபொறை குளிர்க்குந
திதலை வெமமுலை முகத்தொடு சிறியவென றுணைத்தோண
மதலை மோந்துறின் வாசிலை குனித்தவேள வரைப்பான
முதலை யன்றியெம முன்னாங்ன றிகலுமோ மொழியின.

(இ. ள்.) சொலலுமிடத்தில், உன மழலைச்சொற்களைக் கேட்கப் பெற்றால் என்னுயிர் மகிழ்ச்சியுற்று உடற்சுமை குளிர்ச்சியெய்தும், தேமல்படாந்த விருப்பந்தரும் உன் குசங்களோடு என்னிருதோள்களாகிய தூண்கள் முகக்குமாயின, நெடிய தன் கருப்பு விலலைவளைத்த மன்மதன், மலைமீதுள்ள முதலையாகுவனன்றி எமக்கு முன்னே நின்று பகைத்திறங் காட்டுவானே? எ - று.

என்று பெய்பரற பரிபுரப் பங்கய மிறைஞ்சிச
சென்று வீழ்ந்தன னேக்கினண் முறுவலிற சிறந்தாள்
குன்றெடுத்தபூங் கொமாரி னெதிர்ந்தனள் குறுகித
தன்ற ளிர்க்கைகோத தெடுத்தன ளிறுகுறத் தழுவி.

(இ - ள்.) என்றுகூறி, அருகேசென்று, பருக்கைக் கற்கள் பெய்துள்ள காற்சிலம்பணிந்த தாமரைமலர்போன்ற பாதங்களில் வீழ்ந்து வணங்கினன்.

அப்புலேச்சியானவள் கண்டு, புன்னகை மிககவளாய இருமலேகளேச் சுமநத மலாகமுகாம்புபோன்று சோநது நெருங்கி, தனது மாநதளிாபோலுங கைக ளாற் கோததுத தூககியெடுதது தனஙகள இறுகுமபடி தழுவிககொணடு.

பூதத மாதவிப பொதுமபரி னகனறன ரிருநதாா
நாதத மூமபுறப பயினறன மதன்கலே நவிறறுங
கோதறி ரநதெரிந தியைவன யாவையுங குணித்து
மாததி ரைககர ணநதெரிந தமமுறை மணநதான.

(இ - ள.) புடபிததுள்ள குருககததி மரச்சோலேயிற்போய வசிதது, ஈாவா னது தழும்புறுமபடி படிததுளள மதனுகமததிற சொலலபபடுஞ்சாதியிலககண முதலியன வறிநது, பொருநதிய இலககணஙகள யாவையும நனகுணாநது. காலநுட்பஙகளேயும கலவிகளேயும் ஆராயநது அவறறிறகியையப் புணாநதான,

பதுமினி முதலியநாலவகைச் சாதியுட, வாலே தருணிமுதலிய நால்வகைப் பருவமும், அபபாவததிற்குரிய காலபேதமும், அவறறிறகுரிய கரணமும இவைபோலவனபிறவுங காமநூலுட் கணடுகொளக.

மழலே வாய்மொழி மயஙகுற வாளரித தடங்கண
குழையு லாவினன றலமவரக கருஙகொடி குனிபப
விழைத னககுவ டெடுததிடை நுடஙகுற விருதாட
டழைசி லமபொலி கலலெனத தழுவின டணவாள.

(இ - ள) வாயினினறுவரும மழலேச்சொற்கள குழறவும், வாளபோலும் அரிபரநத பரவிய கணகள காதளவும ஓடியுலாவிச் சுழலவும், கரிய கொடிபோ லும் புருவஙகள் வளேயவும, ஆபரணமணிநத குசஙகளின பாரததைதத தாஙகி இடையானது துவளவும, இருபாதஙகளிலும தரிதத சிலமபுகளின ஒலி கல்லெ னறு பேசவும சிறிதும பிரியாது தழுவினுன். எ - று. (கூ0)

இருவ ரீஙகிவ ருடலிரண் டோருயி ரெனனப
பெரிய வாாதடங கண்ணிணே யிமையெனப பிரியா
ரொருவி நாளபல கழிததபின னீஙகிவாக குரிமை
மருவு மைநதாக ளேவரைப பயநதனா வளாவாா.

(இ - ள.) இவவிடததே, இவாகளிருவருககும உடலிரணடு உயிரொன்று எனக கணடோா கூறும்படி, பெரிதாக நீணடு விசாலிதத இருவிழிகளும அவற றின இமையுமபோலப பிரியாதவாகளாய, பலநாட்கள கழிதது நீககியபிறகு, இவ்விருவருககும உரியவாகளாகிக கலநத ஐநது புததிரரை யீனறனா. அவா கள் வளாவாரானாகள. ஏ- று. (கூக)

பயநத மைந்தரப் பாதக மைநதெனப் படுவா
ரியஙகு நாளபல கழிநதன பின்னுமீங கிவாகரு
வயஙகு தாயபெறு வனபபொடு மகளிரோ ரிருவ
ருயங்கி மாரனு மயஙகிடப பிறநதன ருவாகள.

(இ - ள.) இவ்வுலகத்தில் அவர்களபெற்ற புததிராகளேவரும் பஞ்சமா பாதகஙகளெனறு சொல்லத தககவாகளாய் இவவாறு வாழுஙகாலம் பல சென் றன. மேலும இவாகட்குப் புத்திரிகளிருவா வாழ்ந்துகொணடிருககும் தஙகள

தாயினுடைய அழகுடன் மன்மதனும் மனவருத்தமெய்தி மயக்குறும்படி பிறந்தார்கள். எ - று. (கருஉ)

மைந்த ரைவருங் கூற்றமோ ரைந்தெனை வளர்வா
ரந்த மைந்தரோ டருநெறி யாறலைத் தொழுகிச்
சிந்தி மன்பதை பொருள்கவர்ந் துயிருகச் செகுத்து
வெந்த ழறசுழல் விழிக்கடும் புலியென வெகுள்வான்.

(இ - ள்.) அப்புத்திரரைவரும் ஐந்தியமன்களைப்போன்று வளர்ந்து வருகின்றார்கள். அப்புத்திரர்களோடும் சுகுமாரன் நெருக்கமாகிய வழிகளிலே வழி பறித்துத் திரிந்து, வழிச்செல்வோர் பொருள்களை யழித்துச் சூறையிட்டு அவர்களை உயிரொழியக்கொன்று, வடவாக்கினிபோன்ற நிறமுள்ளதாய்ச் சுழலகின்ற விழிகள்படைத்த கொடும்புலிபோலக் கோபிப்பான். எ - று. (கருரு)

ஆவொ ராயிர மாயிர மருமறைத் துறவோர்
சேவு மோராபதி னுயிருஞ் செகுத்தனன் றீயோன்
பாவ காரிய மெவையுள வவையெலாம் பயின்றான்
வாவு தென்றிசை நிரயமோ னறுளதென மதியான்.

(இ - ள்.) ஆயிரம் பசுக்களையும், அரிய வேதமறிந்த ஆயிரந்துறவிகளையும், பதினாயிரம் எருதுகளையும் அச்சுகுமாரனென்னுங் கொடியோன் கொன்றனன். தாவிச்செல்லுந் தென்றிசையிலுள்ள இயமபுரத்தில் நரகமென்றொன்றுண்டென்னும் சிந்தனையே யில்லாதவனாய், பாவச்செயல்களாயுள்ளனவெவைவோ அவற்றிலெல்லாம் பழகிவந்தான். எ - று. (கருச)

மதுநு கர்ந்தனன் பிறர்பொருள் கவர்ந்தனன் மருளாக்
கதுமெ னப்புரி பவத்தொகை யாவரே கணிப்பார்
புதிய பாதக மிழைப்பா தற கேதுவாம் புலைச்சி
யிதுபு ரிந்தவ னியங்குநா ளாருயி ரிறந்தாள்.

(இ - ள்.) மதுபானஞ் செய்தான். பிறர் திரவியத்தை யபகரித்தான். மயங்கி விரைவாக அவன் செய்த பாவத்தொகையை யாவர்தான் கணக்கிடுவார்கள். இவ்வகைய பாவங்களைச் செய்துகொண்டு அவன் திரிகையில், அவன் புதிதாக இப்பாதகங்களைச் செய்தற்கு ஏதுவாயிருந்த அப்புலைச்சிதன் அரிய உயிர்நீங்கி யிறந்தாள். எ - று. (கருரு)

குழலி யாழினைப் பழித்தசொற் குதலையா ளிறப்ப
வுழலை வேடைவெங் காமவெந் நோய்தெற வுடைந்தான்
சுழலி ருஞ்சிறைத் தும்பியஞ் சுருளிரு ளோதி
மழலை மக்களை யிருவரை மனையென வரைந்தான்.

(இ - ள்.) ஊது குழலொலியையும் வீணை யொலியையும் பழிக்கத்தக்க மழலைச் சொல்லையுடைய அப்புலைச்சி யிறக்கவும், தாகத்தையும் வெப்பத்தையும் உண்டுசெய்யுங் கொடிய காமநோய் வருத்தவருந்தினவனாய்; சுழன்றுகொண்டிருக்கும் அரிய சிறகுகளையுடைய வண்டுகள்பொருந்திய அழகுடைத்தாய்ச் சுருண்டிருண்ட கூந்தலையுடைய மழலைச்சொற்கள் கூறுந் தன் புதல்வியரிருவரையும் தன் மனைவியராக்கிக்கொண்டான். எ - று. (கருசு)

ஈன்ற பேதைய ரிருவர்த மின்னல நுகர்ந்து
கான்ற காமமீக கூரதர நாள்பல கழித்தா
ளுன்ற பாதக மனைத்துமோ ருருவெனு மனையா
னேன்று சூழ்வரைக கானகத தியங்குறு மெல்லை.

(இ - ள்.) தானபெற்ற புதல்வியரிருவா பால் இனிய காமவின்ப மனுப வித்து, (மேலோா) வெறுத்த காமவிருப்ப மதிகரிககப் பல தினஙகள் கழித் தான். மிக்க பாதகஙகளெல்லாம் சோநத ஓர் வடிவுபோன்றவனென்று சொல் லததகும் சுகுமாரன, மலைசூழ்நத காட்டில் புறப்பட்டுத திரிநதுகொணடிருக குங காலத்தில். எ - று. (௧௬௭)

வேலை மாநிலம புரந்தரு ளோர்தனி வேந்த
னுல வாளாப் பரிதியுண் டுமிழ்தரு மந்நா
ளூலி னுன்மறை வேதியாக கிடுபொரு ளுக்கிப்
பாலை வெஞ்சுரத தாங்கவ ரெதிருறப பறித்தான.

(இ - ள்.) பெரிய கடல்சூழநத பூமியை யரசாளும ஒபபற்ற ஓரரசன், விடாநதஙகிய ஒளியுள்ள கேதுவென்னும பாமபு சூரியனை விழுஙகிக ககக்கும் கிர கண தினததில, பூணூலணிநதவராய நால் வேதஙகளுணாநத வேதியருககுத தானஙகொடுககுந திரவியததைக கணடு, பாலை நிலமாகிய கடுவெளியிலே அவ வேதியாகளுககெதிரே போயக கொளளையடிததான. எ - று. (௧௬௮)

நெற்றி கீண்டெழு குருதியா வெருவரு நெஞ்சா
பற்று றநதிடு வாயினா பதறிய பதைபபா
தெற்று காலின ரோடினா மீணடனா சென்றுா
கொற்ற வேநதனுக் கிவனிலை யுணர்ததினா குழறி.

(இ - ள.) அப்படிப் பறிகொடுததவாகள, நெற்றியானது பிளவுற்றெழு கும உதிரமுடையவாகளும, பயநது நடுஙகும மனமுடையவாகளும, பற்கள கழன்ற வாயையுடையவாகளும் பதைததுத துடிப்பவாகளும, பின்னிய கால களையுடையவாகளுமாகி, அஙகிருந்து திருமபிச்சென்று, வெற்றிதஙகிய மன னவனுககு இசசுகுமாரன செயலைக குழறிய வாாததைகளாற கூறி வெளியிட் டாாகள. எ - று. (௧௬௯)

அனைய கேட்புழி வடவையொத் தடுசினங் கதுவிக்
கனைக ருங்கழல வெண்குடைக கடுநதிறல வேநத
னினைய செயதவற கொணாகென விசைததன னனிக
முனைவ ரோடின ரொருவருக கொருவாபோய் முநதி.

(இ - ள்) அவவாாததைகளைக கேட்கையில், வடவாககினிபோலச் சின முற்று, ஒலிககினற வலிய வீரககழலையும மிகுவலலபததையுமுடைய அமமன் னவன், இததீஙகிழைததவனைக கொணடுவருகவெனக கடடளையிட்டான்.சேனு வீராகள விரைநதவாகளாய ஒருவரையொருவா முற்படடுபபோய. எ - று.

தொடர்நத பல்வரை முடுக்கரு மருநெறித தொடாபும்
படாநது பறறின ரடவியும படபபையும படாநதா
ரடாநத சேனைகண டறிந்தனன் வெருவின னகன்றுன்
மடநதை மாரொடு மகாரொடு மவவன மறைநதான்.

(இ - ள்.) தொடர்ச்சியாயுள்ள பல மலைக்குகைகளிலும், நெருங்கிய பாறைகளின் சந்துகளிலுந் தேடிச்சென்று காட்டையடைந்து நாடுகளிலுஞ் சேர்ந்தார்கள். அப்படியடைந்த நெருங்கிய சேனையைப்பார்த்துத் தன்னைத் தேடுவதறிந்து பயந்து அங்கிருந்து நீங்கி, தன் புதல்வியரோடும் புதல்வரோடும் அவ்வனத்தில் மறைந்துகொண்டான். எ - று. (கசக)

ஒழுகு மாரிருட் கங்குலி னிவ்வன மொருவி
யெழுவு காவதம் பற்பல கழிந்தன னேகிப
பொழுதி யங்குற லூணதே யபபுடைய பொருப்பின்
றழுவு சாரலி னடவிபுக் கொளித்தவண் சரித்தான.

(இ - ள்.) நிறைந்த இருண்மிகுந்த இராத்திரியில் இக்காட்டை நீங்கித் தோன்றுகின்ற அநேக காதவழிகளைக் கடந்து சென்று, பொழுதுபுலரும் காலைப்பொழுதில், ஊணதேயத்தின் அருகிலுள்ள மலையின் சாரலையடைந்து அங்கோரிடத்தில் ஒளித்துக்கொண்டு வசித்திருந்தான். எ - று, (கசஉ)

ஆய கானகத் தகவையுட் சரித்து று மநநாட்
பாய வேனெடுங் கண்ணிய ரிருமகப பயநதார
தீய தீயன வீன்றெனப பிறநது றுஞ் செலவா
மாய மென்சிறு குதலைகேட் டுவநதனன மகிழ்நதான்.

(இ - ள்.) ஆகிய அக்காட்டின் உட்பாகத்தில் வசித்திருக்கும் அக்காலத்தில் பாய்கின்ற வேற்படைபோலும் நீண்ட கண்களையுடைய இருபெண்களும் இரண்டு புதல்வரைப் பெற்றார்கள். தீவினைகள் தீவினைகளைப் பெற்றன வென்று சொல்லும்படி பிறந்த அப்பிள்ளைகள பேசுகின்ற மாயம்தங்கிய மெல்லிய சிறுகுதலைச் சொற்களைக்கேட்டுப் பெருமகிழ்வுற்றான. எ - று. (கசஙூ)

அன்ன கானகத் தயல்விளிம் புடுத்தநாட் டருப்பு
மின்னி ளமபிறை முடித்தநா கேசசுர ரிருககை
பின்னி டப்படு காவதம பாதியிற பெருநீா
மன்னு நல்வளஞ் சுரநதெழு நாகமா நகரம.

(இ - ள்.) அத்தன்மையான காட்டினையடுத்த அருகேயுள்ள மதிலபுடை சூழ்ந்த காட்டிலே, பிரகாசிக்கின்ற பிறைச் சந்திரனைச் சிரசிலணிந்த நாகேச்சுரா திருவாலயமானது அமைந்து, பிறபட்டுள்ள அரைக்காத வழிவரையிலும், நிலையாயுள்ள நல்ல நீர்வளமானது மிகுந்துள்ள நாகையென்னும் நகரமொன்றுள்ளது. எ - று.

உரைத்த மாநகர் மாதரு மைந்தரு மொருங்கே
யிரைத்தெ ழுநதுநா கேசசுர மெயதின ரிழைத்தார்
வரைத்து ரமுழு மறைமொழி வரன்முறை மரபான்
விரைத்த செஞ்சடை யவன்சிவ ராத்திரி விரதம்.

(இ - ள்.) சொல்லிய சிறந்த அந்நாகை நகரத்திலுள்ள மாதர்களும் புருடர்களும் ஒன்றாய்க்கலந்து கோஷித்துப் புறப்பட்டு நாகேச்சுவராலயத்தை யடைந்து அளவிடற்கியலாத வேதமுழுவதுமுரைத்த வரிசைக்கிரமத்தின் முறைப்படி மணங்கமழுஞ் செவ்விய சடைமுடியையுடைய சிவபெருமானுக் குரித்தாகிய சிவராத்திரி விரதத்தை யநுஷ்டித்தார்கள். எ - று.

*துணார்ந்தில னெம்பிரான் றிருமணி முன்றிற்
ருத விழ்ந்தலா நந்தன வனமலா தடவிப்
போத னுஞ்சுகு மாரன்மற் றடுகொலைப் புலையன்
காதன் மிக்குநின் றவர்தொழு துரைபபன கண்டான்.

(இ - ள்.) சுகுமாரனென்னுங் கொலைத்தொழிலையுடைய புலையனானவன், இச்சிவராததிரியின் விரத மகிமை தெரியாதவனாய்; எமது நாகேசுவரருடைய திருககோயிலின் அழகிய முற்றத்திலுள்ள மகரநதத்தைச்சிநதிப் பூக்கள் அலாநதுள்ள நநதன வனத்திலுள்ள பூக்களைததிருடிக்கொணடு புறம்போகையில், உள்ளன்பு மிகுநத பகதாகள் பரமேசுவரனைப்பணிநது பிராாத்தனை செய்பவற்றைப்பாாத்தான. எ - று. (கசரு)

ஆய கங்குலிற் கடிகைமூ வைந்துசென் றகலப்
பாய வெளவிடை யெம்பிரா னிலிங்கமுற் பவித்துத்
தூய வெண்பிறை யிதழிமான் மழுப்படை துவன்றச
சாயை காட்டலு நோககினன் றெழுதனன் றணநதான்.

(இ - ள்.) ஆகிய அன்றிராததிரியில், பதினைதது நாழிகை கழிநதுபோக, பாயநது செல்லும் வெளளிய இடபவாகனமுடைய எமது நாகேசுவரப் பெருமான் சிவலிஙகத்தினிடநதோனறி, புனிதமாகிய வெள்ளியபிறைச்சநதிரனும கொன்றைமாலையும மானும மழுவாயுதமும விளஙகுமபடி தமது சொருபததைத தரிசனநதநதருளவும், தரிசிததுப்பணிநது போயினன. எ - று. ()

கள்ளுண் வாழ்க்கைய னெறுழ்வலி யாக்கையன் கடுவான்
புளளு நோககுறின் வெருவரும பாவிதென புலத்தோ
னுளளு நாளெலா முறுககுறு மியறகைய னொருநா
ளெளளு பாதக மிறநதெனத தன்னுயி ரிறநதான.

(இ - ள்.) கட்குடிககும் வாழ்ககையுடையவனும், மிகக வலியமைநத தேகமுடையவனும, வேகமாயப்பறககும் ஆகாயப்பறவைகளும் பார்ததமாததிரமே பயப்படததகக பாவியும, தென்றிசைததலைவனாகிய காலனும் நினைககும் நாள்களெல்லாம் நரகததில வருதததததகக தன்மையனுமாகிய சுகுமாரன் ஒருதினததில் இழிததுககூறததக்க பாவ மென்பதே உயிா தொலைநதாற்போலத் தன்னுயிரைததுரநதான. எ - று. (கசஅ)

அறுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தம்.

வெஞசினத் தெறுழ்வலித் தென்புலத தவரெலாம வெகுளி மிக்கா
ரஞசுறத தழலவிழ்த தொழுகுமுத தலையிற படையெ டுததார
செஞசிலைப படைகதைப படைவலித தொடாவிடுந திகிரி கொண்டார்
நஞசுருத் தெனவுருத தனரெழித தனர்பொரு நகைவி ளைத்தார்.

(இ - ள்) கடுஞ்சினததுடன் பெரும பலமுள்ள இயமபுரககிஙகரர்கள் யாவரும் கோபமிக்கவராய், கண்டோர் அஞ்சும்படி தீப்பொறி சிந்தப்பார்த்து, முததலைகளையுடைய சூலாயுதத்தை யெடுததுககொணடாாகள். செவ்விய மலைபோலப்பூரித்த விற்களையும் கதாயுதஙகளையும் பாசக்கயிறுகளையும் செலுத்தததகக சககராயுதஙகளையும் தாஙகியவர்களாய், ஆலகாலம் கோபித்தெழுநதாற்போலக் கோபஙகொண்டு கர்ச்சனை செய்து கோபச்சிரிப்புச்சிரித்தாாகள்.

சென்றுறப் பின்ர்வளைத் தனர்பிடித் தனாமுடைச் சிகர வன்றோள்
குன்றிணைத் தெனவிணைத் தனர்கதைப படையில்வெங் கொடிறு டைத்
தின்றடித் தனரிடித் தனாகழுத் திடைநெடும் பாச மிட்டுப்    [தார்
புன்றலைக் கண்பிதுக் குறவிடித் தனருடன் கொண்டு போவார்.

(இ - ள்.) அதட்டினவர்களாய்ச்சென்று சூழ்ந்துகொண்டார்கள். புலான் மணங்கமழும் புலைச்சியின் சோர புருடனான சுகுமாரனுடைய தோள்களை, மலைகளைச்சேர்த்ததுபோலச் சேர்த்துப்பிணித்தார்கள். அவன பெரிய கன்னத்தைக்கதையினாற் பிளந்தார்கள், நோ நின்று அடித்தார்கள் குத்தினார்கள். அவன் கழுத்தில் நெடிய பாசக்கயிற்றினை வீசிச்சுருக்கிட்டு அற்பத்தன்மையுடைய அவன் கண்கள் பிதுங்கும்படி செய்து ஆரப்பரித்துக்கொண்டு தங்களோடு இழுத்துப்போவார்கள். எ - று. (கஙo)

ஆயகா லத்துமுப் புரநகைத் தெரிகொளுத் தாதி நாதன்
றாயபொற் றிருவுளத் தினையுணர்ந் தருடலூந் தொல்லை மேனாட்
பாயநங் கங்குலிற் கடிகையீ ரெட்டினெம பதமு ணர்ந்தான்
போயவற் கொணர்கெனக் கணமுதற் றலைவர்தென் புலம டைந்தார்.

(இ - ள்.) ஆகிய அக்காலத்தில், புன்னகைசெய்து புரங்கள் மூன்றையும் எரித்தருளிய முதற் கடவுளாகிய சிவபெருமான், தமது புனிதமாகிய திருவுள்ளத்திலே, இப்படிச் சுகுமாரன அநுபவிக்கும இயமவேதனையைக் கருதியவுடனே, பழமையாகிய முற்காலத்தில புகழ பரவிய நமது இரவாகிய சிவராத்திரி தினத்தில் பதினாறு நாழிகையில், நமது திருவடிகளைத் தரிசித்தவனாகிய அச்சுகுமாரனை நீங்கள் போய் அழைத்து வாருங்களெனக்கட்டளை செய்யவும், முதன்மையாகிய சிவகணத்தார்கள் இயமபுரஞ் சேர்ந்தார்கள். எ - று. (கஙக)

தண்டுசக் கரமழுப் படைத்திரி சூலங்கொடுஞ் சாப நேமி, பிண்டிபாலங்கதிர்க் கட்கமற் றுளவெலாம் பெரிது கொண்டார், திண்டிறற் செருமுகச் சண்டவெம் படையொடுஞ் சென்றெதிர் றுத்தார், கொண்டெதிர்த் தனர்வளைத் தனாவிளைத் தனர்கொலைக் கொடிய வெம்போர்.

(இ - ள்.) தண்டாயுதம் சக்கராயுதம் மழுவாயுதம் முத்தலைச்சூலாயுதம் வளைவாகியவில் அழகுபொருந்திய எறியாயுதம் ஒளிதங்கிய வாளாயுதம மற்றுமுள்ளனவாகிய ஆயுதங்களெல்லாவற்றையும மிகுதியாகத்தாங்கினவர்களாய அதிகரித்த வல்லமைதங்கிய போர்க்களத்திற் பிரயோகிக்கும் பெரிய பாசுபதாஸ்திரத்தோடுஞ் சென்றெதிர்த்தார்கள். இயமகிங்கரர்களும் எதிர் வந்தெதிர்த்தவர்களாய்ச் சூழ்ந்துகொண்டுகொலைத்தன்மையுடைய மிக்க கொரோமாகிய யுத்தத்தைச் சிவகணங்களோடு செய்தார்கள். எ - று. (கஙஉ)

அக்கணத் துக்கணத் தலைவர்சென் றழல்விழித் தடல்வ யப்போர்
தெக்கணத் தவரொடும புகைந்தழைத் தடுசினந் திருகி நின்றார்
தொக்கவெம படைபடத் தலைதெறித் தனவிழித் தொகைதெறிப்பச்
செக்கர்தென் புலமவிழுந் தனவெனக் குருதிசெஞ் சேறு பட்ட.

(இ - ள்.) அந்த க்ஷணத்திலேயே சிவகண நாதர்கள் எதிர்த்துச்சென்று, கண்களில் தீப்பொறி சிந்தப்பார்த்து, வலிதங்கிய வெற்றியுள்ள யுத்தத்தை இயமகிங்கரர்களோடு கிட்டிச்சென்று, கொல்லத்தக்க கோபமுடையவர்களாயிருந்தார்கள். அத்தகணத்தவர்களால் விடப்பட்ட கூட்டமாகிய பெரிய ஆயுதங்

கள் மோதுதலினாலே இயமகிங்கராகளுடைய கூட்டமாகிய விழிகள் தெறித்து விழ அவாகள் சிரஙகள் தெறித்தன. செவவானஙகள் இயமபுரத்தே வீழ்ந்தன வென்று கண்டோர் சொல்ல, செவந்த உதிரககுழம்பு தேக்கின. எ - று.

பல்விழுந் தனர்கரப் படையிழுந் தனர்துணைப் பணைநெடுந்தோட்
கல்விழுந் தனாதடக் கரமிழுந தனாசரங் கால்ப ரப்பா
வில்லிழுந் தனர்புலால வேலிழுந தனாவிடா மிடலி ழுநதார்
சொலலிழுந் தனருயிாத் தொகையிழுந தனாபொருா மறலிதூதர்.

(இ - ள்.) சதததுருககளாகிய இயமகிங்கரர்களிற் சிற்சிலா பல்லிழநதார்கள், சிற்சிலர் கையிற்றாஙகிய ஆயுதஙகளை யிழநதார்கள். பூரிதது நீண்ட இரு புயஙகளென்னும் மலைகளை யிழநதாாகள். விசாலமான கைகளை யிழநதார்கள். வாயு வேகம்போற் பரவும் அம்புகள் பூட்டிய விலலை யிழநதாாகள். புலால் மணஙகமழும் வேலை யிழநதாாகள. அறிவுபடாத வல்லபமிழநதாாகள். வீரச் சொற்களை யிழநதாாகள. சிற்சிலா தஙகள உயிாததொகைகளை யிழநதாாகள்.

தாளிழுந் தனர்முடித் தலையிழுந் தனாதுணைச சயில மேருத்
தோளிழுந் தனர்கரத் துணையிழுந் தனாவிழித தொகையி ழுநதார்
கோளிழுந தெழுமதிக் கடவுளொாத தடுதிறற குரவை கொண்டார்
வேளிழுந திடவிழித தழலுமிழ்ந தவனடித துணைய வீரா.

(இ - ள்.) சிற்சிலா காலிழநதாாகள, கிரீடமணிநத தலையிழந்தார்கள். இரண்டு மேருமலைகளையொதத தோளகளை யிழநதாாகள். இரு கைகளை யிழந் தாாகள். கணகளை யிழநதார்கள. மனமதன உயிரிழககும்படி நெற்றி விழியிற் றீப்பொறி சிநதிய சிவபெருமானது திருவடியையே துணையாககொணட சிவகண நாதாகள், இராகுவென்னுங கோளினால விழுஙகிவிடபெட்டு உதித்த பூரண சநதிரன்போலப் பெருவலலபத்தினாற் குரவைககூததாடினாாகள். எ-று.

முறுகுவெள ளெயிறடித் தலைதெரித தோடிவிண் முகடு முட்டிக்
குறுகவிண் ணுயிரம பிறைபொடிப பனகிகாப பனகு றிப்பி
னறுதலைக் குறையிரத தங்குதித தெழுவவே யணவு வெநதீத்
தெறுதழற் கானகத் துலவைவே வனவெனச சிவனு மன்னே.

(இ - ள்.) அககிஙகரர்களின் முறுகிய வெணணிறநதஙகிய பற்கள் உதிர வெளளததின அலைகளிலடிககப்பட்டுததெறிததுச்செனறு ஆகாயமுகட்டில் தாககிக கீழே விழவும், அதனை யோசிககுமிடததில, ஆகாய நதியிலுளள சநதிரனை ஆயிரம பிளவுகளாககிபபொடிததததை யொததிருநதன. உடல அறுபட்ட தலைக குறைகள உதிர வெளளததிலே முழ்கி யெழுநதோற்றமானது மூஙகில் மரங் கள் மாயதலினால் தோனறிய கொடிய தீப்பறறிய காட்டிலுள்ள ஏனைய மரங் களும் வேகின்றனவெனச் சொலவதை யொததிருககும, எ - று. (கஙசு)

வெள்ளவெங் குருதியெங் கணுமெழுத தோடிவெவ வேறுபேதத்
தளளலவா னிரயமெங் கணுநிரப பினபிணத தொகையி னமமா
கொளளைபோ யினநெடுந தென்றிசைக கிழவனுா கொடிதி ழைத்தா
ரெளளரும் போரிழுந் திரியலா லியமனு டிரியல போன.

(இ . ள்.) கொடிய உதிரவெள்ளம் எல்லா விடஙகளிலும் பிரவகித்துப் பெருகி, வெவ்வேறு வகையாயுள்ள கிறநத அளளல் (இரௌரவம் கும்பிபாகம்

கூடசாலம் செக்குத்தானம் அழற்பிரபை தூமப்பிரபை இரத்தப்பிரபை) முதலிய நரகங்களெல்லாவற்றிலும் பிணக்குவியலை நிரப்பிவிட்டன. தென்றிசைக்கிறைவனுகிய இயமனது நகரமானது கொள்ளைபோயது. கொடுமை செய்த கிங்கரர்கள் இகழ்ச்சி கூறுதற்கரிய யுத்தத்தில் தோல்வியுற்றவர்களாய்ப் புறமுதுகு காட்டி ஓடுவதால் இயமபுரம் அழிந்து விட்டது. எ - று. (கஙஎ)

அங்கிலத் தஞ்சுறுஞ் சுகுமார ணைப்புரந் தஞ்ச லென்றுப்
பொன்னுடைத் தெய்வமா னத்தினுய்த் தவனொடும் போக லுற்றார்
கொன்னுனை சூலவெங் கணமுதற் றலைவர்தோள் கொட்டி யார்த்தா
ரின்னிளம் பிறைமுடிச் சடையவன் கைலைசென் றெய்தி னூரால்.

(இ - ள்.) அவ்விடத்தில் பயங்கொண்டிருக்கும் சுகுமாரனைக்காத்துப் பயபடாதேயெனக்கூறி, பொன்னாலாகிய தெய்வீகந்தங்கிய விமானத்திலேற்றி, அவனுடன் செல்லத்தொடங்கிய வெற்றி தங்கிய கூரிய சூலாயுதமுடைய கொடிய சிவகணத்தலைவர்கள், தோள் தட்டி ஆர்ப்பரித்தவர்களாய், இனிமையும் இளமையும் பொருந்திய மூன்றாம் பிறைச்சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கைலாயகிரியிற்போய்ச் சேர்ந்தார்கள். எ - று. (கஙஅ)

கண்டமுக் கண்ணினு னுண்மகிழ்ந் திடையறாக் கருணை செய்தா
னண்டர்நா யகனுருப பெற்றுநெஞ சுருகியோ ரருகு நின்றான்
றொண்டாபெற் றிடுபயன் பெறவளித தனனவன் றொல்லை வானோர்
துண்டவெண் பிறையினு னிலையுணாந திருகரந் தொழுது நின்றார்.

(இ - ள்.) அவர்களைச்சுகுமாரனோடு வரககண்ட திரிநேத்திரஙகளையுடைய சிவபெருமான் மனமகிழ்நது நீஙகாத திருவருளசுரநதனர். அச்சுகுமாரன் மகா தேவராகிய சிவபெருமான சாரூபமெய்தி மனஙகனிநதுள்ளவர்கட் கருகிலிருந தான், சிவபெருமான் அவனுககு உணமையடியார்ககுரிய பேற்றைத்தநதருளினர். பழமையாயுள்ள தேவாகள தாவள்யமான இளமபிறைச்சநதிரனை யணிநத சிவபெருமான் திருவருணிலைமையையறிநது இருகரஙகளையும் சிரமிசைக் கூப்பிவணஙகி நின்றார்கள். எ - று. (கஙக)

வெருவருந் தகையனு கியநமன் சித்திரகுத் தனைவி ளித்தான்
கருதரும் பாதகன் சிவகணத் தவரொடுங் கைலை சென்றான்
செருமுகத் திவரிழைத் தனவுமப் பாதகன் செயலு முகக
ணொருவனைத தொழுதுரைத திடுதுமென் றுளிமணிக் கைலை யுற்றான்.

(இ - ள்.) அச்சங்கொணட தன்மையுடையவனுகிய இயமன் சித்திரகுத்தனை யழைதது உடன்கொணடு, எண்ணுதற்கும் அரிய பாதகனுகிய சுகுமாரன் சிவகணததாருடன் திருக்கைலையையடைநதான். இச்சிவகணர் யுதததிற் செய்த செயல்களையும் அப்பாவியின் செயல்களையும் திரிநேததிரஙகளையுடைய சிவபெருமானை வணஙகிச்சொல்லுவோமென்று ஒளிமிகுநத ரத்தின கசிதமாயிருக்கும் திருக்கைலாயகிரியையடைநதான். எ - று (கஙo)

பெற்றமே றியதனிப் புனிதனைப் பரவியெம் பெரும சென்றே
பற்றிவந் தனாபுலைச சுகுமா ரனென்னுமிப் பாவி தன்னை
யுற்றகா லத்தருட் சிவகணத் தவர்மறித் துடனுருத்துக்
கற்றடந் தோளினெம் படைசெகுத் திவனொடுங் கைலை வந்தார்.

(இ - ள்.) இடபவாகன மூர்த்தருளும் ஒப்பற்ற சிவபெருமானைப்பணிந்து எம்பெருமானே! அடியேன் தூதர்கள் சென்று புலைக்குலத்தடைந்த சுகுமாரனென்னும் இப்பாவியையடைந்த காலத்தில், இருபையுடைய சிவகணநாதர்கள் தடுத்துக்கோபித்து மலைபோல வலிதாய்ப்பருத்த தோள்களினாலே அடியேன் சேனையைக்கொன்று இச்சுகுமாரனோடு திருக்கைலைக்கு வந்தார்கள். எ - று. ()

கோறலஞ் சலன்மதுக் கொள்வதஞ் சலனடுங் கொடுமை செய்யச்
சேறலஞ சலன்மறைத் தெய்வமா மரபினிற் சென்று தித்து
மாறரும புலைமகட் புணருமங் கவள்வயின் வந்து தித்தார்
நாறிருங் கோதையோ ரிருவரைத் தழுவியின் னலநுகர்ந்தான்.

(இ - ள்.) கொலை செய்யப்பயப்படாதவனும், மதுபானஞ்செய்யப் பயப்படாதவனும், கொலைத்தொழில் செய்யுங்கொடுமை செய்யப் பயமற்றவனும், வேதமார்க்கந்தழுவிய தெய்வீகம் பொருந்திய சிறந்த மரபில் வந்து பிறந்து, மாறுபடுதற்கரிய புலைப்பெண்ணைக்கூடி அவள்பாற் பிறந்தவர்களாகிய மணமிக்க நெடிய கூந்தலையுடைய புதல்விய ரிருவரையுங்கூடி அவர்கள் பால் இனிய சிற்றின்பத்தை அநுபவித்தான். எ - று. (கக௨)

இவனிழைத் திடுபவத் தெல்லைகண் டிலமெடுத் தோதி னெந்தாய்
தவமுயற் சியர்பெறு வீடளித் தனையிதோ தரும மென்னக்
கவாதலைச சூலிமென் னகைவிளைத திவருழைக கண்ண டத்தாச்
சிவதினக் கங்குல்பெற் றறைநா ளெம்மடிச சிந்தை செய்தான்.

(இ - ள்.) எமது தந்தையே! எடுத்துச்சொன்னால், இவன் செய்த பாவத்தின் அளவு காண்கிலோம். தவமுயற்சியுடையார்களும் அடைதற்கியலாத முத்தியினைபத்தை அநுக்கிரகித்தீர். இது தாமந்தானோவெனக்கேட்க, கிளைத்த முத்தலைச்சூலந்தாங்கிய சிவபெருமான புன்னகையரும்பி, இவன்பால் ஒரு காலத்திலும் பார்த்திராத சிவராத்திரி விரதத்தைக்காணப்பெற்று அத்தினத்திலே எமது திருவடியைத் தியானஞ்செய்தான். எ - று, (கக௩)

ஆதலா லிவனுழைக் கொடியபா தகமெலா மறைந்து மற்றைத்
தீதுறும் பஞசியிற சென்றுறும் பரிதிமுற் றிமிர மொத்தவ்
வாதவன் கதிரொளிப் பனிநிகாத தனவிதற் கைய மில்லை
நீதடுத் திடுவதற் கெளியனன் றென்றனன் னிலவ ணிந்தோன்.

(இ - ள்) ஆகையால், இவன்பாலிருந்த கொடிய பாதகங்களெல்லாம், தீயானது தகிக்கக்கேடுற்ற பஞ்சுப்பொதி போலவும், உதித்துப்பிரகாசிக்குஞ் சூரியன் முன் இருள்போலவும், அச்சூரிய கிரணங்களின் முன் பனி போலவும் ஆயின. இதற்குச்சந்தேகமில்லை. இவன் முத்தியடைதலினின்றும் நீதடுத்தற்கு எளியவனல்லனென்று சந்திர சேகரனாகிய சிவபெருமான் இயமனுக்குத் திருவாய் மலர்ந்தருளினார். எ - று. (கக௪)

எம்பிரா னிவையுரைத் தருளவொன் றுரைசெயா னியம னெந்தாய்
நம்பநா யகதிரிசூ லப்படைத் தேவபுன் னகைநி லாவான்
வெம்புமுப் புரமெரித் தருள்பரம் பரதராய் விடையெ னப்போ
யிம்பரா னவரெலா நகைதரத் தென்றிசைக் கெய்தி னனால்

(இ - ள்) எமது சிவபெருமான் இப்படித் திருவாய்மலர்ந்தருளவும், அதனைக்கேட்ட இயமன் ஒன்றுஞ் சொல்லாதவனாய எமது தந்தையே! நம்பா! நாயகா! முத்தலைச்சூலமேந்திய தேவனே! புன்சிரிப்பின் சந்திரிகையால் கொடிய முப்புரங்களை யெரித்தருளிய மேலான பரம்பரனே! அடியேனுக்கு விடையருளவேண்டுமென்று சென்று, இங்குள்ளார் யாவரும் நகைக்கும்படி தன் தென்றிசையடைந்தான். எ - று. (கசுரு)

ஈதுநஞ் சிவனருட் கங்குலின் பெருமைமற் றிதனை யுள்ளக்
காதலிற் பெரிதிழைப் பவர்பெறும் பதவியார் கழறு கிற்பார்
ராதியிற் சிவநிசிக் குறப்பவம் புகலமற் றறிதி ரெனாச்
சூதமெய்த் தவன்மொழிந் திடமுனித் தலைவர்கை தொழுது நின்றார்.

(இ - ள்.) இதுவே நமது சிவபெருமானுடைய திருவருள் பெருகுஞ் சிவராத்திரி. மகிமை. இதனை மனவிருப்போடு மிகுதியாக அநுஷ்டிப்பவர்கள் அடையும் பதவியை யாவர் சொல்லுவார்? ஆதிகாலத்தில், சிவராத்திரியுண்டாகிய காரணத்தைச்சொல்ல, அறிந்து கொள்ளுங்களென்று, உண்மைத்தவத்தையுடைய சூதமுனிவர் சொல்ல, முனிசிரேஷ்டர்கள் கைகளைக்கூப்பி வணங்கி நின்றார்கள். எ - று. (கசுசு)

**கலிவிருத்தம்.**

கற்ப மீறுபட் டுந்திக் கமலவீட்
டிறப்பு ரந்துல கீன்றவ னிற்றுறப்
பெற்றெ ழுந்த பிரளயத் தாருயிர்
முற்று முற்ற முடிந்தெழு கங்குலின்.

(இ - ள்.) ஒரு கற்பமழிந்து, திருமாலின் உந்தியிலுதித்து, தாமரை மலரிருக்கையிலிருந்து உலகினைப் படைத்த பிரமதேவன் இறக்க, அப்பொழுதுண்டாகிய பிரளய வெள்ளத்திலே அரிய உயிர் வகைகள் யாவும் அழிவடைய உண்டாகிய இரவில். எ - று. (கசுஎ)

யாம நாலு மிருந்துமை யாளிளங்
காமர் வெண்பிறைக் கண்ணியற் பூசியாச்
சேம வல்லிருட் சென்றகடைத்தலைத்
தோமில் வையந் தொடங்குறுந் தொல்லைநாள்.

(இ - ள்.) அந்த இரவின் நான்கு சாமங்களிலும், உமாதேவியார் இளமை தங்கிய அழகிய வெண்மையாகிய பிறைச்சந்திரனை யணிந்த சிவபெருமானைப் பூசைசெய்து கொடிய இருளின் புதையலாகிய அவ்விரவு நீங்கிய கடைசியில், பண்டுபோலக் குற்றமில்லாத உலகினைப் படைக்கத் தொடங்கிய காலத்தில். ()

எந்தை நானுனை யேத்திய கங்குலை
சிந்தை கூர்சிவ ராத்திரி யென்றுபோ
தந்து நோற்றவர் சாயுச்சி யம்பெறப்
புந்தி கூர்ந்தரு ளென்றடி போற்றினள்.

(இ - ள்.) எமது தந்தையே! அடியேன் தேவரீரைப் பூசைபுரிந்த இவ்விரவிற்கு எல்லோருஞ் சிந்திக்கத்தக்க சிவராத்திரியெனும் பெயர்தந்து, இவ்விரத்தை நோற்றவர்கள் சாயுச்சியபதவி யெய்துமபடி திருவுளங்கொண்டருளவேண்டுமென்று திருவடிகளைப் பணிந்தனர். எ - று. (கசுகூ)

ஆக விறசிவ ராததிரி யாகிய
தீதி லாமையு மின்னுமோா காரண
மோது றுஞசிவ ராத்திரி யுறபவந
தீதின மாதவா கேட்கெனச செபபுவான்.

(இ - ள்) ஆனபடியால், அது சிவராததிரி தினமாயிறறு. இதுவேயல் லாமலும சிவராததிரியின உறபததிககு வேறோர் காரணமும் நூல்கள சொல் லும். குற்றமற்ற பெருநதவமுடைய நைமிசாரணிய முனிவாகளே! அதனையுங கேட்பீாகளாகவெனச் சூதமுனிவா சொலலுகினறனா. எ - று. (௧௭௦)

ஆதி நாரண னம்புயத தந்தணன்
காது வெஞசமா தமமிற கனனறனர்
தீதி லைமூகருஞ சினநதிரு கிசசெருப
போது நூறு வருடம் புரிநதனா.

(இ - ள.) பூாவததிலே, திருமாலும தாமரை மலரிலுள்ள பிரமனும் மிகக் கொடிய விரோததறினுலே தஙகளுககுள கோபஙகொணடவாகளாய, தீமையை யுணடு செயயததகக கோபமதிகரிதது, நூறுவருஷ காலமவலரயில பெரும போாபுரிநது நின்றாகள. எ - று. (௧௭௧)

நானமு கனபிர மாததிர நாரணன
மேனமு கநதெழ வேணடி விடுததன
ஞனமு கனபட நாரண வததிர
மேனமு குநதன வெகுளியி னேயினுன்.

(இ - ள) சதுாமுகப பிரமன, விஷ்ணுமூாததியின் மேறபோய்ப் பாயும் படி பிரமாஸதிரததைப் பிரயோகஞசெயதான. அதனைககணட முகுநதனுகிய விஷ்ணுமூர்த்தி கோபததோடு அநதபபிரமன் மேறபோய்ப்படுமபடி நாரா யணுஸதிரததை அதன பினனாப் பிரயோகஞசெய்தாா. எ - று. (௧௭௨)

ாணடி றநது படுவ ரிவரெனத
தூணடு மததிர முனனரிற றேன்றியே
நீணட சோதி நிலவணி செனனியான்
காணட குஞசெங கனறபிழம பாயினுன்.

(இ - ள.) இஙகே இவாகளிருவரும இறப்பாகளென்று, மிகக சோதிமய மான இளமபிறை தரிதத திருமுடியையுடைய சிவபெருமான அவாகள அஸ திரஙகட்கு முறபட வெழுநதருளி, யாவருங காணுதற்குரிய செவநத அககி னிப பிழம்பாயினா. எ - று. (௧௭௩)

அனன காலையி லாஙகவ ரததிர
மென்னை யாளுடை யானெதி ரேறறிடச
சன்ன மாகிவெண சாமபரி ஞயது
மினனோ பாகனை யாாவியந் தேததுறுா.

(இ - ள.) அககாலததில், அவர்கள்விடுதத அஸதிரஙகளிரணடும், என்னை அடிமையாகவுடைய சிவபெருமானை யெதிாக்கவும, அற்பததன்மையுடைய தாய வெள்ளிய சாம்பராயப் பொடிபட்டன. ஆதலால உமாதேவிபாகராகிய சிவபெருமானை எவர்தாம் வியநது துதிசெய்யாதவாகள்? எ - று. (௧௭௪)

மாக திங்கள் வருமபதி ஞன்கினன்
ருக நீடிரு ளததம கன்றபின
னேக நாத னிலிங்கமுற் றெய்தினன
வேக நீததவா வநதடி வீழ்ந்தனா

(இ - ள்.) மாசி மாததகிலவரும் பதினுன்காந திதியாகிய சதூாததசித் தினததில், செம்மையாக மிகக இருளேயுடைய நரோததிரி நீங்கிய பிறகு, ஒப் பற்ற தலைவராகிய சிவபெருமான் (சோதிப்பிழம்பின் வடிவைக கரநது) சிவ லிங்கததிற் கலநதருளினர். கோபாவேசமொழிகத பிரமவிஷ்ணுககளவநது அப்பெருமான் திருவடிகளை வணங்கிஞாகள். எ - று. (கள௫)

ஐய நின்னை யளவறுப பாரெவா
வெயய பனறியு மனனமு மேயயாரு
செய்ய வூழி திரிநதுநிற கணடிலேம
பொயயி லன்பின ருளளம புகுநதனே.

(இ - ள்.) ஐயனே ! தேவரீரை யளவிட்டுணர வல்லவர் யாவா ? கொடிய பன்றியாகவும அனனமாகவும வடிவெடுததுத் தேடிய நாஙகள இருவரும எண ணிறநத ஊழிகாலஙகளாகத திரிநதும தேவரீரைக கணடோமிலலே.பொய்மை யில்லாத உணமையடியவாகள உளளமே யிடமாகப் புகுநதிருநதனை யாதலால.

என்ன மாதவஞ செய்தனம் யாங்கண்மற
றுனன தினனுருந கடபுலந துறறனம
பனன கபபணி யாயினிப பஙகயப்
பொனன டிததுணை போறறப புரிதியால்.

(இ - ள்.) அடியேஙகள் எவ்வகைப பெருநதவஞ் செயதோம். தேவரீ ருடைய இனிய திருவுருவததைக கணகளாற் றரிசிககபபெறறோம. அரவ பூஷணராகிய இறைவரே ! இனியேனும, தேவரீருடைய தாமரை மலாபோ லும் அழகிய உபயபாதஙகளை யாச்சிககத திருவருளபுரிதல வேணடும.

இற்றை வைக லிருட்படு கங்குலைப
பெற்ற மேறும பிரானிர வெனறுயிா
முறறு மோதவு நோறபவா முததிபெற்
றுறற பாவ மொழியவும வேணடுமால.

(இ - ள.) இனறு தினத்தில், இருள்மிகுநத இவவிரவை இடபவாகன ராகிய சிவபெருமானுககுரிய சிவராததிரியென்று ஆனமாககளெல்லாம சொல் லவும், இவ்விரததை யநுஷடிப்போா முததியெயதி, அதுகாறும அவாக ளியறறிய பாவஙகளை விலகவும் அநுகக்ரகிககவேணடும. எ - று. (களஅ)

என்று வேண்டி யிரநதன ரெமபிரா
னன்ற வாககவ வரமளித தானரோ
மன்ற லநதாள வோன்மல ரோனெடும
புனமுரு ழிறசம ரறறுடன் போயினை.

(இ - ள.) என்று பிராாததிததுப் பலவாறு யாசிததாாகள். எமது சிவ பெருமான அவவாறு வேணடிய அப்பிரம விஷ்ணுக்களுககு அப்படியே வரந தநதருளினா. மணஙகமழுந துளவமாலையணிநத திருமால தாமரை மலரி

ஆள்ள பிரமதேவனு இழிதொழிலாகிய போரசெயதலையொழிநது உடனே தம்மிடஞ் சேரநதனன. எ - று. (கஎகூ)

செங்கணேறுடை யான்சி வராததிரி
யங்க ணுறற தறிநத திசைததனம
பொஙகு கஙகுற் புனிதமற றெமமனோ
தஙக ளாலு முரைககத தகுவதோ.

(இ-ள்.) சிவநத கோபககணணையுடைய இடபததைவாகனமாககொணட சிவபெருமானுககுரிய சிவராததிரியானது, இலவுலகததில உறபவிதத சரிதையைத தெரிநதமட்டிற்சொன்னேம. விசேடிதத அச்சிவராததிரியின மேம்பாடுகள எம்மைபபோனற பிறராலும் சொலலததகுவனவோ? எ - று. (கअ0)

ஆதி நாளி னரும்பிய நோனபினை
யோதி லுணமை யறிநதெவ ரோதுவரா
ரது நோற்பவா தஙகளை யெமமனோ
மாதொா பாக னெனநதொழு வாரரோ.

(இ - ள பூரவகாலததிலுணடாகிய இச்சிவராததிரி விரததததைச் சொல்லததொடஙகினுல, அதன உணமையை நனகுணாநதுரைபபோா யாவர்? இவ விரததததை யநுஷடிபபவாகளை, எனனையொததவாகள உமாதேவியை ஒப்பற்ற வாமபாகததிலுடைய சிவபெருமானேயெனறு பணிவாாகள். எ - று. (கअக)

இநத மாவிர தததினை யெமபிரா
னநதி பாலெடுத தோதவந நாண்முதற்
கநத வேளயன காளா கடவுளா
விநதை கேளவ னிமைநதனா மெய்ம்மையால்.

(இ - ள.) இநத மேலான விரததததை, முறகாலததில எமது சிவபெருமான் திருநநதிதேவருககு எடுததுபதேசிகக, அநதக காலமுதலாகக குமாரசுவாமி பிரமதேவன மகாகாளா பிறதேவாகள திருமகள கொழுநனுகிய திருமால ஆகிய இவாகள யாவரும உணமைப பகதியோடு அநுஷடிததாாகள. எ . று.

**கலிநிலைத்துறை.**

உரைதந னருசிவ ராததிரி விரதமுற றுமககு
விரைநத வாாசடை யவனுடை விரதமொன றுளது
கரைதத சிநதையிற கேடகுதி ரெனறனன கருணை
யிரைதத சிநதையன சூதனமற றுஙகவாக கியமபும

(இ . ள.) கிருபை மிகுநத மனதையுடைய சூதமுனிவா, சிவராததிரி விரதப் பிரபாவ முழுவதையும உஙகளுககு எடுததுச் சொனனேம. மணம்பொருந்திய நெடிய சடையையுடைய சிவபெருமானுககுரிய விரதம் மறறொன்றுள்ளது. அதனை மனவுருககததுடன கேடபீாகளாகவென்று, அநத நைமிசாரணிய முனிவாகளுககுச் சொலவாராயினா. எ - று. (கअஙு)

விரிதத செஞசடை யெநதைகே தாரமா விரதந
தெரிதது ணாததுறி னெமமுமை யடஙகுமோ சிறியேந்
தரிதத வாறுமக குணாததுது மெனறனுந தாழாப
புரிதத புனசடை மாதவா கேடபது புரிநதாா.

(இ - ள்.) விரித்துள்ள செவந்த சடையையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானுக்குரிய சிறப்புற்ற கேதார விரதத்தைத் தெளிந்து அறிவிக்கத் தொடங்கினால், எம்மளவில் அடங்குமோ? அடங்காது. அடியேன் மனதிற் றெளிந்தபடி உங்கட்கு உணர்த்துகின்றேன் என்று திருவாய்மலர்ந்தருளவும், முறுக்கிய சிறு சடைகளையுடைய பெருந்தவத்தினரான முனிவர்கள் வணங்கிக் கேட்கத் தொடங்கினார்கள். எ - று. (க௲௪)

பனிப்ப டாம்பொதி யிமவரைக் கொடுமுடி பலவுட்
டனித்த தோர்முடி கைலைபோன் றுளததன் றன்மை
தொனித்து ணர்த்துறின் வெள்ளியொத் தவிரொளி துளங்குங்
கனித்த வன்பொடு முறைவது பிறைமுடிக் கடவுள்.

(இ - ள்.) பனியாகிய [படாம்] போர்வை பொதிந்துள்ள இமாசலத்தின் கொடுமுடிகள் எண்ணிறந்தவற்றுள்ளே, தனியாயுள்ள ஒரு கொடுமுடி திருக்கைலையைப் போன்றிருக்கின்றது. அக்கொடுமுடியின் றன்மையைச் சொல்லியுணர்த்தத் தொடங்கினால் வெள்ளிபோலப் பிரகாசிக்கும் ஒளி விளங்கிக்கொண்டிருக்கும் அக்கொடுமுடியில், இளம்பிறைச் சந்திரனைச்சூடிய திருமுடியையுடைய சிவபெருமான் மிகுந்த ஆசையோடு எழுந்தருளியிருப்பது. எ - று.

திசையெ லாமபட வெள்ளொளி விரிப்பது சிமையத்
தசைவி லாமுழு மதியநின் றவிர்வதொத் திலங்கும்
விசைய மாதவ ருளத்தொடும் பொருவது விண்ணோர்
வசையி லாரண னுமுகன் றொழுதகும் வணங்கி,

(இ - ள்.) அக்கொடுமுடி திசைகளினெல்லாம் பரவும்படி வெள்ளியகாந்தியைப் பரப்புவது. அதனுச்சியில் சலனமில்லாத பூரண சந்திரனிருந்து ஒளி செய்வதுபோல விளங்கும். வெற்றிபொருந்திய பெருந்தவசிகள் இதயத்தையும்போன்றது தேவர்களும் பழியற்றவர்களாகிய விஷ்ணு பிரமன் முதலானோரும் கைகூப்பி வணங்கத்தக்கது. எ - று. (க௲௬)

அருவி நாலிரு புறத்தினு மிடையறு தலைக்கு
மருவா ருஞ்சினைக் கற்பகம் பூழினம் மந்தாரங்
குருந்த றுந்துணர்க் குங்குமஞ் சண்பகங் குருந்தம்
விரிக ருஞ்சினை நரந்தைதே மாவன வெள்ளில.

(இ - ள்.) அருவியாறுகள் அஷ்டதிக்குகளிலும் ஓயாமல் இழிந்துகொண்டிருக்கும் மணம்பொருந்திய அரும்புகளையுடைய கற்பக விருட்சமும் அகில விருட்சமும் மந்தாரமரமும் செந்நிறந்தங்கிப் பரிமளிக்கும் மலர்க்கொத்துகளையுடைய குங்குமமரமும் சண்பகமரமும் குருந்தமரமும், மிக்க கருநிறந்தங்கிய கிளைகளையுடைய நாரத்தை மரமும் தேமாமரமும் காட்டு விளாமரமும். எ று.

இவையெ லாம்பொதிந் திருட்படாம் போர்ப்பதவ் விருளை
நவம ணிக்குவை துவன்றிநின் றுறுப்பன நளிநீர்க்
கவர்நெ டுஞ்சடை யெம்பிரான் றிருநடங் காண்பான்
றவறின் மாதவ ரிமுதற் றேவர்க ளு சரிப்பார்,

(இ - ள்.) இவையாவும் நெருங்கி இருட்படலை போர்த்துக்கொண்டுள்ளது அவ்விருட்படலையை அக்கொடுமுடியிலுள்ள நவரத்தினக் குவியல்கள் நெருங்கியிருந்து விலக்குவன. குளிர்ச்சி தங்கிய கங்காஜலத்தைக் கவர்ந்திருக்கும்

நீண்டசடைமுடியையுடைய எமதுசிவபெருமானது திருநடனத்தைத்தரிசிக்க, தவறுதலில்லாத பெருந்தவசிகள் திருமால முதலிய தேவர்கள் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள். எ - று. (கஅஅ)

தெய்வ யோகிகள் கின்னர ரியக்கர்கந் திருவர்
மெய்கொ டெய்வமால் வரையினைச சூழநதனர் விரும்பி
மைகொள் கண்டனை வணங்கினா மாதவம் பயிலவாா
பொய்யி னுன்மறை யுசசிவீற றிருபபதப் பொருப்பு.

(இ - ள்.) தெய்வீகந தஙகிய யோகிகளும் கின்னரர்களும் இயககாகளும் கநதாவர்களும் உணமை தஙகிய தெய்வீகம்பொருநதிய இப்பெரிய மலையை விருப்போடு பிரதக்கணஞ்செய்து, கருநிறநதஙகிய ஸ்ரீகணடததையுடைய சிவ பெருமானை வணஙகியவாகளாய மேம்பட்ட தவததைச் செயவாாகள். ஆத லால அககொடு முடியானது உணமையாகிய நானகுவேதஙகளின உச்சிபோல வீற்றிருப்பது. எ - று. (கஅகூ)

இனைய மால்வரை யுசசிவா ளரிசுமந தெடுதத
புனைம ணிததவி சுமபரி னுமையொடும பொருநதிக்
கனைபொ லனகழ லிநதிரன கணதடுதொடு மிறைஞச
வினைய மாநிலத் துயிாககளித திருநதனன் விமலன.

(இ - ள்.) இததகைய பெரிய மலையினுச்சியில், ஒளிதஙகிய சிஙகஙகளாற் சுமநதுகொணடிருககும் அலஙகரிககததகக இரததினமயமாய் விளஙகிய ஆச னததின்பேரில, உமாபிராட்டியாரோடும் பொருநதி, ஒலிககினற பொனனுலா கிய வீரகணடாமணி தரிதத தேவேநதிரன தன் பரிவார தேவர்களுடன வணஙக, இநத நெடிய நிலவுலகததிலுள்ள ஆனமாககளுககுத திருவருள் புரிநதுகொண்டு மலரகிதராகிய சிவபெருமான வீறறிருககினறனா. எ - று.

பரிதி வானவன் பனிமதிக் கடவுண்மா தவததோா
குருதி யாழிவெம படையின னுனமுகக குரிசி
விருடி நாரதன முதலினோ ருமபுரு வியககா
கருணை கூாசன காதியா யோகிகள கணததோா.

(இ - ள்.) சூரியபகவானும், குளிர்ச்சிதஙகிய சநதிரதேவனும், பெருநதவ சிகளும, உதிரமபடிநத கொடிய சககராயுதநதாஙகிய விஷ்ணுமூர்த்தியும், நான்கு முகங்களையுடைய பிரமதேவனும், நாரதமுனிவா முதலானவாகளும், துமபுருவரும் இயக்கரும, கிருபை மிகுநத சனகனுதிய நாலவரும யோகிகளும் சிவகணஙகளும். எ - று. (ககூக)

வலலை கேளவனு மரகதப பலகையொத் தகலுங
கலவ மாமயிற பாகனு நந்தியுங கடல்சூழ
நிலநெ டுந்திசைப பாலரும வசிட்டனு நிரைத்தார்
மலர யன்றனித தலைதுமித தோனவை மருங்கின்.

(இ - ள்.) வல்லபை கணவராகிய விநாயகப்பெருமானும், மரகதத்தாலா கிய பலகையைப்போல விரித்தாடுகின்ற கலாபததையுடைய சிறநத மயில்வாக னத்தையுடைய குமாரக கடவுளும், திருநநதிதேவரும, கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகததின் அஷ்டதிக்குப் பாலாகளும், வசிஷ்டமுனிவரும், தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமனுடைய ஒப்பறற சிரசைககொய்தருளிய சிவபெரு மான் திருச்சபைக்கருகே வரிசையா யிருநதார்கள். எ - று. (ககூஉ)

மணிபுகுந்தெழுங் கடுங்கதிர் குடகடல் வைக
வணைய நன்னெறிக் கடன்முறை யமைத்தபி னருளாற்
றநயா தங்கிளை நட்டவர் தம்மொடுந் தழீஇப
புனித வுண்டிகொண் டொருதனித் தருபயைக்கட் பொருந்தி.

(இ - ள்.) வீட்டிற்குவந்து உதிக்கின்ற உஷ்ணத்தைத் தரும் சூரியன் மேற்கடலில் மறைய, அப்போது செய்தற்குரிய நல்ல சந்தியாவந்தனத்தை விதிப்படி நடத்தியபின்னர், கிருபையோடு புத்திரர் பந்துக்கள் சிநேகரென்னும் இத்தகையினரோடு கூடி, புனிதமான ஆகாரத்தையுண்டு ஒப்பற்ற சிறப்புடைய தருப்பைப்பாயிற்படுத்து. எ - று. (௨அஅ)

மற்றை வைகலிற் றுயிலொரீஇ வருபுன லாடி
யுற்ற வேதியற் கீசனை யுமையொடு மொருங்கே
பொற்ற சும்பொடு முதலிய கொடுத்தடி போற்றிப்
பெற்ற மேறியோன் றொண்டரோ டருந்துறப் பெறுவார்.

(இ - ள்.) அன்றிராத்திரியில் நித்திரைநீங்கி விடியற்காலத்தில் ஊற்றுநீரில் ஸ்நானஞ்செய்து அங்குவந்துள்ள வேதியருக்குச் சிவபெருமானைத் தேவியோடு அம்ஶூர்த்தங்களாகப் பிரதிஷ்டித்து பொற்கலசத்தோடு மற்றப் பொருள்களையுந் தானமாகக் கொடுத்து, அவர் பாதங்களை வணங்கி, இடபாரூடராகிய சிவபெருமானுடைய அடியாருடன் பாரணைசெய்ய எண்ணிய வரங்களை யடைவார்கள். எ - று. (௨அ௯)

செய்ய தாமரைப் பீடிகை யினிதுறை தேவி
பொய்யில் கேள்வியிற் றேற்றனள் பாமபணைப் புனிதன்
மெய்கொண் மார்பக மினிதுவீற் றிருந்தனள் விருப்பித்
தெய்வ நோன்பித னிலைமையார் முடிவுறத் தெரிப்பார்.

(இ - ள்.) செந்தாமரைப்பூவில் இனிதாக வசிக்குந் திருமகள் உண்மையுபதேசத்தால் இவ்விரதத்தை யநுஷ்டித்து, சேஷசயனமுடைய விஷ்ணுவின் திருமேனியிலுள்ள திருமார்பில் இனிதாக ஆசையோடு வீற்றிருந்தாள். ஆதலால், தெய்வீகமுடைய இவ்விரத மகிமையை எவர்தாம் முழுதுந் தெரிவிப்பவர்?

திணித டஞ்சினைக் கற்பகத் திருநிழ லிறைவ
னணிதருங்கதி விரதமீ திழைத்தர னருளான்
மணிவ டஞ்சுமந் திளகிய வனமுலை தாங்கிப்
பணிநு சுப்புடைப் புலோமசை யவளொடும் பயின்றான்.

(இ - ள்.) வலிய விசாலித்த கிளைகளையுடைய கற்பகவிருட்சத்தின் சிறந்த நிழலில் வீற்றிருக்கும் இந்திரன் மோட்சந்தரும் இவ்விரதத்தை யநுஷ்டித்து சிவபெருமான் கருணையால், இரத்தினமாலைகளணிந்து மென்மைத்தன்மை வாய்ந்த அழகிய குசங்களைத்தாங்கி ஒசியும் இடையையுடைய இந்திராணியோடு கூடியிருந்தான். எ - று. (௨௯௧)

வேணி லைங்கணைக் கிழவனிவ் விரதநோற் றவனுப்
பான லங்கருங் கட்குடை குழைவழி பரப்பும்
ஈன வார்குழ விரதிவெம் முலைநலங் கவர்ந்தான்
மீன வார்கொடி யுயர்த்திமூ வுலகையும் வென்றான்.

(இ - ள்.) வேனிற்காலத்திற்குரிய (தாமரை மா அசோகு முல்லை நீலமாகிய) ஐந்து மலரப்பாணங்களையுடைய மன்மதன் இவ்விரதத்தை யநுஷ்டித்தவனாகி, செவிவரையிலோடிய நீலோற்பல மலர்போன்ற அழகிய கரிய விழிகளையும் மணங்கமழ்ந்து நீண்டுள்ள கூந்தலையுமுடைய இரதிதேவியின் விருப்பந்தருங் குசங்களைத் தழுவும் இன்பமெய்தினான். நெடிய மீனக்கொடிதாங்கி மூவுலகங்களையும் வென்றான். எ - று. (உ௯உ)

வையம் யாவையும் படைத்துயி ரனைத்தையும் வழங்குஞ்
செய்ய தாமரைக் கிழவனீ தினைழ்ந்தனன் சினவேன்
மைய ரித்தடங் கட்சிறு குதலைநா மடந்தை
யெய்த நாவகத் திருந்தின னிருந்தன னின்னும்.

(இ - ள்.) உலக முழுவதையும் படைத்து உயிர்களையெல்லாம் படைக்குஞ் செந்தாமரை மலரிலுள்ள பிரமன், இவ்விரதத்தை யநுஷ்டித்தவனாய், கோபந்தங்கிய வேல்போன்ற அஞ்சனந் தீட்டிச் செவ்வரி படர்ந்துள்ள பரந்த விழிகளையும் இளமைவாய்ந்த மழலைச் சொல்லையுமுடைய சரசுவதிதேவி தன் நாவினிடத்தி லிருக்கப்பெற்று இன்னும் அங்ஙனமே வைத்திருக்கின்றனன். எ-று.

வான வர்க்கினி தாரமு தளிவான் வழங்குந்
தான வப்பெயரச் சந்திர னோற்றனன் றவத்தான்
மேனி வந்தழு வொன்பதென் றெண்ணினிடை விரிந்த
பான லங்கருங் கண்ணியாப் புணர்ந்தனன் பரிவான்.

(இ - ள்.) தேவர்களுக்கு இனிமை நிறைந்த அமுதத்தைக் கொடுத்து, ஆகாயமே வாசஸ்தானமாகவுடைய அமுதகதிரோனாகிய சந்திரன், தான் அநுஷ்டித்துவந்த இவ்விரதத்தால் ஆகாயத்தின்மீதோங்கிய தொகையில் இருபத்தேழென்று பெருகிய நீலமலர்போலும், அழகிய கருநிறம்வாய்ந்த விழிகளையுடைய மாதர்களை அன்புடன் மனைவியராகக்கொண்டு கூடினன். எ - று.

விரத மின்னண நோற்றவ ரிளநிலா மிலைச்சு
மரன டித்துணை புகுந்தவ ரளவிறந் தொழிந்தார்
சரத மீங்கிது சத்தியஞ் சத்தியந் தவங்கூர்
விரத மாதவத் தலைவிர்கா ளறிந்தவா விரித்தேம

(இ - ள்) இவ்விரதத்தை இப்படி அநுஷ்டித்தவர்களும், இளஞ்சந்திரனை யணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் திருவருளிற் சேர்ந்தவர்களும், கணக்கிலலாதவர்களாவார்கள். அவர்களில் நாம் அறிந்துள்ளவரையிற் சொன்னோம். நியமமான பெருந்தவமுடைய முனிவர்களே! இஃதுண்மை உண்மை உண்மை. எ - று. (உ௯௫)

வெள்ளி வெண்பிறைக் கண்ணியோற் கினமொரு விரத
முள்ள வாறெடுத் துணர்த்துது மினிதுகேட் டுவப்பீர்
தெள்ளு சிந்தையீ ராங்கதன் றிருப்பெயர் சிவன்பால்
வள்ள யிற்படைச் சூலத்தின் பெயரது வழங்கின.

(இ - ள்.) வெள்ளிபோலும் வெண்ணிறந்தங்கிய பிறைச்சந்திரனை மாலையாகவணிந்த சிவபெருமானுக்குரிய வேறோர் விரதத்தை உள்ளவாறு விளக்கிச் சொல்லுகின்றோம், இனிதாகக் கேட்டுக் களிப்பீராக. தெளிந்த மனமுடைய

முனிவர்களே! அதன் சிறந்த பெயரைச் சொல்லுமிடத்தில் சிவபெருமான் பாலுள்ள வலிதங்கிய கூரிய ஆயுதமாகிய சூலாயுதத்தின் பெயரையுடையது.

ஆயி ரம்பெருங் கதிரவன் றென்றிசை யகன்று
பாய வுத்தரம படர்முதற றிங்களிற பதினுன்
கேய பிற்றைபி னிருங்கதி ரகக்குரா ளெழுந்து
தூய தணபுனல் குடைந்தாதங் குறையெலாந தொலைத்து-

(இ - ள்) ஆயிரங் கிரணங்களையுடைய பெருமைதங்கிய சூரியன தென்றிசை நீங்கி வடதிசை செல்லும் [உத்தராயணத்தின்] முதலாகிய [தை] மாசத்தில், பதினுன்காந திதியாகிய சதுாத்தசி கழிந்த மறுதினத்தில, சூரியோதய காலத்திலெழுந்திருந்து புனிதமுடைய குளிர்ந்த நீரில் ஸ்நானஞ்செய்து தங்கள் நித்திய கர்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு. எ - று. (௨௯எ)

இழைத்த செம்பொனூல் வெள்ளியா லாவதெம பெருமான
குழைத்த செஞ்சுடாத திருவுரு வியற்றிவெங கொழுங்கூா
தழைத்த முத்தலைச சூலமற் றுங்கதிற சமைத்து
விழைத்த வன்பினே டெம்பிரான மென்கரத் தமைத்து

(இ - ள.) செம்பொனனலாவது வெள்ளியாலாவது எமது சிவபெருமானுடைய தளிர்விட்ட செவ்விய அக்கினிமயமான திருவுருவத்தைச் செய்து, கொடிதாகிய மிகக கூரமைவாய்ந்த மூவிலை வடிவாயுள்ள சூலாயுதத்தை அவ்வுலோகத்தினலேயே செய்து விருப்பமிகுந்த அன்போடு எமது சிவபெருமானுடைய மெல்லிய திருக்கரத்திலமைத்து. எ - று. (௨௯அ)

முன்னு ரைத்திடு விரத நூன முயறசியின் முறையே
பொனனின் முற்றிய பரமனை யமைத்தவன பூசை
யன்ன வாறமைத் தவன்றிருத் தொண்டாபா லருளி
னன்ன லமபுரிந் தபபடி நோறபரா னலலோா.

(இ - ள்.) முனனே புகனற விரதத்தை நூனமுறைப்படி பொன்னலாகிய சிவபெருமானது திருவுருவத்தைத் தாபித்து அவருக்குச் செயயும பூசை முறையையு மப்படியே நடத்தி, அவ்விறைவனுடைய வுண்மையடியாரிடத்தும் கிருபையோடும் உபசாரங்கள செய்து அங்ஙனமே இவ்விரதத்தையும நலலவா கள அநுஷ்டிப்பாாகள் எ - று. (௨௯௯)

இந்த நோன்பிழைத் திருநிலத் தினிதுவாழ்ந் திகு
சந்த வெமமுலை யுமையொரு பாகனைத் தமது
சிந்தை யானினைந தென்புற வுருகினா சிறந்தார்
விநதை கேளவனும விரிஞ்சனும பெறபபெறு வீடு.

(இ - ள்.) இந்தப் பாசுபத விரதத்தை யநுஷ்டித்து இப்பெரிய பூமியில் இனிதாக வாழ்ந்து, ஒளிவிடுகின்ற களபமணிந்த விருப்பந்தரும குசங்களையுடைய உமாபிராட்டியை யொப்பற்ற வாமபாகத்திலுடைய சிவபெருமானைத் தமது மனதிற் றியானஞ்செய்து, எலும்பும் உருகத்தக்க மனவுருக்கமுடையராய், இலட்மிநாயகராகிய திருமாலும், பிரமனும் அடைதற்கரிய வியாபகவீகளில் சிறப்புற்றார்கள். எ - று. (௩00)

இருங்கொடுஞ்சிறைக் கலுழனூர்ந் துகைத்தெழு மிறைவன்
வருநதி யீங்கிது நோற்றனன் வாளெயிற் றசுரன்
பொருங்கடுஞ்சினக் காலநே மியைக்கரம் பொறுத்த
திருந்து நேமியிற் பிளந்தவ னுருயிர் செகுத்தான்.

(இ - ள்,) பெரிதாய வளைந்த சிறகினையுடைய கருடன்மீது ஆரோகணித்துச் செலுத்தித் திரியும் விஷ்ணுமூர்த்தி, இவ்விரதத்தை மிகமுயன்று அநுஷ்டித்தவராய், போர்செய்யத்தக்க கொடுங்கோபமுள்ள வாள்போலும் கூரிய பற்களையுடைய காலநேமியென்னும் அசுரனைத் தன் கையிற்றாங்கிய திருத்தமான சக்கிராயுதத்தாற் பிளந்து அவனுடைய அரிய வுயிரைப் போக்கினார்.

பெருந்த வம்புரி பரசுரா மப்பெரும் பெயரோ
னிருந்து நோற்றன னிறைவனை யிறைமனந் தணவா
னருஞ்ச மாதரு கார்த்தவீ ரியன்றனை யமர்வாய்
வருந்த டக்கையா யிரந்தடிந் தாருயிர் மடித்தான்.

(இ - ள்.) பெருந்தவமியற்றிய பரசுராமரென்னும் மேன்மைதங்கிய பெயருடையவர் சிவபெருமானை க்ஷணகாலமும் நீங்காமல் மனதிற் றியானித்து இவ்விரதத்தை யநுஷ்டித்து அரிய யுத்தஞ்செய்யத்தக்க கார்த்த வீரியார்ச்சுனனை யுத்தகளத்தி லவனுக்கிருந்த விசாலமான ஆயிரங்கைகளையும் வெட்டி உயிரொழித்தார். எ - று. (௩0௨)

நீத்த மாமுகி னிறத்திரு னுந்தியி னெழுந்து
பூத்த தாமரைப் பொகுட்டிரு னுதரவெம் பிணியா
ளுத்த பூம்புறப் புலம்பின னடுங்கினன் றிதுநோன்
பேத்தி நோற்றன னப்பிணி யொழிந்துவீற் றிருந்தான்.

(இ - ள்) நீர் நிரம்பிய பெரிய மேகம்போலும் கருநிறமுடைய திருமாலின் உந்தித்தாமரையினின்றுதித்து, உலகினைப்படைத்த செங்கமலாசனனாகிய திசைமுகன், தனக்குற்ற கொடிய வயிற்றுநோயால உடலங்கிக்க மெய்தி நாத்தழும் பெய்துமடியழுதவனாய், தோத்திரஞ்செய்து இவ்விரதத்தையனுஷ்டித்தான். அவ்வியாதி உடனே நீங்கப்பெற்றவனாய்ச் சுகமெய்தினன். எ-று.

தேவ ராயினு மிருநிலஞ் சிறந்தவ ரெனினும்
யாவ ராயினு மிடையறாப் பெரும்பிணி யினராய்ப்
பாவ ராயுமந் திந்முறை நோற்பரேற் பயின்ற
நோயொ ழிந்துபின் னிருங்கதிப் பெருநல னுகர்வார்.

(இ - ள்) தேவர்களானாலும் பெரிய பூமியில் மேம்பட்டவர்களானாலும், எவர்களானாலும், இடைவிடாத பெரிய வியாதியஸ்தராய பாவிகளாய் வருந்தி இவ்விரதத்தை முறைப்படி அநுஷ்டிப்பார்களானால், அதுவரையில் தாங்கள் அநுபவித்த அவ்வியாதிகளன்று அதன்மேல் பெருமைபொருந்திய பேரின்ப சுகத்தை யநுபவிப்பார்கள். எ - று, (௩0௪)

இத்த னித்திரு நோன்பினை யிருந்திறல் வீர
பத்தி ரப்பெ ரும்பெயரினன் பானுகம் பகன்
றுயத் தாரைத்தன னுகந்து வியாதர்கேட் டுணர்த்த
மெய்த்தி றத்தொடு முணர்ந்தனன் யானுமிவ் விரதம்.

(இ - ள்.) இந்த வொப்பற்றுச்சிறந்த விரதத்தைப் பெருவல்லபம் பொருந்திய வீரபத்திரராகிய பெருமைவாய்ந்த திருநாமமெய்திய கடவுள், பாநுகம்பனெனும் சிவகணநாதனுக்கு முற்காலத்தில் தெளிவாக உபதேசத்தருளினார். அப்பாநுகம்பனிடத்தில் வியாசமுனிவர் உபதேசிக்கப்பெற்று எனக்கு உபதேசித்த இவ்விரதத்தை யானும் உண்மையோடு தெளிந்தேன், எ - று.

உரைத்த னஞ்சிவ விரதமற் றினமொரு விரத
நரைத்த வெள்விடை யவற்குள தாங்கது நவிற்றி
னிரைத்த வார்கட னிலத்தினு ளெவெடுத் திசைப்பார்
விரைத்த வார்சடைக் குரவிர்கா ளறிந்தவா விரிப்பாம்.

(இ - ள்) சிவவிரதங்களாகிய இவற்றைச் சொன்னோம். இன்னொரு விரதம் வெண்ணிறந்தங்கிய இடபாரூடராகிய சிவபெருமானுக்குரித்தாயுளது அதனைச்சொல்லுமிடத்தில், ஒலிக்கின்ற நெடிய கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் எவர்தாம் அதனபிரபாவங்களை விளக்கிச் சொல்லுவார்கள். மலர்மணங்கமழும் நெடியசடையையுடைய முனிவர்களே! இதனைத் தெரிந்தமட்டுஞ் சொல்லுவோம். எ - று. (௩௦௬)

இடப திங்களிற் பூர்வத் தட்டமி யெதிரப்
படவ ராவணி புனிதனைப் பனிவரை பயந்த
மடவ னத்தினைப் பாய்விடை மேற்பட மதியாக்
குடைந் துமபுனல் புலரியி னெழுந்துபோய்க் குடைந்து.

(இ - ள்.) வைகாசி மாசத்தில் வரும் அந்தப் பூர்வபக்ஷ அஷ்டமிதிதியில் விடியற்காலையி லெழுந்து சென்று நீராடத்தக்க நல்லசலத்தில், படத்தோடு கூடிய சர்ப்பாபரணராகிய சிவபெருமானையும், இமாசலமன்னன் பெற்ற இளமைதங்கிய அன்னம்போலும் நடையையுடைய பார்வதி தேவியையும், தாவிச்செல்லும் இடபவாகனத்தின்மீது ஆரோகணித்திருப்பதாகத் தியானஞ்செய்து, ஸ்நானஞ்செய்து. எ - று. (௩௦௭)

ஆடகத்தினால் வெள்ளியா லாவதா ரணங்கை
மாடிருத்திய வரதனை விடையினமேல் வகுத்துக்
கூடு மைவகைக் கவவிய பவித்திரங் கொடுத்து
நீடு கும்பமீப் பொருத்தியே முடிப்பது நியதி.

(இ - ள்.) பொன்னாலாயினும் வெள்ளியாலாயினும் உமாபிராட்டியை ஒருபாகத்திலிருத்திய சிவபெருமானை இடபவாகனத்தின்மேலெழுந்தருளியிருக்கச்செய்து, ஒன்றுயக்கலந்த ஐவகைப்பட்ட [பால் தயிர் நெய் கோமூத்திரம் கோமயம் சாணம் ஆகிய] கவ்வியத்தினால் அபிஷேகித்து, பெருமை மிகுந்த கலசத்தின்பேரில் எழுந்தருளச்செய்து ஸ்தாபிப்பது சிவாகம விதியாகும்.

முன்ன ரெய்திய விதிமுறை முயற்சியி னுறைறுக்
கன்னன் முப்பதுங் கழிந்தொழி காரிருட் சுங்கு
லென்னை யாளுடை நாயக னிணையடி யேத்தி
யுன்ன ருஞ்சிவ கதையுணர் நருந்துயி லொழிப்பார்.

(இ - ள்.) முன்னே கூறப்பட்ட ஆசார விதிப்படி விடா முயற்சியோடு அநுஷ்டித்து, பகல் முப்பது நாழிகையும் நீங்கியவுடன், கறுத்த இருள்மிகுந்த அன்று ராத்திரியில், என்னை யடிமையாகவுடைய சிவபெருமான் உபய திருவடிகளைத் துதிசெய்து, எண்ணுதற்கரிய சிவசரித்திரங்களைச் சிரவணஞ்செய்து அரிய நித்திரையை விலக்குவார்கள். எ - று. (௩௦௯)

ஒழிந்த கங்குலி னுதயவ னெழூச்சிகண் டனபோய்ச
சுழ்ந்த தண்புன றுளைந்துதங் கடன்முறை தொலைத்துப்
பொழிந்த வன்பொடு மாலயந் தொழூதுசூழ் புரிந்து
வழிந்த நீர்க்குட முதலவே தியர்க்கென வழங்கி.

(இ - ள்.) இரவு நீங்கிய சூரியோதயகாலத்தைப் பார்த்து உடனேபோய், சுழித்துக்கொண்டிருக்குங் குளிர்ச்சி தங்கிய சலத்தில் ஸ்நானஞ்செய்து, தங்களுக்கு உரித்தான நித்திய கர்மாநுஷ்டானத்தை நிறைவேற்றி, மிக்க பேரன்போடு சிவாலயமெய்தி வணங்கிப் பிரதக்ஷணஞ்செய்து, நிரம்பிய நீருள்ள பூர்ண கலச முதலியவற்றையும் வேதியருக்கென்று தானங்கொடுத்து. எ - று.

ஆங்க வாக்கெனப் போசன மருந்திய பின்ன
ரோங்கு பாரணஞ் சிவனடித் தொண்டரை யொருங்கே
பாங்கி ருத்தியே நுகர்ந்தவர்க் காவன பகர்ந்து
தேங்கு கங்கையஞ் சடையனைச் சிந்தைசெய் திருப்பார்.

(இ - ள்.) அங்கே அந்தணருக்கு அமுதூட்டிய பின்னர், சிவபெருமானுக்குரிய உண்மையடியார்கள் யாவரையும் கூட்டமாக அருகே வைத்துக்கொண்டு, உயர்வாகிய பாரணம்புசித்து, அடியவர்களுக்கு வேண்டிய தானங்களையளித்து, தேக்கெடுக்கும் கங்கையணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானைத் தியானஞ் செய்துகொண்டிருப்பார்கள். எ - று, . (௩௧௧)

பாற்க டற்றுயில் பண்ணவன் பங்கயத் திறைவ
ளுற்றி சைப்படு மெண்மர்வா னடக்குறுங் கதிர்கள்
வீற்று வேறுள தேவரிவ் விரதநோற் றன்றோ
போற்ற ருந்திறற் றெய்வவா கனத்தொடும் பொலிந்தார்.

(இ - ள்.) திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்யுந் திருமாலும் பிரமாவும் நாற்றிசைகளிலுமுள்ள அஷ்டதிக்குப் பாலகளும் ஆகாயத்திற் சஞ்சரிக்கும் ஒளிருபிகளான சூரிய சந்திரர்களும் வெவ்வேறுயுள்ள பிறதேவர்களும் இவ்விரதத்தை அநுஷ்டித்தல்லவா புகழ்தற்கரிய வல்லமைதங்கிய தெய்வீக மடைந்த வாகனங்களோடு விளங்கினார்கள்? எ - று. (௩௧௨)

ஒருத னிக்குடை விச்சுவ சேனனென் றொருவ
னிருமை யுந்தெரி வசிட்டனால் விரதமீ திழைப்பப்
பொருவ ருந்திறற் காலமூன் றுணர்ந்தனன் கடைபோய்க்
கருமணித்தனிக் கண்டனோ டுறைந்தனன் கயிலை.

(இ - ள்.) ஒப்பற்ற ஏக சந்திரவட்டக் குடையையுடைய விச்சுவசேனனென்னுமரசன், இம்மை மறுமைப் பயன்களையுணர்ந்த வசிஷ்ட முனிவரால் இவ்விரதத்தை யநுஷ்டித்து, சமானமில்லாத திரிகால வர்த்தமானங்களையுந் தெரிந்து, இறுதியில் நீலமணிபோலும் ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானோடு திருக்கைலாயகிரியில் வசித்தனன். எ - று. (௩௧௩)

வீரவேற்படை விதுருத னென்றொரு வேந்த
ஞாதரும்பெரு விரதமி னீதுநோற் றடைந்தான்
மூரி யண்டமே முதலிய மூவுல கியாவும்
யாரு மெய்துறாக் காயசித் தியினொடு மியக்கம்

(இ - ள்.) வீரந்தங்கிய வேற்படையையுடைய விதுருதனென்னும் பெயர் வாய்ந்த ஒரு மன்னவன், மனத்தில் நிறைந்த பேரன்போடு இவ்விரதத்தை யநுஷ்டித்துப் பெருமைதங்கிய சொர்க்க முதலிய மூவுலகங்களின் அரசுரிமை முழுவதையும், ஒருவரும் அடையப்பெறாத காயசித்தியினாலே பரகாயப் பிரவேச சித்தியும் பெற்றனன். எ - று. (௩௧௪)

கடுத்த முப்புர மெரிதரு நகையொடு கடிந்தோ
னெடுத்த தெய்வமா விரதமோ ரெட்டையு மிசைந்தே
மடுத்த வுரைத்திடு விரதமற் றறைகுதும் மாலை
கொடுத்த பொன்மலர்க் கொம்பனா டுளதொரு விரதம்.

(இ - ள்.) பகைத்த திரிபுரங்களை யெரித்தருளும் புன்னகை தோன்றக் கோபித்தவராகிய சிவபெருமானுக்கு உரியனவென்று சிவாகமங்களிற் சொல்லப்பட்டுள்ள தெய்வீகந்தங்கிய சிறந்த எட்டு விரதங்களையும் எடுத்துச் சொன்னோம். அதனுடன் சேர்த்துக்கூறிய விரதங்களையும் கூறுகின்றோம். இயாசலமின்றச் செல்லிய பூங்கொம்பையொத்த உமாதேவிக்குரிய சோமவிரதமுமுள்ளது. எ - று.

தினக ரன்செறு கதிர்விரி சித்திரைத் திங்க
ளணைய திங்களைமுற் றிருதரு வெள்ளிநாட் கடிப்பப்
புனைபொ லந்தொடி யுமையினைப் புந்திசிந் தித்து
நனையும் வைகறை தெளிபுனற் கங்கைநீ ராடி.

(இ - ள்) சூரியன் தன் வெவ்விய கிரணங்களைப் பரப்புவதாகிய சித்திரைமாதம், அம்மாதத்தில், பிரதமை திதிகூடிய சுக்கிரவாரம் வந்தபோது, விடியற் காலையில் அலங்காரந்தங்கிய பொன்வளையலணிந்த உமாதேவியை மனத்தில் தியானஞ்செய்து எல்லோரும் நினைக்கத்தக்க தெளிந்த நீரையுடைய கங்காஜலத்தில் ஸ்நானஞ்செய்து. எ - று. (௩௧௫)

முறைதி னக்கடன் முடிப்பன யாவையு முடித்து
நறைம லர்த்தொடை மாலிகை மண்டப நாற்றி
மறைப கர்ந்திடு மந்திர வரன்முறை வழாது
நிறைதரும்புனற் பூரண மணிக்குட நிரப்பி.

(இ - ள்.) முறைப்படிச் செய்யவேண்டிய நித்திய கடன்களையெல்லாஞ் செய்து முடித்து, பூசாமண்டபத்தில் தேனொழுகும் மலர்மாலைகளையும் மணிமாலைகளையுந் தொங்கவிட்டு, வேதத்திற்சொல்லிய மந்திரங்களின் கிரமந் தவறாமல் இரத்தினத்தாலாக்கப்பட்ட பூரண கும்பத்தைவிசேஷநீரினால் நிரப்பி.

புதிய பட்டுடை விரித்தணி மணிக்குடம் பொதிந்து
மதிமு டிச்சடைப் பரமனோ மருங்குற வாழும்
விதுநு தற்பசுங் கொடியதி னுறைவதா விரும்பிப்
பொதிய விழ்ந்திடு நறுமல ரருச்சனை புரிந்து.

(இ - ள்) புதிய பட்டு வஸ்திரங்களைப் பரப்பி யழகிய ஸ்ரீநூதன கலசத்திற்குத் தரித்துச் சந்திரனைச் சடையிலணிந்த சிவபெருமானது ஒப்பற்ற வாமபாகத்திற்பொருந்த வீற்றிருக்கும் பிறைபோலுநெற்றியையுடையமரகதக்கொடிபோலு முமாபிராட்டியாரைக் கலசத்திலெழுந்தருளியிருப்பதாய், இதழ்கள் விரிந்த மணந்தங்கிய மலர்களா லருச்சித்து விரும்பி எ - று. (௩௧அ)

புரிய வேண்டுவ யாவையும் விதிமுறை போக்கி
யரிவை முன்னிற் சருக்கரை யாரமு தமைத்துத்
தெரிம றைக்குல மங்கைய ரெண்மரைச் சிந்தித்
தருக்கு காதலிற் பூசனை புரிந்தவர்க் குதவி.

(இ-ள்) செய்யவேண்டிய பூசைகளையெல்லாம் விதிமுறையாக முடித்து, அத்தேவியார் சந்நிதியில் சாக்கரைப் பொங்கல்வைத்து நிவேதனஞ்செய்து தெளிந்த வேதியர்குல மாதர்கள் எட்டுப் பேர்களை வருவித்து, அவர்களையு மாபிராட்டியாராகப் பாவனைசெய்து, மனமுருகத்தக்க ஆசையோடவர்களைப் பூசித்து அக்கலசமுதலியவற்றை யவர்களுக்குக் கொடுத்து. எ - று. (௩௧௯)

கொடியி டைப்பசுங் கோமளை யாலயங் குறுகி
விடுசு டர்ச்செழுந் தீபமே முதலிய விதித்துப்
படிய மைத்தவ ளாலயம் வலங்கொடு பணிபர்
வடிசின் மத்திம முத்தமம் பலாதிகொண் டமைத்தல்.

(இ - ள்) கொடிபோலு மிடையையுடைய மரகத நிறந்தங்கிய உமாதேவியார் திருக்கோயிலை யடைந்து சுடர் விடுகின்ற செழுமையாகிய தீபமுதலியவற்றை விதிப்படிசெய்து வைத்து, அத்தேவியார் சந்நிதியைவலம்வந்துபணிந்து பழவர்க்க முதலியவற்றை யுணவாகக்கொள்ளுதல் உத்தமமும் அன்னத்தை ஆகாரமாகக்கொள்ளுதல் மத்திமமுமாம். எ - று (௩௨0)

எடுத்த நாண்முதற் சுக்கிர னிந்நோன் பியற்ற
வடுத்த டங்கணாள் பார்ப்பதி யெதிருற வணங்கித்
தொடுத்த நின்பெரு விரதமென் பெயரொடுஞ் சொல்லிப்
படுத்த வேண்டினன் னென்றன னுங்கது பணித்தாள்.

(இ - ள்) எடுத்துச்சொல்லிய இந்த நாளில் முதலிலே சுக்கிரன் இவ்விரதத்தை யநுஷ்டிக்கவும், மாவடுப்போன்று பரந்த விழிகளையுடைய பார்ப்பதி தேவியார் அவனுக்கருளும்படி பிரசன்னராக அவரை வணங்கி யடியே னநுஷ்டித்த தேவரீருடைய சிறந்த இவ்விரதமானது என் பெயரோடுஞ் சொல்லி வழங்கும்படி விருப்புற்றுளேனென் றென்று வேண்டினன். பிராட்டியாரு மவ்வரத்தை யநுக்கிரகித்தனர். எ - று. (௩௨௧)

அன்று தொட்டுவெண் கிழமையம் பிகைதரு வரத்தாற்
பின்று சுக்கிர வாரமென் றொருபெரும் பெயராய்
நின்ற தீங்கிது திருமக ளுற்றன ளுறியான
மன்ற லந்துழா யோனறிரு மார்பக மணந்தாள்.

(இ - ள்.) அன்று தொடங்கி வெள்ளிக்கிழமையானது பார்வதியார் வரத்தினாலே பிற்காலத்திற் சுக்கிரவாரமென்று ஒரு பெரும் பெயருடையதாய நிலை பெற்றது. இவ்விரதத்தை யிவ்வுலகத்திற் றிருமகளானவள் கிரமப்படி யநுஷ

டித்தவளாய் மணம்வீசு மழகிய துளசிமாலைதரித்த திருமாலின் சிறந்த மார்பி னிடஞ் சேர்ந்தனள். எ - று. (௬உஉ)

வெள்ளி தழ்ப்பனித் தாமரைப் பொகுட்டுவீற் றிருந்தா
ளௌ்ள ருஞ்சது மறைபகர்ந் தெடுததவிவ் விரத
முள்ள வாறிழைத் துந்தியந் தாமரை யுறையுந்
தெள்ளு நான்மறை யவன்றிரு நாவகஞ் சிறந்தாள்.

(இ-ள்.) வெண்ணிறந்தங்கிய இதழ்களையுடைய குளிர்ந்த தாமரை மலரி னிடையே வீற்றிருக்குஞ் சரஸ்வதி,இகழ்தலற்ற நன்கு வேதங்களுஞ்சொல்லி விதித்த இவ்விரதத்தை யுள்ளபடி யநுஷ்டித்துத் திருமாலின் உந்தித் தாமரை யில் விளங்கும் தெளிந்த நான்குவேதங்களையுணர்ந்த பிரமதேவனுடையசிறந்த நாவில விளக்கமெய்தினன். எ - று. (௬உ௩)

பகுத்த வைப்பசி யுத்திரத் தின்னணம் பரிவாற்
றொகுத்து நோற்றறி னுமைதரு மினனருந் டொருவார்
வகுத்து நோறறனள புலோமசை வானவர்க் கிறைவன்
மிகுத்த காதலின் முயங்குற வினிதுவீற் றிருந்தாள.

(இ - ள்.) பிரித்துச்சொல்லிய ஐப்பசிமாத வுத்திர நட்சத்திரத்தி லிப்படி யன்போ டொன்றுகூடி யநுஷடிப்பார்களானால், உமாதேவியார் அநுக்கிரகத் தினிய திருவருளை யடைவார்கள். இந்திராணியானவள் இப்படி வகைப்படுத்தி யநுஷ்டித்தவளாய்த் தேவர்களுக் கிறைவனான இந்திரனதிகரித்த ஆசையோடு இனிமையாக அணையும்படி வாழ்ந்தனள. எ - று. (௬உ௪)

பெருகு காதலிற் புரட்டைமுற் பிரதமை முதலாய்
மருவி முன்பகல் விதிமுறை மணிக்குட மமைத்துச
சொரிந றுந்துண ரருச்சனை வரன்முறை தொகுத்துப்
பரிவி னெண்பகற் பலாதியுண் டருண்முறை பயிலவார்.

(இ - ள்.) அதிகரித்த அனபோடு புரட்டாசிமாத முதலில்வரும் பிரதமை முதலாகததொடங்கி, முன் சொன்ன முறைப்படி அழகிய கலச ஸ்தாபனஞ் செய்து அருச்சிக்கத்தக்க நறு மலர்களால முறைப்படி யருச்சித்து ஆசையோ டஷ்டமிவரையி லெட்டு தினங்களும் பழமுதலியவற்றைப் புசித்துத் திரு வருணிலைமையைச் சிந்தித்து அநுஷ்டிப்பவர்கள். எ - று. (௬உ௫)

நடந்த நாள்கழித் தீற்றிடை யெதிர்ந்தமா நவமி
தொடங்கு பிறறைநாண் மறையவர்ப போசனந் தொகுத்து
வடங்கொள பூண்முலை மறையவர் மடந்தையர்க் கினிது
நுடங்கு கோசிக மளித்தபின் பாரண நுகர்வார.

(இ - ள்.) அநுஷ்டித்துவந்த எட்டு நாள்களுங் கழித்துக் கடைசி தினத் திற் கெதிர்ப்புகும் மகா நவமி யுதிக்கின்ற மறுதினத்தி லந்தணருக் கன்ன மளித்து, முத்து வடந்தங்கிய ஆபரணமணிந்த ஸ்தனங்களையுடைய வேதிய மாதர்கட்கு இனிதாகத் துவளுகின்ற பட்டுச்சீலைகளைத் தானங்கொடுத்த பிறகு பாரணஞ் செய்வார்கள். எ - று. (௬உ௬)

சேந்த தாமரைத தடங்கணு னததிற நோற்று
மோந்த போர்முகத் தசுரரை முதலற நூருக்கி

வாய்ந்த னன்கலா சத்தியை யடைந்தனன் மற்றோர்
பூந டடங்கணோர் பாக்கிய சத்தியும புரிந்தான்.

(இ - ள்.) பரந்த செந்தாமரைக் கண்ணராகிய திருமால் இவ்விரதத்தை யிப்படி யநுஷ்டித்து, எதிர்ந்த யுத்தபூமியி லசுரர்களெல்லாரையு மடியோ டழித்து வெற்றி பெற்றவராய் வல்லபத்தையும் மற்றொருத்தியாகிய அழகு வாய்ந்து விசாலித்து ஒப்பற்ற விழிகளையுடைய தனலட்சுமியையும் விருப்புற் றவராயினார். எ - று. (௬உஎ)

இமைய மீன்றெடுத் தளித்தவள் விரதமீ திழைத்தோ
ரமைய நல்கிய பெருவளந் துய்த்தன ராகி
யுமைத ருமபெருங் கருணையா லருங்கதி யுவந்தார்
தமையெ டுத்தெடுத் துணரத்துவ தியாருழைத் தகுமே.

(இ - ள்.) இமாசல மன்னன் பெற்றெடுத்து வளர்த்த உமாதேவியாருக் குரிய இவ்விரதத்தை யநுஷ்டித்தவர்களாய்த் தமது விருப்பத்திற்கேற்கப் பாவித்த பெருஞ் செல்வத்தை யநுபவித்தவர்களாய், அவ்வுமையம்மையார் அருளிய பெரிய திருவருட்பேற்றினால் பெருங்கதியடைந்தோர்களை யெடுத் தெடுத்துச் சொல்லுவதெவர்க்குத்தான் முடியும்? எ - று. (௬உஅ)

புலன்க ளைந்தையு மொருவழி நிறுத்திய புனிதக்
குலங்கொண் மாதவத் தலைவிர்கா ளுமையவட் குணிக்கு
நலங்கொண் மாதவ விரதமூன் றுளளன நவின்றே
மலங்கு வார்சடை யைங்கரன் விரதமுற் றறைவாம்.

(இ - ள்.) ஐம்புலன்களையும் ஒருவகைப்பட நிறுத்திய பரிசுத்தமாகிய தொகுதியான பெருந்தவ முனிவர்களே! உமாதேவியாரை மகிழச்செயயும் நன்மை தங்கிய பெருந்தவமாகிய விரதங்கள மூன்றுள்ளன சொன்னோம். அசைகின்ற நெடிய சடையையுடைய ஐங்கரக் கடவுளாகிய கணேசப் பெருமா னுக்குரிய விரதத்தைச் சாங்கோபாங்கமாகச் சொல்லுவோம். எ - று. (௬உ௯)

மேட திங்களிற் பூருவ பக்கவெள ளிபினு
ளாடி ருந்திரை மாநதி புலரியி னாடிக்
கோடொ ரைகையுடைக் குடவயிற் றைங்கரக் களிற்றைத்
தேட ருமபொனால் வெள்ளியாற் றிருவுருச் செய்து.

(இ - ள்.) சித்திரை மாதத்தில் பூர்வபட்ச சுக்கிரவார தினத்தில், அசை கின்ற பெரிய அலைகளையுடைய புனிதமான நதி தீர்த்தில் விடியற்காலத்தில் ஸ்நானஞ்செய்து, ஒற்றைக் கொம்பினைத் திருக்கரத்தேந்திய குடம்போலும் வயிற்றையுடைய ஐந்துதிருக்கரங்களையுடைய யானைமுக விநாயகப்பெருமானைத் தேடுதற்கரிய பொனனாலாவது வெள்ளியாலாவது திருவுருவமைத்து. எ-று.

முன்னு ரைத்திடு விரதத்தின் விதிமுறை நோக்கி
மன்னு மாலிகைப் பந்தரின் மணிக்கூட மமைத்தாங்
கென்னை யாளுடைக் களிற்றினை யாங்கதி னிறுத்திப்
பன்னு நூன்மொழி வரன்முறை நோற்பது பரிசால்.

(இ - ள்.) முன்னே சொல்லிய விரதத்திற்குரிய விதிமுறையாகவே கருதி, நிலைபெற்ற மலர்மாலைகள் தொங்கவிட்ட பந்தரினிடத்தில், இரத்தின கும் பத்தை ஸதாபனஞ்செய்து, அதில் என்னை யடிமையாகவுடைய விநாயகப்

பெருமானை அகத்துப்பதத்தில் ஆவாகித்து, சொல்லிய சிவாகம நூல்கள் விதித்த கிரமப்படி அநுஷ்டிப்பது தகுதியாம். எ - று. (௩௩௧)

தெங்கி னெண்பழ மெட்பொரி முதிரைதீங் கதலி
பைங்க ரும்புவெள் ளிற்கனி சருக்கரை பலவின்
பொங்கு தண்சுளை முதலிய யாவையும் பொலித்து
வெங்கை மாமுகற் கமுதுசெய் வித்தருள் வேண்டி.

(இ - ள்) ஒளி தங்கிய தேங்காய் - எள்ளின்பொரி - [முதிரை] காராமணி - இனிய வாழைக்கனி - பசிய கரும்பு - வெள்ளிற்கனி - சருக்கரை - குளிர்ச்சி பொருந்திய பலாக்கனியின் சுளைகள் முதலிய பல பொருள்களையும் மிகுதியாகவைத்து வலிய யானைமுக விநாயகப் பெருமானுக்குத் திருவமுது செய்வித்து, அப்பெருமானது திருவருளைப் பிரார்த்தித்து. எ - று. (௩௩௨)

மடந்தை பாகனா லயம்புகுந் தடிவருந் தத்
தொடங்கு தெக்கணை மைம்பதிற் றிரட்டியுந் தொலைத்துப்
படர்ந்த செங்கதிர்ப் பரிதிபோய்க் குடகடல் படிந்தான்
மிடைந்த கங்குலிற் பலாதியுண் டிருட்படு விடியல்.

(இ-ள்.) உமாதேவிபாகராகிய சிவபெருமானது திருக்கோயிலையடைந்து, கால்கள் வருந்தும்படி தொடங்கிய பிரதக்கணங்களை நூறுஞ்செய்து முடித்து, பரவிய சிவந்த கிரணங்களையுடைய சூரியன் மேற்கடலிற்சென்று அஸ்தமித்தால், நெருங்கிய [இருளாகிய] இரவில் கனிவர்க்க முதலியவற்றைப் புசித்து, இரவு நீங்கிய விடியற்காலத்தில் எ - று. (௩௩௩)

வைத்த பூரண மணிக்குட மரப்பிய நெல்லோ
டுய்த்த நான்மறை யவர்க்கென வுதவிமற் றவர்க்கு
மெய்த்த சிந்தையிற் போசன மளித்தபின் விருப்பாற்
பத்த ரோடிருந் தினிதெனப் பாரணம் பயில்வார்.

(இ - ள்) ஸ்தாபித்துவைத்த இரத்தினமயமான பூரண கும்பத்தை, பரப்பிவைத்த நெல் முதலியவற்றுடன், நான்கு வேதங்களையுணர்ந்த வேதியர்களுக்கு உரித்தென்று தானங்கொடுத்து, அவ்வந்தணர்களுக்கு உண்மைதங்கிய மனதோடு திருவமுது கொடுத்த பின்னர், சிவனடியவருடன் கூடியிருந்து ஆசையோடு பாரணஞ் செய்வார்கள். எ - று. (௩௩௪)

அரிதி னிப்படி நோற்றன னத்திரி முனிவன்
விரித ருங்கலைச் சந்திரற் பயந்தனன் விரிபுன்
புரிச டைத்துரு வாசனை மகவெனப் புரந்தான்
வரிய ராவணிந் தோனடி கடைமுறை வதிந்தான்.

(இ - ள்.) இவ்வகையாக அத்திரிமுனிவர் இவ்விரதத்தை அரிதாக அநுஷ்டித்து, பரந்த ஷோடசகலைகளையுடைய சந்திரனைப் புதல்வனாகப் பெற்றனர். முறுக்கி விரிந்த சிறு சடையையுடைய துருவாச முனிவரைப் புத்திரராகவளித்தனர். கீற்றுகளமைந்த சர்ப்பத்தை ஆபரணமாகவுடைய சிவபெருமானடிகளைத் தேகாந்தியத்தில் எய்தினர். எ - று. (௩௩௫)

உந்தி யங்கம லாலயந் தொருவனோற் றுலவா
வந்த ணத்துவ மடைந்தன னளகையம் பதியோர்

ளிந்த நோன்பிழைத்த திருநிதி சிறந்தன னெந்தை
தந்தி மாமுக னருளொடு மரசொடுஞ் சரிப்பான்.

(இ-ள்) திருமாலின் அழகிய உந்திக்கமலத்தை வாசஸ்தானமாகவுடைய ஒப்பற்ற பிரமன் இவ்விரதத்தை யநுஷ்டித்து, கெடாத பிராமணத்துவத்தைப் பெற்றான். அளகாபுரித் தலைவனாகிய குபேரன் இந்த விரதத்தை யநுஷ்டித்து, பெரிய நவநிதிகட்கிறைவனாய், எமது தந்தையாகிய விநாயகப்பெருமான் திருவருளால், தலைமையாகச் சஞ்சரிக்கின்றான். எ - று. (௩௩௯)

தேவ ரெனப்பவர் முனிவரா யாவருந் திரைநீர்ப்
பூவ லம்படு மாக்களு நோற்றனர் பொருகோட்
டாவு யாத்தரு ளெம்பிரா னருமறைக் கெட்டாச்
சேவ டித்துணை யடைந்தனர் திருவருட் சிறப்பின.

(இ - ள்.) தேவர்களென்று சொல்லப்பட்டவர்களும் முனிவர்களுமாகிய எல்லோரும், அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த பூமியிலுள்ள மானுடரும் இவ்விரதத்தை நோற்றவர்களாகி, போர்செய்யுங் கொம்பினையுடைய இடபக் கொடியையுடைய எமது சிவபெருமானது திருவருட் பெருக்கத்தால், அவ்விறைவருடைய, வேதங்கட்குமெட்டாத சிவந்த உபய பாதங்களை யெய்தினார்கள். எ - று. (௩௪௦)

எந்தை தந்திமா முகவனுக் கினமொரு விரதஞ்
சிந்தை கூர்தரு விநாயக சதுர்த்தியாந் தினத்தின்
முந்து சைத்திடு மானமுறை தும்பிமா முகனைத்
தந்து சுற்றிய மணிசருட் மீதுறத் தந்து.

(இ - ள்.) எந்தையாகிய விநாயகப்பெருமானுக்குரிய மற்றொரு விரதமுள்ளது. மனங்களிக்கத்தக்க விநாயக சதுர்த்தியாகிய தினத்தில், முற்கூறிய சிவாகம விதிப்படி, யானைமுக விநாயகப்பெருமானை, நூல்கள் சுற்றிய இரத்தின கும்பத்தின்பேரில் ஆவாகன முதலியன வரிசைபெறச் செய்து. எ - று.

பத்தி ரங்கள்சூழ் வேழமுக ற்திருவடி பரவிச்
சித்த மெனபுறக் குழைத்தர வருச்சனை செய்யா
வுய்த்த தீங்கனி பண்டமற் றினையன வுவந்தே
யத்த னாலயந் தொழுதுமீண் டிருட்பொழு தகற்றி.

(இ - ள்.) கணேசப்பெருமான் திருவடிகளில் இருபத்தொரு வகைப்பட்ட பத்திரங்களினால் அர்ச்சனைசெய்து, மனங்கனிந்து எலும்புகள் நெக்குவிட்டுருகத் துதித்து, பரிசுத்தராகிய சிவபெருமானது திருக்கோயிலை யடைந்து வணங்கித் திரும்பி, நிவேதித்த இனிய கனிவர்க்க முதலியவற்றைப் புசித்து இராப்பொழுதைக் கழித்து. எ - று. (௩௪௧)

கும்ப மும்பொதி யாடையும் நெற்பொரிக் குவையும்
விம்ப மும்பெற வேதியர்க் கீந்துள் விருப்பாற்
றும்பி மாமுகற் றொழுதுபின் பாரணந் துய்ப்பா
ரிம்பர் வாழ்ந்துசென் றுங்கவன் பதத்துவீற் றிருப்பார்.

(இ - ள்) பூரண கும்பமும் அதிற்சுற்றிய வஸ்திரமும் நெற்பொரிக் குவியலும் திருவுருவமுமாகிய இவற்றை ஆசையோடு அந்தணருக்குப் பெறும்படி கொடுத்து, யானைமுக விநாயகப் பெருமானை வணங்கி, அதன்பின்னர், பாரணம்

புசிப்பவர்கள் இவ்வுலகத்தில் (சகல பாக்கியங்களோடும்) வாழ்ந்து (தேகாந்தத்தில) அவ்விநாயகப்பெருமான் பதவியிற்சென்று வாழ்ந்திருப்பார்கள். எ - று.

கீற்றி ளம்பிறைச் சடிலியு மரகதங் கிளைத்துத்
தோற்றி ளங்கொழுந் தனையளுங் கயிலையிற் றொன்னாட்
சாற்றி னக்கவ ருடலுந் தனிமுதற் றேவர்
போற்றி னந்தளி ரடியின ளினையன புகல்வாள்.

(இ - ள்.) பிளவுற்பட்ட இளம்பிறைச் சந்திரனைச் சடையிலுடைய சிவபெருமானும், மரகதமணியானது கப்புவிட்டுக் கிளைத்தெழுந்த இளங்கொழுந்து போன்ற [பசுநிறந்தங்கிய] உமாபிராட்டியும், முன்னொரு காலத்தில் திருக்கைலாயகிரியில் [கவறு] சொக்கட்டாளுடவும், ஒப்பற்ற முதற்பெருங் கடவுளரும் துதிசெய்யும் மாந்தளிர்போன்ற திருவடியையுடைய உமாதேவியார் இவ்வாறு சொல்கின்றனர். எ - று. (௩௪௪)

ஏற்றி ருந்தவ ளுடனு மெம்பிரா னிருவேந்
தோற்பு வெல்வது சொல்பவர் யாரென லோடும்
பாற்பெ ருங்கடற் பாம்பணைப் பணித்துழாய்ப் படலைச்
சூற்ப சும்புய லாங்கவ ணெய்தினன் ஞெருவான்.

(இ - ள்) எமது தலைவரே! தேவரீரும் அடியாளுமாகிய நாமிருவரும் இங்கே இணங்கிச் சூதாடவும், நம்முடைய தோல்வியையும் வெற்றியையும் எவர் சொல்லற்குரியரென வினவவும், பெரிய திருப்பாற்கடலில் சேஷ சயனத்திலுள்ள குளிர்ச்சிதங்கிய துளசிமாலையணிந்த பசிய சூல்கொண்ட மேகம் போன்ற கரிய திருமால் அச்சமயத்தில் வணங்கும்படி அங்கெய்தினர். எ - று.

அனைய னெய்தலு மெம்பெரு மாட்டியு மாலம்
புனைக ளத்தனு மாங்கவன் சான்றெனப் புகல
நனைந றுந்துழாய் நாயக னிருந்தன னயந்த
வினையி னுடினர் தோற்றன னென்னையாள் விமலன்.

(இ - ள்.) அத்திருமால் அடையவும், எமது பெருமாட்டியாகிய உமாதேவியும் ஆலால விஷந்தங்கிய ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானும் திருமால் சாட்சியெனக் கூற, குளிர்ச்சி தங்கிய மணம்பொருந்திய துளவமாலையணிந்த திருமால் சாட்சியாகவிருந்தனர். இருவரும் நியதிப்படி சொக்கட்டாடினர்கள். என்னையாளாகவுடைய சிவபெருமான் தோல்வியெய்தினர்.

முகிழ்த்த மூரல ளெம்பிரான் றிருமுக நோக்கி
நெகிழ்ந்த சிந்தைய னிமலநீ தோற்றனை யெனலு
நகைத்து நாயகன் கட்கடை மான்முக நடத்த
வகுத்த வார்குழ றோற்றனை யென்றனன் மாயோன்.

(இ - ள்.) அரும்பியதந்த பந்தியையுடைய உமாதேவியார் எமது சிவபெருமான் திருமுகத்தைப்பார்த்து, உருகிய மனமுடையராய இறைவரே! தேவரீர் தோற்றீரெனக் கூறவும், சிவபெருமான் புன்னகையரும்பி, திருமால் முகத்திற் கடைக்கண்ணோக்கஞ் செய்யவும், திருமால் வகைப்படுத்திய மணங் கூந்தலையுடைய உமாபிராட்டியாரே! நீர்தாம் தோற்றீரென்றனர். எ - று. (௩௪௭)

மாய னவ்வுரை வழங்கலும் வரைபயந் தளித்த
தூய மென்கொடி வெருண்டன ளிருங்கமை துறந்தாள்
சேய ரிநதடங கட்புனல சிநதுபு சிதறிப
போய ரிசசிலம் பரற்றுற நடந்தனள புகுநதாள்.

(இ - ள்.) திருமால் அவ்வார்த்தை சொல்லவும், இமாசலமன்னன் பெற்றெடுத்த புனிதமாகிய மெல்லிய கொடிபோலும் உமாதேவியார் கோபங கொண்டவராகி, சாநத மொழிநதவராய், செவ்வரிபடாநத பரவிய கணகளில நீர் துளிதது, பரல்கள் சிநதிச சிலமபுகளொலிகக நடநது சென்றனா. எ - று.

நோகக நோக்குற விருநதனை நோக்கின நுவலாய்
வாக்கி னொன றுங்கின மனததினொன் றுமென வலித்தாய்
பாாககு டபபுல னிழநதுவெம பாநதளிற் பலவாயப
போக்கு மூழிபல் கழிததியென் றுரைததனள் பூவை.

(இ-ள்.) திருமாலே! கணகள காணவீற்றிருநதனை. கணடதைச்சொல்லாயாயினை! உன வாககிலொன்றும மனததிலொனறுமாக மாறுபட்டனை! அதனுல் நீ காணததகக கட்புலனிழநது பாம்பாகி, பலவாய்க் கழியும பல ஊழிகாலங்கள கழிககககடவாயெனறு சபிததனர். எ - று. (௩௪௬)

மொழிநத வீற்றிடை முளரிபூத தெழுமழை யுருவங்
கழிநதொ ராயிர மியோசனை நெடடுடல காட்டிக
குழிநத கடபுல னிலனெனக கொடியவெம பசிநோந
தொழிநது ருவரிப பாநதளாயக கிடநதன னுயஙகி.

(இ - ள.) இவவாறு சபிதத விறுதியில், தாமரைபூதது விளங்கும் கார் மேகம்போனற உருவம நீஙகி, ஓராயிர யோசனை நீளமுளள உடலைக்கொணடு, குழிநதிருககும் விழிகளற்றவராய, மிகக கொடிய பசிநோய் நீஙகப்பெறாத வரிகளையுடைய சாபபமாகி மனததளாசசி யெயதியிருநதாா. எ - று. (௩௪௭)

ஏஙகு சிநதையன் வெருவரு முளததின னெறிநீர்
தேஙகு கணணினன் செய்யுமா றேதெனத தேராத்
தாங்கு செஞசடை யரனடி தாழநதன னெடுமா
லாஙக தறகுநீ யஞசலை யெனசசிவ னருளவான்.

(இ - ள்) திருமால் ஏககமுறற எணணமுடையவரும, அச்சமுள்ள மனமுடையவரும், சிநதுகின்ற துககநீா தேககெடுக்கும விழிகளுடையவருமாக, செயயும் வகை யாதெனறுலோசிதது, செவவிய சடைமுடிதாஙகிய சிவபெருமானைத் திருவடிகளிற் பணிநதனர். அப்போது சிவபெருமான் நீ அதற்குப் பயபபடவேணடாமென்று திருவாயமலாந தருளினா. எ - று. (௩௪௮)

ஆவ ணித்தனித் திங்களி னோங்கரக் களிறறி
றேவ ருந்தனி விரதமோாங் துறவருஞ சதுர்த்தி
மேவு மததனி விரதநீ விருபபொடு நோறபிற்
றேவி சாபநீத் தொழிதரு முன்னுருச சிறபபாய்.

(இ - ள்.) ஆவணியாகிய வொப்பற்ற மாதததில வரும் சதுர்த்தியாகிய திதி, ஐநது திருககரஙகளையுடைய யானைமுக விநாயகப்பெருமானது அன்பகலாத விரதமென்று தெளிநது, அப்படிவருகின்ற அநதச் சிறந்த விரததைதை நீ

அன்புகொண்டு அநுஷ்டிப்பாயாகில், நமது உமாதேவியின் சாபமும் அகன்று போம். உனது பண்டைய வடிவத்தையும் பெறுவாய. எ - று. (௩௪௯)

எனமொ ழிந்தரு ளெம்பிரான் றிருவரு ளியற்றிப்
புனந் றுநதுழாய்க் கண்ணியோ னோற்றனன் பொறிப்பாம்
பனைய மெய்யொழிந் தலாந்தெழு தாமரை மலாந்த
கனைக ருங்கடற் காாமழை நிகாத்தனன கணணன்.

(இ-ள்.) என்று திருவாய்மலாந்தருளிய எமது சிவபெருமான் திருவருளினால், அவ்விரதத்தை மயன று, நறுமணங்கமழுந துளசிமாலையணிந்தவராகிய திருமால் அநுஷடித்தவராய, புளளிகளையுடைய பாமபைபபோன்ற சாபவுடல நீஙகப்பெற்று, தாமரைகள் இதழகள விகசித்தலாந்த, சத்திக்கின்ற கடல் நீரைப்பருகிய சூற்கொணட காாமேகமபோனறவராயினா. எ - று. (௩௫0)

இழைகக நோன்பிது நோற்றன ாிலஙகொளிக் கயிலைப
புழைகக ரததனை விண்ணவ ரருச்சனை புாிநதாா
தழைச்செ விச்சிறு புகாமுகத தைங்கரத தநதி
விழைத்த சிநதையி னடித்தனன விணணவா வியந்தாா.

(இ - ள.) திருமால் அநுஷடித்த இவவிரதத்தைப் பிரகாசிக்கின்ற ஒளி தங்கிய திருககைலாயகிாியில் துதிக்கையையுடைய விநாயககடவுளைக் குறித்து தேவாகள் அநுஷடித்துப் பூசை செய்தாாகள. தழைத்த செவிகளும சிறு புள்ளிகள பொருந்திய முகமும ஐந்து திருககரஙகளுமுடைய விநாயககடவுள் விரும்பிய மனதோடு நடனஞ் செய்தனா. தேவாகள தாிசித்து அதிசயித்தாாகள். எ - று. (௩௫௧)

தூங்கு பண்டியுந தொளைபடு துதிக்கையுங் கரத்துத்
தாஙகு பண்டமுந தண்டைபம பியக்குறுந தாளு
மாஙகு நோக்கின னகைத்தன னமபுலிக் கடவு
டேங்கு சீற்றமிக கெழுநதனன காிமுகச் சிறுவன்.

(இ - ள.) சாிந்தவயிறும், துவாரம்பொருந்திய துதிக்கையும், திருக்கரத்திலேந்திய மோதகமும, சத்திக்கின்ற தணடையணிந்த சிறிய பாதங்களும், ஆகிய விவற்றைத் தாிசித்தவனாய்ச் சந்திரன நகைசெய்தான. யானைமுகமுடைய விநாயகப்பெருமான அதுகணடு கோபமிகுந்து சந்திரனை எதிர்ந்தருளி. எ - று. (௩௫௨)

என்னை நோக்கினை நகைத்தனை திஙகண்மற் றிதுநா
ளுன்னை நோக்கின ருறுபபழி பாதக முறறுங
கினன லஙகடற் படிநதிட ரொழிந்தில ராகித்
தொன்னி லத்தவா நகைதரக் கறங்கெனச் சுழல்வார்.

(இ - ள.) சந்திரா! நீ நம்மைப்பார்த்து நகைத்தனையாகையால், இந்தத் தினத்திலே உன்னைக் கணடவர்கள் அடையாத பழி பாவஙகளை யடைந்தவாகளாய்த் துக்க சாகரத்தில் மூழ்கி யிடையூறு நீங்காதவர்களாய், பழமையாகிய நில வுலகத்தார் சிாிக்கும்படி காற்றாடிபோலச் சுழல்வார்களாக. எ - று. (௩௫௩)

என்று ரைத்தன னைங்கரத் திபமுகக் கடவு
ளன்று ரைத்தன வறிந்தில னாகியாப் புரக்குஞ்

றென்றெடுத்தவ னுவணிச சதுர்த்தியிற் குடபா
னினமெற ழுந்திடு மிளமபிறை நோககின னின்றான.

(இ - ள்.) என்றிவ்வாறு, ஐகது திருககரஙகளையும் யானை முகததையு முடைய விநாயககடவுள் சபித்தனர். அவ்வாறு கொடுதத சாபமொழிகளை யுணராதவராய், கோவர்ததனகிரியைக குடையாகவெடுதத திருமால் ஆவணி மாச சதுர்த்திதியில் மேற்குத் திககினின் றுதயமாகும் நானகாம் பிறையைப் பார்ததுககொணடிருநதாா. எ - று. (௩௫௪)

ஆத லாலவற் கெய்திய வருமபழி யுரைக்கோந
தீது தீரநதொழி துவாரகை யெனுநதிரு நகரின்
மாத லம்பொதுக கடிநதுல களிககுநாண் மனுநூ
லோது சததிர சிததுவென் பானுள னொருவன.

(இ - ள்.) அப்படிப் பாாததததால் அவருககுண்டாகிய அரிய பழிகளைச் சொலலுவோம. குற்றநதீரநதொழிநத துவாரகையெனனும திருநகரததில பெரிய பூமி முழுவதையும பொதுததனமை நீஙகி உலகததை அரசு செயயுங காலததில், மநுமுறையை நனறாக ஓதியுணாநத சததிரசிததெனறு ஒரு மன் னவனிருநதான. எ - று. (௩௫௫)

அனைய னுஙகனுற றநதரத தவரொளி விரிககுந
துனைப சுமபரித தேருடைச சூரியற றொழுது
வனைசி மநதக மணிதரப பெறறனன மனனன
றினமு மெண்கலப பசுமபொனுங கதுதரச சிறநதான்.

(இ - ன்.) அநதச் சததிரசித்துவெனும் மனனவன, சூரியனூலகடைநது, ஆகாயததிறபரநத வொளியை வீசும் நெருஙகிய சப்தாவெனனும பச்சைக குதிரை பூட்டிய தேரையுடைய சூரியனை வணஙகி, அலஙகாரமாகிய சிமநதக மெனும் ஓர மணியை அச்சூரியன் கொடுககப பெறறுககொணடான். அது தினநதோறும எட்டுககலம பசும்பொன கொடுததுவரச் சிறப்பெயதினன்.

மணியி னுல்வளம பெறபபெறு மனனனை வாவென்
றணிம திறபெருந துவாரகை யமாநதரு ளமலன
பணிப னிககுடை யாஙகவன றனிமுகம பாராத
தணிவில சீாதரு சிமநதகந தருதியென றுரைபப.

(இ - ள்.) மணியினாலே செலவமடையப் பெற்றுளள சததிரசிததுவை, அழகிய மதிலசூழ்நத சிறநத துவாரகையில வீற்றிருககுங கணணபிரான் வருக வென்றழைததது, அஙஙனமே வநது பணிநத சநதிரவட்டக குடையையுடைய அமமன்னவனது ஒபபறற முகததை நோககி, ஒழியாத செலவததைத தரும் சிமநதக மணியை யெமககுத தருகவெனக கேட்க. எ - று. (௩௫௭)

தெய்வ மாமணி யான்றரச சிறிதல செஙக
ணைய யான்றரிற பிழைவருங கேடகலை யகல்வான்
வெய்ய வனறிரு வுருபபிரி விதனைநீ வேணடல
செய்ய தனறென மறுததனன் சததிர சிததன்.

(இ-ள.) செநதாமரைபோலும் கணகளையுடையவரே! தெய்வீகப்பொருந் திய சிறநத அநத மணி நான் கொடுக்க எளிதல்ல. அப்படி யான் கொடுப்பி

னும் தவறுண்டாகும். அதனைக் கேட்கவேண்டாம். பரந்த ஆகாயத்திற் சஞ்சரிக்குஞ் சூரியனுடைய திருவுருவத்தில் ஒரு பாகமாகும், ஆதலால் இதனை நீர் விரும்புவது சரியன்றென்று தடுத்துச் சொன்னான். எ - று. (௩௫௮)

தருதி யேலது பெறுகுது மன்றெனத் தடுத்தாற்
கருதி லேமது போதியென் றுரைத்தனன் கமலத்
திருவி னாயக னுங்கவன் போயினன் றிகழும்
பருதி வானவன் மணிதரப் பலவளம் பயந்தான்

(இ-ள்.) அந்த மணியைத் தருவாயாகில் பெற்றுக்கொள்ளுகிறோம். அல்லவென்று தடுத்தால் அதை நாம் நினைக்கமாட்டோம். செல்லுகவென, தாமரை மலரிலுள்ள திருமகள் கொழுனனாகிய திருமால் கூறினர். பிரகாசிக்கும் சூரிய பகவான் சிமந்தகமணி கொடுக்க, பல ஐசுவரியங்களைப் பெற்றவனாகிய சத்திரசித்து போய்விட்டான். எ - று. (௩௫௯)

வளசெ ருக்கினாற் றெய்வமா மணியினைப் பின்னோன்
களத்தி லாரமிட் டணிந்தன னவனெழில் காண்பான்
றளப்பெ ரும்படைத் தானையோர் சூழ்வரத் தம்பி
யுளத்தி னோங்கிய பரியுகைத் துயாவன மடைந்தான்.

(இ - ள்.) சத்திரசித்து, தன்செல்வச்செருக்கால், தன் தம்பி (பிரசேனன்) அழகைப் பார்க்கும்பொருட்டு அத்தெய்வமணியை அவன கழுத்தணிமாலையிற் கோத்தணிந்தான, அவ்விளையவன கூட்டமாகிய சிறந்த ஆயுதங்களை யேந்திய சேனைகள் தன்னைப் புடை சூழும்படி மகிழ்வுற்ற மனத்தோடு குதிரைமீதேறிக் கொண்டு பெரிய வனத்தை யடைந்தான். எ - று. (௩௬௦)

அருவி மாலவரை யருகுசென் றடைந்தனன் வேட்டத்
தொருவி நீத்தன சேனைதா னொருவழித் தணந்தா
னிருவி மால்வரை கன்முழை யெரிவிழிப் பேழ்வாய்ப்
பொருக டுஞ்சினக் கோளரி யெதிர்ந்ததப் பொழுதின்.

(இ - ள்.) அருவியாறிழியும் பெரிய மலையருகே சென்று சேர்ந்தான். வேட்டையாடுகையில் சேனைகள் தன்னை நீங்கிப் பிரிந்துபோயின. தான் மற்றொரு வழி போயினன். தினைத்தாள்களையுடைய அப்பெரிய மலையின் அகன்ற குகையினின்றும் தீச்சிந்தும் விழியையும் பெரிய வாயையும் போர் செய்யத்தக்க கடுங்கோபத்தையு முடைய ஒரு சிங்கம் அப்பொழுது எதிர்ந்தது. எ-று.

காலை யாதவன் கதிரொளி பரப்பிய கழுத்தின்
மாலை மாமணி நோக்கிய வாளரி மடங்கல
வேலை வெஞ்சின மிகக்கொள வேந்தனைப் பாய்ந்து
கோல வெம்பரி கிழித்துடன் கொண்டதம் மணியை.

(இ - ள்.) பாலசூரியனது கிரணங்களைப் பரப்பிய அவன் கழுத்திலுள்ள மாலையிலமைந்த சிமந்தகமணியைப்பார்த்த அவ்வாண் சிங்கமானது, கடல் போலும் பெருங்கோப மதிகரிக்க அம்மன்னவன்மீது பாய்ந்து அழகோடு கூடிய வேகமுள்ள குதிரையைக் கிழித்துப்பிளந்து அவன் தரித்திருந்த மணியைப் பற்றிக்கொண்டது. எ - று. (௩௬௨)

எடுத்த மாமணி யுடன்செனு மடங்கலை யெதிர்ந்து
கடுத்த வெஞ்சினக் கவிழ்த்தலைச் சாம்பவன் காணு

விடுத்த வள்ளுகிர்த் தடக்கையால் வெரிநுறப் பிடித்துப்
படுத்தி மாமணி பறித்தனன் பாதலம் படர்ந்தான்.

(இ - ள்.) பற்றிக்கொண்ட சிறந்த சிமந்தகமணியோடு செல்லுஞ் சிங்கத்தை, கொடுமை தங்கிய கடுங்கோபமும் கவிழ்ந்த தலையுமுடைய சாம்பவன் நேரே கண்டு, பிரிந்திருக்கும் கூரிய நகங்களையுடைய தன் விசாலமான கைகளால் அச்சிங்கத்தின் முதுகைச் சேர்த்துப் பற்றித் தரைமேல் வீழ்த்தி, அச்சிமந்தக மணியைப் பற்றிக்கொண்டு பாதல லோகத்திற்குப் போயினன். எ-று.

படர்ந்து பாதலம் புகுந்தனன் சாம்பவன் பரிவான்
மடந்தை யீன்றரு ளொருதனி மகவுகண் வளரு
நுடங்கு தொட்டிலுட் டேக்கின னுக்கினன் களிப்பான்
மிடைந்த பலகதிர் மணியினால் வினைவதொன் றறியான்.

(இ - ள்.) அச்சிமந்தகமணியால் நடக்கப்போவதை அறிந்துகொள்ளாதவனான சாம்பவன் சென்று பாதல லோகஞ்சேர்ந்து, ஆசையோடு தன் மனைவி பெற்ற ஒப்பற்ற ஒரே குழந்தை நித்திரை புரியும் அசைந்துகொண்டிருக்கும் தொட்டிலிற் கட்டிப்பார்த்து மகிழ்வானாயினன். எ - று. (௬௬௪)

வெம்பு கானிடைப் பரிவிடு வேட்டமேற் சென்ற
தம்பி யெய்திலனென்கொலோ வெனமனந் தளரப்
பம்பு சேனையோர் வனமெலாந் துருவினா பார்த்தா
ரம்பொன் மாமுடி யரசனைக் காண்கில ரகன்றார்.

(இ - ள்) வெப்பந்தருங் காட்டிலே குதிரையைச் செலுத்தி வேட்டைமேற் சென்ற நமது தலைவரின் சகோதரர் வந்திலரே. என்ன காரணமோவென்று மனந்தளாவெய்த, நெருங்கிய சேனைகள் காடு முழுவதும் தேடிப்பார்த்தார்கள். அழகிய பொன்னாற் செய்யப்பட்ட சிறந்த கிரீடந்தரித்த இளவரசனைக் காணாதவராய்த் திரும்பிப்போனார்கள். எ - று. (௬௬௫)

எதிரு முன்னவற் கெதிர்ந்தன ரெம்பியோ வென்ன
வதிரு மாடருவிப்பொரும் படவியு மடைந்த
வெதிர சைந்திடு சாரலும வெள்ளிடைப் பரப்புங்
கதிர்செய் மாமுடி வேந்தனை நேடலுங் காணேம்.

(இ - ள்.) திரும்பும்போது, எதிரே வந்த மூத்தோனாகிய சத்திரசித்து என்ற தமயன், என் தம்பியைக் கண்டீரோவெனக்கேட்க, அதிர்ந்தோடும் அருவியையுடைய மலைசார்ந்த காட்டிலும், அம்மலையினருகிலுள்ள மூங்கில்கள் அசைந்துகொண்டிருக்கும் சாரல்களிலும், வேறுயுள்ள வெளியிடங்களிலும், ஒளிவீசுஞ் சிறந்த கிரீடமணிந்த உமது தம்பியைத் தேடியுங் காணப்பெற்றிலோம். எ - று. (௬௬௬)

என்று ரைத்தசொற் செவித்தொளை யெரிநுழைந் தென்னச்
சென்ற முறபடத் தீத்தலுஞ் சிந்தைவெந் துருகி
யொன்று ரைத்திலன் வெயர்த்தன னயர்த்தன னுலவா
நின்று யிர்த்தனன் கண்கணீ ருவட்டெழ நின்றான்.

(இ - ள்.) என்றிவ்வாறு சேனைகள் சொல்லிய வார்த்தையானது, செவித்தொளையில் தீயானது புகுந்ததுபோலச் சென்று, தீப்பற்றியதுபோலச் சுடவும்,

மனம் வெந்துருகி ஒன்றும் சொல்லாதவனாய், வியர்வரும்பிச் சோர்வெய்தி ஒழியாத பெருமூச்சு விடுபவனாய்க் கண்களில் துக்கக் கண்ணீர் ஊற்றெடுக்கும்படியிருந்தான். எ - று. (௫௬௭)

என்னு யிர்த்துணைத் தம்பியை யின்னுயி ரொழித்து
மன்னு மாமணி கவர்ந்தனன் மழைமுகில் வண்ணன்
பின்னொ ருத்தரீங் கிதுசெயப் பெறுகிலா பெருநீர்த்
தொன்னி லம்புரப் பவற்கிது பிழையெனச் சொற்றான்.

(இ - ள்.) எனது உயிர்த்துணைவனாகிய இளவலை இனிய உயிர் செகுத்து, சூற்கொண்ட மேகம்போலும் நிறந்தங்கிய கண்ணனே சிறந்த சிமந்தகமணியை அபகரித்துக்கொண்டான். வேறெவரும் இப்படிக் கொல்லத்தக்கவர்களல்லர். பெரிய கடல்சூழ்ந்த பழய உலகத்தைக் காக்கும் மன்னவனுக்கு இது தவறுபாடாகுமென்று சத்திரசித்து சொன்னான். எ - று. (௫௬௮)

இதுவு ணர்ந்தன னுயிர்புரந் தெழுமுகில் வண்ணன்
கதுமெ னப்புகுந் தவன்புகு நெடுவரைக் கானிற்
குதிரை யின்குளம் படிச்சுவ டோர்ந்தனன் குறுகி
யதிர்ம ணிக்கழ லரசுபட் டுழிப்புகுந் தறிந்தான்.

(இ - ள்.) இவன் கூறிய வார்த்தையை, சீவர்களைக் காக்கும் மேகவண்ணனாகிய கண்ணபிரான் தெரிந்து, அந்தப் பிரசேனனென்பவன் வேட்டைக்குப் போன பெரிய மலையையுடைய காட்டில் அதிவிரைவாகச் சென்று, குதிரையின் குளம்புச் சுவட்டினைக் குறியாகப் பார்த்துக்கொண்டுபோய் நெருங்கி, சத்திக்கின்ற சுவரத்தினங்கள் பதித்த வீரக்கழலணிந்த அம்மன்னவன் இறந்தவிடத்திற் சென்றுணர்ந்தார். எ - று. (௫௬௯)

வயங்கு பொன்முடி பூழ்தியிற் புரண்டது மவயிரத்
தயங்கு திண்புயம் வகிர்பட்டுப் பிளந்ததுந் தசைநீத்
தியங்கு சோரிசோர்ந் திழிவது நோக்கின னிவனைப்
பயம்ப டாதிது செய்தவ ரெனமனம் பனித்தான்,

(இ - ள்.) பிரகாசிக்கும் பொன்னாலாகிய கிரீடமானது புழுதியிற் புரண்டுள்ளதையும், வீரத்தன்மைவாய்ந்த வலிதங்கிய தோளானது பிரிவுபட்டுப் பிளந்துள்ளதையும், தசைகளைவிட்டுப் பெருகுகின்ற இரத்தம் பரவியோடுவதையும் பார்த்து, இந்தப் பிரசேனனைப் பயமில்லாமல் இப்படிக் கொலைசெய்தவன் யாவனென்று மனநடுக்குற்றனர். எ - று. (௫௭௦)

மாய னத்தலை நின்றகன் றேகிவா ளெயிற்றுச்
சீய வள்ளுகிர்ச் செம்புனற் சுவட்டடி தெரிய
வாய வெஞ்சின மடங்கல்கொன் றதுவென வறிந்து
தீய வள்ளுகிர்க் கோளரி யிறந்துழிச் சென்றான்.

(இ - ள்.) கண்ணபிரான் அங்கு நின்றும் அகன்று சென்று, வாட்படைபோலுங் கூர்மைவாய்ந்த பற்களையுடைய சிங்கத்தின் கூரிய நகங்களோடு கூடிய உதிரந்தோய்ந்த அடிகளின் குறி தெரியயும், அந்தக் கடுங்கோபமுடைய சிங்கந்தான் கொன்றதென்றுணர்ந்து, அக்கொடிய சிங்கமானது இறந்துகிடக்கும் இடத்திற்குப் போயினர். எ - று. (௫௭௧)

இறந்து நீங்கிய கோளரி நோக்கின னிதனை
மறநது றந்துயிா செகுததா ரெனமனத தளநதான்
புறநதி ரிநதன னுளியவெம போததடி போகக
சிறநத சிநதைய ஞஙகதன் சுவட்டிடைச சென்றான்.

(இ-ள்) உயிர் நீங்கிக்கிடந்த சிங்கததைக்கணடு, இதனைககொடுமைக்குப் பயப்படாதவாகளாய உயிா தொலைததவர்கள் யாரென்று, மனதிற் கருதிய வராய வெளியே யுலாவுகையில், அஙகே கொடிய ஆண கரடியின் அடிச்சுவடு செனறிருப்பதால், மேம்பட்ட ஆலோசனையுடைய கணணபிரான் அச்சுவட்டின வழியே சென்றனா. எ-று. [உளியம்=கரடி.] இஙகே சாமபவன். (௩௭௨)

சென்ற போததடி நெடுவனப் பிலததுழைச செல்ல
வொனறி யூடுபுக குறறகரும பாதல்த துறறு
னனறு தொட்டிலுட் டேககிய சியமநதக மதனைக
கன்று சிநதையிற பறிததனன் கடனிறக கடவுள.

(இ-ள்.) கடல நிறஙகொணட கணணபிரான், நடநதிருநத கரடியின் அடிச்சுவட்டின வழியே அககாட்டிலுள்ள பிலததுட பிரவேசிததுப்போய, ஒருவரும் அடைதறகரிய பாதலலோகமெய்தினா. அப்பொழுது தொட்டிலிற் றொஙகவிட்டிருநத சியமநதக மணியைக கோபஙகொணட மனததுடன் பறித தெடுததனா. எ-று. (௩௭௩)

தூஙகு தொட்டினின றுட்டிய சரிகுழற சேடி
யேஙகு நெஞசின ளாறறினண முனறிலவீழ்ந திரங்கி
யோஙகு வெங்குர லுணாநதனன சாமபவ னுறறன
வீங்கு வெஞசினத திருவாகரும விளைநதன வெமபோர்.

(இ-ள.) அசைநதுகொணடிருககும தொட்டிலிற்கருகே நின்று அதனை யசைததுககொணடிருநத சுருணட கூநதலையுடைய தாதியானவள, ஏகக மெய தின மனமுடையவளாகிப புலமபினள. முறறததில விழுநது வருநதிக கதறுங கடுஙகுரலைச் சாமபவனறிநது ஆஙகெயதினன, மிகக கோபமுடைய இவவிரு வீராககும் கொடும்போா நிகழ்நதது. எ-று. (௩௭௪)

ஒய்யெ னபபுகு மிருவரு மொனபதிற றிரட்டி
வைகல வெஞசமா விளைததனா சாமபவன மருளாச
செய்ய சிநதனை தெரிநதன னுலகெலாந் திதிககு
மைய னுங்கொலென் றயிாததன னடைநதன னசசம.

(இ-ள்.) விரைநது போாசெய்யப புகுநத இரண்டுபேரும பதினெட்டு தினஙகள்வரையில் கொடும்போா செயதாாகள. சாம்பவன மயஙகிச் செமமை யாகிய அறிவினல் உலகததையெல்லாங காககும் கடவுளோவென்று ஆலோசித் துச் சநதேகிததுப் பயஙகொணடனன. எ-று. (௩௭௫)

உநதி யமபுயத திருநதுல குயிரெலா மளிகருந
தநதை தநதையென றுணாநதிலன றுமறைத தடங்கட்
பைநது ழாய்முடிப பாபபணைப பளளியெம பரனே
விநதை கேளவமின் சரணமே சரணென வீழநதான்.

(இ - ள்.) உந்திக் கமலத்திலிருந்து உலகங்களையெல்லாம் படைக்கும் பிரமனுடைய தந்தையென்று தேவரீரை அறியாமற் போயினேன். தாமரை மலர்போலும் பரந்த விழிகளையும் பசிய துளவமாலையணிந்த முடியையும் சேஷசயனத்தையுமுடைய எமது பரமனே! திருமகள் நாயகரே! தேவரீர் திருவடிகளே கதியென்று நமஸ்கரித்தான். எ - று. (௩௭௬)

தானு வந்திடு தவத்திறற் றனிப்பயந் தெடுத்த
தேனெ னுஞ்சிறு குதலையுஞ் சிமந்தக மணியு
ஞான நாயக பெறுதியென் றளித்தன னயப்பாற்
பூந் ணைந்தெழு துளவினேன் பூதலம புகுந்தான்.

(இ - ள்) சாம்பவன், தான் விரும்பிய தவத்தினால் சிறப்பாகப்பெற்றெடுத்த தேனென்று சொல்லத்தக்க சிறிய குதலைச்சொல்லையுடைய (சாம்பவதியெனும்) பெண்குழந்தையையும் சிமந்தக மணியையும், ஞான நாயகரே! பெற்றுக்கொள்ள வேண்டுமென்று ஆசையோடு கொடுத்தனன். அழகிய தேனுடைத்தாகிய துளவமாலையணிந்த கண்ணபிரான அவற்றைப்பெற்றுக்கொண்டு பூலோகமெய்தித் தமது துவாரகையையடைந்தனர். எ-று. (௩௭௭)

புகுந்து சத்திர சித்தனை வருகெனப புகன்று
திகழ்ந்த மாமணி கொடுத்தனன சிமந்தக மணிபோ
யகன்ற வாறெலா மருளின னவனுளத தடைந்து
மகிழுந்து மாமணி யொடுமபெற வளித்தனன் மகளை.

(இ . ள்.) துவாரகைக்கு வந்து சத்திர சித்தனை வருகவென விளித்து, விளங்கிய சிமந்தகமணியைக்கொடுத்து, அச்சிமந்தகமணிபோய நீங்கியிருந்த வகையெல்லாஞ் சொல்லினா. அவற்றையெல்லாம அவவரசன் மனதிலுணர்ந்து மகிழ்வுற்றவனாய், சிறந்த அம்மணியோடு (சத்தியபாமையெனும்) தன புத்திரியையுங்கொடுத்தான். எ - று. (௩௭௮)

சாமபவன் சாம்பவதியெனும் புத்திரியையும், சத்திரசித்து சத்தியபாமையெனும் புத்திரியையும் முறையே கொடுத்தனா.

திரும கட்குநா யகனுமற் றுவணித திங்கள்
வருச துர்த்திபி னைககலு மிஙஙன மயங்கி
யிருநி லத்தினோ ரிகழ்சசிபெற றெழுந்தன னென்றாற்
பெருகு மாதவத துறையுளீா காணபரோ பெரியோா.

(இ - ள்.) இலககுமி கணவராகிய கண்ணபிரானும், ஆவணி மாசத்தில் வரும் சதுர்த்தி திதியிற் சந்திரனைப் பார்த்தவுடனே இவவாறு மயக்கமெய்தி, பெரிய பூலோகத்தாரால் அவமதி யெய்தினரென்று சொல்லப்படுமாகில், மிக்க பெருந்தவ நெறியில் ஒழுகும் முனிவாகளே! பெரியோர் அத்தினத்திற் சந்திரனைப் பார்ப்பார்களோ? எ - று. (௩௭௯)

இதனை மார்கழித் திங்களிற் சட்டியி னிழைத்த
விதிவ ழுக்குறு தன்பொடு நோறபதும் விதியா
னுதிகொள் வேற்படை வசசிர மாலிநோற றடுதத
முதிரப் ருமபிணிச சாகரங் கடந்தனன் முன்னாள்.

(இ - ள்.) இவ்விரதத்தை மார்கழிமாச சஷ்டிதிதியிலும் ஆகமமுறை மாறாது அன்புடன் அநுஷ்டிப்பதும் முறையாகும். பூர்வத்தில் கூர்மையாய்ந்த வேற்படைதாங்கிய வச்சிரமாலியெனும் மன்னவன் அத்திதியில் இவ்விரதத்தை யநுஷ்டித்துத் தனக்குச் சம்பவித்திருந்த முதிர்ந்த பெருவியாதியென்னுங் கடலைத்தாண்டினான். எ - று. (௩௪௦)

அன்றி மைந்தரிற்சிறந்தன னவனிகாத் தளித்து
வென்றி வெண்குடை விளங்கினன் மென்மருங் கனுக்குங்
குன்ற வெம்முலைத் திலோத்தமை மனையெனக் கொண்டா
னென்று மீறிலாக கயிலைபெற் றிருந்தன னின்னும்.

(இ - ள்.) அன்றியும், புத்திரபாக்கியத்திற் சிறந்தவனாய், உலகினைக் காவல் பூண்டு பாதுகாத்து வெண்கொற்றக் குடையுடையவனாய் விளங்கினான். நுணுகிய இடையை வருந்தச்செய்யும் மலைபோலும் பூரித்த தனங்களையுடைய திலோத்தமையை மனைவியாகக்கொண்டு, எக்காலத்திலும் இறுதியில்லாத கைலாயபதவி யெய்தி இதுகாறும் அங்கே வீற்றிருக்கின்றான். எ - று.

உருக்கு செம்பொனேர் தொழுகுபுன் புரிசடை யுடையீ
ரருட்பெ ருங்கட லைங்கரன் விரதமுற் றறைந்தோந்
திருக்கு வெள்ளெயிற் றசுரர்வெங் குலமுதல் தீர
முருக்கு வேற்படை யறுமுகற் குள்ளன மொழிவாம்.

(இ - ள்.) உருக்கிய செம்பொன்போன்று நீண்டு முறுக்கிய சிறுசடையையுடைய முனிவர்களே! பெரிய கருணைக்கடலாகிய விநாயகப்பெருமான்விரதங்கள் முற்றுஞ் சொன்னோம். வஞ்சனையுடையவர்களாகிய வெள்ளியபற்களையுடைய கொடிய அசுரகுலத்தின் வேரறும்படி கொன்றருளிய வேற்படைதாங்கிய அறுமுகப் பெருமானுக்குரிய விரதங்களைச் சொல்லுகின்றோம். எ - று.

ஐப்ப சித்தலைச சுக்கிர வாரத்தி னலரி
யுறப் வித்திடு காலையி லொண்புனல் குடைந்து
கொற்கொள் வேற்படைக் குமரனை யுளம்படக் குனியா
முற்செ யப்படு தினக்குறை முறையினான் முடித்து.

(இ - ள்.) ஐப்பசிமாசத்தில் வரும் முதற்சுக்கிரவாரத்தில், சூரியனுதிக்குங் காலைப்பொழுதில் சிறந்த நீரில் ஸ்நானஞ் செய்து, வெற்றிபொருந்திய வேலாயுதமேந்திய குமாரசுவாமியை மனதிற் பொருந்தத் தியானித்து, காலையிற் செய்யவேண்டிய நித்திய கர்மாநுஷ்டானங்களை முறைப்படிசெய்து முடித்து.

ஒளிப்ப சும்பொனாற் சூரடு மறுமுக னுருவந்
தெளித்த வன்பொடு மியற்றிய பின்னரிற் றிரைநீ
நளிப்ப சும்பொனிற் றசும்புநெற் பரப்பிய நாப்பண்
குளிப்ப வைத்துமாந் தழைமணிக் கும்பமேற் கொடுத்து.

(இ - ள்.) சூரனை வதைத்த ஆறுமுகப்பெருமான திருவுருவத்தை, பிரகாசம் பொருந்திய பசும் பொன்னாலே, மனந்தெளிந்த அன்புடன் செய்வித்த பிறகு, நெல்லைப்பரப்பி அதனிடையே, அலைகளையுடைய குளிர்ந்த நீர் நிரம்பிய பசும்பொன்னாற்செய்த குடத்தை யழுந்தவைத்து, அழகிய அக்கும்பத்தின்மேல் மாவிலையைச்செருகி. எ - று. (௩௪௪)

இயற்று பொன்னுருக் கௌவிய சுத்தியி னிலக்கி
யுயர்த்து கும்பமீ தமைத்துநூல் விதிமுறை யுரைத்த
முயற்சி யாரண மந்திரம் பவித்திர முறறச
செயபப டுநதிரு வருசசனை முதலிய திருத்தி.

(இ - ள்.) அமைத்துள்ள பொன்னுருவத்தைப் பஞ்ச கௌவியத்தினுற சுத்திசெய்து நெல்லின் மீது வைததிருக்கும் கலசததின்மீதமர்தது, ஆகம விதிப்படி தொடர்ச்சியாயுள்ள வேத மநதிரசுததி முடியும்படி செயயப்படுவ தாகிய சிறநத அர்ச்சனுதிகளைத திருத்தமாக முடிதது. எ - று. (௩௮௫)

மங்கை பாகன தாலயம் புகுநதுற வணங்கிப்
பொங்கு தீபமே முதலிய வமுதொடும பொலிவித்
தெங்க ளீசனைத தெககணம் வலனறிரிந தேததிக
கங்கு லிறபெறு பலாதியுண் டததினங கழிதது.

(இ - ள்.) பின்னர், பாாவதி பாகராகிய சிவபெருமானது ஆலயததிற் சென்று நிலமிசைப்படிய நமஸகரிதது, விசேடிதத தீபம் நைவேததியம் முதலியவற்றுடன் விளககமாகச்செயவித்து எஙகள பரமேசுவரனை வலபபுறமா கப்பிரதககிணஞ்செய து தோத்திரிதது, இரவிற் கிடைதத பழ முதலியவற றைப் புசிதது அததினமகற்றி. எ - று. (௩௮௬)

அற்றை நாட்படுங் கங்குனீத் தலரிவந் தெழுநத
பிறறை நாடபுனல் குடைநதுதங குறைநிறை பினனர்க்
கறறை வாாசடை யெமபிராற கைதொழு தமைதத
மறறை விமபமுங குமபமு மறையவாக குதவி.

(இ - ள.) அனறையதினததின் இரவைக்கழிதது, அருணோதயமாகிய மறுதினம நீரில ஸநானஞ்செயது நிததிய காமஙகளைச் செயது முடிததபிறகு, தொகுதியாக நீணடுள்ள சடையையுடைய எமது சிவபெருமானைக கைகூப்பி வணஙகி, ஸதாபிததுள்ள அக்கலசததையும் அதன்மேலுள்ள சணமுகேசன திருவுருவததையும் அநதணருககுத தானமளிதது. எ - று. (௩௮௭)

அடிசி லாரமு தாங்கவர்க் கினிதெனு வருளிப
படிசி ரம்படப படிநதவாப போக்கிய பினனாக்
குடில வேணிநம் பரனடி யவரொடுங் கூடிக
கடிகை யொன்பதிற் பாரணந துய்ததுளங களிபபார்.

(இ - ள்.) அந்தணருககுச் சிறநத அமுததததை இனிமையானதெனச் சொல்லும்படி படைதது, பூமியிற் சிரசானது படியும்படி நமஸகரிதது அவர் களையனுப்பிய பின்னர், கஙகாநதியைத தரிதத சடையையுடைய சிவபெருமா னது திருவடியாாகளுடன் கலநது, ஒனபது நாழிகைக்குள்ளாகப் பாரணஞ் செய்து மனக்களிப்படைவார்கள். எ - று. (௩௮௮)

ஈது முற்படு விரதமற் றிதனையிப் பரிசே
யோது சித்திரை முதலிய வருடமொன் றுற்ற
தீதில் கார்த்திகை யாதிரண் டெய்துமத் தினததிற்
காது சூர்ப்பகை யருள்பெற நோற்பது கடனே.

(இ - ள்) இதுவே முதன்மையான விரதம், இவ்விரதத்தை இப்படியே சொல்லப்படுகின்ற வருடமொன்றில் வரும் சித்திரைமுதலிய பன்னிரு மாதங்களிலும் குற்றமில்லாத கார்த்திகை நட்சத்திரம் வரும் பன்னிரு நாட்களில், சூரபதுமனைக் கொன்றருளிய பகைவராகிய குமாரக் கடவுளின் திருவருளை யடையும்படி அநுஷ்டிப்பது கடமையாம். எ - று. (௫௮௯)

முருக னன்புறு விருச்சிகத் திங்களே முதலாய்
வருட மொன்றினிற் சட்டிநா ளாறவை வருநா
ளருளி னிப்படித் திருவுருக் கும்பமீ தமைத்தே
யுருகு காதலி னோற்பவ ருமபரிற் பொலிவார்.

(இ - ள்.) முருகக் கடவுளுக்கு விருப்பமாகிய கார்த்திகை மாதமுதலாக வருஷமொன்றிற்கு இருபத்திநான்கு சஷ்டிகள். அவை சம்பவிக்கும் தினங்களில், இவ்வகையே அன்போடு திருவுருவமைத்துப் பூரண கும்பத்தின்மீது ஸ்தாபித்து, மனமுருகும் பேரவாவுடனே அநுஷ்டிப்பவர்கள் தேவர்கள்போல விளங்கிப் பிரகாசிப்பார்கள். எ - று. (௫௯௦)

நீல வண்டறை பசுந்துழாய் நெடும்புயல் வண்ணன்
கோல வுந்தியந் தாமரை நான்முகக் குரிசில்
கால மோர்ந்திவை வான்முறை நோற்றனர் கடுங்கா
ரால மன்னவா ளசுரரைக் கடந்தன ரந்நாள்.

(இ - ள்) அவ்வாதிகாலத்தில், நீல நிறந்தங்கிய வண்டுகள் ரீங்காரஞ்செய்யும் பசிய துளவமாலையணிந்த நெடிய மேகவண்ணராகிய திருமாலும், அழகிய நாபிகமலத்திலுதித்த நான்கு முகங்களையுடைய பிரமனும், இவ்விரதத்தை யநுஷ்டிக்கும் காலநியதியை யுணர்ந்து அநுஷ்டித்தவர்களாய், கொடுமையாயக் கறுத்த விடம்போன்ற காந்தியுடைய அசுரர்களைச் சயித்தார்கள். எ - று.

முழுநி லாக்குடை முசுகுந்தன் மனுமுறை புரந்தோ
னெழுவு திண்புய னோற்றனன் கணங்களுக் கிறையா
யொழுகு வெள்ளருவித் திருக் கயிலைபெற் றுயர்ந்தான்
றொழுத வத்தின் ரவனையெத் தேவருந் தொழுவார்.

(இ - ள) எல்லோரும் வணங்கத்தக்க தவமுடைய முனிவர்களே! பூர்ண சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையின் நிழலில் மனுமுறைப்படி அரசு செய்திருந்த உயர்ந்த வலிதங்கிய தோள்களையுடைய முசுகுந்த சக்கிரவர்த்தி, இவ்விரதத்தை யநுஷ்டித்துச் சிவகணங்கட்குத் தலைவனாய், வெள்ளிய அருவியாறு இழிந்துகொண்டிருக்கும் திருக்கைலாயபதவியடைந்து மேன்மையெய்தினன். அச்சக்கிரவர்த்தியைத் தேவர்களெல்லாரும் வணங்குவார்கள். எ - று.

நார தப்பெரும் பெயரினேன் முதலநம் போல்வார்
யேர ருடபெற நோற்றனர் வரன்முறை பிழையார்
மேரு மால்வரை முதலிறந் திறப்பினும் விளியாச்
சார வரும்பெரும் பதவிபெற் றின்னமுஞ் சரிப்பார்.

(இ - ள்.) நாரதரென்னும் பெரும்பெயர்பெற்றேன் முதலிய நம்மைப் போன்ற முனிவர்களும், விதிவழுவாத வகையாக முருகக் கடவுளின் மேன்மை

தங்கிய திருவருளெய்தும்படி இவ்விரதத்தை யநுஷ்டித்தவர்களாய், பெருமை மிகுந்த மேருமலை முதலியன அழிந்தொழியினும் அழியாததாய, அடைதற் கரிதாயுள்ள பெரும்பதவிகளையடைந்து இன்னும வசித்திருப்பார்கள். எ - று.

இத்த னிப்பெரு விரதநோற நிழைப்பவ ரிறவா
முத்தி பெற்றவ ரெத்தனை பேரென மொழிவா
மத்த னாரிருங் கயிலைவீற் றிருந்தன ரவரைச
சித்த மோரினு நமமுழைத தீமையுஞ் சிதறும.

(இ - ள்.) இந்த ஒப்பற்ற பெரிய விரதத்தை யநுஷ்டித்து அழியாத முத்தி யெய்தியவர்களும் இப்போதும் அநுஷ்டித்து வருபவர்களும் எத்தனை பேர் களென்று சொல்லி முடிப்போம்? இவ்விரதத்தை யநுஷ்டித்தவர்களெல்லாரும் சிவபெருமானது திருக்கைலாயகிரியில் வீற்றிருந்தார்கள். அவர்களை மனதிலே தியானஞ்செய்தாலும் உடனே நமது தீவினைகளும் அழிந்துபோம். எ - று.

ஆத லான்மொழி விரதமூன் றவற்றினு ளடிகா
ளோதி லொன்றெனு நோற்பது வேண்டுமா லுமையாள்
காதன் மைந்தனைக் கருத்துற நினைபபினுங் கதிமற
றேது வேண்டுது மதுநமக கெய்துவ தெளிதே

(இ - ள்) ஆனபடியால் நாம் சொல்லி முடித்த குமாரக் கடவுளின் விர தங்கள் மூன்று அவற்றில், [அடிகாள] சுவாமிகளே! குறைத்துச் சொலலு மிடத்தில் ஒரு விரதத்தையாவது அநுஷ்டித்தல வேணடும. உமாபிராட்டி யாருடைய ஆசைப் புதல்வராகிய இளைய பிள்ளையாரை மனதிற்பொருந்த ஒரு முறை நினைத்தாலும், நாம் எப்பதவியை விரும்புகின்றேமோ அது நமககடை வது சுலபமாம். எ - று. (௩௬௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கடுங்காலக் கொடுவடவைக் கொழுந்தனைய புரிசடையீர் கடனீர் ஞால, மடுங்காலத் திரிசூலப் படைமுதலோன் விரதமுத லறிந்த வெல்லா, மொடுங்காத வழியுரைத்தேம வயிரவற்கொன் றுளவிரத முரைக்கே முள்ளஞ், சுடுங்காமத் தழலவிக்கு நீர்மையீர் கேண்மி னெனச் சொல்ல லுற்றான.

(இ - ள்.) கடுமைதங்கிய இயமனையொத்த கொடூரமமைந்த வடவாமுகாக் கினியின் கொழுந்துபோன்ற நிறமமைந்த முறுக்கிய சடையையுடைய நைமிச முனிவர்களே! மனத்தைச் சுடுகின்ற காமாக்கினியைத் தணிக்கின்ற தன்மை யுடையவர்களே! கடல்சூழ்ந்த உலகத்தையழிக்கும் சர்வசங்காரகாலத் தலைவ ராகிய சூலப்படைதாங்கிய சிவபெருமானுக்குரிய விரதங்கள் முதலாக யாம் அறிந்துள்ளவரையில் சுருங்காதவண்ணம விளக்கிச்சொன்னோம். இனி, வைர வக் கடவுளுக்குரிய விரதமொன்றுண்டு. அதனையுங் கூறுவோம். கேளுங்க ளென்று சூதமுனிவர் சொல்லலாயினர். எ - று. (௩௬௬)

பூருவகின் றெழும்பரிதி யுத்தரஞ்சென் றியங்கியதைப் புதிய திங் கட், சாருமுதற செவவாயிற் புலரியெழுந் தருந்தியிற றூழ்ந்த பின்னர், ரோாவருந்தங் கருமமுடித்திர சதத்தாற பொன்னினாலுருவச் சூலப், போர் விளைத்து நிலமபுரக்கும் வயிரவனைத் திருவுருவம் பொலியச் செய்து.

(இ - ள்.) கிழக்குத் திக்கினின் றுதிக்குஞ் சூரியன் வடதிசையாய்ச் சாய் கின்ற உத்தராயணத்தின் முதலாகிய தைமாதத்தில்வரும் முதற் செவ்வாய்க் கிழமையில், விடியற்காலத்தில் நித்திரை விட்டெழுந்து சிறந்த நதி நீரில் ஸ்நா னஞ் செய்தபிறகு, உணாதற்கரிய தங்கள் நித்தியானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு வெள்ளியாலாயினும் பொன்னாலாயினும் சூலாயுதத்தாற் போர் செய்து உலகத்தைக் காவல்பூண்ட வைரவக் கடவுளின் திருவுருவத்தை விளங் கச்செய்து. எ - று. (௩௬௭)

முன்புரைத்த பரிசுமணிப் பூரணகும் பந்திருத்தி முதல்வன் றன்
னை, யன்புடனங் கதினமைத்துப் பூசனைக்கென் றுரியவெல்லா மமைத்த
பின்னர், ரென்பெருக்கு முடிபுனைந்த சிவபெருமான் றிருக்கோயி லெ
ய்தி மைதீர, பொன்புரையு நெடுந்தீப முதலளித்து வலன்றிரிந்து பணி
ந்து போற்றி.

(இ - ள்.) முன்னுரைத்தவகையே, அழகிய பூரணகலசந் தாபித்து, வைர வக் கடவுள் வடிவத்தை அன்போடு அக்கலசத்தின் மேலெழுந்தருளச்செய்து பூசித்தற்கு வேண்டிய வெல்லாப் பொருள்களையுஞ் சேகரித்த பின்னர், எலும்பு மாலையையும் வெள்ளெருக்க மலரையும் திருமுடியிலணிந்த சிவபெருமானு டைய ஆலயத்தையணுகி, களங்கமற்ற பொன்போலும் நிறமமைந்த பெரிய தீப முதலியவற்றைக் கொடுத்து பிரதக்ஷிணஞ்செய்து பணிந்து துதித்து.

பொருதிரைய நெடும்பரவை புடைகிடக்கு நெடுஞாலம் பொதிந்
த கங்கு, லொருபொழுதுண் டிருக்கவல்லோ ருபவாசத் தொழிந்தகங்
கு லொழிந்த பின்னர், வருபுலரி யெழுந்துநறும் புனலாடிச் செய்வசெ
ய்து மதிப்பூங் கண்ணி, தருசடில மௌலிவிம்பங் கும்பமொடு மறை
யோர்க்குத் தான நல்கி.

(இ - ள்.) எறிகின்ற அலைகளையுடைய நெடிய கடல்புடை சூழ்ந்துள்ள பெரிய பூலோகத்தில், நிரம்பிய இரவில் ஒரு முறையுண்டு உபவாசமிருப்பவர் கள், உபவாசத்தாற் கழிந்த இரவு நீங்கியபின்னர் வரும் விடியற்காலத்தி லெழுந்திருந்து நல்ல நீரில் ஸ்நானஞ்செய்து செய்யவேண்டிய நித்திய கடன் களை முடித்துக்கொண்டு, சந்திரனை அழகிய சிரோமாலையாகவணிந்த சடையை யுடைய வைரவக் கடவுளின் திருவுருவத்தை, அதை ஸ்தாபித்துள்ள கலசத் துடன் அந்தணருக்குத் தானமாகவளித்து. எ - று. (௩௬௮)

ஆங்கவர்க்கு வழிபாடு பலவியற்றிப் போசனந்தந் தளித்த பின்
னர்த், தேங்குநதி மதிபுனைந்த செழுஞ்சடிலச் சிவபெருமா னடியார்க்
கூவிப், பாங்கிருத்தி யறுசுவையிற் பாரணங்கொண் டினிதுவப்பார் பசி
ய சட்டை, யோங்குவயி ரவக்கடவுட் குவந்திடுமா விரதமீ தினமொ
ன் றுண்டால்.

(இ - ள்.) அவ்வேதியருக்குச் செய்யவேண்டிய பலவகைப்பட்ட உபசா ரங்களையுஞ் செய்து திருவமுதிணபித்த பின்னர், தேக்கெடுக்குங் கங்காநதியை யும் பிறைச் சந்திரனையுமணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமானடியார் களை வருவித்து அவர்களைப் பக்கலிலிருத்தி, அறுசுவையோடு கூடிய அமுதைப் பாரணங்கொண்டு இனிமையாக மகிழ்வார்கள். பசிய சட்டையணிந்த பெருமை

மிக்க வைரவருக்குக் களிப்பை விளைக்கும் சிறந்த விரதம் இஃதாகும். இன்னு மொரு விரதமுள்ளது. எ - று. (௪௦௦)

சித்திரைத்திங் களினெடுத்த பரணிநா ளிவ்வாறு சிதையா வண்ணம், பத்திபடு கும்பவிம்பம படநோறப தின்னுமொன்றைப பசியின் வந்து, முத்திதரும் பரணிநாண் முறைநோற்ப திவ்வண்ண முயன்று நோற்பார், தத்தருவித் திருக்கயிலைப் பேரரசு தமதெனவீற றிருப்பர் தப்பாா.

(இ - ள்.) சித்திரை மாதத்தில்வரும் பரணி நக்ஷத்திர தினத்தில் இவ்வகையே தவறாதபடி வரிசையாக வருகின்ற கலசமும் திருவுருவமும் அமையும்படி அநுஷ்டிப்பது. மற்றொன்று ஐப்பசி மாதத்தில் வந்து நன்மையைத்தரும் பரணி நக்ஷத்திரத்தன்று இம்முறையாக அநுஷ்டிப்பது. இவ்வகையாக இம்மூன்று விரதங்களையும் முயன்று அநுஷ்டிப்பவர்கள் தவறாதவர்களாய அருவி நீர பெருகும் திருக்கைலாயகிரியின் சிறந்த அரசாட்சி தம்முடையதாகத் தவறாமல் வீற்றிருப்பார்கள். எ - று. (௪௦௧)

ஓராழித் தனித்தடாதே ருதயவனேற் றொருமூவர் படையினாலும், பேராத கஞ்சுகம்பெற றினிதுவந்தா னதலினெம பெருமானன்பு, சீராய மூன்றினினமற றொன்றேனு நோறகினவா தீமை யெலலா, மாராயி னெரிபடுபஞ் செனமாயுங் கயிலையிற்சென் றடைவர் மாதோ.

(இ - ள்) ஒற்றைச் சக்கரமுடைய ஒப்பற்ற விசாலமான தேரையுடைய சூரியன் இவ்விரதத்தை யநுஷ்டித்து, சிறந்த திரிமூர்த்திகளின் ஆயுதங்களாலும் அழியாத [கஞ்சுகம] அங்கியைப பெற்றுக்கொண்டு இனிதாகக் களித்தான் ஆதலால எமது வைரவக் கடவுளின் விரதமாகச் சிறந்த மூன்றனில ஒன்றையெனினும் அநுஷ்டிப்பார்களானால, ஆலோசித்து தீமைக்குமிடத்தில் அவர்கள் செய்த பாவங்களெல்லாம தீப்பொறிபட்ட பஞ்சுப்பொதிபோல அழிந்துவிடும். திருக்கைலாயத்திற் சென்று சேர்வார்கள். எ - று. (௪௦௨)

ஈதுவயி ரவக்கடவுட் கியன்றுநிகழ்ந் திடுவிரத மிதுமுன் போகக், காதுநெடுங் கொடுவடவை கொப்புளிக்கு நெடுஞ்சுரிகைக் கரத்தனுகித், தீதிழைக்கும் பேரகந்தைத் தக்கனியற றியவேள்வி சிதைய நூறிப், போதருமெம் பரமனெந்தை வீரபத்தரற் குளவிரதம புகலக் கேண்மின்.

(இ - ள்.) இது வைரவக் கடவுளுக்கு இயற்கையாய வழங்கிவரும் விரதமாகும். இதுமுடிய, கொல்லத்தக்க மிக்க கொடுமைவாய்ந்த வடவாக்கினியைக் கொப்புளிக்கும நீண்ட வாட்படை தாங்கிய திருக்கரமுடையராய, தீமைபுரியும் அகங்காரமுடைய தக்கன் செய்த யாகத்தைக் கெடும்படி யழித்து, திருக்கைலாயத்திற் கெழுந்தருளிய எமது பெருமானும தந்தையுமாகிய வீரபத்திரக் கடவுட்குரிய விரதத்தைச் சொல்லுவோம். கேட்பீராக. எ - று. (௪௦௩)

தெரிந்தெழுசித் திரைத்திங்கண் முற்படுசெவ் வாய்க்கிழமை விடியல் சென்று, பெருந்திரைநீா குடைந்தெழுந்து முன்னியமக் குறைமுடித்த பின்னா வெண்ணூல், வரிந்தமணிக் குடமமைத்துப பொனனினலெந்தைபிரான் வடிவத் தோடு, பொருந்துபது மையையந்தக் குடத்திருத்தி யருச்சனையும புரிந்து போற்றி.

(இ - ள்) வருஷாரம்பத்தில் வரும் சித்திரைமாதத்தில் முதற் செவ்வாய்க்கிழமையை யறிந்து, விடியற்காலத்திற் போய், பெருத்த அலைகளையுடைய நதிநீரில் ஸ்நானஞ்செய்தெழுந்து, காலையிற் செய்யத்தக்க சந்தியாகிரியைகளைச் செய்து முடித்த பிறகு, வெண்ணூல் சுற்றிய அழகிய கலசத்தை ஸ்தாபித்து, பொன்னாலே எமது தந்தையும் பெருமானுமாகிய வீரபத்திரக் கடவுளின் திருவுருவத்தைப் போன்றமைத்த விக்கிரகத்தை அக்கலசத்தில் எழுந்தருளச்செய்து அர்ச்சனை முதலியன முறைப்படிசெய்து துதித்து. எ - று.　　(௪௦௪)

கொள்ளைநீர் சடைக்கரந்த பரமனமர்ந் துடையதிருக் கோயில் புக்கு
வெள்ளநீ ரபிடேக முதலியபூ சனைக்குரிய விரும்பி யீந்து
வள்ளைவார் குழையொருபா கத்தனை யயனுஞ்சூழ்ந்து வணங்கி மீண்டு
நள்ளிரா வுணவொழிவ ரலவரேற் பலாதிநுகர்ந் திருப்பர் நல்லோர்.

(இ - ள்.) கங்கையின் பெருக்கைச் சடையிலணிந்துகொண்ட சிவபெருமான் அன்போடெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலையடைந்து, கங்கா தீர்த்த முதலிய அபிடேகம் பூசை இவற்றிற்கு வேண்டிய உபகரணங்களை ஆசையொடு கொடுத்து, வள்ளைபோலும் நீண்ட செவிகளையுடைய உமாபிராட்டியை வாமபாகத்திலுடைய சிவபெருமான் திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்துத் திரும்பி நடுராத்திரிவரையில் உணவின்றி யிருப்பார்கள். விருத்தர்களாயின் பழ முதலியன உண்பார்கள். எ - று.　　(௪௦௫)

காலையெழுந் தெம்மானைக் கருத்தமைத்துப் புனலாடிக் கருமமுற்றி, மாலைமணிக் குடத்தமைத்த பதுமைபோ சனத்தோடு மறையோர்க்கீந்து, வேலைதரப் பரந்தெழுந்த காளகண்ட விடையோனற னடியார்க் கூவிப், பாலிருத்தி யறுசுவையிற் பாரணங்கொண் டினிது வந்து பரிவர் மேலோர்.

(இ - ள்.) மேலோராயுள்ளோர் உதயத்திலெழுந்து எமது சிவபெருமானை மனதிற் றியானித்து ஸ்நானஞ்செய்து நித்தியகரும முடித்து மாலையணிந்த அழகிய கலசத்தில் ஸ்தாபித்த வீரபத்திரக் கடவுளின் திருவுருவத்தை அந்தணருக்கமுதுபடைத்து அவர்கட்குக் கொடுத்து, பாற்கடலிற் றோன்றிப் பரவியெழுந்த ஆலாலத்தைக் கண்டத்திலடக்கிய இடபாரூடராகிய சிவபெருமானது அடியவர்களை வருவித்துப் பக்கலிலமர்த்தி, ஷட்ரஸோபேதமான வுணவைப் பாரணஞ்செய்து இனிதாக உவப்போடு அநுஷ்டிப்பார்கள். எ - று　　(௪௦௬)

ஆயிரநெட் டிதழ்விரிக்கு மம்புயவா சனத்திருக்கு மையன் செய்ய, பாயிரநூற் படிநோற்றுப் பசுமபலகைத் திறல்வீர பத்தி ரற்குக், காயசினத் திறுடுமபுகுந்து தக்கனொடுங் கொடியவெம்போர் கடந்த ஞான்று, மேயதடந் தேர்நடத்துந் தனிப்பாகு செலுத்திவென்றி விளங்கா நின்றான்.

(இ - ள்.) நெடிய ஆயிர இதழ்களோடு மலர்ந்த தாமரை மலர்ப்பீடத்திலிருக்கும் பிரமன், செவ்வையாகிய பாயிரத்தோ டுரைத்துள்ள ஆகம முறைப்படி யநுஷ்டித்து, சிறந்த பரிசாயத்தந்தாங்கிய வலித்தங்கிய வீரபத்திரக் கடவுளுக்கு, அவர் கடுங்கோபத்துடன் சென்று தக்கனுடன் மிக்க குரூரமாகிய கடும்போர் செய்த காலத்தில், அவர் ஆரோகணித்த பரவிய தேரைச் செலுத்தும் சாரதியாகவிருந்து வெற்றிகொண்டு விளக்கமெய்தி யிருக்கின்றான். எ - று.

இமையாத நாட்டங்க ளாயிரம்பெற் றுடையபிரா னிதனை
நோற்றா, னமையாத பெருவளத்தின் பெருஞ்சினைய கற்பகம்பெற்
றடைந்தா னன்றிச், சுமையார்ந்த பாரிலத்தி னீங்கிதனை நோற்றவரவெந்
துயரந் தீர்ந்தா, ருமையாளை யொருமருங்கி னுடையபிரான் சேவடி
பெற் றுய்ந்தா ரன்றே.

(இ - ள்) இமைகொட்டாத ஆயிரங் கண்களையுடைய தேவேந்திரன் இவ்விரதத்தை யநுஷ்டித்து, அளவிடப்படாத பெருஞ்செல்வத்தைத் தரும் பருத்த கிளைகளையுடைய கற்பகநாட்டின் அரசுரிமையைப் பெற்றான். அதுவேயன்றி அசைகின்ற ஆதிசேடனுக்கு ஒரு தலைச்சுமையாகிய இப்பூலோகத்திலே, இவ்விரதத்தை அநுஷ்டித்தவர்களெல்லாரும் கொடிய துன்பங்களினின்று நீங்கியவர்களாய், உமாதேவியாரை ஒப்பற்ற வாமபாகத்திலுடைய சிவபெருமானது திருவடியை யடைந்து கடைத்தேறினார்கள். எ - று. (௪௦௮)

அருமறைநூ லந்தணர்நோற் றுதியுணர்ந் தறிஞானத் தடைந்தா
ரன்றிப், பொருகழன்மன் னவர்நோற்றுப் பகைசெகுத்துப் பொதுக்
கடிந்து புரந்தார் மற்றை, யிருவருணத் தவர்நோற்றுப் பெருவளனு மி
ருங்கதியு மெய்தா நின்றார், கருணையுரு வெடுத்தனைய மாதவத்தீ ரத
னிலைமை கழறற் பாற்றே.

(இ - ள்) அரிய வேதங்களை யறிந்த மறையோர்க ளனைவரும் இவ்விரதத்தை யநுஷ்டித்து, சிவபெருமானை உள்ளபடி யறியும் மெய்ஞ்ஞான நிலைமை யெய்தினார்கள். ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த மன்னர்கள் அநுஷ்டித்து, பகையை யழித்துப் பொதுத்தன்மை நீக்கி அரசு செய்தார்கள். மற்றுமுள்ள வைசியர் சற்சூத்திரராகிய இருவருணத்தவர்களும் அநுஷ்டித்துப் பெருஞ்செல்வத்தையும் உயர் பதவியையும் அடைகின்றார்கள். ஆதலால், கருணையே வடிவெடுத்தாற்போன்ற பெருந்தவமுடைய முனிவர்களே! இவ்விரதத்தின் தன்மை சொல்லி முடிக்குந் தகுதியுடையதோ? எ - று. (௪௦௯)

கொடிப்புரிசை மூன்றுநகைத் தெரித்தபிரான் விரதமுதற் குளிர்
பூந் தோடு, விரித்தகம லாலயத்தோ னெழுங்கடவுள் வீரபத்திர
விரத மீறா, யெடுத்துமறை மொழியிருபத் தொன்றுநுமக் கிசைத்தன
மற்றிவற்றை நோற்பான, றொடுக்குறினுங் கலைகளுள்ள தொன்மரபு
விதித்தபடி சொல்லக் கேண்மின்.

(இ - ள்) துவசங்கள் கட்டிய மும்மதில்களையும் சிரித்தெரித்தருளிய சிவபெருமானுடைய விரதங்கள் முதலாக, குளிர்ச்சிவாய்ந்த அழகிய கமலாசனமுடைய பிரமன் வணங்கும் வீரபத்திரக் கடவுளுடைய விரத மிறுதியாக, வேதங்களெடுத்துச் சொல்லிய இருபத்தொரு விரதங்களையும் உங்கட்குச் சொன்னோம். இவ்விரதங்களை அநுஷ்டிக்க ஆரம்பிக்க வேண்டுமானால், அவ்விரதாநுஷ்டானங்களுக் குள்ளனவாகிய பழமைவாய்ந்த கிரமப் பாடுகளைச் சிவாகமங்களிற் கட்டளையிட்ட வகையே நாம் கூறக் கேட்பீர்களாக. எ - று.

அரசரா தியமூன்று வருணத்தோர் சங்கரசா தியரா லந்த, விரத
நோற் றுறத்தொடங்கின் மறையோர்க்கொண் டியற்றுவித்தல் விதியா
லன்றிப், பரவையா கமத்துறையுட் படிந்துசிவ னருச்சனையிற் பரியுந்
தெய்வக், குரவரா லவைநோற்க வேண்டுவரா கமங்களும்ப ப
கூறும்,

(இ - ள்.) க்ஷத்திரியர் முதலிய மூன்று வருணத்தாராலும் (அநுலோம பிரதிலோமர் அந்தரானர் விராத்தியரெனனும்) சங்கர ஜாதியாராலும் அந்த விரதம நோற்கத் தொடங்கப்படுமாயின், வேதியரைக்கொண்டு விதிப்படி நடப்பித்தல் முறையாம். அல்லாமலும், சிவாகமப் பெருங்கடலில் மூழ்கிச் சிவார்ச்சனையில் விருப்பெய்திய தெய்வீகம்பொருந்திய சைவாசாரியரால் அவ்விரதானுஷ்டானத்தை விரும்புவோர் அநுஷ்டிக்கக்கடவர். சிவாகமங்களும் இதுபற்றி அப்படியே சொல்லும் எ - று. (௪௧௧)

ஏழைபா கத்தரனைக் குறித்தெடுத்த விரதமூ வேழி வற்றுள்
வாழியோர் விரதமிழைத் துளானறி யிழைப்பவர்க்கு வழிபா டெய்தி
யாழிநீ ருலகத்திக் கதைகேட்போர் கேட்டவர்கண் டருளிற் றூழுவோ
ரூழியீ றினுமுலவார் கடைமுறையிற் கயிலைபுகுந் துறைவ ரன்றே.

(இ - ள்.) உமாதேவியாரை ஒரு பாகத்திலுடைய சிவபெருமானைக் குறித்துக் கூறிய விரதங்கள் இருபத்தொன்று. இவ்விரதங்களில் மங்கலகரமாகிய ஒரு விரதத்தையேனும் அநுஷ்டித்தவர்களே யல்லாமல், அநுஷ்டிப்போர்க்கு வழிபாடு செய்து, கடல்சூழ்ந்த பூமியில் இச்சரிதையைக் கேட்டவர்களும், கேட்டவர்களைத் தரிசித்து அன்போடு பணிந்தவர்களும், ஊழிக்காலத்தி னிறுதியிலும் அழியமாட்டார்கள். தங்கள் தேகாந்தத்தில் கைலாயகிரியிற்சென்று வாழ்வார்கள். எ - று. (௪௧௨)

நோற்பவர்நோற் பவர்க்குரிய பகுந்தளிப்போர் நோற்பவரா னு
வலுங் கேள்வி, யேற்பவரிக் கதைபடிப்போ ரிருசெவிதாழ்த் துளந்தா
ழ்ப்போ ரிவைநோற் பித்த, போற்றரிய குரவரடி வீழ்ந்திறைஞ்சித்
தமக்கியன்ற புரிந்தோர் செங்கண், மாற்பொருகோட் டிமிலேறு கட
வுளபிரான் றிருக்கயிலைமன்னி வாழ்வார்.

(இ - ள்.) சிவ விரதங்களை யநுஷ்டிப்பவர்களும், விரதாநுஷ்டானஞ் செய்வோர்க்கு வேண்டுவனவற்றைப் பாகித்துக்கொடுத் துதவுபவர்களும், விரதிகளாலே சொல்லப்படும் நூற்கேள்வியைச் சிரவணஞ் செய்பவர்களும், இச்சரித்திரத்தை வாசிப்பவர்களும், இருசெவிகளையுஞ் சாய்த்துக்கேட்டுமனங் களிப்பவர்களும், இவ்விரதங்களை யநுஷ்டிக்கச்செய்த ஆசிரியர்களுடைய பாதங்களில் நமஸ்கரித்து வணங்கித் தம்மாற்கூடிய உபகாரஞ்செய்தவர்களும் செவ்வந்த கண்களையும் பெரிய போர்புரியுங் கொம்பையும் முசுப்பையுமுடைய இடபவாகனராகிய சிவபெருமான் வீற்றிருக்குந் திருக்கைலாயகிரியில் நிலைபெற்று வாழ்வார்கள். எ - று. (௪௧௩)

சிவவிரதமான்மியசருக்க முற்றிற்று.



ஆ திருவிருத்தம் - ௪௰௧௩.



பத்தாவது

# சிவபுண்ணியமான்மியசருக்கம்.

### கலிநிலைத்துறை.

முக்கு றும்பெறு சிந்தனை மூசிவண் டரற்று
மைக்க ருங்குழல் பாகன்மா மலரடி பதித்தீ
ரிக்க ணுஞ்சிவ விரதமுற் றிசைத்தன முமக்குச்
செக்க ரஞ்சடை யெம்பிரான் புண்ணியந் தெரிக்கேம்.

(இ - ள்.) ஆணவாதி முக்குற்றங்களைக் கடிந்த சித்தத்தை, வண்டுகள் மொய்த்துப் பண்பாடும் மேகம்போற்கரிய கூந்தலையுடைய உமாபிராட்டியாரை வாமபாகத்தி லிருத்திய சிவபெருமானுடைய செந்தாமரை மலர்போலுந் திருவடிகளிற் பதித்த முனிவர்களே! இதுகாறும் உங்களுக்குச் சிவவிரதங்களை யெல்லாஞ் சொன்னோம். இனி, செவ்வானம்போலும் அழகிய சடையையுடைய எமது சிவபெருமானுக் குரிய புண்ணியங்களைச் சொல்லுகின்றோம். எ - று. (௧)

எந்தை யீசனுக் கிமயமீன் றளித்தபைங் கிளிக்குந்
தந்தி மாமுகற் காறிரு தடம்புயத் தவற்குஞ்
சிந்தை கூர்தரு சிவகணத் தவர்க்கெனச் சிறந்த
புந்தி கூர்தரு சிகரமுற் றாலயம் புரிவார்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமானுக்கும், இமாசலமன்னன் பெற்ற பச்சைக்கிளிபோன்ற உமாபிராட்டியாருக்கும், சிறந்த யானைமுகமுடைய விநாயகக் கடவுளுக்கும், பூரித்த பன்னிரு திருப்புயங்களையுடைய குமாரக் கடவுளுக்கும், சிறந்த மனமுடையவர்களாகிய சிவகணங்களுக்கும் உரியனவெனச் சிகரங்களோடு கூடிய திருக்கோயிலைக் கட்டுபவர்களும். எ-று.

நீடு கோபுர மண்டப முதலிய நிரப்பி
யாடு வெண்டிரைத் திருக்குளஞ் சாமரை யலங்க
லூடு கூவனெய்த் தீபம்வெண் சாந்திவை யுதவி
மாடு நின்றெழு நறும்புகை முதலிய வகுப்பார்.

(இ - ள்.) நீண்ட கோபுரங்களும் மண்டபங்களும் முதலியன முடித்து, வெள்ளிய அலைகள் அசைந்துகொண்டிருக்கும் திருக்குளங்களும் சாமரைகளும் மாலைகளும் ஆழமுள்ள கிணறுகளும் நெய்விளக்கு சுண்ணச்சாந்து இவை முதலியவைகளும் உபகரித்து, மூர்த்திகட்கருகே நின்று நல்ல தூப முதலியவைகளைக் கொடுப்பவர்களும். எ - று. (௩)

சாற்று வெண்டுகில் வெண்குடை வாகனந் தாளம்
பூத்த செம்மணிப் பொலன்கல னமுதிவை பொருந்த
வார்த்த ருந்தொழிற் றுதிய ரன்புட னளிப்பார்
சேற்ற செந்நெலங் கழனிமற் றவர்க்கெனச் சேர்ப்பார்.

(இ - ள்.) சொல்லிய வெள்ளை வஸ்திரம், வெள்ளைக்குடை ஆபரணங்கள் முத்து மாணிக்க முதலியவற்றுடன் கூடிய பொன்னாபரணங்கள் திருவமுது இவற்றுடன், பொருநதும்படி பாடி அரிய நடனஞ்செய்யும் தாசிகளையும், உண்மை யன்போடுதவுபவர்களும், சிவபெருமானுக்கென்று செந்நெல் விளை யத்தக்க சேற்றையுடைய கழனிகளைத் தானஞ் செயபவர்களும். எ - று. (௪)

மாலை வெண்பிறைக் கண்ணியோன் றிருமுடி வதியச
சீல வெண்மலா நந்தன வனமபல செயவார்
பால லோசனற் கெனத்திரு விழாவுறப் பணிப்பா
ரால யமபுகுந் தரனடி வழுத்தியன் பளிப்பார்.

(இ - ள்.) மாலைப்பொழுதிலுதிக்கும் வெள்ளிய பிறைச்சந்திரனைச் சிரோ மாலையாக வணிந்த சிவபெருமான் திருமுடியிலே சாத்தும்படி புனிதமாகிய அஷ்ட புஷ்பங்கள் நிறைந்த பல நந்தன வனங்களை யுண்டு செய்பவர்களும், நெற்றி விழியையுடைய சிவபெருமானுக்கென்று திருவிழா நடக்கும்படி நிய மனஞ் செயபவர்களும், திருக்கோயிலுட்சென்று அன்போடு சிவபெருமான் திருவடிகளைத் துதி செய்பவர்களும். எ - று. (௫)

தொல்லை யாலய மழிந்தன புதுக்கிமென் றுவர்வாய்
வல்லி பாகனுக் கருச்சனை முதலிய வகுப்பார
புல்லை யேற்றுடை யெம்பிரா றகடித்தொழில் புரிவார்க்
கல்ல றுத்துளம விளக்கிய குரவரா யவர்க்கு.

(இ - ள்) பழமையாயபழுதுபட்ட ஆலயங்களைச் சீர்ணோத்தாரணஞ்செய் வித்து, மெல்லிய பவளம்போலும உதட்டினையுடைய மரகதக் கொடிபோன்ற உமாபிராட்டியாரை ஒரு பாகத்திலுடைய சிவபெருமானுக்குப் பூசை முதலிய வற்றை நடத்துபவர்களும், [புல்லை] வெண்மை கலந்த செம்மை நிறமுடைய இடபவாகனம் பொருந்திய எமது சிவபெருமானுக்குத் திருவடித் தொண்டு செய்பவர்களுக்கும்,அஞ்ஞானத்தை யகற்றி மனத்தைத் தெளிவுபடுத்திய ஆசாரி யார்களா யுள்ளவர்களுக்கு. எ - று. (௬)

மனையின் மாட்சிகொண் டினிதிருந் தில்லறம் வளர்ப்பான்
வினையின் வேண்டுற வேண்டிய யாவையும விருப்பா
னினையு மன்பினுறை பலபொருட் படுகுறை நிரப்பி
யனைய வர்க்கென வில்லெடுத் தகனுசிறந் தளிப்பார.

(இ-ள்.) இல்லறத்திற்குரிய ஒழுக்கங்களை மேற்கொண்டு இனிதாக வாழ்ந்து இல்லற தாமத்தை வளர்க்கும்பொருட்டு, முயற்சியோடு தேடவேண்டிய பல பொருள்களை யெல்லாம் ஆசையோடும நீங்காத அன்போடும் குறைவின்றி மிகுதியாகக் கொடுத்து, அத்தகையினர்க்கென்றே வீடுகட்டி மனக்களிப்போடு தானஞ்செய்பவர்களும். எ - று. (௭)

தன்ன கப்படு களங்கநீத் தளிப்பவர் தமைக்கண்
டின்ன லததொடு மெதிரெழுந் திறைஞ்சிநின் றேத்திப்
பின்ன லஞ்சடை யெம்பிரா னடியவா பேரன்
புன்னி யுனனிநெஞ் சிளகிநின் றன்புட னுவப்பார்.

(இ - ள்.) தன் மனதிலுண்டான அஞ்ஞானத்தை விலக்கி அருள் செய்பவராகிய ஆசிரியரைக் கண்டவுடனே இனிய உபசாரத்தோடு எதிர்சென்று பணிந்து அவர் திருமுன்னின்று துதிசெய்து, பின்னலோடு கூடிய அழகிய சடையையுடைய எமது சிவபெருமானுக்கு அடியவர்கள் செய்யும் பேரன்பை மிகவுங் கருதி மனமுருகி ஆசையோடு களிப்பவர்களும். எ - று. (அ)

எங்கு ரைத்திடு மிவற்றினுட் டமக்கென வியன்ற
தோங்கு சிந்தையி னெறிழைத் தார்களு மொலிநீர்
தேங்கு செஞ்சடை யானுறை திருநெடுங் கயிலை
தூங்கு முச்சிவீற் றிருந்தொழி யாவளந் தழைப்பார்.

(இ - ள்.) இங்கே சொல்லப்படும் இப்புண்ணியங்களில் தம்மாற் செய்யக்கூடியதாகிய ஒன்றையாயினும் அதிக கவனத்தோடு செய்தவர்களும், ஒலிக்கின்ற கங்காசலமானது தேங்கிக்கொண்டிருக்கும் செவ்விய சடையையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் அழகும் பெருமையுந்தங்கிய கைலாயகிரியினுச்சியில் வதிந்திருந்து நீங்காத செல்வத்தில் மேம்படுவார்கள். எ - று. (௯)

கோடி கற்பமக் கயிலைவீற் றிருந்துபைங் கொடியோர்
மாடி ருந்திய முக்கண்ண னலரடி வதிவா
ரோடு நீடிய பசும்பொனு மொக்கவே நோக்கி
நாடு வீரிவர் பெறும்பயன் யாவரே நவில்வார்

(இ - ள்.) அக்கைலாயகிரியில் கோடிகற்பகாலம் வாழ்ந்திருந்து, மரகதக்கொடிபோலும் உமாபிராட்டியாரை ஒரு பாகத்திலமர்த்திய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானுடைய தாமரை மலர்போலுந் திருவடிகளிற் கலப்பார்கள். ஆதலால், ஓட்டையும் மாற்றேறிய பசும்பொன்னையும் ஒன்றாக மதித்து நாடுகின்ற நைமிசாரணிய முனிவர்களே! இப்புண்ணியர்களுடையும் பேற்றை எவர்தாங் கூறவல்லவர் ? எ - று. (௧௦)

**கலிவிருத்தம்.**

என்று சூத னுரைத்தன யாவையு
மொன்று சோர்வுறு தற்றுற வோர்ந்தரு
ணின்ற நேய முனிவரர் நீதியோ
யின்று கேட்பதொன் றுண்டென் றிசைத்தனர்.

(இ - ள்.) என்று சூதமுனிவர் சொல்லியவற்றையெல்லாம், ஒன்றுந் தவறாமல் மனதிற் பதியும்படி தெரிந்துகொண்டு, அன்பே குடிகொண்ட சிவநேயந்தங்கிய நைமிசாரணிய முனிவர்கள், நீதிநெறியையுடைய சூதமுனிவரே! இப்போது தேவரீரைக் கேட்டுக்கொள்ளுவதொன்றுளது என்றார்கள். எ - று.

தேவ தேவனைத் தேவன் றிருவரு
ளாவ தீதென் றறிவிக்கு மையனை
மேவ ருந்திரு வேடத்தி னுண்பொரு
ளோவ றத்தெளிந் தோர்களை யோர்கிலேம்.

(இ-ள்) தேவர்கட்குத் தேவனாகிய சிவபெருமானையும், அப்பெருமான் திருவருணிலைமையும் இப்படியிப்படியென்று தெரிவிக்கும் ஞானசாரியரையும்,

யாவரும் அடைதற்கரிதாகிய திருவேடத்தின் நுட்பமாகிய பொருளையும் கெடுதலின்றி ஆராய்ந்துணர்ந்தவர்களையும் நாங்கள் இதுகாறும் தெரிந்திலோம்.

எடுத்த மூவகை யாகு மிவற்றைநெஞ்
சடுத்த றிந்தில மாதலி னையநீ
விடுத்த கொன்றை மிலைச்சிய வேணிநெஞ்
சொடுக்கு தொண்ட ரியற்கை யுரைத்தியால்.

(இ - ள்.) விரித்துச் சொல்லிய மூவகையாகிய இவற்றை மனதில் யோசித்தறிந்தோமில்லையாதலால், ஐயரே ! கொன்றைமாலையணிந்து தொங்க விட்டிருக்குஞ் சடையையுடைய சிவபெருமானபால மனத்தினை யொடுக்கிய தொண்டர்களின் இயல்பினைத் தேவரீர் அடியேங்கட் குரைத்தருளவேண்டும்.

ஈத றிந்தில திப்பிறப் பெய்திய
தீது தீர்சிவ புண்ணியஞ் செய்வதற்
கோது சிந்தை யொருப்படு மோவெனச்
சூத மாமுனி சொல்லுதன் மேயினன்.

(இ - ள்.) இதனை யுணரமாட்டாமல், இப்பிறவியை யடைந்ததற்குக் காரணமாகிய குற்றந்தீர்ந்த சிவபுண்ணியங்களைச் செய்வதற்குச் சொல்லுகின்ற மனமானது ஒற்றுமைப்படுமோ? என்று நைமிசாரணிய முனிவர் வினவ, பெருமை தங்கிய சூதமுனிவர் சொல்லத் தொடங்கினார். எ - று. (௧௪)

மாக ரந்தணர் மற்றுள மானிடர்
யோக ஞான முனிவ ருலப்பறு
நாகர் சித்த ரியக்கர் நடுங்கெழுந்
தேக சங்கர சாதியி ராக்கதர்.

(இ - ள்.) தேவர்களும் வேதியர்களும் வேறுமுள்ள மனிதர்களும் யோக முனிவர்களும் ஞான முனிவர்களும் கெடுதலற்ற நாகலோகவாசிகளும் சித்தர்களும் இயக்கர்களும் நடுவில் விளங்கியெழுகின்ற சங்கரசாதியிலுதித்தவர்களும் இராக்கதர்களும். எ - று. (௧௫)

சேணெ றிக்கந் தருவர் தைத்தியர்
மாணெ றிக்குடை மன்ன ரிவர்களி
னீணெ டுந்திரை நேமி யடுங்கடு
வூணு காந்தவற் காட்பட் டுண்டரோ.

(இ - ள்.) ஆகாயவழியிற் சஞ்சரிக்குங் கந்தருவர்களும் தைத்தியர்களும் மாட்சிமை தங்கிய சனமார்க்கமுடைய அரசர்களுமாகிய இவர்களில், மிக நீண்ட நெடிய கடல்சூழ்ந்த உலகத்தை யழிக்கவந்த ஆலகாலத்தைத் திருவமுது செய்த சிவபெருமானுக்கு அடிமை பூணுதலுண்டு. எ - று. (௧௬)

வரமு னித்தலை வீரவ வருணமாச்
சிரம மென்பத வாக்கிலைச் சேவுடை
யரன ருச்சனை யாவர்க்கு மாமவர்
பரம னென்னப் பணியப் படுவரால்.

(இ - ள்.) சிறந்த முனைத்தலைவர்களே! அவ்வகைப்பட்ட வருணம் ஆச்சிரமம் என்னும் வேறுபாடு அத்தொண்டர்கட்கு இல்லை. இடபக் கொடியையுடைய சிவபெருமானது அர்ச்சனையானது எல்லோருக்குமாகும். அப்படிப் பூசிப்பவர்களே சிவபெருமானென்று பலராலும் வணங்கப்படுவோர்கள். எ - று.

ஈச னெந்தை பிரானடிக் கீர்ந்துணர்
வாச நன்மல ரிட்டுவ ணங்குவார்
மாசி லாசிர மத்தின் வருணத்திற்
பேசி லாங்கவர் போற்றப பெரியரே.

(இ - ள்.) எமது தந்தையும் கடவுளுமாகிய சிவபெருமான் பாதங்களுக்கு, குளிர்ந்த பூங்கொத்தாய மணமுடைய அன்றலர்ந்த மலர்களால் ஆர்ச்சித்து வணங்குபவர்களாகிய அவர்களே, சொல்லுமிடத்தில் குற்றமற்ற ஆச்சிரமத்திலும் வருணத்திலும் துதிசெய்தற்குரிய பெரியோராவர். எ - று. (௧௯)

அன்ன வாகத்தி யாசிர மப்பெயர்
மன்னு மீதென் மனச்செருக் கன்றிது
பன்னு நான்மறை முற்றும படிப்படி
சொன்ன தாமிது சத்தியஞ் சொற்றனம்.

(இ - ள்.) அப்படிப்பட்டவர்களுக்கே அதியாச்சிரமிகள் என்னும் பெயர் நிலைபெறும். இப்படிச் சொல்வது எமது மனோகர்வமல்ல. இச்சொற்கள் பலரும் கூறும் நான்கு வேதங்கள் முழுவதும் முறை முறையாகக் கூறியதாம். இதனைச் சத்தியமாகச் சொன்னோம். எ - று. (௧௯)

செய்ய மேனிச சிவனடி யார்க்கய
லெய்தக் காணு மிலக்கண மபத்துள
மெய்யி லெய்து மிலக்கண மெமமைசா
லையி ரண்டகத் துள்ளன மூன்றரோ.

(இ - ள்.) செவந்த திருமேனியையுடைய சிவபெருமானுடைய தொண்டர்களுக்குப்புறம்பாக அடையும்படி காணத்தக்க பத்து இலக்கணங்களுள்ளன. தேகத்திலடையத்தக்க உண்மை மிகுந்த பத்து இலக்கணங்களுள்ளன. மனதின் கண்ணுள்ளனவாகிய மூன்று இலக்கணங்களுள்ளன. எ - று. (௨௦)

அலக்க ணீக்கு மரனடி யார்க்கென
விலக்க ணங்க ளிருபத்து மூன்றுள
பலப்ப டுத்து முதற்பபடு பத்தையும
புலப்ப டுத்தி நுமக்குப புகலுவாம.

(இ - ள்.) துன்பங்களை யகற்றும சிவபெருமானுடைய அடியார்களுக்கென்று கூறிய இலக்கணங்கள் இருபத்து மூன்றுள்ளன. முதலிற் கூறிய பிரயோசனமளிக்கும் பத்திலக்கணங்களையும் உங்களுக்குத் தெளியும்படி சொல்லுவோம். எ - று. (௨௧)

வாசப் பூதி யுருத்திர மாமணி
பூசிப் பூணல் குரவரைப் பூசித்த

லாசைப் பாட்டி லரனைப் புகழுத
லீசற் குள்ளன் நாம மியம்புதல்.

(இ - ள்.) மணநதங்கிய திருவெண்ணீற்றையும், சிறந்த உருத்திராக்கமணியையும் முன்றியே பூசுவதும் அணிவதும், ஆசாரியருக்கு வழிபாடு செய்தலும், ஆசைகொண்டு சிவபெருமானைத தோத்திரிப்பதும், சிவபெருமானுக்குரிய திருநாமஙகளைச் சபிப்பதும். எ - று. (உஉ)

எந்தை யீச னருச்சனை யோம்புத
றநதி ரசிவ தன்மம புரிகுதன்
முநதை யோன்கதை கேட்டன் முறைமையாற்
புநதி கூரநதர லயம போற்றுதல.

(இ - ள்.) எமது தநதையாகிய சிவபெருமானுடைய வழிபாட்டினை நடத்துவதும், சிவாகமஙகளிற் கூறப்பட்ட சிவதாமஙகளைச் செயவதும், ஆதிதேவனாகிய சிவபெருமான் சரிதைகளைச் சிரவணஞ் செயவதும், கிரமப்படி மனவிருப்போடு சிவாலயததைப் பாதுகாப்பதும. எ - று. (உ௩)

ஒத்த பதத ரிடத்தல தோரிடந்
துய்தத னீததலத தொண்டரிற றொண்டராய்ச
சித்த மன்புற வீதன்முன செபபிய
பதது மிங்கிவை காணப படுதிரால.

(இ - ள்) தம்மைப்போனற தொணடர்களிடததி லல்லாமல மற்றோரிடததில் உணணுதலை நீககுதல, அததொணடாகட்குத தொணடராய் அவர்கள் மனமானது சநதோஷிக்கும்படி கொடுததல ஆகிய இவை பததும் முற்கூறிய பததுப்புறத திலககணஙகளென்று காணபீரகளாக. எ - று. (உ௪)

தொண்டா மெய்யிற் றுலங்கு மிலககண
மூண்டொா பதமென் றுரைதத துரைக்குதுந்
தண்டை யூாதி சிவததியல் கூறுஙகாற
கண்ட முறறொரு விமமிதங காட்டுதல்.

(இ - ள்) தொணடருடலில விளஙகும் இலககணஙகள பத்தி உளவெனச் சொல்லியவற்றைச் சொல்லுவோம். இடபததை வாகனமாகவுடைய சிவபெருமானது தன்மையைச் சொலலுமிடததில கழுதது முழுவதும் ஒருவிம்மிதங் காட்டலும். எ - று. (உ௫)

ஏதது மெந்தை யியறகை யுணர்தொறு
நாத்து டித்தெழும பாத னகைபபுறம்
பூதத முததந துடித்தல் விபூதிகொண்
டார்த்த ணிநததம் மங்கங் குலுஙகுதல்.

(இ - ள்.) பலரும் துதிசெய்யும் எந்தையாகிய சிவபெருமானது தன்மையைக கருதும்பொழுதெலலாம், நாவானது துடிதது வார்ததை சொல்ல வியலாமையும், உள்ளே தோன்றிய நகைப்பைப் புறததே காட்டிய உதடு துடித்தலும், திருவெணணீற்றைக கையிலெடுதததுச் சபிததுத தரிததிருக்கும் தமதுடல் குலுங்குதலும். எ - று. (உ௬)

மயிர்ப்பு றம்புள கித்தல் வரன்முறை
வெயாதத றன்வச மன்றி விளமபுநாப்
பெயாத்தி டாதலா ...கப பெருவகணீ
ரயற்ப டுதததல் வாய்விட் டழுதலே.

(இ - ள்.) உடலின்மீது மயிர்க்கூச்செறிதலும், வரன்முறைபோல வெயர் வுண்டாதலும், தன வசபபடாது பேசும் நாவானது பேசவராமற றழுதழுத் தலும், பெரிய ஆநநதக கணணீர் வெளிப்படுதலும், வாய்விட்டழுதலும்.

பாவ சதநின ஞகிப படாசடை
யாறு எமபடத தனனை யயாகருதல்
விரவு பததும் விடுதஞுரைத தோமிவை
வரமு னிததலை வீரமனக கொளவிரால்.

(இ - ள்.) பரவசமுடையராய, படாநத சடையையுடைய சிவபெருமான் திருவுளளங களிகொள்ளுமபடி தமமை வெறுததலுமாகிய உடலிலககணஙகள் பததினையும விளககிச்சொனனேம். சிறநத முனிசிரேஷ்டாகளே! இவறறை நீஙகள் மனதிறகொளளக கடவீரகள். எ - று. (உ௯)

உளத்தி லக்கண மூனறென் றுரைததன
மனத்தி லஞ்செழுத துனனல கபபட
வளாக்கு மானத பூசனை மைககடுக
களத்த னைத்தனை யொன்றெனக காண்குதல்.

(இ - ள்.) அகததிலககணஙகள் மூன்றென்று சொனனேம். அவையாவை யெனில், பஞசாக்ஷரததைச் சபிததலும உள்ளீடாகக செயதுவரும மாநத பூசையும், கரிய விஷநதங்கிய ஸ்ரீகணடததையுடைய சிவபெருமானையும தன்னையும வேறறககாணுதலுமாம. எ - று. (உ௬)

எம்மை யாளுறுந தொண்டாக கிலக்கண
மும்மை யேழு மிரணடு மொழிநதன
மெமமை யானநத மெய்பபொரு ளோர்ந்தறி
செமமை யீருணாந தீரினிச செபபுவாம.

(இ - ள்.) எமமை யடிமைகொளளுந தனமையுடைய அடியார்களுக்குளள இலககணஙகள இருபதது மூனறனையுஞ் சொனனேம உணமையானநதமாகிய நிததியபபொருளைத தோநது தெளிநத செமமைபொருநதிய முனிவாகளே! அவறறைத தெரிநதுகொணடீாகள. மேலே சொலலுவோம. எ - று. (௩௦)

பின்னு ரைததுள மூன்றும பெரிதுளத
துனனி யோமபிய வுத்தம ரைபபிறைப
பொனனு யிாதத புரிசடைப புஙகவ
னென்ன வோாநதுளத தெணணுவ ரெமமனோர்.

(இ - ள்.) இறுதியிற் சொலலியுள்ள மூன்று அகததிலககணஙகளையும் மனதில மிகவுஞ் சிநதிததுச் செயயும் புணணியாகளை, எம்போனறவர்கள் யாவரும் இளமபிறைச் சநதிரனை யணிநத பொன்னிறநதங்கிய புரிநத சடை யையுடைய சிவபெருமானென்று தெளிநது மனதிற கருதுவாரகள. எ - று.

எண்ணிப் போது மிலக்கண மியாவையு
நண்ணி லால ராயினு நாயகன்
கண்ணெ னத்தகு மாமன பூஷணந்
துண்ணி றப்பெரி தாடிய வேடத்தோர்.

(இ - ள்) நாம தொகைப்படுத்திச்சொன்ன இலக்கணங்களையெல்லாம் பொருந்தாதவர்களானாலும், சிவபெருமான திருவிழிகளென்று சொல்லத்தக்க கிரமமாக அணிகின்ற சிறந்த உருத்திராக்க மணியையும் திருவெண்ணீற்றை யும அணிந்து ருக்கும் திருவேடம்பெற்றவர்களும். எ - று, (௩௨)

ஆச றுத்து விளக்கு மருட்சிவ
தேசி கற்பணி வோர்சிவ தொண்டரைப்
பூச னைக்குரி யாரெனப் போற்றுவோ
ரீச னொப்பரென் றேத்துவ ரெம்மனோர்

(இ - ள்) அஞ்ஞானத்தை விலக்கித் தெளிவிக்கும் திருவருணிறைந்த சைவாசாரியரை வணங்குவோர்களும், சிவனடியார்களைப் பூசைபுரிதற் குரிய ரென்று தோத்திரஞ் செய்வோர்களும் சிவபெருமானை யொப்பவர்கள் என்று எம்போலவார் துதிசெய்வார்கள். எ - று. (௩௩)

எடுத்த யாக்கை யிடும்பை யிகந்தவர்
தொடுத்த நல்லறத் தின்பய னுய்த்துநீர்
படுத்த வைப்ப பவித்திர மெய்திவாழ்ந்
தொடுக்கு மைம்புலச் செய்கை யொடுங்குநாள்.

(இ - ள்) அத்தகையினார் தாமெடுத்த தேக துன்பத்தை நீங்கியவர்களாய், தாம் செய்துவந்த புண்ணிய பலனையும் அநுபவித்து, கடலாற் சூழப்பட்டுள்ள உலகமானது தூய்மையடையும்படி வாழ்ந்திருந்து, ஒடுக்குதற்குரிய ஐம்புலக் குறும்புகள் ஒடுங்குஞ் சமயத்தில் எ - று. (௩௪)

கற்றை நல்லொளி துற்றுங் கதிர்மணி
யுற்ற மான நடுவகத் தும்பரிற்
பெற்ற தேவ வுருவொடு பேரொளி
யுற்ற வெண்குடை மீசனெ ளிரவே.

(இ - ள்.) கூட்டமாகிய பேரொளியோடு நிறைந்த கிரணம் வீசும் இரத்தினங்களிழைத்த விமானத்தினமீதுள்ள ஆதனத்தில், தாம் பெற்ற தெய்வவுடலோடு மிக்க காந்தியுள்ள சந்திரவட்டக்குடை அதியுன்னதமா யோங்கி விளங்கவும். எ - று. (௩௫)

வண்ண வால்வளை வானவர் மங்கையர்
வெண்ணி றக்கொடுஞ் சாமரை வீசிடக்
கண்ணெ கிழ்ந்தலர் கற்பக நாண்மலர்
விண்ணி ழிந்து மிடைந்து நெருங்கவே.

(இ - ள்) வெள்ளிய வொளிபொருந்திய அழகிய வளையலையணிந்த தேவமாதர்கள் பெரிய வெண்ணிறந்தங்கிய சாமரைகளை வீசவும், தேனைத் துளித்துக்கொண்டு மலர்ந்த கற்பக விருக்ஷத்தின் புதிய மலர்கள் ஆகாயத்திலிருந்திறங்கி ஒன்று சேர்ந்து நெருங்கவும். எ - று. (௩௬)

விண்ண ருளுஞ்சிறு மெல்லிய லாரிசை
பண்ணு ருடிபல் பாடலி னூடிய
தண்ண ருளுசிறு தாமரைத் தாளினைக்
கண்ணு ருளுசிறு தண்டைகள் கலிப்புற.

(இ - ள்.) தேவலோகத்தினின்று வந்த இளம்பருவம் வாய்ந்த மென்மைத் தனமையுடைய அப்சரசுகள், குளிர்ச்சி தங்கிய தாமரை மலர்போன்ற சிறிய பாதங்களிரண்டிலணிந்த சிறு தண்டைகளொலிக்க, பண்ணோடு கூடிய பல இசைப்பாடலோடு நடனஞ் செய்யவும். எ - று. (௩௭)

தேவ துந்துமி திக்களந் தோறுறக்
காவ லெண்மருங் கைதொழு தேத்துறப்
மேவ ருந்தனி வீணை தெறிப்பொலி
பாவ ருமபல விசையொடும் பப்பவே.

(இ - ள்.) தேவதுந்துமிகள் திசைகடோறும் பரவி யொலி செய்யவும், அஷ்டதிக்குப் பாலாகளும் கைகளைச் சிரமிசைக் குவித்துத் துதி செய்யவும், அடைதற்கரிய ஒப்பற்ற வீணையின் (சப்தசுரங்களாகிய) நரம்புகளைத் தெறிக்கு மொலியானது, பரவியுள்ள பல வாத்தியங்களோடு முழங்கவும். எ - று. (௩௮)

ஆழி யந்தனித் தேருடை யாதவன்
வாழி மாநிலத் தோரவெள்ளை மாமதச்
சூழி வாரணத் தோனுல கத்துளோர்
பாழி நாண்மல ரெந்தை பதத்துளோர்.

(இ - ள) ஒற்றைச் சக்கரம் வாய்ந்த அழகிய இரதத்தையுடைய சூரியன், சிறந்த பெரிய உலகத்தாரும், முகபடாம் தரித்து மதநீர்சொரியும் (ஐராவத மெனும்) வெள்ளை யானையையுடைய இந்திர லோகத்தாரும், அன்றலர்ந்த செந்தாமரைமலர் வாழ்க்கையையுடைய எமது தந்தையாகிய பிரம [சத்திய] லோகத்தாரும். எ - று. (௩௯)

பணங்க ளாயிரந் தாங்கிய பாப்பணை
மணங்க மழுந்துழாய்முடி வானவன்
கணங்கொ ளுடுறை தேவர்க ளந்தண
ரிணங்கி நின்றெதி ரேத்தியி ரங்கவே.

(இ - ள்) ஆயிரம் பணமுடிகளைத் தாங்கிய ஆதிசேடனாகிய படுக்கையை யுடைய மணங்கமழுந் துளபமாலை தரித்த திருமாலின் கணங்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் வைகுந்தத்தில் வசிக்கும் தேவர்களும் முனிவர்களும் ஒன்று கூடி நேர் நின்று தோத்திரித்துப் பிரார்த்திக்கவும். எ - று. (௪௦)

வேத நாதம் வெளிப்பட மென்மேலப்
போதல் செய்து கயிலைப் பொருப்புறை
நாதனைக்கட் புலப்பட நண்ணுவார்
நீதி நீரந்தினி தின்பஞ் சிறப்பரால்.

(இ - ள்.) வேதவொலி முழங்க, சர்வகாசமாகப் போய்க் கைலாயகிரியில் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமானைத் தங்கள் விழிகட்குப் பிரத்தியக்ஷமாகும்படி

புடையவர்களாய், தமது துன்பங்க ணீங்கி இனிய இன்பத்தின் மேம்பட்டு விளங்குவார்கள். ஏ - று. (௬௧).

இப்ப தருசிவ தொண்டரை யேத்துற்
ரப்பெ யாகவென் றானளித் தானெனிச்
செப்ப ருஞ்சிவ தேசிக ரல்லரோ
முப்பொ ருட்குமு தற்பொரு ளாகுவார்.

(இ - ள்.) இந்த வகைக் கைலாயபதவியானது, சிவபெருமானது தொண்டாகளைத் துதி செய்பவர்களுக்கென்றே சிவபெருமான் சிருட்டித்தனரென்று சொல்வோமாயின், சொல்லுதற்கரிய சிறப்புகளையுடைய சிவாசாரியார்களன்றோ திரிமூர்த்திகட்கும் தலைமையான பொருளாவார்கள். எ - று. (௬௨)

ஆதலானம் மருந்தவத் தையாகா
டேதூ நீர்சிவ புண்ணியச் செய்கையை
யோத லாவதன் றோநாந்த துணர்ந்தது
மேத மோரந்தெறி சிந்தையி ருத்துவீர்.

(இ - ள்) ஆதலால் அருந்தவஞ்செய்த முனிவர்களே! குற்றங்களை விலக்கும் சிவ புண்ணியங்களின் செய்கைகள் சொல்லற்கியன்றனவல்ல. நாம் அறிந்தவற்றைத் தெரிவிக்கின்றோம். குற்றங்களைத் தெரிந்து நீக்கிய மனதை இதிற் சேர்க்கக் கடவீர்கள். எ - று. (௬௩)

என்னை நீர்சிவ புண்ணியத் தெய்திய
தொன்னி லைப்பொருள் சொல்லெனச் சொற்றபொற்
கன்னி தென்னிம யாசலக் காரிகை
மின்னு வாணமமுழு வேளைவி னவினள்.

(இ - ள்.) வேதங்கள் துதிசெய்யுஞ் சிறந்த கன்னியும், அழகிய இமாசல புத்திரியுமாகிய உமாதேவியார், மின்னலை வீசும் மழுப்படை தாங்கிய சிவபெருமானை, சிவ புண்ணியத்திலுள்ள புராதன நிலைமையான உண்மைப்பொருள் யாது? அதனைத் தேவரீர் உரைத்தருளவேண்டுமென வினவினார். எ - று.

கள்ள ருமலர்க் கற்றைசூ மந்தெழு
மள்ளி ருட்படு கூந்தலி மாசலைக்
குள்ள வாறுமு றையினு ணர்த்தினான்
வெள்ள வார்சடைச் சென்னி விமலனே.

(இ - ள்.) தேன் நீங்காத மலர்த்தொகுதியைத் தாங்கிக்கொண்டோங்கிய நெருக்கமுள்ள, இருள்போன்ற கூந்தலையுடைய உமாதேவியாருக்கு, யாற்றை யணிந்த நெடிய சடையையுடைய சிவபெருமான உள்ளபடியே முறைப்படியுபதேசித்தனர். எ - று. (௬௫)

கலிநிலைத்துறை.

கேட்டு வந்தரு ளுமையுமத் ததிசயங் கிளைப்ப
மீட்டு மெய்ப்புள கெழுந்தன ளிருகணீர் விட்டொழிந்தா
பாட்டு ணைத்தடந் தாமரை படிந்தெழீஇத் தருணத்
தோட்டு முண்டகத் தளிர்க்கரங் குவித்திவை சொன்னாள்.

(இ - ள்.) சிரவணஞ்செய்து களித்தருளிய உமாபிராட்டியார் திருவுள்ளத்தில் வியப்புண்டாகத் திருமேனி புளகித்து மீண்டும் நந்திருக்கைவிட்டெழுந்திறங்கி, சிவ்பெருமானது உபய பாதங்களாகிய பரந்த தாமரை மலர்களில் வணங்கியெழுந்து, இளமைதங்கிய இதழ்களையுடைய தாமரை மலர் போலுந் தளிர்த்த திருக்கரங்களைக் குவித்து இவற்றை விண்ணப்பஞ் செய்தனர். எ - று. (௬௬)

அளப்ப ருமபெரு யோனிபுக் கருநர கடைந்து
துளக்க மெய்திய மன்னுயிர் வரன்முறை தொகுத்து
விளக்கு புண்ணிய மியற்றுந ராகினர் விரைப்பூந்
தளப்ப னித்துணைத் தாமரைத் தாள்பெற வேண்டும்.

(இ - ள்.) அளவிடுதற்கரிய பல யோனிகளிலுற்று, கடுநரகிலெய்தி நடுக்கமெய்திய நிலைபெற்ற ஆன்மாக்கள் வரிசைப்படத் தொகுத்துச்சொலலும் சிவபுண்ணியங்களைச் செய்பவர்களாய், தேவரீருடைய மணமும் அழகிய இதழ்களும் மைந்த குளிர்ச்சி தங்கிய தாமரை மலர்போன்ற உபய பாதங்களைப் பெறுதல் வேண்டும். எ - று. (௬௭)

அருள வேண்டுவ தென்றனன் ளிமயமீன் றளித்தாள்
பெருகு மாயிர முகந்தி முடித்தருள் பெருமான்
மருவ றுங்குழ லாய்சிவ புண்ணிய மாக்கள்
'கருதி யோர்வதற் கரிதெனப் பின்னருங் கழறும்.

(இ - ள்.) இமாசலமன்னன் அருந்தவப் புதல்வியாகப்பெற்ற உமாதேவியார், அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனர். பிரவாகமெடுத்த ஆயிர முகங்களுடைய கங்காநதியை யணிந்தருளிய சிவபெருமான், இயற்கை மணந்தங்கிய கூந்தலையுடைய உமையே! எமது சிவபுண்ணியங்களைச் செய்யும் ஆன்மாக்களை நினைந்துணர்தற் கரிதென்று மேலும் திருவாய்மலர்ந் தருளுகின்றார். எ - று. (௬௮)

உரைத்து ற்றசிவ புண்ணிய மெனச்சில வுளவால்
வரைக்கொ ழுந்துயிர்த் துதவிய மரகதக் கொம்பே
நிரைத்த வாலவளை நினக்கவை நிகழ்த்துது மென்ன
விரைத்த வார்சடைப் பணிப்பிறைக் கணியோன் விளம்பும்.

(இ - ள்) இமாசலமன்னன் பெற்றெடுத்த மரகதக் கொம்பினையொத்த உமையே! கேள். வரிசைப்படுத்திய சங்கவளையலை யணிந்தவளே! எடுத்துச் சொல்லுமிடத்தில், சிவபுண்ணியங்களென்று மற்றுஞ் சிலவுள. உனக்கவற்றைச் சொல்வோமென்று மணம் வீசும் நீண்ட சடையினிடத்தில் குளிர்ந்த பிறைச் சந்திரனாகிய அருமையையணிந்த சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். எ - று. (௬௯)

சினக ராலயந் தூர்ப்பது திருமெழுக் கிடுதல்
புனன்மு கந்தெமை யாட்டுவித் தெமக்கெனப் புரிந்
தினனு மாலயத் தகவையி லெழுந்தபுற சீத்த
லினைந் துந்துணர் நாண்மல ரெடுத்துட னலகல.

(இ - ள்.) திருக்கோயிலில் திருவலகிடுதலும், திருமெழுக்கிடுதலும், நீரை முகந்து நமக்கு அபிஷேகித்தலும், நமக்கென்று தொண்டுசெய்தலும், நாடோறுந் திருக்கோயிலிலுண்டான புலலைப் பறித்தலும், தேனசிந்தும் வாசனையுடையபுதிய பூங்கொத்துக்களையெடுத்து உடனே கொடுத்தலும். எ - று. (௫௦)

இவையு ளப்படுத் திரங்கின ராகிநின் றியல்வா
ரவம திப்பற வறிவுபெற றவ்வறி வதனுற
றவறில பக்குவ மடைந்துளத் தூய்மையுந் தழுவிச
சிவக திப்படு புண்ணியஞ் சிலசில தெரிவார்

(இ - ள்.) இத்தொண்டுகளை மனதிற்கருதி இரக்கமுற்றவர்களாய அந்நிலையினின்று நடத்துபவர்கள், எல்லோராலும் மதிக்கத்தக்க பேரறிவெய்தி, அப்பேரறிவாற் றவறுபடாத பரிபக்குவமெய்தியவர்களாயப் புனிதமும்மடைந்து சிவகதியைக் கொடுக்கத்தக்க சிவபுண்ணியங்கள [எண்ணிறந்தனவற்றுட்] சிற்சிலவற்றை புணாவார்கள். எ - று. (௫௧)

பாத காகளெனி னுஞ்சிவ புண்ணியம பலித்தாற்
றீத கற்றிடு மாதலா லாங்கது செய்தாற
போத முற்றிடும புண்ணியம புலப்படு மென்று
ஞதி நாயகிக் காங்கவை யறைந்தன னவிலவாம.

(இ - ள்) பாதகர்களுக்காகுலும் சிவபுண்ணியங்கள் கைகூடுமாயின், குற்றங்களை விலக்குமானபடியால, அச்சிவபுண்ணியங்களைச் செய்தால ஞானோதயமாகின்ற சிவபுண்ணியங்கள விளங்குமென்று திருவாய்மலாந்தருளினா. முதலவியாகிய உமாதேவியாருக்கு அச்சிவபெருமான திருவாயமலாந்தருளியவற்றைச் சொலலுவோம். எ - று. (௫௨)

இந்தி யங்களை யவித்திரும புலனகடந் திருக்கு
மந்த ணீரரு மாதவக் கொழுந்தெனு மடிகா
ளெந்தை யெம்பெரு மானசிவ புண்ணியத் தியலா
வந்த காதையொன் றுளதது வகுப்பொடு வகுப்பாம்.

(இ - ள்.) இந்திரியங்களை நிக்கிரகஞ்செய்து ஐம்புலன்களை யடக்கியிருக்கும் முனிவர்களே! அருமையான பெருந்தவக் கொழுந்தென்று சொல்லத்தக்க பேலோர்களே! எமது பிதாவாகிய சிவபெருமானுடைய சிவபுண்ணியத்தின் தன்மையுடையதாய நிகழ்ந்த சரித்திரமொன்றுள்ளது. அதனைப் பிரிவோடு சொலலுவோம். எ - று. (௫௩)

நீடு புண்ணியப் பெருந்தவ முயற்சியா னெடுநீா
மாடு சூழகிடந் தளவறு வளந்தரு வனப்பா
னாடு விண்ணவ ரிழிந்துற வேண்டிநின் றொருங்கே
நாடி நோறபது கௌசல மெனப்படுா நாடு.

(இ - ள்) மிக்க புண்ணியத்தாலாகிய பெருந்தவத்தின் முயற்சியாலும், நீர்ப்பெருக்கானது பக்கலிற் சூழ்ந்து எண்ணிலலாத செலவத்தை விர்த்திசெய்விக்கும் அழகாலும், தேவர்களும் பூலோகத்திலிறங்கி உள்ளே வசிக்கவேண்டு

மென்று, ஒன்று சேர்ந்திருந்து கருதித் தவஞ்செய்வதாகிய கோசலமென்னும் ஒப்பற்ற நாடொன்றுள்ளது. எ - று. (௫௪)

அன்ன நாட்டகத் தகலிய வெண்குடை நிழற்கீழ்
மன்னு மின்னுயி ரன்னுயி ராமென வளர்ப்பான்
பொன்னி லங்கிய கனைகழற் புனைநறுந் தொடையான்
மின்னு யிர்த்தவேற் கௌசிக னென்னொரு வேந்தன்.

(இ - ள்) அந்நாட்டிலே, பரந்த வெண்கொற்றக் குடை நிழலின்கீழ், நிலைபெற்ற மன்னுயிர்களைத் தன்னுயிர்போல ஆதரிப்பவனும், பொன்னாற்செய்து விளங்கும் ஒலிதங்கிய வீரக்கழலணிந்தவனும், அணிந்த மணந்தங்கிய மாலையுடையவனும், மின்னலைவீசும் வேலேந்தியவனுமாகிய கௌசிகனென்னுமோரரசனிருந்தான். எ - று. (௫௫)

அனைய வேந்தனிற் றோன்றின ராருயி ரனையார்
புனைந றுங்குழற் பூவைமென் குதலையா நால்வர்
வனச மாளிகை மடந்தையர் நால்வரோ விரதி
யினைய நால்வரோ வெனப்புவி யேத்துறு மெழிலார்.

(இ - ள்) அக்கோசிகன்பால் அவனுடைய அரிய வுயிர்போன்றவர்களாய், அலங்கரிக்கின்ற மணமுள்ள கூந்தலையும் [பூவை] நாகணவாய்ப் புள்போன்ற மெல்லிய குதலைச் சொல்லையுமுடைய நான்கு புதல்வியர், தாமரைமலர் மாளிகையையுடைய இலக்குமிகள் இந்நால்வரோ இரதியென்பவளே இந்நால்வரோ? என்று உலகினர் துதிசெய்யும்படியான அழகுடையவர்களாய்ப் பிறந்தார்கள்.

கடிகொ ளொண்மலர்க் கற்பக நாட்டகந் துறந்து
வடிவி னால்வரும் வந்திழிந் தார்கொலோ மடவார்
படிவ மற்றுற்ற விலக்கணப் பகுதிசோர் வழாது
முடிவி னான்முகன் றிருத்திய தியாதென மொழிவாம்.

(இ - ள்) மணந்தங்கிய புதுமலர்களைக்கொண்ட கற்பக விருட்சத்தை யுடைய தேவலோகத்தை நீங்கி, அழகின் மிகுந்த இப்பெண்கள் நால்வரும் வந்தார்களோ? அல்லது இப்பெண்களின் அவயவங்களெல்லாம் அவ்வவற்றிற் குரித்தாகிய இலக்கணமுறையின் சிறப்புகள் குன்றாது முழுவதையும் பிரமன் திருட்டித்துவைத்ததை யாதெனச் சொல்லுவோம்? எ - று. (௫௭)

மகளிர் நால்வரின் முந்துறத் தோன்றிய மகட்குப்
புகற ரும்பெய ரையையெனப் பணித்தனன் புதுப்பூ
முகைந றுங்குழன் மூவர்க்குந் தனித்தனி மொழிந்தா
னிகல ருந்தன வரும்புபூத் திளகிய திவாக்கு.

(இ - ள்.) அப்புதல்வியர் நால்வரில், முதலிற் பிறந்த பெண்ணுக்குச் சொல்லத்தக்க பெயர் அயையென்று சொன்னான். புதியமலர்களின் அரும்பை யுடைய மணந்தங்கிய கூந்தலைப்பெற்ற ஏனைய மூன்று [illegible]த்திரிகளுக்கும் வெவ் வேறு பெயர்களிட்டான். இப்பெண்கட்கு [காமவிச்சையென்னும்] பகை யற்றனவாகிய அரும்புபோன்ற கொங்கைகள் பருத்து இ[illegible]ன. எ - று. (௫அ)

பொருது வென்றவேல் கறைநதுளி பொதுளிய வென்ன
விருத டங்கணுஞ் செவவரி யிடைபடச் சிதறிக்
கருகு வாணெடுங் கடகடை குழைபடக் கடநத
பருவ நோககினன கௌசலன பாாததிபா பெருமான்.

(இ - ள்.) போாசெயது சய மறற வேலாயுதததில் உதிரததுளி நெருங்கி யிருப்பதுபோல, பரநத இருவிழிகளிலும செவவரி இடையே படாநது பரவி, கருமிறநதங்கிய வாளாயுதமபோல நீணட கடைககணகள் காதுகளைத தொடும படியோடிய பருவததை இராசராசனுகிய கௌசலனெனனும் தநதை பாாத தறிநதனன. எ - று. (௫௯)

உருவ மஙகையா மணிவிளைப பொலிதரு முருவங
கருணை கூாதரக கண்டுகளா களிபபது கருதா
விருநி லததுள வேநதரை வருதிரென றெழுதிச
சுருதி மஙகல நாடகணித தறிநதனன றூயோன்.

(இ - ள.) அழகுளள அககுமாரிகள திருமணச் செயலிறகுரிய விளககந தஙகிய் கோலததை, புனிதனுகிய அவவரசன கிருபை மிகுமபடி பாாததுக கணகள களிகக வேணடுமெனபதை யெணணி, பெரிய பூமியிலுளள பல மன னாகளையும வருவீாகளாகவெனறு மணவோலை யெழுதியனுபபி, சோதிட நூலினபடி விவாக கட திடனததையு மாராயநதறிநதனன. எ - று. (௬0)

மழைகககு லமபட நிவநதெழு மணிமதிட புரிசை
யுழைபப டுமபுரம புதுககுவா னுழையருக குரைததான்
றழைபப சுஙகதிா கடவுதன் கோயில லொருபா
லிழைததெொ டாசயுட சயமா மணடப மெடுததாா.

(இ - ள.) மேக கூட்டஙகள வநது தஙகுமபடி உயாநதோஙகிய அழகிய சுறறுச்சுவாகளாகிய மதிலகளின உளளிடததுளள நகரததை அலஙகாரஞ் செயயுமபடி தூதுவாகளுக கடடளை கொடுததான. பசிய கிரணஙகள பரவிய பால சூரியன பரிசிககும தனனாணமனையின ஒரு புறததில காவலிலைமூடாச் சிககுளளே சுயமவர மணடபததை நியமிததான. எ - று. (௬௧)

எடுதத மணடபத தகவயி னரிசுமந நெடுககப
படுதத வாசனம பறபல படுததனா பசுமபொ
னுடுககை கொயயக மீபபட நாறறின ருவரி
கொடுதத முததணி தொடுதநன ரிளநிலாக் கொழிபப.

(இ - ள.) நியமிதத சுயமவர மணடபததின உட்பாகததிலே, சிஙகஙகள் சுமநது தாஙகுமபடி யமைதத பற்பல ஆசனஙகளைச் செயதாாகள. பசுமபொற் சரிகை வஸதிரஙகளால மேலே குசசுகள தொஙகவிடடாாகள. கடலில பிறநத முததுககளாலாகிய மாலைகளை இளஞ்சநதிரிகை வீசுமபடி கட்டினாாகள். எ - று.

பானி லாப்பளிக் கறறையிற படுததன கவரி
யேனி லாபபிச்க் குசசொடுந தூககினா விரிபூங
கான நாண்மலா மாலிகை நிறைததனா கணிதத
மோனை மஙகலத் தியற்றுவ யாவையு முடித்தாா,

(இ - ள்.) பால்போலுந் தாவள்யமான சந்திரிகையின் குளிர்ந்த கூட்டம் போன்ற சாமரைகளை, மேலே ஒளி வீசும்படி குச்சுகளாகத் தொங்கவிட்டார்கள் மலர்ந்து அழகுடைத்தாய் மணங்கமழும் அன்றலர்ந்த மலர்களாலாகிய மாலிகைகளை நிறைத்தார்கள். முதன்மையான திருமணத்திற்காகச் செய்யத் தக்கவைகளையெல்லாம் செய்து முடித்தார்கள். எ - று. (௬௩)

இரங்கு வெண்டிரை புடைபடு மிருநிலப் பரப்பி
னரங்க டிந்தவேற் பார்த்திபர் யாவரு மடைந்தார்
கரங்கொண் முமமதக் களிறொடுங் கொய்யுளைக் கலினக்
குரந்த லத்துறும் புரவியங் கடலெலுங் குறுகி.

(இ - ள்) துதிக்கையுடைய மும்மதங்க[illegible]சொரியும் யானை[illegible]ளோடும், அத்தரித்த பிடரி மயிர்களும் கடிவாளமுமுடையவாய்க் கால் குளம்பு நிலத்திற் படியாத குதிரைகளென்னும் அழகிய சமுத்திரத்தோடும், நெருங்கி யொலிக்கின்ற வெள்ளிய அலைகளை யுடைத்தாகிய கடல்புடை சூழ்ந்த நிலவுலகிலுள்ள அரத்தையும்வென்ற வேலேந்தாங்கிய மன்னர்களெல்லாரும் வந்து சேர்ந்தார்கள்.

எதிரு மன்னவர்க் கணக்குவை யளப்பினு மெண்ணு
வதிரு மார்கலித் தானையா னெதிர்புகுந் தடைந்து
முதிரு மன்புட னளவளா யினியன மொழிந்து
கதிர்செய் மாமுடி யரசரைக் கடிநகர் கொணர்ந்தான்.

(இ - ள.) அப்படி வருகின்ற மன்னர்களுக்கு, அணுக்களின் குவியலைக் கணக்கிட்டுத் தொகை சொன்னாலும் கணக்கிடப்படாத ஒலிக்கின்ற கடல் போன்ற சேனையையுடைய அவ்வரசன் எதிர்கொண்டு சென்று நெருங்கி, அதிகரித்த ஆசையோடு அளவளாவி இன்சொலபேசி, ஒளிவீசுஞ் சிறந்த கிரீடந் தரித்த அவ்வரசர்களைத் தனது காவலையுடைய நகரத்திற்கு அழைத்துவந்தான.

வயங்கு மாமுடி மன்னவர் யாவர்க்கு மழைக்கா
ரியங்கு மாளிகை யிருக்கைவே றினிதினி தமைத்து
முயங்கு நலவிருந் தமைப்பன முறையத்[illegible]துத்தவித்
தயங்கு மண்டபந் தன்னயரை யு[illegible]னகொடு சார்ந்தான.

(இ . ள) விளங்குகின்ற சிறந்த கிரீடந்தரித்த மன்னர்களெல்லாருக்கும், சூற்கொண்ட மேகந்தவழுந் தன்னரண மனையில் தனித்தனி வெவ்வேறு விடுதிகள் ஏற்படுத்தி, கலந்துற குறித்தாகச் செய்யவேண்டியனவாகிய சிறந்த விருந்தை அவ்வவருக்கேற்ற முறை தெரிந்து செய்வித்து, விளக்கந்தங்கிய விவாக மண்டபத்திற்கு அவர்களைக் கூட்டிக்கொண்டு போயினன. எ - று.

அழைத்த மைந்தடு வாளரி மடங்கலா சனத்தி
னிழைத்த மாமுடி யரசரை யினிதுகொண் டிருத்தி
மழைத்த வார்குழன் மகளிர்க்கு மணவணி திருத்திக்
குழைத்த மென்மலர் மாலிகை யவர்கரத் கொடுத்தா.

(இ - ள) இரத்தினங்களிழைத்த சிறந்த கிரீடந்தரித்த அவ்வரசர்களை இனிதாக அழைத்துவந்து, அவ்விவாக மண்டபத்துலே அமைத்துள்ள ஒளிதங்கிய சிங்காதனங்களிலிருத்தி, மேகம்போலக் கறுத்து [illegible]வாய்ந்த கூந்தலையுடைய அக்கன்னிகைகட்குக் கலியாண சோலனுசெய்[illegible]குழையுந் தன்மை பொருந்திய மெல்லிய மலர்மாலைகளை அவர்கள் கைகளி[illegible]கொடுத்து. எ - று.

மாத ராயிரரு சூழுவா மண்டபத் துயத்தான்
பேதை நாலவரு மன்னவர் யாரையும் பிறழுநத
நாத விறகருங கடகடையெறிநதனா காஞ்ச
சீத மாலிகை நாலவாதங கழுததிடைச செறிநதாா.

(இ - ள) ஆயிரககணககான மாதர்கள புடைசூழ்நதுவரச்சுயமவரமண்டபத்திற்கறுபபின்னை அமமஙகையா நாலவரும அஙகுளளமன்னாகளெலலோரையும, காடவிருபபையுணடு செயயும பிறழ்ச்சிபொருநதிய கரியகட்கடைகளை வீசிபபாாதது, குளிர்ச்சிவாயநத அம்மலாமாலைகளை நானகுமனனாகள கழுததிறசூட்டினாாகள. எ-று. (௬அ)

அன்னமனனவா நாலவரின முன்பிறந தமைநத
கனனி மாமயிற சாயலா ளையெனுங கனனி
மினனு யிாததழல் விழித்தவே ளிடததது வேநதா
மனன வஙகமகேந திரனகளத தணிநதனண மாலை.

(இ - ள) நடையினால அனனததையொததவாகளாகிய அபபெணகள நால்வரில முதலிற பிறநத சிறநதமயிலினசாயலையுடைய கனனிபபருவமுடைய அயையெனனும பெண, மினனலை வீசித திப்பொறியை உககும லேலேநதிய கிடததேசிததமனனவன மனனனாகிய மகேநதிரன கழுததிலே மாலை தரித தாள. எ-று. (௬௯)

பொன்னை யனனவட கிளையவ ளுவநதுகாம போச
மனனா மனனவன சானநதற கணிாநதனன மாலை
மினன வட்கிளை யாளநத நெடுநிலப பெருமான
றன்னை ருமபுகழ மாலிமாா பணிநதன டொஙகல்.

(இ - ள ) இலகுமியைபபோனற அயையெனபாடகு இளையவள, காம்போஜதேசதது இராசரா ஆகிய சானநதனுககுமன மகிழ்நது மாலை தரித்தான. அதனபின, அவளுககிளையவள பெரிய அஙகதேசத்திறகு மனனனாகிய அடைதற்கரிய கீாததியடைநத மாலியெனபான மாாபலே மாலை யணிநதாள. எ-று.

உரைதத மூவாககுடபினனரி னுதித்திடு மொருததி
வரைதத டமபுயக கொஙகண வேநதது மனனன
விரைதத தாமரை விசாலநேத திரனெனும விறலோற
கிரைதத காதலி னணிநதன ளிலஙகுதா ரலஙகல்.

(இ - ள.) மேறசொலலிய கனனிகைகள மூவருககும பினனே பிறநத ஒரு பெண, கொஙகணதேசதது மனனனாகிய மலைபோலும விசாலமான தோளகளையுடைய மணஙகமழுநதாமரை மலாபோனற விசால நேததிரனெனனும பராககிரமசாலிககு மிகுநத ஆசையோடு தன கையில விளஙகுகினற மலா மாலையைச்சூட்டினாள. எ - று. (எ௧)

இனைய நாலவரு மாலையிட் டரசாபா விருபப
வனைய கணமணிக களிநதனன மனைவிகை யயாநது
புனைபொ னணிகலன முதலிய கொடுததருள புரிநதான்
மனையின மணசியி னிருநதன ரவணசில வைகல.

(இ - ள்.) இத்தகைய புதல்வியர் நால்வரும் சுயம்வரமாலை சூட்டி அவ்வம் மன்னர்களிடமிருக்க, அவர்களை நோக்கி கண்களிப்புற்றவனாய் விவாகச சடங்குகளை நிறைவேற்றி, அலங்கரிக்கத்தக்க பொன்னாபரண முதலியவற்றைக் கொடுத்துதவினன். அப்புத்திரிகள் நால்வரும் சில தினங்கள் அங்கேயே இல்லற நடத்திக்கொண்டிருந்தார்கள். எ - று. (எ௨)

மதிப்பெருங்குடை வேந்தர்க்கு வேண்டுவ வழங்கிப
பதிக்கணேகுதிர் நீரெனப பணித்தனன் பணிபப
வதிர்க்கு மாழியந் தேரொடு நால்வரு மகனார்
விதிர்த்த வாட்படை கொடபுறு தானைசூழ் மிடைந்து.

(இ - ள்.) பெரிய சந்திரவட்டக்குடையையுடைய அவ்வரசர் நால்வர்க்கும் வேண்டிய செல்வங்களை யளித்து, உங்கள் தேசங்கட்குச்செல்லுகவென விடைதந்தனன். அங்ஙனந் கட்டளையிடவும் ஒலிக்கின்ற சக்கரத்தையுடைய தேர்களிலேறிக்கொண்டு அம்மன்னர் நால்வரும், அசைத்து நெருங்கிய வாளாயுதமேந்திய சேனைகள் புடைசூழ்ந்து வரும்படி தங்கடங்கள் தேசத்திற்குப் போனார்கள். எ - று. (எ௩)

தேர திர்பபினும் புரவியந் சிரிபபினுந் தனிதகைக்
காரமு ழக்கினும பலவியத் துவைப்பினுங் கடனீரப
பாரசு மசகுறு மனந்தனும பகைப்புறப படர்ந்தார
தார்நெ றித்தலை யெதிர்ந்தனன கோசிகத் தவத்தோன்.

(இ - ள்) அவ்வரசர்கள் நால்வரும், தேரின அதிர்ச்சியாலும், அழகிய குதிரைகளின் கனைப்பினாலும், ஒப்பற்ற நிகரையையுடைய மேகம்போன்ற யானைகளின காச்சனையினாலும், பல வாத்தியங்களின முழக்கினாலும், நீரமயமான கடல் சூழ்ந்த பூமியைத் தாங்குமம் ஆதிசேடனும் பதைக்கும்படி விரைந்து சென்றார்கள். வழியிடையிலே தவத்தையுடைய விசுவாமித்திர முனிவர் எதிர்ப்பட்டனர். எ - று. (எச)

சென்றெ திர்ந்திடு பெருந்தவக் கோசிகச் செல்வ
னின்று வேந்தருக் கொருமொழி கிளத்துவான விளிததான
வென்றி வேந்தமற் றமலைபிற கேட்டிலர் வெருணடான
குன்று றுத்தவற கிருபுரு வங்களுங் குனிந்த.

(இ - ள்.) எதிரிற் செல்பவராகிய பெருந்தவஞ்செய்த விசுவாமித்திர முனிவர் அங்கே நின்று அவ்வரசர்களுக்கு ஒருவார்த்தை (ஆசீர்வசனமாகக்) கூற வேண்டி யழைத்தனர். வெற்றிபொருந்திய மன்னர்கள் ஒலிமிகையாற் கேட்டாரிலர். அதனால் குறைவுபடாத தவத்தையுடைய முனிவர்க்கு இருபுருவங்களும வளைந்தன. அவர் கோபமெய்தினர். எ - று. (எ௫)

கொடிக்கொ ழும்புகை யிருவிழி கொழுந்துவிட் டெழுந்த
பொடித் தருமபின வெயர்த்துளி பொருகதி[illegible]பருதி
வெடித்த வெங்கதி ரொடுங்கினன மீண்டன[illegible]ரிநீர்ப்
படித்த லம்புதைத் திருண்டது கொதித்தது [illegible]வ.

(இ - ள்.) கொடிபோலப்படரும் பெரிய கோபப்புகையானது அவருடைய இருவிழிகளிலும் சொழுந்துவிட்டுத்தோன்றின. வியர்வுத்துளிகள் மயிர்க்கூச்சோடு தோன்றின. போர்செய்யும் கிரணங்களையுடைய சூரியனும் தனது உஷ்ணமாகிய சொடுங்கிரணங்களை யொடுக்கிக்கொண்டு மறைந்தான். கடல் சூழ்ந்த பூமி முழுவதும் இருண்டது. சமுத்திரமுங்கொதித்தது. எ - று. (எசு)

வாம்ப ரித்தடந் தேருறை மன்னரு மனையார்
தேம்பு சிறுமிடைத் தேவியர் நாலவருந் தீங்க
கூம்பு டைக்கொடித் தேர்முதற் சேனையுங் குழுவும்
சாம்ப ராயின வருந்தவன் கடுஞ்சினத் தழலால்.

(இ - ள்) தாவிச்செல்லுங் குதிரை பூட்டிய பரந்த தேர்களிலேறிய மன்னர்களும், அவர்கள் மெலலிய நுண்ணிய இடையையுடைய மனைவிகள் நாலவரும் நீங்கலாக, [கூம்பு] கொடிஞ்சியையுடைய துவசங்கட்டிய தேர் முதலான சேனைத்தொகை முழுவதும், அருந்தவமுடைய விசுவாமித்திர முனிவர் கொடிய கோபாக்கினியால் சாம்பராயின. எ - று. (எஎ)

என்கொ லிதென வெருவினர் நோக்கினர் எதிர்ந்த
பொன்செய் மாமுடி யரசரை நோக்குபு புகலவான
மின்செய் வேற்படை யரசர்கா ளுமமெதிர் விளிந்தேம்
புன்சி ரிப்பினீர் கேட்டமை நோக்கிலீர் போலும்.

(இ - ள.) இஃதென்ன காரணமென்று அஞ்சியவர்களாய் நோக்கி, நேரே வந்த பொன்னாலாகிய சிறந்த கிரீடமணிந்த மன்னர்களைப்பார்த்து அம்முனிவர் சொல்லுகின்றார். மின்னலை வீசும் வேற்படைதாங்கிய மன்னவர்களே! உங்கட்கெதிரில் நாமழைத்தோம் நீங்கள் கொண்டிருந்த புன்னகையினாலே எமமைப்பாராதிருந்தீர்கள் போலும். எ - று. (எஅ)

ஆத லானுமக் கிருசெவி கேட்கல வாக
தீது தீர்கரு கட்புலந் தெரியல வாக
மாத ரின்னல மணந்துறு தோழிகளீர் மணந்தாற
பேதை காளுமா முடித்தலை வெடித்தறப் பிளக்க.

(இ - ள) ஆதலால், அறிவிலிகளே! உங்கட்கு இருசெவிகளும் கேளாதனவாகுக. குற்றமற்ற விளங்கும் இருவிழிகளும் தெரியாதனவாகுக நீங்கள் உங்கள் மனைவியரின்பத்தை நுகராமற் போகுக. அப்படி நுகர்ந்தால், உங்கள் கிரீடமணிந்த சிரங்கள் முழுவதும் வெடித்துப்பிளந்து போகக்கடவன. எ - று.

நாடு மெய்ப்பெரு நகரமு மகரமு நீத்துக்
காடு போகுதி ரென்றுரைத் தருந்தவன் கழறு
நீடு நன்னெறி மாதவ முனிவெலா நெடுங்கூத்
தாடு தன்னுடை யாச்சிர மம்புகுந் நடைந்தான்.

(இ - ள்.) உங்கள் நாடுகளையும், அவற்றுள்ள பெரிய நகரங்களையும், உங்கள் அரண்மனைகளையும் நீங்கிக்காட்டிற்குப் போகக்கடவீர்களென்று, அருந்தவ விசுவாமித்திரர் சா[illegible]றி, அதிகரித்த நன்மார்க்கத்தோடு கூடிய பெருந்தவங்களையுள்ளனவெல்[illegible] ஆனந்த நடனஞ்செய்யும் தமது ஆச்சிரமம்போயடைந்தனர். எ - று. (அ0)

வேந்தர் நால்வரு மப்புல மொழிந்தனர் விரைப்பூங்
காந்தண் மெல்விர றேவிய ரருநெறி காட்டப்
போந்து பலவரை மிடைபடு மடவியுட் புகுந்து
நீந்து றுபபெருந் துயாககடல் படிந்தனா நெடுநாள்.

(இ - ள்.) உடனே மன்னவர் நால்வருங் கட்புலனுஞ் செவிப்புலனு மிழந்தார்கள். வாசனையும் அழகும் பொருந்திய செங்காந்தள் மலர்போலும் மெல்லிய விரல்களைக்கொண்ட தங்கள் மனைவிமார்கள் (கணவர் கரங்களைப் பற்றி) அரிய காட்டுவழியைககாட்டச்சென்று, பல மலைகள் நெருங்கிய காட்டிற்சோந்து, தாண்ட முடியாத பெரிய துயரககடலில் அநேக காலம் மூழ்கிக கிடந்தார்கள். எ - று. (௮௧)

மேற்படி வேறு.

ஆடும்பு னற்றுள்ளி யருவிபபெ ருஞ்சாரல் வெங்கானகத்
தூடுண்ட வுபபிலப சுமபுறகை யினிதுண்டு வககினறநா
ணீடும்பொ லங்கோமு டிததெயவ மலையதது நிறைமாதவ
ஞடுந்த மிழ்க்குமப முனியககட் டுங்கான நடுவெய்தினன

(இ - ள.) நீரததுளிகளாகிய அருவியொழுகும் பெரிய மலைச்சாரலையுடைய கடுங்காட்டில தமககுக்கிடைதத உப்பிலலாத குளிாநத கூழை இனிதாகப்புசித் துககளிககின்ற நாளில, சிறநத பொன்மயமான சிகரங்களையுடைய தெயவீகந தங்கிய பொதிய மலையில வீற்றிருககும் பெருநதவமுடிததவரும், யாவரும் மதிககும் தமிழை வளாததவருமாகிய அகததியமுனிவர் அககொடிய காட்டினிடையே யெழுநதருளினா. எ - று. (௮௨)

செல்லுந்த மிழ்க்குமப முனிவறப ணிநதொன்று செய்தேமலேம
புல்லுங்க டுஞ்சாப முனிகோசி கன்றந்து போனானினிச
சொலலும்பெ ருஞ்சாப முனையனறி யெவரோது டைபபாரென
வலலென்ற முலைமாத ரரசாதமெரா டுசசொலலி வழிபட்டனா.

(இ - ள.) அபபடி யெழுநதருளிய தமிழ முனிவராகிய கும்பததிற் பிறநத அகததிய முனிவரை, சொககட்டான காயகளென்று சொலலததககஸதனங களையுடைய அம்மங்கையா பணிநது, அடியேஙகள ஒரு தீமையுஞ் செய்தவர்க ளல்லோம். விசுவாமிததிர முனிவா எஙகளைச்சேருமபடியான கொடுஞ்சாபந தநது போயினா. இனி அககொடுஞ்சாபததைதத தேவரீரையன்றி நீககுவோர் யாவரென்று விண்ணபபஞ்செயது, தஙகள் கணவராகிய அரசர்களை வணங்கும் படி சொலலிப் பூசை செயதார்கள. எ - று. (௮௩

அக்காலை யிகன்மன்னா தொழுபைங்க ழறகால டற்சோரிவாய்
ககதாட னெடுவேலி னொருநாலவா தொழுதுறற கவலகண்ணுரு
மைக்காள கண்டதத ரறகொபபு வரனெனற தமிழ்மாதவ
னெக்கானு ளஙகண்கள பனிமல்க நனிநின்று நினைகினறனன்.

(இ - ள்.) அச்சமயததில், பகைமனனாகள் பணியும் பசிய வீரககழ லணிநத கால்களும், வலியுடைததாய் உதிரஞ் சிநதும் வாயையுடைய வெற்றி

தங்கிய நெடியவேலாயுதமுங்கொண்ட ஒப்பற்ற நான்கு அரசர்களும்நபணி தடைந்த துயரத்தைப்பார்த்து, விடந்தங்கிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானுக்குச் சமானமாக விளங்கிய அகஸ்தியமுனிவர் மனமுருகி, கண்களில் நீர் பொசிய நெடுநேரம் நின்று தம்முள் ஆலோசிக்கின்றனர். எ - று. (௮௪)

என்னேயி வர்க்கிக்க டுஞ்சாப மொழிகின்ற தெதுகொண்டெனு
வுனனுவு ணாநதெநதை சிவபுண்ணி யததனறி யொழியாதெனச
சொனனன வாங்கன்ன தறிவாமெ மககின்று சொலலாயெனப
பன்னுக சென்னிபப ரறகான வழிபாடு பகாகின்றனன்.

(இ - ள்.) இவ்வரசர்களுற்ற கொடுஞ்சாபம் எவ்வாற்றாலொழிவது? யாது செய்து? என்று சிந்தித்துணர்ந்து, எமது பிதாவாகிய சிவபெருமானுக்குரிய புண்ணியத்தாலன்றி அமமனனாகளுககுனாததருளினா. அச்சிவபுண்ணியத்தை அடியேங்கள் இப்போது தெரிந்துகொள்ளும்படி திருவாயமலர்ந்தருளவேண்டுமென வேண்ட, பல நாகங்களைச் சடையிலணிந்த சிவபெருமானுக்குரித்தாகிய பூஜாமார்க்கத்தைத் திருவாயமலாநதருளுகினறனர். எ - று. (௮௫)

பொருதண்பு னறகீச கக்கோன காசசெய்ய போராழியான்
செருவென்று வககினற சாதார னெனனுநதி றறகோமகன
வருதிங்க ளொருகொமபெ டுததனன முகமாங்கை மயிலபோலுவா
ளிருகுங்கு மககொஙகை மூழ்கிகி டபபானவெ ளிககெயதுமுன்.

(இ - ள்.) மோதுகினற குளிர்ந்த நீரையுடைய கீசகமெனும் பெரிய நகரத்திலே, செவ்விய போர்செய்யும் ஆச்கினைசக்கிரத்தையுடையவனாய், போர்முகத்தில் வெற்றிபெற்றுக்களிக்கின்ற சாதாரனெனனும வலிதங்கிய சிறந்த அரசனிருந்தான் அவன உதயமாகினற சந்திரனை ஒரு பூங்கொம்பு சுமந்திருந்தாற்போன்ற முகத்தையுடைய மயிலபோலுஞ் சாயலையுடைய மனைவியின, குங்குமச்சேறு பூசிய இருதனங்களைத்தழுவி போக சாகரத்திலமிழ்ந்து புறத்தே வரமாட்டான. எ - று. (௮௬)

அன்னனி ருக்குநதி ருககோயி னெடுவாயி லவணெய்தினன
பன்னளி ழைககுநத வநதானு ருககொண்ட படிபோலுவான
முனனவ சிட்டனபு குநதான அரசறகு மொழிதநதிலா
பினனலு கனனறபு றமபோக வறிவுமற பினனெயதினன்.

(இ - ள்.) அவ்வரசன் வாழ்ந்திருக்கும் அழகிய அரண்மனையின் நெடிய வாயிற்படியில எழுந்தருளவதறகுத் திருவுள்ளங்கொண்டு, பல காலங்களிற் செய்த தவமே ஒரு வடிவெடுத்தாறபோன்றவராகிய வசிட்டமுனிவா அங்கெய்தி உள்ளே போயினா. அதனை அககாவலாளா அரசனுக்குணாததிலா. நாலு நாழிகை காலங்கழிந்ததன பினனா, அவாகள உணாதத வுணாநது வெளியே வநதனன். எ - று. (௮௭)

வேரிதத டநதாம நெடுவேலி ளங்கோவெ ருககொண்டிவ
னீரபப சுநதாம ரைததாளப ணிநதானெ ழுநதுறறனன

மூரறகடுந்தீமு கத்தான முறனுன்மு னிந்தானரோ
வாரிபபெ ருமபூத லபபூத மிருளபட்டு மருள்பட்டதே.

(இ - ள்.) மண மிகுநத மலாமாலையணிநது விசாலித்து நீண்ட வேலேந்திய இளநதன்மையுடைய அரசன பயபெய்தி, இவ்வசிஷ்டமுனிவருடைய குளிர்ச்சிவாய்நத செநதாமரை மலாபோனற பாதஙகளைப்பணிநதெழுநது நெருங்கினன். கோப நகைபொருநதிய வடவாககினிபோன்ற முகமுள்ள அம்முனிவா சுளித்துக்கோபிததாா. உடனே கடல் சூழ்நத பெரிய உலகமாகிய ஐம்பெரும் பூதஙகளும் இருள்பட்டு மயக்குற்றன. எ - று. (அஅ)

பேராழி வையம்பு ரக்குஞசெ ருக்கிற்பெ ரும்பேதையா
யோராத காமககளிபபாலெ மைசசறறு மனமெண்ணிலாய்
வாராடி ளங்கொங்கை யவளோடு மொருநீயும வனவேடனுய்ச
சூராடி ருங்கான கஞசேறி யென்றுன றநதொலலையோன்.

(இ - ள்.) பெரிய கடல்சூழ்நத உலகத்தைககாககும் இறுமாப்பினலே பெரிய மூடனுகி, உணாவற்ற காமககளிப்பினுல எமமைசசிறிதும் மனதில் மதியாதுவாளா விருநதனை. அதனுல, கச்சணிநத இளஙகுசஙகளையுடைய உன் மனைவியோடும் ஒப்பறற நீயும காட்டில வசிககும் வேடனுகி [சூா] வனதெயவஙகளசஞ்சரிககும காட்டிற் சேரககடவாயெனறு தாய சொரூபராகிய பழமை வாயநத வசிஷ்டமுனிவா சபிததனா. எ - று. (அகூ)

நின்னுடு காடாகி மிடைதநத வனமேய்நி ரைகருனறெழ
வஙநாட கததுளள வனைவோரு மயூலவாயவ யககோளரி
செநநாயபொ றிபபுண்ட ரீகஞசி னபபலல முதலானமாக
கொனறுரு கிாககங்க முதலாய புளளாகெ னககூறினன.

(இ - ள்) உன் நாடு முழுதுஙகாடாகி, நெருஙகிய காட்டுமூஙகிலகள் மலைகளின வரிசையில் ஓஙகி வளரவும, அநநாட்டிலுள்ள எவலோரும் தீயைச்சிநதும் வெறறிதஙகிய சிஙகஙகள் செநநாயகள புள்ளிகளமைநத புலிகள கோபநதஙகிய கரடிகள முதலிய மிருகஙகளும், வலிமிகுநத நகஙகளையுடைய பருநது முதலிய பறவைகளுமாககடவரெனறு சாபமிட்டனா. எ - று.

உடுக்கும்ப சுமபீத ககோசி கமபீலி யுடையானதாற
றொடுககின்ற முததாரம வெண்குனறி யாகிதது வனறுற்றவாற
படுககினற முதககக முறசோகி யாகிபப தமபுககதா
லெடுககுநத வததிறகு மேமலன்ப துணமேடாவி சைததோநவே.

(இ - ள்) உடுத்திருககும் பசும் பொன்னிறமான பட்டு வஸ்திரம் மயிற்றேகையுடையாகியது. தொடுத்திருககும முததுமாலை வெணகுனறி மணிமாலையாகி நெருஙகியிருநதன. எலலோருககும அனபை விளைககும் வீரகணடாமணி பலகலயாகிககால்களிலெயதின. ஆனபடியால், எலலோராலும் புகழ்நது சொலலததகக தவத்திற்கு உயாநததாக எடுத்துககூறவேறுென்றுளதோா எ - று.

ஒளிரும்ப சும்பொறறொ டாததாலி புலிவாளெ யிற்றொததறற
றளிருண்ட பொனமேனி கருகிபபொ லனுசேலை தழுபுபட்டதாற்

தழுவு மன்னவன் கோயிலுட் கழுதினஞ் சரிப்பப்
பொழுது முவகை யிருளபட்ட புன்மரம் பொதிந்த.

(இ - ள்.) படமெழுதிப்பார்த்தாலும் ஒப்பாகாத மதில்கள் சூழ்ந்த அந்நகர மானது, நெருங்கியடர்ந்த காட்டைப்போலப்பலவகைச்சிறப்புகளும் நீங்கி, அதனைச்சேர்ந்த இராசமாளிகையிற்சென்று கழுகு கூட்டங்கள் சஞ்சரிக்க, சூரியனும் நுழையாத வண்ணம் இருள் நிறைந்திரும்படி புற்களும் மரங்களும் நிறைந்துவிட்டன. எ - ள. (௬௬)

நீண்ட மாமனைத் தொடர்ப்பா கிரிகளாய் நிவந்த
வாண்ட மைந்தெழு முளியரிற குறுமுய லடைந்த
வேண்ட ருஞ்சிறப் பெய்திய வெண்ணிலா முன்றி
றாண்ட ருஞ்சினப் படுபுலி பிணவுகண் டுயில்வ.

(இ - ள்.) நீண்ட சிறப்புற்ற மாளிகைகளின் தொடர்ச்சிகளெல்லாம் படர்ந்த மலைகளாயுயர்ந்தன. அங்கே வசித்தோங்குகின்ற வேடர்களைப்போலக் குறுமுயல்களெய்தின. விரும்பப்படுகின்ற அரிய சிறப்புகளடைந்த வெண்ணிலாமுற்றத்திலே, விசேடித்த கடுங்கோபந்தங்கிய கொலைத்தக்க புலிகளும் பெண் புலிகளும் தூங்கிக்கொண்டிருந்தன. எ - று. (௬௭)

நீடு கோபுரங் கொடுமுடி நெடுவரை யாகி
யூடு பாந்தள்புக குறங்குவ வோரிகின் றழைப்பப்
பாடு போக்கிய சாளர முழையெனப் பதுத்த
மாட மாளிகை பொறறையாயக் கொழுங்கொடி வளைத்த.

(இ - ள்.) உயர்ந்த கோபுரங்களெல்லாம் பெரிய மலைகளின் கொடுமுடிக ளாகி, அவற்றின் மலைப்பாம்புகள் புகுந்து கண்டுயில்வன. கிழ நரிகள் ஊளையிடு வன. சிற்பத்தொழிலமைந்த சாளரவாயில்களாக வகுத்திருந்த மாடமாளிகை களெல்லாம் சிறு குன்றுகளாய அவற்றிற்கொழுவிய காகங்கள் சூழ்ந்திருந்தன.

மணந றாதுணர் வனமெலாம் பகன்றையாய் மலர்ந்த
துணர விழ்ந்தலர் மாதவி காஞ்சொரி துணர்த்த
விணர்விழ்ந்தலர் பூங்கமு கீந்தென விசிர்த்த
பணைநெ டுஞ்சினை மாம்பொழில் காஞ்சிரை பழுத்த.

(இ - ள்.) நறுமணமுள்ள மலர்க்கொத்துக்களையுடைய நந்தனவனங்க ளெல்லாம் [பகன்றை] கிலுகிலுப்பை மலர்களாகவிகசித்தன. பூங்கொத்துகள் விகசித்து மலர்ந்த குருக்கத்திகள் காஞ்சொரிகளாயலர்ந்தன. மகரந்தத்தை யுதிர்த்து மலர்கின்ற அழகிய கமுக மரங்களெல்லாம் ஈச்சமரங்களாயத்தளிர் விட்டன. பணைத்த நீண்ட கிளைகளும் மாஞ்சோலைகளும் எட்டிமரங்களாயப் பழுத்தன. எ - று. (௬௯)

கலைநி லாப்படு வெண்பளிக் கறைமுகட் டுச்சி
கொலைம தக்களி றழிதமெழுங் கோளரிக் குறுந்தா
ளலைப சம்புனற் குருதிதோய்ந் தவண்வ ணமைத்த
நிலைநெ டும்புனற் றுமரை மலர்ந்தன நிகர்த்த.

(இ - ள்) பூரண கலைகளோடுகூடிய சந்திரிகையைப்பரப்பும் வெள்ளிய பளிங்குக்கற்களாற்சமைந்த உத்திரத்தினமீது, கொல்லுந்தக்க மதங்கொண்ட யானையைவென்று விளங்குஞ் சிங்கத்தின் சிறு கால்கள், அலைகின்ற புதிய நீராகிய உதிரத்திறபடிந்து அங்ஙனே வைத்திருப்பவை, நிலையாயுள்ள மிக்க நீரின் தாமரைமலர்கள் மலர்ந்தனபோன்றிருந்தன. எ - று (௧௦௦)

ஒடுக்கி தழ்ப்படு தாமரை காந்தளொத் துடைந்த
மடற்பொ திந்தெழு மல்லிவெண் காந்தளாய் மலர்ந்த
வெடுத்த தண்புனல் கானலொத் தெல்லைநீத் திறந்த
வடுத்த பானலு மழைநிறக் குறிஞ்சியொத் தலர்ந்த.

(இ - ள்.) ஒடுக்கிய இதழ்களபடைத்த தாமரைகளெல்லாஞ் செங்காந்தளைப்போன்று விகசித்தன. இதழ்கள நெருங்கியோங்கிய மல்லிகைமலர்களெல்லாம் வெண்காந்தள் மலர்கள்போலப் புட்பித்தன. நிரம்பிய குளிர்ச்சி தங்கிய நீர் நிலைகள் கானற்சலம்போல வரம்புகடந்தொழிந்தன. நெருங்கிய நீலோற்பலமலர்களும் மேகநிறந்தங்கிய மருதோன்றிமரங்களபோலப்பூத்தன.

முழங்கு பைங்கழற கோமக னுடைக முகப்பிற
றழங்கு பல்லியங் களிறெனை நாடகச் சதியின
வழங்கு மாடலை மிதிக்குநர் மயிலெனக் குயிலா
லெழுந்த பாடலி னுடைக் தனிமைகண் டிருக்கும்.

(இ - ள.) சபதிக்கின்ற பசிய வீரகண்டாமணிதரித்த அம்மன்னனது நாடகசாலையின் வாசலில் ஒலித்துக்கொண்டிருந்த பல வாத்தியங்களுள் யானைகளாகவும், நாடகத்திறகிணங்கச் சதிக்கொத்து நடிக்கும் நடனஞ்செய்பவர்கள் மயில்களாகவும், குயில்களாலுண்டாகிய ஓசையே பாடலாகவும் இவ்வகை நடனம் பார்ப்பவர்களில்லாமல் தானே நிகழ்ந்துகொண்டிருக்கும். எ - று. ()

இன்ன தன்மையொத் திருந்தன வாசியி லிருக்கை
யன்ன வேடனொத் தகன்றவ னடவியுட் சரியா
வின்ன லங்கடற படிந்தவ ணியங்குறு மேல்லை
பனனு மாதவத் திரணவிந் தவ்வனம் படர்ந்தான்.

(இ - ள்.) அவ்வரசனது அரசியற்கைத் தன்மை இவ்வகையை யொத்திருந்தன. அவ்வகைய வேடன்போலச் சென்ற மன்னவன் பெருங்காட்டிற சஞ்சரித்துக்கொண்டு, துயாக்கடலில் மூழ்கி வசித்திருக்குந் தருணத்தில், துதித்தற்குரிய பெருந்தவத்தையுடைய திருணவிந்துவென்னும் முனிவா அக்காட்டிறகு எழுந்தருளினா. எ - று. (௧௦௫)

அடைந்த மாதவத் தலைவனை யரசனு மவளும்
படிந்து தம்முடி மண்ணுறப் பணிந்தனர் பணியா
மிடைந்த புன்சடை யருந்தவ வசிட்டனால் விளைந்த
திடைந்த சிந்தையி னெடுத்தெடுத் தியம்பினா ரிரந்து.

(இ - ள ) அங்கெழுந்தருளிய பெருந்தவத் தலைவராகிய திரணவிந்துவென்னும் முனிவரை அவ்வரசனும் அவன் மனைவியும் நிலமிசைப் படியும்படி வணங்கினார்கள். அப்படி வணங்கியவுடனே நெருங்கிய சிறு சடைகளையுடைய அருந்தவஞ்செய்த வசிட்டமுனிவரால் தமக்குற்ற சாபத்தை, வருந்திய மனதோடு பிரார்த்தித்து விளக்கி விண்ணப்பித்தார்கள். எ - று. (௧௦௪)

கேட்டு நின்றருண் முனிவரற் கின்னருள் கிளைப்பத்
தோட்ட லங்கலீர் நும்முழைப் பாதகந் தொலைவான்
கோட்டு வெள்விடை யவனருட் புண்ணியங் குணியா
வீட்டு சிந்தையி னியற்றுதி ரெனவெடுத் திசைத்தான்.

(இ - ள்.) அதனைக்கேட்டருளிய திரணவிந்து முனிவருக்கு இனிய திருவருள் மிக, இதழ்களோடு கூடிய மலர்மாலையை யணிந்தவர்களே! உங்கட்குள்ள பாவங்கள் நிவாரணமாகும்படி, கொம்புகளையுடைய வெண்ணிறந்தங்கிய இடபாரூடராகிய சிவபெருமானுடைய திருவருளுக்குரிய சிவ புண்ணியங்களைக் கருதிச் செய்யவேண்டுமென்னும் மனதோடு செய்யக்கடவீர்களென்று விரித்துச் சொல்லுகின்றார். எ - று. (௧௦௫)

இவரை யன்னவன் பின்னரு நோக்கிமற் றீங்குச
சிவன தாலய முண்டுகொ லென்றலுஞ் செறிந்த
கவன வேடனு மனைவியுந் தொழுதுளங் களிப்பார்
தவமு யற்சியீ ருளதெனச் சாற்றினர் அவரற்கு.

(இ - ள்) இவ்விருவரையும் அம்முனிவர் மீண்டும் பார்த்து, இங்கே ஏதேனும் சிவாலயம் உளதோ? என வினவவும், மிகுந்த கவனத்தையுடைய வேடரூபங்கொண்ட மன்னவனும் அவன் மனைவியும், அம்முனிவரை வணங்கி மனங் களிப்படைந்தவர்களாய், அவரை நோக்கித் தவமுயற்சியுடையோரே! இங்குண்டென்று சொன்னார்கள். எ - று. (௧௦௬)

இத்த லத்தினுக் கயல்பிர மேசசுர மென்னு
மத்த னாலய முளதென வருந்தவத் தலைவன
பத்தி யிற்சிவ னாலயம் புகுந்துநீர் பரிவான
முத்தர் வேண்டுறு மருஞ்செயற் பணிவிடை முயல்வீர்.

(இ - ள்.) இவ்விடத்திற்கருகே பிரமேச்சுரமென்னுந் திருநாமமுள்ள சிவபெருமான திருவாலயமிருக்கின்றதென்று கூற, அதனைக்கேட்ட அருந்தவச் செல்வராகிய திரணவிந்து முனிவர் நீங்களிருவரும் பத்தியோடு அச்சிவாலயமடைந்து அங்குள்ள பெரியோர்கள் விரும்புகின்ற சிறந்த செயல்களாகிய பணிவிடைகளை அன்புடன்செய்ய முயலுவீர்களாக. எ - று. (௧௦௭)

புரிந்த மாமதிற் புறத்துள புற்சிதைத் தெடுத்துஞ்
சரிந்து வீழ்சரு ககற்றியுந் தனித்திரு முன்றிற்
பரிந்த வன்பினிற் றுகடுடைத் தகற்றியும் பழங்க
ணிரிந்து போதரச் சந்நிதி திருமெழுக் கிடும்.

(இ - ள்.) அலங்கரித்த பெரிய மதிற்புறத்திலே முளைத்துள்ள புற்களைப் பிடுங்கியெறிந்தும், மரங்களினின்றும் நழுவிவிழுகின்ற சருகுகளைப் பொறுக்கியெறிந்தும், ஒப்பற்ற திருமுற்றத்திலே மெய்யன்போடு தூசுகளைக் கழித்து நீக்கியும், துன்பங்களழிந்தோடும்படி திருச்சந்நிதானத்தில் திருமெழுக்கிட்டும்.

அலங்க னுண்மல ருதவியு மரனபி டேகக்
கலங்கொ ணர்ந்தவற் குதவியுங் கடிமதிட் கிளைத்த
குலங்கொள் வல்லிவே பிடுங்கியு மெம்பிரான் கோயில்
வலன்றி ரிந்துமின் றெடுத்தெடுத் தினிதக மகிழ்ந்தும்.

(இ - ள்.) சிவபெருமானுக்குத் திருமாலைக்குரிய மலர்களை யெடுத்துக் கொடுத்தும், அபிஷேகத்திற்கு வேண்டிய திரவியங்களைச் சேகரித்துவந்து அவருக்குதவியும், காவலாயுள்ள திருமதில்களில் முளைத்துள்ள கூட்டமாகிய கொடிகளையும் வேர்களையும் பறித்தும், எமது சிவபெருமான் திருவாலயத்தை வலஞ்செய்தும், சந்நிதிக்கு நேரில்நின்று மிகவுந் துதித்து இனிதாக மனங் களித்தும். எ - று. (௧0௯)

கருத்தி னெம்பிரான் றிருவடி கரந்துறக் கருதி
யிருத்தி ராங்கவ ணிப்பெருஞ் சாபநீத் தொழியு
மருத்தி மாநகர் முன்னையிற் சிறப்புடைத் தாகுந்
திருத்து நின்னுடை யரசுசெங் கோன்முறை செலலும்.

(இ - ள்.) உங்களிதயத்தில், எமது சிவபெருமான் திருவடிகள் மறைந் திருக்கும்படி தியானஞ் செய்துகொண்டிருப்பீர்களாக. அப்போது அங்கே உங்களுக்கு நேர்ந்துள்ள இப்பெருஞ்சாபம் நீங்கும். உங்களால் விரும்பப்படும் பெரிய நகரமும் முன்போலவே சிறப்பினையடையும். திருத்தமாகிய உன் அர சாட்சிக்குரிய செங்கோலும் கிரமப்படி செல்லும். எ - று. (௧௧0)

என்று ரைத்தனன் றிரணவிந் திருந்தவச் செல்வ
னன்ற வர்க்களித் தாச்சிர மத்துநீத் தகன்றுன்
மன்ற லங்குழன் மனைவியுந் தானுமாய் வடபாற்
குன்ற விலலிபொற் கோயிலிற் குறுகினன் புகுந்தான்.

(இ - ள்) என்றிவ்வாறு திரணவிந்துவென்னும் பெரிய தவச்செல்வ முடையவர் திருவாய்மலர்ந்து, அன்று அவர்களுக்குத் திருவருள்செய்து அவ் வனத்தை யகன்று சென்று தாம் வசிக்கும் ஆச்சிரமத்திற்கு எழுந்தருளினர். மணங்கமழும் அழகிய கூந்தலையுடைய தன் மனைவியும் தானுமாய், வட திசையிலுள்ள மேருமலையை வில்லாகக் கொண்டருளும் சிவபெருமான் வீற் றிருக்கின்ற அழகிய பிரமேச்சுரத்தையடைந்து உள்ளே போயினன். எ - று.

உரைத்த மாதவ னுரைப்படி யெம்பிராற் குவப்பி
னிரைத்த வன்பினோ டென்பற வுருகின ரியற்றக்
கரைத்த கட்புன லரும்புறக் கனிந்தனர் கவலா
நிரைத்த கங்குலபன் னொன்றுபிற் படுத்தலு நிமலன்.

(இ - ள்) தமக்குபதேசித்த பெருந்தவமுடைய திரணவிந்து முனிவர் சொற்படி எமது சிவபெருமானுக்குக் களிப்போடும் ஆரவாரித்த மெய்யன் போடும் எலும்பும் நெக்குவிட்டுருக மனவுருக்கமெய்தியவராய்ச் செய்து, ஒழு கிய ஆநந்தபாஷ்பங்கள் துளிக்கக்கவலையற்றவர்களாய்க் கனிவெய்தியவர்களாய வரிசையாக வரும் இரவுகள் பதினொன்றினைக் கழித்தவுடன், சிவபெருமான்,

ஓது சாபநீத் தின்னுரு முன்னுரு வுதவிப்
போது மாநகர் முன்னினுஞ் சிறப்பெனப் புரிந்து
காதன் மாக்களு மன்பதை யுருக்கொடு களிப்பத்
தீது தீர்ந்துறத் திருவுள நெகிழ்ந்தருள் செய்தான்.

(இ - ள.) வசிஷ்டமுனிவர் கூறிய சாபத்தையகற்றி, இனிய உருவமாகிய பண்டைய உருவத்தைப் பாலித்து; அளாந்த பெரிய நகரமானது முன்னிருந

ததைக் காட்டிலுஞ் சிறப்புடையதென்று கண்டோர் கழறும்படி செய்து, ஆசையையுடைய அந்நகரவாசிகளும் மனிதவுருவமெய்திக் களிப்புறவும், கெடு திகளெல்லாம் நீங்கிப்போகவும் திருவுளமிரங்கித் திருவருள் பாலித்தனர்.

தடக்கை வேந்தனுந் தேவியுந் தன்னக ரடைந்து
திடப்பெ ருந்தனித் திகிரியாற் கோமுறை செலுத்தி
மடக்கொ டிக்கொடி பாகனை வரன்முறை வழுத்தி
யிடர்ப்பெ ருமபிறப் பொழித்துபோய்க் கயிலைவீற் றிருந்தார்.

(இ - ள்.) பரந்த கைகளையுடைய அரசனும் அவன் பத்தினியும் தங்கள் நகரத்தையடைந்து, வைராக்கியத்தோடு சேர்ந்த பெருமை தங்கிய ஒப்பற்ற ஆக்கினைச்சக்கரத்தினாலே இராசரீக முறைமையைச் செலுத்திக்கொண்டு, அழகிய உமாபிராட்டியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானைத் துதிசெய்து துயரத்திற்குக் காரணமாகிய பெரிய பிறவி நீங்கிச்சென்று திருக்கைலாயத்தில் வீற்றிருந்தார்கள். எ - று. (௧௧௪)

ஏறு கைத்திடு மெம்பிராற் கினியன வியற்றுங்
கூற ருஞ்சிவ புண்ணிய நீவிருங் குணிப்பி
னாறு நீங்கியிக் கொடும்பெருஞ் சாபநீத் தொழிவீர்
வேறொ ழிந்ததுற் றென்றன னருந்தவ வேந்தன்.

(இ - ள்.) இடபத்தை வாகனமாகச் செலுத்தும் நமது சிவபெருமானுக்கு இனிய திருத்தொண்டுகளைச் செய்வதாகிய சொல்லுதற்கரிய சிவ புண்ணியங்களைச் செய்தற்கு நீங்களும் நினைப்பீர்களாயின், இடையூறகன்று இக்கொடிய பெருஞ்சாபத்தினின்று நீங்கப்பெறுவீர்கள். இச்சிவ புண்ணியத்தைத் தவிர வேறொன்றும் இச்சாபத்தை நீக்காதென்று சிறந்த தவராசராகிய அகத்திய முனிவர் (அவ்வரசர் நால்வர்க்கும்) கூறினர். எ - று. (௧௧௫)

ஏழை யேஞ்சிவ புண்ணிய மியற்றுவான் முயல
வாழி மாதவ வரன்முறை வழங்குதல் வேண்டும்
ஊழி நாயகற் கினியன வுணர்ந்திலே மெனறு
மாழை யொண்கணார் தம்மொடும் பணிந்தனர் மன்னர்.

(இ - ள்) சிறந்த தவமுடையவரே! அடியேங்கள் சிவ புண்ணியஞ்செய்ய விரும்பி, முயற்சிப்பதாக வரிசையான முறைமைகளைத் திருவாய்மலர்ந்தருள வேண்டும். ஊழி முதல்வராகிய சிவபெருமானுக் குரியனவாகிய சிவபுண்ணியங்கள் இவையெனத் தெரிந்திலோம் என்று, அழகிய வொளிதங்கிய விழிகளையுடைய தங்கள்மனைவிமாரோடு, அம்மன்னர்கள்நால்வரும் பணிந்தார்கள்.

இரந்து முத்தமிழ்த் தலைவனை யெடுத்தெடுத் தேத்திப்
புரிந்து போற்றுறு மந்நிலை மழவிடைப் புனிதன்
கரந்தை யஞ்சடைப் பரனமு தேசுரன் கருணை
சுரந்த ளித்துறப் பெருஞ்சிவ தேசிகன் றோன்றி.

(இ-ள்.) முத்தமிழ்க் கிறைவராகிய அகத்தியமுனிவரை இப்படிப் பிரார்த்தித்து, அவர் புகழ்களைப் பலவாறு எடுத்துத் துதிசெய்து, விருப்பத்துடன் பணிந்துகொண்டிருக்குந் தருணத்தில், இளமை தங்கிய இடபவாகனத்தையுடைய புனிதமானவரும், கரந்தையணிந்த சடையையுடைய சிவபெருமானுமாகிய அமுதேசுவரருடைய திருவருள் மிகுந்து பாலிக்கப்பெற்ற அர்ச்சகராகியெழுந்தருளலும். எ - று. (௧௧௬)

தெய்வ வேதியன் றோன்றலுஞ் செழுந்தமிழ்ப் புனித
னெவ ருந்தனிச சிநதையோ டெதிரந்தன னவைதீர்
பொய்யின் மாதவன் றன்னொடு மளவளாய்ப பொறைசூ
ரைய நின்னுடைப் பெருமையா ரளவறிந் திசைப்பார்.

(இ - ள்.) அச்சிவாசாரியா ஆங்கெழுந்தருளியவுடனே, செழித்த தமிழ் முனிவா மிக வருந்திய சிறந்த மனதோடு அவரை யெதிர் கொண்டவராய், குற்றமகன்ற மெய்த்தவமுடைய அவ்வாசாரியரோடு கலந்து, சாந்தகுண முதிர்ந்த தலைவரே! தங்களுடைய பெருமையை எவர்தாம் அளவிட்டுச் சொல்ல வல்லவர்கள்? எ - று. (கக௯)

மாபி றோங்கிய கொடுமுடிப் புடபமால் வரையிற்
குரவர் கோத்திரத் துதித்தனை மறைக்குலக் கொழுந்தே
பரவி நின்னுழை வேண்டுவ துண்டது பணிப்பாய்
புரவு பூண்டவ ரிவர்க்குவந் துறுதுயா புகல்வான்.

(இ - ள்.) முறைப்படி யோங்கியுயர்ந்த கொடுமுடிகளையுடைய பெரிய புட்பகிரியில் சிவாசாரிய கோத்திரத்திற் சனித்த வேதியா மரபின் கொழுந்து போல்வரே! உமமிடத்தில் யான் பிரார்த்தித்து வேண்டிக்கொள்வதொன்றுளது. அதனைப்பாலிக்கவேண்டும், அரசாட்சியை மேற்கொண்டவர்களாகிய இவர்கள் நால்வருக்கும் வந்தடைந்த துயரத்தைக் கூறுகின்றேன். எ - று. ()

தெளித்த மாதவக் கோசிக னடுசினத் தீயாற
களித்த யானையுஞ் சேனையுஞ் சாமபராயக் கழிய
வெளிப்ப டும்புல னிழந்திரு செவிப்புலன வீயக்
குளிர்த்த கல்லரு விப்புனங் குறுகின ரிவர்கள்.

(இ - ள்.) தெளிவுற்ற பெருந்தவமுடைய விசுவாமித்திர முனிவருடைய கொடிய சினத்தீயினால், களிப்புற்ற பட்டத்து யானையும் மற்றுள்ள சேனைகளுஞ் சாமபராயமழியவும், காணடற்குரிய கட்புலனழிந்து கேள்விக்குரிய இரு செவிப் புலன்களுமழிய, மலையினின்றொழுகும் குளிர்ந்த அருவி நீர்பாயும் இக்காட்டில் இந்நாலவரும் வந்து சேர்ந்தார்கள். எ - று. (கஉ0)

எந்தை நீயினி யின்னரு ளிவர்க்கென வீந்து
முந்தை யோனசிவ புண்ணிய முயறசியின முயலத்
தந்து மாபெருஞ் சாபநீத் தருளெனப் புகலாச்
செந்த மிழ்க்கடற் குறுமுனி கயிலைபோய்ச் சிறந்தான்.

(இ - ள்.) எந்தையாகிய நீர் இப்போது உமமுடைய இனிய அருளை இவர்கட்கு அளித்து, முதல்வராகிய நமது பெருமானுக்குரிய சிவபுண்ணிய முயற்சியிற பயிலும்படி செய்து, இவர்களுக்குச் சம்பவித்துள்ள மகத்தாகிய பெருஞ்சாபத்தை விலக்கியருளவேண்டுமென்று கூறி, செவ்விய தமிழ்க் கடலைக் கடந்த அகத்திய முனிவர் கைலாயகிரிக்கெழுந்தருளிச் சிறந்திருந்தனர்.

அரசர் நால்வருந் தேவியர் நால்வரு மருநூற
குரவ னைப்பணிந் தேத்தின ராங்கவன் கொடுபோய்ப்
புரவ லாக்கமு தேசசுரங் காட்டலும் புகுந்தார்
பரம னைத்திருச் சந்நிதி மண்ணுறப் பணிந்தார்.

(இ - ள்.) இராச குமாரர்கள் நால்வரும், அவர்கள் மனைவிமார் நால்வரும், அரிய வேதமுணர்ந்த அச்சிவாசாரியரைப் பணிந்து துதிசெய்தார்கள். அச்சிவாசாரியர் இவர்கள் எட்டுப்பேரையும் அழைத்துக்கொண்டு சென்று அம்மன்னர்களுக்கு அமுதேசுவரமென்னும் திருக்கோயிலைக் காட்டியவுடனே உள்ளேபோய், திருச்சன்னிதானமடைந்து அமுதேசுவரரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தார்கள். எ - று. (௩௨௨)

பரசி நின்றிரந் தழுதழு திரங்குதல் பார்த்துக்
குரவ னுங்கவாக் கரசர்கள் கொடிநெடு மபுரிசைப்
புரமெரித்தவ னடியவர்க் கெளியனீர் புனக்கண்
டரவ ருந்துரு தெழுதிரென் றோர்கதை சாறும்.

(இ - ள்.) சந்நிதியில் வணங்கி நோந்நின்று புலம்பிப் புலம்பித் துயருறுவதுகண்டு, சிவாசாரியர், அரசர்களே! கொடிகளோங்கிய நெடிய மதில்களையுடைய முப்புரங்களை யெரித்தருளிய சிவபெருமான அடியார்கட்கெளியவராயிருப்பவர். ஆதலால், நீங்கள் துன்பமெய்தும்படி வருந்தாமல் எழுந்திருங்களென்று அந்நாலவர்களுக்கும் கூறி ஒரு சரிதையைக் கூறுகின்றார். எ - று.

கருணை மெய்யுரு வெடுத்தன காசிபத் தவத்தோ
னருகு முற்கல னெனும்பெய ரந்தண னருநூற்
சுருதி கேட்டிருந் தோதினன் ஓதலுந் துளிபட்
டொருவு நாப்புன றெறித்தலுங் காசிப னுருத்தான்.

(இ - ள்.) காருணியமே திருமேனியாகக்கொண்ட தவத்தையுடைய காசிபமுனிவரிடத்திலே, முற்கலனெனும் பெயருடைய ஒரு முனிவர் அரிய நூலாகிய வேதத்தைப் பாடங்கேட்டுக்கொண்டு, அவரிடத்திலிருந்தே அவ்வேதத்தையோதினர். அவ்வாறோதுகையில், அம்முனிவருடைய நாவிலுள்ள உமிழ்நீர் தவறி ஒரு துளி தெளித்தமாத்திரத்தில், காசிபமுனிவர் கோபமெய்தினர்.

பத்தி யும்பய முந்தெரிந் துணர்ந்திலை பசுநூற்
பித்த னாயினை நின்னுடை நாவகம் பிதிர்ந்த
தொத்து புன்றுளி யெமதுழைத் தெறித்தலாற் றுறவோ
யித்து ணைக்கரும் பகடெனப் போதியென் றிசைத்தான்.

(இ-ள்.) முனிவனே! ஆசிரியன்பால் வைக்கவேண்டிய பத்தியும் பயமும் அறிந்து தெரிந்துகொண்டாயில்லை. நீ பசுநூலுணர்ந்த பைத்தியக்காரனாய் விட்டாய். உன் நாவினின்றொழுகிய ஒட்டுதலையுடைய எச்சிற்றுளி யெம்மிடத்தில் தெளித்தபடியால், நீ இப்பொழுதே கருநிறமமைந்த எருமைக்கடாவாகப் போகுகவெனச் சபித்தனர். எ - று.

எடுத்த மெய்யிழந் திருமருப் பொருத்தனிப் பகடாய்
விடுத்த பைம்புலி னூர்ப்புற மேய்ந்தனன் றிரிவான்
றொடுத்த தொல்லைநாட் கழித்தன னொருதினந் தொடுநீர்க்
கடுத்த னிக்கறைக் கண்டனா ராலயங் காணு.

(இ - ள்.) நீ யெடுத்த மானுடதேகம் நீங்கி இருகொம்புகளையுடைய ஒப்பற்ற வொன்றியான எருமைக்கடாவாய், முளைத்துள்ள பசிய புற்களையுடைய ஊர்ப்புறங்களில் மேய்ந்து சஞ்சரிப்பவனாய், தொடர்ந்துவரும் நெடுநாட்களை யிப்படிக்கழித்து, ஒருநாள் பாற்கடலிலுதித்த ஒப்பற்ற ஆலாலத்தை யடக்கிய நீலகண்டராகிய சிவபெருமானது ஒப்பற்ற திருக்கோயிலைப் பார்த்து, எ - று.

ஆதி யெந்தைசத் தீசுரத் தகவயி னடைந்து
சீத வார்பசும் புறபட மேய்ந்துசூழ் திரிந்து
வீதி யங்ஙன மும்முறை சூழ்ந்துமெல் லியற்கோர்
பாதி யீந்தவன் சந்நிதி கிடந்ததப் பகடு.

(இ-ள்.) ஆதிதேவனும் எமது தந்தையுமாகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் சத்தீசுவரமென்னும் திருவாலயத்தை யடைந்து, குளிர்ச்சியுற்ற நீண்ட பசும்புற்களை மேய்ந்துகொண்டிருந்து ஆலயத்தைச் சூழ்ந்து திரிந்து அப்படியே மாடவீதியையும் மும்முறை சூழ்ந்துவந்து, உமாதேவியாருக்குத் தமது திருமேனியிற் பாதியை யளித்தவராகிய சத்தீசுவரர் சந்நிதானத்திற் படுத்திருந்தது. எ - று. (௬௨௭)

ஆல யம்பசும் புற்றிர ளழித்தத னாலு
மாலை மும்முறை வந்தது வலன்றிரிந் ததுவே
போலு மென்பத னாலுமப் புராரிசந் நிதிக்கே
யேல வீழ்ந்தது வணங்கலொத் ததுவென லாகும்.

(இ - ள்.) அச்சிவாலயத்தில் முளைத்திருந்த பசும்புற் கூட்டங்களை அழித்தமையினாலும், மாலைப்பொழுதில் அவ்வாலயத்தை மும்முறை சூழ்ந்து வந்தது வலம் வந்ததையொத்த தென்றபடியாலும், அச்சிவபெருமான் சந்நிதானத்திற்கு நேராகப்படுத்திருந்ததே நமஸ்கரித்தமையை யொத்தது என்றபடியாலும். எ - று. (௬௨௮)

உமைக்கு நாயகன் றிருவுள மிரங்கிய தொருங்கே
யமைத்த சாபநீத் தவவுரு வடைந்தன னந்நா
ளிமைப்பின் முக்கண னெம்பிரான் சந்நிதி யிகவான்
சமைத்த நூன்முறை வலனறிரிந் தேத்தினன் சரிப்பான்.

(இ - ள்.) உமாபிராட்டியாருக்குக் கணவராகிய சிவபெருமான் திருவுள்ளமிரங்கி யருள்புரிந்தனர். அன்றையதினமே தனக்குற்றிருந்த சாபம் விலகிப்பண்டை வடிவம்பெற்றனன். உடனே திரிநேத்திரங்களையுடைய எமது சிவபெருமான் சந்நிதியை இமைப்பொழுதும் நீங்காதவராய, சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியஆகமவிதிப்படி வலஞ்செய்து துதித்துவசித்திருந்தனர்.

ஈது நோக்கிநின் றதிசய முலகுளோ ரெய்த
யாது மொன்றறிந் தியற்றுறு திப்பக டிழைத்த
தீது தீர்ந்ததென் றுறசிவ புண்ணியப் பெருமை
யோத வேண்டுறின் யாவரே யளவறுத் துரைப்பார்.

(இ - ள்.) இதனைப்பார்த்து நின்று, உலகினர் யாவரும் அதிசயமடைய, ஏதொன்றுமினும் நிவாரணமறிந்து செய்யாமலே, இவ்வெருமைக்கடாசெய்த பாவமானது நிவாரணமாயிற்றென்று சொல்வோமானால், சிவபுண்ணியத்தின் சிறப்புகளை முழுவதும் எடுத்துச்சொல்லவேண்டுமோனால் எவர் தாம் அளவு படுத்திச்சொல்லவல்லவராவார்கள்? எ - று. (௬௩௦)

வருதிர் நீவிரென் றுரைத்தன னொருவனண் மலர்த்தார்
தருதி ரென்றன னொருவர்போய்த் தடம்புனல் கொணர்மி
னொருவ ரிங்குழை வாரமுற் றிழைத்திமற் றொருவர்
பருகு மென்கனி தருதிர்ச னுக்கெனப் பணித்தான்.

(இ - ள்.) நீங்கள் வருவீர்களாகவென்று கூறி, அவர்கள் நால்வரில் ஒரு வனை அன்றலாந்த மலர்களாலாகிய மாலை கட்டிக்கொடு என்றும், பிறிதொரு வனை நீ போய் விசேஷ தீர்த்தங்கொண்டு வருகவெனவும், வேறொருவனைப்புசிக் கத்தக்க மெல்லிய கனிவர்க்கங்களைச் சிவபெருமானுக்கு நிவேதிக்கக் கொணர்க வென்றும் உத்தரவளித்தனர். எ - று. (௩௬௪)

சொற்ற நாலவகைப் பணிவிடைக் கேற்பன தொகுத்து
மற்றை நாலவர்க்கு முதவின ரனுகவர் வாங்கிக்
கற்றை வார்சடை யெம்பிரான் பணிவிடை கருதி
முற்றி ழைத்தனர் வலன்றிரிந் தேத்தினர் முறையால்.

(இ - ள்.) மேலே சொல்லிய நான்கு வகையான திருத்தொண்டுகளுக்கு ஏற்ற கருவிகளைச்சித்தஞ்செய்து அந்நால்வர்க்குங்கொடுத்தனர். அந்நால்வரும் அவற்றைப்பெற்றுக்கொண்டு, கூட்டமாகிய நெடிய சடையையுடைய எமது சிவபெருமானை திருத்தொண்டுகள் செய்யக்கருதி, முழுதுஞ்செய்து வருபவர் களாய் நாடோறும் கிரமப்படி பிரதக்ஷிணஞ்செய்து துதித்து வந்தார்கள்.

இனைய நால்வரு மீசனுக் கிவைபுரிந் தேத்த
வனைத வச்சிவ தேசிகன் மழவிடைக் கொடியோன்
புனைம லர்ப்பத மருச்சனை வரன்முறை புரிந்தான்
கனைக திர்ப்பது மூவெழு வைகலுங் கழிந்த.

(இ - ள்.) இத்தகை நால்வரும் சிவபெருமானுக்கு இத்தொண்டுகளைச் செய்து துதிபுரிய, தவச்செயல்பொருந்திய அச்சிவாசாரியர், இளமைதங்கிய இடபக்கொடியையுடைய சிவபெருமானுடைய அழகிய மலர்போன்ற திருவடி களைச்சிவாகம முறைப்படி பூசைசெய்துவந்தனர். உலக மெங்கும் நிறைந்த சூரியன் அஸ்தமிக்கின்ற இருபத்தொரு நாட்களும் சென்றன. எ - று.

அடுத்த வைகலி னல்வருங் கட்புல னடைந்தார்
கெடுத்தி டுஞ்செவி மெலலென வுரைப்பதுங் கேட்டார்
தொடுத்த சாபநாட் டலையுள பெருநலந் தோன்ற
வெடுத்த துன்பொழிந் தரனருட் பிறந்ததெண் மருக்கும்.

(இ - ள்.) அடுத்த இருபத்திரண்டாந்தினத்தில், அவ்வரச குமாரர் நால் வரும் கட்பார்வையை யடைந்தார்கள். செவிடாயிருந்த செவிகளில் மெல்ல வசனிப்பதையுங்கேட்கப்பெற்றார்கள், சாபம் நேர்ந்த தினத்தின் ஆரம்பத்தி லிருந்த பெருங்களிப்புண்டாக, விளைந்திருந்த துயரங்கள் விலகி அவ்வெண் மருக்குஞ் சிவபெருமானுடைய திருவருட் பெருக்கமுண்டாயிற்று. எ - று. ()

சாபந் தீர்தரப் பின்னரு மெண்மருந் தழுவித்
தீபம் போற்றினர் வலன்றிரிந் தேத்தினர் முனிவன்
கோபந் தீத்திடப் பொடித்தெழு பதாதிகை கூடத்
தாபந் தீர்ந்தனர் குரவனைச் சென்றடி தாழ்ந்தார்.

(இ - ள்.) சாபங்கழிந்தவுடனே, மீண்டும் அவ்வெண்மருங்கூடி அவ்வாலயத் திற்குத்திருவிளக்கு ஏற்றினார்கள், பிரதக்ஷிணஞ்செய்து துதித்தார்கள். விசுவா மித்திர முனிவனுடைய கோபாக்கினி தகிக்கச்சாம்பராயவிட்ட சேனைகள் யாவும் பிழைத்து வரவும், துயரம் நீங்கியவர்களாயச் சிவாசாரியரிடஞ்சென்று அவர் பாதங்களில் நமஸ்கரித்தார்கள். எ - று. (௩௬௭)

எந்தை நின்னரு ளியற்கையி னினிதுபெற் றுயர்ந்தே
முய்ந்த னமபழி பாதக மொத்தன மென்னுச
சிந்தை நெக்குநெக் கிரங்கின ராங்கது தெரிந்தா
னந்த ணாளனு மாஙகவர்க கின்னண மறைவான்.

(இ - ள்.) எமது தநதையே! தேவரீர் திருவருளின் இயல்பினுலே இனிமையான பேறுகளைப்பெற்று மேம்பாடடைநதோம், நாஙகள் கடைததேறினோம். எஙகளுக்குற்ற பழிபாதகஙகளை நீஙகினேமெனறு, மனம் மிகவும் நெகக்குருகினாகள. அச்சிவாசாரியர் அதனை யுணாநதவராகி அவவரசாகட்கு இப்படிச்சொல்லுகின்றார், எ - று. (௩௬௬)

இனித்த டம்பதி யெய்திறும மரசிய லிருககை
பனிதத வெண்குடை மீசசெலக கோமுறை பரிததுக்
கனிதத சிநதையி னருட்சிவ புண்ணியங் கருதித
தனிதத வாழிகொண் டிகலறத தராதலம புரபபீர்.

(இ - ள்.) நீஙகள், இனியுஙகள் விசாலமான நகரததையடைநது உஙகள அரசாட்சிககுரிய சிஙகாதனததில், குளிரச்சிதஙகிய சநதிரவட்டககுடையான துமேலேநிழல்செயய இராசாஙகததை யேறறுககொணடு, கனிவெய திய மனமுடையவர்களாய ததிருவருள் பெறததகக சிவபுணணியஙகளைச்சிநதிததது, ஒப்பறற ஆககினைசககிரததைசசெலுததிககொணடு பகைவரைவெனறு உலகினைககாப்பீாகளாக, எ - று. (௩௬௭)

என்று ரைததசொற் கேட்டலு மெம்பிரா றகினிது
நன்று வேண்டிய வழுதொடு யானையு நல்கி
யனறு ரைத்ததங் குருமொழி வழிதிறம பலராய்ச
சென்று மாநகா நாலவரு மடைநதனா சிறநதாா.

(இ - ள்.) எனறு சொல்லிய வார்ததையைககேட்டவுடனே, எமது சிவபெருமானுககு இனிதாகவும நன்றுகவும வேணடியுளள திருவமுதோடு அனைததையுஙகொடுதது, அததினததில கட்டளை தநத தஙகள ஆசிரியர் திருவாாததைகளின மாாககததில மாறுபடாதவாகளாய, அநநாலவரும் தஙகள் மனைவிமாரோடு தஙகள பெரிய நகரம போயச்சோநது சிறபபடைநதாாகள்.

மதுக்க மழ்நதலா கொனறையான திருவருள வழாது
பொதுக்க டிநதுல களிததன ரினனுயிா புரநதாா
புதுபப சுமபனித் தாமவேற புரவலா மீணடு
விதுககொ ழுநதணி வேணியோற பணிநதிடை வீழநதாா.

(இ - ள்.) தேனுடன வாசனைவீசி மலாநத கொன்றைமாலையணிந்த சிவபெருமான் திருவருள வழாதபடி பொதுத்தனமை நீககி உலகததைககாதது இனிமையான மனனுயிாகளைப்பாதுகாததனா. அனறலாநத பசிய குளிாச்சிதஙகிய மாலையணிநதுள்ள வேலாயுதநதாஙகிய அவவரசா மீணடும் அவ்வனததையடைநது, இளம்பிறைச்சநதிரனையணிநத சடையையுடைய அமுதேசுவரரை அஞ்சலிசெயது சநநிதியில் சாஷடாஙகமாக வணஙகினர்கள், எ - று

சிறக்கு மெம்பிரா னினிதெழுந் தருடிருக்கோயிற்
புறப்ப டும்படு வனமெலா முதலறப் போக்கி
யறப்ப யன்றெரி மறைவலோரக் ககரமுற் றளித்தார்
துறக்கு மந்திர வீதியு நான்கெனத் தொகுத்தார்.

(இ - ள்.) மேம்பட்ட எமது சிவபெருமான் இனிதாக வெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலின் புறமபாயுள்ள பெருங்காடுகளையெல்லாம் வேரறக்களைந்து, புண்ணியப்பயனை நன்குணர்ந்த வேதங்களில் வல்லவர்களாகிய அந்தணர்களுக்கு வாசஞ்செய்தற்குரிய மாளிகைகள் சமைத்துக்கொடுத்தார்கள். தேவலோகம்போன்ற சிறப்புடைய நான்கு மாடவீதிகளும் ஏற்படுத்தினார்கள்.

திசைபி ளந்துவைத் தனையநீ டெருத்தெருத் தோறும்
வசையின் மாடமுஞ் சூளிகை மாளிகை பொருப்பு
மிசையு மன்றமுஞ் சதுக்கமு முறைமுறை யியற்றிக்
குசைநெ டும்பரி மன்னவர் குடிவளங் கொடுத்தார்.

(இ - ள்.) திசைகளைப்பிளந்து வைத்தாற்போன்ற நெடிய வீதிகடோறும், குற்றமில்லாத மாடங்களையும், சூளிகைகளையுடைய மாளிகைகளாகிய மலைகளையும், பொருத்தமாகிய சபைகளையும், நாற்றெருக்கூடு மிடங்களையும், வரிசைகளாகக்கட்டுவித்து, கடிவாளத்தோடு கூடிய பெரிய குதிரைகளையுடைய அவ்வரசர் நால்வரும், குடிகளுக்கு வேண்டிய பல செல்வங்களையும் கொடுத்தார்கள்.

வருண நான்குள சாதியும் வகுத்தனர் மற்றைப்
பெருவ ளந்தரு மரபினோ ரளவறப் பெருக்கிப்
பொருபெ ருங்கடங் கெடுப்பினும் புகலரி தெனலா
யருநெ டுங்கொடிக் கொமமைக்கு மிஞ்சியு மமைத்தார்.

(இ - ள்) நான்கு வருணங்களிலுள்ள சாதிகளைப்பிரித்தார்கள். மற்றுள்ள பெருஞ்சிறப்பமைந்த சாதியார்களையும் கணக்கற்றவர்களாகப்பெருகச்செய்து, அலைகளை மோதுகின்ற பெருங்கடல் பெருக்கெடுத்தாலும் உள்ளே பிரவேசிப்பதற்கு அருமையென்று சொல்லத்தக்கதாய், சிறப்பமைந்த நெடிய கொடிகளைத் தாங்கியுள்ள சிகரங்களைச் சூழ்ந்த மதில்களும் ஏற்படுத்தினார்கள். எ - று. ()

அன்ன மாநகாக் கருமபெருஞ் சாபநீத் தளித்த
மன்னு நான்மறைத் தேசிகன் றிருப்பெயர் வழங்கத்
துன்ன ருங்குரு தனமிய மெனும்பெயர் தொகுத்தார்
பொன்ன காப்படு காவெலா மரற்கெனப் புரிந்தார்.

(இ - ள்.) அத்தகைய நகரத்திற்கடுத்த அரும்பெருஞ்சாபத்தை நீக்கித் திருவருள் பாலித்து நிலைபெற்ற நான்கு வேதங்களையும் ஓதியுணர்ந்த அச்சிவாசாரியருடைய சிறந்த பெயரே உலகத்தில் வழங்கும்படி அடைதற்கரிய குருதன்மியமெனும் பெயர் தரித்தார்கள் தேவலோகத்திலுள்ள கற்பகச்சோலையைப் போன்ற சோலைகளையெல்லாம் சிவபெருமானுக்கென்று விட்டு விட்டார்கள்.

இரும ருப்புரு டிமிலுடைச் சேவுயர்த் திடுவோ
னருட ரத்திருக் கோபுர முதலிய யாவு
முருகு காதலி னமைத்தனன் றெமபிரார் குதவித்
தருபொ லன்கலன் யாவையு மளவறத் தந்தார்.

(இ - ள்.) இருகொம்புகளையும் உருண்ட முரிப்பையுமுடைய இடபக் கொடிதாங்கிய சிவபெருமான் திருவருள பாலிக்கும்படி, அழகிய கோபுரங்கள முதலியவற்றையெல்லாம், மனவுருக்கமுடைய பேரவாவோடு ஏற்படுத்தினவர்களாய்ச் சிவபெருமானுக்களித்து, கொடுக்கததக்க பொன்னாபரணங்களை யெல்லாம் கணக்கிறந்தனவாகக்கொடுத்தார்கள். எ - று. (௧௬௪)

மாரி முற்றுற வறப்பினும் வறப்புறாப் பெருநீ
ரேரி கீழ்ப்படு செந்நெலங் கழனிகள யாவும
வாரி வெவ்விட மறைகறைக் களத்தற்கு வழங்கிப்
பேரி யோங்கிய திருவிழா நடத்தினா பெயாந்தார.

(இ - ள்.) வருஷ முழுவதும் மழை பெய்யாமல உலகெங்கும் நீர் வற்றிய காலத்திலும் நீர் வற்றாத மிக்க நீரையுடைய ஏரியின் கீழுள்ள செந்நெல விளையும் அழகிய வயலகளனைத்தையும், திருப்பாற்கடலிற்றோன்றிய ஆலாலத்தை மறைத்திருக்கும் நீலகண்டராகிய சிவபெருமானுக்குத்தானங்கொடுத்து முரசவாத்திய முழங்கும் திருவிழா நடத்திச்சென்றாரகள. எ - று. (௧௬௫)

மல்கு மாணிதிப பெருக்கமு மகபபெறு வளனு
நலகு புண்ணிய நலனொடு சிறந்தனா கடுங்க
ணலகு சிந்தைய ராயுல களித்தன ரலாநதேன
பிலகு தாமவே லுலவரும் பேரர சுவந்தார.

(இ - ள) மிக மாட்சிமைப்பட்ட செலவ விருத்தியையும புத்திர பாக்கியத்தையுங்கொடுக்கின்ற சிவபுண்ணியத்தின பயனோடு மேம்பாடுடையவர்களாய, கொடுமை தவிர்ந்த சித்தமுடையவர்களாய, உலகத்தை அரசு செய்தவர்களாகிய மலாத்தேனசிந்தும மாலையணிந்த வேலைத்தாங்கிய அம்மன்னவர் நால்வரும் பெரிய அரசுரிமையைப் பண்டுபோலடைந்தாரகள. எ - று. (௧௬௬)

உவந்த காலையி லுல்வரு மோரதின மொருங்கே
பவந்தொ லைத்திடு பரிசெலா முறைமுறை பகராக்
கவாந்த சிந்தனை களிப்புற விருத்தலுங் கண்டா
ரிவாந்த நூற்றுரு வாசனுங் கெதிருற வெழுந்தார.

(இ - ள) இப்படி நாலவருங்களித்திருக்கையில, ஒரு நாள் நால்வரும் ஒன்று சேர்ந்து தங்கள் பாவங்களை நீக்கிக்கொண்ட தன்மையையெல்லாம் கிரமமாகச்சொல்லி, களிப்போடு கவரப்பட்ட மனமெய்தியிருக்கும்போது, விசேடமான நூல்களையெல்லாமறிந்த தூர்வாசமுனிவா அவவிடத்திலே எதிர் வரப்பார்த்து உடனே தமதிருக்கை விட்டெழுந்தார்கள். எ - று, (௧௬௭)

எழுந்த சிந்தையி னுவகையின் றிரைத்தலு மறைநூற
கொழுந்தை மாதவங் குடிபுகு மொருவனைக் குலத்தாள
விழுந்து கோமுடி மண்ணுற வணங்கினா வியந்தார
தொழுந்த கைத்தனி முனிவனு மாசிகள் சொன்னான்.

(இ - ள்) மேம்பட்ட மனதில் சந்தோஷமிகுந்து அதிகரிக்கவும், வேத சாத்திரங்களின் கொழுந்தினைப்போல்பவரும் பெருந்தவங்களெல்லாங் குடி புகுதற்கு இடம்போல்பவருமாகிய ஒப்பற்ற அம்முனிவரை, பாதங்களிற்

பணிந்து சிறந்த கிரீடம் பூமியிற் படியும்படி வணங்கியவர்களாய் அதிசயித்தார்கள். யாவரும் பணிதற்குரிய தன்மைவாய்ந்த ஒப்பற்ற அம்முனிவரும் ஆசீர்வதித்தனர். எ - று. (௬௪அ)

செய்ய வேண்டுறு கடன்முறை யாவையுஞ் செய்தா
ரையனைக் கொணர்ந்தவி ரொளிமடங்கலா சனத்து
நொயதி னுய்த்தனர் வரன்முறை தொழுதனர் நோக்கா
நெய்கொள வேறபடை மன்னர்வாய புதைத்தய னின்றார்.

(இ - ள்.) செய்யவேண்டிய முறைமையாகிய கடன்களையெல்லாஞ் செய்தார்கள். அம்முனிவரை யழைத்துவந்து விளக்கந்தங்கிய பிரகாசமுடைய சிங்காசனத்தின்மேல் அதிவிரைவில் எழுந்தருளச்செய்தார்கள். வரிசைப்படி மீண்டும் நமஸ்கரித்து அம்முனிவரை நோக்கிக்கொண்டு, நெய் பூசிய வேலாயுத மேந்திய அவ்வரசர்கள் வாயபொத்திக்கொண்டு பக்கலில் நின்றார்கள். எ - று.

அறபபெ ருநதனித் திகிரியு மலங்கல்வெண் குடையுஞ
சிறைப்பு டைதநென முனிவரன கேட்டலுஞ செழுநான்
மறைப்பெ ருமபொரு ளுணாநதவ வாழிய வாழி
பெறறக ருநதவத தலைவநின் பெருமையி னெனறார்.

(இ - ள்.) தரும வழியிற் செலுததுகினற ஒப்பற்ற ஆக்கினைசக்கரமும் மாலையணிநத வெணகொற்றக்குடையுமசிறப்பாயுள்ளனவாவென்று, தூர்வாச முனிவர் வினவியருளவும், செழுவிய நானகு வேதஙகளின சிறநத பொருளை யுணாநதவரே! ஒருவராலும் அடைதற்கரிய தவததின் தலைவரே! தேவரீர் மகிமையால் வாழ்நதிருககின்றன வாழ்நதிருககின்றன வெனறார்கள். எ - று.

எனவு ரைத்தனா பினனரு முனிவனை யிறைஞசி
மனவு மாமுடி மன்னவா நால்வரு மறையோய்
முனமி ழைத்திடு பவத்தொட ருணடுகொன முனிவன்
சினவ விற்பெருஞ சாபமவந தடுததது தெரியேம்.

(இ - ள்.) என்று கூறி, மீணடும் முனிவரை வணஙகி, இரத்தினஙகளிழைதத சிறநத கிரீடமணிநத அவ்வரசா நாலவரும், ஓ முனிவரே! விசுவாமிததிர முனிவா கோபமெய்தினதால் பெருஞ்சாபம வநது சமபவிததது. அப்படிச் சமபவிப்பதற்கு நாஙகள் முற்பிறப்பிற்செயத பாவததொடாச்சி யேதேனும் எணடோ? அறிகிலோம். எ - று. (௬௪௯)

மூன்று காலமுங் காலமீ றுறப்படு முடிவுந்
தோன்ற நின்றனை கோசிகன் சொற்பனை சாப
மேன்று நிற்பதற் கேதுவே தியமபுதி யென்று
ரான்ற மாதவத தலைவனு மளநததறிந துரைபபான்.

(இ - ள்.) திரிகாலவர்த்தமானஙகளும், காலஙகளெல்லாம் அந்தமாகின்ற முடிபும் தெரியும்படி விளஙகுபவரே! விசுவாமிததிரருடைய சொற்களால் நேர்நத சாபததை நாஙகள் பெற்றுக்கொணடிருப்பதற்குககாரணம் யாதோ? அதனைத் தேவரீர் திருவாய்மலர்நதருள்வீரென்று பிராாததிததாாகள். விசேடிததபெருநதவததையுடைய தூர்வாசமுனிவரும் ஆராய்நது தெளிநது திருவாய் மலாகினறார். எ - று. (௬௫௰)

அறுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தம்.

தேங்குதடந் திரைபுரட்டு நதியுடுக்கப் படியவன தேய மங்கட்
டோங்குமா தித்தபுர மெனபபடுவ தொருநகர முளதா லதண், பூங்க்
மலை சிறப்புடையக் நகர்வணிகர் பெருமரபிற் போந்தோ னீநது, வாங்
குபெரு நிதிசிறப்பி னுயர்நதவன்விச சுவவசுவோர் வணிக னுண்டால்.

(இ - ள்.) தேங்கிக்கொணடிருககும் பரந்த அலைகளைப்புரட்டுகின்ற ஆற்றி
னாற் சுலவப்பட்ட யவனமென்றொரு நாடுண்டு. அநநாட்டிலே வளமிருந்த
ஆதிததபுரமென்றொரு நகரமுண்டு. அழகுடன் குளிரசசியுற்று விளஙகும்
தாமரை மலரில் வசிககின்ற திருமகள் விலாசம்பொருநதிய அநநகரிலுள்ள
சிறநத வைசியாகுலததிற் பிறநதவனும் அநேகர்க்குககடன் கொடுததிவாஙகும்
மகதைசுவரியப்பெருககிற் சிறநதவனுமாக விச்சுவ வசுவெனும் பெயர் பெற்ற
ஒரு வணிகனிருநதான். எ - று. (கஙு)

அக்குலக்கோ வணிகனுழை யவதரித்துப் பிறந்தனிர்நீர் நால்வி
ரந்நாள், மிக்குயர்ந்த நிதியுமக்கு வேறளிப்பக் குலததொழிலால் விளங்
கா கினறீர், தொககபெருந திருநகரி னாதிததேச சுரநகடிமைத் தொ
ண்டு பூண்டோன், றக்கபெரு மறைக்குலததி னவதரிததோ னொருவ
னுள னுமமைச சார்நதான்.

(இ - ள்.) அவ்வைசிய குலத்தலைவனிடததில் நீங்கள் நால்வரும் கருவிற்
புகுநது (அவன் மனைவி வயிறறிலிருநது) பிறநதீாகள். அககாலததில் அப்பிதா
உஙகட்குத தனிததனி பெருநதிரவியஙகொடுக்க, அதனைககொண்டு உஙகள்
குலததொழிலாகிய வர்ததகத்திலே சிறநதிருநதீாகள். சிறநத லக்ஷ்மிகடாக்ஷம்
குடிகொணடிருநத அநநகரததில் வீற்றிருககும் ஆதிததேசுவரருககுத திருவடித
தொண்டு கடைப்பிடித்தவனும் தருநத பெருமையுடைய அநதணர் குலததிற்
பிறநதவனுமாயிருநத ஒருவன உஙகளை யடுததான. எ - று. (கஙச)

எம்பெருமான் பணிவிடைக்கென் றுமதிடத்து வருநதிநடந் திளை
ப்ப நீருஞ், செமபொனளிக் குதுமென்ன வாங்கவற்குத தரங்கொடுத
துச செபபா நின்றீ, ரமபொனளித திலிரொருநா ளுமதருகி னவணிர
ங்கி யழைபபக் கேளீா, வெமபிவெதும பினனவனை முகநோக்கீ ரவ
னழுது மீண்டா னன்றே.

(இ - ள்) எமது சிவபெருமான் திருப்பணிகட்காக உஙகளிடம் வருத்த
மெய்தி நடநது இளைக்கவும், நீஙகளும அத்திருப்பணிகளுச்கு உதவத்தக்க
திரவியஙகொடுககிறோமென்று அவவநதணனுககு உததரவு கொடுததுக்கொண்டு
வநதீாகள. அததிரவியததைககொடுததீரில்லை. ஓா நாள் அவவநதணன் உங்கட்
கருகே வநது மனவுருக்கததோடழைககவும், கேளாதிருநதீாகள். மனம் புழுஙகி
வருநதினன. அப்போதும் அவன் முகம் பாராதிருநதீர்கள். அதனாலே அவன்
புலம்பிககொணடு வருநதினன், எ - று. (கஙரு)

வீயாத பெருஞ்செல்வ நிதிப்பெருக்கி னமமைவிழி விடுத்து நோக்கா
ராயாத பேராசை தருமனனே யடங்குதியென் றடங்கானின்றான்[ணுட்
பாயாவெண் டிரைபுரட்டு நெடும்பரவைக் கலநடத்திப் படர்ந்தீர் பன்
போயாடு திரைக்கடலுட் கரைகாணீர் நெடுமெசகு புகுந்தீ ரன்றே.

(இ - ள்.) அழியாத மகதைசுவரியப் பெருக்கினால் நம்மைக்கண்டிறந்து பார்க்கமாட்டார்கள். ஆலோசியாத பேராசையைத்தரும் மனமே! நீ யடங்கக் கடவாயென்று தன்னுசையை யடக்கிக்கொண்டான். பாயந்துகொண்டிருக்கும் வெண்மையாகிய அலைகளைப்புரட்டி நிற்கும் பெரிய கடலிலே மரக்கலத்தைச் செலுத்திக்கொண்டு போனீர்கள். பல நாட்கள் அக்கடலவழியேபோய அலைக ளசையும் அக்கடலின் கரையைக்காணுதவர்களாய நீண்ட பள்ளத்திற புகுந்தீர் கள். எ - று. (௩௬௬)

போதற்கென் றயனடத்துந் திசைகாணீர் மழைநெடுநாட் பொழி
ந்த கங்கு, லூதைக்கொண் டெழுஞ்சுழலகாற றெடுத்தெற்றியக் கலன
கவிழ வொருங்கு மாண்டீர், மாதைப்பாங் கமைத்தபிரான் றிருப்பணி
க்கு நிதிதருது மெனற வாக்காற, கோதைப்பொன முடிவேந்தர் குல
த்துதித்தீர் கொட்டாநிதியங் கடலில் வீழ்த்தீர்.

(இ - ள்.) அதற்குமேலே, மரக்கலத்தைச்செலுத்துதற்குரிய திசையைக் காணுதவர்களானீர்கள். அநேக தினவரையில மழை பொழிந்தன. இராப் பொழுதில் குளிர்ச்சியாயத்தோன்றிய சுழலகாற்று அதிகமாய வீச, மரக்கலம் அப்பள்ளத்திற் கவிழ, நீங்கள் நால்வரும ஒன்றுக இறந்தீர்கள். உமாதேவிபாக ராகிய சிவபெருமான திருப்பணிக்குவேண்டிய திரவியங்கொடுப்போமென்று சொல்லிய வாக்கினால் மாலை சூடிய பொற்கிரீடமணிந்த அரசகுலத்திற் பிறந் தீர்கள். அத்திருப்பணிக்கு உதவி செய்யாத செல்வத்தைக்கடலிற் கொட்டி விட்டீர்கள். எ - று. (௩௬௭)

எந்தைபிரான் றிருத்தொண்டிற் குரியவனென் றெடுத்தழைப்பக்
கேளீ ராகிச, சிந்தைமயக் குற்றதனுற செவிடுபட்டீ ரவனமுகந் தெரிய
நோக்காது, தந்திலிரா தவிணிருகட் புலனிழந்தீ ரதுமுனைத் தன்மை
யிந்நா, ளந்திவண்ணற கியற்றுசிவ புண்ணியத்தாற சாபமொழிந்
தகற்றி னீரால.

(இ - ள்) எமது தந்தையாகிய சிவபெருமான் திருத்தொண்டு செய்த அவ்வந்தணன் உரத்த குரலோடு கூப்பிடவுங் கேளாதவர்களாய மனமயக்க மெய்தியபடியால் செவிடர்களானீர்கள். அவன் முகத்தைக்கண்ணெடுத்துப் பாராதிருந்தீர்களானபடியால இருவிழிகளின பார்வையுமிழந்தீர்கள். இது தான் உங்கள் ஜனமாந்தர சரிதை. இக்காலத்தில, செவ்வானம்போன்ற திருமேனியையுடைய சிவபெருமானுக்குச்செய்கின்ற சிவபுண்ணியத்தினால் சாபத்தைப்போக்கிக்கொண்டீர்கள். எ - று. (௩௬அ)

என்றுரைத்த திருவாச முனிமொழிகேட் டினிதுவந்து புளக மெய்தித்
தீதவித்த முனிவரற்கு வேண்டுறப்பூ சனைபுரியச் செல்லா நின்றான்[னிக்
பூதலமன னுயிர்புரந்தோர் நெடுங்காலம பிற்பட்டுப்போய்க் கயிலை மன
காதுமழுப் படைவிடையோன் பரிபுரச்சேவடிக்கமலங் கரந்தா ரன்றே.

(இ - ள்.) இப்படிக்கூறிய துர்வாசமுனிவர் சொற்களைக்கேட்டு இனிமையோடு மகிழ்வெய்தி புளகித்து, குற்றங்களொழிந்த அம்முனிவருக்குச் செய்ய வேண்டிய உபசாரங்களையெல்லாஞ் செய்ய, அவர் தமது ஆச்சிரமத்திற்கு எழுந்தருளினர். உலகத்திலுள்ள மன்னுயிர்களைத் தன்னுயிர்போலப்பாதுகாத்த அவ்வரசர்கள் பல காலங்கழிந்து சென்று திருக்கைலாயகிரியில் வீற்றிருந்து, கொல்லத்தக்க மழுவாயுதந்தாங்கிய இடபாரூடராகிய சிவபெருமானது சிலம்பணிந்த செந்தாமரை மலர்போன்ற திருவடிகளில் கலந்து வாழ்ந்தார்கள்.

தாதுலா மலர்தழீச சடைமுடியோன் புண்ணியத்தி னியன்ற
தன்மை, சூதமா முனிவனவர்க் கிவ்வண்ண மெடுத்துரைப்பத் துளக்க
மெய்தா, வாதிநா யகனசரிதை யினிதுணர்ந்தே மெனத்தெளிந்தா ரன்
னோ ரம்பொற், போதினன் முகற்குவமை தனிச்சான்ற முதல்வனின்
னும் புகலவ் தானுன.

(இ - ள்) மகரந்தந்தங்கிய கொன்றை மலரணிந்த சடையையுடைய சிவபெருமானது சிவபுண்ணியத்தினியல்பான தன்மையைச் சூதமகாமுனிவர் அந்நைமிசாரணிய முனிவர்களுக்கு விளக்கிச்சொல்லவும், அம்முனிவர்கள் எல்லோரும் உடல் நடுக்குற்று, முதல்வராகிய சிவபெருமான் சரிதையை இனிமையோடறிந்தோமென்று மனந்தெளிந்தார்கள் அழகிய பொற்றாமரை மலர்பீடத்தையுடைய பிரமனுக்கு ஒப்பிடத்தக்க சிறப்புற்ற சூதமுனிவர் மேலுங்கூறலாயினர். எ - று. (௧௬௦)

தருநான்கு பெருவளனும் பெறப்புரக்குந் திருநாடச் சம்பு நாட்டி
னொருவாத பேரழகு தரவருமா யாபுரத்திற் குவமை சொல்லிற்
கருகாத மணிச்சுடிகை நாகர்நாட டினுநிலத்துங் கடவுட் டாருப்
பெருவான நெடுமுகட்டு மெடுத்துரைக்கி னதற்குநிகர் பேச லாமோ.

(இ - ள்.) கற்பகதருவும் (அரிசந்தனம் சந்தானம் பாரிசாதம் மந்தாரமாகிய) நான்கு தருக்களும் பெற்றிருக்கும் வளங்களெல்லாம் தனபாலுள்ளார் பெறும்படி கொடுக்கும் சிறந்த நாடாகிய சம்பு நாட்டிலே, மாறாத மிகுந்த அழகுதர விளங்கும் மாயாபுரத்திற்கு ஒப்பு சொல்லவேண்டுமாயின், கருகிற மடையாத மாணிக்கம் பொருந்திய படத்தையுடைய நாகர் வசிக்கும் நாகலோகத்திலும் பூலோகத்திலும் கற்பகத்தருவுள்ள பெரிய ஆகாயத்தின் மேலிருக்கும் நெடிய உச்சியாகிய தேவலோகத்திலும் எடுத்துச்சொல்லுங்கால் அந்நகரிற்கு உவமை கூறுதலாகுமோ? எ - று. (௧௬௧)

ஊழிநாட் பெருமழையி னுவட்டெடுக்கும் பிரளயத்தா லுலகத்தோடிப்,
பாழிமா நகரிறக்கு மெனவனன்றே சுரும்பாற்றும் பசுந்து ழாயோ,
ஞழிசூழ் நிலமுழுது மிதனபொருட்டா லெடுத்துதாத தமைத்தா
னென்றாற், சூழுநீ ரகழுடுத்த நெடுமபுரிசை நகர்ச்சிறப்புச் சொல்ல
லாமே.

(இ - ள்.) மகாப்பிரளய காலத்திலே பொழியுத்தக்க பெரு மழையினு லுண்டாகும் வெள்ளமானது, உலகத்திற்பாய்ந்து வலிபெற்றுச் சிறந்த இந்நகர மழிந்து விடுமென்றல்லவா, வண்டுகள் பண்பாடுந் துளவமாலையணிந்த விஷ்ணு மூர்த்தி, கடல் சூழ்ந்த இந்நில வுலக முழுவதையும் இந்நகரிற்கென்றே யெடு த்துக்கொண்டு தன வயிற்றிலடக்கினுர் என்று சொல்வோமாயின், நீர் நிறைந்த அகழியாற் சூழப்பட்ட நெடிய மதில்களையுடைய அந்நகரின் சிறப்பைச் சொல்லமுடியுமோ? எ - று. (௧௬௨)

கொடியாடு நெடும்புரிசைக் கோபுரத்தி னெடுத்தமைத்த குடுமி யொற்றைச, சுடராழித் தேர்புரவிக் குரமிடறு மெனவெருவித் துள ங்கு வெய்யோ, னெடுவாயிற புழைநுழைந்து மீசசெலபபோய நிவந தனமே ருவுக்கொப் பென்று, லடலாட கப்பொருபபு நானகுளவா மெனிற்சிறிதொப பாகு மன்றே.

(இ - ள்.) கொடிகளசையும் நெடிய மதிலையுடைய கோபுரங்களில் உயர் வாய்ச்சமைந்துள்ள சிகரங்களில, பிரகாசிக்கின்ற ஒற்றைச்சக்கரமுடைய தனது தேரிற் பூட்டிய குதிரையின் காற குளம்பு இடறுமென்று பயந்து நடுங் கிய சூரியன், நெடிய அககோபுரவாயிலின் துவாரத்துட் புகுந்து அதனபின ஆகாயத்திற செலல, மேருமலையைப்போன றுயாந்திருக்கின்றனவென்று கூறு வோமாயின, அந்நான்கு கோபுரங்களுக்கும் வலலமையுடைய நானகு மேரு வென்னும் பொன்மலைகளிருக்குமானுல சிறிது ஒப்புதலாகும். எ - று. (௧௬௩)

ஈர்ந்தறுக்கப் படுபடிகச சுவரெழுபபி யிருமருங்கும் வீதி காட்டிச, சார்ந்தபுடை புடையெடுத்த தவளமா ளிகைவரிபபந் தடிககு நலலார, சோர்ந்தவரிப் பந்துதைந்து விண்முகட்டி னணவுதொறுஞ் சுவாகக மாத, ரார்ந்தவரி வளைக்கரந்தொட டடித்துறமீண் டிவாகரத்தி னயர்க்கு மன்றே.

(இ - ள்.) பிளந்து அறுக்கப்பட்ட பளிங்குககற்களாற் சுவாகளெழுப்பி இருபககலிலும வீதிகளமைத்து, அதைசசேர்ந்த பககலகளிலெலலாம ஏறபடுத் திய வெண்ணிறமாளிகைகளிலிருந்து பந்து விளையாடும் மாதாகள கையைவிட் டகனற நிறந்தங்கிய அபபந்துகள் பூமிமேல போநி ஆகாயத்திற கிளம்பும் பொழுதெல்லாம, சுவாககலோகத்திலுள்ள தெயவமங்கையா, நிறைந்துள்ள வரிகளையுடைய வளையலணிந்த கைகளால் பரிசித்து அடிகக, அங்கிருந்து திரும்பி இந்நிலவுலக மங்கையா கைகளில வந்து விழும். எ - று. (௧௬௪)

காரளகப் பணிபபடலைச சுமையெடுத்துக களங்குழையப் புளகம் பூத்த, வாரளவு முலைசசுமையின மருங்கனுங்கப புகுந்துபுனற் றுளைந்த மாதா, பேரொளிமா மணித்தொடையல கழித்தனாபோ யினாபிறழ் ந்த வெயிலால்வாளிட, டிருட்கங் குறபொழுதுங் குவிந்திலனின றல ர்ந்தனபூங் கமல மெலலாம.

(இ - ள்.) கரிய கூந்தலிலணிந்துள்ள குளிர்ந்த மலர்மாலையின் சுமையைத் தாங்குதலால் கழுத்தானது இளைக்கவும், புளகித்தல் மிகுந்து கச்சுபூட்டியகுசங்களின் பாரத்தினால் இடையானது வருந்தவும்போய நீரில் மூழ்கிய மாதர்கள், மிக்க காந்தியுடைய சிறந்த இரத்தின மாலைகளைக்கழற்றி யெறிந்துபோக, இம்மணிகள் ஒளிசெய்யுங்காந்தியால், பகைவர்கள் வாளாலறுக்கத்தக்க பேரிருண்மிகுந்த இரவிலும் அழகிய தாமரைமலர்களெல்லாம் இதழ்கள் குவியாது விரிந்திருந்தன. எ - று. (௧௬௫)

இழைத்தபசும் பொற்கட்டி னிடைக்குயிற்று மணவிடுத்திமை
க்குஞ் சோதி, தழைத்தெழவின் முகட்டணவுஞ் சாளரமா ளிகைமுகட்
டுத் தடவுங் கொண்மூக், குழைத்தநவ கிரணமெடுத் தாகாய மெழுதுகி
யதிறமொன்றுங் கோல, வுழைப்புரிசை நகரொழிய யோசனைசென்
றலர்ந்தம துருவங் காட்டா.

(இ - ள்.) பசும்பொன்னாலிழைத்த கட்டியிலே பதித்த நவமணிகள் பிரகாசிக்கும் ஒளியானது தழைத்து மேலே போங்க, ஆகாயமுகட்டினை யளாவிய சாளரங்களை யுடைய மாளிகைகளின் சிகரத்தினமேற் படிந்த மேகங்கள், ஒன்றுடன்கலந்த ஒன்பது காந்தியையும் பெற்று, ஆகாயத்தில் எழுதியதுபோலத் தோன்றும். அழகுக்கிருப்பிடமாகிய மதில் சூழ்ந்த அந்த நகரைக்கடந்து ஒரு யோசனைதூரத்திற் கப்பாலன்றி அம்மேகங்கள் தமது இயற்கை நிறங்காட்டவில்லை, எ - று. (௧௬௬)

கொய்யுளைய நெடும்புரவிக் குரவடிம்பு படமிதித்தங் கடக்கோ
ட்டு, மையன்மதக் களிறுமொற்றி யெடுத்திறைத்துவிண்ணளைந்து மய
ங்குந்தூளி, செயருடுமி நெடுமாடக் கொடிநுனைநின் றெடுத்திறைத்த
திவலை சிந்தப், பையவிழ்ந்து நிலம்படிந்து பசைந்துபரிக் குளம்பட்டதுள்
படுவ பின்னும்.

(இ - ள்.) கத்தரிக்கின்ற புறமயிரை யுடைய பெரிய குதிரைகளின் காற்குளம்புடைய ஓரங்கள் நிலத்திற் பதியும்படி மிதிக்கத்தக்க, மதம்பொழிகின்ற சுவடும் தந்தமுமுடைய மதமயக்கமுடைய யானைகள் எடுத்து வீசலால் ஆகாயவெளியில் ஓங்கிப்பறந்த தூசுகள், விளங்குகின்ற சிகரங்களோடு கூடிய பெரிய மாளிகைகளிற் கட்டியுள்ள கொடிகள் மேகங்களைக்கிழித்து எடுத்துவீசிய மழைத்துளிகள் சிந்துவதால், அந்தத்தூசுகளெல்லாம் மெல்லெனப் பூமியிற்படிந்து ஈரத்தாற் குழைந்து, மீண்டும் குதிரைகளின் குளம்பு மிதிப்பால் முன்போலவே மறுபடியும் அகக்குழைத்தல் தூசுகளாம். எ - று. (௧௬௭)

புதையுமிருட் படலைகிழித் தெழுந்தகதிருயநெடுங் குடபாற்போ
ந்த, ததையிருளிற் கொழுநரிடம் மேகலைநூ புரமலம்பத் தளிர்க்கை
நல்லா, ரிதயமெதிர் முன்னடப்பப் பின்னடப்பார் மகளிர்நெறுத் திட்
டபைம்பூண், கதிரொளிப்பா டகச்சிறுதா ளுறுத்தாது பரப்புதளிர்
கடுக்குமன்றே.

(இ - ள்.) உலகமுழுவதும் மூடிய இருட்படலத்தைக்கிழித்துக்கொண்டு உதிக்கின்ற சூரியன் நெடிய மேற்றிசை சேரவும், நிரம்பிய இருளிலே தங்கடங்கள் கணவர்பால் மேகலையும் பாதச்சிலம்பும் ஒலிக்கும்படி மாந்தளிர் போலுங்

கைகள் பொருந்திய மங்கையாமனமானது முற்படச்செல்ல, அதன் பின்னே தாங்கள் செல்வார்கள். அம்மாதர்கள் வெறுத்துக்கழற்றியெறிந்த பசிய ஆபரணங்களுடைய கிரணங்களாகிய சாந்தி அம்மங்கையருடையபாடகம் பூண்ட சிறு பாதங்களில் உறுத்தாதபடி பரப்பியசிறமமைந்த தளிர்களைபோன்றிருக்கும்.

பகையரச ருடற்பிளவு படுத்தடிக்கும் பணைக்கோட்டுப பருமயானைத், தகையழிமும மதசசேறு நெடும்புரவி வாயுமிழ்ந்து தாத நீரு, முகிணகையார் வெறுதநெறிமா லிகைச்சோர்ந்த நறுந்தேனு முழவுத்தோளா, ரிகலொளிமா பணிகுழம்பு மறுகுநிறைந் தியங்குநாகா லிழுக்கு மன்றே.

(இ - ள்) பகைமன்னருடலைப்பிளந்து அடிக்கும்படியான பருத்த தந்தங்களையுடைய போர்வை பூண்ட யானைகளின் குணத்தையகற்றும் மும்மதச்சேறும், பெரிய குதிரைகளின்வாயினின்று உமிழ்ந்து சிந்தும் நுரைகளும், முல்லையரும்பையொத்த பற்களையுடைய மங்கையர் வெறுத்து வீசிய மலர்மாலைகளினின்றொழுகிய மணந்தங்கிய தேனும், மத்தளம்போலும் தோள்களையுடைய ஆடவர்கள் வலிமையும் பிரகாசமுமமைந்த மார்பிலணிந்த கலவைச் சேறும் வீதிகடோறும் நிறைந்து நடப்பவர்களின் கால்களை வழுக்கும். எ - று. (௧)

தூங்குமதக் கலுழிநெடுவரைமுழக்கு நெடுங்குபுரவிச சிரிப்பு மன்ன, ரோங்கியபல் லியத்துவைப்பு மாடரங்கி னெழுமுழக்கி னொலிய நலமேலா, வீங்கியகின் னரக்கருவிப பாடலினோ டையுமறையோர்வேதகீதத, தேங்கிசையு மொருவழிக்கொண் டெழுகடலின் முழக்கொழிய வெழுந்து விம்மும்.

(இ - ள்.) சொரிந்துகொண்டிருக்கும் மதமாகிய கலங்கல் நீரையுடைய பெரியமலைபோலும் யானைகளின் கர்ச்சனையும், நெடுங்குதிரையாயுள்ள குதிரைகளின் கனைப்பும், மன்னவர் மாளிகைகளில் மிக்கொலிக்கும்பலவாத்தியங்களின் கோஷமும், நடனசாலையில் முழங்கும் மேககர்ச்சனைபோன்ற முழக்கும், அதிமேம்பாடுற்ற வீணையாகிய இசைக்கருவியாற் பாடுகின்ற பாட்டொலியும், வேதகீதத்தாலுண்டான மிக்க நாதமும் ஒன்றுகூடி, சத்தசமுத்திரங்களின் கோஷமும் அடங்கும்படி முழங்கிப்பெருகும் எ - று. (௧௭0)

ஷை வேறு.

அன்னமா நகர்க்கு வேந்த னலங்கலந் தடந்தோ ளேந்தி [ன்
மின்னுயிர்த் திமைக்கும் பைம்பூண் வெண்குடைத் தனிச்செங் கோலா
மன்னுயிர்க் குயிரே யனா னளிர்திரை யளாக மெல்லாந்
தன்னுடைத் திகிரி செல்ல நின்றசற் புத்தி யென்பான்.

(இ - ள்.) அத்தன்மைய பெரிய நகரத்திற்குமன்னனான மலர்மாலைதரித்த அழகிய விசாலித்த தோளுடையவனும், ஒளிவீசிவிளங்கும் பசும்பொனாபரணங்களும் சந்திரவட்டக்குடையும் ஒப்பற்ற செங்கோலுமுடையவனும், நிலைபெற்ற உயிர்கட் குயிரானவனும், குளிர்ந்த கடல் சூழ்ந்த உலகமுழுவதையும் தனது ஆக்கினைச்சக்கரமானது செல்ல வாழ்ந்திருந்தவனுமாகிய சற்புத்தியென்பவன். எ - று. (௧௭௧)

மற்றடம் புயத்து வேந்த னங்கவன் மனையின் மாட்சிப்
பொற்றொடி பயந்த மைந்த ரெண்மரப் புதல்வர் கோதை
பெற்றிடு புதல்வி மற்றை யொருத்தியப் பெருஞ்சீர் நோக்கிக்
கொற்றவன் மகிழ்ச்சி கூர வளர்ந்தனர் குவவுத் தோளார்.

(இ - ள்) மற்போர் புரியும் பரந்ததோளையுடைய மன்னனாகிய அச்சற்புத்தியின் இல்லறத்திற்குரிய மனைவிபெற்ற புதல்வர்கள் எண்மர். புதியமலர்மாலை சூட்டிய அழகிய கூந்தலையுடைய அம்மனைவி அதன்பின்னர் பெற்ற புத்திரி யொருத்தி. இத்தன்மையா பெருஞ்சிறப்பினைக் கண்டு மன்னன் மனமகிழும்படி திரண்டதோள்களையுடைய அப்புதல்வர் வளர்ந்துவந்தனர். எ - று.

வீமனென் றெவர்க்கு முன்றோற் குமரற் கன்னை வெறிவண் டாடுந்
தாமவேற் குமரர்க் கின்னே தனித்தனி நாமஞ் சொற்றான்
பூமருங் குழற்கு மாரி யெனும்பெயர் புகன்றான் வெற்றி
நாமவே லரசர் கோமா னுயிர்புரந் தளிக்கு நாளில்.

(இ - ள்) அச்சத்தைப் பகைஞர்க்குண்டுசெய்யும் வெற்றிதங்கிய வேற்படையேந்திய இராசராசனாகிய சற்புத்தி, புத்திரர்களில் யாவர்க்கும் மூத்தவனுக்கு வீமனென்று பெயரிட்டான். தேன்பருகி யுங்கிய வண்டுகளுழலும் மலர்மாலை தரித்த ஏனையபுதல்வர்களுக்கும் இப்படியே வெவ்வேறு பெயரிட்டான். அழகமைந்த கூந்தலையுடைய புதல்விக்கு மாரியென்று பெயரிட்டான். சீவர்களைப் பரிபாலித்துவருநாட்களில் எ - று. (௧௭௩)

பொருகழற் குமரர் யாரு மெதிர்பொருந் தெவ்வர் சேர்ந்த
செருமுகச் சீய மாரோ சிறுமொழுங் குதலைச் செவ்வாய்
மருமலர்க் குழலி யீசன் புண்ணிய மரபின் றோங்கி
யுருகுபே ரன்பி னின்றா ளவணிலை யுரைக்க லாமே.

(இ - ள்.) ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த அப்புதல்வரெண்மரும், எதிர்த்துப் போர்செய்யத்தக்க பகைஞர்கள் துதிக்கப் போர்க்களத்தில் வெற்றிதங்கிய ஆண்சிங்கம் போலாயினர். சிறிய மழலைச்சொற்களும் செம்மைநிறம் தங்கிய வாயும் மணங்கமழும் மலர்களணிந்த கூந்தலுமுடைய அப்புதல்வி, சிவபுண்ணியத்தன்மையிற் சிறந்தவளாய் மனவுருக்கம் பொருந்திய பேரன்புநிலையிலிருந்தனள். அப்புதல்வியின் தன்மையைச் சொல்ல முடியுமோ? எ - று. (௧௭௪)

ஈங்கிவ ரியலு நாளி லிகலொழித் திமைக்கும் வேலோன்
பாங்குநீ ருடுத்த வைய மொன்பதிற் பகுத்துப் பைம்பொற்
பூங்கழற் குமரர்க் கெட்டும் பரிந்தனன் பொறிவண் டார்ந்
தேங்குழற் கொருபங் கீந்து தவத்தின்மேற் செல்லா நின்றான்.

(இ - ள்.) இவர்கள் இங்ஙனம் இருக்குங்காலத்தில், பகைவரையழித்து ஒளிவிடுவேலேந்திய சற்புத்தி, நீர்வளந்தங்கிய தன்னரசாட்சியிலுள்ள பூமியை ஒன்பது தேசங்களாகப்பிரித்து, பசும் பொன்னாலாகிய அழகியவீரக்கழலணிந்த புதல்வரெண்மருக்கும் எட்டுத்தேயங்களைக் கொடுத்து, புள்ளிகளமைந்தவண்டுகளொலிக்கும் மணந்தங்கிய கூந்தலையுடைய புதல்விக்கு மற்றொருதேயத்தைக் கொடுத்து, தான் தவச்செய்யலை மேற்கொண்டு போயினன். எ - று. (௧௭௫)

செயற்கருந தவத்து முற்றி யன்னவன் கயிலை சென்றான்
கயறகட லுலக மெல்லா மெண்மருங் காத்தா ரநத
முயற்கறை யொழிநத திஙகண் முகத்திரு ளாலம் பூத்த
புயறபடு களத்தற கேயந்த புண்ணிய மரபி னின்றாள்.

(இ - ள்.) செய்தற்கரிய தவச்செயலில் மேம்பட்டு அவ்வரசன் திருககை லாய கிரியையடைநதனன. மீன்களுலாவுங்கடல் சூழ்நத உலகமுழுவதையும் அவன் புதல்வரெணமரும் அரசுசெயதாாகள. முயறகளஙக மகன்ற பூரணசந திரன்போற் பொலிவாகிய முகததையுடைய அப்புதல்விமேக நிறநதஙகிய கண டத்தை யுடையவராகிய சிவபெருமானுககுரிய சிவபுணணிய நெறியிலொழுகி னாள். எ - று. (௧௭௬)

தவளவெண் ணீற்று வேடந் தாங்கின ளாகித் திங்க
ளிவர்தருஞ சடிலி நாமத் திரங்கிய வுளந்த ளாகிச
சிவபெரும புணணி யததுச செய்வன செய்து நின்றா
ளுவருடை நெடு நீராடை யுலகெலாந தொழுதற கொத்தாள்.

(இ - ள் ) வெண்ணிறநதஙகிய திருநீற்றுககோலம் பூணடவளாகி, சநதிர னுலாவுஞ் சடைமுடியையுடைய சிவபெருமானுடைய திருநாமஙகளைக கேட் கும்போதெலலாம் உருகுகின்ற மனமுடையவளாய, பெருமைதஙகிய சிவபுண ணியஙகளிலே தனககுச்செயவதற் கியன்றனவற்றைச செய்துவநதாள். உவா நீர் நிரம்பிய கடலை யாடையாகவுடைய உலகமுழுவதும் வணஙகுவதறகுததகக வளானாள். எ - று. (௧௭௭)

மின்னென நுடங்க நின்ற மென்மருங் கியற்கை நோக்கிப்
பன்னருந தவதத ரேழு முனிவரும பரிவி னெய்தி
யன்னைநின் னறததின வாழ்க்கை யழகிதென் றறைந்தார் கஞசம்
பொன்னுயிரத தனையாள் போறறும வரன்முறை போறறி நின்றாள்.

(இ - ள்.) மின்னல்போல அசைதலையுடைய மெல்லிய இடையமைந்த அவ்விராசகுமாரியின தன்மையைப்பாாதது, சொல்லுதற்கரிய தவததினர்க ளாகிய சப்தருஷிகளும அனபோடுவநது, தாயே! நீ செயயுஞ் சிவபுண்ணியத தின்வாழ்க்கையானது பேரழகுடைத்தாகிய தென்று சொன்னார்கள். தாமரை யும பொன்னும் உயிர்பெற்றுறபோன்றவளாகிய அவ்விராசகுமாரி, பெரியோ ரையுபசரிககும் முறைப்படி உபசரிதது நேரில நின்றனள். எ - று.

"கஞ்சம் பொன்னுயிர்த்தனையாள" என்றது அவ்வரசகுமாரியின் தேகம் பொன்னும் அவளவயவஙகள தாமரைமலாகளும போன்றனவென்றபடி. அல் லது சிவபகதனுகிய அவள பிதா சற்புததிவெணகலம் போன்றவனும் அவனாற் பெறப்பட்டமாரி அவனபக்தியினும் மேம்படலின,பொன்போன்றவளு மெனக் கூறினுரெனினும் அமையும். சண்டுக்கஞ்சம்-வெண்கலம். (௧௭அ)

அணங்குரு விரப்ப வேண்டு மணங்களுய் நின்ற நின்னாற்
பணஙகிள ரரவ வேணிப் பண்ணவற கெனலாய் நின்ற

குணந்தரு புண்ணி யத்தா லுலகுகை கூப்ப நின்றாய்
மணங்கிள ரலங்க லோதி நின்னொக்கு மகளிர் யாரே.

(இ - ள்) தெய்வப்பெண்களும் அழகினையாசிக்கவேண்டிய பேரழகுவாய்ந்ததாயே! எங்கட்கு நேரே நிற்கின்ற நின்னால், படங்கள் பொருந்திய பாம்புகளமைந்த சடையையுடைய சிவபெருமானுக்காக நீ நடத்திவரும் மேம்பாடு தங்கிய சிவபுண்ணியங்களால் உலகமுழுவதுங் கைகுவிக்கும்படி வாழ்ந்தாய். மணமிகுந்தமலர்மாலை சூடிய கூந்தலையுடையாளே! உன்னைப்போலும் மங்கையர்யாவருளர்? ஒருவருமிலர். எ - று. (கஎகூ)

என்றலு மெதிர்ந்து நின்ற முனிவர ரெழுவர் தம்பா
லொன்றிய வுளத்தி னன்பு மீக்கொள வுருகா நின்றாள்
பொன்றவழ் சடில முந்நூன் முனிவிர்காள் புகலிற் பேதை
யின்றெனக் கெளிய வன்றே புண்ணியத் தியற்கை யென்னா.

(இ - ள்) என்று சொல்லவும், நேரில் வந்திருக்கும் சப்தமுனிவர்களிடத்தில் மனத்தின்கட் பொருந்திய பேரன்பானது மென்மேலும் அதிகரிக்க, பொன்போலப் பிரகாசிக்குஞ்சடையையும் உபவீதத்தையுமுடையமுனிவர்களே! சொல்லுமிடத்து, பேதையாகிய அடியாளுக்குச் சிவபுண்ணியத்தின் தன்மைகள் இப்பொழுது அறிதற்கெளிதன்று. (அவற்றை யுணர்த்தவேண்டுமென்று) மனமுருகிநேரே நின்றனள். எ - று. (கஅ0)

அலங்கலே டவிழ்ந்த வோதி யுமையிடத் தமைத்த வைய
னலங்கிளர் புண்ணி யத்தின் பெருமித நவையிற் றீரப்
புலம்பட வுணர்ந்தார் மேலோ ரென்றநீர் புகல்வ தெல்லா
மிலங்குறக் கேட்ட லுண்டே லியம்புதி ரெளியற் கென்றாள்.

(இ - ள்.) இதழ்கள் விரிந்த மலர்மாலைசூடிய கூந்தலையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலமைத்திய சிவபெருமானுக்குரியதாகிய நன்மைகள் மிக்க சிவபுண்ணியத்தின் பெருமைகளையெல்லாம், குற்றங்களறத்தெளிவாகத் தெரிந்தவர்கள் பெரியோர்களென்று நீங்கள் கூறுவது முற்றும் விளங்கும்படி முன்னரே அடியாள் கேள்விப்பட்டதுண்டு. ஆதலின், சிவபுண்ணியப்பெருமையாகிய இதனை அடியாளுக்குத் திருவாய்மலரவேண்டுமென்று கேட்டனள்.

கேட்டருண் முனிவ ராருங் கிளர்முடிச் சடிலஞ் சாய்த்தார்
வாட்டடங் கண்ணி தன்பாற் கோதமன் வகுப்ப தானான்
றேட்டவி ழலங்க லோதி சொல்வன கேட்டி யென்றான்
பூட்டுறு கற்பி னின்று தொழுதுவாய் புதைத்து நின்றாள்.

(இ - ள்.) அவ்வார்த்தையைக் கேட்டருளிய எல்லாமுனிவர்களும் பிரகாசிக்கின்ற தமது சடைமுடியை யசைத்தார்கள். அப்பொழுது ஒளிபொருந்திய பரந்தவிழிகளையுடைய அவ்விராசகுமாரியிடத்தில் கோதமமுனிவர் சொல்லுகின்றார். இதழ்களலர்ந்த கூந்தலையுடையாளே! யான் சொல்வனவற்றைக் கேட்பாயாகவென்றனர். கற்பின்காவலாற் பிணிக்கப்பட்ட மாரியெனபாள் வணங்கி வாய்மூடி நின்றாள். எ - று. (கஅஉ)

பழனநீர் வேலி சூழும் பாஞ்சால மென்னு நாட்டிற்
றழனிரை ரிஞ்சி சுற்றுஞ் சோபன நகரத் துள்ளான்
மழலையின் மறைகற் றோது மாதவன் மறையோன் பெற்றா
னிழைபொரு திதலைக் கொங்கைச் சுந்தரி யென்பா டனனை.

(இ - ள்.) வயல்களமைந்த நீர்வேலி சூழ்ந்த பாஞ்சாலமென்னும் தேயத்திலே ஒலிக்கின்ற நீர் நிரம்பிய அகழியாற் சூழப்பட்ட சோபனமென்னும்பெயருடைய நகரத்திலுள்ளவனும், குதலைச்சொல்லையுடைய இளம்பருவத்திலேயே வேதங்களை யோதியுணர்ந்த பெருந்தவனுமாகிய ஓரந்தணன், ஆபரணங்களைப் போன்ற தேமல்படர்ந்துள்ள குசங்களை யுடைய சுந்தரியென்னும்பெயருடைய ஒருகுமாரத்தியைப் பெற்றான். எ - று. (௧௮௩)

புகன்மறை முழுது மோதுங் கரீரமா புரத்தி னுள்ளோ
னகையுறு குணத்தின் மிக்க புட்கர னவ்வி யுண்க
ணிகலிளங் கொங்கை யாளை மணந்தன னிருந்தா னந்நாட்
டகையறு காம வேட்கை மிக்கெழச் சரியா நின்றாள்.

(இ - ள்.) எல்லோராலும் புகழ்ந்தோதப்படும் வேதங்கள் முழுவதையும் சொல்லுஞ் சிறந்த கரீரபுரத்திலுள்ளவனாகிய இன்பந்தங்கிய சற்குணத்தினை மேம்பட்ட புட்கரனென்பவன், மானையொத்த பார்வையமைந்த மைதீட்டிய விழிகளையும் பகைசெய்யும் இளந்தனங்களையும் பெற்ற அச்சுந்தரியை விவாகஞ்செய்துகொண்டு வாழ்ந்திருந்தான் அச்சுந்தரி தகுதியற்றகாமவிருப்பம் அதிகரிக்கச்சஞ்சரித்துக்கொண்டிருந்தாள். எ - று. (௧௮௪)

அயலொரு மனையி னுள்ள வேதிய னழிந்த சிந்தை
மயலுறு மனத்தன் காம வேட்கைய னவனை வவ்விக்
கயல்பொருங் கண்ணி கூடப் புணர்ந்தனள் கணவன் கண்டான்
றயலவரு கயிற்றாற் கட்டி யடித்தன றுயரம் பாரான்.

(இ - ள்) சேற்கெண்டைபோலும் விழிகளையுடைய அம்மங்கை, தன்னயல் வீட்டிலுள்ள தானெண்ணமும் மயங்கிய மனமுமுடையவனும் காமவிச்சையுடையவனுமாகிய ஓரந்தணனைக் களவுத்தனமையுடையவளாய்ச் சேர்ந்து சுகித்தாள். அத் தீச்செயலை அவள் கணவன் பார்த்து அவளையதுந் துயரத்தைப்பாராதவனாய் அசைகின்றகயிற்றினால் கட்டியடித்தான். எ - று. ()

அதுமனத் தடைத்துப் பன்னாள் வைகின ளவனை யோர்நாட்
கதுமென வாலந் தீற்றிக் கோறலுங் கயிறு நீத்து
விதவையாய்க் களவிற் புல்லு மவனையும் விடுத்தா ளல்லள்
வதிதரு கருப்ப மெல்லாஞ் சிதைத்தனண் மருந்து மாந்தி.

(இ - ள்.) அவள் அதைமனதில் வைத்துக்கொண்டு பலகாலம் வசித்திருந்தாள். இராத்தியில் தன்கணவனை விஷமூட்டிக் கொன்றுவிடவும், உடனே மாங்கலிய சூத்திரமிழந்து விதவையாகியும், களவுப்புணர்ச்சி செய்யும் அச்சோரபுருஷனை விட்டவளல்லள். அதனால் உண்டாகிய கர்ப்பங்களையெல்லாம் மருந்துண்டு அழித்துவந்தாள். எ - று. (௧௮௬)

அளவறு கருப்ப மங்க ளழித்தன ளழியா தூற்று
விளைதரு கருப்ப மொன்றான் வீங்கிய வுதர நோக்கி
வளைதரு சுற்றத் தாளரோர் கழிப்பமா நகர நீத்துத்
தளிரிய னடந்து வேறோர் நாட்டகஞ் சாரந் துற்றாள்.

(இ - ள்.) கணக்கில்லாத கர்ப்பங்களை அப்படி யழித்தனள். அவள்புசித்த ஔஷதத்தினால் அழியாதிருந்து வளர்ச்சியெய்தும் ஒருகர்ப்பத்தினாற் பெருத்திருக்கும் வயிற்றைக்கண்டு, சூழ்ந்துள்ள உறவின்முறையினராயுள்ளவர்கள் அவளை நீக்கிவிடவும் பெரியநகரத்தைநீக்கி, மாந்தளிர்போலும் சாயலையுடைய அச்சுந்தரியென்பவள் வேறொரு நாட்டிற்குப்போய்ச் சேர்ந்தனள். எ - று.

அந்நக ரிருந்து பெற்ற மதலையை யால மூட்டி
மன்னுயி ரழித்து வேறோர் மறையவற் புணர்ந்து வைகி
யின்னலங் கொடுக்கு நாளி லிருநிதிப் பெருக்க நோக்கிப்
புன்னிலை நஞ்சிட் டன்னா னிதிகவர்ந் தாவி போக்கி.

(இ - ள்) அப்படிவந்து சேர்ந்தநகரத்திலிருந்து பத்துமாதமுங் கழித்துப் பெற்ற குழந்தையை விஷமூட்டி யுயிரொழித்து, அங்குள்ளவேறொரு வேதியனைக் கூடிவாழ்ந்து அவனுக்குச்சுகமளித்து வருகையில் அவன்பாலுள்ள பெருந்திரவியப் பெருக்கைப்பார்த்து, கொடுமைத் தன்மைபொருந்திய விஷப்பிரயோகஞ்செய்து அவனுயிரையும் அகற்றி அவன் திரவியங்களையும் அபகரித்துக் கொண்டு. எ - று. (௧௮௮)

மற்றொரு மறையோன் றன்னை மாநிதி யீட்ட நோக்கிப்
பற்றின ளவனை யந்தப் பரிசினாற் றோற லுற்று
லிற்றில தவன தாவி யொப்பக லிவனைக் கொண்டு
பொற்றரையங் கானம் புக்காள் புணர்ந்தனள் மயங்கிப் புல்லி.

(இ - ள்) வேறோர் வேதியனை அவன்பால் பெருந்திரவியஞ் சேர்ந்திருப்பது கண்டு சிநேகங்கொண்டாள். அவ்வந்தணனையும் அப்படியே விஷங்கொடுத்துக்கொல்லத்தொடங்கினாள். அவள் கொடுத்த விஷத்தால் அவ்வந்தணனுயிர் அகலாதிருந்தது. ஒருநாள் இவ்வந்தணனை யழைத்துச்சென்று மலைகளையுடைய அழகிய காட்டிற்புகுந்து, காமத்தால் மயக்க மதிகரித்தவள்போல வஞ்சகமாகத் தழுவிக்கலந்தாள். எ - று. (௧௮௯)

அரிநிழற் படப்பை வாய்ந்த புன்மண லகவை துஞ்ச
வெரிதரு நெஞ்சி னோங்கி யோர்சிலை யேந்திச் சென்னி
நெரிதர வீழ்த்துக் கொன்று நீணிதி கவர்ந்து கொண்டாள்
விரிதரு கவிகை வேந்த னுணர்ந்தெரி விழித்து நோக்கி.

(இ - ள்.) அடர்ந்த நிழலுள்ள பசுக்கொட்டிலிலே பரவியிருந்த சிறுமணலின்மீது அவன் நித்திரைசெய்கையில், அச்சுந்தரியானவள் கோபங்கொண்ட மனத்தோடு ஓர் கல்லை யுயரவாகத்தூக்கி, அவ்வந்தணன் தலையானது உடை-

படும்படிபோட்டு அவனுயிரையொழித்து, அவனுடைய பெரும்பொருளை யபகரித்துக்கொண்டாள். நிழலைப்பரப்பும் வெண்கொற்றக் குடையையுடைய அரசன் இச்செயலையுணர்ந்து, கண்களில் தீப்பொறி சிந்தநோக்கி. எ - று.

அனையவ டன்னைப் பற்றிக் கொணர்கெனக் கொணர்ந்தா ரந்தப்
புனையிழை முலையு மூக்கும் போக்குதி ரென்னப் போக்க
வினையிருந் துடற்றுங் கைகா லற்றவ னோடு மேவி
நனைமது நுகர்ந்து தின்னாப் புலவெலா நயந்து தின்றாள்.

(இ - ள்.) அச்சுந்தரியென்பாளைப்பிடித்து வாருங்களென்று கட்டளையிட ஏவலாளர் அங்ஙனமே கொண்டுவந்தார்கள். அலங்காரமுடைய ஆபரணமணிந்த அவள் தனங்களையும் நாசியையும் குறைப்பீர்களென்க கட்டளையிட, தண்டலாளர் அங்ஙனமே அறுத்தமாத்திரத்தில், தீவினையிருந்து வருத்திய படியால் இருகைகளும் இரு கால்களுமிழந்த ஒருவனோடு கூடி, குளிர்ச்சிதங்கிய கள்ளைக்குடித்து அதுகாறுந்தின்னாத புலால்வகைகளையெல்லாம் ஆசையோடு புசித்தாள். எ - று. (௧௯௧)

ஒருகர மொருகா னாசியி ழந்தவ னொருவன் றன்னை
மருவின ளவளாற் செய்யாப் பாதக மில்லை மண்ணி
லிருவரு நடக்கு நாளிற் றம்மிலோ ரிகலுண் டாகக்
குருதிநீத் தறுத்த கையாற் குத்தினா னவளு மாண்டாள்.

(இ - ள்.) அதன் பின்னர், ஒரு கையும் ஒரு காலும் மூக்குமிழந்திருக்கும் ஒருவனைக்கூடியிருந்தாள். இப்பூமியில் அவளாற் செய்யப்படாத பாவங்களே யில்லை. இப்படி இவர்களிருவரும் கூடியிருக்கையில், இவ்விருவர்க்கும் ஒரு பகைமையுண்டாகவும், அவன் தன்னுதிரம் நீங்கி யறுக்கப்பட்ட கையினால் அவளைக்குத்தினான். அச்சுந்தரியும் அதனால் உடனே உயிர் துறந்தாள். எ - று.

பாதகி யிறந்த பின்னர் மறலிதன் பணியாற் றென்பாற்
றூதர்விட் டெறியும் பாசந் தொருத்துறக் கழுத்திட் டீர்த்துத்
தீதுறு நிரயத் திட்டார் சிவகணத் தலைவர் சீறி
மாதரன் னவளைக் கொண்டு மானமுய்த் தகன்றா மன்னோ.

(இ - ள்) அந்தப்பாதகி மரித்தபின்னர், தென்றிசையிலுள்ள இயமனுடைய கட்டளையால் தூதுவர்கள் எடுத்தெறிகின்ற பாசக்கயிற்றைக் கூட்டமாய்ச் சேரும்படி அவள் கழுத்தில் மாட்டி இழுத்துச்சென்று கொடுமைநிறைந்த நரகத்திற் போட்டார்கள். உடனே சிவகணத்தலைவர்கள் அத்தூதுவர்களை வெகுண்டு, அழகுள்ள அவளை விமானத்தின்மீ தேற்றிக்கொண்டு செலுத்திச் சென்றார்கள். எ - று. (௧௯௩)

தொடர்ந்தனர் மறலி தென்பாற் றூதரன் னவரை யெல்லாங்
கடந்தன ரிவளைக்கொண்டு கயிலையங் கிரியிற் புக்கார்
படர்ந்தெழு சடில மோலிப் பரன்றிரு முன்ன ராக்க
மடந்தைபார் வதிக்குத் தோழி யாமென வதிந்தா ளன்றே.

(இ - ள்.) தென்றிசையிலுள்ள இயம தூதர்கள் அச்சிவகணத்தலைவரை விடாது பின்றொடர்ந்தார்கள், அச்சிவகணத்தலைவர்கள் அத்தூதுவர்களையெல்லாங் கடந்து இவளை யழைத்துச்சென்று திருக்கைலாயகிரியையடைந்தார்கள். பரவியோங்கிய சடைமுடியையுடைய சிவபெருமான் திருச்சந்நிதானத்தில் விடவும், அச்சுந்தரியானவள் பார்வதிதேவியாருக்குத்தோழியென்று சொல்லும்படி வசித்திருந்தாள். எ - று. (௧௧௪)

தென்புலத் தலைவன் றூதர் சென்றனர் சிவக ணத்தோ
ரன்பறக் கடிந்த வாறு புகன்றன ரதுகா லத்து
முன்புறச் சித்திர குத்தற கொணாகென மொழிய வந்தா
னின்கணக் களவாற செய்த புண்ணிய நிகழ்த்தி யென்றான்.

(இ - ள்.) தென்றிசைத்தலைவனாகிய இயமனது தூதுவர்கள்போய், சிவகணத்தலைவர்கள் அன்பற்றவர்களாயத் தங்களைக்கோபித்த வகையைத்தெரிவித்தார்கள். அத்தருணத்தில சித்திரகுத்தனை முன்னே வரும்படி அழைத்துக்கொண்டு வாருங்களென்று கட்டளையிடவும், அவனும் உடனே வந்தான். இயமன் அச்சித்திரகுத்தனைப்பார்த்து உன கணக்கின்படி இச்சுந்தரி செய்த புண்ணியத்தைப் புகலகவென்றனன். எ - று. (௧௧௫)

வெய்துறு பாவ மெல்லா மொருவழிக் கொண்ட மேனி
யெய்துறு மிவளாற செய்த தருமமொன றிலலை யென்றான
பெய்கழற றரும ஞோரா விருந்தன னிருந்த பின்னா
மொய்தரு சடில மோலி நாரத முனிவன சென்றான.

(இ - ள்) கொடுமையாகிய பாவங்களெல்லாம ஒரே வடிவாகவந்த தேக முடையவளாகிய இவளாற செய்யப்பட்ட புண்ணியம ஒன்றுமே கிடையாதென்றனன். வீரகணடாமணிதரித்த இயமன ஆலோசித்துக்கொண்டிருந்தான. அங்ஙனமிருந்த பின்னா, நெருங்கியுள்ள சடைமுடியையுடைய நாரதமுனிவா அவ்விடத்திற்கு எழுந்தருளினா. எ - று. (௧௧௬)

சென்றவற் கெதிர்ந்து மற்றைத் தென்புலக் கிழவ னெய்தி
யன்றவற் கென்ன வேண்டு மருச்சனை புரிந்தா னைய
வின்றிவ ணடைந்த தென்னை யென்றலு மிரட்டை மேருக்
குன்றினு முயர்தோ ளாயோ ரதிசயங் கொண்டு புக்கேன்.

(இ - ள்.) ஆங்கடைந்த நாரதமுனிவரை இயமன் எதிர்கொண்டழைத்து வந்து, அன்று அம்முனிவருக்குச்செய்யவேண்டிய உபசாரங்களைச்செய்தவனாய் ஐயனே! தேவரீர் இன்று இவ்விடத்திற்கெழுந்தருளிய காரணம் யாதென்று வினவவும், இரண்டு மேருமலைகளைக்காட்டிலும் உயர்வாகி விளங்குந்தோள்களையுடையவனே! ஓரதிசயங்கேட்டுக்கொண்டு வந்தேன். எ - று. (௧௧௭)

அதிசய மென்கொ லைய வருடியென் றறைந்தா னந்த
முதியமா தவனுந் தென்பான முதலவனுக் குரைக்கு முன்னைச்
சதுர்மறைக் குலத்தி னுள்ளா ளொருத்தியைத் தருண வேணி
மதிமுடி யவன்பா லுய்த்து வந்துறை கணத்தர் சொல்வார்.

(இ - ள்) அவ்வதிசயம் யாது? ஐயனே! அதனைத்திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான் சிறந்த பெருந்தவமுடைய அந்நாரதமுனி வரும் தென்றிசைக்கிறைவனாகிய இயமனுக்குக்கூறுகிறார். பழமையாகிய நான்கு வேதங்கட்குரிய அந்தணர் குலத்திற்பிறந்தவளாகிய வொருத்தியை, பிறைச்சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானிடத்தில் விட்டு அங்கு வந்திருக்கும் சிவகணங்கள் சொல்லுவார்கள். எ - று. (௧௯௮)

நெடுநிலத் திவளா லுள்ள பாதக நிகழ்த்திற றெண்ணிற்
படுகடன் மணலை யெண்ணி னெண்ணுறு மென்றார் பன்னாட்
டொடுசன னத்தி னுற்ற நல்வினைத் தொடர்ச்சி தன்னால்
விடுசுடர்க் கயிலை பெற்றா ளென்றனர் விடுத்துச் சொல்வார்.

(இ - ள்.) நெடிய நிலவுலகத்தில் இவளாற் செய்யப்பட்டிருக்கும் பாவங்களைச்சொன்னால், தெளிந்த நீரையுடைய கடலிலுள்ள மணல்களையாவது எண்ணப்புகுந்தால் எண்ணி முடிக்கலாமென்றார்கள். அநேக காலங்களாகத்தொடர்ந்து வரும் இப்பிறப்பிற்செய்த ஒரு நல்வினைச்சம்பந்தத்தால் ஒளி வீசும் இக்கைலாயகிரியையடையப்பெற்றாளென்று விரித்துச்சொல்வார்கள், எ - று. ()

வேதகோத் திரத்தி னுள்ள வேதிய னொருவன் றன்னைத்
தீதுறு வனத்திற் கொண்டு சென்றவற் புணர்ந்த பின்னர்க்
காதுறு சினத்திற் கல்லிற் கொன்றனள் போலு மக்க
லாதிரை யவன்றன் கோயிற் றிருப்பணிக் கடைந்த தென்றார்.

(இ - ள்.) வேதமோதற்குரிய அந்தணர் குலத்திற்பிறந்திருக்கும் வேதியனொருவனைக் கொடிதாகிய காட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் அவனோடு கிரீடைசெய்த பின்னர், கடுங்கோபத்தோடு அவனைக்கல்லாற் கொன்றனள். அப்படி அவனைக்கொன்ற கல்லானது திருவாதிரை நட்சத்திரத்திற்குரியவராகிய சிவபெருமானது திருக்கோயிற்றிருப்பணி செய்தற்குச்சேர்ந்தது என்றனர். எ - று. (௨௦௦)

அன்னவள் கையிற் றீண்டி யெடுத்தகல் லரன்பொற் கோயிற்
சன்னிதிக் காவ தாக வாதலாற் றறுக ணாட்டி
முன்னிழைத் திட்ட பாவ முடிந்ததென் றுரைத்தா ரன்னோர்
சொன்னது கேட்டு நின்பாற் சொல்லுவா னுற்றோந் தேமென்றான்.

(இ - ள்) அவள் கையினாற்றொட்டெடுத்த கல்லானது சிவபெருமானது அழகிய திருக்கோயிலின் சந்நிதானத்திற்குரிய திருப்பணி வேலைக்கு உபயோகப்பட்டதனால், கொடுந்தொழிலுடைய இவள் முன் செய்த மகா பாதகங்கள் யாவும் அழிந்தனவென்று சொன்னார்கள் அச்சிவகணங்கள் சொல்லியவற்றைக்கேட்டு அவ்விஷயத்தைத் உன்பாற் சொல்லுவதற்காகவே இங்கே வந்தோமெனக் கூறினார். எ - று, (௨௦௧)

நாரத னுரைப்பக் கேட்டுத் தென்றிசை நடுவ னோர்ந்து
பாரியா யிருந்து கொன்ற பாதகி பெற்ற பேற்றால
வேரியஞ் சடில மோலி புண்ணியம் விருப்பிற் செய்த
பேர்பெறும் பெருமை யெம்மாற் பேசுதற் கெளிய வன்றே.

(இ - ள்.) தென்றிசைக்கிறைவனாகிய இயமன, இவ்வாறுரைத்த நாரத முனிவர் வார்த்தையைக் கேட்டறிந்து, மனைவியாயிருந்து கணவனைக் கொன்ற மகாபாதகியெய்திய பேற்றினாலே, மணமும் அழகுமுள்ள சடைமுடியை யுடைய சிவபெருமானுக்குரித்தாகிய சிவபுண்ணியங்களை விரும்புவதோடு செய்தோர் அடையத்தக்க மேன்மை எங்களாற் சொல்லுதற்கு எளிமையுடையன வல்ல. எ - று. (௨0௨)

எனவெடுத் தியம்பிச் சென்ற நாரதற் கியன்ற செய்தா
னனையவன் போகத் தன்னி னதிசய மடைந்தா னீலப்
புனையிழை மடந்தை பாகன் புண்ணியம் புரிந்து நின்றார்
வினைபடு பஞ்சிற் றீயின் விளிவது திண்ண மென்றான்.

(இ - ள்.) என்று கூறி, ஆங்கெய்திய நாரதமுனிவருக்குத்தக்க உபசாரங் களைச்செய்தான். அம்முனிவர் சுயேச்சையாக வெழுந்தருளவும், இயமன், தன்னுள்ளே ஆச்சரியமெய்தியவனாய், பசுமை நிறந்தங்கிய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானுக்குரிய பதிபுண்ணியஞ்செய்துள்ளவர் களுடைய தீவினையானது தீப்பொறிப்பட்ட பஞ்சுப்பொதிபோல அழிவது உண்மையென்று தெளிந்தான். எ - று. (௨0௩)

கொழுங்கொடிப் பவள வேணிக் கோதம னுரைத்த பின்னர்த்
தொழுந்தகைக் குமாரி தன்பாற் காசிபன் றோன்றுப் தானு
னெழுங்குறு பவந்தீர் வேதா ரணியமென் றுரைக்கப் பட்ட
செழுங்கொடி நகர்ப்போ காங்க னெனுமொரு சினவேல் வேந்தன்.

(இ - ள்.) கொழுவிய கொடிப்பவளம் போன்ற சடைமுடியையுடைய கௌதமமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய பின்னர், யாவரும் பணிதற்குரிய தன்மை பொருந்திய அவ்விராசகுமாரியிடத்தில் காசிபமுனிவர் கழறலாயினார். வருந்துகின்ற பிறவிப்பிணியை விலக்கும் வேதாரணியமென்று சொல்லத்தக்க செழிய காவலுடைய நகரத்தில், போகாங்கனென்னும் பெயருடைய கோபந் தங்கிய வேலைத்தாங்கிய மன்னவன் ஒருவனிருந்தான். எ - று. (௨0௪)

அறனிது பாவ மீதென் றறிந்துல களித்தல் செய்யா
னிறைகடந் தரப்பிக் கொள்ளு மனனுயிர்க் கிடுக்கணோக்கான்
மறனொடு பழகி வாழும் வன்கணுங் கூர்ப்ப புலியே றன்னான்
பொறைசிறி துணரான் றெய்வம் போற்றலன் கருணை நீத்தான்.

(இ - ள) இது புண்ணிய கருமம் இது பாவ கருமமென்று தெரிந்து உலகத்தைக்காவாதவன். வரிகளை மிகுதியாக விதித்துக்கொடுமையோடு பழகி வாழும் கூரிய நகங்களையுடைய ஆண்புலியையொத்தவன். பொறுமையென்பதை ஒரு சிறிது மறியாதவன் தெய்வ வழிபாடு செய்யாதவன். கிருபையென்பது அறவே தன்பாற் பொருந்தாது விலக்கினவன். எ - று. (௨0௫)

கருமமீ றொழியத் துஞ்சுங் காலையிற் றென்பாற் செல்வன்
பொருகழற் றூதர் புக்கார் புயத்துணை பொருந்த வீக்கி
மருமமுற் றிடித்துக் கொண்டு சென்றனர் மறலி தானுந்
தெருமரு நிரயத் திட்டான் கிடந்தனன் வருந்திச் சின்னாள்.

(இ - ள்.) தன் தேக சம்பந்த வினைகழிந்து அவனிறக்குஞ் சமயத்தில், தென்றிசைக்கிறைவனான இயமனுடைய ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த தூதுவர்கள் வந்து, அவனது இரு தோள்களையும் ஒரு சேரக்கட்டி, மார்பிற் குத்தி இழுத்துக்கொண்டு சென்றார்கள் இயமனும் அலைச்சுழலத்தக்க நரகத்திற் போட்டனன், சில காலமெல்லையும் வருத்தமெய்தி யிருந்தான். எ - று. (௨0௬)

கண்ணுதற் கடவு ளேவக் கயிலையங் கிரியிற் றூதர்
துண்ணென வுழுக்கத் தோடு தென்றிசை தொடர்ந்து சென்று
றெண்ணரு நிரயத் தாழ்ந்த விவற்பிடித் தெடுத்துச் செம்பொ
னண்ணலந் தனிமா னத்தி னமைத்தன ரகன்று போனார்.

(இ - ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் கட்டளையால் திருக்கைலாயகிரியிலுள்ள சிவகணங்கள் அச்சக்குறிப்புடைய முழக்கத்தோடு தென்றிசை நோக்கி இயமபுரம் போய்ச்சேர்ந்து, எண்ணுதற்கும் அரிய நரகத்தில் வீழ்ந்துகிடக்கும் இப்போகாங்க னென்பவனைக்கண்டு பிடித்தெடுத்து, பசும்பொன்னாலாகிய சிறந்த விமானத்திலேற்றி இயமபுரத்தைவிட்டுச்சென்றார்கள்.

போதரு நெறியிற் பற்றிப் புகுந்தனர் தென்பாற் றூதர்
தீதறு சிவக ணத்துச் செல்வரைப் பின்சென் றேத்தி
யாதிவன் றருமஞ் செய்த துணர்த்திரென் றிரந்து கேட்ப
மாதொரு பாகன் றூத ரவனிலை வகுப்ப தானார்.

(இ - ள்.) போகும்வழியில் இயமதூதர் அவர்களைப் பின்பற்றிச்சென்றார்கள். அப்படிக் குற்றமற்ற சிவகணப்புண்ணியர்களைப் பின்றொடர்ந்து துதிசெய்து, இப்போகாங்கன் செய்தது யாது புண்ணியமோ? அதனை யுணர்த்துக வெனக்குறை கூறி வினவவும், உமாதேவியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான் தூதர்கள் அவன நிலைமையைச்சொல்வாராயினர். எ - று. (௨0௮)

இத்திறத் திவன்செய் பாவ மெண்ணிறந் துளவென் றாலும்
பத்தியி னிவன்பாற் றோன்றுங் கனகனென் றுளனோர் பாலன்
னத்தனை மணலிற் கோட்டி யருச்சனை விளையாட் டேற்றான்
முத்தனோர்ந் திவன்பால் வெள்ளிக் கயிலையின் முதன்மை யீந்தான்

(இ - ள்.) இப்படி இவன் செய்த பாவங்கள் எண்ணிறந்துள்ளனவானாலும் இவன்பாற் பிறந்த கனகனென்னும் பெயருடைய புத்திரன் பத்தியோடு சிவபெருமானை மணலாலமைத்து வேடிக்கையாகப்பூசை செய்தான். அதனைச் சிவபெருமான் தெரிந்து இப்போகாங்கனுக்கு வெள்ளிமலையாகிய கைலாயத்தின் தலைமையைத்தந்தருளினர். எ - று. (௨0௯)

பெற்றன னதனால் வெள்ளிப் பொருப்பெனப் பேச மீண்டார்
குற்றடு தகையார் தென்பாற் றருமனைக் குறுகி யன்னார்
சொற்றன வனைத்துஞ் சொல்லத் துண்ணெனத் துனுக்கங் கொண் [டான்
கற்றைவார் சடையோன் றன்மை நினைந்துளங் கனிவ தானான்.

(இ - ள்.) அதனாற் கைலாயபதவியை யெய்தினனென்று சிவகணங்கள் சொல்லக்கேட்டு மீண்டு குத்திக்கொல்லுந் தன்மையுடைய அவர்கள் தென்றிசையிலுள்ள இயமனை நெருங்கி அக்கணங்கள் கூறியவற்றையெல்லாந் தெரி

விக்கவும், இயமன் விரைவில் நடுக்கமெய்தி, தொகுதியாக நீண்ட சடையை யுடைய சிவபெருமானுடைய திருவருளின்றன்மையைக்கருதி மனக்கனி வெய்தியவனானன். எ - று. (௨௫௦)

**கலிவிருத்தம்.**

என்று காசிபன் சொல்லியி றுத்தனன்
றன்று ணைசசம தக்கினி சாற றுவான்
மன்ற லோதி வரனுடைப் புண்ணிய
மொன்று கேட்டியென் றன்னவட் கோதுவான்.

(இ - ள்.) என்றிப்படிக காசிபமுனிவா சொல்லி முடித்தனர். தனக்குத் தானே யொத்தவராகிய சமதக்கினிமுனிவா சாறறலாயினா. மணங்கமழுங் கூநதலையுடைய மஙகைகயே! சிவபெருமானுககுரிய சிவபுணணியததின் பெருமை யாதொன்று சொல்லுவேன். கேட்பாயாகவென்று அவளுககுச்சொல்லுகின்றார்.

தழைநெ டுங்கொடிச சநதிர மாநகர்
மழைப டுங்கை மதிமா னெனுமிரு
குழைமு கததனி வேநதனக கோமகன்
விழைவ மைசசன விசுததனென் பானுளன்.

(இ - ள்.) தழைதது நீணட கொடிகளையுடைய சநதிரமா நகரததை யாண்ட மேகமபோலககொடுககுங கையையுடைய மதிமானென்னும் பெயர் பெறற, இரு குணடலஙகள் விளஙகும் முகததோடு கூடிய ஒரு ஒப்பில்லாத மனனவனிருநதான. அவனுககு அன்புள்ள மநதிரியாகிய விசுததனென்னும் பெயரினனொருவனிருநதான். எ - று. (௨௫௧)

உரைககு மன்னவன் றன்னுழைந் தோன்றிய
வரைககு லபபுய மைநத ரிருவரி
னிரைததெ ழுநதுாக குணனெனு மோரமகன்
றரைதத லததுரா சாரனென் றோமகன்.

(இ - ள்.) மேற்கூறிய அரசனபானுதிதத, சிறநத மலைகள்போலுந தோள் களையுடைய புததிரா இருவரில, ஒரு புததிரன, சப்திததோஙகுகினற துாகுண னெனனும பெயருடையவன, பிறிதொரு புததிரன் துராசாரனென்னும பெயா வகிததவன். எ - று. (௨௫௨)

எடுதது ரைககு மிவர்களி யறகையைப்
படுதது ணாநதனன் றுதைபிப பாதகர்
விடுககு நீரமைய ரெனனவி டுநதுவே
றடுத்தி ருநதன னன்னவ ரோரநதனர்.

(இ - ள்.) எடுததுச்சொல்லுகின்ற இவாகளது இயற்கைககுணததை அவர் கள் தநதை பலவகையிலும் பரிசோதிததறிநதான். இப்பாவிகள நாம் விலகிப் பிரிதற்கு உரியவர்களெனததுணிநது அவாகளை விடுததுத தான் வேற்றிடத தெய்திருநதனன். அதனையப்புதலவருணாநதனா. எ - று. (௨௫௩)

தநதை நம்முழைத் தண்ணளி யற்றன
னுய்நது நாமவயி றேமபுதற கொன்றிலே
மநதி வல்லிரு ளாறலைத் தாருயிா
சிநதி வவிந் திரிதுமென் றேகினார்.

(இ - ள்.) நம்முடைய தந்தை நம்மிடத்தில் இரக்கமற்றிருக்கின்றனன். நாம் பிழைத்து வயிறு வளர்ப்பதற்கு ஒரு வழியுமில்லை ஆதலால், மாலைக்காலத்தில் வருகின்ற கொடிய இருளிலே வழிபறித்து உயிர்போக்கிப் பொருளையபகரித்துச் சஞ்சரிப்போமென்று தீர்மானித்துப்போயினார். எ - று. (உகரு)

செல்ல ருங்கடுங் கானகத் தீநெறி
புல்லி யோர்ந்து பதுக்கைபு குந்திருந்
தெல்லை நோக்கி யிடைப்படு நர்றமை
யொல்லை சென்றுயிர் போக்கிக் கவர்குவார்.

(இ - ள்.) போதற்கரிய கடுங்காட்டின் கொடிய வழியிலே சேர்ந்து, மறைதற்குரிய விடமறிந்து, சிறு புதரில் மறைந்து நின்று சமயம் நோக்கி, வழியே வருகின்றவர்களிடத்தில், மிக விரைவாயோடி அவர்களைக்கொன்று அவர்கள் பாலுள்ள பொருள்களை யபகரிப்பார்கள். எ - று. (உகசு)

அற்ற நோக்கிக் கவர்ந்துயி ராசறச
செற்ற தெத்தனை யென்னென்று செப்புகே
னுற்ற நாளி னொருகிழ டந்தணன்
சுற்றி றுக்குஞ் சுமையொடு தோன்றினன்.

(இ - ள்.) சமயம்பார்த்துப் பொருளைப்பறித்துக்கொண்டு அவர்களுயிர் விரைவில அகலும்படி கொலைசெய்ததெத்தனை? அக்கொடுமையை என்னென்று சொல்லுவேன்? இப்படி நடத்திவருங்காலத்திலே ஒரு நாள் ஒரு வயோதிக வேதியன் பக்கங்களிலெல்லாம் அழுத்தும்படியான பெருஞ் சுமையோடு வந்தனன். எ - று. (உகஎ)

இரும ருங்கு மிவர்களி ருந்தன
ரருகெ திர்ப்பட வந்தண னெய்தலு
நிருகு சீற்றந் தலைக்கொளச் சென்றனர்
பருவ ரற்புரிந் தாங்கவற் பற்றினார்.

(இ - ள்.) இருவரும் இரு புறங்களிலுமிருந்தார்கள். அக்காட்டுமார்க்கமாய் அவ்வேதியன் வந்தவுடனே கொடுங்கோப மேற்கொண்டவர்களாய்ச் சென்று அவனைப்பலவகைப்பட்ட துன்பங்கள் செய்து அவ்வேதியனைப் பிடித்தார்கள். எ - று. (உகஅ)

பற்றி யெற்றிப பறித்துப் பரட்டடி
முற்று றப்புடைத் தார்கொண்டு முன்னினார்
துற்று றுங்கடுங் கானிடைத் தோளினை
யிற்று றக்கொடி கட்டியி றுக்கினார்.

(இ - ள்.) அப்படிப்பிடித்துக்குத்தி அவன் பொருள்களைப் பறித்துக்கொண்டு, காலின் கணுக்கள் முழுதும் முறியும்படி யடித்து அழைத்துச்சென்று அச்சுமையைச்சோதிக்க விரும்பியவர்களாய், நெருங்கிய கடுங்காட்டிலே, அங்குள்ள கொடிகளால் அவன் தோள்களை இற்றுப்போம்படி இறுக்கிக்கட்டினார்கள். எ - று. (உகசு)

கட்டு றுத்தசு மைக்கட் டறுத்தன
ரிட்ட பண்டமெடுத்துக் கவார்ந்தனர்
சுட்ட மைத்தகற் சுண்ணமி ருந்தெடா
விட்டெ றிந்தனர் வெங்கடுங் காட்டரோ.

(இ - ள்.) அவ்வேதியன் கயிற்றினாற் பிணித்திருந்த அம்மூட்டையின் கட்டையறுத்து விட்டார்கள். அதனுள் வைக்கப்பட்டிருந்த பொருள்களை யபகரித்தெடுத்துக்கொண்டார்கள். அப்பொதியினுள்ளே தாளித்து வைத்திருந்த கற்சுண்ணமிருந்ததனால் அதனை யெடுத்து வெவ்விய அக்கடுங்காட்டில் விட்டெறிந்தார்கள். எ - று. (உஉ0)

இன்ன வாறிவர் செய்யுமி டும்பையை
மன்னர் மன்னன் யதிமா னுணர்ந்தன
னன்ன வர்ப்பிடித் தானமழு வாளினாற்
பின்ன மாக்கியு ரம்பிளந் தானரோ.

(இ - ள்) இந்த வகையாக இவர்கள் இரண்டுபேரும் செய்கின்ற கொடுமைகளை மன்னர் மன்னவனாகிய யதிமானென்பவன் தெரிந்துகொண்டு, அவர்களிரண்டுபேரையும் பிடித்து, பரசு வாள் முதலிய ஆயுதங்களால் அவர்களுடலைப் பின்னஞ்செய்து அவர்கள் மார்பைப்பிளந்தான். எ - று. (உஉக)

கால தண்டஞ் சுழற்றிக் கடுந்திறற்
சூல மேந்திய தென்றிசைத் தூதுவ
ரால கால மெனவுருந் தார்பவப்
பால மன்னவ ரைக்கொடு பாறினார்.

(இ - ள்.) உடனே காலதண்டத்தைச்சுழற்றிக்கொண்டு மிக வுக்கிரவல்லமையுடைய சூலாயுதமேந்திய இயமபுரத் தூதர்கள், ஆலால விஷத்தைப்போலக் காச்சனைசெய்து பாவங்களுறப்விக்கும் பூமிபோன்ற அவ்விரண்டு பேரையும் இழுத்துக்கொண்டு ஓடிப்போனார்கள். எ - று. (உஉஉ)

அந்த கன்றிரு முன்னர்க் கருகுற
முந்தி நிறப்வி டுத்தனர் முன்னவன்
சிந்தை கூர்ந்தறி சித்திர குத்தனை
யிந்த வீங்கிவர் செய்தன யாவென்றான.

(இ - ள்) இயம தருமனுடைய சந்நிதியின் முன்பாகச்சமீபத்தில் முற்பட்டு நிற்கும்படி நிறுத்தினார்கள். முதல்வனாகிய அவ்வியமன் புத்தி கூர்மையோடு அறிந்திருக்கும் சித்திரகுத்தனை யழைத்து, இங்கே யிதோ நிற்கின்ற இவர்களியற்றிய பாவ புண்ணியங்கள் எவை? என வினவினான். எ - று. (உஉங)

புண்ணி யப்பொரு ளொன்றுமம் புரிந்திலா
கண்ண கன்றெழு கானிற பறித்தெறி
சுண்ண மற்றொரு சுருதிவல் லானெடுத்
தண்ணன் முக்கண னாலயத் தெய்தரு.

(இ - ள்.) எவ்வகைத்தாகிய ஒரு புண்ணியமும் இவர்கள் செய்திலர். இடமகன்றுயர்ந்த காட்டினிடத்தில் (ஓர்ந்தணனை) வழிபறித்தப்பிடுங்கி யெறிந்த கற்சுண்ணத்தை மற்றொரு வேதமறிந்த பிராமணனெடுத்து அழகிய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான திருவாலயத்தையடைந்து. எ - று. ()

அன்றெ டுத்தகற் சுண்ண மதுித்திலே
தின்று மிக்கது சேவுயர்த கோன்மதிற
குன்றிடுக்கி னிழுகிய கொள்கையா
லின்றி வாக்கிட ரில்லையென் றுனரோ.

(இ - ள்.) அன்று கண்டெடுதத கற்சுண்ணத்தைத்தடவித் தாம்பூலந்தின்று மிகுதியாக நின்ற சுண்ணததை இடபககொடியையுடைய சிவபெருமான் திருவாலயத்தின் மதிலிலுள்ள கற்களினிடையே தடவிய தனமையால, இப்போது இவர்கட்குப்பாவமுணடாகவிலலையென்று சிததிரகுததன் சொனனை.

என்னு மாததிரை யெநதைபி ரானரு
டுன்னு தூதாதொ டாநது டாநதனா
பொனனி லங்குறு மானம் பொருநதினு
ரின்ன றீாததவாக் கொணடகன றேகினா.

(இ - ள்.) என்று சொல்லுகையில, எநதையாகிய சிவபெருமான் திருவருளடைநத சிவகணஙகள தொடாநதுவநது, பொனனொளி வீசும் தெய்வவிமானததிலேற்றி, துன்பததையகறறி, அவவிருவரையும உடனகொணடு அஙகிருநதகனறு கைலாயததிறகுசசெனறாாகள. எ - று. (உஉசு)

பின்னெ ழுநதுவ ணங்கிப பெருநதிசைத
தெனன காககிறை சென்றனன கைதொழா
வெனனு டைபபெருந தூதரி யறறிய
புனனி லைபபெருந தீமைபொ றுததிரால.

(இ - ள.) அதன பினனா, பெரிய தெனறிசைககிறைவனாகிய இயமன எழுநது பணிநது சென்று கைகுவிதது எனனுடைய பெரிய கணஙகளசெய்த இழிதகைமையையுடைய கொடிதாகிய குற்றஙகளைப்பொறுத்தருளவீராக.

என்னப் பொங்கியி றைஞ்சியெ ழுநதனன்
கன்னற சாபன கனறபட மாடடியோன
முன்னாக் கொண்டுவி டுததனா முககணன்
றனனொப பாயொரு சாபிருந தாரரோ.

(இ - ள்) என்று கூறித துதிசெயது வணஙகித திரும்பினன். கரும்புவில்லேநதிய மனமதனை நெருப்பாலழியத திருவுளஙகொணட சிவபெருமான சநநிதியில் அழைததுககொணடு போயவிட்டார்கள். அவாகளிருவரும திரிநேததிரஙகளையுடைய சிவபெருமானைப்போல (சாரூபமெயதி) ஒரு பககலிலிருநதாாகள. எ - று. (உஉஅ)

ஆத லிறசிவ புண்ணியமம யாவையு
மோதி முறறுமொ ழிககப படுவதோ
வீதி வெண்பிறை சென்னிமி லைசசியோன்
மூது ணாநதவ ரன்றி மொழிவரோ.

(இ - ள்.) ஆனபடியால், சிவபுணணியஙகளை யெல்லாம் முழுவதுஞ் சொல்லி முடிகக முடிவுறுமோ? அவற்றை [வீதி] ஒழுஙகமைநத தாவளமான பிறைச்சநதிரனை யணிநத முடியையுடைய சிவபெருமானும் முற்றுநதோநத ஞானிகளுமலலாமல் வேறொருவா சொலலுவாரோ? எ - று. (உஉகூ)

என்ன வைத்திடு மீற்றிடைக் கோசிகன்
கன்னி தன்முக நோக்கிக் கழறுவான்
பன்னு மாதவத் தொல்லையா பண்புடைப்
பொன்ன காக்குப புரந்தர ணுதியோர்.

(இ - ள்) எனக்கூறிய விறுதியில், விசுவாமித்திரமுனிவர் அவ்வரச குமாரியின் முகத்தைப்பார்த்துச் சொல்லுகின்றனர். எவராலுந் துதி செய்யத் தக்க பெருந்தவமுடைய பெரியோர்களும் தேவலோகத்திற்குத் தலைமை வகித்த இந்திரன் முதலாகவுள்ள தேவர்களும். எ - று. (௨௩0)

சித்தா கிம்புரு டசிறப பேர்பெரு
வித்தி யாதரா வீணையா மேவரப
பைத்த பாமபணைப பள்ளிய னுந்தியி
னுய்த்தெ ழுந்த முளரியு றையுளோன்.

(இ - ள்.) சித்தர்களும் கிம்புருடராகிய சிறப்பினையுடையவர்களும் பெருமை தங்கிய வித்தியாதரர்களும் கின்னரர்களும புடை சூழும்படி பணமுடிகளை யுடைய ஆதிசேஷனுகிய சயனத்தில யோகநித்திரை செய்யுந்திருமாலும், அவர் உந்திக்கமலத்துதித்துள்ள கமலாசனனுகிய பிரமதேவனும். எ - று. ()

ஏம கூடத் தினிதிருந் தாரவண
யாமு மெய்திப பரசியி ருந்தனங
காம ரொணபிறைக் கணணிக ணந்துளா
ஞம வேறசத விந்தய னணணினுள

(இ - ள) ஏமகூடமென்னும பாவத்ததில இனிதாகவிருந்தார்கள் அங்கே நாமும்போய அவர்களைப்புகழுந்தோம. அழகிய பிறைச்சந்திரனுகிய மாலையை யணிந்த சிவபெருமானுக்குரிய சிவகணத்திலுள்ளவனுகிய அச்சந்தரும வேலேந்திய சதவிந்து வெனபவன அம்மலைக்கருகே வந்தனன. எ - று. (௨௩௨)

உரைத்த மாலவரை யோரமருங காகமுற
றிரைத்தெ ழுந்தக ணத்தொடு மெயதலும
விரைபப சுமபனித தாமரை மேலுளா
னிரைகக ணத்தொடெ ழுந்தன னினறனன.

(இ - ள) சொல்லிய பெரிய அவவேமகூடபாவத்தின ஒரு புறமாக, பேரிரைச்சலோடு தோனறிய சிவகணங்களோடெயதிய வுடனே, மணமுடைத் தாகி அனறலாந்த குளிர்ந்த செந்தாமரை மலாபீடத்தையுடைய பிரமன் வரிசையாயுள்ள கூட்டத்தோடெழுந்து நின்றுன, எ - று. (௨௩௩)

நின்ற நான்முகத் தேவ னிரைபடுந
தனற ளிரககரங கூபபிய தன்மையை
யொன்று நோக்கல னுகி யொருதனிக
குன்ற விலஙி கயிலை குறுகினுன.

(இ - ள.) அபபடி நின்ற நான்கு முகங்களையுடைய பிரமதேவன் வரிசை யாயுள்ள தனது தளிர்போன்ற கைகளைச்சிரமேற்குவித்ததன்மையைச் சிறிதும் பாராதவனுய், ஒபபறற தனிமையாகிய மலை விலலைத்தாங்கிய சிவபெருமான எழுந்தருளியிருக்குந் திருக்கைலாயகிரியிற் சேர்ந்தான. எ - று. (௨௩௪)

பின்னி ருந்தன னான்முகன் பேரற
மன்னு மாதவர் சுற்றுற வைகினா
னன்ன காலையி னநதண ணைத்தொழா
வென்னை யீதென்றி யானுமவி னாயினேன்

(இ - ள்.) நின்றுகொண்டிருநத பிரமதேவன், அதன் பின்னே, நிலைபெற்ற பெருநதவமுடைய பெரியோர் புடை சூழும்படி உட்காாநதிருநதான். அச்சமயத்தில் பிரமதேவனை வணஙகி இஃதென்னவென்று நாமுங கேட்டோம். எ-று.

நீயெ ழுந்தனை நிற்கவு நோக்கலன்
போயொ ழிநதனன் யாதிவன் புண்ணிய
மாய வேண்டுது மென்னலு மம்புயத்
தூய நாத னவனிலை சொல்லுவான்.

(இ - ள்.) நீா எழுந்து நின்றுகொணடிருக்கவும், கவனித்துப்பாராமற் சென்றுவிட்டான். இவனியற்றிய புணணியம் ஏதோ? அதனை யாயநதுணர வேணடினோமென விண்ணப்பிககவும், புனிதமாகிய செநதாமரைமலர்ப்பீடததை யுடைய பிரமதேவன் அசசிவகணன் பெருமையைச்சொல்லுகினறான். எ - று.

மேற்படி வேறு.

வண்டமிழ்ப் பரவுசா மநதமா நகருளான்
விண்டநூல் புனைசதா விந்துவென பானிவ
னெண்டரற் கரியதோர் வறுமைபெற றெய்தினான்
றண்டலைக் கழனிபுக குழுதொழிற சாாபினன.

(இ - ள்.) வளநதஙகிய தமிழ்மொழி வழஙகும் சிறநத சாமநத நகரததிலுள்ளவனும், முப்புரிநூல்தரிதத சதவிநதுவெனனும் பெயா பெற்றவனுமாகிய இவன், எணணுதற்கும அரிதாகிய ஒப்பற்ற தரிததிரமெயதியவனாய, குளிாச்சிவாய்நத வயல்களிற்போய உழுது பயிரிடுநதொழிலைச்சார்நதவனாயினான். எ-று.

பழமறைக் குலமுதித தனனிவன் பரிவினா
லுழுதொழிற் பரிசுபெற றுழுகலான் வறுமைநோ
யெழுமருப் பொருகரும் பகடொா னிதனையப
பொழுதுவிற குதுமெனப பசியொடும போயினான்.

(இ - ள்.) பழமையாகிய வேதியர்குலததிற்றோனறிய இவன், வறுமைத் துயரால் உழவுததொழில் செய்தற்கியைநதும தன் வறுமைததுயா தணியாது வருநதினான். அப்போது கொமபுகள் நீணட கருநிறநதஙகிய எருமைககடாவொன்றுடையவனாயிருநதான. இக்கடாவை அனறைய தினததில் மிகப்பசியினால் விற்றுவிடுவோமென்று தெருவழியே போயினான். எ - று. (௨௩௮)

கொள்கிலா ரதனைநல் குரவொடும பசியொடு
முள்புகா வொருதறிப பகடணைத துறுதலும
வள்படுங் கொடியவால் வரிவிரிச சிகமடுந
தெள்விடம் புகமடுத் தனுமவன் றெருமரா.

(இ - ள்.) அதனை யாரும் வாஙகாமையால், தரிததிரததாலும் பசியாலும் வீட்டைச்சேர்நது ஒரு கட்டுததறியில அவவெருமையை யணைத்துக்கட்டின

வுடனே, கூரிய வளைந்த வாலையும் வரிகளையுமுடைய ஒரு தேளானது, கொல்லத்தக்க தெளிவாகிய விஷம் உடலிற் பாயும்படி கொட்டவும் அவன் மயக்கமடைந்து. எ - று. (௨௩௯)

கைத்தலங் குலைதரச் சுழல்வருங் கண்முகிழ்த்
துய்த்துறங் கிலனுயிர்ப் பொறைதுறந் தானரோ
வத்தலைப் பகடுகட் டறுதரப் புறமுலாய
மத்தமா மதமுழந் தயலெலா மழித்தர.

(இ - ள்.) கைகள் நடுங்கவும் சுழலுங் கண்கள் குவிந்து நல்ல நித்திரை செய்யாதவனும் உயிர் விட்டான். அச்சமயத்தில் அவன் கட்டிவைத்த எருமைக்கடா கட்டினை அறுத்துக்கொண்டு புறத்தே திரிந்து உன்மத்தமாகிய சிறந்த மதமெய்தி, பக்கங்களிலெல்லாம் அழித்துக்கொண்டிருக்க. எ - று. ()

சேவுயர்த் தவர்திருப் பணிவிடைக் குளபகட்
டாவிநீத் தலுமரன் பணிவிடைக் கண்மினா
மேவரக் கொடுசகட் டுறவிசித் தனர்தனித்
தேவனுக் கொருபகற் சிலையிழுத் திட்டதால்.

(இ - ள்.) இடபக்கொடியையுடைய சிவபெருமானுக்குரிய திருப்பணிவிடைக்கேற்ற எருமைக்கடாவொன்று உயிர் நீங்கிய வளவில், சிவபணிவிடைக்கு வந்தவர்கள், இவ்வெருமைக்கடாவை யிழுத்துச்சென்று வண்டியிற் பொருந்தக்கட்டினார்கள். ஆதலால் ஒப்பற்ற சிவபெருமானுக்கு ஒருநாள் முழுவதும் கலயிழுத்தது. எ - று. (௨௪௧)

அப்பெரும் பகடரன் பணிவிடைக் குதவலா
னிப்பெரும் பதவிபெற் றிறைகணத் தலைவனுய்ச்
செப்பருந் துளமுடிச் செங்கணன் முதலினா
துப்புறும் பரிவினற் றெழுவிருந் தானரோ.

(இ - ள்.) அப்பெரிய எருமைக்கடா சிவபணிவிடைக்கு உதவியாயிருந்தபடியால், இவன் இவ்வளவு மேலான பதவியையடைந்து, சிவகணங்களுக்குத் தலைவனாகி, சொல்லுதற்கரிய துளவமாலையணிந்த திருமுடியையுடைய திருமால் முதலானோர் மேன்மைதங்கிய அன்புடன் பணியும்படி யிருந்தனன்.

இன்னணஞ் சதுமுகத் தவனிசைத் தானெனப்
பொன்னையன் னவளொடுங் கோசிகன் புகறலு
மன்னமன் னவளுவந் ததிசயத் தெய்தினாள்
பின்னர்நின் றுளபரத் துவனினிப் பேசுவான்.

(இ - ள்) நான்கு முகங்களையுடைய பிரமதேவன் இப்படிக்கூறினானென்று, திருமகளையொத்த அவ்விராசகுமாரி மாரியினிடம் விசுவாமித்திர முனிவன் திருவாய்மலர்ந்தருளவும், அன்னம்போலும் நடையையுடைய அவ்விராசபுத்திரி மனங்களித்து ஆச்சரிய மெய்தினள். அவர்களிற் * பிற்பட்டிருந்த பரத்துவாசமுனிவர் மேலே சொல்லுகின்றார். எ - று. (௨௪௩)

தாதெருப் படுகுடித் றெுறுவதிற் றலைவனிற்
போதுமோர் சிறுவனு டுறுதெருப் பறலயிற்
காதலிற் கண•னுதற் புனிதனைக் கருதியென்
னுதனீ யென்னவோர் சிலையைமுன் னட்டனன்.

(இ - ள்.) தூசும் சாணமும் நிரம்பிய குடிசையில் வாழும் இடையர்களுக்குத் தலைவனாகிய ஒருவன் வீட்டிற் பிறந்த ஒரு சிறுவன், மிக்க அன்போடு நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைத் தியானஞ்செய்து தான் விளையாடும் வீதியிலிருக்கும் சிறு கற்களினிடத்தில், ஒரு கல்லையெடுத்து நீதான் என் கடவுளென்று தன் முன்னே நட்டான். எ - று. (௨௪௪)

மற்றுமச் சிறுகலான் மதிளெடுத் தையனைச்
சுற்றுமுற் றுறவகுத் திழிபுனற் றுளளியே
முற்றுமென் சந்தனப் புனைசெய்வான் முளரியரிற்
றுற்றுபன் மலரெடுத் தணிமுடிச் சொரிகுவான்.

(இ - ள்.) மற்றைச்சிறு கற்களால் மதிலமைத்து, தான் ஸ்தாபித்த சிவபெருமானை முற்றுஞ்சுற்றி யிருக்கச்செய்து, இழிவாகிய நீராலாகிய குழைச்சேற்றை மிகமெல்லிய சந்தனமென்று தரிப்பான். முளளிச்செடியில் நிறைந்திருக்கும் பல பூக்களையெடுத்து அழகிய திருமுடியிலிடுவான். எ - று. (௨௪௫)

மணலெடுத் தலரெருக் கடைவகுத் திதுவுனக்
குணவெனத் தொழுதிழைத் தாடோரு ஞமையிடக்
கணபடிச் சடிலிபே ரருளொடுங் கருத்துற
விணைமருப் பேறுகைத் தினிதெழுந் தருளினான்.

(இ - ள்.) மணல்களையெடுத்து அங்கிருந்த எருக்கிலையில் வைத்து இது தான் உனக்கு நிவேதனமென்று வணங்கி, இவ்வாறு செய்து விளையாடும் தினங்களில், உமாதேவியை வாமபாகத்திலுடையவரும் சர்ப்பமணிந்த சடையையுடையவருமாகிய சிவபெருமான், சிறந்த திருவருளோடு திருவுள்ளங்கொண்டருளி இரு கொம்புகளையுடைய இடபவாகனமூர்ந்து இனிதாக வெழுந்தருளினார். எ - று. (௨௪௬)

மைந்தனைக் கருணையான் மருவுறத் தழுவிநீ
தந்தவற் புதமெமக் கெனவுரைத் தன்னவன்
சிந்தையிற் களியினவைத் திடுசிலைச் செழுமணிச்
சுந்தரச் சோதிபெற் றிடவளித் துநவினான்.

(இ - ள்.) அச்சிறுவனைக் கருணையோடு ஆலிங்கனஞ்செய்து நீ தந்தவை யாவும் எமக்கு அற்புதமாயினவென்று திருவாய்மலர்ந்தருளினார். அச்சிறுவன் களிப்போடு ஸ்தாபித்த அச்சிறு கல்லானது, உயர்ந்த மாணிக்கத்தின் பிரகாசத்தை யெய்தும்படி வரமபாலித்தனர். எ - று. (௨௪௭)

அவனடுக் கியசிலைக் கோபுரத் தயன்மதிட்
கவரொளிக் கதிர்மணிக் குலமெனக் கருதுமுக்
குவைநிதிக் கிழவனிற் பொருநிதிக் குவையெலா
மிவனுறப் பெறவளித் துதவினா னிறைவனே.

(இ - ள்.) அவன் அடுக்கிய சிறுகற் கோபுரத்தயலில் மதிலொன்று, பிறபிராகாரங்களை மழுங்கச்செய்யத்தக்க ஒளிதங்கிய இரத்தினக்கூட்டங்களென்று சொல்லும்படியாகவும், யாவரும் நினைக்கின்ற மூவகைநிதிக்குவைகளையுடைய குபேரனைப்போலப்பொருந்திய நிதிக்குவைகள் முழுவதையும் இச்சிறுவனையடையவும் சிவபெருமான் திருவருள் புரிந்தனர். எ - று. (௨௪௮)

என்னையா ளீசனப் புதலவனு லெய்துமத்
துன்னருங் கோயிலுட் சோதிமா மயமெனு
மன்னினு னுலகுளோர் மாலைவெண் கவிகையோர்
பன்னுமா தவமுனிந் தலைவரும் பரசினார்.

(இ - ள) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான், அச்சிறுவனாலாகிய அச்சிறு கோயிலில், சிறந்த சோதிமயமாக வெழுந்தருளினார். அவவிலிங்க மூர்த்தியை நிலவுலகத்தாரும், வெற்றிமாலையும் வெண்கொற்றக்குடையு முடைய அரசர்களும், யாவருந் துதிக்கும் சிறந்த தவத்தையுடைய முனிசிரேஷ்டர்களும் துதி செய்தார்கள். எ - று. (உசகூ)

நின்னுடைக் குலமுதற் கிளையுளாய் நெடுநிலம்
பன்னுசீர் நந்தகோ பாலன்வந் தவதரித்
தன்னவன் பானறுந் துளவினு னவதரித்
தின்னறீர் பெருவளம் பெறுதியென் றேத்தினார்.

(இ - ள) உன் குலமுதல்வர்களாகிய உறவினருள்ளே, நெடிய வுலகந் துதி செய்யத்தக்க, சிறப்புற்ற நந்தகோபாலன் வந்தவதரித்து, அவனபால் மணங்கமழுந் துளவமாலையணிந்த கண்ணபிரான் அவதரித்து அதனால் துன்ப மற்ற பேரின்பமெய்துவாயென்று வாழ்த்தினார்கள். எ - று. (உ௩௦)

இற்றைநாண் முதனுனக் கிடுகுறிப் பெயர்கெடச்
சொற்றனன் சீகரன் பெயரெனச் சொலலினார்
மற்றுமைந் தனையடிக் கடிதொழா வாழ்த்தினார்
பொற்றடம் புவியுளோர் முனிவரும் போயினார்.

(இ - ள.) இன்று முதலாக உனக்குவழங்கிவரும் இடுகுறிப்பெயர் விலகும் படி, சீகரனென்று காரணப்பெயர் வழங்குபடி சொன்னோமென்று கூறினர்கள். மேலும் அடிக்கடி அவர்கள் அச்சிறுவனை வணங்கித் துதிசெய்தார்கள். அதன் பின்னர், அழகும் விசாலமுமுடைய அவவூராரும் முனிவர்களும் தத்த மிடம் போனார்கள். எ - று. (உ௩௧)

சீகரப் பெயருடைச் சிறுவனுந் திரைபொருந்
சாகரப் பெருநிலப் பலவளந் தழுவினு
ளாகரத் தினபமுற் றனுபவித் தணிபிறைச்
சேகரச் சடிலிதென் கயிலைசென் றணைமினுன.

(இ - ள.) சீகரனெனும் பெயருடைய அச்சிறுவனும் அலைகளெறியுங் கடலாற் சூழப்பட்ட பெரிய நிலவுலகிலுள்ள பலவகைச்செலவமுமெய்தி, இன்பத்திறங்கெல்லாம் வாசஸ்தானமாகவிருந்து அவற்றை நுகர்ந்து, அழகிய சந்திரசேகரஜடாதரனாகிய சிவபெருமானெழுந்தருளியுள்ள தென் கைலாயத் திற்போய்ச்சேர்ந்தனன். எ - று. (உ௩௨)

**கலிநிலைத்துறை.**

செறிந்த 'னசடை நிலவணி சென்னியோன் பெருமை
யறிந்து செய்குநர் பெறுவமற் றுங்கவ னலலாற்
பிறிந்து றப்பிரித் துரைக்குநர் யாவரே யறப்பாற்
செறிந்த சிந்தையர் யென்றன னருந்தவச் செலவன்.

(இ - ள்.) நெறிப்புற்ற சிறு சடையில் இளஞ்சந்திரனையணிந்த திருமுடியையுடைய சிவபெருமான் மகிமையையறிந்து செய்வோரெய்தும் பேறுகளை, அச்சிவபெருமானேயன்றிப் பாகுபாடு பெறும்படி வகுத்துச்சொல்லுவோர் யாவர்? ஒருவருமிலர்! தரும நெறியிற்படிந்த மனமுடையவர்களே! என்று சிறந்த தபோநிதியாகிய பரத்துவாசமுனிவர் கூறினார். எ - று. (உ௯௩)

முனிவ ரேழ்வரும வரன்முறை யிவ்வுழி மொழிந்தார்
கனியு மன்பினள கட்புன லரும்புறக் கனிந்தா
ளினிய சொலலிமற் றுங்கவாப பணிந்துற விரங்கிப்
புனித மாதவ ருளநெகிழ்ந் தாசிகள புகன்றார்.

(இ - ள்) முனிவர்களெழுவரும் கிரமமாக இப்படித்திருவாய்மலர்ந்தருளினார். கனிவுற்ற உண்மையன்புடைய அவ்விராச குமாரி கண்களில் ஆநந்த பாஷ்பஞ் சிந்தும்படி மனமுருகினவளாய், உபசார வார்த்தைகள் சொல்லி அம்முனிவர்களை வணங்கவும், புனிதமுடையவராகிய அம்முனிவர்கள் திருவுளமிரங்கி மனங்கனிந்து ஆசீர்வதித்தார்கள். எ - று. (உ௯௪)

ஏறு மாலவிடை யெம்பிரான றிருவரு ளெய்தி
யூறு நீங்கிய செல்வியாய்ப பெருவள னுவந்து
சீற ருஞ்சிவ புண்ணியத தொழுகுதி யென்று
ராற றிந்தநூ லந்தணத தருந்தவ ரகன்றார்.

(இ - ள்.) வைதிகமார்க்கமுணர்ந்த அந்தணர்களாகிய அருந்தவமுடைய சப்தமுனிவர்களும், பெரிய இடபவாகனமூர்ந்தருளும் எமது சிவபெருமான திருவருளைப் பூரணமாக வடைந்து, இடையூறு நீங்கிய செல்வமுடையவர்களாய விசேட போகங்களை நுகர்ந்து, சிறந்த அருமையாகிய சிவபுண்ணிய நெறியில் நடக்கக்கடவாயென்று கூறி, அவ்விடம விட்டுசென்றார்கள். எ-று.

திருந்து மாதவ ருரைத்தன வுளத்தொடுஞ் செறித்தாண்
முருந்த வாணகைக குமாரிமுன் னையிறகுழைந் துருகிப
பெருந்த டந்திரை நெடுநிலப பேரறம வளர்த்தா
டருந்த வககொழுந் தனையளால வளர்ந்தது தருமம்.

(இ - ள்.) திருத்தமாகிய சப்தமுனிவர்களும் கூறியவற்றை மனதில் வைத்துக்கொண்டு, மயிலிறகினடிக்குருத்துப்போன்ற ஒளிதங்கிய பற்களையுடைய அவ்விராச குமாரி முன்னினும அதிகமாக மனநெகிழ்ந்துருகி, பருத்து விசாலித்த அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகில் சிறந்த தருமங்களை வளர்த்தாள். தவத்தின் கொழுந்துபோன்ற அவ்விராச குமாரியால உலகில் தருமநெறி வளர்ந்தது. எ - று. (உ௯௬)

ஆல யம்பல வமைத்தன டிருக்குள மமைத்தாண்
மாலை நந்தன வனமெலா மொருங்குற வகுத்தா
ளோவி டுமபுனற கூவலு மெமபிராற குவப்பக
[illegible]லை யந்திரா புரைமணிக கலனகளு மளித்தாள்.

(இ - ள்.) பல சிவாலயங்களைப்புதுக்கினாள். அநேக திருக்குளங்களையும் புதுக்கினாள். வரிசையாக நந்தன வனங்களையும் ஒலிக்கின்ற நீர் நிறைந்த திருமஞ்சனக்கூவல்களையும் ஒன்றாகப்புதுக்கினாள். எமது சிவபெருமானுக்குத் திருவுளமகிழும்படி காலையிலுதிக்கும் பால சூரியனைபோன்ற நிறந்தங்கிய இரத்தினங்களிழைத்த ஆபரணங்களையும் கொடுத்தாள். எ - று. (௨௫௭)

செஞ்சடைப்பரற் கினிதுறத் திருவிழாப் பலவு
நெஞ்சு றக்கணிந் தொருகுறை யில்லென நிரப்பி
மஞ்சு றுங்குழல் வேடமெய்ப் பொருளினா வருங்கா
லஞ்சி நெஞ்சழிந் தலமருந் தன்மைய ளானாள்.

(இ - ள்.) சிவந்த சடையையுடைய சிவபெருமானுக்கு இனிதாகப் பல திருவிழாக்களையும், மனமுழுதுங்கனிவெய்த யாதொரு குறையில்லையென்று சொல்லும்படி முடித்து, மேகநிறந்தங்கிய கூந்தலையுடைய அவ்விராசகுமாரி, சிவபெருமான் திருவேடமுடையவர்களாய, உண்மைத் தன்மையற்றவர்கள் வந்தபோது, அச்சத்தோடு மனமுடைந்து வருந்துந் தன்மையுள்ளவளானாள்.

இனிச்செ யப்படு தருமமொன் றிலலென யாவுங்
கனிந்த சிந்தையி னிரப்பினள் கருமவோ களைவான்
பனிப்ப சும்பிறைக் கண்ணியோன் றனையுளப் படுத்தித்
தனித்த யோகமு ஞானமுந் தமைழந்தன டையல்.

(இ - ள்) இனிச்செய்யத்தக்க தருமமொன்றில்லையென்று சொல்லும்படி தன் வினையின் வேரறுபடத்தருமங்களெல்லாவற்றையும் கனிந்த மனத்தோடு செய்து முடித்தாள். குளிர்ச்சிதங்கிய இளம்பிறையாகிய மாலையையணிந்த சிவபெருமானை மனதில் தியானஞ்செய்து ஒப்பற்ற யோகத்தினும் ஞானத்தினும் அவ்விராசகுமாரி மேன்மை பெற்றனள். எ - று. (௨௫௯)

அளவ றும்பெரும் பயனுகாந் தாடிருந் திரைநீர்
வளைநி லத்தினூழ் பிறபட வைகனீத் தொழித்துக்
கிளைம ணித்தனி மானமீச் சிறந்தனள் கெழுமித்
தளைய விழ்ந்ததண் பூமழை பொழிதரச் சாரவாள்.

(இ - ள.) அளவற்ற பெருஞ்செல்வத்தை யநுபவித்து, அசைந்துகொண்டிருக்கும் பெரிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த நிலவுலகத்திலுள்ள வினைப்பயன் அகலத்தக்க நாள்களைகழித்து நீக்கி, தொகுதியாகிய நவமணிகளிழைத்த விமானத்திலிவர்ந்து சிறப்புற்றவளாய மேன்மையெய்தி, இதழ்கள் விரிந்த குளிர்ந்த மலர்மழை சொரியும்படி செல்கின்றனள். எ - று. (௨௬௦)

கண்க ளாயிரம் பொறுத்தவன் கற்பக நாட்டுப்
பண்கொண் மென்சிறு குதலைய ரயினிபாதத் தெடுப்ப
வெண்கொண் மாதவர் முனிவர ரிமையவ ரியாரும்
விண்கொண் மாமணி மானமுற றயலுற மேவ.

(இ - ள்.) ஆயிரங் கண்களையுடைய இந்திரனது கற்பக நாட்டிலுள்ள இசைதங்கிய மெல்லிய சிறிய மழலைச்சொற்களையுடைய அரம்பா ஸ்திரீகள் சாமரமெடுத்து வீசவும், யாவரும் மதிக்கத்தக்க பெருந்தவசிகளும் முனிவா களும் தேவர்களுமாகிய யாவரும் மேம்பட்டுச் சிறந்த இரத்தினங்கள் பதித்த விமானத்தைக்கிட்டி அயலில் வரவும். எ - று. (உசுச)

பல்லி யக்குலை மாதிர மலைப்புறப் பாக
மெல்லி யற்குள தோழிய ரெதிரவர விரைக்கும்
புல்லி தழ்க்கம லாலய னரியொடும போற்றத
தொல்லை வானவன் கயிலைபுக் கிருந்தன டோகை.

(இ - ள்.) பல வாத்தியத்தொகுதிகளுந் திசைகளெல்லாம் அதிரும்படி யொலிக்கவும்; அவ்விராசகுமாரிக்குள்ள தோழிகள் எதிரே வரவும், மணங் கமழும் புறவிதழ்களையுடைய தாமரை மலரைக்கோயிலாகவுடைய பிரமன் திருமாலோடு துதி செய்யவும், மயிலபோலுஞ் சாயலுடைய அவ்விராசகுமாரி புராதனராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருக்கைலாயமெய்தினள்.

ஊழி யாயிர மாயிரம பிறபட வொருங்கே
வாழி வானவன் கயிலைவீற றிருந்தனண மகர
யாழெ னுஞ்சிறு குதலையா ளிருவாக்கு மெட்டாச
சூழு நூபுரப பங்கயச சேவடி தொழுதுயினருள.

(இ - ள்.) (பதினேழு நரம்புகளையுடைய) மகரயாழபோலும இசையை யுடைய மெல்லிய மழலைசசொலகூறும அவவரசகுமாரி, கணக்கிலலாத ஊழி காலங்கள் கழியுமட்டும சிவபெருமானெழுந்தருளியிருக்கும் திருக்கைலாய பதவியில் வீற்றிருந்து, திருமால் பிரமன இருவருக்குங் காணடற்கரிய கிண்கிணி யணிந்த தாமரைபோலுஞ் சிவந்த அப்பெருமான திருவடியின் கீழ ஆநந்த நித்திரை கொண்டனள. எ - று. (உசுரு)

தொகுத்த வாசடை யருந்தவச சூதனோ மடந்தை
வகுத்த பாகத்தன் புண்ணியம வானமுறை வழங்கப
பகுத்து ணர்ந்தனர் முனிவரா புளகமெய பனித்தா
ருகுத்த கட்புன லருமபுற வனபுமிக குவந்தார.

(இ - ள்.) கூட்டமான நெடிய சடையையுடைய அருந்தவம் புரிந்த சூத முனிவர், ஒப்பற்ற உமாபிராட்டியை வாமபாகத்திலுடைய சிவபெருமானுக் குரிய சிவபுண்ணியங்களை முறைப்படி கூறியருள, அதைக்கேட்ட நைமிசா ரணிய முனிவர்கள பாகு பாட்டுடன தெளிந்து சரீரம புளகித்துக்குளிர்ந்து ஆநந்தக்கண்ணீர விழிகளில் துளிக்கும்படி அனபுமிகுந்து களித்தார்கள. எ-று.

இந்தி யங்கடந் தொருவழிப் புலனிறுத தியலு
முந்தை மாதவச சூதமா முனிவரன முதன்மை
தந்த மாதவத தலைவிர்கா ணிலவணி சடிலத்
தெந்தை புண்ணிய மின்னமுங் கேண்மினென் றிசைப்பான்.

மான கர்ப்புறக் காவல ரவனைவல் லிருளிற்
போன போக்கடி துருவினர் போதலுங் காணூ
வேனை மாக்குலை யிவர்க்கென வாடகேச சுரர்மு
ன்ன சந்நிதி யெறிந்துசே றலும்பிடித் தசைத்தார்.

(இ - ள்.) அப்பெரிய நகரத்தின் புறக்காவலர்கள், பேரிருளில் அத்திருடனைப்பிடிக்க அவன் போன காலடியைத் தேடிக்கொண்டு சென்றபோது, அக்காவலரை அவன் கண்டு, அப்பெருங்குலையை இவர்களே யாப்பணமென்று, தனக்கெதிரேயுள்ள ஆடகேசுவரர் சந்நிதியில் வீசிக்கிட்டவும், அவர்கள் பிடித்துக்கொண்டு கட்டினார்கள். எ - று. (உஎ0)

கட்டு றப்பிணித் தொருந்தனிக் கவிகையோன் றிருமுன்
விட்டு றக்கழல் வேந்தனவ் வெருசினந் தொரீஇ விளம்ப
முட்ட றுத்தனர் கரத்தொடு காலதன் முடிவிற்
பட்டொ ழிந்தனன் றென்றிசைப் புலத்துளார் படர்ந்தார்.

(இ - ள்) கட்டுகளுழந்த விறுகதி ஒப்பற்ற ஏகசக்கிராதிபதியாகிய அம்மன்னவன் முன்னே விட்டவுடன், வீரக்கண்டாமணிதரித்த அம்மன்னவன் கடுங்கோபத்தோடு கட்டளையிடவும், அப்படியே அக்கள்வனுடைய கைகளோடு கால்களையும் அறுத்துவிட்டார்கள். அவ்வெட்டுண்ட காயத்தோடு துன்பப்பட்டுக்கொண்டிருந்து இறந்தான் இயமபுரத்திலுள்ள தூதுவர்கள் வந்தார்கள்.

மணிக்க யிற்றினாற் றளைத்தனர் தோளினில் வாங்கிப்
பிணித்தி றுக்கின ரிடித்தனர் பெரும்பி டரிடியக்
குணிறப் டுந்தெடுத் தடிந்தனர் தென்புலக் கோவேந்
தணிப்ப டக்கொடு விடுத்தனர் நோக்கினா னவனும்.

(இ - ள்) தோள்களைப்பாசக்கயிற்றினால் வளைத்துக்கட்டினார்கள் இறுகப்பற்றிக்கொண்டார்கள் பெரிய பிடருடையும்படி குத்தினார்கள் குறுந்தடிகளைச்சேர்த்தெடுத்துக்கொண்டு அடித்தார்கள் தென்றிசைக்கிறைவனாகிய இயமதருமனிடத்திற்கொண்டுபோய் விட்டார்கள். அவ்வியமனும் இவனைப் பார்த்தான். எ - று. (உஎஉ)

நோக்கு மந்தகன் சித்திர குத்தனை நோக்கி
யாக்கு புண்ணிய மிவற்குள தோவென வருள
வாக்கி னாலவ னுரைத்தன மனக்கொடு மறலி
வீக்கி விட்டதன் றூதரை நோக்குபு விளம்பும்.

(இ - ள்.) அவனைக்கண்ட இயமன் சித்திரகுத்தனைப்பார்த்து நற்பயனையுண்டுசெய்யும் சிவபுண்ணியம் இவனுக்கு உள்ளதோவென்று கேட்க, அச்சித்திரகுத்தன் வாயினால் கூறியவற்றை இயமன் மனத்திற்கொண்டு, அவனைக்கட்டிக்கொண்டு வந்து நிறுத்திய தன்னுடைய தூதர்களை நோக்கிச்சொல்லுகின்றான்.

காவி னற்பழங் கொடுசெல்லக் காவலர் கடுகி
விரசு றக்கண்டு வெள்விடை யவற்கெனப் போட்டா
னரனு வப்புறத் திருமுடி பொதிந்தன னதனா
னரக மெய்துறப் பெறுவனோ விடுகென நவின்றான்.

(இ - ள்.) திருட்டுத்தனத்தால் வாழைப்பழக்குலை யெடுத்துச்செல்ல, அதுகண்ட காவலாட்கள் விரைவாய் ஓடிவந்து நெருங்கக்கண்டு, இக்குலை வெள்ளிய இடபத்தையுடைய சிவபெருமானுக்கு ஆப்பணமென்று வீசினன். அதை ஆசசகாகவெடுத்துச சிவபெருமானை களிப்பெய்துமபடி அப்பெருமான் திருமுடியில அபிடேகித்தாாகள். ஆகையால இவன் நரகமடைவானேவிட்டு விடுங்கவென்று கட்டளையிட்டான். எ - று. (௨௭௪)

இறுக்கு பாசமவிட டவிழ்ந்தன ரெனனையா ளுடைய
முறுக்கு புனசடை முக்கணன கணத்தவா மொய்த்தா
ருறுத்து மாமணி மானமுய்த் தக்னறன் றுடனபோய்ச
செறுத்த பேரொளிக கயிலைபுக கிருங்கதி யெனறுன.

(இ - ள) உடனே கட்டியிருந்த கயிற்றைப்பிரித்து அவிழ்த்துவிட்டாா கள. என்னை யாளாகவுடைய முறுக்கிய சடையையுடைய திரிநேத்திரங்களை யுடைய சிவபெருமானுக்குரிய சிவகணங்கள நெருங்கி, சிறந்த நவமணிகள் பதித்த விமானத்தி லேறறிக்கொண்டு செலல, அவாகளோடு போய் ஒளிகளை யெலலாம அழிக்கத்தக்க பேரொளியுடைய திருக்கைலையையடைந்து அப்பத வியைப் பொருந்தினன. எ - று. (௨௭௫)

ஆதி காலமுற றருந்தவா யாவரு மடைந்து
போத விறந்தவா கந்தமா தனமெனனும பொருப்பி
னோதின மாதவ மியற்றுந்தன ரிருந்தனு மெழுந்து
நீதின மாதவக கணறுவ முனியவண் செனறுன.

(இ - ள) முறகாலத்தில முடிந்த அருந்தவம்புரிந்த பலரும ஒனறு சோ ந்து, மலாகள இதழவிரிந்து மலாகினற கந்தமாதனமெனனும பாவதத்தில், பெருந்தவஞ செய்தவாகளாயிருந்தபோது, நெறிதி நீங்கிய பெருந்தவமுடைய கணணுவமுனிவா புறப்பட்டு அவவிடத்திற்கு எழுந்தருளினா. எ - று. (௨௭௬)

செலலு மாதவா கருந்தவ ரெதிாபுகச சென்று
தொலலை ஞானமொழி வானமுறை யாவையுந தொகுத்தா
ரொலலை யிறுநொனாயந் தாசன மிருத்தின ருவந்தா
ரொலலை யெந்தலத் திருந்தருளீா வருதிரென றிசைத்தாா.

(இ - ள.) அப்படி யெழுந்தருளிய பெருந்தவசியாகிய கணணுவமுனிவ ருக்கு அத்தவசிகளெலலாரும எதிாகொண்டு சென்று, பணடைய சாத்திரப படி விதிமுறையே செய்யவேண்டிய உபசாரங்களையெலலாஞ செய்தவா களாய, அதிசீக்கிரத்தில அழைத்துவந்து ஆசனத்தில வீறறிருக்கச்செய்து மனங்களித்து, தேவரீா எங்கிருந்தெழுந்தருளினீரென்று கேட்டாாகள. எ-று.

மருவு தாமரை நானமுக னுலகத்து வைகி
வருது மெனறனு மருந்தவ மாமுனித தலைவ
ரிருநி லத்ததுமற றதிசய முண்டுகொ லெனறுா
கருணை யொருருப பெற்றனன கணறுவன விளமபும.

(இ - ள.) தாமரை மலரிலெழுந்தருளிய சதுர்முகப்பிரமனுடைய சத்திய லோகத்தில வாழ்ந்திருந்து வருகின்றேமென்றவளவில, அருமையாகச்சிறந்த தவசிரேஷடாகளெலலாரும, நிலவுலகத்தில ஏதேனும அறபுதமுணடோவென வினவினாாகள. திருவருளேபோா வடிவமைந்ததுபோனற கணணுவமுனிவர் கூறினாா. எ - று. (௨௭௮)

சிறந்த மாளவ தேயமென் றபெருந் திருநாட்
டறந்தி ருந்துகல் யாணியென் றொருநக ரதன்பால்
மறந்த ருந்தொழில் வயிணவ னென்றுமவல் விருளிற்
கறங்கெ னச்சுழல் காக்கவ னென்றுமோ ரிருவர்.

(இ - ள்) சிறந்த மாளவமென்றொரு தேசமுண்டு. அவ்வளர்ந்தோங்கிய பெரிய நாட்டிலே, தருமநெறிதழைத்தோங்கும் ஒப்பற்ற கல்யாணியென்றொரு நகரமுள்ளது. அந்நகரத்திலே பாவச்செயல்களையுடைய வைணவனென்றும், நடுராத்திரியில் காற்றுப்போலச் சுழன்றுகொண்டிருக்கும் காக்கவனென்றும் சொல்லத்தக்க இருவருண்டு. எ - று. (உஎகூ)

மரபி னோங்கிய வணிகர்கோத் திரத்தவர் துதித்தார்
விரவு கூலமுற் றிருந்தருந் தொழிலினை விளைப்பார்
பரவு செம்பொனிற் படிந்திய சிந்தையர் நிதியோர்
வரவு நோக்கியன் னவர்கொடு நம்மனை வருவார்.

(இ - ள்) அவ்விருவரும் மரபின் மேம்பட்ட வைசிய மரபிற் பிறந்தவர்கள். கலந்துள்ள கடைத்தெருவிற் சென்றிருந்து, தானியப் பயிராகிய வர்த்தகத்திலே பாவத்தை விளைப்பவர்கள், மிக்க திரவியத்திற் செலுத்திய மனமுடையவர்கள். செல்வவான்களின் வருகையைக் கண்டிருந்து, அவர்களை யழைத்துச் சென்று தங்கள் வீட்டிற்கு வருவார்கள் எ - று. (உஅ0)

விருந்தெ னக்களித் தன்னவர்க் களவளாய் விளம்பிப்
பொருந்து போசன முதலிய வளமெலாம் புரிந்து
கருங்கொ ழுந்தெழப் படர்தரு கங்குலங் காலை
யருந்து யிற்சியி னங்கவ ருயிர்செகுத் தழிப்பார்.

(இ - ள்) அச்செல்வர்களுக்கு விருந்து செய்வதாக மனக்களிப்போடு கூடிச்சொல்லி, பொருத்தமாகிய போசன விசேடங்களெல்லாவற்றையுஞ் செய்து, இருட்கொழுந்தானது எங்கும் பரவியோங்கும் இராக்காலத்தில் அவ்வர்த்தகச்செல்வவான்களுடைய பெருந்தூக்கத்தில் உயிரை யொழித்துக் கொல்லுவார்கள் எ - று (உஅக)

கொன்று தம்மனைக் குழிப்படப் புதைத்தவர் சொர்ணந்
துன்று மாநிதி கவர்ந்தபின் றுயிலெழுந் தவற்போற்
சென்று வாணிபச் செய்தொழில் விளைத்தவ ணிருப்பா
ரின்று காறுமற் றவர்செயற் குண்டுகொ லெல்லை.

(இ - ள்) இப்படிக்கொன்று, தங்கள் வீட்டிலுள்ள குழியில் அழுந்தும்படி புதைத்துவிட்டு அவர்கள் கொண்டுவந்துள்ள பெரும் பொருளை யபகரித்து, அதன் பின்னர் அதிகாலையில் தூங்கி யெழுந்தவர்கள்போன்று, கடைக்குச் சென்று தாங்கள் செய்யும் வர்த்தகத்தொழிலைச்செய்துகொண்டு, அக்கடை வீதியிலிருப்பார்கள். இன்று வரையில் அவர்கள் செய்த தீச்செயலுக்கோர் எல்லையுண்டோ? எ - று (உஅஉ)

இனைய ரிப்பரி சியற்றுமந் நாணெடுஞ் சேணின்
றனைய கோத்திரத் தவர்நிதிக் குவையொடு மடைந்தார்
புனைய மாநக ராயர்தங் குலக்குடி புகுந்தம்
மனையின் மாநிதி யிறக்கினர் புகுந்தனர் வணிகர்.

(இ - ள்) இவர்கள் இப்படிச்செய்துவரும் அந்நாட்களில், அதிதூரத்திலிருந்து தங்கண் மரபினரே பெருந்திரவியத்தோடு வந்தார்கள். அவர்கள் அலங்காரமுடைய அந்தப்பெருநகரிலுள்ள இடைக்குலத்தார் வீட்டிற்சென்று அவ்வீட்டில் தாங்கள் கொணர்ந்த மிக்க திரவிய மூட்டையை இறக்கினார்கள். அப்பொழுது இவ்விருவணிகரும் அவ்வீட்டிற்குப்போனார்கள். எ - று. ()

உடன்புகுந் தனராங் கவர்க் கினியன வுதவிப்
படர்ந்த பாயலி னுடனிருந் தெரிகதிர் படப்போய்
மிடைந்த கங்குலிற் புகுந்தவர் விழிமுகிழ்ந் துறங்கக்
கிடந்த பாயலிற் சொக்கெறிந் தவருடன் கிடந்தார்.

(இ - ள்) அவர்களோடு உட்புகுந்து, அவர்கட்கு இனிய பொருள்களைக் கொடுத்து, விசாலமான அவர்கள் படுக்கையிற்றானே ஒன்றாயச்சயனித்திருந்து ஒளி வீசுஞ் சூரியன் மறைந்து இருண்மிகுந்த நடுராத்திரியிலெழுந்து அவர்கள் கண்களை மூடிக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்த படுக்கையில், சொக்குத்தூளைத் தூவிவிட்டு, அவர்களோடு மீண்டும் படுத்துக்கொண்டார்கள் எ - று. (௨௮௪)

அணிபசும்பொனிற் கிடந்தன யாவையு மகற்றிக்
கணித்தற் கருந்தம் பொருளெலா மூட்டுகக் கவர்ந்து
பிணிபடுத் துறி நெய்யெடுத் தகன்றனர் பெயர்ந்தார்
மணிகண் டத்தனா லயப்படி வனம்புக மறைந்தார்.

(இ - ள்) அழகிய பசிய பொன்னிற் சேர்ந்தவற்றையெல்லாம் அப்புறப்படுத்தி, கணக்கிடற்கு முடியாத திரவியங்களையெல்லாம் தங்கள்வீட்டிற் சேரும்படி யபகரித்துப் பொதியாக்கக்கட்டிக்கொண்டு, அவ்விடையன் வீட்டிலிருந்த உறியில் வைத்த நெய்யையும் அபகரித்துக்கொண்டு அங்கு நின்றும் புறப்பட்டு, நீலகண்டத்தையுடைய சிவபெருமான் திருக்கோயிலையுடைய ஒரு காட்டிற்குப் போக மறைந்தார்கள் எ - று (௨௮௫)

அன்ன கானகத் தயலெரி நெய்யினா லணைத்துச்
சன்னி திப்படக் கொளுத்தினர் தாங்கவர்ந் திட்ட
பொன்னனைத்தையும் பகுத்தனர் மீண்டனர் போதம்
மன்ன னாணையிற் காவலர் வழித்தலை மறித்தார்

(இ - ள்) அந்தக்காட்டின் அருகிலிருந்த நெருப்பைத் தாங்கள் கொணர்ந்த நெய்யினாலே எரித்து, அங்கிருந்த திருக்கோயிலில் விளக்கேற்றி, தாங்கள் களவாடிய பொருள்களையெல்லாம் பங்கிட்டுக்கொண்டு திரும்பிச்செல்லுகையில், அரசன் கட்டளையாற் காவற்றொழிலையேற்றுக்கொண்டவர்கள் அவர்களை நடுவழியிலே கண்டு தடுத்தார்கள் எ - று. (௨௮௬)

விழுந்து மேற்றிசைக் கடற்படிந் தெழுகதிர் வெய்யோ
னெழுந்த காலையி னடவியின் றிவ்வவர் நோக்கிக்
கொழுந்து விட்டெரி கோபவெந் தீயினர் குறுகி
யழுந்து றப்பிணித் தசைத்தன ரரசவை கொணர்ந்தார்.

(இ - ள்) மேற்றிசைக் கடலில் விழுந்து அமிழ்ந்த கொடிய கிரணங்களையுடைய சூரியன் மீண்டும் உதயமாகிய காலைப்பொழுதில், அக்காட்டினின்று இவ்விருவரும் வர அதைப்பார்த்து, ஒளிவிட்டுப்பிரகாசிக்கும் கோபமென்னுங் கடுந்தீபொருந்திய அக்காவலாளர் இவர்களை நெருங்கி ஒருசேரக்கட்டி யிழுத்துச்சென்று இராச சபையிற் கொண்டுவந்தார்கள். எ - று. (௨௮௭)

ஆயரிற்புகுந் தருமபொருள் கவர்ந்தன ரடவி
போயொளித்தனர் கவர்ந்திடும் பொருளொடும் புகுத
வேய சென்னெறித் தடம்புகுந் திடைமறித் திருந்தே
மாய மாப்பொடிக் கள்வர்மற் றிவரென வலித்தார்.

(இ - ள்.) இவ்விருவரும் இடையர் வீட்டினுழைந்து பெருந் திரவியங்களை யபகரித்து வந்து காட்டில் மறைந்துகொண்டிருந்து திருடிய செல்வத்தோடு வந்தபோது இவர்கள் நடந்துகொண்டுவந்த வழியிற்போய், நடுவே தடைப்படுத்தி வைத்திருந்தோர். இவர்கள் சொக்குப்பொடித்திருடர்கள் என்றிழுத்து விடுத்தார்கள். எ - று. (உஅஅ)

மண்ட மாப்படு புலியெனத் தெறுசின மன்னன்
கொண்டு போதிரென் றுரைத்தலுங் காவலர் கொடுபோய்க்
கண்ட கப்பழிப் பதகரை யக்கணத் தெல்லை
துண்ட மாக்கினர் சென்னியைக் குருதிநீர் சொரிய.

(இ - ள்) பெரும் போர்செய்யும் ஆண் புலிபோன்று கொல்லத்தக்க கோபமெய்திய அம்மன்னவன், இவர்களை யழைத்துக்கொண்டுசென்று வெட்டிப்போடுங்களென்ன உத்தரவு செய்தவுடன், காவலர்கள் அழைத்துச்சென்று பழியஞ்சாத பாதகத்துஷ்டர்களை அக்கணமே உதிரவெள்ள மொழுகும்படி தலையை வெட்டினார்கள். எ - று. (உஅகூ)

தென்றிசைப்படர் ரெய்துமுன் சிவகணத் தலைவர்
பொன்றயங்கிய மானமேய்த் தூடன்கொடு புகுத்தக்
கொன்றை வார்சடை யெம்பிரான் கயிலையிற் குறுகித்
தன்றனிப்பெரும் பதவியின் றிருந்தனர் சிறப்பார்.

(இ - ள்) தென்றிசையிலுள்ள இயம தூதர்கள் அங்கு வருவதன் முன்னரே சிவகணத்தலைவர்கள், பொற்காந்தியுடைய விமானத்திலேற்றிக்கொண்டு தங்களோடழைத்துப்போக, கொன்றைமலர்மாலைசூடிய நெடிய சடைமுடியுடைய எமது சிவபெருமான திருக்கைலாயத்தையடைந்து அவ்விறைவனுடைய ஒப்பற்ற பெரிய பதவியில் வீற்றிருக்கின்றார்கள். எ - று. (உகூ0)

எனவுரைத்தனன் கணாதவ னிருந்தவத் தலைவர்
மனனெகிழ்ந்தனர் கள்ளினெடுத்தநெய் வார்த்துப்
புனைவிளக்கமொன் றமைத்தலாற் கயிலையிற் புகுந்தார்
றனமுகைத்தவற் கரியவன் பெருமையார் ளப்பார்.

(இ - ள்.) என்று கணாதமுனிவர் கூறினார். பெரிய தவசிரேஷ்டர்களாகிய முனிவர்கள் மனமுருகினார். திருட்டிற்றேடிய நெய்யைச்சொரிந்து அலங்கரிக்கின்ற ஒரு தீபத்தைச்சிவாலயத்தில் வைத்தபடியால் அவர்கள் கைலாயகிரியிற் சேர்ந்தார்கள். அன்னவாகனமுடைய பிரமனுக்கும் எட்டாத சிவபெருமானுடைய மகிமா விசேடங்களை யார் அளவிட்டுரைப்பவர்? எ - று.

என்று மாதவ ருவந்தன ரீற்றிடை யெடுத்துப்
பின்றருஞ்சடை வாமதே வப்பெரும் பெயரோ
னன்று நப்பெறு மாதவத் தலைவிர்கா ணயப்பா
ளென்று கேட்குதி ரென்றவர் குளப்படுத் துரைப்பான்.

(இ - ள்.) என்று கூறிப் பெருந்தவசிகள் சந்தோஷித்தார்கள். இறுதியில் பின்னிய சடையையுடைய வாமதேவரென்னும் பெரிய பெயரையுடையவர். நன்றாகத்தேடிய சிறந்த தவத்தலைவர்களே! விருப்போடு ஒன்று கேட்பீர்களாக என்று அவர்கள் மனதிற் பதியும்படி எடுத்துச்சொல்லுவாராயினர். எ - று.

கொழித்த முத்தமிழ்க் குண்டல தேயமந் நாட்டி
னூழிச் சிறப்புடைக் கபித்தமென் றொருநக ரகன்பாற்
செழித்தெ ழுங்குல வளமையன் கண்டகன் றீயோ
னொழிப்ப தாரற மல்லதொன் றொழித்துற விரும்பான்.

(இ - ள்.) தெள்ளிய முத்தமிழ்களையுடைய குண்டலநாடென் றொன்றுண்டு அந்நாட்டிலே சிறப்புடைய கபித்தமென்றொரு நகரமுண்டு அந்நகரத்தில், செழித்தோங்கிய குலவளமையைந்தவனொருவன் கொடியோனும், கெடுப்பதாகத் தருமமல்லது பிறிதொன்றையொழிக்க விரும்பாதவனுமாயிருந்தான்.

பொதியுங் கங்குலின் வள்நகர்ப் பொருள்கவர்ந் தெடுக்குஞ்
சதியி னுறலைத் தொடர்க்குறும் பவத்தொடுஞ் சரிக்கு
மதிகொண் மாளிகை மற்றொரு மாநகர் புகுந்து
நிதிக வர்ந்தனன் போதலு மாயிரு ளிங்க.

(இ - ள்) இருண்மூடிய இராத்திரியில் அந்நகரவாசிகளுடைய திரவியங்களைத்திருடியபகரிப்பான வஞ்சனையால வழிப்பறித்துப்பறிக்கும் பாவத்தொழிலோடுழலவான். இவன் மற்றொரு பெருநகரத்திற்குச்சென்று சந்திரனைத் தவழும்படி யுயர்ந்த மாளிகையிலுள்ள திரவியங்களைத் திருடிக்கொண்டு செல்லும்போது இருளகன்று பொழுது புலரவும். எ - று. (௨௬௪)

மத்தி கேசுரர் சந்நிதித் திருக்குளம் வறந்து
பொத்து சேற்றிடைக் குழிந்தகிற் புதைத்தயல் போனான்
மொய்த்த காரிருட் கங்குலி னெடுப்பவந் துயன்றான்
வைத்த வெல்லையை மறந்துள மயங்கினன் மயங்கா.

(இ - ள்) அந்நகரிலிருக்கும் மத்திகேசுவராலயத்திருக்குளம் நீர்வறண்டு மறைந்துள்ள சேற்றிலே பள்ளந்தோண்டி தான் திருடிய திரவியங்களை அதில் புதைத்துவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டான். கரிய இருள்செறிந்த அன்றிரவு மீண்டும் அத்திரவியத்தை யெடுக்க முயற்சிசெய்தான். புதைத்துவைத்த இடத்தை மறந்துவிட்டு மயங்கிவிட்டான் அப்படி மயங்கி எ - று. (௨௬௫)

திருக்கு ளம்படு சேற்றக மனைத்தையுஞ் சிவன்பா
லுருக்குஞ் சிந்தையி னெடுப்பவர் போலெடுத் தொழித்தான்
பெருத்த மாநிதி கண்டெடுத் தன்னகர் பெயர்ந்தா
னருத்தி மாநலத் தளவொழி செல்வமுற் றனனால்.

(இ - ள்.) அத்திருக்குளத்திலிருந்த சேற்றினையெல்லாம், சிவபெருமானிடத்தில் உருக்கமுள்ள மனமுடையவர்கள் எடுப்பதுபோல எடுத்துவிட்டான். அப்போது தான் புதைத்துவைத்த பெரும் பொருளைக்கண்டெடுத்து அந்நகரத்தைவிட்டுத் தன்னகரத்திற்குச்சேர்ந்து விருப்பமாகிய சிறந்த நன்மைகளோடு அளவில்லாத செல்வமுற்றிருந்தான். எ - று. (௨௬௬)

ஈறற் லநதகன் றூதாவந் தெய்தி னரிவரை
மாறறி யெமமையாண் மணிககளத தவனகணத் தலைவர்
போறறி மானமுய்த துட்ன்கொடு கயிலையிற புகலும
வேறறு வானவ ரிவனசெயல் யாதென வினவ.

(இ - ள்.) அவனுடைய காலவிறுதியில இயம தூதாகள் வநது சோநதார்கள் எமமையாணட நீலகணடததையுடைய சிவபெருமானது கணததலைவாகள உடனே இதநூதாகளை யகற்றி, அவனைத துதிசெய்து தெயவவிமானததிலேற்றிததமமோடழைததுககொணடு திருககைலாயமெயதிய வளவில, வேறுகிய தேவர்கள இவன புரிநத சிவபுணணியம எததகைததெனறு வினவ.

பனிதத வாாசடைப பணணவன றிருககுளத தொளளி
கனிதத சிநதையிற கழிதா வெடுநதன னதனுற
றனிபபெ ருநதிருக கயிலைபெற றனனெனா சாறறக்
குனிதத பொறசிலை யரனைவா னவாகாங குவிததாா.

(இ - ள) குளிாநதுசீணடசடையையுடைய சிவபெருமான திருககோயிற குளததிலுளள சேறறை, கனிவுளள மனததோடு குளததிலிருநது நீககுமபடி வெளிப்படுததினுலதலால, ஒபபறற பெருமைதஙகிய இததிருககைலாய பதவியைபபெறறுனெனறு சொலல, அதுகேடட தேவாகள, மேருமலையை விலலாக வளைதத சிவபெருமானைததுதியானஞ்செயது தஙகள காஙகளைச் சிரமிசைககூபபினுாகள. எ - று. (உ௯அ)

என்ன வாறகவ னிசைபபதற கிறுகண் டிருநத
மனனு மாதவச சநானநது னோகனை வருபபா
னுனன ருமபுகழக காபால மெனவொரு நாடடி
னனன லமபடு வளநதரு குருநதமோா நகாம.

(இ - ள) எனறிவ்வகையாக அவ்வா தேவமுனிவா சொலலிமுடிப்பதைக கணடிருநத கிலேததுளள சாநதி பொருநதிய காபாலமெனறு சொலலபபடும ஒருநாடடிலே, நனமைகள விளைதறகுரிய வளபபஙகள பொருநதிய குருநதமெனறு சொலலபபடும ஒரு நகாமுணடு. எ - று. (உ௯௯)

உரைதத மாநகர்ச சோபன னெனுமொரு மறையோன
கரைதசசி நதைய னலகுர வுடனபடக கவலவா
னிரைதத மாநகா மனைதொறு மிரககுற மொருநாட
புரைதத மாவிகை யபபுறந தொருநகா புகுவான

(இ - ள) சொலலிய அநதச்சிறநத நகரததில சோபனனெனனும பெயர்கொணட வேதியனொருவனிருநதான் அவன வறுமைநோய தனனையுடைய அதனால மனமுருகி வருநதிபவனுகி, ஓசை மிககிருககும அநதபபெரிய நகரததில வீடுகளிலெலலாம இரநதுணடு திரியும ஒரு நாளில அநநகரததைப போன்ற வேறொரு நகரததின ஒரு மாளிகையைசசேருமபடி. எ - று. (௩00)

எய்து மாநகாக கிடைபபடு நெடுநெறி யெதிரநதான்
சைவ தேசிகன றனிபபெருந தவததினோா தலைவன
றுயய நான்மறைச சோளபுட பததுறை குரவோா
தெயவ கோததிரத துளாயன ரேவடி தெரிநதான.

(இ - ள்.) அவனடைந்த பெரிய நகரத்தினிடையிலுள்ள நெடிய வழியில் சிவாசாரியராகவும், ஒப்பற்ற பெருந்தவத்தலைவராகவும், புனிதமாகிய நான்கு வேதங்களை யோதும் சோளபுட்பமெனும் நகரத்தில் வாழ்கின்ற சிவாசாரியர்களின் சிவகோத்திரத்தவதரித்தவராகவும் ஒருவர் எதிர்ப்பட்டனர். அவர் பாதங்களைச் சோபனன் தரிசித்தான். எ - று. (௩0க)

இவனே யாங்கவ னெதிர்ந்திடு மெலலையி னிடையே
கவர்கொ ழுந்துளி நெடுமழை கவிழ்த்தசலுங் காணுத்
தவமு டைத்தனித் தேசிகன் றனனெடு மறையோ
னவனு மாங்கணோர் மன்றமுற் றேறின னடைந்தான்.

(இ - ள்.) இச்சோபனனை அச்சிவாசாரியர் எதிர்கண்டாற் கிடையிலே விசேடித்த நீர்த்துளிகளால் மூடிய பெரு மழை சொரியவும், அம்மழையைப் பார்த்துத் தவம்பொருந்திய ஒப்பற்ற அசசைவாசாரியருடன் சோபனனெனும் அந்தணனும் ஒரு வீட்டின் வாசலிலேறிப்போயினன. எ - று. (௩0உ)

அடைந்த காலையி லந்தணன் குரவனை யைய
மிடைந்த நல்குர வுழந்தன னிரங்குதல் வேண்டு
மிடைந்து ருவகை யிம்மையு மறுமையு மெய்தத்
தடைந்த வனபொடு மொருவழி சாற்றுதி யென்று.

(இ - ள்) சேர்ந்தபோது சோபனனெனும் அந்தணன் சிவாசாரியரை நோக்கி, ஐயனே! நெருங்கிய தரித்திரத்தினால் வருந்தியுள்ளேன. கருணை புரிய வேண்டும். இடையில் அகலாதவண்ணம் இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் பெறும்படி மிகுந்த அன்புடன் அடியேனுக்கு ஒரு வழி சொல்லவேண்டுமென்று. எ - று. (௩0௩)

இரந்து வீழ்ந்தடி யிறைஞ்சினன் றேசிக னிரங்கி
யரங்கு நல்குர வொழிந்தவ னிருங்கதி யடைவான்
புரங்க டந்தவ னறபெறு நலவழி புகன்றன
பரமப குந்தறி தேசிகன பகர்ந்தது பகர்வாம்.

(இ - ள்.) யாசித்து, நிலமிசைப்பணிந்து அவர் பாதங்களை வணங்கினன். சிவாசாரியர் மனங்கசிந்து, வருந்துகின்ற தரித்திரமகன்று அவன் பெரிய பதவியை யெய்தும்படி திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமானால் கொள்ளத்தக்க ஒரு நல்ல வழியைப்போதித்தனர். பரத்தினறன்மையை விரித்துணர்ந்த சிவாசாரியர் கூறியதைச்சொல்லுவோம். எ - று. (௩0௪)

யாம ருச்சனை புரிந்திடு மீசனுக் கென்ன
நாம நந்தன வனப்பணி நாடொறு மியற்றித்
தேம ருமபுதுப பனிமல ரளித்தியேற் றிமை
போம கன்றர னருளினு லிருங்கதி புகுவாய.

(இ - ள்.) நாம் பூசிக்கும் சிவபெருமானுக்கென்று பெயர்பெற்ற திருநந்தனவனத் திருப்பணியை நாடோறுஞ்செய்து, தேனுறுளிக்கும் குளிர்ச்சி தங்கிய அன்றலர்ந்த மலர்களைக்கொடுத்து வருவாயாகில், உனக்குற்ற துன்பமகலும். அகலப்பெற்று சிவானுக்கிரகத்தால பெரிய சிவகதியிற் சேர்வாய். எ - று. ()

ஈது திண்ணமென் றுரைத்தனன் றேசிக னிவனுஞ்
சீத வார்புனல் குடைந்தபின் காலைபிற சென்று
நாத னுக்குரித் தாகிய நாண்மலர் தொகுப்பான்
வீதி நந்தன வனப்பணி விடைக்குரித் தானோன்.

(இ - ள்.) இதுவே சத்தியமென்று சிவாசாரியர் கூறினர். இசசோமன னும் அதிகாலையில் குளிர்ச்சிவாய்ந்த நெடிய நீரில் மூழ்கிய பிறகு சென்று, சிவபெருமானுக்குரித்தாகிய அன்றலர்ந்த மலர்களைத் தொகுக்கும்படி ஒழுங்கா யுள்ள திருநந்தனவனப் பணிவிடைக்கு உரித்தானவனாயினன். எ - று. (௩௦௬)

நார நாண்மலர் மல்லிகை சண்பக நறும்பூ
வேரி நாறுசெவ் வந்திமட் டவிழ்கர வீரம்
பாரி சாதமென் கொழுந்தொடு வலம்புரி பலவு
மூரி வாய்நெகிழ்ந் தலர்தருங் காலமுற் றியதால்.

(இ - ள்.) புதிய நாரத்தைத மலர்கள், மல்லிகை மலர்கள், மணங்கமழுஞ் சண்பகமலர்கள், தேன்மணஞ்சொரியுஞ் செவ்வந்தி மலர்கள், வாசனை வீசும் அலரி மலர்கள், பாரிசாத மலர்கள், மெல்லிய மருக்கொழுந்தோடு நந்தியா வர்த்த மலர்களாகிய பல மலர்களும் வலியுள்ள இதழ்கள் விரிந்து மலரும் பருவம் நேர்ந்தது. எ - று. (௩௦௭)

எண்ணி யோர்ந்தன னினியெடுத் தளிக்குது மென்னுடா
புண்ணி யப்புனல் குடைந்துநீ றணிந்தனன் புகுந்தான்
கண்ணி வாய்விடுங் காலையி னெடுத்தனன் கருதிப்
பண்ண வர்க்கெனப் பழுதறுத் துதவினன் பனனுள்.

(இ - ள்.) யோசித்துணர்ந்தவனாய் இது முதல் மலர்களை யெடுத்துக் கொடுப்போமென்று, புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து திருநீறணிந்து நந்தனவனத்திற் புகுந்தனன். அரும்புகள் விகசிக்கும் சமயத்திலெடுத்து, சிவபெருமானுக்கு அர்ப்பிதமென்று கருதிக் குற்றமொழித்து வெகுகாலம் கொடுத்து வந்தான. எ - று. (௩௦௮)

ஈச னுக்கிவ னின்னண மலரெடுத் துதவ
வாச வன்புகுந் திறைஞ்சியம் மறையவற் போற்றி
யேசி லாரமு தளித்தன னிருநிதி யீட்ட
மாசை யெவ்வள வவ்வள வவற்கென வளித்தான்.

(இ - ள்.) இவன் இப்படிச் சிவபெருமானுக்கு நந்தனவனத்திலுள்ள மலர் களை யெடுத்துக்கொடுத்துவர, இந்திரன் அவ்வேதியனிடமெய்தி வணங்கித் துதித்து, குற்றமில்லாத தேவாமிர்தத்தையளித்து, பெருநிதிரவியக்குவியலையும் அவ்வேதியனுக்கு எவ்வளவு ஆசையோ அவ்வளவும் அவனுக்குக்கொடுத்தான்.

அளித்த மாநிதிப் பெருக்கொடு மலைகட னிலத்துக்
களித்த சிந்தையி னுளபல கழித்தலை யாகி
யொளிப்ப சுமபொனுட் டேகுதி யெனவுரைத் தகன்றான்
றளித்த நாண்மலர்க் கற்பக நாடுடைத் தொல்லோன்.

(இ - ள்.) இப்படி யளித்த தேனசிந்தும் அன்றலர்ந்த மலர்களையுடைய கற்பகநாட்டிற்குத் தலைவனாகிய இந்திரனளித்த சிறந்த தனக்குவியலுடன்

அலைகளையுடைய கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் களிப்பெய்திய மனத்தினனாய்ப் பல நாட்கள் வாழ்ந்து, ஒளி வீசும் பொன்மயமான தேவலோகமடையக் கடவாயென்று கூறிச்சென்றனன். எ - று. (௬௧0)

வருந்து நல்குர வொழிந்தன னொருதிரு மறையோ
னருத்தி கூர்தரு மரனுடைப் பணிவிடை யயரான்
குருந்த னிதத்துணைச் சேவடி தொழுதுளங் குழைவான்
மருந்த நாண்மல ரிடையறாப் பற்பகல் வழங்கும்.

(இ - ள்.) ஒப்பற்ற சிறந்த அவ்வந்தணன், அதுவரையில் தன்னைத் துன்பப்படுத்திய வறுமையினின்று விலகி, அன்பு மிகுந்த சிவபணிவிடைகளிற் சோர்விலலாதவனாய்த் தனக்குபதேசித்த சிவாசாரியரின் ஒப்பற்ற உபய பாதங்களையும் வணங்கி, மனக்கனிவோடு மணமுள்ள புதிய மலர்களை இடைவிடாது பலநாள் கொடுத்து வந்தனன். எ - று. (௬௧௧)

என்னை யாளுடை யெம்பிரான் றிருவரு ளிரங்கி
யன்னை பங்குற மழவிடை மேலெழுந் தருளி
மன்னு நான்மறை யந்தணன் மனங்குழைந் துருக
முன்ன ரெய்தினு னுங்கவன் முறைமுறை பணிந்தான்.

(இ - ள்.) என்னை யாளாகவுடைய எமது சிவபெருமான் திருவருள்மிகுந்து, உமாதேவியார் இடப்பாகத்திலிருக்கும்படி இளமைவாய்ந்த இடபவாகன மூர்ந்தருளி, நிலைபெற்ற நான்கு வேதங்களையுணர்ந்த வேதியன் மனம் நெக்குவிட்டுருகும்படி பிரசன்னமாயினார். அது கண்ட அந்தணன் முறை முறையாகப் பணிந்தனன். எ - று. (௬௧௨)

அழுத னன்சிரித் தாடினன் பாடின னுகித்த
தொழுத னனகளி துளங்கினன் மயிர்ப்புறந் துள்ள
வெழுத ருங்குணித் தோடுறு மீளுறு மிடையே
விழுத ருங்கரங் கொட்டுறு மின்னணம் வியந்தான்.

(இ - ள்.) சந்தோஷமிகையால் அழுதனன். நகைத்துக் கூத்தாடினன், துதி செய்து கொண்டு வணங்கினன். களிப்பெய்தியவனாய் மயிர்க்கூச்செறிய எழுந்திருப்பான். உடலை வளைத்துக்கொண்டோடுவான். மீண்டும் திரும்புவான் இடையே கீழே விழுவான், கைகளைத் தட்டுவான். இப்படி யதிசயித்தான்.

அளகை யாளியை யெம்பிரான் வரவழைத் தருளி
யுளநெ கிழ்ந்திரு நிதிக்குவை யுகவென வருளி
வளநு கர்ந்துநாள் பற்பல கழிந்தபின் வாராப்
புளக மெய்தியக் கற்பக நாட்டகம் புரப்பாய்

(இ - ள்) எமது சிவபெருமான், அளகேசனாகிய குபேரனை வரவழைத்துக் கருணை கூர்ந்து திருவுளமிரங்கி, பெருந்திரவியக் குவியலைக்கொடுக்கவெனக் கட்டளையிட்டு, போகங்களை யனுபவித்து அநேக நாட்கள் கழிந்த பின்னர், மயிர்க்கூச்செறிய வந்து அத்தேவலோகத்தை யரசு நடத்துவாய். எ - று. ()

கைத்த லத்துணை கற்பபுற வொருதனிக் கருதிப்
பத்தி யிப்படி புரிந்தெவா பணிவிடை பயின்றா
சித்த நெக்குள மகிழ்ந்தனம் யாமெனச் செப்பா
வத்த னுயிரம் பெயரினு னெதிர்தொழ வகன்றான்,

(இ - ள்.) உன்னிருக்கைகளுந் தழும்பெய்தும்படி, ஒப்பற்ற ஒருவராகிய நம்மைத் தியானஞ்செய்து, இத்தனைப் பத்தியோடு பணிவிடை செய்தோர் யாவர்? அதனால் நாம் திருவுளங்கனிந்து மனமகிழ்ந்தோமென்று திருவாய் மலர்ந்தருளி, ஆயிரந் திருநாமங்களையுடைய சிவபெருமான், அவ்வந்தணன் பணிந்துகொண்டிருக்கையில் அந்தர்த்தானமாயினார். எ - று. (ருசச)

மறைவ லாளனுந் தேசிகற் றொழுதுற வணங்கி
யிறைவ நின்னரு ளியற்கையி னெம்பிரா னிரங்கி
வறிது நீத்தனன் பவித்திர மடைந்தனன் வானோ
முறைவ ணங்குறப் பெற்றனன் யானென மொழிந்தான்.

(இ - ள்.) அந்தணனும் ஆதிசைவரைச்சிரமிசைக் கைகுவித்து, அஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, தலைவரே! தேவரீருடைய திருவருட் பெருக்கத்தால் எமது சிவபெருமான் திருவுளங்கனிந்து என் வறுமையை யகற்றினார். அதனாற் புனிதமெய்தினேன். தேவர்கள் கிரமமாக என்னை வணங்கும்படி பெற்றுக்கொண்டேனென்று தெரிவித்தான். எ - று. (ருசரு)

முற்ப ணிந்தரு டேசிகன் மொழிதிற மபலனாய்ப்
பற்ப கற்பட்ட பணிமலர்ப் பணிவிடை பயிலாச்
சிற்ப ரந்தெளிந் துணர்ந்தனன் கடைமுறை சென்றான்
கற்ப கத்தரு நிழலர சிருந்துளங் களித்தான்.

(இ - ள்.) முதலில் தனக்குக் கட்டளைதந்த சிவாசாரியன் மொழிகளைத் தவறாதவனாய், அநேக நாள் கழிய, குளிர்ச்சி தங்கிய மலர்ப்பணிவிடைசெய்து, ஞானமயமான சிவபெருமான் நிலைமையைத் தெளிவாயுணர்ந்தவனாய்த் தேக முடிவிற்சென்று, கற்பகமர நிழலில் வீற்றிருந்தரசுசெய்யும் இந்திர பதவியெய்தி மனமகிழ்ந்தான். எ - று. (ருசசா)

வான மங்கையர் சாமரை யிருபுறம் வருட
நான நாண்மல ரோதியர் நாடக நடிப்ப
வேனை வீணைய ரின்னிசை செவிதொறு மிறைப்பக்
கான வார்குழற் சுந்தரி கட்கடை நடத்த.

(இ - ள்.) தெய்வ நங்கையர் இருபுறமும் சாமரை யிரட்டவும், கஸ்தூரி யணிந்த அன்றலர்ந்த மலர்களையணிந்த கூந்தலையுடையவர் நடிக்கவும், வேறு புள்ள கின்னரர்கள் இனிய கீதங்களை இரு செவிகளிலும் நிறைக்கவும், பரிமளந் தங்கிய நீண்ட கூந்தலையுடைய இந்திராணியானவள் கடைக்கட்பார்வை செலுத்தவும். எ - று. (ருசஅ)

தெய்வப் பேரர சின்னண்ஞ செலுத்திய பின்னர்ச்
சய்வத் தேதிகன் றிருவரு டரப்பெற்று மறையோன்
மய்வைக் குங்களத் தரனுடைக் கயிலைபோய் மறைந்தான்
பய்வைக் ருமபொறிப் பாமபணி நூபுரப் பதத்தின்.

(இ - ள்.) தெய்வலோகத்திய பெரிய அரசாட்சியை இவ்வண்ணம் நடத்திய பின்னர், சிவாசாரியார் திருவருள் புரியப்பெற்ற அவ்வேதியன், விடம் பொருந்திய கண்டத்தையுடைய சிவ்பெருமானுக்குரிய திருக்கைலாயகிரியிற் சென்று, படமமைந்த புள்ளிகளையுடைய அரவாபரணமுடைய சிலம்பணிந்த பாதங்களிற் கூடி மறைந்தனன். எ - று. (ருசகூ)

## மேற்படி வேறு.

௬.தூ ரைத்தருள் சதானந்தன் வைத்த விடையே
யாதி காலமுனி யத்திரிய றைந்த னனரோ
பாத ககங்கள் பறிதமெறிவ தக்கதை யையம்
மூது ணாந்தவ னுணாத்திய துமக்கு மொழிவாம்.

(இ - ள) இவ்வண்ணங் கூறியருளிய சதாநந்தமுனிவா முடித்தவுடனே, பாவங்களாகிய கேளகளைப் பிடுங்கி யெறியத்தக்க ஒரு சரித்திரத்தை முற்காலத் தவராகிய அத்திரிமுனிவர் மொழிந்தனா. அச்சரித்திரத்தை முற்றுணாவின ராகிய அம்முனிவா மொழிந்தவகையே உங்கட்குச் சொலகினறேம். எ - று.

சோதி டபபெயரி னுள்ளதொரு தொல்லை நெடுநாட்
டோதி டுஞசருவ சித்துல களிக்கு முறவோன்
சீத வெண்குடை யவறகுவரு செல்வா புகலிற
பாத ககொடிய ரைமபதி ணிரட்டி படுவாா.

(இ - ள்.) சோதிடமெனனும பெயாகொணட பழமையாகிய ஒரு பெரிய நாடுணடு. அந்நாட்டினையரசு செய்யும் சம்பநதமுடையவன் யாவருப்புகழத் தகக சர்வசித்தெனனும் பெயருடையவன. குளிர்ச்சி தங்கிய சந்திரவட்டக் குடையையுடைய அம்மனனனுககுப்பிறந்த புதலவரைச் சொல்லவேணடுமா யின், பாவஞ்செய்யுங் கொடியோர்களாய நூறுபெயாகளாகும். எ - று. ()

அன்ன பாதகரை யன்றியா னொடு பழகும
பின்னொ ருததனா சறகினிது பெறற மதலை
முன்னு ரைததவா முடிததபழி பாத கமெலாங
தொனனி லததளவை சொலலினவை சொறறு முடியா.

(இ - ள்) அததிறதத பாவிகளையல்லாமல சிவபெருமான பால அன்புடையவனுகவும, அவவரசனுககு இனிய புத்திரனுகவும, அந்த நூறு புதல்வாகட்கும் இளையவனுகவும ஒருவனிருநதான. முனனேசொன்ன நூறுபுதலவாகளும பழமையாகிய இநநிலவுலகததில செயது முடிதத பழிபாவஙகளையெலலாம அளவிட்டுரைகக வேணடுமானுல அவை சொலலிமுடியா. எ - று. (௩௨௨)

சிநது ரக்களி மதாசல விறறறி கிரியான்
மைநத ரிபபடி பவபபடா வளாபப துணரா
நொநத சிநதையி னுடஙகின னுடஙகி மருளா
வெநது செயதுமென வெணணிமன மீட ழிகுவான்.

(இ - ள.) யானையாகிய களிப்புற்று மத சலஞ் சொரியும் மலையையும் வெற்றிதங்கிய ஆககினைசககிரததையுமுடைய சாவசித்தென்னும் அமமன்னவன், தன் நூறுபுதலவாகளும இப்படிப் பாவமாகிய துனபததை வளர்ததுவருவ துணர்நது வருநதிய மனததோடு துவளுதலடைநதான், அப்படிததுவணடு மயஙகி, இதற்கேது செய்வோமெனறு கருதி மனவலிகுனறினவனுனன். எ - று.

அங்கி லேததன தரக்கனை யழைததி வரைநீ
தினமெ னசசின வரக்கனவா தீமை யுணராப்
பின்ன வாபபட விடுக்கின னகனறு பெயாவான்
மன்னு முததர நெடுநதிசையின வநத னனரோ.

(இ - ள்.) அத்தருணத்தில் தனக்கு வேண்டிய ஓரசுரனை வரவழைத்து, இப்புதல்வர்களை நீ தின்றுவிடுகவெனக் கட்டளையிடவும், கோபமுள்ள அவ் வசுரன் அப்புதல்வர்களுடைய கொடுமையையறிந்து, அதன்பின் அவர்களைத் தன்னிருகைகளில் அகப்படும்படி யிடுக்கிக்கொண்டு அங்கிருந்து நீங்கிச்சென்று நிலைபெறுன வடதிசையில் வந்தான். எ - று. (௬உச)

சுர மற்றிடு சினத்தொடு மிலங்கு மிடங்கே
தார முத்தர மடைந்திடு தனிக்கு மரர்கால்
வாரி யெற்றின னடித்தன னம மைந்த ருடலைச்
சோரி கக்குற வெறிந்துதொடை கொட்டி பெருவான்.

(இ - ள்.) அன்பென்பதற்ற கோபத்தோடு, பிரகாசிக்கின்ற இமயமலைக் கருகிலுள்ள கேதாரமென்னும் க்ஷேத்திரத்திற்கு வடதிசையிலடைந்து, ஒப் பற்ற அவ்விராசகுமாரர்களுடைய காலைப்பிடித்திழுத்து அறுத்து அடித்து, அவர்களுடலை உதிரமொழுகும்படி வீசித் தொடைதட்டி யாப்பரித்தான்.

காசி கச்சிமரு தூரரு ணைகா ளத்திமற்
றேசி றிலலைகே தாரங்கு டந்தை யெம்மோர்
மாச கற்றிய விருத்தகிரி சீகு லவரை
பேசு மிப்பதி விழுந்தனர் பெருங்கு மாரே.

(இ - ள்.) (அப்படி வீசிய காலத்தில்) காசி காஞ்சி திருவிடைமருதூர் திருவருணை திருக்காளத்தி குற்றமற்ற திருத்தில்லை திருக்கேதாரம் திருக்குட ந்தை எம்மவரது குற்றங்களை யொழித்த விருத்தாசலம் மலவிகார்ச்சுனமெ ன்று சொல்லும் இத்தலங்களில் விழுந்தார்கள். எ - று. (௬உரு)

இத்த லத்திடை விழுந்துயி ரிறந்த குமரரக்
கத்த லப்பெருமை யிறசிவனி ரங்கி யருள
மொய்த்த செம்மணி விமானமெதி ரமுந்து றுதலாற்
சித்தி ரக்கயிலை யிற்கதி சிறந்த னரரோ.

(இ - ள்.) இந்தத்தலங்களில் வீழ்ந்துயிரிறந்த அப்புதல்வர்கட்கு அவ்வத் தல மகிமையாற் சிவபெருமான் திருவுள்ளமிரங்கி யருளவும், மாணிக்கங்கள் நெருங்கிய தெய்வவிமானம் நேரேகாணப்பட்டமையால், அற்புதந்தங்கிய திருக்கைலாயபதவியை யெய்திச் சிறப்படைந்தார்கள். எ - று. (௬உ௬)

என்ன மாதவ ரியாவரு மிருந்து கயிலை
முன்னை வானவ னியற்கையை மொழிந்து களிகூர்
மன்னு சிந்தனை நெகிழ்ந்தனர மகிழ்ந்த னர்மதிப
பின்னல் வேணிய னருட்டகைமை பேச வெளிதோ.

(இ - ள்.) என்று பெருந்தவசிகளெல்லாரும் ஒன்று கூடியிருந்து திருக் கைலாயகிரியில் எழுந்தருளியிருக்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் தன்மையை யெடுத்துச்சொல்லி நிலைபெறுன ஆநந்தமிகுந்து மனங் கனிந்து மகிழ்ந்தார்கள். சந்திரனையணிந்து பின்னியசடையையுடைய சிவபெருமானு டைய சிறப்பு சொல்ல எளியதோ? எ - று. (௬உ௭)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈதவ ரெடுத்துக் காட்டி யிசைத்தன விசைத்தே மின்னுங்
காதையொன் றுளது சொல்லக் கேட்குதி ரென்னக் காட்டி
வேதநான் முகறகொப் பாய மாதவர் வினவிக் கேட்பச்
சூதமா முனிவன் சொற்ற தின்னமு மெடுத்துச் சொல்வோம்.

(இ - ள்.) அத்தவசிகள் இப்படி யெடுத்துச்சொல்லியதை முற்றுஞ் சொன்னோம். இன்னும் ஒரு சரிதமுள்ளது. அதனையுஞ்சொல்லக் கேட்பீர்களாக வென்றுரைத்து, வேதங்களை யுணர்ந்த பிரமதேவனுக்குச் சமானமாகிய நைமிசாரணிய முனிவர்கள் வினவிக்கேட்க, சூதமகாமுனிவர் சொல்லியதை இன்னும் விளக்கிச்சொல்லுவோம். எ - று. (௩௨௧)

எடுத்துயர் கொடிக்கோட் டிஞ்சி விராட்டர மென்னு நாட்டுட்
படுத்திய கனக மென்னு மாநகர்ப் பதியுட் டோன்றி
மடுத்தெழு கங்குற் களவன் வளருகிர்ப் புலியே றன்னா
னிடுக்குற வுரப்பிச் சொல்லுஞ் சித்திர பானு வென்போன்.

(இ - ள்.) உயர்ந்து துவசங் கட்டியிருக்கும் சிகரத்தையுடைய மதில் சூழ்ந்த விராட்டிரமென்னு நாட்டில் விளங்கிய கனகமென்னும்பெரிய நகரத்திற் பிறந்திருந்த இராத்திருடனும், கூரிய நகங்களவாய்ந்த ஆண்புலியைப்போன்றவனுமாகிய பலரும் அஞ்சத்தக்க அதட்டிப்பேசுஞ் சித்திரபானுவென்பவன்.

வரிகழ லரசற் கோர்ந்து வரன்முறை மரபிற் சொல்லும்
புரகித னகத்துப் புக்குக் கரந்தனன் போத லேகி
யிரவிருண் மறையோன் கண்டு பிடித்தனன் விளித்த லோடு
மரமெறி தடக்கை வாளா லெறிந்தன னவனை யன்னான்.

(இ - ள்.) வரிந்து கட்டிய வீரகண்டாமணி தரித்த அரசனுக்கு நன்குணர்ந்து முறைப்படி பஞ்சாங்கமோதிவரும் புரோகிதன் வீட்டில் (அத்திருடன்) ஒருநாள் புகுந்து மறைந்து செல்வதை அப்புரோகிதன் பார்த்து, இருள்கூடிய அவ்விரவில், கண்டு பிடித்தழைத்தவுடன், அக்களவன் புரோகிதனைத் தன் கையிற்றாங்கிய விசாலமான வாளாயுதத்தால் வீசினன் எ - று. (௩௩௧)

பெருநக ரரவங் கேளாப் பெருங்கொடை யரசர் கோமான்
வருதலு முணர்ந்தான் மறலுறக் காவலர் வடமி னென்னா
வருநெறி மறித்துப் போன கள்வனைக் கொணர்மி னன்றேற்
பொருசினத் துமமை யாவி போக்குவ னென்னப் போனார்.

(இ - ள்.) பெரிய அந்நகரத்தின் அரவத்தைக்கேட்டு, பெருங் கொடையாளனாகிய இராசராசன் அங்கு வந்த வுடனே, திருடன் ஓடியதறிந்து, தன் காவலாட்களை வாருமென்றழைத்து, காட்டு வழியிலோடிய அத்திருடனைப் பிடித்து வருக. அப்படிப்பிடித்து வராவிடின் பெருங்கோபத்தோடு உங்களைக் கொல்வேனென்று ஆக்கியாபிக்க, அவர்கள் சென்றார்கள். எ - று. (௩௩௨)

சென்றவர் திகந்த மெட்டுங் கடிநர் செறிவெங் கானுங்
குன்றமுந் துருவிச் சென்றார் காவலர் குவவுத் தோளா
ரன்றவற் பிடித்துப் பின்றோ ளசைத்தனர் கொணர்ந்தா ரடன்
மின்றவழ்ந் திலங்கு வேலோன் முன்னரின் விடுத்தா ரன்றே.

(இ - ள்.) அப்படிச்சென்ற காவலாட்கள் நகரத்தின் எட்டுதிக்குகளின் முடிவு வரையில் காவல் வைத்தார்கள், மரங்கள் நெருங்கிய கொடிய காடுகளி லும் மலைகளிலும் தேடிப்போய், திரண்ட தோளகளையுடைய அக்காவலர்கள் அற்றைத்தினத்திலேயே அத்திருடனைக்கண்டு பிடித்து, அவனிரு தோளையும் பிற்புறமாகச் சேர்த்துப் பிணித்துக்கொண்டு வந்து ஒளிவீசி விளங்கும் வெற்றி தங்கிய வேலேந்திய மன்னவன் முன்னே விடுத்தார்கள். எ - று. (௫௫)

வேந்தனும் வெகுண்டு செங்க ணெரியெழ விழித்து நோக்கிக்
காந்துறு மனத்த னாகிக் கள்வனைப் பிணித்து வீழ்த்து
மேந்துநீர் முதலை முன்ன ரிடுதிரென் றிசைத்தா னன்னோர்
போந்தன ரவனைக் கொண்டு கடிமதிற் புரிசைக் கப்பால்

(இ - ள்) மன்னவனுங் கோபித்து, செவ்விய விழிகளில் தீப்பொறி பரக் கப்பார்த்து, மனவெப்பமெய்தி, இக்கள்வனைக் கட்டிப்போடுங்கள். நீரில மிதந்துகொண்டிருக்கும் முதலையின் முன்னே விட்டுவிடுங்களென்று தீர்மானித் தனன். அதனைக்கேட்ட அக்காவலாட்கள் காவல் பூண்ட அந்நகரத்தின் மதி லுக்கு வெளியே இவனைப்பிடித்துக்கொண்டு சென்றார்கள். எ - று. (௫௬)

முடங்குவெண் டிரைநீர்க் குட்டத் திட்டன ரவனை முள்வா
லிடங்கரா மேந்தெடுத் தாங்கு சென்னி யேந்தியக் கரையி னுய்ப்பக்
கடங்கலுழ் நெடுநல் யானை மன்னனிற் கடிது சென்றார்
தொடர்ந்தடு முதலை கொல்லா திட்டது தொழுது சொன்னார்.

(இ - ள்.) வளைந்து பாயும் வெள்ளிய அலைகளையுடைய நீர் நிரம்பிய குளத்தில் அக்கள்வனைப்போட்டார்கள். முட்பொருந்திய வாலையுடைய முதலை அவனைத்தலைமேற் சுமந்து தூக்கிச்சென்று மற்றைக்கரையில் விடவும், மதஞ் சொரியும் பெரிய பட்டத்து யானையையுடைய மன்னன்பால் விரைந்துசென்று கொல்லத்தக்க முதலை கொல்லாது விடுத்ததை வணங்கிச்சொன்னார்கள்.

என்னைகொ லிதுமற் றென்னா விருந்தன னரசன் மீண்டு
மன்னவற் கொணர்தி ரென்னக் கொணர்ந்தன ரவனை நோக்கி
மின்னுமிழ்த் தனைய கூர்வா ளெறிந்துயிர் வீழ்த்து மென்றான்
சொன்னது புரிந்தா ரிற்றுத் தெறித்தது துளங்கு கூர்வாள்.

(இ - ள்.) அரசன் இஃதென்ன காரணமென்று ஆலோசித்துக்கொண் டிருந்தான். மீண்டும் அக்கள்வனைப்பிடித்துவருகவெனக் கட்டளையிட அப்படி யழைத்து வந்தார்கள். அவனைப்பார்த்து மின்னலைக் கக்குவதுபோன்ற கூரிய வாட்படையால் வீசிக்கொல்லுகவெனக் கட்டளையிட்டான். ஏவலாட்கள் மன்னன் சொல்லிய வகையே செய்தார்கள், பிரகாச மிகுந்த கூரிய அவ்வாளா யுதம் இரு துண்டாய்த்தெறித்தது. எ - று. (௫௭)

அதிசய மெய்தி யோரா வையுறு மனத்த னாகி
மதிமுறை மரபி னாகு மமைச்சரை வருதி ரென்ன
விதிமுறை தெரிந்தா ரொன்றும் விளங்கல ராகி மீண்டார்
கதிர்மணி கழற்கால் வேந்தன் கடிமதிற் கோயில் புக்கான்.

(இ - ள்) ஆச்சரியமெய்தி, இராச்சநதேகமுற்ற மனமுடையவனாய், விவேக முறையின் தன்மையால் சிறந்த மந்திரிகளை வரக்கட்டளையிட்டனன், நான்மார்க்கமுணர்ந்த அவ்வமைச்சர்கள் ஒன்று முணராது சென்றார்கள். ஒளி தங்கிய நவமணிகள் பதித்த வீரகண்டாமணி யணிந்த அம்மன்னவன் காவல் தங்கிய மதில் சூழ்ந்த தனது அரண்மனைக்குச் சென்றான். எ - று. ()

காரகத் திவனை யாக்கிச் சென்றவன் கதிர்முத் தேந்தும்
வாரக முகிண்மென் கொங்கை மயிலியற் குயின்மென்சொல்லாள்
சூரதை வினவச் சொற்று ணங்கவ டியரே லென்றுப
பாரகம் புரக்கு மன்னற் கின்னணம் பகர்வ தானாள்.

(இ - ள்.) அரசன், இத்திருடனைக [காரகம்] இருட்டறையிலிட்டுப்போய், ஒளி தங்கிய முத்துக்களமைந்த கச்சினுள்ளேயிருக்கும் கோங்கரும்புபோன்ற மெல்லிய தனங்களையும் மயில்போலுஞ் சாயலையும் குயில்போலும் மழலைச் சொல்லையுமுடைய தன் மனைவியாகிய தெய்வப்பெண்போல்வாள், இதனைக் கேட்கும்படி தெரிவித்தான். அவள், வருந்தற்கவென்று உலகினை யாளும் அவ்வரசனுக்கு இப்படிச் சொல்லுகின்றாள். எ - று. (௩௩௮)

காலமூன் றுணரத் தக்க கிள்ளைநங் கரத்த ராகப்
பாலமை யுடைய ராகிப் படருறப் படுவ தென்னே
யாலுறு கவிகை வேந்தே யதுகொணர்ந் தளிப்ப னென்னாக்
கோலவளை கொணர்ந்தாள் வேந்த னினையன கூற லுற்றான்.

(இ - ள்.) முக்காலச்செய்திகளையும் அறிந்து சொல்லத்தக்க கிளிப்பிள்ளை நமமிடத்திருக்கவும், அறியாமைத்தன்மை யுடையவராய வருந்துவதேதுக்கு? அசைகின்ற வெண்கொற்றக் குடையை யுடைய அரசனே! அதை யெடுத்துக் கொணர்ந்து தருகின்றேனென்று அழகிய வளையணிந்த அவன்மனைவி அக்கிளியைக் கொண்டுவந்தாள். மன்னவன் இப்படிச் சொல்லுகின்றான். எ - று. ()

கிளைளையே சுகமே முன்னங் கேழ்கிளர் தவத்தா லெய்தும்
பிள்ளையே மகவான் றேவி யெமமுழைப் பெருங்கற் பாய
வள்ளைவா குழைநகு நலக வந்தனை மரபி னோர்ந்திக்
களவன தியற்கை சொல்லா யென்றனன் கழற்கால் வேந்தன்.

(இ - ள்) கிளிப்பிள்ளையே! அஞ்சுகமே! பூர்வத்தில் பெரியவைராகியத் தாலாகிய மிக்க தவத்தினாற் கிடைத்த புதல்வனே! இந்திரன்மனைவியாகிய இந்திராணி, எம்மிடத்துள்ள மேய்ப்பட்ட கற்புநிலைமையையுடைய வள்ளைக் கொடிபோலும் நெடிய காதுகளை வாய்ந்த எனமனைவிக்குக் கொடுக்கவந்தனை. இத்திருடன் நிலைமையை முறைப்படி யுணர்ந்து சொல்லவேண்டுமென்று, வீரக்கழலணிந்த பாதங்களையுடைய அவ்வரசன் கேட்டான். எ - று. (௩௪௦)

ஆயது பகர்வே னைய கேட்டியென் றரசற் போற்றிப்
பாயெழு கொடிகோட் டினுசிக குயபுர நகரத் துள்ள
நாயக வணிக னென்னும் விட்கமப னயந்து பெற்ற
சேயிவ னெடுத்த நாமஞ் சித்திர பானு வென்பான்.

(இ - ள்) ஐயனே! கேட்பாயாக. இவன் தன்மையைச் சொல்லுகின்றேனென்று அரசனைப்புகழ்ந்து அக்கிளி சொல்லுகின்றது. ஓங்கிவளர்ந்த கொடிகளையுடைய சிகரங்கள் தங்கிய மதில் சூழ்ந்த குயபுரமெனும் நகரத்திலிருக்கும் வைசியரிற் றலைமைபெற்ற விட்கம்பனென்பவன் அரிதாகப்பெற்ற, புத்திரனாகிய இவன் பெற்றபெயர் சித்திரபானுவென்பார்கள். எ - று. (௩௪௧)

கள்வன வன்றி யொன்றுங் கருதல னகர மெல்லா
மொளளெரி மடுக்கு மன்னோ ருளபுகுந தொதுககப் பட்ட
வெளளிடை நின்று கொண்டு வேசையாக குதவும் வெய்யோன்
றள்ளரும பாவ மெல்லாந் தகைபடு சாலை யானுன்.

(இ - ள்.) திருடுவனவேயல்லாது மற்றொன்றும் எண்ணமாட்டான். அந்நகர்முழுவதும் ஒளிமிகுந்த தீ யூட்டுவான். அந்நகரிலுள்ளார் வீடுகளிற்புகுந்து தீயான்று எரிககாமல ஒதுககப்பட்ட வெளியிடத்தில் அகப்படுகின்ற பொருள்களை யெடுத்துககொணடு வேசையருககுக கொடுககுங் கொடியோன். பலராலுந தள்ளிவிடப்பட்ட பாவஙகளையெல்லாம் அடைககப்பட்டிருககும் ஒருசாலை போனறவனுனன. எ - று. (௩௪௨)

நாட்டக மகர மறறை நகரமென் றிவற்றைச சூழ்ந்து
மூட்டெரி மடுதத லோடு முடிவுற முடிநத கறறு
பாட்டளி யலஙக லோதிப பாரபபனி மறையோர் பாலர்
வீட்டெரி வளைத்துக் கொல்ல விளிநதவர்க் கிலக்க முண்டோ.

(இ - ள்.) நாடுகள், [அகரம்] அநதணருறைவிடம், நகரஙகளென்னும் இவற்றைச் சூழ மூட்டிய நெருப்பினுற கொளுத்திய வுடனே உயிர் நீஙகியிறநத கன்றையுடைய பசுககளும், பாடடுப் பாடும் வணடுகணிறைநத மலாமாலை சூடிய கூநதலையுடைய வேதியமாதரும், வேதியாகளும், சிறுர்களுமாக, வீடுகளில் தீப்பற்றிகொணடு கொன்றதனுல் இறநதோாகளுக்கு எலலையுணடோ.

புன்னிலைப் பவத்துக் கெலலாந தானொரு பொறைய னுகி
யிநநிலை நடக்குங் காலைப் புயஙகமென றெடுதத மாட
நன்னகாக கடுநதீ மாட்ட நகாபபுறந துறநது போக்கும
பன்னிரை கவர்நது போனு னருநெறிப பட்ட கானம.

(இ - ள்.) இழிதகையினவாகிய எல்லாப் பாவஙகளுககும் தானேஒருசுமையரனாய், இப்படி நடககையில், உயாநத மாளிகைகளையுடைய புயஙகமென்னும் நகரததைக கொடிய தீககொளுதத நகாப்புறததிலே வெளிப்படுத்தியோட்டிய பல பசுமநதைகளை யபகரிததுககொணடு கொடிய வழியையுடைய காட்டினுள்ளே செனறுன். எ - று. (௩௪௪)

மேக்குயாந தெடுதத சாரன மிடைவனத் தடவிக் கானத்
தாக்குலந துரநது சென்று னரனச லேச னமபொற்
றேக்குயர் கோயில் வாயிற சேறலுஞ் சினையாக் குற்றி
தாககலுங் கிடப்ப வீது சஙகரற கென்று போனுன்.

(இ - ள்.) மேற்றிசையாக மிகவுயர்நதோஙகிய மலைச்சாரலிலுள்ள நெருங்கிய கடுங்காட்டில் அப்பசுமநதைகளை யோட்டிககொண்டு செனறுன். ஆஙகெழுந்தருளியிருக்கும் அசலேசுவரனென்னுஞ் சிவபெருமானுடைய பாக்குமரஙக

ளுயர்ந்த அழகிய பொன்மயமான திருக்கோயிற் கோபுரவாயிலிற் சேர்ந்தவுட னே, ஒருசினைப்பசு அங்குள்ள ஒருகட்டை தடுத்தவுடன் கீழேவிழுந்துவிட, இப்பசு சிவபெருமானுக்கென்று சொல்லிவிட்டுப்போனான். எ - று. (கூசஙி)

பாலநேத் திரத்தா னெந்தை பணிவிடைக் குளரா யுள்ளோர்
காலைவந் தெடுத்தா ராவின் காலபறித் துவனு யத்தா
லேலவே பொதிந்து காணே யொழித்தன ரிதற்குப் பின்னர்ச
சூலமு மெழுதி விட்டா ரீன்றதச சுரபிக காரா.

(இ - ள்.) நெற்றிககண்ணையுடைய எமது பிதாவாகிய சிவபெருமானு டைய பணிவிடைகட்குரிய அடியவாகளா யுள்ளவாகள், காலைப்பொழுதில் வந்து அப்பசுவைத தூககினாகள். அப்பசுவின்காலைப்பற்றிததுவைததுககட்டு மருநதாற்பொருநதும்படிகட்டி, அதனகாலிலுள்ள நோயையகற்றினார்கள். அதன்பின்னா, பசுவுககுச் சூலககுறியுமிட்டாாகள. அப்பசு சின்னுளில் காராம் பசுவைப்பெற்றது. எ - று. (கூசசு)

அன்றுள வுமையோர் பாகத தாற்கபி டேக மாக
வின்று காறமுத மீநத தாதலா லிவன்செய் பாவக்
குனறெரி பட்ட பஞசிற ரொழிந்தது குவவுத தோளாய்
மன்றலஞ சடையோன் றனமை யாவரே வகுக்க வல்லார.

(இ - ள.) அனறு முதலாக இன்றுமட்டும, உமாதேவியை ஒரு பாகத்தி லுடைய அசலேசுவரபெருமானுககுத திருமஞசனததிற்குரிய பால கொடுதது வநதபடியால, இச்சித்திரபானுசெயத பாவமாகிய மலைகளெல்லாம், தீப்பொறி பட்ட பஞசுமூட்டைபோலழிநதது. குவிநத தோளையுடைய அரசனே! மணம் வீசும அழகிய சடையையுடைய சிவபெருமானுடைய தன்மையை எவாதாம் வகுததுச்சொல்ல வலவோா? எ - று. (கூசஎ)

வாளெடுத் தெறிந்திட் டாலு மழுவினாற் பிளநதிட் டாலுங்
கோளரா வெயிற்றுச சிநகி றிறறின கொளுததிட் டாலு
மூளெரி கிடததி னாலு முரிதிரைக் கயததிட் டாலுந
தாளர வணிநதோன றநத வரததினற சாத றீரநதான்.

(இ - ள்.) திருவடியிற் சர்ப்பககங்கணமணிநத சிவபெருமானளித்த வரத் தினால், இவன் வாட்படையால் வெட்டினாலும், கொல்லததக்க பாம்புகளின் விஷத்தையூட்டி மூட்டினாலும், பெரு நெருப்பிலிட்டாலும், முரிநதுபோகும அலைகளையுடைய நீரில வீழ்ததினாலும் இறததலினின்றும் நீங்கினவன. (இவற்றாலெலலாம் இவனுககு மரணமிலலை) எ - று. (கூசஅ)

உடைதிரை நெடுநீா வையத தினனல நுகர்நது பின்னாக்
கடைமுறை கயிலை வாழ்ந்து கதிபெறற குரிய னானை
படாசடைப பரமற் கீநத பாறபசு வுரோம மொனறிற
கிடைபடு பிரம கறப மாயிர மிகநது வாழவார்.

(இ - ள்.) மறிகின்ற அலைகளையுடைய கடலசூழ்நத நிலவுலகத்தில் இனிய போகஙகளை நுகாநதபின்னா, தேகாநததிற்போயக் கைலாயபதவியில் வாழ்ந திருநது முத்தியின்பத்தை அடைதற்கு உரியவனானன். ஆனபடியால், படாநத சடையையுடைய சிவபெருமானுககுத தானம்புரிநத பாறபசுவின உடலிலுள்ள உரோமமொவ்வொன்றுக்கும் மததியாயுள்ள பிரமகற்பஙகள் ஆயிரஞ்செல் லும்படி வாழ்வார்கள், எ - று. (கூசகூ)

ஆகையா லிவனை நினைற கொலலுவ தரிது மூக்க
ணைகனு யகனுக் குள்ள மிரங்குறுந் தகைய னானு
னீகவ லொழிதி யன்னோன் வேண்டுறு நிதிய மீநது
போகென விடுத்தி யென்று புகன்றதப் புனப்பூங் கிள்ளை.

(இ - ள்.) ஆனபடியால், இத்திருடனை உன்னாற் கொலைசெய்தல் அரிய தாம். இவனே திரிநேத்திரங்களையுடைய ஏகநாயகனாகிய சிவபெருமானுக்கு மனமுருகும் அன்புடையவனாயினான். இனி நீ யிதற்காகத்துயரொழிந்துவிடு. அத்திருடன் இச்சிக்கின்ற திரவியத்தை அப்படியே கொடுத்து, நீ விருப்பின்படி செல்லுகவென விடைதந்தனுப்பிவிடு என்று, பசு நிறமும் அழகுந்தங்கிய அக்கிளிப்பிள்ளை சொல்லியது. எ - று. (ரூ௬௦)

அடுசின மொழிந்து நெஞ்சத் ததிசய மடைந்தான் மன்னன்
விடுதிரென் றவனைக் கொண்டு விளங்கொளி மடங்க லேந்தும்
படுமணி யாச னத்தி னிருத்தினன் பணிந்தான் பல்கா
னெடுமுடி மகுட வேந்த னிதிக்குவை பலவு நோந்தான்.

(இ - ள்.) அக்கிளியின் வார்த்தையால், அக்கள்வனைக் கொல்லும்படி கொண்டிருந்த கோபநீங்கி, அரசன் தன் மனதில் ஆச்சரியமெய்தி அவனை விடக்கடவீரென்று காவலாட்களுக்குணர்த்தி, அவனை யழைத்துப்போய், சிர மிசை நெடிய கிரீடமணிந்த அம்மன்னவன், பிரகாசிக்கும் ஒளியையுடைய சிங்கங்கள் சுமக்கும் இரத்தினபீடத்தில் இருக்கச்செய்து பலமுறை பணிந்து பலவிதமான திரவியங்களையுங் கொடுத்தான். எ - று. (ரூ௬௧)

ஏந்துறு குடுமி மாடத் திருக்கையு மினிது நல்கி
மாந்தளி ரனைய மேனி மகளிரால் வதுவை முற்ற
வேய்ந்தன யாவு மீந்தா னிந்தலை நெடுநாள் வைகிப்
போந்தனன் கயிலை வாழ்ந்து சேவடி புகுந்தா னன்றே.

(இ - ள.) மிக வுயரமாகிய சிகரத்தையுடைய தன் அரண்மனையில் அக்களவனிருப்பதற்கு இனிதாக இருப்பிடமுங்கொடுத்து, மாந்தளிர்போன்ற மேனிவாய்ந்த மங்கையரால் விவாகமும் முடிவுறும்படி அவ்விவாகோபகரணங் களெல்லாவற்றையுங் கொடுத்தான். இப்படி வெகு காலம் வாழ்ந்திருந்து திருக் கைலாயகிரியையடைந்து பலகாலம் வசித்து, சிவபெருமானுடைய சிறந்த திருவடி நீழலிற் கலந்தனன். எ - று. (ரூ௬௨)

தேக்குயர் வனத்தின் வீழ்ந்த பசுவிது சிவனுக் கென்று
போக்கினு னிதுபெற றுனேற் புரிசடைப் புனிதற கென்னு
வாக்கினன் மனத்தாற் செய்யுஞ் செய்கையால் வணங்கப் பெற்றோர்
கோக்கொணர்ந் தளிப்போர் தன்மை யெம்மனோர் கூறற் பாறறோ.

(இ - ள்) தேக்கமரங்கள் உயர்ந்தோங்கிய காட்டிலே, குற்றியால் தடை செய்யப்பட்டு விழுந்துவிட்ட இப்பசு, சிவபெருமானுக்கென்று விட்டுவிட்டு வந்தவன், இத்தகைய சிறந்த பதவியைப் பெறுவானாயின், முறுக்கிய சடை யையுடைய சிவபெருமானுக்கென்று வாக்காலும் மனத்தாலும் செய்யத்தக்க தொழில்களாலும் பணியப்பெற்றவர்களாய், ஒரு பசுவை விலைக்கு வாங்கிவந்து தானஞ் செய்வோரடையும் பதவி என்னையொத்தோர் கூறுந்தகைமையதோ?

மழலையங் குதலைக் கிள்ளை மதிமதி மானென் றோதுங்
கழலுடை யரசற் கோதுங் காதையொன் றின்னு முண்டாற்
குழவியம் புலிமென் கண்ணி யரனுளங் குளிர்பப தாரு
மிழைசடை மூனிவர் கேண்மி னென்றெடுத் திசைப்ப தானன்.

(இ - ள்.) நிரம்பாத அழகிய மதலைச்சொல்லையுடைய அக்கிளிப்பிள்ளை மதிமானெனும் பெயருள்ள வீரகண்டாமணி தரித்த அம்மன்னனுக்குச்சொல்லுகின்ற சரித்திரம் மற்றொன்றுள்ளது. இளஞ் சந்திரனைச் சிரோமாலையாக வணிந்த சிவபெருமான் திருவுள்ளங்களித்தற்கேதுவாகிய கலத்தலமைந்த சடையையுடைய முனிவர்களே! கேளுங்களென்று சூதமுனிவர் விளக்கிச் சொல்லுகின்றனர். எ - று. (௫௰௪)

தொலைலநாண் முளரி பூத்த முகிலெனுந் துளவு மாயோ
னலலக னெடுமா பதத் ணுயிழை யலங்க லோதி
யெல்வலை முளரி யோத விருநதன ளிருநத ஞான்று
வல்லெழு முகின்மென கொங்கைப புலோமசை யாங்கு வந்தாள்.

(இ - ள்.) அனறலாநத தாமரைமலர்களபூத்த மேகமென்று சொல்லுகின்ற துளவமாலை தரிதத திருமாலின ஒளி தஙகிய அகனற மாாபில் வசிக்கும் திருநதிய ஆபரணஙகளையும மலாமாலையையணிநதகூநதலையுமுடைய திருமகள், ஆதிகாலததில ஒளியமைநத தாமரை மலாப்பீடததில் வீற்றிருநத காலததில, சூதாடு கருவிபோன்றும விளஙகும் மெல்லிய தனங்களை யுடைய இநதிராணி அஙகே வநதனள். எ - று. (௫௰௫)

வநதனள குலிச வேந்த னுயிழை வணக்கம் பொங்கித
தநதன ளவளை நோககித தாமரைத தவிசின மேலான
சிநதனை யெதுமற றெனனுல் வேண்டுவ செபபு கென்றாள்
சுநதரி யின்கைக கிளளை தருகெனத தொழுது சொன்னாள்.

(இ - ள்.) வச்சிராயுதமேநதிய இநதிரன் மனைவி திருமகளுககு நமஸ்கரித் தனள். தாமரைமலாப்பீடததிலுள்ள திருமகள இநதிராணியை நோககி உன கருதது யாது? உனககு வேணடியவற்றைச் சொல்லுகவென வினவினள். அதனைககேட்ட இநதிராணி உன கையிலுள்ள கிளிப்பிள்ளையைத தருகவென வணஙகிச்சொல்லினள. எ - று. (௫௰௬)

ஆயவ ளுரைதத லோடு மம்புயத் தணஙகு நோககி
நீயிது கோடி யென்னுக் கொடுததன ணெடுவேற றனைச
சேயரித தடங்க ணல்லாள வாங்கினள சிறபபு மிககாண்
மாயவன் றேவி தனமை மகிழநதொரு மருஙகு நினறாள.

(இ - ள்.) அவ்விநதிராணி யிப்படிச்சொனனவுடனே, திருமகள அவளைப் பார்தது, நீ யிதனைப்பெறுகவென்று கொடுததனள. நெடிய வேலாயுதம் போலச் செவ்வரிபடாநது பரநத விழிகளையுடைய இநதிராணி அக்கிளிப் பிள்ளையைப் பெற்றுக்கொண்டு, அழகின் மேமபட்டவளாகிய இலககுமியின் இயற்கையை யெண்ணி யிதயஙகளிதது ஒரு புறததில் நின்றிருநதனள், எ-று.

நிறபுழி யழலவாய்க் கக்கு நேமியோ னமது நாடு
பொறபுறப புனைதி ரென்னக் கணத்தரிற புகல நோக்கி
யறபுரை யலஙக லோதித் தாமரை யகதது வாழுங்
கற்பினள வினவிக் கேட்பக் கரியவன் புகல்வ தானன்.

(இ - ள) அப்படி நிற்கையில, தீபபொறிகளைச்சிநதும் வாயையுடைய சககராயுதநதாஙகிய திருமால, நமது வைகுநத நாட்டை அழகுறும்படி அலங காரஞ்செய்கவெனத தமது கணத்தோரககுக கட்டளையிட, அதனைககணடு, இருள்போலுங கூநதலைப்பெற்றுச் செநதாமரைமலரில் வாழநதுளள கற்பினை யுடைய திருமகள், யாது காரணததிற்கென வினவ, கருநிறமெயதிய திருமால் கூறுகின்றார். எ - று. (௩௬௯)

கிளிபுரை குதலைச செவ்வாய்க் கோல்வளை கேட்டி யென்றுத
துளவணி யிறைவன் சொல்லுஞ சுபாரிச மென்னு நாட்டிற்
றளமல ரகழி சூழ்நத சருவரி யெனனு மவவூ
ருளனொரு மறைவ லாளன கபிலனென றுரைக்கப பெற்றான்.

(இ - ள்.) கிளிபோலும் மழலைச்சொல்லையுடைய சிவநத வாயையும், அழகிய வளையையும் பொருநதியவளே! கேளென்று துளவமாலை தரிதத திருமால கூறுகினறனா. சுபாரிசமெனும் ஒரு நாட்டிலே இதழ்களையுடைய மலர்கள் விரிநதுளள அகழியாற சூழப்பெறற சருவரியெனுஞ சிறபபுற்ற நகரததில, கபிலனெனனும் பெயரெயதிய அநதணனொருவனுளன். எ - று.

அல்லினும் பகலுங் களவான் பாழ்வயி றோம்பு மன்னுன்
வலலைவல லிருளிற செனறோ மறையவன சுரபி யவவி
யிலலகம பிணிததுக கொணடா னிறநதன சிலநாட பின்ன [ன்.
ரொல்லையொற றுணாநது வநதா ரொளிததனன கபில னென்போ

(இ - ள்.) இரவிலும் பகலிலும் திருடுபவனுயப் பாழ்வயிறறை வளாத்து வரும் அவன, அதிசீககிரததில நடுராததிரியிறசென்று ஓரநதணன பசுவை யபகரிததுககொணடுவநது தன வீட்டிலே கட்டிககொணடனன். இப்படிச் சில தினங்கள் செனறன. அதன பினனா, உளவு தெரிநது அதிசீககிரததில தேடிக் கொணடுவநதாாகள். அதனைததெரிநத கபிலனெனனுங களவன் அநதபபசுவை மறைததுவிட்டான. எ - று. (௩௭௦)

கன்றொடு சுரபி நீககிக் கன்றுதற பெருமா னனபி
னின்றவோா மறையோன றனபா னிறுததின னிறுத்த லோடு
மன்றுடைத தீமபா லெனபா லாககுதி யெனன வன்று
னனறெனப புரிந்தான பிறறை நாடபடு நடுநாட் கஙகுல்.

(இ - ள.) கனறையும பசுவையும அபபுறபபடுததி, நெற்றிககணணை யுடைய சிவபெருமானுககுரிய மெயயனபு நிலையிலிருநத மற்றோா அநதண னிடததிற் சோததான். அப்படிச்சோததபோதே, நாடோறுங கறககின்ற இனிமையான பாலை எனபாலனுப்பிவிடுகவெனககூற, அவவநதணன் நன் றென்று அபபடியே செயதுவநதான. சில நாட்களுககுப்பின், ஒரு நாள் நடுராததிரியில. எ - று. (௩௭௧)

பொழிதரு தீமபா லாவும் புனிறறிளங் கன்று மாயோர்
வழிபட விருளிற் செலவான மனனரின் மறிதது வவவி
முழவடு திரடோள பறறி விசிததனா முழுஙகு பைமபொற்
கழலுடை யரசன் றனமுன விடுததனா கபிலன் றனை.

(இ - ள்.) சொரிகின்ற இனிய பாலையுடைய பசுவும், மிக்க இளங்கன்றுமாக ஓட்டிக்கொண்டு ஓர் வழியில் இருட்காலத்திலே செல்லும் கபிலனை, நகர்க்காவலர்கள் தடுத்து அப்பசுவையுங் கன்றையும் பறித்துக்கொண்டு, திரட்சியினால் மத்தளத்தையும் வெல்லத்தக்க அவனிரு தோள்களையுஞ் சேர்த்துப்பிணித்து, பசும்பொன்னாற் சமைக்கப்பட்டு ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த மன்னவன் முன்னே விடுத்தார்கள். எ - று. (௬௯௨)

வேதகோத் திரத்தி னுள்ளோர் கள்வரேல் விளித்த லாகா
தீதெனு வுணர்ந்து கண்க ளிரண்டையுந் தீர வாங்கிப்
போதர விடுத்தா னந்த மறையவன் பொறுத்த லாற்றான்
மாதுய ருழந்து தன்ன தாருயிர் மாய்த்துக் கொண்டான்.

(இ - ள்) அந்தணர்குலத்துதித்தவர்கள் திருடுவார்களாகில், அவர்களைக் கொல்லலாகாது அது தீதென்றறிந்து, மன்னவன் அக்கபிலன் விழிகளிரண்டினையும் அடியோடு பறித்துப்போகும்படி விடுத்தான். அக்கபிலன் அவ்வேதனை சகிக்க வியலாதவனாய்ப் பெருந்துயரெய்தித் தன்னுயிரைப் போக்கிக்கொண்டான். எ - று. (௬௯௩)

மறையவ னவனுக் கென்ன மாகணத் தலைவர் முக்க
ணிறையவ னருளிற் செம்பொ னெரிமணி மானங் கொண்டு
முறையறிந் தெதிரச் சென்று ராங்கவன் முளரி நலனாய்
பொறைபடும் புரிசை நம்மூர் நகரொடும் போவ னென்றான்.

(இ - ள்.) வேதியனாகிய அக்கபிலனைக் கொண்டுபோதற்காக, சிறந்த சிவகணத்தலைவர்கள், திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் திருவருளால், செம்பொன்னாற் செய்து ஒளிவிடும் இரத்தினங்கள் பதித்த விமானத்தைக் கொணர்ந்து, அவனது புண்ணிய முறைமையைத்தெரிந்து எதிர் கொள்ளப் போனார்கள். கமலாசனையே! அக்கபிலன் விமானமூர்ந்து சிறு மலைபோன்ற உயர்வோடு கூடிய மதில்சூழ்ந்த நமது ஒப்பில்லாத வைகுந்த நகரத்தின் வழியே செல்வானென்று சொல்லினார். எ - று. (௬௯௪)

ஆதலா லுலக மெல்லாம் புதுக்குவா னமைந்தே மம்பொற்
பேதைநீ யிவனாற் செய்த புண்ணியப் பெருமை கேட்பி
னோதுதுங் கயிலைப் பெம்மா னடியருக் கொருநா ளீந்தான்
சீதநுண் டிவலைத் தீம்பா லாதலாற் கயிலை செல்வான்.

(இ - ள்.) ஆதலினாலே, நமது நகர முழுவதும் அழகு செய்யத்தொடங்கினோம். அழகிய பொன்னென்னும் பெயருடையாளே! இவனாற் செய்யப்பட்ட சிவபுண்ணியத்தின் சிறப்பைக்கேட்பதானாற் சொல்கின்றோம். கைலாயநாதராகிய சிவபெருமான் அடியரொருவருக்கு ஒருநாள் அப்பசுவின் இனிய பாலிற் குளிர்ச்சிதங்கிய மிக நுண்ணிய ஒரு துளி கொடுத்தான். ஆதலால் கைலாயத்திற்குச்செல்கின்றான். எ - று. (௬௯௫)

என்றெடுத் தியம்பி விட்டா னிருந்தழா யலங்கன் மாயோன்
குன்றெடுத் தனைய கொங்கை யதிசயங் கொண்டா ளென்ன
மென்றுணைச் சிறைய கிள்ளை வேந்தனுக் குரைப்ப வேந்தன்
றன்றுணைத் தடந்தோள் விம்மா வரனருட் டளையி னின்றான்.

(இ - ள்) என்றிவ்வகையாகப் பெரிய துளவமாலையணிந்த திருமால் எடுத்துச்சொல்லினர். உயர்ந்து வளாநத மலைபோன்ற குசங்களையுடைய திருமகள் வியப்பெய்தினளென்று, மிருதுவாகிய இரு சிறகுகளுடைய அககிளிப்பிள்ளை மன்னவனுககுககூற, அது கேட்ட மன்னவன் தன் பாநத இரு தோளகளும் பூரித்து, சிவபெருமான் திருவருளென்னும் வரம்பிலிருநதனன். எ - று. (௫௬௬)

ஈதல தெடுத்துக் காட்டும புண்ணிய மினமொன் றுண்டாற
றீதறு மசச மென்னுந தெண்புனற் றிருநா டந்நாட்
டோதுமவெண் கவிகை வேநதன சுமதியென றுளனவ வேநதன்
பாதக மொழியப பெறற வதிரத னெனனுமப பாலன்.

(இ - ள்.) ஈதன்றியும், எடுததுச்சொல்லவேண்டிய சிவபுணணிய சரிதம் மற்றொன்றுள்ளது. குறறமற்ற தெளிநத நீர்வளநதஙகிய மச்சமென்னுஞ் சிறநத நாடொன்றுணடு. அநநாட்டிலே சநதிரவட்டககுடையையுடைய சுமதி யென்று சொல்லப்பட்ட பெயா பெறற ஒரு மனனவனுணடு. அம்மனனவனுடைய பாதகமகலப்பெற்ற அதிரதனெனனும் புததிரன, எ - று. (௫௬௭)

கேகயத தரச னீன்ற கிளிபுரை குதலைச செவவாய்த்
தோகையை வதுவை புரிநது யின்னலந துயககு நாளி
னேகிமுற போன சென்மத திடைபபடு மியறகை யெல்லாஞ்
சேகறத தெரியப பெறறுன சிவனடி சிநதை செயதான்.

(இ - ள்.) கேகயதேயதது மன்னவனீனற கிளிபோலும மழலைச்சொல்லைக கூறும் செவவிய வாயையுடைய பெணணை விவாகஞ்செயது, இன்பமடைப வித்து வாழ்நதுகொண்டிருககுஙகாலததில, கழிநதுபோன பணடையசனனததில் நிகழ்நத செய்திகளையெலலாம தவறுதல நீஙகததெரியபபெற்றவனுய, சிவபெருமானுடைய திருவடியைச் சிநதிததுககொணடிருநதான். எ - று. ()

வெளவிடை யவனைத தாழ வேண்டுறு மனததந னுகிக்
களவிடு தொடையன் மாாபன றநதையைக கலிநது கேட்க
வுள்விடை நெகிழ்நத சிநதை யாஙகவ னுவபபக கூாவாய்ப
புள்விடு புலரி செய்யுங குறைமுடித தெழுநது போனுன.

(இ - ள்) தாவள்யமான இடபவாகனமுடைய சிவபெருமானை வணஙகித் தவஞ்செயயுங கருததெயதியவனுகி, தேன சிநதும மலாமாலை தரிதத மாாபினனுகிய தன பிதாவை யணஙகசிநது உததரவுகேட்க, அதனைககேட்ட சுமதி யென்னும் அவன பிதா மன முருகிய நிலைமையுடையவனுய மகிழ்நது விடைதா, கூரிய வாயையுடைய பறவைகளாலிககும காலைபபொழுதுல், செயயவேணடிய நிததியானுஷ்டானங்களை முடிததுப் புறபபட்டுச் சென்றுன, எ - று. (௫௬௯)

அவனுடை நகர நாபப ணீசசுர மடைநது புக்குச
சிவனடி தொழுது போறறிச சிநதைநெக கன்பு மிக்குக்
கவலொழி மனத்த னுகி நிறறலுங கடவுட கெனனு
வுவகையி னடைக்காய் நல்கும வேதநதன் மியைககண் ணுற்றுன்.

(இ - ள்.) பஞ்சமர் குலப்பெண்ணின் விருப்பந்தரூஉ தனத்திலே மனம் வைத்து, குடித்தற்கரிய கள்ளை வாசனை பார்த்துக் குடித்து, வலையினாலே நீர்வாழ் சாதியாகிய பலவகை மச்சங்களைப் பிடித்துக் கொணர்ந்து, விலைக்குக் கேட்டோர்க்கு விற்றும், கொடிதாகிய கள்ளைப்புலால் வகையுடன் சிரமிசைச்சுமந்து சென்றும் விற்பேன். யான்செய்த பெரும் பாவங்கட்கு அளவு சொல்ல வல்லவர்கள் யாவர்? ஒருவருமிலர். எ - று. (௩௭௪)

அவ்வழி நடக்குமெல்லை யானுக்கென் றடைக்காய் கொளவான
வெவ்வழிக் கூலம் புக்காய் விரிசெவிச சிறுகண் யானை
கவவுறப் பிணித்த வல்லி களைந்தெதிர் கடுகுங் காலை
யெவ்வழித் தென்ன நோக்கா யோடினை யிடைவந் துற்றாய்.

(இ - ள்.) அப்படி நடந்து வருங்காலத்தில், நீ சிவபெருமானுக்காகத் தாம்பூலம் வாங்கவேண்டி நெருங்கியவழியாகிய கடைவீதியிற் சென்றாய். பரந்த செவிகளையும் சிறியவிழிகளையுமுடைய யானை, கவ்வும்படி கட்டியிருந்த சங்கிலியை யறுத்துக்கொண்டு எதிர்ப்பட்டு வருங்காலத்தில், எந்தவழியால் ஓடுவதென்பதைப்பாராதவனாய் ஓடி நடுவில்வந்து சேர்ந்தாய். எ - று. (௩௭௫)

எந்தையெம் பெருமாற் கென்ன விலையிற் தாயந்து கொளவான்
வந்தனை கொணர்ந்த காசு மண்ணிடை வெருவி வீழ்ந்துச
சிந்தினை புழுதி முற்றுங் கிளைந்தனை தெரியக் காணாய
நொந்தனை நடுங்கி நின்றா யங்கிலே நின்னை நோக்கி.

(இ - ள்.) எமது பிதாவும் எமது பெருமானுமாகிய சிவபெருமானுக்காகத் தாம்பூலம் வாங்கும்படி கடைக்குவந்த நீ கொணர்ந்த காசை பிலமிசைப் போட்டுச் சிதறினாய். அந்தக் காசைமீண்டும் எடுக்கும்படி தெருவிலுள்ள மண் முழுவதையுந் துழாவினாய்- அது கண்ணுக்குத் தோற்றவில்லை. மனநொந்துவாட்டமெய்தி யிருந்தமையால் அத்தருணத்தில் உன்னை நோக்கி. எ - று. (௩௭௬)

யாதுநீ புழுதி கிண்டி வருந்துவ தென்னை யென்ன
மாதொரு பாகற் கிந்த வரன்முறை வழாது மற்றைத்
தீதக லடைக்காய் நல்குந் செய்வினை மாபி னின்றேன
போதினு முடங்கப் பெற்றே னென்செயல் புரிவ னென்றாய்.

(இ - ள்.) நீ தெருப்புழுதியைக் கிண்டிக்கொண்டு வருந்துதற்கென்ன காரணம்? என வினவ, உமாபிராட்டியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமானுக்குக் கொடுத்துவந்த நியதிதவறாத வகையாகக் குற்றமற்ற தாம்பூலமளித்து வருகின்ற திருத்தொண்டி னியற்கையிலிருந்தேன். இன்றையதினத்தில் அதுதடையுறப்பெற்றேன். இனியிதற்கு யாது செயல் புரிவேனென்றாய். எ - று. (௩௭௭)

என்னலும் போக்கா நின்ற காசுதந் திடுவ னென்னைத்
தொன்னிலம் புரக்கு மன்னர் மரபிடைத் தோன்றச் செய்துன்
முன்னவ னருளுங் கொல்லோ வென்றவென் முகத்தை நோக்கி
யன்னது புரிவ தெந்தைக் கரிதல வென்ன லோடும்.

(இ - ள்.) என்று சொன்ன மாத்திரமே, நீ வீழ்த்திவிட்ட காசைத்தருகின்றேன். உனது கடவுள் என்னைப்பழமையாகிய உலகத்தைக்காக்கும் மன்னவர் மரபிற் பிறக்கச்செய்து அநுக்கிரகிப்பாரோ? எனக் கேட்ட என்னுடைய முகத்தைப்பார்த்து, அப்படிச் செய்வது எமது தந்தையாகிய சிவபெருமானுக்கு அரிதானகாரியமல்ல என்று நீ சொல்லியவுடனே. எ - று. (௩௭௮)

யானுடைப் புலைச்சி நின்று ளிருகளி யாடி யின்னேன்
கோனுடைக் குலத்துட் டோன்ற யானுமக் குலத்து ளின்னேன்
றானுடைப் பாரி யாகச் சங்கரன் றருங்கொ லென்னத்
தேனுடை யலங்கன் மார்ப தருவது திண்ண மென்றாய்.

(இ - ள்.) நான் விரும்பிய புலைச்சியும் மிகவும் கட்குடித்து மயக்குற்றிருந்தாள் அவள் அச்சமயத்தில் இவர் மன்னவர் மரபிற் பிறக்கையில் நானும் மன்னவர்குலத்தி மகளாகி இவர்க்கு மனைவியாகும் வண்ணம் சங்கரன் வரந்தருவாரோவெனச் சாற்ற, தேன் சொரியும் மலர்மாலை தரித்த மார்பினையுடையவனே! அப்படியே யனுக்கிரகிப்பது சத்தியமென்றாய். எ - று. (௩௭௯)

கிரித்தனங் களியாட் டெய்தி நீம்புல வெடுத்து விற்றுத்
தரிந்தகா சனைபாற் றந்து போந்தனஞ் சேரி சார்ந்து
விரித்தெரு ளுங்குற்ற போது போதலும் வெகுண்டு வெம்பேய்
நரிக்குலங் கடிப்ப வாவி துறந்தன மந்த வென்றான்.

(இ - ள்.) நாங்களிருவரும் மகிழ்ந்து, கள்ளைப்பருகி வெறி யெய்திக் கொடிய புலாலவகைகளைச் சிரமிசைத்தாங்கிவிற்று, அதனால் தேடியகாசை உனக்குக்கொடுத்து விட்டு, புலைச்சேரிபோய்ச் சேர்ந்து, அந்திகரித்துத் தோன்றும் இராக்காலம் எய்தவும், கொடூரமாகிய பேய்நரித்தொகுதிகள் கடிக்கப்பயந்து நாங்களிருவரும் அப்பொழுதே யிறந்தோமென்றான் எ - று. (௩௮௦)

ஏற்றைந்த திடபடி யானுக் கிலையமு தடைக்காய் கொள்வா
னூறிய களியி னீந்த காசுகொண் டுலகு மெல்லா
மாற்றொழிந் தரசு செய்யுங் குலத்தினிற் றுதித்தே மிந்தப்
பேறுபெற் றிருவர் நீங்காத் தன்மையும் பெறப்பெற் றேமால்.

(இ - ள்) இடபத்தை வாகனமாகச் செலுத்தும் சிவபெருமானுக்குத் தாம்பூலங் கொள்ளும்பொருட்டு, கள்குடித்த வெறி மிகுதியால் கொடுத்தகாசுகாரணத்தால், உலகமுழுவதையும் பகைமை நீக்கி அரசுசெய்யத்தக்க மன்னவர் மரபில் வந்து தோன்றினோம். இவ்வகைய செல்வப்பெருக்கையு மெய்தி இப்பிறவியிலும் நாங்களிருவரும் பிரியாதுள்ள தன்மையையும் பெற்றோம். எ - று

மழுப்படை பொறுத்த செங்கை வானவற் கினிநீ யைய
வழுத்துபே ரன்பி னோடும் பூசனைக் குரிய யாவு
முழுத்துறத் தருது மாங்கு முற்றுற முயறி யென்னப்
பழுத்தநான் மறைவல் லோனை யடிக்கடி பணிந்து நின்றான்.

(இ - ள்.) மழுவாயுதமேந்திய சிவந்த கையையுடைய சிவபெருமானுக்கு இனி நீ பேரன்போடு செய்யும் பூசைக்குரிய உபகரணங்களெல்லாவற்றையும் குறைவின்றிக்கொடுப்போம். அவற்றைப்பெற்றுக்கொண்டு அச்சிவபூசைமுற்றும்படி செய்வாயாகவென்று, முதிர்ந்த நான்கு வேதங்களில் வல்லவனாகிய வேதத்தனமியெனும் அந்தணனைப் பலமுறை வணங்கி நின்றான். எ - று. ()

ஏழைபங் குடைய பெம்மான் பூசனைக் குரிய வெல்லா
மூழ்முறை புரிய வேண்டி யுள்ளுடைந் துருகு மன்பின்
மாழைமுற் றுதவி மீண்டுத் தந்தைபால் வருத்துச் சொற்றான்
சூழ்மணி மகுட வேந்த னுவகையிற் றுளக்கங் கொண்டான்.

(இ - ள்) உமாபிராட்டியாரை ஒரு பாகத்திலுடைய சிவபெருமான் பூசைக்குவேண்டிய எல்லாச்செயல்களையும் பண்டைய விதிமுறையே செய்ய வேண்டியதற்காக, மனங்களிந்தருளும் அன்போடு பொன்னை மிகுதியாகக்கொடுத்துத் திருமப்பிதா சுமதியினிடமெய்தி விளக்கிச்சொல்லினன். நவமணிகள் சூழ்ந்த கிரீடமணிந்த சுமதி சந்தோஷத்தோடு அச்சமெய்தினுன். எ - று.

வீழ்திரை நெடுநீர் வைப்பின் வெண்ணிலாக் குழவி யூருந்
தாழ்சடை யரனுக் காய வருச்சனைத் தருமங் காத்து
வாழிய ரென்ன நின்று மதிப்பரு கவிகை வேந்த
ரூழ்முறை பரவ வேண்டும் வளனொடு முலகங் காவில.

(இ - ள்) அலைகளைமோதும் கடல் சூழ்ந்த நிலவுலகத்தில், வெள்ளிய பிறைச்சந்திரன் தவழ்கின்ற தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமானுக்குரிய சிவபூசைப புண்ணியங்களைப் பாதுகாத்து, பெரியோர் யாவரும் ஆசீர்வதிக்கும்படி விளங்கி, சந்திரனைப்போன்ற வெண்கொற்றக்குடையையுடைய மன்னர்கள் தங்கள் புண்ணியத்தின்படி அதிகரிக்கும் செல்வத்துடன் களித்து வாழுங்காலத்தில். எ - று. (௩௮௪)

விழிகளா யிரமா னந்த வெள்ளநீர் குதிப்பக் கங்கை
சுழிகொள்வார் சடையி னுற்குத் தொண்டுசெய் மிவனை நோக்கி
வழிபடு மகவான் சிந்தா மணிபெறக் கொடுத்தான் வாழு
மொழியுநா ளளவுங் கேட்ட வழங்குமென் றுரைத்துப் போனான்.

(இ - ள்.) சுழிகள் பொருந்திய கங்கையையணிந்த நெடிய சடையையுடைய சிவபெருமானுக்குத் தொண்டு புரிந்த அதிரதனென்னும் இவ்விராசகுமாரனை, சிவனடியைப்பூண்ட இந்திரன் தன்னுயிரிய விழிகளாலும் ஆநந்த நாட்டம் வெள்ளம்போற் பெருகத்தரிசித்து, தனபாலிருந்த சிந்தாமணியை அவன் பெறக்கொடுத்து உனதுயுள் கழியும்வரையிலும் நீ கேட்டவற்றை இம்மணிகொடுக்குமென்று சொல்லிப்போயினன். எ - று. (௩௮௫)

தெய்வமா மணிசிந் தித்த வளம்பெறு சிறப்பு நல்கப்
பைவரு மகுட கோடி நெடுநிலம் பரியா நின்று
மைவருங் களத்த னேவு மானமீச சிறந்து போனன்
மொய்பொழிற் கயிலை வெற்பி னடைந்தனன் முழவுத் தோளான்.

(இ - ள.) மத்தளம்போலத் திரண்ட தோளையுடைய அதிரதனென்னும் இராசகுமாரன், தெய்வீகந்தங்கிய சிறந்த அச்சிந்தாமணியானது அவனெண்ணிய வளங்களையடையத்தக்க சிறப்பைக்கொடுக்க, படத்தோடு கூடிய ஆயிரம் மகுடங்களையுடைய ஆதிசேடனுற சுமக்கப்பட்ட பெரிய வுலகத்தையாண்டிருந்துவிடந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமான் விடுத்ததெய்வவிமானத்தினூர்ந்து சிறந்தவனுயச் சென்று நெருங்கிய சோலைசூழ்ந்த திருக்கைலாயகிரியிலடைந்தனன். எ - று. (௩௮௬)

**கலிவிருத்தம்.**

இன்னு மோர்கதை யீசன் றிருவருண்
மன்னு தொண்டர் கதிபுகு மாணபது
பன்னு நான்மறை யோபகர் வேமெனத்
துன்ன ருந்தவச் சூத னியம்புவான்.

(இ - ள்.) சிவபெருமான் திருவருளை நிலைக்கப்பெற்ற அடியவர்கள் நற்கதி யெய்தும் சிறப்புடைத்தான மற்றொரு சரித்திரத்தை, நான்கு வேதங்களை யோதுகின்ற நைமிசாரணிய முனிவர்களே! கூறுவோமென்று, பிறர்க்குஅடைதற்கரிய தவம்பொருந்திய சூதமுனிவர் சொல்லுவாராயினர். எ - று. (ருஅஎ)

இடப யோகியெ னுஞ்சிவ யோகிதண்
புடைப டர்ந்தெழு கற்பகப் பொன்னகர்
மடல்கொ ணாமலர்க் கற்பக மாலிகை
யடல்கொள் வேந்தனைக் காணப் புறப் பயணமினான்.

(இ - ள்) இடபயோகியென்னும் ஒருசிவயோகியானவர், பக்கங்களிலெல்லாம் குளிர்ச்சிபெற்றுயர்ந்த கற்பகத்தரு தங்கிய தேவலோகத்தில், அதிக இதழ்கள் பொருந்திய கற்பகமலர் மாலையையும் வெற்றியையுமுடைய இந்திரனைக் காண நெருங்கினர். எ - று. (ருஅஅ)

இவனெ திர்ந்திடு மெல்லையி ருஞ்சினைக்
கவர்த்த டம்பனைக் கற்பக மன்னவ
னவணி ருந்தில னாங்கவ னீன்றருள்
குவவுத் திண்டோட் குமரனெ திர்ந்தனன்.

(இ - ள்) இச்சிவயோகி சென்றதருணத்தில், பெரிய கிளைகளாற் கவர்ப்பட்டு விசாலித்திருக்குங் கற்பக விருட்ச நிழலிலுள்ள இந்திரன் அங்கேயில்லை. இந்திரனென்ற உருட்சியும் வலிமையுமுடைய தோள்களைப்படைத்த அவன் புத்திரன் சிவயோகியை எதிர்கொண்டான். எ - று. (ருஅகூ)

சென்ற யோகி செழுமலர்ச் சேவடி
யொன்றி வாழ்த்தி யுளநெகக் குருகினா
னன்று செய்வன யாவையுஞ் செய்துபொற்
குன்றெ னும்புயன் கோயில்கொண் டெய்தினான்.

(இ - ள்.) அங்கெழுந்தருளிய சிவயோகியின் செழித்த மலர்போன்ற செவந்த திருவடிகளை வணங்கித் துதிசெய்து, மனங்கசிந்துருகி அப்போது செய்ய வேண்டிய உபசாரங்களை யெல்லாஞ் செய்து பொன்மலைபோலப் பூரித்த புயங்களையுடைய அவ்விந்திரன் மகன், அரண்மனையினுள்ளே யழைத்துக்கொண்டு போயினன். எ - று. (ருகூ0)

சீய மேந்துஞ் செழுமணி யாசன
மீயி ருத்திவெ ருக்கொடு பென்மலர்
வாய்பு தைத்தும ருங்குநின் றன்னோர்
வாய வன்றனை யற்புற நோக்கினான்.

(இ - ள்) சிங்கங்கள் தாங்கும் செழுமை தங்கிய இரத்தினபீடத்தின்மேல் வீற்றிருக்கச் செய்து, மிகவும் அச்சமெய்தியவனைப்போல், மிருதுவாகிய மலர்போலும் வாயினைப்பொத்திக்கொண்டு ஒருபுறத்தில் நின்றான். அவ்விந்திரகுமாரனைச் சிவயோகி அன்புடன் பார்த்தனர். எ - று. (ருகூக)

உந்து மாதவத் தானையு வந்தரு
டந்தை யாங்க ணெனமுனி சாற்றலும்
விந்தை கேள்வன் விகற்பன கயிலைவா
ழெந்தை பாற்புகல் காணவென் றேகினான்.

(இ - ள்.) செலுத்துகின்ற பெருந்தவத்தினாற் களித்து, உன்னையீன்ற தந்தை எங்கிருக்கின்றாரெனச் சிவயோகி வினவியவுடனே, வீரலட்சுமியின் தலைவனாகிய விகற்பனென்பவன் திருக்கைலையில் வாழ்கின்ற எமது பிதாவாகிய சிவபெருமானிடத்தில் அவர் திருமேனியைத் தரிசிக்கும்படி போயினன். எ-று.)

என்னு மாததினை யிந்திர னெய்தினான்
மன்னு மாதவ யோகி மலரடி
பொன்னி லங்கு முடிதொடப போற்றிநின்
றன்ன காலைய ருச்சனை யாற்றினான்.

(இ - ள்.) என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, அங்கே இந்திரன் வந்துவிட்டனன். அங்கெழுந்தருளியிருந்த பெருந்தவமுடைய சிவயோகியின் தாமரைமலர்போன்ற திருவடிகள், பொன்மயமாக விளங்கும் கிரீடத்திற்படும் படி வணங்கி நேரில் நின்று அப்பொழுதே அவரைப்பூசித்தான். எ - று. ()

ஈது நோக்கியி ருங்கிய மாதவன்
யாது கார ணமேகிய தாங்கவினன்
றோது காலை வெருவரு முள்ளத்தான்
றூது லாமுடி யிந்திரன் சாற்றுவான்.

(இ - ள்.) இவ்வழிபாட்டினைக் கண்டு திருவுள்ளங்களிந்த சிவயோகியானவர், அக்கைலாயகிரிக்கு என்ன காரணமாகச் சென்றிருந்தனென வினவிய பொழுது, பொன்மயமாகிய கிரீடமணிந்த இந்திரன் அச்சமுற்ற சித்தமுடையவனாய், சிவயோகிக்குச் சொல்லுகின்றான். எ - று. (௩௧௪)

வெள்ளி வெண்குடை வேந்தனவி கற்பனென்
றுள்ள வன்றென கயிலைசென் றுற்றன
னள்ளெ திராந்திடை நோக்குற நண்ணினேன்
வள்ளி யோயநின் வரவும னக்கொளேன.

(இ - ள்.) வெள்ளிபோலும் வெண்கொற்றக் குடையையுடைய விகற்பனென்னும் பெயரெய்திய அரசன், அழகிய கைலாயபதவியெய்தினான் இடையில் அவனையெதிர்கொண்டு அவனைக்காணும்படி கைலையங்கிரிக்குப் போயினேன். வள்ளற்றன்மை மிக்கவரே. தேவரீருடைய வருகையையும் அடியேன் கருதவில்லை. எ - று. (௩௧௫)

எனவு ரைப்பவி ருந்தவ யோகியு
மனைய வேந்தன கயிலைய டைந்துறப
புனைசெய் மாதவம யாதெனப பொன்னகாக்
கனைபொ லன்கழல் வேந்தன கழறுவான்.

(இ - ள்.) என்றிப்படி இந்திரன் சொல்ல, அதனைக்கேட்ட பெருந்தவமுடைய அச்சிவயோகி, அம்மன்னவன் கைலாயபதவியெய்தும்படி அழகோடு செய்த பெருந்தவம் யாதென வினவ, தேவலோகத்தை யாளும் சத்திகின்ற பொன்னுலாகிய வீரகண்டாமணி தரித்த அரசனாகிய இந்திரன் இயம்பலாயினன். எ - று. (௩௧௬)

கண்ண குச்சர மென்றொரு கண்ணகன்
வண்ண நாட்டுவி ராட வளநக
ரண்ணல் யானை யரசிளங் கோமக
னென்னு மந்திரி மைந்தனொ டேகியே.

(இ - ள்.) கணகுச்சரமென்னும் பெயர் பெற்ற விசாலமான அழகிய ஒரு நாட்டிலே, ஒப்ப மிகுந்த விராடமென்னும் நகரத்தை யரசு செய்யும் பட்டத்தியானையையுடைய அரசிளங்குமாரனானவன், எல்லோராலும் மதிக்கத் தக்க மந்திரியினுடைய புத்திரனுடன் கூடிச்சென்று. எ - று. (௩௯௭)

சூத லாது தொழிலொன் றியற்றுறார்
தீத லாதொரு செய்வினை செய்குறார்
தாதை கண்டுச லித்துறத் தாழ்கலா
போதிர் மற்றொரு நாடடெனப் போக்கினர்.

(இ - ள்.) சூதாடு தொழிலேயன்றி வேறொரு தொழிலுஞ் செய்யார்கள். ஒரு தீமையேனுமில்லாமல் செய்யுங் காரியங்களொன்றுஞ் செய்யமாட்டார்கள். தந்தைமார் இவர்கள் செயலைநோக்கி மனவெறுப்பெய்தியும் தங்கள் தொழிலிற் குறைந்தவர்களல்லர். ஆதலின் அவர்களிருவரையும் வேறொரு நாட்டிற்குப்போகுகவென்று துரத்திவிட்டார்கள். எ - று. (௩௯௮)

அன்ன நாடகன் றப்புறச் சேணெறி
மன்னு நாடு புகுந்தனர் வல்லிரு
டுன்னு காலைப் பிறாமனைத் தொல்பொரு
ளுன்னி வவ்விப் புலைவயி றோம்புவார்.

(இ - ள்.) அந்தகைய நாட்டை விலகி, அதற்கப்புறத்திலே, வெகு தூரத்திலுள்ள ஒரு நாட்டையடைந்தார்கள். கொடிய இருள் நிரம்பிய இரவில்; அயலார் வீட்டிலிருந்த பண்டைய திரவியங்களைக் களவாடக்கருதித்திருடி, இழிவானவயிற்றை நிரப்பிப் புசித்துவந்தார்கள். எ - று. (௩௯௯)

களவ ரோடுக ரந்தனர் காமபுரத்
துளபு குந்துக ரந்தன ரொண்பொருள்
வெளளி டைப்புறம் போதலும் வேறவர்
கொளளை யம்பொற் குடங்கொடு போயினர்.

(இ - ள்) திருடர்களோடு கூடித்திருடுபவர்களாய், காம்பீரமுள்ள ஒரு வீட்டிற்குள்ளே புகுந்து, ஒளி பொருந்திய திரவியங்களைக் களவாடினார்கள். அதன்பின், அந்நகரத்தின் புறத்திலுள்ள வெளியிடத்திற்கு வந்த வுடனே. இவர்களோடு சேர்ந்த ஏனைய திருடர்கள் பெருந் தொகையுள்ள அழகிய பொற்குடங்களைத் திருடிக்கொண்டு போய்விட்டார்கள். எ - று, (௪00)

ஈங்கி வர்களெனத் தண்டுலம் மேற்றிடும்
வீங்கு கொள்கலம் வெய்துற வேட்கையி
னோங்கு மாநிதி யென்றெடுத் துற்றனர்
பாங்கர் நீணெறிப் பாரமென றய்த்தனர்.

(இ - ள்.) அத்திருடர்கள் தங்களோடு வந்த இவ்விருவருக்கும் உதவியாகும்படி [தண்டுலம்] நெல் நிரப்பியிருக்கும் பெரிய தானிய பாத்திரங்களை விட்டு விட்டுச்செல்ல, அவற்றை மிகவிரைவோடு ஆசையாலே, பெருந்திரவியமென்று எடுத்துக்கொண்டு வந்தார்கள். அப்படி வருகையில் மிகச் சுமையென்று வழியில் இறக்கினார்கள். எ - று. (௪0௧)

உய்த்த பார முடனவிழ்த் துள்ளவர்
வைத்த யாவென நோக்க வரியறா வுஞ்
சுத்த தண்டுலங் கண்டுது ளங்கிமீண்
டெய்த்தி ரங்கியெ டுக்குமி டுக்கிலார்.

(இ-ள்.) இறக்கிய சுமையைச் சீக்கிரமாக அவிழ்த்து நோக்கி அவ்வீட்டிலுள்ளவர்கள் அதில் வைத்த பொருள்கள் எவை யென்றுபார்க்க, வரிகளை பொருந்திய சுத்தமாகிய நெல்லைக்கண்டு, மனங்கலங்கிச் சோர்வெய்தித் துக்கித்து, மீண்டும் எடுத்துச்செல்லும் வலிமையற்றவர்களாய். எ-று. (௪0௨)

அட்ட மைக்குமு ரிக்குள லேகமொன்
றிட்டி ருந்தெடு த்தய லிட்டனர்
பட்ட பாரமெ டுக்கப படுகலார்
விட்டொ ழிந்தனர் வேட்கைவெ தும்புவார்.

(இ-ள்.) இப்பாத்திரத்திற்குள்ளே சோகப்பட்டிருந்த நெல்லினுள்ளே [அலேகம்] வெள்ளேயொன்று வைக்கப்பட்டிருந்தது. அதனை யெடுத்துப் புறத்தே யெறிந்தார்கள். பேராசையோடு வருந்துகின்ற அவ்விருவரும் சுமந்து வந்த சுமையைச் சுமக்கமாட்டாதவர்களாய் அங்கேயே விட்டுவிட்டார்கள்.

ஆய காலையொ ரந்தண னங்கவன்
பாய வெள்விடைப பண்ணவற காட்பட்ட
தூய சிந்தையன ரென்றினன் றென்றது
மேய வறுகொணர்ந் தேறறுதி யெனறனர்.

(இ-ள்.) அப்பொழுது, அங்கே யாபரந்த செவ்வப வெண்ணிறந்தாங்கிய இடபவாகனமுடைய சிவபெருமானுக்குத் தொண்டுபூண்ட புனிதமான மனந்தங்கிய ஓரந்தணன வந்தனன அப்படி வந்தவுடனே, அவனை யழைத்துவந்து, இச்சுமையைத் தலையின்மே லெடுத்துக்கொள்க வென்றார்கள். எ-று. (௪0௪)

அந்தவேதிய னங்கவர்ப் பார்த்துளம
வெந்த முற்றும ப்ரியின வெதும்பினேன
சிந்தை சேவுயர்த தோறுகெனச் சோர்க்துநின்
றுயந்த வேட்டதி னேனென்று ரைத்தனும.

(இ-ள்.) அப்பொழுது அந்தப் பிராமணன் அவர்களிருவரையும் பார்த்து மனதை இடபக்கொடியை யுடைய சிவபெருமானிடஞ்செலுத்தி அந்நிலைமையிலிருந்து தினங்கள் கழித்துவந்த தன்னுடைய ஈன, வருத்துகின்ற பசியினாலே மனம்வருந்தி வாட்டமெய்தினேன் எனச்சொல்லியவுடனே. எ-று,

பார மீதிறக் குபபடுங காலையிற
சோர விழுந்தவ ரியைத்து டைத்துநீ
வாரி மற்றைய லேகமவ முங்கினே
மூர கங்கொடு போதியென றோதினார்.

(இ-ள்.) இந்தச் சுமையை நீ யிறக்குகின்ற காலத்தில் இவற்றினின்றும் சிந்துகின்ற நெற்களையெல்லாம் வாரியெடுத்துக்கொள்ளுவதோடு அதினுள்ளே யிருக்கும் வெள்ளேட்டையுங் கொடுக்கின்றோம். அவற்றை உன்னூருக்குக் கொண்டுபோகக்கடவை யென்று சொன்னார்கள். எ-று. (௪0௬)

எடுத்த பார மிவர்கொண் டியங்கினு
ரடுத்த வூரி னகவை யடங்கினு
ரொடுசெகும பூநதுண ரோதியொ ருத்திபான்
மடுதத சிநதைய ராகிம றநகொளவார.

(இ - ள) தாமெடுத்துவாத சுமையை இவ்வேதியனைச் சுமக்கச்செய்து அழைத்துச்சென்று, அயலூரில் இறங்கினார்கள். அஙகே பூஙகொத்துகளை யணிநத கூநதலையுடைய வொருததியின்மேல் மிகக விருப்புடையவர்களாகி, அத ளுல ஒருவரோ டொருவர் விரோதப்பட்டார்கள். எ - று. (௪0எ)

காதற் காமங் கடுஞ்சின மூட்டலால
வாதித தாரவா தங்கர வாடபடை
சேதிப பததம தாவிசி தைநதனா
பேதித தாகம்பி ளநதிற வீழநதனா.

(இ - ள.) காமவிருப்பு தீராககோபத்தை யுண்டுசெய்து விட்டமையின், போர்புரிநத அவர்களிருவரும் தங்கடங்கள கையிலேநதிய வாட்படையே துணிபடுத்த மாறுபட்டுத தேகம் பிளவுபட்டு இருவரும கீழே விழுந்திறநதார்கள்.

அணணல வெள்விடை யேறகமுந் தாகவக்
கணணறு தருகடி மைததிறங காட்டியோ
னுணணறு நறமெகன வொள்ளாரி சிநதிட
மணணில வீழநதவ முயலும ரபினுல.

(இ - ள.) சிறப்புததஙகிய வெண்ணிறமுடைய இடபவாகனராகிய சிவ பெருமானுக்குத திருவமுதாகும்படி, நெறறிககணணையுடைய அப்பெருமானுக் குத தொணடு பூணடுள்ள வேதியன புசிப்பதற்காக, மணமிசைவீழ்நது சிநதிய தெள்ளிய தானியததைக கொடுதத தனமையால. எ - று. (௪0௯)

அனற ளிததவ லேகததி னுடகக
குனற வில்லிர ரிதைகு றிததது
நனறி யோதிரு நாமந விறறலா
வினறிம மானமி வாகமெளி தாயதே.

(இ - ள) தானியததுடனே அனறு கொடுதத வெள்ளேட்டில், மேருமலை யை விலலாகவுடைய சிவபெருமான சரிதம் வரையப்பட்டிருநதது, அதை அவ வேதியன் வாசிககையில, சாவானமாகககளுககும நனமைபுரிபவராகிய சிவபெரு மான திருநாமததை யோதியபடியால, இன்று இததெய்வவிமானம இவவிரு வாககும் எளிதாயிற்று. எ - று. (௪௧0)

யானு மெனனுடை யிவ்வுல கததுள
வான நாடரு மஙகையா யாவரும
கான மாரநதது ழாயமுடிக கணணியோன்
றனு முநதியந தாமரைச செலவனும.

(இ - ள.) அடியேனும் அடியேனுடைய இததேவலோகததிலுள்ள தேவர் களும் தேவமாதாகளுமாகிய வெல்லோரும, நறுமணநதஙகிய துளவமாலைதரி தத முடியையுடைய திருமாலும், அவாநாபிக கமலததிலுதிதத புதல்வராகிய பிரமதேவரும். எ - று. (௪௧௧)

மற்றை யோரும்வ ரன்முறை யேத்தியே
துற்ற நாண்மலர் மாரிசொ ரிந்திடப்
பெற்ற துந்துமி பேரிய மார்பபுறச
சொற்ற தேவக ணததவா சூழ்வர.

(இ - ள்.) பிறரும் கிரமமாகததுதிதது, நெருங்கிய புதியபுட்பங்களை மழையாகச் சொரியவும், இவ்வுலகததி லிருப்பதாகிய தேவதுநதுபியும் சிறநதவாததியஙகளும் முழஙகவும், யாவருந துதிககினற தேவகணஙகள அவ்விருவாகளையும் புடைசூழ்நதுவரவும். எ - று. (சகஉ)

போயி ஞாநங் கயிலைபு குந்தனர்
நாய கன்றிரு முன்னரி னண்ணினு
ரேய யானுமு டன்புகுந தெய்தினேன்
றூய சேவடி சென்னியிற சூடினேன.

(இ - ள்.) போனவாகளாயத திருககைலாயமடைநது நமது தலைவராகிய சிவபெருமான திருமுன்னடைநதாாகள. அவாகளோடு பொருநதுமபடி அடியேனும் போயச் சோநது, அவாகளுடைய புனிதமான பாதஙகளைச சிரமேற சூடிக்கொணடேன. எ - று. (சகங)

கற்றை வாாசடைத திஙகளங் கண்ணிவெம
பெற்ற மேறுமபி ரானுருப் பெறறன
ருறறொா பாகத துடனிருந தாாமழூ
வெற்றி யாளனை யாாவியந தேததுறா

(இ - ள்.) தொகுதியாய நீணட சடையில், சநதிரனுகிய அழகியமாலையணிநது, விருப்பநதரும இடபவாகனமூரும சிவபெருமானது திருவுருவமெயதினர் ஆதலால், ஒருபாகததில் உமாதேவியையுடையவராய வீறறிருபபவராகிய வெற்றிதஙகிய மழுப்படைதாஙகிய சிவபெருமானை யாா தாம களிததுத தோததிரம் புரியாதர்கள? எ - று. (சகச)

போநத னனப புராதன வேறறுடை
யோநத லைதநொழுமம பேறுவந நெய்தினேன
பூநத டஞ்சினைக கறபகப பொனனகா
சாாநத நின்னடித தாமரை தீண்டலால்.

(இ - ள்.) அழகிய விசாலமான கிளைகளையுடைய கற்பகவிருட்சததை யுடைய இத்தேவலோகம் இஙகெழுநதருளிய தேவரீா பாததாமரைகளைப பரிசித்ததன்மையால், அடியேன திருககைலாயமெயதி, இடபவாகனமுடையமுன்னோராகிய சிவபெருமானை வணஙகும பேற்றினை மணககளிப்புடன் பெற்றேன

என்றெ டுததிசைத் தானிமை யோரிறை
புன்ற லைததொடைப புஙகவன் புண்ணிய
நன்று நனறென நாவின விற்றினு
னின்ற யோகியி னையமி கழததுவான்.

(இ - ள்.) என்றிவ்வாறு இநதிரன் விரிததுககூறினன். அதுகேட்ட சிவயோகி, அற்பமாகிய சிரமாலையணிநத புனிதராகிய சிவபெருமானுககுரிய சிவபுணணியத்தின் மகிமை சிறநததென்று தன் நாவினுலுரைத்து, இப்படி மேலுஞ் சொல்லுகின்றுர், எ - று. (சகரு)

ஈது கண்ணுற் றதிசய மெய்தினை
யாதி காலத் தரனுல கெய்தியாம்
போது மெல்லை யுலகிற் புதுமையொன்
றேது காட்டியி யம்பியதுங் கேளென்று

(இ - ள்.) இதனைக்கண்டு நீ யதிசயமடைந்தனை. முன்னொருகாலத்தில் நாம் சிவலோக மடைந்து திரும்புங்காலத்தில், நிலவுலகத்திற் கண்ட புதுமையைக் காரணத்தோடு சொல்லுகின்றோம். கேட்பாயாக (என்று, சிவயோகி சொல்லத் தொடங்கினார்.) எ - று. (௪௧௭)

நன்ன லக்குடக் கத்திரு நாட்டகம்
பன்ன ருஞ்சவு பாக்கிய மென்றுள
தந்ந காக்கு ளதிகண்ட னென்றுளான்
மன்னு நான்மறை யோர்வழி வந்தவன்.

(இ - ள்.) நற்சிறப்புடைய குடக்மெனனும் பெரிய நாட்டிலே, சொல்லுதற்கரிய சவுபாக்கியமெனனும் ஒரு நகர முள்ளது. அந்நகரத்திலே நிலைபெற்ற சதுர்வேதங்களுக்குரிய அந்தணர் குலத்திற் பிறந்தவனாய அதிகண்டனென்பானொருவனிருந்தான். எ - று. (௪௧௮)

வால னாகி மறுகயார் தாரொரட்
கால காலனங் கணனெனு மாமணி
யேல வேகண் டெடுத்தது மச்சிறு
பால கன்றற பயந்தவற் கீந்தனன்.

(இ - ள்.) பாலியபருவ முடையவனாய், தெருவில்வந்து விளையாடுகின்ற காலத்தில், காலகாலனாகிய சிவபெருமானுடைய கண்ணென்று சொல்லப்படும் உருத்திராக்கமணிமாலையைக் கண்டெடுத்தவுடனே, அச்சிறுபாலன் அதனைத் தன்னைப்பெற்ற தந்தையிடங் கொடுத்தான். எ - று. (௪௧௯)

வாங்கி னனம் மணிக்குல முன்னரே
தாங்கி னனத் தனிமணி தன்னையன்
றுங்க வன்களத் திறபுனைந் தானரோ
வோங்கு சிந்தையு வகையி ரைந்தெழ.

(இ - ள்.) அவன்பிதா, உருத்திராக்க மாலையை வாங்கி முதலிலேயேதான் சிரமிசைத் தரித்துக்கொண்டு, தன்மனத்தே மிகுந்துதித்த பெருங் களிப்பு வெளிப்பட, அப்பொழுதே ஒப்பற்ற அவ்வுருத்திராக்க மணிமாலையை அவ்வதிகண்டன் கழுத்திலணிந்தனன். எ - று. (௪௨௦)

பிள்ளை யந்த மணியின் பெருமையை
யுள்ளு றுத்தன னொண்டுக் குரியனோ
வெள்ளை நீறணி மேனியன் பிள்ளைபால
வள்ளி யோரின வழங்கின னமரோ.

(இ - ள்.) புதல்வனாகிய அதிகண்டனென்பவன், அவ்வுருத்திராக்க மணிமாலையின் பிரபாவத்தைக் கருதாதவனாய், சிவபெருமான் பணிவிடை செய்தற்குரியவனும் திருவெண்ணீறணிந்த திருமேனி யுடையவனுமாகிய ஒரு சிவபக்தனுடைய புதல்வனிடத்தில் வள்ளல்கள் கொடுப்பதுபோலக் கொடுத்துவிட்டான். எ - று. (௪௨௧)

அக்க மாமணி யீந்ததி கண்டனோர்
மிக்க மாமணி மானம்வி ளங்குறத
தொக்க வெள்ளிப் பருப்பதந துன்னினான்
முக்க ணான்செயல் யாவர் மொழிகுவார்.

(இ - ள்.) பெருமைதங்கிய உருத்திராக்கமணி மாலையைக் கொடுத்து, அதனால் ஒப்பற்றதாகி மேம்பட்ட அநேக இரத்தினங்கள பதிக்கப்பெற்ற தெய்வவிமானம் நேரேவரவும், அதிலூர்ந்துகொண்டு, வெள்ளிமலையாகிய திருக் கைலாயத்தை யடைந்தனன். ஆதலால மூன்று கண்களையுடைய சிவபெருமான கிர்த்தியங்களை எவர்தாம் சொல்லுவார்கள்? எ - று. (௪௨௨)

என்று முன்ன ரிடபனை டுதடுத்
தன்று வானுல காளபவற கோதிய
தின்று மகடுென் றெடுததுரைத தேமெனத்
துன்ற ருநதவச சூதன் முடிததனன்.

(இ - ள்.) என்று இப்படி இடபயோகி யெனபவா அககாலத்தில் தேவ லோகததை யாணட இந்திரனுககு முனனா எடுதது விளககிசசொனனதை, இக்காலததில் உஙகளுககாக விரிநதுச்சொனனோமெனறு, அரியதபோபலம வாயநத சூதமுனிவா சொலலிமுடிததனா. எ - று. (௪௨௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செய்ய மாதவம் யாவையு மொருவழித் திரணடுரு வெடுததாஙகு
மெய்யெ டுத்தனை யெமமனோா வேணடுழி யருமறை விரிததோதும்
பொய்யில்கேள்வியோய் நினனுழையுணாநதவிப புணணியபபொருளெ
கைய ரிக்கொள நின்றனம புரிதவப பயனிது கண்டோமால. [ல்லாங

(இ - ள்.) நாஙகள் செய்யும் பெருநதவஙகளெல்லாம் ஒனறு சோநது வடி வெடுத்தாற் போன்ற திருமேனியுடையவரே! எமமவர்கள விருமபியகாலததில் அரிய வேதார்த்தஙகளை விரிததுச் சொலலும உணமையான நூலாராயச்சி யுடையவரே! தேவரீா பால உணர்நதுகொணட இச்சிவபுணணிய மகிமைகள யாவும் தேடிக்கொள்ள விரும்புகினறோம், நாஙகள இதுகாறுஞ செயதுவநத தவப்பலனாக இதனையடைநதோம். எ - று. (௪௨௪)

வெண்ணி லாக்கொழுந தொழுகிய பகீரதித் திரைபொர விரிவேணிக்
கண்ணு தற்பர னருளிய வரனமுறை கேட்பவாக கடுததுன்பா
னண்ணி யிததனை கேட்டன மாதலி னவையுஞ குணநோன்பின
புண்ணி யப்பெரு மாதவ வுயாநதன மெனஐமபுலமவென்றார்.

(இ - ள்.) ஐம்புலன்களை வென்ற நைமிசாரணிய முனிவர்கள, வெள்ளிய சந்திரன் தவழுங கஙகையின் அலைகள் மோதவிரிநதசடையையும நெற்றிககண ணையுமுடைய சிவபெருமான் திருவாய் மலாநதருளிய வேதாகமஙகளைக கிரம மாகக் கேட்பவர்போல, தேவரீர் பாலெய்தி இவவளவுங கேட்டுணர்நதோம். ஆதலால், குற்றமற்ற நற்குணததோடு செய்ததவததால் புண்ணிய மிக்கபெருந தபோதிதியே! நாஙகளும் மேன்மையுறறோமென்று சொன்னார்கள். எ - று. ()

விரித ரப்படுத் துணர்த்திய யாவையு முணர்ந்தனம் விடைப்பாகன்
சரிதை நான்முறை கேட்பவ ருரைப்பவர் தனித்தனி யிவர்க்கெமமான்
புரிதல் காதல் கொண்டுணாததுதி யென்றனர் புலன்கடந் தொருவாது
புரியு மாதவத் தநதண னுங்கவர்க் கவ்வழி புகல்கின்றான்.

(இ - ள்.) விரிவாகத் தெளிவுறப் போதித்தவற்றையெல்லாம் தெளிந்தோம். இடபாரூடராகிய சிவபெருமான் சரிதைகளைப் புராணமுறையாய்க் கேட்பவாகளும் சொல்லுபவர்களும் ஆகிய இவாகட்கு வெவவேறாக எமது சிவபெருமான் அநுககிரகிப்பதை விருப்போடு உபதேசித்தருள்வீரென்று வேண்டினார்கள். ஐமபுலனகளை நிககிரகிதது இடைவிடாது செயகினற பெருநதவமுடைய சூதமகாமுனிவா, அநநைமிசாரணிய முனிவாகளுககு அப்படியே திருவாய மலாநதருளவாராயினா, எ - று. (சஉக)

சிவபுண்ணிய மான்மிய சருககம முற்றிறறு.



ஆகச்சருககம கO-ககுத திருவிருததம ககூநக.



பதிெனான்றாவது

# சிவபுராணமான்மிய சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஊட்ட ரக்கெழுங் கொழுந்துவிட டனையதோர புன்சடை யொருநீவிர்
கேட்ட கேட்டவ ருரைபபவ ரிவருறை யனபுமீக கிளைததோட
வேட்டி ரங்கியோர் பெறறன யான்சொலுஞ் சருக்கமோ விடையூர்தி
தாடடு ணைகரந தொளிமய மாகுவர் சததியந தவறுதால.

(இ - ள்.) உருககிய அரககுககொழுநது விட்டெழுநததுபோனற ஒப்பற்ற சிறு சடையையுடைய நீஙகள் கேட்ட சிவபுராணததைச் சிரவணஞ் செயதவர்களும உபதேசிததவாகளுமாகிய இவ்விருவரிடததிலும, உண்மையனபு அதிகரிககுப்படி விருபபஙகொணடு மனமுருகினவாகளும அடைநத பதவியை நான சொலலச் சருககமானதோ? இவாகள யாவரும இடபாரூடராகிய சிவபெருமான திருவடிகளிற் சோநது சோதிமயமாவாாகள். அஃதுண்மை எப்பொழுதும பிசகாது. எ - று. (க)

நடததுமூவறு சரிதையுண் முக்கணன சரிதைநா யகமென்றே
யெடுதது ரைப்பது சுருதிமற றுநம மிபபடி யெடுததோதுங்
கடுக்க ளததனுக கன்புடைத தாகிய புராணகா தையை யனறோன்
றொடுதத சோதிமா மயமெனப பகாவாநற றொண்டரிற் றலைகின்றார்.

(இ - ள்.) வழஙகுகின்ற பதினெண புராணஙகளுககுளளே திரிநேததிரங்களையுடைய சிவபெருமான சரிததிரஙகளாகிய சிவபுராணங்கள் (பத்தும்) சிறநதனவென்று வேதஙகள் விளககிச்சொல்லுகினறன. விஷநதஙகிய கண்டத்தையுடைய சிவபெருமானுககு உணமையன்பு பொருநதியுள்ள அச்சிவபெருமானுககுரிய சிறநத சோதிஸவரூபமென்று, மேனமைத் தஙகிய நல்ல அடியவாகளில மேம்பட்டவர்கள் சொல்லுவாாகள, எ - று. (உ)

மழலை யின்றமென் குதலையா யிமயமீன் றளித்தருண் மலர்க்கொம்பே
யிழைபொ ருந்துணை வனமுலை கேட்டியென் றிறைவிபா லெமையாளுங்
குழக னெம்பிரா னெடுத்தெடுத் தருளினு னங்கது குறைதீர
விழையு மாதவத் தலைவிர்காள் கேட்டிரெ னாழ்முறை விரிக்கின்றான்.

(இ - ள்.) மழலையென்னும் நிரம்பாத மெல்லிய குதலைச்சொல்லை யுடையவளே! இமயாசல மன்னன் பெற்றெடுத்த பூங்கொடிபோல்பவளே! இழைபோலும் நுண்ணிய இடையுடனே போராடுகின்ற அழகிய இருகுசங்களை யுடையவளே! கேட்பாயாகவென்று, உமாதேவியாரிடத்தில் எம்மையாட் கொண்ட எமது சிவபெருமான் விளக்கி விளக்கித் திருவாய்மலர்ந்தருளினர். அச்சரிதையை மனக்குறைவகலவிரும்பும் பெருந்தவத்தலைவர்களே! கேட்பீர்களாகவென்று சூதமுனிவர் மூறைப்படி சொல்லுகின்றனர். எ - று. (௫)

எழுதி யோர்ந்துண ரெமதுமுழைச் சரிதைகேட் டிருப்பவ ரிரக்கங்கூர்ந்
தழுதல் விம்முத லுதந்டு மாறுந லணிமயிர்ப் புளகெய்தித்
தொழுத லெய்திமுனா பெறுகுவ தியாமலாற் சொலற்கரி தெவர்க்கேனு
பழுதி லுனமறை நூ றுக்கமு மின்னணம் பகர்வ்ந பலவூழி. [ம

(இ - ள்.) எழுதிப்படித்தறியத்தக்க எமது சரித்திரத்தைச் சிரவணஞ் செய்துகொண்டிருப்பவர்கள், மனக்கனிவு மிகுந்து அழுதலும் கண்டம் விம்முதலும் நாத்தழுதழுத்தலும் அழகிய மயிர்க்கூச்செறிந்து பணிதலுமாகிய இக் குறிகளடைந்தோரென்மை இவர்களடைகின்ற பதவியை நாமேயன்றி வேறெவர்க்காயினும் எடுத்திச்சொல்வது அசாத்தியமாகும். பழுதற்ற நான்கு வேதங்களின் கருத்தும் இப்படியே பல ஊழிக்காலங்களாக முறையிடுகின்றன.

கேட்க வேண்டுழி யெமதுமுழைச் சரிதையே கேட்டுற மனனேநுங்கு
வேட்கை மிக்குற நினைப்புழி யெம்மையே நினைப்புற விருப்புற்ற
வாழ்க்கை யாமெனமைத் தாமென மதிப்புற வருந்துவ தெங்காதை
தாழ்த்த சிந்தையிற் கேட்பன மற்றொரு புண்ணியஞ் சரியென்றே.

(இ - ள்.) சரிதம் ஏதாவது கேட்க விருப்பமுண்டானால் எமது சரிதமே கேட்கவேண்டும். மனத்திற்றோன்றிய ஆசை அதிகரிக்க எண்ணும்போது எம்மைத் தியானிக்கவேண்டும். இகலோக வாழ்க்கையின் விருப்பம் நீங்கிய படியால் எம்மையே தாமாக மதிக்கத்தக்க தன்மையை வருவிப்பதாகிய எமது சரித்திரத்தை மனவுருக்கத்தோடு கேட்பதற்கு வேறொரு புண்ணியமும் ஒப்பாக மாட்டாது. எ - று. (௬)

எனவு ரைத்தன னம்பிகைக் கெம்பிரா னிருந்தவத் துறையீரு
மனனு ணர்ந்தறி யாகம புராணமு மளவொழி மறைநூறு
மினமு மப்படி யெடுத்தெடுத் துரைப்பன விதுமதிச் செருக்கன்றே
யனன டந்தரு புராந்தகன் புராணமுற் றளப்பதே யழகம்மா.

(இ - ள்.) என்றிப்படி எமது சிவபெருமான் உமைப்பிராட்டியாருக்குப் போதித்தருளினர். ஆதலால் பெரிய தபோநெறியிலுள்ளவர்களும் மனதில் ஆராய்ந்துணரத்தக்க சிவாகமங்களும் சிவபுராணங்களும் எண்ணிறந்த வேத சாஸ்திரங்களும் மற்றுள்ளவைகளும் அப்படியே விரித்து விரித்துச் சொல்லு கின்றன. இது என் மனோகாவத்தாற் சொல்லியதல்ல. ஆதலால், அக்கினியில் தாண்டவம் புரியும் திரிபுராந்தகராகிய சிவபெருமானுக்குரித்தாகிய புராணங் கள் முழுவதையும் ஓதுவதே சிறப்பாகும். எ - று. (௭)

ஈது ணர்ந்தருள் வியர்தரெம் பாலெடுத் திசைத்ததோர் பெருங்கதை
யோது சாலுவ மென்றுள நாட்டகத் தொருபெரு நகரவ்வூர்
காது காமகண் டப்பெய ருடையதக் கடிநகா நெடுங்கோட்டுச்
சீத நாண்மலர்க் கற்பக நாட்டினுஞ் சிறப்புடைத் தெனலாமால்.

(இ - ள்) இவற்றை யுணர்ந்து, திருவருள்கொண்டு வேதவியாசமுனிவர் எம்மிடத்தில் விரித்துச்சொல்லிய பெரிய சரிதம் ஒன்றுள்ளது. அஃதென்ன வெனில், யாவரும் புகழுந்தக்க சாலுவமெனும் பெயர் பெற்ற ஒரு நாட்டில் ஒரு பெரிய நகரமுள்ளது. அந்த நகரமானது விரிவுபடுத்துங் காமகண்ட மெனும் பெயரையுடையது. காவல் பொருந்திய அந்நகரமானது நெடிய கிளை களில் குளிர்ச்சிபொருந்தி யனறலர்ந்த மலர்கள் பொருந்திய கற்பகத்தருவை யுடைய தேவலோகத்திலும் மேம்பட்டதென்று சொல்லலாம். எ - று. (எ)

மரபி னோங்கிய நாலவகை வருணமு மில்லறப் பெருவாழ்க்கை
யொருவி நீங்கிய மாதவத் தலைவரு முத்தமி ழொருங்கோர்ந்த
குரவர் யாவருங் கொள்பவர் குறிப்பதன் மேற்படக் கொடுப்போரும்
விரவி வைகலும் பேரறம் வளர்ந்தருள் வளர்ந்தரும வியன்மீதூர்.

(இ - ள்.) முறையோடு மேம்பட்ட நாலவகைவருணத்தார்களும், இல்லற மாகிய பெரிய வாழ்வைவிட்டுத் துறந்த பெருந்தவஞ்செய்த துறவிகளும் (இயலிசை நாடகமென்னும்) மூவகைத்தமிழினையும் முழுவதுங்கற்ற கலைவ் போதகர்களும், இரப்போர் எண்ணிவந்த அளவிற்கு மிகுதியாகக் கொடுக்கும் ஈகையாளர்களும், ஆகிய இத்தகையினர் யாவருங்கூடி, நாடோறும் மிகுந்த புண்ணிய கருமங்கள் அதிகரித்துவருகின்ற வளங்களைக் கொடுப்பது, சிறப் புற்றப்பழைமைவாய்ந்த அந்நகரம். எ - று. (அ)

அன்ன மாநக ரத்தினி லொருவரு மருந்தவ மொருங்கோர்ந்து
சென்னெ றித்தலை நின்றறந் தருபிர திலோமருஞ் செறிந்தீண்டி
மன்னு மாநக ரில்லறத் தவர்களை மன்னுயிர்த் தொகையெல்லாந்
தன்னை யீன்றரு டாயென விரங்குறுந் தன்மைய தமழுறூர்.

(இ - ள்.) அத்தகைய சிறந்த நகரத்தில் இடைவிடாது விளங்கும் அருந் தவங்கள் முழுவதுமுணர்ந்து, செவ்விய நன்மார்க்கத்திற் சிறந்திருந்து,(இழிந்த ஆணிற்கும் உயர்ந்த பெண்ணிற்கும் பிறந்தவர்களாகிய) பிரதிலோமரும் நெரு ங்கிச்சேர்ந்து நிலைத்திருப்பார்கள். அந்தப்பெரிய நகரத்தின் குடிகளாகிய இல்லறத்தார்களைச் சராசர வுயிர்களெல்லாம், தம்மைப்பெற்றுப் பாலிகுந் தாயமார்களென்று நினைத்து மனமுருகுந் தன்மையுடையதாகும். எ - று. (கூ)

ஆங்க திறமெறு காயநீத் தொழிதரு முனிவர னருமபாவ
நீங்க நின்றவன் சிதேந்திரிய னெனுமொரு நிறைகுணத் தவன்சைவத்
தோங்கு தெய்வநூன் முற்றுணர்ந் தளந்தவ னுயிர்க்கெலா மொருதாயி
ருங்கு மன்பின னாகம முதலிய தெரிந்தொரு தலைநின்றான். [ற்

(இ - ள்.) அத்தகை நகரத்தில், ஆசையை யடியோடகற்றியருளிய முனிவ னும், அரிய பாவச்செயல்கள் நீங்க நடப்பவனுமாகிய சிதேந்திரியனெனும் பெயரேற்றவன் ஒருவனிருந்தான். அவன் எல்லா நற்குணங்களும் நிறைந்த வன். சைவசமயத்திற்குரித்தாக விளங்கும் தெய்வீகந்தங்கிய நூல்களை முற்றும்

கற்றறிந்தவன், ஆன்மவர்க்கங்களெல்லாவற்றிற்கும் ஒரு தாயபோல ஆதரிக்கும அன்புள்ளவன். வேதாகம முதலியவற்றைத்தெரிந்து உண்மை நிலையில் நின்றவன். எ - று. (௧௦)

இன்ப துன்பமென் றிவைதனக் கிழைத்தவர் யாரையும் பகுததோரா
தன்பி னேக்குறுந் தாயினு முரியன்மற றந்நகாப் படவாழு
மன்ப ரைக்குலம் யாவையுந தானபுகன மொழிவழிப படநின்முன்
றன்பெ ருங்குணப பொறையினு லிரைதிரை நிலமகட் சரிபோவான்.

(இ - ள்.) இன்பமுந துன்பமுமென்று சொல்லப்படும் இவ்விரண்டினையுந தனக்குச்செய்பவர்கள் யாவரையும பாகுபடுத்தி யறியாது, அனபோடு தாட்சணியமுடைய தாயைக்காட்டிலும் உணமையுடையவன். அந்நகரத்தில் வாழும மாந்தரெலலோரும தான சொல்லுஞ சொலலினபடி நடக்குமாறிருந்தவன. தன் சிறந்த சற்குணமாகிய பொறுமையினாலே சத்திக்கின்ற சமுத்திரததாற் சூழப்பெற்ற பூமிதேவிக்குச் சமானமானவன். எ - று. (௧௧)

அருமறைத்துறை மூழ்கிமுற் றளநதவ னநநகரத தலைவாழும்
பெருமறைக்குலந் தோன்றுசீ முகனெனும பெயரின னுளனீன்ற
தருமமைந்தரோ ரெணமாபு னனவன்பெயா சாநதன்மற றநுசாநதன்
மருவி ராமன விராமனோ சிந்தன்மற றிளையவன் பிரசித்தன்.

(இ - ள்.) அரிய வேதங்களின துறைகளெலலாவற்றையுமறிந்தவனும், பெருமை தங்கிய அந்தணர் குலததில் உதித்தவனுமாகிய ஸ்ரீமுகனென்னும் பெயர் பெற்றவனொருவனிருந்தான். அவன் பெற்ற புணணிய சொரூபிகளாகிய புதல்வர்கள எட்டுப்பெயர்கள். அவர்களில ஜேஷ்டன சாந்தன. இரண்டாம் புதல்வன் அநுசாநதன. மூன்றும் புதலவன இராமன. நானகாம் புதலவன் அவிராமன். ஐந்தாம் புதலவன சித்தன. ஆறும் புதலவன பிரசித்தன். எ - று.

ஓது காரண னகாரண னெனுமபெயர் வரன்முறையுரைததானம்
மாதா மைந்தரோ டொருதனி வறுமையு மனைபட வாழவுறறு
னேது காலநல வினைநமக கெய்துமென றெணணின னிவரோடுந்
தீதின மாநகரக் கடைததலைச சென்றுசென றிரக்குறும பசித்தீயால்.

(இ - ள்.) சொலலுகின்ற ஏழாம புதல்வன் காரணன. எட்டாம் புதல்வன் அகாரணன் எனறிப்படி வரிசைப்படப்பெயர் தந்தான். அவவழகிய மைந்தர் எட்டுப்பேரோடும் ஒப்பற்ற தரித்திரததுடன இலலற வொழுக்கத்தில் வாழ்ந்திருந்தவனாய், எககாலத்தில் புணணியப்பயன நமக்குக் கைகூடுமெனறு வருந்தி எணணிக்கொண்டிருந்த அவவந்தணன், எட்டுக் குமாரர்களோடும் குற்றமற்ற அந்நகரததின் தெருக்களிலெல்லாஞ்சென்று, பசியென்னுந் தீப்பிணியால் யாசித்து வருவான். எ - று. (௧௩)

சிறுவ ரெண்மரு மிவவழி பற்பகல கழித்தநாட் பலசெல்ல
மறுவ றுங்குணச சிதேநதிரி யப்பெயர் மாதவன திருநோக்கம்
பெறுது மேற்றுய ரொழிதுமென றெண்ணியப பெருந்தவப் பெருமா
னுறும லாசசர ஸிறைஞசின ரெழுந்தனர் ரிரந்தனர நவைதீர. [ஊ

(இ - ள்.) அந்தப்புதல்வர்கள் எட்டுப்பெயரும் இப்படிப் பலவகைத் துன்பங்கள் அநுபவித்துக் கழிதத நாட்கள் எண்ணிறந்தன வாய்க்கடக்க, குற்ற மற்ற நற்குணமமைநத சுதேந்திரியனென்னும் பெயர் பெற்ற பெருந்தவ சிரேட்டனுடைய கிருபாநோக்கம் அடைவோமாகில் நமது துன்பங்களை நீங்கு வோமென்று நினைத்து, பெருந்தவமுடைய அப்பெரியோனைத் தரிசித்து, வாசனைவீசுந தாமரைமலர்போலும் பாதஙகளை வணஙகி, தஙகள் குற்றமகலும் படி பிராாததிததார்கள். எ - று. (௧௪)

இரந்திரந்துநின் றேத்துறு மிவரைமற் றிருந்தவ னெதிர்நோக்கி
வரநத ரத்தகு முதியாபாற மென [illegible] நற்றீர்
அரநதை யுறுழுந தயர்நதனி ரெனகொலென் றறைநதன னதுகாலைச்
சுரந்த கடபுன லருமபுற நின்றனர் தொழுதிவை சொலகின்றார்.

(இ - ள்.) மிகவும் பிரார்த்திததுக் குறைகூறி நோ நின்று துதிசெய்யும் இவர்களைப பெருநதவ சிரேஷ்டனாகிய சுதேநதிரியன் நேரே கணடு, விரும்பின வர்கட்கு விரும்பிய வரஙகளைப்பாலிககததகக தகுதியுடைய பெரியோரிடததிற் சிறநதீர்கள். வேதஙகள் முற்றுங கற்றறிநதுளளீாகள். இததகைய நீஙகள் துனபமெய்தி வருநதிச்சோாவெயதியுளளீாகள். இதறகு நிமிததம் யாதெனக் கேட்டனர் அச்சமயததில கணகளிற்றுளிககுந துககநீர் சொரியும்படி அவரு ககு நோ நின்று வணஙகி இவற்றைச்சொலலுகின்றாகள். எ - று, (௧௫)

உழநத நல்குர வுடற்றுற மெலிநதன மெண்மரு மொழியாத
பழங்க ணெய்தின னினனுடைச சேவடி பணிநதன மினியநோ
விழநத னம்பிறப பொழிநதனந திருவரு ளெய்தினந் துயரெல்லாங்
கழன்ற தெமமுழை யென்றன னிரஙகிய திருவருட் கடைநோக்கால்.

(இ - ள்.) பல நாட்களாகப் பழகிய வறுமைநோய் துன்புசெய்ய நாஙகள் எட்டுபபெயரும் வருததமுற்றோம். அதனலே நீஙகாத துயரமடைநதோம். இபபோது தேவரீா கிருபா நோககததால் அவவறுமைப்பிணி அகலப் பெற்றோம. பிறவி நோயும் ஒழிநதோம். திருவருளுமெய்தினோம் ஆதலால் துயரஙகளெலலாம எமமைவிட்டு விலகினவெனறு விளம்பினர்கள். எ - று. ()

என்னு மாததிரை நெகிழ்நதெழு முளத்தினன் வேண்டிய தெதுவென்ன
பன்னு மாதவ ரெண்மருந தனித்தனி வேட்டன வரநோக்கி
நின்னை வநதடைந தோமென வன்னவை நிகழததுதி ரெனநின்றோர்
பன்னு மாகமத் தலைவனைத தொழுதனா முறைமுறை பகர்கின்றா.

(இ - ள்.) என்றிப்படிச்சொலலும சமயததில், உருககமெய்தி அன்போங் கிய மனம்பொருநதிய அப்பெரியோா, உஙகட்கு வேணடியது என்னவென வினவ, அதுகேட்ட நிலைதத பெருநதவமுடைய அவ்வெட்டுப்பெயரும் நாங்கள் தனிததனி அபேட்சித்துள்ள வரஙகளைப் பெற்றுககொள்வதற்காகத் தேவரீரைச்சரணமடைநதோமென்று கூற, அவற்றைச் சொல்லுகவென அவர் கட்டளைதர, நேர் நின்று அவ்வெண்மரும் யாவரும் துதிககின்ற சிவாகமத் தலைவராகிய சுதேந்திரியரை வணங்கி யொருவாபின்னொருவராகச் சொல்கின் றார்கள். எ - று. (௧௭)

உரிய வான்கிளைப் பெருக்கமென் றுரைத்தன னொருவன்மற் றனை
னன்பிற், புரியு மைந்தரென் றுரைத்தனன் மற்றவன் பெரும்பிணிப்
பொறைகேட்டா, னரிய விஞ்ஞைசையென் றனனொருவன்பெரு நிதிவிருப்
பறைந்தானோர், குரிசின் மற்றவன யோகமென் றனவ னுடற்கதி
கொளலெனறான்.

(இ - ள்.) மூத்தவன் எனக்குரிய சிறந்த பந்துவர்க்கங்கள் விர்த்தியாக வேணடுமென்றனன். ஒருவன் அன்போடு விரும்பத்தக்க புத்திரசந்தானம் வேண்டுமென்றனன். வேறொருவன் தனக்குற்ற பெருவியாதியொழிய வேணடுமென்றனன். பின்னொருவன் அரிய ஞானம் வேண்டுமென்றனன் அவனுக்கு இளையவன் பெருஞ்செல்வத்தில் ஆசையுடையேனென்றனன். அவனுக்குப் பின்னே தோன்றியவன் யோகமார்க்க சித்திவேணடுமென்றனன். அவன் துணைவன் தேகத்தோடு முத்தி பெறவேணடுமென்றனன. எ - று. (௧௮)

கடைப்பி றந்தவ னூழிபல் லாயிரங் கடைப்பட வருகாறும்
பட்டபெ ரும்புவி யிருப்பதென் றனவ ரெண்மரிப பரிசோத
வுடைத்தபேருவ கைககட லுவட்டெழக் கேட்டன னுளமோாந்தான்
விடைத்த னித்துவ சததினு னலதிவா வேட்கையாா முடிப்பாரே.

(இ - ள்.) இறுதியிற் பிறந்த எட்டாவது குமாரன, கணக்கிறந்த கற்ப காலங்கள் அழியுமெல்லையும் இப்பெரிய பூலோகத்தில வாழ்ந்திருக்கவேண்டுமென்றனன. ஆக இப்படி எட்டுப்புதல்வர்களும் கூறினதற்கு, எல்லையில்லாத பேரானந்தக்கடல மேனமேலும் பெருகும்படி கேட்டவராய, இவவெட்டுக் குமாரர்களுடைய விருப்பங்களையெல்லாம, ஒப்பற்ற இடபக்கொடியையுடைய வீராகிய சிவபெருமானை நீங்கலாக வேறெவாதாம முடிக்கவல்லவாகளெனறு தமது மனதிற் கருதியுணாந்தாா. எ - று (௧௯)

என்று ரைத்தவர் தறிந்தன னுங்கவாக் கினியன பலபேசி
நன்று நுங்கருத் தவவழி விடைக்கொடி நாயகன றரவேணடு
மின்று மக்குமற றெயதுவான விதிமுறை யியம்புவ மதுகேளா
வொன்று சிந்தையி னன்புநெக் குருகுறப புரிதிரென் றுரைசெய்வான்

(இ - ள்.) என்று தமது கருத்தில தீாமானஞ்செயதுகொணடவராய், அவ்வெட்டுப் பிள்ளைகட்கும் இனிய பல வார்த்தைகள கூறி, நலலது உஙகள் எணணத்தின்படி நீஙகள் விருமபிய வரஙகளை இடபக்கொடியையுடைய எமது சிவபெருமான் அநுக்கிரகித்தருளவேணடும. அத்தகைய வரஙகள உஙகளுக்குக் கைகூடத்தக்க நனமாாக்கத்தைச்சொல்லுகினறோம். அதனைக்கேட்டுணர்ந்து ஒருமைப்பாடுடைய மனமெய்தி எலும்பும் நெக்குவிட்டுருகும்படி அன்பு தோன்றச் செயயக்கடவீர்களென்று சொல்லததொடஙகினாா. எ - று. (௨௦)

கலிநிலைத்துறை.

நாறு நாண்மலர்ப் பணிவிடைக் குரியராய் நலவதீ
ரூறு தேமலர்ப் பொழிலிழைத் தரனடிக் குரித்தா
யேறு தண்மலர் கொணார்ந்தளித் திடுதிரேல விரும்பு
பேறு பெற்றுநீ ரொழிக்குதி ரிறப்பொடு பிறப்பும்.

(இ - ள்.) மணங்கமழும் அன்றலர்ந்த மலர்தொடுக்கும் பணிவிடைக்கு உரியவர்களாய், குற்றந்தீர்ந்த தேனொழுகும் பூந்தோட்டங்களை வைத்துச் சிவபெருமானுக் குரியதாய், குளிர்ச்சியிருந்த மலர்களைக்கொண்டுவந்து சிவாலயத்திற்குக்கொடுப்பீர்களாயின், நீங்கள் இச்சித்தபேறுகளை யெய்திப்பிறப்பையும் நீங்குவீர்கள். எ - று. (௨௧)

முற்ற முற்றிய புற்பதித் தெடுத்திட முயலே
மற்றி ரும்பொரு ளாற்செய மாணிதி யில்லே
மிற்றை நாள்வரை யிரப்பதும பசியெழுந் தல்லா
லுற்று ணர்ந்துசென் றிரப்பதற் கொருப்படா துள்ளம்.

(இ - ள்.) முழுவதும் முதிர்ந்துள்ள புற்களைப்பிடுங்கி யெடுிய முயற்சி செய்யமாட்டோம். வேறு வகையாகப்பொருள்கொடுத்தலால் நடத்துவிக்கப் பெருஞ்செல்வமுடையோமல்லோம். இன்று தினம்வரையில் நாங்கள் யாசிப்பதும் பசியுண்டானதாலல்லாமல், ஆலோசித்தறிந்து போய் யாசிப்பதற்கு எங்கள் மனம் சம்மதியாது. எ - று. (௨௨)

கற்ற கல்வியும் வறுமையிற் கழிந்தன முதியோய்
பெற்ற மேறிய பிரானடிப் பணிவிடைக் கொருநீ
சொற்ற வாறெமக் கரிதெனச் சொற்றனா சுருதி
முற்று ணர்ந்தவ னுளமபடப் பூத்தனன் முறுவல்.

(இ - ள்.) நாங்கள் படித்தபடிப்பும் தரித்திரத்தினாலே மறந்தோம். பெரியோரே! இடபவாகனத்தேறிய சிவபெருமானுடைய திருவடித்தொண்டிற்கு, ஒப்பற்ற தேவரீர் கூறியவகையே புரிவது எங்கட்கு அரிதாகுமென்று சொன்னார்கள். வேத முழுவதுமுணர்ந்த சிதேந்திரியன் மனங்கொண்டு புன்னகை செய்தது. எ - று. (௨௩)

புரிவ தற்கெளி தாயதிற் பெறப்பெறும் பொருடான்
பெரிதெ னப்பட லாகியிப் பிறப்பொழிப் பதுவா
யுரிய வோர்ந்தன னரனிரு வுளத்துவப் பினனாயப்
பரியு நல்வினை யாங்கது தெருளுறப் பகர்வான்.

(இ - ள்) செய்தற்கெளியதாய், அதனாலே யடையப்படும் பொருளோ பெரிதென்று சொல்லத்தக்கதாய், இந்தசனனத்தை விலக்குவதாய் உள்ளவித்தை யாலோசித்து, சிவபெருமான் தமது திருவுள்ளத்திற் களிப்புடையவராயச் சந்தோஷிக்கச்செய்யும் நற்கருமமாகிய அதனை விளங்கும்படி சொல்லினார். எ - று. (௨௪)

ஒருவி நான்மறைத் தலைவிர்கா ளுமக்கெளி தெனலாய்க்
கருதி னுங்கதற் கொன்றுமொப் பிலலெனக் கடவ
தருந டந்தரு மெம்பிரான் புராணமுற் றறிந்து
பெருகு மன்பினாற் படித்திடக் கேட்டுறப் பெறுவீர்.

(இ - ள்.) நான்கு வேதங்களுக்குத் தலைவர்களே! அதனை நீங்கி, உங்கட்கு இலேசெனச்சொல்லத்தக்கதாய், ஆலோசிக்கையில் அதற்கு ஒன்றும் சமானமில்லையென்று சொல்லக்கடவது, அரிய திருநடனஞ்செய்கின்ற எமது சிவபெருமானுடைய பிரபாவங்களைக்கூறும் புராணங்கள். அச்சிவபுராணங்களைத்தேடி யுணர்ந்து மிக்க அன்புடையவர்கள் வாசிக்கையில் கேட்கப்பெறுவீர்களாக. எ - று. (௨௫)

புரமெரித்தவன் புராணமுற் றளந்தவர் புகல
விரவுசிந்தையி னன்புற வினவுறு மவரை
யரவுசென்னிகொண் டசைத்திடு மவரெனத் தொழுவார்
பரவு நல்லொழுக் குணர்ந்தரு மாதவம் பயில்வார்.

(இ - ள்.) திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமான் பிரபாவங்களை யுணர்த்தும் புராணங்களை முற்றக்கற்ற முநியோர்கூற, மனத்தில் அன்பு பொருந்தக்கேட்கின்ற [சிரவணஞ் செய்கின்ற] அவர்களை, துதிக்கத்தக்க நல்லொழுக்கங்களையுணர்ந்த பெருந்தவஞ்செய்தவர்கள், சர்ப்பங்களைச்சிரமிசை யணிந்த சிவபெருமானென்று மதித்து வணங்குவார்கள். எ - று. (உசு)

இதுவெடுத்தவ னிசைத்தலு மெண்மருங் கேளா
வதுமனத்தடைத் தாகமத் துறையுளா யளியே
முதுகலிக்கடற் கிடந்தன மெமக்கென முனமோன்
புதுமொழிப்படு முதுமறைப் புராணமார் புகல்வார்.

(இ - ள்.) இவ்வார்த்தைகளைச் சித்தேந்திரியன் எடுத்துச்சொல்லவும், எட்டுக் குமாரர்களுங்கேட்டு அதனை மனதிற்கொண்டு, சிவாகமநெறியிலுள்ளவரே! அடியேங்கள் முதிர்ந்த தரித்திரமாகிய கடலில் அமிழ்ந்துள்ளோம். அடியேங்கட்காக, பரமேசுவரனது அரிய திருவாக்காகிய பழைய வேதத்தின் சாரமான சிவபுராணங்களை எவர்கள் சொல்லுவார்கள்? எ - று. (உஎ)

எடுத்துரைத்திடு புராணமுற் றீறிடை யிவர்க்குக்
கொடுப்பதின்றியாங் கொடாவிடிற் பெறுபய னுளதோ
கடுத்தகட்கன லுமிழ்நின் றுடற்றிய காலன்
படுத்துவீழ்த்திய நிரையமல் லாற்பிறப் பலியா.

(இ - ள்.) எடுத்துச்சொல்லும் சிவபுராணங்களைக்கேட்டு, அவை முடிவுறுங் காலத்தில், இப்புராணிகர்க்குக்கொடுப்பதாகிய திரவியமில்லாயல் நாங்கள் ஒன்றுங்கொடாவிட்டால், யாங்கள் அடையும் பலன் ஏதேனும் உண்டோ? கோபித்த கண்களினின்று நெருப்புப்பொறி சிந்த எதிர்த்து வருத்துகின்ற இயமன் அகப்படுத்து வீழ்த்தும் நரகம் கிடைக்குமன்றிப் பிறவியகலாது.

என்றுரைத்தன ரெண்மரு மருந்தவத் தலைவ
னன்றுசொற்றனிர் நாமது வுணர்ந்திலே மினிநீ
ரொன்றுரைப்பது கேட்குதி ரின்றுபோ யொருங்கு
சென்று வேண்டுவ துளதென வவர்க்கெதிர் செப்பும்.

(இ - ள்.) என்று எட்டுப்பெயருஞ் சொன்னார்கள். அரிய தவத்தலைவ ராகிய சித்தேந்திரியன் நன்றாகச்சொன்னீர்கள். நாம் அதனை யறியோம். இனி நீங்கள் நாம் சொல்லும் ஒன்றனைக்கேட்கக்கடவீர்கள். நீங்கள் யாவரும் ஒன்றாகப்போய் இப்பொழுதே விரும்பத்தக்கது ஒன்றுண்டென்று அவர்கட்கு நேராகச் சித்தேந்திரியன் சொல்லுகின்றான். எ - று. (உஅ)

இந்த மாநகர்க் கப்புற மிருப்பதோர் நகர
மந்த மாநகர் முனிபுர மப்புரத் திருக்குஞ்
சிந்தை தூயரிற் றூயனென் றுளன்கலி சிந்து
பந்த வெவ்வினைத் தளைபறித் தெறிபக டனையான்.

(இ - ள்.) இந்தப்பெரிய நகரத்திற்கு அயலில் ஒரு நகரமிருக்கின்றது. அந்தச்சிறந்த நகரம முனிபுரமெனப்படும். அந்நகரத்தில வசிக்கும் மனப்பரி சுத்தமுடையவர்களில மனப்பரிசுத்தமுடையவன் கலிசித்துவெனும் பெயரா னொருவனுளன். பந்தமாகிய கொடிய வினையாகிய சங்கிலியை அடியோடு பறித் தெறியததக்க யானை போன்றவன். எ - று. (௩௰)

தரும மெய்யுரு வெடுத்தென வந்தவ தரித்தோன்
பெருகு நான்மறைக குலத்துளோன் பெறறமே றுயர்த்தோர்க்
குருகு காதலி னருச்சனை கனவினு மொழியான
கருணை வாரிதி பழமறைக கடறகரை கண்டோன்,

(இ - ள்.) புண்ணியமே உண்மைவடிவேற்றுறபோலத்தோன்றி அவதரித் தவன். நான்கு வேதங்களின் சிறப்புமிகுந்த அந்தணர் குலத்திலுதித்தவன. இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமானுக்கு மனமுருகுகின்ற ஆசையோடு அர்ச்சனைசெய்தலைக கனவிலும் நீங்காதவன. கிருபா சமுத்திரம்போன்றவன். வேதமாகிய கடலைக் கரைகடந்தவன, எ - று. (௩௧)

உரைக்கு மாகம புராணமூற றளந்தறிந் தொருங்கே
கரைத்த சிந்தையிற கேட்டுந ருளமபடக் கரைப்பா
னிரைத்த காதலிற கொடுப்பன யாவையு மேலா
னரைத்த மூப்பின னருமறை நடந்தரு நாவான.

(இ - ள.) சொலலுகின்ற சிவாகம புராணங்களையெல்லாம் முழுவதும் கற்றுணர்ந்து உருகிய சிந்தையோடு கேட்போர் மனமுருகும்படி அதிகரித்த ஆசையோடு சொலலுகின்றவன. எவர் எப்பொருளைக்கொடுப்பினும் ஏற்றுக கொள்ளமாட்டான. மயிர் நரைத்த விருத்த பருவமுடையவன. வேதங்களை நடிக்கும் நாவையுடையவன். எ - று. (௩௨)

புரத்து வாழ்தரு மாந்தரு மாங்கவன் பொருட்டா
விரக்க மெயதிமற றவனறனக குவமைசான றிருப்பார
பரபபி னெய்தியோர பசிகெடப பகுந்தல றுண்ணுங
சுரக்கு நலலறத் தீட்டிய பெருநிதித் தொகையான.

(இ - ள.) அந்நகரத்தில வசிக்கின்ற மனிதர்களும் அக்கலிசித்து காரண மாகக கருணைபொருந்தி அக்கலிசித்துவைப்போல மேம்பட்டிருப்பார்கள். விரைந்து வந்தோருடைய பசிப்பிணியை நீக்கப்பகிர்ந்தளித்தலலாமல் புசிக்க மாட்டான். ஊற்றெடுக்கின்ற நலல தருமவழியிற சம்பாதித்த பெருஞ்செலவ மாகிய பொருளையுடையவன். எ - று (௩௩)

அனையன் மாடுபுக காங்கவ னருநடம பயிலும
புனைச டைப்பிரான புராணமூற றறிகுதிர் போதி
ரெனவு ரைத்தன னுங்கவ ரியைந்தன ரெழுந்தார
[illegible]னவ னைத்தொழுப போயினர் முனிபுரம புகுந்தார்

(இ - ள்.) அக்கலிசித்துவினிடஞ்சேர்ந்து- அவன சொல்லுகின்ற அரு நடம்புரியுஞ் புரிசடையையுடைய சிவபெருமான புராணங்களை முழுவதும அறியக்கடவீர்கள. போங்களென சித்தேந்திரியன கூறினன். அவ்வெண்மரும் சம்மதித்தெழுந்து சித்தேந்திரிய முனிவனை வணங்கிச்சென்று முனிபுரத்தடைந் தார்கள. எ - று. (௩௪)

புகுந்து சேவடி புனிதனைப் போற்றின ரவனு
நெகிழ்ந்த சிந்தையி னிருத்தினான் றிருத்தின னிலவு
பகுந்த வெண்பிறைச் சடையினன் பரிவுறுஞ் சரிதை
தொகுந்தி றத்தொடுங் கேட்குந ரவையகந் தொக்கார்.

(இ - ள்.) முனிபுரம் புகுந்து பரிசுத்தனாகிய கவிசித்துவைப்பாதங்களில் வணங்கித்துதித்தார்கள். அக்கவிசித்துவும் உருகிய மனதோடு இருங்களொன்று தன்னிடத்தில இருத்தினன். சந்திரிகையை வீசும் வெள்ளிய சந்திரதுண்டத்தைச் சடையிலுடைய சிவபெருமானுக்கு அன்பு பொருந்திய சரிதையைக் கூட்டமாகச் சிரவணஞ்செயவோர் சபையினிடத்திற் சேர்ந்தார்கள். எ - று.

தொக்க பேரவை யிருந்தன ரன்பொடுந் துவன்றி
நெக்க சிந்தையி னுருகின ரிருசெவி நிறைத்துப்
புக்க காதையின் மயிர்ப்புறம் பொடித்தனர் புலவர்
நக்க னைத்தம துளம்பட விருத்தினர் நயப்பால்.

(இ - ள்) அடியார்கள் கூடிய பெருஞ் சபையிலிருந்தார்கள். அன்புடன் தொடங்கி, நெக்குவிட்டுருகிய சிந்தையையுடையவராகி, இரு காதுகளையும் நிறைத்துப்புகுந்த சிவசரிதையால் மயிர்க்கூச்செறிந்தார்கள். தேவர்களில் [நக்கன்=நிர்வாணி] நக்கனாகிய சிவபெருமானைத் தமது மனதில் ஆசையோடிருத்தினார்கள். எ - று. (௫௬)

எள்ளி றைப்பொழு தாயினு மெந்தையெம் பரனை
யுள்ள மைப்பது தணந்தில ரொருவழிச் சென்றா
ரள்ளு நாட்சில கழிந்தன புராணநன் குணர்த்து
மள்ள லைத்துணை மலரடி யருச்சனை வகுத்தார்.

(இ - ள்) எள்ளளவு காலமானாலும் எமது தந்தையாகிய எமது சிவபெருமானை மனத்தின்கண் பொருத்துவதை நீங்காதவர்களாய் ஒருவழிப்பட்டார்கள். இப்படி விரும்பத்தக்க சில தினங்கள் சென்றன. புராணத்தை நன்றாகப் போதிக்கின்ற வள்ளலாகிய கவிசித்துவின் தாமரைமலர்போன்ற இருபாதங்களைப் பூசித்தார்கள். எ - று. (௫௭)

தொன்று தொட்டெழு பவமெலாந் தொலைந்தன விவர்க்கு
மன்று தொட்டெழு தீவினை யருங்கலை கழியப்
பின்று மாமதி நிகர்த்தன புண்ணியப் பெருமை
யொன்று வெண்பிறைக் கலையென நிரம்பிய தொருங்கே.

(இ - ள.) சிவபுராண சிரவணஞ்செய்த இவ்வெண்மருக்கும் அநாதியாக மேலோங்கிய பவமுழுவதும் நீங்கின. அன்றுமுதலாக(முன்னிருக்கத)அதிகரித்த தீவினைகள் (கிருஷ்ணபக்ஷத்தில) அரிய கலைகள் குறையத்தனித்து நின்ற சந்திரனைப் போன்றன. சிவபுண்ணியப்பெருமையானது (பூர்வபக்ஷத்தில்) பொருந்துகின்ற வெள்ளிய சந்திர கலைகள்போல ஒரு சேர நிரம்பின. எ-று.

நினைந்த யாவையு முடித்தன ரெண்மரு நெடுநீர்
புனைந்த சென்னியன் றிருவருள் பொருந்தினர் பொன்னால்
வனைந்த மெய்யின ராயினர் பிணிபடு மறையோ
னனைந்த கணமலர்க் கொன்றையோன் சரிதையே நயப்பார்.

(இ - ள்.) அவர்களெட்டப்பெயரும் எண்ணிய கருமங்களையெல்லா முடித்தனர். பெரிய கங்கை நீரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருவருளடைந்தார்கள். அவர்களிற் குட்டநோயுற்ற வேதியன் பொன்னுலாக்கியதுபோன்ற உடலைப்பெற்றான். தேனால் நனைந்த கொன்றைமலர்சூடிய சிவபெருமான் சரிதையையே விரும்புவார்கள். எ - று. (௩௯)

வேட்டி றிற்சிவ பதவியே வேட்டுற விரும்பிக
கேட்டி றிற்சிவ புராணமே கேட்டுற வினைகொண்
டாட்டு மன்பதை யீறுகண் டந்தகன் றூதர்
வீட்டு முன்னரே சிவகதி விரும்புற வேண்டும்.

(இ - ள்.) விரும்புவீர்களாயின், சிவபதவியையே விரும்புங்கள். ஆசைகொண்டு சிரவணஞ்செய்தால், சிவபுராணங்களையே சிரவணஞ்செய்யுங்கள். இருவினைகளால் ஆட்டப்படுகின்ற மாந்தர்களை முடிவுகண்டு இயமதூதர்களை அழித்துயிர்போகுதற்கு முன்னரே சிவகதியையடைய இச்சிக்கவேண்டும் (உலகினரே! என்று இந்நூலாசிரியர் கவிக்கூற்றாகக்கூறினார்.) எ - று. (௪0)

கள்ளு யிர்த்தபூங் கொன்றையா னருட்சிவ காதை
யெள்ளில் சிந்தையான் விதிமுறை யினிதுகேட் டுவந்து
வெள்ள வார்சடை யெம்பிரான் றிருவருள் விளைவித்
தெள்ள ருங்கதி புகுந்தவர் கிலக்கமா ரிசைப்பார்.

(இ - ள்.) தேன் சிந்துகின்ற கொன்றைப்பூமாலையணிந்த சிவபெருமானுடைய திருவருட்சரிதையை இகழ்ச்சியில்லாத மனத்தோடு விதிப்படி இனிதாகச் சிரவணஞ்செய்து சந்தோஷித்து, கங்காநீரையணிந்த நெடிய சடையையுடைய எமது சிவபெருமான் திருவருளை விளையச்செய்து இழிவற்ற முத்தியையடைந்தவர்களின் தொகையை யாவர் கணக்கிடவல்லவர்? எ - று. (௪௧)

சிவபு ராணமென் றெடுத்தெவர் செப்பினு மாண்டு
பவரு மென்சிறைப் பறவையும் பலவிலங் கினமு
மிவர்த டருசினை மரனுமற் றெழுபசும் புலனுங்
கவர்த லைச்சிறு பதுக்கையு மிருங்கதி கரக்கும்.

(இ - ள்.) சிவபுராணம் என்று யாவர் எடுத்துச்சொன்னாலும், அங்கேயிருக்கின்ற மெல்லிய சிறகினையுடைய பறவைகளும், பலவகை மிருகசாதிகளும், உயர்கின்ற பரந்த கிளைகளையுடைய மரங்களும், முளைத்துள்ள பசிய புற்களும், பிளவுபட்ட தலையையுடைய சிறு பாறைகளும் பெரிய மோக்ஷத்தையெய்தும். எ - று. (௪௨)

எழுதி யன்பருக் கீந்தவர் திருமுறை யெழுதித்
தொழுது தம்மனை தொகுப்பவர் பெருநலந் துய்த்தீண்
டொழுகு காலம்வீ றுறவவொரு கற்பமோ ரெழுத்திற்
கழிவி லாப்பெருங் கைலையுற் றருங்கதி யடைவார்.

(இ - ள்.) சிவபுராணத்திருமுறைகளையேட்டில்வரைந்து அடியவர்களுக்குக்கொடுத்தவர்களும், அவற்றையெழுதித்தமது வீட்டிற் சேமித்துவைப்பவர்களும் இவ்வுலகத்தில் பெரிய இஷ்டசுகங்களை யநுபவித்து, இறுதியில் அழிவில்லாத பெருமைதங்கிய திருக்கைலாயமெய்தி, ஓரெழுத்திற்கு ஒரு கற்பகாலம் அரிய பதவியெய்தி வாழ்வார்கள். எ - று. (௪௩)

ஓது நாவினுங் கேட்பவர் செவிப்புலத் துள்ளுந்
தீதில் சிந்தையோர் சித்தத்தினுந் திருவரு ளிரங்கி
மாது பாகனுற் றுறைகுவன் மாதவத் துறையீ
ராத லாற்கதி யடைந்தன கேட்டவை யனைத்தும்.

(இ - ள்.) சிவபுராணங்களைச்சொல்லுகின்ற நாவினிடத்திலும், கேட்பவர்களுடைய காதினிடத்திலும், குற்றமில்லாத சிவசிந்தனையுடையவர்கள் சித்தத்தினிடத்திலும், உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் திருவருள்சுரந்து எழுந்தருளியிருப்பார் ஆனபடியால், சிவசரிதங்களைச் சிரவணஞ்செய்த எல்லாப்பிராணிகளும் மோக்ஷகதியெய்தின. எ - று. (௪௪)

புரங்க டந்தவன் புராணமுற் றோதிய புனிதர்க்
கிரங்கு சிந்தையிற் கேட்பவர்க் காரமு தீந்தால்
வரந்த ரத்தகு நும்மனோர்க் கிருஞ்சினை வகுத்துப்
பரந்த கற்பக நாட்டவர்க் கினிதெனப் படுமால்.

(இ - ள்.) திரிபுரங்களையெரித்த பெருமானுடைய சிவபுராணங்களை முழுவதுஞ்சொல்லிய பரிசுத்தர்களுக்கும், உருகிய மனத்துடன் அவற்றைக் கேட்பவர்களுக்கும், பொருந்திய உணவாதிகளை யுதவினால், அடுத்தவர்கள் வேண்டிய வரங்களைக்கொடுக்கத்தக்க உங்களையொத்த முனிவர்களுக்கும் பெரிய கிளைகளைப்பரப்பி விசாலித்த கற்பக விருக்ஷத்தையுடைய தேவலோகத்தாருக்கும் இனிதாகுமென்று சொல்லப்படும். எ - று. (௪௫)

தெரிந்த மாக்கதைச் சிவபுரா ணம்பகர் செல்வர்
புரிந்து வேண்டுறப் புனைகலன் பொற்கிழி பாலா
வரிந்து றப்படு விளைவயல் கன்னிகை யாடை
விரிந்த வன்பினு லீந்திட வேண்டுவர் மேலோர்.

(இ - ள்.) சிறந்த சிவபுராணசரிதைகளைச்சொல்லுகின்ற சிவஞானச்செல்வர்களுக்கு அன்போடு விரும்பிய ஆபரணங்களையும், பொற்கிழிகளையும், கறவைப்பசுவையும், கதிர்களையரிந்து பயன் கொள்ளத்தக்க விளைகழனிகளையும், கன்னிகைகளையும், ஆடைகளையும் அதிகரித்த ஆசையுடன் கொடுக்க மேலோர் விரும்புவார்கள். எ - று. (௪௬)

இனைய நல்கியோர் பெறுங்கதி யாருசொலற் கெளிதோ
கனைதி ரைப்புனற் கங்கைவார் சடையின னிவரை
நினைதொ றுந்திரு வுளநெகிழ்ந் தானந்த நிருத்தம்
புனைப தச்சிலம் பிடையறு தொலியெழப் புரியும்.

(இ - ள்.) இவற்றைச்சிவனடியார்கட்குக்கொடுத்தோர் அடையும் பேற்றினை, ஒலிக்கின்ற அலைகளையுடைய கங்காசலம் பொருந்திய நீண்ட சடையையுடைய சிவபெருமான் இவர்களை யெண்ணுந்தோறும் திருவுள்ளமகிழ்ந்து, திருவடியிலணிந்த சிலம்புகள் இடைவிடாதொலிக்கும்படி ஆநந்தத்திருநடனஞ்செய்வாரென்றால், நாம் சொல்லுதற்கெளிதாகுமோ? (௪௭)

எந்தை கோயிலுட் டிருமுறை மண்டப மெடுத்துத்
தந்த பீடிகைத் தவத்திறுற் றிருமுறை தந்து
சிந்தை யன்பினோ டாங்கவைக் கருச்சனை செய்தா
லுந்து மேற்றினன் பிரதிட்டை கோடியோப் புறுமால்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமான் திருக்கோயிலில் திருமுறை மண்டபம் செய்வித்துத் தந்த பீடத்தின்மேல் திருமுறைகளை யெழுந்தருளச் செய்து, மனக்களிப்புடன் அப்புராணத் திருமுறைகட்கு அர்ச்சனை முதலியன செய்வித்தால், செலுத்துகின்ற இடபத்தையுடைய சிவபெருமான்பிரதிஷ்டைகள் கோடிசெய்ததை நிகராகும். எ - று. (சஅ)

இந்தி லத்தவ ரிந்திரற் கரியன நுகர்ந்து
பொன்ன லந்தரு நெடுமணி மானமீப் பொலிந்து
மன்னு விஞ்சைய மாநகர் வளநுகர்ந் தொழிந்து
துன்ன ருஞ்சினைக் கற்பகக் காவளந் துய்த்து.

(இ - ள்) அங்ஙனம் புரிவோர் இவ்வுலகத்திலேயே இந்திரனுக்கும் அரிதாகிய இஷ்டபோகங்களை யநுபவித்து, பொன்னாலலங்கரிக்கப்பட்ட நெடிய இரத்தினவிமானத்தின் மேலே விளங்கி, நிலைபெற்ற வித்தியாதரருடைய சிறந்த நகரிலுள்ள வளங்களை யநுபவித்து நீங்கி, இந்திரலோகத்தில் அடைதற்கரிய கிளைகளையுடைய கற்பகச்சோலையின் வளப்பங்களை யநுபவித்து. எ - று. ()

விரிக்கு மெல்லித ழாயிரக் கமலவீட் டிருந்து
பரிக்கு நான்முக னுலகினும் பல்வளம் பயின்று
தரிந்த பைந்துழா யவனுறை தனிப்பதஞ் சார்ந்து
தெரித்த நன்னிலப் பகுதியிற் பெருவளஞ் செருக்கி.

(இ - ள்) மலர்கின்ற மெல்லிய ஆயிரம் இதழ்களையுடைய செந்தாமரை மலர் வீட்டிலிருந்து, சத்தியலோகத்திலும் பலவகை இன்பங்களையும் நுகர்ந்து, பசிய துளவமாலையணிந்த திருமாலின் ஒப்பற்றபதவியாகிய வைகுந்தலோக மெய்தி அந்நல்லபூமியிலுள்ள பெருமைதங்கிய வளங்களை யிறுமாந்துபெற்று.

இருக்கு நல்லறப் பகுதியு மிருவழி நிறுவி
முருக்குஞ் சூர்முதற் றடிந்தவ னிருங்கதி முன்னிப்
பெருக்கு நன்னலம் பெரிதுவந் தாங்கவற் பெற்று
டிருப்பத் தம்புகுந் தக்கதி வளம்பல தேக்கி

(இ - ள்) எஞ்சி நிற்கும் நல்ல சிவபுண்ணியத்தின் பாகமுயம் நீங்காதவிடத்தில் அங்கேயிருந்து, (தேவாமாநுடனாக) சோலையுரியும் சூரபன்மனைத்தடிந்த வராகிய குமாரக்கடவுளின் பெரியபதவியையடைந்து, அங்கிருக்கின்ற பெரிய சுகங்களை மிகுதியும் அநுபவித்து, அதன்பின் அக்குமாரசுவாமியை யீன்றருளிய உமாதேவியார் சிறந்தபதவியை யடைந்துஅப்பதவியின் பலவளங்களை நுகர்ந்து.

சுரபி வான்கதி புகுந்ததிற் பெருவளந் துய்த்து
விரவு மிப்பதத் தளவொழி பற்பகல் விடப்போய்ப்
புரமெ ரித்தருள் எம்பிரான் பொறிவரிச் சுடிகை
யரவ கங்கணத் தவனொடு மினிதிருந் தருள்வார்.

(இ - ள்.) மேலாகிய கோப்பதவியிலெய்தி அதில் அடையவேண்டியபெரு வளங்களை யடைந்தனுபவித்து, நெருங்கிய இப்பதவியில் அளவில்லாத பலகாலம் நீங்கச்சென்று, திரிபுரங்களை யெரித்தருளிய எமது பெருமானாகிய, படப

பொறிகளையும் உச்சிக்கொண்டையையு முடைய சர்ப்ப கங்கணத்தை யுடைய சிவபெருமானுரோடு கலந்து இனிதாக வீற்றிருந்தருள்வார்கள். எ - று. (கூஉ)

அறந்த ருஞ்சிவ புராணமோ துறுமவை யகத்துப்
பிறங்கு வெள்ளிலை நுகர்பவர் பிறமொழி பகர்வர்
நுறங்கு கின்றவர் நீட்டுறு கால்னை ருவற்றைறத்
திறம்பு பொய்யமையென றுரைப்பவர் களிப்புட்ச சிரிப்பார்.

(இ - ள்.) புண்ணியங்களைக் கொடுக்கத்தக்க சிவபுராணத்தைச் சொல்லு கின்ற சபையினிடத்தில், விளங்குகின்ற தாம்பூலம் தரிப்பவர்களும், வேறு விதமாக வார்த்தையாடுபவர்களும், நித்திரைசெய்பவர்களும், நீட்டுகின்ற காலை யுடையவர்களும், அசசரிதைகளைப் பொய்யமைகலந்தன வெனச் சொல்லுப வர்களும், சந்தோஷமுண்டாகச் சிரிப்பவர்களும். எ - று. (கூகூ)

இழுதை மாக்கண்மற றிங்கிவ ரிறுதியிற் றென்பாற்
செழுமை நீடிய நெடுங்குழிச் செலற்கரு நிரயத்
திழிவ ராங்கவை விழுங்கிமீண் டெதிரெடுத் துமிழ
வழுவி மற்றது விழுங்குற வருந்துவர் நெடுநாள்.

(இ - ள்.) அறிவில்லாதவர்கள் அல்லது பொய்பேசுபவர்கள் முதலாகிய இவர்கள் தேகாந்தத்தில் தென்றிசையிலே துன்பங்கள் செழித்தோங்கியநெடிய குழிகளாகிய அரிய நரகங்களில் அமிழுவார்கள். அந்நரகங்கள் விழுங்கிமீண்டும் வெளிவிட்டு உமிழ, அங்குநின்றும் தவறி மற்றொருநரகத்தில் விழுங்கப்பட்டு இப்படிப்பலகாலம் வருந்தப்படுவார்கள். எ - று. (கூச)

புண்ணி யச்சிவ புராணமோ திப்பொருள் விரிப்பி
னண்ண லாலய நதிக்கரை குளக்கரை யனறேன
மண்ணு றுந்திரு மடமெனு மித்தலை மருவிக்
கண்ணு தற்பரன் றனைத்தொழு தோதுறக் கடவர்.

(இ - ள்,) புண்ணியகரமாகிய சிவபுராணங்களை வாசித்துப் பொருள்விளக்கிச் சொல்லுவதாயின், சிவபெருமான திருக்கோயில நதிதீரம் தடாகக்கரை அல்லாவிடின் அழகிய திருமடம் என்று சொல்லப்பட்ட இவ்விடங்களிலோ ரிடத்தில், பொருந்திய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைப் பணிந்து சொல்லக்கடவர்கள். எ - று. (கூரு)

இப்பெ ருஞ்சிவ புராணமுற் றுரைப்பவ ரிதனைத்
தப்பில சிந்தையிற் கேட்பவர் சிவத்தலந் தோறு
மொப்பி னுதனைந் தொழுப்பயன் வேள்விமுற் றுவந்தோர்
செப்ப ருங்கதி நதிப்ல குடைப்பயன் சிறப்பார்.

(இ - ள்.) இந்தப் பெருமையையுடைய சிவபுராணத்தை (அன்பு) பொருந் திச் சொல்பவர்களும், இதனைத் தவறுபாடில்லாத நலலெண்ணத்தோடு கேட்ப வர்களும், சிவக்ஷேத்திரங்களி லெல்லாஞ் சென்று சமானரகிதனான சிவபெரு மானை வணங்கிய பலனிலும் எல்லாயாகங்களையுஞ் செய்தோர் பெறுஞ்சொல்லு தற்கரியபலனிலும் பல தீர்த்தஸ்நானஞ் செய்தவர்கள் பெறும் பலனிலும், மேம்பட்டபலனை யடைவார்கள். எ - று. (கூகு)

சிறக்கு மூவரு மற்றுள தேவரு மிவரை
யுறக்க னிந்தபே ரன்பொடுங் களிசிறந் துவப்பார்
மறைக்கு மெட்டரு முக்கணன் சரிதைநூன் மயங்கும்
பிறப்பொ ழிப்பது சத்திய மெனமறை பேசும்.

(இ - ள்.) சிறப்புற்ற திரிமூர்த்திகளும், அவர்களுக்குப் பிறிதாகவுள்ள ஏனைத் தேவர்களும், இவர்களை நன்கு கனிந்த பேரன்போடும் இன்பமிகுந்து களிப்பார்கள். வேதங்களுக்கும் எட்டுதற்கரிய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் பிரபாவங்களாகிய சிவபுராணமானது, மயக்கமுற்ற பிறவித்துன்பத்தை நீக்குவது சத்தியமாகுமென்று வேதம் கோஷிக்கின்றது. எ - று. (௫௭)

சிவபுராண மான்மியச்சருக்க முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௧௧-க்குத் திருவிருத்தம் ௧௬௯0.

---

## பன்னிரண்டாவது.

## சிவத்துரோகிகளெய்தும் நரகவேதனைச்சருக்கம்.

---

### கலிநிலைத்துறை.

அது முற்றறக் கேட்டருண் முனிவரரினிநீ
யாதி நாயகற் கன்பற்ற புரிபவ ரடைந்த
தீத நரகுநோ பாதகஞ் செப்பெனச் செப்பச்
சூத மாதவ னுவக்கிய மொழியன சொல்வான்.

(இ - ள்.) இதனை முழுவதுஞ் சிரவணஞ்செய்த முனிவர்கள், இனித்தேவரீர் ஆதிதேவனாகிய சிவபெருமானுக்கு அன்பற்றவர்களாய்ச் செய்தவரெய்தும் கெடுதிகளையும், அதற்கீடாகவுண்டாகிய பாவங்களையுஞ் சொல்லியருளவேண்டுமெனக் கேட்ப, சிறந்ததவமுடைய சூதமுனிவர் சிரசை யசைத்தவராய்ச் சொல்லத்தொடங்கினார். எ - று. (௧)

எந்தைக் காயினு முமையவட் காயினு மைங்கைத்
தந்திக் காயினு மறுமுகற் காயினுந் தவறச்
சிந்தைக் கோர்நெறி காட்டிய தேசிகற் கெனினும்
வந்திக் குந்திருத் தொண்டுசெய் மரபினோர்க் கெனினும்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமானுக்கானாலும் உமாபிராட்டியாருக்கானாலும் ஐந்துகரங்களையுடைய யானைமுக விநாயகப்பெருமானுக்கானாலும் ஆறுதிருமுகங்களையுடைய குமாரக்கடவுளுக்கானாலும், மனத்திற் றவறுபடாத ஒப்பற்ற நல்வழியையுணர்த்திய ஆசிரியனுக்கானாலும், பூசிக்குந் திருத்தொண்டைச் செய்கின்ற முறைமையுடையோர்க்கானாலும். எ - று. (௨)

பரிக்கு நன்னெறி யொழுக்கினர் போலத்து பயினற்
றெரிந்த சிந்தையிற் சிவத்திர வியங்கவர்ந் தொழியா
தெரித்த பாழ்வயி றோம்புவா னிவணொடும் பயிலா
வரித்த பாவகா ரியரிவர்க் காண்கினு மாமா.

(இ - ள்.) மேற்கொள்ளும் நலவொழுக்கமுடையவர் போல நடித்து, தெளிந்தமனதோடு சிவசொத்துக்களை யபகரித்து, நீங்காமல் ஒவ்வொருநாளும் பசித்தீயினுலெரிக்கப்படும் பாழ்வயிற்றை வளர்ப்பவர்கள் இவர்களோடு பழகித் தேர்ந்தபாவிகள் ஆகிய இத்தகையினரைக்கண்டாலும் கொடியதே. எ - று.

தேவ னாலயந் திருக்குளஞ் செய்தொழி னிவந்தம்
பூவ ரும்பொழி னறுமலர் பொதுளிய தோட்டஞ்
சேவு யர்த்தவற கியைவன கழனிக டிரைநீர்
கூவ லிங்கிவைக் கழிவன செய்வினை கொடுமை.

(இ - ள்.) சிவாலயம் திருக்குளம் சிவாலயத் திருத்தொண்டுகள் அழகுடைத்தாய அரிதாயிருக்கும் சோலைகள் மணம்பொருந்திய மலர் நிறைந்த நந்தனவனங்கள், இடபக்கொடியை யுடைய சிவபெருமானுக்குரியவயல்கள், அலைகளையுடைய நீர்நிரம்பிய கிணறுகளென்னும் இவற்றிற்கு அழிவையுண்டு செய்த பாவங்களும். எ - று. (௫)

எடுத்து ரைத்தனஞ் சிவத்துரோ கங்கண்மற் றிவற்றை
யடுத்த பாதக மாரண மாகம புராணந்
தொடுத்த ணிந்திடு முருத்திர வக்கம்வெண் பேமை
படுத்த பூதியை யிகழவதென் றுரைத்திடப் படுமால்.

(இ - ள்.) ஆகிய சிவத்துரோகங்களை யெடுத்துச் சொன்னோம். அதன் பின், இவற்றிற் சேர்ந்துள்ள பாதகங்களாவன:—வேதங்கள் சிவாகமங்கள் புராணங்கள் கோத்தணியத்தக்க உருத்திராக்கம் வெண்மையும் புனிதமுமாகிய திருநீறு என்னும் இவற்றை இகழ்ந்து சொல்லவதென்று சொல்லப்படும். எ - று.

திருக்கு ளந்திருக் கோயில்செந் தேத்துளி சிதறி
மருக்கு நாண்மலர் வனமென மதிக்கில ராசெ
செருக்கி னுமிழ்ந் திடுவது செயற்கருந் தீமை
கருத்தி னோர்ந்துறு திவவிடைப் புரிகடுங் கண்மை

(இ - ள்.) திருக்குள மென்றும் திருக்கோயிலென்றும் செந்நிறந்தங்கிய தேன் துளிகள் சிந்தி மணங்கமழும் அன்றலர்ந்த புதியமலர்கள் நிறைந்த நந்தனவனமென்றும் மதியாதவர்களாய், கருவந்தரால் எச்சிலுமிழ்தல், செயத்தகாத கொடுஞ்செயல்களை மனத்திற் கருதாது இத்தகைய இடங்களிற் செய்தலாகிய கொடுமைகள். எ - று. (௬)

சொன்ன வீங்கிவை யாவையுஞ் சிவத்துரோ கங்க
ளன்ன செய்தவர்க் கண்ணுற நீண்டுத லருகே
மன்ன லோதுறல் போசொல்ல வார்த்தைகேட் டுறுத
லின்ன வாகிய வாறுமத் துரோகமெனத் திசைப்பர்.

(இ - ள்) ஆகச்சொல்லிய இவையாவுமே சிவத்துரோகங்களாம். அப்படித் துரோகஞ்செய்தவர்களைக் காணுதல் தொடுதல் அவர்கட்கருகேயிருத்தல் அவற்றைச்சொல்லுதல் அவர்கள் பெயரைச்சொல்லுதல் அவர்கள் பேச்சைக் கேட்டல் இத்தகையினவாகிய இவ்வாறையும் அச்சிவத்துரோக மென்றே சொல்லுவார்கள். எ - று. (எ)

இதனை யோர்ந்தரு திப்பவ மியற்றியோ ரின்னுங்
கதமெழ ரிப்படு நிரயமுற் றவாகணக் கிலரா
லதுபு ரிந்திடு பாதகா சரிதையி லறிந்த
துதவ மாதவத் தலைவிர்காள் கேட்குதி ருரைப்பாம்

(இ-ள்) இதனை யறியாமல் இத்துரோகங்களைச் செய்தவர்களாய், கொடுமைமிகுந்த தீமையான நரகத்தில் இன்றுவரையும் அமிழ்ந்திருப்பவர்கள் எண்ணிறந்தவர்களாம். அப்படித் துரோகஞ்செய்த பாதகர்கள் சரித்திரங்களில், யானுணர்ந்ததை, உங்கட்குபயோகப்படும்படி சொல்லுகின்றேம். பெருந்தவ சிரேஷ்டர்களே! கேட்பீர்களாக. எ-று. (அ)

பாந்த ளேந்திய வங்கநாட் டகவையுட் பணைக்கும்
பூந்த டம்புடை கிடந்தது கிரியெனும் புரத்துச
சாந்த வாருணக் சீலக னொருத்தனித் திகிரி
வேந்தர் வெண்குடை யொடுக்குற விரித்தவெண் குடையான்.

(இ-ள்) ஆதிசேடன் சுமக்கும் அங்கநாட்டிலே பரந்து அழகிய தடாகங்கள் புடைசூழ்ந்துள்ள கிரியெனும் நகரத்தில், சாந்தமெனும் பெருங்குணமமைந்த சீலகனென்பவன் ஒப்பற்றுச் சிறந்த ஆக்கினைச்சக்கரமுடைய அரசர்களுடைய சந்திரவட்டக் குடைகளையெல்லாம் ஒடுக்கிக்கொள்ளும்படி விரித்த பெரிய வெண்கொற்றக் குடையும் உடையவன். எ-று. (௬)

தரும சிந்தையன் வெள்ளிடை யவனடிச் சாந்த
கருணை வாரிதி யிரக்கமெய் யெடுத்தெனக் காட்டு
முருவ மெய்யினன் வெண்பொடி யலலதொன் றணியா
னருகி லுத்துள வுயிர்க்கெலாந் தாயையொத் தளிப்பான்.

(இ-ள்) புண்ணியக் கருத்துடையவன், வெள்ளிய இடபத்தையுடைய சிவபெருமான் திருவடியை இதயத்தமைந்த் கருணைக்கடல, இரக்கமே யொருவடிவெடுத்தாற்போலத் தோன்றுகின்ற அழகிய சரீரமுடையவன், திருவெண்ணீற்றைத்தவிர வேறொன்றும் அணியாதவன், பிலவுலகத்திலுள்ள அரிய ஆன்மவர்க்கங்களெல்லாவற்றையும் தாயைப்போல ஆதரிக்கின்றவன். எ-று.

பாரெ டுத்திடும் பணைநெடும் புயத்தவன் பால
ரோவ ருந்திறற் பாவசித் தென்றுள னொருவன்
சூர சித்தென் றொருமகன் கோரசித் தொருவன்
வீர சித்தெனு மொருமக னுலவாவெந் திறலோர்.

(இ-ள்) பூமிபாரத்தைச்சுமக்கும் பரந்து நீண்டதோள்களை யுடைய அவன்புத்திரர் நால்வராகும் அந்நால்வரில் சிரேஷ்டனாகிய ஒருவன் ஒழித்தற்கரிய பாவசித்தெனனும் பெயருள்ளவன், மற்றொருபுத்திரன் சூரசித்தெனனும் பெயருடையவன். வேறொருவன் கோரசித்தெனனும் பெயர் பெற்றவன். பிறிதொரு புத்திரன் வீரசித்தெனனும் பெயர்கொண்டவன். இவர்கள் நால்வரும் பெரும் பராக்கிரமவான்கள். எ-று. (௧௧)

மொழிந்த நால்வரும் யாவையு முழுதுறக் கற்றோர்
பொழிந்த வன்பொடும் பாப்பணை யமலனைப் போற்றி
யொழிந்த மன்னரை யொடுக்கின ரொழிந்துறக் குறும்போர்ந்
தழிந்து றப்பொரு தொருதனி யவனிகாத் தளிப்பார்.

(இ - ள்.) சொல்லிய இந்நால்வரும் நூல்களை யெல்லாம் முற்றுங்கற்றவர்கள். மிகுந்தமெய்யன்போடு சேஷசயனத்தையுடைய திருமாலைத் துதிசெய்து வேறுள்ள மன்னர்களை யடக்கிச் சயங்கொண்டு அவர்களடங்கிய பின்னர், குறும்பரசர்களிருப்பதை யறிந்து அவர்களும் அழியும்படி யெதிர்த்து, அங்களே ஏகசக்கிராதிபத்திய மெய்தியவர்களாய. எ - று. (௧௨)

தாதை சொல்வரம் பிகந்தில ரதத்தொடுரு சரிப்பார
வேத நான்மறை யிராசசூ யப்பெரு வேள்வி
நீதி யன்பொடு மியற்றினா தனித்தனிச் சிறந்தா
ரோது வேதமோத் துயாந்தனா நாலவரு மொருங்கே.

(இ - ள்) தந்தைவார்க்கியமாகிய எல்லையைக் கடக்காதவர்களாய் வேதசாஸ்திரோக்தமாய இராஜசூயமென்னும் பெரியயாகத்தைக் குற்றமற அன்போடு செய்தார்கள். யாவருஞ் சிறந்ததாகச் சொல்லும் வேதங்களை யுணர்ந்து சிறப்பெய்தியவர்களாய அந்நான்கு புதல்வர்களும் ஒருதன்மையராய மேம்பா டுற்றார்கள். எ - று. (௧௩)

கால மிப்படிக் கழிதரு ஞான்றொரு கழற்கா
பால காபயந் தீன்றவ னரனடி பணிந்தம
மூல மூரத்திதன சிவநிசி நோற்றிட முயலா
வாலு மன்பினே டெழுந்துகோ கன்னமுற றடைந்தான்.

(இ - ள்) இப்படி நல்வழியிலே நாள்கள் கழிந்துவருங் காலத்தில், ஒப்பற்ற வீரகண்டாமணியணிந்த பாதங்களை யுடையவனும் புத்திரர் நால்வரையும் பெற்ற திலகனென்னும் அவ்வரசன், சிவபெருமான் திருவடிகளை வணங்கி அம்முழுமுதற்கடவுளுக்குரிய சிவராத்திரிவிரதத்தை அநுஷ்டிக்க முயன்று, விசேடித்த மெய்யன்போடு புறப்பட்டுக் கோகாணமென்னும் க்ஷேத்திரத்தை யெய்தினன். எ - று. (௧௪)

எந்தை நோன்புநோற் றுங்கவ னிருதுமூன் றிருந்தான.
சிந்தை யெம்பிரா னடந்தரு சேவடி செலுத்தி
யந்தி வண்ணனா விடைதரக் கிரிபுர மடைந்தா
னிந்து தீண்முடிக் கோயிலி னெடுங்கடை யிறுத்தான்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமானுக்குரிய சிவராத்திரி விரதத்தை யநுஷ்டித்துவந்த அவ்வரசன் மூன்றிருதுக்கள் அத்தலத்திலேயே தங்கியிருந்தான். அக்காலத்தில் அவன் மனதை எமது சிவபெருமான் திருவடிகளிற் செலுத்திச் செவ்வானம்போலும் நிறந்தங்கிய அப்பெருமான் விடைகொடுத்தருளவும், தன் நகரமாகிய கிரிபுரஞ் சேர்ந்தான். சந்திரன் தவழும் நெடிய சிகரத்தையுடைய தன தரணமனையின் பெரிய வாயிலை யெய்தினன். எ - று. ()

வயங்கு மாமணி நெடுமுடி வேந்தரை மறங்கூ
ரியங்கு சேனையை யாவையு நிறுத்தினி னெய்தித்
தயங்கு பேரொளி மாமணி யரிப்பிடா தாங்கும்
வியன்கொ ளாசனத் திருந்தனன் றனிக்குடை வேந்தன்.

(இ - ள்.) அந்த அனலாச்சியமென்னும் நரகத்திலேயிருந்து கொடுந்துயரெய்தி வருந்துகின்ற இவ்வனுக்குச் சம்பவித்துள்ள பாவம் யாது? இவன் யாவன்? என்று, விளக்கமெய்திய தென்றிசைக்கிறைவனாகிய இயமனைக் கைகுவித்து வணங்கிக்கேட்டனர். எ - று. (௯௩)

மைந்தனு ரைத்தம னக்கொடு மறலி
யிந்தவி வன்சிவ பாதக னிவனால
வந்தசி வத்துரோ கம்புகல வாமென்
றுந்துசி னங்கொடு ரைக்குவ தானே.

(இ - ள்) தனமகன் தருமன் சொல்லியதை இயமன் மனதிற்கருதி, இந்த அனலாச்சிய நரகத்திலிருக்கும் இவன் சிவாபராதஞ்செய்தவனாவான். இவனால் நேர்ந்த சிவாபராதத்தைச் சொல்லுகின்றேனென்று, (சிவாபராதத்தை நினைத்தலா லுண்டாகிய) கோபத்துடன் சொல்லுகின்றான். எ - று. (௯௪)

கலிநிலைத்துறை.

கோடு நீணதி புடைபடு குஞ்சர மென்னு
நாட்டி றப்படு வசுந்தையென் றொருதிரு நகர
மூட்டி றப்பெரு நான்மறைக் குலத்துமை ளொருவ
னீடு நூன்னெறி யறத்தொடு மொருதனி நின்றான.

(இ - ள்) கரைபொருந்திய நெடியநதியாற் புடைசூழப் பெற்ற குஞ்சரமென்னும் நாட்டில் விளங்குகின்ற வசுந்தையென்னும் அழகிய நகரமொன்றுண்டு. அந்நகரத்திலுள்ளே பெருமைதங்கிய நான்குவேதங்களுக்குரிய அந்தணர்குலத்திற் பிறந்தவனொருவன் மேம்பாடுதங்கிய சிவாகமநெறியாகிய புண்ணியத்தோடு ஒப்பற்றவனாக வாழ்ந்திருந்தான். எ - று. (௯௫)

வேத கோத்திரத் துதித்துள விப்பிர மணியென
ரோது நீதிய னியல்மைகையை யிந்திர னுணர்ந்தான
போதன மேவிவற் றழீஇக்கொடு விண்ணகம் புகுவா
னோதவன்புரை பாமாலை யவன்களத் தணிந்தான.

(இ - ள்) வைதிக கோத்திரத்திற் பிறந்துள்ள விப்பிரமணியென்று பலருஞ் சொல்லுகின்ற அவ்வந்தணன் ஒழுகுகின்ற நீதியாசாரத்தின் றன்மையை இந்திரனுணர்ந்து, நிலவுலகத்திற்குவந்து இவனைக்கண்டு தழுவிக்கொண்டுதனது தேவலோகத்திற்கு அழைத்துக்கொண்டுபோய், சூரியனைப்போன்ற ஒருமாலையை அவ்வேதியன் கழுத்திலணிந்தான். எ - று. (௯௬)

ஆர மொன்றளித் தருமறை யவன்றனை நோக்கிப
பேரொ ளிப்புனை யாரமீந் தவிரொளி பிறக்கச
சோரப் சும்பொற் றாயிர மொருவைகலி றுசரக்கும
பார கத்தது கொண்டுநீ பேரறம் புரிப்பாய.

(இ - ள்.) ஒருமாலையைக்கொடுத்து, அரியவேதமுணர்ந்த அவ்வந்தணனை நோக்கி, மிகுந்தகாந்திபெற்றதாகிய இம்மாலையானது விளக்கந்தங்கிய ஒளிவீசும்படி ஆயிரம் பசும்பொற்காசை நாளொன்றிற்கொடுக்கும். நிலவுலகத்திலே அப்பொன்னைக்கொண்டு நீ பெரியதருமங்களைச் செய்வாயாக. எ - று.

என்று போக்கின னிந்திரன் வேதிய னெய்தி
யன்று நான்முதல வைகலொன் றாயிரம் பசும்பொன்
றன்று பேரொளிப் புனைகலன் சுரந்திடப் பெற்று
நின்று புண்ணிய மெவற்றையும் புரிந்தன னெடுநாள்.

(இ - ள்) என்றுகூறி இந்திரன் அவ்வந்தணனை யனுப்பிவிட்டான். விப்பிரமணியென்போன் நிலவுலகமடைந்து அன்றுமுதலாகத்தினமொன்றிற்கு ஆயிரம்பசும்பொற்காசுகளை, மிகுந்தபேரொளியுடைய அம்மணியானதுகொடுத்து வரப்பெற்றுக்கொண்டு நிலவுலகத்திலே வெகுநாளிருந்து எல்லாப்புண்ணியங்களையுஞ் செய்தான் எ - று. (௧௬௮)

பரக்கும் வெண்டிரை படுகட னெடுநிலப் பரப்பிற்
சுரக்கு மாவின மந்தணர்க் களவறத் தொகுத்தா
னிரக்கு மாதொறு வவற்றிடை நிலாக்கொழுந் திதழி
கரக்கும் வார்சடை யவன்பசு வொன்றுபோய்க் கரப்ப.

(இ - ள்) பரவியுள்ள வெள்ளிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகத்திலே, விசேடித்த பசுக்கூட்டங்களை அந்தணருக்கு அளவின்றித்தானங்கொடுத்தான் பசுக்களை வரிசைப்படக்கட்டியிருக்குந்தொழுவங்களில் ஒன்றில் பிறைச்சந்திரனையுங் கொன்றைமாலையையும் மறைக்கின்ற நெடியசடையையுடைய சிவபெருமான் பசுவொன்றுபோய்க்கலந்திருக்க எ - று.

எடுத்த நீரொடு மறையவர்க் குதவுமா னினத்தோ
டடுத்த ணிந்தரு ளானையு மாங்கவர்க் களித்தான்
கடுக்க ளத்தனா லயப்பரிக் குநர்து கண்டார்
திடுக்க மெய்தின ரோடின ரப்பசுச் செறுத்தார்.

(இ - ள்) கையிலெடுத்துக்கொண்டநீரோடு அந்தணருக்குத்தானஞ் செய்கின்ற பசுக்கூட்டத்துடன் கலந்திருந்த சூலக்குறியிடப்பட்டுள்ள அப்பசுவையும் (தெரிந்துகொள்ளாமல் தன்னுடையதென்று) அவர்களுக்குத்தானமாகக்கொடுத்தான். விடந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமான் திருக்கோயிலைப்பரிபாலனஞ்செய்வோர் அதுகண்டு நடுங்கியோடி அப்பசுவைத்தடைசெய்தார்கள். எ - று (௧௭௦)

செறுத்த காலையி லையமா வேற்றவன் றிரும்பி
வெறுத்த சிந்தையின் விப்பிர மணிதிறத் துரைப்பக்
கறுத்த சிந்தையன் வெகுண்டனன் பாதகங் கருதான்
மறுக்க ளத்தன தாலயத் தவர்க்கிது வகுப்பான்.

(இ - ள்) அப்படித்தடைசெய்தபோது, அப்பசுவைத்தானமாகப் பெற்றவன் திரும்பிவந்து, மனவெறுப்போடுவிப்பிரமணியெனும் வேதியனிடஞ்சொல்ல, கடினசித்தமுடையவனாய்க்கோபங்கொண்டு, சிவாபராதத்தைச் சிறிதுங் கருதாது ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமான் திருக்கோயிற் பரிபாலகருக்கு இதனைச்சொல்லுகின்றான். எ - று. (௧௭௧)

வைக லாயிரம் பசும்பொனெம் பாற்றர வழங்கிச்
செய்க லன்புரிந் தளித்தனன் புரந்தரன் சிவனுக்
கெய்து மென்னுமை யோர்பசுத் தந்துறி னிழ்போ
வெய்து ரைத்தனி ரழிவழக் கெனச்சொலா விடுத்தான்.

(இ-ள்.) நானொனறுககு ஆயிரம்பசுப்பொற்காசுகள் எனககுககொடுக்கத தகக மாலையை இந்திரன் விருப்பததோடு கொடுததுப்பாலித்தான். (இப்படி யிருகக)என்பாலெய்திய ஒருபசுவைககொடுததால சிவபெருமானுக்குத்தாழ்ச்சி யுணடாமோ? வீணவழககை விருதாவாக என்னிடம் வநது சொனனீாகளெ னறுசொலலி அவாகளையனுப்பிவிட்டான. எ - று.          (கசஉ)

ஐய னாலயம் பரிககுந ராசவை புகுநதாா
மைவ ருங்களத தாாவசந தேசசுராக குளதாந
தெய்வ மாப்பசுப பிடிததொரு மறையவன செங்கைப்
பெய்யு நீரொடுங் கொடுத்தனன் விபபிர மணியே.

(இ - ள்.) சிவபெருமானுடைய திருககோயிற பரிபாலனஞ் செயவோா இராசசபையை யடைநதவாகளாய, விஷநதஙகிய கணடததையுடைய வசநதே சுவரருககு உளளதாகிய தெய்வீகமபொருநதிய சிறநதபசுவை விபபிரமணியெ னும வேதியன பிடிததுககொணடு, வேறொரு வேதியனகையில தாரைநீரோடுந தானஞ செயது கொடுததுவிடடான எ - று.          (கசங)

எனனு மவவுரை கேடடலும கேட்டிலான போல
மனன னெனைறுமுற றுரைததிலன புரோகித மறையோ
னனன சாலேயி லரசனுக கடுததடுந துரைததான
மின்னு வேணிய னாலயச சுரபிமீட டளிபபான

(இ - ள) எனறுசொலலிய அவவாாததைகளைககேடடும கேளாதவன போல மனனவன மறுமொழியொனறுங கூறு மலிருநதான அச்சமயம, அங்கி ருநத புரோகிதன, பிரகாசிககினற சடைமுடியையுடைய சிவபெருமான திருக கோயிற பசுவைவாஙகிககொடுககுமபடி அரசனுக்கு அநதமுறைசொலலினன.

இருகக ளாநதறி புரோகித மறையவ னிசைதத
கருததி லொனறுமுற றுணாநதிலன மணைகழல வேநத
னுருததெ ழுநதனன சிவததுரோ கததரை யொருஙகே
முருககி யாருயிா முடிததுற நானமறை மொழிநத.

(இ - ள) வேதஙகளைமுறறுமுணாநத புரோகித வேதியன சொலலிய நீதிகளில ஒனறையும சததிககினற வீரகணடாமணிதரிததவன உணராதவனா யிருநதான அபபோது அபபுரோகிதன கோபிததெழுநது, சிவததுரோகிகளை முறறும அழிதது உயிாபோககுமபடி நானகுவேதஙகளுங கூறுகினறன.

ஆத லாலிவற கோறியென றிசைததன னரச
னோது நானமறை யமைசசனை நோககின னுமபாத
தாது லாவருங கறபக வாசனன றனககென
றேதி லாரமொன றளிததவன றழீஇககொள விருநதான்.

(இ - ள.) ஆதலால் இவனைக்கொலலுக வெனறுன. அப்போது அரசன் நானகுவேதஙகளையோதுகினற மநதிரியாகிய அபபுரோகிதனைநோககி, தேவ லோகததிலுள்ளதும மகரநதஙகள நிரமபியதுமான கறபகமலா மாலைதரித்த இநதிரன தனககெனறுயர்நத ஒருமாலையையளிதது அவனை தழுவிக்கொளள வும இருககினறுன. எ - று.          (கசரு)

அசசி றப்புடை யந்தண ணுருயி ரவன்பால்
மெய்சசி றப்பற விளித்துமேல் விளைவன யாதோ
கொசசை மக்களி னுரைத்தனே வருவன குணியா
விசசை கற்றுணர்ந் தளந்தறி யுணர்வெலாம் விடுத்தாய்.

(இ - ள்.) அத்தகைச்சிறப்புற்ற அநதணனுயிரை, அவனுடலின் பெருமை யகலும்படிபோக்குவோமாயின, யாதுவிளையுமோ? வேதங்களையோதியுணாநதுள்ள அறிவுமுழுவதையும் போககினவனுய், மேல்வருவனவற்றைககவனியாது [கொச்சை] மூடமனிதாபோலக் கூறினுய். எ - று. (கசஎ)

என்றி ழித்தன னிவனுரை யாவையு மிறைவன்
றென்று தொடடர னடிமைபூண டொழுகிய தூயோ
னின்றி வனறிறத் திருபபினுந தீண்டினு மெரிவாய்
தெனறி சைபபடு நிரயமுற றிழிவது திண்ணம.

(இ - ள்.) என்று அரசன (புரோகிதனே) இகழநதுபேசினுன. இவனசொல்லியவார்ததைகளையெலலாம், பணடைககாலநதொடஙகிசசிவபெருமானதிருத்தொணடினைபபுரிநதுவநத புனிதனுகிய அப்புரோகிதமறையோன்கேட்டு, இப்போது நாம இவனிடததிலிருநதாலும இவனைபபரிசிததாலும, இயமபுரததிலுளள தீவாய் நரகததில இழிவது சததியம எ - று. (கசஅ)

பூதி வேண்டியு முருததிர மாமணி புனைநது
மாதி யஞ்செழுத துணாநதுமுற் றருநதவம யாவுஞ
சேதி யாவருஞ சிவததுரோ கததினை தெரியா
னேதி லானிவன் றனமைநன் றலவென விகழ்நதான.

(இ - ள்) திருநீறணிநதுகொணடிருநதும, சிறநத உருததிராககமணிதரித்துககொணடிருநதும, தலைமையாகிய பஞசாக்ஷரததைச்சபிததுககொணடிருநதும், முடிததுளள அரிய தவஙகளை யெலலாஙகெடுககததகக சிவததுரோகததை உணராதிருககினறுன. இவனியலபு நன்றனறு. இவன் நமககுபபகைவனென று அவமதிததான். எ - று. (கசகூ)

நோக்கி னனறனி நொறில்பரி யரசனைத தெளிநீர்
தேக்கு செஞசடை யவறகடாச சிவததுரோ கஙக
ளாக்கு வாரதற கிசைகுவா ரனனவாத தொடினும
வாக்கி னுலுரைத திடினுமவந தடுககுமா நிரயம.

(இ - ள் ) ஒப்பற்றவேகமுடைய குதிரையைப்படைதத அம்மன்னவனை நோக்கி, தெளிநதகஙகைநீா ஊறறெடுககும் சிவநதசடையையுடைய சிவபெருமானுககுச்செயயத்தகாத சிவததுரோகஙகளைச்செயபவாகளும், அதற்கு உடன்பட்டிருப்பவர்களுமாகிய அவாகளைத தொட்டாலும் அவர்கள்பெயரை வாயாற்சொன்னுலும் கொடிய நகரவேதனை சமபவிககும். எ - று. (கஙo)

என்று ரைத்தன னெழுந்தன னிடைமிடை கானஞ
சென்று புக்கனன் புரோகிதன் செஞ்சடைப பவளக்
குன்ற மன்னவன் கோயிலார் கோவிய லுணராப
புன்றொ ழிற்புலை வேநதனென் றனைவரும் போனுர்.

(இ - ள்.) என்று புரோகிதன்கூறி, அங்கிருந்து புறப்பட்டு பெருமையுடைய காட்டினிடத்திற் சேர்ந்திருந்தான். சிவத்தசடையையுடைய பவளம்போலும் சிவபெருமான் திருக்கோயிற் பரிபாலனஞ்செய்வோர்யாவரும் அரசனின் பெருமைத் தன்மையுணராத அற்பத்தொழிலையுடைய இழிந்தமன்னவனென்று மனதிற் கருதிச்சென்றார்கள். எ - று. (௧௬௧)

மின்ன லங்கொளி வேற்படை வேந்தனு நெடுங்கான்
மன்னு மாமறைப் புரோகிதன் றனுழை வருவான
சொன்ன தூதரை விடுத்தலு மன்னவன் சுளியாத
துன்ன ருங்கடுங் கானகத் திருந்துநா டொலைத்தான்.

(இ - ள்.) மின்னற்கொடிபோல் அசைகின்ற ஒளியையுடைய வேற்படை தாங்கிய மன்னவனும், பெரியகாட்டில் வசித்திருக்கும் சிறந்தவேதமுணர்ந்த புரோகிதன் தன்பால்வரும்படி சொல்லித் தூதுவர்களைவிடுப்பவும், அப்புரோகிதன் கோபித்துக்கொண்டு, ஒருவரும் அடைதற்கரிதான அக்கொடியகாட்டிலே யிருந்துகொண்டு காலங்கழித்தான். எ - று. (௧௬௨)

களவி காய்வெடித் தெற்றருஞ் சில்லொலி கலிக்கு
முளரு டைக்கொடுங் கானகத் திருக்கலு முன்னா
ளுளவ செம்பொனு மெழிந்ர வறுமையி னுழந்தான்
வெள்ளை வாரணத் துங்கது மணர்ந்தனன் விரைவான்.

(இ - ள்.) களளிச்செடிகள்காய்ந்து வெடித்தலாலுண்டாகும் சிற்றொலியொலிக்கின்ற, முட்களாற்நிறைந்த கடுங்காட்டிலே வசித்துக்கொண்டிருக்க, முன்னாளில் தன்பால் தேடிவைத்திருந்த திரவியங்களெல்லாம் செலவாய் விடுதலும் தரித்திரத்தினாலே வருந்தினன். வெள்ளையானையையுடைய இந்திரன் உடனே அதனையறிந்தான். எ - று. (௧௬௩)

எாஞ்ச டைப்பர னெமபிரா றகினியனின றுபுகருங்
சுரந்த நலகுர வெனறெரு ற்தவவனங குறுகி
நோந்து தெய்வமாச சுரபிதந தகனறன னினையா
வோாந்த யாவையும புரோகிதற குதவென வுரைத்து.

(இ - ள்.) குளிர்ந்த சடையையுடைய [பரமன] மேலோனாகிய எமது சிவபெருமானுக்கு மெய்யன்பினையுடையோன், விசேடித்த தரித்திரத்தில் இப்போது வருந்துகின்றானென்று புறப்பட்டு அக்காட்டினையடைந்து அவனைப் பார்த்து, தெய்வீகமுள்ள சிறந்த காமதேனுவுக்கு, இப்புரோகிதன் நினைத்து வேண்டியவற்றையெல்லாம் கொடுத்துவருகவெனக் கட்டளையிட்டு, அதைக் கொடுத்துப்போயினன். எ - று. (௧௬௪)

சுரபி யனனவற் கிந்திர னளித்ததுந் தொலையாப்
பரவு நல்வள மாங்கது பயபபதும பகர்ந்தா
ராசர்கோமக னளவறு சேனைகொண் டகனறு
புரகி தற்கொணர்ந் திருத்துவா னெடுநெறி புகுந்தான்.

(இ - ள்.) அப்புரோகிதனுக்கு இந்திரன் காமதேனுவைக்கொடுத்ததும், அழியாமல்பெருகச்செய்கின்ற மேம்பட்டசெல்வங்களை அதுவிரும்பியவண்ணம் கொடுத்துவருவதும் அரசனுக்குரைத்தார்கள். அதனைக்கேட்ட அம்மன்ன

வன் அப்புரோகிதனையழைத்து வந்து தன்பால் அமர்த்திக்கொள்ளும்படிஅளவ ற்றசேனைகளைக்கூட்டிக்கொண்டு அரணமனையினின்று வெகுதூரம் சென்றான்.

புகுந்த மன்னவன் கனப்பெருஞ் சேனையுட் புடைவீழ்
பகுந்து பாய்மதப் பணைமருப் பொருத்தன்மால் யானை
மிகுந்த முமமத திரையழி தாத்தனி வேந்தன்
ஒருகுந்தி றறபடை யனைத்தையு நிலனுறத் துவைத்தது.

(இ - ள்.) அப்படிச்சென்ற மன்னவனுடைய மேன்மைதங்கிய பெருஞ் சேனைகளில், பக்கங்களில ஒழுகுவதாய் இருபிளவாகப்பாயும மதநீரையும, பருத்ததந்தங்களையுமுடைய பெரிய ஆணயானையானது, மிகக்கும்மதமபாயும படி ஒப்பற்ற அம்மன்னவன சோதத்துக்கொண்டுவந்தவலலமை மிகுந்தசேனை களையெல்லாம நிலமிசைத்தள்ளிக்காலகளால மிதித்துச்சிதைத்தது. எ - று.

புரைப டுங்கரங் காலொடு மருப்பொடும புகுந்தோா
வரைதி ரிந்தெனை வுழக்கிய மன்னவன சேனை
தரைப டுத்திய தடுதிறற றனிகருடை வேந்தை
யரைப டுத்திய தகனிலத தகைப்டுங் களிறு.

(இ - ள.) துவாரயபொருந்திய துதிக்கையோடும காலகளோடும தந்தங்க ளோடும் ஒருமலையானதுவந்து சுழனறதுபோலும அவ்வரசன சேனைகளையழி ததுவிட்ட அக்கொடிய யானையானது, பகைகுறைக்கொலலும வலிமையும ஒப பற்றவெணகொறறககுடையுமுடைய அம்மன்னவனை நிலமிசைததளளி, தரை யிற் காலகளால தேயததரைததுவிடடது. எ - று. (கடுஎ)

ஒழிந்த சேனையுங் காவலா யாவரு மொருங்கே
யிழிந்த கட்புன லாறலைத தெழவழு திரங்கிப
பொழிந்த துன்பொடு மாநகா புகுந்தனா புலம்பி
யழிந்த தண்டமென றெழுந்தன வழுகுர லமலே.

(இ - ள.) எஞ்சியசேனையும சேனாநாயகாகளுமாகிய யாவரும் ஒனறுசோ ந்து கணணீா ஆறுகபபிரவகிகக அழுதுபுலமபி, மிகததுயரததோடு சிறநத தங களநகரத்திற்குப போனாாகள உடனே உலகமுழுவதும அழிநதுவிட்டதெனறு சொல்லுயபடி துக்கப்பட்டுப்புலமபுகினற அழுகுரலோசையானது எலலாவிட ங்களிலுங கோஷித்தன. எ - று. (கடுஅ)

கனைபொ லனகழ லரசுபட் டிறநதமை காணு
வினைத ருநதனிக குமரனை யிவர சிருததித
துனைக டுமபரிச சேனையா யாவருந தொழுதா
ரனைய னவ்வர சிருநதினி தளிததன னவனி.

(இ - ள்) சததிக்கினற அழகியவீரகணடாமணிதரிததமனனவன, யானை க்காலில் மிதிபட்டிறநதமையை நோககி, மறறுளளவாகள, தநதைக்காகவும சேனைகளுக்காகவும வருநதுகின்ற ஒபபற்ற அரசிளங்குமரனை அரசுபுரியநியமித்து. அதிவேகமுடைய குதிரைகளையுடைய சேனைகளெல்லாரும வணங்கினாாகள, அக்குமாரன் அரசாட்சிசெய்து கொணடிருந்து உலகினை இனிதாகப் பாதுகா த்தான். எ - று. (கடுகூ)

நடந்த நாள்பல நண்ணருஞ் சின்னெறி யடவி
யடைந்து புக்குநல் லமைச்சுடை யந்தணர்க் கொணர்வான்
றொடர்ந்த நாலவரை விடுத்தலுஞ் சென்றனர் தொழுதார்
படர்ந்த காரண மென்னெனத் தனித்தனிப் பகர்வார்.

(இ - ள்.) பலநாட்கள் சென்றன. மந்திரித் தன்மையமைந்த அவ்வந்தணனையாவரும் அடைதற்கரிய சிறுவழியையுடைய காட்டையடைந்து உள்ளே சென்று அழைத்துவரும்படி, ஒருவர்பின்னொருவராகத் தூதுவர் நாலவரையனுப்பவும், அவர்கள் அங்ஙனமே சென்று அவரைவணங்கினார்கள். அப்பொழுது நீங்கள் வந்தகாரணம் யாதெனவினவ, அவர்கள் தனித்தனிசொல்லுகின்றார்கள். எ - று. (கசுo)

தெளிந்த வெண்குடை வேந்தனின் செல்வனத் தெதிர்ந்து
விளித்தல வேண்டினன் மேவலும் வெருளிவே கத்தாற்
களித்த மும்மதக் களிறுசெற் றிறந்தனன் காணூஉ
வளித்த வன்பினோ டழுது மீண் டடைந்தவை வனிகம்.

(இ - ள்) தெளிவான வெண்கொற்றக்குடையையுடைய மன்னவன், நீ சென்ற இவ்வனத்திலடைந்து உன்னையழைக்கவந்தனன். அப்படிவரவும் மும்மதஞ்சொரியும் களிப்படைந்த பட்டத்து யானையானது கோபத்தாற்கொல்ல இறந்தான். அதனைநோக்கி அம்மன்னன்பாலவைத்த அன்பினால் அச்சேனைகள் அழுதுதிரும்பின. எ - று. (கசுக)

அன்ன வன்றனிக் குமரனவ் வரசுகொண் டிருந்தா
னின்னை வேண்டுறு மன்புடை நிலைமைய னும்முன்
பின்ன ரெங்களை நின்னுழை விடுத்தனன் பெரியோ
யென்ன வன்னவ னுங்கவர்க் கெடுத்தெடுத் தியம்பும்

(இ - ள்) அம்மன்னனுடைய ஒப்பற்றபுத்திரன் அவ்வரசுரிமையைக் கைப்பற்றிக்கொண்டிருக்கின்றான் அவனே உன்னைவிரும்புகின்ற அன்புடைய இயல்பினனுமுள்ளான் ஆதலால், பெரியோனே! அதன்பின்னர், எங்களை உன்பால் (அழைத்துவரும்படிசொல்லி) அனுப்பினன் என்றுகூற, அவ்வேதியன் அத்தூதர்களுக்கு எடுத்தெடுத்துச்சொல்லுகின்றனன். எ - று. (கசுஉ)

செய்ந்நக் குந்தனிச் சிவத்துரோ கஞ்செயுந் தீயோ
னயர்த்த சிந்தையன் விப்பிர மணியெனு மவனை
வயக்கு வாளெறிந் துயிர்செகுத் தீர்ந்திடின் வருதுங்
கயங்க ருங்கட னிலந்தனைக் கைதொழுந் தகுமால்.

(இ - ள்) ஒருவருஞ்செய்தற்கரிய ஒப்பற்ற சிவாபராதஞ்செய்தகொடியோனும் நன்மார்க்கத்தைமறந்த மனமுடையோனுமாகிய விப்பிரமணியெனும் அவ்வேதியனை, வெற்றிகொண்டவாளால் வீசி உயிர் போக்கியொழித்தால் நாம் அங்குவருவோம். அப்பொழுது ஆழமுள்ளதும் கருநிறமுற்றதுமான கடலாற் சூழப்பட்ட நிலவுலகமுழுவதும் தன்னைக் கைகுவித்துப்பணியவுந்தகும். எ - று. (கசுந)

ஓவில் வெண்குடைப் படுநிழ லின்னுயி[illegible]கு
மூவ ருநதனித திருவருள புரிகுவா மூ[illegible]
றேவா யாவருஞ் செலவனை த[illegible]மூவர்நீ ணில்[illegible]
தாவி லன்புடை யறங்களுந் தனித்தனித் தழைக்கும்.

(இ - ள்.) (அன்றியுந்தன்) கெடுதலில்லாத வெண்கொற்றக்குடைநிழலில் வாழும் ஆன்மாக்களெல்லாம் கடைத்தேறும். திரிமூர்த்திகளும் தங்கள்நிசாறற கருணையைப்பாலிப்பார்கள். தேவர்களெல்லாரும் அவ்வரசினங் குமரனைமுறைப் படிவணங்குவார்கள். நெடிய இந்நிலவுலகத்தில் கெடுதலில்லாத அன்புடைய தருமங்களுந் தனித்தனிவளரும். எ - று. (௧௬௪)

விலங்கொ ழுக்குடை விப்பிர மணியைவெள் ளொளிவிட்
டலங்கு வாளெறிந் தாருயி ரகற்றுவா னுறைவீர்
பொலன்க ழற்றனிக் குமரனமாட டினிதுறப் பகுவேம
வலங்கொண் மெய்ம்பினீ ரன்றெனில் வருகல மென்றான்.

(இ - ள்) ஒழுக்கமீனனாகியவிப்பிரமணியெனும் அவ்வந்தணனை, வெள்ளியகாந்திவிட்டு அசைக்கின்ற வாட்படையை வீசி உயிர் போகும்படி, கூறு வீர்களாக. அப்பொழுதுதான், பொற்சழலையணிந்த நிகரற்ற அவ்விளவரசன பால் வருவோம். வல்லமைவாய்ந்த தோள்களையுடையவர்களே! அப்படிச்செய யாவிட்டால அங்குவரமாட்டோமென்றனன. எ - று. (௧௬௫)

நல்லொ ழுக்குடைப் புரோகித னுரைத்ததமை நவின்றா
மல்லொ ழுக்குடை வரைப்புயன் சித்திர சேனன்
புலலொ ழுக்குடை விப்பிர மணிவரப் புகன்றான்
சொலலொ ழுக்குடை மறையவர் யாரையுந் தொகுத்தான்.

(இ - ள.) நல்லொழுக்கத்தையுடைய புரோகிதன் சொல்லியவற்றை அத் தூதர்கள் அரசகுமாரனிடஞ் சொன்னார்கள் மற்போரில் தோசசியெய்திய மலைபோலும் புயங்களையுடைய சித்திரசேனனென்னும் அவ்விளங் குமரன், தீயொழுக்கம் வாய்ந்த விப்பிரமணியென்னும் அம்மறையோனைவருமபடி கட்டளைதந்து, வைதிகவொழுக்கமுடைய அந்தணர்களனைவரையுஞ் சேர்த்த னன். எ - று. (௧௬௬)

அந்த ணர்குழா மடைந்திடு மரசவை யரசன்
வெந்த சிந்தையன விப்பிர மணிமுக நோக்கி
யெந்தை யாக்கவர் களவனீ செய்வன யாவுஞ்
செந்து வர்ச்சடை யவர்க்கரு ளன்றெனச் சீறி.

(இ - ள்.) வேதியர் குழாமுழுதும் சேர்ந்துள்ள அவ்வரசசபையிலிருந்த அரசிளங்குமரன், கோபமெய்தியமனமுடையவனாய் விப்பிரமணியெனபோன முகத்தைநோக்கி, எமது சிவபெருமானுக்குரிய பசுவையபகரித்தகள்வனாகிய நீ செய்யுங்கிருத்தியங்களெல்லாம், சிவந்த பவளம்போலுஞ் சடையையுடைய சிவபெருமான திருவுள்ளத்திற்கு உவப்பனவல்ல வென்றுகோபித்து. எ - று.

கண்ணி னுகைக்கினு நின்பெய ருரைக்கினுங் கருத்தி
னெண்ணி நோக்கினு நரகமல லாற்பிறி தில்லை
வண்ண மாநகர் வேதியர் கேளென வழங்கி
யெண்ணி லாப்பொழி னெடுங்குடைப் பாவலன் வெகுண்டான்

(இ - ள்.) உன்னைக்கண்ணாற்கண்டாலும் உன்பெயரை வாயாற் சொன்னாலும், மனதால் உன்னை நினைத்துப்பார்த்தாலும் நரகமடைவதன்றி வேறொன்றில்லை. அழகிய இப்பெரிய நகரத்தில்வசிக்கும் பிராமணர்களே! கேளுங்கள் என்றுசொல்லி, வெள்ளியசந்திரிகையை வீசும நெடிய வெண்கொற்றக்குடையுடைய அரசகுமாரன் கோபித்தான். எ - று. (௬௬௯)

கொண்டு போதிரென் றுரைத்தன னேவலர் குறுகித
தண்டு தாங்கினர் பிடித்துருத் தநங்கர் தணந்தார
மண்டை துண்டுற விப்பிர மணியுயிர் மடித்தார
திண்டி றற்பரிக் குமரனு மனமகிழ் சிறந்தான்.

(இ - ள்) கொண்டுபோங்களென்று (தண்டலாளர்க்கு) கூறினன். அக்கட்டளையேற்றவர்கள் அங்கெய்தி, கையிற்றண்டந்தாங்கி அவ்விப்பிரமணியைப்பிடித்துக்கொண்டு கோபித்து அந்நகரைவிட்டு நீங்கி (வெளியேசென்று) மண்டை பிளவுறும்படி விப்பிரமணி உயிரை நீக்கினார்கள் வலிய வெற்றிபொருந்திய குதிரையையுடைய அரசகுமாரனும் மனக்களிப்புமிகுந்தான்.

கண்ணொ ராயிர முடையவன் கண்டுநன் களித்தான்
மண்ணக் கதனிழிந் தேத்தினன் குமரனை வழுத்தி
யெண்ணி விப்பிர மணிக்கரு ளாரமுற் றெடுத்தா
னண்ணல் வேற்படை யரசிளங் கோளரிக் களித்தான்.

(இ - ள்.) ஓராயிரம் விழிகளையுடைய இந்திரன் இச்செயலைப்பார்த்துக் களிப்பெய்தினன் நிலவுலகத்திலிறங்கிவந்து அரசகுமாரனைப்புகழ்ந்து துதிசெய்து, முன்தான் விப்பிரமணிக்குக்கொடுத்த ஆரத்தை யாலோசித்து எடுத்து, பெருமைதங்கிய வேலாயுதமேந்திய ஆண் சிங்கத்தையொத்த அரசிளங்குமாரனுக்குக்கொடுத்தான். எ - று (௬௭௦)

இதுவு ணர்ந்தனர் புரோகித ரிருந்தனூர் தூதர்
புதுமொ ழிந்துறக் கேட்டனன் மயிர்ப்புறம் பொடித்தான்
கதுமெ னப்புகுந் தெய்தின னரசனைக் கண்டா
னதுவு ணர்த்திருந் தளவளாய் மகிழ்ந்தன னமைச்சன்.

(இ-ள்) இச்செய்தியை யறிந்துகொண்டவனாய புரோகிதனிருக்கையில், தூதர்களெய்தி இப்புதிய சங்கதியைச்சொல்லக்கேட்டு மயிர்கூச்செறிந்தவனாய அதிசீக்கிரமாகவந்து அரசகுமாரனைக் கண்டுகொண்டான் அப்படிப்புரோகிதன் வந்ததையுணர்ந்து அரசகுமாரனும் அளவளாவி மனக்களிப்படைந்தான். எ-று.

தாரை நீரொடு மாத்தர வேற்றவன் றவழ்ந்த
கார்தொ டுங்கொடிக் கச்சதே யத்துள வசுவுக்
கீர வெண்ணிலாக் கொழுந்தணி யெம்பிரான் சுரபி
யோரவில் சிந்தையாய் விடுதியென் றெழுதின ரோலை.

(இ - ள்.) தாரை நீருடன் பசுவைத்தானங்கொடுக்கப் பெற்றுக்கொண்டவனாகிய, மேகமண்டலமளாவித்தவழுங்கொடிகள் கட்டிய கச்சதேசத்திலுள்ள வசுவென்னும் வேதியனுக்கு, அறிவில்லாத மனமுடையவனே! குளிர்ச்சிதங்கிய வெண்ணிறமுடைய இளம்பிறைச்சந்திரனை யணிந்த எமது சிவபெருமானுக்குரிய பசுவை விட்டுவிடக் கடவாயென்று ஓலை யெழுதி விடுத்தார்கள்

எழுது மோலைகை யேற்றில னீசனுக் கீர்மபால்
பொழியு மப்பசு விடுத்திலன் புரவலன் வெகுண்டான்
வழுவ றுங்குணக் கச்சதே யத்துள மன்னற்
கொழுகு மன்புகொண் டெழுதினன் விடுத்தன னோலை.

(இ - ள்.) (அவ்வோலையையேவலாளர்கொணடுவரககண்டவசுவென்பான்) மன்னவன்விடுத்த வோலையைக கையில் வாஙகாதவனுய, குளிர்நத பாலினைக் கறககும் அப்பசுவைச் சிவபெருமானுககு விடவிலலை அதுகண்ட அரசிளங குமரன் கோபமெய்தி, குற்றமற்ற நற்குணமுடைய அககச்ச தேசத்திலுள்ள மன்னனுககு மிகக அனபுடன் ஓரோலை யெழுதி யனுப்பினுன். எ - று. (கஎரு)

செறிநத வாரகழற் சித்திர சேனனீட டவிழா
வறிந்த வாசகத தாஙகவற பிடித்தசைத தனுபபி
நெறிந்த பான்முலை யாவொடும விடுததன னிறைவண்
டெறிநது லாவருந தாரினுன முன்னரி னிறுததாா.

(இ - ள.) நெருஙகி நீணட வீரககழலணிநத சித்திர சேனனென்னும அவவரசிளங்கு ரன எழுதியனுப்பிய ஓலையைப்பிரிததுப்பாாதது, அதிலுள்ள வாசகததால் விடயத்தையுணாநதுகொணடு, அததேயத்திலுள்ள அவவசு வென்னு மறையோனைககணடு பிடிததுககட்டிககொணடு வருமபடி ஏவலா களை விட்டு, பால கறககும [செருததல] டியையுடைய அப்பசுவோடுசித்திர சேனனென்னும அரசன பாலனுப்பினுன. அககாவலாளா வணடுகள் நிறைநது பண்பாடி வசிககும மாலையணிநத சித்திரசேனன முன்னே விடுததாாகள

இறுதத காலையி னப்பசு வீசனுக கீநதான
கறுதத சிநதையின் வசுவிரு கண்பறித தெறிநதா
னிறுதத கோமுறை தழைதர வறநதொடு நினறுன்
வெறுதத தீவினைக கீழ்ப்பட வெணகுடை விரிததான.

(இ - ள்.) அப்படி விடுததபோது, அப்பசுவை முனபோலவே சிவாலயத திற்குககொடுததுவிடடான. கோபம அதிகரிதத மனமுடையவனுய வசுவென் னும் மறையோனுடைய இருவிழிகளையும பறிததெறிநதான் நிலைபெறுன அரசுரிமைததன்மை அபிவிாததியெயதும வணணம தருமவழியிலிருநதான். எல்லோருமவெறுககததகக பாவஙகளெல்லாம தாழுமபடி வெள்ளிய சநதிர வட்டககுடை நிழலைப்பரப்பினுன. எ - று. (கஎ௬)

கட்பு லங்கடந தேகிய கடுஙகணமா மறையோ
னுட்பு லங்கலங திறந்தன னெமருருத தெழுநது
கொடபு றுமபுயம பிணிததன ரிறுக்கினா கொணாநதாா
தட்ப நீங்கன லாசசியத திட்டனா சலித்து.

(இ - ள்.) காணுதற்குரிய கண்களிழநது சென்ற மிகக கொடுமையுடை யோனுகிய அவ்வசுவென்னும வேதியன மனஙகலஙகி யிறநதான். இயம படா கள் கோபாவேசத்துடன் புறப்பட்டு, வளைநதிருககின்ற அவனுடைய இருவலிய தோள்களையும் சேர்த்திறுக்கிக்கட்டிககொணர்நது, வெறுப்போடு குளிர்ச்சி யற்ற அனலாச்சியமென்னும் இநரகததிலிட்டார்கள். எ - று. (கஎஎ)

பரம னாலயப் பசுப்பிடித் தளித்தவ னதனை
விரவு சிந்தையி னுணர்ந்துமீட் டளித்திடு வேந்த
னிரவு மன்பக லுங்கன லாச்சிய மெனுமிந்
நரகு வீழ்ந்தனர் கற்பமோ ராயிர நடந்த.

(இ - ள்.) சிவபெருமான் திருக்கோயிலுக்குரிய பசுவைப்பற்றித்தான மாகக் கொடுத்தவனும், அப்படித்தானஞ்செய்ததைத் தன் மனதிறமெளிவெய்த உணர்ந்திருந்தும் அப்பசுவை வாங்கி மீண்டும் சிவாலயத்திற்குக்கொடாத மன்னனும், இரவும் பகலும் வேதனைசெய்வதாகிய இந்த அனலாச்சியமென்னு நரகத்தில் வீழ்ந்தார்கள். ஓராயிரங் கற்பங்கள் சென்றன. எ - று. (௧௭௭)

இன்ன ரன்றியு மீங்கிவர் குலத்துளோர் யாருந்
துன்ன ருமபெரு நரகுவீழ்ந் தளவிற் றொலைப்பார்
ரென்ன வெந்திற லந்தக னியம்புறக் கேட்டா
ரன்ன கேடுழித் தருமரு மதிசய மடைந்தார்.

(இ - ள்) இவர்களல்லாமல், இவர்கள் குலத்திற் பிறந்தவர்கள் யாவரும் வீழ்தற்கரிய பேறுகூறிய அனலாச்சியமென்னு நரகத்தில் வீழ்ந்து கணக்கில்லாத காலங்கழித்து வருகின்றார்கள். என்று பெருவல்லபமுடைய இயமன் கூறத் தருமர் கேட்டார். அப்படிக்கேட்கும்போது தருமரும் வியப்பெய்தினார்.

உரைத்த பொய்ம்மையாற் றருமரு நரகுகண் டொழிந்தார்
நிரைத்த மாமணி மானமீச் சிறந்தனர் நிரைத்து
விரைத்த பூமழை யிழிதர விண்ணவர் வியப்ப
விரைத்த வனபொடுங் கற்பக நீழல்வீற் றிருந்தார்.

(இ - ள்) (பாரதயுத்தத்தில்) சொல்லிய ஒரு பொய்ம்மொழியால் தருமரும் அக்கொடிய நரகத்தைக் கண்களாறக் கண்டு அப்பாவத்தை யகற்றிக்கொண்டார். அதன் பின்னர், வரிசையாயுள்ள சிறந்த நவரத்தினமிழைத்த விமானத்திலாரோகணித்து, நிரம்பிய மணங்கமழும் மலர்மழையைத் தேவர்கள் சொரிந்து சந்தோஷிக்கும்படி மிகவும் அதிகரித்த அன்போடு கற்பகவிருட்ச நீழலில் வசித்திருந்தனர் எ - று. (௧௭௮)

காதை யின்னமொன் றுளதது புகலுவது கருதித்
தீதின் மாதவர் கேண்மினென் றருந்தவத் திருத்துஞ்
சூத மாமுனி சொற்றனன் றுங்கவர் தொகுப்பார்
யேதின் மாக்கதை யென்றலு மெடுத்தெடுத் திசைப்பான்.

(இ - ள்.) இன்னுமொரு சரிதையுள்ளது. அதனையுஞ்சொல்லுவோம், குற்றமற்ற பெருந்தவமுடையோரே! கவனத்துடன் கேட்பீர்களாகவென்று, அரிய தவமார்க்கத்தில் மனத்தை நிறுத்திய பெருமைதங்கிய சூதமுனிவர் சொல்லினர். அந்த நைமிசாரணிய முனிவர்கள் எல்லோரும் அச்சிறந்த சரித்திரம் யாதென்று வினவவும், விரித்து விரித்துச்சொல்லுகின்றனர். எ - று. (௧௮௦)

தொல்லை நேமியோ னுந்தியந் தாமரைத் தூயோ
னெல்லை காண்பரு முலகெலாங் காண்பதற் கெண்ணி
யொல்லை யோதிம முகைத்தெழுந் தவ்வழி யொருங்கே
செல்ல நோக்கினன் கடைமுறை யடைந்தனன் றென்பால்.

(இ - ள்.) பண்டொருகாலத்தில், சக்கராயுதந்தாங்கிய திருமாலின் அழகிய உந்திக்கமலத்திலுதித்த பிரமதேவன், அளவு காணுதற்கரிய உலகங்களையெல்லாம் பார்ப்பதற்குக்கருதி, அதிவேகமாகத்தனது அன்னவாகனத்தை நடத்திக்கொண்டு புறப்பட்டு, முழுவதுஞ்சென்று பார்த்துவிட்டுக் கடைசியில் இயமபுரத்திலெய்தினன். எ - று. (கஅ௪)

செலனு மத்திசை நரகெலா மொருங்குறத் தெரிந்தா
னலலன் மன்பதை யலமர வெருவிநெஞ் சழிந்தான
சொலனு மாத்திரை விண்புகு மனத்தொடுஞ் சுழலா
நிலலி தறகயல் போகலே யென்றன னிமலன.

(இ - ள்.) தான் சென்ற அத்திசையிலுள்ள நரகங்களில் ஆன்மகோடிகள் துயரத்தோடு வருந்திக்கொண்டிருக்கப்பயந்து மனங்கலங்கினன். சொல்லிய மாத்திரத்திலேயே தேவலோகத்தை யடையத்தக்க அன்னவாகனத்தோடு, இதற்கப்பாற் செல்லவேண்டாம் சுழலாமல் நிற்கவென்று பிரமன் கூறினன்.

ஆதி நான்முகத் தந்தண னுரைத்தலு மன்ன
மேதி தறகய லென்னலு மேறுகைத் துவறகுத
தீதி ழைத்திடு சிவத்துரோ கரைத்தெறு நிரையம
போத லாங்கவாக் காண்பரி தென்றனன புனிதன.

(இ - ள்) (முத்தொழில்களில்) முதற்றொழிற்றலைவனாகிய பிரமன் இப்படிச்சொல்லவும், இதனருகே யாது உள்ளது? என அன்னம் வினவவும், இடபவாகனத்தைச்செலுத்துஞ் சிவபெருமானுக்குத் தீமைசெய்த சிவத்துரோகிகளைத் தண்டனைசெய்யும் நரகங்கள் வரப்போகின்றன அங்கேயுள்ள அவர்களைக்காண்பது அரிதாகுமென்று பிரமன் சொன்னன். எ - று. (கஅ௫)

செய்த பாதக மெவற்றினுஞ் சிவத்துரோ கங்கள்
வெய்து கொல்லென்ப பின்னரு மோதிமம் வினவக
கொய்து ரைப்பன மறைகளு மாகமக் குலமு
முய்த ருமபல புராணமு முரைப்பன வுணராய்.

(இ - ள்.) ஒருவன்செய்த பாதகங்களெல்லாவற்றினும் சிவத்துரோகங்கள் மிக்ககொடுமையானவைகளா? என மீண்டும் அன்னவாகனம் கேட்க, விரித்துச்சொல்லுவனவாகிய வேதங்களும் சிவாகமத்தொகுதிகளும் ஆன்மாக்கள் கடைத்தேறும் வழியைப்போதிக்கும் பல புராணங்களும் முறையிடுவனவற்றைத்தெரிந்தாயில்லை. எ - று. (கஅ௬)

உருத்த பாதக மென்றுள யாவையு மொருங்கே
திருத்து மன்னவா புண்ணியத் தாலவை தீருஞ்
செருக்கு வார்சடை யெம்பிரான் சிவத்துரோ கங்கள்
கருத்தி னோர்ந்துசெய் யெவற்றினுங் கழியுமோ கழியா.

(இ - ள்) பெரும் பாதகமென்றுள்ளனவெவ்வையோ அவையெல்லாம், அவற்றைச்செய்தவர்கள் செய்கின்ற புண்ணிய கருமத்தால் முற்றும் நீங்கும். ஆனல், செருக்கியுள்ள நெடிய சடையையுடைய எமது சிவபெருமானுக்குச்செய்த சிவத்துரோகங்கள் மனதினல் அறிந்து செய்கின்ற எப்படிப்பட்ட பிராயச்சித்தத்தினலும் நிவாரணமாகுமோ? நிவாரணமாகாது. எ - று. (கஅ௭)

என்றெடுத்தெடுத்த திசைப்பன மறைகளும் யாவு
மின்ற வாசசெல நோக்கினும பழிவரு மெமக்கு
நின்று மீளுதி யெனறன னெடுமலாக கிழவ
னன்று வெண்சிறை யன்னமற றயற்கிது சொல்லும

(இ - ள்.) என்று வேதங்களும் ...ற்றுள்ள எல்லா நூல்களும விரிதது விரித்துச்சொல்லுகின்றன. இப்போது அவர்கள் படுந்துன்பத்தைப்பார்த்தோ மானாலும் நமக்கும் பாதகம சித்திக்கும், ஆதலால இங்கு நின்று ம திரும்பிவிடுக வென்று சிறந்த செந்தாமரைமலர்ப்பீடத்தையுடைய பிரமன சொல்லினன அப்போது வெள்ளிய சிறகுகளையுடைய அன்னம பிரமனுக்கு இப்படிச் சொல்லுகின்றது. எ - று. (கஅசு)

கொழுந்து விட்டெரி வடவையங் கொழுந்தழ னடுவ
ணொழுந்த வச்சிர நெடுந்தறிக் கரம்பிணித் திறுக்க
வழுங்கு மெய்துடித் தரற்றின னொருவனிங் கிவனு
லொழுங்க றப்படு பாதக மிதுவென வுரைப்பாய.

(இ - ள்.) கொழுந்துவிட்டெரிகின்ற கொழுவிய வடவாமுகாக்கினியின் இடையிலே விளங்கிய நீண்ட வச்சிரத்தம்பத்திலே, ஒருவன் தன் கைகளைச் சேர்த்துக்கட்ட வருத்தப்படுகின்ற உடல துடிததுப்புலம்பினன. இங்குள்ள இவனாலே நீதியற்றதாகச்செய்த பாதகம் இதுவென்று கூறவேண்டும். எ-று.

எனப்பு கன்றிடு மோதிமத் ததிருற நோக்கி
யுனக்கு ரைக்குது மீங்கிவன றன்மையென றுரைப்பான
புனற்ப டுஞ்சவு ராட்டர நாட்டகம பொருந்தி
மனக்கு வப்பன புரிவது சவுரமா நகரம.

(இ - ள) என்று சொல்லுகின்ற அன்னத்தை நோக்கப்பார்த்துப் பிரமன இவன் தன்மையை உனக்குச்சொல்லுகின்றேனென்று சொல்லுகின்றான. நீர்வளம்பொருந்திய சவுராஷ்டிரநாட்டில பொருந்தி மனத்திற்குப்பிரிய முள்ளனவற்றைச்செய்வது சிறந்த சவுரநகரம. எ - று. (கஅஅ)

அந்த மாநகா பரதவா கோத்திரத் தமைந்தான்
சிந்தை நலலொழுக குணாந்துறச செலுத்திய செலவன்
விந்தை பூசனை யுவப்பினு லிருநிதி மிகையா
லுந்து சிந்தையன சுத்தனென றொருபெய ருடையான

(இ - ள.) அந்தச்சிறந்த சவுரநகரத்திலேயுள்ள வைசியாகுலத்திற் பிறந்த வனும், மனமானது நன்மார்க்கத்தைத் தெளியும்படி செலுத்திய செந்நெறி யுடையவனும் [விந்தை] காளிகாதேவியைப்பூசைசெய்த களிப்பினாலே பெருஞ் செல்வப்பெருக்கிலே செலுத்திய கருத்துடையவனுமாகிய சுத்தனென்னும பெயர்பெற்றவனொருவனிருந்தான். எ - று (கஅகூ)

தரும நீதியன் றயவினுற் றுயினு முரிய
னொருவ ருந்தனித் தொழிறபடுத் தொருவனைப் படுத்தான்
றுருவு நாள்பல கழிந்தபின் றெடுகட லேறிப
பொருவ ருங்குல வாணிபத் தொருநெறி போனன்.

(இ - ள்) தருமநீதியுடையவனும், கிருபையில் அன்னையினுஞ் சிறந்தவனு மாகிய அவன், ஒழிவில்லாத மிக்க கொடூரமான வேலையைக்கொடுத்து ஒருவ னைக்கொன்றான். கழிந்துகொண்டிருக்கும் பல தினங்கள் கழிந்தபின்பு, (சகரரால்) தோண்டப்பட்ட கடலில் மரக்கலமிவர்ந்து, ஒப்பற்ற தங்கள் குலவியற்கையாகிய வாத்தகத்திற்காக ஒருவழியாகப்போனான். எ - று. (கக0)

ஓட்டு வெண்டிரை நெடுங்கட னடுவகத் துற்றான்
மூட்டு தீவினை யிருந்தவ முழுக்கெழும் புயலா
னீட்டு மாருத மலைபுற நெடுங்கலங் கவிழ்ந்து
மாட்டி ருந்திரை யெடுத்தெடுத் தெறிதர மருண்டான்.

(இ - ள்.) பாய்கின்ற வெள்ளிய அலைகளையுடைய நெடிய கடலினிடையே போயினன், அப்பொழுது அதிகரித்த கொலைபாதகமிருந்து, அவ்விடத்திலே கர்ச்சிக்கின்ற மேகத்தினாலே, விசேடித்த சுழல்காற்றுவீச அவன் ஏறிச்சென்ற மரக்கலமானது கவிழ்ந்து, பாய்கின்ற பெரிய அலைகள் மரக்கலத்தைத் தூக்கித் தூக்கியெறிந்ததால் மயங்கினான் எ - று (ககக)

கருங்க டற்கலங் கவிழ்தர வெருவருங் காலை
முருங்கு முத்தலைச் சூற்படைக் கொற்றவை முன்னி
வருந்து றுவழி யக்கல னவனொடும் வருத்தித்
திருந்து சிந்தையன் போயின னிதியொடுஞ் சிறந்தான்.

(இ - ள்.) கரியகடலில் மரக்கலங்கவிழப் பயமெய்தியிருக்குந்தருணத்தில் பகைவர்களை யழிக்கத்தக்க, முத்தலைச்சூலப்படைதாங்கிய காளிகாதேவி திருவுளங்கொண்டு, அவன் வருத்தமெய்தாதவகையாக அம்மரக்கலத்தை அவனோடு கரையில் வருவிக்க, தெளிந்தமனமுடையவனாய்ச்சென்று செல்வப் பெருக்கத்தோடு வாழ்ந்திருந்தான். எ - று. (ககஉ)

வகுத்த வங்கமு மேறிய மாக்களும் வங்கந்
தொகுத்த பல்பொருள் யாவையுந் தோமறக் கிடைத்தான்
பகுத்த சூற்படைக் கவுரியாற் பயந்தன னென்னு
நெகிழ்த்த சிந்தையா னெடுநிலந் தொழுதுற நின்றான்.

(இ - ள்.) நியமனஞ்செய்துகொண்ட மரக்கலமும், அதிலேறிய மாந்தர் களும், அம்மரக்கலத்தில் ஏற்றியிருந்த பலவகைச்சரக்குகள் யாவும், பழுதறக் கிடைக்கப்பெற்றான். முத்தலையாகப் பிரிந்த சூலப்படைதாங்கிய காளிகை யினாற் காப்பாற்றப்பெற்றனென்று, உருகிய மனதோடு நெடிய நிலவுலகத்தார் பலரும் பணியும்படியிருந்தான். எ - று. (ககங)

ஆய காலையி னன்னவன் கடிமனை யகத்துத்
தூய மங்கல மணவினை யயாதரத் தொடுத்தான்
வாயில் காவணம் வகுத்தனன் வேண்டுவ வருத்தி
மேய போனக மமைத்தனன் குலத்துளோர் வியப்ப.

(இ - ள்.) அக்காலத்தில் அவனுடைய காவல்பொருந்திய வீட்டில், புனித மான மங்கலகரமாகிய திருமணச்சடங்கு நடத்தும்படி தொடங்கினான் வாசற்படியிலே பந்தரிட்டு, அத்திருமணத்திற்கு வேண்டியவற்றை வருவித்து தங்கள் குலத்திலுள்ளவர்கள் யாவரும் அதிசயமெய்தும்படி பொருத்தமான போஜனம் சமைப்பித்தான். எ - று. (ககச)

தூரி யம்பல முழங்குறச சுரிமுக மிரங்க
லூரி யாவரு மிடைந்திற நான்மறை யொழுங்கான்
மூரி வேதியர் வரன்முறை மொழிதர முயன்று
பூரி கோடியின் மேற்செல மணவினை புரிநதான்.

(இ - ள.) பலவித வாததியங்களொலிககவும், (சுரிமுகம்=சுரிநதமுகததை யுடையது) சஙகஙகள் முழஙகவும், அநநகரத்திலுள்ளவர்கள யாவரும் சேர்ந திருககவும், நானகு வேதஙகளின் முறைப்படி பெரியோாகளாகிய வேதியாகள் கிரமமாக விவாகச்சடங்குகளைச்சொல்லிககொணடுவர, அப்படியே செயது முடிதது, கோடிககு அதிகப்பட்ட அநதணாகட்குப பூரிகொடுததுத திருமண முடிததான். எ - று (ககூகூ)

பாடு மின்குரல வயிரியா கண்ணுளாா பரதத
தாடு கோகிலக குதலையா பூகத ரடைநதா
ரேட விழ்நதல ரிதழியஞ சடைமுடி யெமமா
னீடு மாலயத தாதியா யாவரு நிறைநதாா.

(இ - ள) பாடுகினற இனிய குரலோசையையுடைய பாணாகளும் நாடகர் களும், பரதநூனமுறைபபடி நடனஞசெயயும குயிலபோலுஙகுதலைச்சொல்லை யுடைய கணிகை மாதாகளும், புகழ்நதுபாடுகின்றவாகளும, அததிருமணததிற்கு வநதிருநதாாகள் இதழகள விரிநது மலாகினற கொனறைமலாமாலைதரிதத அழகிய சடைமுடியையுடைய எமது சிவபெருமானுககுரிய திருககோயில உருததிர கணிகையாகளும நிறைநதிருநதாாகள எ - று. (ககூசு)

செலல நின்றவாக கினியன வடிசிலுஞ சிறபபு
மலல லோஙகுறப புரிநதனன மணவினை முறறு
மெலலை நாடசவு ரேசசுரத தாதியெம பெருமான
புலல முததிரை பொருதத வட களிததனன புநதி.

(இ - ள.) சென்றிருநதோா யாவாககும இனிமையான போசனமும வரிசைகளும வளபபம அதிகமுறச்செயதனன. திருமணச்சடஙகு முடிகினற கடைசிநாளில, சவுரேசசுவரனெனனும அவவாலயததில எழுநதருளியுளள எமது சிவபெருமானுடைய இடபமுததிரை போடபபடடிருககும தாசியினமீது அவன மனதைச்செலுததினன. எ - று (ககூஎ)

அளவ றுநதன மளிததன னுஙகவட கயாநது
புளக வெமமுலைத துயின்றனன வெளளிடைப புகுதா
னிளகு நெஞசினன் விடுததில னவளையா துணாநதாா
தளவ வாணகை யிடததினே னாலயத தவாகள.

(இ - ள.) அளவிறநத செல்வததை அவளுககாக மனமுருகிக்கொடுத தான். விம்மிதமெய்தி விருப்பநதரததகக அவள தனஙகளில் துயின்றனன. அவள்பால் மனமுருகிய அவன வெளியேவராது அவளை நீஙகாதிருநதான். முல்லையருமபுபோல் ஒளிதங்கிய தநதஙகளையுடைய உமாபிராட்டியாரை வாமபாகததிலுடைய சிவபெருமான் திருவாலயத்தினாகள் இச்செய்தியை யுணர்ந்தார்கள், எ - று. (ககூஅ)

ஆவி னேற்றினே னுலயப் பரிகலத் தவளை
வாவு சிந்தையின் மனையகத் திருத்தி தல் வழக்கோ
மேவு மன்னவள் வெளிவர விடுத்தியென் றிசைத்தார்
பாவி யன்னளை விடுத்தில னுசையுட படலால்.

(இ - ள) இடபவாகனமுடைய சிவபெருமான் திருக்கோயிற்றாசியை இச்சித்த மனதோடு உன் வீட்டில வைத்துக்கொணடிருப்பது தருமமோ? உன் பால வந்திருக்கும் அத்தாசியை (உன வீட்டிற்கு) வெளியே வருமாறு விட்டு விடுவாயாகவெனச் சொனனாகள. அப்போது அவளமேல் வைத்த ஆசைக குத்தான உட்பட்டிருப்பதால, பாவியாகிய அவன அவளை விடவிலலை. எ - று.

அலஙகு பொனமுடி யரசனுக குரைத்தன ரரசன
வலங்கொ டேரா லமைசசனை வரவழைத்த தருளி
நலந்த ருஞசவு ரேசசுரத தாதியை நயபபான
விலங்கு சிநதையன விடுத்திலன போலுமோா வினைஞன.

(இ - ள) பிரகாசிக்கினற பொனமுடியணிந்துள்ள அரசனுக்கிதனைத தெரிவித்தாாகள அதுகேட்ட மனனவன் உடனே வலலமையுள்ள தூதா களால மந்திரியை வருவித்து யாவருக்கும நனமையைச்செயகினற சவுரேச்சுவர மெனனுந்திருக்கோயிற்றேவதாசியை ஆசையினலே, நன்மாாக்கத்தினின்று நீங்கிய சித்தமுடைய ஒரு பாவிதனியே விடவிலலை. எ - று. (௨௦௦)

நீய வடபுகுந தக்குலத தாதியை நிமலன
கோயி லுடபட விடுத்தனை வருகெனக குணியா
வேய வேநதனைத தொழுதன னமைசசனு மெழுநது
போய வறகுனாத் திருத்தன னுஙகவள பொருட்டான

(இ - ள.) நீயஙகேபோய அததேவதாசியைச் சிவாலயமெய் துமபடி விட்டு விட்டு வருவாயாகவெனக கடடளைதந்தான. அக்கட்டளையைககேடட மந்திரி யும் அதனைககவனித்து நனமைதஙகிய மனனவனை வணஙகிப்புறபபட்டுப்போய, அவ்வுருத்திரகணிகையைககுறிதது அவவைசியனுக்கு மன்னவன கடடளையை யுணாததி அதடடினன. எ - று. (௨௦௧)

அரச னுறறிய கடனமுறை யுணாநதுசொல லமைசசைப
பரவி வேண்டிய பசுமபொனுற றனவசப படுத்தான
விரசி மீண்டன னமைசசனு மாநதி விருப்பா
லுரவு வேநதனுக கருஞசின மாறறிநின றுரைததான.

(இ - ள்.) அரசன்கொடுத்த கட்டளையை யுணாநதுகொணடு தனபாற கூறும மநதிரியை வணஙகி, அவனுக்குவேணடிய செலவஙகளைககொடுதது தன் வசஞ்செயதுகொணடான. பெருமபொருள வேட்கையால அம்மநதிரி யும் திருமபிநெருஙகி, வலிதஙகிய அமமனனவனுக்கு நிகழ்நத கடுஙகோபத தைததணிதது நோகின்று இபபடிச்சொலலுகினறுன் எ - று (௨௦௨)

அற்ற நோக்கினின் றளிபபவ னிருநிலத தெவாக்கும்
பெறற தாயினு முரியனிப பெருமபிழை பொறுத்தான்
மறறு ரைப்பதென் கோடியின மேற்செல வழங்கு
மிற்றை யின்றுகொண் டொழிதியென் றமைசசனு மிரநதான்.

(இ - ள்.) (அவ்வைசியன்) சமயம்பார்த்து யாவர்க்கும் உதவத்தக்கவன். பெரிய உலகினர்க்கெல்லாம் பெற்றதாயைப்பார்க்கிலும் உரிமைவாய்ந்தவன். அவன் செய்துவிட்ட இப்பெருங் குற்றத்தை மன்னித்துவிட்டால் நான் வேறு சொல்லவேண்டிய தென்னவிருக்கிறது? இன்று இப்பொழுதே கோடிப்பொன்னாகும் அதிகமாகக்கொடுப்பான். பெற்றுக்கொண்டு கோபந்தவிர்ப்பீராக வென்று மந்திரியாசித்தான். எ - று. (௨௦௩)

எதிர மைச்சனை யழலெழ வெகுண்டன னிறைவ
னிதிவி ருப்பினா லுரைத்தனை நிலாப்புனை வேணிக்
கதிர்ம ழுப்படை யெம்பிரான் றிருவருள் கறுப்பி
னதிர கட்டுடை யந்தகன் படுப்பதொன் றறியாய்.

(இ - ள்) நேர்நின்று மந்திரியை மன்னவன் தீப்பொறிபறக்கப் பார்த்துக் கோபித்து நீ பொருள்வேட்கையால் இப்படிக்கூறினை. சந்திரனையணிந்தசடைமுடியும் ஒளிவீசும்மழுவாயுதமுமுடைய எமதுசிவபெருமான்திருவருள்கோபிக்குமாயின், அதிரச்சியோடு கூடிவருகின்ற எருமைக்கடாவாகனமுள்ள இயமன் செய்யும்வேதனையொன்றையும் நீயறிந்தாயில்லை. எ - று. (௨௦௪)

போதி யீசன தாலயப் பணிவிடை புரியுந்
தாதி யின்றொடு விடுக்குதி யெனுமுறை சாற்று
நீதி நோக்குடன் விடுக்கினன் றல்லது நிகழ்த்திற்
பாத கத்தனவ் வணிகனைக் கொணர்கெனப் பணித்தான்.

(இ - ள்.) நீ மீண்டும் செல்க சிவாலயபணிவிடைசெய்யுந்தேவதாசியை இன்றேவிட்டுவிடக் கடவாயென்றும் நமது கட்டளையைச் சொல்லுக. இந்நீதிக்கிசைந்து உடனே விட்டுவிட்டால் நன்று. அதற்குமாறாகக் கூறுவானாயின், அதிபாதகனாகிய அவ்வைசியனை ஈண்டழைத்துவருகவெனக் கட்டளையிட்டான்.

மொழிந்த தொன்றுமுற் றுணர்ந்தில னமைச்சனு முறைமை
கழிந்த மாநிதி விருப்பினா லாங்கது கருதாப்
பொழிந்த மாமணிக் கனைகழற் புரவலன் பொருமா
வெழுந்த சீற்றமிக் கெழுந்தனன் வணிகனில் விடுத்து.

(இ - ள்.) அம்மந்திரியும் மன்னவன் கூறியவற்றில் ஒன்றையும் நீதியற்ற பெரும்பொருள் விருப்பத்தால் தெரிந்துகொள்ளவில்லை. சிறந்த நவரத்தினங்களிழைத்துச் சப்திக்கின்ற வீரகண்டாமணி தரித்த அம்மன்னவன் இதனைக் கருதி, விசேடித்துத்தோன்றிய கோபமிகுந்து அவ்வைசியன் வீட்டிற்குப்போயினன். எ - று. (௨௦௬)

உருத்த சீற்றமிக் குருவுகொண் டனையவற் கொருங்கே
பெருத்த சேனையும் பிறக்குற வணிகனிற் புகுந்து
மருத்த வார்குழற் றாதியை வம்மென வருத்தி
யருத்தி யீசன தாலயம் புகுந்துற வளித்தான்.

(இ - ள்.) கடுங்கோபம் மிகுந்து ஒருருவெடுத்தாற்போன்ற அம்மன்னனுக்குத்துணையாக, ஒன்றுகூடித்திரண்ட சேனைகளும் பிற்படச் செல்லும்படி அவ்வைசியன் வீட்டினுட்புகுந்து, மணமுடைத்தாகி நீண்டகூந்தலையுடைய அத்தேவதாசியை வருகவென்று வரவழைத்து, ஆனந்தநடனம் புரியும்சிவபெருமான் திருக்கோயிலையடையும்படி கொடுத்தான். எ - று. (௨௦௭)

பின்ன ரன்னவன் சிலதியர் யாரையும் பிறையூர்
பொன்னின் வார்சடை யெம்பிராற் காக்கிய புனித
னின்ன செய்திரு வமைச்சனை யுயிரொழித் திகழா
மன்னு நாய்களை வாளெறிந் தாருயிர் மடித்தான்.

(இ - ள்.) அதன்பின்னர், அவ்வைசியனுடைய தோழிகள் யாவரையும் பிறைச்சந்திரன் தவழும் பொன்போலும் நீண்ட சடையையுடைய எமது சிவபெருமானுக்குரித்தாக்கிய புனிதனாகிய அம்மன்னவன், இப்படிச்செய்யாதமந்திரியை உயிர்போக்கி இகழ்ச்சிசெய்திருந்த அவ்வைசியனை வாளால்வீசி உயிர்போக்கினான். எ - று. (உ௦அ)

அனைய ரீங்கிவர் வசசிர மதலையுற் றழுஙகக்
கனைகொ ழுந்தழ லாங்கவர் மெய்யுறக கழிந்த
நனைநி ணததுளி நெய்யினு லெழுவன நம்பற
கினைய செய்குநர் படுவன கொடுநர கிப்பால்.

(இ - ள்.) அப்பாதகஞ் செயதவாகளா மிவர்கள். வச்சிரத்தூணைத் தழுவி வருந்த, சத்திக்கின்ற தீச்சுடர் அவாகளை உடலிலதாகக, அவ்வுடல்களினின் றொழுகிய குளிர்ச்சிதஙகிய நிணததினறுளிகளாகிய நெயயினால் அகனியானது மீண்டும் ஓஙகிவளாகின்றது. சிவபெருமானுககு இததகையபாவஙகள்செய்தவர்கள் அநுபவிககின்ற கொரமாகிய நரகஙகள் தாம் இப்பக்கலிலுள்ளன.

என்ற னத்தொடு நிகழ்த்தினன் கமலவீட் டிறைவ
னன்று ணாநதுள மேவாதிம மசசமுற் றனுஙகி
நின்று மீண்டது நெடுமலாப பீடிகை நிமலன்
சென்று தன்னுடைப பதவிவீற றிருநதகனு சிறநதான்.

(இ - ள்.) என்று, கமலாசனனாகிய பிரமதேவன் தன்வாகனமாகிய அன்னத்துடன் சொல்லினன். அப்பொழுது இவற்றையுணர்நதுகொண்ட அன்னம் பயமெய்திவருநதி, அஙகுநின்றுந திருமபியது. சிறநததாமரைமலர்ப்பீடத்தையுடைய பிரமன் அஙகிருநதுபோயத தனது சததியலோக பதவியில் மனமகிழ்ந்து வீற்றிருநதனன். எ - று. (உக௦)

என்ப யாவையுஞ் சூதமா முனியெடுத தியம்ப
வன்பி னோர்ந்தறி முனிவா ரதிசய மடைநதாா
முன்பு முபபுர மெரித்தவன் முறைபிற ழாது
நன்ப கற்கழி தரசசெல வரிதென நவின்றாா.

(இ - ள்.) என்று சொல்லப்படுவனவாகிய சரிதஙகளையெல்லாம் சூதமகா முனிவர் எடுத்துத திருவாயமலாநதருளவும, அன்புடன் ஆலோசித்தறிநதுகொணட நைமிசாரணிய முனிவாகளா ஆச்சரியமுற்றவர்களாய, பூர்வத்தில் முப்புரஙகளை யெரித்தருளிய சிவபெருமான் திருவாய்மலாநதவேத சிவாகமஙகளின் முறைமைகளில் மாறுபடாது நல்லகாலமாகக கழியும்படி யொழுகுதல் அரிதாகுமெனச் சொன்னார்கள். எ - று. (உகக)

அளவை யீதுகொண் டமைந்ததோ வவமதித் தனராய்ப்
பிளவி லெம்பிறைக் கண்ணியோற் பேணல ராகி
யுளநி கழ்ந்துள விகழ்ச்சியா லொழிவறு நிரையத்
திளகு றுதொழில் பததரை யிசைப்பன கேண்மின்.

(இ - ள்.) இவ்வளவினாலே முடிந்ததோ? பிளவுபட்ட இளம்பிறைச் சந்திரனை மாலையாகவணிந்த சிவபெருமானை அவமதிப்புடையவர்களாய்ப் பூசியாதவர்களாய், தாங்கள் மனதிற்கொண்டிருந்த அலட்சியத்தினால் அவியாத நரகத்தில் மீளாமலிருக்கின்றபாதகர்களைச்சொல்லுகின்றோம். நீங்கள்கேட்பீர்களாக.

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

பகரு மெண்வகை யோகமுந் தனித்தனிப் பயின்றியல் சிவயோகி
புகலு மாகம நடந்தரு நாவினன் புண்ணியப் பொருப்பன்னா
னிகலு முக்குறும் பெறிதரு சதானந்த னெனும்பெயர்ச சிறப்புற்றோ
னகில மோர்பதி னன்கினு மொல்லைசென் றறிநதொரு கணததெய்தும்.

(இ - ள்.) சொல்லுகின்ற (இயமம் நியமம ஆதனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதியென்னும்) அஷ்டாங்கயோகஙகளையும் தனித்தனிசெய்துதேர்நத சிவயோகியும, சிவபெருமான் திருவாயமலாநத சிவாகமஙகளையோதியுணாநத நாவையுடையவரும், புணணியமலைபோன்றவருமாகிய, பகைக்கின்ற முக்குறறஙகளையுநகடநத சதாநநதரென்னுஞ் சிறநத பெயர்பெற்றவர் உலகஙகள்பதினான்கும அதிவிரைவாயச்சென்று பாாததுக்கொண்டு ஒருக்ஷணநேரததில் திருமபுவா. எ - று. (௨௧௩)

வையம யாவையு மொலலைசென் றகனில மன்பதைப் பரப்பெல்லாஞ்
செய்த யாவையு மன்னாசெங் கோன்முறை யாவையுநதெரிநதீண்டப
பைத ரும்பணி வேணியோன் சநநிதிப பகர்நதரும் படந்தாங்கப்
பெய்த மாநிலக் கண்ணுற விண்ணுறப பெயாந்தன னொருகாலம்.

(இ - ள்.) உலகஙகளெல்லாவற்றிலும் விரைவாய்ச்சென்று, இடமகன்ற உலகிலுள்ள ஆன்மாககளெலலாம் புரிநதசெயலகளெலலாவற்றையும், ஆஙகாஙகுளள மன்னர்கள செலுததுஞ்செஙகோன் முறைகளமுழுவதையும் உணர்ந்துகொணடுவருமபடி, படததோடுகூடிய பாமபையணிநத சடையையுடைய சிவபெருமான சநநிதியில விணணபபஞ்செயதுகொணடு, ஆதிசேடனுடைய சிறந்த பணமுடிதாஙகிய பெரிய பூலோகததைககாணும்படி ஒருகாலததில் ஆகாயவீதியிற் சென்றனா. எ - று. (௨௧௪)

மேரு மால்வரை சூழ்வரு முலகெலாம் விண்படர்ந் தெழுந்துற்றான்
சார்வ ருநதனித தென்றிசை யடைநதன னததிசைத தனிநாதன்
வாரக முறறிற லநதக னெதிாநதனன் யோகியை வழிபட்டான
பேரொ ளிபபுனை யாசனத திருத்தினன செயவன பலபேணி.

(இ - ள்.) பெரிய மேருமலையைச் சூழநதுள்ள உலகஙகளெல்லாவற்றிற்கும் ஆகாயவழியாயச்சென்று சோநதான். ஏனையோரால அடைதற்கரிய ஒப்பற்ற இயமபுரததிற் புகுநதபோது, அநநகரிலுளள ஒப்பற்ற தலைவனாகிய நெடிய வீரக்கழ லணிநதவலலமையுடைய இயமன் அச்சிவயோகியை யெதிர்கொண்டர்ச்சித்து, செய்யவேணடிய உபசாரஙகளெலலாவற்றையுஞ்செய்து, மிக்க பிரகாசமுடைய ஓராதனததில் வீற்றிருககச் செயதனன். எ - று. (௨௧௫)

மயிலை யோர்புடை யமைத்தரு ளெமபிரான் வளரொளிப் பழங்காலக்
கயிலை நீததிவ ணடைநதனை யானசெயக கடவதித தவமன்றே
யெயிலெ ரித்தவற் காட்படு மவர்பெறும பேறுபெற றனனென்று
வயிலெ யிற்படை யநதக னுரைத்தலு மருநதவ னுரைசெய்வான்.

(இ - ள்.) மயிலின்சாயலையுடைய உமாபிராட்டியாரை ஒருபாகத்தில் மாத்திய எமது சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் மிக்க ஒளியுடைத்தாய்ப் பழமையாகிய திருக்கைலாயகிரியை நீங்கி ஈண்டெழுந்தருளினீர். அடியேன் செய்யத்தக்கது இத்தவமல்லவா? மும்மதில்களை யெரித்தருளிய சிவபெருமானுக்கு அடிமைபூண்டவர்கள் பெறத்தக்க பேற்றையெய்தினேனென்று, கூறிய வேலேந்திய இயமன்சொல்லவும், அருந்தவஞ்செய்த சதாநந்தர் சொல்லுகின்றனர். எ - று. (உகசு)

உலகம் யாவையு மொலலைசென் றடைந்தன முன்னுடைத் தென்பால்வந், தலகி னிணிமை யப்பரப பறிகுவா னடைந்தன மறபோற்றுப், புலையா நீங்குறு நரகெலாங காட்டுதி யெனறலும பொறிகாலுங், கொலைசெய முத்தலைச் சூறபடை யாந்தகன றொழுதுடன கொடுபோனன.

(இ - ள்.) உலகங்களெல்லாவற்றிலும் விரைவிற்சென்று திரும்பினோம். உன்னுடைய இயமபுரத்திற்குவந்து எண்ணிறந்த பெருநரகங்களின பேதங்களை யுணர்ந்துகொள்ளும்படிவந்தோம். சிவபெருமானைவணங்காத நீசர்களபடுந்திருக்கும்கெடுதிதங்கிய நரகங்களெல்லாவற்றையுங் காட்டுகவெனககூறவும், தீப்பொறிகளைச்சிந்தத்தக்கது கொலைத்தொழில் செய்தற்குரியதுமான மூவிலை வடிவாயமைந்த சூலப்படைதாங்கிய இயமன பணிந்து தனனோடு அழைத்துப் போயினன. எ - று (உகஎ)

கூசு வெந்தழ லொழுகுறக் காசசிய கொடுநுனை யுடககிட்ட
வூசி யெங்கணு நிரைத்தி னேட்டலு முளளுடல புதைந்தூன்ற
வாசை யெங்கணு மழுகுர லலைப்புற வலறுவா ரவாபுனறோன [டார.
மூசு வெந்தழல வெதுப்பிய குறட்டொடும பிடுங்குவா முனிந்திட்

(இ - ள்.) கண்டோர் விழிகள் கூசத்தக்க வெவ்விய அக்கினியெழும்பக் காச்சி விளைவாகிய கூர்மையும உள்ளேதிருகலும அமைத்த ஊசிகளையெங்குங் கோத்து அதைக்கொண்டு உடலிலழுத்தியவுடனே, அவ்வூசிகள உடலினுட் புகுந்து தைக்கவும், திசைகளிலெல்லாம் அழுகுரலோசை முழங்க அழுங்கினர்கள். கோபமெய்திய இயமகிங்கரர்கள அவர்களுடலின மீதேயிலை மிக்க கொடுமையாகிய அக்கினியிற்காச்சிய குறட்டினற பிடுங்குவார்கள். எ - று.

ஒழுகு சோரியொத் துருக்கிய செம்பினிட டமுக்குவ ருடறபுன் றோன, முழுகி வெந்துற வெடிப்பது வெண்ணிணங கொதிப்பது மூளைசசே, றிழுகு வெண்ணெயொத் துருகுவ திவைபொறு தெழுதொறு மிவைநோக்கிக், கழுநு னைப்படை கோத்தெடுத் தழுக்குவா கண்மணி வெடித்தோட.

(இ - ள்) சொரிகின்ற உதிரப்போன்ற நிறமுடையதாயுருக்கிய செம்புக்குழம்பிற்போட்டு அழுத்துவார்கள். அப்பொழுது அவர்கள உடலிலுள்ளபுன்மையாகியதோலமுழுவதும் வெந்துவெடிக்கின்றது. வெள்ளிய நிணங்களகொதிக்கின்றது. மூளைகள்சேறுகி வழுவழுப்பாகிய வெண்ணெய்போல உருகுகின்றது. இவ்வேதனைசகியாது எழுந்திருக்கும்போதெல்லாம இதனைப்பார்த்துக்கொண்டிருந்து கழுமரத்தில் செருகுகின்றகூர்மைதங்கிய ஆயுதத்தினலே குத்தியெடுத்து, கண்ணினுள்ளேயிருக்கும் மணிகளுடைதெறித்தோடும்படி யழுத்துவார்கள்,

இறுககு பாசமிட் டிருமருங் கமைத்தனர் கிடத்திநெட் டீர்வாளிட்
டறுபபா செநதழ லொழுகுறக காசசிய சலாகைகொண் டவாநாசி
நிறுப்ப ரன்னவர் செவித்தொளை சுறுக்கொள நிறுத்துவர் நெடுங்கூடம்
பொறுப்பர் மறறவர் கவுட்புற நெரிதரப புடைபபர்தென் புலத்தூதர்.

(இ - ள்.) இருபுறங்களிலும் டாசத்தால் இறுகக்கட்டிக் கீழேகிடததி, பெரிய ஈர்வாளினுலறுப்பார்கள். சிவநத தீபபொறிசிநதுடபடி காச்சிய இருபபுச்சலாகைகளை அவாகள் நாசிததொளைகளிலும் நுழைடபார்கள. அப்படியே அவாகள் இருசெவித தொளைகளிலும் சுறீலென்றுபறறுமபடி செருகுவாாகள. பெரியசம்மட்டியை யெடுததுககொணடு அவாகளுடைய இருகனனஙகளும் நெரிபடுமபடியடிப்பாாகள. எ - று. (உஉ0)

கருவி யூழமுறை பறபல நிரைததுதிற கிடத்தியக் கருவிக்கூ
ருருவி யோடநீ டுரததிடைக கூடமிட டோசசுவா புலநதோறுங்
குருதி பாவிடக கதைமடுத திறுசகுவா கொழுநதழற பிழமபேநதிப்
பருக வாயமடுத துறககுவா பருகுறா நாபபிடுங குவாபலகால்.

(இ - ள.) வரிசைபபடி ஆயுதஙகளை யெணணிறநதன வாகநட்டு, அவற்றினமேலேகிடததி, அவவாயுதககூடு அவாகளுடலிற பாயநதுருகுமபடி மாாப்புறததில் சம்மடடிகொணடடிபபாாகள. ஐமபுலஙகளினவழியே உதிரவெள்ளம ஊறறெடுககுமபடி கதாயுததுதைச்செலுததிச் செலுததிக குததுவாாகள, செவ்விய அககினிப பிழமபினையெடுதது வாயநிறையவுணணுமபடி யதட்டுவாாகள். அபபடிப பலமுறை யுணணுதவாகளுடைய நாவைபபறிததெறிவாாகள.

ஒல்லை மாநிலந் துயிாசெருக துணடவா வருதிரென் றுருததனரோ
பலனு நாவுமவெந தருகிவெம புகையெழுக காசசிய தழறபாளஞ
செலல வாயமடுத திருஙகதை யோசசுவா செலுததுவா மணிபபாச
மலலன் மாககளத திறுககுவா தழறபர லூரிஞசுற வலிததீாபபாா.

(இ - ள.) பெரியபூமியில பலவுயிாகளையும கொனறுதினறவாகளே! அதிவிரைவில வருகவெனறு அழைதது அதடடி அவாகள பலலும நாவும வெநது கரைநது தீபபுகையெழுமபடி, தீயிறகாச்சிய இருபபுப் பாளஙகளைவாயிற்செல்லபபாயசசிப, பெரியகதாயுததால தளளுவாாகள. பெரிய மணிககயிற்றை அவாகள கழுததிற பிடிததிறுககி, அககழுததில வெவவிய பருககைககறகள உறுததுமபடி கெட்டியாயிழுபபாாகள. எ - று. (உஉஉ)

என்பு தோறசை நரமபிவை தெரிவுறு திருநதழ லிருபபுசசெக
கனபி லாருட லரைபடத திருககுவா பிறாமனை யகவிபபோம
புலபு லைபபடு பாநகா நெஞசொடு புயதநுணை புகைமண்ட
வலபொ றிததிழும் அலாகந தழுவுறப பிணிககுவா மணிபபாதம்.

(இ - ள.) எலுமபு தோல் தசை நரமபு ஆகியவிவைபுறநதோனறாது சிவகாருணிய மிலலாத அவர்களுடல் அரைபடுமபடி பெருநதீயிற்காய்நதிருக்கும் இருபபுச்செககிலிட்டாட்டுவார்கள. பிறாமணையயழைததுக்கலநத இழிநதபுலைததனமையுடைய பாவிகளை, நெஞசிலும இருதோளிலும் புகையெழும்படி, கொடிய தீப்பொறிபறககும் அககினித தம்பததைததழுவும்படி மணிககயிறுகளால இறுககிககட்டுவார்கள். எ - று. (உஉங)

குருக்க ளந்தணர் மேலவர்க் காண்குறி னெழுதாராக் கொடியோரை
யிருப்பு வெந்தக டழலெழக் காசசிமீ திருத்துவ ரெளியோரை
வெருக்கொ ளெய்புரி படிறரை யடுசின வெள்ளெயிற் றிரும்பாந்த
ளுருத்து யிர்ப்பெறி நெடுநதொலைப் பிலத்திடை வீழ்த்துவருறுக்குற்று

(இ - ள்.) ஆசிரியர் அந்தணர் பெரியோராகிய இவர்களைக்கண்டால் எழுந்திராத துஷ்டர்களை, பெரிய இருப்புத்தகட்டைத்தீயிற் பழுக்கக்காய்ச்சி அதன் மேலுட்காரவைப்பார்கள், ஏழைகளைப்பயப்படும்படி செய்த தூர்த்தர்களைகொல்லத்தக்க கோபமுடைய வெள்ளிய பற்கள்பொருந்திய பெரியமலைப்பாம்பு கரேமாய்ச்சீறிகொண்டிருக்கின்ற மிகக ஆழநதாகிய பிலத்திலே அதட்டிக் கொணடு சென்று அமிழ்த்துவார்களா. எ - று. (௨௨௪)

ஆற லைததரும் பொருள்கவா பதகரை யருநதசை யெயிறான்றக்
கூறு செய்து ஒனுங் கழுதுறு நாகிடைக் குபபுறப பிடருநதிச
சீறி யொன்றொடொன் றிகலியன னவாபுலா றின்பன தெரிகிற்பா
ரேறெ ரித்தலைக் கழுநுனைக கிடததுவ ரெரியெழ விழிககினறுர்.

(இ - ள்) வழிமறிததுபபொருளை யபகரிககும் பாவிகளை, உடலிலுள்ளகொழுநதசைகளில் பறகளழுநதபபகிர்நதெடுததுபபுசிககும பசாசஙகள நிறைநத நாகததில் கழுதைதப்பிடிததுததளளி, அப்பசாசஙகள் ஒன்ரேறொனறு கோபித்துப் பகைதது அவாகள மாமிசததைத தினபதைப்பாாப்பார்கள். அககினி யெரிந்து கொணடிருப்பதாகிய கழுமுனையிற் படுககவைப்பாாகள. தீப்பொறி சிநதப்பார்ப்பார்கள. எ - று. (௨௨௫)

குதைக்கொடுஞசிலைப் பகழியிற் கானமாக் கொன்றுதின் றுறுப்பெல்லா
முதைபப வீஙகிய நிணததசை யரிநதரிந திருப்பகல வறுததொண்பற்
புதைக்க வவவுறச சுடசசுடத் தீறறலும வாய்பபுழைப புகைமணடிச
சிதைத்த நாசியின் புறமபுக வுயிாததுயிாத தாற றுவா சிலதீயோா.

(இ - ள் ) வளைநதவிலலினகுதையிற பூட்டிய அம்பினுல், காட்டு மிருகஙகளைக்கொன் றுதின் று, எல்லாவவயவஙகளும பருககுமபடி மிககநிணததோடுகூடிய தசைகளையறுதது இருப்பகலில் வறுதது, ஒளியுளளபற்கள் கிட்டிக்கொள்ளத் தின் னும்படி சுடச்சுட ஊட்டுதலும், அவாகள் வாயின வழியிற்ருேனறும் புகைமிகுநது, வெநதுளள நாசிதொளைகளின் வெளியிலேவர, சிலபாவிகள பெருமூசசெறிநது பெருமூச்செறிநது சகிப்பாாகள். எ- று. (௨௨௬)

மாதி ரஞ்சுழல் புட்குலம் படுப்பவர் மறிதிரை பொருநீர்வாழ்
சாதி தூண்டிலிற் படுபபவ ரணரியிற் சங்கிலி முடக்கேறறி
மீது கற்றறி விட்டமிட் டசைததவர் கீழபபட வெருளிதகீ
யோது நெய்சொரிீ தெழுபடுவ ரவருடம புருகிய நிணஞேசோர.

(இ - ள.) திசைகளிற் சுழலும் பறவைக்கூட்டஙகளைகொல்லுகின்றவர்களும், சுருட்டுகின்ற அலைகள்மோதும் நீரிலவாழ்கின்ற சீவராசிகளைததூணடிலினலே பூர்வத்திறகொன்றவர்களுமாகிய இவாகளை, கிழ்ப்பாகததில், சஙகிலிவளையஙகள் தொஙகவிட்டகற்றூணென்றைநட்டு மேலே உததரம் போட்டு அதன்மேலிருத்தி அவர்களின் கீழே அவாகளுடலிலுளள நிணமுழுதும் உருகிச் சொரிய, ஒலிக்கின்ற கநெதீயை நெயயைச்சொரிநது வளர்ப்பார்கள். எ - று.

செருமு கந்தணித் தருளிய வேநதரைத் தெவ்வடுந் திறனேகி
வெருவி யோடிய பதகரைச சுழலவழி வீஙகிரு ணிரையததுக்

கருவி காதுறச் சுற்றுற விடுத்தனர் கன்றொழித் தினங்கன்றூ
முருவு கள்வரைக் கற்கறை மடக்கியிட் டிடிபடத துவைக்கின்றார்.

(இ - ள்.) யுத்தங்களில் வெற்றிகொண்ட மன்னவர்களைப்பகைவன்கோல் வதாயுள்ள தன்மையைப்பார்த்துப் பயந்தோடிப்போன பாவிகளை, சுழல்வழியை யுடைய இருண்மிகுந்த நரகத்திலே, ஆயுதங்கள் நாற்பக்கலிலும் கொல்லும்படி சுழலவிட்டவர்கள், இராக்காலத்தில் கன்றுகளைவிட்டுப்பசுக்களைத் திருடிய திரு டர்களைக்கல்லுரலில் மடக்கிப்போட்டு அவர்களுடல் நன்றாகத் தூளாம்படி இடிக்கின்றார்கள். எ - று. (உஉஅ)

ஒறுத்த நல்குர வுடற்றுற விரப்பவர்க் குதவிய துதவாது
மறுதத பாதக ரடைக்கலப் பொருள்கவா வஞ்சக ரினையோரைத்
தெறுப்ப தங்குழி திரைநதெழு நரகிடை வீழ்ததலுஞ் சினவாலிற்
சுறுக்கொ ளுநதொறு மோவென வரறுவா துள்ளுவர் துடிப்புற்றார்.

(இ - ள்.) வருததுகின்ற தரிததிரமானது துன்புசெய்வதால், யாசகருக் குககொடுப்பதைக கொடாது தடுதத பாவிகளும், காப்பாற்றிககொடுக்கும்படி வைதத அடைககலப்பொருளை யபகரிதத வஞ்சகாகளுமாகிய இவர்களை, தேள் களமிகுதியாகக கூடிநெருஙகியுள்ள நரகததிற்போட்டவுடனே கோபங்கொ ணடு அவைகொடுககிறுற் கொட்டுமபோதெலலாம் ஓவென று புலம்பித்துள்ளித் துடிககின்றாகள. எ - று. (உஉகூ)

இனையர் யாரையுங் காட்டுற நோககின னிருநதவச சிவயோகி
யனைய துன்புழுந தலமர லுளததடைத திரஙகின னதுநோக்கி
வனைபொ லனகழ லநதக னெனநதைநீ யிதறகிரங கினைவாளா
நினையு நெஞ்சமு நடுக்குறு மிஙகிதற கப்புற நெடுநகும்பி.

(இ - ள்.) இப்பாவிகளெல்லாரையும் இயமன் காட்டிககொண்டுவர, அரு நதவஞ்செய்த சிவயோகிபார்ததனர். அப்படிததுயரடைநது சுழன்றுகொணடுள் ளதைதத தமது மனதிற்கருதிவருநதினார். அழகினையுடைய பொன்னுலாகிய வீர கணடாமணிதரிதத இயமன் அதனைககணடு, எமது தநதையே! தேவரீர இதற் கேவருநதுகின்றீர். இதற்கப்பால் குமபிபாகமென்னும் பெருநரகமுள்ளது அத னைநினைககினறமனமும் நடுஙகும. எ - று. (உகூo)

என்று ரைத்தன னந்தக னுலகெலா மேத்து றுஞ் சிவயோகி
நின்று நோக்கின னீஙகிவண் வருகெனப பின்னரு நிகழ்த்தாமுன்
சென்று நோக்கினன் வடவையங கொடுநதழ னடுவுறத தீகின்று
ரன்ற ரற்றுறப பிளந்தவாய தொறுநதழற் கொழுநதுதித தழல்வாரை.

(இ - ள்.) என்றியமன் சொன்னான். உலகினரெல்லாம் துதிசெய்கின்ற சிவயோகியானவர், அஙகிருநதுபார்த்திககொண்டிருநத இயமன் இங்கேவாரு மென்று மீணடும் கூறுவதன்முன்னா, கொடியவடவாககினியின் நடுவேயிருநது வேகின்றவர்களையும், அப்போது புலம்பிககொணடிருகக அவர்கள் திறநதவாய் களிலெல்லாம் தீககொழுநதெரிநது சுடவேகினறவாகளையுஞ் சென்றுகண் டனர். எ - று. (உகூக)

காரி ருட்பிழம் படைத்தவெம் பிலத்திடைக் கடுங்கண னெடுஞ்சிற்றச்
சாரை வாளரா வென்புட னிறுக்குறச சுறறியத் தறுகண்ணோ [டி
சோரி வாய்மடுத் துறிஞசுவ வானுனை செவிததொளை தொளைதொட்
யீர நாக்கடித் தெயிற்றொடு மிறுககுற வென்பெழ வுயிரபபோரை.

(இ - ள்.) கரிய இருட்டொகுதிசேர்த்த குகையிலே செநதீப்போலககடுங் கோபமுடையவர்களாய், நேராக ஓடும் ஒளியுள்ளபாம்புகள் எலும்பும் இறுகும படி சுற்றிக்கொண்டு, அப்பாவிகளின் உதிரததைவாய்திறநது பருகிக்கொண்டு ள்ளதையும், அவற்றின்வாலின் நுனிகளைச் செவிகளின் தொளைகளைத தொளைத் துக்கொண்டு உள்ளே செலுதத, குளிாநத தஙகள நாவைப்பறகளாற் கடிததுக கொண்டு எலும்பும மேலெழுமபடி நெட்டுயிாப் பெறிகின்றவாகளையும்.

சுரித்த நெட்டுட னொளிகததகா ரட்டையங் குமபியுட் டொலைவின்றி
விரித்த பாழிவாய் விழுங்கவுங் ககககவும பறபல கடிததீாததங்
குரித்த சோரிவாய் மடுககவுந தசைகழிந தொடூககவு முடறகாநதி
யெரிபப வுங்கிடந் தரறறியக குமபியுண முழுகினின றெழுவாரை.

(இ - ள்) சுரிப்புற்ற நெடிய உடலைநெளிததுளளகரிய அட்டைகள நிர ம்பிய நரகததிலே அவை ஓயவினறிததிறநதுகொணடிருககும அகனறவாயினால் விழுஙகவும் மீணடும உமிழவும, மறறுமபலபல அட்டைகள கடிததிழுததுச்சிந தும் உதிரததைவாயகிறையக குடிககவும, தசைகளெலலாஙகழிநது சிநதவும, உடல் வெமமையால எரியவும, அஙகேபுரணடழுது அநநகரததில முழுகிககிட நதெழுகின்றவாகளையும. எ - று.	(உ௬௩)

அடுத்த யோசனை யிர்த்னை யகலமென் றளயபருஞ சலகருமபி
யெடுதத வளளுகிரப பகுததவாய் நெடடுட லிடஙகரி னிடைபபட்டுப்
படுதத காலொடு கைகடித துருநதுறப பதைததவைக காறறூராயக
கடுத்த சிநதையி னெடுதெடுத தமைததுவீழந தேககுறக கழிவாரை.

(இ - ள்.) அதற்குரிய அகலம் இததனை யோசனையென்று அளவிடுதற் கரிதாயுள்ள சலகுமபியெனுமநரகததில, கூரிய நகஙகளையும பிளவுற்ற வாயை யும நெடிய வுடலையுமுடைய முதலைவாயிற சிககி, அவை தஙகள கால்களையுங் கைகளையுங கடிததுததினன, அவற்றிறகுததாளாதவாகளாயத துடிதுடிதது வருநதிய மனதோடு அதிக வுரததுககூவி விழுநது பிரலாபிதது அழுகினறவா களையும். எ - று.	(உ௬௪)

ஓர்கை கீழ்ப்படக் கிடததுவ ரடிச்குறங கோரடி மிதிததூன்றி
வாரி யோகுறங கிசிததுறப பிளநதறை யோசசுவா வகைபபட்ட
பேரு டற்பகை முன்னைய தாதலின பிடிததெடுத தழன்மாட்டிச
சோரி தூங்குறப புரட்டுவ ரின்னண மடாததுறத துயாவாரை.

(இ - ள்.) ஒரு கையைப் பூமியிற பொருநதவைப்பாாகள. அடித தொடையை ஒரு காலால் மிதித்தூனறிககொணடு மற்றொரு தொடையைப் பற்றி இழுததுககிழிததெறிவார்கள். பிளவுபட்ட பெரியவுடல முன்னைப் பாதி யாதலால், அதைப்பிடிததுததீயிலிட்டுககொளுததி உதிரமொழுகுமபடி புரட்டு வாாகள். இப்படி வருததததிககிககினறவாகளையும். எ - று.	(உ௬௫)

வாகு மூலமிட் டிருங்கயி றிறுக்குற வரிந்திறை வரையாத்துச்
சேகு நுண்ணுனை யூசிவெள் ளுகிரிடைச் செலுத்துவர் வடவைச்சூ
டேகு றாதடு மணற்குகை யிறக்குவ ரீங்கிவை பொறுத்தாற்றா
தாகு லத்தொடு மழுதழு தரற்றினின் றலமந் துழல்வாரை.

(இ-ள்.) தோளடியிலே பெரிய கயிற்றைப்பிணித்து இறுகவிழுத்து முதுகிலுள்ள இறக்கையெலும்புகள் வரையிறுகட்டி, சிவக்கக்காய்ச்சிய நுண்ணிய கூரிய ஊசிகளை வெள்ளிய நகங்களிலே குத்துவார்கள். தீயின் வெம்மை தணியாது வெந்துகொண்டிருக்கின்ற மணற்குகையிலிடுவார்கள். இவ்வேதனைகட்குச் சகிக்கமுடியாது பெருந்துயரோடு புலம்பிப்புலம்பிக் கதறிக்கொண்டு சுழல்பவர்களையும். எ-று. (௨௬௬)

நோக்கி ஞானசிவ யோகினின் றவருழக் கிருந்துயர் நுதலிப்பண்
டாக்கு மாநிரை யக்கொடு வெம்மைகண் டறிந்தன னிவைக்கப்பாற்
றுக்க முறப்பெருஞ் சாடிநெய் கொதித்தெழத் தழற்சிகை புகைமண்ட
மேக்கு யாந்தமூக் குயிர்ப்புறா தத்தழ னெய்யிடை மிதக்கின்றார்.

(இ-ள்) அப்பாவிகள் அநுபவிக்கும் பெருந்துயரங்களையும் சிவயோகி அங்கிருந்தே கண்டு ஆலோசித்து, பூர்வத்திற் படைக்கப்பட்டுள்ள பெருநகரங்களின் கொடுமைகளை நன்றாயுணர்ந்தனர். இவற்றிற்கப்புறம், தீயிற் காய்வைத்திருக்கும் பெரிய கொப்பறையில் நெய் கொதித்துக்கொண்டிருக்க, அத்தீக் கொழுந்தின் புகை மேலெழும்ப, மேலே உயர்ந்த நாசித்துவாரங்களில் சுவாசமற்றவர்களாய் அந்தத்தீக்குழம்புபோன்ற நெய்யிலே மிதக்கின்றார்கள். எ-று.

கொதிக்கு நெய்யிடைக் குப்புறக் கிடந்தினருயிர்த்திலர் கொடிதுற்று
மதிக்கி னீங்கிவர் யாவரென் றுணர்ந்திலம் மறலிமற் றுரையென்ன [ர
விதிக்கு மேல்விதி யுணர்த்திய நாயக வெய்துறு மிவரிந்தப்
பதிக்கு முந்தர சறிவருந் தன்மைய ரென்றனன் பணிந்தனனன்.

(இ-ள்) கொதிக்கின்ற நெய்யில் கவிழ்ந்தபடி போட்டுவிட்டார்கள். சுவாசம் விடாதவர்களாய்க்கொடிய வேதனையுற்றார்கள். யோசிக்கையில் இவர்கள் எவ்வகைப்பாவிகளென்றறியோம். ஆதலால், இயமனே! நீ சொல்லுகவெனக்கேட்க, இப்போதுள்ள பிரமனுக்கு முற்பட்ட பிரமனையும் அறிந்துள்ள தலைவரே! வேதனையுறும் இவர்கள் இவ்வியமபுரத்திற்கு எனக்கு முன்னுள்ள அரசனும் அறிதற்கரிய காலவரையறையுடையவர்களென்று கூறி, அந்த இயமன் மறுபடியும் வணங்கி. எ-று. (௨௬௮)

பவத்து ரோகரிற் பாதகர் படுவன மேற்படப் படுகின்றார் [செப்பக்
சிவத்து ரோகரென் றுரைப்பரென் றவர்க்கெதிர் தென்றிசை யவன
கவாத்த வார்சடை யோகிசெங் கரங்கொடு கண்புதைத் தலமந்தா
னுவாத்த வேர்பொடித் துடனடுக் குற்றன னுளத்தொடு மறுகுற்றான்.

(இ-ள்.) பாவஞ்செய்யும் பாவிகள் பலருள்ளும் சிறந்த மகாபாவிகளடையும் வேதனைகளைக்காட்டிலும் விசேஷ வேதனையநுபவிப்பவர்கள் சிவத்துரோகிகளாகுமென்று சொல்லுவார்களென்று, அச்சிவயோகிக்கு இயமன் விடைகொடுக்க, கப்புவிட்டுள்ள நீண்ட சடையையுடைய சிவயோகி தமது சிவந்த கைகளால் கண்களைப்பொத்திக்கொண்டு பயந்தவராய் உடல்வெயர்த்து நடுக்கமெய்தி மனங்கலங்கினர், எ-று. (௨௬௯)

வெறுத்த சிந்தனை யோகியுத் தரதிசை மீண்டனன் றணிச்செங்கோல்
பொறுத்த தென்றிசை நாயகன் பின்னரும் யோகிபொற்பதம்போற்றிச்
செறுத்த பாதக ரிவர்நிலை நான்முகச் செல்வனை வினவுற்றான் [வாய்.
மறுத்து ரைப்பன கேட்குதி யறிவனே யுணர்த்துவன மனங்கொள

(இ - ள்.) வெறுத்த சித்தமுடைய சிவயோகிவடதிசையாகத்திரும்பினார். ஒப்பற்ற செங்கோலையேந்திய தென்திசைக்கிறைவனாகிய இயமன். சிவயோகியின் அழகிய பாதங்களைத்துதிசெய்து, கொடும்பாதகர்களாகிய இவர்கள் தன்மையைக்குறித்து, நான்கு முகங்களையுடைய பிரமதேவனைக்கேட்டால், அதற்கப்பிரமதேவன் விடையிறுப்பதைக்கேட்பீராக. அவருக்குத்தெரிந்திருந்தால் அவர் தெரிவிப்பார். அதனையும் தேவரீரே மனதிற்றெரிந்துகொள்ளலாம்.

**கலிநிலைத்துறை.**

என்றான்மற லிப்பெய ரோனனி நிற்றி யென்றா
னின்றான்மறை யோகிநெ டுநதொளை நீள நாளப்
பொன்றாட்பொகுட டாசன னான்முக னூடு புக்கா
னின்றாரண வெல்லைக டந்தவ னங்கெ திர்ந்தான்.

(இ - ள்.) என்று மறலியென்னும் பெயருடைய இயமன் கூறினன் சிவயோகி நிற்கவென அவன் நின்றனன். வேதமுணர்ந்த சிவயோகி நீண்ட நாளமுடைத்தாய்ப் பொன்போலும் தாள்படைத்த தாமரை யாசனமுடைய பிரமதேவனுடைய சத்தியலோகஞ்சேர்ந்தனர். அப்போது வேதங்களின் முடிவையுணர்ந்த பிரமன் அவரை யெதிர்கொண்டான். எ - று. (உசக)

எய்தப்பெறு மாதவம் யாவரி ழைத்த தென்னச்
செய்தற்குரித் தாகிய யாவையுஞ் செய்த மைத்தான்
மைதக்க ளத்தர னென்னுழை வந்த வாபோன்
மொய்பொற்சடை யோகநெ ருந்தவ முனனி ருயால்.

(இ - ள்) தேவரீர் இங்கெழுந்தருளத்தக்க சிறந்த தவத்தை யாவர் செய்தனரென்று செய்யத்தக்க உபசாரங்களையெல்லாஞ்செய்து முடித்தான். விடம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானே அடியேன் பால எழுந்தருளியதுபோல, நெருங்கிய பொன்போலுஞ் சடையையுடைய சிவயோகம் வல்ல பெருந்தவசியே! தேவரீர் ஈண்டெழுந்தருளினீர். எ - று. (உசஉ)

என்னப்புகழ் நான்முக வந்தண னேத்தி நிற்பத்
துன்னற்சடை யோகிய வற்கெதிர் சொல்வ தானுன்
றென்னற்றிசை யெய்தின மத்திசைத் தீய கும்பி
யின்னற்படு வார்களு ளொருத்துய ரெய்தி னாரா.

(இ - ள்.) என்று பிரமன் சிவயோகியைப்புகழ்ந்து துதிசெய்து நேரே நிற்க, நெருங்கிய சடையையுடைய சிவயோகி பிரமனை நோக்கிக்கூறுகின்றார். சிறந்த இயமபுரத்திற்குச்சென்றோம். அங்ககரிலுள்ள கொடிய கும்பிபாக நரகங்களில் துன்பமடைகின்றவர்களில், சிலர் மிகப்பெருந்துயரடைந்திருக்கிறார்கள்.

அவர்செய்தன வந்தகன் றானும றிந்த தன்றா
லிவர்யாவரி ழைத்தன யாகொலு ரைத்தி யென்றான்
றுவராயிரந் தோடுடைத் தாமரைத் தூய செல்வன்
கவராசனை போகிபு ரைத்தந ருத்த லுந்தான்.

(இ - ள்.) அவர்கள் செய்தபாவங்கள் இயமனும் அறிந்ததல்ல இவர்கள் யாவர்? செய்தபாவங்கள் யாவை? இவற்றைச்சொல்லுவீராகவென வினவினா. செந்நிறமமைந்த ஆயிரம் இதழ்களையுடைய கமலாசனனாகிய பிரமன், கப்புவிட்டு நிறைந்த சடைமுடியையுடைய சிவயோகி யுரைத்ததைக்குறித்துத் தன் மனதிலாலோசித்தனன். எ - று. (உசச)

உள்ளத் தளி யற்றிய யாவுமு ணர்ந்து கண்டா
னெள்ளப்படு பாதகர் தங்கிலை யாது நேரான்
றள்ளற்கரு மாதவ நின்னுழை சாற்றி லன்றே
ரள்ளற்குழிப் பட்டது யானறிந் தல்ல வென்றான்.

(இ - ள்.) மனதினாலேயே தான் விதித்தவற்றையெல்லாம் நினைத்துப் பார்த்தான், யாவரும் பழிக்கத்தக்க பாதகர்கள் தன்மையாதும உணராதவனாய், விலக்கற்கரிய பெருந்தவமுடையவரே! அப்பாவிகள் நரகக்குழியில் வீழ்ந்ததைக் குறித்துத் தேவரீரிடத்திற் கூறுவதற்கு அடியேன் அறிந்தினள் தன்றென்று கூறினன், எ - று. (உசரு)

என்போலியர் யாவர்ப டைத்தவா யாது கால
முன்போனது ணர்ந்திலன கற்பமு டிந்த தொன்றோ
நின்போலியாக் கல்லது தொன்மைநி கழ்த்த லாமே
மின்போற்சடை யாயென வேதனவி ளம்பி விட்டான்.

(இ - ள்.) என்போன்ற பிரமர்களில் யார் எக்காலத்திற்படைத்ததோ? இப்போது முடிந்தது ஒரு கற்பமோ? முன் கடந்த கற்பங்களின் செய்தி அடியேன் அறிந்திலேன். அக்கற்பாந்தங்களின் செய்திகளெல்லாவற்றையும் மின்னல்போலுஞ் சடைமுடியுடையாரே! தேவரீரை யொத்தவர்களல்லது பிறராற்கூறமுடியுமா? என்று பிரமன் சொல்லினன். எ - று. (உசசு)

அக்காலையெ ழுந்தன ணுயிரம வாய்வி ரிக்கும்
பைக்கார்விடப் பாம்பணை மாதவன் பாற்க டற்கே
புக்கானவ னுங்கெதிர் கண்டெதிர் போக லுற்றான
மிக்கானெதிர வெய்தினி னெய்தினன் வேத யோகி.

(இ - ள்.) அப்போது அச்சிவயோகி அங்குநின்றும் எழுந்தருளி ஆயிரம் வாய்கள் பொருந்திய பணாமுடியைத்தாங்கிக் கரிய விடந்தங்கிய சேஷ சயனத்திற்றுயிலும் திருமால் வீற்றிருக்கும் க்ஷீராப்தியை யடைந்தனா. அங்கே அச்சிவயோகியைக்கண்ட மாத்திரமே திருமால் எதிர்கொண்டனா. வேதங்களை யுணர்ந்த சிவயோகியார் அவருக்கு நேரே விரைவிலடைந்தனா. எ - று. ()

யோகற்குவப் புற்றன யாவுமு வந்து செய்தான
வேகத்தனி யோகியு முள்ளமவி யப்ப நின்று
ஞேகைப்பட வென்னுழை வந்தது ரைத்தி யென்று
ணுகத்தணை யோன்சிவ யோகிந விற்று வானால்.

(இ - ள்.) சேஷசாயியாகிய திருமால் சிவயோகி மகிழத்தக்க உபசாரங்களையெல்லாம் சந்தோஷித்துச்செய்தனா. அதிதீவிரபக்குவமுடைய சிவயோகியாரும் மனமகிழ்ந்திருந்தனர். அப்போது திருமால் தேவரீர்களிக்கும்படி இங்கெழுந்தருளிய காரணத்தைக்கூறியருளவேண்டுமென்றனர். சிவயோகியார் கூறுகின்றார், எ - று. (உசஅ)

தென்றிக்கினி ரும்பட ரெயதிய தீமை யாளர்
பொன்றப்படு தீமைவி ளைவுலும பூநது பூாயோ
ஞென்றுற்றுணர்ந் தோாநதன னுள்ளமற ருென்று மெய்தான்
சென்றிற்றது சிந்தனை யுந்தெரு மந்து நின்றுன்.

(இ - ள்.) இயமபுரியிலே கொடுந்துன்பெய்திய பாவிகள் இப்படி அழிதற்குக்காரணமாகச்செய்த பாதகம் யாதென்று கேட்கவும், அழகிய துளசிமாலை தரித்த திருமால், மனதை ஒருவழிப்படுத்தி ஆலோசித்துப்பார்த்தனர். மனதிலொன்றுந்தோன்றுமல் எண்ணங்களெல்லாம் அழிந்து மயங்கியிருந்தனர்.

என்னுலறி யப்படு பாதக ரல்ல ரின்னோர்
முன்னுள்கழிந தாாகளென் போலியா ழற்றி யிறநோ
ரன்னோரறி வார்கொல நிநதில மைய செய்ய
பொன்னாசடை மாதவ வென்றுபு கன்று விட்டான்.

(இ-ள்.) இவர்கள் என்னுல் உணரப்பட்ட பாதகாகளல்லா. அடியேனைப் போன்று பூர்வத்தில் இப்பதவியையாணடு நாளகழிததிறநதவாகள் அறிவார்களோ அறியாாகளோ? அதை யானறியேன. அழகிய செமபொனபோலும் நிறந தஙகிய சடைமுடி தரிததவரே! எனறு திருமால கூறினா. எ - று. (உ௯௦)

பாலாழிய ராவணை துஞசிய பசசை மாயோற்
கேலாதன வுறறுணாந தேகியெ வாகரு மெடடா
நாலாரண வெலலை கடநதுறை நமப னம்பொற
சேலாவிழி பஙக னிருநதுழிச சென்று புககால்.

(இ - ள்.) திருப்பாற்கடலில அராவணையில் யோகநித்திரைசெய்யும் கரிய திருமாலுக்கு, அறிதற்கரியதாயிருப்பதை ஆலோசித்துணாநது அங்கிருநது நீஙகி, யாவராலும அளவிடற்குமுடியாத சதுாவேதஙகளின முடிவையுங கடநதுள்ள பெருமானுகிய, பேரழகுடைய சேலபோலும் விழியுடைய பாாப்பதி பாகர் எழுநதருளிய கைலாயகிரிக்குப்போய்ச் சோநதனர். எ - று. (உ௯க)

இமையககிரி யெய்தரு மாதவத தெய்தி நின்ற
வுமைபககமு மககணி தோளுமு ருதத நஞச
மமையத்தரு கண்டமு நெற்றிய லாநத கண்ணுங்
குமையபபடு வேணிவ யங்கும திகொ ழுந்தும்.

(இ - ள்.) இமயமலையானது பெறுதற்கரிய பெருநதவத்தாலடைநது தோன்றிய பாாவதிபாகமும் எலுமபுமாலைகளணிநத திருததோளகளும், அசசமவிளைதத ஆலகாலம்பொருந்திய கணடமும, நெறறியில விளஙகும நேததிரமும துவளப்படுஞ்சடையில் விளஙகும் பிறைச்சநதிரனும், எ - று. (உ௯உ),

கண்டானெதிர் கண்டுக ளிநதுக ளிநத சிநதை
விண்டானரு ளெநதைப ரிநதருள வெள்ள வாரி
யுண்டானுடை ந தாடினன் பாடின னுள்ள நெக்கான்
பண்டாரண வெலலைக டநதப தமப ணிநதான்.

(இ - ள்) கண்களின் நேரே தரிசிததுககளிவெய்தி மனககவலை நீககினர், இருபாசமுததிரமாகிய எமது பெருமானுடைய திருவருள் வெள்ளப்பெருககை யுட்கொண்டனர். உடனே ஆனநதககூததாடிப்பாடி மனமுருகினா. பழமையாகிய வேதங்களின் அளவிற்கு மேம்பட்ட திருவடிகளை வணஙகினர். எ - று.

எங்குற றனை யெய்திய தென்னைகொ லெனவொரு ரேழை
பஙகுறறவ னேதலும பாவாகி டநத தெனபா
லஙகுற்றனன மாநிரை யபபரப பாய வெலலானு
செங்கட்டிற லநதகன் காட்டினன் சென்று கண்டேன்.

(இ - ள்.) எங்குவநதனை? வநத காரணமயாது? என, ஒப்பற்ற பார்வதி பாகராகிய சிவபெருமான் வினவவும், பாவிகளிருககின்ற இயமபுரத்திறகுப் போயினேன. பெரிய நரகஙகளின் பேதஙகளையெல்லாம, சிவநத விழிகளை யுடைய வல்லமைமிகுநத இயமன காட்டினன. அவறறையெல்லாஞ்சென்று கணடேன. எ - று. (உ௫௬)

அதெதென்புலத தாழ்நிரை யததில ழுநது வோரின்
முததன்சிவ பாதக முறறமு டிதது நினறா
ததுண்டிப டுநதுயா கணடுந ரிககி லாமை
யிததன்மையா யாரெனக கூறறுமற றீதி சைநதான்.

(இ - ள்.) அநத எமபுரததிலுளள ஆழநத நரகஙகளில அழிநதுபட்டவாக ளெல்லாரிலும, சிவபெருமானுககேலாத சிவததுரோகஙகள முழுதுஞ் செய துளளவாகள தலைகீழாகவீழநது அநுபவிககும வேதனைகளைககணடு மனநதாளா மல இவாகள யாரெனககேட்க, இயமன இபபடிச்சொலலினன. எ - று. ()

யானேவறி கின்றிலன யாணிவ ணெய்து முன்ன
ரானுநிரை யததி லழுநதுகின றாக ளெனறுன
றேனாகம லததவற கேடபுழிச செய்கை முறறிப்
போனுனமுகற குநதெரி யாதவா புனமை யெனறான்.

(இ - ள்.) யானே அறியேனயான் இப்பதவிககு வருவதனமுன்னரே சகிகக வியலாத நரகததில அழுநதிககிடககின்றாாகளென்றுன. தேனபொருநதிய தாமரைமலாபபீடததையுடைய பிரமதேவனைககேட்டபோது முனனிருநத பிரமனுககும அப்பாவிகளின பாவம இனனதெனததெரியாதென றுசொனனுன

பையாயிரந தாங்கிய பாம்பணைப் பளளி யானு
மையாதன துளள மளநதறி யாமை சொறறுன
மையாகளத தெநதையன் னோபுரி வனக ணெனறும
பெயயாவொருங கேயுணாத தெனறடி பேணி நினறான.

(இ - ள்.) ஐயனே! ஆயிரம பணமுடிகளையுடைய ஆதிசேஷனாகிய சயனத் தில் துயில்புரியுமதிருமாலும தன மனதில ஆலோசிததறிநது தெரியாதென று சொல்லினா. விஷநதஙகிய கணடததையுடைய எநதையே! அபபாவிகளசெய்த பாவஙகள் ஒன்றையும விடாமல் முறறும் உணாததவேணடுமென று பாதஙகளைப் பணிநது நினறனா. எ - று. (உ௫எ)

வெளளேறுயாத தோன்சிவ யோகிவி ளமபு மாற்ற
முள்ளாவுணாந தோாதனி நநதியு ரைததி யெனன
வெள்ளாமறை யோகிவி ளுயதி யாது முளளங
கொளளாவுண ராவெடுத் தோதவ ரங்கொடுததான்.

(இ - ள்.) வெள்ளிய இடபகொடியையுடைய சிவபெருமான், அச் சிவயோகி சொல்லிய வார்த்தைகளைத் திருவுளங்கொண்டு, ஒப்பற்ற நந்தி! அதனை நீ சொல்லக்கடவாயென்று, இகழப்படாத வேதங்களையுணர்ந்த அச் சிவயோகி கேட்டவற்றையெல்லாம் அவர் திருவுளத்திற்கொண்டறிந்து விரிவாகச்சொல்லும்படி வரம்பாலித்தனர். எ - று, (உருஅ)

அதுகாலையி னந்தி யருந்தவ யோகி யோடும்
விதுவார்சடை யெந்தைபி ரான்விடை பெற்ற கன்றுன்
புதுமாமணிக் கோபுர மாளிகை கொண்டு புக்கான்
பதுமாசன மண்டபத் தன்பு பகர்ந்தி ருந்தான்.

(இ - ள்.) அப்பொழுது, திருநந்திதேவர், அருந்தவஞ்செய்த சிவயோகியாரோடு, சந்திரசேகரராகிய எமது சிவபெருமானபால் விடைகொண்டு அங்கு நின்றும் விலகி, புதுமையாயுள்ள சிறந்த இரத்தினங்கள் பொருந்திய முதற் கோபுரவாயிலிலுள்ள திருமாளிகையில் அழைத்துக்கொண்டுபோய், அங்குள்ள மண்டபத்திலே அச்சிவயோகிக்கு அன்புள்ள வார்த்தைகளைச்சொல்லிப் பதுமாசனமிட்டு வீற்றிருந்தனர். எ - று. (உருகூ)

அவ்வெல்லை யரும்பவிழ் குல்லை யலங்க லோனுஞ்
செவ்வேரி நறுவிரி தாமரைச் செல்வ னோடு
மெவ்வேலையு மெண்ணுறு மன்பின னாகி நன்னீர்
தவ்வாவிரைச் சென்னி பதந்தொழ வந்து சார்ந்தான்.

(இ - ள்.) அச்சமயத்தில் அரும்புகள் விரியுந் துளசிமாலைதரித்த திருமாலும் மணந்தங்கிய செந்தேன் நிரம்பிய தாமரை மலர்ப்பீடத்தையுடைய பிரமனோடு, சதாகாலமும் தியானிக்கின்ற அன்புடையவனாய், கங்காசலம் நீங்காமல் ஒலித்துக்கொண்டிருக்கும் திருமுடியையுடைய சிவபெருமான் பாதங்களை வணங்கும்படி வந்து சேர்ந்தனர். எ - று. (உகூ0)

வெள்ளைக்கயி லைக்கிரி வாயிலின் மேவி நின்றார்
வள்ளற்றிற னந்தியைக் காண்கிலா வாயி லுற்றார்
தள்ளற்கரு மாதவ யோகியுந் தானு மாகக்
வுள்ளத்தி லுவப்பொடும் வேறிடத் துய்த்தி ருந்தார்.

(இ - ள்.) வெண்ணிறந்தங்கிய திருக்கைலாயகிரியின் முதற்கோபுரவாயிலில் வந்து நின்றார்கள். வள்ளற்றன்மையுடைய திருநந்திதேவரை அங்கே காணாதவர்களாய் அக்கோபுரவாயிலினுள்ளே போனார்கள். அங்கு வேறோரிடத்தில் நீக்குதற்கரிய பெருந்தவஞ்செய்துள்ள சிவயோகியாரும் தாமுமாகத் திருவுள்ளக்களிப்புடன் வீற்றிருக்கின்றார். எ - று. (உகூக)

என்றன்னவ ரோதிய சொற்கொ டெழுந்து போகிக்
குன்றன்ன நிரைத்தெழு மாளிகைக் கோயில் புக்கா
ரன்றன்னவ ரெய்தியி ருந்துழி யன்பி னுற்றார்
வன்றிண்புய நந்தியை யன்பின் வழுத்தி னூரால்.

(இ - ள்.) என்று, அங்குள்ள சிவகணங்கள் கூறிய வார்த்தையைக்கேட்டுக்கொண்டு அங்கு நின்றுஞ்சென்று, மலைகள்போலும் வரிசையாயமைந்துள்ள மாளிகைகளையுடைய திருக்கோயிலினுள்ளே பிரவேசித்து, சிவயோகியாரும்

திருநந்திதேவரும் வீற்றிருந்த இடத்திற்கு அன்புடனடைந்து, மிகுவல்லபமுற்ற தோள்களையுடைய திருநந்திதேவரை உண்மைப்பக்தியோடு தோத்திரஞ் செய்தார்கள். எ - று. (உசுஉ)

செந்தாமரை மேலுறை மங்கை சிறந்த மாயற்
கந்தாமரை மேலுறை நான்முகற் கன்பு கூரப்
பிந்தாவருண் மாதவ யோகியிற் பேணல் செய்யா
நந்தாவரு ணந்தி யிருப்பிட நல்கி னானால்.

(இ - ள்.) சிவந்த தாமரைமலரின்மேல் வசிக்கும் திருமகளை மார்பிலுடைய சிறந்த திருமாலுக்கும், அழகிய தாமரைமலர்ப்பீடத்தையுடைய பிரமதேவனுக்கும் அன்புமிகுந்து, அதன்பின் அருமபெருந்தவஞ்செய்த சிவயோகியரை விரும்பி, திருவருள்குன்றாத திருநந்திதேவர் அவர்கட்கு ஆசனங்களளித்தனர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

புலக்கவேண் டுறுமக் காதை யிதுவெனப் புகலி னும்பால்
விலக்கற விரும்பி மற்றும் விளக்குதும் வினுதி யென்னு
நலத்தகை நந்தி கேட்பச் சதாநந்த னவைதீர் யோகி
யுலப்பறு தவத்தி னின்றே னிகழ்ந்தவை யுரைப்ப தானான்.

(இ - ள்.) நாம் தெரிவிக்கவேண்டிய சிறந்த சரித்திரம் இதுவென்று சொன்னால், உம்மிடத்தில் தவறாது விருப்பத்தோடு அச்சரிதையை விளக்குவோம். ஆதலால் கேட்பீராகவெனக்கூறுகின்ற நன்மைமிக்க நந்தியெம்பெருமான் கேட்கும்படி குற்றமற்ற அளவிறந்த தபோமார்க்கத்தி லொழுகியவராகிய சதானந்தரென்னும் சிவயோகியார் நடந்தவற்றைக் கூறலாயினர். எ - று.

பைக்கடும் பாந்த ளேந்து முலகெலாம் படர்ந்து மற்றைத்
தெக்கண நிரயங் காண்பான் சென்றனன் சிகரத் திண்டோண்
மிக்குயர் தருமச் செங்கோல் வேந்தனுற் றெதிர்ந்தா னன்னோன்
றொக்குறு நிரய மெல்லா முடன்கொடு தொகுத்துச் சொன்னான்.

(இ - ள்.) கொடிய ஆதிசேடன் பணமுடியிற் சுமக்கின்ற உலகங்களெல்லாவற்றிலுஞ்சென்று, அதன்பின்னர், இயமபுரத்திலுள்ள நரகங்களெல்லாவற்றையும் பார்க்கும்படி சென்றனன். மலைச்சிகரங்களைப்போன்ற வலிய தோள்களையும் மேலாகிய தருமநெறியிற் செலுத்துஞ் செங்கோலையுமுடைய இயமன் எதிர்கொண்டுவந்தனன். அவன் என்னைத்தன்னோடழைத்துச்சென்று, கூட்டமாயுள்ள நரகங்களையெல்லாந் தொகுப்பாகக்கூறினன். எ - று. (உசுரு)

அன்னவ னோடும் பாவர் படுவன வமைய நோக்கித்
தென்னிலை நிரய முற்றுங் கண்டனன் றீமை யாளர்
புன்னிலை நிரயத் தாழ்ந்து படுவன புகலி னம்மா
வென்னுளந் துணுக்க மெய்து மியாதென வுரைக்கற் பால.

(இ - ள்.) அந்த இயமனோடும் பாவிகள் படும் வேதனைகள் முழுவதும் பார்த்து இயமபுரியிலுள்ள எல்லா நரகங்களையுங்கண்டேன். அப்பாவிகள் பலவேறான நரகங்களில் விழுந்து அநுபவிப்பனவாகிய வேதனைகளைச்சொன்னால், அம்மா! என் மனம் நடுங்குகின்றது. அவை என்னவென்று சொல்லத்தக்கன? எ - று. (உசுசு)

ஆயுவா தமமின் மற்ரே ரருநர கடைநத பாவத்
தீயரைச செமபி ஞறறுங கடாரததி னெய்யிற் சேர்த்திக்
காயெரி நெய்யிற காசசிக கொதியெழ மிதபபக் கண்ணுற்
றேயவா மறலி யேனும வெருககொளு மிடரி னுறறா.

(இ - ள்) அப்பாதகர்களிலே, வேறொரு பெரிய நரகததிலே வீழ்நத பாவிகளை, செப்பினுறசெய்த கடாரததிலுளள நெய்யிலிட்டு, எரிநதுகொண டிருக்கும் அககினியில நெயயைக கொதிககும்படி காயச்சி, அதில அவாகள மிதநதுகொணடிருககக கணணுற்கணடேன். இயமனே யானுலும் அச்சமுறத தகக துன்புற்றிருககினறாாகள. எ - று. (உகஎ)

காய்சசிய சலாகை கண்ணி ஞசெயிற் காதிற காநதப்
பாய்சசினா மயிாககா ரேறுமப னனுனே யூசி மாட்டி
மீசசெலா துறபபுத தோறும வெவவிருப பாபபு மிடடா
ராசசிய வனலிற குபபுற றுஙகவா கிடபப தாஞா.

(இ-ள்.) காயச்சிய இருப்புசசலாகையைக கணகளிலும நாசிததொளைகளிலும் செவிகளிலும வேகுமபடி செருததினறாாகள. மயிாககாலகளிலெலலாம கூரிய பல ஊசிகளைககுததி, அவை மேலவராதபடி அவயவஙகடோறும கடினமாகிய இருபபாப்புமடிததாாகள நெய கொதிககினற நெருப்பில அவா கள கவிழநது கிடப்பதாஞாகள. எ - று. (உகஅ)

ஈஙகிவா யாாகொ லென்ன வெமமனோக கறிய வொண்ணுத்
தீஙகுள ரவாக ளெனறு னிவனுறை திசைமு கததோன
வீஙகுநீ ருலகக காவ லிவனெடும வினவ வினனோ
யாஙஙன மறிவ தெமமா லறிவதற கெளிய வனறே.

(இ - ள.) இபபாவிகள யாரெனககேடக, எமமைப போனறவாளுககு அறிதற்கேலாத பாவிகளாவாாகளெனறுன இஙகேவநதிருககிற பிரமதேவனையும் கடல சூழ்நத நிலவுலகததைக காககினற விஷ்ணுமூாததியாகிய இவரையும கேட்டகாலததில, இவாகளிருவரும இவவிடயம எபபடி யறிவது? இது எஙகளால அறிதறகெளிதானதனறு. எ - று (உகக)

என்றெடுத தியபபி விடடா னீஙகிவா தீமை யோர்வான்
பொனறழை யிதழி யூதத புரிசடைப புனிதற போறறி
நினறன னிகழ்ததி யெனஞ நிகழததின னினனை யெனறு
னனறவ னுரைபபக கேடட நநதிமுற றறைவ தானுன.

(இ - ள.) எனறெடுததுச் சொலலிவிடடனா. இப்பாவிகள செயத பாவஙகளையுணாநது கொளளுமபடி, பொனபோலும இதழகளமைநத சிவபெருமானைததுதிசெயது நின்றேன. தேவரீரை நோககி நீ சொலகவெனககட்டளை தநதாரெனககூறினா. அபபொழுது சிவயோகியாா சொல்லககேட்ட திருநநதி தேவர் மூழுதுந திருவாயமலாநதருளலாயினா. எ - று. (உஎ0)

மெலியவ ரெளிமை நோக்கி வேததூன் மரபி னின்று
வலிகெழு தறுகட பாவ மறததுறை யகறறி வாழவோன்
கலிகெழு கடலக் தானைக் கனைகழல விசுவ சேன
னொலிபுன லுடுதத ஞசி விதாபபநாட் டொருசெங் கோலான்.

(இ - ள்.) ஒலிக்கின்ற நீரமயமான அகழிசூழ்ந்த மதிலையுடைய விதாப்ப நாட்டையரசாண்ட ஒப்பற்ற செங்கோலையுடையவனுகிய சத்திக்கின்ற கடலபோன்ற சேனையையும் வீரகண்டாமணியையுமுடைய விசுவசேனனென்னும் மன்னவன், ஏழைகளின் வறுமையைக்கண்டு உபகாரஞ்செய்து வேதசாஸ்திரங்களின் ஒழுக்கத்திலிருந்து, வலிமை மிக்க அஞ்சாமையாற் செய்வதாகிய பாவத்திற்குரிய கொடுமைத்தன்மை நீங்கி வாழ்கின்றவன். எ - று. (உஎக)

ஆங்கவ னகன்று வேட்டத் தெழுந்தன னருவிக் குன்றப்
பாங்கடை வனம்புக் கேகிப் பலவிலங் கொறுத்து மீண்டா
னோங்கருஞ் சுரத்து முன்னி வேடைகொண் டுயங்க லுற்றான்
றேங்குநீர்ச் சடிலத் தோனசித் தேசசுரஞ் சென்று வீழ்ந்தான்.

(இ - ள்.) அம்மன்னவன் தன் நகரைவிட்டுப் புறப்பட்டு வேட்டைக்குச் சென்று அருவியாறொழுகும் மலைச்சாரலிலுள்ள காட்டிற்புகுந்து திரிந்து பல மிருகங்களைக் கொன்று திரும்பினன். திரும்பும்போது மிக்ககொடுமைதங்கிய பாலைவன மெய்தி, தாகமுற்றுச் சோர்ந்திருந்து தேகங்கெடுக்குங் கங்கைசூடிய சிவபெருமான வீற்றிருந்தருளும் சித்தீச்சுவரமென்னுந் திருக்கோயிலிற்போய் [illegible] (உஎஉ)

வீழ்ந்தது று வேந்தா வேந்தன் மெல்லடி வருடி நீவத்
தாழ்ந்துறு கருத்த னாகிக் கிடத்தலுந் தானைச் செலவர்
போழ்ந்துறு மனத்த ராகி வருந்தினா புலம்பு கொண்டார்
சூழ்ந்தன ருடம்பு நீவித் திமிர்ந்துறத் தொடங்கு கின்றார்.

(இ - ள்) அப்படிவிழுந்த இராசராசனுகிய அவனது மெல்லிய பாதத்தைப் பிடித்துத் தடவிக்கொண்டிருக்க, உணர்வற்றிருந்தவனுகி யிருத்தலும் சேனாபதிகள் கண்டு வருந்திய மனமுடையவராய் வருந்தித் துக்கப்பட்டார்கள். பின்னர் அம்மன்னவனைச் சூழ்ந்துகொண்டு உடலிற்பரிச வுணர்ச்சியுண்டாகும்படி தடவித் தேய்க்கத்தொடங்கினார்கள். எ - று. (உஎங)

முருகினை கனியு மறறை யெண்ணையு நாட முன்னி [ருர்
யொருவருங் கொணர்ந்தா ரல்லா செய்வதொன றுணரா ரின்
செருகிய சடில வேணி சினகரத் தகவை சென்று
றொருதனித் தகளி யெண்ணெ யக்கனி யுடன்கொண் டுற்றார்.

(இ - ள்.) சிறந்த எலுமிச்சம் பழமும் நல்லெண்ணெயுந் தேட நினைத்து ஒருவருங் கொண்டுவரவில்லை. யாவரும் செய்வகையொன்று மறியாதிருந்தார்கள். பிறகு முடிந்து செருகியுள்ள சடைமுடி பொருந்திய சிவபெருமான திருக்கோயிலுட் சென்று, ஒப்பற்ற ஓரகலிலிருந்த எண்ணெயை எலுமிச்சம் பழத்துடன் கொண்டுவந்தார்கள் எ - று. (உஎச)

உடைத்தனா முருகி னெண்கா யரசன திடலந் தீற்றித்
துடைத்தன ரெண்ணெய தொட்டுத் திமிர்ந்தன ரதனைக் கோட்டு
விடைக்கொடி யுயர்த்தோன் கோயில் பரிக்குநா வேந்தற் கீது
கடைப்பட வுரைத்தா ரொன்றுங் கேட்டிலன் கழற்கால் வேந்தன்.

(இ - ள்.) சிறந்த எலுமிச்சம் பழத்தையுடைத்து உடலிற் றேய்த்துத் துடைத்துவிட்டு எண்ணெயைத் தொட்டுத் தேய்த்தார்கள். அப்படிச்செய்ததை இடபக்கொடியையுடைய சிவபிரான் திருக்கோயிற் காவலர்கள் கேட்டு, அந்நகர மன்னனுக்கு இச்செய்தியை விளங்கச்சொன்னார்கள். வீரக்கழல்தரித்த அம்மன்னவன் அவ்வார்த்தைகளொன்றையுங் கவனிக்கவில்லை, எ - று, (உஎரு)

ஆயது கழிநத பின்னர் நாள்பல வகறறி யன்னோன்
பாய்திரை யுலகக கோன்மை பரித்துயி ரிறந்த ஞான்று
காய்சின மறலி தூதர் கடுகினர் கழுததிட் டீர்த்த
பாசவெங் கயிற்றாற் பறறிச சென்றனர் பதகன் றன்னை.

(இ - ள்.) அது நடந்தபின்னர், அம்மன்னவன் அலைகள் பாயுங் கடல் சூழ்ந்த உலகத்தை யரசாளும் செங்கோலைததாங்கிப் பலநாள்கழித்து உயிர நீங்கியபோது, கடுங்கோபமுடைய இயமதூதாகள் அதிவிரைவில்வநது கழுத திற்போட்டிழுத்த கொடிய பாசக்கயிற்றால அப்பாவியைப் பற்றிககொண்டு சென்றார்கள். எ - று. (உஎச)

கோடியோர் நாலே ழாய கும்பியுட் கிடத்திப் பின்னர்
வீடிலாத தவததோ யிநத வெந்துய ருழகக விட்டார
நாடியக் காலத திட்ட தூதரு நமனும போனார்
நீடிய கற்பங் கோடி கழிநதன காலம் நீததும்.

(இ - ள்.) இருபதடுதெட்டுக கோடி நரகங்களிலும் அமிழ்ததித துன்பு செய்தபின்னர், இககொடிய வேதனை நுகர்விடுததார்கள. காலங்கள சென்று இப்போதைககு விசேடிதத காலவளவை யுடையதாகிய கோடி கறபஙகளாய் விட்டன. அழியாத தவமுடையோரே! இவன பாவததைக கணககிட்டு அக காலத்தில் நரகததிற்சேரதத தூதிவாகளும் இயமனும மாறிவிட்டார்கள.எ-று.

பல்லுயி ருலகத தோடு படைததுறு பதுமத தோனு
மெல்லொளி பரபபு நேமி யீரநதுழா யலஙக லோனுஞ
செல்லுறு காலத தோடுஞ சென்றன ரளவை யறறார
சொல்லுவ தெங்ங னாழி தொலைநதன சொலலற பாறறோ.

(இ - ள்.) பல சீவராசிகளையும் அவைவசிககும உலகஙகளோடு படைக் கின்ற பிரமனும, சூரியனபோலக காநதிவீசுஞ சககராயுதமேநதிய குளிாநத துளசிமாலை தரிதத விஷ்ணுவும அவரவாகட்குரிய காலநியதியினபடி கணககில லாதவாகள் இறநதார்கள. அவாகள தொகையைக கூறுவதெப்படி? கற்பஙகள பல கழிநதவற்றைச் சொலலமுடியுமோ? எ - று. (உஎரு)

ஈங்கிவன் பகலி னீரே ழிநதிர ரிறபபா செய்ய
தேங்கமழ் கமலச செலவா சென்றன ரிலகக மற்றோ
ராங்கவ ரிறந்த தெனனு லளபபரி தைய வெனறுன
பூங்கழ லலஙக னநதி முடிததிலன புகலவ தானான.

(இ - ள்) இவன் இநத நரகிலவிழுநத காலமுதல் அறுபத்து மூன்று இந திரர் மாண்டாாகள். செநதேன் மணங்கமழும தாமரைமலாப் பீடததையுடைய பிரமாகள் எண்ணிறநதவாகள இறநதாாகள. இபபடி இறநதவாகள தொகை யை என்னால் அளவுபடுததிச் சொலலமுடியாதெனறு அழகிய வீரகண்டாமணி யையும் மாலையுமணிநத திருநநதிதேவா, சரிததிரததை முடிககாமல் மேலுஞ் சொல்லுவாராயினா, எ - று. (உஎசு)

வேந்தனோ டுழவாத் துன்ப முழப்புற வெய்ய வெநதீக்
காந்துற செய்பிற றோயவா ரனனவா கேளீா கண்ணுற
றாயநதவா புன்மைத தொன்மை யறிகுவ தரறக லானு
மோய்ந்தவர்க குரைக்கலாமே யென்றன னுணர்வு மிக்கான்.

(இ - ள்) அடையமுடியாத துயரத்தில் அவ்வரசனோடு வருந்தும்படி கொடிய பெருந்தீப்பற்ற நெய்க்கொப்பரையில் மிதப்பவர்களாகிய அவர்களைப் பற்றிக் கேட்பீராக. அப்பாவிகள் வேதனையைப் பார்த்து ஆலோசித்து அவர்கள் வேதனையின் பழமையை யறிந்துரைப்பது சிவபெருமானுக்குத்தான் இயலுமன்றி, மற்றவர்களுக்குக் காலவளவைக் கணக்கிட்டுச் சொல்லலாகுமோ? என்று அறிவிற்சிறந்த திருநந்திதேவர் திருவாய்மலர்ந்தருளினர். எ-று.

அறிந்தன னனைத்துங் கேட்டா னருந்தவ யோகி யங்கம்
பொறிந்தெழு மயிர்க்கால பொங்கப் பொருமினன் புகல்வ தானுன்
பிறிந்தவாக் கருகா யுற்ற பெருந்துயர் நரகி னுற்றார்
மறிந்தவர் படுவ சொல்லின் மனந்துளக் குறுவ தென்றான்.

(இ - ள்) அருந்தவஞ்செய்த சிவயோகியார் இவற்றையெல்லாங் கேட்டறிந்து, உடல்முழுதும் படிந்த மயிர்க்காலதோறும் வியர்வரும்பத் துக்கித்துக் கூறுகின்றார். வேறுபட்டு அப்பாவிகட் கருகேயுள்ள விசேட துன்பமுடைய நரகத்தில் வீழ்ந்திருப்பவர்கள், அந்நரகத்தில மாறிமாறிப் படுகின்றனவற்றைக் கூறப்புகின் மனநடுக்குமென்று கூறினார். எ - று. (உ௮௪)

உருக்கிய செம்பொ னேநதி யொன்பது தொளையும் வாக்கிக்
கருக்கிய பொதிந்த வாக்கைப் புனறசை கருவி நாட்டி
யிருத்துவ ரரிவ ரீர்வ ரினனவீ திழைப்ப ரின்னோர்
பெருக்கிய பாவ மீதென றுணர்த்துதி பெரியோ யென்றான்.

(இ - ள்) செம்பை யுருக்கி யெடுத்துக்கொண்டு நவத்துவாரங்களிலும் ஒழுக்கி, உடலிலுள்ள சிறு தசையிலும் ஆயுதங்களைச் செருகிக் குத்துவார்கள். அத்தசைகளை யறுத்தீர்ப்பார்கள். இவ்வகைத் துன்பங்களைத் தூதர்கள் செய்வார்கள். இப்பாவிகள்செய்த பாவ மிதுவென்று பெருந்தகைமை யுடைய நந்திதேவரே! அடியேனுக் கறிவிக்கவேண்டுமென்று சிவயோகி கேட்டனர்.

எனச்சிவ யோகி கேட்டு வினவலு மிருந்த நந்தி
மனக்கினி துணர்ந்து நோக்கி யவர்கிலை வகுப்ப தானுன்
கனப்புய லணவு மிஞ்சிக் கலிங்கநா டரசர் கோமா
னனைத்தொடை நெடுவேற் சந்த்ராங் கதனெனு நாம வேலான்.

(இ - ள) என்று சிவயோகி வினவியதை அங்கெழுந்தருளிய திருநந்திதேவர் திருச்செவியுற்று, தமது திருவுள்ளத்தில நன்கு கருதிப்பார்த்து, அவர்களுடைய தன்மையைச் சொல்லுகின்றனர். மேன்மைதங்கிய மேகங்கள் தவழும் மதில் சூழ்ந்த கலிங்கநாட்டை அரசுபுரிந்தவனும குளிர்ந்த பூமாலைதரித்த வேற்படை தாங்கியவனுமாகிய சந்திராங்கதனென்னும பெயர்பெற்ற மன்னவன் ஒருவனுண்டு. எ - று. (உ௮௫)

உவன்பெறு மதலை வீரக் கிராதனென் றொருபே ருற்றோ
னிவர்ந்தவெண் கவிகை யந்த மைந்தற்கு நிறுவிப் போனு
னவன்றொலைத் தயனை நோக்கி யருந்தவ மாற்றி நின்று
தவந்தரு புனித வேந்த னுன்முக னுலகஞ் சார்ந்தான்.

(இ ள்.) அம்மன்னவன் பெற்ற புதல்வன வீரக்கிராதனென்னும் ஒப்பற்ற பெயர்பெற்றவன். அவன் தந்தை தன் பரவிய வெண்கொற்றக் குடை

யை அப்புதல்வனுக் களித்துச்சென்று தீவினைகளை விலக்கிப் பிரமதேவனை நோக்கி அருந்தவம் புரிந்துகொண்டிருந்து புனிதனாகிய சந்திராங்கதன அத்தவத்தாலெய்திய சத்தியலோகத்தை யெய்தினன். எ - று. (உ௪௪)

அன்னவன் புதல்வன் வீரக் கிராதனென றவனி காத்து
மன்னுயிர் புரந்து நீதி வரம்பினின் றரசு செய்தான்
றன்னுழை விரும்பி யாக வேசுர னெனுமோர் தன்மைத் [வான்.
தொன்னிலை மறையோ னேற்பா னினைந்துளந் துணிந்து செல

(இ - ள்.) அவன் புதல்வனாகிய வீரகிராதன் சிங்காதனத்திலிருந்து உலகினைக் காத்துச் சீவகோடிகளை, ரக்ஷித்து மநுமுறையில நின்று அரசு நடத்தினன. அவனபால், யாகவேச்சுரனென்னும் பெரிய ஒப்பற்ற நிலைமைதங்கிய புராதனமான அநதணர்குலததிற் பிறநதவன யாசிககு நிமித்தங் கருதி மனந்துணிந்து செல்கின்றான். எ - று. (உ௪௫)

செல்லுமா நகரத் தோர்பாற் பழமறை தெரிந்து போற்றிச
சொலலிய பரம சோமேச சுராதிருக கோயில போற்றிப
புல்லவே றுயர் ந்தோற போறறிச சைவதே சிகனைப போற்றி
மலலிகை மாலை வேநதற கருளென மறையோன கேடப.

(இ - ள.) செல்கின்ற அப்பெரிய நகரின ஒருபககத்தில, பழமையான வேதங்களுணர்நது துதித்துச்சொலலிய பரமசோமேச்சுவரரென்னும சிவபெருமான்திருககோயிலை வணஙகி, இடபககொடிதாஙகிய சிவபெருமானைப்பணிநது, அக்கோயிலிலுள்ள சிவாசாரியரை நமஸகரிதது, சிவபெருமானுககுச்சாத்தியுள்ள மலலிகை மலர்மாலையை மன்னவனுககுக கொணடுபோமபடி கொடுப்பீரென்று யாகவேச்சுரனென்னும வேதியனகேட்க. எ - று. (உ௪௬)

கொடுத்தன னுவந்து சைவ தேசிகன் கொடுங்குங காலைத்
தொடுத்தணி பொன்னூ லந்தத தொங்கலிற றுவணடு செல்ல
விடுத்திவ ரறியார் கொணடு வேநதனமுன புகுந்தான வேதம
படித்துணர் மறையோ னாசி பகாநதவன கழுத்தி லிட்டான்.

(இ - ள்.) அச்சிவாசாரியர் அப்படியே மனஙகனிநது கொடுத்தனர். அப்படிக கொடுககையில சிவபெருமானுக்கு அணிந்திருந்த பொன்னூலாகிய முப்புரிநூல அம்மாலையோடு கலநதுபோகவும, சிவாசாரியர் அறியாராயினர். வேதங்களை நன்குணர்நத யாகவேச்சுரவேதியன அதனைககொணடு சென்று மன்னவன் முன்னடைநது ஆசிவசனஙகூறி அவவரசன கழுத்தில மாலையை யணிந்தான். எ - று. (உ௪௭)

உவப்புடை யரச னேக்கி யொளிகெழு பசும்பொற் பூணூ
லெவர்க்குள தென்ன நின்ன தென்றனன மறையோன வேந்த
னிவப்புறு தோளு நூலு நோக்கின னெகிழ்நத சிந்தை [டான்.
கவர்த்திலன் மறையோற பார்த்துத தன்னுளங் களிப்புக் கொண

(இ - ள்) களிப்புடைய மன்னவன் இதனைககண்டு அதனோடுகலநத ஒளி தங்கிய பசும்பொன்னூலாகிய முப்புரிநூல் யாவருடையதெனவினவ, அவ்வநதணன் உம்முடையதேயெனக கூறினன. உயர்ந்துள்ள தன தோள்களையும முப்புரி நூலையுங்கண்டு, இரஙகிய மனதை மறைக்காதவனாய அவவநதணனைநோககித் தன் மனங்களிகூர்ந்தான். எ - று. (உ௪௮)

ஈந்தன னிதிய மந்த வேதிய னிருகை யேந்திப்
போநதனன் போந்த பின்ன ரரறகணி பொன்னூல் காணூர்
காநதிய மனதத ராகி யரசன்முற் கடிது புககா
வேநதநம் பரமர் பொன்னூல வேதியன் கொணர்நதா னன்றே.

(இ - ள்) அவ்வரசன் பல திரவியஙகளைக கொடுததான். யாகவேச்சுரன் இருகையாலும் பெற்றுக்கொண்டு போயினன். அதன் பின்னர், சிவபெருமா னுக கணிநதிருநத பொன்னூலாகிய பூணூலைககாணாத ஆலய பரிபாலாகள் வருந தியமனததினராய் மன்னன் முன் அதிவிரைவிற் சென்று, அரசனே! நமது சிவபெருமானுககுத தரிததிருநத பொற் பூணூலை உம்மிடம வந்த அநதணன் கொணடுவநதான. எ - று. (உஅகூ)

தொடைபடு மாலை யோடு துளங்கொளிப பசிய பொன்னூன்
மிடைபடக் கிடநத தந்த வேதியன கொணாநது தநதான
மடலுடை யலஙகன மாாப தருதியென றுரைபப வாளா
கடைபடக கேடடுங் கேளா ரொததனன கழறகால் வேநதன்.

(இ - ள.) தொடுககப்பட்ட மல்லிகை மாலையோடு மிகக காநதிதஙகிய பசும பொற் பூணூல சோநது கலநதிருநததை அவவநதணன் கொணாநது உமபாற் கொடுததனன. இதழ்கள பொருநதிய மலாமாலை சூடிய மாாபுடைய அரசனே! அப்பூணூலைத தரவேணடுமெனச் சாற்ற, இவ்வாரததைகளையெல் லாஙகேடடும வீரககழலணிநத பாதஙகளையுடைய அவ்வரசன ஒன்றையுங் கேளான்போ லிருநதனன். எ - று. (உகூ0)

மறுகின ரெநதை கோயில் பரிப்பவா மனனன் செய்கை
குறுகின ருரைததாா சைவ தேசிகன குழைநத சிநதை
தெறுசின மெடுபப வேநதன றனனுழைச செனறு னன்றே
னுறுமணித தவிசி னன்பி னிருததின னுவகை கூாநதான்.

(இ - ள்.) எமது சிவபெருமான திருககோயிற் பரிபாலகாகள் மனம வருந தியவாகளாய, அமமனனவன் செயகையைச் சிவாசாரியாபாற் லெயதிச் சொன் னாகள. அசசிவாசாரியா தமது உருககமெயதிய மனதிற் கடுஙகோபமெயதிய தால அவவரசனபாற போயினா அமமனனவனும ஆஙகுள்ள இரததின பீடததில அவரை அனபோடு வீற்றிருககச்செயது சநதோஷமிருநதான், எ-று.

அநதண னரசற் பாாதது வேதியற கருளி னீநத
பைநதுண ரலஙக லோடு மரனணி பசுமபொற் பூணூல
வந்தது திருமப வநத மாவிடை யவறகீ கென்னத
தநதிலை யாயின மீளாப படுகுழி நிரையஞ சாாவாய்.

(இ - ள்.) சிவாசாரியா மன்னவனை நோககி, யாகவேச்சுவரனெனும் வேதி யனுககு அன்போடுகொடுதத பசிய கொததுககளாலாகிய மல்லிகை மாலையோடு சிவபெருமானுக் கணிநதிருநத பசும பொற் பூணூலும வநதுவிட்டது. ஆதலால் மீணடும அப்பூணூலை அபபெருமானுககே தருவாயாக இப்போது நீ தரா விடில எககாலும் மீட்கப்படாத படுகுழியாகிய நரகததிறசோவாய். எ - று. ()

இன்னணஞ் சிவதது ரோகத் தவர்படு நிரைய மெய்து
மன்னவன் கதையொன் றுண்டாற் கேண்மதி காம ரூபி
யென்னுநாட் டரச னீன்ற வசுவெனு மதலை யெந்தை
பொன்னவிர் சடையோன் கோயில புகுநதிருந தாட லுற்றான்;

(இ - ள்.) இத்தகைமையான சிவத்துரோகிகள் வீழ்கின்ற நரகத்தைச் சோதிக்கின்றவன் சரிதமொன்றுள்ளது அதனைக் கேட்பாயாக. காமரூபியெனும் நாட்டினை யரசுசெய்த மன்னவன் பெற்ற வசுவென்னும் பெயர்பெற்ற புத்திரன், எமது பிதாவாகிய பொன்போலப் பிரகாசிக்குஞ் சடையையுடைய சிவபெருமான் திருக்கோயிலுட்போய் அங்கு விளையாடியிருந்தனன். எ - று.

வெண்மணல் விழைந்துக் கூட்டி யாடுறு மெல்லை வேந்தன்
கண்மணி யனைய பால ஞோபணங் கண்ணிற் காணு
வுண்மகிழ்ந் தெடுத்துக் கைக்கொண் டோடினு னிலவு காலுங்
தண்மணிக் கழற்கால் பெற்ற தந்தைபாற் கொடுத்து நின்றான்.

(இ - ள்.) வெள்ளிய மணலைச் சேர்த்துக் குவித்து அவன் விளையாடுஞ் சமயத்தில், அவ்வரசனது கண்மணிபோன்ற வசுவெனுஞ் சிறுவன், ஒரு பொற்பணத்தைக் கண்ணிற்கண்டு மனங்களித் தெடுத்துக் கையில் வைத்துக்கொண்டோடி ஒளிவீசும் குளிர்ந்த இரத்தினங்கள் பதித்த வீரக்கழலணிந்த பாதத்தையுடைய தன் தந்தைபாற் கொடுத்து நேரில் நின்றான். எ - று. (உகூச)

ஈன்றசே யெடுக்கப் பெற்ற வோர்பண மங்கை யேந்தித்
தான்றனிக் கருவூ லத்தி னளித்தனன் றருண வேணி
மூன்றுகட் பெருமாற் கென்னப் பரிப்பவர் கேட்டு முன்னிக்
கான்றொளி யலங்கு பைம்பொற் கழலரைச் சருகு சென்றார்.

(இ - ள்.) தான்பெற்ற புதல்வன் கண்டெடுத்த ஒரு பொற்பணத்தைக் கையிலேந்திக்கொண்டு தன் ஒப்பற்ற பொக்கிஷத்திற் சேர்த்தான். இளஞ் சடைபொருந்திய திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானுக்கென்று திருக்கோயிற் பரிபாலகர்கள் கேள்விப்பட்டு, மன்னனைக் கேட்கக் கருதி, ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் பசும்பொன்னாலாகிய வீரகண்டாமணி தரித்த மன்னனிடஞ் சென்றார்கள். எ - று. (உகூரு)

சேவுயர் பெருமா னெம்மான் சினகரத் தகவை யுள்ள
யாவும்அப் பரமற் கல்லா லரசருக் குரிய வன்றால்
கோவிளங் குமர னங்கண் டெடுத்தனன் கொணர்ந்து நின்பால்
ஈவதப் பணத்தை யீசற் களித்தியென் றிரப்ப வன்னோன்.

(இ - ள்) இடபக்கொடியை யுயர்த்திய பெருமானாகிய எமது சிவபெருமான் திருக்கோயிலினுள்ளே உள்ளனவெல்லாம் அவ்விறைவனுக்கேயன்றி மன்னர்கட்குரியனவல்ல. ஆதலால், உன் அரசிளங்குமரன் அங்கே கண்டெடுத்துக் கொணர்ந்து உன்பாற் கொடுத்த அப்பொற்பணத்தைச் சிவபெருமானுக்குக் கொடுக்கவெனப் பிரார்த்திக்க, அதுகேட்ட மன்னவன். எ - று. (உகூசு)

என்னிளங் குமரன் முன்ன ரெடுத்ததொன் றீயே னென்னத்
தன்னுடைக் கருவூ லத்தி னளித்தலுந் தழற்கட் பெம்மான்
முன்னவன் முனிவிற் கோயின் முழுங்கழற் கொழுந்தீ வெவ்வ
வங்கிலே யொதுக்கி யாவுங் கள்வரா லழிந்த வன்றே.

(இ - ள்.) என் இளங்குமரன் வசு, முதலிலே கண்டெடுத்த ஒன்றனைத் தரமாட்டேனென்று தன்பொக்கிஷத்திலேயே யிட்டுவைக்கவும், தீவிழியையுடைய பெருமானாகிய ஆதிதேவன் கோபத்தினால் அவ்வரண்மனையில் ஜ்வலித்தோங்கிச் சிகைவிட்டெரிந்த தீப்பற்றிக்கொண்டு எரிந்து அங்குள்ள பொருள்களெல்லாம் கள்வரால் அபகரிக்கப்பட்டன. எ - று. (உகூஎ)

ஓர்பண மீசற் கென்று வுதவில னுடைமை யாவுஞ்
சோரவுற வறுமை யெய்தித் துயருழந் திடுக்க ணுற்றுன்
பாரர சொழிந்து தன்னாள் கழிந்தனன் மறலி பாசத்
தீர்வயிற் றென்பாற் சென்று வெந்நர கிடைப்பட டானல்.

(இ - ள்.) ஒரு பொற்பணத்தைச் சிவபெருமானுக்கென்று கொடாத அம் மன்னவன் திரவியம் யாவும் அழிந்துபோக, தரித்திரமெய்தித் துன்பத்தினால் வருந்திக் கவலையெய்தினன். உலக அரசுரிமையும் நீங்கித் தன்னுயுள் கழிந்து மரித்தான். உடனே இயமன் தன்பாசககயிற்று விழுக்க இயமபுரமெய்திக் கொடிய நரகில் விழுந்தான். எ - று. (உகூஅ)

பின்னர சியற்றி நின்று னவனுழைப பிறந்த பாலன்
றன்னையும பகைதத வேந்தா தனிசசிரந் துணிபபத் தானுந்
துன்னரு நிரையம புககுத் துயருழந் தழியா நின்று
னின்னலுற் றிவாவீழ் குமபிக் கொடுமையா ரிசைககற் பாலார்.

(இ - ள.) அவனபாற பிறநத அவன்புதல்வன் வசு, அவனுககுப் பினனே அரசாட்சி செயதுகொண டிருநதான. அபபுதலவனையும பகைமையெயதிய மறு புல மனனாகள ஒபபறற சிரததைத துணிபப, அவனும அடைதற்கரிய நரகததில விழுநது துனபெயதி வருநதுகினறுன. துககமெயதி இவாகள் விழுநத நரகத்தின கொடுமையை எடுததுரைககததக்கவர் யாவா. எ - று. (உகூகூ)

எனறெடுத தெடுநதுச சைவ தேசிக னியம்பக கேளாக்
குனறெடுத தனைய தோளான குணிததில னுளததி லொன்று
மனறவற கமைசசி னினறுாக குறைததன னவாககு முளளாரு
சென்றில பொனனூ லீசற கனிததிலர் தறுகட டீயோா.

(இ - ள.) என்றிபபடி யெடுதெடுததுச் சிவாசாரியர் சொலலககேட்டு, மலைகளப் பூரிததாறபோனற தோளகளையுடைய சநதிராஙகதன கருததிற சிறிதும கவனிககவேயிலலை உடனே அவனை நீககி அமமனனவனுககு மநதிரியா யுளளவாகளுககுச சொலலினா. அவாகட்கும அவவிடயததில மனஞ்செலல விலலை. கருணையறறவாகளாகிய அககொடியோாகள பொனனூபவீததைதப் பெருமானுககுக கொடுககவேயிலலை. எ - று. (ருOO)

அரசனுங் கொடிய னனனே னமைசசரு மறமொன் றோரா
புரகித னிவரிற பாவி யெனறகம பொருமா நின்று
பரகதி யுணாநத சைவ தேசிகன பரிவிற போனுன
வரதனுக கலஙகு பொன்னூல வேறுற வகுததுக கொண்டான்.

(இ - ள்) மனனவனுங கொடியவன அவன மநதிரிமாரும தருமமென்ப தொன்று தெரியாதவாகள. புரோகிதனுயுளளவன இவாகளைக காட்டிலும் பாவி யெனறு மனம் வருநதியிருநது, முததிசாதன முணாநதுளள அச்சிவாசாரியர் துயரததோடு சென்று சிவபெருமானுககுரிய ஒளிதஙகிய பொனனூபவீதம வேறொன்று செயதுகொணடனா. எ - று. (ருOக)

பேரயது சிலநா ளநதப் பொன்னவிா புரிநூல பூண்ட
தீயவல் லரசன் மேனி புழுக்குலந திளைபபச செநநீா

பாய்தரக் குட்டம் பற்றி யிறந்தனன் பாசம் வீசிக்
காய்சின மறலி தூதா தெழித்தனர் கழுத்திட் டீர்த்து.

(இ - ள்) சிலநாட்கள் சென்றன. பொன்னாற்சமைந்து விளங்கும்பூணூலை யணிந்திருந்த பாவத்தினால் வலியமைந்த அம்மன்னவனுடைய உடலிற் புழுக் கூட்டங்கள் நெளிய உதிரமொழுகும்படி குட்டநோய் கணடிறந்தான். பெருங் கோபமுடைய இயமதூதர்கள் பாசத்தைவீசிக் கழுத்தில் மாட்டி யீர்த்துக் காச் சித்தார்கள். எ - று. (௬௦உ)

வயங்கொளிப் பொன்னூ லீந்து மாந்தி யேற்ற வன்கட்
கயங்கெழு சிந்தை யோனு மமைச்சருங் கழற்கால் வேந்தற்
கியங்கிய சிந்தைக் கேய்ந்த புரகித னென்று ளோனு
முயங்குநாள் கழியச் சென்றா தென்புல மறலி மூதூர்.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற காந்தியுடைய பொன்னூபவீதத்தைக்கொடுத்துப் பொருள் பெற்றுக்கொண்டவனாகிய கெடுதி மிக்க மனமுடைய யாகவேச்சுவர னெனும் வேதியனும் மந்திரிகளும் வீரக்கழல் தரித்த பாதத்தையுடைய அம மன்னவன் துர்புத்திக்கேற்ற புரோகிதனும் தங்கள் ஆயு[illegible] தென்றிசையிலுள்ள இயமபுரஞ் சேர்ந்தார்கள். எ - று. (௬௦௩)

கொற்றவன் றந்தை யுந்திக் கமலத்தோன் கொடுத்த நாடு
பெற்றவ னிருந்தான் றனை யீங்கிவா கிளையைப் பேழ்வாய்
கற்றிர ளனைய திணடோட் கடுந்திறற் கால தூதா
பற்றினா கொண்டு சென்று படுகுழி நிரையத் திட்டார்.

(இ - ள்.) உந்திக்கமலத்திலுதித்த பிரமதேவன் கொடுத்த சத்தியலோக பதவியைப்பெற்றுக்கொண்டு அங்கிருந்த இவ்வரசன பிதாவையும் உறவினரை யும், பிளவுபட்டவாயையும மலையின திரட்சிபோன்ற வலிய தோள்களையு முடைய பெருவல்லபந்தங்கிய இயமதூதாகள பற்றிச்சென்று ஆழ்ந்த நரகக் குழிகளிற்றளளினாகள். எ - று. (௬௦௪)

ஆயிடைத் தென்பா லெய்தி யருந்ர குழப்பக் கண்டு
நீயெடுத் துரைத்தோ ரினனோ ரென்றன னந்தி நீண்ட
காயெரி சடில யோகி கணணுதற பரன்பா லுளளம
போயுறப் பொருந் லூற்று மயிர்ப்புறம் பொடிப்பத் தானன்.

(இ - ள்.) அங்கே தென்றிசையெய்தி அரிய நரகத்தில் வருந்துவதைக் கண்டு, நீா முன்னே சொல்லியவாகள இவாகள தாமென்று திருநந்திதேவாகூறி யருளினர். நீண்ட செந்தீபபோலும நிறந்தங்கிய சடையையுடைய சிவயோகி நெற்றிக்கண்ணையுடையவராகிய சிவபெருமானிடத்தில் மனமானது சென்று பொருந்த வருந்தி உடலமுழுதும் புளகாங்கிதரானா. எ - று. (௬௦௫)

கலிநிலைத்துறை.

எல்லை நீத்தெழு முவகையி னிருந்தமர் யோகிக்
கல்லி நாண்மலா நானமுதற மைமபடை பொறுத்த
குல்லை யோறகிரு செவித்தலங் குளிர்ப்புற நந்தி
மல்லன் மாக்கதை பின்னுமொன் றெடுத்தனன் வகுப்பான்.

(இ - ள்.) எல்லையின்றி மிகுந்த களிப்பெய்தியிருந்த சிவயோகியாருக்கும் அகவிதழுடைத்தாய அனறலாநத தாமரை மலாப்பீடத்தையுடைய பிரமதேவ னுக்கும், பஞ்சாயுதங்களை யேந்திய துளசிமாலைதரித்த திருமாலுக்கும், இரு செவிகளுங் குளிர்ச்சியுண்டாமபடி திருநந்திதேவா மிகமேன்மைதங்கிய வே ரோ சரித்திரத்தைச் சொல்வாராயினா. எ - று. (கூ0௬)

ஆடெ ரியபடு நெய்யிடைக் கிடபபவாக கயலோா
மாடு வெவவழற கொழுந்துறத துடித்தனா மருள்வார்
கோடு சிந்தையிற களங்கறுத தொழித்தருள குரவா
தேட ருந்திரு வுளங்கறுத திடபுரி தீயோா.

(இ - ள்.) ஜவலிக்கின்ற நெருப்பிற்காயந்துகொண்டிருக்கும் நெய்க்கொப் பரையில விழுந்திருப்பவாகளுக்கு அருகிலுள்ளவாகளாய, தங்கட்கருகேகொடுந தீயான தசிகைவிட்டெரியப பதைபதைத்து மயங்குகினறவாகள யாவரும், ஒழு ஙகறறமனததின களங்கங்களெல்லாவற்றையும நீக்கித்திருவருளபுரிந்த ஆசா ரியாகளுடைய தேடற்கரிய திருவுளளமானது கோபிக்கும்படி புரிந்தகொடி யோாகள். எ - று. (கூ0எ)

அனையா செய்கைமுற் றறைகுது மருந்தவ கேட்டி
நனைந றுமபொழிற கவுளதே யததொரு நகரங
கனைபெரு [illegible] லுடிநாறு [illegible]வுளமென றுளதால்
வினைஞ னத்திரு நகாககுள வணிகனோ வெயயோன்.

(இ - ள்.) அபபாவிகள செயலை முறறுஞ சொலலுகினறோம. அருந்தவ முடையோரே! கேட்பீராக. குளிர்ந்த நணமணம வீசுஞ சோலைசூழந்த கவுள நாட்டில, சத்திக்கினற பெருநீா சூழந்த கவுளமெனனும ஒரு நகரமுளளது. அந்தச்சிறந்த நகரத்திலே தீமைமிகுந்த கொடியோனாகிய ஒருவணிகனிருந தான. எ - று. (கூ0அ)

வணிக னன்னவன பெறுபெயா பெருநிதி வரதன்
றணிவில வெங்கதிாக கடவுளைந தினநதொழுந தகையான்
பணிசெய பீடமண ணொழிதநது செஙகலிற படுபபான்
றுணிவ கொணடனன செஙகலெங குளவெனத துணிவான்.

(இ - ள்.) அவவைசியன பெருமைதங்கிய பெயா நிதிவரதனெனச் சொல் லுவாாகள் அவனே அடஙகாதகொடுரமாகிய சூரியபகவானை நாடோறுமவண ஙகுந தனமையுடையவன. தான சூரியனை வணங்குகினற பீடம மணணினு லிருப்பதை யகறறிச் செஙகலலாலமைக்கும்படி தீாமானித்தான. அதற்கு உப யோகப்படத்தக்க செஙகறகள எஙகுளளனவென யோசித்தான. எ - று.

கோள வெறபுறை பழமறைச சைவகோத திரததோன்
றூள தாமரைக கிழவனுக குவமைசான றுடையோன்
வாள ராவணி பரமாகோ ளேசசுரா மலாததாண்
மூளு மனபினிற பரவுதற புருடனமுப புடையோன்.

(இ - ள்.) கோளகிரியில் வசிக்கின்ற பழமையான வேதங்களையுணர்ந்த சிவகோத்திரத்திற் சனித்தவரும், தாளையுடைய கமலாசனனாகிய பிரமனுக்கு

ஒப்பிடத்தக்கவரும், ஒளிமிகுந்த சர்ப்பாபரணமணிந்துள்ள சிவபெருமானாகிய கோளேச்சுவரருடைய செந்தாமரை மலர்போன்ற பாதங்களை மிக்க மெய்யன்போடு வணங்கும் வயோதிகமெய்தியவருமாகிய தற்புருடரென்னும் பெயருடையவர். எ - று. (௲௪௦)

ஈசனைத்தின மருச்சனை செய்வதற் கிசைந்து
பூசனைப்பெருந் திருமடம் புதிதெடுத் தருள
வாச றுத்தசெங் கற்குவை கிடப்பன வறிந்தான்
றேசி கறகது விலைகொடுத் தெடுத்திடச் சென்றான்.

(இ - ள்.) சிவபெருமானை நாடோறும் வழிபாடு செய்தற்கிணங்கி, பெரிய சிவபூஜா மடமொன்று புதிதாக நியமிக்கக்கருதி, சேகரஞ்செய்த குற்றந்தீர்ந்த செங்கற்குவியல்கள் கிடப்பனவற்றையுணர்ந்து, அத்தற்புருடசிவாசாரியருக்கு அதன்விலையைக்கொடுத்து எடுத்துக்கொள்ளுதற்குச் சென்றான். எ-று. (௲௪௧)

சென்று போற்றினன் சேவடி பணிந்தனன் செய்யோ
யென்றி னைத்தொழு பீடமொன் றெடுப்பதற் கியைந்தே
னின்ற தற்குள விலையெலா மளிக்குவ னென்னுந்
துன்று செங்கலீந் தருளெனப் பின்னருந் தொழுதான்.

(இ - ள்.) அப்படிச்சென்ற நிதிவரதன் அவரைத் துதிசெய்து செவ்விய பாதங்களிற் பணிந்து, செந்நெறியுடையோரே! சூரிய நமஸ்காரஞ் செய்யப் பீடமொன்று கட்டுதற்குக் கருதினேன். இப்பொழுதே அக்கற்களுக்குள்ள விலைமுற்றுங் கொடுத்துவிடுகின்றேனெனக் கூறி, நெருங்கிய செங்கற்களைக் கொடுக்கவேண்டுமென்று மீண்டும் பணிந்தான். எ - று. (௲௪௨)

குரவ னுங்கது கொடுப்பது பொருந்திலன் வணிகன்
விரவு சிந்தனை வெள்குற மீண்டன னிவனைப்
பரவி நங்குரு வென்பதும பழியென மதித்தான்
புரவ லறகுள மருத்துவ னிவறகெதிர் புகுந்தான்.

(இ - ள்.) அவ்வாசிரியர் அக்கற்களைக்கொடுத்தற்கிணங்கவில்லை. நிதிவரதனென்னும் வைசியன் தனமனதில் நாணமெய்திய திருமபினன் இப்படிப்பட்டவரைப் பணிந்து நமது ஆசாரியரென்று சொல்லுவதும் இழிவாகுமெனக்கருதினான். அச்சமயத்தில் அத்தேசத்தின் மன்னவனுடைய வைத்தியன் இந்நிதிவரதனுக்கு எதிரேவந்தனன். எ - று. (௲௪௩)

அருகு நோக்கினன் வணிகனை யருங்கவ லெய்தி
யொருவ ருந்துய ரெய்தினை யெனகொலென் றுரைப்பக்
குருவின் மாடுறச் சென்றதும புகன்றதுங் குரவன்
மருவு செங்கன்மற் றிலையென வுரைத்ததும் வகுத்தான்.

(இ - ள்.) அவ்வைத்தியன் வைசியனைச் சமீபத்திற்கண்டு, அரிய கவலைகொண்டு நீக்கற்கரிய துன்பமடைந்திருக்கிற காரணம் யாதெனச்சொல்ல, தனதாசிரியன்பாற் சென்றதும் தான் அவருக்குச் சொன்னதும், அதனைக் கேட்ட ஆசிரியர் தன்பாலுள்ள செங்கற்களைக் கொடுப்பதில்லையென மறுத்துச்சொன்னதும் ஆகியவற்றை நிதிவரதன் அவனோடு சொன்னான். எ-று. (௲௪௪)

நீய தற்குளம் வருந்தலை யவர்க்குநா னிகழ்த்தி
யாய செங்கலீந திடப்புரி குவனென வடைந்தான்
றாய தேசிகன் மருத்துவன் சொன்மறுத் தருதநான்
போயி ஞனது வணிகனுக் குரைததபின புகல்வான்,

(இ - ள்.) நீ அதற்காக வருத்தப்படவேண்டாம். நான் அவ்வாசாரியருக்குச் சொல்லி அச்செங்கல்லைக் கொடுக்கும்படி செய்வேனென்று சேர்ந்தான். புனிதராகிய அவ்வாசாரியா வைத்தியன் சொல்லையும் மறுத்துச்சிந்தனா. அவ்வைத்தியன் மறுபடியும்போய ஆசாரியர் சொன்னதைச் சொல்லி மேலுஞ் சொல்லுகின்றான். எ - று. (ருகஇ)

உள்ள மோரந்துணா குரவனீ துரைத்தன னென்று
வள்ள னீயது மனகொள லாஙகவன மனையி
னெள்ள ருஙகுவைச செஙகனமற றியாவையு நாளைக்
கொள்ளை போவன காணடியென றுரைததனன் கொடியோன்

(இ - ள.) மனநிலைமையையறிந்தவராகிய நமதாசாரியா இப்படிச் சொல்லினரென்று, வள்ளலே! நீ அதனை மனததில வைததுககொள்ள வேணடாம். அவவாசிரியா வீட்டிலுள்ள இகழ்ச்சியாற செஙகற்குவியல்களை யெல்லாம நாளையதினம கொள்ளைகொளவது நீ காணுக வென்று அவவைத்தியக கொடியோன் சொல்லினன. எ - று. (ருகரு)

எது ரைததனன் போயினன் மருத்துவ னிதுநா
ளோது வெணகுடைய புரவல னெருததனமால யானை
காது வெமபிணி யுடறறுறக கவளமுணா ணது
மீதெ மூளுசெவி தாழதததது துணைவிழி விளாதத.

(இ - ள.) வைத்தியன இப்படிச் சொலலிசசென்றான். இததினத்திலே, யாவரும துதிககினற வெணகொறறககுடையையுடைய அரசனதுபெரிய ஆண யானையைக கொலலததகக கொடமெபிணி துனபு செயவதால அது ஆகாரமேற றுககொளளாமல அதன தாழ்நத காதுகள மேலுயாநதன. இருவிழிகளும வெணணிறமுற்றன. எ - று. (ருகஎ)

கொற்ற வறகுரைக் தவன்றனிப் பணிதலை கொள்ளா
வறறை நாளிரா மருததுவன யாஙகென வடைநது
தெறறெ னககொணாந தரசுவாக காடடலுந தீயோன்
பெறற செஙகலிற பிழைககுமிக களிறெனப பேச.

(இ - ள்.) யானைப்பாகர் அச்செயதியை மனனவனுக்குணாததி, அம்மன்னவன் சிறநதகட்டளையைச் சிரமேற்றாங்கி அனறிரவிலேயே வைததியன் எங்குள்ளானென்று தேடிப்போய், அதிசீக்கிரததில அழைததுவநது அநத [அரசுவா] பட்டததுயானையைக காட்டியவுடனே, கொடியவனாகிய அவவைத்தியன் இநதயானை செஙகல்லினாலே உயிர்பிழைககு மெனறோத. எ - று. (ருகஅ)

பாக ராரிருட் படுமறைக் கங்குலிற றேடிப்
போக வெங்குள செங்கலென றயிர்த்தலும் பொலிந்த

தாக நங்குரு மடத்திடைக் கிடப்பதென் றறைந்தா
ஞேகை யுற்றன ரெடுத்தன ரோடின ரொருங்கே.

(இ - ள்.) பாகர்கள் மழைபெய்து இருணிரம்பிய அவ்விரவில் தேடிச்செல்ல, செங்கற்கள் எங்கிருக்கின்றன வென்று சந்தேகிக்கவும், வைத்தியன் செங்கற் குவியல் விளக்கமாக நமது ஆசாரியா மடத்தில் உண்டென்று சொன்ஞன். பாகர்கள் சந்தோஷித்தவர்களாய் ஒன்றுகூடி யோடிப்போய் அக்கற்களைவேண்டியமட்டும் எடுத்தார்கள். எ - று. (ருகக)

எடுத்த செங்கலை யிடித்திரென் றுரைத்தனன் யார்க்குங்
கொடுத்த னனசில விடித்தனன மருநதொடுங் கூட்டிக்
கடுப்பு றுங்கறை யடியொடு மெருத்தாட்ட கழுத்து
மடுத்தெ டுத்தெடுத் தொற்றுவித் திருந்தனன மருத்தன்.

(இ - ள்) எடுத்துவந்த செங்கற்களை யிடியுங்களென்று வைத்தியன் சொல்லிப் பலர்க்குங்கொடுத்தான். அப்பொழுதிற் சிறிது மருந்துடன்சேர்த்து, நோய்கொண்டுள்ள யானையின உரலபோன்றகால பிடர் கழுத்தடி இவ்விடங்களில் எடுத்தெடுத்து நிரம்பப்பூசிக்கொண்டிருந்தான. எ - று. (ருஉ0)

செயற்க ருந்திறம யாவையுஞ் செய்தனா சினவெங்
கயக்க டுங்களி றொருத்தலபட் டிறந்தது கங்குல
வயக்கொ டுமபடை மனனவற் குரைத்தனன மன்னன்
பெயாதது ரைத்திலன வருத்தமீப பிறந்தெழ விருந்தான.

(இ - ள்.) செயதற்கரிய பரிகாரங்களை யெல்லாஞ் செயதார்கள கொடுந்துன்பெய்தியிருந்த ஆணயானை அன்றிரவுமரணமெயதியது வெற்றிதங்கிய பெருஞ்சேனையை யுடைய அரசனுக்கு இச்செயதியை உணாததிஞர்கள. அதனைக் கேட்டமனனவன மறுமொழி சொலலாதவஞய மேனமேலும வருததமதிகரிக்க விருந்தான. எ - று. (ருஉக)

குணக்க ருங்கடற பரிதிவந தெழுந்தது குரவன
புணாதத துனபொடு மரசனிற புகுந்தனன புரப்பான
வணக்க முற்றளித திருததலு மனனனை நோக்கி
யுணாததது வானறன செங்கலுற றெடுத்தவா றுணர.

(இ - ள்.) (மறுநாளுதயததில) கீழ்க்கடலிற சூரியன வந்துதித்தான், ஆசாரியர் தனக்குற்ற மனவருத்தத்தோடு இராசசபையில வந்தனா. உலகரக்ஷகஞகிய மன்னவன ஆசாரியருக்குச் செயயவேண்டிய வந்தனை வழிபாடுகள முழுவதுஞ் செய்து வீற்றிருந்தபோது, ஆசாரியா அரசனை நோக்கித் தமது செங்கற்களை வந்தெடுத்துக்கொண்ட செயதியைத தெரிவித்தனா. எ - று. (ருஉஉ)

வந்து கேட்டனன் செங்கலீ கெனகிதி வரதன
றந்தி டப்பட்டா தெனறன மவறகெனச சாரந்து
முந்தி யெமவயிற செங்கல்கேட் டனனற முனிநதேம்
வெந்த சிநதையின் மருத்துவ னித்திறம விளைத்தான.

(இ - ள்) நிதிவரதன் என்பால்வந்து செங்கற்களைக் கொடுவெனக் கேட்டான். அது கொடுக்கப்படாதென்று மறுத்துச் சொன்னோம் அதன்பின் வைத்தியன் அவனுக்காக எம்மிடம் வந்து அச்செங்கற்களைக் கேட்டான். அப்போது நாம் அதிகமாகக் கோபித்துக்கொண்டோம். அவ்வைத்தியன் அதுகாரணமாகக் கடுங்கோப மெய்திய மனத்தால் இப்படிச்செய்தான். எ - று. (௫௨௩)

எடுத்த சீற்றமிக் கெம்மடத் தகவையின் முன்றிற்
படுத்த செங்கலை யரசுவாப் படுபிணிக் கென்ன
விடுத்த பாகரா லெடுத்தற முடித்தனன் வேந்தே
யடுத்த வாறிதென் றறைந்தன னருமறைப் புனிதன்.

(இ - ள்) உண்டாகிய கோபமதிகரித்து, எமது மடத்தின் வாயிலிற் குவித்திருந்த செங்கற்குவியலை, பட்டத்து யானைக்குநேர்ந்த வியாதிக்குவேண்டுமென்று சொல்லி, பாகர்களால் கொண்டுவரச்செய்து முற்றும் பொடிப்படுத்தி விட்டான். அரசனே! எனக்குற்றதன்மையிது வென்று, அரியவேதமுணர்ந்த புனிதராகிய ஆசாரியர் சொல்லினர் எ - று. (௫௨௪)

ஓர்ந்தி ருந்தன னொற்றுரைத் தியாவையு முணர்ந்தா
ஞாந்த மாநிதி வரதனைக் கொணர்மினென் றறைந்தான்
வார்ந்த வாளெறிந் தவனுயிர் செகுத்திட வலித்தான்
கூர்ந்த சிந்தைய ருழையர்கொண் டவன்சிரங் குறைத்தார்.

(இ - ள்.) இவற்றையெல்லாங் கேட்டிருந்த மன்னவன் ஒற்றரைவிடுத்து அவற்றையெல்லாம் உண்மையென்றுணர்ந்து, பொருந்திய செல்வமுடைய நிதிவரதனை அழைத்து வருகவென்று கட்டளையிட்டு, அவன்வந்த வுடனே, நீண்டவாட்படை வீசி அவனுயிரை யகற்றும்படி உத்தரவுதந்தான். நுட்பபுத்தியுடைய ஏவலாட்கள் அவனையழைத்துச்சென்று அவன்தலையைவெட்டித் துணித்தார்கள். எ - று. (௫௨௫)

பரும யானையின் பாகரை மருத்துவன் பணியாற்
றுருவு செங்கலன் றெடுத்தவ ராரையுந் துணித்துக்
குருவின் முன்னரின் மருத்துவற் கொணர்கெனக்கொணர்வான்
வெருவி யோடின ருழையராங் கவற்கொடு விடுத்தார்.

(இ - ள்) அங்கி பூண்ட யானையின் பாகர்களையும், ஆசாரியர் சம்பாதித்த செங்கற்களை வைத்தியன்கட்டளைப்படி அன்று எடுத்துவந்தவர்களையும் வெட்டி, ஆசாரியருக்கு முன்பாக அவ்வைத்தியனை யழைத்துவரும்படி கட்டளை தர, ஏவலாளர்கள் அப்படியே அழைத்துவரும்படி பயந்தோடி அவனைக்கொண்டு வந்து விடுத்தார்கள். எ - று. (௫௨௬)

எங்க ளீசனுக் கருச்சனை புரியுமெங் குரவர்
செங்க ணீநிதி வரதனுக் காசசிதை வுறுத்தாய
வெங்க யப்பிணி செங்கலால் விளியுமோ வருமம்
பொங்கு சிந்தையா லீங்கிது புரிந்தனை போலும்.

(இ - ள்.) எங்கள் சிவபெருமானுக்குப்பூசைசெய்கின்ற எமதாசாரியருடைய செஙகற்களை, நீ நிர்விரதனென்றும் வணிகனுக்காகப் பாழ்ப்படுத்தினை. வலிமைதங்கிய பட்டத்துயானையின் நோயானது செங்கற்பொடியால் தீருமோ? பகைமிகுந்தமனதினுல் இச்செங்கற்களை இப்படிச் செய்தாய். எ - று. (ருஉஎ)

என்று வெஞ்சினத் தெரியெழ விழித்தன னிவனைக்
கொன்று தீர்திரென் றுரைத்தலு மமைச்சுளோர் குறுகித்
துன்று பைங்கழ லரசனைத் தொழுதன ரொருபா
னின்று வாய்புதைத் தவனிலை நிகழ்த்துவ தானார்.

(இ - ள்.) என்றுரைததுக்கடுங்கோபத்துடன் தீப்பொறி சிநதப்பார்த்து, இவனைககொலைசெய்து விடுங்களென்று கட்டளையிடுகையில், மந்திரிகளானோர் நெருங்கிய பசும்பொனனாலாகிய வீரகணடாமணி தரிதத அரசனை நெருங்கி வணஙகி, ஒரு புறததினினறு வாய பொததிககொணடு, அவவைத்தியன்தன்மையைச் சொலவாரானார்கள. எ - று. (ருஉஅ)

அரச நின்னுழை யருமபிணி யுடற்றுறு மநநாள்
பரவு மிநதிரன பதியகன றிபபதி படாநதார
வரம ருத்துவா நினதுநோ யொழிததனா வானம்
விரைவி னேகுவா னுணாநதவ ரேகுறும வேலை.

(இ - ள்.) அரசனே! உனககு அரிய வியாதியொன்றுண்டாகி வருந்திய அப்பொழுது, பணிகினற இநதிரனுடைய சுவாக்கலோகததைவிட்டு, மேன்மையான தேவவைததியாகள இவவூருககுவநது, உன வியாதியை யகற்றிவிட்டு,தஙகள் தேவலோகததிறகு விரைவாகச்செலலககருதியதை நாஙகளறிநது, அவர்கள் செல்லுஞ சமயததில. எ - று. (ருஉகூ)

யாமெ லாமுணாந திநநிலப் பெருப்பிணி யொழிப்பான்
றூம றூலெ்ரு மருததுவற றருதிரென றிரபப
வேமு றுமபடி சோபரி யெனுமிவன றனனைச
சேம மாய்நமக் களித்தன ராஙகவா செனறூா.

(இ - ள்.) நாஙகள் யாவரும் அவாகள செல்வதை யுணாநது, இநத நிலவுலகத்திலுள்ள பெரிய நோயகளை விலககுமபடி ஆயுளவேததத்தின் ஒழுஙகுணாநத ஒரு வைததியரை எஙகளுககுததரவேணடுமென வேணட, நாஙகள சநதோஷமெயதி இறுமாககும்படி, சோபரியெனனும் பெயாவகிதத இவவைததியரை நமக்குககாவலாகக்கொடுதது அவாகள போனாாகள். எ - று. (ருஙo)

அனறு தொ டட்டுநின் குடைநிழ லவனியி னுள்ளோ
ரின்றும் வெம்பிணி தெறுதர விறந்தவ ரிலலை
கொன்று தீர்நதிடி லிவனிகர் குவலயத துளரோ
வென்றி றைஞசினர் நகைவிளைத தரசனீ துரைப்பான்.

(இ - ள்.) அன்று தொடங்கி உன் குடையானது நிழல்செய்யும் இத்தேயத்திலிருப்பவர்களுள், இன்று வரையில் கொடிய வியாதி வருத்துவதால் மரணமெய்தியவர்களில்லை இப்போது இவரைக் கொலைசெய்துவிட்டால் இவரை

யொத்தவர்கள் இவ்வுலகில் இருக்கின்றார்களோ? என்று கூறி வணங்கினார்கள். அது கேட்ட மன்னவன் நகைத்து இப்படிச்சொல்லுகின்றனன். எ-று. (ருருக)

மேல்வி ளைந்தன விளைகின்ற வினைவன யாவும்
பாலு ணர்ந்தறி யமைச்சரும் போலிது பகரார்
கால மோர்ந்தறி குரவரிற் பிழைத்தவர் கருங்கார்
நீல கண்டனிற் பிழைத்தவர் நிரையமுற றழிவார்.

(இ - ள்.) முன் நடந்தவைகள் இப்போது நடப்பவைகள் இனி நடக்கப் போகின்றவைகள் என்னும் எவற்றையும் பகுத்துணர்ந்த மந்திரிகள் உங்களைப் போல இப்படிச்சொல்லார்கள். திரிகாலவர்த்தமான முணர்ந்து தெளிந்த ஆசாரியருக்குத் துரோகஞ்செய்தவர்கள் யாவரும் கரியமேகம்போன்றவிடந்தங் கிய கண்டத்தையுடைய சிவபெருமானுக்குத் துரோகஞ்செய்தவர்களாவார்கள். நரகில்விழுந்து வருந்துவார்கள். எ-று. (ருருஉ)

ஆத லாலிவ னுயிர்செகுத் திலமெனி லழல்வாய்த்
தீதா றுங்கொடி நிரையமுற றிழிவது திணண
நீதி யோர்ந்திலி ரெனமைச் சுரைத்தன னீத்தான்
போதிர் கொண்டென வுரைத்தன னறமெலாம் புரப்போன்.

(இ - ள்) ஆதலால், இவனுயிரையொழிக்காவிடின், தீ நிறைந்த கொடிய ஆழ்ந்த நரகத்தில் விழுந்துவருந்துவது சத்தியம் நீங்கள் இந்நீதியையுணரவில் லையென்று, அம்மந்திரிகட்குரைத்து அவர்களைவிடுத்து, தருமங்களையெல்லாம் பாதுகாப்பவனாகிய அவ்வரசன் ஏவலாளரைநோக்கி இவனைக்கொண்டு போங்க ளென்றுகனாபித்தான். எ-று. (ருருரு)

பகுத்து ரைத்தன யாவையு மரசனுட் படாமைன்
றுகுத்த சிந்தைய ரமைச்சரொன றுரைத்திலா போனார்
தொகுத்த பாதக மருத்துவன மணித்தலை துமித்துச்
செகுத்து நீங்கின ரரசனு மகமகிழ் சிறந்தான்.

(இ - ள்) விரித்துச்சொல்லிய வெல்லாவற்றையும் மன்னவன் சம்மதியா னென்று வருந்திய மனமுடைய மந்திரிகள் ஒன்றுங்கூறாதவர்களாய்ப் போய் விட்டார்கள். பாதகங்களை விளைவித்தவைத்தியனுடைய தலையை வெட்டித்தள் ளித்திரும்பினார்கள். அதன்பின் அரசனும் மனமகிழ்ச்சி மிகுந்தான். எ-று.

அடிகள் போதிரென் றிசைத்தவர்க் காவன புரிந்து
படிமு டித்தலை படப்பணிந் தெழுந்தனன் பலகாற்
றொடிபொ லிந்துறு தடக்கையான் றுளங்கொளிப்பொன்னான்
முடிவு றப்படு செங்கல்செய் தெடுத்தனன் முறையால.

(இ - ள்) சுவாமிகளே! செல்லலாமென்று சொல்லி அவருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகள் செய்து, பூமியில் தன்முடியணிந்த சிரம்படியும்படி பலமுறை நமஸ்கரித்துநின்று, கடகமணிந்த பருந்தகைகளையுடைய அவ்வரசன் ஒளிவிளங்கும் பசும்பொன்னால் கணக்கிடமுடியாத செங்கற்களைச் செய்தெடு த்துக்கொண்டுபோய், எ - று. (ருருசு)

சைவ தேசிகற் களித்தவ னிணையடித் தலத்துப்
பெய்த சிந்தையிற் பணிந்தனன் பணிதலும் பெருவான்
றெய்வ துந்துபி முழங்கின திசைமுகத் தவனும்
மைவ ரும்புயல் வண்ணனும் வானுளோ ரெவரும்.

(இ - ள்.) அச்சிவாசாரியருக்குக் கொடுத்து அவர் உபய பாதங்களில் மனவிருப்போடு பணிந்தான். அப்படிப் பணிந்தவுடனே, பெருமைதங்கிய சுவர்க்க லோகத்திலுள்ள தேவ துந்துபிகள் கோஷித்தன. பிரமனும் கருநிறந்தங்கிய மேகவண்ணராகிய விஷ்ணுமூர்த்தியும் தேவலோகத்திலுள்ள பிறதேவர்களும்.

சோனை மென்மலர்ப் பூமழை சொரிந்தன ரதுவன்றி
வான டைந்தனர் மன்னவற் கினிதருள் வழங்கி
யேனை மன்னரி னின்னையொத் தாரெவ ரென்றார்
கான லர்ந்ததார் வேந்தனுந் தொழுதுளங் களித்தான்.

(இ - ள்.) சோனைமாரிபோல அழகிய மெல்லிய புஷ்பமாரி சொரிந்தார்கள் அத்தேவலோகவாசிகள் யாவரும் ஒன்று சேர்ந்து, அம்மன்னவனுக்கு இனிய திருவருள் பாலித்து மற்றுமுள்ள மன்னர்களில் உன்னைப்போலுள்ளவர்கள் யாவரென்றார்கள். கற்பகச்சோலையில் மலர்ந்த மலர்மாலை சூடிய இந்திரனும் அம்மன்னவனை வணங்கி மனங்களித்தான. எ - று. (௫௩௭)

நினக்கு வேண்டுறு வரமெது நிகழ்த்துதி யென்று
மனத்து ணர்ந்தற மன்னனிம் மாநிலப் பரப்பி
னினக்கொ டும்பிணி யில்லென வருளுதி ரென்றான்
புனத்து ழாய்முகி லயனிது வழங்கினர் போனார்.

(இ - ள்) உனக்குவேண்டிய வரமியாது? சொல்லுகவெனக்கேட்க, தருமத்தைப்பாதுகாக்கும் மன்னவன் தன்மனதில் ஆலோசித்துணர்ந்து இப்பெரிய நிலவுலகில் கூட்டமாகிய தீய பிணிகளில்லையென்று சொல்லும்படி திருவருள் செய்வீராகவெனக்கேட்டனன் அழகமைந்த துளசிமாலை தரித்த திருமாலும் பிரமனும் இவ்வரத்தைக் கொடுத்துப் போனார்கள். எ - று. (௫௩௮)

அரசு வாப்பயிற் றியபெரும் பாகரு மந்நாட்
குரவ னிறப்படு செங்கல்கொண் டளித்திடு மெவரு
மரபி னீங்கிய வணிகனு மருத்துவ னவனும்
நிரைய மெய்தின ரருந்துய ருடற்றுற நின்றார்.

(இ - ள்) பட்டத்துயானையைப்பழக்கிக்கொண்டிருந்த பெரியபாகர்களும், அத்தினத்திலே அச்சிவாசாரியார் மடத்திலிருந்த செங்கற்குவியலைக்கொண்டு வந்து கொடுத்தவர்கள் யாவரும், நீதிதவறிய நிதிவரதனென்னும் அவ்வைசியனும், வைத்தியனும் நரகில் விழுந்து கொடிய துயரத்தால் வருத்தமுற்றிருக்கின்றார்கள். எ - று, (௫௩௯)

அந்த நால்வருஞ் சிவத்துரோ கியரவாக் கருகே
வெந்த சிந்தையின் வெந்துய ருழந்தனர் மீளா
பைந்து ணர்த்தொடை வெண்குடைப் பார்த்திபர் பெருமா
னெந்தை சைவநூ லோங்குற விருநிலம் புரந்தான்.

(இ - ள்) அந்த நால்வகைப்பட்டோரும் சிவத்துரோகிகளாய் வருந் தீவோர்கட்கருகே, மனவருத்தத்தோடு கொடுந்துயரெய்தியவர்களாய் நரகத்தினின்றும் மீளாதிருக்கின்றார்கள். பசிய மலர்களொத்த திக்குகளாலாகிய மாலைதரித்த சந்திரவட்டக்குடையையுடைய அரசர் பெருமானாகிய அம்மன்னவன், எமது சிவபெருமானருளிய ஆகமவிதிகள் தன்தேசத்தில் சிறப்பெய்தப்பெரிய உலகை அரசு செய்திருந்தான். எ - று. (௯௪௦)

இத்தி றத்தின வாங்கவ ரியற்றிய தென்னு
மெய்த்தி றத்தவ யோகிபால விரித்தன னந்தி
யத்தி றந்தெரி யோகியு மதிசய மடைந்தான
மைத்த ணிகள ணியறனைகயை வெருக்கொடு மதித்தான்.

(இ - ள்.) அவர்கள் செய்த சிவத்துரோகங்கள் இத்தகையனவென்று உண்மைத்தன்மைபொருந்திய தவமுடைய சிவயோகியாருக்குத் திருநந்திதேவர் திருவாய்மலர்ந்தனர். அவ்வுண்மையுணர்ந்த சிவயோகியாரும் ஆச்சரியமெய்தியவராய் ஒப்பற்ற நீலகண்டராகிய சிவபெருமான் விதித்த விதிகளினியல்பை அச்சத்தோடு எண்ணினார். எ - று. (௯௪௧)

உருகு சாதலி னுருத்திர வக்கமவெண் ணீறு
பெருகு காதலிற புனைசிவ னடியரிற பிழைத்தார
திருகு வெஞ்சின மறலிபாற றெனபுல மடைந்து
பொருகொ டுஞ்சுழல நிரையமவீழந் தழுப்பது புகலவாம்.

(இ - ள்.) தமது [காதலின்] புத்திராபா லுதிக்கும் உருகுகின்ற மிக்க அன்புடன உருத்திராக்கமணியையும் திருவெண்ணீற்றையும் அணிகின்ற சிவனடியவருக்குத் துன்புசெய்தவர்கள், மாறுபடுகின்ற கடுங்கோபமுடைய காலனிடத்துள்ள இயமபுரஞ்சேர்ந்து, ஒப்பற்ற கொடுமைபொருந்திச் சுழலகின்ற நரகத்திலவிழுந்து வருந்துவதைச்சொல்லுவோம். எ - று. (௯௪௨)

செந்நெல் வேலிசூழ் கிடந்துள சிந்துதே யத்து
மன்னு மாநகா சானந்த மதனிலை வகுப்பின
மின்னி மைத்திடு நவமணி க்காந்தியின விளங்கு
மன்ன மாநகாக்கரனெனு நதனிக்குடை யரசன.

(இ - ள.) செந்நெற்பயிரே வேலிபோற்சூழ்ந்த சிந்து நாட்டில், சானந்தமென்றும ஒரு சிறந்த நகரமுளளது. அச்சானந்த நகரத்தின சிறப்பைச் சொல்லவேண்டுமோனால, ஒளிவீசுகின்ற நவரத்தின காந்தியால விளக்கமெய்தியிருக்கும். அந்தச்சிறந்த நகரத்திற்கு மன்னவன, ஒப்பற்ற சந்திரவட்டக் குடையையுடைய கரனெனனும பெயர் பெற்றவன. எ - று. (௯௪௩)

இரங்கு சிந்தைய ணிகலொழி குணத்தின னென்றும
பரந்தெ ரிந்துள சைவநூ லிடையறப பயிலவான
புரங்க டந்தவ ரடியரிற பொழியுமன பினனுய்ச
சிரந்த லத்துறப படிந்தெழு மியற்கையிற சிறந்தான.

(இ - ள்.) இரக்கமுற்ற மனத்தினன், பகைமைதவிர்ந்த குணத்தினன், எக்காலமும் சிவபரம்பொருளின இயல்பையுணர்த்தும சிவாகமங்களை யிடையீ

டின்றி வாசிப்பவன், முப்புரங்களை யெரித்த சிவபெருமானுடைய அடியர்கள்பால் மிக்க அன்புடையவனாகி, தன் சிரமானது நிலமிசைத்தோயும்படி நமஸ்கரித் தெழுகின்ற தன்மையினால் சிறப்பெய்தியவன். எ - று. (ருசச)

விழிக்கு மாயிரங் கண்ணுடை விண்ணுளோட் வேந்தன்
வழிப்பு லனுசெல மாதவ மியற்றின னெடுநாட்
கொழித்த வன்பொடு மிந்திர னங்கவற் குறுகி
யொழிப்ப ருந்தவ மியற்றினை யென்கொலென் றுரைப்ப.

(இ - ள்.) பார்க்கின்ற ஆயிரங் கண்களையுடைய தேவலோகமன்னனாகிய இந்திரன், தன் கண்ணுக்கு நேரில் வரும்படி வெகுகாலம் பெருந்தவஞ்செய்தான். அதனை யறிந்த இந்திரன் மிகவும் அன்பெய்தியவனாய், அவன் தவஞ்செய்து கொண்டிருந்த இடத்திற்கு வந்து அவனருகேபோய், நீக்கற்கரிய அருந்தவத்தை யாது காரணமாகச்செய்கின்றனையென வினவ. எ - று. (ருசரு)

மகபபெ ருநதனி வேநதனை மன்னவ னோக்கி
யகதது நினனல துணாநதிலன யானென வருளி
மிகப்ப டுநதிறற குலிசமவேண டினனென விளம்ப
நகைககொ டுநதனிக் குலிசமீந தாங்கவ னடநதான்.

(இ - ள்.) மகபதியெனனும ஒப்பற்ற பெருமைதங்கிய இநதிரனை அம் மன்னவன் கண்டு, என மனதில தேவரீரை நீககபபிறிதொருவரை யுணாநதிலே னென்று சொல்லி, வலலபததின மிகக வசசிராயுததததைபபெறக கருதினே னெனககூற, இநதிரன் ஒப்பற்ற ஒளிதஙகிய பெரிய வச்சிராயுதததை அவ் வணணமே தநதுபோயினான். எ - று. (ருசசு)

வாங்கி னானல கொருகுடை நிழறறிய மன்னன்
பூஙக ழறறொழா மனனரைக கொடுவெனம போககித்
தேஙகு நேமிசூழ நெடுநில மொருதனிச சிறநதா
னோங்கு சைவமுற் றோஙகிடப புரநதன னுரவோன்.

(இ - ள்.) உலகமுற்றும வெண்கொற்றக்குடை நிழற்றிய அம்மன்னவன் அதனைப்பெற்றுககொணடு, தன அழகிய பாதஙகளில வணஙகாத பகை யரசர்களைக் கடுஙகாட்டிற்குத துரததி, தேஙகிககொணடிருககும கடல்சூழ்நத நெடிய நிலவுலகததிறகு ஏகமன்னவனாயச்சிறநது, சைவசமயமே மேம்பாடாக எஙகும் பரவுமபடி அறிஞனாகிய அமமன்னவன் ஆளுகை செய்தான. எ - று. ()

இதுவு ணாநதன னிவனொடு மிகலெடுத் துடற்று
மதுவெ னும்பெயா வனைகழன் மனனனீங கிவனே
பொதுவொ ழிநதிடப புரபபவ னெனப்பொருன பொருமிக்
கதுமெ னபபுகுந தசுரவேந தனையுளங் கருதி.

(இ - ள்.) இவ்வரசனோடு பகைகொண்டெதிர்ந்து துன்பு செய்துகொண் டிருந்த மதுவென்னும் பெயரினனாய், அலங்கரிக்கின்ற வீரக்கழல் தரித்த மன்னவன் இதனையுணர்ந்து, இவ்வுலகில் இவனொருவன்றானே பொதுத்தன்மை கடிந்து ஏகராஜ்யாதிபதியஞ்செய்பவனென்று தாளாதவனாய் ஆக்கிரமித்து விரைந்துசென்று அவுணர் தலைவனை மனதிற் கருதி. எ - று. (ருசஅ)

அரிய மாதவ மியற்றின னங்கவ னடைந்து
புரிய வேண்டுவ தியாதென வசுரர்கோன புகல
விரிக டுந்திறற் சேனைகொண் டென்னொடு மேவி
விரிக ழுற்கரன் றன்னொடு மண்டமா மலைந்து.

(இ-ள்.) அரும்பெருந்தவத்தைச்செய்தான். அப்படியே அவ்வவுணர் தலைவன் அவ்விடத்திற்கு வந்து, யான செய்யவேண்டியது யாது? எனவினவ, கொரோமாகிய வல்லபமமைந்த மிகக சேனைகளை யழைததுககொண்டு என்னோடு துணையாகவந்து, வரிந்து கட்டுகின்ற வீரகண்டாமணி தரித்த கரனென்னும் அரசனுடன் பெரும்போரசெயது. எ-று. (௫௪௯)

எனது வெண்குடை யெனக்கென வாக்கிமற் றவனைத
துணைக டுந்திறற் சேனையைத துணிதத்னை யாகி
நினது மாநகர் போகுதி யென்றவ னிகழ்ந்தத
வினவி னின்றவ னதுவுணாந தெரியெழ விழித்தான்.

(இ-ள்) அவன் வெண்கொற்றககுடையை யெனககே உரிததெனச் செய்து, அந்தககரனெனபவனையும வேகததோடு கரோவல்லபமுடைய அவன் சேனைகளையும வெட்டித்தள்ளிவிட்டபின்னா, உனது சிறந்த நகரததிற்குச் செல்வாயாகவென்று அமமதுவெனபோன சொலல, அதனைககேட்டுககொண டிருந்த அவுணாதலைவன (தான்தேவபூஜிதனாகலின, தனமரபிற்குப்பகைவனெனும) அதனை யுணாந்து தீபபொறிசிந்தபபாாததான. எ-று. (௫௫௦)

கரனெ னுமபெயா வேநதனை முதலறக் களைந்து
விரவு சேனையு மடிததவன வெணகுடை யுனககுத
தரநி னைநதன னென்றுதன் னுடைபபெருந தானை
வரவு ரைததலு மடைந்தன ரளவொழி வரததாா.

(இ-ள்.) கரனென்னும் பெயாபெற்ற அமமனனனை உயிரகலும்படி யொழிதது, கலந்துள்ள சேனைகளையும நாசஞசெயது, அவனது வெணகொற் றககுடையை உனககே தருமபடி யெணணினேனென்று சொலலி, தனது பெரிய சேனைகளை வரும்படி சொலலியமாததிரமே, கணககிறந்த சேனாவீரர்கள் யாவரும வந்து சேர்ந்தார்கள். எ-று. (௫௫௧)

மழைகக லநதழீஇ யேழுமோர் காலையின் வழஙகுத
தழைதத பேரொலிப பிரளய மொருவழித தவழநதாங
கிழைதத மாதவப பெருமைய ரிருஞசினத தெதிர்நதார
முழைபப டுமபில வாயின ரிடிக்குரன் முழககா.

(இ-ள்.) (மணி நீா பொன பூ மண கல தீ ஆகிய விவற்றை முறையே பொழியும் சம்வாததம ஆவாததம் புட்கலாவாததம சஙகாரிததம துரோணம் காளாமுகி நீலவாணமெனனுமம) சப்த மேகஙகளும ஒனறுகூடி ஒரு காலத்திற் பெய்ய, மிகக பேரொலியுடன் பெருகிய பிரவாகமானது ஒரு வழியாய வநததுபோல, முன்செயத பெருந்தவததினால மேனமை பெற்றுள்ள அசுரர் கள, துவாரமுளள பிலததையொதத வாயையுடையவாகளாய், இடிமுழக்கம் போலக கார்ச்சிததுககொணடு கடுஙகோபததோடெதிாததாாகள். எ-று. ()

முளைத்த வெண்பிறை முழுமுகிற செருகிய வன்ன
வளைதத வாளெயிற றடுசினக கடுந்திறன் மறவ
ருளைதத வாரிதி யுலகெலா மொருதனி யொருங்கே
திளைதது வாயபபெயுந திறலினா வடவையிற றீயோர.

(இ - ள்.) உதித்த வெள்ளிய பிறைச்சந்திரனைச் சூல்கொண்ட மேகத்திற் செருகிவைத்தாற்போன்ற கூரமைதங்கிய வககிரதந்தங்களையும், கொலலததகக கொடிய கோபததையும கொரேவலலபததையுமுடைய வீராகளும், ஒலிககின்ற கடல்சூழ்நத உலகஙகளையெலலாம ஒனறுககி அவற்றையெல்லாம வாய்கிரமபப் போட்டுககொளளுமவலிமையுடையவாகளும,வடவாமுகாககினியினும கொடியவர்களும. எ - று. (ருருரு)

படாநத செக்கரிற படாநதெழு குஞசியா மேருக்
குடஙகை கொணடெடுத தாடுறுங கொள்கையா கடைநாட்
டொடாநத வெளளநீா புறவடி தோயகலா தொக்கா
ரடைநத சேனைமுற றளபபுறி னயனுககு மரிய.

(இ - ள-) படாநத செவவானமபோலப் பரவி வளாநத தலைமயிருடையவாகளும, மேருமலையை உளளஙகையிலெடுததுப பநதாடுந தனமையுடையவர்களும, ஊழிகாலததிற பெருககெடுககும பிரளயவெளளமானது புறஙகாலும் நனையாத உயாவுடையவாகளும ஆகிய அவுணாகள வநது சோநதாாகள. அஙகே வநத சேனைகளையெலலாம கணககிடததொடஙகின பிரமதேவனுககும அரிதாகும. எ - று. (ருருசு)

எடுதத சககரந தோமரங குநதமவிட டெறிவேல்
பிடிதத கூாமழுப பிணடிபா லஙகொடுங கலபபை
யடுதத தணடுகா முகபபடை பொறுததன ரழலகான்
மடிதத வாயினா மினனெனத துடிததுறும வாளா.

(இ - ள்) கையிற்றுஙகிய சககரம [தோமரம] இருபபுலககை கைவேல் எறிவேல் கையிறபிடிததிருககுமகூரியமழு பிணடிபாலம வளைநதகலபபை சோநதுளள தணடாயுதம வில எனறு சொலலபபடும இவவகையாயுதஙகளை யேநதியவாகளும தீயைசசொரிநதுகொணடு இதழகளை மடிததுககொணடிருககும் வாளையுடையவாகளும. எ - று (ருருஎ)

வநதி றைததனா நோககினன றருவாகோ னரசு
சிநதை மிககெழுஞ சினததினு னவரொடுஞ் சென்றான்
சநத வாாபொழி லுடுததசா னநதமா நகாசூழ
மநத ரமபொரு கொடிநக ரிஞசிசூழ் வளைததாா.

(இ - ள்) ஒருசேரவநது ஆரவாரிததாாகள் அவுணா தலைவனுகிய அரசன் கணடு மனததில மிகுநத கோபமுறறவனுய அச்சேனையோடு சென்றான். சநதன மரஙகளின் நெடிய சோலைசூழநத சானநதமெனனுஞ சிறநதநகரைச்சுறறியுளள மநதரமலையைபபோனறு, கொடிகள நிறைநதிருககும மதிலின் நாறபுறஙகளிலும வளைநதுகொணடாாகள. எ - று. (ருருஅ)

ஈது ணாநதனன் றனிக்குடைக் கரனெனு மிறைவன்
யாது செயதுமென் றிருநதனன வெருவரு மெலலே
யோது வெஞசினத தெயதினன விசயனென் றொருவ
னீதி வேநதனைக குறுகின னிவையிவை நிகழ்த்தும.

(இ - ள்.) ஒப்பற்ற வெணகொற்றக குடையையுடைய கரனென்னுந் தலைவன இதனையுணர்நது, இதற்குபபரிகாரம யாது செயவோமென்று கருதி யிருநதான். இப்படிப் பயப்படுஞசமயததில் விசயனெனனும் பெயரவாயாநத வொருவன் சொலலுகின்ற கடுஙகோபததோடு வநது நீதிமாாககமுடைய மனனவனை யணுகி இப்படி யிபபடிச் சொலலுகினறான். எ - று. (ருகூஎ)

என்னை நீமதித திருநதனை யிபபெருஞ சேனை
முன்னா யான்புகின முதலற முடிவது சரத
மின்ன சிஙகையி னையுற லாதிநாட டொடஙகி
யுன்னு மாணிட மடஙகலி னருசசனைக குரியேன்.

(இ - ள) நீ இநதபபெரிதாயிருககுஞ் சேனையைப பெரிதாக மதித்திருக்கினற தெனனகாரணம? நான ஒருவன மாததிரம முறபடடுப்போவேனாயின அவை யாவும அழிவது நிச்சயம, அபபடியானபடியால உன மனதில இது காரணமாக ஐயமுறவேணடாம. என இளமபருவமுதல் யாவரும தியானிக கினற நரசிஙகததின பூசைககுரியவனாயிருககினறேன. எ - று. (ருகூஅ)

வருதி யெனறனுங கணததிடை யெயதுமவா ளசுரா
குருதி யூறறறக குடிபபது மடுததவெஞ சேனை
யொருகை வாரிவாயப பெயவது தீயரெங கொளிபபார்
கருதி யோாபுடை நினறுநீ யதனிலை காணடி.

(இ - ள.) நீ யெனனோடு வரககடவாய இஙகெயதிய ஒளிதஙகிய அசுரர்களின உதிரததை ஒரு கணததிறகுளளாக மீணடும சுரககாமற பருகுவதையும; நிரமபிய கொடிய சேனைகளை ஒருகையாற் சோததுவாரி வாயிலிடடுககொள்வதையும. அததீயோாகள எஙகுபபோய மறைவாாகளோ அதனையும நீ கருதிக கொணடு ஒரு புறததிலிருநது அதன நிலையைக காணபாயாக. எ - று. (ருகூகூ)

நினக்கு வசசிர மளிநதவற கடுமபகை நிச
ரினததொ டினறெடு முடிவது காணடியா லிறைவ
நினைதத காரிய முடிககுவ னெழுகென நிகழததக
கனைபொ லனகழன மனனனோாந தெழுநதனன காணபான்.

(இ - ள.) மன்னவனே! உனககு வச்சிராயுதமளிதத இநதிரனுககுக கொலலததககசததுருககளாகிய அசுராகள, தஙகள கூடடததோடு இததினத திலேயே யழிவதைககாணபாயாக நீ யெணணிய கருமததை முற்றுவிக்கின்றேன. புறப்படுகவெனறுரைகக, சததிககினற பொனனாலாகிய வீரகணடாமணி யணிநத பாதஙகளையுடைய கரனெனனுமரசன இவறறை யறிநது அபபடியே நிகழ்வனவறறைககாணபபுறபபட்டான. எ - று. (ருசுo)

வகுதத சேனைகொண டரசனோ மருங்குறின றொழியத
தொகுதத மநதிரத துணைமைநதன னுளததொடுநேதாய

நெகிழ்த்த சிந்தையி னின்றனன் விசயனந் நிலையிற்
செகுத்தசீற்றமிக் கெழுந்தது மானிடசிங்கம்.

(இ - ள்.) மிகுத்துள்ள சேனைகளைத் தன்னுடனழைத்துக்கொண்டு அம்மன்னவன் ஒருபுறத்திலிருக்க, விசயனென்பவன் நரசிங்கமூர்த்திக்குரிய தொகுப்பாகிய மந்திரத்தின் நிலைமையைத் தன் மனதிற் பதியும்படி உருக்கமான சித்தத்தோடிருந்தான். அப்பொழுது நரசிங்கமூர்த்தமானது அழிக்கத்தக்க கோபாதிகயத்துடன் தோன்றியது. எ - று. (டுசுக)

கைக ளாயிர மாயிரங் காவதங் கடந்த
மொய்கொ ளம்புயந் திகந்தமுற் றிரிஞ்சின முடிபோய்
வெய்ய விண்முக டளந்தது வெள்ளெயிற றகலவாய்ப்
பைய ராமுடி நெடுநிலம் புதைத்தன பதங்கள்.

(இ - ள்.) அம்மூர்த்தியின் கைகள் அநேக ஆயிரங்காதங்களைக்கடந்து நீண்டிருந்தன, வலிமைதங்கிய அழகிய தோள்கள் எட்டுத்திசைகளின் முடிவும் நிரம்பின. திருமுடி மேலோங்கிப் பெரிய ஆகாயமுகட்டையளாவியது, திருவடிகள் வெள்ளிய பற்களையும் அகன்ற வாயையும் படத்தையுமுடைய ஆதிசேடன் தன் முடியிற்றாங்கும் நீண்ட நிலவுலகத்தை யமிழ்த்தின. எ - று. (டுசுஉ)

வாரி வாயிலிட் டதுக்குறு மாதிரப் பொருப்பிற்
சோரி தூங்குறப் புரட்டுறுந் தொளைத்துணை நாசி
சேர வாங்கிமீண் டுயிர்த்திடுஞ் சினவுகிர்க் கரத்தாற்
பேரு டற்பொறை நுரயபெனக் குழம்பெழப் பிசையும்.

(இ - ள்.) சேனைகளிற் சிற்சிலவற்றைச் சேர்த்து வாயிற்போட்டு மெல்லும். அஷ்டதிசைகளிலுள்ள அஷ்டகுலபர்வதங்களில் உதிரமொழுகப்புரட்டும் நாசியின் இரு தொளைகளிலுண்டாகும் சுவாசத்தால் உட்கொண்டுபோய மீண்டும் வெளியேதள்ளும். போர்செய்கின்ற நகங்களையுடைய கைகளால் பெரிய உடற்சுமையை [நுளம்பு] கொசுப்போல மதித்து உதிரக்குழம்புண்டாம்படி பிசையும்.

தின்னு மென்புட னெறுகெனக் கறித்திடுஞ் சினத்திற்
றென்னி லம்பட்டத் தேய்த்திடு மவுணர்தந் தொகையைப்
புன்னு னிப்பனி சிதைந்தெனப் புறப்படத் திட்றுங்
கின்ன கங்கொடு பொதுத்திடுங் கிள்ளுப் கிளைக்கும்.

(இ - ள்) சிற்சிலவற்றை, எலும்போடு நெறுக்கென்று கடித்துத்தின்னும். கோபத்தோடு அவ்வவுணர் கூட்டத்தைப் பழமையாகிய பூமியிற் கிடக்கும்படி தேய்த்துவிடும். உதிரமானது அறுகம்புல்லின் முனையிற்பொருந்திய பனித்துளிபோல வெளிக்காணும்படி, விரல்களில் ஒட்டிய நகங்களால் தொளைத்துக் கிள்ளிக்கிள்ளி மேற்படுத்தும். எ - று. [கினகம் - கின்னகம்.] (டுசுச)

கொடுங்கை மாகரி கோடுதொட் டிழுத்தொரு கோடி
நெடுங்கை யானைமதத் தகம்பிளந் தோசகூறு நெடுநீர்க்
கிடங்கு போய்விழ ஆதுறுங் கிளர்பெருஞ் சேனை
நடந்து கொன்றிடுங் குருதியா றிடையற நடக்கும்.

(இ - ள்.) பெரிய யானைகளின் துதிக்கையையும் தந்தங்களையும் பற்றி யீர்த்து, நெடிய துதிக்கையுள்ள ஒரு கோடி யானைகளின் மத்தகத்தைப்பிளந்து மிக்க நீர் நிரம்பிய கடலிற்சென்று விழும்படி எறிந்து ஆரவாரிக்கும். விளக்க முற்ற பெரிய சேனைகள்பாற் சென்று கொல்லும். அப்போது பெருக்கெடுக்கும் உதிர நதியானது ஓயாது பெருகிக்கொண்டிருக்கும் எ - று. (ருசஙி)

அளவில் சேனைகொண் டெறும்வலித் தடக்கையி னடக்கி
வளைத டங்கடற் குமிழிவின் றிரைதெழ மாட்டுங்
கிளைநெ டுந்தலை கடித்துமிழ்ந் தெதிருறக் கிடைத்தார்
முளையெ யிற்றடி பொதுத்துறுங் கடற்படு முழங்கும்.

(இ - ள்.) எண்ணில்லாத சேனைகளைபபெருவல்லபமுடைய பரந்த கரங் களாற் சேர்த்துப்பற்றிக்கொண்டு, உலகத்தைச்சூழ்ந்து பரந்துள்ள கடலிற் குமிழிகள் தோன்றி யொலிக்கும்படி எறியும் நேரில்வந்த பெரிய சேனைத்தொ குதியின் தலைகளைத் தறிபோன்ற பற்களால் தொளைத்துக்கடித்து உமிழும். கடன முழக்கென்று சொல்லும்படி காச்சிக்கும். எ - று. (ருசசு)

அதிர்பெ ருங்குர லானைகொண் டநீகவெஞ் சேனைக்
குதிரை மாக்கடல் குழப்பிடுங் குதிரைகொப் புளித்த
வுதிர வாற்றிடைத் தோபுதைத் தமிழ்ந்திடு மொழித்து
மதுகை யாருயிர் குடித்ததம மானிட மடங்கல்.

(இ - ள்.) அதிர்கின்ற பெரிய சர்ச்சனையுடைய யானையின்மேலும் கடல் போலப் பெருகிய குதிரையினமேலும் ஏறியிருந்த பெரிய சேனைகளைக் கலங்கச் செய்யும் குதிரைகள் மிதந்துகொண்டிருந்த உதிர நதியிலே தோகளைப் பூமியி லழுந்தும்படி யழுத்தும். அந்நரசிங்கமூர்த்தம இந்நால்வகைச் சேனைகளின் வலிமை யழித்து அவற்றின் உயிரையுண்டது. எ - று. (ருசஎ)

பொருசி னத்தெழு மசுரர்கோன் றிரடபடை போக்கி
யொருவ னாகியோட் டெடுத்தன னொருதனிக் கவிகைக்
கருணை வேந்தனு முவகையங் கடலொடு களித்தான்
மருவ ருந்திறல் விசயனைத் தொழுதனன் வழுத்தி.

(இ - ள்.) போர்செய்யத்தக்க கோபத்தோடெதிர்த்த அவ்வசுரத்தலைவன், தன் திரண்ட நால்வகைச் சேனைகளையும் இப்படி யழித்தமாத்திரத்தில், தான் தனிப்பட்டவனாகி யோடினான். ஒப்பற்ற ஒன்றியாகிய சந்திரவட்டக்குடையை யுடைய தயாளுவாகிய கரனென்னும் அம்மன்னனும் களிப்பென்னும் கடலி லமிழ்ந்து மகிழ்ந்து, ஒருவருக்கும் பொருந்துதற்கரிய வலிமைதங்கிய விசயனென் பவனைத் துதித்து வந்தனைசெய்தான். எ - று. (ருசஅ)

ஆய காலையின் மானிட மடங்கலை யகற்றி
மேய திண்டிறல் விசயனும வெள்ளவெம படையுந்
தூய வேந்தனு மீண்டனா தொன்னக ரடைந்தார்
போயொ ளிக்கதி ரணிமணி மண்டபம புகுந்தார்.

(இ - ள்.) அச்சமயத்தில், நரசிங்கமூர்த்தத்திற்கு விடைதந்து அனுப்பி விட்டு, பொருந்திய மிக்க வல்லபமுடைய விசயனும் வெள்ளக்கணக்காகிய

பெருஞ்சேனைகளும் புனிதனுகிய அவ்வரசனும் அங்கேயிருந்து திரும்பிப்போய தங்களுக்குரிய பழமையாகிய நகரத்திலடைந்து, ஒளி வீசுகின்ற இரத்தினங்க ளமைந்த மண்டபத்திற் புகுந்தார்கள். எ - று. (ருசுகூ)

விசைய னைத்தனி யாசனத் திருத்தினன் வேந்தன்
வசையி லன்பொடும் வழுத்தின னெங்குல மன்னர்க்
கசைவி லாப்புக ழளித்தனை யெனவள வளாவிக்
குசைநெடும்பரிப் புரவலன் வேண்டுவ கொடுத்தான்.

(இ - ள்) அரசன் விசயனென்பவனை ஒப்பற்ற ஆசனத்தி லுட்காரச் செய்து, பழிப்பற்ற அன்போடு துதித்து, என் குடியிற் பிறந்துள்ள மன்னர்க ளெல்லாருக்கும் அழியாத கீர்த்தியைப்பாலித்தாயென்று அளவளாவிக்கூறி, கடிவாளம் பூட்டிய பெருங் குதிரையையுடைய அரசன் அவ்விசயனென்ப வனுக்கு வேண்டிய திரவியங்களைப் பரிசாகக்கொடுத்தான். எ - று. (ருசு0)

இறந்து நாள்பல கழிந்தன விருங்கழ லிறைவன
சிறந்து மன்பதை புரக்குநாள விசயனிற சிறந்து
பிறந்த மைந்தனோர் சூரனென் றுளனவன் பிறழாத்
துறந்த சிந்தையன் பிறாமனை யகவுறுங் தொழிலான்.

(இ - ள்) இப்படிப் பல தினங்கள் கழிந்துபோயின பெரிய வீரககழல் தரித்த கரனெனனும அம்மன்னவன், சிறப்புபெற்ற பிரஜைகளுப மன்னுயிர்களைத் தன்னுயிர்போலக்காத்து வருங்காலத்தில், விசயனென்பவனுக்குப் பெருமையோ டுதித்த ஒரு புதல்வன் சூரனென்னும் பெயரேற்றவனுயிருந்தான. அவன் முறை தவறி நீதி கடந்த சித்தமுடையவன. பிறா மனைவியரைச்சேரும் விபசாரத் தொழிலுடையவன். எ - று. (ருஎக)

இயங்கு நாளையி னிந்நகர்ச சிவனடிக் கமல
முயங்கு சிந்தையன் றருமனென றுளனொரு முதியோன்
வயங்கு வெண்டுக ளுருத்திர மாமணி வனைவான
றயங்கு கொன்றையோன் சைவநூல வளாத்தவன சரிப்பான.

(இ - ள்) இப்படி நடக்குங்காலத்தில, சானந்தமென்னும் இந்நகரிலெழுந் தருளிய சிவபெருமான் பாததாமரைகள் குடிகொண்ட சித்தமுடையவனும, தருமனென்னும பெயரேற்றவிருத்தனும், விளக்கமுற்ற திருவெண்ணீறும் உருத்திராக்கமணியும் அணிபவனும, சிறந்த கொன்றைமலாமாலை தரித்த சிவபெருமானுடைய சிவாகம நெறிகளைப்போற்றி வருவோனுமாகிய ஒருவ னிருந்தான். எ - று. (ருஎஉ)

சரிக்கு மன்னவன் றன்மனைக் களவழிச் சார்ந்து
சுரித்த வார்குழற் றேனைக்கற பழித்தனன் சூரன்
விரித்த வார்கலை யுருத்திர மெனமணி பொதிக்து
பொருத்தி வைத்ததவை யவனெடுத் துடன்கொடு போனுன்.

(இ - ள்.) இப்படி வசிக்கும அத்தருமன் வீட்டிற்குத் திருட்டுவழியா யெய்தி, சூரனென்பவன் சுரித்தலையுடைய நீண்ட கூந்தலைப்படைத்த அவர் மனைவியின் கற்பைக்கெடுத்தான். உருத்திராக்கமணியை உள்ளேவைத்துச் சுருட்டியிருந்த விலையேறிய பெரிய பீதாம்பரமொன்றையும எடுத்துக்கொண்டு போய்விட்டான். எ - று. (ருஎரு)

மறுத்து நோக்கலுங் கண்டிலன் றருமனம் மனையா
ளிறுத்த சிந்தையட் கேட்டலு மாங்கவ ளிசையாள
கறுத்த நெஞ்சகச் சூரனக் கலையெடுத் துடுப்பப்
பொறுத்து ருணிது வென்கலை யென்றெதிர் புகன்றான.

(இ - ள்.) தருமன் மீண்டும் அவ்வஸ்திரத்தைப்பார்த்தபோது காணாத வனாய், கற்புகெட்டமனமுடைய தன் மனைவியைக்கேட்கையில், அவள் அதனைச்சொல்லவில்லை. வஞ்சகநெஞ்சினனான சூரனென்பவன அப்பீதாம்பரத் தையெடுத்து அணிந்துகொண்ட வுடனே, அதைத் தருமன கண்டு மனந்தாளாத வனாய் இது என்னுடைய பீதாம்பரமென்று அச்சூரனுக்கெதிரே சொன்னான.

தரும னாங்கது வுரைத்தலுந் தழலவிழி புரட்டி
வெருவ நோக்கின னுருத்தனன வெந்திறற சூர
னொருவி யாங்கவன றதைபா லுரைத்தலு மவனைக்
கருதி நோக்கில னன்னவ னடுதிறற களியால.

(இ - ள.) தருமன அப்படிச சொன்னமாத்திரத்தில, கொடிய வல்லப முள்ள சூரன, தீபபோற சிவந்த விழிகளையுருட்டி அச்சமெய்துமபடி நோக்கிக் காச்சலைசெய்தான. தருமனென்பவன சூரனைவிட்டு நீங்கித்தந்தையாகிய விசயனபாற்சென்று சொன்னபோது, அவன யாரையும வெல்லும வல்லப முள்ள களிபபினால அத்தருமனை (இறுமாப்பினால) மதித்துப்பாாக்கவிலலை.

இனியி தறகுநாஞ் செய்குவ தெதுவென வெண்ணிப
பனிநெ டுங்குடை வேந்தனுக் கீங்கிது பகாந்தா
னனைய வேந்தனுஞ் சூரனை யிரந்திரந் தருள
வினையி ருந்தவா வரசனோந் துரைத்தன வினவான.

(இ - ள) இனி யிதற்கு நாம யாது செயவோமென்றுலோசித்து, குளிர்ச்சி தங்கிய நெடிய சந்திரவட்டக்குடையையுடைய மன்னவனுக்கு இச்செய்தியைச் சொலலினன அதுகேட்ட கரனென்னும அம்மன்னவனும சூரனென்பவனைப் பிராாத்தித்துப்பிராாத்தித்துசசொலலியும, தீவினைய நுபவமிருந்தபடியால அம மன்னவன தெளிந்தோதிய சொறகளைக்கேட்கவிலலை. எ-று (ருஎசு)

போதி யென்றுரைத் தடுதிறல விசயனிற் புகன்றான
காது வெஞ்சினந் தலைக்கொளத் தருமனைக் கண்ணுற்
றோது நீதிவிட் டுரைத்தன னுருத்தனன விசயன
மீதி வாநதெழு கவிகையன பின்னரும விளம்பும.

(இ - ள) அரசன, நீ செல்கவென்றவனை யனுப்பிவிட்டு, வெற்றிகொள் ளத்தக்க வல்லபமுள்ள விசயனபாற சொலலினன அபபோது விசயனென் பவன கொலலத்தக்க கடுங்கோபமதிகரித்தபடியால தருமனை நோக்கி, யாவரும சொலலுகின்ற நீதிதவறிய வாாத்தைகளைக்கூறிக் காசசித்தான. மேலோங்கி விளங்கும வெணகொற்றக்குடையையுடைய அம்மன்னவன மீண்டுஞ் சொலலு கின்றான. எ - று. (ருஎஎ)

என்பெருக்கணி யெம்பிரா னடியவர்க் கென்றுந்
துன்பிழைத்தவ ரிழிநது று நிரையம்வாய் திறவா
வன்பி ழைத்தவர் கயிலைவீற் றிருப்பவ ரவற்றை
முன்பு ரைததிடு சுருதியா லுணர்கென மொழிந்தான்.

(இ - ள்.) எலும்பு மாலையையும் வெள்ளெருக்கமாலையையுந் தரித்துள்ள எமது சிவபெருமானுடைய அடியார்களுக்கென்று துன்பு செய்தவர்கள வீழ்கின்ற நரகம் வாய திறவாமல், அததகைய அடியார்களுக்கு அன்புசெய்தவர்கள் திருக்கைலாயத்தில் வீற்றிருப்பவர்களாவார்கள். அவற்றை நீ முன்பு ஓதியுணாநத வேதததால் உணரககடவாயென்று சொன்னான். எ - று. (௬௭௮)

சைவ மாரிவ ஞரிவன றறுகணன் பாவி
வையம யாவையுங கஙகுலிற கவாநதெழு மறவன்
மைவ ருங்குழற கணிகையா மனைதொறுஞ சுழல்வான்
பொய்வ ழுஙகுவன புலையரிற புலவுணும புலையன.

(இ - ள்.) சைவம எததகையது? இவன எததகையன்? இவனே கொடுமனமுடைய கொலைபபாதகன. உலகமுழுவதையும இராககாலததிற களவு செய்யுங கொரேன. மேகமபோலுங கரிய கூநதலையுடைய தாசிகள வீடுகளிலெல்லாம திரிநதுகொணடிருப்பவன பொயமமொழிபுகலபவன. புலையா வீட்டிற் புலாலுணணும புலையன. எ - று. (௬௭௯)

இவனை வேண்டினை யிருநதவத தீன்றவென மதலை
யவனை வேணடலை யவமதித தனையென வழலாக்
கவாத டமபுய வேநதனைக கணிததிலன விசயன்
புவன நாதனைக கைதொழா தெழுநதனன் போனான.

(இ - ள.) இததன்மையானவனை விருமபி, பெருநதவததினாற் பெற்ற அப்புததிரனை நீ வெறுததவனாய அவமதிததாயென்று கோபமெயதி, திரணடு விசாலித்த தோளகளையுடைய மனனனும உலகபரிபாலகனுமாகிய அவனைப் பொருட்படுததாதவனாய, விசயனென்பவன கைகுவிதது வணஙகாமல புறப் பட்டுபபோயவிட்டான. எ - று. (௬௮௦)

கரிய கண்டனைப பணிநதவ னருசசனை கருதி
யுரிய நீறணிந தாருததிர மாமணி புனைநத
பெரிய ருமபரிற பெரியரென றுளததொடும பேணு,
வரிநெ டுஞசிலைச சூரனைத துணிததிட மதியா.

(இ - ள.) திருநீலகணடததையுடைய சிவபெருமானை வணஙகி அவருடைய பூசையையே கருதி, அதறகுரிய திருவெணணீறணிநது சிவநத உருததிராககமணிமாலையணிநத பெரியோாகள, தேவாகளைககாட்டிலும மேம்பட்டவர்களென்று, மனவொற்றுமையோடு வழிபாடுசெயயாத, வரிநதுகட்டிய நெடிய வில்லேநதிய சூரனென்பவனை வெட்டுவதற்கு நிச்சயிததது. எ - று. (௬௮௧)

ஏவ லாளரிற் சூரனைக கொணர்திரென் றிசைத்தான்
வாவி யோடினா கொணாநதனர் விடுததலு மன்னன்

பாவி யீங்கிவன் றனைக்கொடு படுகளத் திருத்தி
யாவி வீட்டுதி ரென்றுரைத் துருத்துமின் றழன்றான்.

(இ - ள்.) தன்னேவலாளர்கள்பாற் சூரனையழைத்து வருகவெனக் கட்டளை செய்தான். அவ்வேவலர் அங்ஙனமே விரைந்தோடி அவனை யழைத்துக்கொண்டு வந்துவிட்டவுடனே, அரசன் இங்குள்ள இப்பாவியைக் கொண்டுபோய்க் கொலைக்களத்திலிருக்கும்படிசெய்து இவனுயிரைப்போக்குங்களென்று ஆஞ்ஞா பித்துகர்ச்சித்துக்கோபித்தான். எ - று. (௫அஉ

பிணித்தி ருக்கினர் மணிநெடுந் தாமமொடும் பிணித்துத்
தணிப்ப ருஞ்சினத் தொடுமடுங் கொலைக்களஞ் சார்ந்தா
திணித்த பாதக னெஞ்சக மழுக்கொடு சிதைத்தா
ரணித்து ரைத்திடக் கடுந்திறல் விசயனீ தறிந்தான்.

(இ - ள்) (மன்னவன் கட்டளை பெற்ற ஏவலாளர்கள்) இறுகச்சேர்த்துக் கட்டிக்கொண்டு தணிதற்கரிய கோபத்துடன் வதைசெய்யுங் கொலைக்களத்தை யடைந்தார்கள். கடும்பாதகனாகிய அசூரனது நெஞ்சை மழுவாயுதத்தினால் பிளந்தார்கள். கொடூரவல்லபமமைந்த விசயனென்பவனைச் சிலர் சென்று நெருங்கிச்சொல்ல அவன் கேட்டறிந்தான். எ - று. (௫அ௩)

எழுந்த சீற்றமிக் கெழுந்தன னரசனை யெதிர்ந்தான்
மொழிந்து ரைத்தன யாவையும் பற்பல மொழிந்தா
னழுங்கு சிந்தனைத் தருமனை யருகுகண் டறிந்தான்
முழுங்கி முடடிநு னின்னுயிர் முடிக்குவ னென்றான்.

(இ - ள்) விசயன் தனக்குண்டான கோபமதிகரித்து அங்கிருந்துமவெளிப் பட்டு மன்னவனுக்கு நேரேவந்து, சொல்லத்தகாத சொற்களாயுள்ளவற்றை யெல்லாம் பலவிதமாகச்சொன்னான். வருந்தும் மனமுடைய தருமனென்ப வனையும் அருகே யிருக்கப்பார்த்துணர்ந்து, பெருங் காச்சனைசெய்து குத்தி உன் அரிய உயிரை யகற்றுவேனென்றான். எ - று (௫அ௪)

வேந்த நின்னுடைக் கவிகையு மடுபுய விறலும்
வாய்ந்த செல்வ முமம யானறா வந்தன மதியா
யேந்த லென்னுயிர்ப் புதல்வனைக் கொன்றனை யினிநீ
போந்த பேரர சளிக்குவை யென்றனன் போனான்.

(இ - ள்.) அரசனே! உன் வெண்கொற்றக்குடையும், பகைவரைக்கொல்லுந் தோள்வலியும், நீயடைந்தசெல்வமும், நான் கொடுக்கக்கிடைத்தனவென்பதைக் கருதாமற்போயினை. என் உயிரையொத்த புதல்வனாகிய தலைவனைக் கொலைசெய் தாய். ஆதலால் இதுகாறும் நடத்திவந்த பெரிய அரசுரிமையை இனி நீ நடத்துவையோ என்று சொல்லிப்போயினன். எ - று. (௫அ௫)

பாவ மோர்ந்திலன் சிவனடி யாரெனப் பாரான்
வீவ தாக்குவ னெனக்குறித் தென்னையும் வெருவா
னுவ தேதென விருந்தவா ளரசனெஞ் சழன்று
காவல் செய்தவன் மனைவயிற் பொருளெலாங் கவர்ந்தான்.

(இ - ள்.) விசயன், பாவத்தையும் அறியவில்லை சிவனடியாரென்றும் கருதவில்லை. கொன்றுவிடுவோமென்றெண்ணி என்மேலுங் கோபித்துக்கொண்டான். இதற்கு யாது செயவேனென்றெண்ணியிருந்த உடைவாளோதிய அம்மன்னவன், மனங்கொதித்து அவ்விசயன் வீட்டிற் காவல்வைத்து அங்குள்ள பொருள்களெல்லாவற்றையும் அபகரித்துக்கொண்டான். எ - று. (௬௮௬)

வேனில் வேளையோர் விழித்தழன் மாட்டிய விமலற்
கான தொண்டனைப போற்றின னுடையு மணியு
மேனை யாவையுங் கொடுத்தன னேகுதி யென்றான்
மான வேற்படை விசயனொன் சகத்திது மதித்தான்.

(இ - ள்) வசந்த காலத்திற்குரிய மன்மதனை ஒப்பற்ற தமது தீவிழியாற் பொடிபடுத்திய சிவபெருமானுக்குரிய அடியவனாகிய தருமனைத் துதிசெய்து, வஸ்திரங்களும் ஆபரணங்களும் மற்றுள்ளவையும் பரிசாகக்கொடுத்து, நீர் செல்லுகவென விடைதந்தனுப்பினன். சத்துருக்களுக்கு அச்சந்தரும் வேற்படைதாங்கிய விசயன் தன்னுள்ளத்தில் இப்படி யெண்ணினன். எ - று. (௬௮௭)

வரம்பி கந்தன னரசனென் மனையகம் புகுந்து
கரந்தி யாவையு மெடுத்திடப் பணித்தனன் கன்றாற்
றிரங்கி யீங்கிவன் மனைவிவீழ்ந் தரற்றுற விவனைச
சிரந்து ணிப்பது புரிவனென் றரசவை சென்றான்.

(இ - ள்.) இம்மன்னவன் தன்னுடைய நீதியினின்றுந் தவறினன். என் வீட்டினிற் பிரவேசித்து என் பொருள்கள் எல்லாவற்றையும் எடுத்தபகரிக்கும்படி கட்டளை கொடுத்தான். ஆனபடியால் இவன் மனைவியானவள் பார்த்துத் துக்கமெய்திக் கீழேவிழுந்து புரண்டு புலம்பும்படி இம்மன்னவன் சிரத்தைத் துண்டிப்பேனென்று அரசசபைக்குச்சென்றான். எ - று. (௬௮௮)

சென்று நின்றுள மந்திரத் தொருவழி செலுத்த
வன்ற டக்கையிற் பிறந்தது மானிட மடங்க
லன்ற கண்டமுந் திசைகளு மதிர்ந்திட வதிரா
வொன்றி யோர்ந்துற நின்றதவ் வுருசின மடங்கல்.

(இ - ள்.) அங்கே போயிருந்து தன் மனதை யொருவழிப்படுத்தி நரசிங்கமூர்த்தியின் மந்திரத்திற் கருத்தைச்செலுத்தவும், அவனது வலிமையமைந்த பரந்த கையினின்றும் அந்நரசிங்கமூர்த்தம் தோன்றியது. அப்படித்தோன்றிய நரசிங்கமூர்த்தம் அப்பொழுது எல்லா லோகங்களும் எட்டுத்திக்குகளும் அதிரும்படி கோஷித்து மனம்பொருந்தி யுணரும்படி நின்றது. எ - று. ()

வெற்றி வேற்படை விசயனை நோக்கிவெண் கோட்டுப்
பெற்ற மூர்ந்தவ னடியாரிற் பிழைத்தனை யுலவா
துற்ற பாதக னுனைவிடே னென்றுருத் தெழுந்து
தெற்றெ னப்புகுந் தெடுத்துயிர் குடித்தது சீயம்.

(இ - ள்.) வெற்றிதங்கிய வேலாயுதமேந்திய விசயனை நரசிங்கமூர்த்தமானது பார்த்து, கொம்புகளையுடைய வெள்ளிய இடபத்தின்மீது ஆரோகணஞ்

செய்தருளும் சிவபெருமானுடைய அடியவர்களுக்குப்பிழைசெய்தாய். ஆதலால் எக்காலத்திலும் நீங்காத பாதகமுடைய உன்னை விடமாட்டேனென்று சொல்லிக்கோபித்தெதிர்த்து அதிசீக்கிரமாக அவனை நெருங்கி அவனையெடுத்து உயிர் குடித்தது. எ - று. (ருகூ0)

விளங்கு வாட்படை வேந்தநீ வெள்விடை யவன்றா
ளளந்த றிந்தனை யடியருக் கடியனு மானாய்
யுளங்கொ ளன்பொடுஞ் சைவநூ லோங்குற வோங்கித்
துளங்கு வெண்குடை நிழற்றுதி யெனப்பல சொல்லி.

(இ - ள்.) ஒளி வீசும் வாட்படைதாங்கிய அரசனே! வெள்ளிய இடபவாகனமூர்த்தருளும் சிவபெருமான் பாதங்களைப்பத்தியோடு அளவுபடுத்தி அறிந்தனை. அச்சிவபெருமானுடைய தொண்டர்களுக்குத் தொண்டனுமானை. மனதிற்பதித்த உண்மையன்போடு சிவாகமங்கள் அபிவிர்த்தியெய்தும்படி நீ செழித்து, ஒளிதங்கிய வெண்கொற்றக்குடையை நிழற்றக்கடவையென்று பல வார்த்தைகள் சொல்லி. எ - று (ருகூக)

நீறு கண்டிகை தரித்தவர்க் கண்குறி னெகிழ்ந்
தூறு மன்பினோ டுவப்புறி னொண்மணிக் கயிலை
யேறு யாத்தவ னிருங்கதி யெய்துவை யெமக்குங்
கூறி லக்கதி கிடைப்பரி தெனமனக் கோடி.

(இ - ள்.) திருவெண்ணீறு உருத்திராக்கமணிமாலை இவற்றைத் தரித்தவர்களைக்கண்டால், மனமுருகிப்பெருகிய அன்போடு களித்தால், ஒளிதங்கிய இரத்தினமயமான திருக்கைலாயத்தில் வீற்றிருந்தருளும் இடபக்கொடியைத் தாங்கிய சிவபெருமானுடைய பெருமைதங்கிய பதவியையடைவாய். சொல்லுமிடத்தில், எமக்கும் அப்பதவி கிடைப்பது அரிதென்று மனதிற் கருதுவாயாக.

எண்ணி லூழ்பல விருநில மபுரக்குதி யிடையே
யண்ண னின்னுழை யரந்தையா ரியற்றினு மந்நாட்
கண்ணு றப்பெறிற் கதுமென வருதுமென் றிசைத்து
மண்ண கந்தொழ மறைந்தது மானிட மடங்கல்.

(இ - ள்.) கணக்கில்லாத பல ஊழிகள் இப்பெரிய நிலவுலகத்தைப் பரிபாலனம்புரிவாயாக. இதனிடையே, பெருமைதங்கிய உன்னிடத்தில் எவரேனும் உன்னைத் துன்புசெய்தாலும், அப்பொழுது நம்மைத் துதிசெய்வாயாயின், அதிசீக்கிரத்தில் வந்து உதவிசெய்வோமென்று சொல்லி, நிலவுலகிலுள்ளார் யாவரும் வணங்கும்படி அந்நரசிங்கமூர்த்தம் மறைந்தது. எ - று. (ருஅரு)

முக்க ணெம்பிரா னடியவர்ப் பிழைத்திவை முயன்ற
மிக்க திண்டிறல் விசையனும் விசையனீன் றுதவப்
புக்க மைந்தனுஞ் சிவத்துரோ கர்களொரு புடையே
தொக்க வெந்தழற் கும்பியுட் கிடந்துளந் துயர்வார்.

(இ - ள்.) திரிநேத்திரங்களமைந்த எமது சிவபெருமானுடைய தொண்டர்களுக்கு அபராதஞ்செய்து இப்படி நடத்திய, மிகப்பெருவல்லபமமைந்த விசய

னென்பவனும் அவ்விசயன் பெறும்படி யுதித்த மகனாகிய சூரனென்பவனும் சிவத்துரோகிகளுக்கு ஒருபுறத்தில் தொகுதியாயுள்ள கொடிய தீமையான கும்பிபாக நரகத்தில் வீழ்ந்து மனம் வருந்துவார்கள். எ - று. (௫௬௪)

நரக மன்னவ ருழக்குவ திதுவென் நந்தி
பரவ ருஞ்சிவ யோகிமுற் றுணர்ந்துளம் பதைத்தா
னரக ராவென வுசசிகை கூப்பின னயர்ந்தான்
விரத ஞானமுறை யாங்கவன் விரித்தன வியந்து.

(இ - ள்.) அத்தகையினர் நரகத்தில் வீழ்ந்து வருந்துவதற்கு இதுவே காரணமென்று திருநந்தியெம்பெருமான் திருவாய்மலர, யாவரும் பணிதற் கரிய சிவயோகி, இவற்றையெல்லாந்தெரிந்து மனம்பதைத்து, அந்நந்தி பகவான் திருவாய்மலர்ந்த சிவாகமங்களிற் சொல்லிய முறைமையான கட்டளைகளைக் கேட்டு, ஹரஹரவென்று சிரமிசைக்கைகுவித்துப் பரவசமாயினர். எ - று. ()

கலிவிருத்தம்.

இவையு ரைத்தன வன்றியு மெம்பிரா
னவைய றுங்குணக் கேள்வி நடத்துது
மவையு ணர்ந்தறி வீரென வாகமச்
சுவைதெ ரிந்தறி நந்தது ளக்குவான்.

(இ - ள்.) இப்போது சொல்லிமுடித்தனவாகிய இவைகளன்றியும், எமது சிவபெருமானுடைய குற்றமற்ற குணங்களைச் சிரவணஞ்செய்வது பற்றிச் சொல்லுவோம். அவற்றையும் அறிந்து தெளிவீராகவென்று, சிவாகம மாகிகத்தின் சுவையையுணர்ந்து தெளிந்தவராகிய திருநந்திதேவர் திருவாய்மலர்ந் தருளுகின்றார். எ - று. (௫௬௬)

அரனை முக்கண வனைய றிந்துள
குரவ னைத்திரு நீற்றைவெண் கோவிடைப்
பரனு ருத்திர மாமணி யைப்பரந்
தரவ ருந்தனித் தொண்டுசெய் சைவரை.

(இ - ள்.) சிவபெருமானையும், திரிநேத்திரங்களையுடைய அச்சிவபெருமானை யறிந்துள்ள ஆசாரியரையும், திருவெண்ணீற்றையும், தலைமைபெற்ற வெள்ளிய இடபத்தையுடைய அப்பெருமானுக்குரிய சிறந்த உருத்திராக்கமணியையும், முத்தியளித்தற்குக் காரணமாகிய ஒப்பற்ற திருத்தொண்டு செய்கின்ற சைவர்களாகிய சிவனடியார்களையும் எ - று. (௫௬௭)

வந்தி யாது மறுநிலை நின்றுள்ளஞ்
சிந்தி யாதிகழ் தீமையர் தென்புலத்
தந்த கன்பட ரலழிந் தள்ளலவா
யுந்த வீழ்ந்து படுவது ணாகுவீர்.

(இ - ள்.) வந்தனை புரியாமலும், மனதிற் கருதாமலும், மாறுபாடாகிய நிலைமையிலிருந்து நிந்தித்துப்பேசுங் கொடியவர்கள், தென்றிசையிலுள்ள இயம

கிங்கரர்களால் வருத்தமெய்தி நரகத்திற்றள்ள விழுந்து துயர்மெய்துவதைத் தெரிந்துகொள்வீர்களாக. எ - று. (ககூஅ)

சோன மென்றொரு நாட்டகத் தொன்னக
ரான சோன மதிலிருந் தாருயிர்
மான வெண்குடை நீழல்வ ளாக்குவான்
கான வாரதொடை வேந்தன்க லாதரன்.

(இ - ள்.) ஒப்பற்ற சோனமென்று சொல்லப்படும் நாட்டிலேயுள்ள பழமையாகிய நகரமாகிய சோனமெனனும் நகரததிலே வசிதது, மன்னுயிர்களை யெல்லாம சிறநததன் வெணகொற்றககுடை நிழலிலே வளாக்கின்றவனாகிய, வாசனைதஙகியதாய நீணட மலர்மாலைதரிததுள்ள கலாதரனென்னும் ஒரு மன்னவனிருநதான. எ - று. (ககூகூ)

கலைகள யாவு மொருநெறி கற்றுணர்
நிலையி னின்றவ னீதியி னீஙகலான
கொலைம ழுப்படை யெநதை குரைகழ
றலைசு மசகு றுஞ சைவத் தலைமையான.

(இ - ள.) நூலகளெலலாவறறையும ஒரு வழியாக ஓதியறிநத நிலைமையி லிருநதான நீதி வழியினினறு தவறாதவன. கொலைததொழிறகுரிய மழுப் படைதாஙகிய எமது சிவபெருமானுடைய சததிககினற வீரகணடாமணி தரித் துள்ள திருவடிகளைத தன சிரமிசைததாஙகபபெறற சைவசமயததில மேம் பட்டவன. எ - று. (உ00)

இகலு மன்ன ரெரிமிடை கானகம்
புகவி ழிசகும புகாமுக வேலினேன்
றகைபெ ருஙகுணத தனமையன றொனமைசா
லகனி லமபொது ப போககிய னிககுவான.

(இ - ள.) பகைககினற மனனாகள தீபபொறி பறககினற காட்டிற் சேருமபடி கோபிததுபபாாககினற படடதது யானையும வேறபடையுமுடைய அமமனனவன, மேமபடட சிறநத குணநதஙகிய இயற்கையுடையவனாய், பழமையானதும இடமகனறதுமான நிலவுலகததைப பொதுததனமைகடிநது காககினறவன. எ - று. (உ0க)

இனைய தனமைய னீாநதிழைத தேறறிய
புனைம ணிததனி யாசன மீபபொலிந
தனையெ னசசுரந தாரரு ணலகியக
கனைக ழறறனி வேநதுறங காலையில.

(இ - ள்.) இவவகைய தன்மையனாய அலஙகாரநதஙகிய இரததினஙகளைச் சாணையிற் பிடிததிழைததுபபதிததுள்ள ஒப்பற்ற ஆசனததின மேலிருநது விளங்கி, தாயைப்போல வெலலாருககுங கிருபைசெய்து, சததிக்கினற வீரகண் டாமணிதரிதத ஒப்பிலலாத அமமன்னவனிருநதபோது. எ - று. (உ0உ)

அந்த ரத்தினி யங்குமருந்தவர்
சிந்தை கூர்சிவ யோகிகள் சித்தர்கள்
பந்த நீக்குந் துறவுறு பண்பினர்
முந்தி னாரவன் பேரவை முன்னினார்.

(இ - ள்.) ஆகாயத்தில் வசிப்பவர்களாகிய அரிய தவசிகளும், மனக்களிப்பு மிகுந்த சிவயோகிகளும், சித்தர்களும், பந்தபாசங்களை விலக்குதற்குக்காரணமாகிய துறவற தருமத்தை மேற்கொண்ட தன்மையாளரும், ஒருங்கு சேர்ந்து வந்து அம்மன்னவனுடைய பெரிய சபையிற் கூடினார்கள். எ - று. (௫0௫)

அன்ன காலையருங்கலை யாவையும்
பன்னி யோர்ந்த பசுபதி பாரதி
துன்னி னானத் தொடுகழல் வேந்தனு
முன்னரெய்தி யருச்சனை முற்றினான்.

(இ - ள்) அப்படிப்பட்டகாலத்தில், அருமையாகிய சாஸ்திரங்களையெல்லாம (முறைப்படி தக்க ஆசிரியர்பால்) ஓதியுணர்ந்துள்ள பசுபதி பாரதியென்பவர் அங்கேவந்து சேர்ந்தனர். வீரக்கழலணிந்த அம்மன்னவனும் அப்பசுபதி பாரதிக்கு முன்பாகவந்து செய்யவேண்டிய வந்தனை வழிபாடுகளைச்செய்தான்.

அன்பி னோடரி யாசனத் தேற்றினு
னின்பு றக்கனிந் தேத்தியி றைஞ்சினன்
புன்புரிச்சடைப் புங்கவனைத்தொழு
முன்பி னன்னவற் காசிமொழிந்தனன்.

(இ - ள்.) அவரை அன்போடு சிங்காதனத்தின்மேல் வீற்றிருக்கச்செய்து எலும்பும் நெக்குவிட்டுருகும்படி கனிவோடு துதிசெய்து மனங்களித்தான். அற்பமாய முறுக்கியுள்ள சடையையுடைய சிவபெருமானை வணங்குகின்ற முதல்வராகிய அப்பசுபதி பாரதி அம்மன்னவனுக்கு ஆசீர்வாதஞ்செய்தனர்.

அக்கணத்தி னரசவை யாயிடைப்
புக்கிருந்தவர் யாவரும் போற்றினார்
மிக்கெழுந்துயர் வெண்குடை வேந்தனை
யொக்க நோக்கி யுணர்த்துதன் மேயினான்.

(இ - ள்.) அச்சமயத்தில், இராசசபையாகிய அவ்விடத்தில் வந்திருந்தவர்களெல்லாரும் அப்பாரதியை வந்தனை செய்தார்கள். மிகவும் மேம்பட்ட சிறப்புத்தங்கிய சந்திரவட்டக்குடையையுடைய அம்மன்னவனை ஒருமைப்பாட்டோடு நோக்கி அறிவிக்கத்தொடங்கினார். எ - று. (௫0௬)

கட்புலந்தெரி யேனுதற் கண்ணனை
யுட்புலத்தி னொருசா ருணர்ந்துளேன்
கொட்புறும்பரிக் கோமுடி வேந்தவோர்
நுட்ப வுண்மை நொடிவது கேளென்றான்.

(இ - ள்.) நெற்றித்திருவிழியையுடைய சிவபெருமானை என் கண்களாற் றரிசிக்கவில்லை. ஆனால் என்னறிவினால் ஒருவகையாக உணர்ந்திருக்கின்றேன். சுழலுகின்ற குதிரையையும் மேம்பட்ட கிரீடத்தையுமுடைய மன்னவனே! நுட்பமாகிய ஒரு நிலைமையை உனக்குச்சொல்லுகின்றேன் கேட்பாயாக.

சைவ மேசம யந்தனிக் கண்ணுதற்
றெய்வ மேபரஞ் சேவுயர்த தெம்பிரான்
வையம் யாவையு மண்பதை யாவையு
மெய்யு மெள்ளு மெனநிறைந் தானரோ.

(இ - ள்.) சைவசமயமே உண்மைச்சமயமாகும். ஒப்பற்ற நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானே பதிப்பொருளாகும். இடபத்தைக் கொடியாகவுயர்த்திய அப்பெருமானே உலகங்களெல்லாவற்றிலும் எள்ளிற்குள் நெய்போல எங்கும் நிறைந்திருக்கின்றனர். எ - று. (சOஅ)

செய்யப் பட்டன செய்பவன் செய்தொழிற்
கையப் பாடில வாய கருவிக
ளுய்யப் பட்டன யாாககு மொருநெறி
தையற் பாகன் றழுவினின் றனரோ.

(இ - ள்.) செய்யப்பட்ட கிரதியங்களும் செய்பவனும் அச்செய்கைகட் குரித்தாகிய சந்தேகமற்றனவாகிய கருவிகளும், ஈடேறுகின்றவாகள் எல்லோ ருக்கும் வாய்க்கின்ற ஒரே பேறும், ஆகிய இவையெல்லாவற்றிலும் உமாதேவி யாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான கலந்திருககினறனா. எ - று. ()

ஆதி யாகிய யற்சம யமபுகப்
பேதி யாகின்ற பெநதமு மாயினு
னோதி யோதி யுணருமு ணாசசியுட்
சேதி யாவருந் தெய்வமு மாயினை.

(இ - ள்.) தாமே எலலாவற்றிற்கும ஆதிநாயகனுகியும, பல வேறு சமயங் களிற் பிரவேசிககுமபடி வேறு படுததுகின்ற பநதமாகவுமாயினா. ஞான நெறியைததெளிநதுணாகின்ற அறிவினுககுள்ளே அழிவற்று விளஙகுகின்ற தெய்வமுமாயினா. எ - று. (சகO)

ஓடு தேரகத் தூடுரு வாணியிற்
கூடு தோறுங் கொழுஞசுட ராயுட
ணுடு பூதமொ ரைநதவ னுயினுன்
வீடு காலமி றநதொழி மெய்மையான்.

(இ - ள்) ஓடுகின்ற இரதத்திலிருககினற அஞ்சுருவாணியை நிகாத்து, அழிகின்ற காலமற்று விளஙகும் உண்மைநிலையுடைய அச்சிவபெருமான், தேக மொவவொன்றிலும் ஒளி வீசுகின்ற தீபமயமாய, அவவததேகஙகளுககுததேவை யாகிய பஞ்சபூதஙகளும் தாமேயாகி விளஙகினா. எ - று. (சகக)

திங்க ளாயிரங் கோடிசி றந்தெனப
பொங்கு வெள்ளொளி பூத்த கயிலையா
னங்க ணுதன ருசசனை யலலது
செங்கண் மாயனுமற் றொனறுஞ் செய்கலான்.

(இ - ள்.) ஆயிரங்கோடி சந்திரர்கள் ஒருசேர உதயமானாற்போல மிகுந்த வெண்மையாகிய ஒளியை வீசும் திருக்கைலாயகிரியில் வீற்றிருப்பார். சிவந்த மலர்போலும் கண்களையுடைய திருமாலும் அததகைய நமது சிவபெருமான் பூசையைத்தவிர மற்றொன்றுஞ் செய்யமாட்டார். எ - று. (சகஉ)

ஆகை யாலவற் காட்பட வேண்டினோ
ரேக நாத னிவனல தில்லென
வோகை யன்பினா ருச்சனை யோம்பியத்
தோகை பாகனைக் கைதொழு தேத்தினோர்

(இ - ள்.) ஆகையால், அச்சிவபெருமானுக்கு அடியவர்களாக விரும்பினவர்கள், இவரைத்தவிர ஒப்பற்ற தலைவர் பிறரில்லையென்று மகிழ்ச்சிதங்கிய உண்மையன்பினால் வழிபாடுசெய்து அவ்வுமாதேவிபாகராகிய சிவபெருமானைக் கைகூப்பித் துதிசெய்தவர்களும். எ - று. (௪௧௩)

எந்தை யீசனை யருச்சனை செய்தினோர்
சிந்தை கூர்சிவ வேடஞ்சி றந்தவர்
முந்தை யோன்சிவ சரிதைமொ ழிந்தவ
ருய்ந்த தொண்டர்க டிமையு வந்துளோர்.

(இ - ள்.) எமது தந்தையாகிய சிவபெருமானை யருச்சிக்கப்பெற்றவர்களும், மனவுருக்கம் அதிகரிக்கத்தக்க சிவவேடத்தினால் மேம்பட்டவர்களும், அவர்தி தேவன் சரிதைகளாகிய சிவசரிதைகளைச்சொன்னவர்களும், உச்சீவித்த சிவனடியார்களுக்கு அடிமைத்தன்மையை அவாவினவர்களும். எ - று.

இவரை நோக்கியி ருங்கம லாசனன்
பவள வெண்டிரைப் பாற்கட லையகன்
கவர்த டஞ்சினைக் கற்பகக் கோமக
னெவரு மேத்தியி ரங்குதல் வேண்டுமால்.

(இ - ள்.) ஆகிய இவர்களை, பெரிய தாமரை மலர்ப்பீடத்தையுடைய பிரமதேவனும், பவளங்களைக் கொழித்துக்கொண்டிருக்கின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலுக்கிறைவராகிய திருமாலும், பிரிவுபட்ட பரந்த கிளைகளையுடைய கற்பகவிருக்ஷ நிழலிலுள்ள இந்திரனும் ஆகிய இவர்கள் யாவருங் கண்டவுடனே துதித்து மனமுருகுதல் வேண்டும். எ - று. (௪௧௫)

ஈச னைத்தங்கள் சிந்தையி ருத்தினோர்
பூசு நீறுபொ லியப்பு னைந்தவ
ராசை மீக்கொண் டரனைய டிக்கடி
பேசி யன்புபி றக்கப் பெருக்கியோர்.

(இ - ள்.) சிவபெருமானைத் தமதிதயத்தில் (எக்காலமும் நீங்காமல்) எழுந்தருளச் செய்துகொண்டவர்களும், அணியத்தக்க திருவெண்ணீற்றை மிகுதியாக அணிந்துள்ளவர்களும், ஆசை மிகுந்தவர்களாய் அச்சிவபெருமானை அடிக்கடி துதிசெய்து மெய்யன்புண்டாகும்படி விருத்திசெய்தவர்களும். எ - று.

ஈச னன்றிமு தன்மைய ரிலெனப்
பேசி னானிவை பேசலும் பேரவை
பூச லுள்ளம் பொறாமையிற் பொங்கினான்
வாசு தேவ னெனுமொரு வைணவன்.

(இ - ள்) சிவபெருமானை யல்லாமல் முதன்மையானவர்கள் வேறொருவருமிலரெனத் திருவாய்மலர்ந்தனர். இப்படித் திருவாய்மலர்ந்தவுடனே அப்பெரிய

சபையிலிருந்த வாசுதேவனென்னும் பெயர்வகித்த ஒரு வைணவன் மனந்தாளா மையாற் பேரொலியோடு கோபித்தான். எ - று. (௪௧௭)

சீட ரோடு மாசபை சென்றொரு
மாடிருந்தனன் மன்னனை நோக்குறு
வோடு கொண்டிரந் துண்டுழல் வானறனை
வீடு சென்னெறி தாவென வேண்டுமோ.

(இ - ள்.) தன மாணாக்கர்களோடு அவ்விராச சபையின் உட்புகுந்து ஒரு பக்கலில உட்கார்ந்திருந்து மன்னனை நோக்கி, ஓர ஓட்டினைக் கையிற்றாங்கிக் கொண்டு பிச்சைவாங்கிப் புசித்துத்திரிகின்றவனை முத்திக்குச்செல்லுமவழியை யநுக்கிரகிப்பாயென்று கேட்க விரும்புவார்களோ? எ - று. (௪௧௮)

இங்கி ருந்தவ னின்னண மோதிய
புங்க வற்குப புலித்தோ லுடையொரு
மங்கை போடும யங்குறு வான்சிரக்
கங்கை கொண்டிடு காடுறை ந் தாடுவான்.

(இ - ள்.) இச்சபையிலிருந்த பசுபதி பாரதி இத்தகைய சிறப்புக்களோடு சொன்ன கடவுளுக்குப புலித்தோலே ஆடையாம ஒரு பெண்ணோடு மயங்கிக் கொண்டிருப்பான. தலையிற கங்காசலத்தைத் தாங்கிக்கொண்டு, சுடுகாட்டிலே வசித்துப பேய்களோடு கூத்தாடுவான். எ - று. (௪௧௯)

தாம தக்குண னுசார்ந்துள்ளன கைதொடா
வீம மாலையெ லும்பணி தாங்கினன
காமு றாப்புல லெருக்கணி கண்ணியா
னும நக்கினந் தோடுந டனுசெய்வான.

(இ - ள்.) தாமதகுணத்தையுடையவன், கையினால் பரிசிக்கப்படாத மயானத்திலுள்ள எலும்புகளின்-மாலையாகிய ஆபரணத்தை அணிந்திருக்கின்றான். ஒருவருமவிரும்பாத அற்பமாகிய எருக்கமலாமாலையணிந்தவன. அச்சத்தை உண்டு செய்யும நிர்வாணகோலத்துடன் நடிப்பான. எ - று. (௪௨௦)

எனமற டுத்தவ னோதியி சைத்தன
சென்று றுதுசெ வித்தொளை பொத்தினு
னனறக்கப்பொறுத் தாற்றல னுயுளங்
குன்றி மன்னனைப பாரதிவை கூறுவான்.

(இ - ள.) என்று அவவைணவன எடுத்துச்சொல்லிய வார்த்தைகள் உள்ளேபுகவொட்டாமல் இருசெவித் தொளைகளையும பொத்திக்கொண்டு அப்போது பசுபதி பாரதி மனமபொறுக்கமுடியாதவராய் வருந்தி மன்னனை நோக்கி இப்படித்திருவாயமலாகின்றனர். எ - று. (௪௨௧)

பெருக்கு மண்டப் பிரளய மெய்துநாண்
முருக்கி முன்ன ரரிமுத லோருயி
ரருக்கி யசசுடு காட்டினின் றாடினு
னிருக்கு ணார்ந்தறி யாபபிறப பீறிலான்.

(இ - ள்.) வேதங்களால் தெளிந்துணரப்படாத, பிறப்பும் இறப்புமற்ற சிவபெருமான், பெருக்கெடுக்கின்ற மகாப்பிரளயம் வரும் ஊழிக்காலத்தில், முற்பட்டுத் திருமால் முதலினோர் உயிர்களைப்போக்கியழித்த அம்மகாமயானத்தினின்று கூத்தாடினார். எ - று. (சுஉஉ)

அளவி றந்தொழி நான்முகத் தந்தணர்
துளவ நாண்மலர்த் தொங்கல ரெண்ணில
ருளரி றந்தவ ராங்கவ ரோங்குடற்
றளரு மென்பணி மாலைத ரித்தனன்.

(இ - ள்.) கால அளவுகழிந்த நான்கு முகங்களையுடைய பிரமர்களும், அன்றலர்ந்த மலர்களையுடைய துளசிமாலை தரித்த விஷ்ணுமூர்த்திகளும் கணக்கில்லாதவர்கள் இறந்துள்ளார்கள். அப்படி இறந்த தேவர்களுடைய உடலினின்றும் நீங்கிய எலும்புகளையே அழகிய மாலையாக அணிந்துகொண்டனர். எ-று.

ஆதி காலத் தரிபிர மற்குள
சோதி யென்புதொ டுத்தணிந் தானவர்
சாதல் காட்டியுந் தன்னிலை காட்டியு
மோத வேலை யுலகுக் குணர்த்துவான்.

(இ - ள்.) ஆதிகாலத்திலே, விஷ்ணுபிரமனென்னும் இருதேவர்க்குமுள்ள ஒளிதங்கிய எலும்புகளை, அவ்வகைத்தேவர்களுடைய இறப்பையுணர்த்தியும், தமது உயர்நிலையைக் காட்டியும், குளிர்ந்தகடல்சூழ்ந்த நிலவுலகத்திலுள்ள ஆன்மகோடிகளுக்கு அறிவுறுத்தும்படி மாலையாகக்கோத்தணிந்தனர். எ-று. (சுஉச)

ஏழை பாகத் திருத்தினனெம்பிரான்
வாழி மாநில மன்னுயி ரியாவையுங்
கேழ்கி ளாநது பிறவிகி ளைத்தெழச்
சூழி னங்கது நான்மறை சொல்லுமே.

(இ - ள்.) பெரிய இந்நிலவுலகிலுள்ள ஆன்மகோடிகள் யாவும் உவமையில்லாத சிறந்த சனனமுண்டாகிக்கடைத்தேறும்பொருட்டு, எமது சிவபெருமான் உமாபிராட்டியாரை வாமபாகத்திலமைத்தனர். அவ்விடயத்தை நான்கு வேதங்களில் ஆராய்ந்தால் அவையுணர்த்தும். எ - று. (சுஉரு)

முப்பு ரந்தெறு முக்கணன் றன்மையை
யொப்ப வோர்ந்தில ராகியு ருத்தெழு
வெப்ப வெந்தழற் கும்பியுள் வீழ்ந்தனர்
செப்ப ருங்கணக் கற்றிடு தீமையோர்.

(இ - ள்.) முப்புரங்களை யெரித்தவராகிய சிவபெருமானியற்கையை, மனவொருமைப்பாட்டோடு உணராதவர்களாகி, சொல்லுதற்கரிய எண்ணற்ற கொடியவர்கள், ஜ்வலித்து உயர்கின்ற வெம்மையுடைத்தாகிய பெரிய அக்கினி பொருந்திய கும்பிபாக நரகத்தில் வீழ்ந்தார்கள். எ - று. (சுஉசு)

எடுத்த சீற்றத் ததீசியி ருந்தவ
னெடுக்கில் பூதியு ருத்திர மாமணி
தடுத்த ணிந்திலீ ரென்றிடு சாபநீர்
விடுத்து ணர்ந்திலீ ரின்னும்வி டுத்திரோ.

(இ - ள்.) ததீசிமுனிவராகிய பெரிய தபோதனர், தமக்குண்டாகிய கோபத்தால், அழிவற்ற திருவெண்ணீற்றையும் சிறந்த உருத்திராக்கமணியையும் எக்காலத்திலும் அணியாதிருக்கக்கடவீர்களென்று கூறிய சாபத்தைத் தீர்த்துக்கொள்ள வகையுணர்ந்தீரில்லை. ஆதலால் இன்னும் நீங்கள் உங்கள் தீர் எண்ணங்களை விடுவீர்களோ? எ - று. (சஉ௭)

ஆங்க வன்சொ லுமன்று தொட்டின்றள
வோங்கு தண்டொரு மூன்றொன் றெடுத்தநீர்
தாங்கு கங்கைச சடைமுடிப் புங்கவன்
பூங்க மூற்கய லாய்ப்புறம் போயினீர்.

(இ - ள்.) அந்த யாகசாலையில் ததீசிமுனிவர் சபித்த அன்று தொடங்கி இன்றுவரையில், உயர்ந்த திரிதண்டத்தை யெடுத்துக்கொண்டு திரியும் நீங்களெல்லாரும், சடைமுடியின்மேல் கங்கையை யணிந்துகொண்டுள்ளசிவபெருமானுடைய அழகிய திருவடிகளுக்கு வேறாகி வெளிப்பட்டீர்கள். எ - று. (சஉஅ)

ஆர வத்த ரரிபிர மாதியர்
சார வுற்றுழித் தக்கன்ம கத்திடை
வீர பத்திரன் பத்திர வெற்றியைச
சோர விட்டினை சொல்லததொ டங்கினீர்.

(இ - ள்.) தக்கனுடைய யாகசாலையில் விஷ்ணு பிரமன் முதலினோர் ஆரவாரித்துக்கொண்டு சேர்ந்திருந்தபோது, வீரபத்திரக்கடவுள் தாங்கியிருந்த [பத்திரம்] வாட்படையின் வெற்றிப்பாட்டை மறந்துவிட்டு இப்படிச்சொல்லத் தொடங்கினீர்கள். எ - று. (சஉகூ)

ஓதி நீதியு ருத்திர மாமணி
பூதி யோடு புனையலர்க் காண்குறின்
காது ஞாளி வளாப்பவர்க கணுறுந
தீது சேர்குவா திண்மையி துண்மையால்.

(இ - ள்.) நூல்களிற் சொல்லியுள்ள புண்ணியத்தைக்கொடுப்பனவாகிய சிறந்த உருத்திராக்கமணியைத் திருவெண்ணீற்றோடு அணியாதவர்களைக் கண்டால், கொலைசெய்யும் நாயை வளர்ப்பவர்களைக்காண்கின்ற பாவத்தை யடைவார்கள். இது உறுதியான சத்திய மொழியாகும். எ - று. (சஙய)

நீறு பூசியு ருத்திர நீண்மணி
யூறு மன்பி னணியாரு டன்சில
கூறி னுமமவா கொளகையு ரைப்பினும்
வேறு பாதகஞ் செயயவும வேண்டுமோ.

(இ - ள்.) திருவெண்ணீறுதரித்து, பெருமைதங்கிய உருத்திராக்கமணியையும் விசேடித்துப்பெருகும் மெய்யன்போடு அணியாதவர்கள்பால் சில வார்த்தைகள் பேசினாலும், அவர்கள் அபிப்பிராயத்தைச்சொன்னாலும், அப்படிப் பேசினவர்களும் சொன்னவர்களும் மற்றொரு பாதகத்தைச்செய்யவும் வேண்டுமோ? எ - று. (சஙக)

ஆய தின்னை யருகுற லஞ்சுதீந்
தீயு பாதக மின்செய லோதினு

மேய வின்னலி ழைக்குநி ரையம்வீழ்ந்
தோய்வில காலமு ழுகருவ் துண்மையால்.

(இ - ள்.) அத்தகைய உன்னை நெருங்குவதற்கும் அச்சமடைகிறோம். கொடும்பாதகனாகிய உன் செய்கைகளைகுறித்துப்பேசினாலும், அதிகமாகிய துயரத்தைச்செய்வதாகிய நரகத்திலே விழுந்து, எண்ணிறந்தகாலம் வருந்தப் படவேண்டியது நிச்சயமே. எ - று. (சகஉ)

உண்மை யீதென் றுரைத்தன ளுன்மறைப்
பண்வ ருஞ்சொற் பசுபதி பாரதி
கண்ம யஞ்சிறி தின்றிக் கருத்தழி
வண்மை பெற்ற வயிணவ கேசரி.

(இ - ள்.) நான்கு வேதங்களை அவற்றின் பண்ணிசையோடு ஓதியுணர்ந்த பசுபதி பாரதி, நாம கூறியது உணமையென்று திருவாய்மலர்ந்தனர். அப் பொழுது ஒரு சிறிதும் தாக்ஷண்ணியமில்லாதவனாய் மனநிலையழிந்த தன்மை யுடைய கேசரியென்னும் வேறொரு வைணவன். எ - று. (சகங)

மாடி ருந்தனன மாமணி யென்பதோர
கோடு காயபபன கோமயஞ சுட்டுற
வீடு சாமபா விபூதியி வறறினுற
றேடு வீடுசி றநதவா யாவரோ.

(இ - ள்.) வாசுதேவனுககருகிலிருநதுகொணடு, சிறநத உருதராககமணி யென நீர் சொல்லுவது மரததிறகாயப்பன. பசுஞ்சாணததைச் சுட்டெரிததால தோன்றுகின்ற சாமபாதான் திருவெணணீறாகும். இவவிரணடிலும் முததியின பநதேடிப் பெருமையுற்றவாகள் யாா? (ஒருவருமிலா.) எ - று. (சகச)

தேம்பு கானகத தீயிடை மாமரஞ
சாமப ராவ ததுவுநத ரிபபரே
லோம்பு ஞானத துயாநதவ ரோவென
வாமப ரிததிறண மன்னவற மோதினன்.

(இ - ள்.) பெருஙகாட்டில் தோன்றும் காடாககினியில் அஙகுள்ள பெரிய மரஙகளசாம்பராகும அச்சாமபரையும தரிப்பாாகளானால் ஆதரிககின்ற உணமை ஞானத்தால் மேமபட்டவாகளோவென்று, தாவிச்செலலுஙு குதிரைச்சேனையு வல்லபம் பெற்ற அம்மன்னவனுடன் சொன்னான். எ - று. (சகரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கேசரி யுரைத்த வாய்மை பசுபதி கேட்டுப் பின்னர்
மூசிய சினதத ஞகி யாங்கவன் முகத்தை நோக்கி
யீசனை யறியாய் ஞான மெதுவழித் தென்று நோக்காய்
கூசலை யெடுத்த வெல்லாம பிததுறக் குழறு கின்றாய்.

(இ - ள்.) கேசரியென்போன் சொல்லிய சொற்களைப் பசுபதி பாரதி கேட்டு, அதன்பின் அதிகரித்த கோபமுடையவராய், அவ்வைணவன் முகத்தை நோக்கி, சிவபெருமான் தன்மையை யறியாய். எதனால் உண்மை ஞானம் உண்டாகுமென்பதையும் ஆராய்நதுணரவில்லை. வாயில்வந்த வசையெல்லாம் மனங்கூசாது, பைத்தியமுற்றோன்போல உளறுகின்றாய். எ - று. (சகசு)

உருத்திர மணியு நீறு மொருங்கெடுத் தணிவோர் தம்மைக்
கருதவுற நினைப்பி னீசன் கழலிணைக் குரிய ராவா
ரருததியி னணியார் யாவ ராயினும புலைய ராவர்
திருத்தற மொழிந்தாய் நீயும் புலையரிற் றீய னென்றான்

(இ - ள்.) உருத்திராக்கமணியையும் திருவெண்ணீற்றையும் ஒன்றாக எடுத்துத்தரிப்பவர்களை மனவேறுபாடின்மையோடு நினைப்பாாகளானால், சிவபெருமான் திருவடிப்பேற்றிற்கு உரியவர்களாவார்கள். அன்போடு அவவிரணடையும் தரிக்காதவர்கள் எவாகளாயிருநதாலும் அவாகள யாவரும நீசர்களாவாாகள். ஆதலால் திருததமில்லாத வார்ததைகளைச்சொல்லிய நீயும் நீசாகளிலும் தீயவன் என்று திருவாய்மலர்ந்தருளினா். எ - று. (சுகூ0)

வனைகழ லரச கேட்டி யென்றனன் வன்கட் டீய
வினைபுரி பதக ரேனும விபூதியு மணியும பூணிற
புனைபுரி சடில வேணி யெநதையிற பொலிவ ரென்று
நினைதொறு மறைகள் யாவு மெடுததிது நிகழ்தது மென்றான்.

(இ - ள்.) அலங்கரிக்கின்ற வீரககழல்புனைநத அரசனே! கேட்பாயாக வெனககூறுகின்றனா. கொரேசிததமுடையாராகிப் பாவச்செயல்கள் செய்கின்ற பாதகாகளானுலும திருவெண்ணீற்றையும உருததிராககமணியையும தரிபபாாகளானுல அலஙகரிதது முறுககிய சடையையுடைய எமது சிவபெருமானைப்போல விளஙகுவாாகளெனறு வேதஙகளெல்லாம் எண்ணுநதோறும் விரிததுககூறுகினறனவெனத திருவாய்மலாநதனா. எ - று. (சுகூஅ)

ஆகம மறைகள் யாவு மளநதறிந தரனை யன்றி
யேகமொன றிலையென றோத வுணாநதிலை யிவாக ளேழை
பாகனை யுணரரா மறறைப் பதிபசு பாச மோரா
மோகரை மறல நோககி யிருநதனை முதலவ னென்றான்.

(இ - ள்.) சிவாகமஙகள வேதஙகளாகிய யாவரும அளவுபடுததிததெளிநது சிவபெருமானைததவிர மற்றொரு கடவுளிலலையெனறு முறையிட்டிருககவும அவறறை நீ உணராதிருககினறாய. இவாகள யாவரும உமாதேவிபாகராகிய சிவபெருமானைத தெளியமாட்டாாகள. பதிபசுபாசஙகளை யுணராத மாயா சமபநதமுடைய இவாகளை, மனனவனே! நீயும மயககமுடையவனுய்ப் பாாத்துககொண்டிருககின்றாய. எ - று. (சுகூகூ)

பசுபதி யுரைத்த லோடு மவனொடும பயின்ற சீடன்
வசுவெனு மறைய வன்றன குரவனை மறுததுச சொலவா
னுசிதநீ யுரைபப முறறுங கேட்குந ரொருவாக காணே
னிசிவரு மதறகு முன்ன மேகுதி நிமல வெனறான்.

(இ - ள.) பசுபதி பாரதி இப்படிசசொல்லியவுடனே அவரோடு பழகிய மாணவனுகிய வசுவெனும பெயாவாயநத அநதணன தனதாசிரியரைத்தடுததுச் சொல்லுபவனுய, தேவரீா கூறும மேனமைகளையெல்லாம அஙகீகரிப்பவர்கள் ஒருவரையுங்கண்டிலேன. ஆகையால, இராபபொழுது வருவதன முன்னரே யெழுநதருள்வீராக. மலரகிதராகிய ஆசியரே! எனறு கூறினுன. எ - று. ()

அன்னவ னுரைத்த லோடும பசுபதி யவனை நோக்கி
புனனிலை யாள ரீசற் புகழ்நதுறு திகழுக கேட்டு

மின்னுயிர் பொறுக்க லாற்றே னிவர்க்கெதிர் புகல்வ னென்றான்
பின்னரு மவனை நோக்கி வசுவிது பேச லுற்றான்.

(இ - ள்.) அவ்வசுவெனும் மாணவகன் இப்படிச்சொல்லியவுடனே பசுபதி பாரதி அவனை நோக்கி, அறிவிலியுடைய இவர்கள் யாவரும் சிவபெருமானைத் துதிசெய்யாது நிந்திப்பதைக்கேட்டுக்கொண்டு என் பிராணனை வைத்துக்கொண்டு சகிக்கமாட்டேன். ஆதலால் இவர்கட்குப் பதில் கூறுவேனென்று திருவாய்மலர்ந்தனர். பின்னரும் அவரை நோக்கி வசுவென்பவன் கூறுகின்றான்.

செய்தவர் செய்த தீமை யடைகுவர் செய்கை யோரார்
வைதவர் நரகு வீழ்நது மறுகுவ ரெவர்க்கு மொக்கு
மெய்தவத் தலைவ போதி யென்றவ னுரைப்பத் தீயோர்
மைதவழ் களத்தாற் சொல்லும புன்மைநீ மதித்தி லாயால்.

(இ - ள்.) தீமைசெய்தவர்கள் தீமையையே பெறுவார்கள். நின்றன் செய்கையை யுணராமல் இகழ்நதவர்கள் நரகததிலமிழநதி வருநதுவார்கள். இவ்விதி எல்லார்க்குஞ் சம்மதமாகும். ஆதலால் உச்சீவிதததற்குக காரணமான தவஞ் செய்த ஆசிரியரே! செல்வீராகவென்று அம்மாணவகன் சொல்ல, கொடியவர்களாகிய இவர்கள் விடமபொருநதிய கணடத்தையுடைய சிவபெருமானைக் குறித்துச்சொல்லுகின்ற நிநதனையை நீ எணணவிலலை. எ - று. (௪௪௨)

என்றவ னுரைத்த லோடுஞ் சீடனென் றிருந்த பாவி
யின்றிவ ணிகலா நிறறி யானிது வொழிநதே னென்னச்
சென்றன னதனை நோககிச சிரித்தனா சிறுமை கூர்நதோ
ரன்றொரு மறையோன் சாநத னுங்கவாக் கருகு சார்ந்தான்.

(இ - ள்.) என்று, அப்பசுபதி பாரதி இப்படித் திருவாய்மலாநத வுடனே மாணவகனென்றிருநத அப்பாவி, அப்படியானால் இன்று இஙகே போராடிக் கொண்டிரும். இப்போராட்டத்தினின்று யானகன்றேனென்று போயினன். இழிதகைமையிற் சிறநதவர்களாய அஙகிருநதவர்கள, அப்படி மாணககன் சென்றதை நோக்கி நகைததாாகள். அப்பொழுது அச்சபையிலிருநத சாந்தனென்னும் அநதணன் அங்குளள பசுபதி பாரதிககருகு சென்றான். எ - று. ()

வேதமோர் நான்கு மற்றை யாகம விரியன் முற்று
மோதுவித் துணாததி விடடா யாங்கவ னுன்னைப் பேணான்
போதலும வருநதே லைய நின்னடி போற்றி நின்றேன்
கோதறு குணத்தோ யென்னைச சீடரிற கோடி யென்றான்.

(இ - ள்.) ஒப்பற்ற நான்கு வேதஙகளுமசிவாகமஙகளின விரிவு முழுவதும் ஓதச்செய்து உணர்ததிவிட்டீர். அவவகையாயுணர்நத அம்மாணவகன் உம்மை விரும்பவில்லை. ஐயனே! அவன் போய்விட்டதற்காக நீ வருததப்படவேணடாம். அடியேன் தேவரீர் பாதஙகளைத் துதிசெய் துகொண் டிருககின்றேன். குற்றமற்ற குணமுடையவரே! அடியேனை மாணவகனககொணடருள்வீரென்று வேண்டினன். எ - று. (௪௪௪)

இன்னடி தொழுது நிற்பின் வேதமு நெறியி னிற்கும்
பொன்னவிர் சடையோ னெநதை புராணமும் புல்லா நின்றே
னன்னவை கருதி நின்பா லடைந்தன னளிய னேனுக்
கின்னருள் புரிதி யென்றா னுங்கவ னிசைவ தானான்.

(இ - ள்.) தேவரீர் பாதங்களை வணங்கிக்கொண்டிருந்தால் வேதமும் கிரமமாக ஓதுதற்குவரும். பொன்னைப்போற் பிரகாசிக்கும் சடையையுடைய எமது சிவபெருமானுக்குரிய புராணங்களையும் ஓதியுள்ளேன். அவ்வெண்ணத்தினாலேயே தேவரீர்பால்வந்தேன். ஆதலின் அடியேனுக்கு இனிய திருவருள் பாலிக்கவேண்டுமென்றனன். அதனைக்கேட்ட பசுபதிபாரதியென்பவர் சம்மதித்தனர். எ - று. (சசரு)

சாந்தநீ யுரைத்த வாய்மை நன்றுனைத் தந்த தாதை
யேந்துநீர சடிலத் தோன்று ளிருத்திய கருத்தி னீயும்
வாய்ந்தபே ரன்பி னொந்தை மலரடிக் குரிய னானை
யேய்ந்தநின் செய்கை நன்மைத் தன்மையென் றிசைப்ப தானன்.

(இ - ள்.) சாந்தனே! நீ சொல்லிய உண்மை நல்லதே. உன்னைப்பெற்ற தந்தை கங்கையையணிந்த சடையையுடைய சிவபெருமானுடைய பாதங்களைத் தியானிக்கின்ற இதயமுடையவனுதால, நீயும அடையப்பெற்ற பேரன்போடு எமபெருமானுடைய செந்தாமரை மலாபோனற திருவடிகளுக்கு உரியவனாயினை. உன்பாறபொருந்திய செயலகள் நலலியலபுடையனவேயென்று சொலவாராயினா. எ - று. (சசசு)

அந்நிலே மாறு பாட்டி னரசவை யிருந்தோர் தம்முட்
பன்னரு மறைமுற் றோராப பத்திர னென்போ னேகிப்
புனனுனைப பனியிற கங்கை பொறுத்தவப புனிதற போற்றி
யுன்னருந் தகைமை சான்ற பசுபதிக குரைபப தானன்.

(இ - ள்.) அச்சமயத்தில், அதறகுமாறுக அந்த அரசவையிலிருந்தவர்களில, சொல்லுதற்கரிய வேதமுழுவதுமறியாத பத்திரனெனபோன பாரத்து கங்கைநதியை அறுகமபுலலின நுனியிறறங்கும சிறுதுளியாககிச சடையிலேற்ற சிவபெருமானைத துதிசெய்து, யாவரும நினைத்தறகரிய பெருந்தனமை மிக்க பசுபதி பாரதிககுச் சொலவானாயினன். எ - று. (சசஎ)

தரித்தநூன மறையோ னிந்தச சாந்தனற் குலத்துட் டோன்றிச
சரிபபது புலலொ ழுககிற கணிகையா தடந்தோளா சாருமு
விரித்தறி சுருதி யோரான கொலையஞசான வெகுளி தீரா
னெரிபபடு விரக னென்னென றியைந்தனை முதியோ யென்றான்.

(இ - ள்.) உபவீதமணிந்த அந்தணனாகிய சாந்தனெனனுமிவன, நற்குலத்தில் உதித்தும தீயொழுககில நடப்பவன் வேசையருடைய பருத்த தோளகளைத் தழுவுபவன. விரிவாயுணாரத்தகக வேதங்களை யுணராதவன. கொலைக்கஞ்சாதவன், கோபநீங்காதவன், தீபபோன்ற காமமுடையவன, ஆதலால பெரியோரே! இவனை மாணவகனெனக்கொளவதறகு எனனவெனறு உடனபட்டீரென்றான்.

பத்திரன் பகர நோக்கிப் பசுபதி பரமன றொண்ட
ரெத்திறம் புரிந்தா ரேனு மிலங்கொளி நீறு சாத்தி
யுத்தமற் குறித்துப பூண்ட வுருத்திர மணியாற் றீமை
யத்தனை பரிதி நோககும பனியினீத தழியு மெனறான்.

(இ - ள்.) பத்திரன் இப்படிச் சொல்வதைப்பார்த்து, பசுபதி பாரதி சிவபெருமானுக்குத்தொண்டர்கள எவவாறு செயதாாகளானாலும் சிவத்

தியானஞ்செய்பது ஒளிவீசுந் திருவெண்ணீறு தரித்து அணிந்துகொண்ட உருத்திராக்கமணியினால் அவ்வளவு தீமைகளும் சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிப் போமென்று திருவாய்மலர்ந்தருளினர். எ - று. (சசக)

கண்டிகை நீறு தாங்கிக் கண்ணுதற் பரமற் போற்றுந்
தொண்டரை யிகழ்வார் மீளாத் தொடுகுழி நிரையஞ் சார்வார்
பண்டருஞ் சுருதி யின்ன பகர்வது பழியா நின்றாய்
கொண்டனை மறலி தென்பா னிரையவெங் கொடுமை யென்றான்.

(இ - ள்.) உருத்திராக்கமணி மாலையும் திருவெண்ணீறும் அணிந்துகொண்டு நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைத் துதிக்குந்தொண்டர்களை நிந்திப்பவர்கள், மீளாமல் தோண்டிய ஆழமுடைய நரகடைவார்கள். பண்ணோசையமைந்த வேதங்கள் இப்படிச்சொல்லுகின்றன. நீ சிவனடியாரை நிந்தித்துக்கொண்டிருக்கின்றாய். அதனால் காலனுடைய இயமபுரியிலுள்ள நரகிற்சேருங் கொடிய தண்டனையைப்பெற்றுக்கொண்டாய். எ - று. (சகூ)

ஒருகுடை யரசற் பாரா வேந்தநீ யொலிநீர் வேணிக்
கருமணி மிடற்றி னோனைத் தொண்டரைக் கடவுட் டன்மை
தருமணி யதனை நீற்றைப் பழித்தவித் தறுக ணோரைக்
குருவென வுணரா விட்டு நீத்தவக் கொடியோ னன்னை.

(இ - ள்) ஒப்பற்ற வெண்கொற்றக்குடையையுடைய அம்மன்னனைப் பாரதி நோக்கி, மன்னவனே! நீ சத்திக்கின்ற கங்கையணிந்த சடைமுடியையும் நீலமணிபோன்ற கண்டத்தையுமுடைய சிவபெருமானையும் சிவனடியார்களையும் தெய்வீகந்தங்கிய உருத்திராக்கமணியையும் திருவெண்ணீற்றையும் நிந்தித்த இக்கொரோமுடையவர்களும், (அன்னியர் என்னைப்பகைத்துப் பழிக்கையில) ஆசாரியனென்று கருதாமல் விட்டுவிட்டு விலகிய அக்கொடியவனும். எ - று.

ஆயவிந் நால்வர் தம்மை யாருயி ரழித்தி லாயேற்
றீயவெந் நரகத் தாழ்வா யடைந்தனை சிவத்து ரோகம்
போயது கழிவ தன்றே யென்றனன் புலமை மிக்கான்
மீயுயர் கவிகை வேந்த னவாக்கெதிர் விளம்ப லுற்றான்.

(இ - ள்.) ஆகிய இவர்கள் நால்வரையும் அரிய உயிரை யகற்றாதிருப்பாயாயின் நீ கொடிய நரகத்தில் வீழ்வாய். அச்சிவத்துரோகம் உன்னைவிட்டொழிவதன்று என்று அறிவின்மிகுந்த அப்பசுபதி பாரதி திருவாய்மலர்ந்தனர். அப்பொழுது அதியுயர்வாக வோங்கிய வெண்கொற்றக்குடையையுடைய மன்னவன் அப்பாரதிக்கு உத்தரஞ்சொல்வானாயினன். எ - று. (சகூஉ)

கறைபடு களத்தற் கன்பு பூணநீ யொன்றுங் காணாய்
மறைபடு விழிபெற் றிந்த வயிணவக் குலத்தை யெல்லாந்
துறையற முடித்தி யென்றான் சொலத்தகா தென்று விட்டா
னிறைகுணத் தலைவ னெந்தை சேவடி நினைந்து நின்றான்.

(இ - ள்.) விடந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமானுக்கு நீ அன்பு செய்தற்காக ஒரு வழியையுங் காணவில்லை. ஆதலால் ஏனையோர்க்குத் தெரியாத ஞானநோக்கத்தைப்பெற்றுக்கொண்டு வைணவக்கூட்டங்களையெல்லாம் அம்மார்க்கம் நீங்கும்படி ஒழித்துவிடுகவென்றான், அதுகேட்ட நற்குணவ

கள் நிறைந்த பசுபதி பாரதி இனி இவனுக்கு ஒன்றுஞ் சொல்லப்படாதென்று அவனை விடுத்து எமது சிவபெருமான் திருவடிகளைத் தியானஞ்செய்துகொண் டிருந்தனர். எ - று. (௨௩)

அகக்கணு லரனை நோக்கி யாங்கவ னருளி னேக்கி
முகக்கணுல் விளங்கா நின்றுன் சைவநூன் முதன்மை சான்றேன்
புகப்படு வெகுளி மிகக்கு வயிணவர்ப பொருது நோக்கி
யுகப்படு மிடிவீழ்ந் தாவி யுடம்பொடு மொழிதி ரென்றுன்.

(இ - ள்.) சைவாகமங்களிற்றேர்ந்த மேம்பட்ட தலைவராகிய அப்பாரதி, சிவபெருமானை ஞானக்கண்ணுற்றறிசித்து அப்பெருமானுடைய திருவருளைப் பூரணமாகப்பெற்று ஊனக்கண்களாற் பார்த்துக்கொண்டிருப்பவராய், உதிக் கின்ற கோபம் அதிகரித்துச் சகிக்கமுடியாதவராய், வைணவர்களை நோக்கி, ஆகாயத்தினின்றும் விழத்தக்க இடியானது இப்பொழுது விழுந்து அதனுல உயிரும் உடலும் ஒழியக்கடவீர்களென்று சபித்தார். எ - று. (௨௪)

அடிகளி தியம்ப வானத் தார்குர லசனி வைய
மிடிபட முழங்கி வீழ விறந்தன ரிவற்றை நோக்கி
முடிநெடு மௌலி வேந்தன் வெருவற முதியோ னேக்கி
கடிகம ழலங்க லோயநீ காத்தவ மாதி யென்றுன.

(இ - ள்.) அப்பாரதி இப்படிச்சபித்தவுடன் ஆகாயத்திலே ஆரப்பரிக்கும் ஓசையையுடைய இடியானது உலகமும் இடியும்படி கோஷித்துப் பூமிமேல விழ, அவவைணவரிருவரும் ஏனைய இருவரும் இறந்தார்கள். இப்படி யிறந்த மையை நீண்ட கிரீடந்தரித்துள்ள மன்னவன் கண்டு மனநடுங்கியிருக்க, அப்பாரதி அவனை நோக்கி மணங்கமழும் மலர்மாலைதரித்த மன்னவனே! நீ கழுதையாகுகவென்று சபித்தனர். எ - று. (௨௫)

ஆண்டவ னுரைத்த லோடு மரசனு மவனைப் பொற்றுள்
பூண்டனன் கிடந்த ஞயேன புன்மைநீ பொறுத்தி யென்ன
வேண்டின னிரப்பக் கண்டும் வெருண்டனன் சிவத்து ரோகர்
மீண்டுறு நிரையஞ் சாரார் மீள்கலா நிரையஞ் சாவார்.

(இ - ள்.) தன்தாசிரியர் இப்படிச் சபித்தவுடன், அம்மன்னவனும் அவருடைய பொன்போலும் பாதங்களைப்பற்றிக்கொண்டு நிலமிசைவீழ்ந்து வணங்கி அடியேன்செய்த குற்றத்தை மன்னித்தருளவேண்டுமென்று பிரார்த் தித்து வேண்டிக்கொள்ளப்பார்த்தும், பாரதியார் கோபமுற்றவராய், சிவத் துரோகிகள் யாவரும் கடைத்தேறத்தக்க நரகத்தில வீழார்கள். எக்காலமுங் கடைத்தேருத நரகத்திலே வீழ்வார்கள். எ - று. (௨௬)

வேதசித் தாந்த மற்றை யாகம விதிகள் யாவுந்
தீதுறு சிவத்து ரோகந் தீர்வன செப்பு ருவா
னீதுய ரொழிவா யல்லை யென்றன னிமலன மறைப்
பூதல வேந்தர் கோமான் கழுதையாய்க் கத்திப் போனுன்.

(இ - ள்.) வேதாந்தம் சித்தாந்தம் மற்றைய சிவாகமவிதிகளாகிய இவை யாவும் கொடியனவாகிய சிவத்துரோகங்களுக்குப்பிராயச்சித்தங்கள் சொல்ல மாட்டா, ஆதலால், நீ துன்பம் நீங்குபவனல்லவென்று புனிதராகிய பாரதி

கூறினர். அப்பொழுதே நிலவுலகிலுள்ள அரசர்கள் தலைவனான அவ்வரசன் கழுதையாய்க் கதிகொண்டுபோனான். எ - று. (சருள)

பரந்தெரிந் துணர்ந்த ஞானப் பசுபதி சாந்த னோடும்
புரந்தர னளித்த தன்மை நினைந்தருள் பொருமப் போனான்
கரந்துரு மிடித்து வீழ விறந்தவர் தம்மைக் கால [ன்.
னுரம்பட புடைத்து வீக்கித் தென்றிசை யுடன்கொண் டேய்ந்தா

(இ - ள்.) சிவபெருமான் நிலைமையைத்தெரிந்துணர்ந்த மெய்ஞ்ஞானம் பொருந்திய பசுபதி பாரதியார் சாந்தனென்னும் சீடனோடு, சிவபெருமான தமக்கு அநுக்கிரகித்த திருவருட்டன்மையைச்சிந்தித்துக்களிப்பு அதிகரிக்கச் சென்றனர். இடியிடித்து வீழ்ந்ததால் உடலழிந்திறந்த அந்த நால்வரையும் இயமன் கொடூரமாகத்தண்டித்துக் கட்டிக்கொண்டு உடனே இயமபுரத்திற் சேர்ந்தனன். எ - று. (சருஅ)

நீடிய தென்பாற் றிக்கி னிரைத்திடு மிருபத் தெட்டுக்
கோடிவெந் நிரையத் திட்டுக் கொடிதுறு சிவத்து ரோகர்
பாடுறு நரகிற் கோரபாற் பதகரிந் நால்வர் தம்மை
யோடுறு தலைகீ ழாக நிறுத்தின ருடற்று கின்றார்.

(இ - ள்) பரந்த தென்றிசையிலுள்ள இயமபுரத்தில் வரிசைப்படவிருக்கும் இருபத்தெட்டுக்கோடி நரகங்களிலும் முறையே செலுத்தி, இறுதியாகக் கொடுமைதங்கிய சிவத்துரோகிகள் துன்பமநுபவிக்கும் நரகத்தின் ஒருபக்கலில் பாவிகளாகிய இவர்களாலவரையும் தலைக்கீழாகத்தொங்கும்படி நிறுத்தினார்கள். அதனால் வருந்திக்கொண்டிருக்கின்றார்கள். எ - று. (சருகூ)

புலப்படு துவார மென்ப தொன்பதும் பொங்கிப் பொங்கி
யுலப்பறு கிருமி கிண்ட வுயிர்த்தில ராகி யோய்வா
ரலைத்தெழு கழுகு காகம் பருந்துவீழ்ந் தவர தாக்கை
யலைத்துறப் பிடுங்கி யுண்ண வருந்துய ருழப்ப ரின்னும்.

(இ - ள்) கண்ணுக்குப்புலப்படும் துவாரங்களாகிய ஒன்பதிலும் எண்ணிறந்த கிருமிகள் தொளைக்கும்படி சுவாசம்விட முடியாதவர்களாய்ச் சோர்வடைவார்கள். பறந்தோடுகின்ற கழுகுகளும் பருந்துகளும் காகங்களும், அவர்களுடலைச்சூழ்ந்துவரும்படி உடற்றசைகளைப்பிடுங்கித் தின்னுவதால் இன்னும் அதிகரித்த பெருந்துயரநுபவிக்கின்றார்கள். எ - று. (சகூ0)

கழிந்திடு கற்பங் கோடி கோடிமேற் கழிந்த வின்னு
மொழிந்தில ரென்ன நந்தி யெடுத்தெடுத் துவகை கூர
மொழிந்தன னினைத்துங் கேட்ட முனிவரன் முழுதா னந்தம்
பொழிந்தபே ருவகை பொங்கக் கட்புனல் பொருமா நின்றான்.

(இ - ள்.) செல்லுகின்ற கற்பகாலங்கள் கோடி கோடி மேம்பட்டுச் சென்றன. இதுகாறும் அப்பாதகர் நால்வரும் நரகத்தினின்றும் நீங்கவில்லை யென்று திருநந்திதேவர் விளக்கி மனக்களிப்பு மிகும்படி திருவாய்மலர்ந்தருளினர். இவற்றையெல்லாங் கேட்டருளிய சிவயோகியார் மிகுந்த நிறைவாகிய ஆநந்தத்தோடு கூடிய சந்தோஷமதிகரிக்க ஆநந்தபாஷ்பந் ததும்பவிருந்தனர்.

சொற்றன காதை முற்று முணர்ந்தனை யினமுஞ் சொல்வா
னுற்றதோர் காதை யுண்டு கேட்டியா லொலிநீ ருந்தி
முற்றிய கொடிக்கோட் டிஞ்சிக் கலிங்கநாட் டகத்து முந்நீர்
பெற்றவெண் கலைவெண் டிங்கட் பெருங்குடைத் தனிக்கோல் வேந்தன்.

(இ - ள்) நாம் சொல்லிய சரிதமுழுவதையும் உணர்ந்தீர். இன்னுஞ் சொல்லவேண்டியதாயுள்ள சரிதையொன்றுளது அதனையுங் கேட்பீராக ஒலிக்கின்ற ஆகாயகங்கையைத்தொடுகின்ற கொடிகள் நாட்டிய சிகரங்களையுடைய மதில்சூழ்ந்த கலிங்க நாட்டிலே, பாற்கடலிலுதித்த வெள்ளிய கலைகளோடு கூடிய சந்திரனையொத்த வெண்கொற்றக்குடையையும் ஒப்பற்ற செங்கோலையுமுடைய மன்னவனிருந்தான். எ - று. (சகூஉ)

இருந்தடம் புயத்து வைய மேந்துகா லிங்க னென்போ
னருமையி னறங்க ளாற்றி யருந்தவ முயன்று பெற்ற
வொருதனிக் குமரன் றன்பேர் விராதனென் றுரைக்கப் பெற்றான்
பொருகழ லரசர்க் கோமபு முயிரெனப் பொலியா நின்றான்.

(இ - ள்.) பூரித்த தனது இரு தோள்களிலும் உலகத்தைத்தாங்குகின்ற காலிங்கனென்னும் அம்மன்னவன், அரிய தருமங்களைச்செய்துபெற்ற ஒப்பற்ற ஓரே பேறான புத்திரன் விராதனென்னும் பெயர்பெற்றிருந்தான். அப்புத்திரன் ஒன்றோடொன்று மோதுகின்ற வீரகண்டாமணிதரித்த அம்மன்னவனுக்குக் காப்பாற்றத்தக்க உயிர்போல விளங்கியிருந்தான். எ - று. (சகூக)

அந்தணீ ருலகங் காக்கு மரசர்கோ னமைச்சி னின்ற
மந்திரி யரிதிற் பெற்ற மதலையாங் கவனற் றொமரு
சந்திர னவன்றன் வாயிற் புரகிதன் றவத்தி னீன்ற
சுந்தரத் தடந்தோட் பால னருமறைச் சுனந்த னென்போன்.

(இ - ள்.) வேதியர்களே! உலகினைப்பாதுகாக்கும் அம்மன்னவனுக்கு அமைச்சுரிமைபூண்ட மந்திரி அரிதாகப்பெற்ற புதல்வனொருவனுண்டு; அப்புதல்வன் பெயர் சந்திரன். அம்மன்னவனுடைய அரண்மனைப்புரோகிதன் தவத்தினாலீன்ற அழகிய விசாலம்பொருந்திய தோள்களையுடைய குமாரனொருவனுளன். அவன்பெயர் அரிய வேதங்களுணர்ந்த சுனந்தனென்னப்படுவான். எ - று. (சகூச)

மாமுடி யரசர் கோமான் வாயில்காப் புரியோ னுள்ள
மேமுறப் பயந்து பெற்ற சுகந்தனுங் கினையர் நால்வர்
காமரு சிறப்பின் மிக்கார் கருப்புவிற் காம னொப்பார்
பூமரு நதிக ளாடிப் புகுந்துறக் கருத்தி னோர்ந்தார்.

(இ - ள்) சிறந்த கிரீடமணிந்த மன்னர் மன்னவனாகிய அவனுடைய அரண்மனைக்காவல்பூண்டுள்ளவன் தன் மனங்களிப்பெய்தும்படி பெற்ற புதல்வன் சுகந்தனென்பவன் ஆகக்கூடிய இந்நால்வரும் அழகின் மிகுதியிலே சிறந்தவர்களாய் கருமபுவில்லேந்திய மன்மதனையொத்தவர்கள், நிலவுலகிலுள்ள தெய்வீக நதிகளில் ஸ்நானஞ்செய்து வரவேண்டுமென்று மனதிலெண்ணினார்கள். எ - று. (சகூரு)

ஈதவர் கருத்தி னெண்ணி யருந்தவத் தீறு பெற்ற
தாதையாக் குறுகி யன்னோ தனித்தனி வினவிக் கேட்ப

மாதுய ருழப்ப தானூர் மதலையர்க் குறித்து நோக்கிப்
போதிரென் றுரைப்ப மாழ்கி யொருவழி பொருந்தி னூரால்.

(இ - ள்.) இப்படி யவர்கள் மனதிற்கருதி, அருந்தவத்தின் முடிவாற் பெற்ற தங்கள் பிதாக்களையடைந்து, அந்நால்வருந் தனித்தனி விடைகேட்க, அவர்கள் பெருந்துயரெய்தினவர்களாய் அப்புதல்வர்களின் கருத்தை யோசித்துப்பார்த்து மனம்வருந்தி, போய்வருகவென்று ஒருவாறு சம்மதித்தனர்.

பொதிகிழி நிதிய மன்னோ ரவரவா போதற் கீந்தார்
மதியுரைத் தரிதிற் புல்லி மைந்தரை வாழ்த்தி விட்ட
ரதிர்கழ லரசா கோமான் மாநக ரகன்றா முன்னை
விதியிருந் துடற்றச சென்றார் தமகவென விளைவ தோரார்.

(இ - ள்.) திரவிய நிறைந்த நிதிப்பொதியைத் தங்கள் புதல்வர்களுந் தீாதத யாத்திரை செலலககொடுதது புததிகூறி யரிதாகத்தழுவிககொண டாசீர்வதித்து விடைதநதனுப்பினார்கள். சததிககினற வீரக்கழலணிந்த அம் மன்னா மன்னவனது நகரததைவிலகித தஙகளுககு நிகழ்தற்குரியனவற்றை யுணராதவர்களா யூழ்வினையானது தஙகி வருததும்படி போனார்கள். எ - று. ()

இனையவா நால்வ ரேகிச சுரேசசுரத திறுத்தா ரநதப்
புனைசடை மகுட கோடிப் புனிதனை தொழுது பின்ன
ரனையமா நகரத தோாபா லயின்றன ரதுகா லததுத
துணைபரி யிரவி சென்றான் றொடுகடற குடபாற றிக்கின்.

(இ - ள்.) இவர்களுல்வரும நடநது சுரேச்சுவரம் எனனுந தலததை யடைநதார்கள். அஙகெழுநதருளிய அழகிய சடைமுடியையுடைய கோடீஸ வரரை வணஙகி யதன்பின அநதச்சிறநத நகரததிலோரிடததிலுணவு கொண டாாகள். அப்போது வேகததோடுகூடிய எழுபுரவிபூணட [தேரையுடைய] சூரியன் ஆழமாகிய மேற்றிசைக கடலில் அமிழ்நதனன். எ - று. (சகூஅ)

கள்வரால் பயமுண் டென்னுங் கருத்தினர் குமர னநத
வெள்விடை யவன்பொற கோயிற் றுயின்றனன் விசால வெற்பு
வள்ளியோர் மரபிற் சைவ தேசிகன் மடததி னோர்பா
லுளபுகுந துறக்க முற்றா னமைசசாகோ னுவநத பாலன்.

(இ - ள்) இஙகே திருடர் பயமுணடாமென்னுங கருததினுல் அரசிளங் குமரனை விராதன் வெளளிய இடபவாகனமுடைய சிவபெருமானுடைய ஆலயததிலே நிததிரைசெய்தான். மநதிரிததலைவனின்ற புதல்வனுகிய சநதிரன் வெள்ளிமலையென்னுந திருககைலாயததில வீற்றிருககும் வள்ளலாகிய சிவபெருமான மரபில சிவாசசாரியருடைய மடத்திற்புகுநது ஓாபுறந் துயின் றான். எ - று. (சகூகூ)

புரகிதன் புதல்வ னநத வனமபடு புரையுட் புக்கா
னிரவுகண் டுயிலப பெறறான மறறையோ னொநதை முன்னர்
விரைபுனற் கரையி னோபாற படிவிழி முகிழததான வெய்யோ
னிரைதிரைக் கடற்க ணுற்றான் விடிநதது நிமிாநத கங்குல்.

(இ - ள்.) புரோகிதன் புதல்வனை சுனநதன் நந்தவனமிருக்குமிடஞ் சேர்ந்தன்றிரவு நிததிரை செய்தான். மற்றொருவனுகிய வாயிற் காவலன் மகன்

சுகந்தன் சிவபெருமான் திருமுன்னுள்ள மணங்கமழும் நீர நிரம்பிய குளக்க ரையினொருபுறத்தின் படியின்மேனித்திரை செய்தான். சூரியன் சஞ்சரிக்கின்ற அலைகளையுடைய கீழ்க்கடலிலுதித்தான. மிகுந்த இரவு நீங்கிற்று. எ - று.

விடியலி னெழுந்து நால்வ ரொருநெறி விரவி யநதக்
கடிநக ரொழியச சென்றார் காவதங் கடந்த பின்னா
வடிமறை பயின்ற தெய்வக் கவுதமர் வரவு நோக்கிப
படிமுடி தடவ வீழ்ந்து பணிநதனா பாலா நால்வா.

(இ - ள்) விடியற்காலத்திலந்நால்வருமெழுந்தோரிடத்திற்சேர்ந்து மேன்மைதங்கிய *அந்நகரத்திற்குச்சென்றாகள். அப்படியவாகள ஒரு காததூரம் போன பிறகு தெளிந்த வேதங்களையுணர்ந்த தெய்வீகந்தங்கிய கௌதமமுனிவருடைய வருகையைககண்டு அப்புதல்வா நால்வரும தங்கள் சிரங்கள நிலமிசைப் படிய சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினாகள். எ - று. (சஎக)

மாதவத தலைவ னந்த மைந்தரை வரவு நோக்கிப
போது வ தியாங்க ளென்று ளாங்கவர் தொழுது போற்றிக்
கோதறு குணத்தோய் தெய்வக குளிர்புன னதிக ளாடித
தீதவித திடுத லோரந்தே மென்றனர் சிறுவா யாரும.

(இ - ள்.) பெருந்தபோதனராகிய கௌதமமுனிவர் அப்புதல்வர்களின் வருகையைக்கண்டு நீங்களெங்குப்போகின்றீர்களென்று வினவினர். அப்புதல்வர்களெல்லாரும அம்முனிவரை மறுபடியும வணங்கித் துதிசெய்து குற்றமற்ற குணசீலரே! தெய்வீகந்தங்கிய குளிர்ந்த நீர் நிரம்பிய நதிகளில் ஸ்நானஞ் செய்து எங்கள பாவங்களைப் போக்கிக்கொள்ளுதல் கருதினோமென்றாகள்.

அருந்தவத் தலைவ னுள்ளத் தணிமணி முறுவல் பூத்தான்
வருந்தின னிவரை நோக்கி மைந்தர்காள் வருதி ரென்று
விருங்கதி ரின்று போமு னுமமுயி ரிழப்பீ ரெங்ஙன
பொருந்திரை நதிக ளாடிப புகுவது புகலு மென்றான.

(இ - ள்.) அரிய தவசிரேஷ்டராகிய கௌதமமுனிவர் மனத்திற் பொருந்திய அழகிய புன்னகை பூத்துவருந்தியவராய இவர்களைநோக்கிப் பிள்ளைகளே! வாருங்களென்று, இன்று சூரியாஸ்தமத்திற்கு முன்னரே உங்களுயிரையிழப்பீர்களாதலின நீங்கள எப்படி அலைகள மோதுகின்ற தீர்த்த ஸ்நானஞ்செய்து திரும்புவது; சொல்வீர்களாகவென்றனா. எ - று. (சஎஉ)

எளியமின் றிறக்க வெய்துங் காரண மென்னை யென்ன
விளிபடு நெனனற கங்குல விழிமுகிழ்த் துறங்குங் காலை
நெளியர வணிந்த வேணி நிமலனுக் காகா செய்தீர்
வெளிபட வுரைக்கு மன்ன கேட்கென விளம்ப லுற்றான்.

(இ - ள்.) எளியேங்களாகிய அடியேங்கள் இன்று இறக்கும்படிசம்பவிக்கும் நிமித்தம் யாது? என்று வினவ, இன்று விடிந்த நேற்றைய இரவில் நித்திரை செய்யுங்காலத்தில் நெளிதலையுடைய சர்ப்பாபரணமணிந்த சடையையுடைய புனிதராகிய சிவபெருமானுக்கு ஏலாதனவாகிய அபசாரங்களைப் புரிந்தீர்கள. அவற்றைவெளிப்படையாகச் சொல்லுவோம் கேட்பீர்களாகவென்றுமுனிவாசொல்லுகின்றார். எ - று. (சஎச)

ஒருவனு லயத்துட் டுஞ்ச மயிர்கழிந் துகுத லானு
மொருவனக் குரவ னில்லிற தம்பலிட் டுமிழ்த லானு
மொருவனுண் மலர்ப்பூங் காவி னுமிழ்தலுந திருநீாக குட்டத்
தொருவன்மூக கொழுக்குச சிநதி யிடுதலு முடையீா பாவம்,

(இ - ள்.) உஙகளிலொருவனுகிய அரசகுமாரன் சிவாலயததுள் துயில்புரிய அவன்றலைமயிர் அஙகேவிழுநது சிநதுதலாலும், மற்றொருவனுகியமந்திரிகுமாரன் அச்சைவதேசிகன் வீட்டிற்றுயின்று தாம்பூலநதரிதது அங்குமிழ்நததாலும, மற்றப் புரோகித புததிரன புதியமலாகளையுடைய பூஞசோலையிற்றுயினறு எச்சிலுமிழ்நததாலும, மறறொருவன் வாயிற் காவலன் மகனபழகிய தீாததககரையிற்றுயின்று மூககுச்சிநதியதாலும சிவததுரோகமாகிய பாவஞ்செய்தவாகளாவீர்கள். எ - று. (சஎரு)

என்றவ னுரைப்பக் கேளா நால்வரு மிகநத வுள்ளத
தொனறுமுற றுணரா ராகிப போயின ரொருஙகு சென்றூர்
பொன்றிணி கழற்கான் மைநதன் றலையிடி பொருநதிப படடா
னன்றுமற் றொருவன கணட மடைததுயி ரிறநதா னன்றே.

(இ - ள்) என்று அககௌதமமுனிவா சொலலககேட்டு, அநநால்வாகளும தமது வமியமனததிலொருசிறிதுமுறறக கருதாதவர்களாகி நடநது ஒருசேரப்போனூர்கள. பொனமயமான வீரககழலணிநதகாலையுடைய அரசகுமாரன்றலையில இடி விழுநதிறநதான். அப்பொழுதே மற்றொருவன் தொணடையடைத்துயிர் நீஙகினன. எ - று (சஎசு)

மற்றையோன் றனது நாசி வழிதொளை குருதி கால
விறறன ெனுருவன் றனுைப புறபபட விறநதா னினனோ
ரறறைநா ளிறபபு நோககி யடுதிறன் மறலி தூதா
பறறினா பிடிததுக கொண்டா ரிறுககினா பாசம வீக்கி.

(இ - ள்) மற்றொருவன தன நாசிகாநதரததின வழியே யுதிரமொழுக இறநதான். மற்றொருவன தனது நாவானது வெளிப்பட்டுததொஙகமரிததான. இவாகள் அன்றையதினம இறததலைககணடு கொலலுமவலலபமுடைய இயமதூதாகள அவாகளைபபறறிப பிடிததுககொணடு தஙகள பாசககயிறறினுல கட்டியிறுககினூகள். எ - று. (சஎஎ)

அரசிளங் குமரற கீய முருககி மோந தூசசி யப்பா
விரவுசெப புருகக மைசசன பாலகன் வாயில விடடுப்
புரகிதன் மகனை நாககு வாஙகினின் றரிநது போககி
மரபின்மற் றவற்கு நாசி காசசிய சலாகை மாடடி.

(இ - ள்.) முறையே அரசிளஙகுமாரனுககு ஈயததையுருககி அவனை மூகாச்செய்து அவனுச்சியிலப்பியும, செமபினையுருககி மநதிரிகுமாரன வாயிலொழுககியும, புரோகிதன் மகனை நாககைபபிடிததிழுதது அறுததெரிநதும, மற்றவனை காச்சிய இருப்புச் சலாகையை அவன நாசியில் மாட்டியும. எ - று.

விழுத்தரு கிரையத் துநதி வீழ்த்தினர் வெங்கட் டூத
ரொழுக்கமி லணைய நாலவாக் குய்யுநா ளொருநா ளுண்டே
விழுததவத் தலைவ னென்று னநதியவ் விரத நோன்மை
*பழுத்தமெய்த் தலைவன் முததன் செய்கையைப பரிவி னோர்ந்தான்,

(இ - ள்.) அஞ்சாமையையுடைய இயமதூதர்கள், வீழ்த்தற்கரிய நரகத்தினிடையே வீழச்செய்தார்கள். நல்லொழுக்கமில்லாத அந்தநால்வரும் உச்சிவிக்கத்தக்க காலம் ஒருகாலம் உளதாகுமோ? சிறப்புற்றதவசிரேஷ்டரே யென்றனர். நந்திதேவர் அவ்விரதத்தின் மேம்பாடுமிகுந்த உண்மைத்தலைவரும் சிவன் முதற்ருமானுருடைய செயலை அன்போடு உணர்ந்தார். எ - று. (சஎகூ)

நந்தியீ துரைப்பக் கேட்ட யோகியு நளின பீடத்
தந்தண னவனுங் குலலை யலங்கலந் தோளி னனும்
வெந்தசிந் தையரா யங்கம் விதிர்விதிர்த் தச்சங் கூர்ந்தார்
சிந்தைமுற் றுணர்ந்தே மற்றச் செய்பலை செல்வ வென்றார்.

(இ - ள்) திருநந்திதேவர் இவற்றைத்திருவாய்மலர்ந்தருளக்கேட்ட சிவயோகியாரும், தாமரைமலர்ப் பீடத்திலெழுந்தருளிய பிரமதேவனும், குலலைமலர்மாலைதரித்த தோளையுடைய விஷ்ணுமூர்த்தியும், கொதித்தமனமுடையவர்களாய், உடல் நடுநடுங்கிப் பயமடைந்தவர்களாய், நந்திபகவானே! தாங்கள் திருவாய் மலர்ந்தருளியவற்றை மனத்தின் கண்முற்றத் தெளிந்தோம். மற்றையவிருத்தாந்தங்களைச் சாற்றவேண்டாமென்று விண்ணப்பித்தார்கள். எ - று.

எழுந்தன ரனைய நால்வ ரீங்கிவ ரியற்று பாவம்
மொழிந்துறக் கேட்ட னப்பான் முற்றுறு முற்று ருமை
கொழுந்தினந் திங்க ளேந்து கொடிச்சடைப் பரனை யெய்தித்
தொழுந்திற னுணர்ந்தார் செல்லு முன்னரே தொடர்ந்த துள்ளம்.

(இ - ள்.) அவர்கள் நால்வரும் உடனே யெழுந்தார்கள். இவர்களெல்லாம் செய்த பாவங்களைச்சொல்லவும் கேட்கவுமிருந்த மையிடத்தில் அப்பாவங்கள் முற்றுமெய்திம. அது எய்தாதவகையாக, இளமைதங்கிய பிறைச் சந்திரனைத் தாங்கிய படர்ந்த சடையையுடைய சிவபெருமான்பாற் சேர்ந்து பணியுந் திறத்தையுணர்ந்தார்கள். அவர்கள் அங்ஙனம் செல்லுமுன்னரே அவர்களுமனமான துமுற்பட்டுப் படர்ந்துசென்றது. எ - று. (சஅக)

எம்பிரா னியற்கை முற்று மெடுத்தெடுத் திசைத்த தேவர்
தம்பிராற் குரிய னொடும் புகுந்தனர் தளைப்பூங் கொன்றை
வம்புலாஞ் சடிலி பொற்றாள் வணங்கியோர் மருங்கு நின்றார்[யார்.
கொம்பொரு புடையோன் பாகக் குந்தொறுந்தொறுங் கூப்புங் கை

(இ - ள) எமது சிவபெருமானுடைய தன்மை முழுவதையுமெடுத்தெடுத்திசைக்கூறிய, தேவர்தலைவனாகிய சிவபெருமானுக்குரிய திருநந்திதேவரோடும், சந்நிதானத்திற்புட்பிரவேசித்து முறுக்கவிழ்ந்த அழகிய கொன்றைமலரினவாசனை வீசுகின்றசடையையுடைய சிவபெருமானது பொன்போலும்பாதங்களிற் பணிந்து உமாதேவியை ஒருபக்கத்திலுடைய சிவபெருமான் திருக்கடைக்கண் சார்தத்தும்போதெல்லாங்குவித்தகையையுடையராய் ஒருபக்கத்தில் நின்றார்கள்.

தாழ்சடைப் பரம நாதன் சதானந்தன வதன நோக்கி
யூழ்முறைக் காதை முற்று முனக்குரைத் தனனே யென்ன
வாழிநீ யுரைப்பக் கேட்குந் தனமையின வருத்தா னனனோ
சூழ்வினைத் தொன்மை யெல்லா மென்றடி தொழுது நின்றான்.

(இ - ள்.) தொங்குகின்ற சடையையுடைய சிவபெருமான் சதானந்தரு டைய முகத்தைப்பார்த்து முற்காலத்தினடந்த விருத்தாந்தமுழுவதையும் நமது நந்தியுனக்கு நன்குகூறினனோ எனவினவவுந் தேவரீர் சொல்லும்படிகட்டளை யிட்டபடியே அவர்கள் தேடியபண்டைய பாவமுழுவதையும் விளக்கிக் கூறினர் என்று கூறிப்பாதங்களைப் பணிந்து நின்றார். எ - று. (சஅரு)

அத்தலை யவனை நோக்கி யருளவப் பருளா நின்றான்
முத்தனை முறையிற ழுந்து மூவரும் புறத்துப் போனார்
கைத்தலைப பிரம்பு தாங்கி நந்திவெங் கணத்தர் சூழ
சித்திரச சிகர வாயி லிருந்தனன் சிறப்பு மிக்கான.

(இ - ள்.) அக்காலத்தில் சிவபெருமான் அச்சதானந்த யோகியைப்பார்த் துச் சந்தோஷித்தருள புரிந்தனர். முத்தனாகிய பரமேசுவரனை யமமூவருமுறை ப்படி பணிந்து வெளியேவந்தார்கள. சிறப்பின் மிகுந்தவராகிய திருநந்திதே வா தமது திருக்கரத்தில் பிரமபினைததாங்கினவராகி வலிதாங்கிய கணங்கள தம் மைப்புடைசூழச் சித்திரிக்கப்பட்டுள்ள முதறகோபுரவாயிலில் வீற்றிருந்தனா.

இன்னவை நந்தி யனனோர்க் கிசைததவை யெடுததுக் காட்டிச்
சொனனவச சூதற போற்றி யருந்தவா துளக்கங் கொணடா
ரென்னையா ளுடையோற காகா வியற்றுறு தியங்கு காலம
பின்னுறக கழிபப தமமா வரிதெனப பேதுற றாரால.

(இ - ள.) திருநந்திதேவா அவாகளுக்குச் சொல்லியனவாகிய இச்சரிதை களையெடுத்துக காட்டிச்சொலலிய சூதமுனிவரை யருந்தவம்புரிந்த நைமிசார ணிய முனிவராகள துதித்துச் சந்தோஷித்தாரகள. என்னையடிமையாகவுடைய சிவபெருமானுக்கு ஆகாதனவற்றைச் செயயப்பெறுமல் பின்னேயுணடாகுங்கா லத்தைக கடததல ஆ! ஆ! அருமையெனறு அச்சமெயதினாகள. எ - று.

ஐயநீ யுரைத்த முற்று முணாந்தன மறியா தினனோர்க்
கெய்திய பாவந் தனனு லிபபெரு நிரைய முற்று
றுய்திற மொழிந்து நெஞ்ச முணாந்துணை ராமை யானுரு
செய்துறு சிவத்து ரோகத தியனறவா செபபு கெனறா.

(இ - ள்.) ஐயனே! தேவரீா கூறியவற்றை முற்றுமுணாந்தோம அறிவின் மையால் இவாகளுக்கு உணடாகிய பாவகாரணத்தால இவாகள் இபபெரிய நர கங்களையடைந்தாாகள. உச்சிவிக்கும நிலைமை தவறிமனததாலுணாந்து முணரா மலுசெய்துள்ள சிவததுரோகிகததானிகழந்தனவற்றைத்திருவாய்மலர்தருள்க வென்றுபிராாதித்தாாகள். எ - று. (சஅசு)

நல்லவா கேட்டி ரென்று நகைபுரி முகதத னகி
யெலலவாங குடில வேணிச சூதனுற றிசைபப தானுன்
றெல்லைநாட் சைவ நீதிச சோமசன மாவென் றுள்ளோ
னெல்லையா கமங்க டோயந்த சிவசன்மா வென்று ளோனும்.

(இ - ள்.) நைமிசாரணிய முனிவர்களே! நல்லவகையாகக் கேட்டீர்கள் என்று புன்னகை புரியுமுகத்தினராகி, சூரியாஸ்தமத்தில் உறும் செவ்வானம் போன்ற சடையையுடைய சூதமுனிவர் சொல்லுவாராயினர், பணடைக்காலத்

தில் சைவாசாரத்தையிகக் கொண்டசோமசன்மா வென்பவனும் சிவாகமங்க ளின் எல்லையைக்கடந்த சிவசன்மா என்பவனும் (ஆகிய இருவரும்). எ - று.

வரநதி புனைந்த வேணி வானவற் கடிமை பூண்டோர்ப்
பரவிய வுளத்தா னீறு கண்டிகை பரமென் றோர்ந்து
தரவருஞ் செய்கை பெறறோ ரருசசனை தவறார் தெய்வக்
குரவரிற் பிழையா சைவக கொழுநதெழ வளர்தது நின்றார்.

(இ - ள்.) சிறந்த கங்காநதியைத் தரித்தசடையை யுடைய சிவபெருமானு க்கு அடிமை பூண்டவர்களாய் அடிமைத்திறஞ் செய்யும் மனதோடுதிருவெண் ணீற்றையு முருத்திராக்க மாலிகையையுமே பரமெனறுணர்ந்துமேம்பட்ட கிரு த்தியங்களைச் செய்பவர்கள் சிவார்ச்சனையில் நியதிதவறாதவர்கள் தெய்வீகந தங்கிய ஆசாரியருக்குக் குற்றஞ்செய்யாதவர்கள் சைவசமயங்கொழுந்துவிட் டோங்கும்படி விருத்திசெய்துகொண்டுள்ளவர்கள். (சஅஅ)

இயங்குநா ளொருநா ளெநதை யாலய மிறைஞச வெய்தி
முயங்குபே ரன்பி னேடும வலன்றிரி முறைமை முறறிப
புயங்கவே ணியனை முனனாப பணிநதெழுந தகததுப் புக்கார்
வியநதெழு விமம லோடு மெய்பபுள கெழுநது நினறார.

(இ - ள) இப்படிநட [illegible]ளில் ஒருநாள எமது தநதையாகிய சிவபெரு மான திருக்கோயிலை வணஙகசசென்று பேரனபோடும பிரதககணமுதலியவற் றைமுறைப்படி முடிததுச் சாப்பாபரணராகிய சிவபெருமானைத திருச்சநநிதா னததிற்சாஷ்டாஙகமாகபபணிநது எழுநது தமது வீட்டிற்குச் சென்றார்கள். சநதோஷததினுறறோனறிய விமமிததததாலுடன முழுவது மயிர்க்கூச்செறிந்து நின்றாகள. எ - று. (சஅசு)

ஏற்றுடை யவனைப் போற்று மிருவரி லொருவன் மெய்யிற்
காறறுறத தீப மொனறு சிதைநதது கண்டு நினறு
மாறறமொன றுரையா துறறுன் மறறவ னினையா மீண்டான்
கூற்றிவை யுணாநது சீறறக கொடுமையின் மகுடஞ் சாய்ததான்.

(இ - ள்.) இடபவாகனனைப்பண [illegible] மிவவிருவரில் ஒருவனுடைய தேகவசை வால் உணடாய காறறால் ஒருவிளககவிநதது கணடும நினறுவாளா சென்றான. மற்றவன் ஒனறுஞ்சொலலாதும் நினையாதும திருமபினன. இவற்றையுணாநத இயமன் தனககுணடாய சோபததின மிகையால தலைசாயததான. எ - று.

நாள்பல கழிந்த பின்ன ரிறநதனா நமனபாற் றூதா
மூளிருஞ் சினதத ராகிப பிடிததனா முழங்கை முட்ட
நீளிருங கயிற்றிற பறறி யிறுககினா நிறுதத லிலலா
வாளெறி யெயிறறுப பேழவாய் மறலிபாற கொணாநது விட்டார்.

(இ - ள்) பலநாள் கழிநத பின்னா இவர்களிறகக இயமனுடைய தூதுவா கள் அதிகமாகின்ற கோபததையுடையவாகளாய இவாகளைப்பற்றி இரண்டுமுழ ஙகைகளும் நெருங்கும்படியாய்ப் பெரிதும் நீணடுள்ள கயிற்றாற்கட்டி இறுககி நிறுததாமல், ஒளிவீசும்பல்லும பிளநதவாயுமுடைய இயமனிடத்திற்கொண்டு வநது விட்டார்கள். எ - று. (சகூக)

வெய்யவர் நிரைய மெல்லாம் வீழ்ந்துறக் குளித்தார் பின்னர்
நெய்யுறு விளக்க மெய்யிற் காற்றினு னிறுத்திச சென்றேன
செயயதீ பத்தைக் காணு தேகவு மனையன் செங்கண்
கையறு காத நானகு வளாந்ததோர் கணத்தி னுள்ளே.

(இ - ள்.) இககொடியவரிருவரும நரகமெல்லாம வீழ்நது அநுபவித்தபிறகு (இவருள) நெய்விளககைத தேகவசையின் காற்றால் நிறுத்திபபோனவன அநத நலல தீபததைககாணுமற சென றபடியால் அவனுடைய சிவநதகணகள ஒரு கூணததில குறைவிலலாமல் நான்குகாதம வளாநதன. எ - று. (சகூஉ)

நோககினன றதனைச சொலலா மறறையோ னெடியபபட்ட
நாககுமவ வளவை யாக வளர்நதது நரியும நாயு
மேகருயா பருநதுங் காக படலமுங கழுகும வீழ்நது
தேகமெழு குருதி மாநதிப பிடுங்கின தினன நின்றா.

(இ - ள்.) தீபமவிநதததைபபாாததும் ஒன்றுஞ சொலலாத மற்றவனதுநா க்கும், சீககிரமாய அவவிதமாய நானகு காதம வளர்நதது. நரியும, நாயும மே லேபறககிற பருநதும், காககூட்டமும கழுகும கீழேயிறஙகி திருபதியுணடாக, இரததததைககுடிததுப் பிடுஙகித்தினறும படியாகவும நினறாாகள். எ - று.

இறறைநா ளளவுந துன்ப முழுநுருவ ரிவாக ளீண்டு
கறபமோா கோடி மேலுங கழிநதன கருபபுக கோல
விறபடை யவனைச செறறேன றனனிலே விருமபிப போறறும
பொறபினு னொருவ னெநதை யாலயம போறறப புககான.

(இ - ள்.) இப்போது கோடிகற்பஙகளுககு மேலுஙகழிநதும இவாகள துன் பத்தைய நுபவிததுககொணடிருககின்றாாகள. இது நிற்க. கருமபைவிலலாகவில் லாகிய ஆயுதமாககொணட மனமதனை நீறககிய வஞகிய சிவபெருமானுடைய தன்மையை விருமபித்துதிககினற அழகிய ஒருவன் எமது சிவபெருமானது ஆல யததுள வணஙகுமபடியாகச சென்றான. எ - று. (சகூச)

நெய்யிடு தீப மிறற திரியொடும பொலிய நேர்நது
கையினற றாணட வனறெனை காத நடு ககததுட டோயநத
பெயதுளி நறுநெய் தூஙகி யுறைநதது பினன ரெய்தி
யொயயெனப பொசிநத வெஞசோ றளவது முருகித தோய.

(இ - ள) நெயயினுலெரிககப்பெறற தீபமொன்று துணடுபட்ட திரியோ டும பிரகாசிபபதைப்பாாததுக கையினுறறூணட, விரலின்நகததினுள்சென்ற சிறிதுநெயயானது தஙகிப்போய, பிறகு அவனசென்று சீககிரமாகபொலிவோடு கூடிய சாததததைக கலததலும உருகிச சாததததிறறேய. எ - று. (சகூரு)

நுகர்நதன னடிசி லந்த நெயயொடு நுகரா நினறே
னிகநதன னுவி தெனபாற றூதாவந திடிததுப பொஙகித்
தகாநதிடச சென்னி யோசசிப புடைததனா தடககைத தாம்பா
னெகிழநதுற திறுககிக கொணடு சென்றடு நிரையத திட்டாா.

(இ - ள்.) சாப்பாட்டைச்சாப்பிட்டான். அநத நெய்யுடன்சாப்பிட்ட குற்ற த்தினால் அவன் உயிாவிட்டவுடன இயமதூதாவநது இடிததுககோபஙகொணடு

தலைசிதற ஓங்கியடித்து, பெரிய தமது கையிலுள்ள கயிற்றால் தளர்ச்சியுண்டா காமல் இறுக்கிக்கட்டிக்கொண்டு போய் நரகத்திலிட்டார்கள், எ - று. (சகசு)

பாதல நிரையத் தாழ்ந்து பற்பக லிறந்த பின்னாப்
பூதலப் பிறப்பி லுயிற பிறந்தன னீது போக
வாதியம் பரமற காளா யடித்தொழி லுறண்டு பூண்டோ
னேதரு மதிமா னென்னும் பெருங்குணச் சைவ யோகி.

(இ - ள்.) தாழ்ந்த நரகத்திற் கிடந்து பலநாள் கழிந்தபின் பூமியில் நாயா ய்ப்பிறந்தனன். இதுநிற்க. முதல்வனாகிய சிவபெருமானுக்கு ஆளாய அடிமைத் தொழில்கொண்டு சொல்லுதற்கரிய மதிமானென்னும் பெயரையுடையவனாய நல்லகுணம்வாய்ந்தசைவயோகி (ஒருவன்). எ - று. (சகஎ)

வைகலு மீசற கான மஞ்சனம பொலிய வேண்டு
நெயயிலை யடைக்காய மஞ்சட் காபபிளை யிளநீ ரின்ன
பைபபய விரபபி னீட்டி பலவிலைக கு்ரித்தாய நிறபான்
சைவநூ லுணாந்து பூசி சாதனத தலைமை சாரவான.

(இ - ள்.) ஒவவொருநாளும பரமேசுவரனுடைய அபிஷேகம் பிரகாசிக்க வேண்டியதயிலம், பத்திரம, தாம்பூலம, மஞ்சட்காப்பு, இளநீா முதலியன சிறி துசிறிதாக யாசகஞ்செயது சேரதது, சிவதொண்டுக்குரியவனாய் நின்று, சிவா கமங்களையுணாந்து சைவமார்க்கத்திற் சிறந்து நின்றான. எ - று. (சகஅ)

இபபரி சியற்று நாளி லெமபிரா னபிடே கத்தி
னபபொழி யிளநீா பனறு ளக்கைதொட டெடுத்துத் தின்பா
னுபபுறு காலம போகக யொழிந்தன னுவி தெனபாற
செபபருக் கனைய கணறூா வளைத்தனா தெழிக்குஞ் சொலலார்.

(இ - ள்.) இவ்விதமாக நடத்திவருநாளில எமது தலைவனுக்கு அபிஷேகமா னஜலங்கழிந்த இளநீரை அக்பபையால போத்துப்பலநாள தினறு வந்து அவனு டைய வாணாள ஒழிய உயிாவிட்டான. இயமபுரத்திலுளள உருக்கிய செமபுபோ னற கணகளும போரொலியோடு கூடிய சொலலையுமுடைய தூதா சூழ்ந்து கொணடாாகள். எ - று. (சகசு)

பற்றினா பறறி வீசு பாசத்தா லிருகை மாட்டிச
சுறறினா துரததித தெனபாற சுடுதழ னிரையத திட்டா
ரிறறிது கிடக்க மறறோ வணிகணீ ராறு பொறறோட
கொறறவேள குமரற காட்பட் டுருகுறுங கொள்கை பெற்றான்.

(இ - ள்.) பிடித்துக்கொண்டு வீசுகினற கயிறறால் இரணடுகைகளையுங்கட்டி ச்சுற்றித்துரத்தி இயமபுரத்திலசுடுகினற அக்கினி நரகத்திட்டாாகள். இதுநிற்க. மறறொருவாததகன பனனிரணடு அழகியபுஜங்களையுடைய வீரகுமாரனை முரு கப்பெருமானுக்காட்படடு (மனம) உருகுகினற பக்திமார்க்கத்தில் நின்றான்.

காலையி னெழுந்து செய்யுஞ் செயவினை கழிந்த காலை
யாலயங் குறுகிச சூழவந் தறுமுகற பணியா நிறபான்
கோலவேலெந்தை கோயிற் பசிரிகைக கொண்டு செல்வான்
பாலெழு மடிசி லோடு நுகாந்தன னளவில பனனாள்.

(இ - ள்.) உதயகாலத்தில் எழுந்து செய்கின்ற நித்தியகருமங்களை முடித்தபோது, திருக்கோயிலையடைந்து பிரதக்கணஞ்செய்து அறுமுகக்கடவுளைவணங்கிக்கொண்டிருப்பான். அவன் அழகிய வேற்படையேந்திய எமது தந்தையாகிய குமாரக்கடவுளின் ஆலயத்தில் முளைத்திருந்த பசுமைக்கீரையைப்பறித்துக்கொண்டுபோய், பாகுபாடமைந்த சாதத்தோடுபலகாலம் புசித்திருந்தான். எ-று

தன்னுயிர்க் களவை யெய்தி யிறந்துழித் தறுகட் டூதர்
பின்னுறு மணித்தாம் பிட்டுப் பின்னுறப் பிணித்துச் சென்றார்
தென்னிலை நிரையத் திட்டா ராதலாற் சிவத்து ரோக
மென்னிலை யெய்து மோமற் றறிந்திலம் யாமு மின்னும்.

(இ - ள்.) தன்னுயிர்க்கு இறுதிக்காலமடைந்து அவனிறந்தபோது, கொரேர்களாகிய இயமதூதர்கள், பின்னலிட்டுள்ள மணிக்கயிற்றை வீசிப்பின்புறமாகக்கைகளைச்சேர்த்துக்கட்டிச்சென்று இயமபுரத்திலுள்ள நரகத்திலிட்டார்களானபடியால், சிவத்துரோகங்கள் எங்ஙனம் வந்தடையுமோ அவ்வகைகளை நாமும் இன்னுமறியோம். எ - று, (௫௦௨)

சினவிடை யவனாற் பெற்ற பாதகத் தீமை மற்றீ
தெனவெடுத் துரைப்பச் சூதன் கேட்டரு ளிருடிச் செல்வர்
மனனடுக் குற்று ரெங்ஙன் மாதவம் பயில்வ தென்றார்
புனையிழை பாகற் காகாப் புரிந்திடா திருந்து போற்றி.

(இ - ள்.) கோபந்தங்கிய இடபாரூடராகிய சிவபெருமானுக்காகாத பாதகங்களின் கொடுமைகள் இவையென்று சூதமுனிவர் கூறியருள, அவற்றைக்கேட்டுக்கொண்டிருந்த நைமிசாரணிய முனிவர்கள் அலங்காரமுள்ள ஆபரணமணிந்த உமாதேவி பாகராகிய சிவபெருமானுக்காகாத தீமைகளைச் செய்யாமலிருந்து அப்பெருமானைத் துதிசெய்து எப்படிப்பெருந்தவ முடிப்போமென்றுமனநடுங்கினார்கள். எ - று. (௫௦௩)

அரிதரி தம்ம வென்ன வதிசய மடைந்தார் யாரும்
பரிவினஞ் செழுத்தை யோர்ந்திப் பாதகந் தொலையா நின்றார்
புரிசடைச் சூத னின்னோர் படுவன புகன்ற பாவ
மிரியவஞ் செழுத்தை நெஞ்சத் திருத்தியெண் புருக நின்றான்.

(இ - ள்.) அரிது அரிது! அம்மா! என்று முனிவர்கள் யாவரும் அதிசயமுற்றார்கள். அன்போடு ஸ்ரீபஞ்சாக்கரத்தைத் தியானித்து இப்பாதகங்களைக்கேட்ட தோஷத்தைத்தீர்த்துக்கொண்டார்கள். முறுக்கிய சடையையுடைய சூதமுனிவரும் இப்பாவிகள் நரகிலனுபவிக்கின்ற [illegible]களையுரைத்த பாவம்விலகும்படி ஸ்ரீபஞ்சாக்கரத்தை மனதிற்றியானி[illegible]மபும நெக்குவிட்டுருக வீற்றிருந்தனர். எ - று. (௫௦௪)

சிவத்துரோகிகளெய்தும் நரகவேதனைச் சருக்க
முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௩௨ - க்குத திருவிருத்தம் ௨௪௩௪.

## பதின்மூன்றாவது

# சிவபூசை மான்மியச்சருக்கம்.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தொன்மை யாவையு முணர்ந்தறி நிறைகுணத் துரிசறு பெருந்தவ
முடையீர், வன்மை மாநர குழந்திடு பாதகர் மரபெடுத் துணர்த்தினம்
மின்னுஞ், சின்மை யத்திரு வுருவென நின்றவச் சிவனடி யருச்சனை
புரியுந், தன்மை யோதுது மொருவழி நிறுத்துது மனம் வரன்முறை
கேட்டுறத் தகுமால்.

(இ - ள்.) பண்டைய சரிதங்களெல்லாவற்றையும் தெளிந்துணர்ந்துள்ள சற்குணநிறைவாற் குற்றமற்றபெருந்தவமுடைய முனிவர்களே! மிக்ககொடுமைகள் தங்கியபாதகர்களின் முறைமையை விளக்கிச் சொன்னோம் இனி ஞானமயமாகிய திருவுருவமாக வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடிகளைப்பூசிக்கின்ற இயல்பினைச் சொல்லுவோம். ஆதலால், மனத்தை ஒருவழியில் நிறுத்திவரன்முறையாகக் கேட்கத்தக்கது. எ - று. (க)

அரனருச்சனை புரிதிறங் கேட்டிறி னுடரா நெடுமுடி கிடந்த
வரவு நீணிலம் பஞ்சமா பாதக ராயினு முருத்திர வக்கம்
பரவு பூதியஞ் செழுத்திவை நினைந்துறு பாதக ராயினும் படிமேல்
விரவு றுஞ்சரா சரங்களாங் கவரடி வேண்டுறு மிருங்கதி வேண்டி.

(இ - ள்.) சிவார்ச்சனை செய்யுந்திறத்தைக் கேட்பீர்களாயின், அப்படிப் பூசிப்போர் வெற்றிதங்கிய ஆதிசேடனது நெடியபணாமுடியிற் சுமக்கப்பெற்ற வலிய நிலவுலகிலுள்ள பஞ்சமகாபாதகர்களானாலும், உருத்திராக்கமணி யாவருந் துதிக்குந்திருவெண்ணீறு ஸ்ரீபஞ்சாக்கரமெனனும் இவற்றை ஒருகாலத்திலேனுங் கருதாத பாதகர்களானாலும், இந்நிலவுலகிற் கலந்த [சராசரங்கள்] நிலையியற்பொருளும் இயங்கியற்பொருளும் பெரியமுத்தியெய்தக்கருதி அத்தகையினர் திருவடிகளையே பிரார்த்திக்கும். எ - று. (உ)

முற்றொ டுங்கிய காலமா பிரளய முற்றுற வெந்தையெம் பெருமா
னிற்று றுவுயிர்த் தொகையெலாந் தனனுழைக் கரந்தன னறைநர
னிரவிற், கற்றை வார்குழற் சத்தியொ டருநடத் தாண்டவங் கருணையிற்
புரியு, முற்ற கங்குலீ றெம்பிரா னிறப்புறு ஞானசத் தியைப்புரிந்
துதவும்.

(இ - ள்.) முன்வந்த கற்பகாலத்தின் மகாப்பிரளயம் முடிய, எமது தந்தையாகிய சிவபெருமான் அளவிறந்த ஆன்மகோடிகளை யெல்லாம் தம்பாலொடுக்கிக்கொண்டு அன்றிரவில் தொகுதியாயுள்ளநெடிய கூந்தலையுடைய தமதயின்னுசத்தியாரோடு திருவருளாலரிய ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுவர். அவ்விரவு கழிந்தவுடனே எமது பெருமான் அழிவற்ற ஞானசத்தியை விருப்பத்தோடு தந்தருளுவர். எ - று. (ங)

வாமமேமுதற் சைவமீ றுட்படு சமயங்க ளாறையும் வகுத்துக், காம ரண்டமெண் ணிறந்தன புரிந்துமும் முதன்மையா யாரையுங் காட்டித, தோமின் முத்தொழி லவர்களித் திருத்திர கணங்களைத் தொகுத்துவா னவரை, மாமு னிபபெருந் தலைவரை மக்களை மரங்களை மலைகளை வகுத்து.

(இ - ள்) அப்போது வாமமுதலாகச் சைவமீறாகவுள்ள அறுசமயங்களை யும் சிருட்டித்து அழகிய அண்டகோடிகளை யெண்ணிறந்தனவாகவுண்டு செய்து திரிமூர்த்திகளையும் படைத்து அத்திரிமூர்த்திகளுக்கும் (சிருட்டி, திதி, சங்கார மென்னு) முத்தொழில்களையுந் தந்துருத்திரகணங்களையுஞ்சேர்த்து, தேவர்களை யும் பெருந்தலைவர்களாகிய சிறந்த முனிவர்களையு மனிதர்களையும் விருக்ஷங்க ளையும் மலைகளையும் தோற்றுவித்து. எ - று. (௪)

ஆறிரு டைநதெனு முருத்திர ருருத்திர கணங்கள்பூ தங்கண்மற றசுரர் மாறில பல்லுயிர்த் தொகுதிக ளாங்கவை வழங்குறு புவனங்கள் யாவு மூறு சிந்தையி னினைத்துள வாக்கியுற் றுள்ளவை யாவையு மொருங்கவ் வாறு சத்தியுண் டாக்குற வருத்தியாங் கவையெலாம் வந்துழி மகிழும்.

(இ - ள்.) ஏகாதசவுருத்திரர்களையும் உருத்திரகணங்களையும் பூதங்களையும் ஏனையவசுரர்களையும் மாறுபடுதலில்லாத பலசீவராசிகளையும் அவைவசித்தற்கு ரிய எல்லாப்புவனகோடிகளையும், தமது கருணைமிகுந்த திருவுள்ளத்திற்சிந்தனை மாத்திரையினாலுண்டாக்கி மற்றுமுள்ளவனவற்றை யெல்லாமொன்றாக அவ்வ கையே தமது சத்தியுண்டாக்குமபடி வருவித்து அவையாவுந் தோன்றியவுடனே திருவுள்ளம் மகிழ்வார். எ - று. (௫)

பின்னரொளிதழ்ப் பசுந்துழா யலங்கலந் தேவனைப் பிரமனைச் சுரரை, மனனு மாமுனித் தலைவரை யாகம புராணசாத் திரமரு மறைநூல், பனனி யோதுவித் தரிமுதற் றேவரைப் பார்த்தெமைப் பத்தியி னிரங்கி, நன்ன லந்தரு மருச்சனை புரிகுதி ரென்றனன் பரகதி நாதன்.

(இ - ள்.) அதன் பிறகு ஒளிதங்கிய விதழ்களையுடைய பசிய துளவமாலை யையணிந்த அழகிய திருமாலையும் பிரமனையுமேனைத் தேவர்களையும் நிலைபெற் றசிறந்த முனிசிரேஷ்டர்களையும், சிவாகமங்கள் புராணங்கள் சாத்திரங்கள் அரியவேதநூல்கள் என்னுமிவற்றை உபதேசித்து ஓதுமபடிசெய்வித்து, திருமா லாதிய தேவர்களை நோக்கி, முத்திக்கும் தலைவனாகிய சிவபெருமான நன்மை யைவிளைவிக்குமிம்மைப பத்தியோடுமனமுருகி நம்மைப் பூசிக்கக்கடவீர்களெ ன்று திருவாய்மலர்ந்தருளினார். எ - று. (௬)

இரங்கு பத்தியி னெவ்வள வியற்றினீ ரவ்வள விருங்கதி தருது மரங்கு தீவினை யொழிந்திட வருச்சனை புரிபவ ரியாமெனப் தறிவீர் கரங்கு வித்திய லருச்சனை யுவப்புளோம் யாமெனக் கணனுதற் கடவுட் பரன்ப குத்துற வாங்கவற் கரிமுதற் றேவர்க ளினனணம் பகர்வார்.

(இ - ள்.) உருகியபத்தியோடு எவ்வளவு பூசித்தீர்களோ அவ்வளவுக்கேற்ற பெரும்பதவிதருவோம். ஆன்மாக்களை வருத்துமு தீவினைகள் விலகும்படிக்குப்பூசிக் கத்தக்கவர் நாமே யென்பதறிவீர்களாக. சிரமேற் கைகூப்பிச்செய்யும் பூசையி

லேயே நாம் விருப்புடையோமென்றுநெற்றிக்கண்ணையுடையவரும் தேவர்தலை வருமாகிய சிவபெருமான் அததிருமால் முதலானோருக்குத் திருவாய்மலர்ந்தருள வும் அது கேட்ட திருமாலாதி தேவர்கள இப்படி விண்ணப்பஞ் செய்கின் றார்கள். எ - று. (எ)

உலகம் யாவையு மண்டமு மீங்கிவைக் குள்ளன சரிப்பன யாவு
நிலவு வேணியாய் நீயெனப் புகல்வது சுருதியு மாகம நெறியு
மலகி னின்குண மளநதுபூ சிப்பதற் கெஙஙன மறிகுது மெளியேம்
புலவ னின்னரு ளெஙஙனம் புகுதுமென் றிரந்ததலு மெமபிரான் புகலும்.

(இ - ள்.) சந்திரனையணிநத சடையையுடைய சிவபெருமானே! எல்லா வுலகஙகளுமணடகோடிகளு மிவற்றிலுள்ள நிலையியற்பொருளு மியஙகியற் பொருளுமாகிய யாவும் தேவரீரே என்று வேதஙகளுமாகமநூல்களும புகலா நிற்கு மாதலின், அடியேங்க டேவரீரது அனநதகலயாண குணஙகளையெஙஙன முணர்நது பூசிகக அறிவோம். கடவுளே! தேவரீர திருவருளை யெப்படிப் பெறு வோமென்று விணணப்பிததுக குறைகூறிய மாததிரததிலெமது சிவபெருமான் திருவாயமலர்நதருளுகின்றார. எ - று. (அ)

எத்தி றத்துள மூாத்தியி னுயினு மெமையுணர்ந் தருசசனை யியற்றின்
முததி நல்குது மாஙகதிற பவிததிர முழுமுத லிலிங்கவாச சனையே
பததியிறசிறு பசசிலை யாயினும் பனிமலாச சிறறித ழெனினு[குப்பார்
சுதத மென்புனற றுளளியா யினுமதிற ரெருகுபபவ ரெமக்கெனத தொ

(இ - ள்) எவ்வகைப்பட்டுள்ள மூாததிகளிலாவது எமமைத தியானஞ் செய்துபூசிததால முததியைத்தருவோம. அபபூசையுளமேலானதும முழுமுதற் றன்மையானதுஞ சிவலிஙகபூசையே ஆதலால உணமைப்பததியோடு சிறியபச் சிலையாவது குளிாநத மலாகளின சிறிய இதழாவது புனிதமான மெல்லிய நீர்த் துளியாவது நமககெனறு அச்சிவலிஙகததிற சோபபவாகள அதனைச் சோதத வர்களாவாாகள. எ - று. (கூ)

உருவ மாகிய விலிஙக முற் பவிததிறை யொருவல மென்றுமுற் றுளமாற்
கருதி யஙகதி னருசசனை மநதிரக கடனமு றை யியறறினு மனறேன்
மருவு பததியி னியறறினு மாஙகவா மரபுளோா கோடிய ரோடும
பெருகு நனனலக கதிபெற வருளுது மெனபது மறைகளும பேசும்.

(இ - ள்) உருவஙகொணடுளளசிவலிஙகததிலே சாநநிததியமாய் இமைப்பொழுதும பிரியாமல எப்பொழுதும பொருநதியுளளோம். ஆகமவிதிகளைச் சிநதிதது பூசை ஜெபம முதலிய கடனகளை விதிப்படிசெயதாலுமல்லது மனதிலுதித்த பததிமாாககததாற செயதாலும, அபபடிச் செயதோருடைய வமி சததிலிறுதி யாயுளளவாகளும நனமைமிகுநத முததியினபததைப பெறும்படிய நுககிரகிப்போம். இதனையிப்படியே வேதஙகளும எடுததுசசொலலும. எ-று.

என்ன வெம்பிரா னெடுததுரைத தருளிய கேட்டலு மரிமுதலெ வரு, மன்ன தன்மைய விலிஙகததி னளவையு மாஙகதன றோற்றமு மறிவான், பொன்ன லஙகொளிப புரிசடை வானவ புகறியென் றிசைத தலும புனித, பன்ன கபபெரும பளளியோன முதலவாக் காஙகதன றனிநிலை பகாவான்.

(இ - ள்.) என்று எமது சிவபெருமான் எடுத்துத்திருவாய் மலர்ந்தருளிய வற்றைக் கேட்டவுடனே விஷ்ணுமுதலிய தேவர்களெல்லோரும், அத்தகைய சிவலிங்கத்தினளவையையு மதன் உற்பத்தியையுமடியேங்களறியும்படி பொன் போன்று பிரகாசிக்கு மொளிதங்கிய புரிந்த சடையையுடைய கடவுளே! திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கவும், புனிதமாகிய பெரிய சேஷசயனத்தையுடைய திருமால் முதலிய தேவர்களுக்கு அச்சிவலிங்கத்தினைப் பற்ற நிலைமையைத் திருவாய் மலர்ந்தருளுகின்றார். எ - று. (கக)

உரைக்க வேண்டுவ தன்றது வாயினு மதனிலை யொருங்குறக்
கேண்மின், விரைந்த வார்கட லிலத்துளோர் நுமமுதல் யாவர்க்கு
மறிவதற கெளிதோ, வரைந்து ருமறை முடியினு முடிவுறு வதனிலை
வரன்முறை வகுப்பின், விரைந்த டுக்கிய முத்தொழில யாவையுமதனு
ளைழ யல்லது நீங்கா.

(இ - ள்.) அச்சிவலிங்கமகிமை சொல்லமுடியாதாயினு மதன்றன்மை யைத் தொகுப்பாய்க் கேளுங்கள். ஒலிக்கின்ற நெடிய கடல் சூழ்ந்த நிலவுலகிலுள்ளோர்களும நீங்கள் முதலிய வெல்லோர்க்கும் தெளிந்து கொள்ளறகெளிதானதோ? அளவுபடாத வேதமுடிவிலுஞ் சொல்லிமுடியாத அச்சிவலிங்கநிலைமையை வரன்முறையாகச் சொல்லுவோமாயில வரிசையாய்ச் சேர்ந்துள்ள முத்தொழில் முழுவது மச்சிவலிங்கத்தினிடத்திலேயன்றிப் பிரிந்திரா. எ - று.

வாக்கி னுலுரைப் பரிதியா மென்றுநன மாணபுடைச் சிவலிங்கமென்று
நீக்க மனறத னிலைமைசொற றுதுமரு நெறிதரு பரவிந்து வென்றும
பாக்கி யபபர நாதமென றுஞ்சொலப படுவன வபரவிந் தென்று [ன.
நோக்கி லபபெயர் நாதமென றுஞ்சொலப படுவன வாங்கவை நொடியி

(இ - ள்.) வாக்கினாற் கூறுதற்கரிதாயது ஈமென்றும நல்லமேன்மை தங்கிய சிவலிங்கமென்றும வேறன்று. அதன்தன்மையைச் சொல்லுகின்றோம். மேலானமாக்கத்தைப் பாலிக்கும பரவிந்துவென்றும செல்வத்தைப்பாலிக்கும பரநாதமென்றும் சொல்லப்படுகின்றன அன்றியும் அபரவிந்துவென்றும் அபர நாதமென்றுஞ் சொல்லப்படுகின்றன. அவற்றைச் சொல்லத்தொடங்கினல்.

ஆய நானகீனி லபர விந்துவ பரபபெயர் நாதமு முதலா
வேய வபபர விந்துவு மபபெயா நாதமு மிவைக்குமே லாகச
சேய காலமும பிரிந்துறு திபபரி சிருக்கு மால சசிவ லிங்கந
தூய வாகிய பிரணவ வேதியி னுதமாயத் தோனறுவ துரைபபின்.

(இ - ள்.) ஆகிய நானகில் அபரவிந்துவும அபரநாதமும முதலாகவும்பொருந்திய பரவிந்துவும் பரநாதமும் இவவிரண்டிற்கும் மேலாகவும் அநேககாலங்களாகப்பிரிவுபாடற்று இத்தன்மையாக அச்சிவலிங்கம விளங்கும. இதனைவிளக்கிச்சொல்லவேணடுமாயின புனிதமாகிய பிரணவமென்னும பீடத்திலே நாதரூபமாய விளங்குவது. எ - று. (கச)

விந்து நாதமாய்ப் பொலிதரு லிங்கத்தின் விழுத்தக வுண்மையா
யுறைவோ, மிந்த விபபரி சுறைசிவ லிங்கத்தை யருச்சனை யெவர்புரிந

திடினு, மந்த நாளவாக கெமழுழைக் காட்சிதந தளிக்குது மாங்கவர் கேட்ட, சிந்தை யோராந்தன வீகுது மிங்கிது சத்திய மென்பது தெரிவீர.

(இ - ள்.) இங்ஙனம் விந்துநாத சொரூபமாய் விளங்கும சிவலிங்கமூர்த்தத்தில் மேன்மைபொருந்தச் சத்தியமாக வீற்றிருப்போம. நாம கூறிய இவ்வகையாயுள்ள சிவலிங்கத்தையார் பூசித்தாலும், அன்றையதினமே அத்தகையினர்க்கு எமது சொரூபதரிசனத்தைத் தருவோம். அத்தகையினர் கேட்டவரங்களையும எண்ணிய எண்ணங்களையும பாலிப்போம. இவ்வாற்றை சத்தியமென்பதையுணர்க்கடவீர்கள். எ - று.                (கரு)

அருச்ச னைக்குரித் தாயிலிங் கத்திடை யுறைந்தன மொருகண மக லேந, தெரிக்கி னெள்ளுமெண ணெயுமெனச சிறந்தனங் காண்பன யாவையுஞ் சிதைந்து, பரிக்கு மாங்கதன் றன்னிடை லயிக்கையா லிலிங்கமென் றுரைத்திடப் படுமா, லரிபெ ருமபெயர் முதலினோ ருயிர்த்தொகை யாவையு மதனுழை யடங்கும.

(இ - ள்.) பூசிக்கத்தக்கதாயச சிவலிங்கத்தில வீற்றிருக்கின்றோம. ஒருக்ஷணகாலமாயினும அம்மூர்த்தத்தில பிரிந்திரோம. அக்கலப்பைத தெளிவிக்கவேண்டுமாயின எள்ளும எண்ணெயும போன்றுசிறப்புற்றோம தோற்றப்பட்டபிறவுருவங்களெல்லாவற்றிலும நீங்கித்தாங்குகின்ற அச்சிவலிங்கத்தில நாமலயப்பட்டிருத்தலின அவ்வுருவிற்கு இலிங்கமென்று பெயர்சொல்லப்படும. பெருமைதங்கிய பெயர்களையுடைய திருமால் முதலிய தேவர்களும ஏனைய எல்லாவுயிர்த்தொகைகளும அச்சிவலிங்கத்தில அடங்கியிருக்கும. எ - று.                (கசு)

இன்ன ணந்தனி வேதியோ டிருந்துறை யிலிங்கத்தின யாமிறை யகலே
மன்ன ருபியா யிருக்குது மாதலி னவிரமணி யாடகம வெள்ளி
பன்ன ருஞ்சிலை மணமரு சந்தனம பஃறுளி யிரதமென் றிவை றுரன்[ன்.
மன்னு சூத்திர மைந்தொடு மிலிங்கமொன றியற்றின ரருச்சனை வகுப்பி

(இ - ள்.) இப்படியொப்பற்ற பிரணவ பீடத்தோடிருக்கின்ற சிவலிங்கத்தினின்று நாமொரு க்ஷணப்போதேனும நீங்கியிரோம. அச்சிவலிங்க சொரூபமாகவேயிருப்போமாதலின ஒளிதங்கிய இரத்தினம, பொன, வெள்ளி, சொல்லுதற்கரிய கல்,மண,மரம,சந்தனம,பலதுளிகளாகிய இரதம என்னுமிவற்றால பஞ்சப்பிரம மந்திரத்தைக் கொண்டு சிவலிங்கமொன்று செய்து பூசித்தால.

கோடிவெள்வியு மளவொழி தானமும விதிமுறை யியற்றியோர் கொடுத்தோர, நாடியோர்ந்திலிங் சார்ச்சனை புரிபயனடைவரோ நன்குறத் தெரிப்பி, னேட விழுந்தபூ வொன்றிடப் பெறுபய னெய்துரு ராங்கவ ரினையோர, வீடு வேண்டியோர்க கலிப்பாய மிருந்துழி வெம்பிறப் பொழிந்தினி திருப்பார.

(இ - ள்.) கோடியாகங்களுங்கணக்கில்லாத தானங்களும விதிமுறைசெய்தவர்களுங் கொடுத்தோர்களு முண்மையைத் தெளிந்துணர்ந்து சிவலிங்கார்ச்சனை செய்தபயனைப் பெறுவார்களோ? என்றுயத்தெளிவிக்க வேண்டின், இதழ்கள் விரிந்தவொருமலரையருச்சித்தவர்கள எய்துமபேற்றைக்கூட அவர்களெய்

தமாட்டார்கள். சிவபூசைசெய்கின்ற இவர்கள் தம்மைப் பிரார்த்திப்பவர்களுக்கு முத்தியின்பந்தருவார்கள். கொடிய பிறவிநோய் நீங்கினவர்களாய் நாம்வீற்றிருக்குஞ் சிவலோகத்தி லினிமையாக வீற்றிருப்பார்கள். எ - று. (கஅ)

மொழிந்த தெய்வலிங் கத்திடைச சதாசிவ மூர்த்தமா யினிதுவந திருப்போம், பொழிந்த பத்தியிற் பூசனை புரிபவா பொருபுனற்காசிகே தார, மிழிந்த தெளளரு வியவிருத் தாசலஞ் சிதம்பர மருணையெப்பவ மூங், கழிந்த தென்கயி லாயமை யாறுவெண் காடுதென மதுரையம் மருதூர்.

(இ - ள்.) சொல்லிய தெய்வீகநதங்கிய சிவலிங்கமூர்த்தத்தில் சதாசிவமூர்த்தமாக இனிமையாய் விருமபி வீற்றிருபபோம். சிறநதபததியோடு பூசிப்பவர்கள் அலைகள்மோதிவகஙகாநதியையுடைய காசி, திருககேதாரம தெளிநத அருவியொழுகும் விருத்தாசலம், சிதம்பரம், அருணசலம், எலலாப்பாவஙகளையும நீக்கும் தென் திருககாளததி, திருவையாறு, திருவெணகாடு, தென்றிசையிலுள்ள மதுரை, அழகிய திருவிடைமருதூர். எ-று. (கசு)

குடந்தை சீகுலப பருப்பதங் காஞ்சிரா மேசசுர மண்டகூ டஙக, ளுடன்ப டுநதிருக கயிலையோ ரிரணடுபொன் மேருவி னுசசிமற றிவற றின, மடநதை யோடுநங கணததொடு மைநதொழில வகுததினிதுண மையா யுறைவோ. மிடபப டுநதல மிதுவென வுளததுணாநதெண்ணி யெம மருசசனை புரிவீர.

(இ - ள்.) திருககுடநதை, சீகுலபருவதம, காஞசி, இராமேச்சுவரம அண்டகூடஙகளையளாவிய [பிராகிருத, அப்பிராகிருத சமபநதமான] திருககைலாயங்களிரணடு, மகமேருவினுச்சி ஆகிய வித்தலஙகளில உமாதேவியோடுமெ நமதுகணஙகளோடுமெ பஞ்சகிருததியஙகளை நிறைவேறறியினிதாக நிததியமாயவீற்றிருப்போம. நாமிடஙகொணடிருககுநதிருததலஙகள இவை யென றுணாநதெம் மைமனதிற் சிநதிததுப பூசிககககடவீாகள. எ-று. (உ௦)

ஆதி நாளையி னரிமுதற் றேவாகண் முனிவரர் யாவரு மன்பால ேவதி யோடுமுற றுறுசிவ லிங்கததி னருசசனை வேண்டினர் விருமபி யோது மிததலந தொறுமலை தோறநீ ரொழுகிய நதிககரை தோறு நீதி யோடுமின றினிதுபூ சிததவா நினைநதன யாவையுஞ சிறநதார்.

(இ - ள்.) முற்காலததிற்றிருமால் முதலிய தேவர் முனிவர் யாவரும் பிரணவபீடத்திலிருககுஞ சிவலிஙக பூசைசெற்தற்குணமையன்போடு விருப்பெய்தி நாம் சொல்லிய இததகையதலஙகளிலும, மலைகளிலும, நீரோட்டமுடைய ஆற்றஙகரைகளிலும ஆகமவிதியோடிருநது இனிதாகப் பூசிதது அவாகள் கருதிய எல்லாவரஙகளையும் பெற்றுககொள்வார்கள. எ - று. (உக)

அனையர் யாவரு மித்தலத தருசசனை யாற்றினர் பெற்றனர் யாவு, மினையு நீதியி னுரைததுமென் றெமபிரா னவர்கமென நிகழ்த்திய வுண மை, வனையும் வார்சடைப புனிதாகா ணுமமுறை யக்கிலை வரன்முறை வகுப்பாம், வினவி யன்புறக் கேண்மினென் றருநதவச சூதமா முனிவ ரன் விளப்பும.

(இ - ள்.) அவர்கள் யாவரும் இத்தலங்களிற் பூசித்துப்பெற்ற வரங்களெல்லாவற்றையும் நீங்கள் சிந்திக்கத்தக்க முறைமைகளாகச் சொல்லின்றோமென்று எமது சிவபெருமான் திருமால்முதலானோருக்காகத் திருவாய்மலர்ந்தருளிய விசயத்தை, அலங்கரித்த நீண்டசடையையுடைய முனிவர்களே! உங்கள் பால் அப்படியே கிரமமாகச் சொல்லுகின்றேன். அன்போடு கேட்பீர்களாகவென்று, அருந்தவமுடைய பெருமை தங்கிய சூதமுனிவர்சொல்லுகின்றார். எ - று.

**கலிநிலைத்துறை.**

மூசு சுரும்பூ டாடுது ழாயோர் முகில்வண்ணன்
காசிபு குந்தூழ கோடி கடப்பக் கருதானின்
றேசி றவத்தா லுண்மை சிறந்தா னெம்மானைப்
பூசை புரிந்தா னன்பொடு மாகம் புளகுற்றான.

(இ - ள்.) வண்டுகள் மொய்த்துத்திரியும் துளசிமாலை தரித்த ஒப்பற்ற மேகவண்ணராகிய திருமால், காசிக்குப் போய்க்கோடி ஊழிகாலங்கள் கழியும்படி எமது சிவபெருமானைத் தியானஞ்செய்திருந்து குற்றமற்ற தவத்தோடு மெய்யன்பு மிக்கவராய்ப் பூசித்தனர். அவ்வன்பின் மேம்பாட்டினாற்றேக முழுவதும் மயிர்க்கூச்செறிந்தனர். எ - று. (உ௬)

எந்தை பிரானு லன்பு சிறந்தா னிதுகாலத்
தந்தமில் வைகுண் டப்பத முற்றா னதுமற்றோர்
நந்து கடும்போ ராழி நகைக்குஞ் சுடர்வைவா
டந்தொரு தண்டங் கார்முக நல்கத் தனிபெற்றான்.

(இ - ள்.) எமது சிவபெருமானால் அன்புபாலிக்கப்பெற்றவராய் இதுகாறும் அழிவற்ற வைகுந்தபதவியில் சேர்ந்திருக்கின்றனர். அதுவேயன்றி ஒப்பற்ற பாஞ்சசன்னிய மென்னும் சங்கும், சுதரிசனமென்னும் கடும்போர் செய்யத்தக்க சக்கராயுதமும், பிரகாசிக்கும் ஒளிதங்கிய கூரியவாளாயுதமுங்கொடுத்து தந்தவிர ஒப்பற்றதண்டாயுதமும் விலலும் கொடுக்க, ஒப்பற்றுப்பெற்றனர்.

கோவை யிதழ்ச்செங் கோல்வளை மென்மைக் குளிர்போதிற்
பாவை தனக்குப் பாரியெனப்பெற் றனனம்பொற்
பூவி லிருக்கு நான்முகன மற்றைப் புவனத்தோர்
தேவர் வணங்கப் பல்லுயிர் நல்குந் திதிபெற்றான்.

(இ - ள்.) கொவ்வைக்கனிபோன்ற இதழும், செவ்விய அழகியவளையலணிந்த மெல்லிய கைகளுமுடையவளாய, குளிர்ந்ததாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைத் தமக்குமனைவியாகவும் எய்தினர். அழகிற் சிறந்த பொன்போன்ற தாமரைமலர்ப்பீடத்திலுள்ள பிரமனும் ஏனைய புவனங்களிலுள்ளவர்களும் தம்மைவணங்கும்படி பலசீவராசிகளைக்காக்கின்ற காக்குந்தொழிலைப் பெற்றுக்கொண்டனர். எ - று. (உ௭)

எடுத்து விரிக்குந் திண்சிறை மேரு வெடுக்கும்போர்
மிடுக்கி னெடுங்கலு ழக்கொடி பெற்றான வெய்யோரைக்
கடுக்கு மிருந்திறல் பெற்றன னூழிக கதிரேய்க்கு
முடிக்கை சிறந்தா னென்னினி யன்றோற் குதவாத.

(இ - ள்.) நூக்கிவிரிக்கும் வலிய சிறகுகளின் மேரு மலையையும் எடுக்கத் தக்கதும் பெரும்போர்புரியும் வல்லமையுள்ளதுமான கருடக்கொடியையும் பெற்றுக்கொண்டனர். தீயோராகிய அசுரர்களைவெல்லத்தக்க பெருவல்லமையெய்தினர். நெடுங்காலமாகச் சூரியன்போலப் பிரகாசிக்கும் பீதாம்பரமுமணிந்துகொண்டார். அத்திருமாலுக்கு இனிக்கிடைக்கத் தகாதவையெவை? எ - று. (உசு)

நாள நெடுந்தாட் சேய நறுமபூ நளினத்தோன்
மூளுறு மன்பிற கச்சி புகுந்தம முதல்வோனைக்
கோளறு மென்பூ வாசசனை செய்தக குறைமுற்றித்
தாளிணை பற்றுந தொண்ட ருவககுந தலைநின்றான்.

(இ - ள்.) நாளத்தோடு கூடிய நெடியதாளையுடைய நல்லசெந்தாமரைப் பீடத்தையுடைய பிரமன மேமபட்ட அனபோடு காஞ்சிநகரஞ்சென்று முதல வனுகிய அச்சிவ பெருமானைக குற்றமற்ற மெல்லிய மலரானருச்சித்தது அதத வம் நிறைவேறப்பெற்று, சிவபெருமான பாதங்களைச் சரணமடைந்த மெய்யடியார்கள வியக்கத்தக்கதலைமை யெய்தினன். எ - று. (உஎ)

வையக முற்று மன்பதை யாவும் மரபோடுஞ்
செய்து முடிக்குந திண்மை சிறந்தான மறையெல்லாங்
கொய்து தெரிக்குங கூர்றி வுற்றா னளவில்லா
மைதவழ் கண்டத் தெந்தை யளிக்கும வரமபெற்றான்.

(இ - ள்.) உலகமுழுவதையும ஆனமகோடிக ளெல்லாவற்றையுமுறைப்படிபடைக்கின்ற வல்லமையின மேமபட்டான. வேதங்களெல்லாவற்றையும பகுததுணரும நுட்பமான அறிவுமடைந்தனன, விஷந்தங்கிய கண்டத்தையுடைய சிவபெருமான பாலிக்கின்ற வெண்ணிறந்தவரங்களையும பெற்றுக்கொண்டான.

வெள்ளை யிதழ்ப்பைந தாமரை மஙகை விருப்புற்றான
கள்ளவிழ் கறபத தேவர் வணஙகுங கதிபெற்றான
கொள்ளை நெடும்பா லாழியெ னுந்திண் குடைபெற்றான்
றுள்ளுந் திரைககற றைககவ ரிபபொற றொகைபெற்றான்.

(இ - ள்.) வெள்ளிய இதழ்களையுடைய அழகியதாமரையில் வசிக்குங்கலைமகள்விருப்பமும் பெற்றான. தேன்சிந்துங்கறபகமாலையையுடைய தேவர்கள் வணங்கும் பதவியும்பெற்றான. மிகநீண்ட திருப்பாற்கடலென்றுசொல்லத்தக்க வலிய சந்திரவட்டக்குடையும பெற்றான. அப்பாற்கடலில் துள்ளும் அலைகள் போன்ற கூட்டமாகிய அழகிய வெண்சாமரைக் கூட்டங்களையும பெற்றான்.

திண்சிறை யன்னத் தூர்தி சிறந்தா னழிவில்லாப்
பண்பொடு பிரம பதத்த்தலை நின்றான் முனிவோர்தம்
நன்பிணை வணங்குந் தன்மை யடைந்தா னவையற்றான்
வெண்பிறை வேணித் தேவனை யின்னும விருப்புற்றான்.

(இ - ள்.) வலிய சிறகுகளையுடைய அன்னவாகனத்தால் மேமபட்டான். அழிவில்லாத தன்மையோடுபிரமபதத்தில் விளங்கினான். முனிவர்கள் யாவரும் அன்புடன் பணியுந்தன்மைபெற்றான். குற்றமற்றான். வெள்ளியபிறைச்சந்திரனையணிந்த சடையையுடைய சிவபெருமானை இன்னும் ஆசைகொண்டுதுதிசெய்கின்றான். எ - று. (௫௦)

சீகுல வெற்பிற் சென்று தவத்தின் செயன்முற்றி
மாகபு ரக்கோ னிந்திர னந்நாள் வழிபாட்டான்
பாகடு வெள்ளைப் பாய்பக டெய்திப் பயனுக்குரு
சாகைவி டுக்குங் கற்பக நாடுந் தனிபெற்றான்.

(இ - ள்.) தேவலோகத்தலைவனாகிய இந்திரன், சீகுலபர்வதத்தையடைந்து தவச்செயல்களைமுடித்து அக்காலத்திற் பூசித்தான். அதனால் பாகனைக் கொல்லத்தக்க பாய்ந்து செல்லும் ஐராவதமென்னும் வெள்ளை யானையைப் பெற்று வேண்டியவற்றையெல்லாங் கொடுக்கத்தக்க சிறைகள் விரிந்த கற்பகவிருக்ஷம் பொருந்திய ஒப்பற்ற தேவலோகராச்சியத்தையும் பெற்றுக்கொண்டான்.

பொன்னொளி பொங்கு புலோமசை தந்த புதுக்காமந்
தின்னல மன்பி னுகர்ந்தன்ன வானவ ரெவருந்தம
மின்னொளி மாமுடி தாழ விழுந்தெழ விரிசெம்பொற்
றுன்னரி யாசன மீது பொலிந்து துலங்குற்றான்.

(இ - ள்) பொன்போலுங்காந்திவீசுகின்ற இந்திராணிகொடுத்த நூதனமான காமவின்பத்தை அன்போடு அனுபவித்தான். தேவர்களெல்லாரும் தங்கள் காந்திபொருந்திய கிரீடங்கள் நிலமிசைப்படும்படி சாஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்திருக்கவிசேஷித்த பசும்பொன்பதித்த சிங்காதனத்தின் மேல்வீற்றிருந்து விளக்கமெய்தினான். எ - று. (ருஉ)

வால்வளை செம்பொற் றாமரை சிந்தா மணிதேனுங்
கோலிய வச்சிர முதலிய வெம்படை கைக்கொண்டா
னாலு நெடுங்குடை சாமரை மற்றிவை யனையாவுஞ்
சாலபுற மாலவிடை யோனரு ளோடுந் தாங்கினான்.

(இ - ள்.) வெண்மை தங்கிய சங்கநிதி பசும்பொன்னிறந்தங்கிய பதுமநிதி சிந்தாமணி காமதேனு, வளைந்தவச்சிராயுதமுதலிய பெரிய ஆயுதங்கள் இவற்றைக்கைக்கொண்டான். அசைகின்ற நீண்டகுடை வெள்ளிய சாமரை முதலிய விவற்றையும் மேன்மைபொருந்தும்படிபெரிய இடவாரூடராகிய சிவபெருமான் திருவருளால் தரப்பெற்றுக்கொண்டனன். எ - று. (ருரு)

பாடுறு கீதப் பண்மொழி யோரறு பத்தாறு
கோடி யரமபையா சூழ்வர வின்னுங் குணதிக்கி
னீடு தனிக்கோல் சென்றுற நின்று னிறைசெலுத்த
தோடமு தப்பே ருணடி யுவந்தா னொழிவற்றான்.

(இ - ள்) இசைபாடுகின்ற வீணாநாதம்போன்ற வார்த்தைபொருந்தியவர்களாகிய அறுபத்தாறுகோடி தேவமாதர்கள் புடைசூழ்ந்திருக்கும்படி கீழ்த்திசையிலே இன்னும் ஒப்பற்றசெங்கோல் செலுத்துகின்றான். குறைவற்ற ஐசுவரியத்தோடு அமுதமென்னும் பெருமைதங்கிய உணவையுண்டு நீக்கமற்றிருக்கின்றான்.

செந்தழல் வானவ னெம்பெரு மானடி சிந்தித்து
வந்தரு ணூசல வெற்பிடை யன்பொடு வழிபட்டான

வெந்தகர் வாகனம் வேற்படை பெற்றன னிருகொங்கை
மந்தர மன்னசு வாகா தேவிதன் மணமுற்றான்.

(இ - ள்.) செகஜிறந்தஙகிய அகனி பகவான் எமது சிவபெருமான் திரு வடிகளைத தியானஞ்செய்து அருணாசலமென்னும் மலையில்வந்து உண்மையன போடு பூசித்தான். பெரிய ஆட்டுக கடாவாகனமும் வேற்படையும் பெற்றது மன்றிமந்தரகிரிபோன்ற இருதனங்களை யுடைய சுவாகாதேவியையும் மணஞ்செய்து முடித்தான். எ - று. (௫௫)

தென்கீழ் மூலை புரந்து தனிக்கோல் செலுகின்றான்
மின்கீழ் போக விளங்கு மெயிற்றுத் தென்பாலோன்
றன்கீழ் மெவருந தொழவரு டருகேதாரம போய்ப்
பொன்கீ ழியவன் சடிலத தரனைப பூசிததான்.

(இ - ள்.) அன்றியும், தென்கீழ்த்திசையைப் பரிபாலித்து ஒப்பற்ற செங் கோல்செலுததிககொணடிருககின்றான. மினனலுங கீழ்ப்படததகக பிரகாசிககின் றபறகளையுடைய தென்றிசைககிறைவனாகிய இயமன் தன்னடியின் கீழ்ப்பலரும் வணஙகும்படி திருவருள் பாலிககும் திருககேதாரததிற்குச்சென்று, செம் பொற்கம்பிகளைப் போன்ற வலியசடையையுடைய சிவபெருமானை வழிபட் டான். எ-று. (௫௬)

தன்னக முள்ளப் பட்டன யாவுந் தாங்கின்றான்
பின்னரு கைககுஞ செஙகட் பகடு பெறப்பெறறான்
மின்னடு பாசந தண்டு கிடைததான் விரிவேணித
துன்னரு முனிவர ரேழ்வாக் கன்றுசமனுசொறறான்.

(இ - ள்.) தன்மனதிலெண்ணியவரஙகளை யெல்லாநதரப்பெறறுககொண டான். அதன்பின் எறிஙடத்தும் சிவநத கணகளையுடைய எருமைககடாவை வாக னமாகப்பெற்றுககொணடான். மின்னலின மிகக காநதியுடையபாசககயிற்றோடு தண்டாயுததததையும பெற்றுக்கொணடான. விரிநதசடைமுடியையுடையவா களாய் எல்லாராலும் அடைதற்கரியவாகளாய சததமுனிவாகளுககும ஒப்பான வனென்னும் பெயரும பெற்றான். எ - று. (௫௭)

புண்ணிய பாவங் கண்டற முற்றும் புரிவோரை
விண்ணுல காள விடுபபது மறறுள வெமபாவங
கண்ணிய பாவரை வெநநிரை யசசெங் கனலூடே
நண்ண விடுபபது மன்னவ னானை னவையறறான்.

(இ - ள்.) புண்ணிய பாவஙகளைததெரிநது முழுவதும புணணியமே செய் கின்றவர்களைச் சொாககலோகததை யரசாளச்செய்வதும், கொடிய பாவஙகளை யேசெய்த பாவிகளைக கொடிய நரகமாகிய கொடிய நெருப்பிற் சேரவைப்பதும் அவனே யாயினன். குற்றஙகளெலலாந தீரபபெறறான. எ - று. (௫௮)

வன்றோளை வெண்பற் சேடன் முடிப்பூ வலயத்துத்
தென்றிசை முற்றுந தன்னொரு செஙகோல் செலுகின்று
னின்றள வுஞசெம பொறகிரி வில்லோ னிருபாதந
தன்றனி யுச்சிக கொண்டு சுமக்குந தலைநின்றான்.

(இ - ள்.) வலிய தோள்களைபொருந்திய வெள்ளியபற்களையுடைய ஆதிசேடனது பணாமுடியிலுள்ள நிலவுலகத்திலே தென்திசை முழுவதும் தன் ஒப்பற்றசெங்கோல் செல்லும்படியிருந்தான். இன்றுவரையில் மேருமலையைவில்லாகவேந்திய சிவபெருமானுடைய உபயபாதங்களைத தனது சிகரில்லாத உச்சியில் தாங்கிக்கொண்டு சுமக்கும் மேன்மையடைந்தான். எ - று. (கூக)

நிருதிப பேரோ னெந்தை பிரானடி நெடுநீழல்
கருதித தெனமேோ கன்ன மடைந்தா னொருகாலஞ்
சுருதிச சொல்லான் மென்மல ரிட்டுத தொழுதுற்று
னொருதுற றெம்மா னனனவ னுக்கன றெதிருற்றான.

(இ - ள்.) நிருதியென்னும பெயருடையோன் எமது தந்தையாகிய சிவபெருமான் திருவடியின சிறந்த நிழலைவிரும்பித தெனறிசையிலுள்ள கோகாணமென்னுந தலத்தை ஒருகாலத்திலெய்தி, வேதவாக்கியங்களால் மெல்லிய மலாகளைககொண்டாச்சித்து வணங்கியிருந்தான. அப்போது எமது சிவபெருமான இடபாரூடராய அந்நிருதிக்குக காட்சிதந்தருளினா. எ - று. (சஂ௦)

ஈயப பட்ட வரங்க ளனைத்தையு மெதிரேறறான்
மாயப படுத தெவவா விறநதெற வாளபெற்று
ஞயப பட்டறி யாநிதி பெறறு னசுராககோா
தாயொத துபபே ரரசு செலுததுந தகையானுன்.

(இ - ள) கொடுக்கப்பட்ட பலவரங்களையும பெறறுககொணடான். பகைவர் இறந்துவிழுமபடி கொலலததகக வாட்படையும பெறறுககொணடான. ஆராய்ந்து அளவிடறகு முடியாத ஐசுவரியங்களையும பெறறுககொணடான. அசுராகளெலலாருக்கும ஒருதாயபோலிருந்து பேரரசு செயகினற தனமையுடையவனுனன. எ - று. (சக)

வருணன் சம்பு வனத்தர னைபபோய் வழிபட்டுச
சுருளுந தெண்டிரை வேலே புரக்குந தொழிலபெற்றுன்
மருளுந திணசுற லூதிய னுக வரமபெறறுன
பொருவும பாசங் கொணடு குடக்குப புரவுற்றான்.

(இ - ள) வருணன சமபுகேசுவரததில சிவபெருமானையடைந்து பூசிதது, சுருணடுவருகினற தெளிந்த அலைகளையுடைய சமுத்திரததைக காக்குந்தொழிலபெறறுககொணடான. மயஙகுகினறவலிதஙகிய சுறவாகனனுமபடி வரம் பெற்றனன போாசெயகினற பாசததைத தாஙகியவனுய மேற்றிசையைப பரிபாலிககின்றான். எ - று. (சஉ)

வேளைத் தீபபட நெற்றி விழித்தருள் விடையோனைக்
காளத தியிலவழி படடன னனிலக கடவுட்கோ
வாளப் புவிபடு மன்பதை மனநினை விரைவிறபோய்
மீளப படுவது தன்னல திலையெனும விறலபெறறுன்.

(இ - ள்.) மன்மதனைததகனமாமபடி நெற்றிககணணுற்பார்த்தருளிய இடபவாகனமுடைய சிவபெருமானை வாயுதேவன காளததியிற் பூசைசெய்து ஒளி

மிகுந்து சிறந்த நிலவுலகிலுள்ள மனிதர்களின் மனத்ினைவினும் வேகமாய்ச்செ ன்று திரும்புவது தன்னைக்காட்டினும் இல்லையென்று சொல்லத்தக்கவலலபமு மெய்தினன். எ - று. (சங)

ஏழு வகைத்தாம் வாயுவி னுக்கோ ரிறையானுன்
யாழி னெடுங்கொடி யாயுத முற்றுன் வடமேல்பா
லூழ்முறை யின்னும் பேரர சுறரு னொழிவற்றுன்
பாழி வயக்கலை யூர்தி கிடைத்தான் பகையற்றுன்.

(இ - ள்.) அன்றியும் (ஆவகன் பிரவகன் அநுவகன் சஙககன் நிவகன் பராவகன் பரிவகனெனனும்) சததவாயுககளுககும் ஒப்பற்ற தலைவனுனுன். யாழ்த்துவசமும் பல ஆயுதஙகளும்பெற்றுன். வடமேற்றிசையில நீககமினறியிருநது நீதிமுறையாக இன்னும் பெரிய அரசாட்சிசெய்து கொணடுவருகின்றுன். மிகக வெற்றி தஙகிய மான்வாகனம் பெறறுன். பகைதவிரநதான். எ - று. (சச)

சித்த வடசித் தேசுரர் பொற்சே வடியெண்ணிப்
பததி பயககச சென்றுகு பேரன் பணிதநதா
னத்தனை யொக்குந தோழமை கொண்டா னருள்பெற்று
னதத முதறகோ மாநிதி யெலலா நனிபெறறுன்.

(இ - ள்) குபேரன் சிததவடமென்னுந தலத்தையடைந்து அஙகுளள சித்தேசுவரருடைய பொனபோனற பாதஙகளைத தியானிததது, பததி யதிகரிககப் பணிநதான. சிவபெருமானு ககுச் சமானனுக நட்புகொணடு திருவருளபெறறு, சஙகநிதி முதலிய சிறநத நிதிகளையெலலாம் மிகுதியாகப்பெறறுககொண்டான். எ - று. (சரு)

எண்ணி நினைந்த வரம்பல யாவையு மெய்து ற்றுன்
மண்ணிய புட்பகம் வாகன மாக வழஙகுறறுன
றிண்ணிய வெங்கதை யாயுத மெய்து சிறபபுறறு
னண்ண னெடுஙகுடை யுததர தேய மளிககினறுன்.

(இ - ள்.) எண்ணஙகொண்டு கருதிய பலவகை வரஙகளையும்பெற்றுககொண்டான். அலஙகரிததுளள புட்பக விமானததைத தனககு வாகனமாக வழஙகப்பெற்றுன். வலிதஙகிய கொடிய கதாயுதமபெறுகின்ற மேனமையடைநதான். சிறப்புற்று நீணட சநதிரவட்டக குடையினகீழ் வடதிசையைப் பரிபாலனஞ்செய்கினறுன. எ - று. (சசு)

வடகீழ் மூலைப பதியீ சானன் வன்மீகப்
படவா ரூரவா ழெநதை பிரானைப பணிவுற்று
மடலார் மென்பூ வர்ச்சனை செயதான மகிழ்பெற்றுன்
விடமார கண்டன் வேணடிய வென்னை விளமபெனறுன்.

(இ - ள்.) வடகீழ்த்திசைககாவலனுகிய ஈசானன் திருவாரூரில் புற்றிடங்கொணடெழுநதருளியிருககும் எமது பிதாவாகிய சிவபெருமானைப்பணிநது இதழ்களுடைய மெல்லிய மலாகளால் அருச்சனை செயதான். அப்பொழுது நீலகண்டராகிய சிவபெருமான் திருவுளமகிழ்வெயதியவராய உனககு வேணடிய வரம் யாது? கூறுகவெனத திருவாய்மலாநதருளினா. எ - று. (சஎ)

ஈசா னத்தோ னெந்தை பிரானு லருளெய்திப்
பேசா நின்றா னின்னுரு வின்னே பெறவேண்டு
மூசா நிறகும் பன்னகம வெண்பிறை முகிழ்கொன்றை
கூசா நிறகுங் கங்கை பொறுக்குங குளிர்வேணி.

(இ - ள்.) ஈசானன் எமது தநதையாகிய சிவபெருமானல் திருவருள்பெற்றுச் சொல்லுகின்ருன். தேவரீர திருவுருவை இப்பொழுதே பெற்றுககொள்ள வேண்டும். மொய்த்துககொணடுள்ள சர்ப்பம் இளம்பிறை மலாகின்றகொன்றை மாலிகை குளிர்ச்சிதஙகிய சடைமுடியும். எ - று. (சஅ)

மழுமா னங்கை முசசிகை நெடுவேன் மழுவேறு
தொழுவார் தின்னேத தொழுமுறை யெனனேத தொழுதன்மை
வழுவா தீகுதி யென்றனன வடகீழத திசைபோயிப
பொழுதே யாளுதி யெனறரு ளோடும புரிகென்றான்.

(இ - ள) மழுவும மானுமேநதிய அழகியகைகளும, முததலைகளையுடைய நெடிய சூலாயுதமும் இளமைதஙகிய இடபமும், வணஙகுகின்றவாகள் தேவரீரைபபோலவேயடியேனேப்பணிகினற இயலபுமாகிய இவற்றையெல்லாந தவறாது கொடுததருளவேணடுமெனறு பிராாததிததான். அனறி வடகீழ்த திசையிற்சென்று இபபொழுதே யரசுபுரிகவெனறு திருவருளோடு கட்டளையிடுவீராகவென்றும விணணபபிததான். எ - று. (சகூ)

அன்னது கேளா வெந்தை பிரான்மற் றவனுக்குச்
சொனனவை யாவுந தநது கடைபபாற் றுரிசறறோ
யெனனுழை வாவென றின்னருள செய்தா னினிதுற்றா
னின்னு நெடுமபே ராழிபு ரநதா னிகலறறான.

(இ - ள்.) அதனை யெமது தநதையாகிய சிவபெருமான் திருச்செவியிலேற்று, அவவீசானனுககு அவன் கூறியவறறையெலலாம அநுககிரகிததது, குறறமறறவனே! கடைசியாக எமபாலவருவாயாகவெனறு திருவருள செயதனா. அவவீசானன இனிமையெயதியவனுயப் பகைமை தவிாநது இன்னும் மிகப்பெருமையுடைய ஆகஞைசககரஞ செலுததுகினறான. எ- று.

மேற்படி வேறு.

உலகெ லாந்தனித் திகிரியி னலங்குதே ருருட்டிச
சுலவு காரிருட் பிழமபறுத துயிாகருள சுரககு
மலரி வானவன கசசியின் முளரிகொண டரனே
மலாசி லம்படி யருசசனே வரனமுறை வருததான்.

(இ - ள்.) உலகங்களெல்லாவற்றிலும் ஒற்றைச்சககரத்தா லசைகின்ற தேரைச்செலுததி, அவ்வவ்விடஙகளிற் சூழ்நதுளள கருநிறநதஙகிய இருளின் தொகுதியையகற்றி, சீவராசிகளுககுக கருணேசெயகினற சூரியபகவான் காஞசிநகரில் தாமரைமலாகளால் சிவபெருமான் திருவடிகளே அர்ச்சனேசெய்து முறைப்படி பூசித்தான். எ - று. (ருக)

ஏழ்ப சும்பரி நுகம்பிணித் தெழுதரு மிரவி
யூழி ருக்குநாண் மண்டல மெனப்பொலிந் தாற்றுன்
பாழி மாநிலங் கைதொழப் பசுங்கதிர் பரப்பிக்
கேழ்கி ளர்ந்தெழு வடவரை வலம்வரக் கிடைத்தான்.

(இ - ள்) ஏழென்னும் பச்சைக் குதிரையைத் தேரின் நுகத்திற்பூட்டி யாரோகணிக்கின்ற சூரியன், உலகமுடிவிற்குள்ள நான்வரையில மண்டல மென்று சொல்லும்படி விளங்கி யிருந்தான், வலிதங்கிய நிலவுலக முழுவதும் கைகுவித்து வணங்கும்படி இளங்கிரணங்களை வீசி நிறமிகுந்து உயர்ந்த மேரு மலையைப் பிரதக்கணம் வரும்படிக்கும் வரம்பெற்றனன். எ - று. (ருஉ)

திருந்து மாத்திரை யிருதுநாட் டிங்களாண் டிருது
பொருந்து காலமற் றியாவையும் புலப்படப் புரிந்தான்
கருந்த டங்கணு ளிடத்தரன் கணணெனச் சிறந்தா
னிருந்த கோட்கிறை தானெனப் பொலிந்தன னின்னும்.

(இ - ள்.) அன்றியும் திருத்தமாகிய மாத்திரை நாழிகை நாள் மாதம் வருடம் இருது பொருந்திய மற்றைக்காலபேதங்களும், அறிந்துகொள்ளும்படி செய்தனன், அல்லாமலும் கருநிறமெய்திப் பரந்த கணகளையுடைய உமாதேவி யாரை வாமபாகத்திலுடைய சிவபெருமானுக்கு வலக்கணணென்று சொல்லும் படி சிறப்பெய்தினன். நவக்கிரகங்களுக்கும் தானே தலைவனென்று இன்னும் விளங்குகின்றான். எ - று. (ருக)

கும்ப கோணத்து மமுவிடை யிறைவனைக் குறுகிச்
செம்பொ னூடகப் பரிபுரச் சேவடி பூசித்
தும்பர் வெண்ணிலாக் கடவுணமற் றுடுக்களுக் கிறையாய்ப்
பம்பு வெண்கதி ரினியதெள் ளமுதெனப் பயந்தான்.

(இ - ள்.) கும்பகோணத்தி லெழுந்தருளிய இளமைதங்கிய இடபாரூட ராகிய சிவபெருமானையடைந்து, மேன்மைதங்கிய வெள்ளிய சந்திரிகையை யுடைய சந்திரன், ஆனந்தத்தாண்டவஞ்செய்யும் அவ்வெம்பெருமானது பசும்பொன்னாலாகிய பாதசரமணிந்த திருவடிகளை வழிப்பட்டு, நட்சத்திரங்கட் கிறைவனாய், விசேஷித்த வெண்ணிறந் தங்கிய கிரணங்களை இனிமை பெய்தி தெளிந்த அமுதமென்று சொல்லும்படி பெற்றுக்கொண்டனன். எ - று.

மேரு மால்வரை வலம்வரைக் கிடைத்தனன் விமல
னாகொ மூஞ்சடை யணிதரச் சிறந்தன னுலகத்
தோரெ லாந்தொழுந் தன்மைபெற் றுயர்ந்தன னெருங்கே
தேரி னின்னுயிர் குளிர்ப்புறச் சீதளஞ் சிறந்தான்.

இ - ள்.) பெரியமேருமலையைப் பிரதக்கணம் வரும்படியாகவும் பெற்றுக் கொண்டான். சிவபெருமானுடைய சடையில் தரித்துக்கொள்ளுஞ் சிறப்பும் மடைந்தான். உலகிலுள்ளவர்கள் ஒரேமாதிரியாய் வணங்குமியல்பும் பெற்று உய ரவடைந்தான். இன்னும் ஆலோசித்தால் இனிய சீவர்கள் குளிர்ச்சியெய்தும் படி குளிர்ச்சித்தன்மையில் மேம்பட்டான். எ - று. (ருரு)

பூம னன்னெறிப் புந்திகன் வியாழமென் புனிதன்
வாம சுக்கிரன கதிரமக னீங்கிவா மருதூா
தோமில கூடல்வே தாரணி பழாரச சோலைக்
காமா னனகா திருவையா றடைந்தனா கருதி.

(இ - ள்.) செவ்வாய், நன்மாரக்கமுடையபுதன், நன்மைதங்கிய வியாழன் என்னும புனிதமானவன, அழகிய சுக்கிரன, சூரியகுமாரனாகிய சனி இவாகள முறையே திருவிடைமருதூா குற்றமறற மதுரை திருமறைக்காடு ஆலமரச்சோலைகள சூழ்ந்த அழகிய திருவாலஙகாடு திருவையாறென்னும ஐந்துக்ஷேத்திரங்களை + சிந்தித்துச் சோந்தாாகள. எ - று. (ருகூ)

அரனை யேததினா வான்முறை யருசசனை யயாநதா
ரிரவி மண்டலஞ சநதிர மண்டல மிவறறிற
குரவு மேற்பதஞ சிறநதன ருலகெலா முவநது
பரவி யேததுறப பொலிநதன ரொழிநதனா பாவம்.

(இ - ள்.) ஆஙகாஙகெழுநதருளிய சிவபெருமானைத துதிசெயது பூசித்தாாகள. சூரியமணடலம சநதிரமணடலமெனனும இவவிரணடிறகும மேலாகிய உயாபதவியிற சிறநதாாகள பாவஙகளெலலாம நீஙகபபெறறவாகளாய உலகினா யாவரும சநதோஷிததது வணஙகித துதிசெயயுமபடி விளஙகினாாகள.

நனமை யாவன நளிகட னெடுநிலத தெவாககும
புனமை யாவன யாவையுங கொடுபபவப புவியோ
ரினமை சொறறுஙின றேததுற வெயதினா ரிவாக
டொனமை யோனடித தாமரை வரனமுறை தொருவார்.

(இ - ள்.) குளிாநத கடல சூழ்நத நெடிய நிலவுலகிலுளளாா யாவர்க்கும் நன்மையானவைகளும தீமையானவைகளும ஆகிய எலலாவறறையுஙகொடுததுக்கொணடிருததலால, உலகினா தஙகளுககுவாயதத தரிததிரததைச சொலலித தஙகள திருமுனனே நினறு துதிசெயய விருநதாாகள. இவாகளெலலாரும புராதனராகிய சிவபெருமான பாததாமரைகளை விதிபபடி பூசிப்பவாகள. எ-று.

சொற்ற வேழ்வரி லிருவருஞ சுராசுராக் குணாதகப்
பெற்ற டைநதனா மறறையோா பெருமையிற சிறநதார்
கொறற முத்தலை யயிறபடைக குழகனுக கினிதி
னுறற பூசனைப பவிததிரப பெருமையா ருரைபபாா.

(இ - ள்.) ஈணடுச் சொல்லிய சததகிரகஙகளுககுள்ளே வியாழன் சுக்கிரனெனனுமிருவரும முறையே தேவாககும அசுராககும உபதேசிககுந தனமையெயதி ஆசாரியாகளானாாகள். மறறைய ஐவரும மிகமேமபட்டாாகள. ஆதலால வெறறிபொருநதிய முததலையுளள சூலாயுதந தாஙகிய சிவபெருமானுககு இனிமையாகபபூசிககினற வழிபாட்டின புனிதமான மேனமையை எவாதாஞ சொல்லுவாா? எ - று. (ருகூ)

தீதின் மாநவக் கோசிக னத்திரி சிவன்ருட்
போது ணாநதறி கவுதமன பரததுவன் புலமை

மூது றுஞ்சம தக்கினி வசிட்டன்முற் றுணர்ந்து
வேத மோர்ந்தறி காசிப னெனப்படு மேலோர்.

(இ - ள்.) குற்றமற்ற பெருந்தவமுடைய விசுவாமித்திரர்-அத்திரி-சிவபெருமான் பாததாமரைகளைத் தெளிந்துணர்ந்த கௌதமர்-பரத்துவாசர்-அறிவின் மேன்மை தங்கிய சமதக்கினி-வசிட்டர்-வேதமுழுவதுமோதித் தெளிந்துணர்ந்த காசிபர்-என்று சொல்லப்பட்டமேலோர்கள். எ - று. (௬௦)

இன்ன மாதவ முனிவர ரேழ்வரு மெதிர்ந்து
பொன்ன லங்குசிற் றம்பலத் தரனடி பூசித்
துன்ன ருங்கலை யாகம முதலமுற் றுணர்ந்தார்
துன்ன ருங்கிர கங்கட்கு மேற்பதந் தொக்கார்.

(இ - ள்.) இத்தகைப் பெருந்தவமுடைய சத்தமுனிவரும் பொன்மயமாய் விளங்கும் திருச்சிற்றம்பலமெய்தி, ஆங்கெழுந்தருளிய நடராசப்பெருமான் பாதங்களை யர்ச்சித்து, எண்ணுதற்கும் அரிய நூல்கள் ஆகமங்கள் முதலியவற்றைமுற்றுந்தேர்ந்தார்கள் அடைதற்கரிய மேற்கூறிய கிரகங்களுக்கும் மேம்பட்ட பதவியை யடைந்தார்கள். எ - று. (௬௧)

காலம் யாவையு மளவைகண் டொழித்திறு கடைபோய்ப்
பால லோசனன் பதம்பெறு தன்மையும் பயந்தா
ரால கண்டன திணையடி யருச்சனை யயர்ந்து
மூல நாயக னளித்தன வின்னமு மொழிவாம்.

(இ - ள்.) காலங்களையெல்லாம் அளவிட்டுக்கழித்த இறுதியிற்போய், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் திருவடியை யடைகின்றதன்மையையுமெய்தினார்கள், விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான் உபயபாதங்களைப் பூசிப்போருக்கு முதற்கடவுளாகிய அப்பெருமான் திருவருள் பாலித்தனவாகிய சரிதங்களை யின்னுஞ்சொல்லுகின்றோம். எ - று. (௬௨)

நிரந்த வார்கட னெடுநிலப் பரப்பெலா நிழற்றிப்
பரந்த வெண்குடை வேந்தனுத் தரன்பர தனுக்குப்
புரந்த விலற மாட்சியிற் புகுந்தன ரிருவ
ரரங்க டிந்தம்வற் றடங்கணா மடப்பிடி யனையார்.

(இ - ள்.) வரிசையாய் நீண்ட கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகமுழுவதையும் நிழல்செய்து பரவிய வெண்கொற்றக்குடையையுடைய மன்னனாகிய உத்தானபாதனுக்கு அரத்தைக்கோபிக்கும் வேல்போன்று பரந்த கண்களுடையவர்களும் இளமைதங்கிய பெண் யானைபோலும் நடையையுடையவர்களுமாகிய இருமாதர்கள் பரிபாலிக்கின்ற மனைக்கிழத்தியராகச்சேர்ந்தார்கள். எ - று. (௬௩)

இருவ ரீங்கிவ ரிருந்தவ மரிதிழைத் தீன்ற
கருணை மைந்தரோ ரிருவரக் காணமுளை யவரின்
மருவ பின்னவண் மதலையம் மணிமுடி வேந்தன்
றிருவ டித்தலை யிருத்தலுஞ் சீறினள் மூத்தாள்.

(இ - ள்.) இவ்விரு மனைவியரும் பெருந்தவத்தை அரிதாகச்செய்து பெற்ற திருவையுள்ள புதல்வரிருவரிருந்தனர். அப்புதல்வரிருவருள்ளே கலந்திருக்கும் இளைய பாரியையாகிய சுநீதியென்பாள் புதல்வன், இரத்தினகிரீடமணிந்த அம்மன்னனுடைய அழகிய மடியின்மேலுட்கார்ந்த மாத்திரத்தில், மூத்தவளாகிய சுருதியென்பாள் கோபமெய்தினள். எ - று. (கூச)

சில்ல ரிசசிலம் பரற்றுற வோடினள் சென்றாள்
மல்ல லமபுயத் தவன்றிரு மடித்தலை யிருக்குஞ்
செல்வ னைக்கரந் தொட்டிழுத் தகற்றினள் சினத்தால்
வல்லை கொண்டுதன் சிறுவனை யிருத்தினண் மடியில.

(இ - ள்.) சிறு பருக்கைகள் பொருந்திய பாதசரம் ஒலிக்கும்படி யோடிச் சென்று, அழகு மிக்க தோளையுடைய அம்மன்னவன் சிறந்த மடியிலிருந்த புதல்வனைக் கையைப்பற்றி யீர்த்து நீக்கிவிட்டாள். உடனே அதிவிரைவில் தன் மகனை யெடுத்துக்கொண்டு சென்று அம்மன்னவன் மடியின் மேல் உட்காரவைத்தாள். எ - று. (கூரு)

அழுது கண்பிசைந் தடிக்கடி பொருமின னவனை
யெழுத ருங்குடை வேந்தவை நோக்கில னிரங்கி
விழுமெ ழுந்தனை யீன்றவட் குரைத்தனன் வீழ்ந்து
புழுதி மெய்ப்பட்ட புரண்டனன் பொறுக்கலன் புதல்வன்.

(இ - ள்.) (அப்படி இழுத்துவிடப்பட்ட துருவன்) கண்ணைப்பிசைந்து கொண்டழுது அடிக்கடி வெம்பினன் ஓங்கிய வெண்கொற்றக்குடையையுடைய மன்னவன் அவற்றையெல்லாம் பார்க்கவேயில்லை. அதன்பின்னர், அப்புதல்வன் விழுவான் எழுவான் இப்படித் துக்கப்பட்டு, தன் தாய்க்கு இச்செய்தியைச் சொல்லி, அப்புத்திரன் துருவன் சகிக்கமுடியாதவனாய் நிலமிசைவிழுந்து புழுதியெல்லாம் உடலிற் படும்படி புரண்டான். எ - று. (கூகா)

எடுத்தெ டுத்தணைத் தாற்றினண் மடித்தலை யிருத்தித்
தொடித்த ளிர்க்கையாற கட்புனன் முறைமுறை துடைத்துப்
பொடிப்பு ரண்டன நீவின ளகமபொரு மபொருமி
வடித்த டங்கணா மைந்தனுக் கினையன வகுப்பாள்.

(இ - ள்) மாவடுவைப்போன்று விசாலித்த விழிகளையுடைய சுநீதி யென்பாள். (அப்படிப் புரண்ட புத்திரனை) எடுத்தெடுத்தணைத்துக்கொண்டு அழுது தன் மடியில் வைத்துக்கொண்டு வளையலணிந்த தளிர்போலும் கைகளால் புதல்வன் கண்ணீரை அடிக்கடி துடைத்து, நிலமிசைப்புரண்டதாற்படிந்த புழுதி நீங்கத்தடவிக்கொடுத்து, மனஞ்சகியாது துக்கித்து இவ்வகையாகச் சொல்லுவாள். எ - று. (கூஎ)

என்னை செய்துமற் றுந்தைதன் னிலையழிந் திவட்குத்
தன்னை யீந்தனன் மனம்மய றளர்ந்துறத் தளர்ந்தா
னுன்னை நோக்கல னுளநெகிழ்ந் தானல னுனக்குப்
பின்னல் வேணியோன் றிருவரு ளிரங்குமேற பிழைத்தி.

(இ - ள்.) யாது செய்வோம்? உன் தந்தை தன் நிலைமை கெட்டு மூத்தவ ளாகிய சுருதிக்குத் தன்னைக்கொடுத்துவிட்டார். மனத்திற்றோற்றும் அவள் யக்கம் ஆட்டுவிக்க வருந்தினார். ஆதலால் உன்னைப்பார்க்கவில்லை. மனமு மிரங்கவில்லை இனி உனக்குப்பின்னிய சடையையுடைய சிவபெருமான் திருவருளிரங்குமாயின் கடைத்தேறுவாய். எ - று. (௬அ)

அந்தி வண்ண னுக் கருச்சனை புரிந்தன ளாகி
மைந்த ஞேடியாங் திழைத்தன ளீதுகாண மகனே
முந்தை வானவ ரியாரினு முதன்மையோ ராதற
கெந்தை நல்லரு ளல்லவேன முடிவதொன் றில்லை.

(இ - ள்) அந்திவண்ணராகிய சிவபெருமானுக்குப் பூசை செய்பவளாயத் தன் புதல்வனோடு சிறந்து செய்தாள். மகனே! இதுவே முதன்மையாகிய தேவர்களெல்லாரிலும் முதன்மையராதற்குரிய எமது சிவபெருமானுடைய திருவருளையெய்தும் வழி இப்பூசை இல்லையாயின் முடியத்தக்க காரியம் ஒன்று மில்லையாம். எ - று. (௬௯)

ஆயி னெம்பிரான் மலரடி யருச்சனைக் குரித்தாய்
நீயும வேண்டுவ யாவையும பெறுகென நிகழ்த்தப்
போயி னன்சிறு புதல்வனுங் காசிபுக கடைந்தான்
பாய வெள்விடை யவனடி யருச்சனை பயின்றான்

(இ - ள்.) ஆனால் நீயும் எம்பெருமானுடைய செந்தாமரை மலர்போலும் பாதங்களின் பூசைக்குரியவனாய வேண்டுவனவற்றையெல்லாம் பெறக்கடவா யெனச்சொல்ல, இளங்குமாரனாகிய துருவன் அப்படியே காசிக்ஷேத்திரஞ் சென்று சேர்ந்து பாயந்துசெல்லும் [illegible] இடபாரூடராகிய சிவபெரு மான் திருவடிகளைப் பூசைசெய்துவந்[illegible] எ - று. (எ0)

சிறுவ னின்னண மருச்சனை புரிதலுஞ் செழுநீர்
மறுவ றுமபிறை வேணியோன் மழவிடை யுகைத்துக்
குறுகி னனவட் குழகனு மெனபுறக் குழைந்தான
பெறல ருமபதத் தாமரை வீழ்ந்தனன பிள்ளை

(இ - ள்.) துருவன் இப்படி அர்ச்சனைசெய்யவும், செழியகங்காசலத்தை யும் குற்றமற்ற இளம்பிறையை மணிந்த சடையையுடைய சிவபெருமான், இளமைதங்கிய இடபவாகனமூர்ந்து அங்கெழுந்தருளினார் எழுந்தருளவும் அப் புதலவன் எலும்பும் நெக்குவிடும்படி மனமுருகி, அடைதற்கரிய அவருடைய பாதகமலங்களில் வணங்கினன். எ - று. (எக)

ஆடி னனழு தான்சிரித் தானழு தாடிப்
பாடி னனின்று பறபல குழறினன் பகர்ந்தா
னோடி னன்குதித் தான்மயிர்ப் புளகெறிந் துயிர்த்தான்
வீடி னனபிழைத் தானெனுந் தன்மையின் வியந்தான.

(இ - ள.) ஆனந்தக் கூத்தாடினன், சிரித்தான், புலம்பிக்கூத்தாடித்துதித் தான், நேரில் நின்றுபற்பலவார்த்தைகளாகக் குளறிக்கூறினன், ஓடினன், குதித் தான், மயிர்க்கூச்செறிந்து பெருமூச்சுவிட்டான், இறந்தான் உயிர்பெற்றனெ ன்றுசொல்லத்தக்க தன்மையுடையவனாய ஆச்சரியமெய்தினன். எ - று.

மூக்க ணோக்கினன் முகிணகை பூத்தன னிவனை
யொகக நோககினன் வேணடிய வுணாத்தென வுணாத்த
நெக்க சிநதைய னுசசிகை கூபபுற நினறான்
மிக்கெ ழுநதபே ருவகையா னினையன விளமபும்.

(இ - ள்) திரிநேததிரஙகளின பாாவையுடைய சிவபெருமான் புன்னகை கொணடவராய் இச்சிறுவனை ஒருமையாகப் பாாதது உனககு வேணடியவரத தைததெரிவிககவெனக கேட்க, உருகிய மணமுடையவனுய, உச்சிமேற்கை கூப்பிககொணடுநினறு, அதிகரிததெழுநதபோானநததததால இப்படி விணணப் பிககினறான. எ - று. (எரு)

துவர்க்கொ ழுங்கொடி வேணியோய் நின்னடி தொழுதே
னெவாககு மேறபடு பதவியினை றருளுதற கெனலும
கவாதத முததலைச சூலிமற றுஙகது கருதி
நிவபபு றுஙகன காசலப பீடிகை நிறுவி.

(இ - ள்.) பவளததின கொழுவிய கொடிபோலுஞ் சடையையுடைய சிவ பெருமானே! எலலோருககும மேமபட்டபதவி யின்று பெறுதற்காகத தேவரீர் பாதஙகளைப் பணிநதேனெனறு விணணபபிககவும, கிளைத்த முததலைகளையு டைய சூலபபடைபோநதிய சிவபெருமான அதனைத திருவுளளஙகொணடு, அதி யுன்னதமான மேருமலைபோனற ஆசனமமைதது. எ - று. (எச)

நின்ற கோட்களு முனிவா ரெழுவரு நிறக
வொனறி மேறபடு பதவிபெற றுயாநதுற வுதவி
யென்றும வெணமதிக கடவுளுங் கிரகங்களு, யாவு
மினறு மனனவன் பணிபபடி திரிதர விசைததான்.

(இ - ள) நிலைததுளள கிரகஙகளும, சததமுனிவாகளும நிற்கும்படிபொ ருநதி, அவறறிறகு மேமபட்ட பதவியைப்பெறறு மேனமையெய்துமபடி பாாவி தது, சநதிரனும ஏனைககிரகஙகள யாவும எப்பொழுதும அததுருவன் கட்ட ளைபபடி சஞசரிககும வகையாக இனறைய வரையில கட்டளையிட்டனா.எ-று.

கால சககர முதலிய வரஙகளுங கருதிப்
பால லோசன னளிததருங கயிலையிற படாநதான
சாலபு றுநதனித துருவனென றொருபெயா தரிததான்
மேலு றுமபதத தினனமு மிருநதனன வியபபால.

(இ - ள்) காலசககரமுதலிய வரஙகளையுங கொடுபபதறகு நெற்றிக்கண் ணராகிய சிவபெருமான திருவுளஙகொணடருளிப பாாவிதது, சிறநத கைலாய கிரிககெழுநதருளினா. அதனபின அவன ஒபபறறமேனமைதஙகியதுருவனென் னும ஒரு பெயரையுமபடைததான. மேமபட்ட அபபதவியில இன்னும் சநதோ ஷததோடிருககினறனன. எ - று. (எரு)

திருக்கு டநதையி னெம்பிரான் சேவடி பூசித
துருககு சிநதையி னுரகாகோ னெடுநில மனைத்து
மிருகக வெமபண மாயிர மெடுததன னிருநதான
கருததி னோநதறி கலையெலா மொருஙகுறக களிததான்.

(இ - ள்.) நாகராசனாகிய ஆதிசேடன் கும்பகோணத்தில் எழுந்தருளியிருக்கும் எமது சிவபெருமான் பாதங்களை நெக்குவிட்ட மனதோடுவழிபட்டு, நெடிய நிலவுலகமுழுவதையும் தாங்குதற்குப் பெரிய ஆயிரம் பணாமுடிகளைப் பெற்றான். அனறியும் நூல்களெல்லாவற்றையும் மனதினால் முழுவதும் சிந்தித்துத் தெளிந்து சந்தோஷித்தான். எ - று. (எஎ)

புரிந்த வேணியெம் பரமனை யருச்சனை புரிந்து
தெரிப்ப ருமபத மடைந்தன ரெண்ணிலா சிறந்தார்
தரித்த மாதவந் தலைவர்கா ளாங்கவர் தனமை
விரிக்கி னெம்முறை யடங்குமோ யாரகொலோ விரிப்பார்.

(இ - ள்.) முறுக்கிய சடையையுடைய எமது சிவபெருமானை வழிபட்டு, தெரிதற்கரிய பதவிகளடைந்து எண்ணிறந்தவர்கள் சிறப்பெய்தினார்கள் பெருந்தவப்பயன் பெற்றுள்ள நைமிசாரணிய முனிவர்களே! அத்தகையினரியல்பை விரித்துச் சொல்லவேண்டுமாயின் எமது தரத்தில் அடங்குமோ? அல்லதுவேறெவர்தான் சொல்லுவார்கள். எ-று. (எஅ)

பட்டபெ ருமபுவி யிலிங்கமும் பால்வளை கோவி
நட்டது வேணடிறைப பொன்னியே முதலிய நதிப்பா
லிட்டநி லிங்கமும் வடவரை முதல்வெற் பெல்லா
மடுத்த லிங்கமும் பவித்திர மெனத்தொழு தடைந்தார்.

(இ - ள்.) ஆதிசேடன் தன் பெரிய படத்தால் சுமக்கும் நிலவுலகில் திவ்விய க்ஷேத்திரங்களிலுள்ள சிவலிங்கங்களும், வெள்ளிய சங்குகளைக் கரையிலொதுக்கிப்பாயும் வெள்ளிய அலைகளையுடைய காவிரிமுதலிய நதிதீரத்தில் வீற்றிருக்கும் சிவலிங்கங்களும் தூய்மையுடையன [illegible] வணங்கிப்பேறெய்தினார்கள். எ - று. (எகூ)

தேவர் கின்னர ரியக்கர்கிம புருடர்கந் தருவ
ரேவ ருந்தவ முனிவரர் சித்தர்வெள் ளெயிற்று
பாவ காரிய நிருதர்வித் தியாதரர் பட்டபாம
பாவ தாகிய வெணமரு மருச்சனை யபாந்தார்.

(இ - ள்.) தேவர்கள் கின்னரர்கள் இயக்கர்கள் கிம்புருடர்கள்கந்தர்வர்கள் அடைதற்கரிய தவத்தையுடைய முனிவர்கள் சித்தர்கள் வெள்ளியபற்களையுடையவர்களாகிய பாவச்செயல்களையுடைய நிருதர்கள் வித்தியாதரர்கள் படம்பொருந்திய அஷ்டமாநாகங்களாகிய இவர்களெல்லாரும் சிவலிங்கார்ச்சனை செய்தார்கள். (அ0)

கருடர் மானிட ரரக்கர்மண் புரந்தருள் கமஞ்சூல
வருட மெண்டிசை மதவரை மாலவரைக் குலங்கள்
பொருவ ருமபதம புகுந்தது மருவலர் புரந்தீத்
தொருவு மெம்பிரா னருச்சனை யன்றிவே றுளதோ.

(இ - ள்.) கருடர் மாநுடர் அரக்கர் உலகினைக்காக்கும் சூல்நிறைந்த மேகங்கள் வருடம் அஷ்டதிக்குகள் அஷ்டகஜங்கள் அஷ்டகுலபர்வதங்களாகிய இவை நிகரற்றபதவியிற் சேர்ந்ததும், பகைவரது முப்புரங்களை யெரித்தொழித்தருளிய எமது சிவபெருமான் அர்ச்சனையினாலன்றி வேறொன்றனாலுண்டோ?

முததி நானகினத தருமமே முதலிய நான்கி
னைததை வேணடின ராஙகவ ரெயதுதற கரிதோ
வதத னுடைய பரிபுரச சேவடிக கமைநத
சுததி கொணடிருந தருணமுறை யருசசனை தொகுபபின்.

(இ - ள.) புனிதராகிய சிவபெருமானுடைய பொனனூலாகிய பாதசரமணி
நத பாதஙகளுககுரிய புனிதமபொருநதியிருநது அவவிறைவனருளிய ஆகமமு
றைபபடி சிவலிஙகார்ச்சனை செயவாாகளாயின, (சாலோகமுதலிய) நாலவகை
முததிகளிலும தருமமுதலிய சிறநத நாலவகைபபுருஷாாததஙகளிலும எவரெ
வா எவவெவறறை அபேக்ஷிததாலும அவரவா அவவவறறையடைதறகு
மரிதோ? எ - று. (அஉ)

மனனா மனனராய நெடுநில மனபதை புரபபா
ருனன ருஙகதி புகுநதிருந தினனல முவபபாா
பினனா மைநதராய மாநிதிப பெருககினுற சிறநதா
ரெனனை யாளுடை நாயகன பூசனை யிழைததூ.

(இ - ள) எனனையாளாகவுடைய சிவபெருமான பூசையைச்செய்து மின
னா வலியுடையவாகளாய, பெருஞசெலவபபெருககாற சிறபபெயதி, மனனா
மனனராகி நெடிய நிலவுலகிலுளள பிரசைகளைப பாதுகாதது எணணுதறகரிய
பதவிகளிற சென்றிருநது இனிதாக இனபததை யநுபவிப்பாாகள. எ - று.

அலஙகு பேரழ கருநிதி யாததிய மினமை
நலஙக ருஙகொடை சீாததிசெயந நனறியோாநது தறித
லிலமபா ருஙகரி முடலம புரவிதே ரொலிநீா
வலஙகொள மாநகா மாலிகை யளவெபாழி லளஙகள.

(இ - ள.) விளஙகுகினற மிகக அழகும, பெருஞசெலவமும, அசததியமின
மையும, நனமையைததரும கொடையும, சிறபபும, செயநநனறியறிநதுதெளித
லும, திரணடகலலை யொததயானையும, வெறறிதஙகிய அழகிய குதிரையும,
தேரும, ஒலிககினற நீாவளநதஙகிய பெரிய நகரமும, மாளிகையும கணககற்ற
வளஙகளும. எ - று. (அச)

உரைதத வீஙகிவை யாவையும மெமபிரான குவகை
யிரைதெழுமபடி வானமுறை யருசசனை யிழைததாா
கரைதத வனபொடும பெறறனா கணககில ரனறோ
விரைதத மெனமலா பூசையற பெறறன விரிபபாம.

(இ - ள) ஆகிய மேறசொலலிய இவறறையெலலாம, எமது சிவபெருமா
னுககுச சநதோஷமுணடாகுமபடி விதிபபடி அாசசனை புரிநதவாகளாய அன்
போடும அடைநதவாகள கணககிலலாதவாகளாவாாகள. அததனமையா மணந
தஙகியமெலலிய மலாகளானாசசிததமையாற பெறறபேறுகளை விளககிசசொல
லுவோம. எ - று. (அரு)

ஆதி நாளையிற பாறகடற பாபபனை யமலன
மாது பாகனை மலரடி யருசசனை வருததா

னேதை வேலேநீ ருலகெலாமொருகுடை நிழறறிப்
பேதை மாரொடுரு சிறநதனன பெருநிதிப பெருக்கான்.

(இ - ள்.) பண்டைககாலததில், பாற்கடலிற சேஷசயனததிலெழுந்தரு ளிய திருமால் உமாசமேதனுகிய சிவபெருமானே அவரது தாமரைமலாபோனற பாதஙகளில் அர்ச்சிததாா. குளிரச்சிவாயநத கடல நீா சூழநத உலகமுழுவதை யும ஒப்பற்றவெணகுடை நிழலதரச்செயது, பததினிமாருடன பெருஞ்செல் வப்பெருக்கினுற் சிறபபெயதினா. (அசு)

செருக்கி ருந்தவா வுணர்ந்தவோ ரருந்தவச செல்வ
னுருத்த லாலர சொழிநதுமா நிதிபபெருக் கொழிநதா
னெருக்கு வார்சடை யெமபிரா னருசசனை யியறறித
திருதது மாநிலத தரசொடு முனனாிற சிறநதான.

(இ - ள்.) (அப்படியரசுபுரிகையில்), அரசச்செல்வத்தாற் கர்வித்திருநதத னையுணாநத அருநதவமுடைய ஒருமுனிவா கோபிததலால அரசாட்சியையும் பெருஞ்செல்வப் பெருககையும ஒழிநதாா எருககமாலையணிநத நெடியசடை யையுடைய எமது சிவபெருமானைப்பூசிதது, திருததமாகிய பெரிய நிலவுலகத தின் அரசாட்சியோடு (செலவததிலும) முனனிருநததைக காட்டிலும மேம பட்டனா. எ - று. (அஎ)

மடலொ ராயிரத் தாமரைப பொருட்டுறை மறையோன்
கடவுண் மாபபதி காழியிற கண்ணுதற பரனைப
புடவி போறறுறப பூசனை நாளபல புரிநதான
படவ ராவணி செனனியோ னெதிாநதுறப பணிநதான்.

(இ - ள.) ஆயிரவிதழ்களையுடைய செநதாமரைமலாி லெழுநதருளியிருக் கும் பிரமன் சிறநத தெய்வீகநதஙகிய க்ஷேததிரமாகிய சீகாழியில எழுநதருளி யிருக்கும் நெறறிககணணையுடைய சிவபெருமானை உலகினா துதிககுமபடி பல தினஙகள பூசைசெயதான. படநதஙகிய சாபபததையணிநத சடையையுடைய சிவபெருமான தாிசனநதநதருள வணஙகினன. எ - று. (அஅ)

அருததி கூர்தர வெம்முழை யருசசனை யயாநதாய்
கருததி ஞோநதன வெதுவெனக கண்ணுதல் வினவ
மருத்த வாாசடைப புஙகவ வாணவ மயககாற
செருககெ ழுநதன னதுகொடு வயிரவச செலவன.

(இ - ள்.) ஆசையதிகாிககுமபடி நம்மைப்பூசிததாய. உனமனதில் இச்சித தவை எவையெனறு நெறறிககணணையுடைய சிவபெருமான வினவியருள, மணம் வீசும் நெடிய சடையையுடைய கடவுளே! ஆணவமயககததினுல் மயஙகிக கர்வித்திருநதேன. அதனுலே வயிரவககடவுள. எ - று. (அகூ)

சிந்தை சீறியென் சிரத்தினோ சிரங்குறைத் தெழுந்தா
னநத நாண்முத லின்றுகா றவலமுற றடைநதே
னெநதை யாருயிா படைபபன மயஙகினே னெனக்கு
முநது செய்வினை முயறசிதந தருளென மொழிநதான.

(இ - ள்.) மனங்கொதித்து அடியேன் சிரங்களில் ஒருசிரத்தைக் கிள்ளிச் சென்றனர். அன்று தொடங்கி யின்றுவரையில் துயரமுழுவதும் அநுபவித்தேன். எந்தையே! ஆன்மவர்க்கங்களைச் சிருஷ்டிசெய்யுந்தொழில் புரிதலில் மயங்கினேன். அடியேனுக்கு முன்னைய சிருஷ்டித்தொழிலின் முயற்சியை இப்போது தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். எ - று. (கூ0)

அயனு ரைத்தசொற் கேட்டலு மெம்பிரா னவற்கு
மயர்வொ ழிந்துற வரம்புரிந் தகன்றன்ன மறையோன்
கயனெ டுங்கட லுலகமு மப்பல வுயிர்க் கணமும்
பயமொ ழிந்துவீற் றிருந்தன்ன முன்னரிற் படைத்தான்.

(இ - ள்.) பிரமன்கூறிய வார்த்தையைக் கேட்டவுடனே, எமது சிவபெருமான் அவனுக்குமயக்கமகலும்படி வரந்தந்து மறைந்தருளினார். பிரமன் அதன்பின்னர், ஆழமான நெடிய கடல்சூழ்ந்த உலகங்களையும் அவற்றில் வாழும் பல சீவராசிகளையும் பண்டுபோற்படைத்துக்கொண்டு பயமற்றவனாயிருந்தான். எ-று.

அரிக்கு மாயிரந் தோட்டுடை யம்புயத் தவற்கும்
கரித்த சிந்தையி னாணவ மீக்கொளக் கன்னூற்
தெரித்த ஞானமறை பிரணவ மீங்கிவை தெரியா
விரித்து ணர்ந்திமற் றவர்படு பேரமர் விலக்கி.

(இ - ள்.) ஒருகாலத்தில் திருமாலுக்கும் ஆயிரம் இதழ்களையுடைய கமலாசனத்திலுள்ள பிரமனுக்கும் ஆணவமலம் அதிகரித்தபடியால், கடுங்கோபசித்தமெய்தியவர்களாய்ப் போர்செய்தார்கள். அப்போது ஞானகுவேதங்களும் அவற்றிற்குக் காரணமாகிய பிரணவமும் இப்படிப்போர்செய்வது நன்றாகாது தெளிவாக்கூறி அவர்கள் செய்யும் பெரும்போரைத் தடுத்து. எ - று. (கூஉ)

பாரை யாருயிர்ப் பரப்பினைப் பகிரண்டப் பரப்பை
மேரு மால்வரை முதலிய வெற்பினை விரிந்த
நீரை வானவ ரெவரையு மீன்றவ னின்று
னோரி னன்னவன் யாவனென் றுணர்ந்திலிர் போலும்.

(இ - ள்.) உலகத்தையும் அரிய ஆன்மகோடிகளையும் அண்டகோடிகளையும் பெரிய மேருமலைமுதலிய மலைகளையும், பெருகியகடலையும், தேவர்களெல்லாரையும் படைத்து இவற்றிற்கு அயலாயிருக்கின்றான். உணருமிடத்தில் அத்தகையினன் யாவனென்றுணர்ந்தீர்களில்லை போலும். எ-று. (கூக)

என்று ரைத்தன யாவையு மாணவச் செருக்கா
னென்று மோர்ந்திலா னன்னவை யெம்பிரா னுணரக்
கன்று வெஞ்சின வயிரவக் கடவுளைக் காட்டிச்
சென்று நீயவர் செருக்கொழித் தருளெனச் சென்றான்.

(இ - ள்.) என்று பலவுங்கூறின. ஆணவமலத்தால் ஒன்று முணர்ந்தார்களில்லை அதனை எமது சிவபெருமானறிந்து, கடுங்கோபமுடைய வைரவக்கடவுளைத் தோற்றுவித்து, நீபோய் அவர்கள் இறுமாப்பைவிலக்கிவிடுக வெனக்கட்டளையிடவும் அவர் அங்ஙனமே சென்றனர். எ - று. (கூச)

விரவு நான்மறை யநதணன் றன்னுழை வெருண்டோர்
சிரம ரிநதெழ செநநிறக குருதியந திரைநீாக
கரக பாலததி னேறறலுங் கரநததக கபாலத்
திரள்கு றுநதுளி யொனறெனு மிலலையச சிரத்தில.

(இ - ள்.) கலநத நான்குவேதஙகளையுமுணாநத பிரமன்பாற் சினமெய்தி, அவனுடைய ஒருதலையை யறுதது, அபபோதே பெருககெடுத்த செநநிறமுடையதாய அலைகள்மோதும உதிரநீரை, தமதுகையிற்றாஙகியிருநத கபாலததிலேற்றுககொணடவளவில அவவுதிரமுழுவதுஙகபாலததிற்சுவறியது. அதன் பின், உதிரததின திரட்சியான சிறுதுளி ஒனறும அககபாலததிலிலலை.

வேத நான்முகன மயக்கமுற றநநிலை வீழுந்தான
காது சூறபடை வயிரவ ஞஙகது காணுப
போத மனனவற கனிததரி நாடடகம புகுநதான்
றூது லாநதுழாய நெடுமுடி யவறகெதிா சாாநதான்.

(இ - ள்) வேதமுணாநத பிரமன அபபொழுதேமயககமெயதி விழுநதான். கொலைசெயயுஞ் சூலாயுதநதாஙகிய வைரவககடவுள அதனைக்கணடு அப்பிரமனுககு மயககமகல அறிவுதநது வைகுநதமடைநது, மகரநதபபொடிகள நெருஙகிய துளவமாலையணிநத நீணடதிருமுடியை யுடைய திருமாலுககெதிரே சென றனா, எ - று. (கூகூ)

முத்த லைக்கழு வாஙகவ னெறறியின முறறக்
குததி யேறறினன் மடமடத தொழுகிய குருதி
பதத வாயிர மாணடது கபாலததுப பாயநத
மத்த மாமத மொழிநதுற மயஙகினனமாயன.

(இ - ள்.) முததலைபொருநதிய சூலததினால அததிருமாலின நெற்றியில முநதும்படி குததியபொழுததினா மடமடவெனறு பெருகிய உதிரமானது தேவவருஷததிற பதினாயிரவருஷ மொழுகியது அவவுதிரமுழுவதும அககாலததிற பாயநது உனமததம போனறிருநத பெருஙகாவம நீஙகிய மாததிரததில திருமாலும் மயககமெயதினா. எ-று. (கூஎ)

பாய்நத சோரியைக கபாலமும பசையறப பருகக்
காயநத வெவவிரும பொழுககிய புனலெனக காணு
ஞேயநத மாயவற குணாசசிதந தகனறன ஞரவோ
னேய்நத வெஞசெருச செருககொழிந திருநதன ரிவாகள்.

(இ - ள.) அபபடிப் பாயநத வுதிரததை அககபாலமே பசைபறக்குடிதது விட, கொலலனுலையிற காயநதிய இரும்பில வாாதத நீரைபபோலக காணுதவனும், உணாவற்றிருநத திருமாலுககு வைரவககடவுள மறுபடியும உணாவுகொடுதது எழுநதருளினா். கடுமபோாககுக காரணமாயிருநதகாவததை இவாகளிருவரும் நீஙகியிருநதாாகள். எ - று. (கூஅ)

என்னெ னப்படு மாணவப் பாதகமிறபப
மன்னு தண்பணை மாமரு தூரிடை மாயோன
முன்ன வறபணிந தருசசனை புரிநதனன் முறையாற்
பொனனின வாாசடை யெமபிரா னவறகருள புரிநதான்,

(இ - ள்.) என்னென்று சொல்லப்படும் ஆணவத்தாற் சம்பவித்த பாதகம் நிவாரணமாம்படி, நிலைபெற்றிருக்கும் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த சிறப்புற்ற திருவிடைமருதூரென்னுந் தலத்தில், தலைவராகிய சிவபெருமானைத் திருமால் வணங்கி முறைப்படி அர்ச்சித்தனர். பொன்போல நீண்ட சடையையுடைய எமது சிவபெருமான் அவ்விஷ்ணுவுக்குத் திருவருள்செய்தனர். எ - று. (௯௯)

தான லாதிலை யெனவுணர் பாதகந் தவிர்ந்து
மேனி லத்தவை குண்டமுற் றடைந்தனன் விமலன்
கான நாண்மலர்ப் பழமறைப் பீடிகைக் கடவு
ளேனை மாமுக நான்கொடி மிருந்தன னின்னும்.

(இ - ள்.) திருமால் தன்னை நீங்க வேறுதவரில்லையென்று கூறியபாதகம் நிவாரணமாகி, தேவலோகத்திலுள்ள வைகுந்தபதவி சென்றெய்தினர். மணம் வீசும் புதிய தாமரை மலர்ப்பீடத்தை யுடைய பண்டைய வேதங்களுணர்ந்த பிரமன், மற்றுள்ள சிறந்த நான்குமுகங்களோடு இன்னும் விளங்குகின்றான்.

முன்னொர் காலத்தி னரிபிர மர்க்கமா மூளா
வன்ன வர்க்குள வத்திர மெதிருடன் றமர
வென்னை யாளுடை நாயக னிடையமுற் பிழம்பா
யுன்னி னின்றவ ரத்திரந் திருவுரு வொளித்தான்.

(இ - ள்) முன்னொருகாலத்தில் திருமாலுக்கும் பிரமனுக்கும் போருண்டாக, அவ்விருவர்க்குரிய அஸ்திரங்களை ஒருவருக்கொருவர் எதிரேவிட்டுப்போர் செய்ய, என்னையாளாகவுடைய சிவபெருமான் அவ்விருவர்க்குமிடையே அக்கினித்திரட்சியாகத் திருவுளங்கொண்டு தோன்றி அத்தன்மையாகவே மறைந்தருளினர். எ - று. (௧0௧)

என்ற காரண முன்பெடுத் தும்மகென விளைத்தே
மொன்ற வோர்ந்தனி ரருச்சனை முறையினி யுரைத்தே
மன்றி யின்னுமோ ரருந்துழா யலங்கலோ றடுத்த
புன்றொ ழிற்படி றெம்பிரா னொழித்தமை புகல்வாம்.

(இ - ள்) என்ற சரித்திரத்தை முன்னர் உமக்குக் கூறியுள்ளோம். அவற்றையெல்லாம் நன்றாக உணர்ந்திருக்கின்றீர்கள். அவர்கள்பூசித்தமுறைமையை இங்கே சொன்னோம். அன்றியும் அரிய துளசிமாலைதரித்த திருமாலுக்கு இன்னுமோர் அறபத்தொழிலால் உண்டான துயரத்தை எம்து சிவபெருமான் நிவாரணஞ்செய்தவகையைக் கூறுவோம். எ - று. (௧0௨)

வளைத்த வாளெயிற் றசுரரு மதுமல ரூழத்துக
கிளைத்த கற்பக நாட்டரு மடிகளங் கெழுமி
விளைப்ப ருஞ்சமர் விளைத்தலும் விண்ணவர் வெருவித்
தளைத்த பூந்துழாய்க் கண்ணியோற் சரணெனச் சார்ந்தார்.

(இ - ள்) வளைவுற்றகூரிய பற்களையுடைய அசுரர்களும், தேனொழுகும் மலர்களைச் சிந்துகின்ற கிளைகளையுடைய கற்பகவிருக்ஷந்தங்கிய தேவலோகவாசிகளாகிய சுரர்களும் போர்க்களத்திற்கூடி, செய்தற்கரிய போர்செய்தகாலத்தில், தேவர்கள்பயந்து அழகிய துளவமாலைதரித்த திருமாலை யடைக்கலமாக அடைந்தார்கள். எ - று. (௧0௩)

நிருத ராஜுடைந் திருந்திசை நெடுந்தொலை சென்றே
மொருவ ரஞ்சலி ரென்றுநின் றுரைபபவ ரில்லெங்
கருதி மற்றிது காத்தியே லெம்முயிர காததி
மருவ ருநதுழா யலஙகலோ யென்றவர் வணங்க.

(இ - ள்.) மணம் வீசுநதுளசிமாலை தரித்தவரே! அசுரர்களால் தோல்வி யெய்தி வெகுதூரத்திலுள்ள பலதிசைகளிலும் ஓடினோம். எவ்விடத்தும் அஞ் சாதீர்களென்று ஒருவராவது நேரில்வநது சொல்லுவது கண்டோமில்லை. இத னைமனதிற் கொணடு நீர காப்பது உண்மையானால் எங்களுயிரைக் காப்பீராக வென்று அவர்கள்வேண்டிவணஙக. எ - று. (௬0௫)

இரங்கு சிந்தைய னெறுழ்வலிக் கலுழன்மீ தெழுந்தா
னரங்கு வெஞ்சம ரடுகளத் தசுரரை முரிககிப்
பரநது போகிய திசையெலாம் படாநதனன் சிலர்போ
யுரந்து ணுக்குறப் பிருகுவாச சிரமமுற் றொளித்தார்.

(இ - ள்.) திருமால் இரஙகிய திருவுள்ளமுடையவராகி மிகுவல்லபமு டைய கருடன் மீதில் ஆரோகணித்து, போர்ககளததிலே அழுந்திய கடும்போர் செயயும் அசுரர்களை யழிதது அவாகள் பரவியோடிய திசைகளிலெல்லாம் துரத்திச்சென்றார். அப்போது சில அசுரர் ஓடிததைரியமானது அழிவடைய, பிருகுமுனிவருடைய ஆசிரமஞ்சேர்நது ஒளித்துககொணடாாகள். எ - று.

தொடர்ந்து சென்றனன் றிகிரிகொண் டோசசிய துழாயோன்
படாநத புன்சடைப் பிருகுவோா மாதவப பன்னி
யடைநது புககன ரடைககலங காததன ளவரை
மிடைநத குல்லையோய கோறலை யென்றெதிா விலக்க.

(இ - ள்.) சக்கராயுததததை யெடுதது வீசிய துளசிமாலைதரிதத திருமால் அவர்களைவிடாது பினறொடர்நது போயினர். பரவிய சிறுசடையையுடைய பிருகுமுனிவருடைய ஒப்பற்ற மனைவியிடத்தில் அவர்கள போய்ச்சேர்நதார் கள். அப்பததினியாா அவாகளுககு அபயாஸதமளிதது அடைககலமாய்க்காதத வராய், துளவமாலையணிநததிருமாலே! அவாகளைக கொல்லவேணடாமென்று நேரேவநது தடுகக. எ - று. (௬0௬)

எழுந்து சீறறமிக் காஙகவ ளுரைத்தன விகந்து
கொழுங்க திாபபடைத் திகிரிகொண டவளுயிர் குறைத்தான்
செழுமப சுமபுனற குருதியஞ் சேறறிடைக கலாபத
தொழுங்கு மாமயில் கிடநதெனச சோாநதன ளுறங்கி.

(இ - ள்.) அமமஙகையுரைதத சொல்லைககடநது கோபமதிகரிததுக் குதி த்து, மிகுகாநதியுடைய சககராயுததமைத யெடுதது அப்பததினியின உயிரைப் போக்கினர். அப்பொழுது பச்சையிரததமாகிய உதிரவெள்ளததிலுலாகிய சேற் றில், கலாபததின் ஒழுஙகையுடைய சிறநத மயிலானது படுததிருப்பதுபோலச் சோர்நதிறநதாள். எ - று. (௬0௭)

போர்க்க டுந்திற லசுரரை யுள்ளுறப் புகுதா
வீர்தத சோரிநின் றலைப்புறத் தொலைததன னெழுந்தான்
கார்த்த டங்கடற் படிநதெழு காாமழை வண்ண
ஞர்த்த வெஞ்சினப் புள்ளர சுகைததன னகன்றான்.

(இ - ள்.) போர்செய்து தோற்ற கொடுவல்லபமுள்ள அவ்வசுரர்களை உள்ளே புகுந்து பற்றி அறுத்தவுதிரம் பிரவகிக்கும்படி கொன்று புறப்பட்டு, கருநிறங்கொண்டு பரந்திருக்கும் கடலில் முழுகியெழுந்த சூல்கொண்ட மேகம்போலும் நிறந்தங்கிய அத்திருமால், சத்திக்கின்ற பெருஞ்சிறகுகளையுடைய கருடனென்னும் பக்ஷியைச்செலுத்திக்கொண்டு போயினர். எ - று. (௧௦௮)

முதிரு மாதவப் பிருகுநான மறைக்கொரு முதல்வன்
கதிரொ ளிப்பசுந் தருப்பையுஞ் சமிதையுங் கைக்கொண்
டெதிரு மாசிர மப்புறத் தின்னுயிர்ப் பன்னி
யுதிர வாரியுட் கிடப்பது கண்டுகின் றுயிர்த்தான்.

(இ - ள்) முதிர்ந்த பெருந்தவமுடையவரும் நான்குவேதங்கட்கும் ஒரு தலைவருமாகிய பிருகுமுனிவர், பசியப்பிரகாசம் பொருந்திய தருப்பையையும் சமிதையையும் திருக்கரத்திலேற்றுக்கொண்டு எதிரே வருகையில், தமதாச்சிரமத்தின் வெளியே இனிய உயிர்போன்ற மனைவியார் உதிரப்பெருக்கில்மிதந்து கொண்டிருப்பதை நோக்கி அங்கிருந்தே பெருமூச்செறிந்தார். எ - று. (௧௦௯)

ஆர்கொ லித்திறஞ் செய்தா ரென வகத்தரு ளளந்தான்
போர்கொ ளேமியான புரிந்தன னென்பது தெரிந்தான்
வார்கொ ளவெம்முலைப் பன்னியை நோக்குறு மருளும்
வேர்கொ ளுந்துறத் தெறுமரு மொருதனி வெதும்பும்.

(இ - ள்) இதனையார் செய்தனரென்று தமது ஞானக்கண்ணால் நோக்கினர். போர்செய்யத்தக்க சக்கராயுதமேந்திய திருமால் இதனைச்செய்தனரென்பது ஞானத்தாலுணர்ந்தனர். கச்சணிந்த வலிய தனங்களையுடைய தன்மனைவியைப் பார்ப்பார் மயங்குவார் உடலில் வியர்வரும்படி மனஞ் சுழல்வார். தனித்து வருந்துவார். எ - று. (௧௧௦)

இனைய புன்றொழி லியற்றியோ னிருந்துயர்க் கெல்லை
யுனைய னாகியிந் நிலத்திடை யளவறு பிறப்பின
னினையு ழந்துதன் னுருயிர்க் குயிரென மேவும்
மனையி ழந்துற வருந்தவென் றுரைத்தனன் மறையோன்.

(இ - ள்.) அப்பிருகுமுனிவர், இத்தகைய இழிதொழில் செய்த திருமால், பெருந்துயரங்கட்கெல்லாம் ஓர் எல்லை போன்றவனாகி, இந்நிலவுலகத்தில் எண்ணிறந்த பிறவிகளெடுத்து அநேக தீமைகளால் வருந்தி, தனது உயிர்க்குயிராகிய மனையாட்டியை யிழந்து வருந்தக்கடவனென்னச் சாபமிட்டனர். எ - று.

உரைத்த சாபமுற் றுடற்றலும் புணரியோ டெழுப்பி
யிரைத்த பாற்கடற் பள்ளியோன் காஞ்சிபுக் கிருந்து
திரைக்கொ ழும்புனற் சென்னிதா ளருச்சனை செய்தா
னுரைத்த வெள்ளிடை யெம்பிரா னவற்கெதிர் நடந்தான்.

(இ - ள்.) பிருகுமுனிவரிட்ட சாபம் திருமாலையடைந்துவருத்தவும், கடன் முழக்கையும் பிற்படச்செய்து சத்திக்கின்ற பாற்கடலிற் சயனிப்பவராகிய திருமால், காஞ்சிநகரையெய்தியிருந்து, அலைகளையுடைய விசேடமான கங்காசலத்தையணிந்த சடையையுடைய சிவபெருமான் திருவடிகளைப் பூசித்தனர்,

நரையையொத்த வெள்ளிய இடபவாகனத்தையுடைய எமது சிவபெருமான் அவ்விஷ்ணுவுக்கு எதிரே தரிசனந்தந்தனர். எ - று. (௧௧௨)

வணங்கு சென்னிய னழுதிழி கண்ணினன் வருந்தி
யுணங்கு சிந்தையன் றொழுதன னிற்றலு மொருபா
லணங்கி ருந்திடியோன் வேண்டிய வெனக்கொலென் றருள
மணந்த மாதவன சாபமுற றிடுதுயர் வகுத்தான்.

(இ - ள்) வணங்குகின்ற சிரசினையுடையவராயும், வருந்துவதால் கசிந்துகொண்டிருக்கும் நீரையுடைய கண்ணினராயும், திகைத்துவாடும் மனமுடையவராயும் பணிந்து நிற்கும்போது, உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமான உனக்கு வேண்டியது யாதெனத் திருவாய்மலர்ந்தருளவும், பெருந் தவமுடைய பிருகு முனிவரிட்ட சாபத்தால விளைந்த துயரத்தை விண்ணப்பித்தனர். எ - று. (௧௧௩)

பின்னும வேண்டிய யாவையு முறைமுறை பேசக்
கன்னல விலலிசெற றொங்கிய தழனுதற கண்ணன்
மின்னை லங்கொளித திகிரியா னருச்சனை விருமபிச
சொன்னன யாவையு மளிததனன றிருவருள சுரந்து.

(இ - ள்.) மேலும தனக்கு வேண்டுவனவற்றையெல்லாம் வரிசையாகச் சொல்ல, கருமபுவில்லையுடைய மனமதனைத்தகித்துச் சிறந்த தீமயமான நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான, மின்னலை வீசுவதுபோலப் பிரகாசிக்கும் சக்கராயுதமேந்திய திருமாலின வழிபாட்டை மகிழ்ந்து திருவருள சுரந்தவராய, அத்திருமால வேண்டிய வரங்களையெல்லாம் தந்தருளினர். எ - று. (௧௧௪)

அன்று மாயவற கருளவர மளிததபின் பிருகு
கன்று வெஞ்சினச சாபததாற கடனெடும புவியி
னின்று பததவ தாரமு நிகழுமா னினக்கே
யென்று ரைததனன பின்னரு மெமபிரா னிசைக்கும்.

(இ - ள்.) அப்போது திருமாலுக்குத் திருவருளால் வரங்களையெல்லாங் கொடுத்த பிறகு, பிருகு முனிவர கொல்லத்தக்க கடுங்கோபத்தோடு சொல்லிய சாபமொழியால, உனக்குக் கடலசூழ்ந்த நெடிய வுலகிலே நிலைத்திருக்கத்தக்க பத்துப் பிறவிகளுண்டாகும் எனத் திருவாய்மலர்ந்து மேலும எமது சிவபெருமான் கட்டளையிடுகின்றார். எ - று. (௧௧௫)

ஈதி னோரவ தாரததி னின்னுயிர்க் குயிரா
மாது நீததற வருந்துதி வருந்திய பின்னாத்
தீது தீர்நதவட் சேருதி யெனறன னெம்மான்
போதி னுன்முகற பயந்தவன் பணிந்தெதிர புகலும்.

(இ - ள்.) இப்பத்துப் பிறப்புகளில் ஒன்றில், உனது இனிய உயிர்க்குயிராயிருக்கும் மனைவியை யிழந்தவனுய வருந்தக்கடவை. அப்படி வருந்தியபின்னர், வருத்தநீங்கி அம்மனைவியைச் சேரக்கடவாயென்று கட்டளையிட்டார். அப்போது தாமரை மலர்ப்பீடத்தையுடைய பிரமனைப்பெற்ற திருமால் எமது பெருமானை நேரில் வணங்கி விண்ணப்பிக்கின்றார். எ - று. (௧௧௬)

எடுத்த பத்தவ தாரத்தி னெழுமதச் செருக்கா
லடுத்த பாவநீத் தருடர வேண்டுமென் றிரப்பக்
கடுக்க ரந்துறை மணிமிடற் றெம்பிரான் கருதிக்
கொடுத்த கன்றெழுந் தருளினன் கயிலையங் குவட்டில்.

(இ - ள்.) அப்படி யானெடுக்கும் பத்துப் பிறப்புக்களிலும் உண்டாகின்ற ஆணவமலத்தாலாகிய கர்வத்தால் உண்டாகும் பாவங்களை யகற்றித் திருவருள புரியவேண்டுமெனப்பிரார்த்திக்க, ஆலகாலவிடம்மறைந்துள்ள நீலகண்டராகிய எமது சிவபெருமான் அதனைத் திருவுளங்கொண்டருளி அப்படியே வரமளித்து திருக்கைலாயகிரிக்கு எழுந்தருளினார். எ - று. (௧௭)

சிவபூசை மான்மியச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௩ - க்குத் திருவிருத்தம் ௨௬௧௧.

பதினான்காவது

# மச்சாவதாரச் சருக்கம்.

காலமீண்டிடை கழிந்தன சிலவது காலத்
தால மோருரு வெடுத்தென வசுரரிற் றோன்றிக்
கோல வாளெயிற் றடுசினக் கோமகன் கொழுந்தீப்
பால லோசனற் குறித்துநின் றருந்தவம் பயின்றான்.

(இ - ள்.) இப்படிச்சிலகாலம் இடையே கழிந்தன. அப்பொழுது, ஆலகாலம் ஒருவடிவெடுத்தாற்போல, அழகுற்று ஒளிவீசும் பற்களையும் கொல்லுந் தக்ககோபத்தையுமுடையவனாகிய சோமுகனென்னும் ஒருதலைவன் அசுரகுலத் திலுதித்து, கொழுந்துவிட்டெரியும் அக்கினியாகிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைத் தியானஞ்செய்து கொண்டிருந்து அருந்தவஞ்செய்தனன். (௧

தேவர் யாரையு நோக்கினி னருந்தவந் திருத்தி
யாவ வேண்டுவ வெறுழ்வலித் திறனொடு மெதிர்ந்தான்
பாவ மோருருத் திரண்டென வுருப்பினன் பகரின்
மேவு தென்றிசை நமற்குமோர் நமனெனும் வெய்யோன்.

(இ - ள்) தேவர்களெல்லாரையு நோக்கி அருந்தவஞ்செய்து, மிக்கபராக் கிரமத்தன்மைக்கு வேண்டுவனவற்றை யெல்லாம் பெற்றுக்கொண்டு புறப்பட்டான். பாவமேயோருருவெடுத்துத்திரண்டாற்போன்ற அவயவங்களுடையவன். சொல்வோமானால் தென்றிசைத்தலைவனாகிய இயமனுக்கும் இயமனென்று சொல்லத்தகுங்கொடியோன். எ - று. (௨)

செருவி னெற்றுவா ரின்மையாற் றினவுறுந் திரடோ
ளொருவன் மேருவை யிடுக்குறு மிடுக்கின னுவரி
யிருநி லத்தினும வர்னவ ருலகினு மிவைக்கீழ்
வருநி லத்தினு மெதிர்க்குந ரில்லெனா மதித்தான்.

(இ - ள்.) போரில் தன்னை யெதிர்ப்போரில்லாமையால் தினவெடுக்குந் திரண்டதோளையுடைய ஒப்பற்ற சோமுகன் மேருமலையையும் கக்கத்திலிடுக்கிக் கொள்ளும் மிடுக்குடையவன். கடல்சூழ்ந்த பெரியபூமியிலும் தேவருலகத்திலும் இவ்விரண்டிற்குங் கீழுள்ளபாதலலோகத்திலும் தன்னையெதிர்ப்போரில்லையென்று தீர்மானித்தான். எ - று. (௩)

ஒற்றை நாளநாட் டாமரை யவற்கெதி ருற்றான்
மற்றை யாங்கவன் வெருவரா மயங்கின னதுகண்
டிற்றி தோவிவன் றிறமென விரங்கின னகந்தான்
பற்றி நான்முக னன்மறைக் குலமெலாம் பறித்தான்.

(இ - ள்.) ஒற்றை நாளத்தையுடைய புதியதாமரை மலர்ப்பீடத்திலுள்ள பிரமனுக்கு நேரேபோனான். அப்பொழுது பிரமன்பயமெய்தி மயங்கினான். அப்படிமயங்குதல் கண்டு இவன் வல்லபம் இவ்வளவு தானோவென்றிகழ்ந்து பகைத்தவனாய், அப்பிரமனைப்பற்றிக்கொண்டு நான்குவேதங்களின்தொகுதிகளையெல்லாம் பறித்துக்கொண்டான். எ - று. (௪)

பறித்த நான்மறை கொண்டெழுந் திருங்கடல் பாய்ந்தான்
வெறித்தி ருந்தன னன் சதுர்முகத் தந்தணன் வெருவி
நறைப்ப சுந்துழாய்த் திருமக ணாயகற் குறுகிக்
குறித்து ரைத்தன னங்கவ னடுசினங் கொண்டான்.

(இ - ள்.) பறித்துக்கொண்ட நான்குவேதங்களையு மெடுத்துக்கொண்டு பெரிய கடலிற்பாய்ந்தான். சதுர்முகனாகிய பிரமன் பயமெய்தி மயங்கியிருந்தான். அதன்பின் மணமவீசும் பசிய துளசிமாலை தரித்ததிருமகள்கொழுநராகிய விஷ்ணுமூர்த்தியை யடைந்து நடந்தவிஷயத்தைக் குறித்துச் சொன்னான். அது திருமால் கோபித்தனர். எ - று. (௫)

மான யோசனை யளவொழி மெய்யுரு வாய்ந்த
மீன மாயின னெடுங்கடற் பரவையின் வீழ்ந்து
கான வெண்டிரைக் கடுங்கட லளறெழக் கலக்கிப்
போன வாளெயிற் றசுரனைத் தடவுறும் புகுந்து.

(இ - ள்.) மதிக்கத்தக்கயோசனையென்னும் அளவுகடந்த உடலோடுகூடிய மச்சவடிவெய்தினர். நெடிய கடலிற்றிடீரென்று பாய்ந்து, சத்திக்கின்றவெள்ளிய அலைகளையுடைய கருங்கடலைச் சேறுபடும்படி கலக்கி, அக்கடலிற்பாய்ந்து போன அவ்வசுரனைக்கண்டுபிடிக்கும்படி உள்ளே மூழ்கி. எ - று. (௬)

கவர்த்த வாலெடுத் தடித்துறக் கருங்கடல் சிதறி
யுவர்த்த துள்ளிவிண் ணுலகுற நிவந்தன வொளிகான்
றிவர்தெ ழுங்கதிர்க் கடவுளகண் கரித்தன வண்டச
சுவர்த்த லந்தொறு மீனொடுந் தெறித்தன துள்ளி.

(இ - ள்.) பிளவுபட்டவாலைத் தூக்கியடித்தவுடன், கருநிறமெய்திய கடனீரானதுசிதறி, உவர்ப்புள்ள அந்நீர்த்துளிகள் தெய்வலோகவரையிலும்மேலோங்கியெழுந்தன. ஒளியைப்பரப்பிக்கொண்டு ஒற்றைச் சக்கரமுடைய தேரில் ஆரோகணித்து வருகின்ற சூரியனுடைய விழிகளுங்கரித்தன. அண்டச்சுவர்களிலெல்லாம் அத்துளிகள் மீன்களோடுந்தெறித்தன. எ - று. (௭)

செகுத்த வெஞ்சினத் திமிங்கிலந் திமிங்கில கிலங்கள்
வகுத்த வெண்மருப பெறுழ்வசித தடுஞுசின மகரம
பகுத்த வாய்மடுத் திடுநதிரைப பரவைநீர பாய்நது
தொகுதத மாநிலந தவழ்தரத திசைதொறுந துருவும்.

(இ - ள்.) பலவுயிர்களைக்கொன்ற கடுநகோபமுடைய திமிங்கிலங்களும் திமிஙகிலகிலஙகளும, பிரிவுபட்டுள்ள வெணணிறநதஙகிய பற்களோடு மிகுவல்லபமெய்திககொலலததகக கோபநதஙகியசுறாமீனகளும, வேறுசெயயப்பட்டுக குடிக்கின்ற அககடலின் அலைகளாகிய சலததிற் பாயநது அவைவீழ்கின்றகரையாகிய நிலததில தவழ்நதுசெலலுமபடி திசைகளெஙகுநதேடும். எ - று. (௮)

சுருதி கொண்டொளித தோஙகிய நிருதனைத தொடர்நது
குருதி வாயமடுத துயிாசெகுத தருமறைக குலங்கொண
டொருவி நீஙகலு நானமுகன பணிநதெதி ருறறான்
வெருவி யேநதினன கொடுததா ரணஙகளை மீனம.

(இ - ள்.) வேதததைககைககொணடு கடலிலொளிநதுளள அவ்வசுரனைப் பின்றொடாநது அவனுதிரததைபபருகியுயிரொழிதது, அரியவேதஙகளைப்பற்றி நீஙகிச்செனறவுடனே, பிரமன்பணிநது எதிரே வநதனன். அப்போது மச்சாவதாரஙகொணட திருமால வேதஙகளைததநதனா. பிரமன பயததோடு பெற்றுககொணடான. எ - று. (௯)

வெள்ளை வாளெயிற றரக்கன தாக்கையின் வீங்கு
கொளளை வெமபுனற குருதியிற சிவநதது கொழிததுத
துளளி ருஙகயன் மாநதின செருககின தொடுநீாப
பளள வெமபுன லுருககிய செமபெனப பட்ட.

(இ - ள்) வெணணிறமுங கூாமையுமவாயநத பற்களையுடைய அவ்வசுரனது உடலிற்பெருகிய மிகக உதிரமாகிய நீரினலைமிகவுநதுளளிககொணடிருநத பெரிய கயலமீனகள செநநிறமெயதின அவவுதிரததைப் பானஞ்செயததால் காவமெயதின. ஆழமாகத தோணடபபட்டுளள அககடல நீா முழுவதும் உருக்கிய செமபுபோலாயின. எ - று. (௧0)

கடவுண் மேருவொத் திருங்கடல் கலக்கிய மீண
மிடைப டுங்கரை யிடிபடுத தேழ்கடற பரபபு
முடைப டத்திரிந தோாகட லாககிய துவரி
புடைப டப்பரந துலகெலாந தவழ்நததப் பொருநீர்.

(இ - ள்.) தெய்வீகநதங்கிய மேருமலையைப்போலப் பெருங்கடலைக் கலக்கிய அம்மச்சமானது, இடையிலுள்ள கரைகளை யெல்லாமிடித்து சத்தசமுத்

திரங்களின் பரப்பும் உடைபடும்படி சஞ்சரித்து ஒரே சமுத்திரமாக்கிவிட்டது. அவ்வுதிரவெள்ளமானது சத்தசமுத்திரங்களின் சலத்தோடு கலந்து உலக முழுவதும் பரவிற்று. எ - று. (கக)

குடக்கு மாமுக நோக்குறக் குணதிசைக் கொடுவால்
கிடக்க நிற்புழி யிருகரை யணவுறக் கிடக்கும்
வடக்கு நோக்குறி றென்றிசை வாரொடுக் கிடக்கு
மிடப்ப டுங்கடற் பெருமபுனன் முதுகுதோய்ந் திலவால்.

(இ - ள்.) மேற்கரையில் தன்முகம்பார்த்துக் கொண்டிருக்க, கிழக்குக்கரையில் நெடிய வாலானது பொருந்தும்படி அம்மச்சவடிவங்கிடக்கும்போது, இருகரைகளுக்குஞ் சரியாயிருக்கும். வடகரையாயிருந்து பார்த்தால் அதனவால் தென்கரையிலிருக்கும் விசாலித்துள்ள அக்கடலில் நிரம்பியமிக்க நீரினால் அம்மச்சத்தின் முதுகும் நனைந்ததில்லை. எ - று. (கஉ)

மகர மேமுத லாகிய யாவையும் வாய்ப்பெய்
தகனெ டுங்கடற் றிரிதரு மமலையி னஞ்சிப
புகலி டந்தெரிந் தடைந்தனா வானவா புனிதச
சிகர மாலவரைக் கயிலையிற் குழுவொடுஞ் சென்றார்.

(இ - ள்) சுறாமுதலிய பெருமச்சங்களையெல்லாம் வாயிற்பெய்துகொண்டு, அகலமாய் நெடுகிய கடலிற்றிரிந்து கொண்டிருக்கும் கோஷத்தாற் பயந்து, தேவர்கள் தாங்கள் சரணமடைதற்குரிய இடத்தைத் தெரிந்து சேர்ந்தவர்களாய், புனிதமான உச்சியையுடைய சிறந்த கைலாயகிரிக்குத் தங்கள் தொகுதியோடு போனார்கள். எ - று. (கங)

செழுந்து ழாயணி யலங்கலோன மீனமாய்த் திரையோட்
டெழுங்க ருங்கட லேழையு முடைபடுத் தியங்கி
யொழுங்கு வானெயிற் றிடங்கரே முதலின வொருங்கே
விழுங்க மன்பதைப பரப்பெலாஞ் சுழலவன் வெருவி.

(இ - ள்) செழுமை தங்கிய துளசிமாலை தரித்த திருமால் மச்சவடிவெடுத்து அலைகளோடுகூடிய பெரிய சத்தசமுத்திரங்களையும் உடைத்துத் திரிந்து, வரிசையாயுள்ள கூர்மைவாய்ந்த பற்களபொருந்திய முதலைமுதலியவற்றையும் ஒன்றாய்க்கூட்டி விழுங்க, மக்கட்டொகுதி யெல்லாம பயமெய்திச் சுழலவன வாயின. எ - று. (கச)

ஆரு ழைப்புகு மினியென வுணாகிலே மைய
பாரு மண்டமு மதிர்ந்தன வருணமுறை பார்த்துச
சாரு மிசசெருக் கொழித்திலை யாமெனிற் றமியே
மூருமை வையமும விளிந்தன வெனப்பணிந் துரைத்தார்.

(இ - ள்.) ஐயனே! இனிஅவையெல்லாம் யாவர்பால் அடைக்கலம் புகுமென்பதாக நாங்களுணரோம். பூலோகமும் தேவலோகமும அதிர்ச்சியுற்றன. அநுக்கிரகிக்க வேண்டியமுறைமையைப் பார்த்து, அவ்வாறு வந்த அமச்சத்

தின் கர்வத்தை விலக்காதிருப்பீராகில், அடியேங்களுடைய பதவிகளும் பூமிலோகமும் அழிந்தனவாகுமென்று பணிந்து சொன்னார்கள். எ - று. (௧௩)

ஆரவு லாத்திருக் குழைப்புறத் தவருரை யடைத்துச்
சீரமொ ரைந்துடை யெம்பிரான் றிருவரு ளிரங்கி
யூரவு சாத்தனை வருதியென் றுங்கவற் குரைத்தான்
பாரவ ருந்திறன் மீனவெஞ் செருக்கறப் படுப்ப.

(இ - ள்.) ஐந்து திருமுகங்களையுடைய எமது சிவபெருமான், சர்ப்பகுண்டலமணிந்த தமது திருச்செவியில் அத்தேவர்கள் முறையிட்டவார்த்தையையேற்றருளித் திருவருள்மிகுந்து, வல்லமைதங்கிய வைரவக்கடவுளைவருகவென விளித்து, யாவராலும் புகழ்தற்கரிய வலிய பெரிய அம்மச்சத்தின் காவமகல அழிக்கக்கடவாயென்று அவருக்குக் கட்டளைசெய்தனர். எ - று. (௧௪)

அலைத்த வார்புனற் சென்னியோ னுங்கவை யருளக்
கொலைத்த லைக்கொடுஞ் சூற்படைச் சாத்தனுங் குறுகி
வலைக்கு லத்தவ ருருவுகொண் டலைக்கரை வந்தா
னிலைத்த சிந்தையி னோக்கின னதற்கெதிர் நிமிர்ந்தான்.

(இ - ள்.) அலைகளையுடைய பெருக்கெடுக்குங் கங்கையாற்றை யணிந்த சடையையுடைய சிவபெருமான் அங்ஙனங் கட்டளைதரவும், கொலைத்தொழிலில் முதன்மைபெற்றகொடிய சூலப்படைதாங்கிய வைரவக்கடவுளும் அடைந்து, [பரதவர்] மீன்பிடிப்போர் குலத்தினர்போலவடிவேற்று அக்கடற்கரையையெய்தி, ஒருகருத்தாய் நோக்கி அம்மச்சத்தின் நேரேயோடினர். எ - று.

எடுத்து வீசிய வலைக்கட லேழையு நிரம்பிப்
படுத்தி ழுத்தலும் வலையகப் பட்டது பாரார்
நடுக்க டற்புகு திருவிழி பறித்தன னடந்தான்
கடுத்த வெஞ்செருக் கிழந்தது மீனமாக் கடவுள்.

(இ - ள்) உடனே அவரெடுத்துவீசிய வலையைச் சமுத்திரங்களேழிலும் பாயும்படி விரித்து மீண்டுஞ் சுருக்கியிழுத்தவுடனே, அம்மச்சம் வலையில் அகப்பட்டுக்கொண்டது. நிலவுலகிலுள்ள நடுச்சமுத்திரத்திற் சோர்த்து அம்மச்சத்தின் இருவிழிகளையும் பறித்துக்கொண்டு சென்றார். தெய்வீகமுற்றுச் சிறந்த அம்மச்சமானது கொடுமை தங்கிய விசேஷித்த காவத்தை நீக்கியது. எ - று.

வாங்கு கண்மணி யெம்பிரான் றிருவடி வனசந்
தாங்க வுய்த்தன ன்முகிணகை புரிந்தன னறலைவ
னோங்கு வானவ ருவந்தனர் தொழுதன ருயர்ந்தார்
பாங்கு வீழ்ந்தன ரிறைவனை யடிக்கடி பணிந்தார்.

(இ - ள்) பறித்த அம்மீனின் கண்மணிகளை எமதுசிவபெருமான் பாததாமரைகள் தாங்கும்படி சேர்த்தனர். அப்போது சிவபெருமான் புன்னகைசெய்தனர். மேன்மை தங்கிய தேவர்கள் யாவரும் சந்தோஷித்துப் பெருமானைத் துதிசெய்து சிறந்தவர்களாய், அவர்பக்கலிற் சூழச்சாஷ்டாங்கமாகப் பலமுறை பணிந்தார்கள். எ - று. (௧௭)

பொன்னி னாட்டவர் முனிவரர் பூமிசைப் பொலிந்த
வன்ன வூர்திமற் றியாவரு மரனடி வழுத்தி
யின்ன மாமணி நின்னுருத் தரித்திடி னெந்தாய்
மன்னு மாயவன் காண்டொறுஞ் செருக்கற மயங்கும்.

(இ-ள்.) தேவலோகத்தார் முனிவர் தாமரை மலர்ப்பீடத்திலிருக்கும் அன்னவாகனனாகிய பிரமன் முதலானோரும் சிவபெருமான் பாதங்களைத் துதிசெய்து, எமது தந்தையே! இச்சிறந்த மணியைத் தேவரீர் திருமேனியிலணிந்திருப்பதால், நிலைபேறுயுள்ள திருமால் அதனைக்காணும் போதெல்லாம் கர்வபங்கராய் மயங்கிக் கிடப்பார். எ-று. (௨௦)

எனவு ரைத்தன கேட்டலு மெம்பிரா னுவந்து
தனது மேனியிற் றரித்தனன் விண்ணவர் தணந்தார்
கனைக ருங்கடற் கட்புலம் போக்கிய மீன
நினைம னச்செருக் கிழந்தது கிடந்தது நெடுநாள்.

(இ-ள்) என்று விண்ணப்பித்ததை எமது சிவபெருமான் கேட்டவுடனே, களிப்பெய்தி அவர்விருப்பியபடியே தமது திருமேனியிலணிந்து கொண்டனர். தேவர்கள் சென்றார்கள். சத்திக்கின்ற கரிய கடலில் கண்மணிகளை யிழந்த அம்மச்சமானது தான் கருதிய மனோகர்வமகன்று பலகாலம் அப்படியே கண்ணிழந்து கிடந்தது. எ-று. (௨௧)

தன்னை யோர்ந்திடு செருக்கினாற் றழுவிய பாவம்
பின்ன மாவதற் கேதுசெய் குதுமெனப் பிடித்து
முன்ன வற்கெனக் காஞ்சிபுக் கருச்சனை முயலா
மின்னி ருஞ்சடை வேணியோற் பணிந்ததம் மீனம்.

(இ-ள்.) அம்மீனானது தனனிலைமையையுணர்ந்து கர்வத்தாலுண்டாகிய பாவங்கள் நிவாரணமாவதற்காக என்ன செய்வோமென்று கருதி, காஞ்சிமாநகரமெய்தி, பிரகாசிக்கின்ற நீண்ட சடையையுடைய முதற்கடவுளாகிய சிவபெருமானுக்கென்று பூசிக்க முயற்சிசெய்து வணங்கியது. எ-று. (௨௨)

ஏறு யர்த்தரு ளெம்பிரான் றிருவரு ளிரங்கிச்
சீறு மால்விடைக் காட்சிதந் தருளினன் றிருமான்
மாறி லன்பொடும் பணிந்தடி வரன்முறை வழுத்தி
யீறி லெந்தைநீ யென்பிழை பொறுத்தியென் றிரப்ப.

(இ-ள்.) இடபக்கொடியையுயர்த்தி யருளிய எமது சிவபெருமான் திருவருண்மிகுந்து, கோபிக்கின்ற பெரிய இடபவாகனத்திலாரோகணித்துத் தரிசனந்தந்தருளினர், அப்போது மச்சவடிவாயிருந்த திருமால் மாறுபடுதலில்லாத உண்மை யன்புடன் பணிந்து அவர் பாதங்களை முறைப்படி துதிசெய்து, அழிவற்ற எமது தந்தையாகிய தேவரீர் அடியேன் அறியாமையாற் புரிந்த குற்றத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க. எ-று. (௨௩)

நினக்கு வேண் டிய வென்னென முக்கணு னிகழ்த்த
மனக்கொ டுந்திறன் மயக்கநீத் தகக்கயல் வடிவந்
தனைக்கு றித்தெனை வணங்கினோ ரிருங்கதி தழுவப்
புனற்கொ டுஞ்சடை யெம்பிரா னருளெனப் புகன்றான்.

(இ - ள்.) உனக்கு வேண்டிய வரங்கள் யாவையென்று திரிநேத்திரங்களை யுடைய சிவபெருமான் வினவவும், அடியேன் மனதிலுதித்த கோரே வல்லமை தங்கிய மயக்கமகன்று, இம்மச்சாவதாரத்தைககுறித்து அடியேனை வணங்கு கினறவர்களும் பெரிய பதவியை யெய்தும் வகையாக, கஙகையையணிநது விளஙக சடையையுடைய எமது பெருமானே! திருவருள்புரிய வேணடுமெனப் பிராாததிததனா. எ - று. (௨௪)

கேட்ட நல்வர மநநிலே கிடைத்துற வழங்கி
வாட்ட டங்கணுண் மருங்கினேன் கயிலேபோய் மறைந்தா
னேடடி ருநதுழா யலஙகலோ னவவுரு விகநது
நீடடி ருஞசிறைக கலுழன்மீப பொலிநதன னின்றான்.

(இ - ள்.) கேட்டுககொணட நல்லவரஙகளை அவாபெறுமபடி யப்பொழுதே யநுககிரகிதது, வாளபோன்று பரநத விழிகளையுடைய உமாதேவிபாகரா கிய சிவபெருமான அநதாததானமாயத திருககைலாயததிற கெழுநதருளினா. பெரிய இதழகளையுடைய துளசிமாலேதரிதத திருமால அமமச்சவடிவகன்று நீணடபெருததிருககும் சிறகுகளையுடைய கருடவாகன மீது விளஙகியிருநதனா.

தடஙகொ டுஞசினைக் கறபக நாடருந தணநதார்
திடஙகொ டாமரை நானமுகச செலவனு மெதிர
மடநதை தாமரை மாளிகை மாதுலா மாாபன
படஙகொள பாபபணைப பளளியோன றனனுழைப் படாநதான்.

(இ - ள.) விசாலிததுவளாநத கிளைகளையுடைய கற்பகததருவையுடைய தேவலோகததிலுளள தேவாகளும செனறாாகள. திடம் பெறறதாமரைமலாப் பீடததையுடைய பிரமனும எதிாகொளளுமபடி தமது மனைவியாகிய தாமரைக கோயிலேயுடைய திருமகள பொருநதியதிருமாாபையுடையவரும, படம பொருநதிய சேஷசயனததில அறிதுயில கொளபவருமாகிய திருமால தமதுவைகுநத பதவிககெழுநதருளினா. எ - று. (௨௬)

மசசாவதாரச சருக்க முறறிறறு.



ஆ சருககம சச-ககுத திருவிருததம ௨௬௩௭.



பதினைந்தாவது

# கூர்மாவதாரச் சருக்கம்.



### கலிநிலைத்துறை.

கற்ப கத்தரு நாட்டவர் யாவருங் கவர்த்த
மற்ப குத்ததோள் வாளெயிற் றசுரரு மருவி
நற்ப டப்பல மொழிந்தனர் நட்டன ராகி
முற்ப டச்சதக் கிருதுவுக் கினையன மொழிவார்.

(இ - ள்.) கற்பகவிருக்ஷமுள்ள தேவலோகத்தினராகிய தேவர்களெல்லாரும், பிரிவுபட்டு வலிமை தங்கியதோள்களும் கூர்மையாகிய பற்களுமுடைய அசுரர்களும் ஒன்றுசேர்ந்து, நன்மையான வார்த்தைகள் பலவாகச்சொல்லிச் சிநேகித்தவர்களாய், முன்னொருகாலத்தில் இந்திரனுடன் இப்படிச் சொன்னார்கள். எ - று. (க)

நாவ ளந்துற நாட்பட நரைதிரை மூப்புச்
சாவ டைந்துருத் தன்மையி னிற்பன தழுவாப்
பாவ வெண்டிரைப் பால்படு படுகடல் கடைந்து
மேவு தெள்ளமு தெடுத்தியா மயின்றுற வேண்டும்.

(இ - ள்.) நாவினாலளவிட்டுச் சொல்லமுடியாத அநேக நாட்களாக, நரை திரை மூப்புமரணமென்னும் இவ்வகைகளெய்தாதிருக்க, தழுவமுடியாததாயப் பரவியுள்ள வெண்ணிறந்தங்கிய அலைகளோடுகூடிய பாலநிரம்பி ஆழமாகிய திருப்பாற்கடலைக் கடைந்து அதிலுண்டாகும் தெளிந்த அமுதையெடுத்து நாமெல்லோரும் புசிக்கவேண்டும். எ - று. (உ)

என்றொ ருப்பட வொருமொழி கொண்டியைந் தெழுந்தார்
சென்று மந்தரந் திருப்பினர் பிடுங்கினர் திரும்பி
யன்று பாற்கட லகவைநட் டரவிடை பிணித்து
நின்று வாங்கலுஞ் சாய்ந்தது நெடுமுடிச் சிகரம்.

(இ - ள்.) என்று ஒற்றுமைப்படும்படி ஒரேவார்த்தையாகப் பேசிக்கொண்டு சம்மதித்துச்சென்று, மந்தரமலையைத் திருகிப்பிடுங்கி யெடுத்துத் திரும்பி அப்பொழுதே பாற்கடலினிடையில் நட்டு, வாசுகியென்னும் சர்ப்பத்தை மத்தியிற்சுற்றி நின்றுகொண்டு கடைந்தபொழுது, நீண்ட சிகரங்களையுடைய அம்மலை சாய்ந்தது. எ - று. (௩)

அடித்த லம்பொரு தக்கிரி யகனிலப் பரப்பை
யிடித்து நேடரும் பாதலத் திருந்தது நோக்கி
யெடுத்த தங்களா லாவதொன் றில்லென விகழ்ந்தார்
தொடுத்த பைந்துழாய் நெடுமுடி யவனுழைத் தொக்கார்

(இ - ள்.) அம்மலையைப் பூமியானது தாங்காமையால பூமியைப்பிளந்து கொண்டு தேடுதற்கரிய பாதலத்திலிருந்ததைத் தேவாகள கண்டு, அதனை யெடுத்துக்கொண்டுவந்த தங்களால் இனிச்செயவதொன்று மில்லையென்று தமமைததாமே நிந்தித்துககொண்டு பசிய துளசிமாலையணிந்த நீணட கிரீட முடைய திருமாலினிடஞ்சென்று கூடினா. எ - று. (௪)

உலகெ லாமபதத் தளவையிட் டுண்டுமிழ்ந் தளித்தா
யலகில பல்லுயிரத் தொகைதொறு மமாந்தனை யைய
பலவு யிரககுமவ் வினைபபடி நுகாவன பகிாந்தாய்
திலமு நெயயுமொத திருந்தனை நினனையாா தெரிபபார்.

(இ - ள்.) ஐயனே! உலக முழுவதையும் திருவடிகளாலளந்து உணடு உமிழ்ந்து காத்தீா! எணணிறந்த பல சீவராசிகடோறும வீறறிருக்கின்றீா. பல சீவாகளுககும அதனதன வினைபபடி யநுபவிககவேணடிய போகஙகளை வகுததளிததீா எளளும எணணெயுமபோனறிருந்தீா. ஆதலால் தேவரீரை யாவருணாவாாகள. எ - று. (௫)

கண்ணிற காணபன யாவையுங கட்புலன் கதுவா
தெணணிற காணபன யாவுநீ யாயினை யெநதாய
மணணிற காணபன வானிடைக காண்பன மயஙக
வுணணிற பாயுனை யாவரே யளவையிட டுரைபபாா.

(இ - ள்.) கணகளாற பாாககபபடுவனவெலலாம கட்புலனுககு விளககமினறி, மனததாறகணிககற் பாலனவாகிய யாவும, எமது தநதையே! தேவரீராகவே யிருக்கின்றீா. உலகிறகாணபபடுவனவும ஆகாயத்திறகாணபபடுவனவும மயககெயதுமபடி அவறறுள விரவியிருபபீா. தேவரீரை யெவாதாம அளவிட டுசொலவாாகளா? எ - று. (௬)

ஆட கபபொருப பெடுததுள வளவொழி யணடங
கோட கபபடு முந்தியந் தாமரை தோனறப
பாடி நநகுணா நானமுகச செலவனைப பயநதா
யூடி வைககெலா முடபடு கருவியொத துயாநதாய்.

(இ - ள்) பொனமலையாகிய மேருவை நடுவாகவுடைய அணடகோடிகளையும, இதழகளையுடைய நாபிககமலததில தோனறுமபடி பெருமைதஙகிய வேதஙகளையுணாநத பிரமதேவனையும தநதருளினீா. இவையெலலாவறறிறகும உளளீடாயிருநது நடததுகினற சூததிரமபோனறும மேனமைபொருநதினீா.

இடுகக ணெனபதொன றெமமுழை யெயதுநா ளெநதா
யடுததொ ழிததுநின றாருளளிககுதி யனறே
தொடுதத வானறுணை நினனல திலையெனத தொழுதாா்
கடுபப டமபடு பாயபனை யெமபிரான கழறும.

(இ - ள்.) எமது தநதையே! துனபமெனபதொனறு எஙகளிடததடைாத காலததில, தேவரீா எழுநதருளி அதனைததொலைததுக காடசிதநது திருவருள புரியீரலலவா? ஆதலால எஙகள சமபநதமான சிறநத துணை தேவரீரையனறி இலலையென வணஙகினாாகள. அபபொழுது விடநதஙகிய படததையுடைய சேஷசயனராகிய திருமால சொலலுகினறாா. எ - று. (௮)

விரும்பி வேண்டுவ தென்னைகொல் விண்ணகங் கலக்கி
வருந்த வைத்தவ ருளரோகொலோ வழங்குதி ரெனருன
முருந்த வாணகை முகிண்முலைத் திருமகட் கிறைவர்
பரிந்து ரைப்பதோர் காரண முளதெனப் பணிந்தார்.

(இ - ள்.) நீங்கள் விரும்பிக் கேட்பது யாதோ? தேவலோகத்தையழித்து உங்களைவெல்லாம் வருந்தச் செய்தவர்களுளரோ? சொல்லுங்களெனக் கட்டளையிட்டார். [முருந்து] மயிலிறகி னடியைப்போலும் ஒளிமிகுந்த பற்களையும் தாமரைமொட்டைப்போலுந் தனங்களையுமுடைய திருமகள் தலைவரே! வருந்திச் சொல்லத்தக்க ஒருகாரணமுளதென்றுதிருமபவும் பணிந்தார்கள். எ - று. (௬)

மொழிதி ரென்றலுந் தொழுதனர் நரைதிரை மூப்பிற
கழியு மாக்கைபெற் றிருந்தன மத்துயர் கடப்பச்
சுழித்த டந்திரைப் பாற்கட லமுதெழச் சுழல
வெழுத் டங்கிரி நிறுத்திவா சுகிபிணித் திழுத்தேம்.

(இ - ள்) சொல்லுகவெனத் திருமால் கூறவும், தேவர்கள் வணங்கி நரை திரை மூப்பினாற்றுயரமெய்திக் கழிந்துபோகுந் தேகமுடையவர்களாக விருக்கின்றோம். அத்துன்பங்களை யகற்ற, சுழித்தெழுகின்ற விசாலித்த அலைகளையுடைய திருப்பாற்கடலில் அமுதமுண்டாகும்படி கடைய, உயர்ந்த பருத்த மந்தரகிரியைத் தூணாக நட்டு வாசுகியைத்தாம்பாகப்பூட்டிக் கடைந்தோம்.

அந்த மந்தர நெடுநில மிடித்துவீழ்ந் தாழ்ந்த
தெந்தை நின்னல தெமக்கென விசைவதொன் றுண்டோ
வந்து நோக்கியம் மாக்கடல் கடைந்தமு தெடுத்துத்
தந்தெ மக்குயிர் தருதியென் றிரந்தடி தாழ்ந்தார்.

(இ - ள்.) அந்த மந்தரமலை நெடிய பூமியைப்பிளந்துகொண்டு கீழே விழுந்து பாதலத்தி லழுந்தியது. எமது தந்தையே! தேவரீரையன்றி எங்களுக் கென்று இசைந்த செயலொன்றுள்ளதோ? தேவரீர் எழுந்தருளிவந்து பார்த்து, அப்பெரிய திருப்பாற்கடலைக்கடைந்து அமுதமெடுத்து எங்கட்குக் கொடுத்து எங்களுயிர் தருகவென்று வேண்டிப் பாதங்களில் வணங்கினார்கள்.

ஈரப் பைந்துழா யெம்பிரான் றிருவரு ளிரங்கிப்
பாரத் திண்சிறைப் புட்பிடர் சேவடி பதித்தான்
வேரிக் கற்பக நாட்டரு மசுரரும் வியந்தார்
மூரித் தெண்டிரைப் பாற்கடல் குறுகினர் முன்னி.

(இ - ள்.) குளிர்ந்த பசிய துளசிமாலை தரித்த திருமால் திருவருள் சுரந்து பருத்து வலிபம்பெற்ற சிறகுகளவாய்ந்த கருடனுடைய பிடரியின்மீது தமது திருவடிகளைப்பதித்தனர். மணந்தங்கிய கற்பக விருக்ஷமுள்ள தேவலோகத்தாரும் அசுரர்களும் ஆச்சரியப்பட்டார்கள். அமுதம்புசிக்கக்கருதி, பெருமை தங்கிய தெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலையடைந்தார்கள். எ - று.

கண்டு வெஞ்சிறைக் கலுழனீத் திழிந்தனன் கண்ணன்
நீண்டி றற்பெருங் கமடமாய்த் திருவுருச் சிறந்தான்
கொண்ட மேற்புற மிலக்கியோ சனையிடங் கொண்டு
மண்டு பாற்கடல் படிந்துவீழ் மந்தர மெழுப்பி,

மேவு வேற்படை கைக்கொடு மேயினன்
றூவ ருந்திறற சண்முகப் பிள்ளையே.

(இ - ள்.) அழிவற்ற வல்லமைதங்கிய சண்முகக்கடவுள், தேவர்களெல்லாருங் கைகுவித்து வணங்கிவரும்படி, தாண்டி யுலாவும் மயில் வாகனத்தைச் செலுத்திக்கொண்டு பரப்பிய காந்தியையுடைய வேற்படையைத் திருக்கரத்திற் றாங்கிக்கொண் டெழுந்தருளினார். எ - று. (௨௩)

ஊதி ரைக்கட லேழுமு ழக்கியே
போதி ரைத்தண பெரும்புறப பள்ளவாய்
நீரு ழக்கி நிமிர்ந்தெழு மேலவையிக
காம யிறபரிச சேவகன கண்டனன்.

(இ- ள.) ஊர்கின்ற அலைகளையுடைய சமுத்திரங்க ளேழையுங கலக்கிப் பெரிய அலைகளுடையதாய்க் குளிர்ந்திருக்கும் பெரும்புறக் கடலிலுள்ள சலத்தையுங் கலக்கி அவ்வராகம் ஓங்கிப் புறப்படுஞ் சமயத்தில், பகுநிறந்தங்கிய மயில வாகனத்தையுடைய குமாரக்கடவுள நோக்கியருளினார். எ - று. (௨௪)

கண்ட சேவகற கணடது காய்சினங்
கொணடு வெணப லலகடிக கொணடதாற்
றிண்டி றறபிடாக கூநதல சிலிர்த்தழன
மணடு மாமுகங கீழபபட வந்ததால.

(இ - ள) அங்ஙனம நோக்கிய ஷணமுகக்கடவுளை அவ்வராகங் கண்டு கடுஞ்சினமெய்தி, தன வெள்ளியபறகளாகிய ஆயுதங்களை அடித்துக்கொண்டது மிகக வலலபமுடைய தன பிடரிமயிரைச சிலிர்த்துக்கொணடு அக்கினிச்சுவாலை யதிகரித்த முகமானது நிலத்தில உராயும்படி ஓடிவந்தது எ - று.

வந்த மெய்விசைக காறறெழ வாரிசூழ
தந்த நேமிச சயிலமு ருணடதாற
செந்த னிககதிர னெஞசந திடுககுறப
பிந்தி னுனிருள போரதத பெருநிலம்;

(இ - ள.) விரைந்துவந்த வேகத்தினால் அதனுடலிற றோன்றிய காற்றுப் புறப்பட்டவுடன, பெரும்புறக கடல சூழ்ந்த சக்கரவாளகிரியம உருணடது. சிவந்த கிரணங்களையுடைய ஒப்பற்ற சூரியனும மனந்துணுக்கெய்திப் பிறபட்டுப் போயினன. ஆதலால உலகமுழுவதும இருணமூடியது எ - று. (௨௬)

வெற்றி வேற்படை விணணவ னிங்கிவை
முற்று நோக்கி முகிணகை பூத்தனன
கொறற வேறபடை கொண்டதன றிண்டிற
னெறறி குத்தி னிலத்தொட முககினன.

(இ - ள.) வெற்றிதங்கிய வேறபடைதாங்கிய குமாரக்கடவுளும் இவற்றையெல்லாம் நோக்கியருளிப் புன்னகை செய்தருளினார். அதன்பின்னர், தமது வெற்றிதங்கிய வேலாயுதத்தைக்கொணடு மிகக வலிவுள்ள அவ்வராகத்தின் நெற்றியிற் குத்தி நிலமிசை யழுத்தினார், எ - று. (௨௭)

ஆடல் வேல்கொண் டமுக்கலுஞ் சோரிநீர்
பாட கனறது பாதலஞ் சென்றதா
லூடு புக்கிழிந் தன்னத ணெண்பிறைக்
கோடு பற்றிப் பிடுங்கினன் கோதிலான்.

(இ - ள்.) வெற்றிவேலினால் முருகப்பெருமான் குத்தி யழுத்தினமாத்திரமே, அப்பன்றி உதிரப்பெருக்கோடு அங்கிருந்தகன்றுபாதலலோகத்திற்போய் விழுந்தது. குற்றமற்ற குமாரக்கடவுள் அவ்வராகத்தோடு ஊடுருவி யிறங்கி, அதன் ஒளிமிகுந்த பிறைச் சந்திரன்போன்ற கொம்பைத் தமது திருக்கரத்தாற் பற்றிப் பறித்தனர் எ - று. (உஅ)

வெய்து போந்தனன் வெண்பிறைக் கோடுகொண்
டெய்தி யீச னிணையடி வைத்தனன்
றையல் பாகனுஞ் சண்முகப் பிள்ளையை
மொய்கொ ளுச்சியை மோந்து தழீஇனன்.

(இ - ள்.) குமாரக்கடவுள் அதிசீக்கிரத்தில் அங்கிருந்தும் புறப்பட்டு, வெண்ணிறந்தங்கிய பிறைச் சந்திரன்போல விளங்குந் திருக்கொம்பையெடுத்துக்கொண்டு, சிவபெருமான் சந்நிதியெய்தி, அதனை அப்பெருமான் உபய பாதங்களில் வைத்தனர். பார்ப்பதிபாகராகிய சிவபெருமானும் சிறப்புற்ற சண்முகப்பெருமான் உச்சியைமோந்து அவரைத் தழுவிக்கொண்டனர். எ - று.

காரி யன்ற களத்திறை வானவன்
வாரி யனபின் மடியிலி ருத்தியப்
பாரி யோடு மினிதுப காந்தனன்
சூரி வேற்கை முருகனி யற்கையே.

(இ - ள்) கருநிறமெய்திய கண்டத்தையுடைய இறைவராகிய சிவபெருமான், குமாரசுவாமியை வாரியெடுத்து மடிமிசை வைத்துக்கொண்டு வல்லமை தங்கிய வேற்படை தாங்கிய அமமுருகப்பெருமான் தன்மைகளையெல்லாம் சிறந்த தமது தேவியாராகிய உமாபிராட்டியாருடன் திருவாய்மலர்ந்தருளினார்.

கற்றை வார்சடைக் கண்ணுத லோனருள்
கொற்ற வேற்கைக் குமரனைக் காண்டொறுந்
தெற்று வெண்டிரை நெள்ளமு தம்பெறப்
பெற்ற தன்மை பிறந்தனர் வானவர்.

(இ - ள்) தொகுதியாய நீண்ட சடையையுடைய சிவபெருமான் தந்தருளிய வெற்றிவேலாயுதந்தாங்கிய திருக்கரமுடைய குமாரசுவாமியைத் தரிசிக்கும்பொழுதெல்லாம், தேவர்கள் தாவுகின்ற வெள்ளிய அலைகள்பொருந்திய திருப்பாற்கடலிலுதித்த அமுதத்தைப் பெற்றுக்கொண்டகாலத்தில் எய்திய சந்தோஷத்தோடு விளங்கினார்கள். எ - று. (௩௧)

இந்தி ராதிப ரிரிதழந் தாமரை
யந்த ணுள னரனை யடிதொழா
வெந்தை நீயிக லேன மருப்பினைக்
கொந்த ளச்சடைக் கோடியென் றேத்தினர்.

(இ - ள்) இந்திரன் முதலிய இமையவர்களும் துளித்தேனையுடைய இதழ்களையுடைய கமலாதனனாகிய பிரமனும், சிவபெருமான் பாதங்களை வணங்கி எமது தந்தையாகிய தேவரீர் வலிதகழிய அவ்வராகத்தின் கொம்பைச் சூழற்புடைய சடையிலே யணிந்துகொள்வீராகவென்று துதிசெய்தார்கள். எ - று.

அரனு ணிந்தன னப்பிறை வாளெயி
றரவு தேவ ருவகைகொண் டாடினார்
பரவு சேவடி பன்முறை வாழ்த்தியப்
புரமெ ரித்தவற போற்றினர் போயினார்.

(இ - ள்) சிவபெருமான் (அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி) அப்பிறைச் சந்திரன்போன்ற பல்லை அங்ஙனமே யணிந்துகொண்டனர். அறிவுபொருந்திய அமரர்களனைவரும் அகங்களிதுளும்பினர். எல்லோருந் துதிக்கத்தக்க சிவந்த திருவடிகளைப் பன்முறை தோத்திரஞ்செய்து முப்புரம் பொடித்த அம்முதல்வனை வணங்கித் தத்தமிடஞ் சார்ந்தார்கள். எ - று. (ருரு)

மாய மாய வராக வுருக்கழிந்
தாய மாய னரனை யருச்சியாத்
தீய வாணவச் செய்கைச் செருக்கறப்
போயொ ழிந்து தனதுறை போயினான்.

(இ - ள்) மாயமாகிய வராகவடிவகன்று, நிசரூபமுற்றிருந்த நெடுமால், சிவபெருமானை யருச்சித்து, கொடிய ஆணவமலத்தின் செயலான அகங்காரத்தை அடியோடு நீங்கப்பெற்றவராய், தமக்குரிய வைகுந்த பதவிக்கு எழுந்தருளினார். எ - று. (ருசு)

வராகாவதாரச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் கசு - கவிதை திருவிருத்தம் - ௨௭௭௬.



## பதினேழாவது

# நரசிங்காவதாரச் சருக்கம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈதலாதுசென் றிறந்தமுற் காலத் திருந்திற லெறுழ்வலித் திரடோட், காதுவெஞ்சின முறுகெயிற் றசுரரிற் றோன்றினன் கனகனென் றொருவன், றாதுலாந்தடந் தாமரை நான்மறைக் கிழவனைத் தனதகத் திருத்தித், தீதினமாத்தவம் புரிந்தன னத்தவத் தொழுகிய நாட்சில சென்றன.

(இ - ள்.) இதுவல்லாமல், கழிந்துபட்ட பழங்காலத்திலே, பெருவீரமும் மிகுவல்லபமும் குவிந்ததோள்களும் கொல்லத்தக்க கடுங்கோபமும் வக்கிரதந்தங்களுமுடைய அசுரகுலத்திலே இரணியனென்னும் பெயர்பெற்ற ஒருவனுதித்தான். அவன் மகரந்தங்கள் நிரம்பிப்பரந்த கமலாதனனாகிய பிரமனைத் தன் மனதிற் பதித்து, குற்றமில்லாத பெருந்தவஞ் செய்தான். அத்தவத்திலேயே யொழுகிச் சிறிதுகாலங் கழித்தான்- எ - று. (க)

அனைய மாதவ மாற்றிய செயற்கருந் தன்மையை யகத்தடைத் தவனாய், நனைகொ டாமரை நான்முகத் தந்தண னங்கவற் கெதிருற நடப்பப், புனைபொ லன்கழ லிரணிய னவனிரு முளரியம் பூங்கழல் போற்றி, நினையு நெஞ்சொடு மென்புறக் குழைந்தன னதுவறிந் திரங்கின னிமலன்.

(இ - ள்.) அத்தகைய பெருந்தவஞ்செய்த செயற்கருந் தன்மையைத் தனதுள்ளத்திலெண்ணியவனாய, குளிர்ந்த தாமரைமலர்ப்பீடமுடைய பிரமன் அவ்விரணியனுக்கு எதிரே வந்தபோது, பொற்கழலணிந்த பாதத்தையுடைய இரணியாசுரன், அப்பிரமனுடைய அழகிய தாமரைமலரை யொத்த உபயபாதங்களை வணங்கி, எக்காலும் அவனைத் தியானித்த சித்தத்தோடு என்புமெக்கு விடமனமுருகினான். பிரமதேவன் அதைநோக்கித் திருவுள மிரங்கியருளினான்.

விருப்பி னோங்கிய தென்னெனப் பழமறை வேதியன் வினவலும் வெய்யோ, னெருப்பி னீரினி னிலத்தினில் வளியினி னெடுவெளிப் பரப்பினி னின்ற, விருப்பி னாயுதக் கருவியி னகத்தினிற் புறத்தினி னிமையவர் மக்கள், வெருக்கொ ளஞ்சிறைப் பறவையின் விலங்கினி னிறப்புறா வரம்பெற வேண்டும்.

(இ - ள்.) உன்விருப்பத்தினாலே மேம்பட்டது யாதென்று பழமையாகிய வேதங்களையுணர்ந்த பிரமன் வினவவும், கொடியோனாகிய இரணியன், நெருப்பாலும் நீராலும் மண்ணாலும் காற்றாலும் நெடிய ஆகாயப் பரப்பாலும், இன்னுமுள்ள இரும்பாலாகிய ஆயுதக் கருவிகளாலும் இரகசியத்தாலும் வெளிப்படையாலும், தேவர் மனிதர் அச்சமெய்தத்தக்க அழகிய சிறகுள்ள பட்சிகளாலும் மிருகங்களாலும் யான் இறவாதிருக்க வரம்பெற வேண்டுகின்றேன், எ-று.

மடுத்த கங்குலிற் பகலினி னிறப்புறு மாதவம் பெறினுமென்
னுக்கை, விடுத்த சோரியோர் துளிபுறத் துறினுமத் துளிவெகு ளென்
னுரு வெடுத்துக், கடுத்த வெம்பகை முதலறப் போக்குவான் பெரு
வரங் கருதினே னையே, கொடுத்தி யாமெனிற் பெறுகுவ னலவெனி
லென்னுயி ருன்னுழைக் கொடுப்பேன்.

(இ - ள்) மிகுந்த இரவிலும் பகலிலும் இறவாதிருக்கும் வழியும், அப்படி யிருந்தால் என் உடலினின்று ஒழுகிய உதிரத்தில் ஒருதுளி வெளியே விழினும் உடனே அவ்வுதிரத்துளி எல்லாரும் பயப்படத்தக்க என்வடிவேற்று என்னோ டெதிர்த்த கொடிய பகைஞர்களை வேருடனழிக்கத் தக்க பெருவரமும் பெற விரும்பினேன் ஐயனே! தேவரீர் இவ்வரங்களைத் தருவீராகில் பெற்றுக்கொள் ளுவேன். அல்லவெனில் என்னுயிரை உம்மிடத்திலே விடுவேன். எ - று. (௪)

வயிர்த்த சிந்தையி னினையன வாளெயிற் றசுரர்கோ னியம்பலு
மலரோ, னயிர்த்த சிந்தையி னடைந்தன னுங்கவன் கேட்டன யாவையு
மளித்தா, னுயிர்ந்த நெய்யவ்வாள் படைக்கல முதலின னவன்புரி யிடுக்
கணொன் றுணரான், பெயர்ந்து நான்முகன் றனுழைப் படர்ந்தனன்
மீண்டனன் பெருந்திற லசுரன்.

(இ - ள்) திடமுற்ற மனத்தோடு இத்தகைய சொற்களைக் கூர்மைதங்கிய பற்களையுடைய அசுரர்தலைவனான இரணியன் சொன்னமாத்திரத்தில், கமலா சனனாகிய பிரமன், இரக்கமுற்ற திருவுளத்தனடைந்து அவனாற்செய்யப்படும் கொடுமைகளைச் சிந்தியாது, அவன் கேட்டுக்கொண்ட வரங்களெல்லாவற்றையும் கொடுத்து, தெய்வீகந் தங்கிய சிறந்த ஆயுதவகைகளையு மளித்து, மீண்டு அப் பிரமன் றன்பதவிக்குச் சென்றனன் பெருவல்லபமுள்ள அவ்வரக்கனும் அங்கு நின்று திரும்பினான். எ - று. (௫)

அளப்ப ருந்திற லைவகைச் சேனையி னடைந்தன னளவொழி
யண்டத், துளப்ப டப்படு மனைவருந் தன்னடிக் கீழ்வீழ்ப் பணிந்தன
னுரவோன், வளப்பெ ருந்திற லிந்திர னுதலியோ ரேவின கேட்டுற
வகுத்தான், கிளர்ந்த நின்றம்பெ ருலகெலாந் தனதுவெண் கவிகையின்
கீழ்ப்பட நிறுத்தான்.

(இ - ள்) அளவிடற்கரிய வலிபடைந்த நால்வகைச் சேனைகளையும் பெற் றுக்கொண்டான். எண்ணிறந்த அண்டகோடிகளுக்குட்பட்டிருக்கும் யாவரும் தன் பாதங்களின் கீழ்வணங்கும்படி கட்டளையிட்டு, பெருவளங்களும் வல்லப முமுடைய இந்திரன் முதலானோர் பணிவிடைகளைக் கேட்டுச் செய்து கொண்டிருக்கும்படி ஏற்பாடுசெய்தான். பொலிவுற்று விளங்கிய பெரிய உலகமுழுவதும் தனது வெண்கொற்றக் குடையின் கீழ் வீழும்படி நிலைபடுத் தினான். எ - று. (௬)

மாக நாட்டுள வாமமைப் பரியநகர்நாட் டரிவையர் மழலையங்
கிளிபோ, னாக நாட்டுள கன்னியர் சித்திரநாட் டெழுதரு நவ்வியங்
கண்ணோர், கோகு லக்கொழுங் குதலையா யாதுநாட் டுளமலர்க் கோ
தைய ரெவரும், பாகடுப் பனிமொழியினர் சாமரை முதலின வேந்
துறப் பணித்தான்.

(இ - ள்.) தேவலோகத்திலுள்ள அரம்பா ஸ்திரீகளும், யக்ஷலோகத்திலுள்ள மாதர்களும், மழைலச்சொற்களையுடைய கிளிபோலவசனிக்கும் நாகலோகத்திலுள்ள நங்கையர்களும், சிறந்த பூலோகத்திற் றோன்றும் மான்போலும் அழகிய விழியையுடைய மங்கையர்களும், யாதவ குலத்திலுதித்த செழுமிய குதலைச்சொற்களையுடைய மாதர்களும் இன்னும் பிறவுலகத்துள்ள மலர்மாலை சூடிய கூந்தலுடையவர்களும், வெல்லப்பாகையும் வெல்லும் இனிமையும் குளிர்ச்சியுமுள்ள வார்த்தையுடையவர்களுமாகிய மாதர்களும் சாமரைமுதலியன தாங்கிக்கொண்டிருக்கக் கட்டளை யிட்டான். எ - று. (எ)

இந்தி ரப்பெரும் பெயரினோன் முதலிய வெண்டிசைக் காவலர் யாரும், வந்தி ரந்தவன் பணிபபன வரன்முறை கேட்பரா லிவ்வரப் பெருக்கந், தநத நான்முக னிவன்பெயா கேட்டொறுந் துஞுக்குறுஞ் சமயஙின் றளிகரும், முநதை வாழவுடைத தேவரு மவனபுகு நெறியமைத் திருபபரான முகஙகள.

(இ - ள்.) இநதிரனென்னும் பெருமபேருடையவன முதலாகிய அஷ்டதிக்குப்பாலர்களையெலலாம் நாடோறும் தன்பால்வநது பிராாததிதது அவன் கட்டளை யிடுவனவற்றை முறைப்படி கேட்டுககொணடிருப்பார்கள். இவவரஙகளாகிய பெருமையைப் பாலிதத பிரமனும, இவன பெயரைககேட்கும்பொழுதெல்லாம் திடுககுறுவான. சமயமபாாததுககொணடுபொதுகாபபான. பணடைய வாழ்வுள்ள பிறதேவாகளும தஙகள முகஙகளை அவன போகும வழியில திருப்பிககொணடிருபபாாகள. எ - று. (அ)

கருடர் வானவா சிததாவித தியாதரா கினனர ரரியககாகந திருகிம், புருட ரினனவர் யாவரு மசுரரிற புணபடு தழுமபின ரலலா, துருவ முனனையொத துளளவ ரிலலாதாழ்ந துயாநதன ரசுரருழ முறையிற, பொருத டநதிரைப பிரளய மொததனா படுகரொத திழிநதனா புலவா.

(இ - ள்-) கருடர்-தேவர்-சிததா-விததியாதரா-கினனரா-யக்ஷா-கநதருவா-கிம்புருடா ஆகிய இவாகள் யாவரும அசுராகளாற காயபபடட தழுமபுடையவாகளே யலலாமல, பணடைய உடலைபபோல உடையவாகளலா. அசுராகள் ஊழிக்காலததில முறைப்படி மோதுகினற விசாலிதத அலைகளையுடைய பிரளயததைப் போன்றுயாநதாராகள. தேவாகள அப்பிரளய நீா தஙகுகினற பளளஙகளைப்போன்று தாழ்நது இழிதகைமை யெய்தினாாகள. எ - று. (கூ)

மேரு மால்வரை முதலிய நெடுநில வெற்பின முதலிய வுருட்டும, பாரு மணடமுங திகிரிமால் வரைமுதல யாவையு மஙகையிற படுக்கு, மோர்வ ருமபிற பதவியி லினறுள விணணவா மணிமுடி யுரிஞ்சி, வாாபொ லன்கழல பரிதியொத திமைபபுற வாளரித தவிசுவீற றிருக்கும்.

(இ - ள்.) நெடிய வுலகிலுள்ள பெரிய மேருமலை முதலிய மலைகளின் தொகுதிகளெல்லாவற்றையும் உருட்டுவான. நிலவுலகையும் அதன் மீதுள்ள அண்டகோடிகளையும் சக்கரவாள கிரிமுதலிய வெல்லாவற்றையும் உள்ளஙகையிலடக்குவான், அறிதற்கரிய பிறபதவிகளில் நிலைபெற்ற தேவர்களுடைய

இரத்தின மிழைத்த கிரீடங்களுராய்ந்து, பொன்னுலாவிய நெடிய வீரகண்டா மணிகள் சூரியனைப்போலப் பிரகாசிக்கும்படி ஒளிதங்கிய சிங்காசனத்தில் வீற்றிருப்பான். எ - று. (௧௦)

அடுக்கி நிற்பன வண்டமு முலகமு மவற்றுள யாவரு மங்ஙன், னெடுத்து ரைப்பன விரணியனேநம வென்பர்மற் றியாவையு மியம்பார், மடுத்த பேரறந் துறந்தனன் பாதகப் பேரர சளித்தனன் மருண்டான், விடுத்த நான்மறை யுருவுகொண் டவற்கொரு மதலையிற் றோன்றற வியந்தான்.

(இ - ள்.) அடுக்கி யிருப்பனவாகிய அண்டகோடிகளும் நிலவுலகமுமாகிய இவற்றில்வாழும் யாவரும் அக்காலத்தில் சிறப்போடு சொல்லுவன வெல்லாம் இரணியாய நம: என்பார்கள். இதற்கு வேறுபட்டு மற்றொன்றையுஞ் சொல்லார்கள் உலகில் நிரம்பியிருந்த பெருந்தருமங்களை யொழித்தான். பெரும்பாதகங்கள் நிறையும்படி அரசுசெய்தான் புத்திமயங்கியிருந்தான் இவனால் நீக்கப்பட்ட நான்கு வேதங்களுமே ஓருவடிவமெய்தி அவனுக்கு ஒருபுத்திரனாகப் பிறக்க ஆச்சரியமடைந்தான். எ - று. (௧௧)

அனைய பாலகற் காண்டொரைந் தாயின வுணர்ந்தனன் வாளெயி றசுர, னினைசு தன்றிரு பாலக ரிருவர்பா லிருங்கலை நிகழ்த்துற விடுத்தா, னினையமைந்தனுங் காதியி னுணர்ந்தின னிரணிய னேநம வென்ன, வினையொ ருங்கறப் பிறந்துள பாலக னருமறை யாதியை விரித்தான்.

(இ - ள்) அத்தகைய புத்திரனுக்கு ஐந்துவயதுகளானதை யுணர்ந்த கூர்மைவாய்ந்த பற்களையுடைய இரணியனென்னு மசுரன், தான் எப்பொழுதும் எண்ணத்தக்க சுக்கிராசாரியார் பெற்ற புதல்வர்கள் இருவரிடத்தில் பெரிய நூல்களைக் கற்றுக்கொள்ளும்படி செலுத்தினான் இப்புதல்வனுக்கு ஆரம்பத்தில் இரணியாய நம: என்று சொல்லிக்கொடுத்தார்கள். வினைகளெல்லாம் அடியோடு நீங்கும்படி பிறந்த அப்புதல்வன் அரிய வேதத்தின் முதலை எடுத்துச் சொன்னான். எ - று. (௧௨)

ஆகெடுத்தனை யெனவெரீஇ யந்தண ரிருகரந் திருசெவி யடைத்தார்
நீகெடற்கரும் பெயரினை யோதிலை நினக்கிஃ துணர்த்தினா யாரே
பாகமுற்றிருந் தணைத்தணைத் தனனது பகரினும் பகர்ந்திலன் சிறுவன்
வேக வெஞ்சினத் தசுரனிற் புகுந்தன ரந்தண ரவனிலை விரித்தார்.

(இ - ள.) இதனைக்கேட்ட அந்தணர்களாகிய சுக்கிராசாரி புதல்வர்கள், ஆ ஆ! முறைமையைக் கெடுத்துவிட்டாயே யென்று பயமெய்தி, இருகரங்களாலும் இருசெவிகளையும் மூடிக்கொண்டார்கள் நீ அழியாதிருக்கத்தக்க பெயரைச் சொல்லவில்லை. உனக்கிதனை யுபதேசித்தவர்கள் யாவர்? எனக்கூறி, அவனுக்கிணக்கமாகவிருந்து தழுவித்தழுவி இரணியாய நம: என்னும் அவ்வாக்கியத்தைச் சொன்னாலும் அப்புதல்வன் அதனைச் சொல்லவில்லை. அதுகண்ட வேதியச் சிறுவர்களாகிய அவ்விருவரும் மிக்க கடுங்கோபமுடையவர்களாய் இரணியன்பாற் போய் அவன் றன்மையை விரித்துச் சொன்னார்கள். எ - று.

என்னு ரைத்தன னென்றன னிரணிய னன்னவ னிசைத்தன வெழுதார், துன்னி யோரினும படுகுழி நிரையமவந் துறுமதி யாமிசைக் கலமென், றின்ன லந்தண ரிரணிய னோநம வெனச்செவி புதைத்தன ரிருந்தார், மன்னு மைந்தனைக் கொணர்கெனச் சென்றனர் கொணர்ந்தன ரவாளெயிற றசுரர்.

(இ - ள்) அப்போதிரணியன் என் மகன் யாதுசொன்னானென்று வினாவினான். அவன் சொன்னவற்றை யெழுதாமலிருந்தாலும் மிக ஆழமாகிய பள்ளமவாய்ந்த நரகமவந்து சம்பவிக்கும். ஆனதால் அதை நாங்கள்சொல்ல மாட்டோமென்று அவ்வேதியச் சிறுவர் கூறி இரணியாய நம என்று தங்கள் காதைப் பொத்திக்கொண்டிருந்தார்கள். உடனே இரணியன் தன்பிள்ளைப்பெருன புதல்வனை யழைத்து வரும்படி கட்டளையிடவுங் கூர்மைதங்கிய பற்களையுடைய அசுரர்களிற் சிலர் சென்று அவனைக்கொண்டு வந்தார்கள். எ - று. (௧௪)

கதுமென்ப் புகு மதலையை நோக்கினனேது மாதியைக் கருதார், வெதுவுரைத்தனை மைந்தநீ யென்னலு மியானுமற் றெனையீன் றருளி, னுதவு நீயுமின் றுய்குவா னுரைத்தன னுனக்குமற் றொருவர்க்கு மெட்டா, வதுப் முழுமுபொரு ளோநமோ நாராய ணாவெனு முழு மறைக் காதி.

(இ - ள்.) அவ்விடத்தில் விரைவாகவந்த தன்புதல்வனைப்பார்த்து, மகனே! உனக்குக்கூறிய முதல்வாகிய்தத்தைக் கவனியாமல் வேறு நீயாது கூறினையெனக்கேட்டவுடன், அப்புதல்வன் நானும் என்னை ஈன்றளித்த நீயும் இப்பொழுதே ஈடேறும்படி ஒன்று சொன்னேன் அவ்வாக்கியப் பொருளானது உனக்கும உலகிலுள்ள வேறெய ஒருவருக்கும் எட்டாதது. நான்குவேதங்களுக்கும் முதன்மையான ஓம் நமோ நாராயணாய என்னும் பழம் பொருளா மென்றான். எ - று. (௧௫)

கருக்கு சிந்தையா னுயக்து கேட்டலுங் கனலெழுக் காய்ச்சிய சலாகை, யிருசெவித்தொளை நுழைந்தெனச் சுருங்கொளக் கறித்தன னெயிறு தீப் பிறக்க, வெருவி யண்டமு முலகமுங் குலுங்கின விண்ணவர் திசை திசை மறைந்தார், திருக்கு சீற்றமிக் கிருவிழி வடவைகான் றெழுந்தது செழும்புகைப் படலை.

(இ - ள்.) வெந்த மனமுடைய இரணியாசுரன் அவ்வாக்கியத்தைக்கேட்ட மாத்திரமே, தீப்பொறி சிந்தும்படி காய்ச்சிய இருப்புச்சலாகையை இரு செவி களிலும் நுழைத்ததுபோலச் சுரீரென்று கோபமமூளும்படி தீப்பொறி சிந்தப் பற்களைக்கடித்தான் அப்போது அண்டகோடிகளும் நிலவுலகமும் பயமெய்திக் குலுங்கின. தேவர்கள் திசைகளிலெல்லாம் மறைந்தார்கள். மாறுபட்ட கோபம் அதிகரித்ததனால் அவ்விரணியனுடைய இருவிழிகளும் வடவாமுகாக்கினியைக் கக்கின, அவ்வக்கினியிலிருந்தும் ஓங்கிய புகைப்படலம் தோன்றியது. எ - று.

சீறு சீற்றமிக் கிருந்தவா றொருதனிச் சிறுவனென் றுணர்ந்திலன் றீயோன், கோறி வாளெறிந் தென்றன னங்கிலே செயிர்த்தனர் கொலைத்தொழிற் குரியோர், ரீறிலுந்தக் கெடுந்தெடுத் தெறிந்தன ரன்னவை

யிற்றன நெல்வாற், கீறு கீற்றள வாயினு மற்றில மதலைபாற் கிளைத்
துணைப் புயத்தின்.

(இ-ள்) கொதிப்புள்ள கோபமதிகரித்தபடியால் தீயோனாகிய இரணியன் ஒப்பற்ற தன் ஒரே பேறான புதல்வனென்றுணராமல், அவ்வசுரர்களைப் பார்த்து, நீங்கள் வாளை வீசி இவனைக்கொன்று விடுங்களென்று கட்டளையிட்டான்; அதனைக்கேட்ட கொலைத்தொழில் செய்பவர்கள் அதுபோலவே கோபமெய்திய வர்களாய், எண்ணிறந்த வாட்படைகளை யெடுத்தெடுத்து வெட்டினார்கள். அவர்கள் வெட்டப்புகுந்த வாளாயுதங்கள் துண்டுபட்டன. அவன்மேனியில் நெல்வாலின் அளவேனும் வெட்டுப்பட்டதில்லை எ-று. (கஎ)

விடங்கொடுத்துயிர் செகுத்திறப் பணித்தனன் கொடுத்தன ரவ்
விடமவற்குத், தடந்திரைக்கடலாரமு தாயது நோக்குநர் கழல்விழிச்
சுடிகைப், படங்கொ ளெண்வகை நாகமுங் கடிக்கத்துறப் பணித்தனனுங்
கவை பகுவா, யிடங்கொ ளக்கடித் திறுக்கலு நெறுக்கெனத் தெறித்
தன வளைந்தவா ளெயிறு.

(இ-ள்) அதன்பின், விஷமூட்டி அவனுயிரை யகற்றும்படி கட்டளை யிட்டான். அப்படியே விஷமூட்டினார்கள். அந்த விஷமானது அப்புதல்வ னுக்குப்பரந்த அலைகளையுடைய திருப்பாற்கடலிலுதித்த சுவைமிகுந்த அமுத மாயிற்று. அதைக்கண்டமாத்திரமே, தீயைச்சிந்தும் விழிகளையும் முடியோடு கூடிய படத்தையுமுடைய அஷ்டமா நாகங்களும் கடிக்கும்படி கட்டளை தந்தான். அவ்வஷ்ட நாகங்களும் பிளவுபட்ட தங்கள் வாயாற்கவ்விக்கடித் திறுகியபோது, அவற்றின் கூர்மையும் வளைவுமுடைய பற்கள் திடீரென்று தெறித்துப்போயின எ-று. (கஅ)

பருத்த கூர்மருப் போரிரண் டிரட்டியப் படுமதப் பனைக்கைமால்
யானை, செருந்த வெஞ்சினத் தெட்டையுங் கொணர்திசைன் றிசைத்
தலுங் கொணர்ந்தனர் தீயோர், வருந்த வானபருப் பூன்றுறப் பாய
த்ரப் பணித்தன னடுதொழின் மறவோன், நெருக்கு வாழையந் தண்
டென முறிந்தத களிற்றுடைந் துணைப்பனை மருப்பு.

(இ-ள்) பிரிவுபட்ட கூரிய நான்கு தந்தங்களையும் பனைபோலுந் துதிக் கையையுமுடைய பெரிய யானைகளாகிய கொலைத்தக்க கடுங்கோபமெய்திய அஷ்டதிக்கஜங்களையும் கொண்டுவருகவெனக் கட்டளையிட்ட மாத்திரமே. தீயோர்களாகிய அசுரர்கள் அப்படியே கொண்டுவந்தார்கள். அப்போது அவ் யானைகளின் தனித்தனியான நான்கு தந்தங்களும் அவனுடலில் ஊன்றப் பாயும்படி செலுத்துங்களென்று கொலைத்தொழில் பொருந்திய கொடிய இரணியன் கட்டளையிட்டான். அப்படி அவர்கள் செய்தபோது அவ்வியானை களின் பருத்த நான்கு கொம்புகளும் கூட்டமான வாழைத்தண்டுபோல முறிபட்டன. எ-று. (ககூ)

உயிரி றக்கல னென்றினு மென்பன வுணர்ந்தன னுருந்துருத்தெ
ழுந்தான், குளிர்வந்தெழு நெடுவரை யுச்சியிற் கொண்டுசென் றுருப்
பிறவீக்கிச, பெய்ருற நந்நனித் தளரும்மினென்றலுந் தளரின ரிறந்தி

லன் இறுவன், வெயிலு மிழ்ந்தெறி கனகமு லசுரர்கோன் செய்வகொ
ன்றுணர்ந்திலன் வெகுண்டான்.

(இ-ள்.) இவன் நாம்செய்த ஒன்றனுலும இறந்திலன என்பது ணர்ந்த இரணியன் மிகககோபிததுககுதிததான் மேகஙகள் மோலோங்கித் தோன்றும் நீண்ட மலையின்மேலுள்ள உச்சியிற்கொண்டுபோய் அவனவயவஙக ளெலலாம இற்றுப்போமபடி கட்டி இறககும்படி தனியாய உருட்டி விடுஙக ளென்று கட்டளையிடவும், அப்படியே அவாகளுருட்டினுர்கள். அப்போதும் அப்புதல்வன் இறககவில்லை. கிரணஙகளைச்சிந்தி ஒளிவிடுகின்ற ஒளிதஙகிய வீரகணடாமணியணிந்த அசுரா தலைவனுகிய இரணியன செயவகையொன்றுந தெரியாதவனுயககோபஙகொணடான. எ - று. (௨௦)

மருங்கு வெம்பொறைக் குனறமிட் டசைததர வீககினர் வளைமு
கந் தெறியு, மிருநதி ரைககட லிடடன ரசிலை யாஙகவற கேரதிய புணை
யாப, பொருநத டநதிரைக் கரைசொடு சோநதலு மெழுநதன னரு
மறைப புதலவன், திருநது நாயக னடியவாக கடியரை யெனசெயுங
கொடுந்திறற் றீமை.

(இ - ள.) அப்புதலவனிடையிலே மிகபபாரமான மலையைச்சேர்தது இறுககக்கட்டினவாகளாய அலைகள சஙகுகளை முகநதெறியுமபெரிய சமுததிரத்தில் வீழ்ததினுாகள. அமமலைப்பாறையானது அபபுதலவனைத்தாஙகுகினற தெப்பமாக அலைகள மோதுகினற பரநத கடற்கரையிறகொணடுவநது சோதத வுடனே, அரிய வேதஙகளையுணாநத அபபுதலவன் நிலததினமேலேறினன. கொடூரவல்லபநதஙகிய தீமைகளெலலாம திருததமாகிய கடவுளுககு அடியரான வாககு அடிமைபபட்டவரை யாது செயயுமா? எ - று. (௨௧)

எவைதெ றுஙகொலென் றியறறனு மாருயி ரிறநதில னிவனென
வெண்ணுக, கவைய வாளெயிற றடுதிற லசுராகோ னுருமெனக கனன
றனன கனலா, வவையி ஞோதனிப புதலவனை வரவெதி ரழைததன
ஞஙகவ னடைநதா, னிவா கொடுஞ்சிகைவடவையுங குளிாபபுற விடை
யரு தெரியெழ விழிததான.

(இ - ள்.) பிளவுபடடதுபோன்று கூரிய பறகள்பொருநதிய கொல்லத்தக்க அசுரா தலைவனுகிய இரணியன் எச்செயலகள இவனைககொலலு மென்று ஆராயநதுசெயதாலும, அவற்றுலெலலாம் நிறைநத பிராணனை இவன் இழககவிலலையெனறு சிநதிதது, இடியேறுபோனறு காசசிததுக கோபித்தான். அப்படிக்கோபிதது ஒப்பறற தன ஏகபுததிரனைச் சபைககுநேரே தருவிததான். அப்படியே அவன வநத வுடனே மேலோஙகிய நீணட கொழுநது விட்ட வடவாமுகாககினியும குளிாச்சியெயதுமபடி ஓயாமல் தீபபொறி சிநத நோக்கினுன். எ - று. (௨௨)

என்னை யன்றிமற் றுலகளித் தமைபபதற் குளதென விசைத்தவக்
கடவு, டனனை யென்னெதிா காட்டுதி யாங்கவன யாவனென் றறிகுவன்
றனியோய்,பின்னை யுனனிலை யுரைககுவன் காட்டலை யாமெனி னினது
பேரியாக்கை, தின்ன வெண்ணின னென்றன னசுரர்கோ னுணாந்து
வா னருமறைச செல்வன்.

(இ - ள்.) என்னையல்லாமல், இவ்வுலகினைப்படைத்துக்காத்தற்கு வேறு பொருளுண்டென்று நீ சொல்லிய அக்கடவுளை என் கண்ணுக்கெதிரே காட்டுவாயாயின், அப்போது அவன் யாவனென்று யான் உணர்ந்துகொள்வேன். ஒப்பற்றவனே! நீ சொல்வதுபோல அதன் பிறகு நானுஞ்சொல்வேன். அப்படிக்காட்டாது விடுவாயாகில், உன் பெரிய உடலைத்தின்றுவிடும் வண்ணம் கருதுவேனென்று இரணியன் சொன்னான். அப்போது அரிய வேதமுணர்ந்த அப்புதல்வன் தன் தந்தைக்கு உணர்த்துவானாயினான். எ - று. (உரு)

கலிநிலைத்துறை.

நீயு நின்னுழைத் தோன்றிய செருக்குநிற் பயந்த
தாயு மற்றுள தந்தையுந் தனிப்பதம் யாவு
மாய வஞ்சமு ஞானமும் வரம்பறு வானு
மோய்வில் காலமு மவனல தன்றிமற் றுளதோ.

(இ - ள்.) நீயும் உன்பால் விளங்கிய அகங்காரமும் உன்னைப்பெற்ற தாயும் தந்தையும், இன்னும் உனக்குள்ள ஒப்பற்ற பதவிகள் யாவும் மாயத்தன்மை பொருந்திய வஞ்சகங்களும் அறிவும் அளவற்ற வரங்களும் ஒழியாதிருக்கும் காலமுமாகிய இவற்றில் யாதாவதொன்று அக்கடவுளை நீங்கவிருக்கின்றதோ?

ஓதி யோதிநின் றுணர்தொறு முணர்ச்சிதந் துதவு
மாதி யாவது சராசர மனைத்துமா யடங்கும்
பேத பேதமும் பிருதிவி முதற்பெரும் பூதச்
சோதி யானது மவனல திலைகாண் டொகுப்பின்.

(இ - ள்.) நூல்களைக் கற்றுக்கற்றுத் தெளிந்துணருந்தோறெல்லாம் அறிவை யூட்டி யநுக்கிரகிக்கும் முதற்பொருளாவதும், நிலையியற்பொருள் இயங்கியற்பொருளாகி யொடுங்குகின்ற பேதமும் அபேதமும், பிருதிவி முதலாகச்சொல்லும் ஐம்பெரும் பூதங்களாய விளங்கும் சோதிவடிவமாவதும், சுருக்கிச் சொல்லுமிடத்தில் அக்கடவுளையன்றி வேறின்று. காண்பாயாக. எ - று. (உசு)

நினைக்கு நெஞ்சமு நினைத்துறப் படுவன யாவு
மனைத்தெ னப்படுஞ் சராசர பேதமு மவனே
யுனைக்கொ டின்னவை புரிகுவ துனதுயி ரிறப்ப
வினைக்கொ டுந்திறல் விளைப்பதூஉ மாங்கவன் விளம்பின்.

(இ - ள்.) எண்ணுகின்ற மனமும், எண்ணப்படுவனவாகிய வனைத்தும், எல்லாமென்று சொல்லப்படுகின்ற சராசர பேதங்களும் அக்கடவுளேயாகும். மேலுஞ்சொல்லுமிடத்தில், உம்மைக்கொண்டு உன்னுயிர் அழிக்கும்படி கொடிய தீவினையின் வலல்பங்களாகிய இவைபோல்வனவற்றைச்செய்வதும் செய்விப்பதும் அக்கடவுளேயாம். எ - று. (உஎ)

தேவர் நாயகன் றிருமக ணாயகன் சிறந்த
பூவி னாயகற் றந்தரு ணாயகன் பொறைதீர்
பாவ காரிய ருளம்புகா னடியருட் பரிக்குங்
காவ னாயகன் றன்னிலை யிந்நிலை காணடி.

(இ - ள்.) தேவர்கள் தலைவரும் லக்ஷ்மிநாயகரும் சிறப்புற்ற தாமரைத் தலைவனுகிய பிரமனைப்பெற்ற தந்தையும், பொறுமையற்ற பாவச்செயலுடையார் மனதிற்சேராதவரும், தம்மடியார் மனதிற் குடியிருந்து காக்கும் கடவுளுமாகிய திருமாலின் தன்மை இத்தன்மையாம். காண்பாயாக. எ - று. ()

என்றுரைத்தசொற் கேட்டலும் பிறைமுறுக் கெயிறு
தின்று தின்றுநின் றேவனிச் சிறுதனி மதலை
நின்று காண்டுறக் காட்டுதி யலையெனி னின்னைக்
கொன்று தின்பனென் றுறபபின னழலெழக் கொதித்தான்.

(இ - ள்.) எனக்கூறிய வார்த்தையைக்கேட்டமாத்திரமே பிறைச்சந்திரன் போல்வளைந்து முறுக்குற்ற பற்களை அடிக்கடி கடித்துக்கொண்டு நின்று அவன் யார்? அவனைத்தனியேயுள்ள இச்சிறு தூணிலிருந்து நான் பார்க்கும்படி காட்டக்கடவாய். அப்படிக்காட்டாதொழியின், உன்னைக்கொன்று தின்பேனென்றதட்டி, தீப்பொறி சிந்தக்கோபித்தான். (இரணியன்) எ - று. (௨௮)

உருத்த காலையிற் குமுறிய தறிபகத் துலவாச்
செருக்கு வெஞ்சினத் தெழுந்தது மானுடச் சீயம்
மருக்க மண்டலத் தணவிய தணமுடிச் சிகரந்
திருத்த டம்புயஞ் செலச்செலக் கிழிந்தன திசந்தம்.

(இ - ள்) அப்படிப் பயப்படுத்தியகாலத்திலே, அவன் சுட்டிய தூணிலிருந்தும் நரசிங்கமூர்த்தமானது காச்சனைகாட்டி அழியாத கோபத்தோடும் காவத்தோடும் உதித்தது. அம்மூர்த்தத்தின் அழகிய கிரீடமணிந்த சிரமானது சூரியமண்டலத்தை யளாவியது. அழகும் விசாலமுந்தங்கிய தோள்கள் செல்லுந்தோறும் எண்டிசைகளின் முடிவையும் ஊடுருவிச்சென்றன. எ - று. (௨௯)

கண்ணை ளப்பரி தாகிய திருவுருக் கரந்து
விண்ண டக்கிய தடுசின வடவைமீக் கொள்ளால்
வெண்ணி றக்கொழுங் கொடிப்புகை விரவிய விழிதீத்
திண்ணெ டுந்திரைக் கடலறப் பருகின சிதறி.

(இ - ள்) கண்களினுற பார்த்து அளவிடற்கரிய திருவுருமறைந்து ஆகாயத்திலடங்கியது கொல்லத்தக்க கோபமென்னும் வடவாக்கினியானது அதிகரித்தலால் வெண்ணிறமுடைய செழிப்பான கொடிப்புகைகூடிய கண்களினுதித்ததீப்பொறிகள் எங்குஞ்சிதறி, வலியநெடிய அலைகள்பொருந்திய கடனீர் முழுதும் வரளும்படிபருகின. எ - று. (௩0)

கிளைத்த வாளெயிற் றிடைக்கிடை காவதங் கிடந்த
வளைத்த வாளெயிற் றளவையா ரளப்பவர் மனனே
துளக்கி மேருவை யுருவுறப் பொதுத்தறத் தொளைத்துப்
பிளக்கும் வள்ளுகிர்த் திருக்கரம் பிறந்தன வந்தம்.

(இ - ள்.) அம்மூர்த்தத்திற் குண்டான ஒளிதங்கிய பற்களுக்கு இடைக்கிடையே காததூரம் வெளிக்கிடந்தன. வளைவாயிருக்குங் கூர்மைதங்கிய அப்பற்களின் அளவினை அளவிடுவோர் எவர்? மேருமலையையும் நடுங்கச்செய்து தொளை

படும்படி ஆவாரஞ்செய்து பிளக்கும்படியான கூர்மைதங்கிய நகங்களையுடைய அநேகம் திருக்கரங்களும் உதித்தன. எ - று. (௬௧)

அதிரின் மண்முத லண்டகோ ளகையுநின் றதிர்ந்து
பிதிரு மாதிரஞ் செவிடுபட் டெழுதிரைப் பெருநீர்
பொதியு மாநில வடிமபுகும் பூட்கைமால் யானை
துதிம தம்புலர்ந் தலறுவ கொடுங்கைமே னீட்டி.

(இ - ள்.) அதிர்ச்சியினாலே நிலவுலகமுதலாகச் சொல்லும் அண்டகோளகைகளும் நிலைகலங்கியிருந்து அதிர்ச்சியெய்திப் பிதிர்கின்றன. எண்டிசைகளுஞ் செவிடுறும்படி சத்தசாகரங்களின் வெள்ளம் பெருகும். பெரிய நிலவுலகின் அடித்தட்டில் சூழ்ந்திருக்கின்ற துதிக்கையோடுகூடிய சிறந்த யானைகளாகிய அஷ்டதிக் கஜங்களும் வளைந்த தங்கள் துதிக்கைகளை உயரவெடுத்து, ஒழுகுகின்ற மதசலம் வரண்டு பிளிறுகின்றன. எ - று. (௬௨)

சேர்ந்தெ ழுங்கதிர்ப் பரிதிபோய்க் குடகடற் சிலம்பு
போந்தி றங்குறு புன்குறு மாலையம் பொழுதிற்
காந்து வெஞ்சினத் தடுகொலை யவுணனைக் கனலாப்
பாய்ந்து வாயிலி னிருந்தவன் றனைமடிப் படுத்தி.

(இ - ள்.) சிவந்தெழுகின்ற கிரணங்களையுடைய சூரியன்போய் மேற்றிசைக் கடலிலுள்ள அத்தமயகிரியை யணுகி இறங்குகின்ற (மறைகின்ற) அற்பமாகிய சிறுமாலைப் பொழுதில், அங்கே நின்றுகொண்டிருந்த கொடுமை மிக்க கடுங்கோபத்தாற் கொல்லுகின்ற கொலைத்தன்மை பொருந்திய இரணியனைக் கோபித்துப் பாய்ந்து மடியிலே தள்ளிக்கொண்டு எ - று. (௬௩)

படுத்தி மார்பகங் கிடந்தியப் பதகனை வகிர்ந்து
குடர்ப்ப பிடுங்கிமே னிவந்தகை யாயிரங் கோடி
விடுத்த செந்துளிக் குருதிகீழ் வீழ்ந்தொறு மொருங்கே
மடுத்து நீட்டிய திருக்கரத் தளவையார் வகுப்பார்.

(இ - ள்) அப்பாவியாகிய இரணியனைத்தள்ளிச் சிறந்தமடியிலே கிடத்திக்கொண்டு பிளந்து, அவன் குடரைப்பிடுங்கி, அப்பொழுது அவனுடலினின்றொழுகிய செந்நிறந்தங்கிய உதிரத்துளிகள் பூமியில்வீழும்போதெல்லாம் மேலோங்கிய கைகள் ஆயிரகோடியாகத் தோன்றி அவற்றையெல்லாம் பருகின. அப்பொழுது நீட்டிய அத்திருக் கரங்களின் அளவினை எவர்தாம் அளவுபடுத்திச் சொல்லுவார்கள் எ - று. (௬௪)

உருத்தெ ழுப்படுங் குருதிநீ ரூற்றறக் குடித்துஞ்
செருக்கெ ழுந்தது மருண்டது பெருநிலத் திகந்தங்
கருத்தி னன்னது தன்னிலை மறந்தது காணப்
பெருத்த மாநிலத் துயிர்த்தொகை வெருவரல் பிறந்த.

(இ - ள்.) சுரந்து தொழுகுகின்ற உதிரநீரை அவ்வூற்று வரளும்படி பருகி மயக்க மெய்திகர்வித்து, பெரிய பூலோகத்தின் திக்குகளின் முடிவுவரையிலோடியது. அந்நரசிங்கமூர்த்தம் தனமனதில் தனநிலைமையை மறந்திருப்பதைக்

கணைப் பெருமைவாய்ந்த பெரிய பூமியிலுள்ள பெரிய சீவகோடிகளுக்கெல்லாம் அச்சமுண்டாயிற்று. எ - று. (௩௫)

எறும்வ லிப்புயத் திரணிய னுரத்தெழு மிரத்த
வெறிம யக்கினு லாணவச் செருக்கொடு வெகுண்டு
பொறிவ ரிப்பணங் கிடந்தபே ருலகுதான் புரக்குஞ்
செறியு யிர்த்தொகை வாரிவாய்ப் பெய்ததச் சீயம்.

(இ - ள்.) மிகுவல்லபம் பொருந்திய தோள்களையுடைய இரணியன் மார்பினின்று பெருகிய உதிரத்தாலுண்டான பித்துக்கொண்ட மயக்கத்தினால் அந் நரசிங்கமூர்த்தம் அகங்காரத்தோடு காவத்தோடு கோபித்து, புள்ளிகளோடு வரிகளையுடைய ஆதிசேடன் பணாமுடியினமீதுள்ள பெரிய நிலவுலகிற்பொருந்தி நிறைவுற்ற சீவராசிகளைச்சேர்த்து வாயிலிட்டுக்கொண்டது. எ - று. (௩௬)

உலகு மண்டமுங் கரந்துறைந் தொளிப்பன காணூ
தலம ரச்சுழன் மானிட மடங்கலை யஞ்சிப்
புலவர் யாவரு நான்முகப் புனிதனும் புகுந்தார்
நிலவு வேணிபொற் கயிலையி னெடுநிலை வாயில்.

(இ - ள்.) பூலோகத்திலும் அண்டகோடிகளிலும்மறைந்திருந்து ஒளித்துக் கொள்வதாகிய நரசிங்க மூர்த்தத்தைக் காணுதவர்களாயப் பயந்து மனமலையச் சுழன்றுகொண்டிருந்த தேவர்கள் யாவரும், நான்கு முகங்களுடைய பிரமனும், சந்திரனைத்தரித்த சடையையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருக் கைலாயகிரியின் நெடிய நிலைகளையுடைய கோபுரவாயிலிற் சேர்ந்தார்கள்.

வாயில் காப்பவர் தடுத்தனர் நந்தியவ் வாயின்
மேயி னூரெவ ரென்றலுங் கணுதிபர் விளம்பப்
பாயொ லித்திரைப் பகீரதி வேணியெம் பரனைச்
சேய சேவடி தொழச்சொலி விடுத்தனன் சென்றார்.

(இ - ள்.) கோபுரவாயிற் காவலர்கள் தடுத்தார்கள். அப்பொழுது திருநந்திதேவர் அவ்வாயிலில் வந்தவர்கள் யாரென்று வினவவும், கணுதிபர்கள் அவர்களை இன்னாரின்னாரெனக் கூற, பாயந்தொலிக்கின்ற அலைகளையுடைய கங்கையைத்தரித்த சடைமுடியையுடைய எமது சிவபெருமான் சிவந்த பாதங்களை வணங்கும்படி போதற்கு விடைகொடுத்தனர். அதன்மேல் உள்ளேசென்றார்கள்.

சென்றெ திர்ந்தன ரிறைஞ்சின ரயன்முதற்றேவர்
நின்று மெய்ப்புள கெழுந்தனர் தொழுதனர் நின்றார்
குன்ற விலவியங் கொடிச்சடை வானவ னயனுக்
கன்றி ரங்கினன் பொதுவறக் கருணைநோக் களித்தான்.

(இ - ள்.) பிரமாதிதேவர்கள் திருச்சந்நிதியிற் புகுந்து சிவபெருமானைத் தரிசித்துப் பணிந்து திருமுனனின்று உடல் புளகாங்கிதமெய்தி வணங்கினார்கள். மேருமலையை வில்லாகவுடையவரும் அழகிய (பவளக)கொடிபோலுஞ் சடையை யுடையவருமாகிய சிவபெருமான், பிரமன்மேல் இரக்கமெய்தியவராயப் பொதுத்தன்மைநீங்கச் சிறப்பாய்க் கிருபாநோக்கஞ் செய்தனர். எ-று.

ஐய னேயெமக் கரிதா மருமறைக் கெட்டா
மெய்ய னேதனி விமலனே மழுப்படை பொறுக்குங்
கைய னேமணி கண்டனே கருதாரு மெவாக்கும்
பொய்ய னேநினை யடைந்தனம் புகல்பிறி தில்லை.

(இ - ள்.) ஐயனே! எங்கட்கரிதாயுள்ள சிறந்த வேதங்களுக்கு மெட்டாத உண்மையானவரே! ஒப்பற்ற மலரகிதரே! மழுவாயுதத்தைத் தாங்கிய திருக் கைகளையுடையவரே! ஸ்ரீகண்டமுடையவரே! தேவரீரைத் துதிசெய்யாத எல் லாருக்கும் பொய்ம்மையானவரே! தேவரீரைச் சரணமடைந்தோம். அடியேங் கட்கு வேறுபுகலிடமில்லை. எ - று. (௬௦)

கங்கை யாயடு சிலைமதற பொடித்தகண் ணுதலாய்
மங்கை பாகனே முனிவரா விடுத்தவுறும வடவைச
செங்கை யாயதிரி திரிபுரந தீயெழச சிரித்த
புஙக வாநினை யடைநதனம புகலபிறி திலலை.

(இ - ள்.) கங்கையை யணிந்தவரே! பலரையும் வருந்தச்செய்யும் கருப்பு வில்லேந்திய மனமதனை யெரித்த நெற்றிககணணையுடையவரே! உமாசமேதரே! தாருவனமுனிவா செலுததிய வடவாமுகாககினியைப பொருநதிய செவநத திருககரமுடையவரே! எஙகுநதிரிநத திரிபுரஙகளும தீபாமபடிபுனனகைபுரிநத கடவுளே! தேவரீரைச் சரணடைநதோம. அடியேஙகட்கு வேறுபுகலிடமில்லை.

பொன்னி றததவா ளசுரனை யாருயிர போக்கப்
பின்னு வெண்டிரைப பாறகடற றுயின்றருள பெருமான்
மன்னு வெஞசின மானுட மடஙகலாயத தோன்றி
யனன வறசெகுந தடஙகலன சீறறமிக கயாநதான.

(இ - ள்.) பொன்னிறமுடைய ஒளிதஙகிய இரணியனென்னும் அரக்கனை உயிரொழிககும்படி, பின்னிககொண்டுள்ள வெள்ளிய அலைகளையுடைய க்ஷீராப் தியில யோகநிததிரை செயயுந திருமால், நிலைபெறுஞ கடுஙகோபமுள்ள நர சிஙக மூர்த்தமாயுதிதது அவனைக கொன்றும கோபமடஙகாதவராய மிகவும் மயஙகினா. எ - று. (௬௨)

நினைத்து நீயுள வாக்கிய நெடுநிலத் தாக்கை
யனைததும வாயிலிட் டதுக்குவ தாணவத தவலந்
தனைபபெ ருககினின் றெமமனோ ரேககுறச சலிக்கும்
வினைக்கொ டுநதொழி லொழிதனெமா வெருவர லொழியாய்.

(இ - ள்.) தேவரீர் திருவுளததிற் கருதிப்படைதத நெடிய உலகத்திலுள்ள உடல்களையெல்லாம் தன்வாயிற்பெய்து மெல்லுகின்றது. அகஙகாரக்கொடு மைகளை யதிகப்படுததிககொணடு எஙகளைப்போனறவாகள் ஏககமுறும்படி திரி நதுகொண்டிருககின்றது. அதன செயகையாகிய குரூரத்தொழில்களை விலககி எஙகளுககுற்ற பயததைதத தீாததருளவீராக. எ - று. (௬௩)

எனவி ரத்தனு மெம்பிரான் றிருவரு ளிரங்கி
வினைய டுநதிறல் வீரபத திரபபெரும பெயரோன்

றனைய னைந்தெரி தழல்விழி மானுட் மடங்கற்
சினவு வெருஞ்செரு வொழித்தியென் றிசைத்தனுஞ் செல்வன்.

(இ - ள்.) என்றிப்படி யாசித்தவுடனே, எமது சுவாமிபருமான் திருவருளு டையராய்த் திருவுளமிரங்கி, தீவினைகளை யழிக்கும் வல்லபமுடைய வீரபத்திர ரென்னும் பெரிய பெயருடைய கடவுளையழைத்து, தீப்பொறி சிந்தும் விழிக ளையுடைய நரசிங்கத்தின் கோபத்தாலுண்டாகிய கொடும்போரை விலக்கக்கட வாயென்று கட்டளையிடவும், அதனைக்கேட்ட வீரபத்திரக்கடவுள். எ - று.

சரபப் பேருரு வெடுத்தன னளவொழி தடக்கை
விரவித திணிசிறை வெள்ளிடை புதைத்தற மீப்பாய்ந்
துரவுத திண்பத மெட்டினுங் கிளைத்தவொள ளுகிராற
கிரணப பொறகிரி யெடுபபினுங் கிழங்கெனக் கிழியும.

(இ - ள்.) சரபப்பக்ஷியின்பெரியவடிவேற்று எண்ணிறந்தனவாய்ப்பரந்த கைகளைப் பெற்று, வலியசிறகுகள ஆகாயததிற படியுமபடி உயரவெழுந்து பறந்து, வலிதங்கிய கடினமான கால்கள் எட்டிலும தோன்றிய வெண்ணிறமான நகங களால், ஒளிவீசும் மேருமலையை யெடுத்தாலும சாதாரணமான கிழங்குபோலக் கிழிபட்டுப்போம். எ - று. (௬௫)

வளைத்த வாயல கடிடபுறின் மாதிரங் குலுங்குங
கிளைதத வெஞ்சிறை யடிககொளி னுலகுசூழ கிடந்த
வுளைதத டநதிரை சுவற்றியண் டங்களங குரிதது
முளைதத வாமபியிற சிதைககுமச செயலையாா மொழிவார்.

(இ - ள்.) வளைவுள்ள வாயாகிய மூக்கினையடித்தால் பூமியுங குலுங்கும். பிரிந்த பெரிய சிறகுகளை யடித்தால் நிலவுலகத்தைச் சூழ்ந்துள்ளகடலின் விசா லமான அலைகளைச் சுவறச்செய்து சேறுபடுத்தி அண்டகோடிகளை யெல்லாம முளைத்துத்தோன்றிய காளானைபபோன றழிக்கும. அச்சரபத்தின செய்கையை எவர்தாமெடுத்துச் சொலலுவா. எ - று. [ஆமபி=காளான்] (௬௬)

போர்த்த வெஞ்சிறைக் கலுழனப பொறிபபெடை யளகின்
பார்பபெ டுதெ்தனப பாய்நதது படபிட ரமுக்கிக்
கூர்த்த வள்ளுகிா கோபபுறப புதைததது குருதி
யீாதெத டுததநு பெருநதிரை யிருங்கடன மடுபப.

(இ - ள்.) போர்வையாயக் கொண்ட கொடுஞ்சிறகுகளையுடைய அச்சரபம் புள்ளிகள் பொருந்திய பெட்டைப் பறவையானது தன் குஞ்சையெடுப்பது போலப்பாய்ந்தது. அநநரசிஙக மூாததததின பிடரினை யமுக்கிககூர்மை தங்கிய வெள்ளிய நகஙகள பதியும்படி யூன்றியது, உடனே அநநரசிஙகததின உடலினி ன்றும் உதிரமானது நீண்ட அலைகளையுடைய பெரியகடலும நிரமபும்படி பீறெ டுத்துப்பாய்நதது. எ - று. (௬௭)

கறித்து மிழ்ந்தது கரங்களைக் கதிர்முடிச சிரத்தைக்
கொறித்து மிழநதது குருதிகொப புளித்தது பஃறேண்
முறிதத முக்கிய திடிக்குர லெழுப்பிய முழக்கிர்
செறிதத புன்செருக் கிழநதுயி ரிழநததச சீயம்.

(இ - ள்.) அச்சரபம் நரசிங்கத்தின் கைகளையென்று துப்பியது. ஒளிதங்கிய கிரீடமணிந்த சிரசைக் கொறித்துப் பொடியாக்கித் துப்பியது. உதிரமுழுவதையும் வாயாற்கொப்புளித்தது. பலதோள்களைத் துண்டுசெய்து அழுத்தியது. இடிமுழக்கம் போலத்தொனியெழுப்பியது. அப்பொழுது நரசிங்கம் தனக்குள்ளே நிரம்பிய அற்பத்தன்மையுடையூ கர்வமகன்று உயிரிழந்தது. எ - று. (௬௮)

விரிந்த வாயால் கொடுக்குறக் கடித்ததன் மெய்த்தோ
லுரித்து வாங்கியச் சரபமென் றுருத்தவோ ருருவம்
பிரிந்து மீண்டனன் வீரபத் திரனெனும் பெயரோன்
சிரித்து முப்புர மெரித்தவன் றனதுழைச் சென்றான்.

(இ - ள்) விரிந்தவாயாகிய தன் ஆயுதத்தால் இறுகும்படி கடித்து, அந்த நரசிங்கத்தின் உடலிலுள்ள தோலையுரித்தெடுத்துக்கொண்டு வீரபத்திரரெனும் பெயர்பெற்ற மூர்த்திசரபப்பட்சியாய் எல்லோரும் அஞ்சும்படியேற்ற ஒப்பற்ற அவ்வுருவத்தைய்கற்றித் திரும்பி, புன்னகையால் புரமெரித்தவராகிய சிவபெருமானபா லெழுந்தருளினார். எ - று. (௬௯)

உரிந்த பேரத ளுவட்டெழு நதியோ டொருபாற்
சரிந்த வேணியோன் முன்னரி னமைந்தடித் தாழாப்
புரிந்த மானமுற் றிருகரந் தொழுதயல் போனான்
பரிந்த நான்முகத் தவனொடு மிமையவர் பணிந்தார்.

(இ - ள்.) உரித்த பெரியதோலை, ஊற்றெடுக்கும் கங்காநதியோடு ஒருபக்கவிற் சரிந்த சடையை யுடைய சிவபெருமான் சந்நிதியில் வைத்து, அவர்பாதங்களில் வணங்கி, விரும்பிய விமானமேலாரோகணித்து இருகரங்களாலும் சிவபெருமானை நமஸ்கரித்துக்கொண்டு, அக்கைலாயகிரிக்கருகிலுள்ளதமதிருப்பிடத்திற்கெழுந்தருளினார். உடனே அவரைப் பரிவுள்ளவர்களாகிய நான்குமுகங்களையுடைய பிரமனொடு ஏனைய தேவர்களும் பணிந்தார்கள். எ - று. (௭௦)

பங்க யாசனத் தயன்முதற் றேவர்நம் பரனைப்
பொங்கு பேருவ கையொடுப் பணிந்தனர் புரக்கு
மெங்க ளையக வீந்நுடை யாக்கொளென் றிசைத்தா
ரங்க ளையக னன்னது புரிதுமென் றசைத்தான்.

(இ - ள்.) கமலாசனமுடைய பிரமன்முதலிய தேவர்கள் நமது சிவபெருமானை, விசேஷித்த பேரானந்தத்தோடு வணங்கி எங்களை யிரட்சிக்கும் எமது தலைவரே! இத்தோலைத் தேவரீர் ஆடையாகத் தரித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அருட்கண்ணையுடைய சிவபெருமான் அப்படியேசெய்வோமென்று அத்தோலை ஆடையாகத்தரித்தருளினர். எ - று. (௭௧)

அரந்தை நீத்தன மென்த்தொழு தாங்கவ ரகன்றார்
பரந்த பாற்கடற் பள்ளியோ னப்பவந் தொலைப்பான்
கரந்தை சூடிதா ளருச்சனை புரிந்தவை கழியப்
புரந்த பூமக ளையகன் றன்னுழைப் புகுந்தான்.

(இ - ள்.) தேவர்கள் யாவரும் துயரமகன்றதென்று வணங்கி நீங்கினார்கள். பரவியாஷீராப்தியில் அறிதுயில்கொள்ளுந்திருமால், அந்நரசிங்காவதாரத்தானுண்டாகிய பாதகத்தைத் தீரத்துக்கொள்ளும்படி விரும்பி, பொற்கரங்களைக்கூடிய சிவபெருமான் பாதங்களையர்ச்சித்து, அப்பாதகம் நீங்கியவுடனே, உலகத்தைக் காத்துவந்த திருமகள் கணவராகிய திருமால் தமது பதவிக்கு எழுந்தருளினார்.

நரசிங்காவதாரசசருக்கம் முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் கஎ-க்குத் திருவிருத்தம். உ௲உ௮.

---

பதினெட்டாவது

# வாமனாவதாரச் சருக்கம்.

---

பொன்னி நன்னதி வளந்தரு வளவயற் புனனாட்
டன்ன மேயவண் டுறைக்கடன் மருங்குதெற் கடுப்ப
மின்னு வார்சடை யவனுறை வேதவா ரணிய
மென்னு மோர்சிவ சினகர மாங்கவ ணிருக்கும்.

(இ - ள்) நல்ல காவிரிநதிவளங்களைக் கொடுத்தலால் விளைகின்றவயல்கள் பொருந்திய [புனல நாடு=நீர நாடெனறும] சோழநாட்டில, அன்னங்கள் வசிக்கின்ற குளிர்ந்த துறைகளையுடைய கடற்கரையில் தென்றிசைக்கருகே, மின்னுகின்ற நீண்டசடையையுடைய சிவபெருமானவீற்றிருக்கும் திருமறைக்காடென்னும் ஒப்பற்ற சிவஸ்தலம் இருக்கின்றது. எ - று. (க)

ஒழுக்கு வார்சடை யெம்பிரா னொருமருங் கிருக்கு
முழுத்த வாண்மதி முகத்தினு டிருப்பெயர் ஞானம்
பழுத்த நாயகி யத்தலம் பழமறை யனைத்தும்
தொழுத்த குந்தின மரிமுதற் றேவருந் தொழுவார்.

(இ - ள்.) ஒழுங்காக நீண்டசடையையுடைய எமது சிவபெருமானுக்கு ஒருபக்கலிலமாந்திள்ள ஒளிமிகுந்த பூரண சந்திரனபோன்ற முகத்தையுடைய உமாபிராட்டியார் திருநாமம் ஞானமபழுத்த நாயகி அந்தஸ்தலமான தி பழைய வேதங்கள் யாவும் நாடோறும வணங்கத்தக்கது. திருமால முதலிய தேவர்களும அங்கே வணங்குவார்கள். எ - று. (உ)

ஆய வேதவா ரணியமுற் றருந்தவர் யாருந்
தூய மர்தவம புரிகுவ ராலயஞ் சூழ்வார்
பாய வெளவிடை யவனடி யவரகப் பதுமக்
கோயி லொத்ததம் மறைவனத் தணிமதிட் கோயில்.

(இ - ள்.) அருந்தவஞ்செய்வோரெல்லாம் அத்தகைத்தாகிய திருமறைக் காட்டையடைந்து, புனிதமான பெருந்தவத்தைச் செய்வார்கள் அச்சிவாலயத்தைப் பிரதக்கணஞ் செய்வார்கள். திருமறைக்காடென்னும் ஸ்தலத்திலுள்ள அழகிய மதிலையுடைய திருக்கோயிலானது, பாய்ந்து செல்லும் வெண்ணிறந் தங்கிய இடபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானடியார்களின் இதயதாமரையாகிய திருக்கோயிலை நிகர்த்தது. எ - று. (௩)

அத்த லத்திலோர் கங்குலி னரனொடு மழலைத்
தத்தை யன்னநா னமபழூத் தவணறு மலாபஞ்
மொய்த்த பள்ளியி னிருத்தலு முன்னரிற றீப
நெய்த்த லைச்சுடர் மழுங்குற வெமபிரா னிகழ்ந்தும்.

(இ - ள்.) அந்த ஸ்தலத்திலே ஓரிராப்பொழுதில சிவபெருமானோடு கிளிபோலும் மழலைச்சொற்களைப்பேசும உமாபிராட்டியாராகிய ஞானமபழுத்தநாயகியார், வாசம வீசும் அழகிய மலர்கள நிறைந்த சயனத்திலிருக்கும்போது, அவ்விருவர் திருமுன்பு நெய்யால் நிறைந்த ஒளியுள்ள நெய்த்தீபத்தின் காந்தி மழுங்கிற்று, அப்பொழுது சிவபெருமான திருவாயமலர்ந்தருளுகின்றார். எ - று. (௪)

உவந்த வன்பொடு மிந்ததிரி தூண்டுவா ருளரே
னிவந்த மூவுல கரசளிக குதுமென நிமல
னிவாநக பூங்குழ லிககபா டநதிறந தெய்தித்
துவண்ட வாததிரி தூணடுவ தியாமெனச் சொன்னாள்.

(இ - ள்.) சந்தோஷித்த அன்புடனே இந்தீபத்திலிருக்கும திரியைத்தூண்டுவாருண்டானால், அப்படித் தூண்டுவோருக்கு மேன்மை மிக்க திரிலோகராச்சியாதி பதியம அளிப்போமென்று சிவபெருமான பிராட்டியாரோடு திருவாய் மலர்ந்தருளினார். மலாமாலை யணிந்த கூந்தலையுடைய உமாதேயார் இககதவைத்திறந்து இங்கெய்தி, துவண்ட நெடியதிரியைத் தூணடுபவா ஒருவருளரோ வென்றனா. எ - று. (௫)

கால மீதிலத் தொடாவழி யிறங்கியோர் கருப்பை
கோல மென்சுடாத தடடினெப் குடித்தலு மதனபா
லாலு மென்றிரி யசைந்துநீணடதுவது காணுப
பால லோசன னகைததன னமபிகை பகாவாள.

(இ - ள்) இப்படிச் சமபாஷிக்கும சமயத்தில, ஒரெலியானது மேற்பரப்புவழியாகக கீழேயிறங்கி, அழகுற்றிருக்கும அத்தீபத்தின தட்டிலுள்ள மிருதுவான நெய்யைக குடித்தவுடன அவவெலியின வாலசைதலினால மிருதுவான தீபத்திலுள்ள அததிரியசைந்து நீண்டது அதனை நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் நோக்கி நகைத்தனா. அப்பொழுது அருகிருந்த பிராட்டியார் திருவாயமலாந தருளுகினறாா. எ - று. (௬)

இனிக்கொ டுத்திநீர்மூ வுலகமு மீங்கிதற் கென்னுத்
தனித்த கண்ணுத லளித்தன மெனுமொழி சாறறக்
கனித்த நெய்குடித் ததிரி தூண்டலுங் கடைபோய்ப்
புனைந்த வார்கழ லவுணனா யரசிற பொலிந்தான்.

(இ - ள்) இங்குள்ள இவ்வெலிக்கு இனி மூவுலகங்களின் அரசாட்சியுங் கொடுத்தருள்வீராக வென்க்கூற, ஒப்பற்றவராகிய சிவபெருமான் அங்ஙனமே யருளினோமென்னும் வார்த்தையைத் திருவாய்மலர்ந்தவுடனே, மதுரமான நெய்யைப்பருகி மீண்டும் அத்திரியைத்தூண்டுதலால், தேகாந்தியத்திற்போய் அசுரர்களிலே அலங்கரித்த நீண்ட வீரகண்டாமணி தரித்த மன்னனாய் விளங்கினான். எ - று. (௭)

எடுத்த மூவுல கத்தினுக் கோரிறை யாகி
விடுத்த வெண்குடை நிழற்றினன் விண்ணவர் பெருமான்
கடுத்த சிந்தையிற் றனைத்தொழப் பணித்தனன் கடும்போ
ரொடுக்கி யாண்டனன் மாவலி யெனும்பெய ருவந்தான்.

(இ - ள்) அப்படிப் பிறந்தவன் மாவலியென்னும் பெயருற்றவனாய், மேன்மைதங்கிய மூவுலகங்கட்கும் [illegible] மன்னனாய், விரிவாயிருக்கும் வெண்கொற்றக்குடையை நிழற்றி, [illegible] லைவனாகிய இந்திரனும் வருந்திய மனத்தோடு தன்னை வணங்கு [illegible] ட்டளையிட்டு, கொடூரமான யுத்தத்தைத் தவிர்த்து அரசு செய்தான். எ - று. (௮)

பொதுக்க டிந்தன னொருதனிக் கோன்முறை புரந்தான்
மதுத்த டஞ்சினைக் கற்பக வளமெலா நுகர்ந்தா
னொதுக்கு பாதலத் துட்படு வளந்தனி யுவந்தான்
விதுக்கொ ழுஞ்சடைப் பரமனை யாவரே வியவார்.

(இ - ள்) பொதுத்தன்மை நீக்கி, ஒப்பற்ற செங்கோன் முறைமை தவறாது அரசு செய்துவந்தான். தேன் சொரியும் பரந்த கிளைகளையுடைய கற்பக விருக்ஷந்தங்கிய தேவலோகத்திலுள்ள வளப்பங்களெல்லாவற்றையும் அநுபவித்தான். கீழ்ப்பட்டுள்ள பாதலலோகத்தில் விளங்கும் வளங்களெல்லாவற்றையும் தானே யநுபவித்தான். ஆனபடியால் இளஞ்சந்திரனைத் தரித்த சடையையுடைய சிவபெருமானை எவர்தாம் விரும்பமாட்டார்கள்? எ - று. (௯)

இந்தி ரப்பெருங் கடவுளை முதலினோ யாரும்
வந்தி ரந்துதங் குறைசொல வழங்குவ தானு
னந்த ரத்தவ ரலமரு நெஞ்சின ராகிச்
சந்தி தோறுமற் றவன்கொலு காத்தனர் சரிப்பார்.

(இ - ள்.) பெருமைதங்கிய இந்திரனாகிய கடவுள் முதலிய கடவுளரெல்ரெல்லாரும், இவன்பால் வந்து தங்கள் குறைகளைத் தெரிவித்துக்கொள்ள, அவரவர்கட்கு வேண்டுவனவற்றைக் கொடுப்பவனாயினன். தேவலோகவாசிகளாகிய தேவர்கள் யாவரும் சுழல்கின்ற மனமுடையவர்களாய் மாவலியின் கொலுமண்டபத்தைக் காலங்கடோறும் காத்துக்கொண்டு திரிவார்கள். எ - று. (௧௰)

பரிப்பெ ருங்கடல் பணைமருப் பொருதனிப் பனைக்கைக்
கரிப்பெ ருங்கட லடுபுலித் திரளெனக் கரந்து
விரித்த வெஞ்செருச் சேனைமிக் குயர்ந்தனர் விண்ணோர்
புரித்த வேவலி னுங்கவன் பணித்தன புரிவார்.

(இ - ள்) குதிரைகளென்னும் பெரிய கடலையும், பருத்த தந்தங்களோடு பனையைப்போன்ற ஒப்பற்ற ஓர் துதிக்கையையுமுடைய யானைகளென்னும் பெருங் கடலையும், கொல்லத்தக்க புலித் தொகுதிபோலக் கருநிற மெய்யினவர்களாய், மிகுத்த குரூரமாகிய போரினை விளைக்கும் சேனைகள் மிகப் பெருகின. தேவர்கள் யாவரும் அவன் இச்சித்த ஏவலின வழியே கட்டளை கொடுத்தவற்றைச் செய்வார்கள். எ - று. (௧௧)

கண்டு நோக்கியுட் கவன்றனன் காசிப னென்போன்
மண்டு வெஞ்செருக் குலிசத்தன் மகனுடை மறுக்கந்
திண்டி றற்படை யைந்துடை நாரணன் றிருத்தாள
கொண்டு சிந்தையி னமைத்தன னருந்தவங் குறித்தான்.

(இ - ள்.) காசிப முனிவரென்பவர் தமது புதல்வனாகிய மிக்க பெரும் போர் புரியத்தக்க வச்சிராயுதந் தாங்கிய இந்திரனுடைய மனத் துயரத்தைத் திருவுள்ளத்தி லறிந்து நோக்கி, மிக்க வலிதங்கிய பஞ்சாயுதங்களைத் தாங்கிய திருமாலின் பாதங்களைத் தியானஞ்செய்து தமது திருவுள்ளத்திலிருத்தி அரிய தவத்தைச் செய்தனர். எ - று. (௧௨)

வருத்து மாதவ மையிரண் டாயிரம் வருடந்
திருத்தி நோற்றன னந்நிலை திருமகள் கொழுநன்
மருத்த பைந்துழாய் மார்பினன் வனசிறை யுவணத்
தெருத்த மீப்பொலிந் தாங்கவற் கெதிருற வெதிர்ந்தான்.

(இ - ள்) தேகத்தை வருத்துகின்ற பெருந் தவத்தைப் பதினாயிர வருட காலந் திருத்தமாக விபற்றினர் அக்காலத்தில் லக்ஷ்மீ நாயகரும், வாசந்தங்கிய பசிய துளசி மாலை தரித்த மார்பினை யுடையவருமாகிய திருமால் வலிமை வாய்ந்த சிறகுகளைப் பெற்ற கருடன் பிடரியின்மேல் ஆரோகணஞ் செய்து அந்தக் காசிப முனிவருக்குப் பிரத்தியட்சமாகத் தரிசனந் தந்தனர், எ - று.

மூண்ட கூத்திரு நாயக னெதிர்ந்துற முனிவன்
கண்டு போற்றினன் க[illegible]பனி தூங்குறக் கனிந்தா
னண்டர் நாயக வினிதெ[illegible]ந் தருளமற் றடியேன
கொண்ட மாதவ மெ[illegible]ாலென் றெனப்புறக் குழைந்தான்.

(இ - ள்.) தாமரை மலரில் எழுந்தருளியிருக்கும் திருமகள் கொழுநராகிய திருமால் தரிசனந் தந்தவுடனே, காசிப முனிவர், அவரைத் தரிசித்துத் துதி செய்து கண்ணீர் சொரியும்படி மனமுருகினர் தேவர் தலைவரே! தேவரீர் இனிமையோடு இங்கெழுந் தருளுவதற்கு அடியேன் செய்துள்ள பெருந்தவம் யாது? என்று எனபுமநெக்குவிடக் குழைவுற்றனர். எ - று. (௧௩)

உருகு சிந்தையி னுவந்துறு முனிவனை நோக்கி
யரிது மாதவ மிழைத்தனை யாதரவெதுவோ
புரிதி யென்றன னிந்திரன் பொன்னினு டனைத்துந்
தருவு மாவலி பறித்தன னவைதரத் தகுமால்.

(இ - ள்.) இப்படி மனவுருக்கத்தோடு சந்தோஷித்த காசிப முனிவரை நோக்கி, நீ செயற்கரிய அரும் பெருந்தவஞ் செய்தனை. நாம் உமக்குத் தர வேண்டிய வரம் யாதோ? அதனை விரும்புக எனக் கட்டளை தந்தனர். இந்திரனுடைய தேவலோகங்களெல்லாவற்றையும் கற்பக விருட்சத்தையும் மாவலி அபகரித்துக் கொண்டான். ஆதலால் அவற்றையெல்லாம் மீட்டும் அவனுக்குக் கொடுத்தருள வேண்டும். எ - று. (௧௫)

பிறங்கு வச்சிரத் தவற்குநீ பின்னெனப் பிறந்து
மறங்கொண் மாவலி யடுதிறன் மடிந்திற மடித்துக்
கறங்கு வார்செவி வெண்ணிறக் கடம்பகட் டொருத்தற்
சிறந்த பேரர சளித்தியென் றருந்தவன் செப்ப.

(இ - ள்.) பிரகாசம் பொருந்திய வச்சிராயுதந் தாங்கிய இந்திரனுக்குத் தேவரீரே சகோதரராகத் திருவவதாரஞ் செய்து கொடிய மாவலியின் குரூரமாகிய வல்லபம் அழிந்திறக்கும்படி கொன்று அசைந்துகொண்டிருக்கும் நெடிய காதுகளும் வெண்ணிறமும் வலிமையுமுடைய ஆண் யானைமேலாரோகணித்து, சிறப்பு மிகுந்த பெரிய அரசாட்சிபுரிவாயாக என்று, அருந்தவஞ்செய்த காசிப முனிவர் வரங்கேட்கவும். எ - று. (௧௬)

ஆது செய்துமென் றருளினன் றுயிர மிதழ்ப்பூ
மாது மார்பினன் போயினன் வருமுனி யவற்குக்
காதன் மைந்தனிற் றோன்றினன் னுள்சில கழிந்த
தீதி றுன்மறை யளந்தனன் வளர்ந்தனன் சிறுவன்.

(இ - ள்.) ஆயிரவிதழ்களையுடைய செந்தாமரை மலரில் வசிக்கும் திருமகள் பொருந்திய மார்பையுடைய திருமால், அங்ஙனமே புரிவோமென்று திருவாய் மலர்ந்தருளினார். அதன்மேல், சிறப்புற்ற அக்காசிபமுனிவருக்குப் பிரியமுள்ள புதல்வராயவதரித்தனர். சிலபகல் கழிந்ததன்பிறகு, அப்புதல்வர் குற்றமற்ற நான்குவேதங்களையும் முற்று முணர்ந்து வளர்ந்து வந்தனர். எ - று. (௧௭)

வரமு னிக்குலத் துயர்ந்தருண் மாதவன் புனைய
விரத நூலபுனைந் தருமறைச் சடங்கொடு மேவிப்
பரவு மாதவர் யாவரு முவந்துறப் பயின்றுன்
முரணு டைத்தன துளக்குறிப் பொருவற்கு மொழியான்.

(இ - ள்) சிறந்த முனிவர் குலத்தில் மேன்மைபெற்ற காசிப முனிவர் (அப்புதல்வர்) தரிக்கும்படி வேதவிதிக்கிரமங்களோடு வேதியாகுரியவிரதமாகிய உபவீதமணிந்து, மாறுபட்டுள்ள தமது திருவுள்ளக் குறிப்பை ஒருவனுக்குமுரையாதவராய், தம்மைத் துதிசெய்கின்ற பெருந்தவம் பொருந்திய முனிவர்கள் யாவரும் சந்தோஷிக்கும்படி வளர்ந்து வந்தனர். எ - று. (௧௮)

உணர்த்த வேண்டுவ தியாவையு முணர்த்துறு துணர்ந்தான்
றணப்ப ருந்துறை யாகமத் தடங்கடல் கடந்தான்
புணர்த்த தாமரை நான்முகற் குணர்த்துவ பொலிந்தான்
மணத்த பசுசொளித் தருப்பையால் வயங்கிய கரத்தான்.

(இ - ள்.) அப்புதல்வர் தெரிவிக்கவேண்டிய வெல்லாவற்றையும் பிறர் தெரிவிக்காமலே தெரிந்துகொண்டார். விலக்குதற்கரிய துறையையுடைய ஆகமங்களென்னும் பரந்த கடலைக்கடந்தனர். மணம் வீசிப்பசிய நிறத்தோடு பிரகாசிக்குந் தருப்பைப் புல்லாலாகிய பவித்திரமணிந்த திருக்கரமுடைய காசிப முனிவர், இதனைக் கமலாதனத்துள்ள பிரமனுக்கு உணர்த்தச் சென்றனர்.

அனைய காலையின் வானவர் யாவரு மடைந்து
நினையு நெஞ்சொடும் வணங்கின ரேத்தினர் நின்று
புனைபொ லன்கழன் மாவலி வேள்வியொன் றியற்றி
வனைபொ லன்கலன் முதலிய யாவையும் வழங்கும்.

(இ - ள்.) அப்படிப்பட்ட காலத்தில், தேவர்கள் யாவரும் அங்கேயடைந்து, தியானிக்கின்ற மனத்தோடு வணங்கித் துதிசெய்து நேரே நின்று, சத்திக்கின்ற பொன்னாலாகிய வீரக்கழலணிந்த மாவலியென்பவன் ஒருயாகத்தைச்செய்து, அலங்காரந் தங்கிய பொற்காசுகள் திருவாபரணங்கள் முதலியவற்றை யெல்லாம் பலர்க்குந் தானங் கொடுக்கின்றான். எ - று. (௨௦)

எனவு ரைத்தனர் வானவ ரஃதுணர்ந் திரங்கி
நினையு நெஞ்சொடு முவந்தனன் மறைக்குல நிமல
னனையர் போதியென் றருளின னற்றமுற் றறிந்தான்
வனைபொ லன்கழன் மாவலிக் கருகுற வருவான்.

(இ - ள்.) என்று அத்தேவர்கள் தெரிவித்தார்கள். அந்தணர்குலத்துதித்த அமலராகிய காசிபமுனிவர் அதனையுணர்ந்து ஒரு கருத்துக்கொண்ட மனத்தோடு களித்தனர். அத்தேவர்களைப் போலவருகவென்று பிரமன்விடைதந்தனுப்பினன். பிறகு காசிப முனிவர் தக்கசமயமறிந்தவராய், பொற்கழல் தரித்துள்ள மாவலியினிடம் வருகின்றார். எ - று. (௨௧)

இத்தி றத்தினன் மாவலி யெனும்பெயர்த் திறலோன்
மெய்த்த நான்மறை வேள்வியின் றிறனுற விளைந்து
மொய்த்த மாமணிக் கதிரொளி முறைமுறை பரப்பு
மத்த னித்திரு மண்டபக் கொலுவுணர்ந் தடைந்தான்.

(இ - ள்.) மாவலியென்னும் பெயர்பெற்ற வல்லமையுடையவன், அச்சமயத்தில் இப்படி உண்மையான நான்கு வேதங்களிற்கூறிய விதிப்படியாக, கிருத்தியங்களைச்செய்து, நெருங்கியிருக்கும் சிறந்த இரத்தின கிரணங்களின் காந்தியானது வரிசைவரிசையாகப் பரவிய ஒப்பற்ற மேன்மைதங்கிய அழகிய கொலுமண்டபத்தைக்கண்டு சேர்ந்தனன். எ - று. (௨௨)

உதய மால்வரை நெடுமுகட் டுச்சியின் றுதிக்குங்
கதிர்செய் மாமுடி யிளவெயி லெறிப்பவக் கதிர்மேற்
பதங்கி வந்துதெள் ளமுதெனப் பனிக்கதிர் விரிக்கும்
புதுநி லாவென வெண்குடை விளங்கிமீப் பொலிய.

(இ - ள்.) பெரிய உதயகிரியின் நீண்ட சிகரத்தின் உச்சியினின் றுதிக்கின்ற சூரியன்போன் றுள்ள மேன்மைதங்கிய கிரீடமானது இளங்கிரணத்தை

வீச, அக்கிரணத்தின் மீது கால்வைத்த தேறித் தெளிந்த அமுதம்போன்ற குளிர்ந்த கிரணங்களைப் பரப்புகின்ற பூரணசந்திரனை யொத்த வெண்கொற்றக் குடை பிரகாசித்து மேலே விளங்கவும். எ - று. (௨௩)

பொன்னி லங்கிய கதிர்மணிப புனைகழ லடிக்கீழ்
முன்ன ருமபசும பொற்றிறைக் குப்பையி னோங்கிப்
பின்னல வெண்டிரை நெடுநிலப பெருங்குடைத் தனிக்கோன்
மன்னர் பொன்முடி தேய்த்ததுகு தாதிடை வயங்க.

(இ - ள்.) பொன்னாற் செய்து விளக்கமுற்ற, கிரணங்களை வீசும் மணிகள் பதித்தலங்கரித்த வீரக்கழலணிந்த பாதத்தின் கீழ்ர், நினைத்தற்கரிய பசும் பொன்னாகிய [திறை] பகுதிப் பொருளைக் குப்பைபோ லுயரும்படி கொட்டி, பின்னிக்கொண்டுள்ள வெண்மையாகிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த நெடிய உலகிலுள்ள, பெரிய சந்திரவட்டக் குடையையும் ஒப்பற்ற செங்கோலையுமுடைய மன்னர்கள் தமது பொற்கிரீடங்களைத் தேய்த்தலாற் சிந்துகின்ற பொற்பொடிகள் நடுவே விளங்கவும். எ - று. (௨௪)

வேரி நாண்மலர்க் கற்பக நறுந்துளி விடுக்குந்
தாரொ டுங்குழைந் தொருபுடை வெரிநுறச் சரிந்த
கார்கொ ழுந்துறுங் குழலிய ரெடுத்திடு கவரி
வார்கொ ழுந்தகன் மார்பினுந் தோளினும் வருட.

(இ - ள்.) மணந்தங்கிய தேனைச் சிந்திக்கொண்டிருக்கும் வாசந்தங்கிய அன்றலர்ந்த கற்பகமலர் மாலையோடே குழைவுற்று முதுகின் ஒருபக்கத்திற் சரிந்துள்ள, மேகமானது கொழுந்துவிட்டாற் போன்ற கூந்தலையுடைய அரம்பாஸ்திரீகள் கைகளிற்றாங்கி வீசும் வெண்சாமரைகள், நீட்சிபெற்றுய அகன்றும விளங்கும் தோள்களிலும் மார்பிலும் தடவவும். எ - று. (௨௫)

எம்மை நோக்குமென் றெடுத்தசைம் மரைகிழமகிட டிறைஞ்சிக்கார்
கொம்மை வெம்முலை மங்கைய ருடன்விண் ணவர்குழாமு
மம்ம வீங்கிவ ணுளக்கருத் தென்கொலென் றயிர்த்துந்
தம்மி லஞ்சிநெஞ் சலமரப் புடைபுடை தழுவ.

(இ - ள்.) குவிவாகிய வலிய தனங்களையுடைய மாதர்களும் தேவர்கள் தொகுதியும் எங்களைப்பார்ப்பானோ வென்று, சிரசின்மீது குவித்த கைகளாகிய அரும்புகளைத் தாழே தாழத்தாங்குவார்களாய, இவன் மனத்தின் கருத்து யாதோ வென்று ஐயமெய்தி, தங்களுக்குள்ளே பயமெய்துவார்களாய் மனஞ்சுழலும்படி அருகிலும் பக்கலிலும் தழுவிநிற்கவும். எ - று. (௨௬)

ஓவ ருந்திறற் பேரெழி லுருவமுற் றடங்கப்
பூவை வாய்ச்சியர் கருநெடுங் கண்ணிழல் புதைப்பத்
தேவர் யாவரு மசுரரு மறிவரு மருந்திகைத்து
வாவு திண்பரி யிந்திர னிவனென மதிப்ப.

(இ - ள்.) கெடுதற்கரிய தன்மைபொருந்திய பேரழகுள்ள அவன் உருவ முழுவதும் அடங்கும்படி நாகணவாய்ப்பறவைபோலும் சொல்லையுடைய மாதர்

களின் கருநிறமெய்திய நெடியவிழிகளின நிழல்படியவும், தேவர்கள் யாவரும் அசுரர்கள் யாவரும் திகைத்து, வலியுள்ளதாய்த் தாவிச்செல்லுங்குதிரையையுடைய இந்திரன இவனென்று மதிக்கவும். எ - று. (௨௭)

திருந்து குங்குமச் சேதகத் திருநெடு மருமத்
திருந்த பன்மணிக் கலனுமிழ்ந் தெறிகதிர்க் கற்றை
யொருங்கு வார்ந்தவர் குளப்படு மந்திரத் தூளராய்
மருங்கு நிற்பவர் கட்புலத் தவிரொளி மறைப்ப

(இ - ள்) திருத்தமாகிய குங்குமக்குழம்பணிந்துள்ளதாய் அழகுற்று நீண்டமார்பில் அணிந்திருக்கும் பல்வகை இரத்தினாபரணங்கள் காந்திவீசுகின்ற கிரணத்தொகுதி, முழுதொருங்கு [illegible] முதியோர்கள் திருவுள்ளத்தில தியானிக்கின்ற மந்திரங்களின் ஒலிபோலப் பக்கலிருப்போருடைய கட்புலத்தில விளங்குகின்ற காந்தியை மறைக்கவும. எ - று. (௨௮)

வானரம்பையர் மாநில மடந்தையர் வரம்பி
லேனை நாகர்தம் மிந்நகையர் மிளமயி லனையார்
கானநாடக நாட்டியக் கருவியொத் தியைப்ப
மேனி வந்தெழு சதிமுறை மென்மெல மிதிப்ப.

(இ - ள) தேவலோகத்திலுள்ள அரம்பா ஸ்திரீகளும், பெரிய பூலோகமாதர்களும் எண்ணில்லாத ஏனைய நாகலோகத்தில வசிப்பவர்களான இளமைதங்கிய மயில்போலுஞ் சாயலையுடைய மாதர்களும், மேம்பாடு தங்கியுயர்ந்த சதிமுறைக்குப் பொருந்த மெல்லமெல்லக் கால்களைப் பெயர்க்கும்படி நாடகத்திற்குரிய நடனத்தை இசைபொருந்தச் செய்யவும். எ - று. (௨௯)

பள்ளத் தெண்டிரைப் பரவைநீர் நெடுநிலப் பரப்பி
னுள்ளப் பட்டெழு வறியவர் மறையவ ருவப்பக்
களிகொளாத் தீர்த்த மவிழ்ந்தசெங் கமலமொத் தொருகை
வள்ளற் றன்மையி னளவிய பெருநிதி வழங்க.

(இ - ள்.) ஆழமுற்றுத் தெளிந்த அலைகளையுடைய நீர் நிரம்பிய கடல் சூழ்ந்த நெடிய நிலவுலகத்தின பரப்பில், தியாகங்கொடுக்கப் பெறுவோமென்று கருத்துடன்கொண்டடைகின்ற தரித்திரரும் அந்தணரும் சந்தோஷிக்கும்படி குளிர்ந்த இதழ்கள் மலர்ந்த தாமரைபோன்ற அவன் வலக்கையானது, உதாரத்துவத்திறத்தினால், அத்தாமரைமலர் பொழிகின்ற தேனைப்போல விசேட திரவியங்களை வாங்கித்தானஞ் செய்யவும. எ - று. (௩௦)

பூவு நீருமிட் டிருநில மெமக்கெனப் புரந்தா
னாவு மாநிதிக் குப்பையு மெங்கரத் தளித்தான்
பாவை கன்னிகை யளித்தன னெமக்கெனப் பகர்ந்து
தேவு நான்மறை யந்தணர் புறம்புகச் செல்ல.

(இ - ள.) எங்களை யபிடேகித்து மலர்களா லர்ச்சித்து விசேட நிலத்தை எங்களுக்கு உரித்தாம்படி செய்தான. எங்கள் கைகளில பசுவையும் பெருந் திரவியத்தையுங் கொடுத்தான. அன்றியும் பதுமையொத்த கன்னிகைகளை

எங்களுக்குக் கொடுத்தானென்று (தனித்தனி) சொல்லிக்கொண்டு (யாசகர்கள்) வெளிப்படச் சென்றுகொண் டிருக்கவும். எ - று. (௯௧)

கயற்க ருங்கட லுலகுளோ ரேற்றவை கருதிப்
புயற்பொ ழிந்தெனப பொழிந்தில மென்பது புலந்து
வியப்பெ ழுந்தன துளத்தொடும் வேதவே தியராய்
நயப்பி னேற்பவா வருநெறி கட்புல நடபப.

(இ - ள்.) மச்சங்கள் சஞ்சரிக்கும் கருங்கடலாற் சூழப்பெற்ற உலகிலுள்ளார் யாவரும எணணி யாசித்த பொருள்களை மேகம் பொழிவதுபோலே ஓயாமற் சொரிந்திலோமென்று கருதி வாட்டமெய்தி, பின்னாச்சந்தோஷ மதிகரிக்கும் சித்தத்தோடு வேதங்களை யுணாந்த வேதியாகளாய் விருப்பத்தோடு தான மேற்பவாகளவரும வழியிலே தன் விழிகள சென்றுகொணடிருக்கவும, எ - று.

பாந்த ளாயிரம பஃறலைப் பரப்புறப் பரந்து
காந்து பனமணி யிளவெயி லெறிப்பவெங கனலிற்
சேந்த கட்டிணை வாளரி வெரிநுறச செறிபப
வேந்து பொறறகட டாசனத தினிதுவீற றிருந்தான்.

(இ - ள்.) ஆதிசேடன் ஆயிரமெனனும தன் பல தலைகளையும பரவும்படி பரப்பி யொளிவதுபோல, பலவகைபபடட இரத்தினங்கள இளங கிரணங்களை வீச, கொடிய நெருப்புப்போற செவநதுள்ள இருவிழிகளைப் பெறற காநதி பொருநதிய சிஙகங்கள தமது முதுகினமேற் பொருநதுமபடி சுமந்துகொணடிருக்கும் பொறறகட்டா லாகிய ஆசனத்தின்மேலே இனிதாய வீற்றிருநதனன். எ - று. (௯௩)

கொள்வ யாவையுங் கொடுத்தனன் குறைநிரப் பினனு
யுள்கு சிந்தையி னுவகைநின றிரைதெழு முவபபிற
களவி டுநதொடை மோலியா னிருநததனுங கருதாந
தௌவ ரும்பழ நானமறை வாமனன செல்வான.

(இ - ள.) தானங்கொள்ளததகக எலலாவற்றையும் எல்லாருககுங்கொடுத்தவனுகி, பலா குறைவுபாட்டையும பூரணபபடுததினவனுகி, அவற்றுலெணணிய சித்ததகோடு களிபபுணடாகி அதிகரிதநுயாகின்ற சநதோஷத்தினல், தேன் சிநதும மலா மாலையணிநத [illegible]ந்தையுடைய மாவலி வீற்றிருககையில் அச்சமயததைச் சிநதிததுப் ப[illegible] ரகப ஈானகு வேதஙகளையுந தெளிநதுணாநத வாமனா அஙகே செ[illegible]றனா. (௯௪)

பஞ்சி னெல்கிய பதத்தின்ன பனமுறை பதிப்பா
னெஞ்சி னெல்குறு நெடுநில நெருபபென மதிபபான்
முஞ்சி யனபசுந தருபபையன் மனபதை முகததி
னெஞ்சு நோககினன விசிததிடுங கோவணத துடையான்

(இ - ள்.) பஞ்சைககாட்டினும் மெலலிய பாதமுடையவரும், பலமுறை கடவுளைச் சிநதிதது மனமுருகுகினறவரும, நெடிய நில வுலகைக கண்டு தீப்போன்று மனதிற் பயமெய்துபவரும, முஞ்சிப் புல்லையும பசுநிறநதஙகிய தருப்பைப் புல்லையு முடையவரும, மனிதா முகததைக்கணடால் நாணமெயதும் பார்வை யுடையவரும், கோவணவுடை தரிததுககொணடுள்ளவரும் எ -

நூலொ டும்படச் சாத்துமான் றோலின னுவலிற்
பாலெ னத்தெளி மூறுவலன் பவித்திர விரல
னூலு மாமறை யோருரு வெடுத்ததே யனையான்
கால மோர்ந்தறி யாகமப் பெருங்கலைக் கடலான்.

(இ - ள்.) உபவீதத்தோடு கலக்க வணிந்துள்ள மான்றோலுடையவரும், வசனிக்கும்போது பால்போலுந் தெளிவான புன்னகை யுடையவரும, பவித்திர மணிந்துள்ள விரலுடையவரும், ஒலிக்கின்ற சிறந்த வேதங்களெல்லாம ஒருவடி வெடுத்தாற் போன்றவரும், முக்கால வாத்தமானங்களையும ஆய்ந்தறிதற் கேது வாகிய ஆகமமென்னும் பெரிய சாத்திரக்கடல் போன்றவருமாக, எ - று. (கூசு)

வரவு நோக்கின னடுதிறன் மாவலி வரக்கண்
டுரவு சிந்தைநெக் குருகின னெதிரெழுந் துற்றுன்
பரவி யாங்கவற் கியைவன யாவையும பயினமுன்
விரவு மாமணி யாசனத் திருத்தினன் விருப்பான.

(இ - ள்) இத்தகைய வடிவோடு அங்கே யெழுந்தருளவும, மிகு வல்லபம் படைத்த மாவலியென்போன இவா வருகையைநோக்கி உணர்ச்சியுள்ள சிந்தை யோடு மனம நெக்குவிட்டுருகியவனாய, எதிர்கொண்டு சென்று நெருங்கித் துதி செய்து மிக்க விருப்போடு அவருக்குச் செய்யவேண்டிய உபசாரங்களை யெல் லாஞ் செய்து, சிறந்த இரத்தினங்கள் பதித்த ஓராசனத்தில வீற்றிருக்கச் செய்தனா. எ - று. (கூஎ)

கொள்ளை மாதவ மியாவையு மொருவழிக் கொண்ட
பிள்ளை நீயிவ ணெய்தயான பெற்றபே றெளிதோ
வுள்ளம வேண்டுவ யாதொலென றடிக்கடி யுவந்தான்
வெள்ள வாரகடற் றுயிலொழிந் தெய்தியோன விளம்பும.

(இ - ள்.) அநேக கோடிகளாயப் பரந்துள்ள பெருந்தவங்கள யாவும் ஒரு ருவெடுத்த பிள்ளைப் பருவமுடைய தேவரீா இங்கெய்துமபடியாக அடியேன பெற்றுக்கொண்ட பயன எளிதானதோ? தேவரீா திருவுளத்தில எண்ணியது யாதோ? என்றடிக்கடி விருப்போடு வினவினன. வெள்ளமாயப் பரந்த நீண்ட பாற்கடலில அறிதுயில் புரிவதகன்று வந்த வாமனா திருவாயமலாந்தருளு கின்றாா. எ - று. (கூஅ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மறைமுக மொழிந்த வேள்வி யாவையு மரபின் முற்றுந்
துறைமுக நடந்த சிந்தைத் தூயைநீ நினனில் யாரே
நிறைகுணத் தியாந்தோாக் கீந்து மேம்படு நிலையி னின்று
ரறைகழ லரச கேளா வதிசய மடைந்த தெம்பால.

(இ - ள்.) வேதத்திற் சொல்லிய யாகங்களெல்லாவற்றையும் முறைப்படி முடிக்கும் வழியிற் சென்ற மனமுடைய புனிதமானவன நீயே. சத்திக்கின்ற வீரக்கழல் தரித்தமன்னனே! சத்துவகுணமுடைய சாதுக்களுக்குத் தானஞ் செய்து உன்போல மேம்பாடான நிலைமையிலிருந்தவாகள வேறெவர்கள்? இப் படி நீ செய்வது கேள்வியுற்று எம்முடைய மனதில அதிசயம் உண்டாயிற்று.

கோட்படு குலிசி தன்பாற் குறுகல மலக மீன்ற
தாட்படு கமலத் தோனிற் சார்கலந் தகைசால் வேள்வ
நாட்பட நடத்தி முற்று நின்னுழை நணுகி னேமோர்
வேட்கையி னஃது நம்பாற் றந்தற வேண்டு மென்றான்.

(இ - ள்.) பலரையும் வெல்லுங்கொள்கையுடைய வச்சிராயுதமேந்திய இந்திரன்பாற் போனேமில்லை. உலகங்களைப் படைத்த நாளத்தையுடைய கமலாதனனாகிய பிரமன் பாற்போனேமில்லை. பெருமைமிக்க யாகங்களைப் பலகாலமாக நடத்திமுடிக்கின்ற உன் பால் ஒருவிருப்பெய்திவந்தோம். விரும்பிய அப்பொருளை நம்பாற்றரவேண்டுமென்றுரைத்தருளினர். எ - று. (சo)

எத்தவம் புரிந்தே னைய வஃதுநீ யியைந்து கேட்ப
மத்தமால் யானை வேக வயப்பரி கொடிஞ்சி மான்றேர்
மொய்த்தமா நிதியக குப்பை கலன்பல முதல யாவுஞ
சித்தமோர்ந் தருளி னினனே வழங்குவன் செல்வ வென்றான்.

(இ - ள்.) ஐயனே! யான் யாது தவம்புரிந்தேன்? தேவரீர்விரும்பிய அதனை மனவிருப்போடுகேட்பீராக. மதமயக்குடைய பெரிய யானை - வேகத்தையுடைய வல்லமைபொருந்திய குதிரை - சிகரத்தோடு கூடிக குதிரைகள் பூட்டிய தேர் - விசேடமாயச் சிறந்த திரவியக குவியல்கள் - பலவகையாபரணங்கள் முதலியனவெல்லாந் தேவரீர் திருவுளத்துணர்ந்து, தெரிவிப்பீராயின், செல்வமுடையோரே! இப்போதே கொடுப்பேன். எ - று. (சக)

நெடுமுடிக் கொடிஞ்சி மான்றேர் நீணிதி நிறைத்த குப்பை
படுமணிக கலனக ளம்பொற பசுந்து கிற றானை தானை
விடுபரி முதல யாவும் வேண்டலம வேண்டி னேமெம்
மடிதொடு மளவை மூன்று நினனிலத் தளித்தி யென்றான்.

(இ - ள்.) நீண்ட சிகரம் போன்றகொடிஞ்சி யுடைத்தாயக குதிரைகள் பூட்டிய தேர்களும, மிககதிரயம நிரப்பிய குவியலும, ஒளிதங்கிய இரத்தினாபரணங்களும், பசும்பொனனாலாகிய அழகிய ஆபரணங்களும, பீதாம்பரங்களும, சேனைகளும், செலுத்தத்தக்க குதிரைகளுமாகிய இவற்றையெலலாம் விரும்பினேமில்லை. உமமுடைய பூமியில எமமுடைய பாதத்தால் அளககப்படுவதாகிய மூனறடி நிலமே விரும்பினேம. எமககுத் தானஞ்செயக வென்றிரந்தனா.

மூவடி மண்ணி னைய செய்வதென் மொழிதி யென்னத்
தேவுயர் தவத்துச சிந்தை செய்தவ ணிருந்து செய்வே
மாவது புரிதி யென்று வறைந்தன னமல னன்றே
னீவது முயன்றான் வெள்ளி யருகுநின் றினைய சொல்வான்.

(இ - ள்.) ஐயா! மூன்றடி நிலத்திலே தேவரீர் யாதுசெய்வது? திருவாய் மலர்ந்தருள்கவெனப் பிரார்த்திக்க, கடவுளைத் தியானஞ்செய்துகொண்டு அங்கேயே யிருந்துபெருந்தவஞ் செயவேன். ஆதலால், அம்மூன்றடி நிலத்தைத் தானஞ்செய்கவென்று வாமனாவதாரங்கொண்ட திருமால் திருவாய்மலர்ந்தனர். அதனைக் கேட்ட மாவலி அப்படியே தானஞ்செய்தற்கு எத்தனித்தான். அப்போது சுக்கிரன் (அசுரகுரு) பக்கலிலிருந்து இப்படிச்சொல்லுகின்றான். எ-று.

பிள்ளையென் றிவனை யோர்த லேழமை பெருந்தோட் டுந்தி
வள்ளவாய்க் கமலத் தோற்கு மளவொழி வரம்பி னின்றான்
பள்ளநீர் வேலை ஞால முழுவதும் பயந்து பல்வே
றெள்ளுமெண் ணெயுமொத் தெல்லா வுயிர்தொறு மியைந்து நின்றான்.

(இ - ள்.) (இங்கே யாசிக்கவந்துள்ள) இவரைச் சிறுவரென்றுமதித்தல் அறியாமையாகும். இவரோ பெரிய இதழ்களுடையதாய கிண்ணம்போல வாய் படைத்த தாமரையினடுவேயுள்ள பிரமனுக்கும அளவிடற்கரிய நிலைமையிலுள்ளவர். அன்றியும் ஆழமுடைத்தாய நீர் நிறைந்த கடலசூழ்ந்த உலகமுழுவதையும் படைத்து எல்லாச் சீவராசிகடோறும் பலவேறுவகையாய் எள்ளும் எண்ணெயும்போல் நிறைந்துள்ளவர். எ - று. (௭௭)

பாயிர முகத்து நூறகும் பழமறைப பொருட்கு மெட்டாச்
சேயவன் செய்வ செய்வோன செயபபடுங கருவி யாகி
மேயினோ னுலக மெல்லா முண்டவன விளங்கா மாயத்
தாயவன றன்மை நின்னா லளபபரி தைய வென்றான,

(இ - ள்.) பரப்பாகச் சொல்லப்பட்ட சாததிரஙகட்கும் பழமையாகிய வேதககருததுககுமெட்டபபடாத அதிதூரததிலுளளவா. செயதொழில் செய்வோன செயயுஙகருவி என்பன மூனறுந தாமேயாகி விளஙகுகினறவா. உலகஙகளையெலலாம உணடுமிழ்நதவா. தெளிவறற அருமையுடைய மாயததன்மையால அவா நிலைமையை, ஐயனே! உனனால அளபபரிதாகுமெனறு கூறினன்.

கொடுபபன முறையி னோாந்து கொடுததநீ கொடுப்ப தோாபா
லடுத்துநின றொழிபப தாகா நினகருத் தளந்து கோடி
விடுததன னொழிநதே னெனறான வெளளியும விரைதது மாயோன்
மடுததெறி சிறைககா லலருங கலுழனை மனததி னோாந்தான்

(இ - ள) தானஞ்செயயவுறறை முறைப்படியுணாந்து கொடுததுவந்த நீ, இப்போது கொடுபபதை மடடும ஒரு பககலிற்சோந்து நின்று நான்தடைசெய்வது தகாது ஆதலால உன கருததில ஆராயந்துகொளளககடவாய. இதோ நான விட்டுப்போகினறேனெனறு சுககிரன சொலலினன. அபபொழுது வாமனராயிருககினற மணநதஙகிய துளசிமாலை தரிதததிருமால நிறைநது வீசுஙகாற்றைச் சிறகுகளுணடாககுகினற கருடனைத திருவுளததெணணினா. எ - று.

கஞசமொத் தலாந்த மேக வண்ணனாற் கருதப் பட்ட
வெஞ்சிறைக் கலுழன் றாழா வெளளியை யளளிக கொண்டான்
மஞசிவர்ந் தியஙகா நினற வானிவாந தெழுநதா னேககி
யஞசின னலஙகற றிணடோள வாளெயிற றசுரா கோமான்.

(இ - ள்.) தாமரைமலர்கள பூதத மேகமபோலுந திருமேனியை யுடைய திருமாலினாற் கருதப்பட்ட பெருஞ் சிறகுகளையுடைய கருடன் இறங்கிச் சுக்கிரனைத் தூக்கிக்கொண்டு உடனே மேகஙகள வநது குடியிருநது சஞ்சரிக்கும் ஆகாயததின்மேற் பறநதான். அதனை மாலைதரிதத தோள்களையும் கூர்மைதங்கிய பறகளையுமுடைய அசுரர் தலைவனான மாவலிகணடு பயநதான். எ - று.

உநதியம் பொருட்டி னண்ட மெவற்றையு முவப்பி னீன்ற
பைநதுழா யலஙகன் மாயோ னெம்முழைப் பரிவி னெயதி
முநதிநின் றெனது மண்மேன் மூவடி யிரபப வெமமோர்
தந்தமா தவங்கொ லின்னே யளிபபது தரும மென்ன.

(இ - ள்.) தமது அழகிய உநதித்தாமலரயினின்றும் அண்டகோடிகளை யெல்லாம் சநதோஷத்தோடு பெற்றவராகிய பசியதுளசிமாலை யணிநத திருமால் என்னிடததில் அன்புடன்வநது என்கண் ணெதிரே நின்றுகொணடு என் நிலததிலே மூன்றடிமண யாசிததற்கு எமமுன்னோாகள் செயத பெருநதவங தானோ? ஆனபடியால் அவருககுத தானஞ்செயவதே தருமமாகுமென்று. எ-று.

முருகவிழ் மலரோ டள்ளி முக்கைநீா முகந்து விட்டா
னருணமுறை யஙகை யேநதி நிலததிடைக கவிழததா னையன்
றிருகுவா ளெயிறறு வேநத னுதவிய திவலைத தெணணீா
தருநிழ லவறகு முனனை யமிழதினுந தககதனறே.

(இ - ள்.) மணமவீசப்பெறற மலரோடெடுத்து முன்கையினால்நீரையள்ளி விட்டான். அப்பொழுது குறளவடிவேற்ற திருமால் திருவருணமுறைமை யால், அநநீரைத தமதுஉளஙகையிலேறறுப் பினனா நிலததில் விடுததனா. முறுககுடையதாய ஒளிதஙகிய பறகளையுடைய மாவலி, வாமனா கையில்விடுதத துளிகளோடு கூடிய தெளிநத நீரானது, கறபகவிருட்சததின் நிழலிலுளள தேவாகளுககு முறகாலததிறறநத அமுததததைக காட்டிலுஞசிறநதது. எ-று.

சேண்பட நிவநத தெநதை திருமுடிச சிகரந் தீண்டி
மாண்படு திசைக ளெலலா மறைததன புயஙகண் மண்மேற்
கோண்படு திகநத முறறுங கரநதன வுருவங கூாநது
காண்பன வெல்லாந தானே யெனபன காட்டி நின்றான்.

(இ - ள்.) அபபொழுது எநதையாகிய திருமாலின கிரீடததுச்சி ஆகாய மளாவி யுயாநதது. அவாதோளகள மாட்சிமைபெறற திசைகளிலெலலாம் நீணடு அவறறை மறைததன. நிலவுலகததின் மேறகொளளபபடுகிற திசைக ளின முடிவுகள முழுவதும அவா அவயவஙகளை யெலலாம் மறைததன. இவ் விசுவரூபததால ஆனமாககள தெளிநது பாாபபவை யெலலாம தாமேயாயிருக கின்றாரென்பதை விளககி நினறனா. எ-று. (௫௦)

ஏநதிரு நிலததை யோாதா ளடக்கிய தெவையுந தாங்கித்
தோய்நதெழு வடபான மேருச சுறறுவிட் டெழுநது மீபபோம்
பாநதளி னிவநத தோாதா ளோாபதத தளவை காணா
சாயநதனன மகுடச சென்னி மாவலி தகுவா கோமான.

(இ - ள்.) ஆதிசேடனாற் றாஙகப்பட்ட பெரிய நிலவுலகத்தை அவருடைய ஒருபாதம் அடககிற்று. மறறொருபாதமானது அண்டகோடிகளை யெல்லாம் தாஙகிககொணடு நிலததிலழுநதி வளாநதிருககும் வடதிசையிலுள்ள மேருமலை யைச் சூழ்நது உன்னதமாயச செல்லும சாப்பம்போன்றோஙகியது. வேறோரடியளப்பதற்கு இடஙகாணாதவராய, அசுரர் தலைவனாகிய மாவலி மகுடமணிநத தலையை வளைததனன். எ-று. (௫௧)

சங்குசக் கரங்கை தாங்கு தாமரைத் தடக்கட் பச்சைக்
கொங்கலர் துளவோ னீலப் பொருப்பெனு நிவந்த கோல
மங்கண்மா ஞாலத் துள்ளோ ரசும்புறு பசும்பொ னாட்டோர்
பொங்குபே ரன்பி னோடுங் கண்டுகண் புலப்ப நின்றார்.

(இ - ள்.) சங்கு சக்கரங்களைத் திருக்கரத்திற் றாங்கிய, தாமரைமலர்போ லும் பரந்த கண்களையுடைய, மணங்கமழுந் துளவமாலை யணிந்த திருமால், நீலமலைபோல வளர்ந்த அவ்விசுவரூபத்தை இடமகன்ற பெரிய பூமியிலுள்ள மாந்தர்களும், பசும்பொன் மயமாய வழுவழுப்புள்ள தேவலோகத்திலுள்ள தேவர்களும் மிகுந்த பேரன்போடு தரிசித்துக் கண்கள் களிப்பெய்துமபடி யிருந் தார்கள். எ - று. (௩௨)

விண்முக டளந்து நின்ற சேவடித் தலத்து விண்ணோர்
தண்மல ரிடைய றாது சொரிதலாற் றனை நீங்கா
மண்மகள் குளிரப்ப நின்ற மலரடி மறையப் போர்த்துத்
திண்டிரு திசுந்த மெட்டு நாறின தெய்வத் தண்பூ.

(இ - ள்) ஆகாயமுகட்டை யளந்துகொண்டிருந்த அவ் வாமனருடைய பாததாமரையில், தேவர்கள் குளிர்ச்சி தங்கிய கற்பக மலர்களை இடைவிடாது சொரிந்துகொண்டிருப்பதால், தம்மைவிட்டு நீங்காத நிலமகள் குளிர்ச்சி யெய் தும்படி அளந்துகொண்டிருந்த மற்றொரு பாததாமரை மறைவுபடப் பெய்திருந்து தேவலோகத்திலுள்ள குளிர்ந்த கற்பக மலர்களின் மிக்க மணமானது அஷ்ட திக்குகளிலும் பரிமளித்தது. எ - று. (௩௩)

தாமரைத் தவிசின மேலோ னிந்திரன் முதலோர் தந்த
தேமரு தருவி னோங்குந் திணசினை முகிழ்த்த மென்பூப்
பாமரு நெடுநீ ராடை யகனிலம் பரக்க லாலப்
பூமக ளென்னுந் தன்மை காட்டினள் புவனப் பூவை.

(இ - ள்.) கமலாசனத்தின்மீது விளங்கும் பிரமதேவன் இந்திரன் முதலா னோ ர் அர்ச்சித்த தெய்வீகம்பொருந்திய கற்பகவிருக்ஷத்திற் றழைத்த வலிய கிளைகளில் அரும்பிய மிருதுவான மெல்லிய மலர்கள், பரவிய சமுத்திரத்தை ஆடையாக வுடுத்த இடமகன்ற நில வுலகமாகிய பூமிதேவியின்மீது பரம்பியிருந் ததலால் அப்பூமிதேவியானவள் தானே பூமகளென்னுந் தன்மையைக் காட்டி நின்றனள். எ - று, (௩௪)

மீயுயர் விசும்பு பூத்த மீனின மெல்லென் குல்லைப்
பாயொளி மருமந் தாழு முத்தினைப் பகையா நிற்பச்
சேயொளி பரப்பி வையத் திருளறச் சிதைக்குந் தெய்வக்
காய்கதிர்க் கடவுண் மற்றோர் கவுத்துவ நிகர்ப்பத் தம்மா.

(இ - ள்.) மிக வுயர்வான ஆகாயத்தில் விளங்கும் நக்ஷத்திரக் கூட்டங்கள், மிருதுவாகிய துளபத்தின் பசிய நிறமானது பாயகின்ற ஒளிதங்கிய திருமால் தமது திருமார்பிலணிந்துள்ள முத்துமாலையை விரோதித்துக்கொண்டிருக்கவும், அதி தூரத்திலிருந்து பிரகாசித்து உலகிலுள்ள இருட்டொகுதி யகலும்படி யழிக்கின்றவனும் தெய்வீகமாய வெப்பந்தங்கிய கிரணங்களை யுடையவனு மாகிய சூரியன, மற்றோர் கௌஸ்துப மணிபோன்று விளங்கினன். எ - று. ()

மந்தரந் திரித்து முன்னைப் பாற்கடல் வயிறு நோவ
வெந்திரத் தியற்று நின்று கடைந்தநா ளிமையோர் போற்று
மிந்திர னரசி னோங்க வக்கட லிடத்து நின்றோர்
சந்திர னெழுந்த வாபோற் றனிக்குடை நிவந்த தன்றே.

(இ - ள்.) முற்காலத்திலே மந்தரகிரியைச் சுழற்றி ஓர் யந்திரமாக நாட்டித் திருப்பாற்கடலின் வயிறு நோகும்படி கடைந்தகாலத்தில், தேவர்கள் துதிசெய்கின்ற இந்திரன் தேவலோக அரசாக்ஷியில் மேம்பாடெய்தும்படி அந்த க்ஷீராப்தியினின்று ஒரு சந்திரன் உதித்தாற்போல ஒப்பற்ற ஒருகுடையானது அவர் திருமுடிமே லோங்கியது. எ - று. (௰௪)

கற்பக நாடு காக்கு மாயிரந் தடங்கட் புத்தேண்
மற்பகத் திரண்ட திண்டோள் வானவ ரெவரு மெய்தி
யற்பகற் றரந்த வாபோ லருந்துயா கழிய நின்றார்
முற்பக லெவர்க்கு மெட்டா முளரியம் பதத்து வீழ்ந்தார்.

(இ - ள்.) தேவலோகத்தை ரக்ஷிக்கின்ற ஆயிரங் கண்களையுடைய இந்திரனும், யாவரும் வலிமையுங் கெடும்படி திரண்ட திணணிய தோள்களையுடைய தேவர்களெல்லாரும் வந்து, சூரியகாந்தியில் இருளை யகற்றினாற்போலத் தங்களுக்கிருந்த கொடுந்துன்பமொழிந்து முற்காலத்தில் யார்க்குமெட்டாதிருந்த அந்த திருமாலின் தாமரை மலர்போல அழகிய திருவடிகளில் வணங்கினார்கள்.

எந்தைநீ யெம்மை நோக்கி யெய்திய விடுக்கண் டீாப்பான்
வந்தனை யுனக்கென் றோர்ந்து செய்தகைம் மாறு முண்டே
தந்தையாய்த் தவமா யீன்ற தாயுமாய்த் தரும மாயெஞ்
சிந்தனை கரந்து நின்றாய் தேவனே போற்றி போற்றி.

(இ - ள் ) எமது தந்தையே! அடியேங்களைக் குறித்து எங்களுக்குற்ற துன்பத்தை யகற்றும்பொருட்டு எழுந்தருளினீா. தேவரீருக்கென்று அடியேங்கள் ஆராய்ந்துசெய்த பிரதியுபகாரம் ஏதாயினுமுண்டோ? எங்களுக்குத் தந்தையாகவும் தவமாகவும் தாயாகவும் அடியேங்கள் புரியும் புண்ணியமாகவும் எங்கள் சித்தத்தில் மறைந்திருந்தீா. எங்கள் பெருமானே! அடியேங்களைக் காக்க காக்க.

என்றடி யிறைஞ்சி வாழ்த்து மிந்திரன் முதலோர்க் கின்னே
தன்றனிக் கருணை கூர்ந்தான் றருநிழ லரசு தந்தா
னின்றவோ ரடியு நேரா மாவலி நெடும்பொற் சென்னிக்
கன்றளித் தமைத்தா னல்லன் சீறின னமல நாதன்.

(இ - ள்.) என்று கூறித் திருவடிகளில் வணங்கித் துதிசெய்யும் இந்திரன் முதலிய தேவர்களுக்கு உடனே ஒப்பில்லாத திருவருளைப்பாலித்து, கற்பகவிருக்ஷ நிழலில் வீற்றிருக்கும் அரசுரிமையையும் தந்தனா. மிகுதியாயுள்ள ஓரடியையும் அளப்பதற்கு இடமில்லாமையால் மாவலியின் நீண்ட பொற்கிரீடந்தரித்த சிரசின்மேல் அத்தினத்திற் சாதிப் பதித்தனர். அன்றியும் திருமால் கோபமெய்தினர். எ - று. (௰௬)

*சுரெயிற் றசுரர் கோமான் மாவலி யென்போன் றன்னைக்*
*காரகப் படுத்தி மற்றைக் கடிகம ழலங்கற் குல்லைத்*
*தாரகப் படுத்த மாயோன் றன்னிக ரின்மை நோக்கிப்*
*பேரக லண்ட மெல்லாம் பிளப்பதற் குருத்து நின்றான்.*

(இ - ள்.) பிளவுற்ற பற்களையுடைய அசுர தலைவனாகிய மாவலியைச் சிறையிலகப்படுத்தி மணங்கமழும் மாலையாகத் துளசிமாலை தரித்த திருமால், தனக்குச் சமானமானவரொருவரு மில்லாமையைக்கண்டு, விரிந்து பரந்த அண்டகோடிக ளெல்லாவற்றையும் பிளப்பதற்காகக் கோபித்துநின்றனர்.

*வெருவின ரிமையோ ரின்றே றுங்கது விளைப்ப நோக்கி*
*யொருவழிக் குழுமித் தெய்வக் கயிலையஞ் சார லுற்றார்*
*செருகிய குடில வேணி யெம்பிரான் றிருமுற் சென்றார்*
*பரிபுர மிழற்றும் பாத பங்கயம் பணிவ தானார்.*

(இ - ள்.) இப்படி வாமனாவதாரங்கொண்ட திருமால் அப்படிக் கொடுமை செய்வது நோக்கி, தேவர்கள் பயமெய்தியவர்களாய் ஒன்றுசேர்ந்து, தெய்வீகந் தங்கிய அழகிய திருக்கைலாயகிரிச் சாரலையடைந்து, வட்டவடிவமாய்ச் செருகிய சடையையுடைய எமது சிவபெருமான் திருமுன்னே சென்று, சிலம்புகள் சத்திக்கின்ற திருவடித்தாமரைகளை வணங்கினார்கள். எ - று. (௬௧)

*வெள்ளைவா ரணனு மற்றை விண்ணவ ரெவரும் வெள்ளைப்*
*பிள்ளைநாண் மதியஞ் சூடு மெந்தையெம் பெருமாற் போற்றி*
*வள்ளவாய்க் கமலை கேள்வன் மாவலி பொருட்டா லெம்மோர்க்*
*குள்ளநெக் குருகி யார்க்கு மளப்புறா வுருவங் கொண்டான்.*

(இ - ள்.) வெள்ளையானையை வாகனமாகவுடைய இந்திரனும், ஏனைய தேவர்கள் யாவரும் வெண்ணிறந்தங்கிய மூன்றாநாளுதிக்கும் இளம்பிறையைத் தரித்த எமது தந்தையுந் தலைவனுமாகிய சிவபெருமானைத் தோத்திரஞ்செய்து, கிண்ணம்போல மலர்ந்த தாமரைமலரிலிருக்கும் லக்ஷ்மீநாயகராகிய திருமால் எங்களுக்காகத் திருவுள்ளம் நெக்குருகினவராய மாவலியை யழிக்கும்பொருட்டு எவர்களுக்கும் அளவிடற்கு முடியாத விசுவரூபங்கொண்டருளினர். எ - று.

*கொண்டபே ருருவந் தன்னாற் கோமுறை யெனக்குத் தந்தான்*
*திண்டிற லசுரற் பற்றி யரும்பெருஞ் சிறையி லிட்டா*
*னண்டமு மண்டந் தாங்கு மேருவு மதனைச் சூழ்ந்*
*தண்டலில் புவன மெல்லாந் தட்டுவிட் டுருவி நின்றான்.*

(இ - ள்.) அப்படிக்கொண்ட விசுவரூபத்தால் அடியேனுக்கு அரசாக்ஷி முறைமையைத் தந்தனர். மிக்க வல்லமைதங்கிய மாவலியென்னும் அசுரனைப் பற்றிப் பெரிதாயுள்ள கடுஞ்சிறையிற் போட்டனர். இப்போது உலகினையும் இவ்வுலகினைத் தாங்கும் மேருமலையையும் அம்மேருமலையைச் சூழ்ந்த கெடுதியற்ற அண்டகோடிக ளெல்லாவற்றையும் தாண்டிக்கொண்டு ஊடுருவி நின்றனர். எ - று. (௬௩)

அன்னது தடுத்தி யாயி னமரரு முனிவர் யாரு
நின்னடித் தொண்டு நீங்கா நெறிநிறகு நிலையி னிற்பா
ரென்னலு மிமய வெற்பின் றனிததிட வுலக மீன்ற
கன்னியோர் பாக னேவ வயிரவக் கடவுள சென்றான்.

(இ - ள்.) இப்பொழுது அக்குறளுருவைத் தேவரீர் தடுத்தருள்வீராகில், தேவர் முனிவர் முதலிய எலலாரும் தேவரீருடைய திருவடித் தொண்டினைப் பிரியாத மார்க்கததுடன் அவரவர்க்குரிய நிலைமையி லிருப்பார்கள் எனப் பிரார்த்திதத மாததிரமே, இமயமலையரசன் தவததினாற் புததிரியாகப்பெற்றுக் கொள்ள, உலகஙகளை யெல்லாம் தநதருளிய ஜகனமாதாவாகிய உமாபிராட்டியை ஒருபாகததிலுடைய சிவபெருமான் வைரவக் கடவுளை யேவவும், அவர் வாமனாபாற் சென்றனா. எ - று. (௬௪)

சென்றன னெதிரா நின்றோ ராணவச செருக்கி னிற்கு
மன்றலந துளவி னாற்கு மாமயக கொழிய நேரா
வினறியல பிறவுஞ சொனனா னஃதவன் சிறிது மெண்ணான்
கன்றிய வெகுளி மிககான் வைரவக் கடவுட செலவன்.

(இ - ள்.) வைரவககடவுள எதிராகப்போய, ஒப்பற்ற ஆணவததால் அகந்தையுற்றிருககும வாசனைவீசுகினற துளசிமாலைதரிதத திருமாலாகிய வாமனருககு மிகக மயககமானது நீஙகுமபொருட்டு, ஒவ்வாதிருககின்ற இயலபற்ற அவருடைய செயகைகளையும பிறவறறையும எடுததுசசொலலினா. அப்படிக கூறியவற்றை அவவாமனா சிறிதுங கருதவில்லை. வைரவக கடவுளெனனும் பெயரையுடைய சிவமூாததி கொரோமாகிய பெருஙகோப மிகுநதனர். எ - று.

பற்றினன் வயிரத் தண்டம பகிரண்ட மதிர வோசசிச
சுறறினன் னுருமுக் காலத தெழிததனன றுளவ மாாபி
னெறறின னெற்ற லோடு மெறிபடு சண்ட வாயு
முறறுற விறறு வீழு மூரிவெங கிரியிற சாய்நதான.

(இ - ள்.) ஒரு வச்சிர தணடாயுததததைத திருககையிலேநதிப் பகிரணடஙகளெல்லாம அதிருமபடி சுழற்றி, இடி ககக்கும்படி காசசிததவராய, துளசிமாலை தரித்த அததிருமாலாகிய வாமனா மாாபிற றாககினா. அப்படித தாககிய வுடனே, யுகாநதப் பிரளயததில வீசும சணடமாருதமானது அதிகரிததததினால் அடியோடு பிளநதுவிழும வலிதஙகிய பெரிய மலைபோனறு கீழேவிழுநதனா,

கருநிறக் கமஞசூன மேகக காாத னுரிதது வாங்கித
திருநிறத் தமையக காள கஞசுக மெனனச சோததி
வெரிநுறப பிடுஙகு மென்பு தண்டெடன விடுததுக கொண்டான்
மருமலாத துளவ மாயோ னணவ மயககந தீாநதான்.

(இ - ள்.) கருநிறமெயதிப் பூரண காப்பமுடைய மேகம்போன்ற திருமாலின் கரியதோலை யுரிததெடுதது, அழகிய தமது மாற்பிற பொருந்தும்படி கருநிறச் சட்டையை யணிநதுகொணடு, அவா முதுகினின்றும் பறிதத முதுகந்தண்டெலும்பைத தணடாயுதமாகத தமதுகையிற் பற்றிக்கொண்டனர். உடனே வாசனைவீசும மலர்மாலையும் துளசிமாலையு மணிநத திருமால் ஆணவததினால் தமககுணடாகிய மயககம் நீஙகப்பெற்றனா. எ - று. (௬௭)

வரன்முறை யுணர்ந்த மாயோ ஞணவ மயக்கால் வந்த
புரைதவப் பவள வேணிப் புண்ணியப் பொருப்பை யோரா
விரைநறு மலரிட் டேத்தி யருச்சனை விழையா னின்றான்
கரையழி செருக்கு நீத்தான் பெற்றனன் கடவுட் டனமை.

(இ - ள்.) தாம் வாமனராக அவதரித்த காரணத்தைத தெரிந்த திருமால் அதன்பின் தாம்கொண்ட ஆணவப் பிராந்தியால் நேர்ந்த குற்றங்களகலும்படி பவளம்போலும் செவ்நத சடையையுடைய புண்ணிய மலைபோன்ற சிவபெருமானைத் தியானஞ்செய்து நறுமணங்கமழும் மலர்களால் அர்ச்சித்துப் பூசிக்க விரும்பித் துதித்துக்கொண்டிருந்தனர். அதனால் அளவிறந்திருந்த ஆணவச் செருக்கு நீங்கினவராயப் பழையபடியே தெய்வத்தன்மை யடைந்தனர். எ-று.

வாமனாவதாரச் சருக்கம் முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௧௮-க்குத் திருவிருத்தம். ௨௮௬௬.

---

பத்தொன்பதாவது

## பரசுராமாவதாரச் சருக்கம்.

பிருகுமா முனிவன் றன்னு ளருளிய பிறழாச் சாப
முருவங்க டன்ன செய்து மொழிந்தில தொலிநீர் வேணித்
திருவரு ளின்மை யன்னோ னடைந்தன தெரிந்து சொற்றேம்
பொருதிறற் றிகிரி மாயற் கருளிய புகலவா மினனும்.

(இ - ள்.) சிறந்த பிருகுமுனிவர் பூர்வத்திற் கூறிய தவறாத சாபமானது ஒழிந்திலது இப்படி அவதாரங்களைச் செய்தும் நீங்கவில்லை. சப்திக்கின்ற கங்கையையணிந்தசடையையுடைய சிவபெருமான திருவருளில்லாமையால் அத்திருமாலுக்கெய்திய வகையைத்தெரிந்து கூறினோம். போர்புரியுஞ் சக்கராயுதமுடைய திருமாலுக்கு அநுக்கிரகித்த வகையை மேலுஞ் சொல்லுவோம். எ - று. (௧)

ஒருங்கிய மனத்தி யோக முற்றுணர்ந் தொருவ னின்றே
னருந்தவ முருவு வேண்டி யருந்தவஞ் செய்த தன்னோன்
கருங்கட லிலத்துக் காம முதலிய கடந்தோன் றெய்வப்
பெருங்கு ணச்சம தக்கினி யெனவொரு பேரி னின்றோன்.

(இ - ள்.) ஒன்றுபட்ட மனத்தையுடைய யோகமார்க்கத்தை முழுவது முணர்ந்து அந்நெறியில் நீங்காதிருந்தவரும், அரியதவமே மானுடவடிவத்தை விரும்பி அரிய தவம்புரிந்ததை யொத்தவரும், கரிய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில் காமமுதலியவற்றைச் செயித்தவரும், தெய்வீகந்தங்கிய பெருங்குணமுடையவருமாகிய சமதக்கினியென்ற ஒப்பற்றபேரோடு விளங்கிய முனிவர் ஒருவருளர். எ - று. (௨)

ஆங்கவற் குயிரோ யன்ன வருந்தவச் சிறப்பி னின்றாள்
வாங்கருங் கற்பின் றெய்வப் பத்தினி மடவாண் மெல்லென்
றேங்கிய நுசுப்பி னல்கு மிரேணுகை யென்பா டன்பாற்
றேங்கமழ் துளவத் தோளான் றிருவவ தாரஞ் செய்தான்.

(இ - ள்.) அச்சமதக்கினி முனிவருக்கு உயிரையே யொத்தவளும், செய்தற்கரிய தவத்தின் மேம்பாட்டி லிருப்பவளும், அரிய கற்பினையுடைய தெய்வீக முள்ள பத்தினியாக வாய்த்தவளும், மிருதுவாகிய ஏக்கமுற்றுத்துவளு கின்ற இடையை யுடையவளுமாகிய இரேணுகை யென்பவளிடத்தில், மணம் வீசும் துளசிமாலைதரித்த தோளையுடைய திருமால் திருவவதாரஞ் செய்தனர்.

மெய்த்தவச் செல்வ னேக்கி வேட்கைமிக் கெழுந்தான் போந்து
நெய்த்தலைக் குழவி யின்ப நுகர்ந்தன னெகிழ்ந்த சிந்தைத்
தத்தரிச் சிலம்பி னாக்குந் தளர்நடை தழுவ நின்றான்
வித்தகற் குதவ வேண்டுங் கலையெலாம் விளங்கச் செய்தான்.

(இ - ள்.) உண்மைத்தவச் செல்வராகிய சமதக்கினி முனிவர் புத்திரோற் பத்தியைக்கண்டு விருப்ப மிகுந்துவந்து, மிருது[illegible]தலையையுடைய அக்குழந் தையி னின்பத்தை யநுபவித்தனர். மனவுரு[illegible]றனர். அக்குழந்தை பருக் கைக்கற்கள் பொருந்திய சிலம்பணிந்த [illegible]லால் தத்திச் செல்வதாகிய தளர்நடைப் பருவமவாய்ந்தது அதனட[illegible], வி[illegible]நியாப்பியாசஞ் செய்யத்தக்க பருவத்தில் அறிவுடைய அக்குழந்தைக்கு [illegible]பிக்கவேண்டிய நூல்களையெல் லாம் தெளியும்படி தந்தை யோதுவித்தனர். எ - று. (௪)

பருவமோ ராறு செல்லத் தலைப்படும் பருவந் தன்னிற்
றிருமகள் கொழுநற் கன்ன னானமுறைச் சடங்கு செய்தான்
கருணையோ ருருவு கொண்டா லனையவன் கடனீ ராடைப்
பெருநிலம் பரவ நின்றான் பெருந்தவத் தலைவன் செல்வன்.

(இ - ள்.) ஆறுவயது நடக்கத் தொடங்கும் காலத்தில், லக்ஷ்மிநாயகராகிய அக்குழந்தைக்குச் சமதக்கினிமுனிவர் முறைப்படி உபவீதச்சடங்கைச்செய்த னர். பெருந்தவச் செல்வராகியசமதக்கினி முனிவருடைய புத்திரரான கரு ணையே ஒருருவெடுத்தாற்போன்ற அப்புத்திரர் நீர் நிரம்பிய கடலே ஆடையா யுடுத்த பெரிய நிலவுலகம் போற்றும்படி யிருந்தனர். எ - று. (௫)

எழுதியோரந் துணர வொண்ணா விருங்கெனுங் கடலு மிந்தச்
செழுமறைக் கடலி னோங்கு மாகமத் திரையு நீந்தி
முழுதுணர் வரம்பி னின்றா னஃதன்றி முன்ன ரீன்ற
தொழுதகைத் தந்தை நோக்கிச் சொற்றன துறந்து நில்லான்.

(இ - ள்.) எழுதி யாராய்ந்தறியப்படாத [எழுதாக்கிளவியாகிய] வேத மென்னுங் கடலையும், செழுமை தங்கிய இவ்வேதக்கடலின் ஓங்குகின்ற ஆகமங் களென்னும் அலைகளையுந் தாண்டி, முற்றுணர்ந்த முடிவிடத்திருந்தனர். அது வேயன்றி, முதலிலே தம்மைப்பெற்ற யாவராலும் வணங்கற்குரிய தன்மைபொ ருந்திய தந்தை தம்மைநோக்கித் தந்தகட்டளையைக் கடந்திருக்க மாட்டார்.

இப்பரி சொழுகுங் காலை யிங்கிவற் பயந்த தந்தை
துப்புறழ் குடில வேணிக் கருச்சனை தொகுக்குங் காலைக்
கப்பிள முலையி ரேணு கையெனுங் கற்பி னிற்பா
ளப்பெடுத் துருட்டி யென்று மாங்கவற் கருளா நிற்பாள்.

(இ - ள்.) இப்படி நடக்குங் காலத்தில், இவரைப்பெற்ற தந்தையாகிய சமதக்கினி முனிவர், பவளத்தை யொத்த நிறமுடைத்தாய வட்டவடிவாய்ச் சுற்றிய சடையையுடைய சிவபெருமானை யர்ச்சிக்குஞ் சமயத்தில், கப்புவிட்டாற்போன்ற இளமைதங்கிய முலையையுடைய இரேணுகையென்பவள், எக்காலத்திலும் அவர்பூசைத்திருமஞ்சனத்திற்குத் தீர்த்தத்தையெடுத்துத்திரட்டிக் கொடுத்துவருவாள். எ - று. (எ)

இற்படு கற்பி னேழைக் கெழுதிய திலக மன்னா
ளற்படு கூந்த லோர்நா ளறலெடுத் துருட்ட வென்று
நிற்புழிக் ககன மீக்கந் திருவனோ ரிழலைக் கண்டா
ளற்படு மனத்த ளந்நாட் சிறிதுளங் கவல்வ தானாள்.

(இ - ள்.) இல்லற நடத்துங் கற்பினையுடைய மாதர்கள் நெற்றியிலிட்ட திலகம்போன்று, இருள்போலுங் கூந்தலையுடைய இரேணுகை, ஒருநாள் திருமஞ்சனதீர்த்த மெடுத்துத்திரட்ட நிற்கும்போது, ஆகாயத்தின்மேற்செல்லும் ஒருகந்தருவனுடைய நிழலைநோக்கி, கற்புநிலைமையிற் பதிந்த மனம் வருந்தினளாயினாள். எ - று. (அ)

வளைத்தளிர்ச் செங்கை மாட்டி வார்நீர் திரண்டு வாராக்
கிளைத்துளி சிதறி யோட வெருவினள் கிளிமென் சொல்லா
டளிர்க்கையான் முகந்தும் வாரத் திரண்டில தளிநீ ரன்று
ளிளைத்தன ணுசுப்பை யொத்தா ளேங்கின ளுருவ மெல்லாம்.

(இ - ள்.) கிளிபோலு மிருதுவான சொற்களையுடைய அவ்விரேணுகை, வளையலணிந்து தளிர்போன்றுள்ள தன் கையிற் குடத்தைப்பற்றி நீர்முகக்கையில் அந்நீர் வழக்கப்படி திரண்டுவாராமல், கிளைகளான துளிகளாய்த் தெறித்தோடவும் பயமெய்தியவளாய், மீண்டும் தளிரையொத்த தன்கையால் முகந்தபோதும் குளிர்ந்த நீரானது திரளவில்லை. அப்பொழுது அவ்விரேணுகை தன்னுடல் முழுமையும் இடையேபோல இளைத்து ஏக்கமெய்தினள். எ - று. (கூ)

கரநெரித் துதரம் வைக்குங் கண்ணிணை கலுழா நிற்கும்
வரனுடைத் தெய்வ நோக்கு மில்லற மாட்சி பார்க்கும்
விரதமா தவனை யெண்ணு மெள்குறும் வெதும்பும் விம்மு
மரவுதீக் கிடந்தா லென்ன யாக்கைவெந் தழலா நிற்கும்.

(இ - ள்.) தன் கைகளை நெரித்துக்கொண்டு வயிற்றில் வைத்துப் பிசைவாள். வரத்தைக் கொடுக்குந் தெய்வத்தை மனதிற் சிந்திப்பாள். தன் இல்லறத்தின் சிறப்பைப் பார்ப்பாள். விரதத்தோடு பெருந்தவமேற்கொண்ட முனிவரைச் சிந்தித்து அஞ்சுதலடைவாள். மனம் வெதும்புவாள். புலம்புவாள். பாம்பானது நெருப்பில் வீழ்ந்தாற்போல உடல்வெப்பமெய்தி நெளிவாள். எ - று.

கழிவது கால மென்னக் கண்டனன் கடவுட் கங்கை
வழிபுனற் செஞ்சடை யோன்ற னருச்சனை வைகிற் றென்று [ற்று
வொழுகுமென் சடையோ னேகி யென்கொலென் றுணர்த லு
னிழிதக விவட்கு வந்த தோராநதன னிகநதா னுள்ளம்.

(இ - ள்.) நீண்ட மெல்லிய சடையையுடைய சமதக்கினி முனிவர் நேரமா யிற்றென் றுணர்ந்து, தெய்வீகநதஙகிய கஙகைநீர் வழிநதுகொண்டிருககும் திரு முடியையுடைய சிவபெருமான் பூசைககுக காலதாமதம நேர்நததென்று கருதி, இதற்குக் காரணம் யாதென்று ஞானதிருஷ்டியா லறியத தொடஙகினா. இவர் மனைவி இரேணுகைககுத தாழ்வான கறபினபஙகம சமபவிததததறிநது மனதிற் பகைமை கொண்டனா. எ - று. (கக)

மிககெழு வெகுளி மீசசென் றுருததனன் விளம்பா னென்றும்
புக்குறப புதலவற் கூவி யெதிாதலும புனித னேகித
தகசநீ யெனது வாய்மை தலைககொடு சரிததா யென்ப
தொககநோக குறுவா னுறறே னுரைபபன கேட்டி யென்றான்.

(இ - ள்.) மிககோஙகிய கோபமேறபடடு அதட்டி ஒனறுமுரையாதவராய், தம்புததிரரை அஙகுவருமபடி யழைததது, அபபடிவநதவுடனே, முனிவா புதல்வ ரைநோககி, தகுநத புதலவனுகிய நீ என் சததியமொழியைச் சிரமிசையேற்றுச் செய்திவநதாயெனபதை ஒததுப்பாரககககருதினேன. ஆதலால, நானசொல் வனவறறைக கேட்பாயாகவெனறு கூறினா. எ - று. (கஉ)

ஐயநீ யுரைக்கற பால யாவையு மடியேன கேட்கச
செய்தவ முளதா லாது சிதையுமோ சிதையா தெனன
வுயதிற மெனககீ தன்றி யுணடுகொ லுரைததி யென்றான்
மொயதரு சடையோன் மைநதற் கினனண மொழிவ தானான்.

(இ - ள்.) ஐயனே! தேவரீா திருவாய மலரததககவறறையெல்லாம் அடி யேன கேட்குமபடி முனசெயத தவப்பலனிருப்பதால, அததவப்பலன அழிவு படுமோ? அழியாது. அன்றியும அடியேனுககு ஈடேறுநதன்மை இதுவன்றிவே றுண்டோ? திருவாய்மலாநதருளகவெனப் பிராாததிததான. நெருஙகியசடை யையுடைய சமதககினி முனிவா தமபுததிரருககு இப்படித திருவாயமலர லாயினா. எ - று. (கங)

தறபயந் தெடுத்தா ளென்றுந் தனதடம் பிதுக்கித் தீம்பான்
றுற்பயந் தளிததா ளென் று நினைகலை முனிவி னெய்தி
யிறபுகுந் தரிவா ளேநதி யிரேணுகை யெனபா டனனை
யற்படு குழருட் டீாததுத தலையறுத தளித்தி யென்றான்.

(இ - ள்) உன்னைப் பெற்றெடுததவளென்றும், தன்முலைகளைப் பிதுக்கி இனியபாலை முறபட்ட இளம்பருவததிற கொடுததுககாததவளென்றும மன திற்கருதவேணடாம். கோபத்தோடுபோய வீட்டினுட்புகுநது அரிவாளைக கையி லெடுத்துககொண்டு, இரேணுகை யென்பவளை இருள்போலக் கறுத்த கூநதலைப் பற்றி யிழுதது, அவள் சிரசைக கொயது கொடுப்பாயாக வெனத்திருவாய் மலர்நதனர். எ - று. (கச)

தாதைசொற் சலாகை யென்னச் செவித்தொளை சார்த லோடும்
பேதுற வுற்ற நெஞ்ச னதற்கியைந் தரிதிற் பேர்ந்தான்
போதலும புலன்கள் வேறா யலமரப் பொருமா நின்றான்
மாதுய ருழக்குந் தன்மை வெளிபெறான் மயங்கா நின்றான்.

(இ - ள்.) தந்தையுரைத்த சொல்லானது, காய்சிய இருப்புச்சலாகைபோலச் செவித்தொளைகளிற் புகுந்தவுடனே, கலக்குதலெய்திய சித்தத்தையுடைய அப்புத்திரர் அரிதாக அதற்கிணங்கியவராயப் புறப்பட்டனர். அப்படிப்போனவுடனே புலன்கள் வேறுபட்டுச் சுழலும்படி துக்கித்திருந்து பெருந்துயரெய்தும் நிலைமையை வெளிப்படுத்தாதவராய் மயங்குற்றிருந்தனர். எ - று. (௬௫)

தந்தைசொற் றலைமேற் கொண்டு நிற்கெனோ தமியே னொந்து
நொந்துளைந் தீன்று டன்னை நோக்கெனோ நோக்கி நின்று
சிந்தனை மருளுந் தெய்வம பழிக்கெனோ சிறியே னென்னா
வெந்தழற கிடந்த பாம்பி னொருதனி வெதும்பிச் சென்றான்.

(இ - ள்.) தந்தையின் சொல்லைச் சிரமிசைத்தாங்கிச் சிறியேனாகிய யான் அந்நிலைமையில் நிற்பேனோ? தனியேவருந்தித் தன்னுடல் நோகும்படி வருந்தி யீன்றெடுத்த தாயைப்பார்ப்பேனோ? தாயின்முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்து சித்தம் மயங்கத் தெய்வத்தை நிந்திப்பேனோ? என்றுகருதி, கொடூரமான தீயில்விழுந்த பாம்புபோல ஒருவராகத் தனித்து மனம் வருத்தமெய்திப் போனார்.

சென்றிடு மகனை நோக்கிச் சீற்றமுஞ் சீற்றத் தூடே
யொன்றுநெஞ் சழிவு மாக வுற்றன னென்ப தோர்ந்தா
ணின்றதன் மகனை நோக்கி யென்கொனீ நினைந்த தென்றாள்
பொன்றிணி புயத்தா னன்னை பணிந்தனன் புகன்று நின்றான்.

(இ - ள்) அப்படிச்சென்ற புதல்வனைநோக்கி, கோபமும், கோபத்தோடே பொருந்திய மனத்துயரமுமுடையவனாய் வந்துள்ளானென்பதைத் தெரிந்துகொண்டவளாய், இரேணுகை அங்கேவந்து நின்றுகொண்டுள்ள தன் புதல்வரை நோக்கி, நீ யெண்ணிய வெண்ணம் யாதென்றுகேட்டனள். அழகும் வலிமையுந்தங்கிய தோள்களையுடைய அப்புத்திரர், தன் தந்தைகட்டளை யிட்டவற்றை யுணர்த்தி எதிரே நின்றனர். எ - று. (௬௭)

அன்னது கேட்ட நங்கை யையனே யரிதி னீன்ற
தன்னுடைத் தாதை யேவல் கேட்பதே தவமேற் கோடன்
மின்னிலை வயிர வாளா லரிகென விரைமென் கூந்த
லன்னிலஞ் சரியச் சங்க நாணுறுங் கழுத்துச் சாய்த்தாள்.

(இ - ள்.) அதனைக்கேட்ட இரேணுகை, ஐயனே! அரிதாகப்பெற்ற தன் றந்தையின் கட்டளையைக்கேட்டு அதுபோல நடப்பதே புதல்வர்க்குத்தவத்தை மேற்கொள்வதாம். மின்னலைவீசி அச்சவடிவாகிய வச்சிரவாளாயுதத்தால் அரியக்கடவாயென்று, மணங்கமழும் மெல்லிய கூந்தலானது நிலத்திற்சரியும்படி, சங்கும் நாணத்தக்க தன் கழுத்தைச் சாய்த்தனள். எ - று. (௬௮)

சரிந்திருண் டறவு நீண்ட கூந்தலோர் தடக்கை பற்றி
யரிந்தனன் சென்னி யீன்ற தாதைமுன் னமைத்த லோடும்
புரிந்தபே ருவகை வெள்ளம் பொங்கினன் புதலவற் புல்லிப்
பரிந்தனன் பரசு ராமற் கினையன பகரவ தானுன்.

(இ - ள்.) சரிந்து இருணிறமெய்தி மிகநீண்ட அவள்கூந்தலை, விசாலமான ஒருகையாற் பற்றிக்கொண்டு தலையையரிந்து, தன்னையீன்றதந்தைக்குமுன்னாச் சேர்த்தவுடனே, விருப்பமுள்ள பெருங்களிப்பென்னும் வெள்ளம் பெருகப் பெற்றவராய், தம்புதல்வரைத் தழுவிக்கொண்டு அன்பு பாராட்டிப் பரசுராம ரென்னும் அப்புதல்வர்க்கு இவ்வகையாகத் திருவாய்மலர்கின்றனர். எ - று.

ஈன்றவ ளெனவும் பாராய் பசித்தழ லவிக்கு மீர்ம்பால்
சான்றவ ளெனவும் பாரா யெம்மொழி கடந்தி லாயா
லான்றபே ருலகத் துன்போ லாருள ரைய வென்று
னேன்றுள வரங்கள் யாவுந் தருகுவன் பெறுதி யென்றான்.

(இ - ள்.) பெற்ற தாயென்றும் பாராதவனாய், (குழந்தையாயிருக்கையில்) உண்டான பசியென்னும் நெருப்பை அவிக்கத்தக்க குளிர்ச்சியான பாலைக்கறந் தூட்டியவ ளென்றும் பாராதவனாய், எமது கட்டளையைக் கடந்தாயில்லையாத லின், ஐயனே! அகன்ற பெரிய நிலவுலகில் உன்னைப்போல் யாவருளரென்று கூறி, என் னுற்றரத்தக்க வரங்களையெல்லாம் தருகின்றேன் பெறுகவெனக் கூறினர். எ - று. (உ௦)

தந்தையீ துரைத்த லோடும் பாலகன் றடக்கை கூப்பி
யெந்தைநீ தருதி மூன்று வரமென விசைந்த லோடு
மைந்தனை வதன நோக்கி வழங்குதும் வலித்தி யென்றான்
சுந்தரத் தடக்கை வீர னினையன சொல்ல லுற்றான்.

(இ - ள்.) தந்தை இங்ஙனங் கூறியவுடனே, புதல்வராகிய பரசுராமர் விசாலமான கைகளைக் குவித்து, பிதாவே! தேவரீர் மூன்றுவரங்கள் தரவேண்டு மென்று பிரார்த்தித்த மாத்திரமே, அமமுனிவர் பரசுராமர் முகத்தை நோக்கி, அப்படியே தருகின்றோம், கேட்பாயாக வெனக்கட்டளையிட்டனர். அழகுற்று விசாலித்த கைகளையுடைய பரசுராமர் இப்படிச் சொல்லுவதானார். எ - று. (உக)

ஒருவரம் வெகுளி நீவிட் டொழிதியென் றுரைத்தான் மற்றைத்
தருவர மென்னை யீன்று ளுயிர்ந்திடத் தருதி யென்று
னிருவர மொழிய மற்றொன் றீசன திருத்தாட் போதி
லுருகுமன் பெனக்கு வேண்டுந் தருதியென் றுரைத்து நின்றான்.

(இ - ள்.) அவ்வரங்களில் ஒருவரம், தேவரீர் கோபத்தைவிட்டொழிப்பீ ராகவென்று கூறினர். இரண்டாவது வரம் என்னையீன்ற தாய் உயிர்பெறும் படி யநுக்கிரகிக்க வேண்டுமென்றனர். ஆக இவ் விருவரங்களுமல்ல, மூன்றாவது வரம் சிவபெருமானுடைய உபய பாததாமரைகளில் மனமுருகும் உண்மையன்பு அடியேனுக்கு உண்டாகவேண்டும், இவ்வரங்களைத் தந்தருள்கவென்று பிரார்த்தித்து நின்றனர். எ - று. (உஉ)

வரன்முறை யுரைத்து நின்ற மகன்முக நோக்கி மற்றை
விரதமா தவனுந் தந்தா னுய்ந்தன ளிரைமென் கூந்தல்
முரனுடை வெகுளி நீத்தான் முனிவனு முனிவ னீன்ற
பரசுடைப் புதல்வனச் சிலம்புத் முக்கண்ணன் பதத்து வைத்தான்.

(இ - ள்.) வரங்களை வரிசையாகக்கூறி யாசித்து நின்ற புத்திரர் முகத்தைப் பார்த்து, பெருந்தவ விரதங்கொண்ட சமதக்கினி முனிவரும் அவ்வரங்களை யனுக்கிரகித்தனர். உடனே மணந்தங்கிய மிருதுவான கூந்தலையுடைய இரேணுகையும் உயிர்பெற்றனள். சமதக்கினிமுனிவரும் மாறுபட்டகோபத்தை நீங்கினர். அம்முனிவர் பெற்ற பரசாயுதந் தாங்கிய புத்திரர் திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் பாதங்களில் மனதைப்பதித்தனர். எ - று. (௨௩)

அற்றைநாண் முதலா வெற்றி யடுதிறம் பரசு ராமன்
கற்றைவார் சடையோற் கன்பு சனிந்தன னுகிச் சென்றுன்
றெற்றுதிணை சிலைப கானந் தருநசனை திருத்திச் செய்து
நற்றவம் பயின்றுன் சென்று நடந்தன சிறிது காலம்.

(இ - ள்) அன்றைய தினமுதலாக எல்லாரையும் தாக்கிக்கொல்லத்தக்க வல்லபந்தங்கிய பரசுராமர், தொகுதியாக நீண்ட சடையையுடைய சிவபெருமானுக்கு மனமுருகிய மெய்யன்புடையவரா யொழுகி, அசைந்துகொண்டிருக்கும் வலிய மூங்கில்கள் நெருங்கிய காட்டிற்போய், சிவபெருமானைத் திருத்தமாகப் பூசைசெய்து சிறந்த தவமியற்றினர். இப்படிச் சிலகாலங்கழிந்தன.

கார்த்தவீ ரியனென் றுள்ள கனைகழற் கவிகை வேந்தன்
பார்த்தடம் புயத்தான் வையம் பரிக்குநாட் பாந்த ளேந்து
நீர்த்தடம் புவனங் காணப் போனாநதன னிமிர்ந்த சேனை
போர்த்துறப் புகுந்தா னீரெண் டிசைகுலாய்ப் போத லோடும்.

(இ - ள்.) பாரித்து விசாலமான தோள்களுடையவனும், ஒலிக்கின்ற வீரகண்டாமணி யணிந்தவனும், வெண்கொற்றக் குடை யுடையவனுமாகிய கார்த்தவீரியனென்னும் பெயர்கொண்ட அரசன் உலகினைக்காக்குங் காலத்தில், ஆதிசேடன் சுமக்குங் கடல் சூழ்ந்த பரந்த உலகெங்கும் பார்க்கவிரும்பிப் புறப்பட்டான். மிக்கசேனை தன்னைப் புடைசூழச்சென்று எண்டிசைகளிலுந் திரிந்து போகையில். எ-று. (௨௪)

நெடுந்திரை வடிமப் போர்த்த நிலமெலாந் துருவிச் செல்வான்
கெடுந்துயர்சசமதக்கினிதனனிருக்கையைக் கிடைப்பச் சென்றுன்
விடுஞ்சுடர் மகுடஞ் சாய்த்து வணங்கினன் வேந்தன் வேரிக்
கொடுஞ்சடை மோலி யனனுேற் காசிகள் பலவுங் கூறி.

(இ - ள்.) நெடிய கடலின் கரையாற் சூழப்பட்ட பூமிமுழுதுஞ் சுற்றி வரும் அவ்வரசன், துயரங்கள் விலகத்தக்கசமதக்கினி முனிவர் இருப்பிடமாகிய ஆசிரமங்கிடைக்க அங்கெய்தினன் ஒளிவீசும் முடியைச்சாய்த்து அம்மன்னவன் முனிவரை வணங்கினன். அப்போது வாசனைவீசிச்சுற்றிய சடையையுடைய அம்முனிவர் அம்மன்னவனுக்கு ஆசிமொழிகள் பலவற்றையும் முறைப்படி திருவாய் மலர்ந்தருளினர். எ - று. (௨௫)

எறித்தெழு பரிதிக் காந்தி யெரியடு வெரிக்குங் கானம்
வெறித்திவ ணடைந்த தென்னே வேர்த்தனை மேனி யெல்லா
நறிக்கிழுவ கடகு வேண்டி நயந்தனை போதி யென்று
னெறிபபடுந் தனிககோல் வேநத னினையன நிகழ்த்த லுற்றான்.

(இ - ள்.) வெயிலெறிததுககொண் டுதிககுஞ் சூரியனுடைய கிரணங்கள் அக்கினிபோலத்தகிககும் காடாகிய இவ்விடததிற்கு நீ வருநதிவநததுயாதுகாரணம்? உடல் முழுதும் வெயாததிருக்கின்றனை. நறுமணங்கமழும் கிழங்குகளையும் இலைககறிகளையும விரும்பிப் புசிததுச் செலலுகவெனத திருவாய் மலர்நதனர். சன்மார்க்கநெறியிற் செலுததுகின்ற ஒப்பற்ற செஙகோலையுடைய அம்மன்னவன் இவ்வாாததைகளைச் சொலலலாயினன். எ - று. (உஎ)

வெள்ளமோ ரளவை யின்றி யெழுந்தன விரிவெஞ் சேனை
கொள்ளைமா தவததோய் நினது லாற்றுதல குணிக்க லாமோ
நள்ளிடை கடபபின் மூதூா நணுகுது நமப வென்று
னுள்ளநெக் குருகா நின்ற மாதவ னுரைபப தானுன்.

(இ - ள்.) மிகுதியாகிய பெருநதவமுடையோரே! அடியேனுடையவிரிநத பெருஞ் சேனைகள வெளளமெனனும் பெருநதொகையாகிய அளவினையுங கடநதுவருகின்றன ஆதலின், அவற்றிற்கெல்லாம் தேவரீரால் ஆகாரம்தருவ தென்றால் அளவிடப்படுமோ? சிவபெருமானைப் போன்றவரே! இடையிலுள்ள சிறிதுதூரஞ் சென்றால் எஙகளுடைய பழய நகரத்திற் சேரவோமென்று சொல்லினன். மனவுருககமுடைய பெருநதவசியாகிய சமதககினி முனிவர் கூறுவாராயினா. எ - று. (உஅ)

எப்பெருஞ் சேனை யேனு மிக்கணத் திருத்தை யொன்றிற்
றுபபுடை வளததி னேடு மமுதெனத துய்பபா னுய்ப்பே [னுன்
னொப்பருந தனிககோல வேநதே யிருத்தியென் றுறுததிச சொன்
கபபுடை மருப்புக் காம தேனுவைக் கருததி னோரநதான்.

(இ - ள) எவவளவு பெருஞ்சேனையா யிருநதாலும இககூட்டததிற்கெல்லாம் ஒரு நாழிகையில, சிறப்புறறவளப்பததோடு அமுதென்றுசொல்லுபடி புசித்தற்குவரவழைப்பேன், ஆனபடியால ஒப்பறற செஙகோல் செலுததும் அரசனே! இவவிடததிலேயே யிருககக் கடவாயெனறு வற்புறுத்திக்கட்டளையிட்டு உடனே, கிளைகளைபபோலத தோன்றிய கொம்புகளையுடையகாமதேனுவை மனததிறகருதினா. எ - று. (உகூ)

வந்ததக் கணததி னந்தத் தெய்வமாச சுரபி நோக்கிச்
சிநதைநெக் குருகி மேனி தீண்டினன் றீண்ட லோடு
மெநதைநீ யழைதத தெனனென் றிசைததலு மிமையோ ரேத்து
முநதைமா தவததோன் றெயவப பசுவொடு மொழிவ தானுன்.

(இ - ள்.) மகததாகிய தெய்வீகநதஙகிய அக்காமதேனுவானது அநதக்ஷணத்திலேயே வநதுவிட்டது. சமதககினிமுனிவா அதைப்பாாததுமனமுருகி அதனுடலைத் தமதுகையாறறடவினா. அப்படிப் பரிசித்தவுடனே அககாமதேனு, எமது பெருமானே! தேவரீர் அடியேனை யழைததற்கு யாது காரணமென்று கூறியபோது, தேவர்களாற் றுதிககப்படுகின்ற பழமையானபெருநதவமுடைய சமதககினி முனிவா அககாமதேனுவோடு திருவாய்மலர்வதானுர். எ-று. (௩௰)

வெள்ளைவெண் குடையோன் கார்த்த வீரிய னென்னும் வேந்த
னொள்ளெரி வனத்துச் சேனை யொருங்குகொண் டெம்மை யுற்றான்
றள்ளரு முதர வெந்தீ சொலித்தறத் தளரா நின்றான்
றெள்ளமு தவற்கு மன்னோன் சேனைக்கு மளித்தி யென்றான்.

(இ - ள்.) வெண்ணிறந்தங்கிய சந்திரவட்டக் குடையையுடைய கார்த்த வீரியனென்னும் அரசன், ஒளிதங்கிய அக்கினிமயமான இக்காட்டில் சேனைகளையெல்லாம் சேர்த்துக்கொண்டு எம்பாலெய்தினன். எவராலும் நீக்கற்கரிதாயுள்ள கொடிய உதராக்கினியானது கொழுந்துவிட்டெரிய மிகவும் வருந்துகின்றான். ஆதலால் அவனுக்கும் அவன் சேனைகட்கும் தெளிவாகிய அமுதம் போன்ற ஆகாரத்தைத் தருகவென்று கட்டளை தந்தனர். எ - று. (௬௧)

ஆவது புரிது மென்னா வருகுநின் றரசற் கன்னோன்
மேவருஞ் சேனைக் குள்ளம் விரும்பின வெறுக்க வீந்து
போவது புரியா முன்னம் புரவலன் றவத்து மிக்கோன்
சேவடி பரவி யேத்தி யினையன செப்ப லுற்றான்.

(இ - ள்.) அப்படியே செய்கின்றேனென்று, அவருகிலிருந்து அம்மன்னனுக்கும் அம்மன்னனுடைய சேனைகளுக்கும் மனதில் விரும்பிய வெல்லாவற்றையும் வெறுக்கும்படியளித்து, அக்காமதேனு தேவலோகத்திற்குப் போகுமுன்னமே, கார்த்தவீரியனென்னும் அரசன் தவத்தின் மேம்பட்ட சமதக்கினி முனிவர் பாதங்களைப் புகழ்ந்து துதிசெய்து, இப்படிச்சொல்லத் தொடங்கினன்.

காயெரி கதுவுங் கானக் காயிலை கிழங்கே யன்றி
நீயிது விரும்ப லுறு பாலை யல்லையிச் சுரபி நின்பால்
மேயின துணர்ந்தால் யாரும் விரும்பினர் கவர்ந்து கொள்வ
ரேயவிச் சுரபி போமுன் னெனக்கென வளித்தி யென்றான்.

(இ - ள்.) வெப்பமான நெருப்பானது நீங்காதுள்ள இக்காட்டிலிருக்கும் காய்கள் இலைகள் கிழங்குகளையன்றி, தேவரீர் இவ்வகையான போஜனத்தை விரும்பும் தகுதியுடையவரல்லீர். இக்காமதேனுவானது தேவரீர்பா லிருப்பதை யுணர்ந்தால் யாவரும் ஆசைப்பட்டு அபகரித்துக் கொள்வார்கள். ஆதலால் இங்கேவந்த இக்காமதேனுவானது தேவலோகத்திற்குப் போவதன் முன்பாக எனக்கென்று கொடுத்து விடுவீரெனப்பிரார்த்தித்தான். எ - று. (௬௩)

வேந்தனீ துரைத்த லோடும் விரதமா தவத்தின் மிக்கோன்
சேந்தன விருகண் ணோக்கிச் சிரித்தனன் சிறியோர்க் கென்ன
வேய்ந்ததன் கிழைப்பத் தீமை யெய்துத றிண்ண மென்னா
வோய்த்தன னுள்ள மீதற் கியைந்தில னுருத்து நின்றான்.

(இ - ள்) கார்த்தவீரியன் இப்படிச் சொல்லியவுடனே விரதமாகிய பெருந்தவத்தில் மேம்பட்ட சமதக்கினி முனிவர் தமதிருவிழிகளும் சிவப்பெய்தும்படி பார்த்துச் சிரித்து, சிறியோர்களுக்கென்று பொருந்திய நன்மைசெய்யத் தீமை விளைவது நிசமென்று கருதிமனஞ்சலித்தார். அக் காமதேனுவைக் கொடுத்தற்குச் சம்மதியாதவராய்க் கோபமெய்தி யிருந்தனர். எ - று. (௬௪)

ஊற்றமிக் கெழுந்த சீற்ற முணர்ந்தன ளொருகோல் வேந்தன்
மாறறருஞ் சேனை யோடுஞ் சுரபியை வளைத்து நின்றான்
கூற்றென வளைந்த சேனை நோக்குமச் சுரபி கோலக
நீற்றுமென் சடையோ யென்னைக் கொடுத்திகொ லென்று கேட்ப.

(இ - ள்.) ஒப்பற்ற செங்கோலைத் தாங்கிய அரசன், அவருக்குப்பெருவலி யோடுதித்த கோபத்தை யறிந்து, விலக்கற்கரிய தன்சேனையோடு அககாமதேனு வைச் சுற்றிக்கொண்டு எதிர்த்து நின்றான். இயமபடர்கள்போலச் சுற்றிக் கொண்ட அச்சேனையைப் பார்க்கின்ற அககாமதேனுவானது, அழகுடைத்தாய் வளைவாய்ச் சுற்றியுள்ள மிருதுவான சடையையுடைய முனிவரே! என்னை இவர்கட்கு அளித்துவிட்டீரோ வெனவினவ. எ - று. (௫௫)

கொடுத்திலன் யானோ வேந்தன் கொல்பெருஞ் சேனை யோடுந்
தடுத்தன னரச ரோடு மெதிர்ந்திடுந் தருக்கு முண்டே
யெடுத்தவெஞ் சேனை யோடு மாறுகொண் டிசறி யாயி
னடுத்தன புரிதி யென்றான் சுரபிமற் றதனைக் கேளா.

(இ - ள்.) நான உன்னைக் கொடுக்கவில்லை. இவ்வரசன் கொல்லத்தக்க பெருஞ்சேனையோடு தடுத்தான். அரசர்களோடும் எதிர்க்கின்ற சக்தியும் உனக் குள்ளதே. ஆதலால் இப்போதுன்னை யெதிர்த்த பெருஞ்சேனைகளோடு மாறு கொண்டு பகைப்பாயானால், அப்பொழுது உனக்குத் தக்கபடி புரிவாயாக வென றுசகியாபித்தனா. அககாமதேனு அதனைக்கேட்டு. எ - று. (௫௬)

வல்லைமின் றுருத்துச் சீறிச் சிலிர்த்திடு மயிர்க்கா றோறு
மொல்லைவந் தெழுந்த சேனைக் கிலக்கமா றுரைக்கற் பாலார்
கல்லெரி பிறந்த கண்ண கதிர்மழுப் படைய கால
வில்லின நாந்து கத்த வெற்பினந் தாங்கு கைய.

(இ - ள்.) விரைவில் எதிர்த்து நின்று கடுங்கோபத்தோடு சீறிச்சிலிர்த்த மயிர்க்கால்களிலெல்லாம் அதிசீக்கிரமாக வந்துதித்த சேனைகளுக்கு அளவை யாவா சொல்லத் தக்கவாகள்? அப்படி யுதித்தசேனைகள் மாணிக்கம்போலத் தீப்பொறி சிந்தும விழிகளுடையனவாகவும், ஒளி வீசுகின்ற மழுவாயுதந் தாங் கியனவாகவும், குறுந்தடி பிடித்தனவாகவும், வில்லைத்தரித்தனவாகவும, வாளை யேந்தியனவாகவும, மலைத்தொகுதிகளைச் சுமந்த கைகளையுடையனவாகவும.

அளவொழி கணங்க ளினனே பிறந்தன வனந்த வெள்ளங்
கிளைபடு மரசன் சேனை யாவையு நெருக்கிக் கிட்டி
யளைபுனற் குருதிப் பேரா றலைப்புற மலைப்ப வன்றே
னுளவயப் புரவி வெள்ளங் குருதியா றொழுகிற் றன்றே.

(இ - ள்.) இப்படி எண்ணிறந்த சேனைகளுதித்தன. அவை எண்ணிறந்த வெள்ளக்கணக்காகக் கிளைத்துவந்த மன்னவன் சேனைகளெல்லாவற்றையும நெருங்கிக்கிட்டி, சேற்றோடுகூட்டிய உதிரமானது பெருநதியாய்ப் பெருக்கெ டுக்கும்படி போர்புரிய, அவ்வரசனுடைய கத்திரித்த புறமயிர்வாய்ந்த வேகமா யோடத்தக்க குதிரை வெள்ளங்களுக்கும் உதிரநதியானது பெருக்கெடுத்தது.

கழிந்தவெஞ் சினத்தி னோடுங் கார்த்தவீ ரியனென் போனு
மொழிந்தவெம் படையென ருேடித் தன்னகர்க் கோயி லுற்று
ளிழிந்தன பரிதி மேல்பா லிருண்டது திகந்த மெட்டும
பொழிந்திடு சினமீக் கொள்ளப புகுந்தனா புதல்வர் நால்வர்.

(இ - ள) கார்த்தவீரியனென்று சொல்லப்படும் அரசனும அதிகரித்த கடுங்கோபத்துடன நமமுடைய சேனைகள அழிந்தனவேயென்று புறமுதுகு காட்டியோடித் தன்னரணமனையிற சென்று சோந்தான். சூரியன மேற்றிசைக் கடலில முழுகினன. [அஸதமித்தான] அஷடதிசைகளும இருளமூடியது. அப்போது அ . . . சனுடைய குமாரர்கள நால்வர பெருகுகினற கோபமானது அதிகரிக்குமபடி வந்தார்கள. எ - று. (௩௯)

கனைகழற . . . முன்போயக கைதொழு தருகி னின்று
நினையநீ . . . ய விநத விருடியால விளைந்த தீதாற
புனையிருட போதி யா்மபோ யாஙகவன புலவுச சென்னி
நினையுமுன கொணாநது மெனறு ரவனதற கியைநது நின்றான்.

(இ - ள) வந்த நாலவரும, சததிக்கினற வீரகணடாமணி யணிநத தமது தநதையாகிய கார்ததவீரியன முனபோய, அருகேநினறுகொணடு, இமமுனிவனால நோநத தீமையைக குறிததுத தேவரீா வருநதவேணடாம. தநதையே! இருளைப போாதத இவ்விராததிரியிலேயே நாஙகள சென்று அஙகுளள அம்முனிவனுடைய முடைநாறறமபொருநதிய சிரததை, நினைககுமுனனாகொணடு வருவோமென்றாகள. கார்ததவீரியனும அதற்குச் சமமதிததிருநதான். எ-று.

கார்த்தவீ ரியனறன பாலா நாலவருங காள கூடம
போாதத்ன விருளிற போகி யவவனம புகுந்தா ரறறம்
பாாதததனா முனிவன சென்னி பறறற வெறிந்தாா தூக்கி
வோதெழு மெயய ராகி மீணடனா விளைவ தோராா.

(இ - ள) கார்ததவீரியன புதல்வா நால்வரும [காளகூடம] விஷமபோல மூடிககொணட இருளிறபோய அததபோவன மடைநதாாகள. சமயம்பாாததுக கொணடிருநது அச்சமதககினி முனிவாதலையை உடற சமபநதம ஒழியுமபடி அரிநதெடுததுககொணடு, மேலவிளையப போகுந் தீமையைததெரியாதவாகளாய், வெயாவுதோனறிய தேகமுடையவாகளாயத திரும்பினாாகள. எ - று. (௪௧)

இழைத்தமா தவததோன் சென்னி யாஙகவ ரீா நோககி
யழைததில ளாறற கிலலா ளருஙகுலக கறபி னின்று
டழைபபடுஞ சினையச சாநதத் தடுககிய சமிதை யோடு
முழைபபடக கிடநதா ளனனு னுடனிறந தொழிவ னென்னு.

(இ - ள.) இயற்றிய பெருநதவமுடைய அச்சமதககினி முனிவர் சிரசை அந்நால்வரும அறுகக, அரியகுலததிறகுரிய கறபுநெறியிலிருநதவளாகிய இரேணுகை யென்பாளகணடு, உரககக கூச்சலிடாதவளாகவும் மனஞ்சகியாதவளாகவும், அம்முனிவரோடு நானும உயிர் துறநதிறப்பேனென்று, தழைநதுள்ள கிளைகளையுடைய சநதனக்கட்டைகளாய சமிதையோடு அடுககப்பட்டுள்ள விடத்திற் போய்ப்படுத்திருநதாள். எ . று. (௪௨)

அடுக்குமிந் தனத்தி னேறி யருந்தவத் தலைவ னங்கை
மடுத்துறத் தழுவிக்கொண்டாள் வளர்ந்தெழு கனலி மாள
விடுத்திழி மழையா லங்கம் வெந்திலள் மெல்லென் கூறை
தொடுத்திழி சாம்ப ரான தந்நிலை துணுக்கங் கொண்டாள்.

(இ - ள்.) அடுக்கியிருந்த சந்தனக்காஷ்டத்தின் மேலேறி அதிற்கிடத்தியிருந்த அரியதவமுதலவராகிய சமதக்கினி முனிவருடைய இருகரங்களையுங் கட்டித் தழுவிக்கொண்டாள். அப்பொழுது சுவாலைவிட்டெயர்ந்த நெருப்பு அவியும்படி ஆகாயத்திலிருந்து சொரிகின்றமழையினால் உடல் வேகாதவளாய், அத்தீயானது அவள் உடுத்தியிருந்த மெல்லிய வஸ்திரத்தைமட்டும் பிடித்தது, அது மாத்திரமே மிக அற்பமான சாம்பராயிற்று. அத்தருணத்தில் நடுக்கமெய்தினள். எ - று. (௬௫)

வீவது கால மாயின் மெய்த்தவக் கொழுந்தி னோடும்
போவது கற்பி னோங்கும் பொலங்குழை மகளிர்க் கல்லா
லாவது புரிந்தோ மேனு மாகுமே யரிய வென்னா
மேவுமிந் தனத்தை நீத்து வெள்ளிடைக் குதித்துப் போனாள்.

(இ - ள்.) இறக்குங்காலஞ் சமீபித்ததானால், உண்மையாகிய தவக்கொழுந்தையொத்த தலைவரோடு உயிர் நீங்குவது, கற்புநிலைமையின் மிக்கபொற்குண்டலந்தரித்த மாதர்களுக்கே வாய்க்குமன்றி, அப்படியிறத்தற்குரிய பிரயத்தினங்கள் செய்தாலும் நமக்கு உண்டாகுமோ? அதுமிக அருமையென்று தான் ஏறியிருந்த காஷ்டத்திலிருந்து நீங்கி வெளியிடத்தில் குதித்துப்போனாள். எ - று.

கொடுந்துனை யிலைய வேம்பின் குழைகுழை மருங்கு போத்து
நெடுநெறி கடந்தா ளாரூர் நீணகர்ப் புகுந்து நீலப்
படுநிறத் தணங்கை யொத்து வதிந்தனள் கழிந்த பன்னா
ளடுதிறற் பரசு ராம னருந்தவத் ததிக னானான்.

(இ - ள்.) அப்பொழுது வளைந்த கூர்மையுடைய இலைகளாகிய வேப்பிலையைக் குழைவாயிருக்கும் இடையிற்றரித்து வெகுதூரந் தாண்டிச் சென்று திருவாரூரென்னும் பெரிய நகரத்திலடைந்து, நீல நிறத்தையுடைய காளியைப்போல் வசித்திருந்தாள். இப்படிப் பலதினங்கள் சென்றன. கொல்லத்தக்க வல்லமையுடைய பரசுராமரென்பவர் செய்தற்கரிய தவத்தில் மேம்பட்டவராயினர். எ - று. (௬௭)

கல்லெனக் கலிக்குஞ் சேனைக் கார்த்தவீ ரியன்றன் பால
ரெல்லைபுக் குரிய தாதை தலைதுமித் தெடுத்த வாறு
மொல்லையின் றெடுத்தா ளாரூ ரணங்கென வுறைந்த வாறும்
வல்லையொற் றுணர்ந்தான் சீற்ற மனங்கிடந் துடற்றி னானே.

(இ - ள்.) கல்லென்று சத்திக்கின்ற சேனைகளையுடைய கார்த்தவீரியன் புத்திரர்கள், தமது தந்தைக்குரிய தவச்சாலையையெய்தி, அவர் சிரசையரிந்தெடுத்துச்சென்றதும், அதிசீக்கிரத்தில் தமதுதாய் திருவாரூரில் தெய்வமகளிராக வாழ்ந்திருப்பதும் அதிவேகத்தோடு தூதுவர்வந்துகூற வுணர்ந்து, தமது மனதில் கோபந்தோன்றி வருந்தியிருந்தனர். எ - று. (௬௬)

வெள்விடைப் பவனை நோக்கி மெய்த்தவம் விதியி னாற்றி
யுள்விடா நெடுநி னின்றா னென்னையா ளுடைய வீரன்
கள்விடா நெகிழுங் கொன்றை வேணியோன் கருணை கூர்ந்தான்
புள்விடா வலங்கற் றோளாற் கெதிர்ந்தருள் புரிந்து நின்றான்.

(இ - ள்.) வெண்மை தங்கிய இடபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானைக் கருதி உண்மைத் தவத்தை முறைப்படிசெய்து மனத்தில் இடையறாத் தியானத்தோடிருந்தனர். அப்பொழுது இடையீடின்றித் தேனைச் சொரியுங் கொன்றைமாலை தரித்த சடைமுடியையுடையவரும் என்னையடிமையாகவுடையவருமாகிய சிவபெருமான், திருவருள் சுரந்தவராய், வண்டுகள் விடாமற் சத்தித்துக்கொண்டிருக்கும் மலர்மாலைதரித்த பரசுராமர்க்கு நேரேவந்து திருவருள் பாலித்து நின்றருளினர். எ - று. (௪௭)

கண்டன னுருவ நோக்கிக் கண்கணீர் கலுழ நின்றான்
கொண்டன னுவகை வெள்ளக் குணக்கடற் குளிப்ப தானா
னொண்டொடி பாக நோக்கி யென்புற வுருகும் விம்மும்
புண்டர நுதலை நோக்கிப் பூத்தனன் புளகச் சிலலி.

(இ - ள்.) பரசுராமர் சிவபெருமானுடைய திருவுருவத்தைத் தரிசித்தனர். தமதிருவிழிகளினின்றும் ஆனந்தபாஷ்பஞ் சிந்தினர். உடனே சந்தோஷித்துச் சந்தோஷமென்னுஞ் சத்திக்கின்றகடலில் மூழ்குவாராயினர். ஒளிதங்கியவளையலணிந்த உமாதேவியார் பாகத்தைத் தரிசித்து என்புகளும் நெக்குவிடும்படி உருகுவார், விம்முவார், திரிபுண்டரமாகத் திருவெண்ணீறணிந்த நெற்றியைத் தரிசித்து உரோமத்துவாரங்கடோறும் புளகமெய்தினர் எ-று. (௪௮)

ஈங்கிவன் றன்னை நோக்கி யெம்பிரா னிரக்க மெய்தி
நீங்கருந் தவத்தி னின்றாய் வேண்டுவ நிகழ்த்தி யென்னத்
தாங்கிய செழுநீர் வேணித் தலைவனைத் தனதுள் ளாக்கிப்
பூங்கழ றொழுது வாழ்த்தி யினையன புகலுவ தானான்.

(இ - ள்.) இப்படிப் பக்திபூண்ட பரசுராமரைப் பார்த்தருளி, எமது சிவபெருமான் திருவருண்மிகுந்து விலக்குதற்கரிய தவநிலையில் தவறாது ஒழுகியவனே! உனக்குவேண்டியவரங்களைச் சொல்லுகவென வினவவும், செழித்த கங்காஜலத்தைச் சூடிய சடையையுடைய சிவபெருமானைத் தமது இதயத்திலமர்த்தி, அப்பெருமானுடைய அழகிய வீரக்கழலணிந்தபாதங்களை வணங்கித் துதிசெய்து இப்படி விண்ணப்பிப்பாராயினர் எ - று. (௪௯)

பன்னருந் தவத்தி னின்றுன் சேவடிப் பதுமம் போற்று
மென்னுடைத் தாதை வைகு மிருக்கையி னிரவு பார்த்துச்
சென்னிவீழ்த் தெடுத்துச் சென்றார் கார்த்தவீ ரியன்றன் செல்வ
ரன்னவர் தாதை யாவி வாங்குதற் காசை பூண்டேன்.

(இ - ள்.) சொல்லுதற்கரிய தவநெறியில் நின்று தேவரீர் செந்தாமரை மலர்போன்ற பாதங்களைத் துதிசெய்யும் என்னுடைய பிதாவானவர் வாசஞ்செய்துகொண்டிருந்த ஆச்சிரமத்தில் கார்த்தவீரியன் புதல்வர்கள் இரவுபார்த்து வந்து அவர் தலையை யரிந்தெடுத்துக்கொண்டுபோனார்கள். ஆதலின், அவர்கள் தந்தையாகிய கார்த்தவீரியன் உயிரையொழிப்பதற்கு விருப்பமுற்றேன். எ-று.

எந்தையே யருள வேண்டு மென்னலு மிமையா முக்கட்
சந்திர மவுலி யண்ண லஃதொன்றோ தருது மென்னாச
சிந்தைநீ நினைந்த யாவுஞ் செய்தன சிறக்கற பால
தந்தனங் கோடி யென்னாத திருக்கர மழுவுந் தந்தான்.

(இ - ள்) எமது தந்தையே! இவ்வரத்தைக் கொடுத்தருளவேண்டும். என வேண்டவும், இமைக்காத திரிநேத்திரங்களையும் சந்திரனை யணிந்த சடையையுமுடைய சிவபெருமான், அவ்வொருவரந் தானோ நாங்கொடுப்போமென்று திருவாய்மலர்ந்து, நீ உன்மனத்திற் கருதியனவும் செய்தனவுமாகிய யாவுஞ்சிறப்புற்றிருக்குந் தன்மையுடையவையாக வரங்கொடுத்தோம் பெறுகவென்று அநுக்கிரகித்து, தமது திருக்கரத்திற் பற்றியமழுப்படையையுங் கொடுத்தருளினார்.

பெற்றனன் றவத்து மேலோர் பெறற்கரும் பேறி யாவுங்
கற்றைவார் சடையோற் போற்றிக் கார்த்தவீ ரியனை நோக்கி
யுற்றனன் செற்றந் தீர்வா னுருத்தன னுருத்த லோடு
மிற்றுவீழ்ந் திறப்பத் தோரா னுங்கவ னெதிர்ந்து சென்றான்.

(இ - ள்) தவத்தின் மேம்பாடுற்றோரும் அடைதற்கரிய பேறுகள் பலவற்றையும் பரசுராமர்பெற்றுக்கொண்டவராய், தொகுதியாய் நீண்டிருக்குஞ்சடையையுடைய சிவபெருமானைத் துதிசெய்து, கார்த்தவீரியனைத் தேடியடைந்து தமது கோபமொழியும்படி மிகவுஞ் சீறினார். அப்படிச் சீறியபோது, அங்குள்ள கார்த்தவீரியன் தான் வலியிழந்து நிலமிசைவிழுந்து இறக்கப்போவதை யறியாதவனாய் பரசுராமரை யெதிர்த்துவந்தான். எ - று. (௩௨)

சென்றவன் சேனை யாவுந் துணித்தனன் செருவி னேர்ந்து
நின்றவன் றன்னைப் பற்றி நிலவுவாள் மழுவொன் றேந்தி
வென்றடு திரடோ ளாயிரத் தொட்டியும் விழுந்தின வீர
வனற்றிற லொடுங்க வோச்சித் தறித்தனன் வரத்தின் மிக்கான்.

(இ - ள்) பரசுராமர் உடனே போர்செய்யச் சென்று, அவன்சேனைகளையெல்லாம் வெட்டியவராய்ப் போர்செய்ய எதிர்த்து நின்ற கார்த்தவீரியனைப் பற்றி, ஒளிவிடுகின்ற கூர்மைதங்கிய ஓர்மழுப்படையை யேந்தி வீசி, வரங்களாற் சிறந்தவராகிய பரசுராமர்வெற்றிபெற்றுக், கொல்லத்தக்கதாயத்திரண்ட அவன் தோள்களாயிரமும் ஆலின்விழுதுபோல நிலமிசைவிழவும் அவன் வல்லமையொழியவும் வெட்டிச் சாய்த்தனர். எ - று. (௩௩)

அன்னவன் மரபி னோங்கு மடுதிறற் புலியே றன்ன
மன்னரை யொருங்கு பற்றி வளர்குருக் கேத்தி ரத்தின்
றன்னிலை கொண்டு சென்றான் குட்டமோ ரைந்து தாழ்த்து
நெய்ந்நிலை குருதி வேலோர் செயபுன னிறப்பி னானே.

(இ - ள்) அக்கார்த்தவீரியன் மரபில் விளங்கிய கொல்லத்தக்க வலிமையுடைய ஆண்புலிபோன்ற அரசர்களையெல்லாம் பிடித்து, வளப்பந்தங்கிய குருக்ஷேத்திரத்திலுள்ள தம்மிடத்திற்கு அழைத்துக்கொண்டுசென்று ஐந்துகுளங்களைத் தோண்டியெடுத்து, நெய்பூசிய வேற்படைதாங்கிய அவ்வரசர்களுடைய உதிரநீரை அக்குளங்களில் நிரப்பி வைத்தனர். எ - று. (௩௪)

அக்குளக் குருதி நீரி னருள்சுரந் தையற் கென்று
முக்கைநீ ரிறைத்துக் கொண்ட கடும்பழி முனிவு தீர்ந்தான்
செக்கர்வான் கிழிந்து வெவ்வே றிழிந்தன செந்நீர் நீங்கிப்
புக்கனன் புவன மெல்லாங் காசிபர்க் குதவிப் போந்தான்.

(இ - ள்.) அவ்வைந்து குளங்களில் நிரப்பிய உதிரநீரால் இருபைமிக்க வராய்த் தமது தந்தைக்கென்று மூன்றுகை நீரையிறைத்துத் தருப்பண முடித்து, அக்கொலைகளாலுண்டாகிய கொடிய பழியின் கடூரத்தைத் தவிர்த்துக் கொண்டனர். செவ்வானமானது கிழிபட்டு வெவ்வேறாக இறங்கியிருப்பது போன்ற உதிரமுழுவதும் வற்றிச் சுவறிய அந்நாடு முழுவதையும் காசிபமுனிவருக்குத் தானமாக வளித்து அந்நாட்டை யகன்றுபோயினர். எ - று. (௫௫)

தென்றிசை யடைய வெய்தி மகேந்திரப் பொருப்புச் சேர்ந்து
கொன்றையஞ் சடிலத் தெந்தை குரைகழன் மறவா ராகி
யின்றள விறவா னன்னடி னருச்சனை யியற்றி நின்றான்
பொன்றிணி சடையி னீசன் றன்மையார் புகலற் பாலார்.

(இ - ள்.) தென்றேயத்திற்குப்போய்ச் சேர்ந்து, மகேந்திர பர்வதத்தை யெய்தி, அழகிய கொன்றைமலர் மாலையணிந்த சடையையுடைய எமது சிவபெருமானது சத்திக்கின்ற வீரகண்டா மணிதரித்த திருவடித்தியானத்தை மறவாதவராய், இன்று வரையில் அழிவற்றவராய் [சிரஞ்சீவியாய்] உண்மையன்போடுபூசித்துக்கொண்டுள்ளார் பொன்னை[illegible]போன்ற சடைமுடியுடைய முனிவரரே! சிவபெருமான் தன்மையைச் சொல்லவல்லவர் யாவர்? (ஒருவருமிலர்). எ - று. (௫௬)

பரசுராமாவதாரச் சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் ௧௯ - க்கு திருவிருத்தம் ௨௯௫௨.



இருபதாவது

# இராமாவதாரச் சருக்கம்.



இத்திற நிகழ்ந்த பின்னர் மனுகுலத் தெய்தி வெய்திற்
றத்துவெண் டிரைநீர் வேலி யுலகுயிர் தழைப்ப வோங்கி
முத்தவெண் கவிகை வேந்தன் றயரத னென்பான் மூரி
மத்தமால் யானை வேந்தர் வணங்குறு மன்னர் மன்னன்.

(இ - ள்.) இவ்வவதாரம் நடந்தபிறகு, மனுகுலத்தில்வந்து விரைவாகத் தாவுகின்ற வெள்ளிய அலைகளையுடைய கடல் நீர் வேலியாகச் சூழ்ந்த உலகி லுள்ள ஆன்மகோடிகள் யாவும் விளங்கும்படி மேம்பாடுற்று, வலியுற்று மதமயக் குடைய பெரிய யானையையுடைய மன்னர்கள் பணியத்தக்க ராசராசனாகிய முத்துக்களாலியற்றிய வெண்கொற்றக் குடைபெற்ற தசரதனென்பானொருவ னிருந்தான். எ - று. (௧)

### கலிநிலைத்துறை.

அறுபத் தாயிர வருட மளித்தா னவனன்றோர்
சிறுவற் புலனுஞ் செல்வ மிழந்தான் றெருமந்தான்
மறுவைக் குங்கண் டத்தர னிருதாள் வழிபட்டா
னுறுநட் புறறா னன்புட னங்க முருகுற்றான்.

(இ - ள்.) அத்தசரதன் அறுபதினாயிரவருடம் அரசுசெய்திருந்தான். அக் காலத்தில் ஒரு குழந்தையை யணைத்துக்கொள்ளுஞ் செல்வமற்றவனாய மனச் சுழற்சியெய்தினன். அப்போது விடத்தைத் தரித்தகண்டத்தையுடைய சிவபெ ருமானது உபயபாதங்களைப் பூசித்தவனாய மிகுந்த நேசமெய்தி உண்மையன் போடு உடல்முழுதும் உருகப்பெற்றான். எ - று. (௨)

ஆசறு வேள்வி யனைத்துஞ் செய்தா னதனாலோர்
மாசறு மைந்தற் பெற்றினி தெய்தும் வழிகாணான்
பூசல னங்கற செற்ற பிரானைப் புனைவேணி
யீசனை யன்பிற கைதொழு துற்றா னிடரற்றான்.

(இ - ள்.) குற்றமற்ற யாகங்களை யெல்லாம் நடத்தினான். அவற்றாலும் பழுதற்ற ஒரு புத்திரனைப்பெற்று இன்பமெய்தும் வழியைக் கண்டிலன். போர் செய்த மன்மதனை யெரித்த சிவபெருமானாகிய சடைமுடி தரித்த தலைவனை அன்போடுகைகுவித்து வணங்கிக்கொண்டிருந்தான். அதனால் தன் துயரமகலப் பெற்றான். எ - று. (௩)

முளரிக் காரொக் கின்றவி ராமன் முதலோரை
யுளரிக் கும்பே ராசை யுவப்பி னொடும்பெற்றான்
றளரித் துன்பச் சாகர வெள்ளக் கரைகண்டான்
வளரிக் காடற சாபனை யொப்பார் வளர்மைந்தர்.

(இ - ள்.) தாமரைமலர்ந்த மேகம்போன்ற திருமேனியுடைய இராமாமுத லிய புதல்வர்களை மனதிற்பதிந்திருந்த பேராசையோடு சந்தோஷமாகப்பெற் றுக்கொண்டான். தாம்வருந்திக்கொண்டிருந்த துயரக்கடலுக்கு எல்லைகண்டான். அப்புத்திரர்களோ வெற்றி மிகுந்த கரும்பு வில்லைத்தாங்கிய மன்மதனை யொப் பானவர்கள். எ - று. (௪)

கற்பன யாவுங் கற்று முடித்தார் கலையெல்லாஞ்
சொற்பட வோதா துண்மை தெளிந்தார் தொடுநூலி
னிற்பன கன்மத் தெல்லை கடந்தா ரிலமெல்லா
மற்பினு வக்குந் தன்மை யடைந்தா ரருண்மைந்தர்.

(இ - ள்.) கற்கத்தக்க நூல்களையெல்லாங் கற்று முடித்தார்கள். அறு பத்துநான்கு கலைஞானங்களையும் ஒருவர் ஓதுவிக்காமலே அவற்றின் உண்மையை யுணர்ந்தார்கள். பழைய நூல்களில் விதித்துள்ள கிரியைகளையெல்லாம் அறிந்தார்கள். இருபைதங்கிய அப்புத்திரர் நால்வரும் உலகமுழுவதும் அன் போடு விரும்பத்தக்க தன்மையடைந்தார்கள். எ - று. (௬)

செல்வரின் முன்னோன் கோசிக னோடுந் தென்பாலுற்
றல்லல் விளைக்குந் தாடகை யைச்செற் றவனோடும்
வில்லெனொடு மறைந்த தம்பியொ டுங்கோ மிதிலைப்போ
யொல்லையெ டுக்குஞ் செஞ்சிலை வெற்பொன் றொடிந்தான்.

(இ - ள்.) புதல்வர்கள் நால்வரில் மூத்தோராகிய இராமர் விசுவாமித்திர முனிவருடன் தென்றிசை நோக்கிப் போய், கொடுமைசெய்து கொண்டிருந்த தாடகையைச் சங்கரித்து அம்முனிவரோடும் லக்ஷ்மண பரதசத்ருக்னரென்னும் பிற தம்பியரோடும் சிறந்த மிதிலாபுரியெய்தி, அங்கே சனகராசனாற் கொடுக்கப் பட்ட செவ்வையாகிய வில்லென்னும் மலையை யெடுத்தொடித்தனர். எ - று.

வாரிணை நோக்கிச் சீதை மணந்தான் வருமெல்லைக்
கூர்மழு வங்கை யிராமன ளிக்குங் குனிசாபம்
போரட வென்று கரங்கொண் டந்தண புயலிற்றுந்
தாரினை வேலித் தன்னக ருற்று னடல்பெற்றான்.

(இ - ள்) நீண்டு பூங்கொத்துகளணிந்த கூந்தலையுடைய சீதாதேவியை மணஞ்செய்து திருமபிவருகையில், கூரிய மழுப்படையைக் கையிலேந்திய பரசு ராமர்கொடுத்த வளைந்த வில்லை, யுத்தத்தைப் பழிக்கும்படி வென்று, அவ்வில் லைக் கையிலேந்தி, மிக்க குளிர்ந்த மேகம்போலக் கைம்மாறு கருதாது அவருக்கே கொடுத்து, சத்திக்கின்ற கடலே வேலியாகவுடைய தமது நகரமெய்தி வல்லபமுற்றிருந்தார். எ - று. (எ)

செங்கோ லுய்க்கும் பொன்முடி தம்பிச் சிறுதாயால்
வெங்கோல் விலுந் தம்பியு மேமெய்த் துணையாகக்
கொங்கார் கோதை பின்செல வெங்கான் குறுகுற்றான்
பொங்கா ரஞ்சூழ் தண்டக மெய்திப் பொலிவுற்றான்

(இ - ள்.) சிற்றன்னையாகிய கைகேசியால், செங்கோல் செலுத்தும்மகுடாபி டேகந்தவறி, கொடிய அம்பும் வில்லும் இலக்குமணருமே உடற்றுணையாகக் கொண்டு, மணங்கமழுங் கூந்தலையுடைய சீதையும் தம பின் வரும்படி கொடிய வனத்திற் சென்றனர். மிக்க சந்தனமரங்கள் சூழ்ந்த தண்டகாரணியத்திற் சேர்ந்து விளங்கினர். எ - று. (அ)

அந்தவ னத்திற் செந்தமிழ் வெற்போ னடிபேணிச்
சிந்தைதெ ளிக்குஞ் சின்மய மெல்லாந் தெளிவுற்றான்
பைந்தொடி பாகன் பங்கய பாதம் பரவுற்று
னுந்துசி னைப்பஞ் சப்பழு வக்கா னுடனுற்றான்.

(இ-ள்) அந்தவனத்தில் செவ்விய தமிழ் மலையாகிய பொதியாசலத்தி லெழுந்தருளிய அகத்திய முனிவர் பாதங்களைப்பூசித்து மனதைத் தெளிவு செய்யத்தக்க ஞானாதரங்கள் பலவுமறிந்தனர். பசியவலையலணிந்த உமாதேவி யாரைப்பாகத்தினராகிய சிவபெருமான் திருவடித்தாமரைகளைப் பூசித்தனர். உடனே அங்கு நின்றும் கிளைகளோங்கிய பஞ்சவடிதீர்த்தத்திற் பொருந்தினர்.

பொன்னிற மானின் பின்னவ னேகப் புயலூரு
மின்னிடை மானை வெவ்வர ககன் வெருவசசெய்
தங்கிலே கொண்டான் வெஞ்சிறை வைத்தா னதனாலே
தன்னுயி ரேகப் பேதுறு மெய்பிற றளாவுற்றான்.

(இ-ள்.) பொன்னிறமெய்திய (மாய) மான் (மாரீசன்) பின்னே இராமர் போகவும், மின்னலையொத்த இடையையுடைய சீதையை, கொடிய விழிகளை யுடைய இராவணனெனப்பபடுத்தி அப்பொழுதே தூக்கிக்கொண்டுசென்று கடுஞ் சிறையிலிட்ட காரணத்தால், (இராமர்) தமதுயிரானது பிரிய வருந்துகின்ற உடலபோல வருந்தினர். எ-று. (௧௦)

தம்பியோ டுருசென் றவ்வன மெங்குந் தடவுந்தான
வெம்பிவெ தும்பிக் கண்டுயில சொள்ளான மெலிகாலத்
திம்பர டைந்தான மாருதி நட்பா லெழுவானத
தும்பரி னனசேய தன்னொடு நட்பா னுறவுற்றான்.

(இ-ள்.) தமது தம்பியாகிய இலக்குமணரோடுசென்று அவ்வனமெங்குந் தேடினர். அவ்வருத்தத்தினாலே நுக்கித்து உடலவெந்து நித்திரைகொள்ளாதவ ராய் வருந்துஞ் சமயத்தில, அநுமான இவரபாலுள்ள நட்பினால, ஆகாயமுகட் டில் உதயமாகுஞ் சூரியகுலத்திலுதித்த புத்திரராகிய இராமரோடு அன்பால் உறவாகச் சிநேகங்கொண்டார். எ-று. (௧௧)

மாமர மேழுந் திண்சர மொன்றான் மடிவித்தான்
வேமெரி யனனானை வாலியை யம்பால விளித்தான்
காமாக டும்போ ரெழுபது வெள்ளங் கவியோடும
பாமரு தெனபால் வேலைய டைந்தே படருற்றான.

(இ-ள்.) பெரிய மராமரங்களேழையும வலிதங்கிய ஓரம்பால் அழிவித் தார். எரிகின்ற அக்கினியையொத்தவனாகிய வாலியை அம்பினால் வதைத்தார். அழகிய பெரும்போர் செய்யத்தக்க எழுபது வெள்ளம வானரசேனைகளோடும் பரவிய தென்றிசைக் கடலையடைந்து செலவதானார். எ-று.

'வெள்ளமென்பது சேனைத்தொகை பத்தனுளொன்று. அவற்றைமுறையே பதாதி - சேனாமுகம - குமுதம - கணகம - வாகினி - பிரளயம - சமுத்திரம் - சங்கம - அநிகம - அக்கோணி யென்பார்.

அவற்றுள், யானை 1, தேர் 1, குதிரை 3, காலாள் 5 ஆகக்கூடியது பதாதி. பதாதி மும்மடிகொண்டது சேனாமுகம். சேனாமுகம மும்மடிகொண்டது குமு தம். குமுதம் மும்மடிகொண்டது கணகம். கணகம் மும்மடிகொண்டது வாகினி.

வாகினி மும்மடிகொண்டது பிரளயம். பிரளயம் மும்மடிகொண்டது சமுத்திரம். சமுத்திரம் மும்மடிகொண்டது சங்கம். சங்கம் மும்மடிகொண்டது அநிகம். அநிகம் மும்மடிகொண்டது அக்கோணி வாகினி மூன்றுகொண்டது பிரளயமென்பதே யன்றி வெள்ளமென்றுஞ் சொல்லப்படும். (௩௨)

தெண்டிரை வேலைத் திண்கரை கோலிச் செலவுற்று
மண்டம ரிட்டுச் செஞ்சிலை யொன்றால் வயமேவிக்
கொண்ட வரக்கன் புன்றலை பத்துங் குலையோடே
துண்டமு றுத்தித் தன்பட ரெல்லாந் தொலைவுற்றான்.

(இ-ள்.) இராமர் தெள்ளிய அலைகளையுடைய சமுத்திரத்திற்கு வலிய பாலங்கட்டிப்போய், இராவணனோடு நெருங்கிப் போர்செய்து, செவ்விய ஒரு வில்லை வென்றியுற்று, சீதையைத் திருடிக்கொண்டு சென்ற இராவணனுடைய அற்பமாகிய தலைகள் பத்தையும் கொத்தாக வெட்டியெறிந்து தமது துன்பங்களெல்லாம் நீங்கப் பெற்றனர். எ-று. (௩௩)

முற்றும ரக்கன் றம்பிந னக்கம முடிசூட்டிப்
பொற்றொடி யோடுந் தம்பியொ டுந்திண் போராடல்
பெற்றக பிக்கோ மாருதி யோடும் பெருவெம்போர்
மற்றைய ரோடும் புட்பக மேறி வரலுற்றான்.

(இ-ள்.) அப்படியிறந்த இராவணன் தம்பியான விபீஷணருக்கு அக்கிரீடத்தை யணிவித்து, பொன்னாற்செய்த வளையலையணிந்த சீதையோடும் இலக்ஷ்மணரோடும், வலிய யுத்தத்தில் வென்றியுற்ற வானரத்தலைவராகிய அநுமானோடும், விசேடித்த பெரும்போர்செய்த ஏனைய வானரங்களோடும் புஷ்பக விமானமூர்ந்து வரத்தொடங்கினார். எ-று. (௩௪)

வந்திழி வுற்றுச் சேதுவி னோர்பால் மயில்பாகத்
தெந்தைபி ரானுக் காசனை செய்தா னிகலாடித்
தந்தபெ ரும்பா வந்தொலை வுற்றான் றனிவெள்ளேற்
றந்தண னுக்கங் காலய முற்று மமைவித்தான்.

(இ-ள்) அப்படி வந்து சேதுவின் ஒரு புறத்தில் விமானத்திலிருந்து கீழே யிறங்கி, மயில்போலுஞ் சாயலையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடைய எமது தந்தையுந் தலைவருமாகிய சிவபெருமானை ஆசரித்து, இராவணனோடு போர்புரிந்ததனாலுண்டான பெரும்பாவத்தைத் தொலைத்துக்கொண்டார். அதன்பின், வெண்மைதங்கிய இடபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானுக்கு அங்கே திருக்கோயில் முதலியனவெல்லாஞ் செய்வித்தனர். எ-று.

செய்வன யாவுஞ் செய்து முடித்தான் சிவலிங்கங்
கைதொழு தந்தப் புட்பக மேறிக் கடிதிற்போய்
வையம னிக்கும் பொன்முடி பெற்றான் மகிழ்பெற்றான்
சைவம ணக்கச் சிந்தைதி ருத்தித் தனிநின்றான்

(இ - ள்.) சிவாலயப் பிரதிஷ்டைக்குத் தக்கபடி செய்யத்தக்கவற்றை யெல்லாஞ் செய்துமுடித்து, அங்கே தம்மாற் பிரதிஷ்டிக்கப்பட்ட சிவலிங்க மூர்த்தியைக் கைகுவித்துப் பணிந்து, மீண்டும் புஷ்பகவிமானமூர்ந்து விரைவோடுபோய் உலகினைக் காப்பதற்காகப் பொற்கிரீட மணியப் பெற்றவராய்ச் சந்தோஷித்தனர். சிவசம்பந்தமே விளக்கமுறும்படி மனதைத் திருத்திக்கொண்டு ஒப்பற்று விளங்கினா. எ - று. (கசு)

ஐம்பதி ரட்டிக் கும்பரி யாக மருளிற்செய்
தும்பர் வணங்குந் தற்பர னைத்தன் னுளம்வைத்துக்
கம்பலை முந்நீர் வையம ளித்துக் கடைசெல்லாச்
செம்பது மத்தா டன்னொடு முன்னைத் திதிபெற்றான்.

(இ - ள்.) அப்படி இராமர் அரசு செய்கையில், தேவர்கள் வணங்கும் தற்பரனாகிய சிவபெருமானைத் தமது இதயத்தி லெழுந்தருளச்செய்து, நூறு அசுவமேதங்களைத் திருவருளாற் செய்துமுடித்து, சத்திக்கின்ற கடலாற் சூழப்பட்ட நிலவுலகைப் பரிபாலித்துவந்து அவ்வவதார விறுதியிலே செந்தாமரை மலரில் வசிக்கும் திருமகளாகிய சீதாதேவியோடு பழமையாகிய திதித்தொழிலையும் பெற்றுக்கொண்டனா. எ-று. (கஎ)

இராமாவதாரசசருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் உ0-க்குத் திருவிருத்தம். உகூசுகூ.



# இருபத்தொன்றாவது

# பலபத்திராமாவதாரச் சருக்கம்.



பின்னரு மன்னான் வசுதே வற்குப் பெரிதந்நா
ளுன்னுத வத்தி னுரோகணி தன்பா லுதயஞ்செய்
தின்னரு ளோடும் பலபத் திரனென் றிடுபேரால்
றன்னில முற்று மன்பின்வ ழுத்துந் தலைநின்றான்.

(இ - ள்.) பின்னரும், அத்திருமால் வசுதேவருக்கு அவ்வாதி நாளையிற் செய்த பெருந்தவத்தாலே, அவா மனைவியாகிய உரோகணி தேவியினிடத்தில் அவதாரஞ்செய்து, இனிய திருவருளோடு பலபத்திராமரென்னும் பெயரால் தம்முடைய நகர முழுவதையும் அன்போடு போற்றத்தக்க தலைமையுடையவரா யிருந்தனர். எ - று. (க)

எந்தைபி ரானைச் சேவடி பூசித் திகலேறாய்
வந்திடு போரா லசுரரை யெல்லா மடிவித்தா
னுய்ந்திட லெண்ணித் தன்னிலை யோகத் துடனின்றான்
சிந்தனை முற்றித் தன்னூறு கதியிற் சென்றுற்றான்.

(இ - ள்.) எமது தந்தையும் பெருமானுமாகிய சிவபிரானது திருவடித் தாமரைகளைப் பூசைசெய்து, வலிதங்கிய ஆணசிங்கத்தை யொத்தவராய், எதிர்த்துப்போருக்குவந்த அசுரர்களெல்லாரையும் யுத்தத்தாற் கொன்று, தாம் கடைத்தேறும்படியாகச் சிந்தித்து, தமது நிலைமையை யுணர்த்தக்க யோகாநுபவமுடையவராயிருந்தனர். அந்த தியானமானது முதிர்ச்சியுற்றுத் தமக்குரிய வைகுந்த பதவியிற்சென்று பொருந்தினர். எ - று. (உ)

பலபத்திரராமாவதாரச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் உக-க்குத் திருவிருத்தம்-உ௲எக.



இருபத்திரண்டாவது

# கிருஷ்ணாவதாரச் சருக்கம்.



வாசந றுந்தார் மாலைத் துளவோன் வசுதேவற்
கேசில் குணத்தா டேவகி தனபா லெதிருற்றுப
பேசுல குக்கோர் கண்ணனெ னும்பே பெறநின்றான்
பூசலொ ழித்துத் தண்கடன் ஞாலம் புரவுற்றான்.

(இ - ள்.) மேலும் அத்திருமால், நன்மணங்கமழும் பூமாலையணிந்த வசுதேவர் மனைவியாகிய குற்றமற்ற குணங்களையுடைய தேவகியின் வயிற்றிலவதரித்து, உலகினர் துதித்தற்காகக் கிருஷ்ணரென்னுந் திருநாமமெய்தியவராய் விளங்கினர். பகைஞர் போரைத் தொலைத்துக் குளிர்ந்த கடலாற் சூழப்பெற்ற உலகத்தைக் காத்தனர். எ - று. (க)

பன்னுத வத்தோ னுபமன் னியனைப் பணிவுற்றுப்
பொன்னவிர் வேணிக் கன்புபு ரிந்தப் புயல்வண்ண
னன்னிலை நின்று னர்ச்சனை செய்தா னவையற்றுன
செந்நிலை பற்றிச செய்வன யாவுஞ் செயமுற்றான.

(இ - ள்.) புகழத்தக்க தவத்தையுடைய உபமன்னிய முனிவரைப்பணிந்து சிவதீக்ஷைபெற்று, மேகவண்ணராகிய திருமாலின் அவதாரமாகிய கிருஷ்ண மூர்த்தி, பொன்போலப் பிரகாசிக்கும் சடையையுடைய சிவபெருமானுக்கு அன்புசெய்து பூசித்தார். அப்பூசையால் தமது குற்றங்கள் நீங்கப் பெற்றார். சைவநெறியைக் கைப்பற்றி, செய்யப்பட்டனவற்றிலெல்லாம் வெற்றியுறப் பெற்றனர். எ - று. (உ)

பஞ்சவ ரேவத் தூதுந டந்தப் பகையோரை
யெஞ்சமு டிக்குந் தன்மையி னின்று னினியாருந்
துஞ்சின பின்னர்த் தன்பத முற்றுன றுரிசற்றான்
செஞ்சடை யோனைத் தாளிணை யின்னுந் தெரிசிப்பான்.

(இ - ள்.) பாண்டுபுத்திரர் ஐவரும் ஏவியபடி தூது நடந்து அப்பகைஞராகிய துரியோதனாதி கௌரவரை அழியும்படி கொல்லுந்தன்மை யுடையவராயினர். தமக்கு அன்பராயிருந்த பாண்டவர்களும் இறந்த பின்னர், தமது பதவியிற் சேர்ந்து குற்றமற்றனர் சிவந்த சடையையுடைய சிவபெருமானுடைய உபய பாதங்களை இன்னுந் தரிசித்துக்கொண் டிருக்கின்றனர். எ - று.

கிருஷ்ணாவதாரச்சருக்கம் முற்றிற்று.



ஆக சருக்கம் உஉ-க்குத் திருவிருத்தம்-உகளச.



# இருபத்துமூன்றாவது

# மாயன்வரம்பெறுச் சருக்கம்.



கலிவிருத்தம்.

பைந்து ழாயவன் பத்தவ தாரத்தி
னைந்த ருட்பெற்ற தின்மை யறிகுவான்
சிந்து ரத்த வுரிவிழி திண்மருப்
புந்தெ லும்போ டணிந்தன னுத்தமன்.

(இ - ள்.) பசிய துளசிமாலை யணிந்த திருமாலின் தசாவதாரங்களிலே, ஐந்தவதாரங்கள் அநுக்கிரகம் பெறுமையை யுணரும்படி நரசிங்கத்தின் வலியிழந்த தோலையும், மச்சத்தின் கண்ணையும், வராகத்தின் கொம்பையும், வாமனத்தின் செலுத்தத் தக்க எலும்பையும், கூர்மத்தின் ஓட்டையும் சிவபெருமான் தமது திருமேனியில் அணிந்துகொண்டனர். எ - று. (க)

சக்க ரங்கரந் தாங்கிய நாயக
னுக்கி றந்தன னாயினு முள்ளருட்
புக்க சத்தி யழிகலன் பொங்கொலி
மைக்க டறபுவி கைதொழ வைகுவான்.

(இ - ள்) சக்கராயுதத்தைத் திருக்கரத்திற் றாங்கிய திருமால், கிருஷ்ணாவதாரத்தில் உயிர்நீங்கி யிறந்தாரென்றாலும், உள்ளீடாயத திருவருள்பொருந்திய சக்தி நீங்கப் பெற்றிலர். மிக்க ஒலியையுடைய கருநிறங்கொண்ட கடலாற் சூழப்பட்ட நிலவுலகினர் யாவரும் கைகளைக் குவித்து வணங்கும்படி வீற்றிருப்பார். எ - று. (௨)

செய்ய நாண்மலர்த் தாமரைச செங்கணன்
வைய மேழ்தொழ வாமன னாகியே
யுய்தி றந்தந்துபேந்திரனென்றபேர்
பெயயிலகேள்வி யினோடுமபொருந்தினன்.

(இ - ள்.) செந்நிறந்தங்கி அனறலாந்த மலராகிய தாமரைபோன்ற விழிகளையுடைய திருமால், சப்தலோகங்களும் வணங்குமபடி வாமனாவதாரங்கொண்டு மாவலிச் சக்கிரவாத்தியை யீடேற்றி, உபேந்திரனென்னுமபெயரோடு உண்மை யறிவோடிருந்தனர். எ - று. (௩)

ஆய காலையிற் றுல்லைய லங்கலோன்
மேய வைகுண்ட நாட்டகமேயினன
காயக திரச்செங் கவுத்துவ னைத்தொழப்
போயிருந்தன னாங்கது போழ்திடை.

(இ - ள்.) அப்படி உபேந்திரரா யிருந்தகாலத்தில், துளசிமாலை சூடிய திருமால் வைகுந்தத்தில வீற்றிருந்தனர் எறிக்கின்ற சிவந்த கிரணங்களையுடைய கௌஸ்துப மணியை யணிந்த திருமாலை வணங்குமபடி உபேந்திரரும் வைகுந்தஞ் சென்றிருந்தனர். அங்கே அபபொழுது. எ - று. (௪)

கண்ணு வப்பெயர் மாமுனி கார்மழை
வண்ண னைககண்டு வாழ்த்திட வேண்டுவா
னெண்ணி யெய்தின னீங்கிவர் நோக்கினு
ருண்ணெ கிழ்ந்தவாக் கொன்றும விளம்பலர்.

(இ - ள்) கண்ணுவரென்று சொல்லும பெயர்பெற்ற சிறந்த முனிவர் கருநிறம பொருந்திய மேகவண்ணராகிய திருமாலைக்கண்டு பணியும்படி கருதி அவ்வைகுந்தத்திற் கெழுந்தருளினர். அங்கிருந்த வாமனரும திருமாலும் திருமகளும அவர் வருகையை நோக்கியும, மனமுருகி முனிவருக்கு ஒருவார்த்தையும் சொன்னாரிலர். எ - று. (௫)

ஈது நோக்கி யெரிந்தெழு சிந்தையான்
காது சிந்தையக கண்ணுவன் கண்ணுதன்

மாது பாகன் வழித்தொண்ட னென்றனைத்
தீது செய்திகழ்ந் தீரெனச் செப்பினன்.

(இ - ள்.) இதனைக் கண்டு தீப்போற் கொதித்தோங்கிய மனமுடையவ ராய் கொல்லத்தக்க எண்ணமுடைய அக்கண்ணுவமுனிவர், நெற்றிக்கண்ணை யுடைய பார்ப்பதி பாகராகிய சிவபெருமானுக்கு வழித்தொண்டு செய்பவனாகிய வென்னை, அலட்சியமாகக் கருதி யவமதித்திருந்தீரென்று கூறினார். எ-று.

மாய நீயு மறிதிரை மாநிலத்
தாய சென்ம மளவற வெய்தியே
யேய வூமரி னாதியென் றேயினன்
சேய பங்கயச செல்வியைக் கண்டுரு.

(இ - ள்.) மாயவனே! நீயும் மடங்கிவருகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த பெரிய நிலவுலகத்திலே, பிறத்தற்குரிய பிறவிகள் கணக்கிறந்தனவாக அடைந்து, ஊமைத்தன்மை பொருந்தியவர்களைப்போ லாகுகவென்று சபித்த னர். அதன்பின்னர், சிவந்த தாமரை மலரில் வசிக்கும் திருமகளைப்பார்த்து,

என்னை நீயு மவமதித் தாயினி
மின்னி லங்கொளி மாண்டுற வெஞ்சுரக்
கன்னி மானெனப் போதி யெனறுங்கணத்
தின்ன தன்மைய ராயின ரீங்கிவர்.

(இ - ள்) நீயும் என்னை அவமானப்படுத்தினை ஆனபடியால் மின்னல்போ லப் பிரகாசிக்கும் உன்தேககாந்தி அழிவடைக. கொடியவனத்திற் சஞ்சரிக் கின்ற பெண்மானாகப் போகுக வெனச் சாபங்கொடுத்தனர். இவர்களிருவரும் இதனால் ஓர்கணப்பொழுதில் இத்தகைய வடிவுடையவர்களானார்கள். எ - று.

உருத்து நோக்கியு பேந்திரன் றன்னையும்
விருத்த வேடுவ னாதியவ் வெவ்வனத்
திருத்தி யென்றனன் றன்னுழை யேகினன்
மருத்துழாயினன் றன்மை வழங்குவாம்.

(இ - ள்.) அங்குற்றிருந்த உபேந்திரனையுங் கோபத்தோடு நோக்கி, நீயும் கிழவயதுடைய கிராதனாய் இவர்களிருவரும் வசிக்கத்தக்க அக்கொடியகாட்டில் இருக்கக்கடவையெனச் சபித்துத் தமதாச்சிரமத்திற் கெழுந்தருளினர். இப் படிச் சாபம்பெற்ற மணந்தங்கிய துளசிமாலைதரித்த திருமாலின் நிலைமையைச் சொல்லுகின்றோம். எ - று. (௬)

அத்த னைக்கம லாலயத் தெய்தியே
சித்த மொப்பவ ருச்சனை செய்தனன்
மத்த மாகரிப போரவையன் வந்துரு
நத்த னிந்தகை நாதன் வணங்கினன்.

(இ - ள்.) அதனால் திருமால், புண்ணியராகிய சிவபெருமானைத் திருவாரூரை யடைந்து மனமொத்தமையோடு பூசித்தனர். மதமயக்குடைய பெரிய யானைத் தோலை யுரித்துப் போர்த்தவராகிய சிவபெருமான் பிரத்தியக்ஷமாகத் தரிசனந் தந்தருளவும், சங்கினைத் தாங்கிய கையையுடைய திருமால் அவரைவணங்கினர்.

உள்ள நெக்குவிட் டென்பு முருகினான்
வெள்ள வாரி விழிவழி சிந்தினான்
பிள்ளை நாண்மதி வேணிப் பிரானவற்
கெள்ளி லார்வ மினிதளித் தானரோ.

(இ - ள்.) திருமால் எலும்பும் நெகுவிடும்படி மனமுருகி ஆனந்தக்கண்ணீர்ப் பெருக்கை விழிவழியாயச் சிந்தினார். புதிய இளம்பிறைச் சந்திரனைச் சடையிலணிந்த சிவபெருமான் அந்தத்திருமாலுக்கு இகழ்ச்சியற்ற அன்பினை இனிமையோடு தந்தருளினார். எ - று. (கக)

என்னை வேண்டி யெமையருச் சித்தனை
நின்ன கத்துள வேட்கைநி கழ்த்தெனப்
பொன்ன லங்கு புனையுடைப் புங்கவன்
கன்னி பாகற கினைய கழறுவான்.

(இ - ள்.) யாது வரம்விரும்பி எமமைப்பூசித்தாய். உன்மனதிலுள்ள விருப்பத்தைச் சொல்லுவாயாக வென்ற திருவாய் மலரவும், பொன்மயமாய அசைகின்ற அழகிய பீதாம்பரமணிந்த திருமால், பார்வதிதேவியாரைப் பாகத்திலுடைய சிவபெருமானுக்கு இப்படி விண்ணப்பிக்கின்றனர். எ - று. (கஉ)

கண்ணு வப்பெய ரோனெனைக் காய்சினத்
தெண்ண ருத சொன்ன மெடுத்துநீ
மண்ண கத்திழி யூமரின் வைகென
வுண்ணெ கிழ்ந்திரங் காதிவை யோதினான்.

(இ - ள.) கண்ணுவரென்னும் பெயரையுடைய முனிவர் கடுங்கோபத்தோடு மனமுருகத்தக்க கருணையற்றவராய், எனனைநோக்கி, நீ யெண்ணிறந்த பிறவிகளெடுத்து நிலவுலகிலே இழிவடைந்த ஊமைகள்போன்றிருக்கக் கடவை யென்று இவவாறு சாபந்தந்தனர். எ - று. (கங)

யானு டைப் பெருந் தேவியை யின்னிள
மானி னத்தொடு போகவ ழங்கினான்
றூன நீங்கியு பேந்திரன் றனையு
மீன வேடுவ னாதியென் றேயினான்.

(இ - ள்.) மேலும், அடியேனுடைய பெருமை தங்கிய மனைவியாகிய திருமகளையும் இனிய இளமைத்தன்மை பொருந்திய மான்கூட்டத்துடன் சஞ்சரிக்கும்படி சபித்தனர். அவ்விடம் விட்டகன்று அங்குற்றிருந்த உபேந்திரனையும் ஈனத்தன்மையுடைய சிராதனுக்க வெனச் சபித்தனர். எ - று. (கச)

ஓது சாபமொ ழிந்திட வேண்டுவே
னீத ளித்தியென் முனியன் மாதவ
ஞதி நாத னவயுணர்நத தானரோ
நீதில சிநதை நெகிழநதருள்செய்குவான்.

(இ - ள்.) அம்முனிவருரைதத சாபஙகளெல்லாம் நீஙக விரும்புகின்றேன், இவ்வரததைத் தநதருள வேணடுமெனறு சிறநத திருமால் பிராாததிததனா. முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான அவற்றை யெல்லாம் உணாநது குற்ற மற்ற திருவுளள மிரஙகிததிருமாலுககுத திருவருள் புரிகின்றனா. எ - று, (௧௫)

கண்ண ருநதவக் கண் ணுவற் கூயிவற்
கெணண ருமபிறப பாகவென றேயது
நணண ருமபிறப பொன்றென நலகெனத்
தெணணி லாவணி வேணியன செபபினன்.

(இ - ள.) நினைததறகரிய அருநதவம புரிநத கணணுவமுனிவரா வரு விததது, நீ இததிருமாலுககு எணணிறநத பிறவிகளெனறு சபிததததை, அடை தறகரிய பிறவி ஒன்றுரும்படி (சாபநிவாரணம) தருக வென்று, தெளிவான பிறைச் சநதிரனையணிநத சடையையுடைய சிவபெருமான திருவாய மலாந தனா. எ - று. (௧௬)

சிநதை யொத்தவ னங்ஙனரு செப்பலு
நநது மேய நளின கரததினன
மைநத னிறசிவ மாமுனிப பேரோடும்
வெநத ழற்சுரத தூமரின மேயினன்.

(இ - ள்.) மனவொருமைப்பாடுடைய அககண்ணுவமுனிவர் அப்படியே சொலலவும, சஙகமானது பொருந்திய செநதாமரை மலாபோனற திருககரமு டைய திருமால, கொடிய அககினிமயமான பாலைவனததிலே குழநதைபபருவ முடையவராயச சிறநத சிவமுனிவரெனனும பெயரோடு ஊமரைப்போல விருந தனா. எ - று. (௧௭)

அவவ னததிலு பேநதிர னுமவன்
வெவ்வி ராத குலததொடு மேயினன
நவ்வி யொதத தண டாமரை நஙகையுஞ
செவவி யிறறம சிநதை தெருண்டிலா.

(இ - ள்.) அவவனததிலே, உபேநதிரரானவர் கொடிய வேடாகுலததிற் பொருநதியிருநதனா. குளிாசசிபொருநதிய தாமரைமலரில வசிககும திருமக ளும மான்போனறு அவதரிததாள. (திருமால் உபேநதிரராகிய) இருவரும செவவையாகத தஙகள சிததம தெளிநதிலா. எ - று. (௧௮)

கால மிங்ஙன மெண்ணில் கடநதன
சீல மோாநத சிவமுனி தன்னெதிா
கோல மான்பிணை சென்று குறுகலா
லாலு மாதவ னஙகெதிா நோக்கினன்.

(இ - ள்.) இவ்வகையே எண்ணில்லாத காலங்கள் சென்றன. அதன் பின்னர், தவநிலையுணர்ந்துள்ள சிவமுனிவருக்கெதிரே, அழகு பொருந்திய பெண்மானனது சென்று சமீபித்தபடியால், பெருந்தவத்தாற் சிறப்புற்ற சிவமுனிவரும் அவ்விடத்தில் அதனை நேரேபார்த்தனர். எ - று. (௧௯)

நோக்க நோக்கிலம் மாபபிணை நோககினு
லாககு தனனுட கருபபமுண டாயதாற
ருக்கு வேடா கிழஙககழ தாழ்குழிப
போககி லநதப புனபபிணை யீனறதால்.

(இ - ள்) அச்சிவமுனிவர் நோககிய நோககாலும், அநநோககை அப்பெணமான நோககிய நோககாலும், அப்பெணமான தனககுள் உணடாகின்ற கா்பபோற்பததி வாயநதது. எதிரததோரைத தாககுகினற தொழிலையுடைய வேடாகள் கிழஙககழநத ஓராழநத குழியில, காட்டிலடைநத அபபெணமான கருவுயிாததது. எ - று. (௨0)

ஈனறு வீழநததை நோக்கிய தெமமினம்
போனற தனமெனப போயதப பொறபிணை
தோனறு பேநதிர வேடன ெ௺டுதெடுத
தானற சாரற குடிலகத தணமினன.

(இ - ள.) கருவுயிாததது ம அஙகேவிழுநதபிணடததைப் பாாதது இதுஎங்கள் இனததையொததனறு எனறு அதனை விடடுவிடடு அபபெணமான போயவிடடது. அவவனத்திறபிறநதுளள உபேநதிரனகிய வேடன, கைவிடாது எடுததுககொணடு அஙகேயுளள விசாலமாகிய மலைச்சாரலிலிருககும் தனகுடிசைககுட் போயினன. எ - று. (௨௧)

கான வேலிக கவலைய கழ்நதெடுத
தான பளளங கிடநததிவ வாரணங
கேனை வானவா மஙகைய ரீனறதோ
தேன ருமலாச செலவிகொ லோவெனு.

(இ - ள.) காட்டிலுளள வேலிககருகே [கவலை] வளளிக கிழஙகைத் தோணடியெடுததலால ஆழமாயிருககுங குழியில விழுநதிருநத இததெயவீகப் பெண, வேறு தேவாகளீனறதோ? தேன இடைவிடாது சிநதுமசெநதாமரைப் பீடததையுடைய இலககுமியோ வெனறு. எ - று. (௨௨)

அயிாதத சிந்தைய னுஙகவ னுசையான்
மயிாகு லஙக ளெனவளாதத தாணிளங
குயிறகொ ழுஙகுத லைகதொரு கோலமா
னுயிாதத வளளியென ஞேரபெய ரீநதனன்.

(இ - ள்.) ஐயமெயதிய மனமுடையவனகிய அககிராதன் மிகக ஆசையோடு மயிற்கூட்டஙகளை வளாபபதுபோல வளாததுவநதான. அன்றியும் இளம் பருவமுடைய குயிலபோனற செப்பமுளள குதலைச்சொற்கள் பொருநதிய அப்பெண குழநதைககு அழகு பொருநதிய மான பெற்ற வளளியெனறு ஒரு பெயரிட்டான். எ - று. (௨௩)

இன்ன தன்மைய வேலப் புரிகுழ்
லன்ன மென்னடை யாளை யலங்கிலை
மின்னி ருங்கதிர் வேலவற் கீதலாற்
சொன்ன சாபந் துடைத்தனர் மூவரும்.

(இ - ள்.) இத்தகைய மணங்கமழ்ந்து முறுக்கிய கூந்தலையும் அன்னம் போலும் நடையையு முடைய அவ்வள்ளியம்மையாரை, ஒளி வீசி அசைவுறும் இலைவடிவாகிய பெரிய வேலாயுதந் தாங்கிய முருகப்பெருமானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தபடியால் அம்மூவரும் கண்ணுவமுனிவர் கொடுத்தசாபம் ஒழியப்பெற்றார்கள். எ - று. (உச)

ஈதோர் கால மிதுகழி வுற்றபின்
மாதோர் பாகனை மாயன மனக்கொளா
வோது நல்வர மோரிரண் டெய்துறத்
தீதில் சிந்தையி னெண்ணஞ் சிறந்தனன்.

(இ - ள்.) இஃதொருகாலத்தில் நிகழ்ந்தது. இச்சரிதை நிகழ்ந்த பின்னர், பார்வதிதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமானைத் திருமால் தமதுளத்தில் தியானித்து, சொல்லத்தக்க நல்ல இரண்டு வரங்களைப் பெற்றுக்கொள்ளும்படி, குற்றமற்ற மனதில் மிகுதியாகக் கருதியிருந்தனர். எ - று. (உரு)

அந்த நல்வர மெண்ணின னண்மியே
கந்த மாதனத் தெய்திய கண்ணுதல்
செந்த னித்துணைத் தாண்மலர் சிந்தியாக்
கொந்த லாக்கொண் டருச்சனை கோட்டினன்.

(இ - ள்.) அத்தகைய சிறந்த இருவரங்களை யடைதற்குக்கருதி, கந்தமாதனகிரியில் வீற்றிருந்தருளும நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை யடைந்து, ஒப்பற்றுச் சிவந்த உபயபாதத்தாமரைகளையும் தியானஞ்செய்து, கொத்துக்களாயுள்ள மலர்களா னருச்சித்துப் பூசைசெய்தனர். எ - று. (உசு)

ஈறில் கால மிருந்தருச் சித்தபி
னேறு கைத்தரு ளெந்தை பிரானவற்
கூறு மன்பி னெழுந்தெதி ருற்றனன்
மாறி லன்பொடு மாயன வணங்கினன்.

(இ - ள்.) எண்ணில்லாத காலங்கள் அங்கிருந்து பூசித்தபின்னர், இடபத்தை வாகனமாகக்கொண்டருளிய எமது தந்தையாகிய சிவபெருமான், அத்திருமாலினிடத்திற் சுரக்கின்ற பேரன்போடு அங்கெழுந்தருளி, அத்திருமாலுக்கு நேரே தரிசனமளித்தனர். அப்பொழுது திருமால் மாறுபடாத உண்மையன்போடு வணங்கினர். எ - று. (உஎ)

எய்தி யெந்தை யெனக்கெதி ருற்றுறச்
செய்த மாதவ மேதுகொ றெண்ணிலாப்
பெய்த மென்பிறைப் பிள்ளை யணிந்தருள்
ளைய னேயென் றடிக்கடி போற்றினன்.

(இ - ள்) எமது தந்தையே! தெளிவான நிலவைச்சொரிகின்ற மிருதுவான பிறைச்சந்திரனை யணிந்துகொண்டிருக்கும் தலைவரே! அடியேனுக்குப் பிரத்தியக்ஷமாக வெழுந்தருளித் தரிசனமளிக்கும்படி அடியேன் இதுகாறுஞ்செய்த பெருந்தவம் யாதோவென்று கூறி, திருமால் மீண்டும் துதிபுரிந்தனர். எ - று,

நீல கண்ட னிலாவணி வேணியோன்
மாலை நோக்கி மகிழ்சிறந் தாமெனமை
யாலு நாண்மல ராலருச் சித்தனை
சால வேண்டுங் கருத்தெது சாற்றென்று.

(இ - ள்.) ஆலாலந்தங்கிய கண்டத்தையுடையவரும், பிறைச்சந்திரனை யணிந்த சடையையுடையவருமாகிய சிவபெருமான் விஷ்ணுமூர்த்தியைப் பார்த்தருளி மகிழ்ச்சிமிக்கவராய, வண்டுகள் சப்திக்கும் அன்றலர்ந்த மலர்களால் நம்மை வெகுகாலமாக அர்ச்சித்தாய். ஆதலின், உனக்கு வேண்டியவரம் யாது? சொல்லுகவென வினவவும். எ - று. (உகூ)

அங்கை வார்சிலைக் கம்பென லாகவுஞ்
செங்க ணேறெனச் சேவடி தாங்கவும
பொங்கு வேட்கை பொருந்தி னேனென
வெங்க ளத்த னவற்கினை நீந்தனன்.

(இ - ள.) தேவரீருடைய அழகிய திருக்கரத்திலேந்திய நெடியவில்லுக்கு அம்பென்று சொல்லும்படியாகவும, சிவந்த விழிகளையுடைய இடபமாகத் தேவரீர் சிவந்த திருவடிகளைத் தாங்கவும் மிக்க ஆவலடைந்துள்ளேனென்று பிரார்த்திக்க, எங்கள் தலைவராகிய சிவபெருமான் திருவுளமிசைந்து அவருக்கு அவ்விருவரங்களையும் அனுக்கிரகித்தனர். எ-று. (ௗ0)

மாயன்வரம்பெறு சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் உகூ-க்குத் திருவிருத்தம். ௗ00சு.



இருபத்துநான்காவது

## நரகாசுரன்வதைச் சருக்கம்.



இன்னு மோர்கதை யுண்ட திசைக்குது
மன்னு நான்மறை மாதவத் தந்தணீர்
சொன்ன வாறு தொடாபொடு கேட்குதி
ரென்ன வார்சடைச் சூத னியம்புவான்.

(இ - ள்.) நிலைபெற்ற நான்குவேதங்களையுமுணர்ந்து பெருந்தவமிழைத்த நைமிசாரணியமுனிவர்களே! வேறோர் சரித்திரமுள்ளது. அதனையுங் கூறுகின்றோம். நாம் சொல்லியவகையே தொடர்பாகக் கேட்பீர்களாகவென்று, நீண்டசடையையுடைய சூதமுனிவர் சொல்வாராயினர். எ - று. (க)

நானி லந்திரு நங்கை பயப்பவுந்
டான வோர்நர காசுர னென்பவன்
கான நாண்மலர்ச் செல்வனைக் கைதொழூஉ
வேனை நாளு மருந்தவ மேற்றினன்.

(இ - ள்.) பூமிதேவியாகிய அழகிய தெய்வப்பெண் தரத்தோன்றிய ஒப்பற்ற நரகாசுரனென்னும் ஓரசுரன், மணங்கமழும் அன்றலர்ந்த தாமரைமலர்ப் பீடத்தையுடைய பிரமனைக் கைகுவித்துப்பணிந்து பலதினங்களாக அருந்தவஞ் செய்தனன். எ - று. (உ)

யாவ ராலு மியற்றரு மாதவம்
பாவ கத்தொடு நின்று பயிற்றலாற்
பூவி னுன்முகப் புங்கவ னெய்தினன்
றேவ தேவனென் றேத்தினன் றீமையோன்.

(இ - ள்.) ஒருவராலுஞ் செய்தற்கரிய பெருந்தவத்தை மிகப் பரிசுத்தத்தோடேயிருந்து செய்தபடியால், தாமரை மலர்ப் பீடத்தையுடைய பிரமன் பிரசன்னமாயினன். அப்போது கொடியோனாகிய நரகாசுரன் தேவதேவ! எனத் துதிசெய்தான். எ - று. (ங)

நாள நாண்மலர்த் தாமரை நாயகன்
வாளெ யிற்று நிருதனை வம்மென
மூளு மாதவ முற்று மிழைத்தனை
நீள நின்ற நினைவுநீ கழறென.

(இ - ள்.) நாளத்தையுடைய அன்றலர்ந்த கமலத்தையாதனமாகவுடைய பிரமன், கூரியபற்களையுடைய நரகாசுரனை, அருகேவருகவென் றழைத்து, சிறந்த பெருந்தவங்கள் முழுதுஞ் செய்தனை. உன்மனதிலுள்ள எண்ணத்தைச் சொல்கவென வினவவும். எ - று. (ச)

வையம் யாவு மெனக்கென வானவர்
செய்யு மேவ லெனக்கெனச் சீறியோர்
மொய்ய மர்க்களம் பின்னிட முன்னினே
னைய னேயிவை யன்றியு முண்டென்று.

(இ - ள்.) ஐயனே! உலகமுழுவதும் எனபரிபாலனத்திலடங்கவும், தேவர்கள்செய்யும் பணிவிடைகள் என்னுடையதாகவும், என்னை யெதிர்த்தோர் நெருங்கிய போர்க்களத்தில் எனக்குத்தோற்கவும் கருதினேன். இவையேயன்றி இன்னுமுண்டென்று. எ - று. (ரு)

என்னை வெல்வ தெறிமழு வானவன்
பன்னு நான்மறைப பாறகடற் பள்ளியோ
ரின்ன ரோருரு வெய்திமற றல்லவர்
துன்ன மர்க்களந தோறறிட வேண்டினேன்.

(இ - ள்.) ஒளிவிடுகின்ற மழுவாயுதந தாங்கிய சிவபெருமான், நான்கு வேதங்களையும் ஓதிய திருப்பாறகடலிற சயனிக்குந திருமாலாகிய இவர்களிரு வரும ஒருருவெடுத்தே யெனனை வெலலவேண்டும. இவர்களலலாத பிறர் நெருங்கியபோர்க்களத்தில தோல்வியடையவும விரும்பினேன. எ - று. (௬)

என்றெடுதது நிருத னியமபலு
மனற லங்கம லாலய வானவ
னன று னககி தளிததன நாமென
வனற ளிததிக லனன முகைத்தனன்.

(இ - ள்.) என்று, நரகாசுரன இப்படி யெடுத்துச்சொல்லவும், வாசனையும், அழகுந்தங்கிய தாமரைமலர்க்கோயிலையுடைய பிரமன, நலலது. உனககு இவ் வரங்களை நாம தந்தோமென்று அப்போதே யநுக்கிரகிததது, வலியமைந்த அனன வாகனமூர்ந்து சத்தியலோகமெய்தினன. எ - று. (எ)

பெறல ருந்திருப பெற்றுடன் மீண்டன
னறன ழிததுள ளருளுந துறநதனன
மறவி யஞசி மனநதுணுக குறறுறக
குறைவி றீமைக கொடிதிழைத தானரோ.

(இ - ள்.) அடைதற்கரிய செலவங்களை யடையப்பெற்று உடனே திரும் பினன. அப்பொழுதே தருமங்களையழித்தது, தன்மனதிற் கிருபையென்பதை யறவேவிலககினன. இயமனும அவனைப்பார்த்துப் பயமெய்தி மனநடுங்கிடக் குறைவிலலாத தீமைகளைக கொடிதாகச்செயதனன. எ - று. (அ)

வையம யாவும வயபபுலி வாய்ப்பபடப்
பெய்த வாவிற் பெரிதுழந் துறறவாற்
கைய றுந்துய ரககட லாழ்நதன
வெய்ய வறகும வெருககொள வெம்புவான்

(இ - ள்) உலகமுழுவதும், வெறறிபொருந்திய புலியின்வாயி லகப்பட்ட பசுவைபபோல மிகவும வருந்தியிருந்தன. சகிக்கமுடியாததுகக சாகரத்தில் மூழ்கின. சூரியனுக்கும பயமுண்டாகும வகையாக்க கோபங்கொளளுவான.

கவைநெ டுஞசினைக் கறபக நாடரு
மிவையு ணாநதுயிரப பினறி யிருநதன
ருவரி யாடை யுலகரு ளணமருந
துவரு நாவினா நெஞசத துணுககினா

(இ - ள்.) பிளவுப்பட்ட நெடிய கிளைகளையுடைய கற்பக விருக்ஷம்பொருந்திய தேவலோகத்தினரும், நரகாசுரன் இவ்வகை வரம்பெற்றதை யுணர்ந்து, சுவாசமில்லாது மூர்ச்சித்தார்கள். கடலாடையுடுத்த உலகினைக் காக்கும் அட்டதிக்குப்பாலகரும் நாவுலர்ந்தவர்களாய் மனம் நடுங்கினார்கள். எ - று. (௪0)

கள்ளு யிர்த்தலர் கற்பக நாயக
னுள்ளு யிர்பபி னொடுக்கு மிடுக்கினன்
வள்ளெ யிற்று நிருதன் வழங்குறக்
கொள்ளு மேவறன கோமுடிக் கொள்வனால்.

(இ - ள்.) தேனைச்சிந்திப் பூக்களை மலர்கின்ற கற்பக விருக்ஷத்தின் தலைவனான இந்திரன், தன்னுள்ளே பெருமூச்சுவிடுப்பவனாகவும், தன் வல்லமையை யடக்கிக்கொண்டிருப்பவனாகவும், கூரியபற்கள் வாய்ந்த நரகாசுரனால் கட்டளையிடப்பட்ட ஏவல்களைத் தன் சிறந்த சிரமிசைக்கொண்டு நடப்பான். எ - று.

இப்பெ ருந்தவ மீந்தரு ளந்தணன்
வெப்பெ ழுந்து வெருவு மனத்தனு
மெப்பெ ருந்துய ரெமமுறைச செய்வனென்
றப்ப ரந்தலை யெண்ணிய டங்கினன்.

(இ - ள்) இவ்வகைய பெரியவரங்களைக் கொடுத்தருளிய பிரமனும், கொதிப்பு மிகுந்து பயமடைகின்ற மனமுடையவனாய், இவன் நம்மிடத்தில் எந்தவகைய பெருந்துயர் செய்வானோவென்று, அவ்வரத்தின் மேன்மைகளைச் சிந்தித்துக்கொண்டு அடங்கியிருந்தான். எ - று. (௪௨)

ஈங்கி வன்செய லிப்பரி சாகவு
மோங்கு வெண்குடை யானுல கோம்புவான்
றேங்கு பேரெழிற றேவகி பாலக
னாங்கு ணரந்தவன் பாலமர்க்க ண்மினன்.

(இ - ள்.) இந்நரகாசுரன் செயல்கள் இங்கே யிப்படியிருக்கவும், மேன்மை தங்கிய வெண்கொற்றக் குடைநிழலில் உலகினைக்காத்து வருகின்றவரும், தேவகியின் புத்திரருமாகிய கிருஷ்ணமூர்த்தி, தாம் வசிக்கின்ற துவாரகாபுரியில் இச்செயல்களைக்கேட்டுணர்ந்து, அவ்வரசனபால் போர் செய்ய நெருங்கினார்.

சென்றெ ழுந்தமர் சேனைத் திரளெலா
மன்று பஞசி னெரியென லாக்கினு
னின்று டற்று நெடுமழை வண்ணனு
மொன்று மாவதன் றெனவோ டினன்.

(இ - ள்.) அப்படிக் கிருஷ்ணமூர்த்தியுடன் போர்செய்யப் புகுந்தசேனைத் தொகுதிகளெல்லாம், அன்று அவ்வசுரன் நெருப்புப் பொறியுற்றபஞ்சுப்பொதி போலழித்து விட்டான். அங்கிருந்து எதிர்த்த பெருமை தங்கிய மேகவண்ணராகிய கிருஷ்ணமூர்த்தியும் நம்மாலொன்றும் முடிவதின்றென்று தெரிந்து ஓட்டம் பிடித்தனர். எ - று. (௪௪)

ஈண்டு சேனை யளவற வீட்டியே
மீண்டு மன்னவன பாறபட மேயினு
னீண்ட கோல நெடுமழை வண்ணனு
மூண்ட வெஞ்சமா முறறியு டறறினை.

(இ - ள்.) விசுவரூபமுடையவரும, மேன்மை மிகக மேகவண்ணமுடைய வருமாகிய கிருஷ்ணமூாததி, மீணடும ஒருமுறை சேரததககசேனைகளைக கணக கிலலாதனவாகச் சேகரிததுககொணடு, அவவசுரனபாறபோய, கொடிதாகிய பெருமபோா செயயத தொடஙகி யெதிாததாா. எ - று. (கரு)

கூற்ற மன்ன கொடுஞசினத தானவ
னேறறெ ழுநதம ராட லியறறினு
ளுறற ருநதிறற சேனை யடஙகலுங
காறறெ ழுஞசுழல பூளையிற காட்டினன்.

(இ - ள்) இயமன்போலக கடுஙகோபமுடைய அந நரகாசுரன் எதிர்த்து வாநது போாசெயயத தொடஙகினன். வெலலுதற்கியலாத வலலபமுடைய கிருஷணமூாததியினுடைய சேனைகள முழுவதையும, சுழல்காறறிற சிககி கொணட பூளைப்பூவைபபோல வழிததான. எ - று. (கசு)

முறறி யிப்படி மூவெழு காலமா
பறறி யிறறனன பாபபணைப பளளியா
னெறறு காலன றிசையள வோடினு
னிறறு தணட மெனநகைநத தானரோ.

(இ . ள்.) சேஷ சயனததில் அறிதுயில கொளளும திருமாலாகிய கிரு ஷ்ணமூாததி இவ்வகையே இருபததொருமுறை போரைத தொடஙகிசசெயது தோலவி யெயதினா. அபபொழுது கிருஷணமூாததி, பலரையுந தணடிககினற இயமலோகமடடுமே ஓடினா. அதனைககணடு நரகாசுரன அணடம உடைபபட டதென்று சொலலும்படி வீரநகைசெயதான. எ - று. (கள)

கால மாமுகில் வண்ணனைக் கண்ணனை
நீல மேனி நிருதனெ டுஙகடன
ஞால மெங்கு நடவி நடநதன
னால கால மெனவெகுண டானரோ.

(இ . ள்.) மாரிககாலததில் தோனறும் சூல்கொணட மேகமபோன்ற கரு நிறமெயதிய கணணபிரானை, நீலநிறநதஙகிய தேகததையுடைய நரகாசுரன, நெடிய கடலசூழநத உலகமுழுவதுந தேடித்திரிநதான. ஆலாலமபோலககோப மெயதினன். எ - று. (கஅ)

அன்ன வன்றனக் கஞ்சிய சைநநெடும்
பின்னல வெண்டிரை வெளளப பெருங்கடற்
றுன்ன ருஙகட் டுவாரகை யெனறொரு
மன்னு மாநகா வைகி மறைநதனன்.

(இ - ள்) (அது தெரிந்த கண்ணபிரான்) அந்தரகாசுரனுக்குப் பயமெய்தி அசைந்தெழுகின்ற பின்னிக்கொண்டிருக்கும் வெள்ளிய அலைகளையுடைய பெருங்கடலாற் சூழப்பெற்ற, யாவராலும் அடைதற்கரிய இடமாகிய துவாரகையென்னும் பெயர் பெற்றதும், ஒப்பற்றதும், நிலைபேறுள்ளதுமான பெரிய நகரத்தில் மறைந்து வசித்திருந்தனர். எ - று. (௧௬)

ஆய மாநகர் வைக லரிதெனப்
போயி ருந்துமை நாகப் பொருப்பிடைப்
பாய்வி டைத்தனிப் பண்ணவற் பூசியாச்
சேய காலமொ ழிந்தனன் செங்கண்மால்.

(இ - ள்.) ஆகிய அத்துவாரகாபுரியிலும் அந்தரகாசுரனுக்குத் தெரியாது மறைந்து வசிப்பது அருமையென்று கருதி, மைநாகபர்வதத்திற் போயிருந்து, பாய்ந்து செல்லும், இடபத்தையுடைய ஒப்பற்ற சிவபெருமானைப் பூசித்து சிவந்தகண்களையுடைய திருமாலாகிய கிருஷ்ணமூர்த்தி வெகு நாட் கழித்தனர்.

மங்கை பாகன் மழைமுகில் வண்ணன்பால்
செங்க ணேறுகைத் தாங்கெதிர் சென்றன
னங்க ரம்புடைத் தானெழுந் தாடினான்
பொங்கு பேருவ கைக்கடல் பூத்தனன்.

(இ - ள்.) உமாசமேதராகிய சிவபெருமான், சூல்கொண்ட மேகம்போலுங் கருநிறமுடைய கிருஷ்ணமூர்த்தியினிடத்திற்கு, சிவந்தவிழிகளையுடைய இடபவாகனமூர்ந்து சென்று, அம்மைநாககிரியில் பிரத்தியக்ஷமாகத் தரிசனந் தந்தனர். கிருஷ்ணமூர்த்தி அழகிய கைகளைக்கொட்டி யெழுந்து ஆனந்தக் கூத்தாடினர். மிக்க பெருங்களிப்பென்னும் சமுத்திரத்தி லமிழ்ந்தனர். எ - று. ()

தேவர் சிந்தனை முற்றின திண்புவி
மேவு பல்லுயிர் வாழ்ந்தன வேயெனப்
பாவை பங்கன் படர்சடை நாயகன்
சேவ டித்தலஞ் சென்னிவைத் தானரோ.

(இ - ள்.) தேவர்கள் கருத்துக்கள் முடிந்தன. வலிய நிலவுலகில் வாழ்கின்ற பலசீவகோடிகளும் வாழ்ந்தனவென்று களிப்பெய்தி, உமாபிராட்டியைப் பாகத்திலுடையவரும் படர்ந்த சடையையுடையவருமாகிய சிவபகவானது சிவந்த திருவடிகளை (கிருஷ்ணமூர்த்தி) சிரசிலணிந்து கொண்டனர். எ - று. (௨௨)

மாற்ற ரும்புரம் வாணகைத் தீயினு
னீற்று நம்ப னிலாப்புனை வேணியோற்
போற்றி நின்றவற் கண்டெம்மைப் பூசனை
யாற்றி நின்றனை யென்கொ லறைகென.

(இ - ள்.) அழித்தற்கரிய முப்புரங்களை ஒளியமைந்த புன்னகை யென்னுந் தீயினுற் றகித்தவரும், பிறைச்சந்திரனை யணிந்த சடையையுடையவருமாகிய சிவபெருமான், தம்மைத் துதித்துக்கொண்டிருக்கும் கிருஷ்ணமூர்த்தியைக் கிரு

பாரோபகாரஞ்செய்து, எம்மைப் பூசித்துவந்தனை. என்னகாரணம்? கூறுகவென வினவவும். எ - று. (௨௩)

நன்னுதல்புடை யோய்நர காசுர
னென்னு மோரசு ரர்க்கிறை யிந்நிலந்
தின்னல் செய்தொழிந் தானல னீர்ந்தருப்
பொன்னன் நாகக்கு மிடுக்கண் புரிந்தனன்.

(இ - ள்.) நல்ல நெற்றியையுடைய உமாதேவியைப் பக்கத்திலுடையவரே! நரகாசுரனென்னும் பெயர் வகித்த ஓரசுரர் தலைவன், இந்நிலவுலகில் மாத்திரமே தீமைபுரிந்து போனானில்லன். குளிர்ந்த கற்பக விருக்ஷத்தையுடைய தேவலோகத்திற்கும் துன்பத்தை விளைவித்தான். எ - று. (௨௪)

அவனை வெல்வ தரியொடு வெள்விடைச்
சிவனு மோருருக் கொண்டெனச் செப்பினு
னிவரு மோதிம மேறியு கைத்தரு
டுவாழு கக்கம லாலயத் தொல்லையோன்.

(இ - ள்) ஊர்ந்து நடத்தத்தக்க அன்னவாகனத்திலேறி வருபவனும், சிவந்த நிறந்தங்கிய இடம்பொருந்திய தாமரைமலரைக் கோயிலாகக்கொண்டவனும், பழையோனுமாகிய பிரமன், திருமாலோடு வெண்மையாகிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானும் ஒருருவெடுத்துத் தான் அவ்வசுரனை வெல்லவேண்டுமென்று வரந்தந்துள்ளான். எ - று. (௨௫)

என்று கூறியின் றென்னொடு மெம்பிரா
ஞென்றி மேவி லுவனை முடிக்குவ
னன்று நல்வர நல்கென நம்பனை
மன்ற லந்துள வோனடி வாழ்த்தினன்.

(இ - ள்) என்று கூறி, இற்றைப்பொழுதில் அடியேனுடன் எமது பெருமானாகிய தே[illegible]சேர்ந்திருப்பீராகில் அந்த நரகாசுரனை யழித்துவிடுவேன். ஆதலால், [illegible]யனையத் தருவதாகிய சிறந்த இவ்வரத்தைத் தந்தருளவேண்டுமென்று, வாசனைவீசும் அழகிய துளசிமாலை தரித்த திருமால், சிவபெருமான திருவடி[illegible] வாழ்த்தினார். எ - று. (௨௬)

கேட்ட போழ்திற் கருணை கிளர்ந்தெழ
வாட்ட டங்கண் மருங்குடை வானவ
னேட்ட லங்கற் றுழாயவற் கீந்தனன்
மீட்டு மீட்டுந் தொழுதுளம் விம்மினன்.

(இ - ள்.) அவ்வேண்டுகோளைக் கேட்டமாத்திரமே, கருணையானது மேலோங்கித் தோன்றுதலால், வாள்போலும் பரந்த விழிகளையுடைய உமாதேவியாரைப் பாகத்திலுடைய சிவபெருமான், இதழ்கள் பொருந்திய துளசிமாலை தரித்த கண்ணபிரானுக்கு அவ்வரத்தைத் தந்தருளினார். அப்பொழுது திருமால் அடிக்கடி பணிந்து மனங்களித்தனர். எ - று. (௨௭)

அற்றை நாளி னலங்கற் றுழாயினன்
முற்று வெஞ்சினத் தாரமர் முன்னினான்
றெற்றெ யிற்று நிருதனைத் தேடினான்
பெற்ற காலைவி ளைந்தது பேரமர்.

(இ - ள்.) துளசிமாலை யணிந்த திருமால் அதிகரித்த கடுங்கோபமுடையாராகிய அசுரர்களோடு அன்றையதினமே போர்செய்யக் கருதியவராய், மாறுபட்டிருக்கும் பற்களையுடைய அநந்தராசுரனை எவ்விடத்துந் தேடினார். அவனை நேரே கண்டபோது பெரும்போருண்டாயது. எ - று. (உ௮)

கலி நிலைத்துறை.

தண்டு சுற்றினர் நடஞ்சிலை குனித்த னர்சரங்
கொண்டு ருத்தனர் நெழித்தனர் குதித்த னர்குலாய்
மண்ட மர்க்கள மடுத்தன ரடுத்த னர்வயத்
திண்டி றற்படை விதிர்த்தனர் செருத்த லைவரே.

(இ - ள்.) அப்பொழுது இருபக்கலிலுமுள்ள சேனாநாயகர்கள் கதாயுதத்தைச் சுழற்றினார்கள். பெரியவில்லை வளைத்தார்கள். அம்புகளைச்செலுத்தி விடுத்தார்கள். ஆர்ப்பரித்தார்கள். குதித்தார்கள் கலந்து வந்து நெருங்கிய போர்க்களத்தில் நிறைந்தார்கள். வெற்றி பொருந்திய மிகு வல்லமையுடைய ஆயுதங்களை வீசினார்கள். எ - று. (உ௯)

கால்வி ழுந்தனர் கரங்கடுணி பட்டனர்கடா
வேலொ டுங்குருதி சிந்தினர்வி ளிந்து விழுவார்
சூலொ டுந்தொடர் ரக்கர்படை சென்னி துணியப்
பாலெ ழுங்குருதி யத்தலைவர் கண்டு படர்வார்.

(இ - ள்.) இருவகைமூர்த்தியின் சேனைகள் காலை யிழந்தார்கள். கைகள் வெட்டுப்பட்டார்கள். ஏவிய வேலோடு உதிரஞ்சிந்தியவர்களாய் இறந்து விழுவார்கள். அசுரச்சேனைகள் தங்கள் மேற்பாய்ந்து சூலாயுதத்தோடு தலைகளறுபட அத்தலைகளினின்று பெருகுகின்ற உதிரத்தைப் பார்த்து அச்சேனைத் தலைவர்கள் வருவார்கள். எ - று. (௩௦)

சேனை பட்டன சினக்கத மதச்சி றுகண்மால்
யானை பட்டன வெழுந்துக ளடற்பு ரவியந்
தானை பட்டன தராதல மதிக்க வருதேர்
மோனை பட்டற முடிந்தன பொடிந்த துலகம்.

(இ - ள்.) சேனைகளழிந்தன. கோபமாகிய குரோதத்தோடு மதஞ்சொரியுஞ் சிறிய கண்களையுடைய யானைகளும் அழிந்தன. நடக்கும்போதே தூசுகளெழத்தக்க குதிரைச் சேனையும் அழிந்தன. நிலவுலகிலுள்ளார் மதிக்கத் தக்கதாக வரும் தேர்கள் சிகரங்கள் தகர்க்கப்பட்டு முற்றும் அழிந்தன. உலகமும் பொடியாயிற்று. எ - று. (௩௧)

பார திர்ந்தன பருப்பதம திர்ந்த னபணிக்
கார திர்ந்தன கருங்கடல திர்ந்த னகதிர்த்
தேர திர்ந்தன திசைந்தமு மதிர்ந்த னதிரற்
போர திர்ந்தெழு வதிர்ந்தது பசும்பொ னுலகம்.

(இ - ள்.) போரானது அதிர்ச்சியோடு நிகழ்வதால், பூமி யதிர்ந்தன. மலைகளதிர்ந்தன. குளிர்ந்த மேகங்களதிர்ந்தன. கருநிறந்தங்கிய கடல்களதிர்ந்தன. சூரியனுடைய தேர் அதிர்ந்தன. அஷ்டதிசைகளும் அதிர்ந்தன. பசும்பொன் மயமான தேவலோகமும் அதிர்ந்தது. எ - று. (௬௨)

சக்க ரத்தொடு தெரிந்தன தடங்குடை விசையற்
றுக்கி ழிந்தன கொடித்திர ளுலப்பி னெடுவேல்
புக்கி றந்தனர் பறந்தலை புனற்குரு தியாற்
செக்க ரிற்றிடை விழுந்தன கிடந்த சிவணும்.

(இ - ள்.) தேருருளைகளோடு பரந்த குடைகளும் தெறித்துப்போயின. வெற்றிக்கொடிக் கூட்டங்களெல்லாம் நிலைமையற்றுக் கிழிபட்டன. அப்போர்க்களத்தில் எண்ணிறந்தனவாகிய நெடிய வேற்படைகள் புகுந்திறந்தவர்களுடைய இரத்த நீரால், செவ்வானமானது ஆகாயத்தைவிட்டு விலகி, இப்போர்க்களத்தினிடையே விழுந்திருந்தாற்போலும். எ - று. (௬௩)

கண்டெ றித்தனர் கருந்தலை தெறித்த னர்தசைப்
புண்டெ றித்தனர் பசுங்குருதி பொங்கி நிமிர்வார்
மண்டை விட்டிட வழிந்தொழுகி மூளை சிதறத்
துண்ட மிட்டன ரொருத்தரை யொருத்தர் தொடர்வார்.

(இ - ள்.) சிற்சிலர் கண்தெறிபட்டார்கள். பெரியதலை தெறிபட்டார்கள். உடலெங்கும் பசிய உதிரம் அதிகமாகப் பெருகும்படி யிருப்பார்கள். மண்டை யுடைபட்டு மூளை வழிந்தொழுகிச் சிதறும்படி துண்டஞ் செய்யப்பட்டார்கள். ஒருவரை யொருவர் பின்றொடர்ந்து போவார்கள். எ - று. (௬௪)

உருவி யோடுகணை யாயிரவ ரூடு ருவுறத்
தருவி யோடுவன பலபடைது ணிந்து சிதறிப்
பொருவு டுக்குலமெ னப்புடை தெறிப்ப புடைபோய்ச்
செருமு கத்தலைவர் சென்னிசித றச்சி னவுமால்.

(இ - ள்.) உருவிச் செல்லும் அஸ்திரங்கள் ஆயிரம் பெயர்கள் வரையில் ஊடுருவித் தூணடிப் பாய்கின்றன. வேறு பல ஆயுதங்கள் உடைபட்டு நக்ஷத்திரங்கள் போர்புரிவது போன்று பக்கங்களிற் றெறிக்க, அவர்கள் பக்கலில் வேறு சில போய் அவர்கள் சிரங்களைத் தெறிக்கும்படி கோபிக்கின்றன. எ - று. (௬௫)

ஈறு பட்டன நிசாசரனெ டுத்த வங்கங்
கூறு பட்டனகொ ழுங்குடர்கி ழிந்த துயிர்போய்
வேறு பட்டன பெருங்குருதி வெள்ள மலைபொங்
காறு பட்டது நடந்ததுதி கந்த மளவும்.

(இ - ள்.) [நிசாசரன் = இரவிற் சஞ்சரிப்போன்] நரகாசுரன் கொணர்ந்த சேனைகள் முற்றுமழிந்தன. வெவ்வேறு பகுப்பாயிருக்கிற கொழுவிய குடர்கள் எல்லாங் கிழிபட்டன. உயிர்கள் நீங்கிப் பிணமாயின. மிகுந்த உதிரவெள்ளமானது அலைகள் மோதுகின்ற பெரிய ஆறுபோலப் பெருக்கெடுத்து எண்டிசைகளிலும் பரவியது. எ - று. (௯௬)

பொறிவரிப் பணங்கி முறப்படு யங்க வணையா
னெறிமல்வ லிப்புயவ ரக்கனையெ திர்ந்து மறல
மறித ழறசுலவு சக்கரவ யப்ப டையினுற
நெறுசி னத்தவனமு டித்தலைநெ றித்த துலகின்.

(இ - ள்.) புள்ளிகளும் வரிகளும் பொருந்திய படத்தின் நிழலிலே யோகநித்திரை செய்யும் சேஷசாயியாகிய கிருஷ்ணபகவான், மிக்க வல்லமை தங்கிய தோள்களையுடைய நரகாசுரனை யெதிர்த்துப் போர்செய்ய, கொல்லத்தக்க தீப்பொறி சுழலும் வெற்றி தங்கிய சக்கராயுதத்தால், நிலவுலகில் கடுங்கோபமுடைய நரகாசுரனுடைய கிரீடமணிந்த தலை சிதறிப்போய்விட்டது. எ - று.

வான மங்கைய ருமங்கலக்கை வந்த டவினு
ரோனை வானவாம லாப்புயலி றைத்த னர்கள்பான்
மானி லத்தறமவ ளர்ந்தது மகத்த லைவனுக்
கான வெண்குடைநி வந்ததுவி யந்த தவனி.

(இ - ள்.) ஆகாயத்திலுள்ள தேவமாதர்களும் தங்கள் கழுத்திலணிந்த மங்கல சூத்திரத்தை (அக்ஷதத்துடன் அப்போது) தடவிப்பார்த்தார்கள். அவர்கள் கணவர்களாகிய தேவர்கள் யாவரும் புஷ்பமாரி சொரிந்தார்கள். பூலோகத்திலே தருமமானது மேம்பட்டது. [மகம்] யாகத்திற்குத் தலைவனாகிய இந்திரனுக்கு உரித்தாகிய வெண் கொற்றக்குடைமேலோங்கியது. உலகமுழுதும் சந்தோஷித்தது. எ - று. (௯௮)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

காளங் கறுத்த மணிகண்டக் கடவு ளொருபாற் பகுந்திருப்ப
மூளுஞ் சமரி னெதிருடற்றின முடியா தனவு முடியாவோ
வேளும் புரமு மடலைப்பட விழித்து நகைத்த வெள்விடையோன்
றாளங் கமல மரிபரவ வருளிப் புகுந்தான் றடங்கயிலை.

(இ - ள்.) விஷத்தினாற் கறுப்பெய்திய நீலகண்டத்தையுடைய சிவபெருமான் ஒரு பக்கத்திற் பிரிந்திருக்கச் சூழ்ந்துகொண்ட போரில் எதிர்த்துப்பொருததால் இறக்காதனவும் இறவாவோ? (அசுரர்களழிந்தபின்னர்) மன்மதனும் திரிபுரங்களும் சாம்பராக முறையே திருநோக்கஞ்செய்து நகைத்தருளிய வெண்மைதங்கிய இடபவாகனமுடைய சிவபெருமானது அழகிய பாதத்தாமரையைத் திருமால் வணங்க, அவருக்கருள் செய்து பெரிய கைலாயகிரியையடைந்தனர்.

வரிவண் டிரங்கித் துதைந்தாடு மடற்பூந் துளவ மழைவண்ணன்
புரியும் புரிசைத் துவாரகையம் புரத்துப் புகுந்தான் புரந்தரற்குப்
பரியும் பரிவு தலைநிமிரத் தனிச்செங்கோல் வாழ்ப் படரொழிந்து
விரிவெண் கவிகை மேனிழற்ற வரியா சனத்து வீற்றிருந்தான்.

(இ-ள்.) கீற்றுக்களையுடைய வண்டுகளொலித்து நெருங்கி விளையாடுகின்ற இதழ்கள் விரிந்த அழகிய துளசிமாலை தரித்த மேகவண்ணனாகிய கிருஷ்ணமூர்த்தி அழகிய மதில் சூழ்ந்த துவாரகாபுரிக்குச் சென்றனர். இந்திரன் தனக்கு வருத்துகின்ற துன்பந்தணிய, ஒப்பற்ற செங்கோல் வாழும்படி துயரகன்று விரிந்த வெண்கொற்றக் குடைமேலே நிழல் செய்ய, சிங்காதனத்தில் வீற்றிருந்தான். எ-று. (௩௦)

நரகாசுரன் வதைச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் ௨௪-க்குத் திருவிருத்தம். ௲௦௪௯.



## இருபத்தைந்தாவது

# திருமால்சிவார்ச்சனைச் சருக்கம்.



முன்னாட் கழிந்த நெடுங்காலத் தொருநாண் முனிவர் துருவாசன்
பின்னற் சடிலி கேதாரத் தெந்தை பெருமான் றிருக்கோயி
றன்னிற் புகுந்தப் பெருமானைச் சரணம் போற்றித் தனித்தொருபாற்
கன்னிக் கொருபா கற்குரிய பூசை யியற்றிக் கண்முகிழ்த்தான்.

(இ-ள்) கழிந்துபோன பலகற்பங்களுக்கு முன்னே ஒருநாள் துருவாச முனிவர், திருக்கேதாரத்திலுள்ள பின்னிய சடைமுடியை யுடைய எமது தந்தையும் தலைவனுமாகிய சிவபெருமான் திருக்கோவிலைச் சார்ந்து, அப்பெருமானுடைய பாத தாமரைகளைத் துதிசெய்து திருக்கோயிலினின்று அரிது நீங்கித் தனித்து ஓரிடத்திலிருந்து, உமாபிராட்டியாருக்கு ஒருபாகத்தைக் கொடுத்த அவ்விறைவர்க்குரிய வழிபாடுகளைச் செய்து தியானித்துக் கொண்டிருந்தனர்.

அதுகாலத்தி னிருந்துளவத் தலங்கற் பெருமா னலங்குநிலா
விதுவார் சடையோற் றொழவேண்டி வெங்கா லெழுப்பு மிருஞ்சிறைய
கதிர்வா ளுகிர்க்காற் பெருங்கலுழக் கடவுளுகைத்துக் கதுமெனவங்
கெதிரா விழிந்து சினகரம்புக் கெம்மா னிருந்தான் முறைவணங்கி.

(இ - ள்.) அந்தக் காலத்தில் பெருமைதங்கிய துளசிமாலைதரித்த திருமால் சந்திரிகை வீசும் நிலவை யணிந்த நெடிய சடையையுடைய சிவபெருமானைப் பணிய வேண்டி, கொடுங்காற்றை யெழுப்புகின்ற பெரிய சிறகுகளையும், ஒளி பொருந்திய கூரிய நகங்கள் பொருந்திய கால்களையுமுடைய பெரிய கருடபக வான் மீதாரோகணித்து விரைவாக அங்கெதிர்ந்து இறங்கித் திருக்கோயிலிற் புகுந்து எமது சிவபெருமான் திருவடிகளை முறைப்படி பணிந்து. எ - று.

விரித்த மறைநூல் விதித்தபடி வழுவான் றிருத்தாள் வீழ்ந்திறைஞ்சிப்
புரித்த சடையோன் விடைவேண்டிப் போதுங் காலை யொருமருங்கு
தரித்த துருவா சனைநோக்கி வணக்கம் புரியான் றணந்தனுற
வரித்த் மனனு மிருவிழியுஞ் சுழன்றான் முனிவன் கடுஞ்சினத்தால்.

(இ - ள்.) விரிந்துள்ள வேதநூலிலே விதிக்கப்பட்டுள்ள முறைமைகளி னின்று தவறாதவராய்ச் சிவபெருமான் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து, முறுக்கிய சடையையுடைய சிவபெருமானிடத்தில் விடை கொண்டு திரும்பிவருந்தருணத்தில், ஒருபுறத்தில் எழுந்தருளியிருந்த துருவாச முனிவரைத் தரிசித்து வந்தனைசெய்யாதவராய் அப்பால் சென்றனர். துருவா சமுனிவர் தமக்கெய்திய கடுங்கோபத்தால் மனங் கருகி இருகண்களுஞ் சுழன் றனர். எ - று. (௩)

அரனை வணங்கு மருச்சனைமுற் றடைந்த காலை யருந்தவத்தோன்
விரவு சினமீக் கொளவெழுந்து விரித்தபணவா யிரப்பாயற்
பரனை யடந்தா னெம்மையவ மதித்தா யினியுன் படாசிறைய
வுரவுக் கலுழன் வீரபத்ர னவனு லிறப்ப துளதென்றான்.

(இ - ள்.) சிவபெருமானை வணங்குகின்றவழிபாடு முடித்துத திரும்புஞ் சம யத்தில், அருந்தவமுடைய துருவாச முனிவர், தம்மனதிலுள்ள கோபம் அதிக ரித்து எழுந்து கருடனைநோக்கி, ஆயிரம படங்களைப் பரப்பிக்கொண்டிருக்கும் சேஷசயனத்தையுடைய திருமாலைச் சோந்திருத்தலால் வலிதங்கிய கருடனே! நீ எம்மையவமதித்தாய். ஆதலால், இனி உன படாந்த சிறகுகள வீரபத்திரக் கடவுளால் அழிவதுண்டு என்று சபித்தனர். எ - று. (௪)

கற்றைச் சடிலக் குறுங்குஞ்சி வடுகக் கடவு ணெடுஞ்சூல
நெற்றி தொளைப்ப நிணசசோரி யொழுக நீயு நிலையழிவாய்
தெற்றுத் தரள வனமுலைய திருவுந் திப்பாற கடறசெலவாள்
முற்று மிவைகண் டருந்துயர முழப்பாய் நீயு மெனமொழிந்தான்.

(இ - ள்.) பின்னர், திருமாலைநோக்கி, தொகுதியாயுள்ள சடையாகிய குறுஞ்சிகையுடைய வைரவக்கடவுளின் நெடிய சூலாயுதமானது உன் நெற்றி யைத் துளைசெய்ய; அதினின்று கொழுப்போடு கூடிய உதிரம் பெருகும்படி நீயும் உன் நிலைமையை மாறுவாய். அன்றியும், முத்துமாலை யணிந்துள்ள அழ குற்ற குசங்கள் பெற்ற இலக்குமியுந் திருப்பாற்கடலிற்குச் செல்லுவாள், இவை யாவுங் கண்டு நீயுங்கொடுந்துக்கமெய் துவையென்ச் சபித்தனர். எ - று.

சேவே றுயர்த்த பெருமானு மெழுந்து புகுந்தான் றிருக்கயிலை
கோவே றளித்த பெருமானுந் துயர மொழிந்தான் கொழுங்குதலைப்
பூவே றளக மடந்தையொரு புடைவைத்தோனைப் பூசைபுரிந்
தேவே றியவிற் புயலனையான் பெறும்பே றின்னு மியம்புவாம்.

(இ - ள்.) இடபத்தைக் கொடியாக வுயர்த்திய சிவபெருமான் அங்கிருந்து நீங்கித் திருக்கைலையை யடைந்தனர். பசுக்களையும் எருதுகளையுங் காத்த திருமாலுந் தமக்குற்ற துயரமகன்றனர். கொழுவிய குதலைச்சொல்லையும் மலரணிந்த கூந்தலையுமுடைய உமாதேவியாரை ஒரு பாகத்தில் அமைத்தருளிய சிவபெருமானை, அம்பு பூட்டிய வில்லைத் தாங்கிய மேகம்போன்ற திருமால் பூசைசெய்து பெற்ற பதவிகளை இன்னும் எடுத்துச் சொல்லுவோம். எ - று. (௧௦)

படர்பூஞ் சினைய கற்பகத்தின் பசும்பொ னுலகத் திமையவர்க்கு
மிடர்கீண் டிமைக்குந் தானவர்க்கு மிகலுண் டாக விமையோர்கண்
மடல்பூந் தாது கொழித்திறைக்குந் துளவ மௌலி மாயவன்பாற்
றொடரா நடந்து தமக்கெனவா மிடுக்க ணனைத்துஞ் சொல்லுற்றார்.

(இ - ள்.) படர்ந்த அழகிய கிளைகளையுடைய கற்பகவிருக்ஷங்களிருந்த பொன்னுலகத்தில் வசிக்குந் தேவர்களுக்கும், துன்பங்களையே விருத்தியாகச் செய்யும் அசுரர்களுக்கும் ஒரு காலத்தில் போர்நிகழ, இதழ்களை அழகிய மகரந்தங்களைக் கொழித்துச் சிந்துகின்ற துளவமாலையணிந்த கிரீடத்தையுடைய திருமாலிடத்திற்குத் தேவர்கள் தொடர்ந்து சென்று, தமக்கென உண்டாகிய துன்பங்களையெல்லாம் எடுத்துச் சொல்லலானார்கள். எ - று. (௧௧)

வளைவா ளெயிற்றுக் கொடுங்கருத்தா மறலை மறலை யலைந்திறப்பே
முளைநாண் மதிய மிலைந்தவனுன் முளரி யவனும் வரம்பெற்றா
ரிலையா வருந்தி யிவர்க்கிடைநின் றிடைந்தே மினிநீ யெமதுவினைத்
தளையா றறுத்து வருந்தலின்றென் றருள வேண்டு மெனத்தாழ்ந்தார்.

(இ - ள்.) ஒளி தங்கிய வளைந்த பற்களையுடைய அசுரர்கள் பகைத்துப் போர்செய்து தோற்று, அன்று திங்கட் பாலசந்திரனைச் சூடிய சிவபெருமானிடமும் கமலாதனனாகிய பிரமனிடமும் பெருவரங்களைப் பெற்றார்கள். இவர்கட்கிடையே நாங்கள் அகப்பட்டுக்கொண்டு தோற்றுத் துக்கித்து வருந்தினோம். இனி, தேவரீர் அடியேங்களுடைய வினைப்பாசத்தைத் துணித்து, வருத்தந்தீர்க்கவென்று அநுக்கிரகிக்க வேண்டுமென்று கூறிப்பணிந்தார்கள். எ - று. (௧௨)

பாந்த ளைந்தும் பொறிப்பாயற் பள்ளிப் பெருமா னிவர்பரவச்
சேந்த முளரித் திருநயனக் கருணை பெருகிச் சென்றநாள்
மாய்ந்த பெருமா தவத்தலைவன் றதீசி யொடும்போர் மலைந்தன்று
தேய்ந்து திகிரி முனைமடிந்த செயலோரந் தவறுஞ் செப்புதலும்.

(இ - ள்.) புள்ளிகளமைந்த பாம்பாகிய (சேஷ) சயனத்தில் யோகநித்திரை புரியுந் திருமால், இத்தேவர்கள் துதிசெய்ய, செந்தாமரை மலர்போன்ற திருவிழிகளாற் கிருபை மிகுந்து, பூர்வத்திலே பெருந்தவம் பொருந்திய தலைவராகிய ததீசி முனிவரோடும் தாம் போர்செய்த காலத்தில் தமது சக்கராயுதம் தேய்ந்து முனைமடிந்த செய்கையை யறிந்து அவர்களுக்குச் சொல்லவும். எ - று. (௧௩)

பங்கேருகத்துப் பழமறையோன் பசும்பொனாட்டுப் புத்தேளிர்
செங்கேழ்முளரித் திருமடந்தைக் கிறைவாவதற்கோர்செயலுண்டாம்
கொங்கேறிதழி மவுலிசலந் தரனைச் செகுத்த கொடுந்திகிரி
யங்கே யவன்பா லுளததனை யெமக்கா விரப்பி னருள்செய்வான்.

(இ - ள்.) தாமரை மலரிலெழுந்தருளிய பழமையாகிய வேதங்களைக்கூறிய பிரமனும் பசிய பொன்னாட்டில் வசிக்குந் தேவர்களும் (சொல்லுகின்றார்கள்.) செந்நிறந்தங்கிய தாமரையிலெழுந்தருளிய இலக்குமிதேவிக்கு நாயகா! அதற்குச் செய்யவேண்டுவ தொன்றுள்ளது. மகரந்தம் பொருந்திய அழகிய கொன்றைமாலை யணிந்த சடையையுடைய சிவபெருமான் சலந்தராசுரனைச் சங்கரித்த வலிதங்கிய சக்ராயுதமொன்று, அவ்விறைவன்பா லுள்ளது, அதனைத் தேவரீர் அடியேங்களுக் காக விரும்பிக்கேட்டால் சிவபெருமான் கொடுத்தருளுவார். எ - று. (கச)

ஆது கொடுநீ யசுரர்குல மனைத்து முடிவா னமருற்றித்
தீது தீர்த்தி யெனவிரந்து செழுஞ்சே வடியின் முடிதாழ்ப்ப
மாது மருமத் தவனுடனங் கெழுந்து காஞ்சி மாநகரம்
போதல் புகுந்தா னந்நகரத் திருந்தா னரனைப் பூசித்து.

(இ - ள்.) தேவரீர் அதனைக்கொண்டு அசுரர் குலமுழுவதும் அழியும்படி போர்செய்து எங்கட்குற்ற துன்பத்தைத் தீர்த்தருள்வீராகவென்று யாசித்து, செழுமைதங்கிய சிவந்த திருவடிகளிற் சிரம்வைத்து வணங்க, திருமகளைத் திரு மார்பிலுடைய திருமால் உடனே எழுந்து சிறந்த காஞ்சிநகரத்திற்குச் சென்று அக்காஞ்சிபுரியிற் றங்கிச் சிவபெருமானைப் பூசித்திருந்தனர். எ - று. (கரு)

பூவா யிரந்தோ றிருக்கமலப் போதா யிரத்தால் வழிபட்டா
ளுவே றுயர்த்தோ னிவனிலைமை யறிவா னெண்ணிக் கமலத்
தோவா வொருபூக் கிடையாது வருந்தப் புரிந்தா னொருநாளிற்
றேவா திபன்முட் கொருநயன மலரிற் சாத்திக் குறைதீர்த்தான்.

(இ - ள்.) அழகிய ஆயிரவிதழ்களமைந்த பெரிய தாமரை மலர்கள் ஆயிரங் கொண்டு (நாடோறும்) பூசித்து வந்தனர். இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமான் இத்திருமாலின் பத்திமையை யறியக்கருதி, ஒருநாள் அவ்வாயிரமலர்களில் நீங்காத ஒரு மலரினைப் பெறாது வருந்தச் செய்தனர். திருமால் மலரொன்று காணாமையால் தமது பூசை முட்டுப்பட்டவண்ணம், தேவநாயகனாகிய சிவபெருமான் திருவடியில் தமதொரு விழியை மலர்போலர்ச்சித்துத் தமக்குற்ற குறைவுபாட்டி னின்று நீங்கினர். எ - று. (கசா)

துளிக்கு மதுப்பூந் தாதிதழித் தொடையன் முடியோன் றொலைவுயி
ரளிக்கும் பெருமா னிவன்றேடற் கரியா னிவற்கன் றரியோனுக்
களிக்கு மழுவே றுகைத்தருளிக் காண்டற் கெளிதாயப் புலப்பட்டான்
வெளிக்கு வெளியாய் நிரந்தர மாய நின்றான் றன்மை விளம்பவற்றோ.

(இ - ள்.) துளிக்கின்ற தேனையும் அழகிய மகரந்தத்தையுமுடைய கொன் றைமாலையணிந்த திருமுடியை யுடையவனும், அநாதியாகிய ஆன்மாக்களையெல் லாம் காக்கின்ற தலைவனும், இத்திருமாலால் தேடுதற்கு அரிதானவனுமாகிய சிவ

பெருமான், அத்திருமாலுக்கு அக்காலத்தில் உரியவராகிச் சந்தோஷிக்கின்ற இளமைதங்கிய இடபத்தை யாரோகணித்துத் தரிசித்தற்கு இலேசாகக் காஷித்தருளினர். பூதாகாயத்திற் கலந்திருக்கும் சிதாகாய சொரூபியாயும் சாசுவதமாகியும் விளங்கும் சிவபெருமான் தன்மையை இத்தகைத்தென்று சொல்லமுடியுமோ? எ - று.

எந்தாய் போற்றி யெமைப்புரக்கு மிறைவா போற்றி யெவ்வுலகுந்
தந்தாய் போற்றி யென்பணிக்குந் தாராய் போற்றி தமியனெதிர்
வந்தாய் போற்றி யுயிர்க்குயிராய் வருவாய் போற்றி தொண்டருளச்
சிந்தா குலந்தீர்த் தருள்புரியுஞ் சிவனே போற்றி போற்றியவே.

(இ - ள்.) எந்தையானவரே! போற்றி. எங்களைக்காக்கின்ற தலைவரே! போற்றி. எல்லாவுலகங்களையும் படைத்தவரே! போற்றி. என்புமாலையையணிந்தவரே! போற்றி. தமியேனுக்குப்பிரத்தியக்ஷமாகத் தரிசனந்தரவந்தவரே! போற்றி. சீவான்மாக்களுக்கெல்லாம் பரமான்மாவாக வருபவரே! போற்றி. அடியவர்களுடைய மனத்துயரைநீக்கி யநுக்கிரகிக்கும் சிவபெருமானே! போற்றி. போற்றி. எ - று. [போற்றி=காக்க.] (௧௮)

என்னப் போற்றி யடிபணிந்து தொட் டெழுக்கப் பணிந்தா னெழுநோக்கி
மின்னுச் சடையோன் றிருவருணீ டுற்று நின்றான் விழுக்கமலக்
கன்னிக் கிறைவன் கருத்துணர்ந்து கதிரா யிரம்போன் றொளிபரப்பும்
பொன்னந் திகிரி புரிந்தபின்னு மெதுவேண் டியது புகலென்றான்.

(இ - ள்.) என்று திருமால் துதிசெய்து, திருமுடி நிலத்திற்படியத்தாழ்ந்து வணங்கி யெழுந்திருக்க, மின்னுகின்ற சடையையுடைய சிவபெருமான்கண்டு திருவருள் மிகுந்து மனமுருகி நின்றனர். சிறந்த செந்தாமரைமலர்க் கன்னியாகிய திருமகள் கொழுநன் கருத்தையறிந்து, ஆயிரஞ்சூரியர்போலும் ஒளிசெய்கின்ற அழகிய பொன்மயமான சக்கராயுதத்தைத் தந்து, இன்னும் வேண்டியது யாது? கூறுகவென்றனர். எ - று. (௧௯)

நின்பா லுருகி நின்றடிக்கீழ் நெடுங்கண் சாத்து நிலையுலக
மன்பா லறிவா னெனக்கிருக ணம்போ ருகத்தி னருளென்றான்
மின்பா லுகந்தோ னஃ்தருளி வேண்ட வேண்டும் வரங்கொடுத்தான்
பொன்பான் மருமத் திகிரியினா னடைந்தா னமரர் புடைபோற்ற.

(இ - ள்.) தேவரீரிடத்தில் மனமுருகி, தேவரீர் திருவடியில் நெடிய விழியால் அர்ச்சித்த நிலைமையை உலகினர் அன்போடு அறியும்படி அடியேனுக்கு இருவிழிகளும் செந்தாமரைபோல அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனர். இன்புடன் சந்தோஷித்தவராகிய சிவபெருமான் அப்படியே யநுக்கிரகித்து வேண்டிய பிறவரங்களையுங் கொடுத்தனர். திருமகளிருக்குந் திருமார்புடனே சக்கராயுதமேந்திய திருமால் தேவர்கள் தம்பக்கலிற் றுதிக்கச்சென்றனர். எ - று.

அன்று முதலாக் கமலாக்க னெனும்பே ரடைந்தா னுடகமாகக்
குன்ற மனைய புள்ளுகைத்து வினைஞுட் டமரர் குறைமுடிப்பான்
கன்று சினத்தி னசுரர்கிளை முடிய முடித்தான் கடிகமழு
மன்றற் றுளவோ னஃ்தொன்றோ வின்னு மவன்சீர் வழங்குவாம்.

(இ - ள்.) அன்று தொடங்கி நறுமணங்கமழுந் துளசிமாலைசூடிய திருமால் தாமரைக்கண்ணனென்னுந் திருநாமமெய்தி, சிறந்தமேருமலையையொத்த கருடவாகன மூர்ந்து, ஆகாயவாசிகளாகிய தேவர் குறையைமுடிக்கக்கருதி, மிகுந்த கோபத்தோடு அசுரர்குலமழியும்படி யழித்தனர். அஃது ஒன்றுதானோ? இன்னும் அத்திருமாலின் சிறந்த சரிதைகளைச் சொல்லுவோம். எ - று. (உக)

கலிநிலைத்துறை.

வளைமு ழக்குறு வானசிலை மழவிடைப் பரனைக்
கிளைப டப்பட ரன்புளங் கிளைத்தன னாகி
யுளைதி ரைப்புனற் பொன்னிநாட் டகவையி னுற்றுன்
றளைம லர்க்கரந் தொடுத்தெடுத் தவனடி தாழ்ந்தான்.

(இ - ள்.) பாஞ்சசன்னியமெனனுஞ் சங்கினைமுழக்குகின்ற திருமால், கோபமும் இளமையும் வாய்ந்த இடபவாகனராகிய சிவபெருமானை மிகப்பரவிய மெய்யன்பானது தமது இதயத்திலுதித்தவராய், சத்திக்கின்ற அலைகளையுடைய நீர் நிரம்பிய காவிரிநதிபாய்கின்ற சோழநாட்டினையடைந்து, இதழ்கள் பொருந்திய மலர்களைத் தமது திருக்கரத்தாலெடுத்து அவ்விறைவனையர்ச்சித்துப் பாதங்களில் வணங்கினர். எ - று. (உஉ)

வள்ளை வார்குழை மடவர லொழித்தனன் வழாது
கள்ள விழ்ந்தலர் பங்கயக் கழலிணை கருதித்
தெள்ளு தேமல ரருச்சனை வானமுறை திளையா
வுள்ள நெக்குடைந் தேத்தினன் றருகின னெடுநாள்.

(இ - ள்.) வள்ளைக்கொடியையொத்த செவிகளிற் செறுக்கிய காதணியணிந்த உமாபிராட்டியை நீங்கியவராய், தேனொழுகும் மலர்ந்ததாமரைமலர்போன்ற சிவபெருமான் உபயபாதங்களையும் இடைவிடாது மனதிற் றுதிசெய்து, தெளிவாயிருக்கின்ற மணங்கமழும் மலர்களாலாகிய வழிபாட்டை ஆகமவிதிப்படி மனமூன்றி நெக்குவிட்டுருகிச்செய்து, அப்பெருமான் சந்நிதியினின்று பலநாள் துதிசெய்தனர். எ - று. (உ௩)

திருவி னாயக னவ்வழி யருச்சனை திருத்தக்
கருமணிக் களத் தெம்பிரான் கருணைமீக் கூர்ந்து
பொருவி டைப்புறத் தினிதெழுந் தருளினன் புகுந்தான்
குருதி வெண்ணிணத் திகிரியா னிருகரங் குவித்தான்.

(இ - ள்.) திருமகள் கணவராகிய திருமால் அப்படிச் சிவபெருமானுக்குரிய வழிபாட்டை நடாத்த, நீலரத்தினம்போலுங் கண்டத்தையுடைய எமது சிவபெருமான் திருவருள் மிகுந்து, போர்செய்யும் வலிமைதங்கிய இடபத்தின் முதுகின்பேரில் இனிமையாக ஆரோகணித்தவராய் எழுந்தருளினர். பகைஞருடைய உதிரமும் வெள்ளிய நிணமுமபடிந்த சுதரிசனமெனனுஞ் சக்கரத்தையுடைய திருமால் தம்மிருகைகளையுஞ் சிரமிசைக் குவித்தனர். எ - று. (உ௪)

நெகிழ்ந்த சிந்தைய னானந்த நீர்பொழி கண்ணன்
முகிழ்த்த கையினன் குழறிய நாவினன் முழுக்கத்
தொகுத்த வன்பின னிற்றலு நோக்கினன் றூயோன்
பகுத்த சிந்தனை யெதுசொன்மற் றுரையெனப் பணித்தான்.

(இ - ள்.) உருகிய மனமுடையவராகவும், ஆநந்தக்கண்ணீர் சிந்தும் விழிக ளுடையவராகவும், குவித்தகைகளுடையவராகவும், தழுதழுக்கும் நாவுடையவரா கவும், தமது திருமேனிமுழுவதும் நிரம்பிய அன்புடைய திருமால் நேரே இப்படி நின்றபொழுது, புனிதராகிய சிவபெருமான் திருமாலைநோக்கி, நீகருதிய எண் ணம் யாது? அதனைக்கேட்கவெனக் கட்டளைதந்தனர். எ - று. (௨௫)

ஈச னம்முறை யருளலு மீர்ந்துழா யலங்கல்
வாச மார்பின னடிக்கடி தொழுதனன் வருப்பான்
கூசு மென்குத லைத்தனிக் குழவியோ டெடுக்கு
மாசை யுண்டடிக் தருளுதி யெனக்கென வறைந்தான்.

(இ - ள்.) சிவபெருமான் அப்படியருளியவுடனே, குளிர்ச்சிதங்கிய துளசி மாலைதரித்த மார்பினையுடைய திருமால் பலமுறை சிவபெருமானைவணங்கி விண் ணப்பஞ் செய்கின்றனர். அச்சத்துடன்கூடிய திருந்துவான மழலைச்சொற்களை யுடைய சிவந்த ஒருகுழந்தையை உச்சிமோந்து புல்லியணைத்துக்கொள்ளவேண்டு மென்னும் விருப்பம் அடியேனுக்குள்ளது. அவ்விருப்பத்தின்படி வரங்கொடுத் தருளவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். எ - று. (௨௬)

நன்று சொற்றனை நல்குது மியாமென வருளி
மன்றல் வார்தொடை வானவ ரியாரினு மயங்கா
நின்ற பேரெழி லெவரினு நின்மகற் குவமை
யின்றெ னப்புரிந் தளித்தன மேகுதி யென்றான்.

(இ - ள்.) நன்மொழிசொல்லினை. அப்படியே நாம் வரங்கொடுக்கின்றோ மென்றுதிருவாய் மலர்ந்தருளி, மணமவீசும் நெடிய கற்பக மலர்மாலையணிந்த தேவர்களெல்லாரைக் காட்டிலும் விசேட அழகுள்ளவர்களெல்லாரைக்காட்டிலும் உனகுமாரனுக்கு ஒப்பானவர்களில்லையென்று சொல்லும்படி விருப்பத்தோடுவரந் தந்தோம். ஆதலால் நீசெல்கவெனக் கட்டளைதந்தனர். எ - று. (௨எ)

அறிந்த சிந்தனை யலமர வெகுண்டன ளசலஞ்
செறிந்த மென்கொடி சிவனிவற் கருளிய செல்வன்
பிறந்த ஞான்றிறந் தொழிந்துற விசைத்தனள் பெருந்தார்
நறுந்து ழாயவன் றன்னுளந் திகைத்தன னடுங்கி.

(இ - ள்.) இமாசலமன்னன் பெற்ற இளங்கொடிபோலும் உமாதேவியார் இதனையறிந்து தமது திருவுள்ளஞ் சுழற்சியடையக் கோபித்து, இப்போது சிவ பெருமான் திருமாலுக்குப் பாலித்தபுத்திரன், பிறந்ததினமே உயிர் துறந்திறக் கும்படி சபித்தனள். மேம்பாடமைந்த நறுமணமவீசும் துளசிமாலை தரித்த திரு மால் இதனைக்கேட்டவுடனே மனநடுக்கமெய்தித் திகைத்தனர். எ - று. (௨அ)

என்றி மாசலை வரனுவந் தளித்தன னிதுபெற்
றன்று போயின னிருஞ்சிறைப் புட்கொடி யமலன்
சென்று வேனிலாற் பயந்தனன் மைந்தனிற் சிறந்தான்
குன்ற வில்லிதா ளருச்சனைப் பெருமையார் குணிப்பார்.

(இ - ள்.) என்று இமாசலமன்னன் புதல்வியாகிய உமாதேவியார் திருவுளமகிழ்ந்து இவ்வரங்களைத்தந்தனர். பெரிய சிறகுகளையுடைய கருடத்துவசந்தாங்கிய திருமால், இவ்வரங்களைப் பெற்றுக்கொண்டகாலத்தில் அங்கு நின்றும் நீங்கினர். அப்படிச்சென்று வேனிற்காலத்திற்குரிய மன்மதனைப் புதல்வனாகப்பெற்று மேன்மையெய்தினர். ஆதலால் மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் வழிபாட்டின் மேம்பாட்டை எவர்தாம் கணிக்கத்தக்கவர்கள்? எ - று. (௯௯)

இறந்த நாளபல கழிந்தன வீங்கிதற பின்ன
ரறந்த ருங்கமலாலயத் தரிபுகுந் தடைந்து
வறந்த ருங்கொலை மழுப்படை வானவற் குறித்துச்
சிறந்த சிந்தையி னருச்சனை புரிந்தனன சிலநாள்.

(இ - ள்.) இதன்பின்னர் அநேகநாள் கழிந்தொழிந்தன. அப்பால் தருமச்செயல்களைப்பாலிக்கும் திருவாரூரையெய்தி, கொடுமைசெய்யும் கொலைத்தொழிற்கேதுவான மழுப்படைதாங்கிய சிவபெருமானைநோக்கி, திருமால் சிலகாலம் வரையில் மேம்பட்டமனத்துடன் அருச்சித்திருந்தனர். எ - று. (௱)

இலங்கி ழைக்கொரு மருங்களித் திருந்தருளெம்மா
னலங்க லர்துழாய் மாயவற் கவணெதி ரடைந்தா
னலங்கொள் சிந்தனை யருச்சனை யுவப்பினெ னயந்தேம
பொலங்கொ ணேமியாய் வேண்டுவ புகலெனப் புகன்றான்.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த உமாதேவியாருக்கு வாமபாகத்தைக்கொடுத்தருளிய எமது சிவபெருமான், அழகிய துளசிமாலையணிந்த திருமாலுக்கு அங்கே பிரசன்னராய், சிறப்புத்தங்கிய உமது மனக்கருத்தையும் பூசையையும் ஆநந்தத்தோடு அங்கீகரித்தோம். அழகுபொருந்திய சக்கராயுதமுடையவனே! உனக்கு வேண்டிய வரங்களைக்கூறுகவென்று திருவாய்மலர்ந்தனர். எ - று.

பொன்னி னாட்டகத் திந்திரன் முதலினோர் பொருமபோ
ரின்ன லீட்டவா ளசுரரா லிடைகுவ தெண்ணி
யன்ன வர்க்கென திருதரோ டாரம ராற்றப
பின்னி டப்பொரு தலைத்தனர் ரெனைப்பெரு வரத்தால்.

(இ - ள்.) தேவலோகத்திலுள்ள இந்திராதிதேவர்கள், எதிர்த்தற்கரிய யுத்தமென்னுங் கெடுதியை விளைக்கின்ற வாளேந்திய அசுரர்களாலே பின்னிடுவதுகருதி, அத்தேவர்களுக்காக அசுரர்களோடு பெரும்போர்செய்கையில், அவ்வசுரர்கள் தாங்கள் வகித்துள்ள சிறப்புத்தங்கிய வரத்தினாலே அடியேனையும் பின்னிடும்படி யெதிர்த்தோட்டினார்கள். எ - று. (௱௨)

உட்பு லப்படா மாயையி னடுசம ருடற்றிக்
கட்பு லப்படா ரெறிபடை காண்பன வல்லால்
விட்பு லம்புகுந் தழுங்குவா விண்ணவர் வெருவ
வெட்கு லக்கவை யெண்ணினு மெணணருந் திறத்தார்.

(இ - ள்.) மனதிற்கெட்டாத மாயாசத்தியாற் கொல்லத்தக்க போர்செய்து, அவர்கள் விடுகின்ற ஆயுதங்களைப் பார்ப்பதே யல்லாமல் அவர்கள் கண்ணுக்குத் தோற்றப்படார்கள். அதுவன்றியும் அத்தேவர்கள் பயப்படும்படி தேவலோகஞ் சென்று கலக்கஞ்செய்வார்கள். எள்ளினக்கூட்டஞ்சேர்ந்த ஒருபெருங்குவியலை இத்தனையென்கொண்டதென்று எண்ணிக்கூட்டினாலும் எண்ணமுடியாத தொகை யுடையவர்களா யிருக்கின்றார்கள். எ - று. (கஎ)

ஆய மாயையி னுங்கவ ருடற்றுவ தழிக்க
மாயை யாவையு மெனனுழை வழங்குதி வழங்கிப்
போய வாசசெகுத்திடுதி யென றெமக்கருள் புரிவா
யேய காரண மீதெனச் சீதர னிசைத்தான்.

(இ - ள்.) ஆகிய அத்தகைய மாயையினாலே அவ்வசுரர்கள் துன்புசெய்வதை யழிக்கும்படி, எல்லாவகை மாயைகளையும் என்பாற் கொடுத்தருள்வீராக. அப்படியருள்செய்து அவ்வசுரர்கள்பாற் சென்று அவர்களைவென்று கொல்லுகவென அடியேனுக்கு அருள்புரிவீராக. இதுவேயென்பூசையின் காரணமென்று லக்ஷ்மி தேவியை மார்பிலணிந்த திருமால்கூறினார். எ - று. (கஅ)

சங்கு தாங்கியோ னுரைத்தன திருச்செவி சார்ந்தி
யெங்க ளையக னுங்கவற் கினிதுள மிரங்கிப்
பொங்கு மாயைமற் றியாவையு மவற்கெனப் புரிந்தான்
செங்கண் மான்முகின் மாயனென் றொருபெயர் சிறந்தான்.

(இ - ள்.) பாஞ்சசன்னிய மென்னுஞ் சங்கைத்தாங்கிய திருமால்கூறியவற்றைத் திருச்செவியிலேற்று, எங்கள் தலைவராகிய சிவபெருமான் அவ்வேண்டு கோளுக்கு இனிதாகத் திருவுளங்கனிந்து, மிகுகின்ற எல்லாவகைப்பட்ட மாயைகளையும் அத்திருமாலுக்கே யுரித்தாகச்செய்தனர். செவந்ததாமரை மலர்போலும் விழிகளை யுடையவரும் மேகவண்ணருமாகிய திருமால் மாயனென்னும் ஒப்பற்ற பெயரோடு மேம்பட்டனர். எ - று. (கக)

கால நேமியே முதலிய வசுரரைக் கடிந்து
மூல மீறற முருக்கின னொருதனி முகுந்தன்
வாலி ளம்பிறைக் கண்ணியோ னருளிய வரத்தா
லோல மிட்டுநின் றழைத்தன ரிமையவ ருலகம்.

(இ - ள்.) ஒப்பற்ற திருமால் வெள்ளிய இளம்பிறைச் சந்திரனைச் சிரோமாலையாக வணிந்த சிவபெருமா னநுக்கிரகித்த வரத்தினால் காலநேமிமுதலிய அசுரர்களைவென்று வேரோடழியும்படி யொழித்துவிட்டனர். தேவலோகத்தி லுள்ளவர்கள் யாவரும் ஓலமிட்டழைத்தார்கள். எ - று. (உ0)

ஆலகண்டனை யரீச்சுரத் தருச்சனை புரிந்து,
மூல நாயகன் றிருநட முன்றிலின் முழங்கு,
மாலி ருங்தொனி தருமுழ விரட்டுற வுடைந்தா
னீல மேனியன், பெற்றன, பெற்றவர் திகழ்ந்தின்

(இ - ள்.) விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானை அரீச்சுரமென்னும் க்ஷேத்திரத்தில் மூலலிங்கத்திற் பூசைசெய்து இளைத்து, திருநடம் புரியும் சபையின் முன்னர் முழங்குகின்ற பெரிய ஒலியோடுகூடிய மத்தளம் வாசிக்கும் பாக்கியத்தை யெய்தினர். சொல்லுமிடத்தில், மேகவண்ணராகிய, திருமால்பெற்ற பேறுகளை யாவர்பெற்றார்கள்? ஒருவருமில்லை. எ - று. (௪௧)

திருவெண் காட்டிடை யருச்சனை புரிந்தனன் றிருமால்
கருத்து கண்டனைக் கட்புலத் தெதிருறக் காணா
வுருகு சிந்தையா மனத்தொடு பணிந்தன னுமையாள்
மருவு பாகனீ வேண்டிய தெனவென வலித்தான்.

(இ - ள்.) மற்றொருகாலத்தில், திருமால் திருவெண்காட்டில் சிவபெருமானைப்பூசித்து நீலகண்டமுடைய அப்பெருமானைக் கண்ணுக்கு நேராகத்தரிசித்து உருகியமனத்தோடு நிலத்திற்றோயும்படி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர். உமாதேவியார் பொருந்திய வாமபாகத்தையுடைய சிவபெருமான், நீவிரும்பியவரம் யாதென வினவினர். எ - று. (௪௨)

முத்தொழிற்கு நீ முதன்மைய னாயினை முடிக்கு
மத்தொழிற்குளோர் தொழிலெனக் காக்கினை யைய
சித்த நீமுனிந் தழித்துறி னுலகொடுஞ் சிதைவே
னத்திறத்து நீ யளித்திடப் பிறந்திறந் திளைத்தேன்.

(இ - ள்.) சிருஷ்டிமுதலிய முத்தொழில்களுக்கும் அவற்றை நடத்தும் தலைவராக விளங்குகின்றீர். அம்முத்தொழில்களில் காத்தலாகிய ஒருதொழிலை அடியேனுக்கு உரித்தாக்கினீர். ஐயனே! தேவரீர் திருவுளத்திற் சினமெய்தியழிக்கப் புகுந்தால் உலகத்தோடும் அடியேன் அழிவெய்துவேன். எவ்வாற்றானும் தேவரீர் அநுக்கிரகிக்க அடியேன் பிறந்திறந்துவருந்துகின்றேன். எ - று. (௪௩)

ஈண்டி யானினிப் பிறப்பொடு மிறப்பினை யிகழ்வான்
வேண்டி நின்றனன் னினபதத் தொடுங்குற விழைந்தேன்,
காண்ட குந்திருக் கண்டகண் டீவினை காணா
மீண்டு மீண்டுபு நிறந்திடா தருடர வேண்டும்.

(இ - ள்.) அடியேன் இனிப்பிறப்பையும் இறப்பையும் இகழ்வான நின்றேன். தேவரீர் திருவடியில் ஒடுக்கமெய்த விரும்பினேன். காணத்தக்க, செல்வச்சிறப்பினைக்கண்ட விழிகள் தீவினையைக்காணமல் மறுபடியும் மறுபடியும் பிறந்திறவா வரத்தையநுக்கிரகிக்க வேண்டும். எ - று. (௪௪)

என்னப் பன்னினன் றிரந்தன னிருந்துழாய் முடியோன்
கன்னிக் கோபுறங் கொடுத்தவன் றிருவருள் காட்டி
யின்னற் சாகரத் திழிகலை யினியென விரங்கிப்
பொன்னற் கோயிற் றவமுனிக் கிதனையன புகலும்.

(இ - ள்.) என்று, பெரிய துளசிமாலைபணிந்த முடியையுடைய திருமால் கூறித்துதிசெய்ய, உமாதேவியாருக்கு வாமபாகங்கொடுத்தருளிய சிவபெருமான் திருவருள்காட்டியவராய், இனிநீ துக்கசாகரத்தில் மூன்போல் வருந்தவேண்டா மென்று, அழகிய பீதாம்பரமணிந்த திருமாலுக்கு நேரே இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லுகின்றார். எ - று. (௬௩)

வளைத்த மாபெரும் பிரளய காலத்து வயங்கி
முளைத்த நெற்றியங் கழற்கொடு நின்னுடன முருக்கி
வளைத்த வெண்பலி யணிகுதும் விளங்குவெள் ளென்புந்
தளைத்த மாலையிற புயத்தொடுஞ் சாத்துதும் பின்னர்.

(இ - ள்.) உலகமுழுவதையும் மூடிய பெரிய மகாபிரளயகாலத்தில், பிரகாசித்துத் தோன்றிய நமமுடைய அழகிய நெற்றிவிழி நெருப்பால் உன்னுடலைத் தகித்து அதனாலுண்டாகிய சாம்பரைத் திருமேனியிலணிவோம். வெள்ளிய உன்னெலும்புகளையும் கட்டிய மாலையாகத் தோளிலணிந்து கொள்வோம். அதன்பின்னர். எ - று. (௬௪)

மருங்கு வைகுசா ரூபமும் வழங்குதும் வழங்கி
யிருந்த காலையில யாமெனப் பெறுகுவை யீற்றில்
வருந்த லென்றளித் தகன்றனன் மழவிடைப் பெருமான்
குருந்தி றுத்தவ னருச்சனை வரன்முறை கொண்டான்.

(இ - ள்.) நமக்கருகே வசிக்கத்தக்க சாரூபமளிப்போம். அப்படிக்கொடுத்திருக்குங்காலத்தி னிறுதியில நாமே நீயெனச் சொல்லப்பெறுவாய். வருந்தவேண்டாமென்று அநுக்கிரகித்து, இளமைவாய்ந்த இடபாரூடராகிய சிவபெருமான் அந்தர்த்தானமாயினார். குருந்த மரமிழலிவமாந்தருளிய சிவபெருமானை விதிமுறையாக அருச்சனை செய்தனர். எ - று. (௬௫)

ஊழி பற்பல போக்கி னருச்சனைக் குரித்தாய்
வாழி நாண்மலர் கொண்டுதந்தன னெடுமழை வண்ணன்
சூழி மால்கரி யுரிவையான சுரும்பெறி கூந்த
லேழை பாகன திருப்பதந் தொடுங்கினி னிப்பால்.

(இ - ள்.) மங்கலகரமாகிய அன்றலர்ந்த மலர்களைக்கொண்டு கார்மேகவண்ணராகிய திருமால் சிவார்ச்சனைக் குரியதாகப் பற்பல ஊழிகளைக்கழித்தது, முகபடாமணிந்த பெரிய கயாசுரனென்னும் யானையையுரித்துடுத்தவரும், வண்டுகள் மொய்க்கின்ற மலர்களணிந்த கூந்தலையுடைய உமாதேவிபாகருமாகிய சிவபெருமானுடைய உபயபாதங்களில ஒடுங்கினார். இனி. எ - று. (௬௬)

திருமால் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் ௨௫-க்குத் திருவிருத்தம் ௩௦௬௪.



# இருபத்தாறாவது

# பிரமன்சிவார்ச்சனைச்சருக்கம்.

—[*]—

தயங்கு வெண்பிறைக் கண்ணிபொற் றாண்மலர் பரவி
வயங்கு நேமியோ னடைந்தவா றுரைத்தன மலரோன்
முயங்கு சிந்தையி னன்பினா லருச்சனை முயலாப்
புயங்க வேணியோ னளித்திடப் பெற்றவா புகலுவாம்.

(இ - ள்.) விளங்குகின்ற வெள்ளிய இளம்பிறையாகிய சிரோமாலையை யணிந்த சிவபெருமானுடைய அழகிய பாததாமரைகளைப்பணிந்து, பிரகாசிக்கின்ற சக்கிராயுதந்தாங்கிய திருமால் அடைந்தவற்றைச் சொன்னோம். கமலாதனமுடைய பிரமதேவன் உண்மை யன்புவாய்ந்த சித்தத்தோடு வழிபாடுசெய்து, சர்ப்பங்களை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் அநுக்கிரகம் பெற்றுக்கொண்டவற் றையுஞ்சொல்லுவோம். எ - று. (க)

வடுக னோசிரங் கொய்தநாண் மம்மரா தீர்ந்து தொழுவான்
கடுமி டற்றனை வணங்கிய மமதையிற் கருங்கட்
கொடுநெ டுங்குழைத் திலோத்தமை வகுத்தெழில் குறித்தா
னடுத்த டுஞ்சிலை யநங்கனா லெரிமெழு காஞன.

(இ - ள்.) வைரவக்கடவுள் ஒருதலையைக்கிள்ளி யெறிந்தபோது, தன்மயக் கத்தை நீக்கிக்கொள்ளும் பொருட்டு, விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவ பெருமானைவணங்கிய அகங்காரத்தினாலே, கரியவிழிகளையும் வளைந்துநீண்ட காத ணியையுமுடைய திலோத்தமை யென்பாளைப்படைத்து அவளழகைக்கண்டான். உடனே போர்செய்யும் விசாலித்த கருப்புவில்லைத்தாங்கிய மன்மதனால் தீயிடைப் பட்ட மெழுகுபோலுருகுவதாயினான். எ - று. (உ)

காம மிக்கெழுந் தீன்றவ ளென்பதுங் கருதான்
வாம மேகலை கரந்தொட வரற்றினள் மாழ்கி
வேம னத்தொடும் வெருவினள் வெதும்பினள் வெள்கித்
தாம வார்குழல் சரிதரத் திருமுகஞ் சாய்த்தாள்

(இ - ள்.) காமநோயானது அதிகரித்து, தான்பெற்ற குமாரியென்றுஞ் சிந்தியாதவனாய், அழகிய மேகலாபரணமணிந்த திலோத்தமையின் கையைப் பிடிக்க, அவள் அழுது துக்கமெய்தி மயங்கி, மனவருத்தத்தோடு பயந்து நாண மெய்தி வருந்தி, மலர்மாலையணிந்த கூந்தல்சரியும்படி தனது அழகிய முகத்தைக் கவிழ்த்தனள். எ - று. (ங)

அக்க ணத்தினப் பொழுதவை திருவுளத் தடைத்து
முக்க ணான்கணத் தலைவரை முடுகுற மொழியக்
கைக்க டுஞ்சிலை வேடரிற் படர்ந்தனர் காற்றுத்
திக்கு நோக்கினன் முகத் தயன் றனிச சென்றான்.

(இ - ள்.) அக்காலத்தில் அவற்றைத் திருவுளத்திற்கொண்டு திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் தமது கணநாதர்களை யெதிர்த்துச்செல்லும்படி கட்டளைசெய்யவும், அவர்கள் தமது கையிற்றாங்கிய கொடியவில்லோடு வேடர்போல் வந்தார்கள். நான்கு முகங்களையுடைய பிரமன் ஓடியொளிக்குந் திசையைத் தேடிச்சென்று ஒன்றியாயினன். எ - று. (௪)

வெருவுஞ் சிந்தைய னருஞ்சிறை வெள்ளன மிழிந்து
பொருந் தடஞ்சிகைச் சுபாரிச மெனுங்கிரி புக்கான்
றிருகு வெஞ்சின வேடரை நினைதொறுந் திகைப்பா
னொருவி நீங்கல னக்கிரி நாள்கழித் தொழிந்தான்.

(இ - ள்.) அச்சமெய்திய மனமுடைய பிரமதேவன், பெரிய சிறகுகளையுடைய வெண்மைதங்கிய அன்னவாகனத்தி லிருந்திறங்கி, ஒப்பற்றவிசாலமுடைய கொடுமுடிபொருந்திய சுபாரிசமென்னுங் கிரியையடைந்தான். ஆக்கிரமிக்குங் கடுங்கோபமுடைய வேடுவர்களைக் கருதும்போதெல்லாம் திகைத்ததனால் அந்தக் கிரியைவிட்டு நீங்காமல் பலகாலம் அங்கேயே கழித்தனன். எ - று. (௫)

கண்ணு தற்றனிப் பரமனைக் கருத்துற வணங்கி
வண்ண நாண்மலர்த் தொகுதியா னருச்சனை வகுப்ப
வண்ண லோதிமத் தவற்கென வாளுடை யமல
னெண்ண ருங்கணத் தலைவரோ டாங்கவ ணெதிர்ந்தான்.

(இ - ள்.) நெற்றிவிழியையுடைய ஒப்பற்ற சிவபெருமானை மனவொருமைப் பாட்டோடு வணங்கி, அழகிய அன்றலர்ந்த மலர்த்தொகுதியாற் பூசைபுரியவும், பெருமையோடு மேம்பட்ட அன்னவாகனனாகிய அப்பிரமனுக் கருள்செய்யும்படி எம்மை யடிமையாக வுடைய சிவபெருமான் கணக்கிற்கு முடியாத சிவகணத்தலைவர்களோடு அங்கே பிரசன்னராயினர். எ - று. (௬)

எதிர் நோக்கின னிருங்கம லாலயத் திறைவன்
முதிரு மன்பினோ டஞ்சலித் திறைஞ்சினன் முழங்கி
யதிர்க ரும்புனல் வேணியோ னாங்கவற் குறித்து
விதிநி னைந்தன விளம்புதி யென்றலும் விரிஞ்சன்.

(இ - ள்.) பெரியதாமரைக் கோயிலில் வீற்றிருக்கும் பிரமன் நேரேதரிசித்து முதிர்ந்த பேரன்போடு கைகூப்பிப் பணிந்தனன். சத்தித்துக்கொண்டு ஒலிசெய்யும் கங்காநதியை யணிந்த சடையையுடைய சிவபெருமான், அப்போது பிரமனை நோக்கி, பிரமனே! நீவிரும்பியதைக் கூறுகவென வினவவும், பிரமன். எ - று. ()

புருவ வார்சிலைத் திலோத்தமை யெனுமவள் பொருட்டா
லுருகு சிந்தைய னாகிமா லுழப்பதொன் றொழியே
னருகு சேறலு நின்னுடைக் கணத்தவ ரடைந்தா
ரொருவி யோடின னிப்பொருப் படைந்தனன் வினையேன்.

(இ - ள.) நெடியவில்போன்ற புருவத்தையுடைய திலோத்தமையென்னும் அப்பெண்காரணமாக, உருகிய மனத்தோடு மயங்கி வருந்துவதைத்தவிராதவனாய், அவளை நெருங்கியவுடனே, தேவரீருடைய கணநாதர்கள் வேடுவர்களாயுருவேற்று

வந்தார்கள். அதனைக்கண்ட கொடியோனாகிய அடியேன் பயந்தோடிவந்து அன்றையதினம இம்மலையிற் சேர்ந்தேன. எ - று. (அ)

அக்க ணந்தவ னென்னையண் டாதுருத் தருளி
மைக்க ருங்குழற் றிலோத்தமை வன்முலை மருவப்
புக்க சிந்தையர் செய்திய பாதகம போக
வொக்க நோக்கினை றெனக்களித் தருளென வுரைத்தான்.

(இ - ள்.) அச்சிவகணநாதர்கள் இங்கேயும் வந்து என்னை வருத்தாதிருக்கும்படி திருவருள்செய்து, மேகம்போலுங் கருநிறந்தங்கிய கூந்தலையுடைய அதிலோத்தமையின அழகிய தனங்களைத்தழுவுவதற்கு எண்ணிய எண்ணத்தாலுண்டாகிய பாவமகலும்படி திருவுளங்களிப்போடு கடாக்ஷம்வைத்து அடியேனுக்கு வரந்தந்தருளவேண்டுமென்று விண்ணப்பித்தான. எ - று. (கூ)

கேட்ட நல்வர மியாவையு மளித்தனன கிரியிற்
பூட்டி மூப்புர மெரித்தவன் கயிலைபோயப் புகுந்தான்
றோட்டி ருங்கம லாலயச சதுமுகந தொலமேலான
மீட்டு வந்தன் றன்னக ரினிதுவீற் றிருந்தான்.

(இ - ள்.) மேருமலையாகிய வில்லில் அம்புபூட்டித் திரிபுரங்களை யெரித்த சிவபெருமான, பிரமன யாசித்த நல்லவரங்களை யெல்லாங்கொடுத்து, திருக்கைலாயகிரிக்குச்சென்று சேர்ந்தனா. இதழ்களையுடைய பெரியதாமரைக்கோயிலையுடைய நான்குமுகங்கள பொருந்திய பழையோனாகிய பிரமன; திரும்பித் தனது மனோவதி நகரத்திற்குவந்து இனிதாக வீற்றிருந்தனன. எ - று. (கo)

நாத னவ்வர மளித்தது நாளநாட் கமலப்
போதன முனனைய மூவரி னன்னலம் பொருந்திச்
சீத வார்குழற் பிறரிடை சிந்தனை செல்லா
னேதி லெம்பிரா னருச்சனை மறந்திலனினனும்.

(இ - ள.) சிவபெருமான அவ்வரத்தையருளபுரியவும், நாளத்தையுடைய மூன்றலாந்த தாமரைப்பூவி லெழுந்தருளிய பிரமன, பழமையாகிய திரிமூர்த்திகளபோல நன்னலங்களை யெய்தி இன்றுவரையில குளிர்ந்த நீண்டகூந்தலையுடைய பிரமாதரிடத்தில மனஞ்செலுத்தாதவனாய, குற்றமில்லாத எமது சிவபெருமானுடைய பூசையை மறவாதிருக்கின்றனன. எ - று. (கக)

கலிவிருத்தம்.

பதுமப் டிகையிருந் தளித்த பண்ணவ
னதுபொழு தின்னுயி ரனைய வாணிபாற்
புதுநல னுகாந்தனன புணாந்த காலையிற
சுதுமெனப பிறந்தனா கணக்கில மைந்தரே.

(இ - ள்.) கமலாதனத்திலிருந்து உலகங்களைப்படைத்த பிரமன், அக்காலத்தில், தனது இனிய உயிரபோல்வாளாகிய சரசுவதி தேவியிடத்தில் புதிய காமசுகத்தை யநுபவித்தனன. அப்படிக்கூடிய காலத்தில எண்ணிலலாப் புதல்வர்கள் விரைந்து பிறந்தார்கள். எ - று. (கஉ)

அளவறப் பிறந்தவ ரசுர ராதலின்
விளைவினைத் தலருயிர் செகுத்து வீழ்த்தின
னுளவிருப் புடனுவந் தளித்த மைந்தரைத்
திளைசினத் தொறுத்தலா லடைந்த தீமையே.

(இ - ள்.) கணக்கின்றி யுதித்தவர்கள் அசுரர்களானபடியால், பிரமன்தனக்கு அதிகரித்த கோபத்தினாலே அப்புதல்வருயிரைக் கொன்றுவிழுத்தான், மனவிருப்பத்தோடு சுகத்தோடளித்துப்பெற்ற புதல்வரை, மிக்ககோபங்கொண்டு கொன்றபடியால் அப்பிரமனைத் துன்பமெய்தியது. எ - று. (௩௩)

ஊன்றிடும் புதல்வரை யாவி யீர்ந்திடத்
தோன்றிய பழங்கணுற் றுயர மெய்தினா
னூனெழு பாதகத் தவல நீக்குவா
மூன்றுகட் பரமனைப் பரசன் முன்னினான்.

(இ - ள்.) தானபெற்ற புதல்வரைஉயிரொழித்ததனால் உண்டாகியபாவத்தினால், பிரமன் துன்பத்தையடைந்தனன். அதிகரித்தெழுந்த பாவத்தாலுண்டாகிய துன்பத்தை யகற்றும்படி, திரிநேத்திரங்களையுடைய மேலான சிவபெருமானைத் துதிசெய்தற்குக் கருதினன். எ - று. (௩௪)

பரவுகா ளத்தியுட் புகுந்து பண்டைநாட்
புரமெரித் தவனடித் தொண்டு போற்றினன்
வரநதி நெடுமுடிச் சடில வானவன்
விரைமல ரவற்கெதிர் வெளிப்பட் டானரோ.

(இ - ள்.) பலருந்துதிசெய்யத்தக்க சீகாளத்தி நகரிற்பிரவேசித்து, பூர்வகாலத்தில் முப்புரங்களையெரித்த சிவபெருமானுக்குத் திருவடித் தொண்டுசெய்து வந்தனன். கங்காநதியையணிந்த நெடியசடைமுடியையுடைய சிவபெருமான், மணந்தங்கிய தாமரை மலரிலுள்ள பிரமனுக்கு எதிரிலே பிரத்தியக்ஷமாயினார்.

எம்மைநீ வணங்கிய தெனனி னைந்தெனுக்
கைம்மழு வானவன் கழறக் கேட்டபி
னம்மலர்க் கரங்குவித் திறைஞ்சி யாரணச்
செம்மலர்ச் சதுமுகன் செப்பு வானரோ.

(இ - ள்.) பிரமனே! நீ எம்மைப்பணிந்தது யாதுகருதியோவென, மழுவேந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமான் வினவிய பின்னர், அழகியதாமரைமலர்போன்ற கைகளைக்கூப்பிப் பணிந்து, வேதங்களையோதிய செந்தாமரைமலரிலுள்ள நான்கு முகங்களையுடைய பிரமன் சொல்லுவானாயினன். எ - று.

பெற்றனன் புதல்வரைப் பெற்ற பாலகர்
கொற்றவ ரசுரர்தங் குலத்த ராதலா
விற்றற முடித்தன னவரை யீங்கெனைப்
பற்றின தொலைவுறாப் பழியும் பவமுமே.

(இ - ள்.) அடியேன் சிலபுதல்வரைப்பெற்றேன். அப்படிப்பெற்ற புதல்வர் வெற்றிபொருந்திய வாளைத்தாங்கிய அசுரர்குலத்தாராக விருந்தபடியால் அவர்களையெல்லாம் இறந்துபோம்படிகொன்றேன். அதனாலுண்டாகிய நீங்காதபழியும் பாவமும் என்னைவிடாது பிடித்துக்கொண்டன. எ - று. (கஎ)

ஆங்கவை யொழிப்பதற் கைய வேண்டினே
னீங்கெனக் கவையளிக் திரங்கல் வேண்டுமென்
றோங்குபே ரன்பினி னிரப்ப வோதிய
பாங்குறப் புரிந்தன னிடையின் பாகனே.

(இ - ள்.) ஐயனே! அப்பழிபாவங்களை நீக்குதற்கு விரும்பினேன். இப்பொழுது அடியேனுக்கு அவ்வரங்களை யநுக்கிரகித்துத் திருவுள மிரங்கவேண்டுமென்று, அதிகரிக்கின்ற பேரன்போடு யாசிக்க, இடபாரூடராகிய சிவபெருமான், பிரமனோதியவற்றை யெல்லாம் அங்ஙனமே யடையும் வகையாகத்திருவருள் புரிந்தனர் எ - று. (கஅ)

என்னெனு மாணவ மெழுந்து மீக்கொளப்
பொன்னவிர் பீடிகைக் கமலப் போதினன்
றன்னிலை கடந்தன னிருந்த தன்மையை
யுன்னருங் கணத்துவேள் முருக னோர்ந்தனன்.

(இ - ள்.) பொன்போலும் பிரகாசிக்கின்ற தாமரைமலர்ப்பீடத்தையுடைய பிரமன், யானென்னென்னும் ஆணவமலமானது தோன்றியதிகரிக்கத் தனது நிலைமையைக் கடந்தவனாகியிருந்த தன்மையை, நினைத்தற்கரிய கணநாதர்களுக்கிடையேயிருந்த செவ்வேளாகிய முருகக்கடவுள் அறிந்தனர். எ - று. (கக)

விரைக்கம லாலயத் திறையை மேயினை
யுரைக்கரும் பிரணவத் துண்மை யாதெனக்
குரைக்கழ லறுமுகன் குறுகிக் கேட்டலு
நரைத்தலைக் குடுமிய னுன்னென் றனரோ.

(இ - ள்.) மணம்பொருந்திய தாமரைமலர்க் கோயிலையுடைய பிரமனை யடைந்து, சொல்லுதற்கரிய பிரணவத்தின் உண்மைப்பொருள் யாது? கூறுகவென, சத்திக்கின்ற வீரகண்டாமணிதரித்த சண்முகப்பெருமான் வினவவும், குடுமிவாய்ந்த மெலிந்த தலையையுடைய பிரமன் நானேயென்றனன். எ-று.(உ0)

புடைத்தன னுச்சியிற் புழைவெங் காரகத்
தடைத்தன னிவணினு மகிலம வல்லுயிர்
படைத்தன னங்ஙனங் கழிந்த பற்பகல்
மடற்பொதி மலரினன் வருந்தன் மேயினன்.

(இ - ள்.) அதுகேட்ட குமாரசுவாமி, அவனை உச்சியிற்குட்டி வெவ்விய கரியகுகைச்சிறையி லடைத்தனர். அதுமுதல் இப்பிரமனைக்காட்டிலும் உலகிலுள்ள சிறந்த உயிர்களைச் சிருட்டித்து வந்தனர். அப்படி அநேககாலங்கழிந்தது. இதழ்கள் பொருந்திய கமலாசனன் வருந்துதாயினன். எ - று. (உக)

தொடுபடை மூத்தலைச சூலி யோர்ந்தது
விடுதலைப் புரிந்தனன் விரிஞ்ச னுமவன்
படுசிறைப் பாதக மொழியப் பண்டைநாட்
கடுமிடற் றவற்றொழக் கச்சி மேயினன்.

(இ - ள்.) அக்கமலாசனன வருந்துவதை, தொடுக்கத்தக்க ஆயுதமாகிய முத்தலைச்சூலத்தையுடைய சிவபெருமானுணர்ந்து, சிறையினின்றும் அவனை விடுவித்தனர். அந்தப் பிரமன் சிறைச்சாலையிலிருந்த பாவமானது தன்னைவிட்டகலும்படி முற்காலத்திலே, விஷமபொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானை வணங்கும்படி காஞ்சிநகர மடைந்தனன. எ - று. (உஉ)

அத்தல மேயிருந் தரிதி னுற்றினன்
முத்தன தருச்சனை முறையி னீங்கலான்
றததுவெள விடையொடுஞ் சார்ந்த தோன்றிய
மத்தனால வேண்டிய வரம்பெற றேகினன.

(இ - ள.) பிரமன, அக்காஞ்சிபுரியிலேயே யிருந்து, சிவபெருமானை யாச்சிப்பதை முறைப்படி நீங்காது செய்தனன. தாவிச்செலலும வெள்ளிய இடபவாகனத்தோடும பிரத்தியக்ஷமான உன்மத்த மலரணிந்த சிவபெருமானால, தான விரும்பிய வரங்களையெலலாம பெற்றுக்கொண்டு போயினன. எ - று. (உஙு)

பின்னொரு காலத்துப பதும பீடிகை
யன்னமூா நானமுகத தமல னோர்ந்தனன்
பொன்னவிா திகிரியா னரனைப பூசியாத
துன்னரு நடத்தியந துவைக்கப பெறறதும.

(இ - ள.) அதனபின்னா, ஒருகாலத்திலே, கமலபீடத்தைக்கொண்டு அன்னவாகனமூரும நானகு முகங்களையுடைய புனிதனான பிரமன, ஆலோசிப்பானாயினன. பொனபோலப பிரகாசிக்கும (சுதரிசன) சக்கரத்தை யுடைய திருமால சிவபெருமானைப்பூசித்து, அடைதற்கரிய நடனத்திலே (மத்தள) வாத்தியம ஒலிக்க வரமபெற்றவுடன. எ - று. (உச)

ஆதரித தருநடத தருகு நின்றுதன்
காதலாற றொழுதரன கருணை பெற்றனன்
மாதொரு பாகனை வழுத்தி யாமுமோா
பேதமி னல்வரம பெறுதல வேண்டுமால.

(இ - ள.) ஆசைகொண்டு அரிய நடனத்தின சமீபத்திலிருந்து தனபக்தியோடு வணங்கி, சிவபெருமானுடைய திருவருளை யடைந்தனன. (ஆதலால) உமாதேவியாரை ஒருபாகத்திலுடைய சிவபெருமானை வணங்கி, ஒப்பற்ற நாமும் குற்றமில்லாத நல்லவரத்தை யடைதலவேண்டும. எ - று. (உரு)

எனபன தனதுளத தெண்ணி வெண்ணிலாப
பொன்புனை சடைமுடி யரனைப பூசியா
வனபுடன பற்பக லருச்சித தானயன
[illegible]புர மெரித்தவன் முன்னி [illegible]ரோ.

(இ - ள்.) என்னுமிவற்றை, பிரமன் தன்மனதிற்கருதி, வெள்ளிய சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானைப் பூசைசெய்து, அனபோடு அநேககாலம் அர்ச்சனைபுரிந்தனன். அப்பொழுது முப்புரங்களையெரித்த சிவபெருமான் பிரமனுக்குமுன்னே தோன்றினர். எ - று. (உசு)

கனற்படு கண்ணினுன் கமல நாயக
நினக்குவேண் டியவர நிகழ்த்து வாயெனப்
புனற்படு நெடுஞ்சடைப் புனித போற்றியென்
றனத்தினு னினையன வறைதன் மேயினான்.

(இ - ள்.) தீப்பொருந்திய விழியையுடைய சிவபெருமான், பிரமனே, உனக்குவேண்டிய வரத்தைக்கூறுவாயாக வெனக்கூறவும், கங்காசலம் பொருந்திய நெடிய சடையையுடைய புனிதமானவரே! போற்றியென்று, அன்னவாகனனாகிய பிரமன் இத்தகைய வார்த்தைகளைச் சொல்வானாயினான். எ - று. (உஎ)

என்னையா ளுடையநீ நடிக்கு மெல்லையின
மின்னெயிற் றருங்கணத் தலைவர் வெந்திற
லன்னவர் கரப்பிரம் படியி னாற்றலான்
பொன்னவிர் திகிரியான் றொழுது போற்றினன்.

(இ - ள்.) என்னை யடிமையாகவுடைய தேவரீர் நடனஞ்செய்யுஞ் சமயத்தில் மின்னலைவீசும் பற்களையுடைய அரிய சிவகணத்தலைவர்களாகிய வெவ்வியவலியுடையாரது கையிற்றாங்கிய பிரம்பின அடிக்கு ஆற்றாதவராய்ப்பொன்போலப்பிரகாசிக்கும் சக்கிராயுதமேந்திய திருமால் வணங்கித் துதிசெய்தனர். எ - று. (உஅ)

சேவடித் திருநடந் தெரியப் பெற்றன
னேவுநின் கருணையி னியந்து வைகினற்ன
றுவருஞ் சதிமுறைத் தாள மொத்துவேன
பாவைபங் காவெனக் கதுப ணித்தியால.

(இ - ள்.) திருநடம்புரியும் செவ்விய திருவடியைத் தெரிசித்துணரப் பெற்றனர். கட்டளையிடுகின்ற தேவரீர் கிருபையால முழவொலிசெய்கின்றனர். (அடியேனும) கெடுதலற்ற சதிமுறைப்படி தாளம்போடுவேன. உமாதேவிபாகரே! அத்திருத்தொண்டை அடியேனுக்குக் கட்டளையிட் டருளவீராக எ - று. (உகூ)

என்றன னிரந்திரந் திறைஞ்சி யேத்தினு
னன்றவற் கவ்வர மளித்த வானவன
றுன்றிருங் கணத்தவர் சூழப் போயினன
சென்றனன் கயிலையஞ் சிமயக் கோயிலவாய்.

(இ - ள்.) என்று பிரமன மிகவும் யாசித்து வணங்கித்துதித்தான. அப்பொழுது அவனுக்கு அவ்வரத்தைக்கொடுத்த சிவபெருமான, நெருங்கிய பெரிய சிவகணத்தலைவர்கள புடைசூழச்சென்று, திருக்கைலாயகிரியி னுச்சியில் விளங்குந் திருக்கோயிலிற் சேர்ந்திருந்தனர். எ - று. (௩௰)

முள்ளரை முளரியங் கோயின் முன்னவ
னள்ளிடைப் பற்பக னடந்த பின்னரின்
பிள்ளைவெண் பிறைமுடிப பரனைப பேதியா
துள்ளமைத் தருச்சனை யுவந்து போற்றினன்.

(இ-ள்.) முட்பொருந்திய அரைபொருந்திய அழகிய தாமரைக்கோயிலை யுடைய பிரமன், எண்ணிறந்த நாட்கள் சென்றபிறகு, வெள்ளிய இளம்பிறைச் சந்திரனை முடியிலணிந்த சிவபெருமானை, மனத்தினகண்ணே மாறுமற் பொருந்திச் சந்தோஷித்து உச்சிக்காலத்திற் பூசித்துத் துதித்தான. (௬௧)

போற்றலும பாய்விடைப் புனித ருங்கெதிர்
தோற்றினன் ரேற்றலுந் தொழுத கையினு
னீற்றொளி மேனியாய நிருத்த னேயெனக
காற்றல வரத்தினை றளித்தி யாலென்றான.

(இ-ள்) இப்படிப பிரமன் துதிசெய்யவும், பாய்ந்து செல்லும இடபவாகனராகிய சிவபெருமான அப்பிரமனுக்கு எதிரே காட்சிதந்தனர். அப்படிக் காட்சிதரவே, பிரமன கூப்பிய கையையுடையவனாகி, திருவெண்ணீற்றின காந்திதங்கிய திருமேனியை யுடையவரே! நடனநாயகரே! அடியேனுக்கு வல்லபமுடைய சிறந்த ஒருவரத்தைக் கொடுப்பீராக வென்றனன. எ-று. ()

யாதுனக் கிவைந்ததொன் றியம்பு வாயென
மாதொரு புடையினு னருள மாமலாப்
போதினன பன்முறை புகழ்ந்து போற்றினன
மேதகு சிந்தையான விளம்பு வானரோ.

(இ-ள.) உனக்கு விருப்புற்ற ஒருவரம யாது? சொல்லுகவென, உமாதேவியை ஒருபாகத்திலுடைய சிவபெருமான திருவாயமலர்ந்தருள, சிறந்த தாமரையாதனனாகிய பிரமன பலமுறைபுகழ்ந்து துதிசெய்து மேம்பட்ட மனத்துடன் விண்ணப்பஞ் செய்கின்றான. எ-று. (௬௬)

திரிபுர மெய்பிரான் றீக்கு மந்தநாட்
பரிபுரச சேவடி பணிந்து பாகனுய்
விரிதடந் தோப்புறத் திருத்தல வேண்டினேன
புரிதியென றன்னது புரிந்து போயினன.

(இ-ள.) எம்பெருமானே! தேவரீர் திரிபுரங்களை யெரிக்கும அந்தக்காலத்தில, தேவரீருடைய சிலம்பணிந்த செவந்த பாதங்களைவணங்கிச் சாரதியாகி, பரந்து விசாலித்த தேரினபால் இருத்தலை விரும்பினேன. அங்ஙனந்திருவருள புரிகவென்றனன. எ-று. (௬௭)

பின்னரு மாங்கவன பேதை பாகனை
மின்னொளி விரவுதென கயிலை மேவியே
பொன்னடித் துணைமலாக் கமலம பூசியா
வுன்னரும பற்பக னெடிதி ருமயினன.

(இ - ள்.) மீண்டும் அப்பிரமதேவன், உமாதேவிபாகராகிய சிவபெருமானை மின்னுகின்ற பிரகாசம்பொருந்திய [தென்] அழகிய கைலாயத்தையடைந்தனன், சிவபெருமானது பொன்போன்ற உபயபாதங்களாகிய தாமரைமலரைப்பூசித்து நினைத்தற்கரிய அநேககாலம் மிகுதியாகத் தவஞ்செய்தான். எ - று. (௩௫)

வளையிரண் டேந்திய துளவ மாயன்பால்
விளைசினங் கிடத்தலா லவனை மேவிய
களைகணுய்ப் புரந்தரு ளுலகு கைக்கவாந்
தளைபசித் தழலவித் தருந்தப் பெற்றனன்.

(இ - ள்) [இரண்டுவளைகளை] சங்கையுஞ் சக்கரத்தையுந் தாங்கிய துளசி மாலைதரித்த திருமாலினிடத்தில் உண்டாகிய கோபமிருத்தலால், அத்திருமாலை யும் அவர் உறவாயிருந்து காத்தருளும் உலகத்தையும் கையாறகொண்டு தன்னை வருத்துகின்ற பசித்தழலைத் தவிர்த்துப் புசிக்கப்பெற்றான். எ - று. (௩௬)

அன்றுகொண் டரியினை யவன்ப தத்தொடு
மென்றுற விழுங்கினன் விண்ணு ளோரெலாங்
கன்றிய மனத்தரா யயர்ந்து கைதொழ
வொன்றிறு தப்பரி துமிழ்ந்திட் டானரோ.

(இ - ள்.) அப்பொழுது இந்திரனை அவன் பதவியோடெடுத்து வாயிற் பொருந்தமென்று விழுங்கினன். தேவர்கள் யாவரும் வருந்திய மனமுடைய வர்களாய் சோர்ந்து கைகுவித்துப்பணிய, ஒருசிறிதும் அழியாமல் அவ்வகையே மீட்டும் உமிழ்ந்தனன். எ - று. (௩௭)

சீகுலப் பருப்பதத் தரனைச் சேவடி
யோகையி னருச்சனை யுவந்து தக்கனல்
யாகமுற் றழிந்தநா ளிழந்த கானுடை
வாகனம் பீடிகை வழங்கப் பெற்றனன்.

(இ - ள்.) சீகுலபாவதத்திலே, சிவபெருமானது செவ்விய திருவடியைச் சந்தோஷத்துடன் பூசைபுரிந்து, தக்கனுடைய நல்லயாகமானது முற்றும் அழிந்தகாலத்தில், தான் இழந்த மணந்தங்கிய மலர்ப்பீடத்தையும் அன்னவா கனத்தையும் சிவபெருமான் திருவருள்செய்து கொடுக்க, அவற்றைப்பெற்றுக் கொண்டனன். எ - று. (௩௮)

வேதவா ரணியமவ் விரிஞ்சன் மேயரன்
பாததா மரைத்துணை பரிந்து பூசியா
வோதுநான் மறையுணர்ந் துலகம் யாவையு
மாதிநூல் வரன்முறை யளித்திட் டானரோ.

(இ - ள்) அந்தப்பிரமன், வேதாரணிய க்ஷேத்திரமடைந்து சிவபெருமா னுடைய உபயபாதங்களாகிய தாமரைமலர்களைப் பூசைசெய்து, ஓதுகின்ற நான்கு வேதங்களையுணர்ந்து உலகமுழுவதையும் பழமையாகிய சாஸ்திர முறைப்படியே படைத்தனன். எ - று. (௩௯)

ஈதெலா நிகழ்ந்தபின் னேம கூடம்போய்ப்
போதினுன் முகத்தொரு புனிதன் பொன்னிறத்
தாதுலா மிதழியஞ் சடையி னுன்றனைக்
காதலா லருச்சனை கருதிப் போற்றினுன்.

(இ - ள்.) இவையாவும் நடந்தபிறகு, தாமரையில் வசிக்கும் நான்குமுகங்களையுடைய ஒப்பற்றபிரமன், ஏமகூடபர்வதஞ்சென்று சேர்ந்து, பொன்னிறத்தோடுகூடிய மகரந்தங்களையுடைய கொன்றைமலரணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமானை ஆசையோடு தியானித்து அர்ச்சித்துத் துதித்தான்.

கழிந்தன் பற்பல காலஞ் சென்னிபிற
சுழிந்தெறி கங்கையா னவற்குத் தோன்றினுள்
வழிந்தொழு கிருகணீர் வாரக் கைதொழாப்
பொழிந்தபே ரன்பினு னினிது போற்றினுன்.

(இ - ள்) எண்ணிறந்த காலஞ்சென்றன. பின்னர், சுழித்துக்கொண்டு அலையைவீசும் கங்கையையணிந்த சடையையுடைய சிவபெருமான், அப்பிரமனுக்குக் காட்சிதந்தனர். பெருகியிழிந் தொழுகின்ற இருகண்ணினின்று ஆநந்தபாஷ்பஞ்சிந்தக் கைகுவித்து அதிகரிக்கின்ற பேரன்போடு பிரமன் இனிதாகத்தோத்திரஞ் செய்தான். எ - று. (௪௧)

அன்னமா யளவொழி யண்டந் தேடினே
னென்னையா ளுடைய நீ யெதிர்ந்தி லாயிவ
ணின்னிலை காணுறப் பெற்ற நீர்மையான்
முன்னிய பேறெலா முற்றி னேனென்றுன.

(இ - ள.) அடியேன் அன்னப்பறவை வடிவேற்று எண்ணிறந்த அண்டங்களெல்லாவற்றிலும் தேடியயர்ந்தேன். என்னை யடிமையாகவுடைய தேவரீர் காட்சிதந்திலீர். இப்பொழுது தேவரீர் சொரூபத்தைச் நாயினேன் தரிசிக்கப்பெற்ற தன்மையால், நான்கருதிய பதவிகளையெல்லாம் அடையப்பெற்றேனென்று கூறினன். எ - று, (௪௨)

அதுவுளத் தடைத்தரு ளமல நாயகன்
விதிமுக நோக்கிநீ வேண்ட வேண்டிய
தெதுவது புரிகுது மிசைத்தி நீயென
மதுமலர்க் கோயிலான் வணங்கிச் சொல்லுவான்.

(இ - ள்.) அடியேன்கூறிய அதனைத் திருவுளங்கொண்டருளிய மலரகிதராகிய சிவபெருமான், பிரமன்முகத்தைக் கடைக்கணித்து நீயடைய விரும்பியது யாது? அதனைக்கூறுக. அங்ஙனமே செய்வோமென்று திருவாய் மலர்ந்தருள, தேன்சிந்தும் தாமரைமலராகிய இருக்கையையுடைய பிரமன்பணிந்து விண்ணப்பிக்கிருன். எ - று. (௪௩)

எல்லையில் கருப்பமுற் றிழிந்து தோன்றிய
தொல்லையம பிறவி யுட் டுரிசு நீக்குமோர்
நல்வர மிருந்தவா நவையி னுன்முகம
புல்லியிவ் வுலகெலாம் புரக்க மேயினேன.

(இ - ள்.) கணக்கில்லாத கருப்பங்களிற்சேர்ந்து இழிவடைந்து தோன்றிய துன்பத்திற்குக் காரணமாகிய ஜனனங்களுக்குரிய குற்றங்களை நீக்கத்தக்க சிறந்த வரமிருந்தமையின், குற்றமில்லாத நான்குமுகங்களைக்கொண்டு இவ்வுலகங்களையெல்லாம் சிருஷ்டி புரியும் ஆற்றலுடையவனாயினேன். எ - று. (௪௪)

ஈண்டினிப் பிறவிபெற் றிழிந்து றுவகை
வேண்டினே னுயிர்த்தொகை விளித்து நிற்குநா
ளாண்டகை யென்னைநின் னழற்க ணாலுயி
ராண்டிட முடித்தருள் வழங்க வேண்டுமால்.

(இ - ள்.) ஆதலால், இனி இவ்வுலகத்தில் ஜனனமெய்தி இழிவடையா வண்ணம் விரும்பினேன். எல்லாவகையான உலகத்தொகுதிகளையும் அழித்து ஏகமாய் நிற்கும் சங்காரகாலத்தில், ஆண்டவரே! அடியேனைத் தேவரீருடைய அக்கினிக்கண்ணால் உயிரொழியும்படி சங்கரித்துத் திருவருள்செய்யவேண்டும்.

ஐயநீ யானுடைக் கபால மங்கமு
மெய்யுறத் தரித்தெனை வேறு றுவகைச்
செய்யதா மரைப்பதத் தொடுங்கச் செம்மணிப்
பையரா வேணியாய் பணித்தி யாலென்றான்

(இ - ள்) ஐயனே! சிவந்த மாணிக்கத்தோடுகூடிய படத்தையுடைய சர்ப்பமணிந்த சடையையுடையவரே! இதுவேயன்றி அக்காலத்தில் அடியேனுடைய கபாலத்தையும் முழுவெண்பையுந் திருமேனியி லணிந்துகொண்டு அடியேனை அன்னியமாகச் செய்யாதவகை, தேவரீருடைய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளி லொடுங்கும்படி வரந்தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். எ-று.

ஆங்கவற் கவ்வர மருளி யாங்கவன்
பூங்கழ றொழுதெழப் புராரி போயினன்
றேங்கமழ் கற்பகச் செல்வன் றேமொழி
பாங்கனைப் பணிந்தவா பகர்செய் வாமரோ.

(இ - ள்.) அப்பொழுது, திரிபுரதகனராகிய சிவபெருமான் அப்பிரமனுக்கு அவ்வரங்களைப் பாலித்தருளி, பிரமன் தமைப்பணிய அந்தர்த்தானமாயினார். மணம்வீசுகின்ற கற்பகமலர்மாலைதரித்த செல்வனாகிய இந்திரன், மதுரமாகிய சொல்லையுடைய உமாதேவி பாகராகிய சிவபெருமானை வணங்கியவகையை இனிச்சொல்லுவேன். எ - று. (௪௭)

பிரமன் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம், ௨௯-க்குத் திருவிருத்தம் ௯௪௪௪.



# இருபத்தேழாவது
# இந்திரன் சிவார்ச்சனைச்சருக்கம்.



**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்**

முன்னைநாண் முளரிப் பீடத் தருந்தவத் தலைவன் முந்நீர்த்
தொன்னிலப் பரப்பு மறைய மன்பதைத் தொகுதி யாவு
மின்னரு ளுவகை காட்டி யினிதினி திருந்த ஞான்று
தன்னுளத் துணரா நின்று லீங்கிது சமைவ தானான

(இ - ள்.) தாமரை மலர்ப்பீடத்தி லெழுந்தருளிய அருந்தவத்தலைவராகிய பிரமன், பூர்வகாலத்தில கடல்சூழ்ந்த பழமையாகிய நிலவுலக விஸ்தீரணத்தையும் மனிதர் தொகுதியையும் பிறவற்றையும் இனிய கருணைகொண்டு சந்தோஷித்துச் சிருஷ்டிசெய்து இனிதாக விருந்தபொழுது, தனமனதில் ஆலோசித்தவனாய் இப்படிச் செய்வதாயினன். எ - று. (க)

ஆரெழிற்பிறந்த பெண்பா லியற்றின மநேகமின்னும்
பேரெழி லவர்க்கு மேலோர் பெண்ணுரு வகுத்து மென்னுக்
காரெழிற் கழகு காட்டுங் கற்றைவா ளளக வேற்கண்
வாரிள முகிண்மென் கொங்கை யகலிகை வகுத்தான் மன்னே.

(இ - ள்) மிக்க அழகமைந்த அநேகம் பெண்ணுருவங்களைப் படைத்தோம். அவர்களைக்காட்டிலும் மேம்பட்ட அழகுடையதாய ஒருபெண்ணுருவம் படைப்போமென்று, கருநிறந்தங்கிய மேகத்தின் அழகிற்கும் அழகு காட்டத்தக்கதாயத் தொகுதியாக நீண்டிருக்குங் கூந்தலும் வேல்போலும் விழிபும், கச்சணிந்து இளமையுடைத்தாய அரும்புபோன்றிருக்கும் மிருதுவான தனங்களுமுடைய அகலிகையெனனும் ஒருபெண்ணைச் சிருஷ்டித்தான். எ - று. (உ)

ஆங்கவ ளுருவக் காந்தி யிளங்கதி ரழகு மாற்றப்
பூங்குழற் கற்றை நோக்கிப் புயலினம் விளர்ப்ப வேங்கி
வாங்குநுண் ணுசுப்பு நோக்கி மின்னொளி மருண்டு மாழ்க
வீங்கிள முலையா லோங்கும் விண்குடி வாங்க நின்றாள்.

(இ - ள்.) அப்பெண்ணின் உருவத்திற்றோன்றிய காந்தியானது பாலசூரியனழகைக்கெடுத்து விடவும், அழகிய கூந்தலின் றொகுதியைநோக்கி மேகக்கூட்டங்கள் ஏக்கங்கொண்டு வெளுக்கவும், வளைந்துள்ள நுண்ணிய இடையைப் பார்த்து மின்னலின் காந்திமருட்சியுற்றழியவும், மேலோங்கிய மூதிராத்தனங்களாலே உன்னதத்திலுள்ள ஆகாயம் குடிவாங்கிப்போகவும் விளங்கினாள். எ - று.

செக்துவர்ப் பவள வாயாற் கவிரிதழ் சிதைந்து காட்டப்
பைந்தளிர்ப் பதத்தாற் பூத்த பங்கயம் பயத்தா னிறப்
வந்தளிர் வளைக்கை நோக்கிக் காந்தணீத் தடவி சார
நந்தினங் களங்கண் டேங்கி விளர்ப்புற நலத்தி னின்றாள்.

(இ - ள்.) செந்நிறமிக்க பவளம்போலும் அதரத்தால் முண்முருக்கமலரி னிதழ்கள் சிதைந்துகாட்டவும், பசியமாந்தளிர நிறம்வாய்ந்த பாதங்களால் மலர்ந்த செந்தாமரை மலர்கள் குளத்திலிருக்கவும், அழகுற்றுத்தளிர்த்த வளைய லணிந்த கைகளைக்கண்டு காந்தண மலர்கள் ஊரைநீங்கிக் காட்டிலடையவும் கழுத்தைப்பார்த்துச் சங்கினங்களுருகுதிகள் ஏககமெய்தி வெளுப்படையவும் நன்மை யோடிருந்தாள். எ - று. (௪)

அனையதோ ரழகின் மிக்கா ளகலிகை யிருந்த காலைப்
புனைமலர்த் தருவி னீழற பொன்னகா புரக்கும் புத்தேள்
வனைகழற கமல பீடத் தந்தணன் மருங்கு சார்ந்தான
கனைவரிச சுரும்ப ரோதிக கனங்குழை யவளைக் கண்டான்.

(இ - ள்.) அத்தன்மைய ஒப்பில்லாத அழகுற்றவளாய் அகலிகையென்பா ளிருந்தகாலத்தில், அலங்கரிக்கின்ற மலர்களையுடைய கற்பகவிருக்ஷ நிழலி லிருந்து தேவலோகத்தைப் பரிபாலிக்கும் இந்திரன், வீரகண்டாமணி தரித்தக கமலாதனத்து வீற்றிருக்கும் பிரமனபால வந்தனன. அவன் வரிகளையுடைத தாய்ப் பண்பாடுகின்ற வண்டுகளுலாவுங் கூந்தலையும் பொற்குண்டலத்தையும படைத்த அவ்வகலிகையைக் கண்டான. எ - று. (௫)

கண்டகண் டிருப்ப லாற்றான் கனங்குழை யவளை நோக்கிக
கொண்டகண் ணிரண்டும போதா வெனப்பது குணியா நின்றான்
மண்டம ரநங்க சாபங் குனிந்தது மலர்ப்பூ வாளி
கிண்டுபு கிளையா நின்ற தியாவரே கிளத்தற பாலார்

(இ - ள்) கனமாகிய குண்டலமணிந்த அவ்வகலிகையைக்கண்ட கண்களைத திருப்பி மற்றொன்றையும பார்க்கமுடியாதவனாய், அவளைப் பார்த்துப் பார்த்து நாமுடைத்தாயிருக்கும் இருவிழிகள இவளழகைக்காணுதற்குப் போதாதென்று கருதிக்கொண்டிருந்தான. உடனே மிகுந்த போர்செய்தற்குரிய மன்மதன் வில்லை வளைத்ததும மலர்க்கணைகள துளைத்து ஆக்கிரமித்ததும எவர் தாம சொல்லத தக்கவர்கள்? எ - று. (௬)

வெண்ணெயம பொருப்புச் சீறி வெந்தழ லுருத்த தென்ன
வண்ணநெக குருகிச சோர்ந்தான் மம்மர்நோய்க் களவை யற்றான்
றுண்ணிறை யுருவ வாட்கட புலோமசை யுருவ நோக்கி
யெண்ணுதோ றிவளுக கன்னள பகல்விளக கென்ன லானாள்.

(இ - ள) அழகிய வெண்ணெய மலையைக் கொடிய அக்கினியானது கோபித்து எதிர்த்தாற்போல, மனமநெக்கு உடல்சோர்வெய்தினன அதனா லுண்டாகிய துயரப்பிணிக்கு அளவில்லாதவனானான். தன்மனதிற கிசைந்த வளாய்க் காதளவோட்டிய வாள்போலும் விழிகளபடைத்த இந்திராணியின் வடி வத்தைநோக்கி நினைக்கும்போதெல்லாம், அவள் இவ்வகலிகைக்குப் பகற்காலத்தி லேற்றிய தீபம் போன்றவளாயினள். எ - று. (௭)

உருத்தது காம வெந்தீ யுயிர்த்துயிர்த் தொடுங்கா நின்றான்
மருத்தின் வாடை யூர்ந்து வரவர மயக்க முற்றான்
கருத்துவே றறிவு வேறாய்க் கையறு கவலை கூர்ந்தான்
பொருத்துவா ரெவரென் றெண்ணு வுளத்தொடும் புலம்புகொண்டான்.

(இ - ள்.) வெவ்விய காமாக்கினியானது கடுமையானபடியால் மிகவும் பெருமூச்சுவிட்டு ஓடுகின்றான். நறுமணத்தோடுகூடிய இளந்தென்றற்காற்றானது உலாவி வீசுந்தோறும் மயக்கமெய்தினான். எண்ணமும் உணர்வும் வெவ்வேறாய்ப் பரிகாரமற்ற துயரமதிகரித்தான். அவ்வகலிகையோடு தன்னைச்சேர்ப்பிப்பவர்கள் எவரகளென்று தன்மனதிற் கருதித்தியங்கித்தான். எ - று. (அ)

ஆயது காலை நோக்கி யருமறைக் கிழவன் செய்ய
சேயசெங் கமல பாதனு சென்னிதாழ்த திறைஞ்சி நின்று
பாயரித தடங்கட் செவ்வாய்ப் பனிமொழிக் குலவுக் கொங்கை
யாயிழை யிவளயா ரென்ன வினவின னமரா கோமான்.

(இ - ள்.) அக்காலத்தில், இந்திரன் அரிய வேதங்களை யுணர்ந்த பிரமனை நோக்கி, செப்பமாகிய செந்நிறம்வாய்ந்த தாமரைமலர்போலும் அவனது திருவடிகளில் தன் தலைபடியும்படி வணங்கி நேரேநின்று, செவ்வரிபடர்ந்த விசாலித்த விழிகளையும் சிவந்த அதரத்தையும் குளிர்ந்த மொழிகளையும் திரண்ட குசங்களையும் திருத்தமாகிய ஆபரணங்களையுமுடைய இப்பெண் யாரென்று வினவினான். எ - று. (௯)

பொன்னிறப பொகுட்டுப பீடத் திசைமுகக் கடவுட் புததே
ளென்னிடைப பிறநத செல்வி யீங்கிவ ளென்ன லோடு
மின்னுயிாத தழலவாய் கான்று விளங்கொளி பரபபித தெவவர்
செந்நிறக் குருதி மாந்துங் குலிசமற நிதனை செபபும

(இ - ள்.) பொன்னிறம் வாய்ந்த கொட்டை தங்கிய தாமரை மலர்ப்பீடத்திலுள்ள திசைமுககடவுளென்னும் பெயர்பொருந்திய பிரமன், இவ்விடத்திலுள்ள இப்பெண் என்பாற் பிறந்த புத்திரியென்று கூறியவுடனே, மின்னலை வீசித் தீப்பொறிகளைக்கக்கி மிகககாந்தியைப் பரவச்செய்து பகைஞருடைய செந்நிறந்தங்கிய உதிரத்தைப்பருகும் வச்சிராயுதந்தாங்கிய இந்திரன் இப்படிச் சொல்லுகின்றான். எ - று. (௧௦)

ஆடகப பசும பொன் னாட்டி னரசிய லிருக்கைக் கேய்நத
பாடுறு பணையி னோங்கு தாருவும பணில வாழ்வுந
தேடுறுஞ சிறப்பின மிக்க தேனுவுந திணிதோ ணான்கு
கோடுறுந தவளப பூட்கைக குன்றமுங் குணித்த யாவும்.

(இ - ள்.) ஆடகமென்னும் பசும் பொன்மயமான தேவலோகத்தின் அரசாட்சித் தனமைக்கிசைந்த பெருமைபொருந்திய கிளைகளோடு வளர்ந்திருக்குங் கற்பகத்தருவும், சங்கநிதியும், பலராலுந் தேடுதற்கரிய பெருமிதத்தில் மிக்ககாமதேனுவும், வலலமைபொருநதிய தோளகளும், நானகு தந்தங்களையுடைய வெள்ளையானை யெனனும் மலையும் ஆகிய விவற்றையெல்லாம். எ - று. (௧௧)

வேண்டுறு சிறப்பி னீண்டி யாவையும விருபபி னீநதாய்
மாண்டுறு நெடுநாள வைகு மாயுவும் வனபபு மீநதா
யாண்டொரு குறையு மினறி யளிததனை யைய நொய்திற்
காண்டகு குறையொன் றுண்டா லனனது கழறக கேட்டி

(இ - ள்.) விரும்புதற்கேற்ற சிறப்போடு இவ்வகை யெல்லாவற்றையும் விருப்பத்தோடு பாலித்தீர். அன்றியும் அடிக்கடி மரணமடையாத வெகுகாலம் ஜீவித்திருக்கும் வாழ்வையும் அழகையும் கொடுத்தருளினீர். ஐயனே! அத்தேவ லோகத்திற்கு யாதொரு குறைவுமின்றி யநுக்கிரகித்தீர். தேவரீர் காணத்தக்க மிக இழிவாகிய ஓர் குறைமாத்திரமுள்ளது. அதனை யடியேன் சொல்லக்கேட் பீராக. எ - று. (கஉ)

கோமுடி யரச னில்லா வையமுங் குலவண் டார்க்குந்
தாமரை மலரா வோடைக் கேணியுந் தயங்கா நின்ற
சோமனை யில்லா மூடு கங்குலுந் தாரிசு நீத்த
காமரு மகளி ரில்லா வில்லமுங் கவினுண் டாமே.

(இ - ள்.) சிறந்த கிரீடமணிந்த அரசனில்லாத உலகத்திற்கும், கூட்டமாகிய வண்டுகளொலிக்கும் தாமரைப்பூக்கள் புட்பியாத ஓடைகளுக்கும் குளங்களுக்கும், விளக்கமுள்ள சந்திரனில்லாத இருண்மிகுந்த இரவுக்கும், குற்றமகன்ற அழகில் விசேடித்த மாதர்களில்லாத வீட்டிற்கும் அழகுண்டாகுமோ? எ - று.

என்னுடை யரசிற் கேய்ந்த விலங்கிழை யலங்க லோதிக்
கன்னிகை யளிப்பி னன்றே கற்பக வாழ்க்கை வாழ்க்கை
யின்னிவட் புரிந்தி லாயே லெறிகதிர் மணியொன் றிலாப்
பன்னக மனையே னீது பணியெனப் பணியா நின்றான்.

(இ - ள்.) அதுபோல, என்னரசாட்சிக்குத் தகுந்த விளக்கமுள்ள ஆபரணங்களும் மலாமாலைகளணிந்த கூந்தலுமுடைய இப்பெண்ணைக் கொடுத்தாலல்லவா கற்பகவிருக்ஷ நிழலில் வாழும் வாழ்க்கை வாழ்க்கையாகும். இப்போதே இப் பெண்ணை யெனக்குக்கொடாமற்போனால், கிரணத்தைப்பரப்பும் ஒருமாணிக் கத்தை யிழந்த சாபத்தைப்போன றிருக்கின்ற யான், செய்யவேண்டிய பணி விடை இஃதென்று கட்டளையிடுவீராகவெனப் பிரமனைப் பணிந்து நின்றான்.

இவனெடுத் துரைத்த மாற்ற மிருசெவிப் புலத்துச் சாரத்
துவரிதழ்க் கமலக் கோயிற் றூயவ னுரைப்பத் தானே
கவரொளி மணித்தோள் வேந்தே யிங்கிவட் கருதி நோக்கி
யவலமுற் றழியே லிப்போ தனறென வகற்றி னானால்.

(இ - ள்.) இவவிந்திரன் எடுத்துச்சொல்லிய சொற்கள், இருசெவித்தொளைகளிலும் பொருந்த, சிவந்த இதழ்களையுடைய கமலாலயத்தி லெழுந்தருளி பிரமன் சொல்லுவானாயினன். ஒளிகளைக்கவர்ந்து கொள்ளத்தக்க இரத்தினமாலை யணிந்த தோளையுடைய தேவராசனே! இப்பொழுது இவ்வகலிகையை நினைத் துப்பார்த்துத் துன்பெய்திவருந்தாதே. அவளை சித்திப்பதற்குக்காலம் இஃதன்று எனமாற்றினன். எ - று. (கரு)

நான்முகத் தொருவன் சொற்ற வாசக நவிச் செல்வி
மான்முகத் துருவ வொள்வா ளொத்துற மயக்கங் கொண்டான்
பான்மதி முகத்தாண் மூறற் பவளவாய் நினையுந் தோறு
நான்முகப் பரவை கீழ்போ யுணங்கின னுணங்கு கேள்வி.

(இ - ள்.) சதுர்முகப்பிரமன் சாற்றிய வார்த்தையை, அழகிய செப்ப முடைய மானினிடத்தில் ஊடுருவிப்பாயும் ஒளியுள்ளவாட்படைபோலக் கொடுமைவிளக்க மயக்கமெய்தினன். தாவளயமான சந்திரனையொத்த முகத்தை யுடைய அகலிகையின் தந்தங்களோடுகூடிய பவளம்போலும் வாயை எண்ணும் போதெல்லாம், தான்கற்ற சாத்திரக்கடலானது கீழ்ப்போக அவனுடைய நுட்பமாகிய நூற்கேள்விகளையெல்லாம் மறந்தனன். எ - று. (௧௬)

கற்பக நாடு போதற் கெழுந்தனன் கருத்துப் பின்போய்
நிற்புழி மறுகு மீளு நெஞ்சொடுங் கவலு நசோருங்
கொற்கொள்வே னெடுங்கட் டாரை குழித்துறக் குழைந்த சிந்தை
யெற்கன லரக்கின் மாழ்தி யுருகின னிமையோர் வேந்தன்.

(இ - ள்) தேவேந்திரன் தன்னுடைய தேவலோகத்திற்குச் செல்லப் புறப்பட்டான். மனமானது பிறபட்டுப்போய் நின்றவிடத்திலேயே சுழலுவான், திரும்புவான், மனத்திற்கவலையுறுவான், உடல்சோர்வான், கொலைத்தொழில் கொண்ட வேல்போல் நீண்ட அவளுடைய கண்ணின் [தாரை] மணியால் போகக் கப்பட்ட மனமானது தீயிடைப்பட்ட அரக்குப்போல உள்ளழிந்து உருகினன்.

வேரியங் கரும்பு வீர வெஞ்சிலை குழைய வாங்கு
மாரனங் கணையு மார மார்பிறப் பிளந்து தள்ள
வோரடி முன்னர் நீட்டி னொன்பது பிறகு போமால்
வாரிள முலையி னுட னுருவொளி வவ்விச் சென்றுன.

(இ - ள.) மணம்வீசும் அழகிய கரும்பாகிய வீரத்தன்மையோடு கூடிய வலியவில்லைக் குழையும்படி வளைத்த மன்மதன் பஞ்சபாணங்களையும் பொருந்த மார்பானது பிளக்கும்படி பிளந்துதள்ள, ஒரு அடிமுன்னே நீட்டினால் ஒன்பது அடிதூரம் பிறபட்டுப்போவான். கச்சுப்பூட்டிய இளமைவாயாத முலைகளையுடைய அகலிகையின் உருவெளித்தோற்றத்தைக் கிரகித்துக்கொண்டு போனான். எ - று.

தேமலர்த் தருவி னீழன் மந்திர விருக்கை சேர்ந்தான்
பூமல ரமளி சேரா விழுந்தனன் புதுப்பூங் கோதை
காமமிக் கெழுந்து மம்மர்க் கடலிடைக் கிடப்பத் தானும்
வேமனத் தொடுங்காக் கோல மேனியும் வெதுப்புக் கொண்டான்.

(இ - ள.) தேனொழுகுகின்ற மலர்கள் பொருந்திய கற்பகவிருக்ஷத்தின் நிழலிலுள்ள ஆலோசனைச் சபையாகிய அரண்மனையை யடைந்தான். பொலிவு தங்கிய புஷ்பசயனத்தின்மேற் சேர்ந்து விழுந்தான். அன்றலர்ந்த மலர்களை யணிந்த கூந்தலையுடைய அகலிகையின் காமவேட்கை மேம்பட்டுத்தோன்றிய மயக்கமாகிய கடலிற் படிவதானான். (காமத்தீயினால்) வேகின்ற மனத்தோடும் ஒடுங்கி அழகிய தேகமும் (காம) சுரங்கொண்டனன். எ - று. (௧௯)

தழைபடு சினையி னெங்குங் கற்பகத் தண்ண றூத்த
யிழைபடு புதுப்பூந் தென்ற லணைத்துற வெரியிற் காந்து
மெழுகென வெதும்பா நிற்கு மெல்லணை சொரியா நின்ற
செழுமலர்க் குப்பை யன்றே னுயிர்ப்புறத் தீயிற் றீயும்.

(இ - ள்.) தழைத்துள்ள கிளைகளோடுயர்ந்த கற்பகவிருக்ஷத்தின் குளிர்ச்சி தங்கிய தேனைத் தாவிக்கொண்டு புதுமணங்கலந்த தென்றற்காற்று வீசுதலால் தீயினுற்சுடும் மெழுகுபோலுருகுவான். மெல்லிய சயனத்தின்மீது தெளிக்கின்ற செழுமைதங்கிய மலர்க்குவியல்கள் அவ்விந்திரனுடைய சுவாசம்பட்டதால தீப்போலக் கரிந்துபோம். எ - று. (உ0)

கொழுநறை நரந்தங் கொட்டுங் குங்குமக் குவவுத் திண்டோண்
மெழுகுற வெதுமபிக் காந்திப பொருகசெழும் விரிபூந் தாமச
செழுமலா கருபபிட் டாறபோற றீநதன சிவந்த கண்கள்
பொழுதிடை நோக்கித் திண்டோள் புடைத்தன னனங்கப புத்தேள்.

(இ - ள்.) மதாதத மணந்தங்கிய கஸ்தூரியை, குங்குமச்சாந்தணிந்த குவிவாகிய வலியதோள்களிற்பூச, அதுசூடேறி யெரிந்து பொடிபட்டுதிரும். விரிந்த மலர்மாலையிலுள்ள செழுமைதங்கிய கற்பகமலர்கள் தீமிசையிட்டாற்போலக் கரிந்தன. கண்களால் [அநங்கன்] உருவிலியாகிய மன்மதன் காலத்தைப்பார்த்துத் தன்வலிய தோள்களைத்தட்டினன். எ - று. (உக)

ஆய்மயி லனைய சாய லகலிகை யாசை தீர்வான்
சேயிழை யரமபை மாரிற் றிலோத்தமை முதலா யுளளோ
ரேயபே ரழகை நோக்கி யெண்ணுறும பரவை நாவாயப்
பாய்மரப பரவை யொத்தா னொருகிலைப படாத சிந்தை.

(இ - ள்.) ஆய்ந்த மயிலைப்போலுஞ் சாயலையுடைய அகலிகை யென்பவளது ஆசைதீரும்படி, செவ்வையாகிய ஆபரணங்களையணிந்த அரமபாஸ்திரீகளில் திலோத்தமை முதலாகச் சொல்லப்பட்டுள்ளவர்கள் பொருந்திய பேரழகைப்பார்த்து ஒருநிலைப்படாத மனத்தால நினைக்கினறவனுகி, சமுத்திரத்தில செல்லுமமரக்கலத்தின பாயமரப்பரப்பினை யொத்தவனுயினன. எ - று. (உஉ)

மயிலியற் குதலைச செவ்வாய்ப புலோமசை வளைபபூங காந்தள
பயிலுறத் தடவா நின்று ளாங்கது பகரி னமமா
வயின்முக நெடுவேற றுளை யறுததழி பசுமபு ணூடு
மயாவுறச சலாகை காசசிச செலுத்துறன் மானு மன்றே.

(இ - ள்) மயிலின்சாயலையும மழலைச்சொல் பொருந்திய சிவந்த வாயையுமுடைய [புலோமசை=புலோமனமகள] இந்திராணியானவள் தனது வளையணிந்த அழகிய காந்தண மலாபோனற கைகளால பரிசமுறத் தடவிநின்றுள். அதன் நிலையைச்சொன்னல, கூர்மைவாய்ந்த முகத்தையுடைய நீண்டவேற்படையானது அறுத்தழித்த பசிய புண்ணினிடையே மயக்கமுண்டாமபடி, இருப்புச் சலாகையைப் பழுக்கக்காச்சிப் புகுத்துவதை யொத்திருக்கும. எ - று. (உஙு)

அளிபடு புதுப்பூங் கோதை யகலிகை யமுத ளாவுங்
கிளிபடு குதலை கேட்ட வார்செவித் துணைகண் மற்றைக்
களிபடு சுரும்ப ரோதி யணங்கனா கருப்பு பூத்த
வெளிபடு மழலை காகத் தொனியென வெறுத்த வன்றே.

(இ - ள்.) வண்டுகள் மொய்த்த அன்றலர்ந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய அகலிகையென்பாளது, அமுதம்கலந்ததாய்க் கிளிகளுந் தோல்வியெய்தத்தக்க மழலைச்சொல்லைக்கேட்ட நீண்ட இருசெவிகளும், ஏனைமதுமயக்குடையவண்டுகளமர்ந்த கூந்தலையுடையதேவமாதரது கரும்புபோலவெளிப்பட்ட இளஞ்சொற்களை காககையின் குரலொலியைப்போல வெறுப்புற்றுத் தள்ளின.

குனிபடு புருவச சாபத் தகலிகை வதனங் கோட்டிக்
கனிபடு மனத்தி னேறகு மற்றையோர் கடவுட் டிங்கட்
டனிபடு வதன மெலலா முற்படு பருவந் தாங்கும்
பனிபட வெதுமபிச சாம்பும் பஙகய நிகாத்த மாதோ.

(இ - ள்.) வளைநத புருவமாகிய வில்லையுடைய அகலிகையின் முகத்தைக் கண்டு காமுற்றிரஙகிய மனமுடைய இநதிரனுககு ஏனையமாதர்களது தெய்வீகந் தஙகிய சநதிரன் தனிததனி தோலவியெயததககு முகஙகளயாவும், முன்பனிக் காலததிலே பனியானது படுதலால நீகதுவாடுகினற தாமரைமலர்களை யொத் திருநதன. எ - று. (௨௫)

அன்னவ ளுருவ நோக்கி யருந்துய ரளிதத நோக்க
மின்னல மின்று காறு மிவறகினி தளித்த கோலப்
பொன்னொளி மருட்டு மேனிப புலோமசை புணர்ந்த தெய்வ
மென்னல நோக்கா தாசை முதலற வெறுதத வன்றே.

(இ - ள ) அவ்வகலிகையின் வடிவததைககணடு அரிய துயரத்தைக்கொடுத்த விழிகள், இவவிநதிரனுககு இற்றையவரையில இனிய காமசுகததைககொடுதது வநத, அழகிய திருமகளையும் மயககததகக தேகததையுடைய புலோமசை யென்பாள பாற்கொணட தெய்வீகமபொருநதிய மெல்லிய சுகததைககருதாது அப்புலோமசைபாற்கொணட ஆசையைவேரற வெறுததன. எ - று. (௨௬)

ஆரழ கமையப் பூதத வகலிகை திதலை பூத்த
வேரிள முகிண்மென் கொஙகை யெண்ணுதோ றெண்ணு தோறுந்
தாரொடு குவவுத திண்டோள் வீஙகுறுந தழுவக கிட்டாள்
போரடு மதன வாளி படப்படப பொரும நீரான்.

(இ - ள்.) நிறைநத அழகுபொருநத விளஙகிய அகலிகையினுடைய தேமல் படாநத அழகுற்று முதிராத கோஙகரும்பு நிகர்தத மெல்லிய குசஙகளைககருதுந தோறுங கருதுநதோறும, அணிநத கற்பகமலர்மாலையோடு குவிநதவலிய புயங் கள் பூரிப்பான. (அவவுருவெளித தோற்றததை) ஆலிஙகனஞ்செய்வான் (அவள் கைககு) எட்டமாட்டாள. இதனால் போராபுரிகின்ற மன்மதபாணஙகள் தைக்குந் தோறும் துன்பமநீஙகான். எ - று. (௨௭)

அருந்துய ரளித்த காம வெதுப்பிறை யாற்று ணுகித்
தருநதருப பொதும்பர் வீழத் தண்ணிழ றழுவச சார்நதான்
வருந்துணா வீழ்த்த செநதே மதுத்துளி தெறிக்குந் தோறும்
பொருநதிறற் றடநதோள் மேனி சுறுக்கொளப் பொறுக்க லாற்றான்.

(இ - ள்.) அடைதற்கரிய அயர்த்தைக்கொடுத்த காமாக்கினியை இந்திரன் சகியாதவனாகி, (எண்ணியோர் எண்ணியவற்றை எண்ணியவாறே) கொடுக்கத்தக்க கற்பகத்தருவின் சோலையில் உண்டாகின்ற அந்தக் குளிர்ச்சிவாய்ந்த நிழலைப் பெறச்சென்றான். வளர்ந்துவருகின்ற பூங்கொத்தினின்று துளித்த செந்நிறந் தங்கிய இனிமையாகிய தேன்றுளி தன்மேற்படுந்தோறும், பகைஞரோடு போர் செய்யும் வலிதங்கிய பருத்ததோளையுடைய அவனுடல் சுறுக்கெனநோகப் பொறுக்க முடியாதவனாயினன். எ - று. (உ அ)

தழைபடு தருவி னோங்குந் தடஞ்சினை யூழ்த்த மென்பூ
விழைபடு தடந்தோள வெறுபி னிடைதுதைந் திழியுந் தோறும்
குழைபடு மநங்க சாபங் கோத்தெறி கொடுங்கூர் வாளி
நுழைவன வென்ன லானு னவணிலை நுவலற் பாற்றோ.

(இ - ள.) தழைத்துள்ள கற்பகவிருக்ஷத்தின் உயர்ந்து பரவிய கிளைகள் சிந்திய மெல்லியமலர்கள், விரும்பத்தக்க விசாலமான தோள்களாகிய மலையி னிடத்தில் நெருங்கி விழும்போதெல்லாம், மன்மதனுடைய வளைந்த கருப்புவில் லிற்பூட்டி யெய்கின்ற கொடுமைவாய்ந்த கூரியமலர்க்கணைகள் உருவுவனவென்று சொல்லும்படியானான். அவ்விந்திரன் நிலைமைசொல்லுந் தரமோ? எ - று. ()

சாந்துறு பொதிய மூதூந் தளர்நடைப் பசுமபூந் தென்றல்
காந்தெரி குளிக்குங் காமக் கடுங்கனல் கொளுந்து மேனி
மோந்தய் னடந்து சுற்று முற்றிய மகளி ரெல்லாம்
வேந்தழற் கிடந்த மென்பூந் தொடையென வெதும்பிப் போமால்.

(இ - ள்) சந்தன மரங்கள் பொருந்திய பொதியாசலமானது வீசுகின்ற தவழ்ந்துசெல்லும் நடையையுடைய பசிய இளந்தென்றலானது சுடுகின்ற அக்கி னியைக் குளிரச்செய்யும் காமமாகிய கொடிய தீயிடைமூழ்கிய உடலைப்பரிசித்து, பக்கலிற்சென்று, சூழ்ந்து நிறைந்த மாதர்களெல்லாரையும், எரிகின்ற நெருப்பி டையிருந்த மெல்லிய மலர்மாலையென்று வெதும்பச்செய்து செல்லும். எ - று.

தண்டுளித் திவலை தூங்குஞ் சந்திர காந்த மேய்ந்த
மண்டபத் தரிக ளேந்து மலரணை யமளி சார்ந்தான்
கொண்டவக் காமத் தீயி னத்துளி கொதிப்ப தானு
ணெண்டொடி திறத்தி னுள்ள நடக்கலாற் பிறிதொன் றோரான்.

(இ - ள்) குளிர்ச்சிவாய்ந்த நுண்ணிய நீர்த்துளிகளைச்சிந்தும் சந்திரகாந்தக் கற்கள் பொருந்திய மண்டபத்திலே சிங்காதனத்திலேயுள்ள மலர்ச்சயனத்தை யடைந்தான். தான் மேற்கொண்டுள்ள அந்தக் காமாக்கினியினால் (அச்சந்திர காந்தக்கற்கள் சிந்தும்) நீர்த்துளிகள் சுடுவதாகவாயினன். ஒளிதங்கிய வளையலை யணிந்த அகலிகை விஷயத்தில் மனமானது காமுற்றிருத்தலால், மற்றொன்று முணராதவனாயினன். எ - று. (௩க)

இரட்டிவெண் கவரிக் கற்றை யின்னிளம புதுப்பூந் தென்றன்
முரட்டடந் தோளு மார்புந் தைவர முருகு நாறிப்
புரட்டிவண் டிமிருந் தண்டார் பொரிந்தன கரிந்த சாந்தந்
திரட்டுதெள் ளமுது மற்லற விடமெனத் திரிந்த சிந்தை.

(இ - ள்.) இரட்டுகின்ற வெள்ளிய சாமரைத்தொகுதியினின்றுதோன்றிய இனிய இளமைதங்கிய புதுமலர் மணத்தோடுகூடிய தென்றற்காற்றானது, வலி தங்கிய விசாலித்த தோள்களையும் மார்பையுந்தடவ, மணம்வீசி வண்டுகள்புரட்டி ஒலிக்கின்ற குளிர்ந்த மலர்மாலைகள் பொரிபட்டன. பூசிய சந்தனப்பூச்சு கரிந்தன. தெளிந்த அமிர்தமும் விஷம்போலத் தோன்ற மனமமாறியது. எ - று. ()

முறுவலிற் றழகு சென்ற முகத்தின னகத்தி னோங்கு
முறுதுய ருழப்பத் தோரா நிருத்தராவந் தொருங்கு சார்ந்தா
ரறுபதச் சுரும்பர் பாடித் திவைத்தெழு மஞுசி லோதி
மறுவறு திங்க ளன்ன முகத்தியர் மருங்கு மொய்த்தார்.

(இ - ள்) புன்னகைநீங்கி அழகுகழிந்த முகத்தையுடைய இந்திரன் மனத்திற்பொருந்திய அதிகரிக்கின்ற துயரமானது வருத்துவதையறிந்து, நடனஸ்திரீகள் ஒருசேரவந்து சேர்ந்தார்கள். அறுகாலையுடைய வண்டுகள் பண்பாடித் திளைந்தாடுகின்ற [அஞுசிலோதி] ஐவகையாக முடிக்குங் கூந்தலையும், களங்கமற்ற பூரணசந்திரனபோன்ற முகத்தையுமுடையவர்களாய அவன் பக்கலில் நெருங்கினார்கள். எ - று. (௬௬)

நயங்கெழு பாட லாங்க நரப்பிசை யமுதங் காலப்
பயனபடத் தெறிக்கு மெல்லென் குறட்டிசை பையப் பைய
வியங்கொடு நடப்ப நோக்கி யிருந்தன னிவைக ளெல்லா
முயங்குமச் செவிக டோறும் விடமென வொழுகி மண்ட.

(இ - ள்) இனிமைமிகுந்த பாட்டோசைமிகவும், (வீணைமுதலியவற்றின்) நரம்பொலி தேவாமிர்தத்தைச் சிந்தவும், பயனுண்டாக வொலிக்கும் மெல்லிய மத்தளவோசை மெல்லமெல்லப் பிறவாத்தியங்களோடு நடக்கவும், இவற்றையெல்லாங்கண்டு, இருசெவிகளிலும் விஷம்போலச்சோர்ந்து வருந்த இருந்தான்.

உருப்பசி யமுத வா[illegible]மொன றெடுத்துப பையத்
திருப்பினள காம வெ[illegible] திளைத்திடை கிளைப்ப மாழ்கிக்
கருப்புர மளவு [illegible] கலவையுங் கனலக் காந்தி
நெருப்பெழ நினையுந் தோறு நெட்டுயிர்ப் பெறிந்து சோர்ந்தான்.

(இ - ள) உருப்பசியெனுந் தேவதாசி அமுதத்தையொத்த ஆலவட்டமென்றனையெடுத்து மெல்லப்பணிமாறினள் கொடிய காமாக்கினியானது தகித்தலால் வருந்தி, பச்சைக்கற்பூரங்கூட்டிய அழகிய குளிர்ச்சிதங்கிய கலவைச்சந்தனமும் சுட்டதீந்து, எண்ணுந்தோறும் நெருப்புண்டாகப் பெருமூச்சுவிட்டுச் சோர்வெய்தினன். எ - று. (௬௭)

உயிர்த்துயிர்த் தொடுங்கி யாவி யுணங்கினு ளொருப்பாடெய்தி
மயிர்ப்புறம் பொடிப்ப வோங்கி யெழுந்தனன் வணக்கம் போக்கி
குயிற்[illegible] குதலைச் செவ்வாயக் கோமளக் கொழுந்தே யீங்கெ
னயிற்புற மொருவிப் போந்த தெவ்வழித் துரைத்தி யென்றான்.

(இ - ள்.) (அப்படிச்சோர்ந்த இந்திரன்) பெருமூச்சுவிட்டும் பெருமூச்சு விட்டு அடங்கி உயிரொடுங்கி (அவளுருவெளியைநோக்கி) ஞானுமி, உடல்முழுதும் புளகம் மேலேபோர்க்க வெழுந்து தண்டனிட்டு, குயிலொலிபோலுங் கொழுவிய குதலைச்சொல்கூறும் செவந்த வாயையுடைய இளங்கொழுந்துபோல்வாளே! நீ சம்மதமெய்தி, என்மதிற் புறக்காவல் கடந்து இங்கே வந்தது எப்படி? சொல்ல வேண்டுமென்றான். எ - று. (௯௬)

கலிவிருத்தம்.

என்னு யினைக் கெதிரெய் தியதும்<br>
பின்னே வருமா றுபிடித் திலதோ<br>
பொன்னே யதுபுக கிலதா யினுமற்<br>
றுனனு லுமொரா வியுயிர்த் தனனால்.

(இ - ள்.) என்னுயிரானது உனக்கெதிரில் வந்தவுடனே, மீண்டுந் திரும்பி வரும் வழியைப்பற்றிய திலலையோ? பொன்னைபபோல்வாளே! அவவுயிர் திரும்பிவராவிட்டாலும், உன்னாலும் ஒருயிர் பெற்றிருந்தேன, எ - று. (௯௭)

புலரா விருளூற் றபுயற் குழலா<br>
யலராவா ளியறுத தழிபுண் ணினொடு<br>
முலவா நெறிகண் டுனைவைத தனனுன்<br>
மலரோ னனிவை கலும்வா ழியவே.

(இ - ள்.) நீங்காத இருளானது குடியிருந்த மேகம்போன்ற கூந்தலையுடையாளே! (மன்மதன்சொரிந்த) மலாக்கணைபட்டுருவிய புண்ணினின்று நீங்காதவழியைப்பாாதது உனனைத தாமரைமலரில வசிககும பிரமன்படைத்தனன், நாடொறும் நன்றாகவாழக்கடவீா. எ - று. (௯௮)

கண்ணு றுமலாக் கணைகா துபசும்<br>
புண்ணு றுதழும பொடுபோ யினவாற்<br>
கண்ணே யமுதூ றுகரும் புருவே<br>
பெண்ணே யுனதின் னருள்பெற் றபினே.

(இ - ள்.) என் கண்போல்வாளே! அமிர்தமே! ஊற்றெடுக்கின்ற செங்கரும்பின் வடிவுபோன்றாளே! அகலிகையெனும் பெணணே! உன்னுடைய இனிய கருணையை யானடையப்பெற்ற பிறகு, தேன்மணங்கமழும புட்பபாணங்கள் பாய்ந்த பசும் புணணனது ஆறியவடுவோடும் அகன்றது. எ - று. (௯௯)

நறவார் சுருளோ திநறுங் களபந்<br>
துறவா தபடா முலையிச சுமைகொண்<br>
டுறவா டுநுசுப பினுடங் குயிர்கொண்<br>
டிறவா மலிரங் குவதென் றுகொலோ.

(இ - ள்.) தேன்பொருந்திய மலரணிந்த சுருண்ட கூந்தலையுடையாளே! நறுமணங்கமழும் கலவைச்சாந்து நீங்காது சேலைபோர்தத தனங்களாகிய இச்சுமையைக்கொணடு நட்பு பாராட்டுகின்ற உன்னிடையைப்போல, தள்ளாடுகின்ற உயிரைததாங்கி யான் இறவாதபடி, நீமனமிரங்குவது என்றோ? எ - று. (௱)

தருசீ றடிபொன் முடிதாழ் தொறுநீ
தொகுமென் மொழிபொன் றுதிறந் தருளின்
மிகுகா மனெருப் புறவெள் ளொளிலா
வுகுமூ ரல்விளைப் பதுமுண் டுகொலோ.

(இ - ள்.) வணங்கத்தக்க உன்னுடைய சிறியகாலில் என்பொற்கிரீடமானது படியும்போதெல்லாம், நீ மென்மைத்தன்மை யாகியமொழியொன்று வெளியிடுவாயானால் மிக்ககாமாக்கினி யெழும்படி வெள்ளிய சந்திரன் சிந்துகின்ற (புன்னகைசெய்வதும்) நிலவை வீசுவதும் உனதாகுமோ? எ - று. (சுக)

மைதக் கமலர்க் குழல்வா ணுதலாய்
பைதக் கநிதம் பபடா மூலேநீ
பொயதக் கநுசுப் பொடுபோ தரவின்
றெய்தப் பெறுபே றெவரெய் தினரே.

(இ - ள்.) தகுந்த மலரணிந்த கரியகூந்தலேயும் ஒளிதங்கிய நெற்றியையுமுடையாளே! நீ பாம்பின்படத்தையொத்த அல்குலேயும் படர்ந்த தனங்களேயும் பொய்மைத்தன்மையுடைய இடையையுங்கொண்டு இங்கே இன்றுவர, நான் அடையப்பெற்ற பேற்றினை எவர்தாம் அடைவாரகள்? எ - று. (சுஉ)

மின்னஞ் சுமருங் கெனவெவ் வினையே
னென்னெஞ் சறைபோ யதெனக் கெனநீ
வன்னெஞ் சமிரங் கிவழுங் குதியே
லின்னஞ் சிலவை கலிருக் குவனல்.

(இ - ள்.) மின்னலும் அஞ்சத்தக்க இடையென்று, கொடியவினையையுடையானாகிய எமது மனமானது கீழ்மையுற்றது. எனக்காக நீ உனவலிய மனமானது இரங்கிக்கிருபைசெய்வாயாயின், யான் இன்னுஞ் சிலகாலம் உயிர் பெற்றிருப்பேன. எ - று. (சுங)

தஞ்சம் பிறிதின் றியுமைச சரணென்
றஞ்சுந் தமிகண் டருளா யலரோ
னஞ்சந் தருகட் கடைநல் கியுறு
வஞ்சந் தருநெஞ் சமவழுங் கினனே.

(இ - ள்.) வேறுபற்றுக்கோ டில்லை. உன்னையே சரணமென்று அஞ்சுகின்ற எளிமைத்தன்மையைக்கண்டு அருளசெய்வாயாக. பிரமன விஷத்தைச் சிந்துங் கட்கடையைக்கொடுத்து, நீங்காதவஞ்சனையைச் செய்கின்ற மனத்தையும் உனக்குக்கொடுத்தனனே? எ - று. (சுச)

மன்றற சிறுதென் றல்வளைத் துயிரைத
தின்றெய்த் துநடந் ததுதே மலரு
டொன்றிய பனிவா டையுலா வருமு
னன்றிற் குரன்மிச கிலருந் தியதே.

(இ - ள்.) மணந்தங்கிய இளந்தென்றற்காற்று என்னைச்சூழ்ந்து, என்னுயிரைப்பருகி வருத்திச்சென்றது. பனித்காற்றானது இனிய மலர்மணத்தோடு கலந்து பவனிவருவதனமுன்னரே, அன்றிற்பறவையின் குரலானது அதன்மிகுதியையும் பருகியது. எ - று. (சுஇ)

பயில்கற் பகமென் சினைபற் றியிளங்
குயில்கூ யெனதா விகுடித் தனவான்
மயிலபோ லொருநீ வரவல் வினையே
னுயிரபோ வதொழித் தனனென் றுதலே.

(இ - ள்.) கற்பகவிருக்ஷத்தின் மெல்லிய கிளைகளிற் பழகும் இளங்குயில் கூவி எனது உயிரைக்குடித்தது. மயிலபோலுஞ் சாயலையுடைய ஒப்பற்ற நீ இங் கேவந்ததால, தீவினைச்சயபந்தமுடைய நான உயிரபோவதினின்றும நீங்கினேன. ஒளிதங்கிய நெற்றியையுடையாளே! எ - று. (சுசு)

பூ பனிவா ணைகைமூ தறிவை
வாரிங கொடுபோ கவழுங கினனு
வீரத் தளிரங் கையெனின னுயிரை
வேரிக் குழலோ டுமவிளித் தனவே.

(இ - ள்.) வெள்ளிய பற்களையுடையாளே! வலிதங்கிய பனியானது என் முதிர்ந்த அறிவைக்கொள்ளைகொண்டு சென்றமபடி அதனைபபடைத்தான. குளிர்ச்சிவாய்ந்த மாந்தளிரபோன்ற அழகிய கையானது வாசந்தங்கிய கூந்தலோடுங்கூடி, எனது இனிமையாகிய பிராணனை யழைத்தன. எ - று. (சுஎ)

எனவித் துணைபன னியிரந் தனையானை
மனவுத் துணைமா மாலைவவ வுருவான
வினவிப் புடைசென் றனன்மெய் தடவா
நினைவற் றுயிர்சோர் தரநின றனனால.

(இ - ள்.) என்று இத்தகைய சொற்களைக்கூறியாசித்தது, அவ்விந்திரன், இரத்தினமாலையணிந்த பெரிய இருதசங்களையும கைக்கொள்ளும்படி நெருங்கி அருகேபோயினன். அவ்வுருவெளித் தோற்ற வுடலைத்தழுவி நினைவற்று உயிர் சோர்வெய்தி நின்றான. எ - று. (சுஅ)

பொய்யபோ லுருவா யபொலன் கொடிதன்
பெய்வால் வளையங் கைபிடித் துறுவய
கைவால் வளைபற் றுதலகண் டிலனுன்
மெய்யா விமயங் கிவெதுப் புறுமால.

(இ - ள்.) பொய்யைப்போல் (உருவெளியாகிய) உருவம் வகித்த பொற் கொடியின அடுக்கிய ஒளிதங்கிய வளையலையணிந்த அழகிய கையைப்பிடிக்க, அந்தக் கையிலணிந்த வெள்ளிய வளையலைப்பிடித்த தலைகாணாதவனுகி உடலும் உயிரும் மயங்கி வாடிவெதாயினன். எ - று. (சுகு)

இத்தன் மையினின் றிவனீ டழியப்
பொய்த்தன் மைமடக் கொடிபோ யினளாற்
சித்தந் திகைதந் தீதியங் கினனன்
மத்தந் தருவெண் ணிறவா ரணனே.

(இ - ள்.) இத்தன்மையாக இவன்பெருமையழிகையில, பொய்த்தன்மையோடு காணப்பெற்ற இளங்கொடிபோல வாளாகிய அப்பெண் மறைந்துபோயினள். மத மயக்கம்பொருந்திய வெண்ணிறந்தங்கிய ஐராவதமென்னும் யானையையுடைய இந்திரன் மனமானது திகைப்புற்று மயங்கினன். எ - று. (ருo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஈங்கிவனிப் பரிசின்றொடு மகலிகைபா லெடுத்தசிந்தை யிசைவார், தூற்றுன், றேங்கமழு மலரயனு முலகளிப்பா னுளக்கோரந்து செயற்கை முற்ற, வோங்கருமா தவத்திநெடு நாளகழ்ந்தான கவுதமனென் றுணர்ந்தா னாந்தனை, பூங்கமலத் திருக்குமய னகலிகைக்கைக் கொண்ட வனிறபோயி னனல.

(இ - ள்) இங்கே இவ்விந்திரன இவ்வாகைத் துயரத்தோடு அகலிகைபாற் செலுத்திய மனத்தானாகிருந்தான. தேனமணமுகமழும் தாமரைமலரிலுள்ள பிரமனுங் உலகினைப்படைப்புவன மனதிற சிந்தித்துணர்ந்து, செயலகளெல்லாம முடிவுபெற, உயர்ந்த அருமபெருந்தவத்தில பலகாலத்தைக் கௌதமமுனிவர் கழித்தாரெனறு தெரிந்து, அழகிய குளிர்ச்சிபொருந்த தாமரைமலரி லிருக்கும் பிரமன அகலிகையைக் கையிற்பற்றிக்கொண்டு அக்கௌதம முனிவராசிரமத்தை யடைந்தனன. எ - று. (ருக)

சென்றெதிர்ந்த மலரயனுக் கருந்தவத்தோ னெதிரெழுந்து செய்வசெயது, நின்றெழுந்து மனத்தினைந்து முவகையனு யளவளாய நெடுநீர் வைய, மன்றளித்தா யினறுமுத லுயிரளிப்பாய நின்பெருமை யளப்ப தாரே, யெனறெடுத்து முகமனுரைந் தெயதியவா பேட்பமல ரிறைவன சொலலும.

(இ - ள.) அப்படிப்போய நேரினற கமலாசனனுக்கு, அருந்தவமுடைய கௌதமமுனிறா உடனேயெழுந்து செயயத்தக்க உபசாரங்களைச்செயது, மனத்திலிருந்துண்டாகி அதிகரிக்கினற சந்தோஷமுடையவனுய அளவளாவி, நெடிய கடலசூழ்ந்த உலகத்தை ஆதிகாலத்திறபடைத்தீர. அனறுமுதலாக வெலலாவுயிர்களையும சிருஷ்டிப்பீர! தேவரீா பெருமையை அளவிடுவோர் யாவர? எனறெடுத்து உபசாரவார்த்தைகளைச்சொல்லி, அங்கடைந்த வகையைவினவ, பிரமன சொல்லுகினறுன. எ - று. (ருஉ)

நீயிழைக்கு மருந்தவத்திற கியனறசெயவா ரிலரென்ன நினைந்து நின்பா, லாயிழையிங் கிவளினைக் களித்துமெனக் கொணர்ந்தனனமற் றைய வெய்திற், காயெரிமுற கைபிடித்துப் பனனியெனக் கோடியென்றுன் கமலத் புத்தே, ேயவனு மாங்கவனசொற றுறந்திலனுற சடிலமுடி துவக்கி னனல்.

(இ-ள்.) நீசெய்த அரியதவத்திற்கு இவ்வளந்த பலனை புண்ணியஞ்செய்வோரில்லை யென்று கருதி, உன்னிடத்தில் இப்பொழுது அகலிகையாகிய இவ்வாய்ந்த ஆபரணங்களணிந்த பெண்ணை உனக்குக் கொடுப்போமென்று கொண்டுவந்தேன். ஐயனே! எரிகின்ற அக்கினிசாட்சியாக இவள் கையைப்பற்றி மனைவியெனக் கொள்ளக் கடவாயென்று கமலாசனனாகிய பிரமன் கூறினன். புனிதராகிய கௌதமமுனிவரும் அப்பிரமன் சொல்லைக் கடவாராய்த் தமது சடைமுடியை யசைத்தனர். (அங்கீகரித்தரென்றபடி) எ - று. (௩௩)

அன்னவளை யவற்களித்துத் தன்னுலகத் தோதிமத்தோ னடைந்தானந்நாட், பின்னவளுங் கவுதமற்குப் பன்னியெனச் சரித்துறவப் பெரும்பூந் தாருப், பொன்னகரத் திறையவற்குத் துணர்த்தினரார் கதுவுணர்ந்து பொருமாநின்றான, பனுவற்பழ மறைகிழவற் குறித்திழியப் பகர்வதெலாம் பகர்ந்தான் மன்னே.

(இ-ள்.) அவ்வகலிகையைக் கௌதமமுனிவருக்குக் கொடுத்து, அன்னவாகனனாகிய பிரமன் தனது சத்தியலோகத்தை யடைந்தனன். அன்றுமுதலாக அகலிகையும் கௌதமருக்கு மனைவியாகி நடந்துகொள்ள, அந்தப்பெருமைதங்கிய அழகிய கற்பகத்தருவையுடைய பொன்னாட்டு மன்னவனாகிய இந்திரனுக்கு, சிலர் உணர்ந்து தெரிவித்தார்கள். அவன் அதனையறிந்து வருந்திநின்று, துதிக்கின்ற பழமையாகிய வேதங்களைச் சொல்லிய பிரமனைக்குறித்து இழித்துச் சொல்லத்தக்கவற்றையெல்லாம் மிகுதியாகச் சொன்னான். எ - று. (௩௪)

கள்ளவா ணெடுங்கடங்க ணகலிகையைக் குறித்தெழுந்த காம வெந்தீ, யுள்ளவாய் நினைமழுற்ற முன்னையினுங் கொடுந்துயர முழவா நின்றான், வள்ளைவார் குழைகளப வனமுலைவேட் டெழுந்தனனாய் வழிக்கொண் டேகிப், புள்ளரு மலர்ப்பொதும்ப ராசிரமத் தயற்கரந்து புகுந்து நின்றான.

(இ-ள்.) கள்ளத்தன்மையுடைய வாட்படைபோலும் நீண்டு பரந்தகண்களையுடைய அகலிகையைக் குறித்துத் தோன்றிய கொடிய காமாக்கினியானது, தன மனத்திலிருந்து சுடுவதால், முன்னைய துயரத்திலுங் கொடிய துயரத்தோடு வருந்தினன். வள்ளைக்கொடிபோலு நீண்டசெவியையும், களபம்பூசிய அழகியமுலையையுமுடைய அகலிகையை விரும்பி வழிகொண்டு புறப்பட்டவனாய்ச்சென்று, பட்சிகள் நீங்காத மலர்ச்சோலைசூழ்ந்த ஆச்சிரமத்திற்கருகே மறைந்து புகுந்திருந்தான்.

தருணமழ கதிரெழுசசி தருகடிகை சிலகிடப்பத் தணந்து சென்ற, பெருமுனிவ னிடைநோக்கி யவனுருக்கொண் டடைந்தவளைப் பிடிப்ப வன்னா, ளுருகியுள நெகிழ்ந்தனளா யிந்திரனென் றுணர்ந்துநல னுகர்ந்தா ளன்னோன, மருவருமென சுருளோதி யிவர்தமக்கு விளைவ தொன்று மதித்தி லாரால்,

(இ-ள்.) இளஞ்சூரிய னெழுதற் சமயத்திற்குச் சிலநாழிகைகளிருக்கையில், ஆசிரமத்தை நீங்கிப் பெருமைதங்கிய கௌதமமுனிவர் சென்ற சமயம்பார்த்து, அம்முனிவன் வடிவேற்றுச்சென்று அவ்வகலிகையின் கரத்தைப்பற்ற, அவள் மனமுருகிக் கரைந்தவளாய் இந்திரனென்று தெரிந்துகொண்டு காமசுகத்தை யநு

பவித்தான், அக்கினித்திரன், மணம்வீசுகின்ற மெல்லிய கருங்கூந்தலையுடைய அகலிகை ஆகிய இவர்கள் (இருவரும்) தமக்குப்பின்னே சம்பவிப்பதை அறிந்திலர். எ - று. (கஅ)

முத்தவா ணகைக்கருங்க ணகலிகைவெம் முலைமுகத்து முயங்கிப் போத, மத்தலையி னருந்தவத்தோன் றருப்பையொடு சமிதைகரத் தடுக்கிப் போந்தா, னித்தலையி னிவரிருவ ரிழைத்தவெலாங் கருத்தி னுணர்ந் தெண்ணி நின்றான். மத்தமதத் தவளநிற வாரணத்தோற் குறித் துமன மாறு கொண்டான்.

(இ - ள்.) முத்துப்போல வெள்ளிய பல்வரிசையையும் கரியவிழியையு முடைய அகலிகையின் வலிய முலைமுகத்திற்கலந்து திரும்பிவருகின்ற அக்காலத் தில், அருந்தவம் புரிந்த கௌதமமுனிவர் தருப்பையும் சமிதையும் கையிலடுக்கிக் கொண்டு வந்தனர். இப்பொழுது இவர்களிருவரும் செய்தனவற்றையெல்லாம் மனத்தால் ஆலோசித்தறிந்து, மதமயக்கத்தையுடைய வெண்ணிறம் பொருந் திய ஐராவதத்தையுடைய இந்திரனைக் குறித்து மனதிற் பகைமைகொண் டனர். எ - று. (கஎ)

பன்னுமறை யருந்தவத்தோற் குரியதொரு பன்னியெனப் பாராய் காமத், தின்னலுழந் தெமையிகழா வீதுபுரிந் தனையுனக்கு மினிமே லிந்தக், கன்னிகுறி விருப்புறலா லுடம்பனைத்து மக்குறியே காண்ப தாகப், பின்னருன தாண்குறிபோ யலியாகிப் பெரும்பாவம் பிடித்தி யென்றான்.

(இ - ள்.) வேதமோதும் அருந்தவம்புரிந்தவனுக்கு உரித்தாகிய ஒருபத்தினி பாராதவனுய், காமத்தயரெய்தி எம்மையிகழ்ந்து இத்தகைய காரியஞ்செய்தனை. இந்திரா! உனக்கும் இன்னமும் இந்தப்பெண் குறியில விருப்பமிருத்தலால், உன் உடம்பு முழுவதும் அப்பெண்குறியே காணப்படுவதாக.மேலும் உனக்குரித்தாகிய ஆண்குறி நீங்கி நீ அலியாகிப் பெரும்பாவமெய்தக் கடவாயென்று சபித்தார்.

ஈங்கெனது பன்னிவரம் பழிவரம்பாய் நிற்கவிஃ திழைத்தாய் முந்நீர்த், தேங்குதிரை நெடுநிலத்து மன்பதைக்கு மவ்வரம்பு சிதைவ தாக, வோங்குபெருஞ் செருமுகத்து நிருதாகரத் தகப்படுதி யொழி யாப்பாவந், தாங்குதியென் றிவையனைத்து மெடுத்துரைத்தா னிருஞ் சினத்திற் றவத்தின் மிக்கோன்.

(இ - ள்.) தேக்கெடுக்கின்ற அலைகள்பொருந்திய கடல்சூழ்ந்த பெரியபூமியில் மாந்தர்களுக்கும் அவ்வரம்பு அழிவதாக இப்பொழுது எனமனைவியின் கற்புக் குரிய எல்லை, அழிந்ததாக உலகத்தில நிற்கும்படி இத்தகைய செயலைச்செய்தனை. அதிர்கின்ற பெரிய யுத்தமுகத்தில் நீ அசுரர்கள் கையிலகப்படுக. நீங்காத பாவ த்தைத்தாங்குவாயாக வென்று இவற்றையெல்லாம் பெருங்கோபத்தோடு, தவத் தின் மேம்பட்ட கௌதமமுனிவர் எடுத்துக்கூறினர் எ - று. (கக)

ஈதொழிய வகலிகையை முகநோக்கி யெம்மையிகழ்ந் தீதுசெய்த, பேதைநீ நெடுநெறியிற் கருங்கல்லாய்க் கிடத்தியிந்தப் பிறழாச் சாபந், தாதைமொழி தலைக்கொண்டு கானடைந்த தாசரதி கமலச் செய்ய, பாதமலர் தோய்வுறலு முன்னுருக்கொண் டெழுதியெனப் பணித்தா னன்றே.

(இ - ள்-) இதுநிற்க. அகலிகையின் முகத்தைப்பார்த்து; ஏம்மையவமதித்து இக்கொடுஞ் செயல்புரிந்த அறிவிலியாகிய நீ பெரியவழியிடையிலே கருங்கல் லாய்க் கிடப்பாயாக. நீங்காத இந்தச் சாபமானது, பிதாவாக்கியத்தைச் சிரமேற் றாங்கி (தண்டக) வனத்தையடைந்த [தாசரதி] தசரதன் மகனாகிய ஸ்ரீராமனது தாமரைமலர்போலச் சிவந்த பாதமானது படவும், (நீங்கி) பண்டைய வடிவு கொண்டு பெண்ணாக வெழுந்திருப்பாயென்று கட்டளையிட்டனர். எ - று. (சுO)

ஆழிமா நிலப்பரப்பி னலங்கு றுவெண் குடைநிழற்றி யரசர் போற்றும்
பாழியோங் கிருஞ்சினைய கறபகநாட் டினுமபுகுதப் பாரான் வெளகி
வாழிநான் முககடவு ணிருமித்த மானதப்பூ வாவி யேகிச
சூழுமீ ரிதழ்ககமலத் துட்கரந்து நெடுங்கால நதொலையா நின்றான்.

(இ - ள்.) கடல்சூழ்நத பெரிய உலகப்பரப்பில, அசைகினற வெணகொற்றக் குடையால் நிழலசெய்து அரசாகள துதிககினற பெருமைதங்கிய உயாநத பெரிய கிளைகளையுடைய தனது கற்பகநாட்டிற்குளுசெலலககருதாதவனாகி,வெட்கமெய்தி, நானகு முகஙகளையுடைய பிரமதேவன சிருஷடிதத மலாகளையுடைய மானததீரத தத்தையடைநது, குளிாநத இதழ்கள சூழநத தாமரைமலரில ஒளிததுககொணடு வெகுகாலததைத தொலைததுககொண டிருநதான. எ - று. (சுக)

தாயிழந்த குழவியாய்த் தருவிழநத தொழுதியாய்ச சபையி னேறி
வாயிழநத வழககினராய் மருவிழந்த மாலிகையாயப் பொதுளுமபசசை
வேயிழந்த நெடுவரையாய் விலலிழநத பெருநாணாய் வெறிதது நினறா
போயிழந்த வலியினராயப புலனழிநது நிலைதிரிநதாா புலவா யாரும்.

(இ - ள்.) அதனால தேவர்களெல்லாரும, தாயிழநத குழநதைபோலாகியும, மரத்தையிழநத பறவைததொகுதிபோலவும, சபையேறிச்சென்று பேசுமவாயை யிழநத வழககுடையாா போலவும, வாசனையையிழநத மலாமாலைபோலவும, நெரு ஙகிய பச்சையாகிய மூஙகிலையிழநத நெடியமலைபோலவும, விலலைநீஙகிய பெரிய நாணபோலவும, ஆவேசிதது நினறவாகளாமபோயப போககடிதத வலிமையுடை யார் போலவுமாகி, அறிவழிநது தஙகள நிலைமைதவறினாகள. எ - று. (சுஉ)

கேட்டனகேட் டனவழஙகுந தருவொனறும் வழஙகிலவாய்க்
கிள்ளை யனுசொல, வாட்டடஙக ணரமபையரும வனபபழிநது வறு
மையராய் மமமா கூாநதாா, வீட்டியவா ளெயிற்றரககா மிககெழக்
கண் டவாககுடைநதாா விண்ணோ ரமபொ, னுட்டரநதை துடைத்
தொழிப்பா ரிலலாராய் நெடுஙகால நடநத வனறே.

(இ - ள்.) கேட்டவற்றைக கேட்டதுபோலவே கொடுககுங கற்பகத்தரு ஒன் றையுங் கொடாததாகியும், கிளிபோலும் அழகிய மதலைச்சொல்லையும் வாள்போ லும் பரநதவிழிகளையுமுடைய அரமபாஸதிரீகளும் அழகுகெடவும், தரிததிரர் களாய் மயக்கமிருநதாாகள். கொலலுதற்குரிய வாள்போலும் பற்களையுடைய அரக்கர்கள் மிகுதியாக வரக்கண்டு அவாகட்குப் பயநதோடினார்கள். தேவர் களுடைய அழகிய பொன்னுட்டிற்குற்ற துன்பததைநீக்கி யொழிப்பார் ஒரு வரும் இல்லாதவராய் அநேககாலங கழிநதன. எ - று. (சுங)

சுராகுருவி னடிதொழுதி கற்பகநாட் டணைவோருந் சொல்லிச் சொல்லிப், பரசுதது மாங்கவனு மகபதியெங் கெனவோர்ந்து பாரா னின்றான், விரைமுளரி யகத்தொடுங்கி மானதவா வியிலிருந்த மெய்ம் மைகண்டா, னரசிழந்து தனிவருந்து புலவரொடு மாங்கவனுற் றடைந்தா னன்றே.

(இ-ள்.) தேவலோகத்திலுள்ள யாவரும், தேவகுருவாகிய பிரகஸ்பதி முனிவர் பாதங்களை வணங்கி (தங்கள் துயரைச்) சொல்லிச்சொல்லித் துதி செய்யவும், அப்பிரகஸ்பதி பகவானும் இந்திரன் எங்கேயுள்ளானென்று ஞான திருஷ்டியால் தெரிந்து பார்த்து, அவன் மானததீர்த்தத்தில மண்ந்தங்கிய தாமரை மலரினுள்ளடங்கி யிருந்த உண்மையை யுணர்ந்து, அரசனைக் காணு திழந்தவர்களாய் தனியே வருந்துகின்ற தேவர்களோடும் அவ்விடத்திற்குச் சென்று சேர்ந்தனர். எ-று. (கூச)

எதிரெழுந்த சுரகுருவுக் கெதிரெழுந்தா னிந்திரனு மிமையோர் யாரு, மதிருரலிட டழுதயாந்தா ராங்கவனை யந்தணன்கொண் டங் கன்று போகி, மதிமவுலி யவறரெழுவான காசிகொணாந் திருந்தனனம் மகவான பசசைப, புதியமர் கதககொடிககோ ரிடங்கொடுத்தான் றனைபபணிநது பூசை செயதான்.

(இ-ள்.) எதிரேவந்த தேவகுருவாகிய பிரகஸ்பதி முனிவருக்கு எதிரே இந்திரனும எழுந்து வணங்கினன் தேவர்களெல்லாரும சததிக்கினறபெருங் குரலிட்டழுது சோர்ந்தார்கள் அப்பொழுது அந்தி கிரனைப் பிரகஸ்பதி முனி வா உடனகொணடு சென்று சந்திரசடாதரருகிய சிவபெருமானை வணங்கும் படி காசிநகரத்திற்குக கொணடுபோயிருந்தனன. அப்படிக கொணடுபோகப் பட்ட இந்திரன் புதிய பசுநிறந்தங்கிய மரகதககொடியாகிய உமாதேவியாருககு ஒரு பாகத்தைக கொடுத்த சிவபெருமானை வணங்கிப பூசைபுரிந்தனன. எ-று.

எமபிரா னதுகருதி யெதிரெழுந்து திருவருளகூர்ந் திரக்கஞ் செய் தான், வமபுலாங கறபகத்தா மகபதிபெண் குறியொழிந்து வடிவ மெலலா, முமபரா குலமொழியக கணகளா யிரமபடைத்தா னிவை யொனறன்றே, யிமபாகேட டனயாவு மினிதளித்தான் பழியொழிந்தா னிமையோா வேந்தன.

(இ-ள்) எமது சிவபெருமான் அதனைத் திருவுளங்கொணடு எதிரே தோன்றித் திருவருணமிகுந்து மனமிரங்கினா. வாசனைவீசுங கற்பகமலர்மாலை யணிந்த இந்திரன தனககுளள பெணகுறிகளைநீங்கி, தேவர்கள மனததுயரமங லப்படி உடல்முழுவதும ஆயிரங்கண்களாகப் பெற்றான். இதுமாத்திரமன்று. இவவுலகிற் கேட்டவரங்களையெல்லாம அவனுக்கு இனிதாககொடுத்தருளினா. தேவராசனாகிய இந்திரன் தனககுற்ற பழியினின்று நீங்கினன். எ-று. (சுக)

கொற்றவா குடைநிழற்றி யமரருல கினிதளிக்குங் குலிசவேந் தன், கறைவா சடையானைக காளததி முககணனைக கருதிப் பூசித், தந்துறைந்தா ளவனருள வலாசுரனை யுயிர்செகுத்தா னவனி யோடும், பெற்றவா னவருலகுந் துயரொழித்தான வலாரியெனும் பெயரும் பெற்றான்.

(இ - ள்.) நெடிய வெண்கொற்றக் குடையாக [illegible] தேவலோகத்தை இனிதாகக்காக்கும் வச்சிராயுதமேந்திய இந்திரன், [illegible] நீண்டசடையை யுடையவரும் திரிநேத்திரங்களையுடையவருமாகிய சிவபெருமானைத் திருக்காளத்தியில் தியானித்துப் பூசித்து, அப்பொழுது அவ்விறைவன் திருவருள்புரிய வலாசுரனையுயிர்வதைத்து, பூலோகத்திற்கும் தான்பெற்ற தேவலோகத்திற்கும் உண்டாகியதுயரத்தை யொழித்து வலாரியென்னும் பெயரையும் அடைந்தான். எ - று. (சஎ)

செருக்குலிசத் தவனொருத்தன் கறைக்களத்தெம் பெருமானைச் சிந்தித் தோர்நாள், விருத்தகிரி வழிபட்டான் றுருவாச னபிசினத்தான் விளம்ப வாசத், தருபபணிலஞ் சுரபிசிந்தா மணிமுதல மறிகடலிற் றழுவிச சார்நத, திருப்பிவறி தொழிநதுபெரு வளநுகர்ந்து தனிசசெங் கோல் செலுத்தி னனால்.

(இ - ள்.) போர்செய்யத்தக்க வச்சிராயுதந் தாங்கிய ஒப்பற்ற இந்திரன் விஷம்பொருநதிய கண்டத்தையுடைய எமது சிவபெருமானைத தியானிதது ஒரு காலத்தில் விருத்தாசலததில் வழிபட்டு, துருவாசமுனிவருடைய கொல்லத்தக்க கோபத்தாற் சபிததலால் வாசநதஙகிய கற்பகத்தரு சங்கநிதி காமதேனு சிநதாமணி முதலிய அலைகள் புரளுகின்ற கடலிற்சேர்நதவற்றை, மீணடும் பெற்றுககொணடு வறுமைதவிர்நது பெருவளஙகளை நுகர்நது, ஒப்பற்றுச் செங்கோல் செலுததினன். எ - று. (சஅ)

மகபதியோர் மகவின்றி நெடுங்காலந் துயருழந்து மறுக்கக் கொண்டான், மூகையவிழ்கற் பகநிழலி னினிதிருந்து முழுமுதலை முறையிற் பூசித, திகலொழிய வுலகளிககுஞ சயநதனெனு மொருமகவை யினிதி னீன்றான், புகலரிய வாரூரிற் பூசித்தா னினிதுகைக்கும் புயலும் பெற்றான்.

(இ - ள்.) [மகபதி=யாகத்திற்கிறைவன்] இநதிரன் தனக்கொரு புத்திரனில்லாமல் வெகுகாலம் வருநதித துயருற்றனன். அரும்புகள் மூறுக்கவிழ்நத கற்பக விருக்ஷததின் நிழலில் இனிதாக வீற்றிருந்து, முழுதற்கடவுளாகிய சிவபெருமானை முறைப்படி யர்ச்சிதது, பகைமைநீஙக உலகத்தைக் காக்கத்தகக சயநதனென்னும் ஒப்பற்ற புத்திரனைச் சநதோஷமாக அடைநதனன். சொல்லுதற்கரிய சிறப்புடைய திருவாரூரிற் சிவபெருமானைப் பூசிததனன். இனிதாக ஏறிச்செலுததும் மேகவாகனததையும் பெற்றனன், எ - று. (சகூ)

அருணகிரிப் பெம்மானை மலரடிபெற் றருசசித்தா னரும்பு மூரற், பொருகளப வனசமுலைப் புலோமசையைப் பெறப்பெறறான் குலிசப் புததே,ளருங்கியசிந தையனுகி யெம்மானைப பூசித்ததுரைக்கூற் பாற்றே, பெருநதிரின் றுவட்டெடுக்குஞ சடையோனைப பூசித்த பிறவுஞ் சொல்வாம்.

(இ - ள்.) அருணகிரியில், எழுநதருளிய சிவபெருமானுடைய [illegible] போன்ற பாதஙகளைப் பற்றுககோடாககொணடு பூசைசெய்தான். [illegible] யரும்பை நிகர்த்த பல்லையும், நெருஙகிய களபமணிந்த தாமரைமொட்டை யொத்த தனஙகளையுமுடைய புலோமசையை ம[illegible]க அடையப்பெற்றான்.

வச்சிராயுதமேந்திய இந்திரன் உருகியமனமுடையவனாகி எமது சிவபெருமா னைப்பூசித்ததைச் சொல்லுந்தரமோ? பெரிய கங்காநதிதங்கிப் பெருகுகின்ற சடை யையுடைய சிவபெருமானைப் பூசித்த பிறவற்றையுஞ் சொல்லுவோம். எ - று.

துருவனெறிக் கதிர்க்கடவுள் பன்னிருவா மதிக்கடவுட் டொல்லோ னெல்லில், வருமுடுக்கண் மூவொன்பா னீராறு ராசியெழு கரண மற் றை, யரிதிழைக்கும் விட்கமப முதலான யோகங்க ளன்றி யம்பொற், பொருகழற்கா லமரருந் தவமுனிவர் கருடர்கிம் புருடர் நாகர்.

(இ - ள்.) துருவன் வழியில் நடக்கும் துவாதசாதித்தர்கள் - சந்திரதேவ னாகிய பழையோன் - இரவில் உதிக்கின்ற இருபத்தேழு நக்ஷத்திரங்கள் - பன் னிரண்டு இராசிகள் - ஏழுகரணங்கள் - ஏனைய அருஞ்செயல்களைச்செய்யும் விட் கம்பமுதலிய யோகங்கள் - அல்லாமலும், அழகிய பொன்னாற்செய்து ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த காலையுடைய தேவர்களும், தவமுனிவர்களும், கருடர்களும், கிம்புருடர்களும், நாகர்களும். எ - று. (௭௧)

கந்தருவர் விதத்தியா தரரியக்கர் கின்னரரவெங் கடுங்கட் பேழ் வாய், வெந்தொழிற்று னவர்நிருதர் மானிடர்பன் முகிற்கணங்கள் வெ ற்பு வாரி, பைந்தருக்கள் பசுப்பறவை கங்கைமுதல் வரநதிகண் மல ரோன் பாரிற், றந்தசரா சரங்களரு னருச்சனையாற் பெற்றபெருமைமாற் சாற்ற லாமே,

(இ - ள்.) கந்தர்வர்களும், வித்தியாதரர்களும், இயக்கர்களும், கின்னரர் களும், வெவ்விய கடுமையான விழியையும், பிளவுபட்ட வாயையும், கொடுந்தொ ழிலையுமுடைய அசுரர்களும், அரக்கர்களும், மானிடர்களும், சிறந்த மேகக்கூட்டங் களும், மலைகளும், சமுத்திரங்களும், பசுமைதங்கிய விருக்ஷங்களும், பசுபக்ஷி களும், கங்கைமுதலிய சிறந்த நதிகளும், மலர்பீடத்தையுடைய பிரமன் உலகத் திற்படைத்த சராசரங்களும் சிவபெருமான் பூசையாற்பெற்றபேறுகளை எம்மால் எடுத்துச்சொல்லுதல் கூடுமோ? எ - று. (௭௨)

இந்திரன் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம், ௨௭-க்குத் திருவிருத்தம் ௩௨௧௬.



## இருபத்தெட்டாவது

# திரிபுரவிசயச்சருக்கம்.

—[*]—

### கலிநிலைத்துறை.

பரவ சத்தரா யீங்கிவர் தனித்தனிப் பயிலா
வரன டித்துணை யருச்சனை புரிந்தன வறைந்தேம்
விரத மாதவத் தலைவர்காள் வேறுறா திருந்து
சிவா ருச்சனை குழுவொடும் பணிந்தன விசைப்பாம்.

(இ - ள்.) விரதத்தோடு கூடிய பெருந்தவத்தலைவர்களே! இவ்வுலகத்தில் இவர்கள் பரவசமெய்தியவர்களாய்த் தனித்தனி சிவபெருமானுடைய உபயபாதங்களை யர்ச்சனைசெய்த வரலாற்றை இதுகாறுஞ்சொன்னோம். வேறுபடாதிருந்து சிவார்ச்சனையைத் தமது கூட்டத்தோடும் செய்து வணங்கிய சரிதையை இனிச் சொல்லுவோம் என்று (சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச்) சொல்லுவாராயினர். எ - று. (க)

தாருகாசுர னெனுமொரு தழற்கண்வா ளசுரன்
போருவந் தெழு மைந்தரோர் மூவரைப் புரிந்தான்
பேருரைக்குது மவித்துன்மா லிப்பெரும் பெயரோன்
காருளத்தினன் றாருகாக் கனகம லாக்கன்.

(இ - ள்.) தாருகாசுரனென்னும் பெயருடைய தீக்கண்பொருந்திய வாளேந்திய ஓரசுரன், யுத்தத்திற்குச் சந்தோஷித் தெழுகின்ற ஒப்பற்ற மூன்று புதல்வரைப் பெற்றனன். அவர்கள் பெயரைச் சொல்லுவோம். வித்யுன்மாலியென்னும் பெரும்பெயருடையவனும் வஞ்சகந்தங்கிய மனமுடைய தாருகாக்கனும் கமலாக்கனும். எ - று. (உ)

என்னு மப்பெய ரசுரரோர் மூவரு மெழுந்து
மன்னு பொற்கம லாலயத் தவனடி வணங்கிப்
பன்னு மாதவம் வரன்முறை பயின்றனர் பன்னா
ளன்ன வர்க்குமற் றுச்சிநின் றருந்தழ லெழுந்த.

(இ - ள்.) என்னும் அப்பெயர்களை வகித்த சமானமற்ற மூன்று அசுரர்களும் மனந்துணிந்து, பொற்றாமரைக் கோயிலில் வீற்றிருக்கும் பிரமனுடைய பாதங்களைப்பணிந்து, உயர்த்திப் பேசுகின்ற பெருந்தவத்தை வெகுகாலம் முறைப்படி செய்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு உச்சியிலிருந்து கனிந்து அரிய தபாக்கினி யெழும்பியது. எ - று. (௩)

எழுந்த மூலவா தாரநின் றெழுப்பிய கொடுந்தீக்
கொழுந்து வையக மனைத்தையும் பொடித்தது குணியாத்
தொழுந்த கைத்திறத் திந்திரன் சுரரொடுங் குழுமி
யொழுங்கு நான்மறைக் கிழவனை யடைந்திவை யுரைத்தான்.

(இ - ள்.) எழும்பிய மூலாதாரத்தினின்று இளப்பிய கொடிய அக்கினிக் கொழுந்தானது உலக முழுவதையும் பொடிபடுத்தியது கருதி, தொழத்தக்க தன்மையுடைய இந்திரன் ஏனைத்தேவர்களோடுஞ் சேர்ந்து வரிசையாக நான்கு வேதங்கட்குரிய பிரமன்பாலெய்தி இவற்றைச் சொன்னார்கள். எ - று.

தயங்கு வாளெயிற் றடுதிறற் றாருகா சுரனாற்
பயந்த மூவரு கிற்குநித் தருந்தவம் பயில்வா
ருயங்கு மன்னவ ருச்சிபோத தருந்தழ லுருத்துக்
கயங்கொளா வாரிதி யுலகெலா மெரிபடக் கனன்றே.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற வெள்ளிய பல்லையும், கொல்லத்தக்க வல்லபமுமுடைய தாருகாசுரனாற் பெறப்பட்ட புதல்வர் மூவரும், உடமைக்கருதி அருந்தவஞ் செய்பவராய் முயற்சிக்கும் அவர்களுடைய உச்சியைப் பிளந்துகொண்டெழுந்த அரிய அக்கினியானது, அழகுகொண்ட சமுத்திரஞ்சூழ்ந்த உலகமுழுவதும் எரியும்படிகொளுத்தி (வருத்தியது) எ - று. (௫)

ஆருயிர்த்தொகை யாவையு மருந்துய ருழந்த
மேரு மால்வரைப் புறமெலாங் கொழும்புகை மேய்ந்த
வோரி னன்னவர் கிரங்கிநீ யுவந்திலை யென்றா
றாரு முமபரு மத்தழ லழிப்பது சரதம்.

(இ - ள்.) அதனால் அரிய உயிர்த்தொகுதிகளெல்லாம் (சகிக்கமுடியாத) அருந்துயரெய்தின. மேருவாகிய பெரியமலையின் பக்கலிலெல்லாம் கொழுவிய புகையானது சஞ்சரித்தது. இதனையுணர்ந்து அவர்கள் தவத்திற்கிரங்கி நீர் கருணைசெய்யாவிட்டால், கற்பகத்தருவின் நிழலில் வசிக்குந் தேவர்களையும் அவ்வக்கினியழிப்பது சத்தியமாகும். எ - று. (௬)

என்றி ரந்தவ னேத்தலு நான்முகத் திறைவ
னன்றெ ழுந்தன னிந்திர னொடுமவ ணடைந்தான்
சென்று மாதவப் பரிசெலா நோக்கினன் றிகைத்தான்
மன்ற லங்கம லாலயத் தவனுள மகிழ்ந்தான்.

(இ - ள்) என்று இந்திரன்கூறி யாசித்துத் துதிக்கவும், நான்குமுகங்களையுடைய பிரமன், அப்பொழுது இந்திரனோடு புறப்பட்டு அத்தவம்புரியு மிடத்திற்குச்சென்றனன். அப்படிச்சென்று அவர்கள் செய்யும் பெருந்தவத் தன்மைமுழுவதையும் நோக்கித் திகைத்து மணம்வீசும் அழகிய தாமரைமலரிலுள்ள பிரமன் மனமகிழ்ந்தனன். எ - று. (௭)

எதிர நின்றிடு நான்மறைக் கிழவனை யெதிர்ந்து
முதிரு மன்பொடு மூங்கவர் முறைமுறை பணிந்தார்
பொதிரு முங்கம லாலயந் துறந்தெமர் பொருட்டா
லதிரு மாகலி நெடுநிலத் தடைந்தனை யைய.

(இ - ள்.) அவர்கள் மூவரும், பிரத்தியக்ஷமாக நிற்கின்ற நான்குவேதங்களையுங்கூறிய பிரமதேவனை நோக்கி அதிகரித்த பேரன்போடு முறைமுறையாக வணங்கி, இதழ்கள் பொதிந்த மணமுடைய தாமரைக்கோயிலைத் தணந்து எங்களுக்காக, ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த நெடிய உலகத்தில் வந்தனிர். ஐயனே! எ-று.

சான்றெ னப்படுஞ் சராசர மனைத்தையு நாவ
யீன்று நின்றனை யெங்களை யன்றிமற் றன்றே!
தோன்றி யெம்முடைப் புன்செயல் குறித்தனை தொன்மையோ
யென்றெமக்குள கட்புலத் தெளிதென நின்றாய்.

(இ - ள்.) பழமையானவரே! அடியேங்களையே யல்லாமல், சாட்சிபூதமாய் (இயங்கியற்பொருள் நிலையியற் பொருள் ஆகிய) சராசரங்களையும் மாத்திரு ஷ்டானமாய்ச் சிருஷ்டித்து விளங்கினீர். வேறில்லை. எளியேங்களுடைய சிறு செயல்களைக் கருதிப் பிரத்தியக்ஷமாயினீர். எங்கள் கண்ணுக்கு எளிதாக விளங் கும்படி எழுந்தருளினீர். எ - று. (௯)

வேத வேதிய ரியற்றுவர் நின்னுழை விரும்பி
நாத விந்துவு நின்னுழைப் பிறந்தன நம்ப
போதி னான்முகப் புராதன வாகமப் பொருளே
யாதி நாயக நின்னையா ரளவையிட் டுரைப்பார்.

(இ - ள்.) வேதங்களை யுணர்ந்த அந்தணர்களே தேவரீர் பால் விருப்பெய் தித் தவஞ்செய்யவல்லவர் நாதவிந்துக்களும் தேவரீரிடத்திற் சனித்தன. நம் பனே! தாமரைப்பூவில் வசிக்கும் நான்கு முகங்களையுடைய பழமையானவரே, ஆகமங்களாற் றுதிக்கப்படும் பொருளே! ஆதிநாயகரே! தேவரீர்புகழை எவர் தாம் அளவுபடுத்திச் சொல்லவல்லவர்? (ஒருவருமிலர்) எ - று. (௧0)

எனப்பு கழ்ந்தெடுத் தேத்தின ராங்கவ ரிரந்தா
ரனத்தி னூர்தியான் றிருவுள நெகிழ்ந்தன னாகி
நினைத்த காரிய மேதுகொ ணிகழ்த்துதி ரென்றான்
மனத்தி னோர்ந்துரை பரிசெலாம வரன்முறை வலிப்பார்.

(இ - ள்.) என்று அவர்களெடுத்துப் புகழ்ந்து துதித்து யாசித்தார்கள். அன்னவாகனமுடைய பிரமன திருவுளம் உருகியவனாகி நீங்கள் எண்ணிய காரி யம் யாது? கூறுங்களென்றான். அதற்கு அவர்கள் தங்கள் மனதிலாலோசித்துச் சொல்லவேண்டியவற்றையெல்லாம் வரன்முறையாகச் சொல்வாராயினர். எ-று.

கறங்கு வார்திரை நெடுநிலப் பரவையுட் கருப்புக்
கிறங்கி யாருயி ரீழந்துற லெமக்கரி தைய
வரங்கொ ணாயக விறப்புறு வகையெமக் கருளித்
திறங்கொள யாவையுந் தருதியென் றிசைத்தனர் தீயோர்.

(இ - ள்.) ஒலிக்கின்ற நெடிய அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த பெரிய பூலோகப் பரப்பிலே, கருப்பகுழியை யெய்தி உலகிறங்குவாரது அரிய உயிரிறந்து படுதல் எங்கட்குச் சகிக்க அரியது. ஐயனே! தருமவடிவங்கொண்ட தலைவரே! மரணமெய்தாத வகையை அடியேங்கட்கு அநுக்கிரகித்து, வலிமைதங்கியவற்றை யெல்லாம் தந்தருள்கவென்று அக்கொடியோர் சொன்னார்கள். எ - று. (௧௨)

அனைய வாசகங் கேட்டலு மம்புயத் தவனும்
வினைய மாதவ ரூவரை நோக்குபு விரிப்பான்

கனைக ருங்கட லுடுலகங் காண்பன வெல்லா
நினையு முன்னரி றப்பன நிச்சய மன்றோ.

(இ - ள்.) அவர்கள்கூறிய அத்தகையவார்த்தைகளைக் கேட்டவுடனே கமலாதனனாகிய பிரமனும், வினயத்துடன்கூடிய பெருந்தவம்புரிந்த அம்மூவரையும் நோக்கிக்கூறுகின்றான். ஒலிக்கின்ற கரியகடல் சூழ்ந்த நெடியவுலகிற் காணப்படுவனயாவும் எண்ணுவதற்கு முன்னரே இறக்குமென்பது நிச்சயம். ஆனபடியால். எ - று. (௬)

யானு மிந்திரன் முதலினோர் யாவரு மெனையீன்
றோனு மற்றுள பதவியி னுறைந்துளோ ரெவருந்
வானு மவ்வையமு மேருவு மற்றைய வரையு
மேனை யாவையு மிறப்பது சரதமற் றில்லை.

(இ - ள்.) நானும், இந்திரன்முதலாயினோர் யாவரும், என்னையீன்ற தந்தையாகிய திருமாலும், வேறாகவுள்ள பதவிகளில் வசித்துள்ளவர்கள் யாவரும், தேவலோகமும் பூலோகமும் மேருமலையும் மற்றையமலைகளும், பிறபொருள்கள் எவையும் அழிவது சத்தியமன்றிப் பிறிதில்லை. எ - று. (௭)

கால மீறுபட் டிறப்பினும் பிறப்பினுங் கணக்கின்
மூல மாய்முதன் முததியாய் முதறியின் விததாய்
ஞால மேமுத லாகிய பூதமாய் நவைதீா
கோல மீறிலாற் கல்லது கூடுமோ குணிப்பின்,

(இ - ள்) காலம்முடிவெய்தி யிறந்தாலும் பிறந்தாலும், கணக்கின் மூலமாய் முதன்மையாகிய முதறியின்பமாய், முதறியெய்துதற்கு வித்தாய், பிருதிவிமுதலாகிய ஐம்பெரும் பூதங்களாய், குற்றமில்லாத தன்மை அழிவில்லாத சிவபெருமானுக்கல்லது ஆலோசிக்குமிடத்தில் பிறர்க்குக் கைகூடுமோ? எ - று. (௮)

இறப்பு றுவழி யார்தரற் கியைகுவ ரெண்ணிற்
சிறக்க வேண்டுவ யாவையுந் தருகுதுஞ் செம்பொற்
றுறக்கம் வேண்டினு மீகுதுஞ் சொல்லுதி ரென்றான்
மறக்கண் வஞ்சக ராங்கவ ணினையன வகுப்பார்.

(இ - ள்.) ஆலோசிக்குமிடத்தில், மரணமெய்தாத வகையைக் கொடுப்பதற்கு யாவர் சம்மதிப்பார்கள்? சிறப்பெய்துதற்கு வேண்டுவனவற்றையெல்லாம் கொடுப்போம், செம்பொன்னாலாகிய துறக்கலோகம் வேண்டுமானாலுந் தருவோம் சொல்லுங்களென்றான். கோபக்கண்ணையுடைய வஞ்சகர்கள் அச்சமயத்தில் இவ்வகையாகச் சொல்லுகின்றனர். எ - று. (௯)

இரும்பி னுலியைந் தெழுதரு மிஞ்சியொன் றியாரும்
விரும்பு வெள்ளியி னெழுதரு வேலியொன் றன்றி
யரும்ப சும்பொனு லெழுதரு மரணமொன் றவைக்குட்
டிருந்து செல்வமாய்ப் பெருமபதி யீங்கிவை செய்யின்.

(இ - ள்.) இரும்பினுலமைந்தெழுந்த மதிலொன்று, யாவரும் இச்சிக்கின்ற வெள்ளியாலாகி யெழுந்த மதிலொன்று, இவையல்லாமல், அரிய புகழ்பொன்னு லாகியமதிலொன்று, அம்மூன் மதில்களுக்குள்ளே, திருந்திய செல்வத்தையுடைய பெரிய மேன்மைதங்கிய நகரம், இவற்றைச் சொல்லுமிடத்தில், எ - று. (௧௭)

மண்ணிற் றேய்வது முந்திய புரிசைவா னியங்கி
விண்ணிற் றேய்வது வெள்ளியங் கொடிமதி லுறக்க
நண்ணித் தோய்வது பொன்னெயி லிங்கிவை நாடி
யெண்ணிச சென்றுழி யெம்மொடு மியங்குதல் வேண்டும்.

(இ - ள்.) அவற்றுள், முற்பட்ட இரும்பு மதில் மண்ணுலகிலுள்ளது. கொடிகள் கட்டிய அழகிய வெளளிமதில் ஆகாயததில் விளங்கி விண்ணிற்படிந் திருப்பது. பொன்மதில் தேவலோகத்திற் பொருநதி விளஙகுவது. இம்மதில் களை, நினைத்துச் செல்லுமிடஙகளில் எம்மோடும நாடிச்சஞ்சரித்தல் வேண்டும்.

நிதிபபெ ருங்குவை வேண்டுது நெடுமதி ளிஞ்சிப்
பதிகக ணல்வளப் பயன்பட நினைநதனம பலரா
லெதிரப்பி னன்னவை யிறப்புறக் கருதின மெவையும்
விதித்த நாயக வேண்டிய குறைவற விழைநதேம்.

(இ - ள்.) பெருஞ்செல்வக்குவியலை விரும்பினேம். நெடிய மதில்கள் சூழ்ந்த நகரத்தின்கண், நல்லவளப்பஙகளெல்லாம் கைகூட எணணினேம். பலரோடு எதிரததால் அப்படி யெதிராததவாகள மரணமடையக கருதினேம். எல்லாவற் றையும சிருஷ்டிதத தலைவனே! வேண்டிய பொருள்களைக குறைவின்றியடைய ஆசையுற்றேம். எ - று. (௧௯)

வருட மாயிரங் கழிநதபின் மணிமதிட் புரிசை
யொருவி யோரிடத திருபபன முகூாததமொன் றுவந்தேஞ்
செருவி னெங்களைச செகுபபது மொருததனே ரம்பாற்
றருவ ரங்களி தென்றடி முடிதொடத தாழநதாா.

(இ - ள்) ஆயிரம் வருடஙகள் கழிநதபிறகு, அழகியமதில்கள் நகரத்தோடு இருக்குமிடநீஙகி ஒருமுகூாததகாலம, விருமபிய வேறிடததில இருப்பன விருமபினேம. எங்களைப்போரில ஒருவன ஓரமபினுற்கொலலுதலும் ஆகியவிவை கொடுககவேணடிய வரஙகள எனறுகூறி, பிரமன் அடியில் தஙகள் முடிபடியும் படி பணிநதார்கள் எ - று. (௨௦)

கேட்ட நல்வரம் யாவையுங் கிளைபட வழங்கி
யேட்டி ருங்கம லாலயத் தெமபிரா னெழுநது
சூட்ட வோதிம முகைதத னன றுலலை கடைந்தா
ஞேடு சிநதையி னருநதவ மொழித்தன ருவர்கள்.

(இ - ள்.) அவாகள் கேட்ட நல்லவரஙகளையெல்லாம், இதழ்கள் பொருந் திய பெரிய தாமரைசகோயிலி லெழுந்தருளிய எமது பிரமதேவன், களிப்பக கொடுததெழுநது, உச்சிககொண்டையையுடைய அனனவாகனத்தை யாரோகணி த்துப் பழமையாகிய தனது உலகத்தை யடைநதனன். அம்மூவர் மனதோடு செய்துவநத அருந்தவங்களை நிறுத்தினார்கள். எ - று. (௨௧)

இவரி ழைத்தருந் தவங்கொடு பெற்றன யாவும்
அவர்ப டச்சொலக் கேட்டனர் கற்பக நாட்டோ
ரிவர்கொ ளெம்படைக் குடைந்துபா தலத்திழிந் திருக்கு
மவர்த டம்புய நிவந்தனர் முறுக்கெயிற் றசுரர்.

(இ - ள்.) இவர்கள்செய்த பெருந்தவத்தாலடைந்த வரங்களையெல்லாம் இரட்டிப்பாகச் சொல்லக்கேட்டு, கற்பக நாட்டினராகிய தேவர்களுடைய செலுத்தத்தக்க கொடிய ஆயுதங்களுக்குத் தோற்றுப்பாதலத்திலே மறைந்து கொண்டிருக்கும் முறுக்கிய பற்களையுடைய அசுரர்கள், பிரகாசிக்கின்ற விசாலமான தோள்கள் பூரித்தார்கள் எ - று. (௨௨)

கோடி வெள்ளமோ ரறுபதி னாயிரங் குணிப்பி
லீடு சேனைய ரெழுந்தனர் மிடைந்தற நெருங்கி
யாடும் வெண்டிரை யகனிலப் பரவையி னடைந்தார்
மாடு சென்றிவர் மூவரைத் தொழுதனர் மகிழ்ந்தார்.

(இ - ள்.) கணக்கிட்டால் கோடியே அறுபதினாயிர வெள்ளமாகிய பெரிய சேனைகள் மிகவும் நெருங்கி அசைகின்ற வெள்ளிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த விசாலமான பூலோகப் பரப்பிலடைந்தார்கள். இவர்கள் மூவரை அருகே சென்று வணங்கிக்களித்தார்கள். எ - று. (௨௩)

சேனை காவலர் யாவருஞ் சென்றுறத் தழுவி
மோனை கொண்டெழு முகமனின் னுரைத்தனர் முதியோ
ரேனை யோர்க்கய லிருந்தன ரிசைப்பன விசைத்தார்
தானை யீங்கிவை நுமக்குள வெறுழ்வலித் தகைய.

(இ - ள்.) சேனைத்தலைவர்களெல்லாரும் அப்படிச்சென்று அவர்களை உடலோடு பொருந்தத்தழுவிக்கொண்டு, பழமைபாராட்டி உபசாரவார்த்தைகளை நேரே நின்றுசொன்னார்கள் விருத்தர்கள் அவர்களுக்கருகே பொருந்தியிருந்தார்கள். சொல்லத்தக்கவற்றைச் சொன்னார்கள். இங்கேவந்த இச்சேனை உங்கட்குள்ள பெருவலிக்குத் தகுதியுடையன. எ - று. (௨௪)

என்ற ளவளா யிருந்தனர் நட்டன ரிவர்கள்
மன்ற லோதியர் மூவரை வழங்குற மணந்தா
ரன்று வானவ ரமரொடு துடற்றுறச் சிதறிச்
சென்ற வாறெலாம் படிப்படி வகுத்தனர் தொகுத்து.

(இ - ள்.) என்று அளவளாவியிருந்து நட்புக்கொண்டார்கள். இவர்கள் மணந்தங்கிய கூந்தலையுடைய மங்கையர் மூவரைக்கொடுப்ப, மூவரும் விவாகஞ் செய்து கொண்டார்கள். ஆதிகாலத்தில் தேவர்கள் பகைமைகொண்டு போர் புரியச் சிதைந்து பாதலத்திற்குத் தாம்போன வரலாறு முழுவதையும் முறை முறையே சுருக்கிச் சொன்னார்கள். எ - று. (௨௫)

இளத்த வாறெலாங் கேட்டன ரவையுளங் கிடத்தி
வளைந்த சிந்தையின் மயன்றனை யருகென வந்தான்
விளர்த்த நண்பொடு மாங்கவற் கினியன விளம்பி
யுளத்து வப்பொடு மிருத்தியென் றுரைத்தலு மிருந்தான்

(இ - ள்.) சொல்லிய அவ்விருத்தாந்த முழுவதையுங் கேட்டுக்கொண்டு, அவற்றை மனத்திலிருத்தி விருத்திபெற்ற மனதில் மயனைவருகவெனச் சிந்தித்த வுடனே அவனும் வந்தான். கள்ளமில்லாத சிநேகத்துடன் அம்மயனுக்கு இனிய வார்த்தைகளைச்சொல்லி, மனக்களிப்போடும் இருக்கவென்று சொல்லவும், மய னிருந்தனன். எ - று. (உகூ)

வரவி ளித்தனி ரென்கொலென் றுரைத்தனன் மயனம்
மூரா லுடைத்தடம புயத்தரின் முனனவன் மொழிவான
பரவை யொத்தெழு தானையும யாங்களும பயிலவாக
விரவு மூவர்க்கு முப்புர மியற்றென விளம்பி.

(இ - ள்.) எனனைவருப்படி யழைத்தீர்கள். யாதுகாரணமென்று மயன் கேட்டனன. அந்த வலிமைதங்கிய விசாலமான தோள்களையுடையவர்களில் மூத்தோன சொல்லுகினறான. சமுத்திரம்போலத் தோனறிய சேனையும நாங்க ளும் வசிக்கும்படி ஆகாயமளாவிய முப்புரங்களை நிருமிப்பாயாகவென்றுகூறி.

ஆரி ருமபினு லகனிலப புரிசையு மதன்மேன
மூரி வானிடை வெள்ளியம புரிசையு முறறிப
பாரி சாதநாட டமபொனு லிஞ்சியும படுத்திச
சீரி யற்றினன் றிவற்றுறைத் திருநகா திருத்தி

(இ - ள்.) பொருந்திய இருமபினாலே அகனறபூமியில மதிலும், அதற்கு மேலே பழமையாகிய ஆகாயத்தில அழகியவெள்ளிமதிலும முடித்து, பாரிசாத ததையுடைய சுவாககத்தில அழகிய பொனனாலாகிய மதிலும உணடுசெய்து சிறப்புச்செய்திருந்து இம்மதில்களிடையே சிறந்த நகரத்தைச சிருஷடிசெய்து முடித்து. எ - று. (உஅ)

முற்ற முறறிய பின்னாின் வருகென மொழிநதா
னிறற தோவென மயனதற கெழுநதன னியைநதான
கறறை வெணடுளித திரைபொரு கருங்கட னிலத்தி
னுறற வெளளிடை நோக்கினன் றுளாத்துளார நதனனால்.

(இ - ள.) முழுவதுஞசெய்து முடித்தபிறகு இங்கேவருவாயாகவென்று கூறினன. மயனும இத்தனமையதோவென்று அதற்கிணங்கி யெழுந்தான, தொகுதியாகிய வெளளிய துளிகளா லாககபபடட அலைகள மோதுகினற கரியகடல சூழ்ந்த பூமியில பொருந்திய வெளியிடத்தைப்பார்த்து அங்கிருந்து மனதிற்கருதினன. எ - று. (உகூ)

அகனி லபபரப பளநதுளத் தளவையிட் டனபோன்
றிகலி யொனறினு றெழுநதுரு தோாநிலைத தென்னப
புகலு நாறறிசை மறைததென விருபபெழும புரிசை
தகநி னைத்தன னெழுநதது வானகந தடவி.

(இ - ள்.) அகன்ற நிலப்பரப்பையளவிட்டு, மனதினால் கணக்கிட்டன போல, பகைமைகொணடு ஒனறறகொன்று அதிகரித்துப் பொருந்தாமல ஒரே நிலையையுடையதெனச் சொல்லவும, புகழ்ந்துபேசும நாற்றிககுகளையும மறைத தாற்போலவும், இருப்பா லெழுந்த மதிலானது பொருநத நினைத்தான். ஆகாய மளாவி யங்ஙனம் உடனே உண்டாயது. எ - று. (கூ0)

கொம்மை யாயிர மாயிரங் காவதங் குணித்தான்
வெம்மை நாஞ்சிலிட் டிழைத்தன னெந்திரம் விதித்தான்
பொய்ம்மை கீழ்ப்பட மேற்படு வாயிலும் புனைந்தான்
மைம்மழு கிற்படு கோபுர மிடையிடை வகுத்தான்.

(இ - ள்.) ஆயிரக்கணக்கான காததூரம் பெருகச்செய்து, கொம்மையாகிய வலிய மதிலுறுப்புகளைப் பொருந்தச்செய்தான். சூத்திரங்களை நிருமித்தான். பொய்ம்மையானது கீழ்ப்படும்படி மேற்பட்ட வாயில்களையும் உண்டுசெய்தான். கரியமேகங்கள் தவழும்படியான நிலைக்கோபுரங்களை இடையிடையே ஏற்படுத்தினான். எ - று. (௬௧)

இனைய நோக்கியுண் மாநகர் வீதிகண் டெடுத்தா
னனைய வீதியி னவணவண மாளிகை யமைத்தான்
புனைசெய் பொன்னினு மணியினு மல்லது புனையான்
வினையி னுண்ணிய யாவையுந் திருத்தற விதித்தான்.

(இ - ள்.) இத்தகையினவற்றை மனதிற்கண்டு பெரியநகரத்தின் வீதியைப் படைத்தான். அத்தன்மைத்தான தெருக்களினிடையே அங்கங்கே மாளிகைகளைச் சிருஷ்டித்தான். அலங்கரிக்கின்ற பொன்னாலும் இரத்தினங்களாலு மன்றிப் பிறிதொன்றால் அழகுசெய்யமாட்டான். சிறப்புத்தொழிலில் நுட்பமாகிய எல்லாவற்றையும் குற்றமற நிருமித்தான். எ - று. (௬௨)

வச்சி ரக்கொழும் பலகையிட் டிழைத்தன வயங்கும்
பச்சொ ளிப்பெரு மரகதத் தியற்றின பகலோ
னச்சு செம்மணித் தூணக நிறுத்தின நயந்த
விச்சை யாற்புனை மாடமெண் ணலவென விதித்தான்.

(இ - ள்) கொழுவிய வைரப்பலகைகள் பதித்திழைத்தனவும், விளங்குகின்ற பசுமைதங்கிய காந்தியோடுகூடிய சிறந்த மரகதரத்தினத்தாற் செய்தனவும், சூரியனும் விரும்பத்தக்க செம்மைதங்கிய மாணிக்கத்தூண்களை உள்ளே நிறுத்தியனவுமாக, இச்சிக்கத்தக்க அறிவோடு அழகமைந்த மாளிகைகள் கணக்கில்லாதனவென்ச் சொல்லும்படி சிருட்டித்தான். எ - று. (௬௩)

முத்த மேய்ந்தன முழுநில வெறித்தன வயிரப்
பத்தி வேய்ந்தன பவளவிட் டத்தன பகையா
தத்த லங்கொளி தருவயி டூரியஞ் சாந்த
வொத்தெ ழுந்தசெய் குன்றமெண் ணிறந்தன வுவந்தான்.

(இ - ள்) முத்துக்களால் மூடப்பட்டனவும், பூர்ணிமாசந்திரிகையை வீசுவனவும், வைரவரிசைகள் அமைந்தனவும், பவளத்தினாலாகிய உத்தரமுடையனவும், அசைகின்ற காந்தியை வெளிவிடும் வைடூரியத்தினாலமைந்தவுமாக ஒருசேர விளங்குஞ் செய்குன்றுகள் எண்ணிறந்தனவற்றை விரும்பிச்செய்தான்.

படிக மீர்ந்தெடுத் திடையிடை வேதிகை படுத்திக்
கொடுவ டிம்பெலாந் தெளித்தகோ மேதகங் குயிற்றிப்
பொடிவி ளக்கின புட்பரா கக்குவை பொருத்தி
நெடிய மாளிகைச் சாளர வாயிலு நிரைத்தான்,

(இ - ள்.) படிகத்தைப் பிளந்தெடுத்து இடையிடையே நின்றனகள் அமைத்து, விளங்கு நீலங்களெல்லாம் தெளிவான கோமேதகக் கல்லிழைத்து சிறு விளக்குகளாகப் புஷ்பராகத்தின் கல்களையமைத்து, பெரிய மாளிகைகளின் சாளர வாயில்களையும் விளக்கமமைத்தான். எ - று. [சாளரம்-சன்னல்.]

வெள்ளி வெண்டகட் டொண்ணிறக் கருமணி வேய்ந்து
நள்ள லங்கொளிச் செம்மணி நாயக மிருத்தி
யுள்ள மைத்திடி மதலேமீப் பொலிந்தன வொருங்கே
யெள்ளி லாடரங் கமைத்தன னளவையெண் ணிறந்த.

(இ - ள்.) வெண்மையாகிய வெள்ளித்தகட்டிலே, ஒளிதங்கிய நிறத்தை யுடைய நீலரத்தினங்களிழைத்து, பகலிற் பிரகாசிக்கின்ற காந்தியையுடைய செந்நாணிக்கங்களை நடுநாயகமாகவமைத்து, உள்ளேயமைக்கப்பட்ட தூண் களின் மீது ஒருசேர விளங்கியனவாகிய இழிவில்லாத நடனசாலைகள் கணக் கிறந்தனவாக வமைத்தான். எ - று. (ருசு)

நகர நள்ளிடை நாயகக் கோயிலொன் றெழுப்பிப்
புகல ரும்பசும பொன்னினு மணியினும் புனைந்தான்
பகல வன்கதி ரிருள்படப பசுங்கதிர் பரப்பி
யகனி லாமணி முற்றமு மாங்கதி னமைத்தான்.

(இ - ள்.) நகரத்தின் நடுமத்தியில் இராசகிருகமொன் றுண்டாக்கி, சொல் லுதற்கரிய பசிய பொன்னாலும் இரத்தினங்களாலும் சித்திரித்தான். சூரியகிர ணங்களும் இருள்படும்படி பசிய கிரணங்களைச் பரவச்செய்து, அகன்ற அழகிய முற்றமும் அம்மாளிகையிற் பொருந்த அமைத்தான் எ - று. (ருஎ)

எழுது சித்திர முயிரபபெழுந் தியஙகுதல் போல
வொழுகு பேரொளி பதைபபுறச சுவாததலத் துவந்தான்
மெழுகு வெண்டளிச சநதிர காநததகின மேய்நது
பழுதின் மநதிர விருக்கையும் பசுமபொனற படுததான்.

(இ - ள்.) எழுதிய சித்திரப்பதுமையானது சுவாசம் விட்டுச் சஞ்சரிப்பது போல, சொரிகின்ற பேரொளிப் பிழம்பானது ஆங்காங்கு ஜ்வலிக்கும்படி சுவாத் தலங்களில அமைத்து, அதில மெழுகிய வெள்ளிய திவலைகள் சிந்தும் சந்திர காந்தக் கற்களால் மேலேமேய்ந்து, குற்றமில்லாத ஆலோசனைச்சபையையும் பசுமபொன்றாற் செய்தனன். எ - று. (ருஅ)

இலங்கு மாமணி யொன்பதிற் றிருந்திகின் றிமைப்பக்
குலங்கொள் பொற்றசும் பெடுததொரு கோமுடி கவிழ்ததி
வலங்கொள் கொய்யுளை வாளரி யாசனம படுததா
னலங்கு பேரொளித் தனிக்கொலு மண்டப மமைத்தான்.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற சிறநத நவரத்தினங்களால் திருத்தமெய்தி விள ஙகும்படி, கூட்டமாகிய பொற்குடங்களைத் தாபித்து ஒரு சிறந்தமுடியை மேலே கவிழ்த்து, வெற்றிபொருந்திய கத்தரிக்கின்ற புறமயிரையுடைய சிங்காசன மிய ற்றித்து, பெருங்காந்தி விளங்கத்தக்க ஒப்பற்ற கொலுமண்டபத்தைப் படைத் தான். எ - று. (ருகூ)

நீல மாமணிக் கங்குலோ நிரைதிரை யுததிப்
பால முத்தின்வெண் ணிலாக்கொலோ பருமணி யிமைப்போர்
மேலி வர்க்கெழு வெயிற்கொலோ யிக்கதென் றுரைப்பா
னாலி லைத்துயி லரிக்குமற் றயனுக்கு மரிதால்.

(இ - ள்.) பெரிய நீலரத்தினமோ இருளோ, வரிசையாகிய அலைகளையுடைய கடலிற்றோன்றிய பால்நிறத்தையுடைய முத்தோ, வெள்ளியநிலவோ, பருத்த மாணிக்கத்தின் காந்தியோ, மேலோங்கியெழுந்தவெயிலோ, இவற்றிற் சிறந்தது யாதென்று சொல்லுதற்கு வடபத்திரசாயியாகிய திருமாலுக்கும், பிரமனுக்கும் அரிதாம். எ - று. (௪௦)

எறித்த பேரொளி திசையெழு தெழுதலா லிரவி
வெறித்த செங்கதி மழுக்கிநின் றிமைப்பது விண்ணோர்
மறித்து நோக்கினுங் கட்புலன் கதுவுறு மயனுங்
குறிப்பி னந்நகர் நோக்கிநின் றதிசயங் கொண்டான்.

(இ - ள்.) விடுத்தபேரொளியானது எல்லாத்திசைகளிலும் தோன்றுதலால் சூரியனவீசிய கிரணங்களை மழுங்கச்செய்து விளங்குவது. தேவலோகவாசிகளாகிய வானவர்மீண்டு திரும்பிப்பார்த்தாலும் கண்ணுக்கடங்காதது. மயனும் குறிப்பாக அந்நகரத்தைப்பார்த்து நின்று அதிசயமெய்தினன். எ - று. (௪௧)

பனித்த வார்புனற் படர்சடைப் பண்ணவற் கெனினுங்
கனித்த கருமுகில் வண்ணனுக் காயினுங் கமலத்
தனிப்பு ராதனற் காயினு மோரந்கர் சமைப்பி
னினித்தி ருத்துவ தந்நகர் நோக்கியென் றிசைத்தான்.

(இ - ள்.) குளிர்ச்சி பொருந்திய கங்காசலத்தையணிந்த நீண்டுபடர்ந்த சடையையுடைய சிவபெருமானுக்காயினும், கருநிறமுதிர்ந்த மேகவண்ணனாகிய திருமாலுக்காயினும், தாமரை மலர்ப்பீடத்தி லெழுந்தருளிய ஒப்பற்றபழமையனாகிய பிரமனுக்காயினும் ஒருநகரத்தைப் புதிதாகப்படைத்தால், இனி அந்நகரத்தைப்பார்த்தே யமைப்பதாமென்று கூறினன். எ - று. (௪௨)

சோலை யாவையுங் கற்பக மந்நகர் தொகுத்த
சாலை யாவையும் பசும்பொனாற் சாலைதோ றமைத்த
மாலை யாவையு மணவணி மயனுளத் தமைத்த
வேலை யாவையு மாரகொலோ கடைப்பட விரிப்பார்.

(இ - ள்.) அந்நகரத்திற் பொருந்திய சோலைகளெல்லாம் கற்பகவிருக்ஷங்கள். சாலைகள் முழுவதும் பசும்பொன்னாலாக்கப்பட்டன. அச்சாலைகளிலெல்லாம் பொருந்திய மாலைகள் யாவும் மணவலங்காரங்கள். மயனுடைய மனதிலமைத்த தொழின்முறைகளை யெல்லாம் எவர்தாம் முற்றுப்பெற விளக்கிச் சொல்லவல்லவர்? எ - று. (௪௩)

பொன்ன கர்ப்படும் வளத்தொடும் பழகிய புலவோர்க்
கிந்ந கர்ப்படு புதுவள மினிதென லாகி
யன்ன வர்க்கவை யரும்பொரு ளாகிய வதனாற்
றென்னி லஞ்சிறப் பெய்திய தந்நகர் தோன்ற.

(இ - ள்,) பொன்னகரத்திலுண்டாகிய வளப்பங்களோடு பழகிய தேவர்களுக்கு, இந்நகரத்திலுண்டாகிய புதியவளப்பங்கள் இனியவென்று சொல்வனவாகி, அத்தேவர்களுக்கு இவை பெறுதற்கரிய பொருள்களாகிய அக்காரணத்தினால், பழமையாகிய நிலவுலகமானது அந்நகரமுண்டானதாற் சிறப்புற்றது. எ-று.

இந்திரப்பெரும் பெரியனே னளகையூ ரிறைவ
னந்தரத்தினி னந்நகர் நோக்கின ரயனார்
சிந்தனைக்குமீ தரிதென வயர்ந்தனர் திகைத்தார்
வெந்த சிந்தைய ராயினர் மயனிடம் வெறுத்தார்.

(இ - ள்.) இந்திரனாகிய சிறந்தபெயரையுடையவனும், அளகாபுரிக்குத்தலைவனாகிய குபேரனும் ஆகாயத்திலிருந்து அந்நகரத்தினழகைப்பார்த்து, இதன் அமைதி பிரமதேவன் கருத்திற்கும் அரிதென்று மனஞ்சோர்ந்து திகைத்தார்கள். மனம்வெந்தவர்களாகி (அசுரதச்சனாகிய) மயனிடம் வெறுப்புற்றார்கள். எ-று.

சித்தர் கின்னரர் கருடர்கிம் புருடர்கந் தருவர்
வித்தி யாதரர் நாகர்போ கந்தவர் விருப்பான
மொய்த்து நோக்கினர் கதிரொளிப் படலமூ டியதால்
மெய்த்த வத்தவர் வேறுறக் காணகிலர் வியந்தார்.

(இ - ள்.) சித்தர்களும் கின்னரர்களும் கருடர்களும் கிம்புருஷர்களும் கந்தர்வர்களும் விச்சாதரர்களும் நாகர்களும் போகபூமியர்களும் (ஏனையோர்களும்) ஆசையோடு நெருங்கிப்பார்த்தார்கள். ஒளிமயமான கிரணப்பரப்பு மூடிக்கொண்டிருந்ததலால், உண்மைத்தவமுடையவர்கள் வேறே விளங்கக்காணாதவர்களாய் அதிசயித்தார்கள். எ - று. (சசு)

இனைய மாபுர விஞ்சியுற் றீங்கிவைக் கென்னப்
புனைய வேண்டுவ யாவையும் பொதுவறப் புனைந்தான்
வினையி னுண்ணிய கிடந்தன புலப்பட விரித்தா
னினைய நீத்தனன் மற்றைய வியற்றவா னிவாந்தான்

(இ - ள்.) இத்தகைய சிறந்த நகரத்தின் மதிலைப்பொருந்தி, இங்கேயிவற்றிற்கென்று அலங்கரிக்கவேண்டுவனவற்றை யெல்லாம் பொதுத்தன்மைநீங்க (சிறப்பாக) அலங்கரித்தான். சிறப்புத்தொழிலில் நுட்பமாக உள்ளனவற்றையெல்லாம் வெளிப்படையாக விளக்கினான். மற்றையவற்றையும் படைக்கக்கருதி அங்கிருந்தகன்று ஆகாயத்திற்குயர்ந்தான். எ - று. (சஎ)

இதற்கு மேலென வெள்ளிவெண் டேங்கெயி லியற்றி
யதற்கு ளிந்நகர்க் கிரட்டிய வணிநக ரமைத்தான்
முதற்செ யந்நகர் தீப்படு மென்பது முடித்தான
மிதக்கு மப்பெரும் புரிசையி னளவையார் விரிப்பார்.

(இ - ள.) இதற்குமேலாக வெண்மைதங்கிய வெள்ளியினாலாகிய அசைகின்ற மதிலைப்படைத்து அம்மதிலுள்ளாக, இந்நிலவுலக நகரத்திற்கு இரட்டிப்பாகிய அழகிய நகரத்தைச் சிருஷ்டித்தான். முதலிலேகண்ட அந்நகரமானது அக்கினிவேதை யுறுமென்பதைத் தீர்மானித்தான். மிதக்கின்ற அந்தப்பெரிய மதிலினளவை எவர்தாம் விரித்துக்கூற வல்லவர்? எ - று. (சஅ)

மேலி வார்ந்தெழு வெள்ளிவெண் புரிசைவிட் டெறித்துக்
காலும் வெள்ளொளி வானக முழுவதுங் கலந்த
வாலு மானினம் வளையினு முழையினு மமுதப்
பாலக விழ்ந்தெனை முழுமதி நிலவெனப் பாய்ந்த.

(இ - ள்.) மேனோக்கி யெழுந்த வெண்மை தங்கிய வெள்ளி மதிலானது ஒளிவிட்டுப் பிரகாசித்துச் சிந்தும் தாவளயமான காந்தியானது ஆகாயமுழுவதுங்கலந்து, ஒலிக்கின்ற பசுக்கூட்டங்கள் வளைகளிலேயும் பக்கங்களிலேயும் அமுதமாகிய பாலைச்சொரிந்தாற்போலவும் பூரணிமா சந்திரனுடைய நிலவைப்போலவும் பாய்ந்தன. எ - று. (௪௯)

புரைத வப்புரி புரிசையி னிலங்கொளி போந்து
பரவை மாநிலம் பரக்கலாற் பணிப்படா நிகர்த்த
திரைபொ ருப்பெரும் புறக்கடன் முதலிய தெண்ணீர்
நிரைது றைப்பெருங் கடலெனக் கிடந்தவந் நிலவால்.

(இ - ள்.) குற்றமொழியச் சிருட்டித்த அவ்வெள்ளிமதிலின் பிரகாசிக்கின்ற காந்தியானது புகுந்து கடல்சூழ்ந்த பெரிய நிலவுலகமுழுதும் பரவுதலால், பனிப்படலையை யொத்திருந்தன. அலைகளமோதுகின்ற பெரும்புறக்கடல் முதலாகிய தெளிந்த சலாசயவரிசைகள் நுரைகளையுடைய பெரியகடல்போல அந்நிலவொளியால் விளங்கின. எ - று. (௫0)

வாலொ ளிப்படு கொடிமதிட் படுவைவா னணடப்
பாலி வர்ந்தெழு பிறந்நிலை யளவைபிற் பரந்த
தாலு மந்தரத் தியங்கிய முனிவரர் தற்கு
மேலி வார்ந்தெழ லொழிந்திட வடைத்தது விணணம்.

(இ - ள்.) வெள்ளொளிபொருந்திய துவசங்கள் கட்டிய மதிலாகிய தெப்பமானது, ஆகாயத்திலுயர்ந்தெழுந்த அண்டச்சுவரினளவாகப் பரவியுயர்ந்ததாலும், ஆகாயவீதியிற் சஞ்சரிக்கும் முனிவர்கள் அதற்குமேலே கிளம்பியெழுந்து செல்வதுநீங்க ஆகாயத்தின் வழியையடைத்தது. எ - று. (௫௧)

இந்த மாநக ரியைநதெழு மிஞ்சிமற் றிதற்குச்
சிந்தை வேண்டுவ யாவையுங் குறைவறத் திருந்தி
முந்தை வானவ ரமர்ந்தல கிரணமென முயற்சி
தந்த சிந்தையிற் றபனிய விஞ்சியுஞ் சமைத்தான்.

(இ - ள்) இந்தச்சிறந்த நகரத்தைச் சேர்ந்தெழுந்த மதிலாகிய இதற்கு எண்ணத் தருவனவற்றை யெல்லாங் குறைவில்லாமல் திருத்தமாக முடித்தது, முற்பட்ட தேவர்கள் பொருந்திய தேவநகரங்களிரணமென்று சொல்லும்படி முயற்சியோடு கூடிய மனத்தாற் பொன்மதிலைப்புஞ் சிருஷ்டித்தான். எ - று. ()

இயங்கு றப்புறத் திஞ்சியி னிளவெயி லியங்கித்
தயங்கு கீழ்ப்படு வெள்ளியம் புரிசைமேற் றவழ்ந்த
கயங்க டெத்தரித் துடுத்தவன் கயிலைமேற் பகத்தின்
முயங்கு தாதினங் கவிழ்ந்தது நிகாப்பன மொழியின்.

(இ - ள்.) சஞ்சரிக்கின்ற அங்காரத்துமதிலின் இளவெயிலினையுடைய காந்தியானது தவழ்ந்து விளங்குகின்ற மேலேயுள்ள அழகிய வெள்ளிமதிலின்மேற் பொருந்த காட்சியானது சொல்லுமிடத்தில், கயாசுரனுகிய யானையுங் கோபித்துரித்து ஆடையாகவணிந்த சிவபெருமானது கைலாயகிரியைக் கற்பகத்தருவின் மகரந்தத் தொகுதிகள் மூடியதையொத்திருக்கும். எ - று. (௩௩)

பருப்ப தங்களு மாடகப் பொருப்பெனப் பட்ட
வுருக்கு செம்பொனைத் தலங்கின வுருடிரைப் பரவை
திருக்கு மொறறையந் திகிரியென் றெனவிருள் சித்துப்
பெருக்கு மினுசியந் தமனியப் பேரொளி பிறந்த.

(இ - ள்.) ஒற்றைச் சக்கரத்தேரையுடைய சூரியனைப்போல இருளையகற்றி ஒளிபெருக்கிய அழகிய பொன்மதிலின் பேரொளியானது பிறந்தமையின், எல்லாமலைகளும் மேருவாகிய பொன்மலையெனச் சொல்லப்பட்டன. உருள்கின்ற அலைகளையுடைய சமுத்திரமானது உருக்கிய செம்பொன்னைப்போன்று விளங்கின. எ - று. (௩௪)

உலகெ லாம்பசும் பொன்னிறத் தும்பரை நிகர்த்த
மலர்த ருந்தரு கற்பக வனமென வாய்ந்த
நிலவு வெண்கதி ரிளங்கதிர்ப் பரிதியை நிகர்த்தா
னலகி லந்தரம் பசும்பொனைத் தலங்கிய தன்றே.

(இ - ள்.) உலகினா யாவரும் பசிய பொன்னிறமவாய்ந்த தேவர்களையொத்தார்கள். மலர்களைத் தருகின்ற மரங்களெல்லாம் கற்பகச்சோலையென்று சொல்லப்பொருந்தின. நிலவைவீசுகின்ற வெள்ளிய கிரணங்களையுடைய சந்திரன் இளங்கிரணம்வாய்ந்த சூரியனைப்போலாயினன். குற்றமில்லாத ஆகாயமானது பசும்பொன்னையொத்து விளங்கியது. எ - று. (௩௫)

முன்ன மைத்திடு மாநக ரதனினு முயன்று
பின்ன மைத்திடு நகரணி பெறப்பெரி தமைத்தா
னிந்ந கர்க்கவை யிரண்டுமொப பெனவெடுத் திசைப்பின்
மின்னி ளங்கதிர்ப் பரிதியை நிகர்க்கும்வெண் மதியே.

(இ - ள்.) முதலிற் சிருஷ்டித்த பெரிய நகரத்தைக்காட்டிலும், பிரயத்தினஞ்செய்துபின்னர்ப்படைத்திட்ட நகரமானது பேரழகு பொருந்தச் சிறப்பாய்ச் சிருஷ்டித்தான். இம்மூன்றாவது நகரத்திற்கு அவ்விருபட்டணங்களும் சமானமென்றெடுத்துச்சொன்னால மின்னுகின்ற இளங்கிரணங்களையுடைய சூரியனை வெள்ளிய சந்திரன் ஒப்பாவான். எ - று. (௩௬)

கலிவிருத்தம்.

இனைய யாவு மெளிதி னியற்றினு
னினையு நெஞ்சி னெடிதுநெ கிழ்க்கொள்வான்
முனைமு கச்செரு வென்றடு மூவர்பாற்
கனைக ருங்கழ றகம்பிய வானவன்.

(இ - ள்.) சந்தோஷமெய்திய மனமுடையவர்களாய், எழுந்து விரைந்து சென்று புத்தனுடைய இருதாள்களின்மீது நமஸ்கரித்து யாசித்துப்பணியுந் தன்மையிலிருந்தார்கள். அவ்வசுரர்களுக்குப் புத்தன் கருணைபூத்து, அச்சந்தருகின்ற குற்றம்பொருந்திய மாயையால் ஒருமந்திரத்தை யுபதேசித்தான். எ - று. (௧௭0)

அத்தகைய மந்த்ரவிதி கொண்டதிச யித்தார்
சித்தநினை கின்றனசி றப்பினொடு பெற்றார்
மத்தமரு ளோடறம யங்கினர்மு யங்கிப்
புத்தசம யத்தொடுபொ ருத்தினர்க ருத்தை.

(இ - ள்.) அப்படிப்பட்ட மந்திரவிதியினால் அதிசயமெய்தினார்கள். மனதிற் கருதுகின்றனவற்றைச் சிறப்பாக அடைந்தார்கள். களிப்பும் மதமும் ஒன்றுற மயங்கினார்கள். பிரியத்தினைப்பட்டுத் தமது கருத்தைப் புத்தசமயத்துடன் பொருந்தச் செய்தார்கள். எ - று. (௧௭௧)

மூன்றெனவி யங்கியம ணிப்புரிசை மூதூ
ரென்றவரி யாவருமு ணர்ந்தனரெ ழுந்தார்
தோன்றினர்வ ணங்கினர்து தித்தனர்ம கிழ்ந்தார்
வான்றுணையெ னக்கருதி மந்திரவ ருள்பெற்றார்.

(இ - ள்.) மூன்றாகவிளங்கிய அழகிய மதில்சூழ்ந்த பழைய நகரத்திற் பொருந்தியவர்களெல்லாரும் இதனையறிந்து புறப்பட்டார்கள், அங்கேவந்தார்கள், புத்தனைப்பணிந்தார்கள். தோத்திரஞ்செய்தார்கள். மகிழ்ந்தார்கள். இவரே சிறந்த துணையாவாரென்று நினைத்து மந்திரசத்தியை யருளப்பெற்றுக்கொண்டார்கள். எ - று. (௧௭௨)

மூதுணரு நாரதமு னித்தலைவ னன்றோ
மாதர்நிலை பெற்றுவளர் கற்பழியு மண்ணம்
காதொடுந டந்தநலக ருங்கண்மயில் போல்வார்
போதமழி யத்தனிபு குந்திவைபு ரிந்தான்.

(இ - ள்.) முழுதுணர்ந்த முனித்தலைவனாகிய நாரதமுனிவன், அத்திரிபுரருடைய மாதர்களின் நிலைபெற்று வளர்கின்ற கற்புநிலைகெடும்படி, காதுவரையில் நீண்டு போர்செய்யும் கரியகண்ணையுடைய மயிலின் சாயல்பொருந்திய அம்மாதர்களுடைய அறிவுகெடும்படி தனியேசென்று இவற்றைச்செய்தனன்.

கற்புநிலை யென்பதெது காமனிக லப்பான்
மற்புயமெ லிந்துநல மவ்வினர்த மக்கே
யிற்படவ ருத்தியரு ளின்னலம ளித்த
லற்படுகு ழற்றெரிவை யர்க்கழகு தாமால்.

(இ - ள்.) கற்புநிலையென்பதியாது? மன்மதனுடைய போர்செய்யும் மலர்க்கணையினால் மற்போர்புரியும் தோள்கள் மெலிந்து சுகத்தைக் கிரகிக்கவிரும்பினவர்களுக்கே, வீட்டில் வருவித்து அன்போடு சுகந்தருதல். இருள்போற் கரியகூந்தலையுடைய மங்கையர்களுக்கு இதுவே அழகாகும். எ - று. (௧௭௪)

தன்னுயிரெ னற்குரிய கேள்வர்தழு வுந்தோ
றின்னலமளிப்பது மனக்கினிய ரெண்ணி
யன்னதுதொ ழுத்தகைய கற்பினிலை யல்லாற்
கன்னியர்த மக்கொருக வின்பெறுவ தெங்கே.

(இ - ள்.) மனத்திற்கினியராகிய தன்னுடைய வுயிரென்று சொல்லுதற்குரிய அன்பினர் விரும்பித்தழுவுந்தோறும் இனிய சுகத்தைக்கொடுப்பது வணங்கத்தக்க கற்பின்நிலைமை. அதுவேயல்லாமல் மாதர்களுக்கு வேறொரு அழகு உண்டாவது எங்கே? எ - று.

(௧௭௫)

ஆரெழில நங்கனைநி கற்பவரை யண்மி
வாரிளமு லைச்சுவடு மார்புறவ ழுத்திச்
சோபவர்வ யங்கழகு செல்வநிறை வாயுள்
பேரெழின்ம கப்பெறுதல் பெற்றினிது வாழ்வார்.

(இ - ள்.) அழகுபொருந்திய [அநங்கன் = உருவிலி] மன்மதனை யொத்த ஆடவரை நெருங்கி, கச்சணிந்த முதிராதமுலையின் சுவடு அவர்கள் மார்பிற்பொருந்த அழுத்திப்புணரும் மங்கையர்கள், பிரகாசிக்கின்ற அழகு செல்வம் மிக்க ஆயுள் பேரழகுடைய புதல்வரைப்பெறுதல் முதலியபேறுகளையெய்தி இனிதாக வாழ்வார்கள். எ - று.

(௧௭௬)

செந்துவரி தழ்ப்பருகு தெள்ளமுதம் வ[illegible]
சிந்தனைம ருண்டவர்தெ ருட்சிமன [illegible]
யிந்தளிரவ ளைக்கையின ணைந்துமரு [illegible]
றந்தமுயிர் தம்முடல்வெ றுப்பதிடை [illegible]ரார்.

(இ - ள்.) செம்பவளம்போன்ற அதராமிர்தத்தைப் பானஞ்செய்துதெளிந்த அமுதத்தைக்கொண்டு மனமயங்கி யவருடைய தெருட்சியை மனதிற்கருதி, அழகிய மாந்தளிர்போன்ற வளையலணிந்த கையினாலணைத்து அத்தகையினரைப் புணராராகில், தங்களுயிர் தங்களுடலை வெறுப்பதைச் சிறிதும் தாமதியார்.

செக்கரெழு வெண்பிறைசெ ழுந்தழல்வி ரிப்பப்
புக்கிளைய வாடையுயிர் தேடியிடை போத
நெக்குருகு நெஞ்சொடுவ ருந்துநெறி தேரா
மைக்குழல வாக்குநிரை யக்குழிவ ழாதால்.

(இ - ள்.) செவ்வானத்திலெழுந்த வெண்மைதங்கிய சந்திரன் செழிய அக்கினியைவீச, இளமைதங்கிய வாடைக்காற்றானது புகுந்து உயிரை(ப்பருக)த் தேடி இடையேவர, நெக்குவிட்டுருகும் மனத்துடன் வருந்துகின்ற ஆடவருடைய மார்க்கத்தைத்தேராத கரியகூந்தலையுடைய மாதருக்கு நரகக்குழிதவறாது,

பற்றியவி ருப்பொடுப சித்தவ ரிருப்ப
மற்றவர்த மக்கனம்வ ழங்குநரை யொப்ப
முற்றுதுய ரக்கடலின் மூழ்குநரை யன்றி
நற்றுணைவ ரென்றருள்வ ழங்குவது நன்றே.

(இ - ள்.) பற்றிக்கொண்ட ஆசையோடு பசிப்பிணியெய்தியவர்கள் பட்டினியிருக்கவும், (பசிப்பிணியில்லாத) வினையோருக்கு அன்னம் அளிப்பவர்களைப் போல, (காமப்பசியால்) முதிர்ந்த துன்பக்கடலில் மூழ்கியவர்களைவிடுத்து (அப்பசியில்லாதவர்களை) நல்ல [துணைவர்] கணவரென்று கிருபைசெய்து சுகங்கொடுப்பது நல்லதோ? எ - று. (௧௭௯)

என்றிவை பன்னினன் அருந்தவனி ருந்தான்
மன்றன்மல ரோதியர் மனக்கவலு ழந்தார்
நின்றமுனி யைந்தொழுது நீயிவணெ மக்கோர்
நன்றதிச யப்பொருண டத்தியரு ளென்றார்.

(இ - ள்.) என்று இத்தகைய மொழிகளைச்சொல்லிப் பெருந்தவசியாகிய நாரதமுனிவனிருந்தான். அதனால், மணந்தங்கிய மலர்களையணிந்த கூந்தலையுடைய அசுரமங்கையர்கள் மனத்துயரெய்தினார்கள். பின்னர், அங்கிருந்த நாரதமுனிவனை வணங்கி, நீர் இப்பொழுது எங்களுக்கு ஓரதிசயப்பொருளை நடத்தியருள்கவென்றார்கள். எ - று. (௧௮௦)

வானுலக ரம்பையரி யாரும்வரு மாறோர்
மேனிலையு ணர்ந்தனன டைந்தனர்வி ருப்பின்
ஞானவரை நீவிரெவ ரென்னவவர் யார்க்குங்
கானில்வு காமமருள் கற்பினர்க ளென்றார்.

(இ - ள்.) தேவலோகத்திலுள்ள அரம்பாஸ்திரீகளெல்லாரும் வரும்படி ஒருமேலாகிய நிலையை யுண்டாக்கினன். உடனே அவர்கள் ஆசையுடன்வந்தனர்கள். அவர்களை நோக்கி நீங்கள் யாரென்னவினவ, அவர்கள், நாங்களெல்லாருக்கும் அளவாகிய காமசுகத்தைக் கொடுக்குங் கற்புடைய மங்கையர்களென்று சொன்னார்கள். எ - று. (௧௮௧)

ஏதுளம திர்ந்தனரி லங்கிழையர் யாரும்
பேதுறும னத்தர்படு கற்பொடுபி ரிந்தார்
மாதரவர் பற்பலரி டத்துமனம் வைத்தார்
போதிலவர்க் கினிய பற்பலபு ரிந்தார்.

(இ - ள்.) விளங்குகின்ற ஆபரணமணிந்த அசுரமாதர்கள்யாவரும் இதனை மனதிற்கொண்டு மயங்கிய மனமுடையவர்களாகி, தவறிய கற்பினிலேயோடு மாறுபட்டார்கள். அவர்கள் அழகினையுடைய ஆடவர்களிடத்தில் மனம்விரும்பினார்கள். அப்போது அவ்வாடவர்க்கு இனியனவாகிய பலதொழில்களைச் செய்தார்கள்

வாயின்மருங் கெய்துவர்ம னக்கினியர் வந்தால்
பாயலின ழைத்திருப ணைப்புயம ருந்த
வாய்வளம லர்க்கைகொடி றுக்குவர் துசக்கிச்
சேயிதழ்கொ டுப்பர்புது மைக்கலவி செய்வார்.

(இ - ள்.) தெருவிலுள்ள வாயிலின்பாலடைந்து, தங்கள் மனதிற்கினிய காமுகர்கள் வரக்கண்டால், அவர்களையுள்ளே யழைத்துச்சயனத்திற் சென்று

இளைத்த இருதோள்களும் அழுந்தும்படி வளையலணிந்த தாமரைமலர்போன்ற கைகளாலிறுக்கி ஆலிங்கனஞ்செய்வார்கள். செவ்விய இதழைக்கடித்துப் பருகும்படி கொடுப்பார்கள். புதிய புணர்ச்சியைச் செய்வார்கள். எ - று. (௩௮௩)

பற்பலரி டத்தலது சிந்தையைப ரப்பார்
கற்பினெறி யெனபதுக ழிந்தனமெரா ழிந்தார்
நெற்படுமு லாகக்குறிய ராகியெழி லெய்தும
வறபொருந் தைதெரிய வீதிமறு குறுரா.

(இ - ள்.) எண்ணிறந்தவரிடத்திலல்லாமல் (ஒருவர்பால்) மனத்தைப் புகவிடார்கள். கற்புவழியென்பதை அறவே நீங்கி யொழிந்தார்கள். பகற்காலத்திலே, உண்டாகிய நகக்குறிகளையுடையவராகி அழகுபொருந்திய குதாடுகருவியையொத்த முலைகள் தெரியும்படி தெருக்கடோறும் திரிவார்கள். எ - று. ()

குங்குமமெ ழுக்கெறிக ருச்குவவுக் கொங்கை
தங்கியது சுப்பொசிந் ருமபடியொ துக்கித
கொங்கலாம லாசிகழி மைந்தர்குவ வுததோள்
செங்கயலெ றிந்துயிரெ சுத்துநகை செய்வார்.

(இ - ள்.) குங்குமச்சேறு மெழுகிய குவிவாகிய கொங்கையைச்சுமந்த இடையானது உடையும்படி யொதுங்கி, மகரந்தத்தோடு மலர்ந்த மலரணிந்த முடியையுடைய மைந்தர்களது, குவிந்ததோள்களை, தமது செவ்விய கயல்போன்ற விழிகளை யெறிந்து ஆவியையழித்துப் புன்னகைபுரிவார்கள். எ - று. (௩௮௫)

மற்பொரு யத்தமுகனி வாளசுர ரீதே
கற்பென நினைத்தனர் ருங்கலவி தன்னு
லறபுதம டைந்தனரம யங்கினர் யாந்தார்
முற்கலவி யித்துணைகொ டாதெனமு னிந்தார்.

(இ - ள்.) மற்போர்புரியும் புயத்தையும் அஞ்சாமையையுமுடைய வாளேந்திய அசுரர்கள் இதுவே கற்பென்று மதித்தார்கள் அரிபசையோகத்தினால் மதிமயங்கிச் சோர்ந்தார்கள். முன்னைய புணர்ச்சி இவ்வளவு சுகத்தைக்கொடுக்கமாட்டாதென்று (தமது பண்டைய கணவர்களின்புணர்ச்சியை) வெறுத்தார்கள்.

மேற்படி வேறு.

இப்பரி சியற்றின னியைந்த நாரதன்
செப்பிள முலையவர் கறபிற நீங்கனர்
மைப்புய லெனயவன் மருங்கு சார்ந்தன
னெய்புற வொருவழி யிருந்து சாவினன்.

(இ - ள்.) பொருந்திய நாரதமுனிவன் அவ்வகையாகச் செய்தனன். கிண்ணத்தையொத்த இளமைதங்கிய முலையையுடைய அசுரமாதர்கள் கற்புநிலையினின்று பிரிவுபட்டார்கள். கரியமேகம்போலும் திருமேனியையுடைய திருமாலுக்கருகே சென்றான். இளைக்கமெய்தும்படி ஓரிடத்திலிருந்து வினவுகின்றான்

போரடு வாளெயிற் றசுரர் பூசனை
வேரற முடிந்ததோ வனைய மெல்லிய
லாரொழில் கற்புநீத் தகன்று ளாரகொலோ
சோர்வற வுரைத்தியென் றருகன் சொல்லினான்.

(இ - ள்) போர்க்களத்திற் கொல்லுகின்ற வெள்ளிய பற்களையுடைய அசுரர்செய்த சிவபூசையானது அடியோடு அழிந்ததோ? அச்சமயமாதர்கள் அழகுபொருந்திய கற்பென்பதை விலக்கிப்பிரிந்து விட்டார்களோ? சோர்வின்றிச்சொல்லுவாயாக வென்றபுத்தன் கேட்டனன். எ - று. (௧௮௮)

நீறழித் தொழிந்தன நிருத்த னின்னருள்
ளூறுமஞ் சக்கரத் துண்மை சோர்ந்தனர்
மாறெடு முருத்திர மணியு நீத்தன
ராறணிந் தவனருச் சனையு மற்றனர்.

(இ - ள்.) (நெற்றியிலிட்ட) திருநீற்றைக் கலைத்துவிட்டார்கள். நடனஞ்செய்யுஞ் சிவபெருமானுடைய இனியதிருவருளானது ஊற்றெடுக்கும் பஞ்சாக்கரத்திற்கொண்ட உண்மையைக் கைவிட்டார்கள். மாறுபாட்டோடு உருத்திராக்கமணியையும் விலக்கினார்கள். கங்காதரித்த அவ்விறைவன் பூசையையும் பிரிந்தார்கள் எ - று. (௧௮௯)

இறப்பிம வாழ்க்கையா யாருந் தமதுடைக்
கற்பற நீத்தனர் கலவிப் பூசலின்
முற்படு சிந்தைய ராகி முன்னினார்
பற்பலர் களித்தன ரதர பானமே.

(இ - ள்.) இல்லறவாழ்க்கையுடையவர்களெல்லாரும் தமதுடைய கற்புத்தன்மையை அறவே நீத்தார்கள். போகசுகத்தில் முற்பட்ட மனமுடையவர்களாகி அதனையே கருதியிருந்தார்கள். தங்கள் இதழைக்கடித்துப் பருகும்படி பற்பலருக்குங் கொடுத்தார்கள் எ - று (௧௯௦)

விரதமா தவந்தரு விரத்தனு மற்றொரு
பரமயோ கனகுண பரனென் றிசைபவ
ராவுமா யையினம துள்ளந் தேரல
ரனடித் தாமரை யயர்த்தி லார்களே.

(இ - ள்.) நல்விரதங்களையுமசிறந்த தவத்தையுமுடைய விரத்தன், மற்றொரு பரமயோகனென்பவன், குணபரனென்றுசொல்லப்பட்ட இவர்கள், வலிதாகிய நமது மாயாசத்தியால் நமக்கு மனந்திரும்பினாரல்லர். சிவபெருமானுடைய பாதத்தாமரையை மறந்தாரில்லர் எ - று. (௧௯௧)

ஆங்கவர் தன்மையை யளப்பற் றொன்றையந்
தேங்கமழ் சென்னியோ றுவமை செப்பலாம்
பூங்கழ லருச்சனைப் போது போக்குவார்
நீங்கிலா சைவநன் னெறியி னின்றனர்.

(இ - ள்.) அம்மூவருடைய நிலைமையை யளவிட்டுப் பார்த்தால் அழகிய தேன்சொரியுங் கொன்றைமாலைசூடிய முடியையுடைய சிவபெருமானுக்கு ஒப்பு சொல்லுதல்கூடும். சிவபெருமானுடைய அழகிய வீரக்கழலணிந்த திருவடிகளில் அர்ச்சனைசெய்தும், நீங்காதவர்களாகிச் சைவநூல்களை முறையேபயின்றும் பொழுதுபோக்குவார்கள். எ - று. (௧௬௨)

ஒருபுரத் தொருவரா யுறைவ ராங்கவர்
குருமொழித் ததீசியோ கும்ப யோனியோ
வருளுப மன்னியத் தறவ னேவவாத்
தெருமரு சிந்தையேந் தெரிகி லேனென்றான்.

(இ - ள்.) ஒருபுரத்திற் கொருவராக (அம்மூவரும் அம்மூன்று புரங்களில்) வசிக்கின்றார்கள். அவர்கள் குருமொழித் ததீசிமுனிவனோ, [கும்பயோனி] குடத்திற்பிறந்த அகத்தியமுனிவனோ, அருள்புரியும் உபமன்னியுமுனிவனோ? மயங்கிய மனமுடைய அடியேன் அவர்களை யின்னவரென்று உணரமாட்டேன் என்று நாரதன் கூறினன். எ - று. (௧௬௩)

அனையது கேட்டலு மமல நாயகன்
றனதடிச் சேடரைத் தருக வென்றன
னனையரு மடைந்தன ரிவரை நோக்கினன்
கனைகழற் றிகிரியோன் கழறன் மேயினான்.

(இ - ள்.) அதனைக்கேட்டவுடனே அமலநாயகனாகிய திருமால், தன்திருவடிகளைப் பக்திசெய்யும் சேடர்களைக்கொண்டு வருகவென்றனன். உடனே யெல்லோரும் வந்தார்கள். இவர்களைப்பார்த்து ஒலிக்கின்ற வீரகண்டாமணிதரித்த சக்கிராயுதமேந்திய திருமால் சொல்லத்தொடங்கினன். எ - று. (௧௬௪)

புன்றுலச் சமயமே பொருந்து மூவர்தம்
முன்புறப் போகலீர் முகமு நோக்கலீர்
வன்புலத் தவரொடு மாறு கொள்கலீர்
தென்புலத் தவரவ ரென்று செப்பினான்.

(இ - ள்.) இழிந்தலத்தவருடைய மதத்தையேபொருந்திய அம்மூவர்களுக்கு முன்பாக நீங்கள் போகாதீர்கள். அவர்கள் முகத்தையும் நோக்காதீர்கள். அக்கடின புத்தியையுடையவர்களோடு கூடாதீர்கள். பகைகொள்ளாதீர்கள். அவர்கள் [தென்புலம்] யமபுரமடையவேண்டியவர்களென்று கூறினன். எ - று. ()

தன்னிலை நிறுவுற நினைந்து தன்னுடைப்
புன்னிலை மாயையி னொருவன் போந்துற
முன்னினா னங்கவன் முகுந்தப் புத்தனா
யன்னவ னுருவுகொண் டமைதன மேயினான்.

(இ - ள்.) தன்னிலைமையை நிறுத்திவைக்கக்கருதி, தன்னுடைய இழிந்தகைமையாகிய மாயையால் ஒருவன் வரும்படி கருதினன். அப்பொழுது அவன் முகுந்தப்புத்தனாகி அவனுடைய வடிவையே தன்வடிவாகக்கொண்டு பொருந்தவனாயினன். எ - று. (௧௬௬)

ஆங்கவ ணவவுழை யிருப்ப வாடரித்
தேங்கமழ் துளவினன் சேறன் மேயினன்
வீங்குநீர்த் திரைபொரு தலைக்கும் வேணியோற்
றாங்கிருங் கயிலையஞ் சாரன் மேவினன்.

(இ - ள்.) அப்பொழுது அத்தோன்றிய முகுந்தப்புத்தன் அங்கேதங்கியிருக்க, வண்டுகள் மொய்க்கின்ற தேன்சொரியும் துளசிமாலைதரித்த திருமால் செல்லுதல் பொருந்தினார். பெருகவெங்குங் கங்காநதியின் அலைகள்மோதுகின்ற சடையையுடைய சிவபெருமானைத்தாங்கிய பெரிய கைலாயகிரியின் அழகியசாரலை (நாரதமுனிவனோடு) சேர்ந்தனர். எ - று. (௧௯௭)

நோக்கிய விருவருங் கயிலை நோக்குறு
வாக்கிய விழிமறைந் தலமவந் தாரவ
ராகிய கருத்தரா யொருங்கு சிந்தையைத்
தாக்கினின் றளந்தன ரினைய சொல்லினார்.

(இ - ள்.) சேர்ந்த இருவரும் திருக்கைலாயத்தைநோக்கியவுடன், கண்பார்வைமறைந்து வருத்தமெய்தினார்கள். அப்பொழுது தளர்ச்சியெய்திய மனமுடையவர்களாய் ஒருவழிப்படக் கருத்தைச்செலுத்தி நின்று ஆலோசித்து இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லுவார்கள். எ - று. (௧௯௮)

சுழிகொணீர் வேணியைத் தொழுத பூசனைக்
கழிவுசெய் தியற்றினோ மாதலானம
விழிதெரி யாவழி யேவி னோமெனத்
தொழுதுயர் கையினார் தவத்திற றாங்கினார்.

(இ - ள்.) சுழிகள்பொருந்திய கங்கைநீரையணிந்த சடையையுடைய சிவபெருமானை வணங்கிய பூசைக்குக் கெடுதியைச்செய்து முடித்தோம். ஆனபடியால், நம்முடைய கண்கள் பார்வைதெரியாத வகைமை யெய்தினோமென்று, வணங்கி உயர்த்திய கையையுடையவர்களாய்த் தவச்செயலைமேற்கொண்டார்கள்

ஊழிபல் கழிந்தனர் தவத்தி னோங்கினோ
ராழிநஞ் சணிமிடற் றவனை யாசியாப
பாழியே றுயர்த்தருள் பரம னீங்கிவர்
சூழ்வன திருவுளத் தடைத்துத் தோன்றினன்.

(இ - ள்.) தவத்தொழிலில் மேம்பட்டார்கள். திருப்பாற்கடலிற் றோன்றிய ஆலாலவிஷத்தை யணிந்த கண்டத்தையுடைய சிவபெருமானை யாச்சித்து, பல ஊழிகாலங்கள் கழித்தனர். வலிதாங்கிய இடபக்கொடியை யுயர்த்தியருளிய சிவபெருமான், இவர்கள் கருதியனவற்றைத் திருவுளத்திற்கொண்டு காட்சிதந்தருளினார். எ - று. (௨00)

பரித்துறு சிந்தையிற் பரிவி னுனமை
யருச்சனை யாற்றினோர்க் கழிவு செய்துளந்

திரித்தனி ராதலிற் றெரிந்தி லீர்வழி
யுரிதனெ னமக்கவை யுதவி னேமெனு.

(இ - ள்.) மனத்தில் பரிவுற்று ஆசையோடு எம்மைப்பூசைசெய்த திரிபுர வாசிகளுக்குக் கெடுதியுண்டுபண்ணி மனதைத்திருப்பி விட்டீர்கள். ஆதலால் கண்களைதெரியப் பெற்றிலீர். நமக்கு உரியதென்னறுகருதி அவற்றையுங் கட்குக் கொடுத்தோமென்று திருவாய் மலர்ந்தருளி. எ - று. (௨௦௧)

மானத வாவியின் மருங்கு வானவ
ரானவ ரியாவரு மடைந்து ளாரவண்
டேனமா துளவினோய் சேறி சென்றபி
னோனைய புரந்தெறற் கியற்று வீரென.

(இ - ள்.) மானததீர்த்தத்தினருகே தேவர்களானவர்க ளெல்லாரும் சேர்ந் திள்ளார்கள். தேனபொருந்திய துளசிமாலைதரித்த திருமாலே! நீயங்கேசெல் லக்கடவாய். அப்படிச்சென்றபிறகு அந்தமுப்புரங்களை யழித்தற்கு வகைசெய் யக்கடவீர்களென்று. எ - று. (௨௦௨)

திருவருள் புரிந்தருட் கயிலை சென்றனன்
மருவருந் துளவினோன் மான தப்பெரும்
பொருபுனற் றிருக்கரை யருகு போயினான்
றருநிழற் கடவுளர் தொழுது சார்ந்தனர்.

(இ - ள்.) திருவருள்செய்ய, கிருபைதங்கிய கைலாயகிரியை யடைந்தனர். மணமவீசுந் துளவமாலைதரித்த திருமால மானததீர்த்தத்தின் அலைகள் மோது கின்ற நீரையுடைய கரைக்கருகே சென்றனர். கற்பகதருவின் நிழலில் வசிக்குந் தேவர்களெல்லாரும் திருமாலைக்கண்டு வணங்கிச் சார்ந்தார்கள். எ - று. (௨௦௩)

அனையவர் தம்மொடு மவணி ருந்துழி
முனிவரு மமரரு முகுந்தற போற்றினீ
புனைபுர மடைந்தவண் புரிந்த வாறெலா
நினைவொடு மொழிதியென் றிரந்து நின்றனர்.

(இ - ள்.) அவ்வமரர்களோடும அத்தீர்த்தக்கரையில இருந்தகாலத்தில் முனி வர்களும் தேவர்களும விஷ்ணுவைத் துதிசெய்து, தேவரீர் அலங்கரிக்கின்ற முப்புரங்களையடைந்து அங்கேசெய்த செயல்களையெல்லாம நினைவாகச்சொல்ல வேண்டுமென்று யாசித்துக் கேட்டார்கள். எ - று. (௨௦௪)

முப்புர மடைந்தது முயன்ற மாயையா
லப்புர மழிந்தது மனைத்து நாரதன
செப்புர வளத்தினிற் செப்பி னானுளத்
துப்புர வடைந்தன ரமரர் தொல்லையோர்.

(இ - ள்.) திரிபுரங்களைச் சேர்ந்ததும், முயற்சிசெய்த மாயர்சக்தியால் அப்புரங்கள் தாமமழிந்ததும் எல்லாவற்றையும நாரதமுனிவன் செவ்வையாக வளமையோடு தெரியச்சொல்லினான். அதனைக்கேட்ட பழையோராகிய தேவர் கள் மனத்தின ஒழுங்கைப்பெற்றார்கள். எ - று. (௨௦௫)

இலங்கொளி புரிதருசுரர்க் கிலங்குஎன
வலங்கெழு தோளினான் மயனு மற்றையோர்
குலந்தழை தாரத்தரு குருவு மாங்குளர்
பொலங்கிளர் திகிரியாய் புரிந்த தெவ்வணம்.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற பற்களையுடைய அசுரர்களுக்குச் சிவலிங்கங்கொடுத்துள்ள வெற்றிமிகுந்த தோளையுடையோனாகிய மயனென்பவனும், அவ்வசுரர் குலந் தழையச்செய்யும் குருவாகிய சுக்கிரனும் அங்கேயிருக்கின்றார்கள். அப்படியிருக்க, அழகுமிகுந்த சக்கரந் தாங்கிய திருமாலே! நீங்கள் இதுசெய்தவகை எப்படி? எ - று. (௨0௬)

என்னலு முயிர்புரந் தளிக்கு மெம்பிரா
னன்னவாக் கியம்புவா னவர்களுத் தமமிலோர்
பின்னமுண் டாதலிற் பிறந்தசா பத்தார்
பொன்னிம யாசலத் தலத்திற் போயினார்.

(இ - ள்.) என்றுவினவவும், உயிர்களைக் காத்திரட்சிக்கும் எமது பெருமானாகிய திருமால், அத்தேவர்கட்குச் சொல்லுவார். அம்மயனுக்கும் சுக்கிரனுக்கும் தங்களில் ஒரு குறைவுண்டாதலாற் றோன்றிய சாபகாரணமாக, அவர்கள் அழகிய இமயாசலமாகிய இடத்திற்குச் சென்றார்கள். எ - று. (௨0௭)

அன்னதோ வென்றனர் பிரம னாதிய
ரினனல்கொண் டித்துணை யெடுத்த காரிய
முன்னினோ மாங்கது முடித்து மெனமொழி
பொன்னவிர் சடையினோற் போற்றன் மேயினார்.

(இ - ள்.) அதுகேட்ட பிரமன் முதலினோர் அப்படியோ வென்றார்கள். நன்பத்தினால் கருதினோமாகிய இவ்வாவினைதாகிய எடுத்தகாரியத்தைத் முடிவு செய்வோமென்று பேசிக்கொண்டு, பொன்போலப் பிரகாசிக்குஞ் சடையையுடைய சிவபெருமானைத் துதிப்பாரானார்கள். எ - று. (௨0௮)

ஆழ்புனன் மானத வாவி யாழ்ந்துற
மூழ்கினன் கிடந்தன னிளைத்தன் முற்றுவான்
றாழ்சடை யவன்றிருப் பூசை சாந்தன
னூழ்பல கழித்தன னுவண வூர்தியே.

(இ - ள்.) ஆழ்ந்தநீரையுடைய மானததீர்த்தத்திற் படிந்து மூழ்கினன். ஓர்புறத்திலிருந்து, தாங்கள் கருதியதை முடிக்கும்படி, தாழ்ந்த சடையையுடைய சிவபெருமான் திருப்பூசையைச் செய்பவராகிப்பலவூழிகாலம் கருடவாகனராகிய திருமால் அமர்ந்து கழித்தனர். எ - று. (௨0௯)

தாளுடைத் தாமரைச் சதுமு கத்தனோ
டாளுடை யிந்திர னமரர் யாவரு
மூளிருந் தவமபுரி முனிவ ரேனையோர
தோளுறு புன்றவங் குறித்து நின்றனர்.

(இ - ள்.) தாளையுடைய தாமரையிலெழுந்தருளிய நான்கு முகங்களை யுடைய பிரமனுடன், அரசுரிமைபொருந்திய தேவேந்திரனும் ஏனையதேவர் களும், முயன்று பெருந்தவஞ்செய்த முனிவர்களும், மற்றையோர்களும், குற்ற மற்ற சலத்தில் தவஞ்செயலை மேற்கொண்டு நின்றனர். எ - று. (௨௧௦)

தீம்புனல் புறவடி தோய்க லார்தெளி
வாமபுன னின்றன ரனை யேத்தினர்
வாம்பரி மழவிடை யரதன் சேயொடுந்
தேம்புரி குழலொடு மெதிரிற சென்றனன்.

(இ - ள்.) இனியநீரானது புறவடியில் தோயப்பெறுதவர்கள், தெளிவாகிய சலத்தில் நின்றுகொண்டு சிவபெருமானைத் துதிசெயதாரகள. தாவிச்செல்லும் இளமைதங்கிய இடபததைவாகனமாகவுடைய சிரேஷ்டமான சிவபெருமான், குமாரசுவாமியோடுமதேனொழுகும் (மலரணிந்த) புரிந்த கூந்தலையுடைய உமா தேவியோடும் பிரததியட்சமாயினா. எ - று. (௨௧௧)

சென்றதிா மழவிடைச செல்வற போற்றினர்
நின்றவா னவர்நிலை நெடிது நோககிநீர்
நன்றிழைத தீரது நயநது ளோமினி
யொன்றுள துரைததுமென றுரைத்தன் மேயினன்.

(இ - ள்.) எதிரசென்று, சத்திககின்ற இளமைதங்கிய இடபவாகனமுடைய சிவபெருமானைத துதித்தாகள். அப்படித துதித்து நின்றதேவாகள் நிலைமை யைச் சிவபெருமான் பார்தது நீஙகள வெகுகாலமாக நனருகநோற்றீாகள. அதனை விருமபினோம். இனிச்சொலலவேணடிய தொன்றுணடு. அதனையுஞ் சொல்லுவோமென்று சொலலலானயினர். எ - று. (௨௧௨)

பரகதி நெறிதரு பசுப திபபெரு
விரதநீ ரிழைநதிட வேணடுமவேண் டினுற்
புரையற வுணாநதன பெறுதிா போமெனு
வரனவாக் கெடுததுரைத தருளு மெலலையில்.

(இ - ள்.) பரகதிககுரியவழியைத் தரததக்க பாசுபதவிரதமெனனுமபெரிய விரததைை நீஙகள அநுஷ்டிககவேணடும. அவவிரததோடு நம்மைப் பிராாததித தால, குற்றமறககருதிய வரததைப் பெறுவீாகள், போஙகளெனறு, சிவபெரு மான் அவாகளுககு எடுத்துச்சொல்லுஙகாலததில். எ - று. (௨௧௩)

பன்னிரு தடம்புயக் குழவிப பண்ணவ
னன்னயக குழவிநா டகந டித்தன
னென்னையா ளுடையவ னிவனை நோககலுங்
கன்னிகை யன்னது கடைக்கண சாததினள்.

(இ - ள்.) விசாலமான பன்னிரு திருததோள்களையுடைய குமாரசுவாமி யானவர், நல்ல இனிமையோடுகூடிய குழநதைத திருவிளையாடலாக நடித்தனா. என்னையடிமையாகவுடைய சிவபெருமான இவனைபபார்க்கவும், கன்னிகையாகிய உமாதேவியாா அதனைத திருக்கடைககணணோக்கஞ் செய்தருளினா. எ - று.

அறனெலா மொருவழி புரக்கு மமபுயத்
தறுமலாத் தாமரை வெறிநுற ரேசினுள்
சிறுவனிச் சிறுகட னோககல் செயதிலாய்
கறைமிடற் றேயெனக் கனன்று சீறினுள்.

(இ - ள்) தருமங்களையெல்லாம் ஒருவழியாகக்காக்கும் உமாபிராட்டியார் தமது தாமரைமலாபோன்ற அழகியகையினுல் பிற்புறமெயதித தட்டினுள். இளையவனுகிய முருகனசெயயும இச்சிறு நடனததைக்காணடல புரியவிலலே. விஷம்பொருநதிய கணடததையுடையவரே! என்று கோபிததுககொதிததாள்.

முறுவலார் முகததினன் முருகப் பிள்ளையை
யுறுபெருவ கருணையி னுவநது நோக்கினு
னறுமலாத தளிரடி குழைய நாடடியரு
சிறுதினங் காடடெனச செஙகை யொததினுன்.

(இ - ள்.) சிவபெருமான அதனுற்புன்னகைபொருநதிய முகமுடையவராய, முருகனுகிய இளையகுமாரரைப் பொருந்திய பெருங்கிருபையோடு சநதோஷிததுப பாரதது, மணநதஙகிய மலரையும தளிரையும் போன்ற திருவடிகள் குழையுமபடி சிலகாலம் நாட்டியஞ்செய்து காட்டுகவென்று, அநநடனததிற் கியையதமது சிவநத கைகளால தாளமிடடனா. எ - று. (உ௧௯)

பேரெழிற் குமரவே ளடிகரும பெற்றியா
ளூரநாண் மலரவன முதல நானிலத
தாருயி ரனைததுங்க ளுடிப பாடினுர்
வேரசைந திடசசினை யசையு மெயமமைபோல்.

(இ - ள்.) அடிமரமசைதலாற் கிளைகளெல்லாம் அசையுமென்னும் உண்மைபோல, பேரழகுடைய குமரவேள நடனஞ்செயயும தனமையால, அன்புடைய அனறலாநத தாமரையிலுள்ள பிரமனமுதலிய பெரியபூமியிலுள்ள அரிய ஆன்மாககள யாவரும் ஆநநதமயமாய் நின்று ஆடிப்பாடினுாகள. எ - று. (உ௨௦)

சேந்தனை முருகனைக குகனைச சேயினை
மோநதெடுத தணைததன ருச்சி மோநதனர்
காநதையுந தலைவனும புதலவற கைவிடாா
போநதனா கணததொடுங கயிலை புக்கனர்.

(இ - ள்.) உமாதேவியும் சிவபெருமானும, சேநதன் முருகன் குகன் ஆகிய திருநாமங்கொணடு விளஙகும தமது இளையபிளளையாரை வாரியெடுதது அணைத்துககொணடு உச்சிமோநது குழநதையைககையினினறு விடாமல புறப்பட்டுத தமது சிவகணஙகளோடுந திருககைலாயகிரியை யடைநதார்கள. எ - று. (உ௨௧)

ஆயபதோ ரளவையி னிவாகள் யாவருங்
காய்சின விடையினு னெதிாநதுங கட்கனற்
றீயரை முடித்திலனு செய்வ தேதெனு
மேயினா பசுபதி விரத மாதவம,

(இ - ள்.) அப்படிப்பட்ட காலத்தில் இத்தேவர்களெல்லோரும் காய்ந்து கோபிக்கின்ற இடபவாகனனாகிய சிவபெருமான் காட்சிகொடுத்தும், கணைகளில தீப்பொறி சிந்துங் கொடியோராகிய திரிபுராசுரர்களை வென்றோமில்லை. யாது செய்வோமென்று பாசுபத விரதமென்னும் பெருந்தவத்தைச்செய்ய மேற் கொண்டார்கள். எ - று. (௨௧௯)

விரதமங் கதுபுரிந் தியற்றும் வேலையில்
வரநதிச சடைமுடி மழுவ லானுணர்ந
துறவுறுந தவப்பய னுணாநத நநதிபா
விரைதருங் கருணையா னியமபி னனரோ.

(இ - ள்.) அப்பாசுபத விரதத்தை யநுஷ்டித்து வருங்காலத்தில, கங்கை யாறு பொருந்திய சடைமுடியையுடைய மழுப்படைதாங்கிய சிவபெருமான தெரிந்து, வலிபொருந்திய தபோபலனை யுணர்ந்த நந்திதேவரிடத்தில நிறைந்த கருணைக் கிருப்பிடமாகிய சிவபெருமான திருவாய் மலாகினறனா. எ - று.

அரிமுதற் றோன்றிய வமரா யாவருந
திரிபுரத தவாகளாற றீமை யெய்தின
குரிமையி னெமையிரந தவந்து போறறினர்
பரிவுறந தினனமும பரசன மேயினா.

(இ - ள்.) திருமால் முதலாகவுள்ள தேவாகளெல்லாரும் திரிபுரத்தசுரர்க ளால் துன்பமடைந்தார்கள். சுதந்திரததோடு எமமையாசிததுவந்து துதிசெய தார்கள். துயரமநுபவிதது இதுகாலமவரையிலும் துதித்துககொணடிருககின் றார்கள். எ - று. (௨௨௧)

ஈதிழைத தாங்கவ ரியற்று மெலலையிற
போதிநீ திரிபுரம பொடிதது மாய்பபதற்
கேதமி லிரதமே முதல யாவையுந
தீதற வியற்றுவான் செபபி வாவென்றான்.

(இ - ள்.) அம்மானத தீர்த்தககரையில் அவர்கள் இப்பாசுபதவிரதத்தை நடத்தி நிற்கையில், நீ அங்குச்சென்று முப்புரங்களை யெரிததழிபபதற்கு, குற்ற மில்லாத தேர்முதலிய போர்க்கருவிக ளெல்லாவற்றையும செவ்வையாகச் சிததஞ் செய்யக கட்டளையிட்டு வருகவெனத் திருவாய் மலாநதருளினா. எ - று. ()

வேத்திரக் கரததினன் றவள வெண்பொடி
பூத்தொளிா மேனியன் பூதா சூழ்வர
நேத்திர மூனறுடை நிமலன சேவடி
காததருள் ணநதியங கடவு டோனறினான்.

(இ - ள்.) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் செவ்விய திருவடி யைககாததருளுகின்ற அழகிய திருநந்திதேவா. [வேததிரம்] பிரமபைததாங்கிய கையையுடையவரும், தாவள்யமாகிய திருவெண்ணீறு பிரகாசிதது விளங்கும் திருமேனியுடையவருமாயப் பூதகணங்கள புடைசூழ்ந்து வருமபடி அங்கே எழுந்தருளினா். எ - று. (௨௨௩)

நந்திவந் திறுத்தலு களின நான்முக
னந்தரத் தவரரி முதல யாவருஞ்
சிந்தையுற் றுயிர்த்தனர் திருக்கை மானுடை
யெந்தைபோற் றிருவரு ளுளதென் றெண்ணினர்.

(இ - ள்.) திருநந்திதேவர் எழுந்தருளிக் காட்சிதரவும், தாமரைமலரி லெழுந்தருளிய பிரமனும் தேவர்களும் திருமால் முதலிய வெல்லோரும் மனங் களித்துயிர்த்தார்கள். திருக்கரத்தில் மானேந்திய எந்தையாகிய சிவபெருமானைப் போல திருவருள் புரிதலுண்டாகுமென்று கருதினர்கள். எ - று. (௨௨௪)

எண்ணுறு மளவையி னந்தி யெம்பிரா
னண்ணின னெதிருற நயந்து போற்றினர்
கண்ணுதல் வானவற் காணு மன்பினார்
புண்ணியற் கியைவன யாவும் போற்றினர்.

(இ - ள்.) அப்படி யெண்ணுகின்றகாலத்தில் எமது பெருமானாகிய நந்தி தேவர் சமீபமாக வெழுந்தருளியணைய, யாவரும் விரும்பித் துதிசெய்தார்கள். நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானைத் தரிசிக்கும் அன்புடைய அத்தேவர் கள், புண்ணிய சொரூபியாகிய திருநந்திதேவருக்குப் பொருந்திய உபசார மொழிகளால் துதிசெய்தார்கள். எ - று. (௨௨௫)

என்னையா ளுடையவ னந்தி யெம்பிரான்
றன்னைநா ரணனொடுந் தழுவிச் சார்ந்தனர்
மின்னொளி யலங்குநூன் மார்ப வெய்திவண்
முன்னிவந் தடைந்தவா மொழிகு வாயெனறார்.

(இ - ள்.) என்னை யடிமையாகவுடைய எமது பெருமானாகிய திருநந்தி தேவரை, திருமாலுடன் அங்கேபொருந்தியுள்ள தேவர்களும், பிரகாசிக்கின்ற ஒளியோடசையும் உபவீதமணிந்த திருமார்பையுடைய நந்திபகவானே! தேவரீர் இவ்விடத்திற்கு யாதுகருதி விரைந்தெய்திய வகை. அதனைத் திருவாய்மலர வேண்டுமெனறார்கள். எ - று. (௨௨௬)

அக்கணத் தவரொடு நந்தி யாரெயில
புக்குமுப் புரத்தொடும் பொருதப் போதுவான்
றொக்கதேர் முதலிய தொகுத்தி யற்றுவான்
முக்கணு னுமக்கெதிர் மொழிந்து வாவெனறான்.

(இ - ள்.) அக்காலத்தில், அத்தேவர்களோடும் சொல்லுகின்றார். சிவபெரு மான் மும்மதில்களமைந்த முப்புரத்தினருடன யுத்தஞ்செய்யச் செல்லும்படி கூட்டமாகிய இரதமுதலிய யுத்தகருவிகளைச் சோதத்துவைக்கும்படி, திரிநேத்தி ரங்களையுடைய அச்சிவபெருமான உங்களுக்கு நேரிற்சொல்லி வருகவென் றனுப்பினார். எ - று. (௨௨௭)

அதுவுணர்ந் திம்முறை யடைந்து ளேனெனுக்
கதுமென வீங்கிவை கடிதிற் செய்திரென்
றிதுவுரைத் தகன்றன னந்தி யீங்கிவர்
புதிதிழைத் தனவெலாம் புகலசெய் வாமரோ.

(இ - ள்.) அக்கட்டளையைத் தெரிந்து உமக்களிடத்திற் றெரிவிக்கும்படி வந்தேனென்றுகூறி, உடனே இவற்றை விரைந்து சித்தஞ்செய்வீர்களென்று இதனைத் திருவாய்மலர்ந்து திருநந்திதேவர் திருக்கைலாயகிரிக்குச் சென்றருளினர். இத்தேவர்கள் புதிதாகப் புரிந்தனவற்றையெல்லாம் இனிச்சொல்லுவோம்.

**கலிநிலைத்துறை.**

மந்த ரத்தொடு கேசரி நெடுவரை வாங்கித்
தந்து திண்டிற லச்சென்ப படுத்தினர் தழைக்குஞ்
செந்த ணிக்கதி ரினைத்தைவெண் டிங்களைத் திருத்தி
யுந்து பேரெழி லாழிகொண் டவைகக்கடை யுறுத்தி.

(இ - ள்.) மந்தரமலையையும் கேசரியென்னும் பெரியமலையையும் வாங்கித் தந்திரமாகிய மிகுவல்லபமுடைய அச்சுகக்கட்டைகளாகக் கிடத்தினர். சிவந்த கிரணங்கள் தழைத்த ஒப்பற்ற சூரியனையும் வெள்ளிய சந்திரனையும் திருத்தமாக்கிச் செலுத்தத்தக்க பேரழகுடைய சக்கரமாக்கி அவ்வச்சின் இறுதிகளிற் பூட்டி. எ - று. (உ௲௯)

ஏழி ரட்டியென் றுரைத்திடு மிருநிலப் பரப்பைச
சூழ்ந்த ரப்படு நிலங்களீ ரேழெனத் தொகுத்தார்
பாழி வாளரிப பிடரிபி மாசனப் பரப்பை
யாழி யொத்தலா தட்டினோ தட்டகத் தமைத்தார்.

(இ - ள்.) பதினான்கென்று சொல்லப்படும் பெரிய உலகப்பரப்பினை, சூழ்ந்த பதினான்கு நிலைகளாகத் தொகுத்தார்கள். பெருமைதங்கிய ஒள்ளியசிங்கத்தின் பிடரியிலிட்ட பீடத்தின் பரப்பை, கடல்போற் பரந்துள்ள தட்டுகளின் ஒருதட்டிலே பொருந்தினார்கள். எ - று, (உ௲௦)

கலைக ளாகம வேள்விகள் கார்முதற பருவ
நிலைகள் கோடியோ ரேழெனு மந்திர நியமந
தொலைவி லோரைக டிங்களுந றெழுபபடு தொன்னாட்
குலவி ருத்தையோ கங்கணமற றுள்ளன குணித்து.

(இ - ள்.) கலைஞானங்கள் (அறுபத்துநான்கு) சிவாகமங்கள் (இருபத்தெட்டு) யாகங்கள் (இருபத்தொன்று) கார்முதலிய (ஆறு) பருவங்கள், கலைகள் ஏழுகோடி மகாமந்திரங்கள் நியமங்கள் நீங்காத இராசிகள் மாதங்கள் பொருந்தியுண்டாகின்ற பண்டைய தினங்கள் சிறந்த நாழிகைகள் யோகங்கள் மற்றுள்ளன வற்றையும் கருதி. எ - று. (உ௲௧)

கடைப்ப டச்செலுத் தரமுத லாயவாக் கருதிப்
புடைபப டுத்தவ ணவ்வனைத்து திருத்தினர் பொருத்தி
யுடைதழெ ழுங்கடத் தோங்கெழில யானையோ ரெட்டு
மிடைப்ப டச்சுமந் தேந்துவ போலமைத் திட்டார்.

(இ - ள்.) கடைப்படும்படி செல்லுகின்ற உத்தரமுதலியனவாகக் கருதி அவ்வவ்விடங்களிற் பொருத்தி, அங்கங்கெல்லாம் உடைத்தெழுகின்ற மதப்பெருக்கையும் மிக்க அழகையுமுடைய திக்கஜங்களெட்டனையும் நடுவிலேதாங்கி நிற்பனபோலப் பொருத்தி அமைத்தார்கள். எ - று. (உ௲௨)

திகந்த முற்றிய புயங்கமோ ரெட்டுமத் திகந்தம்
பகுந்து தாங்கிய குலவரை யெட்டுமேற பரிதி
புகுந்தி றங்கிய நெடுவரை யிரண்டுமேற் பொருந்தத்
தகுந்த னித்தனி மதலையி னமைத்தனா தரத்தால்.

(இ - ள்.) திசைகளி னிறுதியிலுள்ள அஷ்டநாகங்களையும், அத்திசாந்தங்களைப் பிரித்துச் சுமந்த அஷ்டகுல பர்வதங்களையும், சூரியன் உதித்து மறையும் (உதயாஸ்தமன) கிரிகளிரண்டையும், மேலே பொருந்தத்தக்க தனித்தனி தூண்களைபோல முறைப்படி யமைத்தார்கள். எ - று. (௨௩௩)

வருண மைந்தெனப் படுவன யாவையும் வருத்தி
யுருள்பெ ருந்திரை யேழையும வருத்தின ரொருங்கே
யருக மைத்திடு கன்னசா லைகளத ற கருகே
மருவு கன்னகூ டங்களொத திருப்பன வகுத்து.

(இ - ள்.) ஐந்துவருணங்களென்று சொல்லப்படுவனவற்றை யெல்லாம் வருவித்து, உருளுகின்ற பெரிய அலைமயமான கடல்கள் ஏழையும் ஒருசேரவருவித்தார்கள். அருகே யமைக்கத்தக்க கன்னசாலைகளும் அவற்றிற்கருகே பொருந்திய கன்னகூடங்களும்போ லிருப்பனவாகச் சமைத்து. எ - று.

கன்னகூடம் - கோபுரங்களினிலையில் மூலைகளிற் சிறுகோபுரம்போல விளங்கும். கன்னசாலை - கோபுரங்களினிலையில நாற்புறமும் நடுவேநீண்டவடிவாய் அல்வகலத்தில் அரைப்பங்கு இடங்கொண்டு நிற்கும். இவவிரண்டிற்குமிடையே பஞ்சரமெனப தோன்றுண்டு. இது சிறபநூனமுடிபு. விரிப்பிற் பெருகும். (௨௩௪)

இடைப டும்படாம் வெண்மையி னியற்றின ரிலைவக்கீழ்
மிடைப டுத்துவ கருநிறப பண்பொடுவேய்ந்து
புடைப டுத்துவ சேயொளிப படம்பொதிந் திட்டா
ரடைப சும்படாம வெளியமைத தவணவ ணமைத்தார்.

(இ - ள்) நடுவிலுள்ள கொடித்துவசங்கள் வெண்ணிறமாகச் சமைத்தார்கள். இவற்றினகீழே நெருங்கியுள்ளனவற்றைக் கருமை நிறமபொருந்திய அழகோடு கட்டி, பக்கங்களிலுள்ளனவற்றை செந்நிறந்தங்கிய சீலைகளால் நிறைத்தார்கள். சுற்றிலும் பசுமைநிற மமைந்தனவாக அங்கங்கே பொருத்திவைத்தார்கள். எ - று. (௨௩௫)

குங்கு மத்தன படாம்படக் கோடிதோ றமைத்தார்
தங்கு கீழ்த்திரை பெரும்புறக் கடலெனச் சமைத்தார்
பொங்கு பேரொளி யைந்தொடுங் கொடிஞ்சியும புனைந்தா
ரங்கு நின்றிடை தூக்குவ யாவையு மசைத்தார்.

(இ - ள்.) குங்கும நிறந்தங்கிய கொடிச்சீலைகள் பொருந்துமமடி மூலைகளிலெல்லாம் அமைத்தார்கள். பொருந்திய கீழ்த்திசையிலுள்ள அலைகள் பொருந்திய பெரும்புறக்கடல் என்று கண்டோர் சொலலும்படி யமைத்தார்கள். அதிகரிக்கின்ற பஞ்சவர்ணப் பேரொளியோடும் [கொடிஞ்சி] மொட்டும அலங்கரித்தார்கள், அங்கே யிடையில் தொங்கவிடுவனவற்றை யெல்லாம் கட்டினார்கள்.

மன்னுயிர்த்தொகை யாவைக்கும் வானவ ரெவர்க்கும்
பின்னலந்துழாய் மருமற்கும் பீடிகைப் பொகுட்டு
மன்னு நான்முகக் கிழவற்கு மேலதாய் மறைந்தோன்
றன்னை யொத்துயர்ந் தொளிரமணித் தனித்தசும் பமைத்தார்.

(இ - ள்.) நிலைபெற்ற உயிர்த்தொகைக ளெல்லாவற்றிற்கும் தேவர்கள் யாவர்க்கும் பின்னிய அழகிய துளவமாலையணிந்த திருமாலுக்கும் தாமரைப் பொகுட்டாகிய பீடத்தில் நிலையாயுள்ள நான்குமுகங்களையுடைய பிரமனுக்கும் மேலாகி, அவர்கட்கு அதீதப்பட்ட சிவபெருமானைப் போன்றுயர்ந்து பிரகாசிக்கின்ற ஒப்பற்ற நவமணிகள் பதித்த கலசத்தை யமைத்தார்கள். எ - று. (உஉஎ)

எழுதா ருமறை யனைத்தையும் பரியென வியற்றி
வழுவறக் குறை நிரப்பின ரரிமுதல் வானோ
ரொழுகு மாயிரங் கொடுமுடி வடவரை யோங்க
றழுவு செங்கையிற் பிநாகமொத் தமைத்தனர் தந்தார்.

(இ - ள்) எழுதாக் கிளவியாகிய வேதங்களையெல்லாம் குதிரைகளாகச் செய்து குற்றமறக் குறைவுபாட்டினை நிரப்பச்செய்தார்கள். திருமால் முதலாகிய தேவர்கள், பிரகாசிக்கின்ற ஆயிரம் [கொடுமுடி] சிகரங்களையுடைய மக மேருமலையைச் சிவந்த கையில் தழுவிய பிநாக வில்லைப்போல வில்லாக நியமித்துத் தந்தார்கள். எ - று. (உஉஅ)

பொறிப்ப ணாடவி வாசுகி நாணெனப் பொருத்தி
வெறிப்ப சுந்துழா யலங்கலோன் கணையென வியப்பக்
குறித்த வெந்நுதி பாவகற் பொருத்தினர் குதைவாய்ச்
செறித்த தூவலை வாயுவிற் செறித்தனர் திருத்தி.

(இ - ள்) புள்ளிகள் பொருந்திய படக்கூட்டத்தையுடைய வாசுகியென்னும் பாம்பை நாணாகச்சேர்த்து, மணம்வீசும் பசிய துளசிமாலைதரித்த திருமால் அம்பாக, அதிசயிக்கக்குறித்த வெவ்விய அவ்வம்பின் கூர்வாய் அக்கினியாக அமைத்தார்கள். அம்பினிறுதியிற்கட்டிய சிறகு வாயுவாகவுந் திருத்தமாகக் கட்டினார்கள். எ - று. (உஉகூ)

முன்னை மாதவக் கடைப்பிடி யிருந்தவர் முளரி
யன்ன வூர்தியும் வலவனாத் தமர்ந்தன னமையாத்
தொன்னலந்தரு குடிலைமத் திகையெனத் தொகுத்தார்
பின்னர் வானவர் சேனையொத் தெழுந்தனர் பிரியார்.

(இ - ள்.) பழயபெருந் தவத்தினாலே கருமமுடிக்குந் துணிவிலிருந்த அவர்கள், விரும்பியபடி, தாமரைமலரி லெழுந்தருளிய அன்னவாகனனாகிய பிரமனும் இரதசாரதியாகப் பொருந்தினன். அமையாத பண்டைய நன்மைகளையெல்லாந் தரத்தக்க பிரணவத்தைக் குதிரைச்சமமட்டியாகச் சேர்த்தார்கள். பின்னரே தேவர்கள் பிரியாதவர்களாய்ச் சேனையாகப் புறப்பட்டனர். எ - று. (உ௩0)

மாதிரப்பெருங் கடவுள ரெண்மரு மறலி
காது சேனையின் றலைவரிற் பொலிந்தனர் கனகச்
சோதி மேருவி னுச்சியந் தொன்னகர்ப் பிரம
னாதி நாரண னரனைவாழ்த் தெடுத்தன ரடைய.

(இ - ள்.) பெரிய எண்டிசைப்பாலகர்களும், போர்செய்கின்ற பெரிய இயமனுடைய சேனைகளின் நாயகர்கள்போல விளங்கினார்கள். அப்பொழுது பொன்மயமாகிய (மனோவதி வைகுந்தமென்னும்) நகரங்களில் வசிக்கும் பிரமனும் தொல்லோனாகிய திருமாலும், சிவபெருமானை யடையும்படி வாழ்த்தெடுத்தார்கள். எ - று. (உ௪௪)

அருந்த வத்தரோ ரெழுவரு மாசிசொற் றெடுப்பப்
பொருந்து விஞ்சையா கின்னரர் பூதர்ப் பொருவத்
திருந்து மெல்லிசைத் தும்புரு நாரதர் சிவனபா
விருந்த சிந்தைய ரருகுநின் றின்னிசை தூக்க

(இ - ள்.) அருந்தவஞ்செய்த சப்தருஷிகளும் ஆசீர்வசனங்களை யெடுத்துச் சொல்லவும், பொருந்திய வித்தியாதரர் கின்னரர் பூதர்களைப்போல, மெல்லிய இசையையெழுப்பும் தும்புருநாரதர் முதலிய சிவபெருமானிடத்தில் தங்கிய மனமுடையவர்கள் அருகேநின்று இனிய இசைப்பாடல்களைப் பாடவும். எ - று.

ஈங்கு வேண்டுவ யாவையுங் குறைவற வியற்றித்
தாங்கு சக்கரத் தடக்கையா னழலவிழ் பெருமா
னோங்கு வெள்ளியம் பொருப்புற நடந்தன னொளிசீர்
தேங்கு சென்னியன் சினகரக் கடைத்தலை சென்றான்.

(இ - ள்) இவ்விடத்தில் யுத்தத்திற்கு வேண்டுவனவற்றையெல்லாம் குறைவின்றிச் செய்துமுடித்து, சுதரிசனத்தைத் தாங்கிய பாந்தகையையுடைய திருமால், அக்கினிக்கண்ணையுடைய சிவபெருமானது உயர்ந்த வெள்ளிமலையாகிய அழகிய கைலாயத்தை யடையச்சென்று சபதிக்கின்ற ஈங்காசலம் தேக்கெடுக்கின்ற சடையையுடைய சிவபெருமான திருக்கோயிலின் திருவாயிலிலெய்தினார்.

நந்தி பாலவ ணியன்றன யாவையு நவின்றான
சிந்தை கூர்தர வாங்கவ னுணர்ந்தனன் சென்று
னெந்தை சேவடி யிறைஞ்சின னிருந்துணர் லங்கற்
பைந்து ழாயினோ னடைந்தன னெனப்பது பகர்ந்தான்.

(இ - ள.) அப்படிச்சென்ற திருமால், திருநந்திதேவரோடு நடந்தனவற்றையெல்லாங் கூறினார். அத்திருநந்திபகவான மனங்களிப்பூர அவற்றைத்தெரிந்துகொண்டு சந்நிதானத்தினுட்சென்று, எமது தந்தையாகிய சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளைவணங்கி, பசிய பூங்கொத்துக்களோடே கூடிய பெரிய துளசிமாலையணிந்த திருமால வந்தனனென்பதைத் தெரிவித்தனர். எ - று. ()

ஒருமருங்குறை மரகதப் பசுங்கொடி யோடுஞ்
செருவு வந்தெழு வேட்கையிற் சினவிடை யுகைத்து
வருவ தோர்ந்தனன் றெழுந்தனன் மழைமுகில வண்ணன்
கருணை மிகவெழுந் தளித்தன னோக்கினன் களித்தான்.

(இ - ள்.) (உடனே சிவபெருமான்) தமது ஒப்பற்ற வாமபாகத்தில் வசிக்கும் பசிய மரகதக்கொடிபோன்ற உமாதேவியாருடன், போர்புரிதலிற் களித்தெழுந்த விருப்பத்தோடு, கோபம்பொருந்திய இடபவாகன மூர்ந்து எழுந்தருளுவதை, காளமேகம்போலும் நிறமுடைய திருமால உணர்ந்தனர். கருணை மிகுந்தெழுந்து அநுக்கிரகித்ததைக் கண்டுகளித்தனர். எ - று. (உ௪௫)

அடைந்த வானவ ரினிதெழுந் தருள்வது நோக்கி
மிடைந்து வீழ்ந்தனர் பாடினா ராடினர் வியந்தார்
தடங்கொ டிஞ்சியந் தேரினை நோக்கினன் றையற்
கிடங்கொ டுத்தரு ளெம்பிரா னினிதுகொண் டியைந்தான்.

(இ - ள்.) திருக்கைலாய கிரியை யடைந்த தேவாகள், சிவபெருமான் இனிதாக வெழுந்தருள்வது கண்டு, நெருங்கி நமஸ்கரித்தார்கள். துதி செய்தாாகள. ஆநந்தக் கூத்தாடினார்கள். சந்தோஷித்தார்கள. உமாதேவிக்கு வாமபாகத்தைக் கொடுத்தருளிய சிவபெருமான் விசாலமாகிய [கொடிஞ்சி] மொட்டினையுடைய அழகிய தேரினைக் கண்டு இனிதாகச் சம்மதித்தனா எ - று. (௨௪௬)

மூரி வெள்ளிமி லேறுவிட் டிழிந்தனன முதல்வன்
மேரு மால்வரை யொருதனி விலலொடு மேவித
தேரி னோதனி யெடுத்தற மிதித்தலுந் தெறித்துப்
பாரு மச்சமுற றிழிந்தது தோந்தடம பரப்பு.

(இ - ள.) வலிதங்கிய வெள்ளிய இமிலையுடைய இடபத்தை விட்டுச் சிவபெருமான இழிந்தருளி, ஒப்பெறற தனியாகிய பெரிய மேருமலையாகிய வில்லுடன பொருந்திய தேரினை மிதித்தருளிய மாத்திரமே, தெறிபட்டுப்பாரும் அச்சம உடைபட்டு, தேரின விசாலமாகிய பரப்பானது நிலமிசைப் பொருந்த இழிந்து விழுந்தது. எ - று. (௨௪௭)

மடுத்தெ டுத்தனன வெள்விடை யுருக்கொடு மாய
னெடுத்த வப்பரம பொறுக்கலா னிருதொளை நாசி
விடுத்தெ ழுந்தன குருதிநீா விழித்துளை பிதுங்கிப்
படுத்த வாயவழி யுமிழ்ந்தனன குருதிநீாப பரவை.

(இ - ள.) அதனைக் கண்ட திருமால, வெணமைதங்கிய இடபவாகன வடிவந்தாங்கிச் சிவபெருமானை உடனே தாங்கினா. அப்படித் தாங்கிய அப்பாரத்தினைப் பொறுக்க மாட்டாதவராய நாசியின இருதொளைகளிலும உதிரநீரானது தோனறிப பெருகியது. இருவிழிகளும வெளிப்பட்டு வாயவழியாக உதிரநீாப் பிரவாகத்தைச் சிந்தினா எ - று. (௨௪௮)

வெருளி யோங்கினா விணணவா வெளவிடை யாய
கருவி மாமழை வணணனும பொறுக்கலன கவன்று
ளிருதா ளைப்பத மடக்கினன கவிழ்ந்தன னிவறறுற
பொருதி றற்கொடு வில்லியை நோக்கினா புகல்வாா.

(இ - ள.) அதனைக் கணட தேவாகள பயந்து ஏக்கமெய்தினா. வெள்ளிய இடப வடிவேறற பெரிய மோகவண்ணராகிய திருமாலும் சகித்தற் கேலாதவராய் வருந்தினர். தமது இருபாதங்களையும மடக்கிக்கொணடு கீழே கவிழ்ந்தனா, இவற்றால், போர் செய்யத்தக்க கொடியவில லேந்திய சிவபெருமானைத் தேவர்கள் நோக்கி விண்ணப்பிக்கின்றாகள், எ - று. (௨௪௯)

எந்தை யேயுனக் கபயமற் றெவ்வுயிர்த் தொகைக்குந்
தந்தை யேயுனக் கபயமெந தலைவர்க்கு முதலா
முந்தை யேயுனக் கபயமென் றிரந்தனா மொழிந்தா
ரிந்து சேகரன் மாயவற குறித்தன னிரங்கி.

(இ - ள்.) எமது தந்தையே! தேவரீருக்கு அடைக்கலம். எல்லா உயிர்த் தொகைகளுக்குத் தந்தையே! தேவரீருக்கு அடைக்கலம். எல்லாத் தலைவர்களுக்கும் முதன்மையானவரே! தேவரீருக்கு அடைக்கலமென்று யாசித்துக்கூறி முறையிட்டார்கள். சந்திரனைச் சடையிலணிந்த சிவபெருமான் திருமாலைக் கருதித் திருவுளமிரங்கி எ - று. (உ௰)

முக்க ணெம்பிரா னிரங்கலு முளரிபூத் தெழுந்த
மைக்க ரும்புயல் வண்ண னுக் கெறுழ்வலி வாய்ப்ப
வொக்க நின்றது தெய்வவான் றேரமல ருவந்த
திக்கு மாமுகன் றனைநெடு நினைத்தனர் தேவர்.

(இ - ள்.) திரிநேத்திரங்களையுடைய எமது சிவபெருமான் திருவுளமிரங்கவும், கரியநீலமேக நிறமுடைய திருமாலுக்குப் பெருவல்லமையுண்டாக, தெய்வீகம் பொருந்திய சிறந்த தேரானது சமானமாக நின்றது. தாமரைமலரில் வசிக்கும் சிறந்த நான்குமுகங்களையுடைய பிரமனுடன் தேவர்கள் அதனைக்கண்டு பிரமித்தார்கள். எ - று. (உ௰க)

மடந்தை பாகனு மாமழை வண்ணனை நோக்கி
யடைந்த பேருவ கைப்பெருங் கடலினு ளாகித்
தொடர்ந்த சிந்தையின் வேண்டுவ சொல்லுதி யென்றான்
படர்ந்த வார்சடைப் பண்ணவற் கின்னணம் பகரும்.

(இ - ள்.) அப்பொழுது, பார்வதிபாகராகிய சிவபெருமானும் சிறந்த மேகவண்ணராகிய திருமாலைப்பார்த்து, பெரிய சந்தோஷப் பெருக்காகிய பெருங்கடலில் மூழ்கினவராகிப் பதிந்த திருவுள்ளத்தோடு, நீவிரும்பியவரங்கேட்பாயாக வென்றனர். படர்ந்த நெடிய சடையையுடைய சிவபெருமானுக்குத் திருமால் இவ்வகையாகச் சொல்லுகின்றார். எ - று. (உ௰உ)

சத்தி யோர்புடை யிருக்கவும் யானுமோர் சத்தி
யொத்தி டப்புரிந் தருளினை யாதுபோ லுடையாய்
வித்த கச்சதனி யேறனை யாயினும் வினையே
னத்த னித்திற லேற்றெனத் தாங்குறற் கருள்வாய்.

(இ - ள்.) என்னை யடிமையாக வுடையவரே! தேவரீருடைய சத்தி ஒரு பக்கலிலிருக்கவும் அடியேனையும் ஒருசத்தியை யொப்பாகச் செய்தருளினீர். அதுபோலவே, ஒப்பற்ற ஞானசொரூபமாகிய இடபவாகனத்தையுடைத்தாயிருக்கின்றீரானபோதிலும், அடியேனும் அத்தகைய ஒப்பற்ற வலிதங்கிய இடபம்போலத் தேவரீர் திருமேனியைப்பரித்தற்கு அநுக்கிரகிக்கவேண்டும்.

என்ப தாயவீ தளித்தனை நின்னையெஞ் ஞான்று
மென்ப தத்துணை மறப்புறு தருடர வேண்டு
மின்ப டுந்திறல் வேணியோ யென்றலும் விமலன்
றனபெ ருந்திருக் கருணையா லவற்கவை தந்தான்.

(இ - ள்.) என்று சொல்லுவதாகிய இவ்வரத்தைத் தந்து, எக்காலத்தும் தேவரீருடைய மெல்லிய உபயபாதங்களை மறவாமற்படி திருவருள் புரியவேண்டும், மின்னலை வீசுகின்ற வலியசடையையுடைய சிவபெருமானே! என்று

யசிக்கவும், புனிதராகிய சிவபெருமான் தமது சிறந்த பெருங்கருணைத்திறத்தால் அத்திருமாலுக்கு அவற்றை யநுக்கிரகித்தனர். எ - று. (௨௯௪)

ஓட்டு தேரெனத் திசைமுகன் றன்னொடு முரைப்பக்
கோட்டு நான்மறைப் பரியுகைத் தியக்கினன் கொடிஞ்சி
நீட்டு தேர்நிலை திரிந்தில மத்திகை நீட்டிப்
போட்ட னன்குல மலரயன் புரவியம் புறத்து.

(இ - ள்.) சிவபெருமான் இனிததேரினை யோட்டுகவென்று நான்குமுகங் களையுடைய பிரமனோடு திருவாய் மலர்ந்தருள, கூட்டமாகிய நான்குவேதப் புரவிகளையேறி யோட்டினன். கொடிஞ்சியையுடைய உயர்ந்ததேரானது நிலை திரிந்திலது. தன்கையிலேந்திய குதிரைச் சமமட்டியைநீட்டி, சிறந்த தாமரை யில் வசிக்கும் பிரமன் குதிரைகளின் முதுகிலடித்தனன். எ - று. (௨௯௫)

வேத வாம்பரி தங்களி னுவன வெருவிக்
காதி யோங்கலுந் திகிரிநின் றசைந்தில காணூ
வோது சிந்தையின யாவரு முணர்ந்தனர் வதனப்
போத கத்தினன் செயலென யாவரும் புலந்தார்.

(இ - ள்.) தாவிச்செல்லும் வேதமாகிய குதிரைகள் தங்களாலாவனவரை யில் பாய்ந்து விரைந்து நடக்க முயன்றும், சக்கரங்கள் நின்ற நிலையினின்று அசையவில்லை. அங்குள்ள தேவர் முதலியயாவரும் அதனைக்கண்டு மனதில் ஆலோசித்தவர்களாய், இது யானைமுகமுடைய கணேசபெருமான் செய லென்று எல்லோரும் மனம் வருந்தினார்கள். எ - று. (௨௯௬)

குருத்தி ளம்பிறைக் கண்ணியோன் றன்மகற் குறித்துக்
கருத்தி னோர்ந்துள யாவையுங் கொடுத்தனன் கமழ்பூந்
தருத்த லத்தினோ ரயனொடு மருச்சனை தந்தார்
மருத்து ழாயினோ னவ்வணந் தொழுதுள மகிழ்ந்தான்.

(இ - ள்.) மிக்க இளம்பிறைச் சந்திரனைச் சிரோமாலையாக வணிந்த சிவ பெருமான் தமது மூத்தகுமாரராகிய கணபதியைக் குறித்து மனதிற் கருதியவற் றையெல்லாம் உபகாரஞ் செய்தளித்தனர். மணஞ்சிந்தும் மலர்களமைந்த கற்பக விருக்ஷத்தையுடைய தேவலோகத்திலுள்ள அமரர்கள் பிரமனோடும் கணபதியைப் பூசித்தார்கள். வாசந்தங்கிய துளசிமாலைதரித்த திருமால் அவ்வகையே அவ ரைப்பணிந்து மனங்களித்தனர். எ - று. (௨௯௭)

மூத ரிந்துணர் கயமுகன் மூடிகத் தெழுந்தான்
சூத மாமுத றடிந்தவன் றோகையி னிவர்ந்தான்
சீத ரன்பெருங் கலுழனிற சிறந்தனன் சிறைப்பா
லோதி மத்தினோ னோதிம முகைத்தன னொருபால்.

(இ - ள்.) முற்றறிந்துணருந் தன்மையுடைய பழைய யானைமுகக்கடவுள் பெருச்சாளிவாகனத்தி லாரோகணித்தனர். பெரியமாமர வடிவாயிருந்த சூர பன்மனைச் சங்கரித்த குமாரசுவாமி மயில்வாகனத்திலேறினர். திருமகளை மார்

பிற்பிரித்த திருமால் பெரிய கருடவாகன மூர்த்தனர். பாலைப்போலும் வெள்ளிய சிறகுகளமைந்த அன்னவாகனத்தினையுடைய பிரமன் ஒருபுறத்தில் அன்னத்தை வாகனமாகச் செலுத்தினன். எ - று. (உஙஅ)

புரந்த ராதியு ரெண்மரும் புடைபடுங் கரடக்
கரந்த ருங்களி றாதிய வாகனங் கடவ
வரந்த ருந்தவ ரெழுவரு மாசிவாழ்த் தெடுப்ப
விரங்கு மின்னிசை தும்புரு நாரத ரிசைப்ப.

(இ - ள்.) இந்திரன் முதலிய அஷ்டதிக்குப் பாலகரும் பக்கங்களிலே, மதசலம்பொழியுந் துதிக்கையையுடைய யானைமுதலிய வாகனங்களைச் செலுத்தவும், சிரேஷ்டம் பொருந்திய தவசிகளாகிய சப்தருஷிகளும் ஆசீர்வசனஞ் சொல்லி வாழ்த்தவும், ஒலிக்கின்ற இனிய இசைப்பாடலகளைத் தும்புரு நாரதர் பாடவும். எ - று. (உஙக)

விஞ்சை நாட்டவர் மாகத ரெனவெதிர் வியப்பக்
கஞ்ச யோனியை முதலினோர் கைதொழுந் தகையோ
னஞ்ச யின்றவன் திருமுன நடந்தரு ணந்தி
யெஞ்ச லிலதோர் வேத்திரத் திருக்கர மெடுப்ப.

(இ - ள்.) வித்தியாதரர்கள் [மாகதர்] புகழ்பாடுவோராக எதிரே நின்று துதிசெய்யவும், தாமரைமலரிலுதித்த பிரமனைமுதலானவர்கள் பணியத்தக்கவரும் ஆலாலவிஷத்தை யருந்தியவருமாகிய சிவபெருமான் திருமுன்னே நடந்துசெல் லும் திருநந்திதேவரானவர் குறைவிலலாத சிறப்புடைய ஒப்பற்ற பிரம்பினைத் தாங்கிய திருக்கரத்தையுயர்த்தி நடத்தவும். எ - று. (உஙo)

தேவ துந்துமி முழக்குறச் சிலலரிப் படுத்த
பாவு கட்டடு சல்லிகை யோங்குறப் படரவான்
மேவு துள்ளொலி முருட்டொடு வெம்முழ வதிர
வோவில் பேரிய மாதிரம் பிளப்பநின் றொலிப்ப.

(இ - ள்.) தேவதுந்துமி முழங்கவும், சிலபருக்கைகளிட்ட பரந்தகண்ணையுடைய சல்லிகையொலிக்கவும், படர்ந்த ஆகாயவரையிற் செல்லும் துள்ளிய வோசையுடைய முருட்டுடன் வலிய மத்தளம் அதிரவும், கெடுதலில்லாத பேரொலிவாச்சியமாகிய பேரிகை திசைகள் பிளவுபடும்படி சப்திக்கவும். எ-று.

வளைக்கு ழாத்தொடு வலம்புரி வலம்பட முழங்கத்
தொளைக்கு லம்படு கருவியெண் டிசையொடுந் தொடர
முளைத்த வெண்பிறை வெள்ளெயிற் றிருங்கண மொய்ப்ப
விளைத்த வெஞ்சினக் கடவுளர் தானைசூழ் மிடைய.

(இ - ள்.) வெற்றியுண்டாகும்படி சங்குக்கூட்டங்களோடு வலம்புரிச் சங்கங்களும் கோஷிக்கவும், தொளைக்கூட்டங்கள் நிறைந்த (தொளைக்கருவியாகிய) வாத்தியங்களினொலி அஷ்டதிசைகளிலும்பரவவும், வெள்ளிய பிறைச்சந்திரன் முளைத்தாற்போன்ற வெள்ளிய பற்களையுடைய பெரிய சிவகணங்கள் நெருங்கவும், மிக்க கோபம்பொருந்திய தேவசேனை புடைசூழ்ந்துவரவும். எ - று. ()

உருண்ட வாழியி னதிர்குரற் பிரளய முடைத்துப்
புரண்ட காலையின் மலையின மும்மடி பொலிய
வரண்ட ரும்புர மோரிடத் தமர்ந்தன வந்நாண்
முரண்ட ருந்திருத் தேர்கடந் தெதிர்ந்தது முன்னி.

(இ - ள்.) அதிர்குரலையுடைய பிரளயவெள்ளமானது உடைபட்டுப் புரண்டகாலம்போல, தேரின் உருண்ட சக்கரத்தினால் மலைத்தொகுதிகளும் அடிபடவும், வலிமைபொருந்திய அழகிய இரதமானது விரைந்து நடந்தது. அக்காலத்தில் மதில்கள் சூழ்ந்த முப்புரமும் ஓரிடத்திலிருந்தன. எ - று. (உ௯௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாயன் மாயையி னிருங்கடற படிந்தெழா வாளெயிற றசுரர்க்கண்
றேய கண்களுந் திண்டிறற புயங்களு மிடந்துடித் தனவன்னோ
சேயி ழைக்குல மங்கையர் மங்கலங் கழன்றன சிறைக்காக்
மாய்கொ டுஞ்சிறை பிணங்கிவீழ்ந் தெழுவன முன்றிலங் கணமெல்லாம்

(இ - ள்.) திருமாலின் மாயையினால் பெரிய கடலிற படிந்து எழுந்திராத வெள்ளியபற்களையுடைய அசுரர்களுக்கு, அப்பொழுது பொருந்திய கண்களும் வலிய பராக்கிரமம் பொருந்திய தோள்களும் இடப்பக்கத்தில் துடித்தன. அவ்வசுரர்களுடைய செவ்விய ஆபரணங்களை யணிந்த மாதர்களது மங்கல சூத்திரங்கள் கழுத்திலினின்று கழலுவனவாயின. சிறகுகளையுடைய காகங்கள் ஆய்ந்து விழுந்த சிறகுகள் கோடி அவர்கள் வாயிலகடோறும் வீழ்ந்தெழுந்தன. எ - று.

என்னை யாளுடை நாயகன் பூசையா லெழுந்தகற பகமெல்லாம்
பின்ன ரெங்ஙனம் போயின கண்டிலா பேரிருட் கனவெல்லாந்
துன்ன லம்பெறக் காணபன வன்றினன் னலத்தொடா காணாரற
பொன்ன லங்கொளி மாளிகை யிருளொடும் பொலிந்தன பகற்காலை.

(இ - ள்) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான் பூசாவிசேடத்தால் விளங்கிய கற்பக விருட்சங்களயாவும் அதன் பின்னர் யாண்டுச் சென்றனவோ ஒருவரும் பார்த்தாரில்லை. அவர்கள் இரவிற் காணும் சொப்பனங்களெல்லாம் துர்நிமித்தங்களாகக் காணப்படுவன வல்லாமல் நன்னிமித்த சம்பந்தத்தைக் காணாராயினா. பொன்மயமாகப் பிரகாசிக்கின்ற மாளிகைகள் பகற்காலத்திலும் இருளோடு விளங்கின. எ - று. (உ௯௫)

மணிம திட்புரத் தவரிவை நோக்கினா வருந்தினர் ரதுகாலை
யணிம ணிக்களத் தனையிரந் தேத்தின ரரிமுத லிமையோர்க்
டிணித டஞ்சிலை குழைதர வளைத்துநீ செலுத்துதி யம்பென்னுப்
பணிய வாசுகி குதைமடுத் தேற்றினன் பணிமதிச் சடையோனே.

(இ - ள்.) அழகிய மதில் சூழ்ந்த முப்புரத்தவர் இவற்றைக் கண்டார்கள். அப்பொழுது வருந்தினார்கள். அழகிய நீலரத்தினம்போலும் ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானைத் திருமால் முதலிய தேவர்கள் யாசித்துத் துதிசெய்தார்கள். வலியவிசாலமான மேருமலையாகிய வில்லைக்குழையும்படி வளைத்துத் தேவரீர் அம்பினைச்செலுத்துகவென்று விண்ணப்பித்து வணங்க, குளிர்ச்சிதங்கிய சந்திரனையணிந்த சடையையுடைய சிவபெருமான், சர்ப்பமாகிய வாசுகியை வில்லின் குதையைவளைத் தேற்றினர். எ - று. (உ௯௬)

'இடத்திருக்கர மேருமால் வரைசசிலை யேந்திப் பூண்டியதன்னேன்
மடற்ச ரோருக வலம்படு மலர்க்கரம் வாளிசுற் றியதாங்கண்
புடைத்த வெம்முலை யிமாசலை திருமுக நோக்கினன் புன்மூரற்
படுத்து நோக்கின னெழுந்தது புரமெனு மூன்றினும படலத்தீ.

(இ - ள்.) அவ்விறைவனுடைய இடது திருககரமானது பெரிய மேருமலையாகிய விலலைத்தாஙகி யூனறியது. இதழகளையுடைய தாமரை மலாபோன்ற வலததிருககரமானது வெற்றிபொருந்திய அமபினைக் கவாநதது. அப்பொழுது பூரித்த வலியதனஙகளையுடைய இமாசல புததிரியாராகிய உமாதேவியாருடைய திருமுகததைநோககிப் புன்னகைசெயது கடைககண சாததியமாததிரமே மூப் புரஙகளிலும படலத தீயானது எழுநதது. [படலை=பரநதவடிவு.] எ - று.

அருப்ப வெண்ணிறத துய்யிடைப பெருஙகன லடுதலெதன வணிமூரா
லுருதத வெநதழற கொழுநதுற வெண்ணிறத தடலையி னெழிநதறற
திருதது மாணிதிச செல்வரா யிரபபவாக களித்துறுநதீயோா தம
பெருதத செலவநீத தொழிநதென மடிந்தவப பெருநகர்பபுரமூன்றும்

(இ - ள்.) வெணணிறம பொருநதிய அறபமாகிய [துய] நாற்குமபஞசின நுனியில் பெருநதியடைநதாறபோல, அழகிய புனனகையினின றெழுநத கோபாககினிக கொழுநது பொருநத, அப்பெரிய நகரஙகளாகிய மூப்புரஙகளும, திருததமாகிய பெரிய நிதிச்செலவராயிருநதும யாசிததோர்ககுக கொடுததல புரியாத கொடியோராகிய உலோபிகளுடைய, பெரிய செலவமானது நீஙகிச் சென்றாற்போல வெணணிறநதஙகிய சாமபராயொழிநதுபோயின. எ - று.

ஆன மாயையி னகபபடா தரனடி யருச்சனைக குரியோரா
மோன மாதவ ராகிய மூவரு முரிதிலைப புனறபூதத
தேன வாமலாத தாமரை யொததநம மனையொடுஞ சிறபபுறறோா
பான லங்கருங கணணியோ ரிடநதனை யடைநதனா பணிநதுறறோா.

(இ - ள்.) ஆகிய திருமாலின மாயையில அகபபடாதவாகளாய், சிவபெருமான் திருவடிகளில அாசசனைசெயதறகு அனபுடையவர்களாய, மௌனமும் பெருநதவநிலையு முடையவாகளாகிய (விரதததன பரமயோகன குணபரனென் றும) மூவாகளும, முரிகினற அலைகளையுடைய நீரில மலாநத வணடுகள விரும் பும தாமரைமலரையொதத தமது மாளிகைகளோடும சிறப்புறறிருநதவாகளாய், நீலோற்பலமபோலும கரிய அழகிய விழிகளையுடைய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய சிவபெருமானைச சாாநது வணஙகி நினறாாகள எ - று.' (உகசு)

மெய்பொ டிததனர் கண்கணீா ததுமபினர் விமமினா வியபபுற்றார்
செயய தாமரைச சேவடி யுளம்படச சிநதைசெய் தனாநின்று
ரைய ஞங்கவாக் குறிததுநீா வேணடுவ யாவென வருளசெய்தான்
பொய்யில் கேள்வியோா நநதியோ டிருஙகடை காபபது புரிகென்றார்.

(இ - ள்.) உடல்புளகிததார்கள. கணகளில ஆநநதபாஷ்பம் பெருக்கினார்கள. பூரிததாாகள. சநதோஷிததாாகள். செவவிய தாமரைமலாபோன்ற சிவநத திருவடிகளை மனதிற்பொருநதத தியானிததாாகள. பணிநது நினறாாகள். அப்பொழுது சிவபெருமான் அவாகளைநோககி நீஙகள விரும்புவன யாவையென்று

னவியருளினர். பொய்ம்மையில்லாத நற்கேள்வியையுடைய அவர்கள் ஐயனே! அடியேங்கள் சந்நியம் பெருமானுடன் திருக்கடைக் காவல்புரியும்படி அருள் புரிய வேண்டுமென்றார்கள். எ - று. (௨௭0)

வாலொ ளிப்படு கயிலையங் கிரிதரு சினகர மணிவாயகத
வால யக்கடை காப்பதி யாவர்க்கு மளித்தில மாஞலு
மாலி யற்கையி னுங்களை மகிழ்ந்தன மாதலி னுமக்கந்தக்
கோல வாயில்காப் பளித்தன மென்றனன் குளிர்சடைப் பெருமானே.

(இ - ள்.) வெண்ணிறம் பொருந்திய அழகிய கைலாயகிரியின் திருக்கோயி லினது மணிகள் பதித்த ஆலயவாயிலின காத்தற்றொழிலை எல்லோருக்குங் கொடுத்திலோம். ஆனபோதிலும, சாஸ்திரமுறைப்படி நடந்த உங்களை மகிழ் வுற்றோம். ஆனபடியால், அந்த மணிதங்கிய அழகிய திருவாயில் காக்குந் தொழிலை உங்கட்குக கொடுத்தோமென்று குளிர்ந்த சடையையுடைய சிவபெரு மான் வரங்கொடுத்தனா. எ - று. (௨௭௧)

பங்க யாசனத் தவனையே முதலினோ யாவர்க்கும பணிவெற்பின்
மங்கை பாகன்வேண் டினவர மியாவையும் வரன்முறை பணித்தீந்தான்
பொங்கு முப்புரத தலைவரம மூவரைக் கணத்தொடும புகவிட்டா
னெங்க ணாயகன் கணங்களோ டணிமணிக் கயிலையி னினிதுற்றான்.

(இ - ள்.) தாமரைமலர்ப் பீடத்தையுடைய பிரமன் முதலாகிய தேவாக ளெல்லாருக்கும், இமாசல புத்திரியாரை வாமபாகத்திலுடைய சிவபெருமான் வேண்டியவரங்களைக கொடுத்தனர் வரன்முறையாக மேம்பட்ட முப்புரத்தி லிருந்து உச்சீவித்த அச்சிறந்தோா மூவரைச் சிவகணங்களோடுசேர விட்டுத்த னா. எங்கள் நாயகனாகிய சிவபெருமான அதனபின்னா, சிவகணங்களோடு அழ கிய நவரத்தின கசிதமாகிய திருக்கைலாயகிரிக்கு இனிதாக வெழுந்தருளினா.

பதும பீடிகைத திருமகட் கிறைவனை முதலினோர் பணிப்பிள்ளைப்
புதுமதி லாவணி வேணியோன றன்செய லினைந்தனா புதுக்கொண்டா
ரெதுகொ டுந்துய ரடைந்தன நமக்கது துடைப்பதற கிடைநின்றான்
முதிரு மாதவத தருமகப் பெற்றவா காப்பது முனிவாரோ.

(இ - ள்.) செந்தாமரை மலாப்பீடத்திலுள்ள திருமகள கொழுநனாகிய திருமால் முதலாகிய தேவாகள், இளம்பிறைச் சந்திரனையணிந்த சடையை யுடைய சிவபெருமான திருவருட் செயலைக்கருதி அதிசயித்தாாகள். எந்தக் கொடிய துன்பத்தையடைந்தோமோ. அதனையகற்றுதற்குச் சிவபெருமான் நடு வினின்றனர். முதிர்ந்த பெருந்தவஞ்செய்யும் அரியகுழந்தைகளைப் பெற்றோர் அக்குழந்தைகளைக காப்பாற்றுதற்குக கோபிப்பாாகளோ? கோபிக்கமாட்டார்கள்

வெள்ளை வெண்பொடி யிகந்தவ ருருத்திர மாமணி வெறுப்புற்றார்
தெள்ளு மாமறை யஞ்செழுத் தோதுறா சிவனருச் சனைசெய்யார்
பள்ள வூர்கட னெடுங்கிலத தருந்தவம பற்பல புரிந்தாலுங்
கள்ள வாழ்க்கைய ராங்கவர் கருததிறை நினைப்பதுங் கடனன்றே.

(இ - ள்.) தூவள்ளியமான திருவெண்ணீற்றைப் பகைத்தவர்களும், சிறந்த உருத்திராக்க மணியினிடத்தில் வெறுப்பெய்தியவர்களும், பெருமைதங்கிய வேதத்தின் றெள்ளிய பொருளாயுள்ள ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைச் சபிக்காதவர்களும் சிவபெருமானை யர்ச்சியாதவர்களும், பள்ளமாகிய நெடிய கடல் சூழ்ந்த பெரிய பூமியில் எண்ணிறந்தனவாகிய அரியதவங்களைச் செய்தபோதிலும் கள்ளத்தன்மைபொருந்திய வாழ்க்கையை யுடையவர்களாவார்கள். அவர்களை மனதில் இறைப்பொழுதாவது நினைப்பதுவு கடனன்று. எ - று. (உஎசு)

என்மொ ழிக்கொடு மானத வாவியி னெந்தையெம் பெருமானு
மனனு வப்புற வருச்சனை வகுத்தனர் பற்பல மகிழ்பெற்றார்
தனதெ னும்பதந் தலைப்பட்டனர் மன்னரிற் றழைசெவித் தனிப்பூட்கைக்
கனைகு ரற்களி றுரித்தவன் றன்மையார் கழறுதற் கரிதன்றே.

(இ - ள்.) என்று சொல்லிக்கொண்டு மானததீர்த்தத்தின்கரையில் எமது தந்தையாகிய சிவபெருமானும் மனமகிழ்ச்சியெய்தும்படி பூசைபுரிந்து எண்ணிறந்த களிப்பையடைந்தார்கள் தங்கடங்களுக்குரித் தெனனும் பதவிகளில் அரசர்போலச் சார்ந்தார்கள். தழைத்த செவியையும் இமபுரியணிந்த கோட்டையும் திகைக்கையையுமுடைய பிளிறுகின்ற குரலையுடைய கயாசுரனென்னும் யானையையுரித்துடுத்த சிவபெருமானது சிறப்பு நாம எடுத்துச் சொல்லுதற்கரி தல்லவா? எ - று. (உஎஎ)

திரிபு ரத்தவ ரொருங்கிருந் தருச்சனை செய்திகழ்ந் தநனுலே
யரிதெ னுந்திருப் பெற்றிழந் தனர்கண்முற் புரியருச் சனைப்பேற்றா
லுரிய நன்கணத் தலைவராய்ப் பொலிந்தன ருமையிடந் தவறபோற்றித்
தெரித ரப்புரி பூசையா லிமையவர் திரிபுரந் தெறப்பெற்றார்.

(இ - ள்.) திரிபுராசுரர்கள் ஒன்றாயக்கூடிச் சிவார்ச்சனைசெய்து பின்னர் இகழ்ந்தனரானபடியால், அடைதற்கரிதென்று சொல்லுஞ் செல்வத்தையடையப்பெற்றும் இழந்தவர்களானார்கள். (அவர்களில்மூவர்) பூர்வத்திற்புரிந்த சிவார்ச்சனைப்பலனால், சிவபெருமான்பால் அன்பிற்குரிய நல்ல சிவகணத்தலைவர்களாய் விளங்கினார்கள். உமாதேவியை யிடப்பாகத்திலுடைய அவ்விறைவனைத் துதித்து, பலருமறியும்படி யியற்றிய சிவபூசையால் தேவர்கள் தங்கள் பகையாகிய முப்புரங்களும் அழியப்பெற்றார்கள். எ - று. (உஎஅ)

பெறல ரும்பத மிழந்தவா னவர்சிவ னருச்சனை பெறப்பெற்றுங்
குறுபெ ரும்பதம் புகுந்தன ரரியொடு நான்முகத் தயர்புத்தே
ணறும லர்ப்பழு தகற்றிய பூசையாற் றமபதந் நணுகுற்றா
ரறனு வட்டெறி சடையினென் பூசனை யரிதெமக் கெளிதன்றே.

(இ - ள்.) அடைதற்கரிய தங்கள் பதவியை யிழந்த தேவர்கள் சிவார்ச்சனை மீண்டும் அடையப்பெற்று, அதனாற் பொருந்திய தமது உயர்ந்த பதவிகளை யடைந்தார்கள். திருமாலுடன் நான்குமுகங்களையுடைய உயர்ந்த பிரமனும் குற்றமகற்றிய நல்ல மலர்கொண்டியற்றிய பூசாபலத்தால் தங்கள் பதவியை யடையப்பெற்றார்கள் கங்கையாறு ஊற்றெடுக்கின்ற சடையையுடைய சிவபெருமான் பூசாமகிமையைச் சொல்வது எமக்கு அரிதன்றி எளிதன்று. எ - று. ( )

ஆரு யிர்ப்பொறை யெடுத்துமா நிலத்துறி னவைகொலப் பட்டனவாம்
வார்பு னற்சடைப் புனிதனுக் கருச்சனை வரன்முறை தாழ்வரும் [மெம்
மோரி னப்பெரும் பூசனைக் கருமமே முதலின வொருங்கிய
மார தற்குள பெருமைபெற் றிசைப்பவ ரெம்மனோர்க் கெளிதன்றே.

(இ - ள்) அரிய உயிர்ச்சுமை தாங்கிப் பெரியபூமியிலுதித்தால் கொல்லப் பட்டனவாம். அப்படியாயினும் நீர்ப்பெருக்கமைந்த சடையையுடைய சிவபெருமானை வரன்முறையே அர்ச்சனை செய்யவேணடும். ஆலோசிக்குமிடத்தில் அவ்வர்ச்சனைத தொழிலே கருமமுதலியவற்றை ஒருசேர உதவும். ஆனபடியால் அவ்வர்ச்சனைக்குரிய பெருமையையெய்தி விளக்கிச்சொலவோர் யாவர்? அது எம்மைப்போல்வார்க்கு எளிதானதல்ல. எ - று. (உஎஅ)

முனித ராயினும் வாளெயிற் றசுரரே யாயினு நெடுவானிற்
புனித ராயினும விஞ்சைய ராயினு மியக்கரா யினுமபோற்றற்
கினிய மாதவ ராயினு நாகாகந் தருவரா யினுமெம்மான்
பனிம லரப்பதத் தருச்சனைக் குரியரைப் பரசுறக் கடவாரே.

(இ - ள்.) முனிவர்களானாலும ஒளிதங்கிய பற்களையுடைய அசுரர்களானாலும் பெரிய ஆகாயத்தில் வசிக்கும் தேவர்களானாலும வித்தியாதரரானாலும் இயக்கர்களானாலும துதித்தற்கினியராகிய பெருந்தவசிகளானாலும் நாகர்களானாலும் கந்தர்வர்களானாலும் எமது சிவபெருமானுடைய குளிர்ச்சிவாய்ந்த தாமரைமலர் போன்ற திருவடிகளில அர்ச்சனைசெய்தற்குரியவர்களைத் துதிசெய்யக் கடமைப் பட்டவர்கள். எ - று. (உஎகூ)

திரிபுரவிசயச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகச் சருக்கம் உஅ க்குத் திருவிருத்தம் ௲௬சகூஉ.

---

இருபத்தொன்பதாவது

# அந்தகாசுரன்வதைச் சருக்கம்.

---

### கலிநிலைத்துறை.

மின்னைத் தொளிர்வா ளெயிறந்தக வெய்ய தீயோன்
பொன்னைத் தொளிர்வார் சடைப்புங்கவன் பூசை போற்றி
வன்னத் துளவோன் முதற்றேன் றியவானு ளோருக்
கின்னற் புரிந்தா னதுகூத னியம்ப லுற்றான்.

(இ - ள்.) மின்னல்போன்று பிரகாசிக்கின்ற வெள்ளிய பற்களையுடைய கொடிய தீயோனாகிய அந்தகாசுரன், பொன்போன்று பிரகாசிக்கும் நெடிய சடையையுடைய சிவபெருமான் பூசையைச்செய்து, நிறந்தங்கிய துளசிமாலை தரித்த திருமால்முதலாகிய தேவர்களுக்குத் துன்பமபுரிந்தனன். அச்சரிதையைச் சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்குச் சொல்லலாயினர். எ - அ. (க)

(இ - ள்.) இடபத்தைக கொடியாக வுயர்த்திச் சிவபெருமானை யர்ச்சிப்ப தற்கு உரியவர்களாகிப் பலகாலததைக் கழித்தார்கள். *அழகிய நீலோற்பலம் போலும் விழிகளையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமான் அப்பூசையைத் திருவுளததுணர்நது மிகுதியாகக களிப்பெயதினா. காயாம்பூவையொத்த திரு மேனியையுடைய திருமால முதலாகிய பெருஙகடவுளர் வசிககுமிடததிற்கெழுந தருளினர். அப்பொழுது அவர்கள் அன்புடனெழுநது நேரேசென்று மனததாற் பணிநது நேர்நின்று திருவடிகளை நமஸகரிததாாகள். எ - று (ரு)

என்னை யிததலையி ருந்து நுமபதமி ழுநது நம்பதமவ ணங்கினீ
ரன்ன செயபுதிமொ ழிதத னிததழல்வி ழிபபி ரானருள வனைவர்
மின்னெ யிற றுநிரு தகெகொ டுநதலைவர் வெமமை யாவையுமவி ளம்பினார்
நன்னு தறகொடியி டத்து முககணுநா டததி னைமறியி டததினன்.

(இ - ள.) ஒப்பற்ற தீவிழியையுடைய சிவபெருமான, தேவாகளே! நீஙகள் உஙகள் பதவிகளையிழநது இவவிடததிலிருநது நமமுடைய பாதஙகளைப பணிந தீரகள. யாதுகாரணம? அதனைச் சொலவீாகளாகவென்று திருவருள செயய, அததேவாகள மினனுகினற பற்களையுடைய கொடிய அசுரததலைவாகளது கொடுமைகளெலலாவற்றையும சொனனாாகள. மானை யிடககரததேநதிய சிவ பெருமான் நல்ல நெற்றியையுடைய பூஙகொடிபோல்வாளாகிய உமாதேவியார் பால் தமது திருவிழிகள மூன்றையுஞ் செலுததினா எ - று. (௬)

அக்க ணததவண்மு கதது நின்றுமுரு மொத்து வந்தவ தரித்தனண்,
மிக்க வெமபடைகக ரங்க ளொன்பதினி ரடடி கொணடனள வெளிப
படா, முககணற்பரசு தூக்கை யென்பணிமொ ழிநதி டெனறனள்
பொழிநதகாா, மைநத ளததனொரு கோப வாளரிவ ழஙகி யாநிலைவ
ழங்குவான்.

(இ - ற.) அககாலததில அவ்விறைவி திருமுகததினினறும இடியைப் போல வநது பிறநதனள. வலிமைமிகுநத ஆயுதஙகளேநதிய பதினெட்டுக் கைகளைததாஙகிததோனறி, திரிநேததிரஙகளையுடைய சிவபெருமானைததுதிதத தூககையானவள அடியாளுககு யாதுகட்டளை? திருவாய மலர்நதருளகவென்ற னள். காியமேகமபோலும் நீகணடததையுடைய சிவபெருமான, கோபநதந கிய ஒருவாட்படையை யநுககிரகிதது அப்பொழுது அவளுககுச்சொல்லுகின் றனா. எ - று. (எ)

வெம்பு வெமபுலிமு கததி னைமகிட வெநதொ ழிறகொலைய ரக்கனை
யும்ப ரோடரிம லாசச ரோருகனு லைநது தமபதமி ழநதனா
செமபு னறபடவ வாசசெ குததிவாசி றககு மபபதம ளிததியென
றமபி கைககிடம ளிதத நாயகன ளிதத லுநதழலவி ழிததனள்.

(இ - ள ) கொடிய கோபஙகொணட புலிமுகாசுரன, வெவவிய கொலைத் தொழிலபுரியயுமமகிடாசுரனுகிய இவாகளால, தேவாகளுமதிருமாலும் தாமரை மலரில் வீறறிருககுமபிரமனும் வருநதிததஙகடஙகள பதவிகளை யிழநதார்கள். உதிரப்பெருககுணடாக அவவசுராகளைககொன்று, இததேவாகட்குரிய சிறநத பதவிகளை யெய்தும்படி கொடுப்பாயாகவென்று, உமாதேவிக்குவாமபாகமுதவிய சிவபெருமான் திருவாய மலாநதருளவும, தூககாதேவி தீயெழவிழிததுப் பாாத் தனள். எ - று. (அ)

அண்ட கோளகைய திர்ந்தி டப்புவிய திர்ந்தி டப்புலிமு காசரன்,
மண்டு வெஞ்சமா முகத்து நின்றமாம லைந்து ருவழிம டித்தன, டிணடி
றற்கொடும ருப்ப ழற்கண்மகி டாசு ரன்செரும் முகப்படக, கொண்டெ
ழுந்தவெகு ளிப்பெ ருங்கடல்கொ திப்ப வெம்படைவி திர்த்தனள.

(இ - ள்.) அண்டகோளகை யதிரவும் உலகமதிரவும் புலிமுகாசுரனுடன் நெருங்கிய கொடியயுத்தமுகத்திலிருந்து, அவனமிண்டும் யுத்தஞ்செய்யாதவகை யாகச் சங்கரித்தனள் மிக்கவல்லபத்தையும வளைந்த கொம்பையும தீச்சொரியுங கண்ணையுமுடைய மகிடாசுரன யுத்தமுகத்திற்றோன்ற, மேற்கொண்டெழுந்த கோபமாகிய பெரிய கடலானது கொதிக்கும்படி வெவ்விய ஆயுதங்களைச் செலு த்தினள. எ - று. (கூ)

வாளெ யிற்றுமகி டாசு ரன்றனைவ ளைந்த வெஞ்சமர்வி ளைந்தநா
ளீள நின்றுநெடு நாளக ழிந்துறநெ ருங்கி வெஞ்சமர் ருக்கினாள
காள கூடவிட மொத்தெ ழுந்தமகி டனக னைக்குரலெ ழுப்பினான
கோளு திர்ந்தனவ திர்ந்த வெண்டிசைகு லுங்கி னறவகி லங்களே.

(இ - ள.) வாட்படைபோலும் பற்களையுடைய மகிடாசுரன், தன்னைச் சூழ்ந்துகொண்டு கொடியபோர் புரியவும, தாககை கோபித்து நின்று பலகாலங கழியும்படி மூண்டு பெரும்போர் செய்தனள. காளகூடவிஷமபோற்றோன்றிய மகிடாசுரன தனது பெருங்குரலைக்கிளப்பினான். அப்பொழுது நக்ஷத்திரங்க ளுதிர்ந்தன. அஷ்டதிசைகளும அதிர்ந்தன. உலகங்கள நிலைகுலுங்கின. எ-று.

ஒள்ளெ ரிப்பொறிவி ழிப்பி றந்திடவு ருத்து வாயிதழ துக்கியோர்
வள்ளி லைப்புகாமு கத்த வாளகொடும ருப்பு டைத்தலைது மித்தனள்
பள்ள வாரிதிநி மிர்ந்த செங்குருதி பாய வற்றுவிழு மத்தலை
பொள்ளெ னக்கடிதெ ழுந்து சென்றுருமெ னத்த முங்கமர்பு ரிந்ததால

(இ - ள.) ஒளிதங்கிய தீப்பொறியானது விழிகளினின்றுஞ் சிந்தும்படி கோபித்து வாயிதழைக்கடித்து, ஒரு கூர்மைதங்கிய அச்சவடிவாகிய உதிரப புள்ளிகள பொருந்திய முகத்தையுடைய வாளாயுதத்தால மகிடாசுரனது கொம்புகளுடைய தலையைத் தாக்காதேவி வெட்டியெறிந்தனள. பள்ளமாகிய கடலானது நிறைந்த தொத்த செவ்விய உதிரவெள்ளம்பெருக, அவ்வெள்ளத் தில வீழ்ந்த அம்மகிடத்தலை அதிவிரைவிலெழுந்துபோய இடிபோல முழங்கிப் போர்செய்தது. எ - று. (கக)

முச்சி கைப்படைதி ரித்தெ டுத்தனண்மு ழக்க மர்த்தலைம ருப்பினூ
டுச்சி குத்தினள முக்கி யத்தலைமி தித்த ருஞ்சமரொ ழித்தனள
பச்செ ளிக்கவுரி நூபு ரமபுனைப தந்தொ டப்பபெறு ராசர
னச்சி ரத்தையொழி யச்சி றந்தருள மைந்து மூதறிவ டைந்தனன.

(இ - ள்.) அதுகண்ட தாக்காதேவி, முத்தலைச் சூலாயுதத்தை யெடுத்துச் சுழற்றி, முழக்கத்துடன போர்செய்யும எருமைத்தலையின கொம்புகட்கிடை யே உச்சியிற் குத்தினள். அத்தலையை யமுக்கிமிதித்து அரியயுத்தத்தினை யகற் றினள். பசிய திருமேனியுடைய கௌரியின் பாதசரமணிந்த திருவடிதீண்டப் பெற்ற மகிடாசுரன் அத்தலையையகல, மேம்பட்டுத் திருவருள்பெற்று முதிர்ந்த ஞானத்தை பெய்தினன. எ - று. (கஉ)

**தரவுக் கொச்சகக் கலிப்பா.**

ஓரெட் டிதழ்வட்டத் துள்ளாய சட்கோணம்
பாரித்த முக்கோண வட்டப் பராபரையே
வாரிப் படுநஞ் சமுதாக்கும் வாலவளைக்கை
வேரிக் கரும்பேவிதை யின்றிவிளை மூலமே.

(இ - ள்.) ஒப்பற்ற எட்டிதழ்க்கமல வட்டத்தினுள்ளாகிய அறுகோணத்திற் பெரிய முக்கோணவட்டத்தினுள்ளே விளங்கும் பராபரையே! பாற்கடலி லுதித்த ஆலாலவிஷத்தை யமுதமாகச்செய்யும், இளமைதங்கிய வளையலணிந்த கையையுடைய மணந்தங்கிய கரும்புபோல்வாளே! வித்தையின்றி முளைத்த மூலப் பொருளே! எ - று. (௧௩)

ஆதியா யந்தத்தி னந்தமாய் நின்றோற்குப்
பாதியா யொன்றாய்ப் பலவாகிப் பல்லுயிராய்ப்
பேதியா நின்றாய் பெருமாட்டி நின்பெருமை
சோதியா நின்றாக் கெளிதன்றே தொல்லவமே.

(இ - ள்.) முதன்மையாகியும் இறுதிக்கிறுதியாகியும் விளங்கும் நித்தியப் பொருளாகிய சிவபெருமானுக்குப் பாதியாகியும், ஒன்றாகியும், பலவாகியும், பல் வேறுவகைப்பட்ட உயிர்களாகியும் வேறுபட்டு விளங்குகின்றாய். பெருமாட்டியே! உன்சிறப்பைச் சோதித்துணர்வார்க்கு இலேசானதன்று. [தொல்லவமே] மேன்மையானவளே! எ - று. (௧௪)

தோன்று சராசரங்க ளெல்லாந் தொடாவிடா
தேன்ற சிவமயமு நின்னன்றி யில்லையா
லான்ற விருப்பி னருந்துவன வின்றாமே
யூன்று சுவையுள்வோ நந்தா வொளிவிளக்கே.

(இ - ள்.) தோன்றப்படும் எல்லாச் சராசரங்களையும் வியாபித்து நீங்கா மற் பொருந்திய சிவமயமும் உன்னுடைய (சத்தி) மயமுமல்லாமல் வேறொன்று மில்லை. ஆனபடியால் நீங்காத மாணிக்கத்தீபம் போல்வாளே! அதிகரித்த விருப் பத்துடன் ஒருவர் புசிக்கும் பண்டங்களில்லையாயின் ஊன்றியுணரத்தக்க உருசி யென்பதொன்றுண்டோ? (இல்லையல்லவா) எ - று. (௧௫)

முச்செயலுங் காட்டி யவைபுரக்கு மூவரைத்த
னிச்சையிற் காட்டி யவருளத்து மெட்டாயாற்
பச்சை யிளங்கிள்ளைக் கிளிளாய் பரையேநின்
னிச்சையிவை யென்றால் விடுத்துணர வல்லாரார்.

(இ - ள்.) சிருட்டியாதி முத்தொழில்களையுங் காண்பித்து அத்தொழில் களைக் காக்கும் திரிமூர்த்திகளைத் தன்னிச்சாமாத்திரையிற் படைத்து, அத்திரி மூர்த்திகளுள்ளத்திலும் எட்டாமல் விளங்குகின்றனை. ஆனபடியால், இளமை தங்கிய மழலைச்சொல்லைக்கூறும் பசுங்கிளிபோல்வாளே! பராசத்தியே! உன்னு டையவித்தை இங்ஙனமாக விளக்கியுணரவல்லோர் யாவர்? ஒருவருமிலர். எ-று.

பேதாதி பேதம் பிறந்த வுயிர்த்தொகைக்கோ
ராதார மாகி யளவை யறிந்தளித்தா

யோதா மறைநா லுபநிடதத் துண்மயமாம்
பாதார விந்தம பெறப்பெற்றேன் பாதகனே.

(இ - ள்.) பேதாதி பேதங்களாகத் தோன்றிய உயர்ந்தொகுதிகளுக்கு ஓர் ஆதாரமாகி அவரவர் தநுகரணபுவன போகங்களை அளவறிந்து அநுக்கிரகித்தனை. ஓதற்கரிய வைதிக சமயாந்தமாகிய உபநிடதநூலின் உட்பொருளாகிய உன்னுடைய பாததாமரையைப் பாதகனாகிய அடியேன் அடையப்பெற்றேன்.

என்னப் பலவா றெடுத்தேத்தி நின்றிரந்து
பன்னிப் பரசுதலு நன்கருணை பாலித்தாள
பொன்னென்றத் திலங்கு சடையோற் புகழ்கணத்து
மன்னிப் புகப்பணித்தா டென்கயிலை மன்னினை.

(இ - ள்.) என்று பலவகையாக வெடுத்துச்சொல்லி, மகிடாசுரன் நேர் நின்று துதிசெய்து பிரார்த்திக்கவும், நல்லகிருபையை அவனுக்கு அநுக்கிரகித்தனள். பொன்போன்ற பிரகாசிக்கும் சடையையுடைய சிவபெருமானைப் புகழ்கின்ற சிவகணத் தொகுதியிலே நிலைபெற்றுப் பிரவேசிக்கும்படி, அழகிய கைலையிலெழுந்தருளிய அம்பிகை கட்டளையிட்டனள். எ - று. (கஅ)

ஈசற் பரவி யிருதா ளருச்சிக்கும்
பூசைத் திறனாற் புயல்வண் ணனைமுதலோர்
ரேசற் றிருமபதவி யெய்தினார் நீரிதழி
வாசத் தொடையானை யாருணர வல்லாரே.

(இ - ள்.) சிவபெருமானைத் துதிசெய்து அவருடைய உபயபாதங்களைப் பூசைபுரியும் பூசாபலத்தினால், மேகவண்ணராகிய திருமாலை முதலானவர்கள் குற்றமற்றுத் தமது பெரிய பதவிகளையடைந்தார்கள். குளிர்ந்த வாசந்தங்கிய கொன்றை மலர்மாலையணிந்த சிவபெருமானை எவர்தாம் உணருமாற்றலில் வல்லவர்? எவருமிலர். எ - று. (கக)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மொழிந்த சரிதை முழுதுணர்ந்தீ ரினியோர் சரிதை முழுமுதலோன்
பொழிந்த கருணை தரநினைந்த ததுமற் றுமக்குப் புகல்கின்றேம்
மிழிந்த குணமூன் றறப்போக்கி யெழுதா மறையி னுணுக்க முணர்ந்
தொழிந்த பவத்தீர் கேண்மினென வெடுத்துச் சூத னுரைசெய்வான்.

(இ - ள்.) இதுகாறுங்கூறிய சரிதமுழுவதையும் உணர்ந்தீர்கள். இன்னும் ஒருசரிதை முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் மிகுந்த கிருபையைக்கொடுக்கக்கருதியது. அதனையுங்கட்குச் சொல்லுகின்றோம். இழிவாகிய முக்குணங்களை யறவேயகற்றி, எழுதாக்கிளவியாகிய வேதத்தின் நுட்பத்தையறிந்து நீங்கிய பிறவியையுடையவர்களே! கேளுங்களென்று சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்வாராயினர். எ - று. (உo)

பண்பாற் குதலை மடமகளி ரெடுத்த கவரி பணிமாறத்
தண்பாற் றருவி னடிநீழற் றுலங்கு மரியா சனந்தாங்க
வெண்பாற் கவிகை மீவிளங்க மதவா னிருக்கு மவ்வேலை
யெண்பாற் சிறந்த தவமுனிவ ரெழுவா வரக்கண் டெதிரெழுந்தான்.

(இ - ள்.) பண்போடு குதலைச்சொல்லைப்பேசும் இன்மாதர்கள் எடுத்த கவரி யைப் பணிமாறவும், குளிர்ச்சியோடு கூடிய கற்பகத்தருவின் நீழலிடையே சிங் கங்கள் சுமந்த பீடிகையானது தாங்கவும், வெள்ளியபால்போன்ற சந்திரவட்டக் குடைமேலே பிரகாசிக்கவும், இந்திரன் கொலுவீற்றிருக்கும் அக்காலத்தில், எண்ணுந் தன்மைவாய்ந்த சிறப்புற்ற தவமகிமையுடைய சப்தருஷிகள் அங்கெ ழுந்தருளக்கண்டு இந்திரன் அவர்கட்கெதிரே யெழுந்தனன். எ - று. (உக)

எழுந்து முனிவர்க்கெதிர்போகிக் கடன்கள் யாவு மினிதியற்றிக்,
கொழுந்து நிமிர்ந்துத் துணிப்படரும் புரிபுன் சடையோர்க் கொணர்ந்
திருத்தி, யழுந்து முவகையெழுந்திரைப்ப முகமன் கூறி யளவளாய்த்,
தொழுங்கை தாழா னுரைப்பவிருந் திணைய பேசத் தொடங்கினன்.

(இ - ள்.) இந்திரன் எழுந்து எழுமுனிவர்கட் கெதிர்சென்று, அவர்கட் குச் செய்யவேண்டிய கடன்களை யெல்லாம் இனிதாகச்செய்து முடித்து, கொ ழுந்துவிட்டு ஒப்பற்றுநீண்ட புரிந்த சிறுசடையையுடைய அம்முனிவர்களை யழைத்துக்கொண்டு வந்து பீடத்திலிருத்தி, ஆழ்ந்த அன்பானது அதிகரித்துத் மேம்படலால் உபசாரவார்த்தைகள்சொல்லி அவர்களோடுகலந்து கூப்பியகையை விடாதவனாயிருந்து இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லுகின்றான். எ-று.

அருமா தவத்தீ ரெழுந்தருளற் கடியேன் பெற்ற தளவின்றாற்,
றருமா நிதியப் பெருஞ்செல்வந் தழைக்கப் பெற்றே னின்றன்றே,
யொருவா மனத்தி னிடைக்கிடக்குங் குறையொன் றுண்டா லதுவு
ரைக்கேன், பொருவா ளசுர ரிடர்விளைக்குங் கடுங்க ணுறற்றிப் பொறுக்
கிலனால்.

(இ - ள்.) சிறந்த அருந்தவமுடையவர்களே! நீங்கள் எழுந்தருளுவதற்கு அடியேன் பெற்றபலன் எல்லையில்லை. ஆதலால் இன்றல்லவோ கற்பகத்தருவும் சிறந்த பெரிய நிதிகளாகியசெல்வமும் தழைக்கப்பெற்றேன். அடியேன்மனதில் நீங்காமலிருக்கும் ஒருகுறைவுள்ளது. அதனைச் சொல்லுகின்றேன். அதாவது போர்புரியும் வாளேந்திய அசுரர்களுடைய துன்பஞ்செய்யுந்தீமையைப்பொறுத் துச் சகிக்ககில்லேன். எ - று. (உஉ)

திரைநீ ராடை யுலகத்துச் சிறக்கு முயிருஞ் செழும்பசும்பொற்
புரைதீ ருலகத் திமையவருந் தருமத் தொழுக்கிற் புகுந்தோருங்
கரைதீர் துயர்க் கடற்கிடந்தா ரதுகாத் தொழிக்குங் கடனற்றேன்
விரைவார் சடிலத் தருந்தவத்தீர் நும்மால் வேண்டப் பெறுவேனால்.

(இ - ள்.) அலைகள் பொருந்திய கடலாடையுடுத்த நிலவுலகத்திலே மேம் பட்ட உயிர்களும், செழிய பசும்பொன்னுலாகிய குற்றநீங்கிய அமரருலகத்தி லுள்ள தேவர்களும், தருமநெறியிற் பிரவேசித்தவர்களும், எல்லையில்லாத துன் பக்கடலில் மூழ்கியுள்ளார்கள். அதனை யொழித்து அவர்களைப் பாதுகாக்கும் கடன்மையை நீங்கியுள்ளேன். மணந்தங்கிய நெடியசடையையுடைய அருந்தவஞ் செய்த முனிவர்களே! உங்களால் அதைத்தடையப்பெற வேண்டுகின்றேன். எ-று.

புரக்குந் தருவி னிழற்கிடந்த பொன்னொட் டகலவை யெண்டிசையுங்
கரக்கு நிருதர் குலமுடிய மறைமந் திரத்திற் கனலோம்பிய

பரக்கு முலக வுயிர்த்தொகையு முய்வா னிரங்கிப் பணிபயீரென்
றிரக்க முனிவ ரெழுவோரு மகவாற குறிததொன் றியமபுவரால்.

(இ - ள்.) என்றாலே காக்கப்படும் கற்பகதருவி னீழலிலுள்ள பொன்னாட்டின்கண் எட்டுதிசைகளிலும ஒளிததுள்ள அசுரர்கள குலமுதலற, வேத மந்திரததால் யாகஞ்செய்து, தேவர்கள் மட்டுமல்லாமற் பரநத விலகிலுள்ள உயிர்க்கூட்டங்களும உச்சிவிக்குமபடி திருவுளமிரங்கி அநுக்கிரகிப்பீர என்று யாசிக்க, சப்தருஷிகள் இநதிரனைநோக்கி ஒன்று சொல்கின்றாகள. எ - று.

அடலே றுகைக்கும் பெருமாற்கென் றியற்றி வணங்கு மருச்சனைகை
விடலா காது முபபொழுது மதற்கு வேண்டுங் குறைதீர்வே
மிடைபோ கலமென நமமுனிவ ரிசைப்பத தவளக கொடுங்கோட்டுக்
கடலா ரணததோ னெழுந்துபணிந திரபப நோக்கிக கவலகூர்நதார.

(இ - ள்.) வெற்றிபொருநதிய இடபத்தை வாகனமாகச் செலுததும சிவபெருமானுக்கென்று செயதுபணியும் பூசையைக கைவிடுதலாகாது, ஆதலால் அதற்குவேண்டிய குறையை முககாலததிலுந தவிர்ப்போம, நடுவேவிடமாட்டோமென்று அச்சப்தமுனிவர்களுரைபப, வெள்ளியவளைநத தநததததையும் மதப்பெருககையுமுடைய வெள்ளையானையையுடைய இநதிரன எழுநதுவணங்கி யாசிக்க, அவனைநோக்கி அவர்கள கவலைமிகுநதார்கள். எ - று. (௨௬)

என்னே யிவர்க்குப பெருநதுயர மொழிபபா னெதுவென் றுளமிரங்கி
யன்னே யவனசொற றனகேளா முனிவ ரெழுவ ரதற்கிசைநதார்
பொன்னேய் திருநாட் டெணடிசையும புகுநதார முனிவர புரநதரனும்
பின்னே யிதற்கு வேணடுவன சமிதை முதல பெரிதீநதான்.

(இ - ள்.) இவர்கட்குள்ள பெருநதுயரததையொழிகக ஏதுவழியென்று மனங்கசிநது, அநத இநதிரன் கூறிய வார்த்தைகளைககேட்டு, சப்தருஷிகள் அவன் வேணடுகோளுககிணங்கினார்கள. பொன்மயமான சுவர்ககநாட்டில அஷ்டதிசைகளிலும் முனிவர்கள பிரவேசிததார்கள். இநதிரனும அமமுனிவர்கட்குப்பின்னே இவர்கள யாகததிற்கு வேணடுவனவாகிய சமிதைமுதலியவற்றை மிகுதியாகக் கொடுததான். எ - று. (௨௭)

தருப்பை முதல வரநோக்கிக் குண்டந் திருத்தித் தழலெழுப்பி
யிருக்கு முறைசொற் றனநுனுகக மெடுததுக கூறி யோமித்தார்
மருக்கு மிதழிச சடைமோலிப பெருமான பூசை வழுவரலாற
பெருக்குந் தழல்வாய் முகநதோறும பிறநதார பிறைவா ளெயிற்றசுரர்.

(இ - ள்.) தருப்பைமுதலிய உபகரணங்கள் தமக்கு வேண்டுவனவரககணடு, முனிவர்கள் யாககுண்டம் நியமிதது அக்கினியை யெழுப்பி, வேதததில் முறையாகச் சொல்லப்பட்டனவாகிய நுட்பங்களை யெடுத்துச்சபிதது ஹோமஞ்செய்தார்கள். மணங்கமழுங் கொன்றைமாலையணிநத சடைமுடியையுடைய சிவபெருமான பூசனை இதனால தவறியபடியால், வளாநத அவ்யாகாக்கினியில் இடந்தோறும் பிறைச்சந்திரன்போலும் வெள்ளிய பற்களையுடைய அசுரர்கள சனித்தார்கள். எ - று. (௨௮)

அரத்தா சுரனென் றொருவிருந் தனரத்த வீர னொருவிருந்
தூரப்பு திறலோ ரிராவணரென் றெழுவ ரோங்கி யுருத்தெழுந்தர்
வரத்தா லுயர்ந்த முனிவரரைத் தின்பா னெழுந்து வழியலைத்துத்
துரத்தா ரின்று ரவரிவருக் கெட்டா மறையுந் தொலைசென்றார்.

(இ - ள்.) அரத்தாசுரனென்றோ ரசுரன், அரத்தவீரனென்றோ ரசுரன், அதட்டத்தக்க வல்லபமுடையோராகிய இராவணரெனனும் பெயருடைய வெழசுராகள் ஆகிய விவர்கள் கோபித்தெழுந்தார்கள். வரத்தினால் மிகுந்த சப்த ருஷிகளைத் தினனும்படி யெழுந்து வழிமறித்துத் துரத்தினார்கள். அம்முனிவர் கள் இவ்வசுராகளுக்கு அகப்படாமல மறைந்துபோகுமளவும ஓடிப்போனார்கள்.

வரிவண் டலைக்கும் பசுந்துளவத் தொடையோன் முதல வானவரை
யிரியும படிகண் டவருலக மிடித்துப் பொடித்தா ரெவவுலகும
புரியுந் துயரக் கடலுழப்பப் புடைத்துச் செகுத்தார் புனறுழிலோர்
விரியுங் கடனீ ருலகவுயிர் வெங்காற் பூளை யெனச்சிதைந்த.

(இ - ள்.) சிற்றுகளமைந்த வண்டுகளலைக்கின்ற பசிய துளசிமாலை யணிந்த திருமால் முதலாகிய தேவாகளைப் பரவியோடும்படிசெய்து, அவாகளுலகங்களா கிய பதவிகளை யிடித்துப் பொடிபடுத்தினாாகள். எல்லாவுலகங்களிலும் இழிதொ ழிலுடைய அவாகள் தாம் செய்யுந் தினபக்கடலால வருந்த அடித்துக்கொன் றாாகள். பரந்தகடனீர் சூழ்ந்த உலகத்திலுள்ள வுயிாகளெல்லாம, கொடுங்காற்றி லகப்பட்ட பூளைமலர்போலச் சிதைந்தன. எ - று. (௬௦)

நின்ற நினற பதவியொழித் தொருங்கு போகி நெடுங்கயிலைக்
குன்று புகுந்தா ரரிமுதலோ ரிமயச சிலையோற் குறித்திரங்கி
மன்றன மலரா லருச்சனைகை வகுத்தார் மலாத்தாள பூசித்தார்
சென்று கழிந்த பெருங்காலம புலவா யாருந் திகைபபுற்றார்.

(இ - ள்.) திருமால் முதலானவர்கள தாங்களிருந்த நிலைபெற்ற பதவிகளை விடுத்து ஒருசேரசசென்று நெடிய கைலாயகிரியை யடைந்தார்கள். மேருமலை யை விலலாக வுடைய சிவபெருமானைத் தியானித்து மனமிரங்கி மணந்தங்கிய மலாகளைக்கொண்டு தமது கையால அர்ச்சனைபுரிந்து, அவ்விறைவனது தாமரை மலர்போன்ற பாதங்களைப் பூசித்தார்கள். பலகாலங்கழிந்தன. தேவாகளெல்லா ருந் திகைத்தார்கள். எ - று. (௬௧)

மல்லற் கயிலைத் திருப்பொருப்புக் கிடந்த கோயி னெடுவாயிற்
செல்லப் புகுந்தா ரிருகமலச் செங்கட் பெருமான முதலெவரும
புல்லத் துவசத் தனிப்பரனைத் தொழுதா ரழுதார் புலம்புற்று
ரல்லொத் தெழுந்த கொடுநிருத ரிழைத்த வனைத்து மறிவித்தார்.

(இ - ள்.) வளந்தங்கிய திருக்கைலாயகிரியிலுள்ள திருக்கோயிலின் பெரிய திருவாயிற் புகுந்துசென்றார்கள். செந்தாமரை மலாபோலும் இருவிழிகளை யுடைய திருமால முதலிய தேவர்களெல்லாரும இடபக்கொடியையுடைய ஒப் பற்ற சிவபெருமானை வணங்கினார்கள். அழுதார்கள். புலம்பினார்கள். இருள் போனறெழுந்த கொடிய அசுரர்கள் செய்த கொடுமைகளையெல்லாம் விண்ணப் பஞ்செய்தார்கள். எ - று. (௬௨)

மத்த மறுகு புனைந்தசடா மகுடப் பெருமான் மருங்கிருக்கு
முத்த நகையாண் முகநோக்கி முறுவல் பூத்து மொழிகுவனுற
சத்த முனிவர்க் கொடுதமது பகைதீர்த் தொழிவான் சமைந்துற்றார்
நித்த நெறியன் னவாக்கழியப் பகைமேற் பழியாய் நிகழ்ந்ததால்.

(இ - ள்.) ஊமத்தமலரையும் அறுகம்புல்லையுமணிந்த சடாமுடியையுடைய சிவபெருமான் தமது வாமபாகத்திலிருக்கும் முத்துப்போன்ற தந்தபந்தியுடைய பிராட்டியார் திருமுகத்தைநோக்கிப் புன்னகையரும்பித் திருவாய்மலர்கின்றார். சத்தமுனிவர்களைக்கொண்டு தங்கள் பகைவரைக்கொன்றொழிக்க ஆலோசித்துச் செய்தார்கள். நித்தியமாகிய மார்க்கத்தையச்சப்த முனிவர்நீங்க, பகையேயன்றிப் பழியாகவும் சம்பவித்தது. எ - று. (௲௩)

என்று வருளித் திரிசூலக் கௌரி வதன மெதிர்நோக்கிக்
கொன்னே சூலப் படையேந்திக் குணட்டோ தரற்கொண் டவணேகி
மின்னு ரெயிற்று நிருதரவ ரெழுவா விளிய விளித்துநெடும்
பொன்னா திகிரி யவனுலகு மேனோ ருலகும் புரந்தளிப்பாய்.

(இ - ள்.) என்று அருளிச்செய்து, திரிசூல கௌரியின் முகத்தை நேரே கண்டு, பெருமைதங்கிய சூலாயுதந்தாங்கி, குணட்டோதரனைக்கொண்டு ஆங்கெய்தி மின்னல்பொருந்திய பற்களையுடைய அவ்வசுரர் எழுவரிறக்கும்படிகொன்று, நெடிய பொன்மயமாகிய சக்கிராயுதந்தாங்கிய திருமாலின் வைகுண்டலோகத்தையும் பிறதேவருலகத்தையும் சாத்திரட்சிப்பாயாக. எ - று. (௲௪)

போதி நீயென் றுமையிடத்துப் புரிபுன் சடையோன் பணித்தருளக்
காதி மறலுஞ் சினங்கிளைப்பக் கௌரி கடுவா ளரியுகைத்துப்
பாத கரையெங் கெனத்தேட வரத்தா சுரனவந் தெதிர்ப்பட்டான
மோதி யுடற்று மடுசினத்துத் திமிலத் திணப்போர் மூண்டனவே.

(இ - ள்) இனிநீ செல்கவென்று, புரிந்த சிறு சடையையுடைய சிவபெருமான் உமாதேவியாரிடத்தில், கட்டளைசெய்தருள, உருத்தெழுந்த கோபாவேசம் அதிகரித்த கௌரி மமை கொடுமைதங்கிய வலிய சிங்கவாகனமேறி அப்பாவிகளை யெங்குள்ளாரென்று தேடுகையில், அரத்தாசுரனென்பவன் எதிரேவந்து காணப்பட்டான். தாக்கிக்கிளம்பிக் கொலலுங் கோபத்தோடு போரொலியுடன்கூடிய வலியபோர் உண்டாயிற்று. எ - று. (௲௫)

விளைத்த சினத்துக் கௌரிகர வெள்வா ளெறிய வெவ்வசுரன்
கிளைத்த குருதித் துளியொன்றுங் கிவன துருவங் கிடைத்தெழுந்து
வளைத்த சேனை யளவிறந்த தாகப் பொருதான் வல்லசுரன்
முளைத்த சீற்றந் தலைக்கொண்டு முனிந்தாண் முக்கட் பெருமாட்டி.

(இ - ள்) கௌரியம்மையார் அதிகரித்த கோபத்தோடு கையிலேந்திய வெவ்விய வாளால் வெட்டவும், கொடிய அசுரனுடைய சிந்திய உதிரத்துளியொவ்வொன்றும் அப்பொழுது அவன் வடிவம்பெற்றெழுந்து சுற்றிக்கொண்ட அசுரச்சேனை யெண்ணிறந்தனவாக அவ்வலிய அசுரன் போர்செய்தான். தோன்றிய கோபமானது மீக்கொண்டெழும்பி, திரிநேத்திரங்களையுடைய கௌரியம்மையார் சீற்றமெய்தினர். எ - று. (௲௬)

சீற்றந் தலைக்கொண் டெரிவிழித்து நினைக்குங் காலைச் செருக்களத்துக
கூற்றுந் துணுக்கம் பெறநடந்து காளி புகுந்தாள் கொலைநிருத
ராற்றுஞ் சமரி னரியுகைத்தாள் படைவா ளறுப்ப வவருடல
மூற்றுங் குருதிக் கருங்காளி பேழ்வாய் மடுத்துண் டுறிஞ்சினளால்.

(இ - ள்.) கோபந்தலைக்கேறித் தீயெழவிழித்து நினைத்தகாலத்திலே, அவ் யுத்தபூமியில் இயமனும் நடுக்கமெய்தும்படி காளிகாதேவி நடந்துவந்தாள், கொலைத்தொழில் புரியும் அசுரர்கள் செய்த யுத்தத்தில், சிங்கவாகனகௌரி, அசுரச்சேனையை வாட்படையாலறுக்க, அவர்களுடலங்கள் சிந்திய உதிரத்தைக் கரிய காளியானவள் பிளவுபட்டவாயைத் திறந்து பருகியுறிஞ்சினள். எ - று.

கொடும்போ ரிழைய விளைத்துடற்ற நிருத ரிருவர் கொலைப்பட்டார்
கடும்போர் விளைக்கு மைவருமக் குணடோ தரனாற் கழிந்தொழிந்தா
ரடும்போர் கவைச்சூற் கருங்காளி குருதிச் செருக்கி னறிவொழிந்தா
டொடுங்கா ருவரி யுலகனைத்துஞ் செகுத்தா ளமரர் துணுக்குற்றார்.

(இ - ள்.) இத்தகைய கொடும்போர்புரிந்து கலக்க, இரண்டசுரர்கள்கொல் லப்பட்டார்கள், இன்னும் கடும்போர்செய்து கொண்டிருந்த ஐந்தசுரர்களாகிய இராவணர்கள் குணடோதரனால் உயிர்நீங்கி யிறந்தார்கள். கொல்லத்தக்க போர் புரியும் பிளவுபட்ட சூலாயுதந்தாங்கிய கரிய காளிகாதேவி உதிரம்பெருகிய இறுமாப்பினால் மதிமயங்கினள் தோண்டப்பட்ட கரியகடல்சூழ்ந்த உலகமுழு வதையும் அழித்தாள் தேவர்கள் நடுங்கினார்கள். எ - று. (கூஅ)

ஆய பொழுதி னிருங்கயிலைப் பெருமா னுணரா வவளுடனே
மேய நிருத்தத் தொழிலயர்ந்தா னுடனேதை தாடும் விறல்கொண்டாள்
சேய பவளக் கொடிச்சடிலப் பெருமா னொருபொற் றிருத்தாளை
மீயம் பரத்தி னுச்சிதொட விடுத்தா ளவளும் வெள்குற்றாள்.

(இ - ள்.) ஆகிய அக்காலத்தில் பெரிய கைலாயகிரியி லெழுந்தருளிய சிவ பெருமான் இவ்விருத்தாந்தத்தை யறிந்து அக்காளியோடு பொருந்திய நடனயுத் தஞ்செய்ய விரும்பினார் அவளும் அவரோடு சமானமாகி நடிக்கும் ஆற்றலெய்தி னள். சிவந்த பவளக்கொடிபோலுஞ் சடையையுடைய சிவபெருமான் தமது அழகிய ஒருதிருவடியை மேலே ஆகாயத்தைநோக்கி உச்சிதொடும்படி யுயர்த்தி னார். அவரும் (அங்ஙனம்புரிய வியலாது) நாணமெய்தினள் எ - று. (கூகூ)

ஆடு நிருத்த முடனடித்தா ளந்தத் தொழிலி னற்றதோற்று
ணீடு செருக்கி னிலையொழிந்தா ளரியை முதலோர் நிலவலையச்
சாடு திரைநீர்ச் சடையோனை நடனம் பரவுந் தகைபெற்று
ரூடு நனைக்கு முவகையொடும் பதம்பெற் றொழிந்தா ருறுதுயரம்.

(இ - ள்.) ஆடத்தக்க நடனமுறையாக வாடினள். அந்த நடனத்தொழி லில் அறவே தோற்றனள். மிக்க அகங்காரத்தினால் தனனிலை நீங்கினள். திரு மால் முதலாகிய தேவர்கள் பூவலயத்திலே, மோதுகின்ற அலைகளையுடைய கங் காநதிதங்கிய சடையையுடைய சிவபெருமானைத் திருநடனகாலத்தில் துதி செய்யுந் தகுதியெய்தினார்கள் உள்ளத்தில் குளிர்ச்சி யெய்திய சந்தோஷத் தோடும் தங்கள் பதவிகளையெய்தி, அசுரர்களாற் பொருந்திய துயரத்தினின் று விலகினார்கள். எ - று. (சுo)

அரிபிரமாதியர் பூசனைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் கூக-க்குத் திருவிருத்தம் கூசுசo.

## முப்பத்திரண்டாவது

# சனகாதியர் சிவார்ச்சனைச் சருக்கம்.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முள்ளுடை நெடுந்தாட் கமலபீ டிகையி னனமறை முழுமுதற் கிழவ, னுள்ளுறு முவகை நிலைதரப் பயந்த பாலக ரொருதனி நால்வர், தள்ளருந் தவத்தி னோங்கிய தொல்சீர்த் தகுசன காதியர் சடைமேற் றெள்ளுதெண் டிரைநீர் மிலேச்சுமெம் பரனை யருச்சனை வரன்முறை செய்தார்.

(இ - ள்.) முள்ளையுடைய நெடிய தாளமைந்த தாமரைமலர்ப் பீடத்தி லெழுந்தருளிய நான்குவேதங்கட்கும் முழுமுதற்றலைவனாகிய பிரமன், மனத்தின்கட் பொருந்திய சந்தோஷம் நிலைக்கும்படி தவத்தினாலுயர்ந்த பழமையாகிய சிறப்பையுடைய சனகன்முதலானவர்கள், சடையின்மேலே தெளிந்த அலைகள் பொருந்திய கங்காசலத்தையணிந்த எமதுசிவபெருமானை முறைப்படி ஆர்ச்சனை புரிந்தார்கள் எ - று. (௧)

ஆண்டவ ரியற்று மருச்சனைக் கிரங்கி யாடகப் பொருப்பரு ணிலையோர், னீண்டுபே ரனபி னுங்கவர் நோக்க வினிதெழுந் தருளின னினையோர், தூண்டரு முவகை யிரைத்துமிக் கெழுந்து தொழுதன ரழுதனர் துணைக்கண், காண்டகு சிறப்பின் மெய்பொடித் தயர்ந்தா ராடினர் பாடினர் களித்தார்.

(இ - ள்.) அப்பொழுது அவர்கள் செய்யும் ஆர்ச்சனைக்கு மனங்குழைந்து, பொன்மலையாகிய மேருவை அரியவில்லாகக்கொண்ட சிவபெருமான், நெருங்கிய பேரன்போடு அமரர்கள் தரிசிக்கும்படி நினைந்தருளினர் அவர்கள் நால்வரும் எழுதற்கரிய பேரானந்தமானது மேம்பட்டு தோன்றுதலால் வணங்கினார்கள் அழுதார்கள். இருவிழிகளால் தரிசிக்கத்தக்க சிறப்போடு உடல் புளகித்துப் பரவசமானார்கள். ஆனந்தக்கூத்தாடினார்கள். பலவகைத்தோத்திரங்களைப் பாடினார்கள் சந்தோஷித்தார்கள். எ - று. (௨)

விரித்தவார் சடையோன் றிருவரு ளுவப்ப வேதவா ரிதிக்கரை கண்டார், தெரித்தும் புராண வாகமப் பரவை சிவபுரா ணப்பெருந் திரட்சி, யுரித்தெனப் படுவ யோகமோ ரெட்டு மற்றுள கலையெலா மொருங்கே, தெரித்துணர்ந் தளந்த சிவானந்த வெள்ளத் தாழ்ந்தன ரருந்தவச் செல்வர்.

(இ - ள்.) விரித்த நெடியசடையையுடைய சிவபெருமான் சந்தோஷித்துத் திருவருள்புரிய, வேதக்கடலைக் கரைகண்டார்கள் அப்புராணாகமக்கடலையும் சிவபுராணப் பெருந்தொகுதியையும் உரித்தென்று சொல்லப்படுவனவாகிய ஒப்பற்ற அஷ்டாங்கயோகங்களையும், இன்னும் உள்ளனவாகிய பலகலை ஞானங்களையும் ஒருசேர வோதியுணர்ந்தளவுபடுத்திய சிவானந்தப் பெருக்கில் அவ்வருந்தவச்செல்வர் நால்வரும் அமிழ்ந்தனர். எ - று. (௩)

இனையவரைப் போல வியாதனெம் பெருமா னிரங்குறு புரப்பதங் குனியா, நனைமல ருவப்பி னருச்சனை புரிந்தா னங்கது நயந்தன னுகிப, புனைசடைப் புனிதன சனகனு தியர்க்குப் புரிந்தரு டிருவருள வழங்க, வினைவரு மறையு மாகம புராணப் பரவையுங் கடந்தன னின்றுன்.

(இ - ள்.) இவர்களைப்போல, வியாதமுனிவன எமது சிவபெருமானது சத்திக்கின்ற பாதசரமணிந்ததிருவடிகளைத் தியானித்துக் களிப்போடுகுளிர்ச்சி பொருந்திய மலர்களால ஆர்ச்சனைபுரிந்தனன கட்டிய சடைமுடியையுடைய பரிசுத்தராகிய சிவபெருமான அப்பூசையை விரும்பினவராகி, சனகாதிமுனிவர்கட்கு அநுக்கிரகித்த திருவருளைத்தந்தருள, எண்ணுதற்கரிய வேதாகமபுராணமாகிய சமுத்திரத்தைக் கரைகடந்து விளங்கினுன். எ - று. (௪)

வாணிலா நகையி னடுபுரந் தீத்த வளரொளிக் கயிலையெம் பெருமா, னீணிலா மௌலிப் பரமனே முதன்மை யெனப்படோர் நெறித்தலை நின்றுன, கோணிலா வுளத்துச் சிவானந்த வெள்ளங் குளித்தன னுணைடுறை யொருநாள், வாணவச் செருக்கொண் டிருந்தவன் வாணித் திருந்திக் கரைமருங் கடைந்தான.

(இ - ள்.) ஒளிபொருந்திய சந்திரிகையைவீசும் புன்னகையினுற் கொல்லத்தக்க முப்புரங்களையு மெரித்தருளிய, ஒளிவளரும் திருக்கைலாயகிரியி லெழுந்தருளிய எமது சிவபெருமானுகிய நெடிய சந்திரசேகரனே ஆதிநாயகனென்னும் ஒரேவழியிற சிறந்து நின்றனா. கோணுதலில்லாத மனத்தோடு சிவானந்தவெள்ளத்தில மூழ்கினா ஒருநாள அவன ஆணவமலச்செருக்கோடிருந்து சரசுவதி நதிக்கரையினருகே யெய்தினா. எ - று. (௫)

நாரதன் முதல விருடிகண முகக ணுயகற பரசுறுந் தவத்தோர், வார்சடை மௌலி யெம்பிரான் குணித்த யோகிகள குழாத்திடை வந்தார், ஞர்தரு வேட்கைக் குறையுள ராகி யாங்கவற கெதிரெழுந் தடைந்தார், சோர்வறத் தெரிந்து செயவன யாவும வரன்முறை தொகுத்தனா கொணார்ந்தார்.

(இ - ள்.) நாரதன முதலாகிய இருடிகள, திரிநேத்திரராகிய சிவபெருமானைத் துதிசெய்யுந் தவமுடையவர்கள, நீண்ட சடைமுடியையுடைய எமது சிவபெருமானைத் தியானித்த யோகிகள ஆகியவிவர்கள கூட்டத்தில வந்தனன். பொருந்திய ஆசைக்கு வாசஸ்தானமானவர்களாகி அவ்வியாதமுனிவனுக்கு எதிராகவெழுந்து சேர்ந்தார்கள். சோர்வின்றிச் செய்யத்தக்குவனவாகிய உபசாரங்களையெல்லா முணர்ந்து முறையேசெய்து அழைத்துவந்தார்கள். எ - று. (௬)

வேதமுற றளந்த வியாதனு மறறை நாரதன முதலமெய்த் தவத்து, மாதவா யாரு மொருவழிச் சிறப்பி னிருந்துழி மறறைய முனிவ, ராதியெம பெருமான் றிருவரு ளடைந்தா யாரண ஞானமெனப் பகுந்தா, யோதுசின மயத்துக் கொருதலை நின்றாய் கலையெலா மொருதனி யுணர்ந்தாய்.

(இ - ள்.) வேதமுழுவதையும அளந்தறிந்த வியாதமுனிவனும் ஏனையநாரதாதி மெய்த்தவமுடைய முனிவர்களும் ஓரிடத்திற் சிறப்பாக வீற்றிருக்கையில், மற்றமுனிவர்கள் வியாதமுனிவரைநோக்கி ஆதிதேவனுகிய எமது சிவபெரு

மான் திருவருள்பெற்றீர். வேதங்களைகான்காகப்பிரித்தீர். சொல்லத்தக்க ஞான மயத்திற்கு ஒருதலைமையாக நின்றீர். எல்லாக் கலைஞானங்களையும் ஒருசேர வொப்பற்றுணர்ந்தீர். எ - று. (எ)

முற்படு காலத் தொருதனிப் பெருமான் றன்மைமுற் றுரைத்தனை யனையான், சிற்குண மளந்து தெரிப்பதற் கரிதாய்த் தெருமரு சிந்தை யேமெமக்கு, நற்படு வகையி னாதியங் கடவுட் டன்மையை நவிற்றுதி யென்று, ரற்படு முளத்தி னாணவச் செருக்கின் வியாதனீ துரைகுவ தானான்.

(இ - ள்.) பூர்வகாலத்தில் ஒப்பற்ற ஒருசிவபெருமான் தன்மையை முழுதும் ஓதினீர். அவ்விறைவனுடைய ஞானமயத்தை யளவுபடுத்திச் சொல்லுதற் கரிதாய் மயங்கிய மனமுடைய வெங்களுக்கு, நல்லவகையாக ஆதிநாயகனாகிய அழகிய சிவபெருமான் மகிமாவிசேஷங்களைக்கூறி யருளவீராக வென்றார்கள். [இருள்தங்கிய] அஞ்ஞானம்பொருந்திய மனத்திலெழுந்த ஆணவமலச்செருக்கினால் வியாதமுனிவர் இதனைச்சொல்வாராயினார். எ - று. (அ)

உயிர்க்கெலா முறையு முடம்புமா யாங்க ணுயிர்தொறு முயிர் தொறு முதவி, யயிர்க்கலாந் தன்மை யனைமைய னாகிச் சராசர மனைத்தினு மளவிக், குயிற்கொழுங் குதலைத் திருமகட் புணர்ந்து குரைதிரைப் பாற்கடன் முகட்டிற், புயற்கிடந் தாங்கு யோகநித் திரையி னரவணை பொலியுமப் புனிதன்.

(இ - ள்) உயிர்கட்கெல்லாம் வசிக்கும் உடம்பாகியும், எல்லாவுயிர்களோ டுமிருந்து அநுக்கிரகித்து, ஐயப்படுந் தன்மையில்லாதவனாகி, சராசரப்பொருள்களிலெல்லாங் கலந்து, குயில்போலுங் கொழுவிய மதலைச்சொல்லையுடைய திருமகளைக்கூடி, ஒலிக்கின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலி னுச்சியில் மேகமானது இருந்தாற்போல ஆதிசேஷனாகிய சயனத்தில யோகநித்திரைபுரியும் அநந்தப்பரிசுத்தமான நாராயணன். எ - று. (௯)

அண்டமு மண்டத் தகவையி னடங்கு மகிலமுங் குலவரை யனைத்து, மெண்டரற் கரிய வுயிர்த்தொகை யனைத்து முந்தியின் றெழுதரக் கிளைத்த, புண்டரி கத்த னினிதிருந் தளிப்பான் புராதனற் கின்னருள் வழங்கிக், கண்டுயில் பவனே கடவுண்மற் றில்லை யொருதனிக் கடவுளென் றிசைத்தான்.

(இ - ள்.) அண்டமும், அண்டத்தினுள்ளடங்கிய உலகங்களும், சிறந்த மலைகள் யாவும், எண்ணுதற்கரிதாகிய உயிர்த்தொகுதிகள் முழுவதையும், திருவுந்தியினின்று எழும்படி, கிளைத்த தாமரைத்தவிசில் பிரமனானவன் இனிதாக விருந்து படைக்கும்படி அப்பழையோனுக்கு இனிதாகத் திருவருள் செய்து யோகநித்திரைசெய்யும் அத்திருமாலே கடவுள். ஒப்பற்ற மேலானகடவுள் வேறில்லையென்று வியாதமுனிவர் கூறினர். எ - று. (௧௦)

ஆண்டவ னுரைத்த புன்மொழிகேட்ட நாரதன் முதலினோ ரழிந்து, கீண்டநெஞ் சினராயச் செவித்தொளை புதைத்தார் சிவமெனும் பெருந்தொனி கேட்ப, வேண்டரு நலத்தின் முன்னெமக் குணர்த்தி விளக்கினை யவையெலாங் கிடப்பத், தூண்டருங் கடவுள் வேறெடுத் துரைத்தா யயர்த்தனை பழமறைத் துணிவு,

(இ - ள்.) அப்பொழுது அவ்வியாதன்கூறிய இழிந்தவார்த்தையைக்கேட்ட நாரதன் முதலானோர் வருந்திப்புண்பட்ட மனமுடையவராய்த் தமது செவித்தொளைகளைப் பொத்திக்கொண்டார்கள். சிவமென்னும் பெருந்தொனியைக் கேட்கும்படி, வேண்டிய சிறப்புக்களோடு முன்னே எங்களுக்கு விளக்கியுணர்த்தினீர். இப்பொழுது அவையெல்லாமிருக்க, சுயஞ்சோதியாகிய கடவுள் வேறுண்டென்றெடுத்துக் கூறினீர். பழமையாகிய வேதத்தின் துணிவொருவே மயங்கினீர்போலும். எ - று (கக)

என்றவ ரிசைப்பத் தன்னுழை யிருந்த சிட்டருந் தமதுள மிகழ்ந்தார் ரொன்றினை யொருந் வியாதனை நோக்கி யிங்குநீ புரைத்தது நன்றா மின்றெழுந் தியங்கி கங்கைநீர் படிந்து காசியி னெம்பெரு மான்மு னின்றுரைத் தனையே லத்தலே யாமு நின்னறி நெறிழுகுது மென்றார்.

(இ - ள்.) என்று அம்முனிவர்கள் கூற, அவ்வியாதமுனிவனோடிருந்தமாணவரும் தமது மனதில் அவமதித்தார்கள். அப்பொழுது யாவரும் ஒன்றாகக் கூடி வியாதமுனிவனைநோக்கி, இவ்விடத்தில் நீர்சொல்லிய சொல்லானது, இப்பொழுதுசென்று கங்காசலத்தில் ஸ்நானஞ்செய்து காசிக்ஷேத்திரத்திலெழுந்தருளிய எமது சிவபெருமான் சந்நிதானத்திலிருந்து சொல்லுவீராகில், அப்பொழுதேநாங்களும் உம்முடைய கருத்தின்படி நடப்போம் என்றார்கள் எ-று.

ஆதுசெய் குதுமென் றெழுந்தன னவ் வியாத னனைவரு மங்கெறிப் படர்ந்தார், மோதுவெண் டிரைநீர் பகிரதி மருங்கு புகுந்தனர் மூரி திரைப பெருநீர், நீத்த தலைநதா மழவிடை யவன்முற் சென்றனர் திருநடம பயிலுஞ், சீதநாண் மலர்ப்பொற் சேவடி பணிந்தா ரெழுந் தன ரருந்தவச் செல்வர்.

(இ - ள்.) அதனைக்கேட்ட வியாதமுனிவன் அதனைச்செய்வோமென்றெழுந்தனன். யாவரும் அவ்வழியே சென்றார்கள். மோதுகின்ற வெள்ளிய அலைகளையுடைய நீர் நிரம்பிய கங்கையாற்றினருகே சென்றார்கள். மறிகின்ற அலையுடைய பெரிய கங்காநதியிற் குற்றமறமூழ்கினார்கள். இளமைதங்கிய இடபவாகனமுடைய சிவபெருமான் சந்நிதியை யடைந்தார்கள். திருநடனம் புரியும் குளிர்ச்சிபொருந்திய அன்றலர்ந்த தாமரை மலர்போன்ற அழகிய சிவந்த திருவடிகளை அவ்வருந்தவச் செல்வர்கள் வணங்கினார்கள். எ - று. (கரு)

வெறிபபட மடக்கு மாணவச் செருக்கு விரவலின் றலைமரு வியாத னெறிபபடு சடையீர் கேண்மினென் றொருகை நிவத்தினின் றுங்கித் திகழ்தரும், பொறிப்பணிப படலைத் துழாயபுனை மருமப புங்கவற் கல்லது முதன்மை, குறிப்பரி தெனனு நாவயாந் தெடுத்த கொடுங்கர முடக்கில னின்றுன.

(இ - ள்.) மயக்கமெய்தத் திருப்புகின்ற ஆணவமலச் செருக்கானது கலப்பவிருந்து சுழலுகின்ற வியாதமுனிவன், நெறித்துற்ற சடையையுடைய முனிவர்களே! கேட்பீர்களாக என்று ஒருகையைத் தூக்கி நின்று அப்பொழுது இதனைச் சொல்லுகின்றான். புள்ளிகள் பொருந்திய சேஷசயனமுடைய துளவமாலை தரித்த மார்பினராகிய நாராயணனுக்கல்லது தலைமைத்தன்மை கூறுவதரிதென்று சொல்லவும், நாசோர்ந்து தூக்கியவலைய கரமானது முடக்கமாட்டாதவனாக நின்றான். எ - று. (கசா)

உரைத்தநா வயர நீட்டிய தடக்கை யந்தரத் தேகுற விறுத்தான்,
வரைத்திர டிண்டோட் சூற்படைக் கால வயிரவக் கடவுளாங் கதனே,
யிரைத்தெழு முவகை மிகக்கெழுக் கண்ட முனிவர ரிவனுடைச் சீடர்,
கரைத்தசிந் தையராய வெள்ளிவெண் கயிலைக் கடவுளைத் தொழுதுளங் களித்தார்.

(இ - ள்.) சொல்லிய நாவானது சோரவும் நீட்டியபரந்த கையானது மேனோக்கிச் செல்லவும், மலைபோலத் திரண்டதோளையுடைய சூலாயுதமேந்திய வைரவக்கடவுள் நிறுத்திவிட்டனர். அச்செயலை அதிகரித்தெழுந்த சந்தோஷ மிக்கூரக்கண்ட முனிவர்களும் இவ்வியாதனுடைய சீடர்களும் உருகிய மனமுடையவர்களாய வெண்ணிறந்தங்கிய வெள்ளிமலையாகிய கைலாயத்திலெழுந்தருளிய சிவபெருமானைவணங்கி மனமகிழ்ந்தார்கள். எ - று. (௧௫)

நீட்டிய தடக்கை முடக்கல னாகி யுரைத்தநா நிமிர்க்கல னாகிக்,
கோட்டிய வுருவிற் றன்செய லொழிந்து நிற்றலுங் கொழித்தெறி கடுங்
கான், மூட்டிவான் சிறைய புள்ளர சுகைத்து முளரியொன் றுந்திபூத்
தலரக், காட்டிநான் முகனைப் பயந்தசெங் கமலக் கண்ணனுங் கடைந்
திவை கழறும,

(இ - ள்.) அப்பொழுது வியாதமுனிவன் நீட்டிய தன் பரந்தகையினை முடக்கமாட்டாதவனாகியும், சிவநிந்தைகூறியநாவினை நிமிர்க்கமுடியாதவனாகியும் விளங்கிய தன்வடிவத்தில தனது செயதொழிலற்றவனாய நிற்கவும், கொழித்து வீசுகின்ற கொடியகாற்றை யெழுப்பும் பெரிய சிறகுகளையுடைய பட்சிராசனாகிய கருடனை வாகனமாகச்செலுத்தி, தமது உந்தியினின்று தாமரையொன்று புட்பித்தலரக் காண்பித்து, நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனையீன்ற செந்தாமரை மலர்போன்ற விழிகளையுடைய திருமால அங்கெழுந்தருளி அவ்வியாதமுனிவனோடு இப்படிக்கூறுவார். எ - று. (௧௬)

இருந்தவத் தெவர்க்கும் பரமயோ கத்தி னடைந்தரு ளியோகிய
ரெவர்க்கு, திருந்துநான் மறைக்கு மாகம புராண மெவற்றிற்குஞ்
செப்புமற் றெமக்கும், பொருந்துதற் கரிய யாவையுங் கடந்து மேற்படு
மொருதனிப் புனித, னரும்பிளந் திங்கட் கண்ணியோ னன்றி யாருள
ரறிந்தயர்ந் தனையால்.

(இ - ள்.) பெருந்தவமுடையரெல்லாருக்கும், சிறந்த யோகநிலையிற்பொருந்தியுள்ள யோகவான்களெல்லாருக்கும், திருத்தமாகிய நான்குவேதங்களுக்கும், ஆகமபுராணாதிகளெல்லாவற்றிற்கும், சொல்லப்படும் சிறப்பமைந்த எமக்கும், அடைதற்கரிய எல்லாவற்றையுங் கடந்து மேம்பட்ட ஒரு ஒப்பற்ற பரிசுத்தமுடையார் அரும்பிய இளஞ்சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த சிவபெருமானையன்றி வேறியாவரிருக்கின்றனர்? (ஒருவருமிலர்) தெரிந்திருந்தும் மதிமயங்கினை. எ - று. (௧௭)

பல்லுயிர்த் தொகையு மண்டமு முலகு மப்படி வரன்முறை
படைத்துத், தொல்லையர் தொழிலு நடத்துவா னெந்து கடவுளர் தொ
குத்துமே லொருதா, னல்லனு யாவா னருவுரு வன்றி யறிதரு மறிவி
லுக் கெட்டா, வொல்லையு மொழியா ழூழியு மாகி நின்றனை யுணர்ந்தி
லை போறும்,

(இ - ள்.) பலசிவராசிகளையும், அண்டங்களையும், உலகங்களையும் அவ்வகையே வரன்முறையாகச் சிருஷ்டித்து, பழமையாகிய பஞ்சகிருத்தியங்களையும் நடத்தும்படி பஞ்சகர்த்தாக்களை நியமித்து, உயர்ந்தவனும் இழிந்தவனும் தானேயாகி, அருவமும் உருவமுமல்லாமல், அறியத்தக்க அறிவிற்கு அதீதப்பட்ட ஒருசிறிதும் நீங்காது ஊழிககாலமுமாகி விளங்குபவன் சிவபெருமானென்று நீயறிந்திலைபோலும். எ - று. (கஅ)

அத்தனிக கடவுட் டன்மையெம் மாலு மளப்பரி தவன்றிரு வருளி, னெத்துநின் றருளு முயல்வன வெல்லா மஃதறிந் துணர்ந்திலை போலும், பித்துற மயங்கி மருண்டனை யெமக்கும் பெரும்பிழை வருததினை நீயென், றத்தலை யவனை மறுத்தரு ளெடுமான் முனிவராக கின்னணமறையும.

(இ - ள்.) அந்த வொப்பற்ற சிவபெருமான் தன்மையை எம்மாலும் அளவிட்டுச் செலலுத லருமையாம். ஒவவொருவரும் முயற்சிசெய்யுஞ் செயல்கள் யாவும் அவவிறைவன திருவருளுககியைந்து நடக்கும. அதனைத்தெரிந்தாயில்லை போலும். பித்தமுண்டாக மயக்கமெய்திப் பிரமைகொண்டாய. எமக்கும பெரிய குறறத்தை நீவரும்படி செய்தனையென்று, அவவியாத முனிவனை மறுத்து அருளபுரிந்த திருநெடுமால் அங்குள்ள முனிசிரேஷ்டாகளுக்கு இப்படிச்சொல லுகின்றா. எ - று. (கசு)

மூரிநீர்ப பரவை நஞ்சணி களத்து முக்கணெண் டோளுடையவனே, தேர்வருந தனமைப பராபர னியாமு மவனுடைத் திருவருளெய்தி, யாருயி ரனைத்தும் புரக்குது மீதுசத் திய மறைந்தன மென்னு, வோரதனித் திகிரிக் கரமெடுத் துரைத்தா னுவததனர் முனிவரர் யாரும்.

(இ - ள்.) பெரிய நீரையுடைய கடலினுதித்த விஷத்தைத்தரித்த கண்டத்தையும திரிநேத்திரங்களையும எட்டுத்தோள்களையுமுடைய சிவபெருமானே ஆராயதற்கரிய தன்மையையுடைய பராபரன். நாமும் அவ்விறைவன் திருவருளையடைந்தால் அரிய உயிர்களையெல்லாம் இரட்சிப்போம். இது சத்தியம் சொனனோமென்று, ஒப்பற்ற சக்கிராயுதமேந்திய திருக்கையையுயர்த்தித் திருமால்கூறினா. அதுகேட்ட முனிவாகள யாவரும் சந்தோஷித்தார்கள். எ - று.

அந்நிலை யுருகு சிந்தைய னாகி யம்புயத் தடங்கணீர் மல்கத், தன்னிலை யுருவ மயிர்ப்புறம பொடிப்பச் செய்யவாய் நாத்தடு மாற, மின்னொழுக் கனைய வேணியெம் பரனை யுளப்பட விரும்பின னாகித், தொன்னிலை யுணர்ந்து பறபல மொழிந்து தொழுதன னொருதனி நின்றான்.

(இ - ள்.) அககாலத்தில் உருகிய மனமுடையவனாகி, தாமரைமலர்போன்ற பரந்த கணகள் நீர்பெருகவும், தன்னுடைய அசையாத உருவமானது மேலே மயிர்க்கூச்செறியவும், சிவந்தவாயும் நாவுந்தடுமாறவும், மின்னல் ஒழுகினைப் போன்ற சடையையுடைய எமது சிவபெருமானை மனதிற்பொருந்த விரும்பினவனாகி, பழய நிலைமையையறிந்து பற்பலவார்த்தைகள்கூறி வணங்கி ஒருபுறத்தே நின்றனன். எ - று. (உக)

விளங்குபொற் றிகிரி*யொருதனித் திருமால் வியாதனை மருங்கய
னோக்கிக், களந்தரு மிடற்றுப் பவளவே ணியனைக் கைதொழு திரக்குதி
யென்று, ளுளந்தரு மயக்கி னுப பிறழாமை யவிநயத் துணர்த்தலு மெ
டுமா, லளந்தறி வரிய வஞ்செழுத் துண்மை தெளிதர வுணர்த்தது
மனையான.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற பொன்மயமான் சக்கிராயுதமேந்திய ஒப்பற்ற
திருமால வியாதமுனிவனை யருகேபார்த்து, விஷம்பொருந்திய கண்டத்தையும்
பவளம்போன்ற சடையையுமுடைய சிவபெருமானைக் கைகுவித்து யாசிக்கக்கட
வாயென்றனர். மனதிறபொருந்திய மயக்கத்தினால் நாவானது அசையாதிருக்
குந் தன்மையைச் சைகையினால தெரிவிக்கவும், திருமாலானவர் அளவிட்டு அறி
தற்கரிய பஞ்சாக்ஷரத்தின உண்மைப்பொருளைத் தெளியும்படி யுபதேசிக்கவும்,
அவ்வியாதமுனிவன. எ - று. (உஉ)

புலர்ந்துநீர் வறந்து முரணபடு நெடுநாப் புனற்றுளி கிளைத்தன
வாகி, யலந்தலைப் பட்ட சிந்தைய னுகி வெருவரு துனுக்கொடு மய
ரா, விலங்கொளிப் பவள வேணிநா யகனை யிணைமலர்ச் சேவடி பணி
ந்து, வலம்படு திகிரி மாயவற் கொருபான் மருங்குநின் றினையன வகு
ப்பான.

(இ - ள்.) உலர்ந்து நீர்வறண்டு பேசுமியற்கையினின்று மாறுபட்ட
நெடிய நாவானது நீர்த்துளிகள் துளித்தனவாகி, துன்பமெய்திய மனமுடைய
வனுகி அஞ்சத்தக்க நடுக்கத்தோடுஞ் சோர்ந்து, பிரகாசிக்கின்ற வொளியை
யுடைய பவளம்போன்ற சடையையுடைய சிவபெருமான் தாமரைமலர்
போன்ற உபயபாதங்களை வணங்கி, வெற்றிபொருந்திய சக்கிராயுதமேந்திய
திருமாலுக்கு ஒருபுறத்தில அருகே நின்று இப்படிச்சொல்வானாயினன. எ - று.

மேற்படி வேறு.

தேவாபொ றுத்தி யரனேபொ றுத்தி சிவனேபொ றுத்தி யருள்கூர்
மூவாத முக்க ணிறைவாபொ றுத்தி முதல்வாபொ றுத்தி துளவச்
சேவாபொ றுத்தி தெருளற்ற சிந்தை மருளுற்று ரைத்த செயலிற்
காவாவி டுக்கி லுயிர்பெற்ற ளித்த கருணைக்க டுப்ப தலவே.

(இ - ள்.) மகாதேவனே! மனம்பொறுப்பாயாக. ஹரனே! பொறுப்பா
யாக. சிவபெருமானே! பொறுப்பாயாக கருணைமிகுந்த அழியாத திரிநேத்தி
ரங்களையுடைய தலைவா! பொறுப்பாயாக முதற்கடவுளே! பொறுப்பாயாக.
துளவமாலையணிந்த (திருமாலாகிய) இடபவாகனமுடையவனே! பொறுப்பா
யாக. அறிவற்ற மனமானது மயக்கமெய்திக்கூறிய குற்றத்தினின்று காவாது
விடுவாயாகில், எல்லாவுயிர்களையும் ஈன்று காத்த கிருபாவிசேடத்திற்குத் தக்க
தன்று! எ - று. (உச)

மோதுந்த ரங்க மெறிகங்கை திங்கண் முனைகொண்ட லர்ந்த சடைமேற்
றொன்று துமபை யறுகோட ணிந்த தலைவாவு னக்கு னடியா
ரேதம்ப ழிச்ச விவையோரி ரண்டு மிருபால டுப்ப தருளோ
பூதங்க ளோடு முடனாடி நின்று புலவாதி யங்கு பொருளே.

(இ - ள்.) மோதுகின்ற அலைகளையெறியும் கங்காநதியையும் சந்திரனையும் முனையிற்கொண்டு பிரகாசிக்கின்ற சடையின்மீது மகரந்தம்பொருந்திய தும்பை மலரை அறுகம்புல்லோடு சூடிய தலைவனே! நின்னடியார்கள் செய்தகுற்றமும் துதியும் ஆகியவோரிரண்டும் உனக்கு இருபகுப்பாக அடுப்பது கருணையோ? பூதங்களெல்லாவற்றிலுங் கலந்திருந்து பிரியாது விளங்கும் பரம்பொருளே!

மாயாவி கார மிடைபட்டி ருண்டு மருள்பட்ட மாயை யதனைத்
தீயாகி நின்று துருவத்தெ ளிந்த சிவஞான மின்ன செயலோர்
நீயாதி யாயி னிகழ்வாலு யர்ந்த புகழானி கழ்ந்த வையெலாந்
தாயாய நின்னை யலதாரபொ றுப்ப ரலவாது நின்ற தகையோய்.

(இ - ள்.) மாயாவிகாரத்திற்சிக்கி அஞ்ஞானமெய்தி மயங்கிய மாயையும் அம்மாயையை ஞானாக்கினியாகி நின்று தேடத்தெளிந்த சிவஞானமுமாகிய இத்தகைய செயலுடையோர் நீயேயாகின்றாயாதலின், இகழ்ச்சியாலும் உயர்ந்த புகழ்ச்சியாலும் நடந்தவையாவும் தாயாகிய உன்னையன்றி யெவர்கள் பொறுப்பார்கள். அழியாது நின்ற உயர்ந்ததகைமையையுடைய கடவுளே! எ - று.

அருவாதி மற்றை யுருவாதி யெண்ணி லவையோரி ரண்டு மலையா
வொருவாது நிற்றி யொருவிட்டு நத்தி யுனையன்றி யொன்று மியலா [
திருமூன்றி ரட்டி யெனநின்றெ டுத்த சமயங்க ளோறு முளையாய்
மருவாம யங்கி யலையாதி யெங்ங்ன மறைநூலு ணர்த்து மரபே.

(இ - ள்.) ஆலோசிக்குமிடத்தில், அருவமாயிருக்கின்றாய் மற்றைய உருவமாயிருக்கின்றாய். ஒப்பற்ற அவ்விரண்டுமல்லாமல் எல்லாப்பொருள்களிலும் நீங்காது நிற்கின்றாய் உன்னையன்றி உன்னைவிட்டுநீங்கி ஒன்றும் நடவாது. (அகச்சமயம் ஆறுபுறச்சமயம் ஆறுஆக) அளவுபடுத்திய பன்னிருசமயங்களிலும் உள்ளனை. ஆதிநாதனே! உன்னைக்கலந்தும் மயங்கி யலைகின்ற வேதநூல்கள் எங்ஙனம் தெரிவிக்கும் மரபினவாம்? எ - று. (உஎ)

பையாயி ரங்கொள் பொறிவாள ராவி னிருகண் படுத்த பரமன்
கையாயி ரங்கண் முகுளித்து நிற்ப விடமுண்டி ருண்ட களனைப்
பொய்யாத வேத முறைசொற்றி ரந்த பரிசேயி வன்பு கறலும் [ஞான்.
பெய்வால்வ ளைக்கை யுமையாளி டங்கொள் பெருமானெ ழுந்த ருளி

(இ - ள்.) ஆயிரம் பணமுடிகளைக்கொண்ட புள்ளிகள் பொருந்திய ஒளி தங்கிய ஆதிசேஷனாகிய சயனத்தில் இருவிழிகள் துயின்ற திருமால், தமது கைகள் ஆயிரத்தையுங் கூப்பிப்பணிந்து நிற்க, ஆலாலவிஷத்தை யமுதுசெய்து கருநிறமெய்திய கண்டத்தையுடைய சிவபெருமானை, பொய்மையில்லாத வேதமானது துதிசெய்து யாசித்தவகையே இவ்வியாதமுனிவன் துதிசொல்லவும், வெள்ளிய வளையையணிந்த கையையுடைய உமாதேவியை இடப்புறத்தே யமர்த்திய சிவபெருமான் அங்கெழுந்தருளினார். எ - று. (உஅ)

ஆனந்த வெள்ளம் விழிநின்று பொங்க வன்புந்து ணுக்கும் விரவா
வூனந்த வென்பு முருகிக்கு ழைந்து பரசுற்ற வெல்லை யுலவா
ஞானந்த வாத திறனந்தி யெந்தை திருமுன்னர் நின்று நவைதீர்
தானந்த மாதி யுணராவி யாத னுடலின்ன தன்மை மொழிவான்.

(இ - ள்.) அதுகண்ட வியாதமுனிவன் கண்களினின்று ஆநந்தப்பெருக்கு அதிகரிக்க, அன்பும் அச்சமுங்கலந்து, உடலிளைக்க எலும்பு முருகிக்குழைந்து துதிசெய்த காலத்தில, அழியாத ஞானநெறியிற்றவறாத வல்லபமுடைய திருநந்திதேவர், எமது தந்தையாகிய சிவபெருமான் திருமுன்னர்நின்று, குற்றமற்ற தமது திருவாக்கால், ஆதியந்தமறியாத வியாதமுனிவனுடன் இன்னவகையாகச் சொல்லுகின்றார். எ - று. (உகூ)

வேதங்க ளாறு வகைசெய்த வற்றின் விரிமுற்று ணர்ந்து முறையா
லோதும்பு ராண மீரொன்ப தாய தொகைசெய்து முண்மை யுணரா
வேதங்கொள சிந்தை யிரதங்க விழ்தத கலனெடுத்த கரனு
மீதங்க நிற்ப திதுமாலொ ழிப்ப துளதேல்வி ளம்பு தியெனு.

(இ - ள்.) வேதங்களை நான்குவகையாகப்பிரித்து, அவ்வேதங்களின் விரிபொருளை முழுவதுமறிந்து, முறைப்படி சொல்லுகின்ற புராணங்களைப் பதினெட்டு ஆகிய தொகைப்படுத்தியும் உண்மையை யறியாமல் குற்றம்பொருந்திய மனத்தினால், தன்பாற்பொருந்திய சாரத்தைச்சிந்திய ஓட்டைப்பாத்திரமாகி, தூக்கியகையும் மேலே பொருந்த (கம்பித்து) நிற்பது மயக்கத்தை நீங்கும் வகையுளதாயிற் கூறுகவென்று. எ - று. (கூ0)

சதகோடி செங்க ணெடுமாய ரென்பு தலைமாலை கொண்ட பரனை
முதுநான்ம றைக்கு மரிதாகி மூல முதலீறு மன்றி யுலவாக்
கதிதோறு நின்று சிவயோகர் சிந்தை யுணர்வுங்க டந்த பொருளை
யெதுநீநி னைந்து பிழைசொற்று நின்ற திழிதக்க செய்தல் கடனே.

(இ - ள.) சிவந்த தாமரை மலர்போன்ற விழிகளையுடைய நூறுகோடி திருமால்களின் எனபுகளையும் தலைமாலையையுமணிந்த சிவபெருமானை,பழமையாகிய நான்குவேதங்களுக்கும் அறிதற்கரிதாகி மூலப்பொருளாகி ஆதி (மத்தி) அந்தமற்றுவியாபித்து எல்லாப்பதவிகளிலும் விளங்கி, சிவயோகிகளுடையமனவுணர்ச்சியையுங் கடந்தபொருளை, நீயாது கருதிப்பிழைச் சொலகூறியிருந்தது? இழிவுடையதக்க செயலகளைச் செய்வது முறையோ? எ - று. (கூக)

கையோடு நாவு மரிதக்க பொய்மை கழறுற்ற புன்மை கழிவான்
மையால கண்ட னடிபேணி வெள்கி மனனஞ்சி நிற்றி யதனாற்
செய்யாதொ ழிந்து மெனவோடு மெந்தை திருவாய்ம லர்ந்த ருளினான்
பொய்தீர வியாதன வழிபாடு கண்டு பொறைதந்தெ ழுந்த ருளினான்.

(இ - ள்.) கையுடனே நாவினையும அரியத்தக்க பொய்மை மொழிகளைச் சொல்லிய இழிதகைமை நீங்கும்படி, விஷம்பொருந்திய நீலகண்டத்தையுடைய சிவபெருமான திருவடிகளைப்பணிந்து நாணெய்தி நிற்கின்றனை. அதனால், அந்நனம் புரியாது விடுப்போமென்று திருவாய் மலர்ந்தருளவும், எமது தந்தையாகிய சிவபெருமான அதனைச் செய்யாதொழிந்தோமென்று திருவாய் மலர்ந்தருளினார். வியாதமுனிவன் தான்கூறிய பொய்மைக்குற்ற மகலும்படிசெய்த வழிபாட்டைக்கண்டு சாந்தமுமளித்து அங்கெழுந்தருளினார். எ - று.

முக்கட்பி ரானை யெதிர்கொண்டு மோன முனிவோர்மு ழங்கு மழல்
நெகக்குற்றி ழைந்த மெழுகிற்கு ழைந்து விழிநீர்க தும்ப வுருகித் [வாய்
திக்குற்றெ ழுந்து தமதெல்லை சென்று சிவபூச னைக்கு ரியரா
யொக்கத்தெ ளிந்து கயிலைப்பி ரானை யடிபேணி யின்ன முறைவார்.

(இ - ள்) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானை யெதிர்கொண்டு பணிந்து மௌனநிலையிலுள்ள முனிவர்கள், ஒலிக்கின்ற தீயிடையே தளர்ந்துருகிய மெழுகுபோலக்கசிந்து கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சிந்த மனமுருகி, திக்குகடோறு நோக்கித் தமது இருக்கையை யெய்தி, சிவபெருமானைப் பூசித்தற்குரியராய் ஒருசேர மனந்தெளிந்து திருக்கைலாயநாதனாகிய சிவபெருமானைத் திருவடி வணங்கி இன்றுகாறும் வசிப்பார்கள். எ - று. (௩௩)

செந்தாம ரைக்க ணெடுமாலு மெந்தை சிவனைப்ப ணிந்த திறனா
னந்தாது பெற்ற நிதியோடு முந்தை நனிநாடு வந்து புகுதச்
சிந்தாகு லத்தி னிலைகூர வியாத முநிவன்சி றந்த செயலாற்
சந்தாப மற்று மணிகங்கை மூழ்கி யொருகாசி நின்று தணவான்.

(இ - ள்) செந்தாமரை மலர்போன்ற விழிகளையுடைய திருமாலும் எந்தையாகிய சிவபெருமானை வணங்கிய காரணத்தினால், குறையாமற்பெற்ற நவநிதிகளோடு, பழமையாகிய அழகிய நல்ல வைகுந்தபதவியை வந்தடைய, மனவருத்தத்தின் றன்மையதிகரிக்க, வியாதமுனிவனது சிறந்த செய்கையால் சந்தாபநீங்கி மணிகங்கை தீர்த்தத்தில் ஸநானஞ்செய்து ஒப்பற்ற காசிப்பதியினின்று நீங்காதவனாயினன். எ - று. (௩௪)

மனமாலி ழைத்து வருபுன்மை தீர மடமங்கை பங்க னவனைப்
புனைகோயி லுய்த்து வழிபாடு செய்து புதுஞான மெய்தி யருள்கூர்
கனைவார கழற்கண் விழிவைத்தி ருந்து கனிந்த சிந்தை யனுமாய்
வினைபோயொ ளிப்ப நெறிநின்று வேத முறையால்வி ளங்கி னனரோ.

(இ - ள்.) மனதில் மயக்கமெய்தி வந்த இழிதகைமை நீங்கும்படி, இளமைதங்கிய பார்ப்பதிபாகராகிய சிவபெருமானை, அழகிய திருக்கோயிலில்லெழுந்தருளச்செய்து வழிபாடியற்றிப் புதிய சிவஞானமடைந்து, கருணைமிகுந்த சத்திக்கின்ற நெடிய வீரகண்டாமணி தரித்த திருவடிகளில் கண்களைப் பொருத்தியாசித்து, கனிந்த மனமுடையவனாய், தீவினையானது தன்னைவிட்டு விலக, நன்னெறியிலிருந்து வேதமுறையாகிய வைதிகநெறியோடு விளங்கினன். எ - று.

கலிவிருத்தம்.

மரபி னோங்கும் வசிட்ட னுமவ ரொளியிற்
றரவ வாரச டையண லையர்ச்சியாப்
பரவு கற்பி னருந்ததி பன்மணி
விரவு பூணுற்று வெம்முலை மேயினன்.

(இ - ள்.) மரபினாலுயர்ந்த வசிட்டமுனிவனும், ஒளிதங்கிய பற்களையுடைய சர்ப்பத்தையணிந்த சடையையுடைய சிவபெருமானைப்பூசித்து, துதிக்கத்தக்க கற்பினையுடைய அருந்ததியின், பலரத்தினங்களிழைத்த ஆபரணமணிந்த வலிய குசங்களைப் பொருந்தினன், எ - று. (௩௫)

தெய்வ கோக்குலத தேனுவும பெற்றனன்
மெய்கொள வேத மனைததும் விளங்கினன்
பொய்யில் கேளவியா போறறப பொலிநதனன்
றுய்ய நூனெறி யனைவயுந தோய்நதனன.

(இ - ள்.) தெயவீகமபொருநதிய பசுககுலததுயாநத காமதேனுவையுமடைநதனன. உண்மையாகிய வேதஙகளிலெலலாம விளககமெய தினன். பொயமையிலலாதநூற் கேளவியையுடையோா துதிககப் பிரகாசிததனன. புனிதமாகிய நூற்றுறைகளிலெலலாம படிநதனன. எ - று. (கஎ)

ஈத லாம லிவனறனிக கோததிரத
தாதி நாளவந தவதரித் தெனபணி
சோதி நாயகன பூசை தொடுபபறுன
பாத லநதொழ நினறப ராசரன

(இ - ள்.) இதுவேயலலாமல இவனது ஒப்பற்ற கோத்திரததில் ஆதிகாலத்தில் வநதுதோனறி, எனபுமாலையணிநத சோதிசொருபராகிய சிவபெருமான பூசைததொடககு நீஙகாதவனுகிப பாதலலோகமும் பணியுமபடியிருநத பராசரமுனிவன. எ - று (கஅ)

கனிந்த சிநதைக னனமெழு காமெனத்
தனிததி ருநதரன றுமரைத தாளிணை
பனிதத நாணமல ராறபர சுறறனன்
முனிகரு லததரின மாதவ முறறினன.

(இ - ள்.) கனிவுறற மனமானது தீயிலிட்டமெழுகுபோலுருகி யொபபற்று விளங்கி, சிவபெருமானது செநதாமரை மலாபோனற உபயபாதஙகளைக் குளிர்ச்சிவாயநத அனறலாநத மலாகளானாச்சிததுப் பூசிததனன. முனிக்கூட்டததவரி லெல்லாம சிறநத தவததைச்செயது முடிததனன. எ - று. (கசு)

இன்ன காலத திவன்றிரு முன்னரி
னனன வனறனை யீனறவ ணஙகனன
முன்னி நிறறலு நோககினன முததருக
கனனி மெனகழு ககளத நாடையே.

(இ - று.) இப்படிப்பட்ட காலததில இவனுக்குமுனனே, தனனைப்புதல்வனுகப்பெற்ற தெயவபபெணணை யொதத தாயானவள் எணணஙகொண்டு நிற்கவும், அவளுடைய முததுகள நீஙகாத இளமைவாயநத மெல்லிய பாககுமரததை யொதத கழுததினுடையைப் பாாததனன. எ - று. (உ0)

களததி னுடை கதுவுற நோக்கலு
முளததொ டுநதுனுக குறறுயிாப் போங்கினன்
றளாதத வெநதுயாக கோாதலை யாயினன்
விளாதத கவலை விளைவய லாயினன.

(இ - ள்.) கழுததப் போாவையைக காணவும், மனமுாந்துணுகநெய்திப் பெருமூச்சு மிகுதியாக விருநதான. தனனைப்பிணிநத கொடுநதுன்புறுத்து [illegible]க்கோடாயினன், உணடாகிய இடர்ப்பாடென்னும் [illegible] விளை[illegible]யாயினன். எ [illegible] (உ[illegible])

ஈன்ற தாதையி றந்ததெவ் வாறெனத்
தோன்றல் தாயைத் தொழுதுவி னாயினா
னான்ற சிந்தைய னன்பின ழுகணீர்
நான்ற தன்முகஞ் சாய்த்து நவிற்றுவாள்

(இ - ள்) தன் முன்னே நின்ற தாயைப்பணிந்து, என்னைப்பெற்ற தந்தை எந்தவகையாக இறந்ததென்று கேட்டான். அவ்விருவிலும் அதிகரித்த சிந்தையுடைய அம்மாது அன்புடன் அழுகின்ற கண்ணீர் சிந்துகின்ற தனது முகத்தைச்சாய்த்து மகனோடு சொல்லுவாள் எ - று. (௪௨)

மைந்தனே நின்னை யீன்றருண் மாதவத்
தந்தை யாவி தறுகட் பிறையெயிற்
றந்த ரக்க னொருவனுண் டானென
வெந்த சிந்தைய ளாகி விளம்பினாள்.

(இ - ள்.) மகனே! உன்னைப்பெற்றருளிய பெருந்தவத்தையுடைய பிதாவின் உயிரை, அஞ்சாமையையும் பிறைச்சந்திரன் போன்ற பல்லையுமுடைய அசுரனொருவன் பருகினானென்று, வெதும்பிய மனமுடையவளாகி அவன் தாய் சொல்லி வெளியிட்டனள். எ - று. (௪௩)

அனைய வன்னது கூறலு மந்நிலை
வனைகொ டிச்சடை மாதவ மைந்தனும்
நினையு நெஞ்சொடு நின்றயர்ந் தானரோ
வினைய மேதித்த றென்றகம் விம்மினான்.

(இ - ள்) அவள் அத்தகைய சொல்லைக்கூறவும், அச்சமயத்தில், கட்டிய கொடிபோலுஞ் சடையையுடைய பெருந்தவஞ்செய்த புதல்வனாகிய பராசரன் (யாதுசெய்வலென்று) எண்ணிய மனத்தோடு நின்று வருந்தினான். இதற்குத் தீர்வுயாதென்று கருதி மனம்புழுங்கினான். எ - று. (௪௪)

கொற்ற வாட்கைய ரக்கர் குலங்கெடப்
பெற்ற தாதை வெளிப்படப் பெய்வளை
யுற்ற பாக னருச்சனை யோம்பினான்
மற்று ணர்ந்தறி யாத்தனி மைந்தனே

(இ - ள்.) வெற்றிவாய்ந்த வாட்படைதாங்கிய கையையுடைய இராக்கதர் குலமானது அழியவும், தன்னைப்பெற்ற தந்தை வெளிப்படவும், அடுக்கிய வளையலையணிந்த பார்வதிபாகராகிய சிவபெருமானை, வேறொன்றுங் கற்றறியாத புதல்வனாகிய பராசரமுனிவன் பத்தியோடு அர்ச்சனை புரிந்தனன். எ - று.

பன்னு வேதப் பராசர மாமுனி
பொன்னின் வார்சடை யோனடி பூசியாத்
தன்னை யோர்ந்தத் தலைவனை நோக்கினன்
என்னை யாளுடை நாயக னெய்தினன்.

(இ - ள்) சொல்லுகின்ற வேதத்தையுணர்ந்த பெருமைதங்கிய பராசர முனிவன் [illegible] பொன்போலும் நீண்டசடையையுடைய சிவபெருமான் [illegible] யர்ச்சனைசெய்து தன்னையுணர்ந்து அத்தலைவனாகிய சிவபெரும[illegible] தரிசித்த

னன. என்னையாளாகவுடைய சிவபெருமான் அப்பொழுது அவனுக்குக் காக்ஷி தந்து அங்கெழுந்தருளினார். எ - று. (சசு)

கண்டு கண்களி கூர்ந்தனன் கைமுகிழ்
கொண்ட சென்னிய னுள்ளங் குழைந்தன
பண்ட ரப்பதம பாடிநின் ருடின
னண்டர் நாயக னுள்ளநெகக் கானரோ.

(இ - ள்) சிவபெருமானைத் தரிசித்து, பராசரமுனிவன் கண்களில் ஆநந்த மகுந்தனன். கையைக்கூப்பி யமைத்த சிரமுடையவனுகி மனமுருகினன். பண்ணொலிமுழங்கச் சிவதுதியாகிய பதங்களைப்பாடி நின்று ஆனந்தக்கூத்தா டினன், அதனால் தேவர்கள் தலைவராகிய சிவபெருமான் திருவுளங்கனிந்தனர்.

பால நீயெம பதத்துணை வேண்டிநின
ருலு மனபி னருச்சனை செயதனை
யேல வேண்டிய யாவென றியம்பலுங
கால மோர்ந்தறி பிரானை கழறுவான.

(இ - ள்) சிறுவனே! நீ நம்முடைய உபயபாதங்களை விரும்பி நின்று அர்ச்சிக்கும் பேரன்போடு நம்மையர்ச்சித்தாய் அதனால் உனக்கு ஆகவேண்டியகாரியங்களெவை? என்று திருவருள் புரியவும், தனக்குற்ற நற்காலத்தை யுணர்ந்தறிந்த பராசரமுனிவன கூறுவான. எ - று. (சஅ)

எந்தை யென்னை யருந்தவத் தீன்றரு
டந்தை யாவி தழறகணி சாசரன
சிந்தி யுண்டன ளுங்கவன றீக்குலம
வெந்து வீழ விழித்திட வேண்டினேன

(இ - ள்.) எமது தந்தையே! அடியேனை யருந்தவத்தாற் பெற்றருளிய தந்தையினுயிரை, தீப்போலும் விழிகளையுடைய அரக்கன அழித்தருந்தினன். ஆதலால் அவனுடைய கொடிய இராக்கதகுலம் வெந்துவிழும்படி விழியால் நோக்க விரும்பினேன எ - று (சகூ)

எய்து மாதவத் தாலெனை யீன்றருள்
செய்த தந்தை திரும்ப விரும்பினேன
பெய்த வாலவளைப பேதைக் கிடந்தரு
மைய னேயீ தளித்தருள செயகென.

(இ - ள.) பொருந்திய சிறந்த தவச்செயலால, அடியேனைப் புதல்வனுகப் பெற்றருளிய தந்தை மீணடும வருதற்கு விரும்பினேன. அடுக்கிய வெள்ளிய வளையலையணிந்த உமாதேவியாருக்கு இடப்பாகந் தந்தருளிய சிவபெருமானே! இவ்வரங்களை இனிதாக அடியேனுக்குத் திருவருள்புரிய வேணடுமென்று பிரார்த்திக்க. எ - று. (ருo)

மூண்ட வெஞ்சினத் தனனவர் முறறுற
மாண்டிறக்கு மரபுவ ழுங்கினுன்
கண்ட குந்தனித் தந்தையைக் கண்ணுதன்
மீண்டெ திரந்து முன்னாவி டுத்தனன்.

(இ - ள்.) மேற்கொண்டெழுந்த கடுங்கோபத்தினால் அவ்வரக்கர்களின் குல முழுவதும் இறந்துபடும் மாகாத்தை யநுக்கிரகித்தனர். காணத்தக்க ஒப்பற்ற பிதாவைத் திரும்பவும் நேரே வரும்படி, சிவபெருமான் அப்பராசர முனிவனுக்கு முன்னே விடுத்தனர். எ - று. (கக)

ஈச னின்னவ ரங்கொடுத் தேகினு
னாச றுங்கயி லைக்கிரி யண்மினுன
பூச னைக்குரித் தாயபு தல்வனு
மாச றுத்துள மம்மரொ ழிந்தனன

(இ - ள்.) சிவபெருமான் இத்தகைய வரத்தைப் பராசரமுனிவனுக்குக் கொடுத்து, குற்றமற்ற கைலாயகிரிக்குச் சென்று எழுந்தருளினர். சிவபூசைக் குரித்தாகிய பாராசரமுனிவனும் மனமாசறுத்துத் தனக்குற்ற மயக்கமகன்றனன.

தாதை யைத்தொடித் தாயைத் தனித்துணைப்
பாதம் வீழ்ந்து பணிந்தனன் பனமுறை
யேதில சிந்தை யவனுமெ டுத்தெடுத்
தாத ரத்தி னணைத்துயிர்த் தானரோ.

(இ - ள்) தந்தையையும் வளையலணிந்த தாயையும் ஒப்பற்ற உபயபாதங் களில் விழுந்து வணங்கினன். குற்றமில்லாத மனமுடைய அவன் தந்தையும் பராசரனை யெடுத்தெடுத்து ஆசையோடணைத்து உச்சிமோந்தனன. எ - று.

வாள ரக்கர்ம றக்குல முற்றவு
மூளெ ரித்தலை வீழ்ந்துமு டிந்துறக்
கோளெ ரித்தலை மந்திரங் கோட்டினு
னாளெ ழுந்த ரக்கரத் தொல்குலம்.

(இ - ள். வாட்படையேந்திய இராக்கதரது குலமுழுவதும், அதிகரித்த தீயில் வீழ்ந்திறக்கும்படி வலிதங்கிய தீத்தலை மந்திரத்தைச் செலுத்தினன். அதனால் அவ்வரக்கருடைய பழமையாகிய குலம் தூளிபட்டழிந்தது எ - று.

தாம வேற்கைய ரக்கர் தனிக்குல
மோம வெந்தழல் புக்கொழிந் தார்திற
றாம மண்டம னைத்தையுஞ் சூழ்ந்துபோ
யேம மாலவரைச் சுற்றுமெ ழுந்ததே.

(இ - ள்) மாலைசூடிய வேலேந்திய கையையுடைய இராக்கதரது ஒப்பற்ற குலத்தினர், வெவ்விய ஓமாக்கினியிற் பிரவேசித்து மாண்டார்கள். அததீப்புகை யானது அண்டங்களை யெல்லாஞ் சூழ்ந்துசென்று, பெரிய பொன்மலையைச் சுற்றிலும் எழும்பியது. எ - று. (கரு)

மூது ணர்ந்தவ சிட்டன்மு தலினே
ரீது ணர்ந்துப ராசரனை யெய்தினா
தீது தீர்த்தனை யிச்செய றீர்க்கென
வாது செய்தவர்க் காறுசெய் தானரோ.

(இ - ள்) குற்றமுணர்ந்த வசிஷ்டன் முதலிய முனிவர்கள் இதனையறிந்து பராசரமுனிவனை யடைந்தார்கள். அசுரர்களது துன்பத்தை யகற்றினை. தீப்புகையின் பெருக்குதலையும் நீக்குகவென்று, அப்படிச்சொல்லி வந்தவர்களுக்குப்பராசரன் டைமழிசெய்தனன். எ - று. (ருகூ)

மோன வேத முனிவரர் யாவரு
மான தம்முறை யாச்சிர மம்புகா
ஞான ரூப பராசர னன்கருணை
மானி டத்த னடித்துணை வாழ்த்தினன்.

(இ - ள்.) மௌனநிலையையும் வேதவாராய்ச்சியையுமுடைய முனிசிரேஷ்டர்கள் பலரும் தமது வாசஸ்தானங்களாகிய ஆச்சிரமங்களையடைய, ஞானரூபியாகிய பராசரமுனிவன் நன்றாகத் திருவருள் புரியும் உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய சிவபெருமான் உபயதிருவடிகளைத் துதிசெய்தனன். எ - று.

மாது பாகன ருச்சனை மாட்சியே
தீது தீரப்ப நஞ்சகல் நிலவென்ப
போது போக்கிய ருச்சனை போக்கினன்
சாத னீங்கு தலைமைபெற் றனரோ

(இ - ள்.) பார்ப்பதி பாகராகிய சிவபெருமானுடைய பூசையின் சிறப்பே தீமைகளை யகற்றுவதற்கு அஃதன்றி வேறொன்று மின்று. என்று துணிந்து, காலத்தைச் செலவிட்டுச் சிவார்ச்சனையை மிகுதியாகச் செய்தனன் அதனால் இரத்தலினின்றும் விலகித் தலைமைத்தன்மை யெய்தினன். எ - று. (ருஅ)

கோசி கப்பெரு மாதவக் கோமகன்
பூசை யிற்சிவ பூசையு யர்ந்ததென்
றாசை பற்றிய ருச்சனை யாற்றினன்
றேசின் மாதவஞ் செய்கைதி ருந்தினன்

(இ - ள். கோசிகனென்னும் சிறந்த பெருந்தவமுடைய மன்னவன், அர்ச்சனைசெய்தலிற் சிவார்ச்சனையே யொருவர் செய்தற்குரியதென்று ஆசைகொண்டு சிவார்ச்சனை புரிந்தனன். குற்றமில்லாத பெரிய தவச்செயலில் திருந்தமெய்தினன். எ - று. (ருகூ)

ஓது சாபந் தருவதி ரிசங்குமுற்
போத நீங்கிப் புலையரிற் போகிய
தீதொ டுந்திரி சங்குவை மெய்யொடும்
போதி யென்றவர் பொன்னகர் போக்கினன்.

(இ - ள்.) வசிஷ்டமுனிவர் சொல்லிய சாபமொழியால், தன் வடிவமாறிப் பண்டைய ஞானத்தையிழந்து புலையர் குலத்தினன் போலாகிய குற்றத்தோடுந் திரிசங்குவென்னு மன்னவனை, உடம்போடுஞ் செல்கவென்று அவனைச் சுவர்க்கலோகத்திற்குச் செலுத்தினன். எ - று (சூ0)

தரும மாதவ ரெழுவரிற் றனுமற
றொருவ னாகி யுயர்குலத் துற்றனன்
கருணை வானவன் கண்ணுதல் பூசனை
யருமை யாவ ரளவைசொற் றார்களே.

(இ - ள்) தருமசொரூபிகளாகிய பெருந்தவமுடைய சப்தருஷிகளில், தானும் ஒருவனாக உயர்குலமாய்ப் பெற்றனன். கிருபாமூர்த்தியாகிய நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் பூசையின் அருமைப்பிரபாவங்களை யெவ்வாறாம் முற்றுஞ் சொன்னார்கள். எ - று (௬௧)

### கலிநிலைத்துறை.

புழுதி ளார்ந்தறி புலிப்பதத் தொருதனி முனிவ
னெழுகு லனொடு மானடி யருச்சனை யோம்பி
யெழுது சித்திர மொத்திருந் தெம்பிரா னடிக்கும
பழுதி லுண்டவந் தில்லையி லனுதினம் பணிவான்

(இ - ள்.) கலைஞானங்களை யெல்லாங் கற்றறிந்த புலிக்காலையுடைய ஒப்பற்ற மழமுனிவர் அதிகரித்த அன்புடனே சிவனடிப் பூசையைக் காத்து, சுவர்த் தலத்தில் வரைந்த சித்திரப்பதுமைபோல் அசைவற்றிருந்து எமது சிவபெருமான் திருநடம்புரியுங் குற்றமில்லாத அநவரத தாண்டவத்தைத் தில்லைப்பதியிற் சதாகாலமும் வணங்குகின்றார் எ - று. (௬௨)

இறப்புறாவரம் பெற்றன னிருந்தன னின்னு
மறத்தி றத்துப மன்னியற் பெற்றினி தளித்தான்
றிறத்தி னோங்கிய மாதவஞ் செய்கையுட் சிவனா
ரறக்கி டைப்பது பூசையி னன்றிமற் றுளதோ.

(இ - ள்) இறவாதவரத்தை யடைந்து இன்றையவரையில் விளங்குகின்றனர். தருமநெறியையுடைய உபமன்யுமுனிவரை இனிதாகப் புதல்வராகப் பெற்றளித்தனர். வல்லமையோடியைந்த பெருந்தவஞ்செயலில், சிவபெருமான் திருவடியை அடையப்பெறுவது பூசாபலத்தாலன்றிமற்றொன்றாலுண்டாகுமோ?

அனைய னீன்றுவந் தருளுப மன்னிய னுவற்குத்
தநய னாகிமென் றளர்நடை பயின்றிடுந் தலைநா
ளினைப சிக்கெனப் பானினைந் தழுதலு மீன்ற
மனையின் மாட்சியள் வருந்தினண் மகன்முகம் நோக்கி

(இ - ள்.) அப்புலிப்பதமுனிவர் சந்தோஷித்து ஈன்றருளிய உபமன்யுமுனிவர், அவருக்குப் புத்திரராகி மெல்லிய தளர்நடையிலும் ஆதிநாளில், வருந்துகின்ற பசிக்காகப் பாலைப்பருக நினைத்து புலம்பவும், அவ்வுபமன்யுவைப்பெற்ற மனைமாட்சியிற்சிறந்த தாயானவள், தன்புத்திரன் முகத்தைப்பார்த்து மனம் வருந்தினள். எ - று. (௬௩)

குழவி பாற்கென வருந்தலும் பச்சைநெற் குறுந்தா
விழையு மிக்களைந் தரிசியெடுத் திரம்புன விட்டுக்
குழைம லர்க்கையா லுலக்கையா லிடிபடக் குழைத்தாள்
விழைபு னற்கரந் தளித்தலு நுகர்ந்திலன் வெறுத்தான்

(இ - று) குழந்தை பாலுக்காக அழவும், பச்சைநெல்லைக் குறுகியெடுத்து உமியைக்கறறி விரும்பத்தக்க அரிசியைக்கொண்டு குளிர்ந்தநீரை யதிற்பெய்து, மென்மைத் தன்மையுடைய தாமரைமலர்போன்ற தன்றுகையில் உலக்கைகொண்டு இடிபடும்படி (மாவாம்படி) குத்தினள். அம்மாவினை நீரோடுகரைத்துப் பருகக்கொடுக்கவும் உபமன்யுமுனிவர் பருகாமல் அதனைத்தள்ளினர். எ-று.

நின்றி ரங்கின னழுதன னவனிலை நோக்கிக்
கன்று சிந்தையி னெடுத்தெடுத் தணைத்தன ளகலவா
ளொன்று மாவதி லாமையி னுருத்தன ளுரைத்தா
ளின்று நீயழு தெனகொலென் றினையன வியம்பும்.

(இ - ள்.) அங்கிலேயே நின்று மனமவருந்தி அழுதனா அப்புதல்வன் நிலைமையைக்கண்டு வருந்திய மனத்தோடு குழந்தையை எடுத்தெடுத்தணைத்துக் கொண்டு மனம்வருந்துபவளாய், செய்யத்தக்கது ஒன்றுமில்லாமையால் கோப மெய்தி மகனைநோக்கிச் சொல்லுகின்றாள் மகனே! இப்பொழுது நீயழுது என்னவாகுமென்று இப்படி மேலுஞ்சொல்லுகின்றாள். எ - று. (கூசா)

பாசொ ளிக்கொடி யிடம்படா பவளமால் வரையின
பூச னைக்குரி யாக்கலா னலவளம புகுமோ
காய்சி னத்தினின் றழுதனை யெனசெய்யக் கடவேன்
மாசின மைந்தநீ யழேலெனக் கட்புனன் மறித்தாள்.

(இ - ள்.) ஒளிபொருந்திய உமாதேவியாகிய மரகதக்கொடி இடப்புறம் படாந்த சிவபெருமானாகிய பவளமலையின ஆர்ச்சனையைச்செய்ய வல்லவர்களாக் கல்லாமல நலவளங்கள உண்டாகுமோ? குற்றமில்லாத மகனே! மிக்ககோபத் தோடு நின்றழுகின்றனை இதற்குயான யாதுசெய்யக் கடவேன? நீயழாதே யென்று கண்ணீரை மாற்றினாள். எ - று. (கூஎ)

அருந்த வத்தனி யோகிய ரளப்பத்தற் கரிதாய
விரிந்த பூதமோ ரைந்தினும புலப்படான விரவிப
பொருந்தி நின்றவ னருச்சனை போற்றினாக் கல்லாற
பெருஞ்சி றப்பொடு நினைத்தவை கிடைக்குமோ பிள்ளாய

(இ - ள்.) குழந்தையே! அருந்தவம்புரிந்த ஒப்பற்ற யோகிகளாலும அள விடுதற்கரிதாய, விரிந்த ஐம்பெரும் பூதங்களிலும புலப்படாமற கலந்து, பொருந்தி விளங்கும் சிவபெருமானுடைய ஆராசனையைப பாதுகாத்தவர்களுக்கல்லாமல ஏனையோருக்கு விரும்பிய பொருள்கள பெருஞ்சிறப்புடன உண்டாகப் பெறுமோ. எ - று. (கூஅ)

எனறெ டுத்தெடுத் தருச்சனைக் குரிமைசொற் றிசைத்தா
டன்று ணைசசெவி தாழ்த்தவை சிறுவனுந் தரித்தா
னன்று ருத்திர மாமணி பூதிகொண் டணிந்தான
றென்று தொட்டெழு மஞ்செழுத் துளத்தொடுந் தொனித்தான்.

(இ - ள்) எனப்பலவா றெடுத்துச் சிவார்ச்சனையின உரிமைச்சொற்களைக் கூறினாள உபமன்யுவும தன்னிருசெவிகளைச் சாய்த்து மனதிற்கொண்டனா. அப்பொழுதே சிறந்த உருத்திராக்க மணியையும் திருவெண்ணீற்றையும எடுத்துத் தரித்தனர். பழமையாக உண்டாகிய பஞ்சாக்கர மந்திரத்தை மனதில தியானித்தனா. எ - று. (கூகூ)

சிரித்து முப்புரம பொடிபட்டவ னூபுரத் திருத்தா
ளருச்ச னைக்குரித் தாய்நினைந் துருகுமன பினனுயப
பரித்த பத்திசோ புலத்தினை யொருநெறிப் படுத்திப
புரித்த வாகுழ லிடத்தின னபூசனை புரிந்தான்.

(இ - ள்) புன்னகைசெய்து புரமூன்றையும் பொடிசெய்த சிவபெருமானுடைய நூபுரமணிந்த திருவடிகள் அர்ச்சனைசெய்தற்குரியவாயக கருதிவருந்தும் அன்புடையவனுகிப் பத்திபொருந்திய மனதை யொருவழிசெலுத்தி, புரிவுற்ற நெடிய கூந்தலையுடைய உமாதேவியை யிடப்பாகமாகவுடைய சிவபெருமானைப் பூசித்தனா. எ - று (எ0)

இன்ன தன்மையி னீங்கிவ னருச்சனை யியற்ற
வன்ன வூர்திக்கு மரிக்குமற் றரிதென லானோன்
றன்ன ருவபுரிந் திந்திர னுருவொடு சார்ந்து
முன்ன ரெய்தினன் சிறுவனை நோக்குபு மொழியும்.

(இ - ள்) இந்தத்தன்மையோடு இவ்வுபமந்யு முனிவர் சிவார்ச்சனைபுரிய, அன்னவாகனமுடைய பிரமனுக்கும் திருமாலுக்கும் காண்டற் கரிதென்று சொல்லத்தக்கவராகிய சிவபெருமான் திருவருள்கொண்டு இந்திரனவடிவேற்றுச் சென்று, சிறுவராகிய உபமந்யு முனிவர்க்கு முன்னரெழுந்தருளி, அவரை நோக்கித் திருவாய் மலர்ந்தருளுகின்றனர். எ - று (எக)

பால னீயுனக் கெம்பிரா னருச்சனை பயிலுங்
கால மோவிது பருவமன் றெனச்சில கழற
மூல மோர்ந்தறி புதல்வனு மவனெதிர் முனிந்தா
னேனு மனப்பற சபிப்பனென் றெழுதலு மிறைவன்.

(இ - ள்) நீயோ சிறுவன், எமது சிவபெருமான் பூசையைச்செய்யுங்காலம் உனக்கு இதுவோ? காலமிதுவன்று, என்று சிலசொற்கள் சொல்ல, மூலத்தை யாய்ந்தறிந்த உபமந்யு முனிவரும் அவ்விந்திர வடிவினனுக்கு நேர்முகமாகக் கோபித்து பொருந்திய அபானது நீங்கும்படி சபிப்பேனென்று எழவும், சிவபெருமான். எ - று. (எஉ)

பிள்ளை யீங்கிவ னருச்சனைப் பெருந்திற னோக்கி
யுள்ள மோர்ந்துதன் றிருவரு ளுவந்தன னாகி
வள்ளை வார்குழை யுமையொடு மழவிடைப பொலிந்தான்
கொள்ளை யன்பொடும் பணிந்தனன் புதல்வனுங் குறுகி

(இ - ள்) இவ்விடத்தில், சிறுவனுகிய இவனுடைய அர்ச்சனையின் பெருவலிமையைக்கண்டு திருவுளங்கொண்டு, தமது திருவருள் மிகுந்தவராகி, வள்ளைக்கொடிபோன்ற நீண்டசெவியையுடைய உமாதேவியாரோடு இளமைபொருந்திய இடபவாகனத்தில் விளங்கினர் மிகுதியாகிய அன்புடன் உபமந்யு முனிவரும் இறைவரை நெருங்கி நமஸ்கரித்தனர். எ - று. (எங)

கைபு டைத்தனன் கண்கணீர் கலுழ்ந்தனன் களித்து
மெய்பொ டித்தன னாடினன் பாடினன் வியந்தா
னைய நின்னடித் தாமரை காணபதற் களியேன
செய்யு மாதவ முளதெனத் திகைத்தனன் சிந்தை

(இ - ள்) உபமந்யுமுனிவர் சந்தோஷத்தால் கைகொட்டினர். கண்களில் ஆநந்த பாஷ்பஞ்சிந்தினர். உடல் முழுதும் மயிர்க்கூச்செறிந்தனர். ஆநந்தக்கூத்தாடினர். மதுரமாகப்பாடினர். அதிசயித்தனர் ஐயனே! தேவரீருடைய திருவடித்தாமரைகளை அடியேன் தரிசிப்பதற்குப் பூர்வத்திற்புரிந்த சிறந்ததவமுள்ளதென்று மனமயங்கினர். எ - று. (எச)

ஒருங்கு பூசனை திருந்துப மன்னிய னுளத்தைப்
பொருந்த நோக்குறு மெம்பிரா னுவகையிற பொஙகி
வருந்த ருசசனை புரிதரும் புதல்வநின் மனததி
னிருந்த தேதெமக கியமபுதி யொழிவுறு தென்றான்.

(இ - ள்.) சிவபூசையில ஒருசேரததிரும்பிய உபமநயுமுனிவா மனதைத திருததமாககணடு, சிவபெருமான சநதோஷிததிருந்து, வருநதுகினற சிவாாசசனைசெயயுஞ சிறுவனே! உனமனதிற் கருதியதியாது? தவறுமல எனககுச் சொல்வாயாகவென வினவினா. எ - று. (எரு)

வெள்ளை மாலவிடை யெமபிரா னருளினன வினவிப்
பிளளை பாலெனப பிதற்றலுமப பேரொளி பிறநத
வளளை வாாகுழை நோககுபு நகைததனன வாாத
னெளள ருநதிருப பாறகட லமுதொடு மீநதான.

(இ - ள்.) வெணமை நிறநதஙகிய பெரிய இடபவாகனமுடைய எமது சிவபெருமான வினவியருளினா உபமநயுமுனிவா பாலென்றுசொலலவும, பேரொளிவீசிய வளளைககொடிபோலநீணட செவியையுடைய உமாதேவியைத திருககணணோககி நகைததருளினா அபபொழுதே சிவபெருமான இழிவற்ற திருபபாறகடலை அமுததடோடும அநுககிரகிததனா. எ - று. (எசு)

தன்னை யோாநதறி ஞானமுஞ சாதறி வானுமம
பின்னு மாகிய கலைகளு நானமறைப பெருககும
பனனி யோாநதுண ாறிவளித தகனறனன் பரமன
மின்னி மைநதநெறி காயிலைபுக கினிதுவீற றிருநதான

(இ - ள்) தனனைபுணாநதறியும் ஞானமும, இறததலற்ற வரமும, கலைஞானஙகளும, நானகுவேதஙகளின பெருககையும ஒகிபுணாநதறியததகக அறிவையும தநது சிவபெருமான அநதாததானமாகி, மினனலைபபோல ஒளிவீசுந திருககைலாபகிரியை யடைநது இனிதாக வீறறிருநதருளினா. எ - று (எஎ)

தாம வாாசடைச சதானநத னெனுஞசிவ யோகி
யேம வெறபெனும விலலியைப பினிதுபூ சிததது
நாம மீறுபட் டிறபபுறு நலநெடு நவைகூா
காம னைதநெ றாநுதலபிரா னருளொடுங களிபபான.

(இ - ள்.) மாலைபணிநத நீணடசடையையுடைய சதானநதனெனனுஞசிவயோகியானவா, பொனமலையெனறு சொலலப்படும விலலையுடைய சிவபெருமானை இனிதாகவாச்சிதது, தமபெயர் இறுதியெயதி யழியாத நன்மையோடு, குறறமிகுநத மனமதனைபெரிதத திருநெறறி விழியையுடைய சிவபெருமான திருவருளோடு சநதோஷித திருககினறனா எ - று. (எஅ)

ஏழி ரணடெனு முலகமுங கணபபொழு தெய்தி
யாழி யநநிலத தவரவ ரியறகைமுற றறிந்து
தாழி ருஞ்சடை யெம்பிராற் கனுதினஞ் சாற்றுஞ
சூழு மநதிரத தியஙகுறுங தன்னிலை தொலைபபான்.

(இ - ள்.) பதினான்கென்று சொல்லும் உலகங்களிலும் கணப்பொழுதினுட் சஞ்சரித்து, கடல்சூழ்ந்த அப்பூமியிலுள்ளாருடைய இயற்கைகளை முழுவது முணர்ந்து, தொங்குகின்ற பெரிய சடையையுடைய எமது சிவபெருமானுக்கு நாடோறும் விண்ணப்பிக்கின்ற தன்மையோடு, தியானிக்கும் மந்திரத்தினால் எங்குஞ் சஞ்சரிக்கின்ற தமது நிலைமையினின்று நீங்காதிருக்கின்றனர்.

கோதம ரப்பெரும் பெயரினா னருச்சனை கோட்டிக்
தீத றுஞ்சிவ விரதநோற் றதனொடுஞ் சிறந்து
பூத லத்தரை யம்முறை நோற்றிடப் புரிந்து
சாத றீர்ந்தன னருச்சனை யொழிந்திலன் சரிப்பான்.

(இ - ள்.) கோதமராகிய பெரும்பெயரையுடைய முனிவர் சிவார்ச்சனை செய்து அதனோடு குற்றமற்ற சிவவிரதங்களை யநுஷ்டித்து மேம்பட்டு, பூலோகத்திலுள்ளவர்களையும் அவ்வகையே யநுஷ்டிக்கச்செய்து இறத்தலினின்று நீங்கினர். சிவார்ச்சனை நீங்கிலர். எங்குஞ் சஞ்சரிக்கின்றார். எ - று.　(அ0)

விரித்த நான்மறைக் குலத்துளோன் மிருகண்டு வென்பான்
புரித்த வார்சடை யரனடி யருச்சனை போற்றிப்
பரித்த நான்மறைக் குருசினமாக கண்டனைப் பயந்தா
னரிக்கு மெட்டருஞ் சத்திய லோகமுற் றடைந்தான்.

(இ - ள்.) சொல்லிய நான்குவேதங்களை யுணர்ந்த அந்தணர் குலத்திலுதித்த மிருகண்டுவென்பவர், புரிந்துள்ள நீண்டசடையையுடைய சிவபெருமான திருவடிப்பூசையைச்செய்து, நான்குவேதங்களையு முணர்ந்த தலைவராகிய மார்க்கண்டேயரைப் புதல்வராகப் பெற்றனர். இறுதியில் திருமாலுக்கும் அடைதற்கரிய சத்தியலோக மெய்திப்பொருந்தினர். எ - று　(அக)

அனைய மைந்தனைப் பயந்தலா லரனதிரு வருளா
லினைய லோகத்தி னினிதுவீற் றிருந்தன னின்னும்
புனித மாதவத் தலைவிர்கா ளாங்கவன் புனித்த
தநய னன்னிலை கேண்மெனச் சூதனுஞ் சாற்றும்

(இ - ள்.) அம்மார்க்கண்டேயரைப் புதல்வராகப்பெற்றமையால், சிவபெருமான திருவருளோடு, இத்தகையலோகத்தில் இனிதாக வசித்திருந்தனர். பரிசுத்தமான பெருந்தவஞ்செய்த தலைவர்களே! இன்னும் அம்மிருகண்டு முனிவர் புதல்வரது நல்ல நிலைமையைக் கேளுங்களென்று சூதமுனிவர் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்லலாயினர். எ - று.　(அஉ)

வேத முற்றுணர்ந் திசைத்திடு மிருகண்டு வென்பான்
காதன் மைந்தனுக் கருந்தவ மியற்றலும் கருதி
யாதி நாயக னருமக வளித்தன னவற்குப்
போது மாண்டுமற் றெண்ணிரண் டளவையிற் புரிந்தான்

(இ - ள்.) வேதமுழுவதையும் உணர்ந்தோதிய மிருகண்டு முனிவர், ஆசையுடைய புத்திரனுக்காக அருந்தவம் புரியவும், ஆதிநாயகனாகிய சிவபெருமான் திருவுளங்கொண்டு அரியபுதல்வனை யநுக்கிரகித்தனர். அப்புதல்வனுக்கு எய்தும் வயது பதினாறுவரையி லிருக்கச்செய்தனர். எ - று.　(அங)

கேட்ட நானமறை யந்தண னுவகையிற் கிளர்ந்தான்
மீட்டு வந்துமார்க் கண்டனைப் பயந்தனன் விருப்பா
லேட்டி ருங்குழன் மனையொடுங் களித்தன னிருந்தான
ரோட்ட லங்கலாற கெண்ணிரு பருவமுந் தொக்க.

(இ - ள்.) அதனைக்கேட்ட நால்வேத முணர்ந்த மிருகண்டு முனிவர் சந்தோஷத்தில் மிகுந்தனா. திரும்பிவந்து மார்க்கண்டேய முனிவனைப் புதல்வராகப்பெற்றனர். மலரணிந்த பெரிய கூந்தலையுடைய மனைவியோடு ஆசையோடு சந்தோஷித்திருந்தார் இதழ்கள மலர்ந்த மாலையணிந்த மார்க்கண்ட முனிவருக்குப் பதினறுவருடமாயின. எ - று. (அசு)

ஈன்ற தாயருந் தந்தையு மிருந்திருந் திரங்கிக்
கான்ற நெஞ்சொடு மழுதழு தலமரக் காணுத
தோன்ற னீவிர்மற றயாகுவ தென்னெனச் சொற்றூர்
மூன்று கட்பெருந் தலைவனன் றருளிய மொழியை

(இ - ள்.) தன்னைப்பெற்ற தாயும் தந்தையும் அடிக்கடி மனமிரங்கிக்கசிந்த மனதோடு அழுதழுது வருந்தக்கண்டு, பெற்றோரே! நீங்கள் மனம் வருந்துவதென்னகாரணமென மார்க்கண்டா வினவ, திரிநேத்திரங்களையுடைய பெரிய தலைவராகிய சிவபெருமான அக்காலத்திற றிருவாய்மலர்ந்த வார்த்தையைத்தெரிவித்தார்கள். எ - று (அடு)

இன்ன தோநும தரந்தையென றிசைத்தன ரூற்றித
துன்னி ருஞ்சடை யெம்பிரான றிருவடி துதித்துப
பன்னு நாண்மலா பழுதறுத தருச்சனை பயினறு
ன்னன காலையி னந்தக னவறகெதி ரடைந்தான்.

(இ - ள்.) உங்கள மனவருத்தம இத்தகைத்தோவென றுகூறி, அவர்களைத் தேற்றி, நெருங்கிய பெரிய சடையையுடைய எமது சிவபெருமான திருவடிகளைத் துதிசெய்து, சிவபூசைக்குச்சொல்லிய அனறலர்ந்த மலர்களைப்பழுதகற்றி அருச்சனை செய்வாராயினா அப்படி மார்க்கண்டமுனிவா சிவார்ச்சனைசெய்துகொண்டிருக்குங் காலத்தில, இயமன அவர்கட்புலனுக்கு நேராகத்தோனறினன

வருதி யெனறெதி ரந்தக னழைத்தலு மதலை
யிருசெ விததொளை யேற்றில னுங்கவ னிசைத்தல
சுருதி நாயகற றொழுதடி யருச்சனை தொகுத்தான
செருமு கத்தனித தென்றிசைக கிழவனுஞ் சீற.

(இ - ள்.) இயமன் அவர்க்கு முனனே நினறு வருகவென விளிக்கவும், மார்க்கண்டமுனிவா இயமன் கூறுவதை இருசெவித் தொளைகளாலுங் கேளாதவராகி, வேதநாயகனுகிய சிவபெருமானைப் பணிந்து திருவடிகளைப பூசித்தலிலிருந்தனா. போாமுகத்தில ஒப்பற்றவனுகிய தென்றிசைக்கிறைவனுகிய இயமன கோபமெய்த. எ - று. (அஎ)

உருத்தெ ழுந்தனா தெழித்தன ருருமெனத் தூதா
கருத்தி ழுந்திலன் பாலகன் கண்ணுதற் பரனைக்
குருத்தி ளமபிறைக் கன்னியோற றழீஇக்கொடு கிடந்தான்
செருக்கொ டுந்திறற் பாசமவிட் டெறிந்தனன் றீயோன்.

(இ - ள்.) இயமதூதர்கள் கோபித்தெழுந்தார்கள். இடிபோலக் கர்ச்சித்து அதட்டினார்கள். அவற்றால் சிறுவராகிய மார்க்கண்டர் மனமயங்காதவராகி, நெற்றிக்கண்ணையுடைய, புனிற்றிளம்பிறையைச் சிரோமாலையாகவணிந்த மேன்மைதங்கிய சிவபெருமானைத் தழுவிக்கொண்டிருந்தனர். அதனால் இருமாப்புடன் இயமன் வலியபாசத்தை வீசியெறிந்தனன். எ - று. (அஅ)

எடுத்தெறிந்திடு பாசமுற் றெதிருரு முன்னங்
கடுத்த கண்டமுஞ் சூலக பாலமும் புலித்தோ
லுடுத்த சைத்திடு நுசுப்புமற் றுமையொரு புறனும்
விடுத்த முக்கணுந் தோன்றநின் றருளினன் விமலன்.

(இ - ள்.) எடுத்துவீசிய பாசக்கயிறானது முழுவதும் நேரே வருவதன்முன்னர், விஷம்பொருந்திய கண்டமும் சூலகபாலங்களும் புலித்தோலாடையையணிந்து விளங்கும் இடையும், உமாதேவியார் வாமபாகமும், திரிநேத்திரங்களும் பிரகாசிக்கும்படி மலரகிதராகிய சிவபெருமான் காட்சிதந்தருளினார். எ - று.

சீற்ற மீக்கொள வொருதிருத் தாளொடு மறலி
யூற்றெ ழுங்கொழுங் குருதியா றுவட்டெழ வுதைத்தான்
மாற்ற ருமபத மணிநெடு மருமமுற் றிடலும்
வேற்று ணர்சசிபெற் றெழுந்தில னெடுந்தரை வீழ்ந்தான்.

(இ - ள்.) கோபமதிகரிக்க, ஒருதிருத்தாளினாலே, அவ்வியமனது ஊற்றெடுக்கின்ற கொழுவிய உதிரவெள்ளம் பெருக்கெடுக்க உதைத்தருளினார். நீக்குதற்கரிய அத்திருவடி, இயமனுடைய மணிமாலைபூண்ட மார்பிற்படவும் அவன் சிறிதும் உணர்வுற்று எழுந்திருக்கமாட்டாமல் நெடிய நிலமிசைவீழ்ந்து விட்டான்.

ஆய காலையி னரனடிக் கீழ்க்கிடந் தரற்றித்
தூய சிந்தனை வெருவொழிந் தடிக்கடி தொழுதான்
பாய வெண்டிரைக் கடுநுகர் பரமனைப் பற்றி
யேய வன்பினோ டெடுத்தெடுத் தேத்துவா னிசைந்தான்.

(இ - ள்.) ஆகிய அக்காலத்தில், மார்க்கண்டமுனிவர் சிவபெருமான் திருவடி நிழலிற் படிந்து அரற்றி, புனிதமான மனதில் அச்சமின்றி அடிக்கடிவணங்கிக்கொண்டிருந்து, பரவிய வெள்ளிய அலைகளையுடைய கடலிற்றோன்றிய விஷத்தைப் பானஞ்செய்த சிவபெருமானை ஆதரவாகப்பிடித்துப் பொருந்திய அன்புடனே எடுத்தெடுத்துத் துதிசெய்யத் தொடங்கினார். எ - அ. (௯௧)

**தரவுக்கோச்சகக்கலிப்பா.**

தோற்றப் படுபொருளாயத் தோன்றாத் தனவாகிச்
சாற்றற் கரிதாயத் தனிநினைவுக் கெட்டாயா
லாற்றப் படாரா யரிமுதலோ ரனறெடுத்துப்
போற்றப் பெருமான் புரந்தீத்த தெவ்வாறே.

(இ - ள்.) காணப்பட்ட பொருள்களாகியும் எடுத்துச்சொல்லுதற் கரிதாகியும் ஒப்பற்ற மனதுக்கும் எட்டாததாகியு மிருக்கின்றீர். திருமால் முதலானவர்கள் சகிக்கமுடியாதவர்களாய் அக்காலத்தில் தேவரீரை யெடுத்துத் துதிபுரிய எமது பெருமானே! தேவரீர் முப்புரங்களை எரித்தது எப்படியோ? எ - று. ()

எண்ணிறந்த பலகோடி யண்டங்க ளிங்கிவற்றி
னுண்ணுறைந்த மேருவுலகமுயி ரத்தனைக்கு
மண்ணா றிருவருளே மூலமென்பா ரதுணரு
நுண்ணறிவு முண்டேமற் றெம்மனோ நோக்குதற்கே

(இ - ள்.) கணக்கிறந்த பலகோடி யண்டங்களும் இவ்வண்டங்களினுள்ளே நிரம்பிய மகாமேரு உலகங்கள் உயிர்கள் எல்லாவற்றிற்குந் தேவரீர் திருவருளே காரணமென்று சொல்லுவார்கள். அதனையறியத்தக்க நுட்பமாகிய புத்தியும் எம்மையொத்தவர்கள் காண்டற்கு உளதாகுமோ? எ - று. (கூங)

அஞ்செழுத்தா யையைந்து பேதமா யஞ்செழுத்தி
னெஞ்செழுத்தா யெப்பொருளையு மேய பெருமாற்கு
மஞ்சனைய கோலத்தா னுள்ளிட்டா ரற்றையார்
நெஞ்சமுழுத்தி யீதே நிலையென்ப தெவ்வாறே.

(இ - ள்) பஞ்சாக்கர ஸ்வரூபமாகியும், (பஞ்சவிம்சதி) இருபத்தைந்து (மூர்த்தி) பேதமாகியும், பஞ்சாக்ஷரங்களின் மூலாதாரமாகியும், எல்லாப்பொருளும் பொருந்திய எமது பெருமானுக்கு மேகத்தையொத்த அழகுடைய திருமால் முதலிய உள்ளிட்டவரும், ஏனையோரும் மனதால் ஊகித்து இதுதான் உண்மை நிலையென்று சொல்லுவது யாங்ஙனம்? எ - று. (கூச)

மூலமுத லாறிட்ட யமமூ விரண்டினுக்குந்
தாலமுத லைந்தாய மனமாகி யத்தலத்தின்
மேலணுகி நின்று விரிபூஞ் சதத்தளத்துன்
கோல மெவரறிய நின்றுய கொழுஞ்சுடரே.

(இ - ள்.) மூலாதாரமுதலிய ஆறுதாரங்களாய, அவ்வாறுதாரத்திற்கும் பிருதிவிமுதலாகிய ஐந்தாய, மனமாகி, அத்தலத்திற்குமேலெய்தி நின்று மலர்ந்த அழகிய [சதத்தள] நூறிதழ்த்தாமரை மலரின்மேலுள்ள தேவரீருடைய திருக்கோலத்தையாவர் அறிய வீற்றிருந்தீர்? கொழுமைதங்கிய சுடர்மயமானவனே! எ-று.

ஆலத்தை யாரமுத மாக்கி யரிமுதலோர்
காலத்தை யீந்தா யிதுநாட் கடுஞ்சினத்த
சூலக் கொடுமறலி தோளசாயத் தறிவில்லாப்
பாலறகி ரங்கி யளித்தனையெம் பண்ணவனே.

(இ - ள) ஆலாலவிஷத்தைப் பொருந்திய அமுதமாக்கிப் புசித்துத் திருமால் முதலிய தேவர்கள் ஆயுள்காலத்தைத் தந்தருளினீர். இக்காலத்தில் கடுங்கோபமெய்திய சூலாயுதந்தரித்த வலிய இயமனைத் தோள்சாயச்செய்து, அறிவில்லாத பாலனாகிய சிறியேனுக்கு அநுக்கிரகஞ் செய்தருளினீர். எமது சிவபெருமானாகிய கடவுளே! எ - று. (கூரு)

என்னப் பலவாய்ப் பிதற்றி யழுதிரங்கிக்
கன்னிக் கொருபா லளித்ததனிக் கண்ணுதலை
முன்னாப் பணிந்தான் முடிச்சடில முனனவனுந்
தன்னெக்க சிந்தை யவற்கருளிச் சாற்றுவான்.

(இ - ள்.) என்று பலவாறாகத் துதிசெய்து அழுது மனமிரங்கி, கன்னியாகிய உமாதேவியாருக்கு ஒருபாகத்தைத் தந்தருளிய ஒப்பற்ற நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் திருமுன்னர் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர். சடைமுடியுடைய சங்கரபகவானும் தமது உருகியதிருவுள்ளத்தை மார்க்கண்டருக்குச் சாற்றியருளுகின்றார். எ - று. (கூ௭)

என்று மிறவாதாண் டெட்டிரட்டி யாயிருத்தி
நின்று நினைந்தவெலா நிறகே வசமாக
நன்றி மறையு நவையில கலையனைத்து
மொன்றுநீ யோதா துணரப் பெறுகென்றான்

(இ - ள்.) மார்க்கண்டேயனே! நீ எக்காலத்திலும் இறவாமல் பதினாறுவயதாகவே யிருக்கக்கடவாய். நீயெண்ணி விரும்பியயாவும் உனக்கே உரித்தாகுக. நன்மைபொருந்திய வேதமும் குற்றமில்லாத கலைஞானங்கள் முதலியயாவும், நீ ஒன்றும் ஓதாமலே அறியப்பெறுகவென்று சிவபெருமான் திருவருள்புரிந்தனன்.

பின்னைப் பலவு மவற்கருளிப் பிள்ளைநிலாச்
சென்னிப் பெருமான் றிருக்கயிலை சென்றடைந்தான்
றன்னைப் பயந்தார் தமக்கீ தெடுத்தியம்பி
யின்னற் கடற்கரைகண் டின்புற்றா னின்னமுமே.

(இ - ள்) இன்னும் பலவரங்களையும் மார்க்கண்டருக்குப் பிரசாதித்து, இளம்பிறைச் சந்திரனையணிந்த சடையையுடைய சிவபெருமான் திருக்கைலாயகிரிக்கு எழுந்தருளினார். உடனே மார்க்கண்டர் தம்மையீன்ற தாய்தந்தையர்பாலெய்தி இவ்வரவிசேடத்தை யெடுத்துக்கூறி, துன்பக்கடலின் கரையைக்கடந்து இப்பொழுதும் இன்பமெய்தி யுள்ளனர். எ - று. (கூகூ)

தேங்குங் குருதிக் கடற்கிடந்த தென்புலத்தோ
னேங்கு துயர்முணாந் தும்பர்தொழு தணமின்றா
வீங்குமப் புனற்சடையோற் போற்றி வெருவருமற்
றாங்கவனைத் தென்பா லடைய விடுத்தனரால்

(இ - ள்) தேங்கிய உதிரக்கடலிற் படிந்து கிடந்து தென்புலத்திறைவனாகிய இயமனது பெருந்துயரத்தைத் தேவர்களறிந்து, பெருகிய கங்காநதியையணிந்த சடையையுடைய சிவபெருமானை நெருங்கிப்பணிந்து துதிசெய்து, அஞ்சியுள்ள அவ்வியமனைப் பண்டுபோலத் தனது தென்றிசையெய்த விடுத்தார்கள். எ - று. (௪௦௦)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மும்மலங் கடிந்த சூத முனிவரன் முனிவர்க் கெல்லாஞ்
செம்மொழிக் காதை முற்றுந் தெரிவர வுணர்த்திப் பின்னும்
மைம்மலி களத்து விண்ணோன் பூசனை மரபி னேன்மை
யெம்மனோ ரொழியா தின்னுங் கேட்கென விசைப்ப தானான்

(இ - ள.) (ஆணவமுதலிய) மும்மலங்களையும் வென்ற முனிசிரேஷ்டராகிய சூதமுனிவர், நைமிசாரணியத்தி லிருந்த எல்லாமுனிவர்களுக்குஞ் செவ்விய சொற்களாலாகிய சிவசரிதையை முற்றுந்தெரிய வுணர்த்தி, இன்னும், கருமைமிக்க கண்டத்தையுடைய சிவபெருமான் பூசாமரபின் மேம்பாடுகளை, நம்மவர்கள் இன்னும் நீங்காமற் கேட்கக்கடவரென்று சொல்லவாராயினார். எ - று. (௪௦௧)

மலையமா தவத்துத தெய்வ மாமுனி வழிநீரக கஙகை
யலைபுரண் டிரைக்குஞ் சென்னி யரனடி யருச்சித் தஙக
முலைமெழு கென்ன வன்பி னென்பற வுருகா நின்றுன [றுன்.
கொலைகொண்மூத தலைவே லன்னேனை வேணடின கொடுக்கப் பெற

(இ - ள.) பொதியாசலத்தி லெழுந்தருளிய பெருந்தவமுடைய தெய்வீகம் வாய்ந்த சிறந்த அகத்திய முனிவா, பாயகின்ற நீரையுடைய கஙகையாற்றின் அலைகள் புரணடொலிக்குஞ் சடையையுடைய சிவபெருமான திருவடியைப் பூசைசெய்து, உலையிலிட்ட மெழுகுபோல அன்பினல என்புகள் நெகவிடவும் உடலுருகவும நினறு, கொலைததொழில பொருந்திய சூலப்படையேந்திய அச் சிவபெருமான விரும்பிய வரஙகளைப் பிரசாதிக்கப் பெற்றனா. எ - று. (கoஉ)

நெளிதிரைப் பரவை யேழு மோரகரத் தகவை நிறகுந
துளியென வேநதி மாநதி யுமிழ்நதனன றுடாநத வுசசி
வெளிமுக டணவ நினற விநதியப பொருப்பை மெலலென
றளிர்புரை யஙகை யூன்றி யமுக்கினன றரணி தாழததான

(இ - ள.) நெளிகின்ற அலையையுடைய சத்தசமுத்திரஙகளையும ஒருகையி லிருக்குந துளிபோலததாஙகி உட்கொணடுமீடடும வெளியிட்டனா. [ஆசமனஞ் செய்தனா] நீணடகொடுமுடியானது அணடகடாகந தோயகினற விநதமலையை, மெததெனற தளிரையொதத [அகஙகை] உளளஙகையினுலூனறிப (பாதலம வரையில்) அழுத்தி நிலபட்டமாக இறக்கினா. எ - று. (கoங)

வெநதிறற படைவா தாவி விலவல னெனனும வெய்ய
செந்தழற் கண்ண ராவி யுதரவெந தீயிற செறறுன
பைநதமி ழமுதி யாக்கு மினிதெனப் பருகச செயதான
முநதைநான் மறைக ளெலலா முதுககுறை வோடுந தோயநதான.

(இ - ள.) கொடிய வல்லபமுடைய வாதாவி விலவலனெனனும கொடுமை வாய்நத சிவநத தீப்போலுங கணகளையுடையார துஉயிரை வயிறறிலுளளவெப்ப மாகிய அககினியாற கொனறனா. பசிய தமிழமிரததை எலலோருககும இனி தாகப்பருகும்படி செயதனா பழமையாகிய நான்குவேதஙகண முழுவதையும பேரறிவோடும தேர்நதனா. எ - று. (கoச)

பனனிரு தடநதோ ளெநதை யருளொடும பகரா நிறப
வுன்னரும பொருளி னெங்குஞ் சிவாறபரத துண்மை தோநதான
றுன்னிலத திறவாத் தனமை பெறறனன றுடுநீா வேலை
யிநநிலம பரவ நின்று னிசைக்கலை முழுது மீநதான்.

(இ - ள்.) பரநத பன்னிரு திருததோளகளையுடைய எமது தநதையாகிய முருககக்கடவுள் திருவருளகூாநது உபதேசிகக, நினைததற்கரிய பொருளகளின் மேம்பட்ட சிவாதபரததின உணமை நிலையை யுணாநதனா, பழயபூமியில் இற வாததன்மையை யெயதினர். தோணடப்பட்ட நீாமயமான கடல்சூழ்நத இவ வுலகமானது துதிசெயய விளஙகினர். இசைநூலகளை யெல்லாந தநதனா.

பனிபட ரிமய மென்னும் பருபபதத் தரசர் கோமான்
றனிபடு தவததி னீன்ற சரிவளைத் தளிர்க்கை நல்லாள்
குனிசிலை வரையொன் றேநதிப புரநதழல் கொளுததது வோனை
கனிபடு கருததி னோநது மெய்ததவங கருதி நின்றாள்.

(இ - ள்.) பனிபடாநத இமயமெனனும மலையின அரசனானவன், ஒப்பற்ற தவத்தினாற்பெற்ற, சரிகின்ற வளையலணிநத மாநதளிாபோன்ற கையையுடைய உமாதேவியாா, ஒருமலையை [மேருவை]வளைதத விலலாகததாஙகி முப்புரஙகளை யெரிததருளிய சிவபெருமானைக கனிநதமனததோடு தியானிததது (விவாகஞ் செய்து கொளளுமபடி) உணமையாகிய தவச்செயலி லிருநதனா. எ - று. ()

ஆங்கவ ளிழைத்த நோன்பி னரிதுணாந தவிழநத கொன்றைத
தேங்கம ழலஙகற செனனி திருவரு ளிரங்கி மறறைப
பூஙகுழன மணபப தோாநது வடதிசைப பொருபபி னெய்த
வோஙகிமண் ணளநத மாயோன் முதலினோ ரொருஙகு சென்றா.

(இ - ள்.) அவவிடததில அவவுமாபிராட்டியாரியற்றிய தவததினருமை யைச் சிநதிததது, மலாநத கொனறைமலரின மணம்வீசும் மாலையணிநத முடியை யுடைய சிவபெருமான திருவருளகனிநது, அப்பொலிவுதஙகிய கூநதலையுடைய பிராட்டியாரைத திருமணஙகொளளககருதி, இமாசலமாகிய வடதிசை மலையை யடைநதபோது, திரிவிககிரமாவதாரஙகொணடியாநது உலகினை மூவடியா லளநத திருமால முதலானோா ஒனறுசககூடினாாகள எ - று. (கoஎ)

சிததாகிம புருடா நாகா கினனாா சிறபபி னோஙகு
மெய்ததவத தலைவா யோகா விஞசையா விருபபி னீண்டி
யததலத தடையச செனறு ராகையா லமபொன மேரு
வுததரந தாழ்நது தெனபா லுயாநதது விண்ணி னோங்கி.

(இ - ள்.) சிததாகள கிமபுருஷாகள நாகாகள கின்னரர்கள் சிறபபுற் றுயாநத உணமைததவமுடைய மேலோர்கள யோகிகள விததியாதராகள் விருப பததோடு சோநது, அவவிடததிற் பொருநதச் செனறாாகள. ஆனபடியால அழ கிய பொனமலையாகிய மேருவும வடககே தாழ்நது, தெனபககலில ஆகாய நோககியுயாநதது. எ - று. (கoஅ)

ஏதுணாந தமரா யாரு மெய்பிராற திசைபப வெமமான
மாதலத் தட்டுச செவவ னிழுததுறு மரபு தோாநது
தீதவித தரிதி னேறற தெய்வமா முனிவா யாரும
போதுதி ரெனன முன்ன மழைததனன கயிலைப புததேள்.

(இ - ள்.) தேவாகளெலலாரும் இதனையறிநது எமது சிவபெருமானுடன் விண்ணப்பஞ்செயய, எமது சிவபெருமான பூமியாகியதட்டினை, சமானமாக நிறு தததககமுறைமையை யாலோசிததது, துனபததையகற்றி அரிதாகததவஞ் செய்த தெய்வீகம் பொருநதிய முனிவாகளெலலாரும முற்படவாருஙகளென்று திருககைலாயகிரிக் கடவுளாகிய சிவபெருமான் விளித்தருள. எ - று. (கoகூ)

பொறியர வணிந்த வேணிப் புண்ணிய னருளச சென்ற
நெறிசடை முனிவ ரெம்மை நிறைதுலைத் தட்டி னேறறி
யறிதிற னுணாநத பினனாத திருவுளத தடைநத செய்கே
மறிதரு திருக்கை யெநதா யென்றடி வணங்கி நின்றார்.

(இ - ள்.) புள்ளிகளையுடைய சர்ப்பததையணிநத சடையையுடைய சிவ பெருமான திருவருளபுரிதலால், அஙகடைநத, நெறிதல பொருநதிய சடையை யுடைய முனிவர்கள், அடியேஙகளை நிலைததராசின தட்டிலேறறி யளவறிந துணாநத பிறகு தேவரீர திருவுளததிற் பொருநதிய கடடளையைச்செயவோம். மானேநதிய திருககரததையுடைய எநதையே! எனறு திருவடிகளிற் பணிநது நின்றாகள். எ - று. (௧௧௰)

எயதுமா முனிவா யாரு மோராதனித தடடி னேறச
செய்தனிக குமப யோனி யோாதனித தட்டிற் சென்று
ஊயநீத தளவை நோகக வகததிய னிருநத தட்டுப
பைதரு நிலததிற றாழ்நத துயாநததுப பரவைத தடடு.

(இ - ள) அஙகடைநத சிறநத முனிவாகளெலலாரும் தராசின ஒருதட்டில் தனியேயேற, ஒபபற்ற கும்பயோனியாகிய அகததியமுனிவா ஒருதட்டில தனி யேயேறினா அதனால சநதேகமினறி அளவைகாண அகததியமுனிவரேறிய தட்டானது பசிய நிலததினிடமாக (பபாரததினால) இறஙகியது. மற்றப்பாநத தட்டானது (பாரமினமையால) உயாவாக மேலெழுமபியது. எ - று. (௧௧௧)

மகததுவத தலைமை நோககி வரிவளை யிடத்துப பெமமா
னகததிய நீபோயத தென்பா லடைகென வருளிச செய்யச
செகததனி நாத னினனைத திருமணக கோலங காணபான
மிகபபடு விருபபி னினறே னெனறனன றமிழ்நது வேநதன.

(இ - ள.) கீற்றுகளமைநத வளையலையணிநத பாாவதிதேவியாரை இடப் பாகததிலுடைய சிவபெருமான, அகததிய முனிவருடைய மகததுவததலைமை யைப்பாாதது, அகததியமுனிவனே! நீசெனறு தெனதிசை யடைகவென்று திருவாய மலாநதருள, உலகிறகெலலாம ஒப்பறற தலைவரே! தேவரீருடைய திருமணக காடசியைத தரிசிககுமபடி, அதிகரிததுணடாகிய விருபபததோ டிருககின்றேனெனறு தமிழரசராகிய அகததியமுனிவா கூறினா. எ - று. ()

வேதவா ரணியத் துன்பா லெய்தியாம விரைவண் டார்ககுஞ
சீதவார் குழலி யோடுந திருமணக கோலங காட்டுப
போதுதும போதி யெனறு ஞங்கது போறறி நினறுன
மாதிரத தென்பாற றிககி னெடுமுடி மலயஞ சாாநதான்.

(இ - ள்.) யாம் வேதாரணியததில் உன்பாலடைநது, வணடுகளொலிசெய யும மணநதஙகிய குளிர்ச்சிவாய்நத கூநதலையுடைய உமாதேவியோடுந திரு மணக்கோலக காட்சியை யளிததுவருவோம். செல்லுகவெனறனர். அவவிடத தில் அதைத துதிசெய்துகொண் டிருநது பெரிய தெனறிசையிலுள்ள நெடிய கொடுமுடிகளையுடைய பொதியமலையை யடைநதனர். எ - று. (௧௧௩)

சாந்துறு மலயத் துச்சி யிருந்தனன் றமிழின் செல்வன்
பாந்தளுஞ் சென்னி தாங்கு நெடுநிலப் பரவை முன்னு
ளேந்திய தென்ன முற்றுஞ் சமதலத் திருந்த தெம்மா
னோந்துணா பூசைத் தன்மை யளவையா ருரைக்கற் பாலார்.

(இ - ள்.) தமிழ்ச்செல்வராகிய அகத்தியமுனிவர் சந்தனமரங்கள் பொருந்திய பொதியமலையி னுச்சியில் வீற்றிருந்தனர். ஆதிசேடன் அழகிய சிரசிற் றாங்கும் பெரிய உலகமாகிய பரப்பு, முற்காலத்தில் தாங்கியிருந்தாற்போல முழுவதும் சமதலமாக விருந்தது எமது சிவபெருமானைக்கருதி யுணர்ந்து செய்யும் பூசைத்தன்மையின் பெருக்கை எவர்தாஞ் சொல்லவல்லவர்? எ - று. (கக௪)

தெள்ளுதெண் டிரைநீர் வையபின் முன்னரிற் சென்ற காலம்
வெள்ளிவெண் குடையிற் காக்குங் குபனெனுந் தனிக்கோல் வேந்த
னெள்ளருந் தவத்தி னோங்குந் ததீசியோ டினிது கூரா
வுள்ளநெக் களவ ளாவி நடக்குநா ளொருநா ளன்னோன்.

(இ - ள்) தெள்ளித்தெளிந்த அலைகள் பொருந்திய கடல்சூழ்ந்த உலகத்தில், முன்னேகழிந்த தொருகாலத்தில், வெண்மைதங்கிய சந்திரவட்டக்குடை நிழலில் உலகினைக்காக்குங் குபனென்னும் ஒப்பற்ற செங்கோலையுடைய அரசன், இகழ்ச்சியற்ற தவத்தினுலுயர்ந்த ததீசிமுனிவரோடு இனிமைமிகுந்து மனங்கசிந்து அளவளாவி நடக்கு நாட்களில் ஒருநாளில். எ - று. (கக௫)

மரபுடைத் தனிக்கோல் வேந்தன் றதீசியை வதன நோக்கிப்
பிரமமோ வரசர் செய்யு மறங்கொலோ பெரிதென் றோதத்
திரணெடுஞ் சடில மோலித் ததீசிபுன் சிரிப்புக் கொண்டா
னரசர்கோ னதனை நோக்கி யையுறுங் கருத்தி னானான்.

(இ - ள்.) மரபுவழியே ஒப்பற்ற செங்கோல் செலுத்தும் அரசன் ததீசிமுனிவர் முகத்தைப்பார்த்து, பிரமமா அல்லது அரசர்புரியுந் தருமமா பெரியது எனவினவ, திரண்ட நீண்டசடைமுடியையுடைய ததீசிமுனிவர் புன்னகை புரிந்தனர். அரசசிரேஷ்டனாகிய குபன் அதனைப்பார்த்துச் சந்தேகிக்கும் மனமுடையவனாயினன். எ - று. (கக௬)

சுக்கிரன் மருமான றெய்வச் சுருதிமுற் றளந்து தோயா
வொக்கநோக் கினைமற றீதே யதிகமென் றுரைப்ப தல்லா
னக்கனை யென்கொ லென்னு வுருத்தன னமை வேந்த
னக்கணந் ததீசி நோக்கிப் பிரமமே யதிக மென்றான்.

(இ - ள்.) சுக்கிரன் வழித்தோன்றலே! தெய்வீகம் பொருந்திய வேதமுழுவது மாராய்ந்தறிந்து முழுவதுங்கண்டனை. தருமமே யதிகமென்று சொல்லுவதல்லாமல் புன்னகை புரிந்தாய். யாதுகாரணமென்று அச்சந்தரும் அரசனாகிய குபன் கோபித்தனன். அக்கணத்திலேயே ததீசிமுனிவர் அவனைப்பார்த்துப் பிரமந்தான் அதிகப்பட்டதென்று கூறினர். எ - று. (கக௭)

ஆங்கது முனிவன் கூறக் கேட்டரு ளரச னோங்கி
யோங்குநீ ருலகங் காக்குந் தருமமே பெரிதென் றோத
வோங்கிருந் தவத்த ததீசியு மைத்தன னரசன மார்பின்
வீங்கிநின் றெழுந்த சீற்ற மிக்கனன் வேந்தர் வேந்தன்.

(இ - ள்.) அப்படி, ததீசிமுனிவர் சொல்லக்கேட்ட மன்னவன், உயர்ந்த நீரகடல்சூழ்நத உலகினை மேம்பட்டுக் காககுநதருமமே பெரிதென்றுகூற, அதி கரிதத பெருநதவததையுடைய ததீசிமுனிவர் அரசனாகிய குபன்மார்பில உதைத்தனர். இராசராசனாகிய குபன் அதனால் மேம்பட்டெழுநத கோபமதிகரி ததனன. எ - று. (ககஅ)

வண்டுழா யலங்கன் மாயோற் போற்றிய வரத்தாற் பெற்ற
திண்டிறற் றிகிரி யோசசி முனிவனைச சிரங்கொய் திட்டான்
கண்டவா பொறுக்க லாற்றா கண்கணீா கலுழ நின்றா
மண்டுநீர்க் குருதி சோரக் கிடநதனன் மறையின் செலவன்.

(இ - ள்.) வளநதஙகிய துளசிமாலைதரிதத திருமாலைத துதிசெய்த வர விசேடததால் அடைநதிருநத பெருவல்லபமுடைய சககரததைச் செலுததித ததீசிமுனிவனுடைய தலையை அறுததுவிட்டான். அதனைககணடவாகள மனந தாளாதவராகி விழிகளிற கணணீாசொரிய நினறாகள வேதச்செலவராகிய ததீசிமுனிவா அதிகரிதத உதிரநீாப்பெருக கொழுககிடநதனா. எ - று. ()

அருமறைக் குலங்க ளெல்லா மழுதழு தரற்றி நின்ற
தருமநெஞ் சழுங்கிச சோாநது தலைதடு மாறி நின்ற
வுருகின ரிமையோா கையாற கண்புடைத துளள நெக்கா
வெருவின துலக மெல்லாம பினனரின விளைவ தோரா

(இ - ள்.) அரிபவேதத தொகுதிகளெல்லாம் அழுதழுதிரஙகி நினறன. தருமமானது மனம்வருநதிச் சோாவெயதித தலைதடுமாற்றங்கொணடிருநதது. தேவர்கள மனமுருகினா கையாற் கணகளையடிததுககொணடு மனமநெககுவிட்டாாகள. உலகிலுளளாா யாவரும பயமெயதினாாகள. மேல்விளையுஞ்செயல இதததைததெனறு உணராதவாகளானாாகள எ - று. (கஉ0)

ஈதுணா்ந தரிதி னெய்திச சுககிர னெடுத்துக் கொண்டான்
சீதநீாக குருதி யெல்லாந தைவரப புழுதி தேய்ததான்
மாதுயாக களவை யற்றான் மமமர்நோய் மயக்கங் கொண்டான்
றீதவித தரிதி னேறற சிந்தனை திருபபிக கொண்டான்.

(இ - ள்.) சுககிரன் இதனையறிநது அஙகெய்தித ததீசிமுனிவரை அரிதாக எடுததுககொணடனன. குளிாநத உதிர நீாப்பெருககை யெலலாந துடைததுப புழுதியையும் போககினன். தான்கொணட துன்பததிற்கு எலலையிலலாதவனாயினன. கலககமாகிய நோயினால மனமயககஙகொணடனன. தீமையைத தவிாதது அரிதாகத தவஞ்செயத மனததைத திருப்பிக்கொணடனன. எ - று.

இறறிடு சிரத்தை யேந்தி யிசைத்தன னிசைக்குங் காலை
யறறழி வுடமபு தமமிற பொருநதிய தமரா யாருங்
கற்றைவாா சடையான் பூசைப பெருமையைக கருத்துட் கொண்டாா
முறறவத் ததீசி யென்பா னெழுநதனன முனிவு கூாவான்

(இ - ள்.) ததீசிமுனிவரது வெட்டுப்பட்டுப்பிரிந்த தலையைத்தாங்கிச்சேர்த்தனன். அப்படிச் சேர்க்குங்காலததில் அததலை பிரிநதுகழிநத உடம்போடு பொருநதியது. தேவர்களெல்லாரும், தொகுதியாகிய நெடிய சடையையுடைய

சிவபெருமான் பூசைச்சிறப்பை மனதிற்கொண்டார்கள். முற்பட்ட தவத்தை யுடைய ததீசிமுனிவ ரென்பவர் உயிர்பெற்றெழுந்து கோபமதிகரிக்கின்றனர்.

அந்நிலை யவனை நோக்கிச சுக்கிர னருள்வ தானுன்
மன்னவ னலங்கற் றுழ்ல் மாயனை மரபிற போற்றி
மின்னிலைத் திகிரி பெற்று ளுங்கது விளித்த துனனை
யென்னை நீ மதித்த துன்பா லுணர்த்துவ தினமொன றுண்டால.

(இ - ள.) அசசமயத்திற் சுக்கிரன் ததீசியைப்பார்த்துச் சொலலுகின்றான். அரசனாகிய குபன துளசிமாலைதரித்த திருமாலை வரன்முறையே துதிசெய்து, மினனுகின்ற நிலைமையையுடைய சக்கிராயுத மெய்தினன். அது உன்னைக கொன்றது. நீமதித்தது யாது? உன்னிடத்தில் இன்னும் யான சொல்லவேண்டியது ஒன்றுள்ளது. அஃதியாதென்னில். எ - று. (௧௨௩)

மாயனை வழிபட் டேற்ற திகிரியை மறுப்ப தங்கட்
பாய்விடைப் பரனு லன்றி யாவரப் படையைத் தீர்ப்பார்
சேயொளிக குடில வேணிச சென்னியைக கருததி னோர்
வாய்மலர்ப பழுது நோக்கி யருச்சனை யயர்தி யென்றான்.

(இ - ள) திருமாலை வழிபாடுசெய்து அவர்பாற் பெற்ற சக்கிரத்தைத் தடுப்பது, அழகிய கணைகளையுடைய பாய்ந்துசெலலும இடபவாகனமுடைய சிவபெருமானலனறி, வேறெவர்தாம அச்சக்கிரா யுதத்தினை விலக்குபவர்? செவ்வொளிவாய்ந்த கட்டிய சடைமுடியையுடைய சிவபெருமானை மனதிற்சிந்தித்து ஆய்ந்த மலர்களைக குற்றங்கடிந்து எடுத்துச் சிவார்ச்சனை செய்வாயாக வென றனன். எ - று (௧௨௪)

அரிமுத லமரர் யாரு மாங்கவ னடிககீழ்த் தொண்டு
புதரிலா லெவர்க்கு மெட்டாப பதவியும புரந்து நின்று
ருரியைநீ யவனைப போற்றி யருச்சனை யுவப்பி னலலான்
விரிதனிக கவிகை வேந்தை வெலற்கரி தென்று விட்டான

(இ - ள.) திருமால முதலிய தேவர்களெல்லாரும், அச்சிவபெருமான் திருவடியின் நிழலில் திருத்தொண்டினைச் செய்ததால ஒருவருக்கும எட்டாத உயர் பதவியையும காத்துநின்றார்கள். உரியவனாகிய நீ அவ்விறைவனைத துதிசெய்து சந்தோஷப் படுத்தினாலலலது, பரந்த ஒப்பற்ற சந்திரவட்டக குடையையுடைய குபனென்னும அரசனை வெலலுதற்கரிதென்று சொலலிவிடுத்தனன். எ - று

பூசனைக குரிய வெல்லாம வரன்முறை போதித் தாங்க
ணீசனைப பரவ வேண்டு முதுககுறை யருளி னீந்தான
மாசறு குணத்தான வெள்ளி தனனுழை மருங்கு புககா
னேசறு ததீசி யென்பா னருச்சனைக கியைவ தானுன

(இ - ள.) குற்றமற்ற நற்குணங்களையுடைய சுக்கிரன சிவபூசைககு உரித்தாயின வற்றையெல்லாம் வரன்முறையாக உபதேசித்து, அப்பொழுது சிவபெருமானைத தொழுதற்குரிய பேரறிவையுங கருணையோடு தந்தனன. ஏசுதலற்ற செயலகளமைந்த ததீசிமுனிவரென்பவர் அவரதாச்சிரமத்திற கருகெய்திச் சிவார்ச்சனை செய்தற்கு மனமியைந்தனர். எ - று. (௧௨௫)

ஆகமத துறைவ ழாம லருமறை மரபு நோக்கி
யேகநா யகனைப் பூசித திருநதனன றதீசி யெனபான்
மாகநாண் மதியஞ் சூடும வளாசடைய பெருமா னுளளச
சேகறு முனிவற கென்னத திருவரு ளிரக்கஞ் செய்தான.

(இ - ள்.) சிவாகம நெறிதவறாமல் அரியவைதிக மரபைக்கருதி, ஏகநாயக ஞகிய சிவபெருமானைத் ததீசிமுனிவா பூசைசெய்து கொணடிருநதனா ஆகா யத்திற்றேன்றும் இளஞ்சநதிரனை யணிநத பெருகிய சடையையுடைய சிவபெ ருமான், மனததின வைரமற்ற ததீசிமுனிவாககென்று திருவருட் கனிவுசெய தருளினர். எ - று. (௧௨௭)

ஆயவ னினைநத வெல்லாம புரிநதன னமரர் கோமாற
கேயதா னளித்த முனனை வசசிரத் தென்பு கொண்டான்
மாயிரு ஞால மெலலாம போற்றுறு மரபி னின்றுன
போயினன் குபனெனறேதது மரசவை யகததுப புககான்.

(இ - ள்.) அததததீசிமுனிவா கருதியன வற்றையெலலாம செயதருளினா. தேவராசஞகிய இநதிரனுககுததாம முனனாககொடுதத வச்சிரவடிவாகிய முது கென்பைக கைககொணடனர். மிகப்பெரிய உலகமுழுவதுந துதிததற்குரிய மரபின்மேம் பாட்டிலிருநதனா. குபனெனறு சொலலும மனனவன சபையி னிடததிற் போயச்சேர்நதனா. எ - று. (௧௨அ)

கொதிததெழு வெகுளி வெநதீக் கொழுநதெழ வரசன மாாபின்
மிதிததனன் மிதிதத லோடு மரசனும வெகுளி பொங்கித
ததிப்பெரும பெயரோன் றனபாற சககர மோசசி விடடா
னுதிததலை மடங்கி மீண்ட தபபடை நொடிபபி னுளளே.

(இ - ள்.) கொதிததெழுநத கொடிய கோபாககினிககொழுநது விளஙகி யெழ, அரசனுகிய குபனமாாபில உதைததனா. அபபடி யுதைககவும குபனுங கோபமிகுநது, பெரிய ததீசியென்னும பெயருடைய முனிவாபேரில சககிரா யுததைதை யோஙகிச்செலுததினன. அச்சககிராயுதமானது இமைப்பொழுதிற குள தன்கூாமைதஙகிய [தலை] ஈா வாய மழுஙகிததிரும்பியது. எ - று. (௧௨௯)

அதுகுறித் தடைய நினற வருநதவத ததீசி மெல்லென்
புதுமணி முறுவல் பூததா னரசனும புலமபு கொண்டான்
மதுகைவா ளரசை நோககி மாமுனித தலைவன் வேநதே
யெதுநினைநது றுதி யென்னுக கேட்டியென றிசைபப தானுன்,

(இ - ள்) அருகேயிருநத அருநதவமபுரிநத ததீசிமுனிவா அச்சககிரா திரும்பியது கருதிமெல்லியமுததுமாலைபோன்றபுனனகைசெயதனா. மனனனும் அச்சமெயதினன. வெற்றிதஙகிய வாளேநதிய அரசனைப்பாாதது பெரியமுனித தலைவராகிய ததீசியெனபவா, அரசனே! நீயெதனை உறுதியெனறு கருதியுள ளாயெனபது கேட்பாயாக வெனறு சொல்லுவாராயினா. எ - று. (௧௩௰)

தொல்லைநா ளரிதி ஞேலா வருநதவந தொலைய நினறு
குலலையந தடநதோண மாயன றிகிரிபெற றரசு கொணடா
யொல்லையி லவனற னுழி முனைமடிந துகுதல கண்டாய்
வல்லையேல வருதி யென்று மனமறுத தரசன போனுன,

(இ - ள்.) பூர்வகாலத்தில் அரிதாகநோற்று அருந்தவத்திற் பண்ணிருந்து அழகிய துளசிமாலையணிந்த பரந்த தோளையுடைய திருமால் சக்கிரத்தைப் பெற்று அரசுரிமையைத் தாங்கினை அத்திருமால சக்கிரம் அதிவிரைவில கூர் வாய்மடிந்து சிந்தியதுபாரத்தனை கூடுமானால போருக்கு வருவாயாகவென, குபன்மனத்தைத் தடுத்துக்கொண்டு போய்விட்டனன. எ - று. (௧௬௧)

பகுத்தநாச சுடிகைத் துத்திப பாபபணை யமலற போற்றித
தொகுத்தருந தவத்தி னின்று ணங்கவ னெளிதிற றேற்ற
மிகுத்தவெகு சினத்தா லந்தத் ததீசியால விளைந்த வெல்லாம்
வகுத்தெடுத் துரைத்துச சென்னி மலரடி தடவ வீழ்ந்தான.

(இ - ள்.) பிளவுபட்ட நாவையும உச்சிககொண்டையையும படப்பொறி யையுமுடைய ஆதிசேடனாகிய சயனத்தி லெழுந்தருளிய திருமாலைத்துதி செய்து, அரியதவச்செயலிற் சோர்ந்துநின்றனன். அதனால அத்திருமால இலே சாகக் காட்சிதந்தருள, அதிகரித்த கொடுங்கோபத்தால அந்தத் ததீசிமுனிவரால விளைந்த சங்கடங்களையெல்லாம பிரித்தெடுத்துச்சொலலி, தாமரை மலாபோனற திருவடியிற பொருந்த நமஸகரித்தனன். எ - று. (௧௬௨)

அன்னது கருததுட் கொண்டான் றுழாய்முடி யலங்கன மாயோன
செந்நெறி தவத்தி னோங்குந் ததீசியா சிரமஞ் சென்று
னந்நெறி யளவ ளாவித் தமமிலோ ரன்புட கொண்டார
செய்ந்நிலை திகிரி மாயோ னினையன நிகழத்த லுற்றான.

(இ - ள்.) துளசிமாலையணிந்த கிரீடத்தையுடைய திருமால அக்குபன கூறியதை மனதிறகொண்டு, செம்மை நெறியாகிய தவசசெயலில மேமபட்ட ததீசிமுனிவா ஆச்சிரமமெய்தி,அவவழியில அவரோடு அளவளாவி, தங்களிருவ ரில ஒருவிசுவாசத்தை யுட்கொண்டவாகளாயினா.நெய்பூசிய சககிராயுதமேந்திய திருமால இப்படிப்பட்டசொற்களைச் சொலவாராயினா. எ - று. (௧௬௩)

தண்ணளிக கவிகைச செங்கோற குபனொடுஞ சலந்தீரந் தின்னே
கணமய மருளி வேந்த ரறநெறிக கருமந் தானே
யுண்மையென றுரைகக வேண்டு மீதெனக குதவ லென்றுன
பணமரு சுரும்ப ரூதும படலையம பசுந்து ழாயோன

(இ - ள்.) குளிர்ந்த கருணையுடைய வெணகொற்றக குடைதாங்கிய செங் கோலசெலுத்துங் குபனெனும் அரசனோடும இபபொழுதே கோபந்தணிந்து கணபாராதருளி, அரசருடைய தருமமாககமாகிய செயலே யுணமைப்பொரு ளென்று உரைககவேணடும. இவ்வரத்தை யெனககுத் தருகவென்று,பணணொலி பொருந்திய வண்டுகள பணபாடுமவரிசையாகிய பசிய துளசிமாலைதரித்த திரு மால் வேணடினா. எ - று. (௧௬௪)

மெய்ம்மொழி வரமபி னிறப தல்லது வேத நீதத
பொய்மமொழி யெமககு டாது யாமது புகலோ மென்ன
மைமமழை யுருவத் தாழி மாயவன மதிபபு றும
லெமமொழி மறுத்தா யென்று வெழுந்தனன் வெகுளித் தீயான்.

(இ - ள்.) நாம் சத்தியவாக்கி னெல்லையில் இருப்பதல்லது வேதபாகிய மான அசத்தியவாக்கு எமக்குப்பொருந்தா தாகலின் அதனைச் சொல்லமாட்டோ மெனக்கூற, கரியமேகம்போன்ற திருவுருவும் சக்கிராயுதமுந் தாங்கிய திருமால், ததீசிமுனிவரே! நீர் எம்முடைய வார்த்தையைச்சிறிதும் மதிப்பிலலாமல் தடுத்தீ ரென்று கோபாக்கினியோடு எழுந்தனர். எ - று (கஅ௬)

முந்தைநா ளவன்பா லேவு முனைமடி திகிரி யோசசித
தந்தனன் விடுதத லோடுஞ் சிதைந்தததத திகிரிச சாயை
வெந்தழி மனதத ஞகி வெகுண்டனன் விரைதது மாயோ
னந்தரஞ் சிகரச சென்னி யணவுற நிமிரா நினறுன.

(இ - ள்.) முன்னுளில் அததசீசிமுனிவாபாற் செலுததககூாவாய் மழுஙகிய சககிராயுதததை விடுததனர். அப்படிவிடுப்பவும அச்சககிரததினசாயை சிதை வுற்றது. மணம்பொருநதிய துளசிமாலையணிநத திருமால அதுகணடு கொதித தழிநத மனமுடையவராகிக் கோபிதது ஆகாயததில திருமுடியானது கலககும படி உயர்நத வடிவமாயினா. எ - று. (கஅ௬)

காரக்கட லுருவ நீண்டு காடடலுந ததீசி யென்பான
போாககெனக கறுவு கொணடா னவவுருப பொருநதா நினறுன
ருாபபெருந துளவோன மாயை யாவையுந தருவ செயதான
சீாததவத தலைவ னனனேன செய்வன யாவுஞ் செயதான

(இ - ள்.) திருமால தமது கருஙகடலுருவததை பெருகச்செயது காட்டவும், ததீசிமுனிவா போாசெயதறகாகக கோபமெய தியவராய அவவடிவினைததாமும் பொருநதி நினறனா. பெரிய துளசிமாலையணிநத திருமால செயயததகுவன வாகிய மாயைகளையெலலாஞ்செயதனா. சிறபபுபபொருநதியதவசிரேஷடராகிய ததீசிமுனிவரும் அததிருமால் புரியும மாயைகளையெலலாம் செயதனா. எ-று.

அளபபருஞ் சேனை யீட்டி யாரமா தொடஙகு மாயோ
னுளத்துறு மளவை நோககி யொணடவத தலைவ னினறுன
றளபபனிக கமலக கையாற றருபபை யொனறெடுதது நீலக
களக்கறை மிடறறேன றெய்வ மநதிரங கருததுட கொணடான.

(இ - ள்.) அளவிடறகரிய சேனைகளைச்சோதது, பொருநதிய போாதொ டஙகுகினற திருமாலின மனம்பொருநதிய அளவினை, ஒளிதஙகிய தவததலைவ ராகிய ததீசிமுனிவா பார்ததுககொண டிருநதனா. பின்னா, இதழ்களையுடைய குளிர்ச்சிவாயநத தாமரைமலாபோனற, தமது கையினுல ஒருதருபபைப் புலலை யெடுதது நீலநிறநதஙகிய ஆலாலவிஷமபொருநதிய கணடநதையுடையசிவபெரு மானுடைய தெய்வீகநதஙகிய மகாமநதிரததை மனதிற் றியானிததனர். எ - று.

எடுத்தவத தருப்பை நோககி மநதிர மியலபிற சாறறி
விடுததலும விரைதது மாயோன சேனையை விழுஙகிக கொணட
தடுத்தன ரொருவ ரின்றி யோாதனி யாக நினறுன்
மடறபெருங் கமல பீடத தநதணன் மருஙகு சாாநதான்.

(இ - ள்.) கையிலெடுதத அததருப்பையைநோக்கி முறைப்படி மநதிரஞ் சபித்து விடுப்பவும், அது மணநதஙகிய துளசிமாலையணிநத திருமாலின சேனை

முழுவதையும் விழுங்கியுட்கொண்டது. தடைசெய்வோர் ஒருவருமில்லாமல் யாவருமகல, திருமால் ஒருவரே தனியாகநின்றனர். பெரிய மடல்களையுடைய தாமரைமலாப்பீடத்திலுள்ள பிரமனுக்கு அருகேயெய்தினர். எ - று. (கருகூ)

அந்தரத் திமையோ ராரு மவனொடு மருகு சாரந்தார்
மந்திரத் தகைமை சான்ற ததீசியை வணக்கம் போக்கிப்
புந்திநெக் குருகி வாழ்த்திப் புகழ்ந்தனர் புரங்க ளட்டத்
வெந்தையெம் பெருமான் பூசை யளவையா ரியம்பற் பாலார்.

(இ - ள்) ஆகாயத்தில் வசிக்குந்தேவர்கள் யாவரும் அத்திருமாலோடு பிரமனருகே சேர்ந்தார்கள். மந்திரத்தகுதிமிகுந்த ததீசிமுனிவரை யடுத்துவணக்கஞ்செலுத்தி மனம்நெக்குவிட்டுருகி, வாழ்த்திப் புகழ்ந்தார்கள். முப்புரங்களைப் பொடிபடுத்திய எமதந்தையும் எமது பெருமானுமாகிய சிவபகவான் பூசைச் சிறப்பை எவர்தாம் சொல்லுந்தன்மை யுடையார்? எ - று. (கசாO)

பசசொளிப் பருமத் திண்டோ ளைமபடைப் பசுந்து ழாய
வசசுதன வெருவி நிறப வருந்தவத் தலைவ ணைக்கிக்
கொசசைநீ யொருநாட் டக்கன் வேள்வியிற் கொடிய வீரன்
கைசசினக் கதைபட் டேங்கி கிடவெனக் கனன்று சொன்னான.

(இ - ள்.) பசியவொளியைவீசும் பூரித்தவலிய தோளையுடையபஞ்சாயுதங்களேந்திய பசியதுளசி மாலையணிந்த திருமால் பயந்துநிற்கவும், அருந்தவத்தலைவராகிய ததீசிமுனிவர்கண்டு [கொச்சை] அறிவிலியாகியநீ ஒருநாள் தக்ஷப்பிரசாபதியின் கொடுமைதங்கிய யாகத்தில் வீரபத்திரக்கடவுள் கையிலேந்திய கோபத்தோடுகூடிய கதாயுதத்தாலடிபட்டு வருந்துகவெனக் கோபித்துச்சபித்தனர்.

நின்னடிக் குரிய ராயோர் நிலவணி குடில வேணி
பொன்னடிக் கயலா மீளா நரகிடைப் புகுத வென்று
னந்நிலைக் கமலப் பீடத் தாந்தண னலங்கன் மாயோன்
றனிலை கருதிச் சாரா வினையன சாற்ற லுற்றான்.

(இ - ள்.) உனனுடைய திருவடிப்பக்தி யுடையவர்கள், சந்திரனையணிந்த கட்டிய சடையையுடைய சிவபெருமான் அழகியதிருவடிக்கு அன்னியராய்த்திரும்பாத நரகத்திற் புகக்கடவரென்று சபித்தார். துளவமாலையணிந்த திருமாலின் நிலைமையைச் சிந்தித்து, தாமரை மலர்ப்பீடத்திலெழுந்தருளிய பிரமன் நெருங்கி இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லலாயினன். எ - று. (கசாஉ)

ஆதியெங் கயிலைப் பெம்மா னடித்துணைக் கன்பு பூண்ட
பூதிசா தனத்தோர் தம்பா லாரமா புரிய லாமே
யோதிமற் றுணரார் போல வுஞற்றினை யுரிமைத் தன்றே
போதியென் றுடன்கொண் டேகி நடந்தனன கமலப் புத்தேள்.

* (இ - ள்) ஆதிநாயகனாகிய கைலாயத்தி லெழுந்தருளிய எமது சிவபெருமான உபயபாதங்களுக்கு அன்புபூண்ட திருவெண்ணீற்றின் சாதனமுடையோரிடத்தில் பொருந்திய போர்செய்தல் கூடுமோ? நூல்களையோதி, மீண்டும் அறியார்போலச் செய்தீர் இது தகுதியன்று வருகவென்று தன்னோடு உடன் கொண்டு பிரமதேவன் நடந்துபோயினன. எ - று. (கசாங)

தண்ணளிக் கவிகை வேந்தன் குபனெனுந் தாம வேலோ
னண்ணன்மா முனிவற போற்றி மலரடிக் கபயம் புக்கா
னண்ணரும் புலையேன் செய்த படிறெலா நவைதீர் நோன்பி
னெண்ணருந் தவத்தின் மிக்கோய் பொறுத்தியென் றிரந்து சொல்வான்.

(இ - ள்.) குளிர்ந்த கருணையோடு கூடிய வெண்கொற்றக்குடையணிந்த குபனென்னும் மாலைசூடிய வேலேந்திய மன்னவன், சிறந்த ததீசிமுனிவரைத் துதிசெய்து தாமரைமலர்போன்ற அவர் திருவடிகளுக்கு அடைக்கலம்புகுந்தான். அடைதற்கரிய புலைமைத்தன்மையுடைய அடியேனியற்றிய குற்றங்களையெல்லாம், குற்றத்தினின்று நீங்கிய நல்லவிரதங்களால் எண்ணுதற்கரிய தவத்தின் மேம்பட்ட முனிவரே! பொறுத்தருள வேண்டுமென்று யாசித்துக் கூறுவான். எ-று.

வேதநூன் மரபிற் றோன்றும் வேதியர் பெரிய ரென்று
வாதிவா னவனே யன்றி யமரரு மறித றேற்றார்
தீதவித் தரிதி னோற்குந் தெய்வமா முனிவன் கேள்வி
மூதுணர் வொழிந்த வாழ்க்கை மனிதரோ மொழியற் பாலார்.

(இ - ள்.) வேதநூன் மரபிலுதித்த அந்தணர்கள் பெரியோர்களென்று சிவபெருமானேயல்லாமல் தேவர்களும் அறியமாட்டார்கள் தீமையைநீக்கி அரிதாகநோற்குந் தெய்வீகம்பொருந்திய சிறந்தமுனிவன், நூற்கேள்வியின் முதிர்ச்சியுணர்வு நீங்கிய சிறுவாழ்க்கையையுடைய மானுடரோ சொல்லத்தக்கவர்கள்.

வெறுப்பொடு சிறியோர் செய்த வெம்மையைத் தண்மை யாக்கிப்
பொறுப்பவர் பெரியோ ரென்ப யானசில பகல வேண்டா
மறுப்படாக் குழவித் திங்கட் கண்ணிபால வழிபா டெய்திப்
பெறற்கரு நிலைமை பெற்றாய் நின்னலாற் பெரியர் யாரே,

(இ - ள்.) வெறுப்புடன் சிறியோர்செய்தகொடுமையைநன்மையாக்கிமனம் பொறுப்பவர் பெரியோரென்று சொல்லப்படுவார்கள். யான் அதுபற்றிச் சிறிது சொல்லவேண்டுவதின்று. களங்கமெய்தாத பிறைச்சந்திரனைச் சிரோமாலையாக அணிந்த சிவபெருமானிடத்தில் வழிபாடுசெய்து அடைதற்கரிய உயர்நிலைமையெய்தினீர். தேவரீரையல்லாமல் பெரியார் யாவருள்ளார்? எ - று. (கசஈ)

என்றவ னினைய வெல்லா மிரந்திரந் தெடுத்துக் கூறத்
தன்றனித் தவத்து மேலோ னிரங்கினன் றனது சிந்தை
யொன்றுநீ நினைய லைய வெருவலை யெழுதி யென்றுன
மன்றலந் தொடையன் மார்பற் கினையன வகுப்ப தானான்.

(இ - ள்.) என்று அக்குபன் இத்தகைய வார்த்தைகளையெல்லாம் மிகவும் யாசித்து எடுத்துச்சொல்ல, தனது ஒப்பற்ற தவத்தினால் மேம்பட்ட ததீசி முனிவர் தமது மனமிரங்கினர். ஐயனே! நீவேறொன்றும் நினைக்கவேண்டாம் அஞ்சாதே எழுந்திருவென்றனர். மணந்தங்கிய அழகிய மலர்மாலையணிந்த மார்பையுடைய குபனுக்கு இன்னும் இத்தகைய வார்த்தைகளைச் சொல்வாராயினர். எ - று. (கசஎ)

தனிநுதல் விழித்து மாரற் செகுத்தரு டலைவற் போற்றிக்
கனிதரு சிந்தை யோடு மருச்சனைக் கடன்க ளாற்றிப்
புனிதமா தவரைப் போற்றி யின்னுயிர் புரத்தி யென்றான்
குனிசிலைத் தடந்தோள் வீர னதுமனக் கொண்டு போனான்.

(இ - ள்.) ஒப்பற்ற நெற்றிக்கண்ணைத்திறந்து மன்மதனை யெரித்தருளிய சிவபெருமானைத் துதிசெய்து, கனிவுற்ற மனத்துடன் அருச்சனைக்கடன்களைச் செய்து, பரிசுத்தராகிய பெருந்தவசிகளைத் துதித்து இனிய உயிர்களையெல்லாம் காப்பாயாகவெனக் கூறினர். வளைந்த வில்லேந்திய பரந்ததோளையுடைய வீரனாகிய குபன அவ்வார்த்தைகளை மனத்திற் கொண்டு சென்றனன். எ - று. ()

அவ்வழி யரனைப் போற்றி யருச்சனை முறையி னாற்றிச
செவ்வழிக் குரவாகச் செல்லாஞ் சிந்தனை திருந்த நின்றான்
வெவ்வழிக் கொடுங்கோ னீத்துப் பேறறம் விளையச் செய்தா
னுய்வழிக் கொண்டு வேந்தன் கயிலைசென் றுவந்து புக்கான்.

(இ - ள்.) அவ்வகையே சிவபெருமானைத் துதித்து முறைப்படி சிவார்ச்சனைபுரிந்து, செம்மையாகிய வழியிலே முதியோராகச்செல்லாம் மனங்களிக்க விளங்கினன். வெவ்விய வழியாகிய கொடுங்கோன்மை யகன்று பெரிய தருமமானது பெருகும்படி செய்தனன். அவ்வரசன இறுதியில் உச்சீவிக்கும் வழியை மேற்கொண்டு திருக்கைலாயகிரியைச் சந்தோ ித்துப்போய்ச் சேர்ந்தனன். எ - று.

அருந்தவத் ததீசி யென்பா னரனடி யருச்சித் துள்ள
மிருந்தைவெந் தழலிற் பொன்னொத் துருகிநெஞ் சிரங்கி நின்றான்
பெருந்தவத் தலைவாகச் செல்லாம் பேறறி வுணர்த்தப் பெற்றா
னருந்தவச் சனக ராதி யெவரினுந் தலைமை சான்றான்.

(இ - ள்.) அருந்தவம்புரிந்த ததீசிமுனிவர் சிவபெருமான் திருவடிகளைப் பூசித்து மனமாகியகரி வெவ்விய தீயிலிட்ட பொன்போன்றுருகி மனங்கசிந்து விளங்கினர். பெருந்தவம்புரிந்த தலைவர்களுக்கெல்லாம் பேரறிவு உணர்த்தப் பெற்றனர். அருந்தவமுடைய சனகாமுதலிய வெல்லோரைக்காட்டிலும் தலைமை மிக்கனர். எ - று. (கூ௦)

சனகாதியர் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.



ஆகச்சருக்கம் ௩௨-க்கு திருவிருத்தம் ௩௭௬௦.



முப்பத்து மூன்றாவது

# வாணாசுரன் பூசனைச் சருக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மங்கை பாகனுக் கருச்சனை வானமுறை குழீஇக்கொடு வகுத்
தோரைப், பொங்கு கங்கையஞ் சடிலபாற் றனித்தனிப் பூசனைப் புரிந்
தோரை, யங்க ணுற்றுநந் தனசில வறைந்தன மினியறி விலராகி,
யெங்க ணுயகற் கருச்சனை யியற்றினோர் பெற்றன விசைக்கின்றேம்.

(இ - ள்.) பார்வதிபாகராகிய சிவபெருமானுக்கு அர்ச்சனையை வரன்முறையே கூட்டக்கொண் டியற்றியவர்களையும், கங்கையாறு பெருகவெடுக்கின்ற சடையையுடைய சிவபெருமானிடத்தில் தனித்தனி பூசைசெய்தவர்களையும் பற்றிக் கேட்டறிந்தனவாகிய சிலசரிதங்களை இதுகாறுஞ்சொன்னோம். அறிவில்லாதவர்களாய், எங்கள் சிவபெருமான் பூசையைச்செயதோர் பெற்றபேறுகளை இனிச்சொல்லுகின்றோம். எ - று. (க)

என்று சூதமா முனிவர னிசைத்தன விருசெவிப் புலன்றேக்கி
நின்று கண்கணீர் கலுழ்ந்தன ரருந்தவர் நெடுமுடி தளக்குற்றார்
மன்று ளாடிபொற் பூசனை விரித்தனை வரன்முறை யினிமேலுஞ்
சென்று தீமையோ ரருச்சனை மொழிகெனச் செப்புறந் திறநின்றான்.

(இ - ள்.) என்று பெருமைவாய்ந்த சூதரென்னும் முனிசிரேஷ்டர்கூறிய வார்த்தைகளை அரிய தவசிகளாகிய நைமிசாரணிவாசிகள் இருசெவிகளிலுந் தேக்கெடுத்து அசைவற்றிருந்து ஆநந்தக்கண்ணீர் சிந்தினர். நெடிய முடிகளையசைத்தார்கள் பொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளும் சிவபெருமானது அழகியபூசையை வரன்முறையாக இதுகாறுங்கூறியருளினீர் இன்னும், கொடுஞ்செயலுடையோர் (அபுத்தி பூர்வமாகச்) செய்த சிவார்ச்சனைகளையுந்திருவாய் மலர்ந்தருள வேண்டுமெனக்கேட்க, சூதமுனிவர் சொல்லுதலுற்றனர். எ - று.

கொழித்த வெண்டிரை நதிபுடை கிடந்திடக் கொடிமதி ளுடுத்
தோங்குஞ், செழித்த பல்வள மகத்தே யத்தொரு திருநக ரவ்வூரிற்,
பழிபாவி னன்மறைச் சக்கிராங்க னுக்கொரு பாலக னுளனன்னோன்,
சுழித்த சிந்தையன் றிரிதராட் டிரனெனச் சொலத்தகும் பெயர்பெற்
றான்.

(இ - ள்) வெள்ளிய அலைகளைக் கொழிக்கும் நதியானது புடைசூழ, கொடிகள் கட்டிய மதில்சூழ்ந்துயர்ந்த பலவளங்களோடு செழித்த மகத்தேயத்தில ஒருசிறந்த நகரமுண்டு. அந்நகரத்திலே பழித்தலில்லாத நான்குவேதங்களையுணர்ந்த சக்கிராங்கனென்பவனுக்கு ஒருபுத்திரனுண்டு அவன் சுழித்த மனமுடையவன். திரிதராட்டிரனென்று சொல்லத்தகும் பெயரையுடையன். எ-று.

கொடுமை யென்பன யாவையு மிழைத்தனன் குலத்தொழில
வரம்பற்றான், வடிநெடுங்குழைப் பொதுமகட் புணர்முலை மயங்குறு
மரபோரான், படியி கழ்ந்தன நோக்கலன் நிருமப்பு மபாவமும் பகுத்
தோரான், குடிதுறந்தன னுரைமதுக் குடிப்பவர் குலத்தொடுங் குடி
புகான்.

(இ - ள்.) கொடுந்தொழிலென்று சொல்லப்படுவனவற்றை யெல்லாம் செய்தனன். தனது அந்தணர் குலத்தொழிலின் எல்லையைக்கடந்தான். கூரிய நீண்ட குண்டலமணிந்த [பொதுமாதர்] வேசையர்களிருதனங்களிலும் மயங்குவான் மரபின் மேம்பாடுணரான். தன்னை உலகினர் இழித்துரைத்தலைககருதான். புண்ணியபாவங்களைப் பிரித்தறியமாட்டான். அந்தணருடன் குடியிருக்கையை விடுத்தான். நுரையோடுகூடிய கள்ளைககுடிப்போர் குலத்துடன் குடியிருக்கப் புகுந்தான். எ - று. (ஙூ)

கொன்று தின்றறத துறைநெறி துறநதனன் கள்விலைக குலபபே
தை, மன்ற லோதியோர் மகட்புணர்ந தவளொடும மயஙகினன் வரு
நாளின, வெனறி வேநதனை வியறறிய நறுமலா விரிபொழி லவளோடுஞ,
சென்று பூநதுணா கொய்தெடுத திருவருமபுனைநதனா செலலுற்றா.

(இ - ள்.) உயிர்களை வதைததுப் புசிததூ, தருமநெறியினின்று நீஙகினன். கள்விலைபகரும் குலததிததித அழகிய மணமவீசுங கூநதலையுடைய ஒருபெண ணைககூடி அவள பால மயஙகிககிடககும நாளில, வெறறிபொருநதிய அரசனல அமைதத மணநதஙகிய பூககளலாநத சோலையில அப்பெணணோடு புகுநது பூங கொததுகளைக கொயதெடுதது இருவருஞ் சூடிககொணடு செலவாராயினா.

எடுதது வைகலு நறுமலா புனைகுவா காவலரிதுநோககி
யடுதது நோக்கலுங் காண்கில ராஙகவாக கொருபொழு தகபபட்டாா
பிடிதத சைததன ரிறுககின ரடிததனா செய்தனா பிழையென்று
விடுதது விட்டனா பினனரு மததொழில் விடுததிலா வினையோராா.

(இ - ள்.) இப்படியே நாடோறும மலாகள் கொயதெடுததுச் சூடிககொள வார்கள நநதவனக காவலாளா இதனையடுததடுததுக கவனிககவுஙகணடாரிலா. அப்படியிருகக அவர்கள கணணுககு ஒருநாள அகப்பட்டாாகள. அபபொழுது அவாகளைபபிடிததுக கட்டினாகள. அடிததார்கள தவறுசெயது விட்டார்க ளெனறு விடடுவிட்டாாகள. (அவாகளிருவரும இபபடிக கஷடப்பட்டும்) மே லும் அம்மலாததிருடுதலை மேல்விளையுஞ செயலையறியாதவர்கள விடுததாரிலா.

நறவ ருநதிய மயககமீக கொளவொரு நளளிரு ளவணேகி
யிரவு பாாததணி மலாபறித தணிநதன ரிருநதன ரிருடகாலைப
பெறவ ருமபெருந துயிலவரிற காவலா பிடிபபரென றுளமஞசி
யுறவ ருநதுயி லொழிதர வேணடியென றியறறுவா னுளமோாநதாா.

(இ - ள.) கட்குடிதத வெறியானது அதிகரிகக, ஒருபேரிருளில அவாகள் அஙகடைநது இரவுபாாதது அழகிய மலாகளைககொயது அணிநதுகொணடிருந தார்கள. இருட்காலததில் அடைதற்கரிய பெருநிததிரைவநதால காவற்காரா பிடிததுக கொள்வாாகளெனறு மனதிறபயநது, அடைகினற நிததிரைநீஙக விருமபி ஒனறுசெயய மனதிறகருதினாாகள. எ - று, (எ)

குழைதத மணகொடு வேதிகை யமைததன ரதனடுக குலககஙகை
தழைதத வேணியெம பரமனை யமைததன ராஙகவன் றனைபபோறறி
விழைதத சிநதைய ரலலராய்த துயிலகெட வேண்டின ரருசசிததாா
மழைதத கூநதலுந தானுமெய் தழுவினா துயின்றனா மறபபுறறாா.

(இ - ள்) பிசைந்த மணணைககொணடு மேடைபோட்டு, அதனடுவேசிறந்த கஙகைநதி விளஙகிய சடையையுடைய எமது சிவபெருமானை யமைதது, அதில் அவனிறைவனைத்துதிசெயது விரும்பிய மனமுடையவரல்லராகி, நிததிரைகெட விரும்பினவராகிப் பூசிததுககொணடிருநதாாகள. அப்படியிருநத பின், குளிர்ச்சி தஙகிய கூநதலையுடைய அப்பெணணுந தானுமாக மெயம்மறநது நிததிரை செய்து விட்டார்கள். எ - று. (அ)

அற்றை நாளகத் தநங்க ராசாகோ னமலாய பொழில்காண்பா
னுற்றெ ழுந்தனன் காவலர் முந்தினரோடியப் பொழில்புக்கார்
சுற்றி நோக்கின ரிருவருந் தழீஇக்கொடு கிடந்தனர் துயில்வோரைப்
பற்றி வீக்கின ரப்பொழி லப்புறப் பட்டபையி னகத்திட்டார்

(இ - ள்.) அன்றையதினத்தில் அநங்கரத்தரசன் அம்மலர்ச்சோலையைப் பார்க்கும்படி வந்தடைந்தனன் காவற்காரர் முற்படவோடி அச்சோலையுட் புகுந்தார்கள். சுற்றிப்பார்த்தார்கள் இவ்விருவரும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டிருந்தார்கள். அப்படித் தூங்கும் அவர்களைக் காவலாளர் பிடித்துக்கட்டி னார்கள். அச்சோலைக்கு வெளியிலுள்ள ஆன்கொட்டிலினுள் விட்டார்கள்.

இனைய ரின்னண மிப்புறங் கிடந்தன ரீங்கிவ ரெதிரேகிப்
புனைபொ லன்கழன் மன்னவற் போற்றினர் பூம்பொழில் கொடுபுக்கார்
வனையு மாமணி நெடுமுடி யரசர்கோன் மலர்தொறுந் துதைந்தாடிக்
கனைசு ரும்பெறி நறும்பொழி லோக்கலு மன்னவர் செயல்கண்டான்.

(இ - ள்.) இவ்விருவரும் இவ்வகையாக இப்புறங்கிடந்தார்கள். இக்காவலாளர் அலங்கரிக்கின்ற பொன்னாலாகிய வீரகண்டாமணிதரித்த அரசனைத் துதித்து அழகிய சோலைக்குள்ளே அழைத்துக்கொண்டு புகுந்தார்கள் சிறந்த இரத்தினங்கள் பதித்த நெடிய கிரீடமணிந்த அப்பேரரசன், மலர்களிலெல்லாம் மூழ்கி விளையாடிப்பண்பாடும் வண்டுகள் பொருந்திய நல்லசோலையைக் காணவும், அவ்விருவர்செய்வதைக் கண்டனன் எ - று (௧௦)

யாரி வட்புகுந் தருச்சனை யியற்றினோ ரியம்புதி ரெனநோக்க
வார்த டம்பொழிற் காவலர்க் கேட்டுற வாங்கவர் மறுக்குற்றார்
காரி ருட்படர் கங்குலி னியற்றினர் கண்டில மிதுவென்னா
வேரி யந்தொடை யரசனைத் தொழுதன ராங்கவன் வெகுண்டுற்றான்.

(இ - ள்.) இங்கேவந்து சிவார்ச்சனை புரிந்தோர் யாவர்? சொல்வீராக வென்று, பரந்து விசாலித்த சோலைக்காவலரைநோக்கிக்கேட்க, அவர்கள் மயங்கினார்கள், கரிய இருள் நிறைந்த இரவில் இதனையாரோ செய்தார்கள். இதனைக் கண்டிலோமெனக்கூறி, தேனொழுகின்ற அழகிய மாலையணிந்த அரசனை வணங்கி னார்கள். அதற்கவன் கோபித்தனன். எ - று. (௧௧)

பக்க நோக்கின னல்வரைப் பணித்தனன் பைம்பொழில் காப்போரை
யொக்க நீவிர்கொண் டொருகரங் கான்றுணித் தோட்டுதி ரெனலோடு
நெக்க சிந்தைய னமைச்சனம் மற்றவவுழி நின்றனன் றுகேளாப்
புக்கி றைஞ்சின னரசனை வாய்புதைத் தினையன புகல்கின்றான்.

(இ - ள்.) பக்கலிலிருந்த நாலவரைப் பார்த்துப் பின்வருமாறு கட்டளை யிட்டான். இப்பசிய சோலையைக் காவல்செய்வோரை நீங்கள் ஒருசேரக்கொண்டுபோய் ஒருகையையும் காலையும் வெட்டி யோட்டி விடுங்களெனச்சொல்லவும், உருகிய மனமுடையவனாகிய மந்திரி அங்கிருந்தவனாய் அதைக்கேட்டு அரசனை நெருங்கிப்பணிந்து வாய்பொத்திக்கொண்டு இத்தகைய சொற்களைச் சொல்லு கின்றான். எ - று (௧௨)

தெய்வ மாப்பொழி லீங்கிவ னருச்சனை திருத்திய செயனோக்கின்
மெய்கொ டேவரோ வருந்தவத் தலைவரோ விண்படர்ந் தெழுவோரோ

இழிகு லத்தவ ராயினு மின்னுரு
விழியி னோக்குறின் வெம்முலை புல்லுவான்
கழிபெ ருங்களுங் கங்குற் களவினு
லொழிவ ருமபொரு ளீட்டி யுதவுவான்.

(இ - ள்.) தாழ்குலத்திற் பிறந்தவர்களானாலும் இனிய வடிவத்தைக் கண்ணிற் கண்டால், அவர்கள் வலிய தனங்களைத் தழுவுவான். மிக்க பேரிருணிரம்பிய இராக்காலத்திற் களவாடுதலால் நீக்கமற்ற அரிய பொருளைச் சம்பாதித்து அம்மங்கையர்க்குக் கொடுப்பான். எ-று. (௪)

புன்றொ ழிற்குல னாகிய புன்மையா
னன்றி தீர நடக்குறு நாளொரிற்
கன்று காரிருட் கங்குலிற் றாரகக்கி
மென்று ரைத்திடு மாநக ரெய்தினன்.

(இ - ள்.) இழிதொழிலுக்கு உட்பட்டவனாகிய அவனிற்பன நன்மையென்பது சிறிதுமின்றிக் கழிய நடந்துவருங்காலத்தில், மிக்ககரிய இருளையுடையவோரிரவில், தாரகக்கிமென்று சொல்லப்படும் பெரிய நகரத்தை யெய்தினன் எ-று.

மண்டு கங்குன் மறைப்பர வைக்கரை
கண்ட வன்சங் கரிசனன் றன்மனை
கொண்ட நன்பொருள் வவ்வினன் கோடலுங்
கண்ட ருந்திற லோனைத் தழீஇக் கொண்டான்.

(இ - ள்) நெருங்கிய இரவில் வேதநூற்கடலைக் கரையைக் கண்டவனாகிய சங்கரிசனன்வீட்டிலே பொருந்தியிருந்த நல்வழியிற் றேடிய திரவியத்தை யபகரித்தெடுத்துக்கொள்ளவும், அவ்வந்தணன் பெருவல்லபமுடைய அசித்தனை யணைத்துப்பிடித்துக்கொண்டனன். எ-று. (௬)

விட்டி லன்னவ னைக்குல வேதியன்
கட்டு கைக்க ணெகிழ்ந்திலன் கண்ணுறு
வட்ட வாண்முக நோக்கி மறைக்குலம்
நீயிப் பழிசெய வேண்டுமோ

(இ - ள்.) சிறந்த அவ்வீட்டந்தணன் அக்கள்வனைவிடுத்தானில்லை. பிணித்த கையையும் நெகிழ விட்டானில்லை. வட்டவடிவமைந்த வொள்ளிய முகத்தைப் பார்த்து, வேதியர்குலத்திலுதித்த நீ இப்பழிச்செயலைச் செய்தல்கூடுமோ. எ-று.

மரபி னோங்கிய வான்குலத் துற்றனை
யுரவு நீணிலத் தாரெழி லோங்கினை
கரவு செய்யக் கடவதன் றேயெனக்
குரவ னிற்சில பின்னருங் கூறுவான்.

(இ - ள்.) மரபினாலுயர்ந்த சிறந்த அந்தணர்குலத்திற் பிறந்தனை. வலிதாங்கிய நெடிய உலகத்திலே பேரழகுற்றனை திருடுதல் செய்யத்தக்கதல்லவே யென்று, ஆசிரியன்போல மேலுஞ் சொல்வானாயினன். எ-று. (அ)

குலங்கெ டுத்தனை கோத்திர சூத்திர
நலங்கெ டுத்தனை நல்லொழுக் கெய்திய

புலங்கெடுத்தனை புல்லொழுக் கெய்திய
துலங்கோ டோள வுரைத்தியென் றோதினன்.

(இ - ள்) குலத்தின் சிறப்பைக் கெடுத்தாய். கோத்திரசூத்திரங்களின் நன்மையை யழித்தாய். நல்லொழுக்கமடைந்த அறிவை யகற்றினாய் இழிநடையடைந்த வலிதங்கிய தோளையுடையவனே! என்று அவ்வந்தணன் கூறினன். எ-று

அன்ன வன்சொலக் கேட்ட வசிதனும்
பன்னு நான்மறைப பண்டித வென்னுடை
முன்னை யூழின முயற்சியின் மொய்குழற்
கன்னி மாரங்க கலவிவி ருமபுவேன்,

(இ - ள்.) அவ்வேதியன அங்ஙனஞ் சொல்லக்கேட்ட அசிதனென்பவனும், கொல்லத்தக்க நான்குவேதங்களிலும் வல்ல பண்டிதனே! என்னுடைய பண்டைய ஊழ்வினையின முயற்சியால, நெருங்கிய கூந்தலையுடைய மங்கையாகள முயக்கத்தில இச்சிப்பேன. எ-று. (௧0)

அன்ன மன்னவாக் காட்பட் டழிகுல
மன்ன சாதி வாமபழிந தேகினேன
பின்ன வாகனெ நலகப பெருமபொருண்
முன்னி யீங்கிது செயய முயன்றனன்.

(இ - ள்.) அன்னம்போலும நடையையுடைய நங்கையாகளுக்காளாகி கீழ்க்குலத்தாாபோலச் சாதிவரமபு கெட்டுப்போயினேன. மேலும் அவ்வணிதையாக்காககொடுக்கப் பெருமபொருளைக்கருதி, இக்களவுத் தொழிலைச் செய்யததொடங்கினேன எ-று. (௧௧)

அந்த ணாள னசிதத னுரைத்தசொற
சிந்தை மேவுறக கேட்டனன் றீமையோய
நிந்தை நீத்து நெடுங்கதி யெய்தினை
யுய்ந்து போதியென றோதுதன மேயினன்.

(இ - ள.) அசிதன கூறியவாாத்தையை அவ்வேதிய சிரேஷ்டன மனத்திற் பொருந்தக்கேட்டு, கொடியோனே! பழித்தனமையகன்று பெருங்கதியெய்தினை வருகி உசசீவித்துப்போகக்கடவாயென்று மேலுஞ் சொலலுவதாயினன். எ-று

கண்ணு தறகட வுடபெரு மானறனை
வண்ண நாணமல ரானமலாத தாளினை
யெண்ணி யெண்ணி யருச்சித திரங்குதி
நண்ணி யோாநதுவை யாவையு நலகுமால

(இ - ள்.) நெற்றிக்கண்ணையுடைய தெய்வ நாயகராகிய சிவபெருமானுடைய தாமரைமலாபோனற உபயபாதங்களை அழகிய அன்றலாந்த மலாகளால் மிகவுஞ் சிந்தித்து மனமிரங்கி ஆர்ச்சனைபுரிவாயாக. அதுவே, நீ யெண்ணிவிரும்பியவற்றையெல்லாங் கொடுக்கும. எ-று. (௧௩)

பொருளு மேன்மையும புலலொழுக் கெய்துறு
வருளு மீயு மவனடித் தாமரை

மருளசெய் காம வெகுளி மயககமு
மொருவி நீஙகுவை யெனவெடுத தோதினான்.

(இ-ள்.) செல்வததையும மேம்பாட்டையும இழிதொழிலடையாத திருவரு ளையும் அச்சிவபெருமான திருவடித்தாமரைகளேகொடுககும். மயககததைச்செய யுங காமவெகுளி மயககஙகளே விலக்கி யகலவாயாகவென்று எடுததுச் சொல்லினன எ-று. (சச)

தூய்மை யெனபன சொறறுணாத தநதணன
வாய்மை கேட்டு மணிநகை பூததனன
றீமை யேனறனை யெனசொலித தேறறினு
யாய்ம யிறகுலத தாடிக ளனபனே

(இ-ள்.) புனிதமெனறு சொலலப்படுவனவறறைச சொலலித தெரிவித்த வேதியன சததியவாரததைகளைககேட்டு அழகிய புனனகைபுரிந்தான. ஆயநத மயிலின் கூட்டததையொதத மஙகையா பாதஙகளில் அனபுடைய கொடியேனு கிய எனனையாதிகூறித தேறறினீா. எ-று. (சரு)

மானி ளமபெடை மஙகையாக் காட்பட
லான தொண்டுள வேலரு ளையநீ
கான மானினைக கைநொடித தாயல
போன நீரிணை மீளபபு காதெனறான.

(இ-ள்.) இளமைவாயநத பெணமானபோனற மஙகையருககு ஆட்படுதலா கிய ஒருதொணடு இருககுமாயின, அதனை யருளபுரிவீராக ஐயனே! நீா காடடா னையைககைநொடிததீா. வெளியேசெனற நீாவெள்ளம, கட்டிய அணையில மீண டும புகுமோ? எனறான. எ-று. (சசு)

நனறு சொறறனை யாயினு நலலுணா
வொனறு சொறறும சிதத்வு ணாதியால
மனற லோதி மயிலனை யாாமுலைக
குனறி லிஙகமெ னவுளங் கொடியால.

(இ-ள்) அசிததனே! நீநனறுகச சொலலினை ஆனாலும் நலலறிவு ஒனறு உனககுச்சொலலுவோம அறிவாயாக. மணநதஙகிய கூநதலையுடைய மயிலின சாயலபொருநதிய மஙகையா தனஙகளாகிய மலைகளைச சிவலிஙககுறிகளெனறு மனதிறகொளவாயாக. எ-று. (சஎ)

பூசப பட்டன முனபுறப பூசிநல
வாச நாணமல ராலவழி பட்டபி
னேசில பண்டநை வேததிய மீநதரு
ளீச னேயென றிளமுலை யேததெனறான.

(இ-ள்.) பூசததககனவாகிய கலவை முதலியவற்றை முதலிலே பூசி, நலல மணநதஙகிய புதியமலாகளால வழிபாடுசெயத பினனா, குற்றமிலலாத பலபண டஙகளை நிவேதனஞ்செயது, அநுககிரகிககினற கடவுளே! எனறு இளமைதங கிய குசஙகளைததுதிசெயகவெனறனன். எ-று, (சஅ)

இனைய தன்மை யெடுத்துரைத் தத்தொழில்
வினவி னானவி டுத்தனன் வேதிய
னனைய னேகி யழிதொழிற் பாபபினி
மனைபு குந்தனன் காமம யக்கினால்.

(இ-ள்.) இத்தகைய பூசைத்தன்மையை யெடுத்துக்கூறி, அத்தொண்டினைக் கேட்டுக்கொண்ட அசித்தனைச்சங்கரிசனன் செல்லவிடுத்தான். அவ்வசித்தன் அங்கிருந்துபோய், குலத்தொழில்கெட்ட அந்தணச்சிறுமி மனையைக் காமமயக்கத்தோடு புகுந்தனன். எ-று. (கக)

அரவ வல்குலவளொடு மின்னலந்
தரவி ருமபினன் றமமிற பொருந்தினா
மரபி னீங்கு மசித்தனு மங்கையு
மிரவி னுண்மலர்ப பாயலி னெய்தினா.

(இ-ள்.) பாம்பின் படம்போன்ற அல்குலையுடைய அப்பாபபினியுடன் இனியசுகத்தைக்கொடுக்க விருமபினன் தங்கள் வீட்டிலிருந்தார்கள் வருஞ்சிர மதாமதத்திற் கழிந்த அசித்தனும் அவளும அன்றிரவிற் புதியமலர்கள் பரப்பிய சயனத்தை யடைந்தார்கள். எ-று. (உ0)

மங்கை யன்னவ ளோந்திம தாதத்தெழு
கொங்கை நோக்கினன் வேதியா கோன்றனக்
கங்கு ணாத்திய துளமம டைத்தனன்
பொங்கு நாணமலர்ப பூசனை போற்றினன்

(இ-ள்.) அந்த மங்கையின் பூரித்து மதாதத்தெழுந்த குசங்களைக் கண்டான். அந்தணசிரேஷ்டன் தனக்குபதேசித்ததைத் தன்மனதிற்கொண்டான் அதிகரித்தபுதிய மலர்களால் அதனைப்பூசித்துத் துதிசெய்தான். எ-று. (உக)

இசைய வேண்டிய வெள்ளிலை யீாக்கன
றசைத ருந்தன தேவனுக காக்கினன
வசையி லாசையி னல்வழி பட்டன
னசைவி ருபபி னினையந விறறுவான.

(இ-ள்.) இசையவேண்டிய வெள்ளிய வெற்றிலையை நரம்பகிழித்து ஆசைதரத்தக்க தன்னுடைய தேவனுக்கு நிவேதனம ஆக்கினன். குற்றமில்லாத உணமையன்போடு வழிபாடுசெய்து, பெருவிருப்பத்தோடு இத்தகைய சொற்களைச் சொல்லுகின்றான். எ-று. (உஉ)

தேவ தேவத னேசசுர தேவநீ
பாவை மாாபிற பணைத்தெழு கொங்கையா
மேவ ருஞ்செ யனல்கென வேண்டினன
றூவ கூறி யவட்புணாந் தானரோ.

(இ-ள்) தேவதேவனே! தனேசுவரனே! தேவனே! தேவரீர் இப்பெண்ணின் மார்பிலே கிளைத்தெழுந்த கொங்கைகளுபயாக அடைதற்கரிய செயலைத் தந்தருளகவென்று பிரார்த்தித்து நின்று ஆவனவற்றைச்சொல்லி அப்பெண்ணைக் கலந்தான். எ-று. (உங)

விடிய நோக்கினன் வெள்ளிடைப் போயினன்
கொடிம ருங்குனல் லார்துணைக் கொங்கையின்
கடிகொ ணுண்மலர் பூசனை கைவிடா
னெடிது வைகலு மின்னண நீத்தனன்

(இ-ள்) பொழுது புலரப்பார்த்துக்கொண் டிருந்தனன். வெற்றிடத்திற் சென்றுன. பூங்கொடிபோலும் இடையையுடைய நல்லாராகிய மாதர்களது இரு கொங்கையினிடத்தில், மணம்பொருந்திய அன்றலர்ந்த மலர்களாற் பூசித்தலைக் கைவிடாமற் பலகாலத்தையும் இவ்வகையாகக் கழித்தனன். எ-று. (௨௪)

ஈது காலத் திருஞ்சுர மெய்தினன்
காது வெஞ்சினக் கைக்கதை யாலவண்
போது மாக்க ளுயிர்ப்பொறை போக்குவான்
வாதை செய்தவர் கைப்பொருள் வவ்வுவான்.

(இ-ள்) இப்படிப்பட்டகாலத்தில் அவன்பெரியவனத்தை யடைந்து கடுங் கோபம்பொருந்திய கையிலுள்ள கதாயுதத்தினால், அவ்வழியே செல்லும் மாந் தர்களுடைய உயிர்ச்சுமை யகற்றியும், பலவகைத் துன்பம்புரிந்தும் அவர்களகை யிலிருக்கும் பொருள்களை யபகரிப்பான். எ-று. (௨௫)

இன்ன வீதிழைத் தெய்திய காலையி
லன்ன கானத் தெரியழ லாங்கவன்
றன்னை யாருயி ருண்ணத் தழற்சுரந்
சென்னெ றித்தலைத் தீமையொ ழிந்ததால்.

(இ-ள்) இத்தகைய துன்பஞ் செய்துகொண்டிருந்தகாலத்தில், அவ்வனத்தி லெரிந்துகொண்டிருந்த [தாவானலம்] காட்டுத்தீயானது அவனை அரிய உயி ருண்ண, தீமையமான காட்டிற் செல்லும் வழிமார்க்கத்தில் அவனாலுண்டாயிருந்த துன்பமகன்றது. (அவனிறந்தானென்றபடி.) எ-று. (௨௬)

மாதர் கொங்கைய னென்னனும் வரதனைத்
தீதில் சிந்தையி னாலருச் சித்தலா
லோது பாவ மொழிந்தன னோங்கிரும்
பாதகற்கும் பவித்திர முற்றதால்.

(இ-ள்) மாதர்களது கொங்கையின்கண் விளங்கும் (தனேசசுவரனென்னும்) சிவபெருமானை, குற்றமில்லாத மனத்தினால் பூசித்தகாரணத்தினால், சொல்லத் தக்கபாவங்களை நீங்கினன். அதிகரித்த பெரும்பாவம்புரிந்தவனுக்கும் (சிவார்ச் சனையினாற்) புனிதத்தன்மையுண்டாயிற்று. எ-று. (௨௭)

கந்த வார்குழ லார்கதிர்க் கொங்கையி
னெந்தை தாளருச் சித்திரந் தேத்தலாற்
பைந்து ழாய்முடிப் பாம்பணைப் பள்ளியான்
சிந்தை தந்துறச் சித்தச னாயினன்

(இ-ள்) மணந்தங்கிய நெடிய கூந்தலையுடைய மங்கையர்கள் ஒளிவீசுந் தனத்தில், எந்தையாகிய சிவபெருமான் திருவடிகளை யர்ச்சனைசெய்து யாசித்துத் துதித்தபடியால், பசிய துளசிமாலையணிந்த கிரீடத்தையுடைய சேஷசயனத்தி

லறிதுயில்புரியுந் திருமால் மனமானந் தரப்பெற்றுச் சித்தசனென்னும் பெயரு
டையவனாயினான். எ-று. (உஅ)

### மேற்படி வேறு.

நல்லெழி லுருவத்தா னவையி னோக்கத்தான்
மல்லெழு தடம்புய வனப்பு வாய்ந்தனன்
றொல்லைவா னமரருந் தொழுதன் மேயினா
னல்லொளி மரகதத் தலங்கு மேனியான்.

(இ-ள்.) இருண்மயமாகிய மரகதம்போலவிளங்குந் தேகமுடையவனும், நல்லழகமைந்த வடிவமுடையவனும், குற்றமில்லாத பார்வையுடையவனும், வளர்ந்தங்கிய எழுத்தம்பம்போன்ற பூரித்த தோளழகுவாய்ந்தவனுமாகி, பழமையாகிய தேவலோகத்திலுள்ள அமரர்களும் வணங்குதலெய்தினன். எ-று. (உகூ)

வரிப்பொறிப் பாம்பணை வரத னேவலி
னருச்சனைக் குறைமுடித் தாற்ற வேண்டுவான்
விரித்தவெண் டிரைப்புனற் காசி மேயினான்
புரித்தவார் சடைமுடிப் புனிதற் போற்றுவான்.

(இ-ள்.) வரிகள்பொருந்திய படப்பொறியையுடைய ஆதிசேஷனாகிய சயனத்தில் யோகநித்திரைபுரியுந் திருமால் கட்டளையினால், சிவார்ச்சனையின்குறைபாட்டை முடித்துச்செய்ய விரும்பி, பரந்தவெள்ளிய அலைகள்பொருந்திய நீரையுடைய காசிக்ஷேத்திரமெய்தினான் புரிவுபட்ட நீண்டசடைமுடியையுடைய சிவபெருமானைத் துதிப்பானாயினான் எ-று (௩0)

அத்தலை யருச்சனை யயர்ந்த தேவற்குச்
சித்தச னெனத்திரு நாமஞ் சாத்தினான்
மெய்த்திறத் தாலயம் விதியிற் கோட்டினான்
பத்தியி னருச்சனை பயில்வ தாயினான்.

(இ-ள்.) அங்கே தான்சிவார்ச்சனைசெய்த சிவலிங்கப்பெருமானுக்குச் சித்தசனென்று திருநாமஞ் சூட்டினான். உண்மைத்திறத்தோடு சிவாலயத்தைச் சிறப்புநூல் விதிமுறையே கட்டிமுடித்தான் பத்தியோடு சிவார்ச்சனையைக் காலநியதிகடவாமல் விதிப்படிசெய்பவனாயினான். எ-று. (௩க)

இயற்றிய வருச்சனைக் கிரங்கி யெம்பிரான்
புயற்குழ லவளொடும் விடையிற் போந்தனன்
மயக்கறச் சித்தசன் மரபிற் போற்றினான்
வியப்பொடுங் கண்கணீர் கலுழ வீழ்ந்தனன்.

(இ-ள்.) சித்தசன்செய்த சிவபூஜைக்கு மனமது சிவபெருமான்திருவுளமிரங்கி, மேகம்போலக்கறுத்த கூந்தலையுடைய உமாதேவியாரோடும்இடபவாகனமூர்ந்து காட்சிதந்தருளினார் சித்தசன் தரிசித்துமனமயக்ககல, சந்தோஷத்துடன் கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சிந்தப்பணிந்து துதிசெய்தான். எ-று. (௩உ)

தென்றலந் தேரொடு கருப்புச் செஞ்சிலை
துன்றிய புகர்முகச் சுரும்பு நாணொடு

மன்றனுண் மலர்க்கணை வழங்கி னன்கலை
குன்றுறு முழுமதிக் குடையு மீந்தனன்,

(இ-ள்.) அழகிய தென்றலாகிய தேருடன், சிவந்த கருப்புவில்லும், நெருங்கிய புள்ளிகளமைந்த முகத்தையுடைய வண்டுகளாகிய நாணும், மணந்தங்கிய புதியமலர்ப்பாணங்களும் வழங்கினர் கலைகள் குறைவுபடாத பூரணசந்திரனாகிய வெண்கொற்றக்குடையையும் அளித்தனர். எ-று. (௬௩)

கிள்ளைவாம் புரவியும் பூவைக் கிள்ளையும்
வள்ளைவார் நெடுங்குழை மகளிர்ச் சேனையுங்
கள்ளவிழ் கருங்குழ லிரதி யுங்கனி
நள்ளிருட் பகடுமே முதல நல்கினன்.

(இ-ள்.) கிளியாகிய தாவிச்செல்லுங் குதிரையும், நாகணவாய்ப்புள்ளாகிய கிளியும், வள்ளைக்கொடிபோலுஞ் செவியில் நெடிய குண்டலமணிந்த மாதர்களாகிய சேனையும், தேன்சிந்துங் கரிய கூந்தலையுடைய இரதிதேவியும், கனிந்தபேரிருளாகிய யானையும் முதலியவற்றைத் தந்தருளினார் எ-று (௬௪)

பெற்றன னிவையெலாம் பெற்ற போர்வலி
முற்றமூன் றுலகெலாங் கடந்து முற்றினன்
மற்றுள தேவரும் வையமாக்களுங்
கொற்றவெண் முழுமதிக் குடைக்கு ளாக்கினன்

(இ-ள்.) இவற்றையெல்லாஞ் சிவபெருமானாற் கொடுக்கப்பெற்றனன். அப்படிப் பெற்ற போர்வல்லபமானது முற்றுப்பெறத் திரிலோகங்களையுஞ் சயித்து முடித்தான். மற்றுள்ள தேவர்களையும் பூலோகத்திலுள்ள மாந்தர்களையுந் தனது பூரணசந்திரனாகிய வெண்கொற்றக்குடை நிழற்குட்படச்செய்தான். எ-று (௬௫)

விருப்பினா லருச்சனை மரபின் வேண்டலா
னருட்பெறப் பெற்றபே றிவையென் றாலணி
யிருட்கறை மிடற்றனை யினிதி னேத்தினோர்க்
கொருப்படும் பேறியா முரைக்கற் பாலதோ

(இ-ள்.) (தாமரை மா அசோகு முல்லை நீலோற்பலமென்னும்) மலர்ப்பாணங்கள் ஐந்தினால் திரிலோகங்களிலும் உயர்ந்தபெரியதன செங்கோலைச் செலுத்திச் சயங்கொண்டான். நீங்குதற்கரிய சராசரங்களெல்லாம் நெடிய சந்திரிகைவீசும் அரியபெரியகுடையாகிய பூரணசந்திரனிழலில் வசிக்கும். எ-று. (௬௬)

பூங்கணை யைந்தினாற் புவன மூன்றினு
மோங்கிருந் தனதுகோ லோச்சி வென்றனன்
னீங்கருஞ் சராசர மனைத்து நீணிலா
வாங்கரும் பெருங்குடை மதிக்கு ணைவகுமால்.

(இ-ள்.) விருப்பத்துடன் சிவார்ச்சனைபுரிதலை மரபுவழிவிரும்பாதவன் திருவருளையடையப் பெற்றபேறு இத்தகையினவென்று சொன்னால், அழகிய இருள்போன்ற விஷம்பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானை இனிதாகத் துதிசெய்தவர்களுக்கு அடையப்பெறும் பதவியாம் எடுத்துச்சொல்லுந் தன்மையுடையதோ. எ-று. (௬௭)

எள்ளரு மதசசெருக் கிருநத வாபிறைப்
பிள்ளைவே ணியனையு மதிககப் பெறறிலான
கள்ளவிழ் கணையவன கருததிற சாததினை
பொள்ளெனத் தொடையுடைத் தெழுநது பொங்கினன்.

(இ-ள்) இகழ்தற்கரிய மதச்செருக் கிருநதவகையால் இளமபிறைச்சநதிரனை யணிநத சடையையுடைய சிவபெருமானையும மதிககப்பெறாதவனாய, தேன சொரியும மலர்க்கணையை அவவிறைவனுளளததிற்பொருததினை விரைநதுதொடையைததட்டிககொணடு எழுநதுகோபிததான. எ-று. (௬அ)

என்னையா ளுடையவ னெனகொ லீதென
வுன்னருந திருவரு ளுருகத நோககலும
வெநநெருப பெழுநதல விழிதத தாஙகவன
றனனுடற பொடிபடு சாமப ராயினன

(இ-ள்.) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான இஃதிபாதெனறு நினைததறகரிய திருவருளாற கோபிததுப்பாாககவும நெறறிவிழி வெவவிய நெருபபெழ விழிததது. அதனால அச்சிததசன தனனுடலமானது பொடிபடுமபடி சாமபராக ஆயினன. எ று. (௬௯)

தேவருந திகைததனா திகநத மெட்டுள
காவலா திகைததனா கடவுட சிததசன
வேவருந தழறபுகை விழிககொ ணாமையாற
றூவரு முலகெலாந தவழநது வீஙகிறறே

(இ-ள.) தேவாகளுந திகைததாாகள. அஷடதிசைகளிலுளள திககுப்பாலாகள் மயஙகினாாகள. கடவுளாகிய சிததசனுடைய வேகறகரிய தீமபுகையானது காணபபடாமையால, கெடுதலறற உலகமுழுவதும பரநதுபெருகியது எ-று

ஓாநதன ளிரதிவெந தொழிநத சாமபாிற
சோாநதன ளரறறின டுணுகக மெய்தினா
ளீரஞ்சடைப புனிதனை யிரநது போறறினாள
போநதில ளநநிலை யழுது பேதுறு

(இ - ள) இரதிதேவி இதனையறிநதனள சிததசன வெநதழிநத சாமபலிற சோாவடைநது விழுநதனள. அழுதனள. துணுககெயதினள குளிாநத சடையையுடைய சிவபெருமானையாசிததுதிததனள. அந்நிலைமயிலேயே அழுது கொணடு துனபமெயதிப் பெயாநதாளிலலை எ - று. (௭௧)

நின்றன ளவணிலை நிமல னுகருக
கனறிய திருவுளக கறுபபு நீததன
னனறவட குருவமா யருவ மறறவாக
கெனறளித தநநிலை யெழுபபி யீநதனன.

(இ - ள்.) இப்படி வருநதி நினறவளாகிய இரதியின நிலைமைபைச்சிவபெருமான் திருவருளுககுஞ்செயது, கோபிதத திருவுளளததின சினககுறிப்பை யகற்றினா. அபபொழுது அவளுககு உருவமாகவும ஏனையோருககு அருவமாகவும் விளஙகுகவென்றநுக்கிரகிதது மன்மதனை யெழுப்பிககொடுததனன். எ-று. ()

தேவரி லொருவனென் றானைச சிந்தியாப்
பூவரும் கணைகளாற பொருது மாண்டனன்
யாவரு மிங்ஙன மதிககி லநதணீர்
மேவருந தழற்படு நிரையம வீழுவரால்.

(இ - ள்) சிவபெருமானைத தேவாகளிலொருவனென்று கருதி, அரிய புஷ்பபாணஙகளாற் போர்செய்திறநதனன். வேதியாகளே! எவராயினும் இங்ஙனம் மதிப்பாாகளானல், அடைதற்கரிய தீமபமாகிய நரகததில் வீழ்நது வருநதுவார்கள். எ - று. (சகூ)

மன்மதன் சிவாாசசனைச சருக்கம முறறிற்று.

ஆகச் சருககம ௬௪-ககு திருவிருததம ௪௦௭௦.

# முப்பத்தைந்தாவது,

# கிருது சிவார்ச்சனைச்சருக்கம்.

(*)

எழுசீர்ககழிநெடிலடி யாசிரிய விருததம்.

இநதியங் கடநது புலனகளோ ரைந்து மொருவழி நிறுததி மறறெழுதா, முநதைநான மறைக்கு மரிமுத லெவாககு மளபபரு முழுமுதற பொருளிற, சிநதனை திருதது மருநதவத தலைவீ ரினனுமோா கதைய தன றிறததுப, புநதிவைத தொருஙகு கேடகெனச சூதன் புகனறவாக காஙகது புகல்வான.

(இ - ள்.) பஞ்சேநதிரியஙகளையுஙகடநது, ஒப்பறற ஐம்புலன்களையும் ஒரே வழியில் நிறுவி, எழுதாககிளவியாகிய பழைய நாலவேதங கட்கும் திருமால முத லியவெல்லாருககும அளவிடறகரிய முழுமுதற கடவுளாகிய பொருளினிடததில மனததைத திருததிய அருநதவமபுரிநத தலைவாகளே! இனனுமோா சரிததிரமுள் ளது. அதனபால மனதை ஒருசேரவைததுக கேடபீர்களாகவெனறு சொலலி, சூதமுனிவா அவ்விருடிகட்கு அதனைச் சொலவா ராயினா. எ-று. (க)

மணிகொழித திரைககும பெருநதி யுடுதத மாளவ தேயமத தேயத, தணிநெடும புரிசை வயிணவ மென்னு மணிகிளா பெருநதிரு நகரிற, கணிதான மறையின் குலததுவ தரிதத கிருதுவென் றொருகடுங் கண்ணன், குணில்படு காததோ னுயிா செகுத துணனுங கொலைததொழி லடுதிறற கொடியோன.

(இ - ள) நவமணிகளைக கொழிததிரைககும்படியான பெரிய நதிசூழ்நத மாளவதேயமொனறு. அததேயததிலே அழகியநெடிய மதிலையுடைய வயிணவ மெனனும் அழகுவிளஙகும் பெரிய செல்வநதஙகிய நகரததிலகணிதத நாலவேத முணாநத அநதணா குலத்திற் பிறநத கிருதுவென்று சொலலப்படுங கடுஙகண் ணனொருவன், குணிலபொருநதிய கையையுடையவன், உயிாகளைக கொன்றுதின் னுங கொலைததொழிலையுஞ், கொல்லததக்க வல்லபததையுமுடைய தீயோன்,

புண்ணிய பாவ மென்பன விரண்டும் பகுத்துண ரறிவிலன் பொரு கோட், டண்ணல்வெள ளிடையோ னடியவ ரொழியா வரநதைபெற லமரப புடைகரு, தண்ணெனக கழுதுஞ சுழல்வரு மிருளிற பிறா மனை தொறுமபொருள கவரும, வண்ணவால வளைக்கைபபொதுமகட் குதவி வளரிள வனமுலை முயஙகும.

(இ - ள்.) புண்ணியம் பாவமென்று சொல்லப்படும இரணடனையும் பகுத தறியும் அறிவிலலாதவன். போரபுரியுங கொமபையுடைய பெருமைபொருநதிய வெள்ளிய இடபவாகனராகியசிவபெருமான் அடியவாகளை ஒழியாததுன்பமெய் திவருநதும்படியடிப்பான். பேயும் விரைநது சுழலும் இருட்காலத்தில் அனனி யர்வீடுகளிலெலலாம பொருளை யபகரிப்பான். அழகிய ஒள்ளிய வளையலணிநத கையையுடைய பொதுமாதாககுக் கொடுதது வளர்கினற இளமைதஙகிய அழகிய தனஙகளைச்சேருவான. எ - று. (௩)

ஈநற வெடுதது வெளிப்பட நுகரும் பல்லுயி ரீர்ந்தெடுத துண்ணுங, கானகஞ் சுழலு நெறிபபடு மாககட் புடைத்தவா கைபபொருள கவரு, மேனையோ னின்ன புல்லொழுக கொழுகு மெல்லையி னிளமுலைக கருங கட், டேநகைப புலைசசி நலனுகர்ந தவள்பூற் றுயருழன றியங்குறு மந நாள.

(இ - ள) ஈககள் மொய்ககுங கள்ளையெடுதது வெளிப்படையாகக குடிப் பான். பலவகைப்பிராணிகளையுங கொன்றெடுத்துப் புசிப்பான. காட்டிலே சஞ்ச ரிப்பான். வழியிலகப்பட்டமாநதாகளை யடிதது அவாகள கையிலுள்ள பொருள களை யபகரிப்பான இவன் இததகைய இழிதொழிலமேற்கொணடொழுகு நாட் களில இளமைதஙகிய தனசதையும் கரியவிழியையும சுததமாகிய பலலையுமு டைய ஒருபுலைசசியின இனபததை யனுபவிதது அவளிடததில துன்பமெயதி அலைகின்றகாலததில எ - று (௪)

கருங்கடற பரவை கிழிததெழு மால காளகண் டததிறைஞ் றென் னப, பொருநதிய புலரி நறுமலா தெரிநது போதரு மொருவனப பொ ழுதி, லெரிநதெழ வெகுளி மீககொளத தொடரா வோடின னமமலாக குடமபை, பரிநதிடை பறித்தா ஞங்கவ னரற்றக குணிலகொடு புடைத தனன் பதகன்.

(இ - ள்.) கரிய கடற்பரப்பைக கிழித்துககொணடெழுதத ஆலாலம்பொருந் திய கரியகண்டததையுடைய சிவபெருமானுககெனறு, பொருநதிய விடியறகா லததில் மணநதங்கிய நலலமலாகளைத தெரிநதெடுததுவருகினற ஒருவனை, அப பொழுது எரிநதுகொணடெழுநத கோபமிகசரிககததொடாநதோடி, அமமலாப் புட்டிலையிடையே பறிததான. அதற்கவன இரைச்சலிட, அப்பாவிதன ஈகையிலி ருநதகுறுநதடியா லடிததனன். எ - று. (௫)

தண்மலாக்குடமபை பறிததலு மொழுகி வீழ்நததோா தனிமு கையதனை, மண்மலாந ததுவீ தெமக்கல வரறகீ தென்றுதன் மனத தொடு மதிததான், புணமலாந தடுவேற கருநெடுங தடங்கட புலைசசியுந தானுமாய்ப புனைநதா, ஞண்மருங கொசிகக மிளமுலை யவளைத தழீஇககொடு நன்னல நுகாநதான.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய புட்பக குடலையைப்பறிக்கவும், சிந்திவிழுந்த தொரு ஒப்பற்ற அருமபினை இது மண்ணிற்படிந்தது ஆனபடியால் இது எமக்கா காது. சிவபெருமானுக்குரியது என்று மனதிற் கருதினான். புண்படுத்திககொல் லும் வேல்போன்ற கரிய நீண்டுபரந்த விழியையுடைய புலைச்சியுந் தானுமாய் அணிந்துகொண்டு, நுட்பமாகிய இடையை ஒடியச்செய்யும் இளமைதங்கிய தன முடைய வவளை ஆலிங்கனஞ்செய்துங்கொண்டு நல்ல இன்பத்தை யநுபவித்தான்.

அழுதழு தரற்றி யாவெனக் கூவி மழவிடை யானடித் தொண்ட, னெழுதரு கவிகை மன்னவற் குரைப்ப வாங்கவன் வெகுளிமிக் கெழுந் தான, பழுதிழைத் தகலு மன்னவற் கொணாமி னென்றலு மிரவுபாரத் தனரப, பொழுதவற் கொணாந்தா ரருஞ்சிறைப் பிணித்துப் புகுத்தி னாகாரகத் தகவை.

(இ-ள்) இளமைதங்கிய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் திரு வடிககன்பன, (மலா-புட்டிலையிழந்து) மிகவும் அழுதுபுலம்பி ஆஆவென்று கூச் சலிட்டு, உயாந்த வெற்றிக குடையையுடைய அரசனுக்குக்கூற, அவன் கோப மிகுந்தவனாய், சிவாபசாரஞ்செய்து சென்ற அக்கொடியோனைக் கொண்டுவருக வெனக் கட்டளையிடவும், அவாகள் இரவிற்பாாத்திருந்து அப்பொழுது அவ னைக்கொண்டுவந்து அரிய சிறைப்பிணித்து காராக்கிரகத்தில் அடைத்து வைத் தாாகள். எ-று. (எ)

அருஞ்சிறைக் கிடந்து நாட்பல கழிய வாக்கைவிட் டாருயிா துறந் தான், பொருஞ்சினத் தறுகட் டென்புலத் தூதா புகுந்தனா புயத்தொ டுந் தாம்பு, வரிந்துகொண டிறுககிச் சேறலு மதனை நோக்கினா மழ விடைப் பெருமான, பெருந்திருக் கயிலைக் கணத்தவா படாந்தா ராங்க வாப பிறபடப் புடைத்தாா

(இ-ள்.) அரிய சிறைக்களத்திற் பலகாலம் நீங்க உடலைவிட்டு அரிய வுயிர் நீங்கினான். போாசெய்டத்தக்க கோபத்தையுடைய அஞ்சாமைத்தன்மைவாய்ந்த இயமபுரத்தூதுவாகள் அங்கெய்தி, தோளகளைக்கயிற்றாற்கட்டிக்கொண்டிறுக்கிச் செல்லவும், இளமைதங்கிய இடபாரூடராகிய சிவபெருமானது பெரியதிருக்கை லாயத்திலுள்ள சிவகணத்தவாகளகண்டு அவவிடஞ்சென்று அவாகளைப்பிற்படும படி யடித்தாாகள் எ-று. (அ)

வாளொளி யிமைக்கு மானமீப் பொருத்திச் சென்றனர் மகரநீ ரளித்த, காளகண் டத்தன் முன்னரின விடுப்பத் திருவருட் கருணை பெற றுவந்தான, மூளமா மிழந்த தென்புலத் தூதா மறலிபா லீங்கித் மொழிந்து, தாளிணை தொழுதாா சித்திர குத்தன் றனனொடும் வினவ லும் புகலவான.

(இ-ள்.) ஒளிரிய காந்தியைவீசும் விமானத்தின்மீதி லிருத்திக்கொண்டு போயினாாகி, சமுத்திரநீரிற்றோன்றிய விஷமபொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான திருமுன்னா விறுத்த, சிறந்த பெருங்கருணை பெற்றுக் களித்த னன். நெருங்கிய போர்க்குத் தோற்ற இயமதூதாகள் இயமனிடத்தில இச்செய் தியைக் கூறி இருபாதங்களையும் வணங்கினாாகள். சித்திரகுத்தனோடு சொல்லவும், அவன் சொல்லுகின்றான். எ-று. (௯)

மல்லனீர்ப் பழன மாளவ தேய வயிணவத் தொன்னக ரதன்பாற்,
றொல்லைநான் மறையோர் குலத்தவ தரித்துத தன்னிலை துறநதன
னவனு, லெல்லைமா நிலததி னிகழ்நதபா தகததை யெம்மனோ மொழி
யமுற் றுறுமோ, குல்லைநீண் மோலி முதலினோ ளளப்பிற் கற்பமோா
கோடிபெற் றுறுமால்.

(இ - ள்.) வளநதஙகிய நீர் நிறைநத கழனிகளையுடைய மாளவதேசத்திலே வயிணவமென்னும் பழமையாகிய நகரததிலே, தொன்றுதொட்டுவரும் நானகு வேதஙகளுணர்நத வேதியா குலததிலே பிறநது தனனிலைமைமாறினவன். பெரியபூமியில் அவனுற் செய்யப்பட்ட பாவஙகளை யெம்மவாகள் சொல்ல முற்றுப் பெறுமோ? துளவமாலையணிநத நெடிய கிரீடததையுடைய திருமால முதலானோா அளவிட்டாலும் ஒருகோடிகற்பகாலஞ் செலலுட. எ - று. (க௦)

பூதிசா தனதத னுருக்திர மணிய னொருத்தனெம புனிதனுககென்
றுச, சீதநாண் மலாகொண் டேகலு மவனைச செயிர்த்திடை பறிதத
னன் பறிககும், போதினோ ருமபு நிலததிடை வீழ வீதரற் கென்றனன்
போனு, னீதலா லிவனுற செய்ததோா தரும முண்டுகொ லென்றன
னெனனுும.

(இ - ள்.) திருவெண்ணீ றணிநதவனும் உருத்திராககம் பூணடவனுமாகிய வொருததன, எமது புனிதனுகிய சிவபெருமானுககென்று, குளிர்ச்சிவாயநத அனறலாநத மலாகளைககொண்டு செல்லவும், அவனை வழியிடையே தடுததுப் பறிததான். அப்படிப பிடுஙகுகையில ஒரு அரும்புபூமியில வீழ, இது சிவபெருமானுககென்று சொலலிபபோயவிட்டான. இதுவேயலலாமல் இவனுற் செய்யப்பட்ட தருமமொனறுள்ளதோவென்று சிததிரகுததன் சொலலினன். அப்படிச் சொல்லவும் எ - று (கக)

வயிரவா ளெறிக்கு நெடுங்குழை மகரந துயலவர மணிமுடி யசை
த்நா, னயிலெயிற ரவ மிலைசசிய பெருமான் றிருவரு ளறிந்ததி சயித்
தான், குயின்மொழிக குதலை பஙகனுக குரியோா கொலைததொழில
புரிநதன ரெனினு, மயாவறத் தொழுது நீஙகுமி னமாகா ளென்றனன
பின்னரும வலிபபான்.

(இ - ள்-) வச்சிர ரததினஙகள் வெள்ளொளிவீசும நெடிய மகரகுண்டலமானது அசையும்படி நவரததினஙகள்பதித்த கிரீடததை யசைததனன். கூாமையாகிய பற்களையுடைய சாப்பததை யணிநத சிவபெருமானது திருவருட்டிறததை யுணாநது அதிசயமெயதினன. குயிலபோலுங குதலைச்சொல்லையுடைய பாாவதிபாகராகிய சிவபெருமானுக்கு உரியவாகள் கொலைப்பாதகஞ்செய்தனரானபோதிலும், மயக்க மகல அவர்களைப்பணிநது நீஙகக்கடவீாகள். நம்மவாகளே! என்று மேலுஞ்சொலவானுயினன். எ - று. (கஉ)

வருகுதிர் நீவிர் மழுவிடைப் பெருமான் மலரடி யருசசனை புரிவோ,
ரருகுநின் றவர்க்கொன் றியற்றின கொடுபபோ ராங்கவர் பணிவிடைக்
குரியோா, கருதுமிம் மூவர்க் காணுறி னமர்காள கையெடுத தடிககடி
தொழுமி, னுருகிீத தகன்மி னனறெனி னமது கோமுறை யழிவுபெற்
றிடுமால்.

(இ - ள்.) நம்மவர்களே! வாருங்கள். நீங்கள் இளமைதங்கிய இடபவாகன முடைய சிவபெருமான் தாமரைமலர்போன்ற பாதங்களையர்ச்சனைசெய்பவர்கள், அவர்கட்கருகே யிருந்து தமமாற் கூடிய பொருளை யுபகரித்தவர்கள், அவர்கள தொண்டுபுரிதலுக குரியவர்கள் ஆகிய எண்ணததகக இம்மூவகையினரைக்காணப் பெற்றால், அடிககடி கைகூபபிப் பணியககடவீாகள. மனங்கசிநது அவர்களை விட்டு நீங்குங்கள. அல்லாவிடின நமமுடைய அரசமுறைமை கெட்டுப்போய விடும். எ - று.　(௧௩)

விரிதிரை புரளு நெடுங்கடல வரைபபின் வெண்மருப பொருகை மால் யானை, யுரிவைபோாத் அடுததோன் பூசனை புரிவா ருளரெனி லாங் கவா நோன்மை, யரிமுத லெவாககு முரைபபநற கெளிதன றெமம ஞே ரறைவதற கெளிதோ, புரிசடை யவனை யருசசனை மரபிற போறறி ஞேர் விழுபபமாா புகல்வாா.

(இ - ள்.) விரிநத அலைகள புரளுகின்ற நெடிய கடலசூழ்நதபூமியில வெள் ளிய தநததகையும் ஒற்றைககையையுமுடைய பெரிய(கயாசுரனென்னும)யானை யின் றேலை யுரிததுப் போாததிய சிவபெருமான பூசையைச்செயபவாகளுணடா கில், அவாகள தவசீலம் திருமால முதலிய எவருககும் சொலலுவதற கிலேசான தல்ல, நமமவாகள் சொலலுவதற் கெளியதோ? புரிநதசடையையுடைய சிவபெ ருமானை முறைப்படி அருச்சிததுத துதிததோர் சிறப்பினை யாவா சொல்ல வல் லவா? எ - று.　(௧௪)

முத்தவா ணகைய முகின்முலைக கெளரி யைங்கரன் முருகவேள வீா பததிரன கணததோா நநதிமா காளா வயிரவா பரமனுக கரிககுப புததிர னிவனையோா மறறுளோா ரெவருமபு ராநதகன மலாடி. போற்றி நிததலுமபரவி யருசசனை வகுபபா ரினனமு நிகழ்ததுவன் கேண்மின்.

(இ - ள.) முததுப்போன்ற வெள்ளிய தநதபநதியையும கோங கரும்பு போன்ற குசததையுமுடைய உமாதேவியார்-ஐநது திருககரங்களையுடைய கணே சப்பெருமான-குமாரசுவாமி-வீரபததிரா-சிவகணங்கள-நநதி மாகாளர் - வயிரவா- சிவபெருமானுககும் திருமாலுககும் பிறநத அரியரபுததிரனெனனும் ஐயனாா- இவர்களும் இன்னும் உளளவாகளெலலாரும், திரிபுரதகனராகிய சிவபெருமான் மலாபோன்ற பாதங்களைத துதித்து நாடோறும வணங்கி யருசசிபபாாகள. இன னும் சொல்லுவேன. கேட்பீாகளாக. எ - று.　(௧௫)

கனனியர் கருபப மகளிாநான மறையோ ரினனவர்க கடிந்துயிர் செகுததோா, பொனனவிா சடையோன் சினகரம் புகுநது நிதிகவா புலையாதங் குருவின், பனனிகைப பிடிததோ ரிவரலாற் கொடிய பாதக ராயினுமபரமன், றன்னடிப் பூசைக குரியரே லவரே யரிமுத லவா தொழுந் தலைவா.

(இ - ள.) கன்னிகைகள-கருப்பஸ்திரீகள்-நானகுவேதங்களையுணாநத அநத ணாகள-இவாகளை வருததி உயிர்வதை செய்தவாகள, சிவாலயததினுட் பிரவே சிததுத திரவியததைததிருடுகின்றநீசாகள்-குருபததினியைககைப்பிடிததவாகள், இவர்களேயல்லாமல் மகாபாதகர்களானபோதிலும, சிவபெருமான் திருவடிப்

பூசைககு உரியவர்களானல் அவர்களே திருமால் முதலானர்களாலும் வணங்கத தகுாதலைவாகளாவாாகள் எ - று. (கக)

என்றுதென் புலததோ ரெடுத்தவர்க குரைத்த யாவையு மெடுத் தன னியமபிப, பொன்றிகழ் சடிலச சூதமா முனிவ னருநதவாக் கின் னமும புகல்வான், கன்றுமா னெடுதத திருககரப பெருமா னருசச னைக் கடன்முறை புரிநதோாக், கொனறுநன் கிழைபபி னுங்கவ ரரனுக கொருமருங் கினிதிருந துவபபாா

(இ - ள்.) என்று இயமதருமன் அவாகளுககு எடுததுச் சொல்லியவற்றை யெல்லாம பொன்போலப பிரகாசிககுஞ சடையையுடைய சிறநத சூதமுனிவா எடுததுககூறி மேலுஞ் சொலலுகினருா. மான கனறினைத திருககரததிற்ருஙகிய சிவபெருமானுககு முறைப்படி அாச்சனைபுரிநதவாகளுககு ஓருபகாரஞ செயத வாகள் சிவபெருமானுககு ஒருபககலில இனிதாகச் சநதோஷிதது வீற்றிருப் பாாகள். எ - று. (கஎ)

சூதமா முனிவ னின்னணமிசைப்ப முழுதுணா ரருந்தவத தொல்லோா ராதிநா யகன தருசசனை மரபி னதிசமீ தெனவுரைத தருளென் றோதலும் பரம னுயிர நாம மருசசரிப பனவெவ வுரைததான் கோதறு நாம மெவவழித தெனறு வினுயின ரருநதவக குலததோா.

(இ - ள்.) சிறநத சூதமுனிவா இவ்வாறு கூறவும், முற்றுணர்நத பழமை யாகிய அருநதவமுடைய நைமிசாரணிய முனிவாகள, முதறகடவுளாகிய சிவ பெருமான் அாச்சனை முறைப்படி இப்படிச்சிறநததெனறு திருவாயமலாநதருள வேணடுமென வினவவும், சிவபெருமானது சகததிரநாமஙகளை ஸமரிததலெனக கூறினா. அருநதவம்புரிநத அமமுனிவாகள், குறறமிலலாத அததிருநாமஙகள எவவகையதெனறு கேட்டாாகள். எ - று. (கஅ)

பாநதுவண் டாறறும பசுநதுழா யலங்கற பண்ணவ னெடுத்தெ டுத தேத்திப, புரநதன னவறறைப பாரத காதை புகலவன காண்டி ரென றருள, நிரநதர மவறறி னெறிததலை நினறு நிமலனைப பூசனை புரிந் தோ, ரரனறிரு வருளிற பெறறவா றுளவே லருளெனச சூதனுங கிசைககும.

(இ - ள்) வணடுகள் பரவியொலிககும் பசிய துளசிமாலையணிநத திருமால் எடுததெடுததுககூறிப் பாதுகாததனா அததிருநாமஙகளைப் பாரதநூலகூறுகின றது காணபீர்களாகவெனச் சூதமுனிவர் சொலலவும, இடைவீடினறி அததிரு நாமஙகளின தியானததிலிருநது சிவபெருமானைப் பூசிததவர்கள சிவாநுககிரகம் பெற்றவகையிருககுமாயின் திருவருளபுரியவேணடுமென வேணட, சூதமுனிவா சொலலததொடஙகினா. எ - று. (கக)

கிருது சிவாாசசனைசசருக்கம முற்றிறறு.

---

ஆகச் சருக்கம் ௲௯-இற் திருவிருததம் ௪௦அக.

---

முபபத்தாறாவது

# இலககுமிபூமிதேவி சகத்திர நாமார்ச்சனைச் சருக்கம்.

---

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சேயகா லதது வெங்க ணசுராதங் குலத்து டடியோ
னுயவா லததை யொபபான் சலநதர னலங்கற் குலலை
மாயவன் றன்னை யேறது மணடமா விளைபப தானுன்
போயது பருவ நூறா யிரமிடை பொருது நின்றார்.

(இ - ள்.) பூாவகாலததிலே, அஞசாமைததன்மையையுடைய அசுராகுலத
திற்கொடியோனாகிய விஷததையொததவனாகிய சலநதரனென்னும பெயரினன்,
துளசிமாலை யணிநத திருமாலை யெதிாதது நெருஙகிய போாபுரிபவனாயினன.
நூறாயிரவருடகாலஙகள கழியுமபடி இருவரும இடைவிடாது போர்புரிநதிருந
தாாகள். எ - று. (௧)

புனததுழா யலங்கற் றோளான் புறஙகொடுத் திரிநதுபோனு
னினப்புயத தினவு தீாபபான் சலநதர னெழுநது போநது
சினபபுலி யுரிவை யாாதத செஞசடைப புனிதன் றன்னை
முனைசசமாக் களததுக கூவி யாரமா முயலவ தானுன.

(இ - ள் ) வனததிலுள்ள துளவினை மாலையாகவணிநத தோள்களையுடைய
திருமால் புறமுதுகுகாட்டித தோற்றுபபோயினா. இனனுமதன தோளிணைத
தினவு தீராதவனாகிய சலநதரன எழுநதுசென்று, கோபநதஙகிய புலிததோலை
யுடுதத செவவிய சடையையுடைய சிவபெருமானை யுததபூமியிற் போாபுரியும்படி
அறைகூவியழைததுப் பொருநதிய போாசெயவானாயினன். (௨)

வாளிளம பிறைமென கண்ணி மணிநகை பூதது மெலலென
தாள்கொடு வரைநத நேமிப படையொடுங கழிநதா னுவி
யேனுமக காலந தனனி லிருநதுழா யவனு மன்றேன
மேலெழு மலாககா வெய்தி யருநதவம விளைதது நின்றான்.

(இ - ள.) வெள்ளிய இளமைதங்கிய சநதிரனைச் சிரோமாலையாகவணிநத
சிவபெருமான அழகிய புன்னகைசெய்து, மெலலெனததமது திருவடியா லெழு
திய சககராயுததோடும் சலநதரன உயிாநீஙகினன. பொருநதிய அககாலததில
பெரிய துளசிமாலைசூடிய திருமாலும அச்சலநதராசுரனது மேனோககியெழுநத
பூஞசோலையை யடைநது அரியதவமபுரிநதுகொணடிருநதனா. எ - று. (௩)

அவவனத தசுரன றேவி யாரெழில் விருநதை யெனனுஞ
செவவிய ணறுமபூக் கொயவான சென்றனண் முனிவற காணு
வவ்விதழ்க கமலச செங்கை கூபபினள வணககம போக்கி
நவ்வியம பேடை போல்வா ளிணையன நவிலவ தானுள.

(இ - ள்.) அந்த வனத்திலே, சலந்தராசுரன் மனைவி அழகுபொருந்திய விருந்தையென்னுஞ் செவ்வியமாது, மணந்தங்கிய மலர்களைக் கொய்யும்படிசென்றவளாகி (திருமாலாகிய) முனிவனைப்பார்த்து, தாமரையிதழ்கள்போன்ற செவ்விய கரத்தைக்குவித்து வந்தனைசெய்து, பெண்மான்போன்ற அப்பெண் இத்தகைய வார்த்தைகளைச்சொல்லுவாளாயினள். எ - று. (ச)

ஐயனே தவமேற் கொண்ட வந்தண மறறொன் றோரா
மெய்யனே யளியேற கொன்று விளம்புதல வேண்டு மென்னுப
பையரா வணிந்த வேணிப் பண்ணவ னுடனெங் கோமான்
மொய்யமா விளைப்பச சென்று னடுதிறன் மொழிதி யென்றாள்.

(இ-ள்) ஐயரே! தவத்தொழின்மேற்கொண்ட வேதியரே! வேறொன்றுமறியாத உண்மையானவரே! அடியாளுக்கு ஒன்று திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று, எமதுகணவன் படம்பொருந்திய சாப்பத்தையணிந்த சடையையுடைய சிவபெருமானோடு நெருங்கிய போர்புரியச் சென்றுள்ளார். அடுதிறன் இத்தகைத்தென அருளவேண்டுமென்றனள். எ - று. (இ)

நின்னுயிர்க் கொழுந ஞேனேமியா லிருகூ றுகித
தன்னுயி ரொழிய வீழ்ந்தா னென்றலுந் தமிய ளாகி
யந்நிலை யலறிச செங்கை நெரித்தன ளலறி வீழ்ந்தாள
பன்னக மழலிட் டென்னப புரண்டனள பதையா நின்றாள்.

(இ - ள்.) உன்னுயிர் நாயகனானவன் சக்கரத்தல் இருபிளவாகி, தன்னுயிர் நீங்க விறந்தான் எனக்கூறவும், அந்நிலையிலேயே விருந்தை யலறிக்கொண்டு செவந்த கைகளை நெரித்துக்கொண்டு கோவென்றலறி (நில மிசை) வீழ்ந்தனள். தீயிற்போட்ட சாப்பத்தைப்போலப் புரண்டு பதைபதைப்புற்றாள் எ - று. (சு)

பின்னரு முனிவற போற்றிப் பெருந்தவத் தலைவ னேநீ
சொன்னது சரத மாயி னவவுடற றுணியி ரண்டு
மிந்நிலை யழைத்தி நோக்கின மெய்யமையென றிரந்து சொற்றாள
கொன்னுலைத் திகிரிக் கோமா னுங்கது கருத்துட் கொண்டான்.

(இ - ள்.) மேலும் விருந்தை முனிவரைத் துதிசெய்து, பெருந்தவம்புரிந்த பெரியோரே! தேவரீர் கூறியது சத்தியமானால் அவவுடற்கூறுகளிரண்டையும் இவவிடத்திற்கு வருவிப்பீராக. அதனைப்பார்த்தால் உண்மையாமென்று யாசித்துச்சொல்லினள். பெருமைபொருந்திய சக்கராயுதமேந்திய திருமால் அதனைத் தமது திருவுளங்கொண்டனர். எ - று. (எ)

மாயமற கடங்க ளாக விரண்டுரு வகுத்த நீவிர்
தாயரன் றிகிரி கீண்ட சலந்தர னுருவ யாக்கை
யாயவோ ரிரண்டுங் கொண்டு வருதிரென றருள வாங்குப்
போயவை யிரண்டுங் கொண்டு புகுந்தன விருந்தை கண்டாள்.

(இ - ள்.) மாயவடிவங்களாக இரண்டு வானரங்களைப்படைத்து நீங்கள் தாவி, சிவபெருமான சக்கரத்தாற் பிளந்த சலந்தராசுரன் வடிவமாகிய உடற்றுண்டிரண்டையுங் கொண்டுவருவீர்களாக வென்றருளிச்செய்ய, அவ்விரண்டு வானரங்களும் அங்கெய்தி அவற்றைக்கொண்டுவந்தன. விருந்தையென்பாள் பார்த்தனள்.

கண்டனர் விருந்தை யென்பாள் கண்புடைத் தலறி மாழ்கி
விண்டன ளொருசு வெந்து வீழ்ந்தனள் வெந்தழ லுற்றாள்
கொண்டவெந் துயரக்கோ யெல்லை கண்டிலள் குழைவ தானு
டண்டவி லருந்த வத்தோர் பணிந்தனள் சரணம் போற்றி.

(இ - ள்.) விருந்தை யென்பாள் பார்த்துக் கண்களைப் பொத்திக்கொண்டு கூச்சலிட்டுப் புலம்பி மனம் புண்ணாகிவெந்து வீழ்ந்து துக்கிப்பாளாயினள். தானெய்திய துயரத்திற்கு ஓரளவு காணாதவளாகியுருகி, குறைதலில்லாத அருந்தவம் புரிந்த முனிவரைத் திருவடிகளில் வணங்கித் துதித்தனள். எ - று. (௯)

ஆருயிர் கொழுநற் போக்கி யாவிகொண் டிருக்க மாட்டேன்
வார்குழ லவர்க்கு நீங்கா மங்கலப் பிச்சை நல்கி
னோதவ மதனமே லுண்டோ வாதுணர்ந் தரவோ யீங்கெ
னோகெழு துணைவ னாவி தருகென விரந்து வீழ்ந்தாள்.

(இ - ள்) அரிய பிராண நாயகனைப் போகவிட்டு உயிரைச் சுமந்திருக்க மாட்டேன். நெடிய கூந்தலையுடைய மங்கையருக்கு அழியாத மாங்கல்யபிட்சை கொடுத்தால் அதனமேம்பட்ட தவமொன்றுள்ளதோ? முனிவரே! அதையறிந்து அடியாளது அழகுமிகுந்த கணவனுயிரை யெழுப்பித் தருகவென்று பிரார்த்தித்துப் பணிந்தாள் எ - று. (௧௦)

ஆயவ ளுருவ நோக்கி யநங்க நுகர வேண்டி
மாயவ னவனற் றூக்கை புகுந்தவன் வடிவு தாங்கிச்
சேயநா ளவள்பாற் காமச் செருக்கொடு மயக்க முற்றுன
பாயதிரைப் பரவை ஞாலத் திதிமுறை பார்த்தி லானே.

(இ - ள்.) திருமால் அவ்விருந்தையின் உருவத்தைப் பார்த்து அவ்வின்பத்தையனுபவிக்க வேண்டி, அச்சலந்தரன் வடிவாகிய களேபரத்திற் பிரவேசித்து அவனுருவேற்று வெகுகாலம் அவ்விருந்தையிடம் காமச்செருக்கோடு மயங்கியிருந்தனர். பரவிய அலைகளையுடைய கடல்சூழ்ந்த பூமியில், தமது [ந்தி]காக்குந் தொழின் முறையைக் கவனித்தாரில்லை. எ - று. (௧௧)

அனையவ ளிளமென் கொங்கை யணிநல நுகரு மந்நாட்
புனைமலர்த் தவிசின் மாயோன் கண்படை பொருந்துங் காலை
வினைபுரி மாயம் போக மரகத வெற்பி னோங்கிச்
சினவுகைத் திகிரி சங்கிற் றுயிலவன் றெரியக் கண்டாள்.

(இ - ள்.) திருமால் அவ்விருந்தையின் இளமைதங்கிய மெல்லிய குசங்களின் அழகிய இன்பத்தையநுபவித்திருக்கும் அக்காலத்தில், ஒருநாள் அலங்கரிக்கின்ற புஷ்பசயனத்தில் துயில்புரியும் பொழுது இச்செயல் புரிந்த மாயமானது நீங்க, மரகதமலைபோலோங்கிக் கைகளிற் கோபிக்கின்ற சக்ராயுதமும் சங்கமும் விளங்குவனவாகத் தோன்றப் பார்த்தாள். எ - று. (௧௨)

ஆவென வரற்றி யெங்கோ னல்லனென் றலறிப் பாய்ந்து
வேவழற் புகுந்து மாண்டாள் விரைநறுந் துளவத் தண்ணல்
பூவையங் குதலைச் செவ்வாய் விருந்தைபாற் புந்தி போக்கி
வாவிரும் புலங்கள் வேறாய்க் காமத்தான் மயக்கங் கொண்டான்.

(இ - ள்.) ஆவென்றலறி, எமதுகணவ னல்லனென்றிணைந்துகொண்டு எரி கினற அக்கினியிற் பாயந்து பிரவேசித்து விருந்தை யிறந்தனள். மணந்தங்கிய நலல துளசிமாலைதரிதத திருமால நாகணவாயப் புள்ளைப்போன்ற அழகிய குத லைச்சொலலேயுஞ் செவவிய வாயையுமுடைய விருந்தையினிடததே மனதைச்செ லுததி, தாவுகினற ஐமபுலஙகளும வேறுபட்டுக காமவிச்சையான் மயஙகியிருந தனா. எ - று. (கங)

ஆங்கவ ளடலைப் பூழ்தி புரண்டனன மாய னநநாட்
டேங்குநீ ருலகக காவ லொழிநதது செழுநதோட டமபொற
பூஙகமழ் முளரி மேலோன முதலினோா கயிலை புககா
ரீஙகிவன றனமை கூறி யிரநதனா வழிபட டேததி.

(இ - ள்.) திருமால் அவ்விருநதையின் சாம்பற்புழுதியிற் புரணடனர். அப் பொழுது கடலசூழ்நத உலகமானது காவறறனமை நீஙகியது. செழுமை தஙகிய இதழ்களையுடைய அழகிய மணநதஙகிய பொற்றாமரையில வீற்றிருககுந திரு மால் முதலாயினோா திருககைலாயகிரியை யடைநது வழிபாடு புரிநது இததிரு மாலின் செயலை விணணப்பிதது யாசிததாாகள. எ - று. (கச)

பமபுநீாச சடிலப பெமமான் பணிமொழிப பவளச செவவா
யமபிகை வதன நோகக வருமபிய வதன வோவை
யுமபரி னொருவித தெய்த வெயாவொடு முகிரின வாஙகி
நமபா னளிததான் றெய்வ நான்முகக கடவு டனபால்.

(இ - ள்) பெருகுகின்ற கஙகாசலததையணிநத சடையையுடைய சிவபெரு மான, மெலலிய சொலலேயும பவளமபோற் செவநத வாயையுமுடைய உமா பிராட்டியாா திருமுகததை நோகக, அருமபிய முகவோவையின மீது ஒருவிதை யுணடாக, நமது சிவபெருமான அதனை வெயாவுடன திருநகததினு லெடுதது, தெயவீகநதஙகிய நானமுகனுகிய பிரமனிடத்திற் கொடுததனா எ - று. (கரு)

அங்குர மதனைக் குல்லை யலஙகலோற களிததி யெனனச
செஙகணமா லவறகுக கொணடு தநதனன் றிசைமு கததோ
னஙகண்மா லதனை வாஙகி யடலையி னடுவி னுயததான்
பொங்குபூங் குழலி பசசைத துளவெனப போதா நினறுள.

(இ - ள்) அவ்விதையினைத துளவமாலையணிநத திருமாலுககுக கொடுகக வெனறு கட்டளையிட, பிரமதேவன அஙஙனமே அதனைக கொணாநது சிவநத கணகளையுடைய திருமாலுககுககொடுததனா. திருமாலோ அதனை வாஙகிச் சாம் பரினிடையி லிட்டனர். விளஙகுகின்ற மலரணிநத கூநதலையுடைய விருநதை துள சியெனறு சொல்லும்படி வளரா நின்றனள். எ - று. (கசு)

அடலையின் றெழுநது போநத விருநதைபா லுள்ள மாககித
தடமுலை முயஙகிப போநது கிடநதனன் சஙக மேநதி
மடவரற பிரிவ தோரா னஃதுணா மலாபபூங கோதை
நெடுஙில மடநதை யினனோ நெடடுயிாப் பெறிவ தானா.

(இ - ள்.) சங்கேநதிய திருமால் அம்மடநதை பிரிநததை யுணராமல், சாம பரினின்று பிறநது தோன்றிய விருநதையினிடத்தே மனதைச்செலுத்தி, பரநத

குசங்களைத் தழுவிக்கொண்டிருந்தனர். அதனை யறிந்த அழகிய மலர்மடந்தையாகிய இலக்குமி, நெடிய நிலமடந்தையாகிய பூமிதேவி இருவரும் பெருமூச்சு விடுவதானார்கள். எ-று (௧௭)

துவாபர யுகத்துங் காம வேட்கையிற் றுயரங் கூரு
மவாவொடு மயங்கி யீரெண் ணாயிர மகளி ரோடுந்
தவாநல னுகர்ந்தா னெம்மைத் தணந்துபோயத் தமியே மென்று
முவாமதி யொழிந்த வாறே நன்னல முருகி னேமால்.

(இ - ள்) துவாபர யுகத்திலேயும் காமவிருப்பத்தால் துயரமிகும் ஆசையோடு மயக்கமடைந்து பதினாறாயிரங் கோபிகைகளுடன் நீங்காதகாமவின்ப மனுபவித்தான். எங்களைப் பிரிந்துபோயத் தமியேமாகி, பூரணிமாகாலத்திற் சந்திரனை நீங்கிய வகையாக உள்ளமுருகி நிற்கின்றோம். எ - று. (௧௮)

சிந்தனை திரிந்து வேறாய்த் தெருமரு நெடுமா னம்பால்
வந்தருள் புரக்க வேண்டும் வருதியென் றவனி யோடு
மெந்தையா ரூரி னெய்தி யிருந்தன ளுகமலப் பேதை
தந்தமி லுவகை யோடு மருச்சனை தருவ தானார்.

(இ-ள்) மனந்திரிந்து வேறுபட்டு மயக்கங்கொண்ட திருநெடுமாலானவர், நம்மிடத்தில் திரும்பித் திருவருள் புரியவேண்டும். நீயும்வருகவென்று பூமிதேவியுடன், செந்தாமரையில் வசிக்கும் இலக்குமிதேவி எமது தந்தையாகிய சிவபெருமான வீற்றிருக்குந் திருவாரூரையடைந்து முடிவில்லாத சந்தோஷத்தோடு வீற்றிருந்து (இருவரும்) அருச்சிப்பாரானார்கள். எ - று. (௧௯)

அரனடிக் கமலம் பூசித் தன்பினன் புருக நின்று
பரவினா மங்க ளென்னு மாயிரம் பரிவி னோதி
விரைநறுங் கமல மன்ன கரத்தினார் விருப்பி னின்றார்
புரமெரித் தவனு மன்னோர்க் கெதிர்ந்தனன் புலப்ப நின்றான்.

(இ - ள்.) சிவபெருமான் திருவடித்தாமரைகளை யர்ச்சனைசெய்து அன்புடன் எலும்புருக விருந்து திருநாமங்களென்று சொல்லும் ஆயிரத்தினையுமாசையோடு தியானித்துத் துதிசெய்து, மணந்தங்கிய நல்ல செந்தாமரைமலர்போன்ற கையையுடைய அம்மங்கையர் (இலக்குமி பூமிதேவி) இருவரும் விருப்புற்றிருந்தார்கள். திரிபுரதகனராகிய சிவபெருமானும் அவர்கட்குக் கட்புலனுக்குக் காட்சி தந்தருளினார். எ - று. (௨௦)

கருதிய தென்னை யென்பா லருச்சனைக் கடன்க ளாற்றி
யுருகிய தென்னை யென்னாத் திருவரு ளுவந்து கேட்பத்
திருமக ளவனிப் பேதை யவளொடுஞ் செங்கை கூப்பி
யிருங்கில வதனங் கோட்டி நின்றன ளினைய சொல்வாள்.

(இ - ள்.) சிவபெருமான் திருவருள் சுரந்து, நீங்கள் எம்மிடத்தில் விரும்பியதியாது? அருச்சனை முதலியன புரிந்து மனமுருகியது யாதுகாரணம்? என்று வினவியருள, இலக்குமிதேவி யானவள் பூமிதேவியோடும் சிவந்த கரங்களைக் குவித்துப் பெரிய நிலமுகமாக முகத்தைவளைத்துக்கொண்டு நின்று இவ்வார்த்தைகளை விண்ணப்பிப்பாளாயினள். எ - று. (௨௧)

ஆருயிர்த் தொகுதி காட்டி யைந்தொழிற் குரியை யாகி
யோருயிர்க் கொருவ னாகி யமர்ந்தரு ளொருவ மற்றை
வாரியுட் டுயிலு மாயோன் விருந்தையான் மயங்கப் பெற்றுன்
சோர்வுறத் தணந்தா னெம்மை யத்துயர் துடைத்தி யென்றுள்.

(இ - ள்.) அரிய உயிர்த்தொகைகளைச் சிருஷ்டித்து, பஞ்சகிருத்தியங் கட்கும் உரியவராகி, ஒப்பற்ற உயிருக்கும் ஒருவனாகி வீற்றிருக்கின்ற ஏகனாகிய சிவ பெருமானே! திருப்பாற் கடலில் அறிதுயிலபுரியுந் திருமால் விருந்தையென்பவ ளால் மயக்கப் பெற்றவராகி, எங்களைச் சோர்வெய்தும்படி பிரிந்தனர் (ஆத லின்) அத்துன்பத்தை நீக்கியருள வேண்டுமென்று கூறினள். எ - று. (உஉ)

அவ்வர மவர்க்கு நல்கி யளித்தன னமல னம்பொற்
செவ்விய டன்னை யீன்ற பாற்கட னகரஞ் சேர்ந்தா
ளவ்வமி லவனிப் பூவை மேருவை குண்டஞ் செய்தி
வெவ்வடு துயர் நீங்கி யிருந்தனள் விருப்பி னனாள்.

(இ - ள்.) மலரகிதராகிய சிவபெருமான் அவர்கட்கு அவ்வரத்தினை யநுக்கி ரகித்தனர். அழகிய இலக்குமிதேவி, தன்னைப்பெற்ற திருப்பாற்கடல் நகரத்தை யடைந்தனள். அழகினையிழந்த பூமிதேவியானவள் மகமேருவிலுள்ள வைகுண்ட நகரமடைந்து துயரமகன்று விருப்பத்துடன் வீற்றிருந்தனள். எ - று (உங)

வளர்திரைப் பரவை துஞ்சு மாயவன் விருந்தை யென்னு
மிளைநுசுப் பணங்க ளைத் துறந்தன னெழுந்து சென்றுன்
வளங்கா வைகுண் டத்து மாணிழை யவரைக் காணு
னுலைதிரை கொழித்து வீங்கு பாற்கட லகவை யுற்றுன்

(இ - ள்.) வளர்கின்ற அலையையுடைய திருப்பாற்கடலிற் றுயிலும் திரு மால் விருந்தை யென்னும் நுண்ணிய இடையையுடைய மங்கையினையைவிட்டு நீங்கி யெழுந்துபோயினர். வளந்தங்கிய வைகுண்ட நகரத்திலே மாட்சிபெற்ற ஆபர ணங்களணிந்த மனைவிமாரைக்காணப் பெருதவராய், சேற்றினை அலைகள் கொ ழித்துப் பெருக்குந் திருப்பாற்கடலையடைந்தனர். எ - று. (உச)

வரிந்தகச் சறுத்து வீங்கும் வனமுலைக் கமலை தன்பாற்
புரிந்தபே ரன்பி னேடும் பொலங்குழை போதி யென்றுன்
பிரிந்திடா வரம்பெற் றனற்ப பெருநில மடந்தை யோடும்
பரிந்துறின வேடத்து வைகே னெனறனள் பதுமப் பாவை.

(இ - ள்.) இறுக்கிய கச்சினைக்கிழித்துப் பூரித்த அழகிய தனங்களை யுடைய திருமகளிடத்திற் சென்று, தமக்குண்டாகிய பேரன்புடன் பொன்னாலாகிய குண்டல மணிந்தவளே! வருகவென்றனர். செந்தாமரையில் வசிக்குந் திருமகள், பிரியப்பெருத வரத்தினைப் பெற்றலலாமல், பெரிய பூமிதேவியோடும் உம்மிடத் தில் ஆசைகொண்டு வசிக்கமாட்டேனென்று மறுத்தனள். எ - று (உரு)

கணங்குழை யுரைத்த மாற்ற மயிர்த்தனன் கமலக் கண்ண
னணங்கரா பிலைந்த வேணி யரனடி யருச்சித்த தன்றி
யிணங்கில ரிவரென் றெண்ணிக் காஞ்சிமா நகர மெய்தி
வணங்கினன் கயிலைப் பெம்மான் பரிபுர மலர்த்தாள் போற்றி.

(இ - ள்.) இலக்குமிதேவி யிசைத்த சொல்லினால் மனம் வருந்தியவராகிய திருமால், துன்பஞ் செய்யுஞ் சாப்பங்களை யணிந்த சடையையுடைய சிவபெருமானை யருச்சித்தாலல்லாமல், இம்மங்கைய ரிருவரும் நமக்கு இணக்கமாகாரென்று கருதி, சிறந்த காஞ்சிநகரமடைந்து திருக்கைலாய நாதராகிய சிவபெருமானுடைய சிலம்பணிந்த மலர்போன்ற பாதங்களை வணங்கித் துதிசெய்து. எ-று.

அருச்சனை யயருந் தோறு மாயிரந் திருநா மங்கள்
விரித்துதினை நிரந்து வாழ்த்தி வெள்ளிவெண் கயிலை நின்றும்
புரித்தவார் சடில மோலி வெள்விடை யுகைத்துப் போந்தான்
றெரித்தநான் மறைகொண் டேத்தி வழுத்தினன் செங்கண் மாயன்

(இ - ள்.) பூசிக்கும் பொழுதெல்லாம் ஆயிரந் திருநாமங்களையும் சொல்லித் துதித்து நின்று யாசித்து வாழ்த்த, வெள்ளி மலையாகிய திருக்கைலையினின்றும், புரிந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான் தாவளயமான இடபவாகனரூடராய் எழுந்தருளினார். சிவந்த தாமரைக் கண்ணையுடைய திருமால் நான்குவேதங்களையுங் கொண்டு துதிசெய்து வணங்கினார். எ - று. (உஎ)

நினைத்தநின் கருத்தின் வேட்கை யென்னென நிமலன் கூற
நனைப்பணிக் கமலத் தாளு நானிலத் தவளு மின்னே
யெனைக்கருத் துணர்ந்து போத வேண்டினன் னிதுமற் றன்றி
முனைக்கடுந் திகிரி யீவா யென்றனன் முளரிக் கண்ணன்

(இ - ள்.) கருதிய நின் மனவிருப்பம் யாதென்று சிவபெருமான் வினவியருள, செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய திருமால், தேனொழுகிக் குளிர்ச்சி தங்கிய கமலாசனத்திலுள்ள திருமகளும் பூமிதேவியும் இப்பொழுதே என்னை மனதிற்கருதி யென்பால் வரவேண்டினேன். இதுவே யல்லாமல் போர் செய்தற்கேற்ற சக்கராயுதத்தையும் அடியேனுக்குத் தந்தருள்க வென்றனர். ()

வரங்களோ ரிரண்டு மீந்து மணிநெடுங் கயிலை புக்கான்
கரந்தைவார் சடையோ னீலக் காமழை கமலம் பூத்துப்
புரிந்தன வுருவ மாயோன் றனதுவை குண்டம் புக்கா
னிரந்தவால் வளைக்கை நல்லா ரிருவரந் நிலையிற் சென்றார்.

(இ - ள்.) கரந்தை மலரணிந்த நெடிய சடையையுடைய சிவபெருமான், அவ்விரு வரங்களையும் அநுக்கிரகித்து அழகிய நெடிய கைலயங்கிரியை யடைந்தனர் இப்பால், கரிய மேகமானது தாமரை மலர்களைப் பூத்து விளங்கினாற்போன்ற உருவத்தையுடைய திருமால் தமது வைகுண்ட பதவியை யெய்தினார். வரிசைப்பட்ட வெள்ளிய வளையலணிந்த கையையுடைய (இலக்குமி பூமிதேவி யென்னும்) மங்கைய ரிருவரும் அப்பொழுதே ஆங்கெய்தினார். எ - று. (உகூ)

அலங்குவால் வளைக்கை நல்லா ராயிர நாமத் தண்ணல்
சிலம்படி யருச்சித் தந்நாண் மாயனைச் சேரப் பெற்றார்
வலம்படு திகிரி யோனு மாங்கதன் மரபி னின்று
பொலங்குழை மகளிர் தண்ணென்ன புணர்முலை புணரப் பெற்றான்.

(இ - ள்.) ஒலிக்கின்ற வளையலணிந்த கையையுடைய இலக்குமிதேவி பூமிதேவியாகிய விருவர், சிவபெருமானைச் சகத்திர நாமங்களாற் சிலம்பணிந்த திரு

வடிகளை யர்ச்சித்து அக்காலத்தில் (தம்மைப் பிரிந்த) திருமாலை யடையப் பெற்றார்கள். வெற்றிபொருந்திய சக்கரத்தையுடைய திருமாலும் அச்சகத்திர நாமங்களின் அர்ச்சனையிலிருந்து அழகிய குண்டலமணிந்தமனைவிமார்களுடைய நெருங்கிய குசங்களைக் கலக்கப்பெற்றனர். எ - று. (கூo)

இலக்குமிபூமிதேவி சகத்திரநாமார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் கூசு-க்குத் திருவிருத்தம்.சககக

முப்பத்தேழாவது

# சிவார்ச்சனமான்மியச் சருக்கம்.

கலிநிலைத்துறை.

முன்னொர் காலத்து முழுமலர்ப் பீடிகை முதல்வ
னன்ன நாமங்க ளாயிரத் தொடுமருச்சித்து
நன்ன லத்தொடுஞ் சிறந்தகோ கன்னமா நகரிற்
பின்னல் வேணியன் றிருவுருப் பெறுஞ்சிறப் படைந்தான்.

(இ - ள்) பூர்வம் ஒருகாலத்திலே மலர்ந்த தாமரைமலர்ப் பீடத்திலெழுந்தருளிய பிரமதேவன், அத்தகைய ஆயிரந்திருநாமங்களால் அர்ச்சனைபுரிந்து, நல்ல நலங்களோடு மேம்பட்ட பெரியகோகன்னமென்னு நகரத்தில், பின்னலிட்ட சடையையுடைய சிவபெருமான் சாரூபத்தைப் பெய்தும் மேம்பாடடைந்தனன்.

கண்ணொ ராயிரக் கடவுளுங் கண்ணுத லவற்குத்
தண்ண றுமலர் சாத்தின னுங்கவை சாத்தி
வண்ண வாலவளைப் புலோமசை முகிண்முலை மருவி
விண்ணின் வந்தெழு கற்பக நீழலவீற் றிருந்தான்.

(இ - ள்.) ஆயிரங் கண்களைபெற்ற இந்திரனும், நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானுக்குக் குளிர்ச்சி பொருந்திய தேனொழுகுகின்ற மலர்களைச் சாத்தி, அத்திருநாமங்களா லர்ச்சித்து அழகிய வளையலணிந்த இந்திராணியின் கொங்கைருமபு போன்ற குசங்களைக்கலந்து ஆகாயமளாவி யுயர்ந்த கற்பகத்தருவின் நிழலில் அரசுவீற் றிருந்தனன். எ - று. (உ)

ஐய னுயிர நாமத்தி னருச்சனை புரிந்து
தெய்வ மாக்கதி யடைந்தவர்ச் செப்புவார் திரைநீர்
மொய்கொள் வேலைநுண் மணலெண் ணறிகுவர் முனிவீர்
நொய்ய சிந்தையே னளவையி னுடிக்கற் பாற்றே.

(இ - ள்) சிவபெருமானைச் சகத்திரநாமங்களால் அருச்சனை செய்துசிறந்த தெய்வகதியைப் பெற்றவர் தொகையைச்சொல்பவர்கள், அலைகள் பொருந்திய நீர் நிறைந்த சமுத்திரத்திலுள்ள நுட்பமாகிய மணலின் தொகையையும் கணக்கிட்டுத் தெரியவல்லவர்களாவார்கள். முனிவர்களே! அற்ப அறிவுடையேனது அளவினாற் சொல்லத் தக்கதோ? எ - று. (ங)

எட்டு மேறகொளு மாயிர மன்றிநூற் றெட்டுத்
தொட்ட றிநதமூ வெட்டிரண் டாறிவை தொகுககப்
பட்ட நாமஞசொற றரனடி யருசசனை பயிலவார்
கட்டு வாரசடை யெமபிரான கயிலைவீற றிருபபார.

(இ - ள.) ஆயிரததெட்டு, அலலாமலும நூறறெட்டு, இருபதது நானகு, பன்னிரணடு ஆகிய இவை அவவாயிரத தெட்டினினறும தொகுககபபட்ட திருநாமஙகளாம. அவறறைச் சபிததுககொணடு சிவபெருமான திருவடிகளையருச்சித தவாகள, கட்டிய நீணட சடையையுடைய எமது சிவபெருமான வீற்றிருந தருளுந திருக்கைலாயமலையில வசிபபாாகள. எ - று. (௪)

உரைதத நாமஞசொற றருசசனை புரிகுவோ ருவபபின
விரைதத பூவினுற புலவினுல விலவததி னுலு
மிரைதத மெனபுனற கழுவுபச சரிசிபச சிலையா
னிறைதத வாாசடைப பரமனைத தொழுவது நெறியால.

(இ - ள்.) மேலே சொலலிய தொகையுடைய திருநாமஙகளைச சொல்லி யருச்சிப்பவாகள சநதோஷததோடு மணநதஙகிய மலாகளாலும அறுகமபுலலினுலும விலவததினுலும ஒலிககினற மெலலிய நீரிற சுததிசெயத பச்சரிசியினுலும பச்சிலையாலும, வரிசையாக நீணட சடையையுடைய சிவபெருமானைப பணிவது முறையாகும். எ - று. (௫)

சொறற நூறபடி யருசசனைக கிரியையிற றெருகுததன
மறறை மானத பூசனை மனதசொடு மதிதத
லுறற பூசனை யிரணடுள வனனவை யுரைபபிற
பொறற லததுளோா கணணுறப புரிவதோா பூசை.

(இ - ள.) சொலலிய நூன்முறையாக அருச்சனையைக கிரியையாற்செய்தல் மாநதபூசை மனதாற செயதல ஆகப்பொருநதிய பூசைகள இருவகையாக உளளன. அவறறைச் சொலலுமிடததில, அழகிய உலகிலுளளாா கணணுககுப்பொருநதுமபடி செயவது ஒருவகைப பூசை. எ - று. (௬)

அனைய பூசனைக கிரியையின மெய்யயாந திருந்து
நினைய லாவது மானத பூசனை நிமலன்
புனைய வேண்டுநை வேததிய முதலின பொருததி
வினையம யாவையு மனததினு லியறறுவா மேலோா.

(இ - ள.) அததகைய கிரியா பூசைபோல மெயமறநதிருநது சிநதிததலாவது மாநதபூசை. மலரகிதராகிய சிவபெருமான அணியவேணடிய நைவேததிய முதலியனவற்றை யமைதது, தொணடுகளை யெலலாம தமது மனதினுலே செயபவாமேலோரெனப்படுவா. எ - று. (எ)

மனததி னேத்திய பூசனை வரனமுறை மாகக
னினைதத போதுமாங காலைமா லையினுமா நினைதத
வனைதது மீசனுக காககவெந தலததினு மாமாற்
புனைதத வாாசடைப புனிதாகாண மானத பூசை.

(இ - ள்.) மனத்தினாலாக்கிய பூசையானது, கிரமப்படி மாந்தர்கள் கருதிய போதங் கைகூடும். காலைமாலைகளிலும் ஆகும் கருதிய எல்லா (அபிஷேக நிவேதன உபசாராதிகளு)ம் சிவபெருமானுக்குச் சமர்ப்பிக்க எல்லா விடங்களிலுஞ் சாதிக்கப்படும். கட்டிய நெடிய சடையையுடைய பெரியோராற் காணத்தக்கது மானதபூசை. எ - று. (அ)

உரு சிந்தையின் மானத பூசனை யுஞற்றிக
கருதி வேண்டின பெறுகுவர் கடைமுறை கயிலைப்
பெருவ ளம்பெறப் பெறுகுவ ரீங்கிது பேசின
மருவி நித்தலும் வழுக்குறா தியற்றுதன் மாபே.

(இ - ள்) உருகிய மனத்துடன் மானத பூசையைச்செய்து, நினைத்து விரும்பியவற்றையடைவார்கள். இறுதியில் திருக்கைலாயகிரியிற் பெருவளப்பங்களையடையப்பெறுவார்கள் இதனைப்பற்றிச்சொல்லுமிடத்தில் நாடோறும்மனம் பொருந்தி நியதி தவறாமல் மானத பூசையையியற்றுதல் முறையாகும். எ - று

பரவை மாநிலத் துயிர்க்கெலாங் குருவெனப் பட்ட
வரன மர்ந்திடு மிலிங்கங்கள் பலவித மவற்றிற்
குரவ ரேத்தறத் தோற்றின கொழுமபுயல் வண்ணன்
மரபி னுறபிர திட்டையின் மாநிலத் தமர்ந்த

(இ - ள்.) கடல்சூழ்ந்த பெரியபூமியில் உயிர்கட்கெல்லாங் குருவென்றுசொல்லப்பட்ட சிவபெருமான் பொருந்தியுள்ள சிவலிங்கங்கள் பலவகைப்பட்டன. அவ்விலிங்கங்களில், குரவர்கள் துதிசெய்யும்படி முளைத்தன, மதர்த்தமேக வண்ணராகிய திருமால் முறைப்படி உலகத்திற்பொருந்தப் பிரதிட்டைசெய்தன எ - று. (கூ0)

முனிவ ரார்ப்பிர திட்டையி னமர்ந்தன முயன்ற
மனித ராறபிர திட்டையி னமர்ந்தன மற்றைப்
புனிதர் விஞ்சைய ரரக்கர்வா ளசுரர்கிம் புருட
ரனைய ரார்ப்பிர திட்டையி னமர்ந்தன விலிங்கம்.

(இ - ள.) முனிவராற் பிரதிஷ்டைசெய்யப்பட்டு விளங்குவன, முயற்சி செய்த மனிதர்களாற பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளன, ஏனைய புனிதர்கள் வித்தியாதரர்கள் இராக்கதர்கள் வாளேந்திய அசுரர்கள் கிம்புருடர்கள் முதலிய அத்தகையினராற் பிரதிஷ்டைசெய்யப்பட்டனவாகி இலிங்கங்கள் விளங்கும்.

சயம்பு திவ்விய மாரிட மானிடந் தருமபே
ரியம்பி யவ்வழி நிறைந்தன வீங்கிவை யுணரக்
கயங்க டிந்துரித் தார்த்தருள் கணனுத லவற்றின்
முயங்கு சத்தியோ டுறைகுவ ருயினு மொழிவாம்.

(இ - ள) (தாமேதோன்றிய) சயம்புலிங்கங்கள், (தேவர்கள் பிரதிஷ்டித்த) திவ்வியலிங்கங்கள், (இருஷிகளாற பிரதிட்டைபுரிந்த) ஆரிடலிங்கங்கள், (மாநுடர்களமைத்த) மாநுஷலிங்கங்கள் என்னுங் காரணப்பெயரெய்தியெங்கும் நிறைந்துள்ளன கயாசுரனென்னும் யானையைக் கோபித்து உரித்தணிந்த சிவபெருமான் இவ்விலிங்கங்களில் தமது சத்தியோடு வீற்றிருப்பார். ஆனாலும் சொல்லுகின்றோம். எ - று. (கூஉ)

எழுத ருந்தனிப பவித்திர லிங்கத்திற சயனம்
பழுதி லிவவியத திருப்புமற றரிடப பகுபபி
னெழுகு வாசசடைப பணணவ னிறறனமற றுலகந
தொழுத மானிடம விநோதமற றிவைதொகுத துரைககேம.

(இ - ள்.) தொஙகுகின்ற நெடிய சடையையுடைய சிவபெருமான்எழுதற்கரிய ஒபபற்ற பரிசுத்தமான சயமபுலிஙகத்திற சயனமும், குற்றமிலலாத திவயலிஙகத்திலிருத்தலும, மற்றையபகுப்பாகிய ஆரிஷலிஙகத்தில நிற்றலும், மற்றவுலகினாவணஙகிய மானுஷலிஙகத்தில விநோதமுமாக விளஙகுவா. இவறறைத தொகுத்துச சொலலுவோம. எ - று. (௧௩)

ஆரு யிர்தொகை புரநதுறு மரசர்தங் கோயி
லோரி டததினிற றுயிலவாமற றோரிடத திருப்பா
தேரின மறறையோ ரிடததினின றுலவுவா செல்லா
நேரி னோரிடங களிவிளைத தகலவா நெறிபோல.

(இ - ள்.) அரிய வுயிாதொகைகளைககாவலபுரியும மனனவா, தமதுமாளிகையில ஓா புறததிற சயனிப்பாாகள. மற்றோரிடததில வீறறிருப்பாாகள. ஆலோசிககுமிடததில, பிறிதோரிடததில நினறுலாவுவாாகள. செனறு நேரிட்டால பினனுமோரிடத்திற களிவிளையாடி நீஙகுவாாகள. அமமுறைபோல.

விதது மாலுமொத தெஙகணு நிறைநதிடும விமலன்
சததி யோடுமற றிலிஙகததுத தனிததனித தழுவி
யொதது நின்றவா றெனனைகொ லெனபிரே லுரைககே
முததி யாருயிாத தொகைககளித தருளுவான முயனறு.

(இ - ள்) விதையும மரமும்போல எஙகும வியாபிததுளள சிவபெருமான் தமது (காருணய) சததியோடு அவவிலிஙகஙகளில தனிததனிககலநது விளஙகும வகையாது காரணமோ? எனவினவுவீராயிற்சொலலுவோம. அரியவுயிாதொகைகளுககு முயறசிதது மோட்சததைககொடுததருளும்படி. எ - று. (௧௪)

எணணு நெய்யுமொத தெஙகணு நிறைநதரு ளிவனைத
திண்ணெ டுமபுவி யிலிஙகததி னருசசனை செயவோா
நண்ண ருஙகதி நணணுவா சததிய நவினறே
மொணணெ டுஞசடை முனிவிரகா ளுண்மையீ துண்மை.

(இ - ள்) எளளும நெயயும போனறு எவவிடததும பூரணமாக விளஙகும் இச்சிவபெருமானை வலிய விசாலமான வுலகததிற சிவலிஙககுறியினிடததிலருச்சிததவாக ளடைதற்கரிய பதவிகளை யடைவாாகள சததியததைச் சொனனோம் ஒளிபொருநதிய நெடிய சடையையுடைய முனிவர்களே! இது சததியம சததியம். எ - று. (௧௫)

உரைதத சூதனுற் கேட்டருண முனிவரருவகை
யிரைதத சிநதைய ராகினா றெமமனோர்க் கெலலாந
திரைபபு னறசடை யெம்பிரா னருசசனைத திறததை
வரைதது ணாத்தின போலுணாத தினையெனு மகிழ்ந்தார்.

(இ - ள்.) இவ்வாறு சொல்லிய சூதமுனிவராற் கேட்டருளிய நைமிசாரணிய முனிவர்கள் சந்தோஷமதிகரித்த மனமுடையவர்களாக நின்று, எம்மவர்களெல்லாருக்கும் அலைகள் பொருந்திய கங்காசலத்தையணிந்த சடையையுடைய எமது சிவபெருமான் அருச்சனையின் மகிமையை அளவிட்டு நன்குணர்த்தியருளினீர் என்று சந்தோஷித்தார்கள். எ - று. (கஎ)

சிவார்ச்சனை மான்மியச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகச் சருக்கம் கூஎ-க்குத் திருவிருத்தம் - சகஙச.

---

## முப்பத்தெட்டாவது
## குருமான்மியச் சருக்கம்.

---

குரவ னின்னவ னென்பதோன் றுணர்ந்திலங் குறைநீ
ரரவ வார்சடை யண்ணலோ சக்கரத் தவனோ
வரச ரோருகத் தொருவனோ தந்தையோ மறறோ
திரமு ணர்ந்திலே மன்பதை யின்னமுந் தெரியா.

(இ - ள்.) மாந்தர்களின்னும் உணரமாட்டாத குரவன் இவனென்பதொன்றினை யாங்களறிந்திலோம் ஒலிக்கின்ற கங்கை நீரையும் சாப்பத்தையு மணிந்த நெடிய சடையையுடைய சிவபெருமானோ, சுதரிசனமென்னுஞ் சக்கரத்தைத் தாங்கிய திருமாலோ, சிறந்த [சரோருகம்] தாமரையில் வசிக்கும் ஒப்பற்றபிரமதேவனோ, பிதாவோ, வேறுயாரோ? அதன் உண்மையறியோம். எ - று. (க)

அன்ன தன்மையை யின்னதென் றருளுதி யைய
தொன்னி லைக்குரு வரம்பினின் றருச்சனை தொகுப்பா
னென்ன மாதவ ரியம்பலு மென்னையா ளுடையான்
பன்ன ருந்தவக் குரவர்தொன் மரபினைப் பகர்வான்.

(இ - ள்.) ஐயனே! பழமை நிலைமையாகிய குருவை வரம்பின்படி யிருந்து அருச்சனை செய்யும்படி, அத்தகைய குருவின் தன்மையை இஃதென்றருள செய்ய வேண்டுமென்று பெருந்தவமுடைய முனிவர்கள் கேட்கவும், என்னை ஆளாகவுடையவர் துதித்தற்கரிய சிறந்த குரவரது பழமையாகிய மரபினை யெடுத்துச் சொல்வாராயினர். எ - று. (உ)

தேவர் கின்னர ரியக்கர்கந் தருவர்கிம் புருட
ரோவ ருந்திறற கணத்தர்மற் றியோகிக ளுரகர்
பேவு நால்வகை வருணத்தா விஞ்சைய ரொழியாப்
பாவ ராயினுங் குருமுகப் படுவது வேண்டும்.

(இ - ள்) தேவர்கள், கின்னரர்கள், இயக்கர்கள், கந்தர்வர்கள், கிம்புருஷர்கள், கெடுதற்கரிய வல்லபமுடைய கணத்தவர்கள், யோகிகள், நாகர்கள், பொருந்திய நால்வகை வருணத்தார்கள், வித்தியாதரர்கள், நீங்காத பாவமுடையவர்களானாலுங் குருமுகத்தி லெய்துவதாவசியகம். எ - று. (ங)

நெற்றி யொள்ளெரி தூறந்துமன் மதனுட லீற்றுங
கற்றை வார்சடை யெமபிரான கயிலைவீற் றிருந்து
மற்றை யனபதை யாவுக்குந் திருவருள் வழங்கி
யுற்றி ரங்கிய காலையி னற்றமுற் றுணாந்தாா.

(இ - ள்.) திருநெற்றியினின்று மொளிபொருந்திய அக்கினியைச்செலுத்தி மனமதன் உடலினைச் சாமபராக்கிய தொகுதியாகிய நீணடசடையை யுடைய எமது சிவபெருமான திருக்கைலாயகிரியில வீற்றிருந்து,மாந்தாமுதலிய எலலோருக்குந் திருவருள சுரந்து அநுக்கிரகித்தருளிய காலத்தில், நல்லசமய மறிந்து உணாந்தவர்களாய். எ - று. (௪)

இமய மீன்றரு ளெம்பெரு மாட்டியீன் றெடுத்த
குமர னைங்கரக் குழவிமற் றரிமுதற் குணிக்கு
மமரா நந்தியோ டருந்தவத் தலைவாகள யாருஞ்
சமனை வென்றடி திருக்கழன் முறைமுறை தாழ்ந்தாா.

(இ - ள்.) இமாசல மன்னன் தந்தருளிய எமது உமாபிராட்டியாா பெற்ற குமாரக்கடவுளும், ஐந்து திருக்கரங்களையுடைய மூத்த பிள்ளையாரும, திருமால முதலாகச் சொல்லபபட்ட தேவாகளும், திருநந்தி தேவரோடு அருந்தவமபுரிந்த தலைவாகளு மாகிய யாவரும், இயமனைச்சயித்து வென்ற சிவபெருமானது திருவடிகளில் முறைமுறையாகப் பணிந்தாாகள். எ - று. (௫)

வெள்ள மீககொளும பிரளயத் தொடுமலா வேத
னுளளி டபபடு தேவாமற் றியாவரு மொடுங்கி
நளளி ருடபெயா காலையிற் றோன்றுவ ரதுநா
ளுளள றீாத்துப தேசமுற் றளித்தனை யெந்தாய்.

(இ - ள் ) வெள்ளமானது மேலோங்கியெழும் பிரளயகாலத்துடன பிரமதேவன உளளிடப்பட்ட தேவாகள முதலிய வெலலோரும இலயமெய்தி, அப்பேரிருளானது நீங்கிய விடியற்காலையிற் சனிப்பாாகள. அககாலத்தில் எமதுதாய் போலவாராகிய சிவபெருமானே! தேவரீா அவாகள் இழிந்தகைமையை விலககி உபதேசஞ் செய்து காத்தருளினீா. எ - று. (௬)

குரவ னீயெமக் கருமறைக் குலமுழு துணாத்தித்
தரவி ருமபினே மெனபது திருச்செவி சாத்தி
யரவ வார்சடை யண்ணலக் கயிலையி னருகு
பரவு நீண்முடிப பனிமலாப பருப்பத யடைந்தான.

(இ - ள் ) தேவரீரே எமக்கு ஆசிரியா. அரியவேதத்தின் தொகுதி முழுவதையுந் தெரிவித்துக்கொடுக்க அவாவுடையோமெனக் கூறியதை, சாப்பமணிந்த சடையினராகிய சிவபெருமான் திருச்செவியிலேற்று, அக்கைலாயகிரிக் கருகேயுளள, துதிக்கத்தக்க நீணடகொடுமுடியையுடைய பனிமிகுந்த இமாசலத்தை யடைந்தனா. எ - று. (௭)

சிகர நீண்முடித் தெக்கிண மூாத்தமொன் றெடுத்துத்
தகர வார்குழ லுமைக்குமவேன் முருகற்குந் தந்திப்
புகர்மு கத்தவன் றனக்குமோா வடுகற்கும புகாவா
ணிகரில் பத்திரன் றனக்குமன் றருளின னிமலன்.

(இ - ள்.) மலையினுயர்ந்த சிகரத்தில் சிவபெருமான் ஒருதக்ஷிணாமூர்த்தமாகி, மயிர்ச்சாந்தணிந்த நீண்டகூந்தலையுடைய உமாதேவியாருக்கும் முருகவேளுக்கும் புள்ளிகள் வாய்ந்த யானைமுகமுடைய விநாயகப் பெருமானுக்கும் ஒப்பற்ற வைரவக்கடவுளுக்கும் வாட்போரில் ஒப்பில்லாத வீரபத்திர சுவாமிக்கும் அக்காலத்தில் அநுக்கிரகித்தருளினார். எ - று. (அ)

பொய்யில் கேள்வியோர்க் குரியவா மத்தனிப் பொருட்பி
லைய னவ்வுரு மூர்த்தத்தி னினிதெழுந் தருளி
வெய்ய திண்டிறற் காளர்பிங் கிருடிமெய்ப் பொருளாற்
றுய்ய சோமநந் திக்குமற் றுணர்த்தினன் றூய்மை

(இ - ள்.) பொய்மையில்லாத நூற்கேள்வியை யுடையவர்களுக்கே உரித்தாகிய அவ்வொப்பற்ற மலையிலிருந்து சிவபெருமான் அந்தத் தக்ஷிணாமூர்த்தத்திலே இனிதாக வெழுந்தருளியிருந்து வெவ்விய பெருவல்லபமுடைய மாகாளர் பிருங்கிமுனிவர் உண்மைப்பொருளாற் புனிதமாகிய சோமநந்தி ஆகிய இவர்கட்கெல்லாம் அத்தூய்மைப்பொருளைமுழுதுந் தெளிவித்தருளினார் எ - று. (கூ)

கோள மால்வரை யுச்சியங் குவட்டெழுந் தருளி
வாள ராவணை யவனுக்கு மலரயன் றனக்கு
நீளி ருஞ்சினைக் கற்பக நாடற்கு நிமலன்
மூள நின்றெழுங் கருணையி னருளினன் முறையால்.

(இ - ள்.) கோளவடிவமாகிய பெரியமலையுச்சியிலுள்ள அழகியகுவட்டில் வீற்றிருந்தருளி, ஒளிதங்கிய சேஷசயனத்தையுடைய திருமாலுக்கும் தாமரைமலரிலுள்ள பிரமனுக்கும் நீண்டபெரிய கிளைகளையுடைய கற்பகவிருட்சம் பொருந்திய பொன்னாட்டிற் கிறைவனாகிய இந்திரனுக்கும், சிவபெருமான் அதிகரிக்கும்படி தோன்றிய கிருபையோடு முறைப்படி யருளிச்செய்தனர். எ - று. (கo)

பெருந்த வத்துளோர்க் குரியபிச் சாடனப் பொருப்பி
னிருந்த வச்சன காதியர்க் கினிதுவந் தருள
வொருங்கு நின்றவே தாகம முதலிய வுணர்ந்தார்
திருந்து கேள்விபெற் றனைவரும் பவித்திரஞ் சிறந்தார்.

(இ - ள்.) பெரிய தவநிலையிலிருப்பவர்களுக்குரிய பிச்சாடனமலையில் வீற்றிருந்த அந்தச் சனகாதி முனிவர்களுக்கு, இனிதாகச் சந்தோஷித்தருளலால் ஒருசேர நின்ற வேதாகம முதலியவற்றை யுணர்ந்தவர்கள், திருத்தமாகிய நூற்கேள்வியை யெய்தி எல்லோரும் புனிதத்தன்மையில் மேம்பட்டார்கள். எ - று.

திங்க ளஞ்சடை யெம்பிரான் றிருவரு ளடைந்த
பொங்கு நால்வகைப் பொருப்பினோர் தமமடி போற்றி
யங்கண் மாதவத் தலைவர்மற் றியாவரு மடைந்தார்
தங்க டங்குறை கேள்வியி னிரப்பினர் தக்கோர்.

(இ - ள்.) அழகிய சந்திரனை யணிந்த சடையையுடைய எமது சிவபெருமானது திருவருளைப்பெற்ற மேம்பட்ட, நால்வகை மலையிலுள்ளோரது திருவடிகளைத் துதிசெய்து, அங்குள்ள பெருந்தவத் தலைவர்களெல்லாரும், தங்கடங்கள் மனக்குறைகளை நூற்கேள்வியால் நிரப்பித்தக்கவரானார்கள். எ - று. (கஉ)

தொல்லை நாள்பல கழிந்தன துவாபர யுகத்தி
னெல்லை நான்மறை யாகம புராணங்க ளிறப்ப
வல்லை மாமுதற் றலைவர்பாற் கேட்டநான் மரபோ
ரல்ல னீத்தவை நிறுத்துவா னெடுநிலத் தடைந்தார்.

(இ - ள்.) பழமையாகிய பலநாள்கள் கழிந்தன. துவாபரயுகத்தி னிறுதியில் நான்கு வேதங்களும் ஆகமபுராணங்களும் இறக்க, சிறந்த முதற்றலைவர்களிடத்திற் கேட்டறிந்த நான்கு மரபினரும், துன்பத்தையகற்றி அவற்றை நிலைநிறுத்தும்படி பெரிய பூமியிலடைந்தார்கள். எ - று. (௧௩)

இறந்த நான்மறை யாகம புராணங்க ளிவற்றை
யறந்த ரப்படுஞ் சரியையே முதலிய வவற்றைச்
சிறந்த மேலவர்க் கமர்முறை யருளினா திரைநீர்
நிறைந்த வேணியான் சைவவா கமந்தலை நிமிர்ந்த.

(இ - ள்.) இறந்துபட்ட நான்குவேதங்கள் ஆகமங்கள் புராணங்களாகிய இவற்றையும், தருமத்தைத் தருஞ்சரியை முதலிய பாதங்களையும், சிறப்பெய்திய மேலோருக்கு அமர்முறையாகவே யருளிச்செய்தனர் அதனால், அலைகள்பொருந்திய கங்கைநீர் நிறைந்த சடையையுடைய சிவபெருமானுக்குரிய சைவாகமங்கள் தலைதூக்கின. எ - று. (௧௪)

வரைக ணான்குள குரவர்தந் திருப்பெயர் வழங்கிப்
புரைத விர்த்தபி டேகமும் புரிந்தனர் போனார்
திரைகொண் மாநிலத் தப்பரம் பரைசிறந் ததுவால்
விரத நாலவகைக் குரவரா யொழுகினர் விரதர்.

(இ - ள்.) ஆசிரியர்கள் திருப்பெயரால்வழங்கி நான்குமலைகளுள்ளன குற்றநீக்கி ஆசாரிய ரபிஷேகமுஞ் செய்து சென்றார்கள். அலைகள் பொருந்திய கடல் சூழ்ந்த பெரிய பூமியில் அந்தப்பரம்பரை மேம்பட்டது. அவ்விரதிகள் சிறந்த விரதத்தையுடைய நால்வகைப்பட்ட ஆசிரியர்களாக விளங்கினார்கள் எ - று. (௧௫)

அற்றை நாண்முத லின்றுகா றுருயிர்த் தொகைக்கும்
பெற்ற மேறியோன் பதம்பெறற் கருளிய பெரியோர்
கற்றை வார்திரைக் கடனிலங் கட்புலங் காண்பா
னுற்று வந்தெழுந் தருளின ரிருந்தன ருவப்பின்.

(இ - ள்.) அன்றுமுதல் இன்றுவரையிலும், அரிய உயிர்த்தொகைகளுக்கெல்லாம், இடபாரூடராகிய சிவபெருமான் திருவடியை யடைதற் கநுக்கிரகித்த மேலோர், தொகுதியாகிய நெடிய அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமியில் அப்பெருந்தவ முடையோர் யாவர்க்குங் கட்புலனுகச் சந்தோஷத்துடன் பொருந்திவந் தெழுந்தருளினார்கள். எ - று. (௧௬)

குருப ரம்பரை யீதுபுன் கொடிச்சடைப் பெருமா
னொருவன் யாவர்க்கு முள்ளிருந் துணர்த்திய குரவன்
கருணை யன்பொடு முணர்த்துமெக் குரவருங் கயிலைப்
பொருவி டைக்கொடி யுயர்த்தியோன் றனிநிலை புகல்வார்.

(இ - ள்.) இதுவே குருபரம்பரை. சிறியகொடிபோன்ற சடையையுடைய சிவபெருமா னொருவனே எல்லோருக்கும் உள்ளத்திலிருந்து விளக்கிய ஆசிரியனு

வான். கிருபை தங்கிய அன்புடன் விளக்கத்தக்க எல்லாக்குரவாகளும் திருக்கை லையி லெழுந்தருளிய போர்செய்யும் இடபக்கொடியை யுயர்த்திய சிவபெருமா னுடைய ஒப்பற்ற நிலைமையைக் கூறுவாரகள். எ - று. (கஎ)

ஆத லாற்சிவ னருச்சனை யாகமத் தடைவே
தீதி னற்குரு மொழிவழி செயப்பட வேண்டு
மோது மஞ்செழுத் தாதிய வுணர்த்துந ரன்றிப
பேத பேதமிட் டோதினா பிழைத்திடார் நரகம.

(இ - ள்.) ஆதலால், சிவார்ச்சனையானது ஆகமமுறைப்படி குற்றமில்லாத உத்தமாசிரியன உரைத்தவழியாகச் செய்யப்படவேண்டும் சொல்லுகின்ற பஞ சாக்ஷர முதலியவற்றை உபதேசஞ் செயபவாகளல்லாமல், பேதபேதங்களாகச் சொல்லிவைத்தவாகள நரகத்தின்பத்திற்குத் தவறமாட்டாரகள. எ - று. (கஅ)

போய காலத்து நிகழ்ந்ததோா கதையது புகல்கே
மாயி ரந்தலைச சேடனு வாயிரத் தளந்து
பாயி ரத்தலைப் பனுவனமுற் றுணர்ந்தனன் பரவித
தூய சற்குரு வழிபடா னக்கலை தொலைத்தான

(இ - ள்.) கடந்துபோன முற்காலத்திலே ஓாசரிதம நிகழ்ந்ததைச்சொல்லு கினறேன: ஆயிரந்தலைகளை யுடைய ஆதிசேடன தனது ஆயிரம வாயகளாலும் அளவுபடுத்தி, பாயிரத்தை முதலாகவுடைய நூலைமுழுவதும அறிந்தனன. புனித மாகிய சற்குருவைத் துதித்து வழிபாடு செயயாமல அககலவியை யொழித்தான்.

கலைசசெ ருக்கினுற கணணனே டருங்கலைக கடலை
நிலைத்த ளந்தனை வாதியென னெடுமென நிகழ்த்தக
குலைத்து ழாயினேற கருகுறு மாதவக குலத்தோா
சிலைக்கை மாயவற கியமபுவா ரிவனுடைச செய்கை.

(இ - ள.) வித்தியாமதத்தினால, சாஸதிரககடலைக கணடளவிட்டனை. நீ யெனனோடு வாதிடுகவெனறு திருமாலுடன சொலல, கொத்தாகிய துளசிமாலை யணிந்த திருமாலைத் துதிக்கத்தகுந்த பெருந்தவக்குலத்தினா, விலலேந்தியகை யையுடைய அம்மாயோனுக்கு இவன செய்கையைச் சொலலுவார்கள. எ - று.

ஒருவா மறறையோாக குணாத்துத லருகுகேட் டுணாந்துங
குருமொ ழிபபடி யெழுதிய துணாந்துமிக கொடியோ
னிருநிலக்கலை யாவையுந தோய்ந்தன னிவனைக
கருதிற கண்ணுறிற கிடைபபன கறைபடு நிரயம.

(இ - ள்.) ஒருவா மற்றொருவருககு உபதேசித்தலை அருகிருந்து கேட்ட றிந்தும், குருபதேசபபடி யெழுதியவற்றைக கொணடு கற்றும், பெரிய பூமியி லுள்ள கலைஞானங்களை யெல்லாம் தோந்தனன். இவனை நினைத்தாலும பாாத்தா லும், களங்கம பொருந்திய நரகமே பிராப்தியாகும். எ - று. (உக)

என்று மாதவ ரியமபுறு மெல்லையிற பொதியக
குன்றி ருந்தவ னெய்தினன் பாறகடல குறுகி
நின்ற சேடன தியறகையை நிகழ்த்தலும வினவி
மன்ற லந்துழாய் மாயவற் கின்னணம் வசிப்பான்.

(இ - ள்.) என்று பெருந்தவசிகள சொல்லுங் காலத்தில், பொதியாசலத்தில் வீற்றிருநத அகத்திய முனிவா வநது திருப்பாற்கடலை யடைந்து, அங்கிருநத ஆதிசேடன் சுபாவததைச் சொலலவும் கேட்டு மணநதஙகிய அழகிய துளசிமாலை தரிதத திருமாலுககு இப்படிச் சொல்லுகின்றுா. எ - று. (௨௨)

குருவெ னக்கென நினைநதொரு குரவனைப போற்று
னிருநி லக்கலை யாவையுங் கரநதன னிவன்றன்
றிருவி லாமுக நோககரி திவனெடுஞ செபபி
னொருவி டாநெடு நிரையமவீழ்ந துறுவது திண்ணம்.

(இ - ள.) எனககுக குருவென்று கருதி ஓராசிரியனைத துதிசெய்யான். பெரிய பூமியிலுள்ள கலைஞானஙகளை யெலலாம் ஒளிததுககற்றனன. இவனுடைய இலககுமி விலாசமிலலாத முகததைப் பார்பபதரிது. இவனேடுபேசின் நீஙகாத பெரிய நரகததில வீழ்நது வருநதுவது சததியம எ - று. (௨௩)

என்ன மாயவற கியமபினன் சேடனை யெதிாநது
நினனை நோககுறிற பாவமுண் டெனபது நிகழ்ததித
தொன்னி லைககலை கரநதனை குருநெறி தொடாாப
புன்மை யாளநிற் குணாததுவ துளதெனப புகலவான்.

(இ - ள ) எனறு அகததியமுனிவா திருமாலுககுச் சொலலினா. ஆதிசேடனை நோககி, உனனைப்பாாததால் பாவமுணடாமெனறு கூறி, பழமையாகிய நிலைமையையுடைய கலைஞானஙகளை மறைததனை. குருவழித தொணடுபுரியாத இழிதகைமையான உனககுச்சொல்வ தொன றுணடெனறு சொல்லுவாா. எ-று.

வரச ரோருகன் முதலினோா யாவாககு மதிககுங
குரவன் மாயவ னிவனைநீ குருவெனக கொணடு
விரவு பல்கலை யாவையும் விளங்குதி யென்ன
வரவ நாயகன் குருமுனிக கின்னண மறைவான்.

(இ - ள் ) சிறநத தாமரையில வசிககும் பிரமன் முதலானுரெல்லாருககும் மதிககததகக ஆசிரியன் திருமால. இததிருமாலைநீ ஆசிரியராககொணடு பொருநதிய பலசாஸதிரஙகளையும விளககமுறுக வெனககூற, சாப்பராசனுகிய ஆதிசேடன் அகததிய முனிவருககு இவவாறு கூறுவான. எ - று. (௨௫)

ஓத வேண்டுவ யாவையு மொருங்குற வுணாநதேன்
பூத லததுள குரவாிங் கெனககெது புகலவா
தீதின முறபென னககுறைக கலைபெலாந தெரிநதே
னுது ணாநதிலை யென்னைகொ லருளினை யையா,

(இ - ள்.) கற்க வேணடுவனவற்றை யெலலாம் ஒருசேரக கற்றறிநதேன். உலகததிலேயுளள ஆசிரியாகள இபபொழுது எனககு வேறெதனை யுபதேசிப்பாாகள? குற்றமிலலாத பணடைய பிறவியிற் குறைவாகிய கலைகளை யெலலாந தெரிநது கொணடேன். அதனை புணராதவராய, ஐயனே! யாதுகூறியருளினீா.

எனதத டுத்தனன் சேடனுங குறுமுனி யெதிாநது
சினதத சிநதையன் சேடனீ தெரிதருங கலைக
ளனைதது நீததனை யாகிமற றுயிர நாமப
புனத்து மாயவன் றுயில்பெறக் கிடவெனப் போனுன்.

(இ-ள்.) என்று ஆதிசேடனும் மறுத்துரைத்தான். குறுகிய வடிவுடைய அகத்திய முனிவர் கோபங்கொண்ட மனமுடையவராயெதிர்த்து, சேஷா! நீயுணராத கலைஞானங்களையெல்லாம் ஒழிந்தவனாகி, ஆயிரந்திருநாமங்களையுடைய வனத்துளவ மாலையணிந்த திருமால் துயிலப்புரியப் பாயலாய்க் கிடக்க வென்று சபித்துப் போயினர். எ-று. (உஎ)

வெருவி நின்றனன் சேடனும விழுந்தவ முனியை
யிருப தந்தொழு தறிவிலா திசைத்தன னிவற்றைப
பொருவில சாபநீந் தொழிவது புகலுதி யென்முன்
பருவ ரற்குட னுயினு னடிக்கடி பணிந்தான.

(இ-ள்) ஆதிசேடனும் பயந்திருந்து, பெருந்தவமுடைய அகத்திய முனிவரை உபயபாதங்களிற் பணிந்து, அடியேன மதியின்றி இம்மொழிகளையுரைத்தேன் ஒப்பிலலாத சாபத்தையகன்று நீங்குவது சொல்லுவாயாக வென்றனன. துன்பத்திற்கு உடனாயிருந்தவன அடிக்கடி முனிவரை வணங்கினன. எ-று. ()

என்று மாயிரம பெயரவற கிருவிழி துயிறறித
தன்று பாயலிற கிடந்தவன் சொறகலை யுணாந்து
பினறு நினகலை யாவையும பெறுகுவை யநநா
ளின்றி யாமபுகல் சாபநீந் தொழிகுவை யெனறான்.

(இ-ள்) ஆயிரந் திருநாமங்களையுடைய திருமாலுககு எககாலமும் இருவிழிகளைத் துயிலவித்து, நெருங்கிய சயனம்போலக் கிடந்து, அவர் கூறியகலைகளையெல்லா மறிந்து, பிறபட்டுப்போன உன கலைஞானங்களை யெல்லாம் அடையக கடவாய், அககாலத்தில இப்பொழுது நாம கூறியசாபநீங்கி விளங்குவையெனறனர்.

சங்கு சக்கரந் தாங்குகைத் தாமரைக் கண்ணன்
பொங்கு பேரரு ளாறசிவ பூசனை புரிந்து
கங்கை வாாசடைக் கண்ணுதற் பரமனைக் கருதி
யெங்கி ருப்பினு மறக்கலை யெனமுனி யெழுந்தான

(இ-ள்) சங்கு சக்கரங்களைத் தாங்கிய கைகளையுடைய செந்தாமரை மலர் போன்றவிழிகளையுடைய திருமாலே! அதிகரித்த பேரன்போடு சிவபூசைசெய்து கங்கையையணிந்த நெடிய சடையையுடைய நெற்றிக்கண் வாய்ந்த சிவபெருமானைத் தியானித்து எவ்விடத்திலிருந்தாலும மறவாதே யென்றுகூறி அகத்திய முனிவர் போயினர். எ-று. (கூ0)

அனைய தபபரி சாதலி னுருயிரத் தொகைக்கு
வினையொ ழித்துறக் குரவனை வேண்டுமால விரிநீர்
புனைநெ டுஞ்சடைப் புங்கவன பூசனை புனித
முனைவர் காணுமக கறிந்தவா றின்னண மொழிந்தேம்.

(இ-ள.) பரிசுத்தமான முனிவர்களே! அச்சிவார்ச்சனையின் தன்மை அத்தகையது. ஆனபடியால அரிய உயிர்த்தொகைகளுக்கு இருவினைச் சம்பந்தத்தை யகற்றும்படி ஆசிரியனையடையவேண்டும் பரந்த கங்காசலத்தையணிந்த சடையையுடைய சிவபெருமான பூசையைத் தெரிந்தவரையில உங்களுக்கு இப்படிச்சொன்னேன். எ-று. (கூக)

வேத நான்கெனப் பகுத்தருள் வியாதமா முனிவ
னோது மின்னரு ளாற்சில வறிந்தன வுரைத்தே
மாதி நாயக னருச்சனை பெருமைமுற் றளப்பிற்
சீத மற்குமற் றயனுக்கு மூழ்பல செலலும.

(இ - ள.) வேதங்களை நான்கெனப் பிரித்தருளிய சிறந்த வியாசமுனிவர் திருவருளாற் கூறியவற்றிற் சிலதெரிந்தன வற்றைச் சொன்னோம். முதற்கடவு ளாகிய சிவபெருமான் அர்ச்சனைச் சிறப்பை முழுதும் அளவிட்டால திருமாலுக் கும பிரமனுக்கும அநேக ஊழிகளாகும் எ-று　　(கஉ)

இனியு ரைப்பன கேட்குதி ரெமபிரா னருளா
னனிபெ றபபெறுஞ் சரியையே முதலிய நான்கும்
புனித மாதவத் தநதணீ ரெமமனோ புகலற
கனித மாவன வாயினு மறைவனென் றறைவான்.

(இ - ள.) பரிசுத்தமான பெருந்தவத்தை யுடைய வேதியர்களே! இன்னுஞ் சொலவன வற்றைக் கேட்பீர்களாக எமது சிவபெருமான திருவருளால நன்றாக அடையப்பெறுஞ் சரியை முதலாகிய நான்கு பாதங்களும் எம்மை யொப்பார் சொலலுதற்கு அளவுபடாதன. ஆனாலுஞ் சொலகினறேமென்று சூதமுனிவர் சொலவாராயினார். எ - று.　　(கங)

குருமான்மியச்சருக்கம முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் கஅ-க்குத் திருவிருத்தம்-௪கக௬க.

---

முப்பத்தொன்பதாவது

## சரியையாதிமான்மியச் சருக்கம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கனையிருள்போழ்ந் தலரியெழு புலரியினிற சரீரசுத்தி கழித்த பின்னர்ப்
புனறுளைந்து வெள்ளாடை வெணபட்டுப புனைந்துநனை பூதி சாத்தி
வனையுமுருத் திராக்கம புனைந்துவா னவர்க்கு முனி வரர்க்கு மெனனு
நினைவினருக் கியங்கொடுத்துப் பரிதிவா னவற்கியற்று நியமம போற்றி.

(இ - ள) மிக்கவிருளைவிலக்கிச் சூரியனுதயமாகும் விடியற்காலத்தில், தேக சுத்தி முடித்தபிறகு நீராடி, வெள்ளிய வஸ்திரத்தையும் வெள்ளிய பட்டாடை யையுமணிந்து குளிர்ந்த திருவெண்ணீறு தரித்து, அணியத்தக்க உருத்தி ராக்கத்தை யணிந்து, தேவர்க்கென்றும் முனிவர்க்கென்றும விருப்பொடு அருக் கியமளித்து, சூரியபகவானுக்குச் செய்யும நித்தியகடனாற் துதிசெய்து. எ - று.

திருமலாக்கா வக்கம்புகுந்து மலரெடுத்துப் பழுதகற்றித் தெரிந்து நோக்கிப, பொருவருபூ சனைத்தலத்துத் திருமெழுக்கிட் டியற்றுகலம

புதுக்கிச சுத்தி, தருநிலத்துக் கவிழ்த்தியீர்ம் புனறெளித்தாங் கவையெ டுததுத தையல் பாகற், குருகியபே ரன்பொடுமஞ் சனங்கொணர்ந்து நறுஞ்சாந்த முரைததுப் பினனா.

(இ - ள்.) சிறநத மலர்ச்சோலையிற் பிரவேசிததுப் பூககள கொய்து குற்ற நீக்கிப் பார்ததாய்நது, ஒப்பிடற்கரிய பூசாஸ்தானத்தில் திருமெழுககிட்டு, பாத் திரசுததிசெயது புனிதமானவிடததிற் கவிழ்த்தி, குளிரநதசலததைத தெளிததது அவற்றையெடுததது, உமாதேவிபாகராகிய சிவபெருமானுககு உருசிய பேரன் போடுந திருமஞ்சனசலங் கொணடுவநது, நலல சநதனததை யுரைததது அதன் பிறகு. எ-று. (உ)

ாசனருச சனைததலத்து விதானித்துக் கொழுநதீப மேற்றி யின்ன வாசறசெய் வனசரியை யினிக்கிரியை யெனுமதனை வகுப்பா மறறைக காசறுமந திரமானமாத திரவியம்பூ தஙகடவு ளிலிங்க மைநதி னேசறுசுத தியைவருகதி யமைததபீ டததரனை யினிதி னேறறி.

(இ - ள்.) சிவாாச்சனை புரியுமிடததில விதானஞ்செயது திருவிளககேற்றி இப்படிப்பட்டனவற்றைக குற்றமறச் செயவன சரியையெனப்படும். இனி, கிரி யையெனறு சொல்லப்படும் அதனைப்பிரிததுக கூறுவாம. குற்றமற்ற மநதிரம ஆன்மா திரவியம பூதம் தெய்வீகநதஙகிய சிவலிஙகமாகிய இவவைநதின் ஏசுத லற்ற சுததியைச்செயது அமைககப்பட்டுள்ள பீடிகையின்மீது சிவபெருமானை இனிதாக வேறச்செய்து. எ - று. (ங)

புரிநதபுனற கொண்டுதிரு வடிவிளக்கிப பொதியநறுஞ சாநதஞ சாத்தித், தெரிநதமலாத திருமாலை யுரைத்தவரன முறைசாததி யுபதே சததாற, பரிநதுதிருக கருணைபுரி குரவனருளியபரிசு பனைக்கை யானை, யுரிநதுடுததோன றனககீரெட் டுபசாரத தொடும்பூசை யுவநதபினனர்.

(இ - ள) கொணாநத சலததினலே திருவடியைச் சுததிசெயது, பொதிய மலையிற்றோனறிய நலல சநதனததைச்சாததி, தெரிநதெடுதத சிறநத மலாமா லையை நூலகளிற சொல்லிய வரன முறையோடுசாததி, உபதேச முறையால விருமபித திருககருணைசெயத ஆசிரியனருளபுரிநத முறையே, பனைபோலுங கையையுடைய கயாசுரனெனனும் யானையை உரிததுடுத்த சிவபெருமானுககு ஷோடஸோபசாரஙகளோடும் பூசையைவிருப்பிச் செய்தபின்னர். எ - று (ச)

மற்றுளபுங் கவர்க்கோமந தவிாப்பாகந தருதலிது கிரியை வாசஞ். சுறறுகொடிச சடைமுடியீ ரினியுமககு யோகததின் றொடாசசி சொல் முற்றியம நியமமுட னுசனமபரா ணுயாம முதலிந நான்கு [கே வுறறபிரத் யாகாரந தாரணைதி யானமற்றைச சமாதி நானகே.

(இ - ள்.) இன்னுமுள்ள தேவாகளுககு ஓமாக்கினியில் அவிப்பாகந தருவ தாகிய இது கிரியையாம். வாசநதஙகிய சுறறியகொடிபோலுஞ் சடைமுடியையு டைய முனிவாகளே! இனி உங்கட்குயோகததின் றொடாபினைச் சொலலுவோம முற்றிய இயமம்-நியமம்-இதனுடன் ஆசனம்-பிராணுயாமமாகிய முதனன்கும் பொருநதிய பிரததியாகாரம்-தாரணை-தியானம்-சமாதியாகிய ஏனையநான்கும்.

எய்துமெட்டு யோகத்தி னியமமெனப தொருவாக்குமிடர்செய் யாமை
பொய்களவு பிறாபொருளை நயததலொழிந திந்திரியப புலததை வெலல
றய்யகிய மங்கோப மொழிநதுபெறு வனநயநது தூநீா கன்மஞ
செய்துகுரு மொழிவழிபபட டருசசிததா சாரததிற சிறப்ப தாமே.

(இ - ள.) என்றெயதிய அஷடாஙகயோகததில. இயமமெனபது ஒருவர்க
குந தினபு செயயாதிருததல,பொய களவு பிறாபொருள விழைதலினமை, இநதி
ரியஙகளையும ஐம்புலனகளையும வெலலுதல. புனிதமாகிய நியமமெனபது கோப
நீஙகி அடையப் பெறுவனவற்றை விரும்பி, புனிதமான நீரிற்செயயுஞ சநதி
செய்து, ஆசிரியனகட்டளைப்படி வழிபாடு புரிநது பூசிதது, ஆசாரததில மேமபடு
வதாம். எ - று. (சு)

ஆசனமென் பதுபுலித்தோ லரிணத்தோல் பதுமவா சனங்கூர் மததி
னேசறுமா சனமிவறறிற பொருநதியவா சனததிருநதி யோக சிததி
மாசறுதது நிருமிக்கக கடவதினிப பிராணயம வகுபபேந தெய்வப
பூசுரமா தவததலைவீ ரொருஙகிருநது கேண்மினெனப புகல்வ தானை.

(இ - ள்) ஆசனமென்பது புலிததோலாசனம மான தோலாசனம் பதுமா
சனம் குற்றமற்ற கூமாசனம இவறறொன்றிற றமககியைநததோ ராசனததி
ருநது, குற்றநீககி யோகசித்தியை நிருமிககககடவதாம. இனி, பிராணயாமத
தைச் சொலலுவோம், தெயவீகம பொருநதிய ெருநதவமுடைய அநதணததலை
வாகளே! ஒன்றுபட்டிருநதுகேட்பீாகளாகவென்று சூதமுனிவாசொலவாராயினா.

வல்துமூக் கங்குட்டத் தாற்புதைததீ ரெண்குடிலை வாஙகி யேறறி,
யுலவுமெணணெண் பிரணவததைச சுவாசமவிடா துருவேறறி யகததுக
குமபித், திலகிடநா சியைபபுதைதது வலமூககா லநதவெணணெண்
பிரண வததைச, சுலவவெளி விடுகமுபபா னிரணடுபிர ணவமாககிச
சுவாசத தோடும்.

(இ - ள.) வலப்புற நாசியை [அஙகுஷடம] பெருவிரலாற பொததிக்
கொணடு பதினாறு பிரணவததை உளளேவாஙகியேற்றி, உலாவுகினற அறுபதது
நானகு பிரணவததைச் சுவாசம விடாமல உருவேறறி உளளே குமபகஞசெயது
விளஙகுகின்ற இடப்புற நாசியை மூடிககொணடு வலப்புற நாசியால, அநத அறு
பதது நான்கு பிரணவததை முப்பததிரணடு பிரணவமாககிச் சுவாசத்துடன சுழ
லும்படி வெளியே விடுக. எ - று (அ)

இடநாசி நடுவிரலிற் புதைததுவல நாசியினப பரிசி னேறறி
நெடுநாசி வலமபொததி யிடநாசி வழிமுனனா கிகழநத வாறே
விடலீது பிராணய மிதுவிரணடு விதஞசகறபங கறப மெனனப
படலாகு மாஙகவறறி னிலையுரைபபககேணமினெனப் பகாவ தானை.

(இ - ள் ) இடப்புற நாசியை மததியமையினாற்பொததிககொணடு,வலப்புற
நாசியில அவ்வடைவாகவேறறி, நெடியநாசியை வலபபுறததிறபொததிககொணடு
இடநாசி வழியிலே முனனே நடநதவகையாகவே விடுவதாகியவிது பிராணயா
மம். இப்பிராணயாமம இரணடு வகையாயச சகற்பம கறபமெனறு சொலலப்ப
டும். அவற்றின தனமைகளைச் சொலலக கேளுஙகளெனறு சூதமுனிவா சொல
வாராயினர். எ - று. (கூ)

மந்திரத் தியானத்தோ டிருக்கையாற் சகற்பமென வழங்கு மற்றை,
யிந்தவோ ரிரண்டுமன்றிக் கும்பித்து விடல்கற்ப மென்ப தாகு, மூந்
தையா சனத்திருந்து பிரணவத்தைச் செபித்துமுக்கட் பரமனென்னு,
மெந்தைதிரு வஞ்செழுத்தை வான்முறைநிட் டையிற்செபிப்ப தியல்ப
தாமே.

(இ - ள்.) மந்திர தியானத்தோடிருப்பதனால் அதுசகற்பமெனப்படும். மற்று இவ்விரண்டு மல்லாமல் கும்பகஞ்செய்து வெளிவிடுவது அகற்பமென்று சொல்லப் படுவதாகும். முற்கூறியபடி சுகாசனத்திலிருந்து பிரணவத்தைச் செபஞ்செய்து, திரிநேத்திரங்களையுடைய கடவுளென்று சொல்லும் எமது தந்தையாகிய சிவபெருமானுடைய ஸ்ரீபஞ்சாக்கரத்தைக் கிரமப்படி நிஷ்டையிலிருந்து ஜபிப்பது இயற்கையாம் எ - று. (௪௦)

வருணமூ வகைத்தாயோர் பிரணவத்தி னோடுஞ் செபிக்க மற்றை
யோரத், திருவெழுத்தஞ் சினையுரைத்துப் பிரணவமின் றிச்செபிக்கக்
கடவ ராவ, ருரியயோ கந்தினைப்போர் துவர்ப்பினிப்பு மிளகுபுளி
சுவைக்கா யுப்பு, பருகுதனீத் தருந்தாக மடைந்ததென்றால் வெந்த
புனல் பருக லாமே.

(இ-ள்) முதன்மூன்று வருணத்தினராகிய பிரமக்ஷத்திரிய வைசியர் பிரணவத்தோடுஞ் செபிக்கக்கடவோர். ஏனைய சூத்திராதியர் அத்திருவைந்தெழுத்தைப் பிரணவ நீக்கி உரைத்துச் செபிக்கக்கடவ ராவார்கள். அவரவர்கட்குரிய யோகத்தை யநுஷ்டிப்போர் துவர்ப்பு இனிப்பு மிளகு புளி சுவைக்காய் உப்பு இவற்றைப் புசியாமல் தடுத்து, தாகவிடா யுண்டாகியதானால் வெந்நீரையே பருகுதலாகும். எ - று. (௪௧)

ஈதுபிரா ணாயாம மினிப்ரத்யா கார மிதை யியம்பக் கேண்மின்
றீதறுபஞ் சேந்திரியம் புறம்புகா வழிநிறுத்தல் சிவனைப் போற்றிப்
பாதமல ரிடைவிடா துளத்திருத்தத் தாரணமாம் பகர்தி யானம்
மாதியைத்தன் னிதயமல ரகத்திருத்தித் தியானிப்ப தாகு மன்றே.

(இ - ள்.) இதுவே பிராணாயாமமாம். இனி, பிரத்தியாகாரமாகிய இதனைச் சொல்லக் கேட்பீர்களாக. குற்றமற்ற பஞ்சேந்திரியங்களையும் புறஞ்செல்லாத வகையாகத் தடுத்தல்-சிவபெருமானைத் துதிசெய்து திருவடித்தாமரைகளை நீங்காமல் எப்பொழுதும் தமது மனத்திலிருத்துதல் தாரணமாகும். சொல்லுகின்ற தியானயோகமாவது முதற்கடவுளாகிய சிவபெருமானைத் தமது இதயதாமரையி லெழுந்தருளச்செய்து தியானித்தலாகும். எ - று. (௪௨)

ஈறுபடு சமாதியென்ப தெரிபுரையுந் திருமேனி யெந்தை தன்பாற்
கூறருமைம் புலனமைத்துக் கரணங்க லாதியொடுங் குணங்க ணீத்து
மாறிடுமா ணவங்கெடுத்துத் தனைமறந்து காந்தமுமற் றிரும்பு மென்ன
வேறுபடா தொன்றாகப் படுவதந்தச் சமாதியென விளம்ப லாமே.

(இ - ள்) இறுதியாகிய சமாதியென்பது, தீவண்ணத்திருமேனியையுடைய எமது தந்தையாகிய சிவபெருமானிடத்தில் சொல்லுதற்கரிய ஐம்புலன்களையி ருத்தி கரணங்களைக் கலாதிகளோடும் குணங்களோடும் விலக்கி, பகைசெய்யும்

ஆணவமலத்தை நீக்கித் தன்வசமாறி, காந்தமும் இரும்பும்போல வேறுபாடின்றி ஒன்றாகக் கலந்திருப்பது அநந்தச்சமாதியென்று சொல்லுவதாகும். எ - று. (௧௩)

சரியையீ திதுகிரியை யிவையோக மெனவறிந்த தன்மை சொற்றேம், முரியசிவ ஞானத்தி னுண்மைசிறி தறிந்தவா றுரைக்கே மென்னப், புரிதருமில் லொழுக்கத்திற் றாயென்றுந் தமரென்றும் புதல்வரென்றும், பரிவுறுபா சத்தினின்றுங் கரையேறிப் பிறப்பொழிக்கப் படுவ தென்றுன.

(இ - ள்.) சரியாமார்க்கம் இது. கிரியாமார்க்கம் இது. யோகமார்க்கம்இவையென்று எமக்குத்தெரிந்த தன்மையைச் சொன்னேம். பொருந்திய சிவஞானத்தினுண்மையை ஒருசிறிது தெரிந்தமட்டிற் சொல்லுவோமென்று, நடத்துகின்ற இல்லொழுக்கத்திலே தாயரென்றும் உறவினரென்றும் புத்திரரென்றும் பரியத்தக்க பாசக்கடலிலிருந்து கரையேறிப் பிறவிப்பகையை நீக்கத் தகுவதென்று சொல்லினர். எ - று. (௧௪)

சூதமா முனிவனுங் கூறுதலுரைப்ப முழுதுணர்ந்த தூயோரையா யாதுநீ யெமக்குணர்த்துஞ் சிவஞான மாங்கதனு லறியாநிற்பதெல்லாந் தேது ணர்த்தும் பொருளறிந்தா லப்பொருளாற் பெறுவதியா திவ்வா றீதறவெவ் வேறுணர்த்தி யெனப்பரவ வனனவர்க்குச் செப்ப லுற்றுன.

(இ - ள்.) பெருமை தங்கிய சூதமுனிவர் அதனைச் சொல்லவும், முற்றுணர்ந்த பரிசுத்தராகிய நைமிசாரணியவாசிகள், ஐயா! எமக்குத்தேவரீர் உணர்த்தியருளுஞ் சிவஞானம்யாது? அந்த ஞானத்தால் அறியவுள்ளது எப்பொருள்? அறிவித்தபொருளை யறிந்தால் அந்தப்பொருளால் அடைவதுயாது? இவ்வகைகளையெல்லாங் குற்றமற வெவ்வேருக விளக்கியருளவேண்டுமென்று துதிக்க, சூதமுனிவர் அவர்கட்குச் சொல்லவாராயினர் எ - று. (௧௫)

பதியென்றும் பசுவென்றும் பாசமென்று மொருமூன்றுயப் பகுத்து நின்ற, விதிகண்டிம் மூன்றுமுணர்ந் தறிபவனே ஞானியென விளம்ப லாமாற, கதிகொண்ட ஞானமெது வெனப்பீரே லஞ்ஞானக் களங்கநீக்கு, மதுவெந்தை நிலைமைதெரிந் தறிவிக்கு ஞானமென வறையலாமால.

(இ - ள்.) பதியென்றும், பசுவென்னும், பாசமென்றும் மூன்ருகப் பிரிக்கப்பட்டுள்ள முறைமையைத்தெரிந்து இம்மூன்றினையும் விசாரித்து உணர்பவனையே ஞானியென்றுசொல்லுவதாகும். மோட்சத்தைப்பயக்குக்கொண்ட ஞானமென்பது யாதென்று வினவுவீராகில், அஞ்ஞானமாகிய விருளைவிலக்கும் அதுவே எமது தந்தையாகிய சிவபெருமானுடைய நிலைமையை உணர்ந்து தெரிவிக்கும் ஞானமென்று சொல்லப்படுவதாம். எ - று (௧௬)

அப்பரிசி னறியுமறி வாங்கதனு லறிபொருணின் றறியப் பெற்றோர், ணிப்படிமூன் றளவிறந்த மூன்றிலதி பொருண்மூன்று யிருக்கு மன்னே, செப்பிலச் டஞ்சடமென் றிரண்டிவற்றைக் கொடுசரிக்கச் செய்யா நின்ற, தொப்பிலக்ருத் தாவெனப் தொன்றுக மூன்றிவற்றை யுணரக் கேண்மின்.

(இ - ள்.) அவவகையில் அறிகின்ற அறிவு-அவ்வறிவாலறியததககபொருள்-அறியப்பெற்றவன ஆக இப்படி மூன்று அளவுககெட்டாத அம்மூன்றில அறியததககபொருள மூனறுசவிருககும். சொலலுமிடததில் அசடம சடமென்றிரணடு. இவ்விரண்டினைக்கொணடு சரிககும்படி செயகினறதாகிய ஒப்பிலலாத கருததாவென்பதொன்று. ஆகமூன்றும். இவற்றினைத தெளியும்படி கேட்பீர்களாக.

இனையவற்றை யும்பசுபா சமபதியென் றியம்புவாமற றிநத மூன்றி, னினையுமச டமபசுவச சடமபாச மிவைககிறைவ னிமல னுகு, மனைய மூன் றினையுமறறை யநாதியென்று சொலபபடுமா லறிதி ரென்ருன்,புனை யுநெடுஞ சடைமோலிச சூதனஃ துணாந்ததவப் புனிதர் சொல்வார.

(இ - ள.) இவற்றையும பசு பாசம் பதியென றுசொல்லுவார்கள இததகைய மூன்றனுள், எண்ணததகக அசடமானது பசு, அநதச் சடமானது பாசம், இவற்றிற்குத தலைவன் பதி அபபடிப்பட்ட மூனறுபதாாததஙகளு அநாதிநித்தியப் பொருள்களென்று சொலலபபடும். அறியககடவீகளென று, அலஙகரிததநெடிய சடைமுடியையுடைய சூதமுனிவாசொலலினா. அதனையறிநத அமமுனிவாகள சொலலுகினருாகள. எ - று. (கஅ)

தெரிதெமககு நீயுரைதத தள முணரப பெறறிலமச சிவஞா னத்தை, விரிததுவதன் சொருபமதன றெழிலனைததும விளஙகவிளம புதிகொ லெனனப,புரிததிடுபுன் சடைச்சூத னினிககேணமி னெனபபுகலு மாயை தனனைப, பரபபிரமம பிரகிருதி சடமபாச மெனவெடுததுப பகாநதாா நலலோா.

(இ - ள.) தேவரீா எமககுவிளககிசசொலலியதை யாஙகள மனதில அறியப் பெறறேமிலலை. ஆதலால அநதச்சிவஞானததை விரிவாகவெடுதது அதனசொருபம அதனசெயல முதலிய வெல்லாவறறையும விளககமாக வியமபியருளவீரோவெனன, இனிககேளுஙகளென று சொலலுகின்றா. மாயையைப்பரபபிரமம பிரகிருதியென்றும சடமபாசமெனறும பெரியோாகள எடுததுச்சொலலியுளளாாகள. எ - று. (கக)

ஆங்கஃத நாதியிலே பதியினின்றுந தோன்றியதாம பசுவென் றேது, நீஙகரிய வானமாவை மலபேதங கொடுவளைதது நிறப வங்ஙன், ஞெங்குபசு விருவினையா லுணடான பயனுணணும வினைகட் கெலலா, மீஙகிவனசெய் திடுநதொழிலே காரணமவ விருவினையெப போது முண் டால.

(இ - ள்.) அநதமாயை அநாதியிலேயே பதியினினறுந தோனறியதாகும், பசுவெனறு சொலலப்படும் நீஙகறகரிய ஆன்மாவைப பாசமானது பலபேதஙகளாற் சூழநது நிற்க, அப்படியெழுநத பசுவானது இருவினையாலுணடான பயனை நுகரும். வினைகளுககெல்லாம் இவவானமா செயகினற செயலேகாரணமாக இருவினை யெககாலததிலும உணடாகும். எ - று. (௨0)

இருவினையெப் போதொடுங்கு மெனிலான்மா வினைவளைத்த யலம போ யன்றி, யொருவலவவ வினையாதென் றுரைததிடிறபுண் ணிய

பாவ மிவைக ளீட்டித், தருவனுக ரும்போக நுகர்வதற்குச் சரீரங்கா ரணமே யாகும், பொருவருமைம் புலத்திலநதக கரணததாற பொசிக்கு மலம பொதிநத சீவன்.

(இ - ள்.) இருவினைகள் ஏககாலததில் ஒடுஙகுமெனருல், ஆன்மாவைச் சூழ்நதுகொணட மலசமபநதம நீஙகி யலலது நீஙகமாட்டாது. அவவினையை ஏதெனச்சொனனுல, புணணிய பாவஙகளாகிய இவைகள சமபாதிததுததருவன நுகரததகக போகஙகளை நுகருதறகுததேகமே காரணமாகும். ஒப்பற்ற ஐம்புலனகளினுலும் அநதக்கரணங்களாலும மலபநதமெய்திய சீவனே அவற்றைப்பொசிககும. எ - று. (உக)

சீவனெனப படுபுருட னேகனவன் றமரோடுஞ் செல்வா ரோடு மேவருமென் பதுகொடிய வெஞ்சுரததி னருநீழற சிழ்வே டைககா யாவருநதொக கதுபோலு மிவனுடமப நேகமெடுத திழபபா னநத மீவருங்க லாமதியைப பன்முறையாற புயன்மறைதது விடுதலபோலும

(இ - ள்.) சீவனெனறு சொலலபபட்ட புருடன ஏகனுவான, அவன் சுற்றததாரோடும் செலவுபவாகளோடும் பொருநதுவானெனபது, கொடிய வெப்பமாகிய பாலைவழியில, கிடைததற்கரிய நிழலினகீழே வெயில வெப்பமாற்றுமைககாக எல்லோருங கூடியதுபோலும. அழகிய ஆகாயததில வருகினற கலைகளோடுகூடிய சநதிரனைபபலமுறையும மேகமானது மறைதது விடுவதுபோல இவன் அநேக தேகஙகளையடைநது ஒவவொனருக இழப்பான எ - று. (உஉ)

இவன்றிரிநத காயததிற களவையிலே பழங்கலைநீத தெடுததுக் கொண்டு, கவாந்தபுதுக கலையெடுககு மாபோல வெடுததபல காயம போககி, நிவாநதெழுமச சடமகறறி யசசீவன் முததிசென்று நிலைககுங காறு, முவநதபுனற கயல்கரைபபா னுலவுதல்போற சடநதோறு முலவா நிறகும

(இ - ள்.) இவவான்மா மாறியதேகததிற்கோ கணககிலலை. பழய வஸ்திரததை யகற்றிவிட்டுப் புதிதாக வெடுததுககொணட கோடிவஸதிரமபோல, அதுகாறுஙகொணட பல உடலகளை யகறறி, மேறகொணடெழுநத அச்சடததை யகற்றி அநதச் சீவனுவான முததியிறசென்று நிலைபெறுமெலலையும, விருமபிய சலததிறகு அயலிலேயுளளகரைமேல திரிதலபோலச் சடஙகளில உலவிககொணடிருபபான எ - று. (உங)

விளைததவிரு வினைதொடரா லசசீவன றளைபபட்டு மேவி மூன்ருய்க், கிளைததபுவ னநதோறு மினபதுன்பநு துயததுழலை கிளாபூங் கொன்றை, தளைததமோ லிபபெருமான றிருவிளையாட டெனறுரைக குஞ் சாததிரஙகள, வளைததெழுசீ வனுக்கெலலாம பசுவெனுமபே ரென்னையெனின் வகுததுச சொல்கேம

(இ - ள்.) தானியற்றிய இருவினைததொடாபினுல் அச்சீவனகட்டப்பட்டு, மூன்ருய்ப்பொருநதிப் பிரிநத புவனஙகளில இன்பதுனபஙகளை யநுபவிததுழல்வது, பிரகாசிககின்ற அழகிய கொனறைமாலையணிநத சடைமுடியையுடைய சிவபெருமானது திருவிளையாடலெனறு சாததிரங்கள சாற்ருநிற்கும், மலபநத

முடைய எல்லா ஆன்மாக்களுக்கும் பசுவென்னும்பேர் யாது காரணமென்றால் விளக்கிச்சொல்லுவோம். எ - று. (உச)

பிரமனே முதலெறும்பு கடையாகப் பசுவென்று பேசலாமச், சுர பிதறித் தளைப்பட்டாலோரிடத்தும் போகாத தொடாபே போல, விர வுமிநதச சிவனுங்கன் மத்தளையாற் கடடுண்டால் வேறு போகா,துரவு தளைக் கிடநதுழலு மாதலாற பசுவெனுமபே ருரிமைத் தாமே.

(இ - ள்.) இரணிய கருப்பன் முதல எறும்பு (பிபீலிகை) இறுதியாகப் பசுக்களென்றுசொல்லுதலாம் அப்பசுவானது கட்டுதத்றியிற் கட்டப்பட்டால் ஓரிடததிற்குஞ் செல்லாது. அப்பிணிப்பைப்போல, இநதச் சீவனுங்கலநதகன் மபாசததாற் பிறிதொனறிற் செல்லாது, உறவாகிய பாசததிற்பொருநதி யுழன் றுகொண்டிருக்கும். ஆகிய இககாரணததால், இதற்குப் பசுவெனனும்பேர உரிமை யுடையதாகும். எ - று. (உரு)

என்றுக மததுறையோாக கியமபியசூ தளையளையோா யாரும் போற்றி, நின்றுக மததுறையோப பசுவினிலே முழுதுணாநதே மினி நீ யான்மா, வொன்றுய மாயையெடுத ததன்றெழிலைச சொரூபத்தை யுரைததி யென்னப, பொன்றுழ்புன் சடைச்சூத முனிவனுங் கவர்க்கத ளைப் புகல்வ தானுன்.

(இ - ள) என்று, ஆகமததுறையிலிருநத சௌனகாதிமுனிவாகட்குக்கூறிய சூதமுனிவனை, அநத நைமிசாரணியவாசிகள் யாவருந துதிததுநினறு, ஆகமநெ றியை யறிநதவரே! பசுவின றனமையை முறறுமறிநதோம. தேவரீா இனி, ஆன் மா ஒன்றுகிய மாயையெடுததுதன் செயலையும் சொரூபததையும் சொல்லுவீராக வெனககேட்க, பொனனிறமாகித தொஙகிய சிறுசடையையுடைய சூதமுனிவா அம்முனிவர்களுககு அதனைச்சொல்வாராயினா. எ - று. (உசு)

பிரகிருதி யெனசசொலலப படுமாயை யுமையிடதமதம ருபருமா னெனனு, மரனையா தரிததிருககும பிரமனு தியாககுமயக களிப்பு தா கும, விரவுபசும பொன்னணிபபால வெவவேறு குதலபோனமென கலைக்கு நூலபோற,பரவுபிர பஞசமுணடா வதறகதுவே காரணமாய்ப் பவிதத தாமே.

(இ - ள்.) பிரகிருதியென்று சொல்லப்படும மாயையானது, உமாதேவியா ரைவாமபாகததிலுடைய எம்பெருமானுகிய சிவபெருமானை ஆதரிததிருக்கும். பிரமாதிகளுககும மயககததைககொடுப்பதாகும பசு நிறமபொருநதிய பொன்னு னது ஆபரணஙகளில வெவவேறுகததிரிதல்போலவும், மெல்லியவஸ்திரததிற்கு நூலிழைபோலவும், துதிககததகக பிரபஞசததோறறததிற்கு அதுவே காரண மாக உற்பவிததாம். எ - று. (உஎ)

ஓது றுமம மாயைபிர பஞசமொடுங் குறிலொடுங்கு முளதே லுண் டா, மேதுவெது வெனின்வித்து மாலுமபோன் மாயைமா யையிலே நிற் குந், தீதிலின்ப துன்பமோ கங்கொடுகக வுளவாகித திரியா நின்ற,கோத றுமுக குணமூண்டக் குணசசெயகை மும்முறையாற் கூறக் கேண்மின்

(இ - ள்.) ஓதுகின்ற அசுத்தமாயையானது பிரபஞ்சம் ஒடுங்கினால் ஒடுங்கி நிற்கும் பிரபஞ்சமிருக்குமானால் இருக்கும். காரணம் யாதென்றால் விதையும் ஆலும்போல மாயையானது மாயையிலேயேயிருக்கும் குற்றமில்லாத இன்பம் துன்பம் மோகம் இவற்றைக் கொடுக்க வுண்டாகித்திரிகின்ற குற்றமற்ற முக்குணங்களுண்டு. அக்குணச் செய்கையை முறைமுறையாகச் சொல்லக் கேட்பீர்களாக எ - று. (உஅ)

தாமதராசதஞ்சாத்து விகமென்னுங் குணமூன்றுந் தன்மை சொல்லிற், காமருதா மதந்துன்ப மிராசதமோ கம்மொன்று கருது நன்மை, நாமமிவை பெறுமூன்று மாயையிலுண் டானவிவை யன்றி நலமோ, ரேமுறுமா யையிற்றோன் றுஞ்சிலவுளவென் றாவற்றையியம்பக் கேண்மின்.

(இ - ள்.) தாமத ராசத சாத்துவிகங்களென்னுங் குணங்கள் மூன்று, அவற்றின் தன்மையைச்சொன்னால், விரும்பத்தக்க தாமதம் துன்பமாம். இராசதம் மோகமாம். மற்றொன்றாகிய சாத்துவிகம் நன்மையாம் மூன்றுபெயர்களையுடைய இவை, மாயையினின் றுண்டாயின இவையேயன்றி மாயையினின்றுதிக்கும் வேறு சில உண்டென்று பெரியோர்சொல்லுவார்கள். அவற்றையுஞ் சொல்லக்கேட்பீர்களாக எ - று. (உகூ)

சத்தமுதலைந்திற்கில முதலைந்துஞ் சட்சுமுத லைந்து மற்றைச், சுத்த வாக்கினைமுதலை வைந்துமன முதனான்கு முன்னாச் சொற்ற, வத்தகைய குணமூன்றும் மூவொன்பான மாயையிலுண் டாவதாகும், வைத்த பிர பஞ்சமொடுங் குறின்மாயை யுடனொடுங்கும் வரிலுண் டாமால்.

(இ - ள்.) சத்தமுதலாக வைந்தும், பிருதிவிமுதலாக வைந்தும், சட்சுமுதலாக வைந்தும், மற்றப்புனிதமாகிய வாக்குமுதலாக வைந்தும், மனமுதலாக நான்கும், முன்னே கூறிய அத்தன்மைத்தான (தாமதராசத சாத்துவிகங்களாகிய) முக்குணங்களும் ஆக இருபத்தேழும் மாயையினின்று உண்டாவதாகும், பொருந்திய பிரபஞ்சமானது ஒடுங்கினால் அவை மாயையோடு இலயமெய்தும். பிரபஞ்சந் தோன்றினால் அதனோடுண்டாகும். எ - று.

இச்செய்யுளிற் காட்டிய தொகை சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்கள். சட்சு சோத்திரம் தொக்கு சிங்குவை ஆக்கிராணங்கள். வாக்குபாதம் பாணி பாயுரு உபஸ்தங்கள். மனம் புத்தி சித்த அகங்காரங்கள் என்பதாம் (௩0)

விரித்திடுமே ழொன்பானும் மாயையுமவேற் றுமையன்றவ் விரிகட்கெல்லா, முரித்தெனநிற் பதுமாயை யுடம்புக்கா தாரமிமூ வொன்பா, னுக்குந், தெரித்தசரீ ரம்பொசிக்கு மதற்கவையே யாதாரந் தீய மாயை, பரித்தகர ணங்களொடு மான்மாவைச் சூழ்ந்திருக்கப் படுவதாமே.

(இ - ள்.) விளக்கிய அவ்விருபத்தேழும் மாயையும் வேற்றுமையுடையவல்ல. அந்த விரிவுகட்கெல்லாம் உரித்தாக விளங்குவது மாயையாம். உடலுக்கு இவ்விருபத்தேழும் ஆதாரங்களாயுள்ளன விளக்கிய தேகமானது பொசிப்பதற்கு அவையே காரணமாகும். கொடிய மாயையானது கரணங்களோடும் ஆன்மாவைச் சூழ்ந்திருக்கப்படுவதென்றும், எ - று. (௩௧)

உரைக்குமிந்தச் சீவனுடைப் பிரமாதி களைப்பசுவென் றுரைக்க லாகும, விரைக்கமலத் தயனனே பிரமமென்று மேதினியின் றளித்தே னென்று, மிரைக்குமுளத துவகையொடு மாயையுட்பட் டிருபபனுடம் பிலனு யெங்கு, நிரைத்துநிரம பியபரமன் றன்விளையாட் டிவைநோக்கி மகிழ்நது நிறகும.

(இ - ள்.) சொல்லிய இததகைய சீவனையுடைய பிரமாதிகளைப் பசுக்க ளென்று சொல்லுவதாகும். மணநதங்கிய தாமரைமலரில் வசிககும் பிரமதேவன் நானே பிரமமென்றும, உலகினைப்படைததேனென றும மனதிற் சநதோஷிதது மாயையின் வயப்பட்டிருப்பான. தேகமில்லாதவராய எஙகும நிரம்பிய பூரணத துவ மெய்திய கடவுள் தனது திருவிளையாடல்களாகிய விவற்றைககணடு களித திருப்பார். எ - று. (கூஉ)

பாசததா லுண்டான தத்துவங்க ளாலறியப் படுவா னல்ல
னேசிதத சீவனுமா யையுமறிதற கரிதாகி நிறப னநத
வீசறகாண் பான்வேண்டிற சற்குருவி னுபதேச மெயதி மறறை
மாசறற சோதியைக்கண டிருவினையற றவனுடே வதிபப ரனறே.

(இ - ள்.) பாசபநதத்தினு லுணடாகிய தததுவஙகளினு லுணரததக்கவனல லாதவனும், விருமபிய சீவனும் மாயையாலும உணாதற்கு அரிதானவனுமாக நிற்பவனுமாகிய அநதப்பதிபபொருளாகிய சிவபெருமானைத தரிசிகக விருமபி னுல, சற்குருவினுடைய உபதேசததைப்பெறறு, அநதக்குற்றமற்ற சுயஞ்சோதி யைத தரிசிதது, இருவினைதொடககனறு அநதபபதியோடு கலநதிருப்பா.எ-று.

முதலுரைதத வான்மாவைச சடபபநததி யாடடுவிககு முதலவ னநதத
திதமுறுமான மாவுககுச் சவதைசாக கிரநதுரியா தீத மீறு
மிதமுறுமவ வுடமபெடுதத சீவனகே வலசகல சுதத மெனனும [ணமின்.
விதமுறுமூன் றினையுடைததா யிருககுமிநத மூனறினையும விளமபககே

(இ-ள்) முதலிற்கூறிய ஆன்மாவைககடவுளே சடமாகக யாடச்செயவிப பான். இறுதியிற சுகமடையும ஆன்மாவுககுச் சாககிரமுதல துரியாதீதமிறுதியா கப்பஞ்சாவஸ்தைகளுணடு. நனமைபெறததக்க அததகைத தேகமெடுதத அவ் வான்மா, கேவலம் சகலம் சுததமெனனும் அவஸதாததிரயததிற் பட்டதாயிருக் கும். இநதமூததிறததானமாவையுஞ சொலலககேடபீாகளாக. எ - று. (கூச)

உறககமுறிற கேவலமாம பாசததா ருடன்கூடி யுவநது சிநதை,
சிறப்புறுதல சகலமெனபா சிவன்மன னரனடிககீழ்ச செலுததித த
னனை, மறபபுறுதல சுததமெனப ரிவைமூன்றிப படியானை மனததினே
ரா, விறைப்பொழுது தியானிககிற பரமசிவன றிருவருண்மற றிவனுக
குண்டாம்.

(இ - ள்.) நிததிரையெய்திற் கேவலாவஸ்தையாம். பாசபநதமுடையாரோ டுகலநது மனங்களித்து மேமபடுதல சகலாவஸதையென்று சொல்லுவாாகள். ஆன்மாமிகுதியும் சிவபெருமான் திருவடிநீழலில் மனதைச்செலுததித தன்னை மறநதிருததலைச் சுததாவஸதையென்பாாகள். இவவவஸதாததிரயம இததகை யன. சிவபெருமான்திருவடியை மனதிற்கருதி க்ஷணகாலம் தியானித்தால இவ னுககுச் சிவகடாக்ஷமுணடாம். எ-று. (கூரு)

அக்கால நல்லறிவென் றொன்றுண்டா மதுசிவனை யறிவித் தன்னோன்
மிக்காய நூலவழியிற செலுஞசென்றாற சிவனடியி லன்பு மேவுந [ர்
தொக்காய வுடமபுக்கு முயிர்க்கு முள வேறறுமையுந் தோன்றும பின்ன
மைக்காள கண்டனவ னேயிறவாப பொருளென்னு மனனுண் டாமால்.

(இ - ள) அக்காலத்தில, நலலறிவெனப தொன றுணடாகும். அவ்வறிவே சிவனையுணாததி, அவனருளிய மேமபட்ட சிவாகமநெறியிலே செலலும். அப்படிச்சென்றால, இவனடியிலே அனபுணடாகும். கலந்திருக்கின்றதாகிய உடலுக்கும் உயிருக்குமுள்ளவேறுபாடுந தெரியவரும அதனபிறகு, விஷம்பொருந்திய நீல கணடத்தையுடைய சிவபெருமானே அழியாப்பரமபொருளென்னும் சித்தமுண டாகும். எ - று. (கூ௬)

திருக்கோயி னியமமரன் பணிவிடையிற சிந்தைசெலுந் தேசிகன்ற,
னருட்கூர வேணடுமெனு கருததுணடாந தொணடரிடத்தன்பு முண்,
டா, முருத்திரவக்கமபூதி யஞ்செழுத்தை யிடைமறததற குள்ள மோ
ரா, திருக்குமர னருச்சனைபெற றங்கிலையா சாரத்தி னிருக்கவேண்டும.

(இ - ள.) திருக்கோயில நியமம, சிவபணிவிடையில மனஞ்செலலுகின்ற ஆசாரியனுடைய திருவருளை மிகுதியும் பெறவேணடுமெனனுங கருத்துண்டாகும். அடியாாகளிடத்தில அனபும உளதாகும, உருத்திராக்கம திருவெணணீறு பஞசாக்கரத்தை நடுவே மறப்பதற்கு மனமிணங்காது. விளங்குஞ் சிவார்ச்சனையை யெய்தி அந்த நிலையிலேயே யாசாரத்தோடு இருக்கவேணடும். எ - று. (கூ௭)

எப்பரிசப பரிசரனபா லுளமிருத்தி யிந்நெறிக்க ணியலா நிற்போ
னொப்பரிய பாசநீத் தொழிந்தசிவ ஞானியவ னுலகோ ரேத்திச
செப்பியருச சிப்பதற கு முரியனவன சிவகதியிற செலலா நிற்போ
னிப்புவனத் தவறகனமீந திடிற்சிவனுக் கற்புதமா யிருக்கு மன்றே.

(இ - ள) எத்தன்மை யெனினும, அத்தன்மையாகச் சிவபெருமானிடத்தில மனத்தையிருத்தி இவவழியில நடப்பவன, ஒப்பிடுதற்கரிய பாசத்தை யகற்றியொழிந்த சிவஞானியாவான. அவனே உலகினா துதிசெயது புகழ்ந்து பூசிப்பதற்கும உரியவன, அவனே சிவகதியிற செலலுபவன. இவ்வுலகத்திலே அத்தகைய சிவஞானிக்கு அன்னமளித்தால, சிவபெருமானுக்கு ஆனந்தமாக விருக்கும். எ - று. (கூ௮)

அன்னவனை நிந்திப்ப தரனைநிந திப்பதவன றன்னை வாழ்த்தன்,
முன்னவனை வாழ்த்துவதா மவனருட்கண ணோக்கடைந்தார முத்த
ராவ, ரெனனிலர னருச்சனையே செயவேணடு மிவனபெறுதற கரிய
விலலை, சொன்னதுசத்தியமெனறுன கேட்டமுனி வராசடிலந் துளக
கிச சொல்வார்.

(இ - ள) அவ்வகைச சிவஞானியை நிந்திப்பது சிவபெருமானை நிந்திப்பதாம். வாழ்த்துவது சிவபெருமானை வாழ்த்துவதாம். அவன கிருபாநோக்கமெய்தியவர்கள் ஜீவன்முத்தராவார்கள் என்று சொன்னால், சிவார்ச்சனையே செய்யவேணடும். இவன் அடைதற்கரியவை யிலலை. சொலலியவையெல்லாஞ் சத்தியமென்று சூதமுனிவர்கூறினர். கேட்டிருந்த நைமிசாரணிய முனிவர்கள் சிரமசைத்துச் சொல்வாாகள். எ - று. (கூ௯)

தீட்டரிய பழமறைநான் கினைத்துணர்ந்து புராணமுற்றுந் தெளி
ந்தோய் சொல்லக், கேட்டுணர்ந்தோம் பசுபாச நிலையிந்தப் பாசத்தாற்
கிளையா நின்ற, மோட்டறிவு நீத்தொழியா முத்திதரும் பதிநிலைமை
மொழிதி யென்றார், நீட்டுநெடுங் கொடிச்சடில மாதவர்க்குச் சூதனது
நிகழ்த்த லுற்றான்.

(இ - ள்.) எழுதுதற்கரிய பழமையாகிய நான்குவேதங்களையுங் கற்றுப் புரா
ணங்களையெல்லாந் தெளிந்த சூதமுனிவரே! பசுநிலை பாசநிலை யிவற்றைத் தேவ
ரீர் சொல்லக்கேட்டறிந்தோம் இந்தப்பாசத்தினாலே கிளைக்கின்ற பெருமைதங்
கிய அறிவு நீங்கி, அகலாமல் முத்திதரத்தக்க பதிநிலைமையைச் சொல்வீராகவென
ரார்கள். நீட்டியநெடியகொடிபோன்ற சடையையுடைய பெருந்தவஞ்செய்தவர்க
குச் சூதமுனிவர் அதனைச்சொல்லுவதானார். எ - று. (௪௦)

கண்ணாலுங் கருத்தாலு மெட்டமன்றே யரிபிரமா கருதி நோக்கு[ முண்டா
மெண்ணாலும் புலப்படா வொருபொருளுண் டப்பொருண்மற் றெங்கு
ணண்ணாது நண்ணிநிறைந் தெப்பொருட்கு மேலாகி நவையின் மேலோ
ருண்ணாடித் தெளிந்தறியிற் பரஞான ரூபத்தி னுண்மை யாமால்

(இ - ள்) எம்மையொத்தோர்களுடைய கண்ணாலுங் கருத்தாலும், அரிபிர
மாதிகள் எண்ணிப்பார்க்கும் ஞானநோக்காலும் புலப்படாத ஒரு பரம்பொரு
ளுண்டு. அப்பொருளோ எல்லாவிடத்திலும் உள்ளதாம். எதனுள்ளும் பொருந்
தாது பொருந்திப் பூரணமாகி, எல்லாப்பொருள்கட்குமேலாகி, குற்றமில்லாத
மேலோர் உள்ளத்தால் நாடித்தெளிந் துணர்ந்தால், அப்பரஞானரூபத்தின் உண்
மையுண்டாகும். எ - று. (௪௧)

அந்தரபூ ரணமாகிச் சோதிமய மாயிருக்கு மானமா வுக்குப்
பந்தமறுத் தருள்புரியு மாணவமற் றதற்கில்லை பகரி னீது
வந்தனைநிட் களமென்ப ரரிபிரம னுருத்திரன்மகேச னென்னு
மிந்நால் வரைச்சகள மென்பர்சதா சிவஞ்சகளா களமென் பரால்.

(இ - ள்) அந்தரபூரணமாகியும் சோதிமயமாகியும் விளங்கும் ஆன்மாவுக
குப் பந்தமோசனஞ்செய்து அநுக்கிரகிக்கும் ஆணவமென்பது அவ்வான்மாவுக்குக்
கிடையாது. சொல்லுமிடத்தில் இதனை வந்திக்கத்தக்க நிஷ்களமென்பார்கள்.
திருமால் பிரமன் உருத்திரன் மகேசனென்னும் இந்த நால்வரைச் சகளமென்
பார்கள். சதாசிவத்தைச் சகளநிஷ்களமென்பார்கள். எ - று. (௪௨)

இத்தகைய வைந்துமுல கிலக்கமகா சதாசிவத்திற் றோன்று
மெய்த்தசா தாக்கியங்க ளைந்துமந்தப் பொருளிடத்து முதித்த வாகுஞ்
சுத்தவீ சானாதி யைந்துபிர மத்தோடு மிதய மாதி
வைத்தமூ வீரங்கத் தொடுமிருப்ப தது வதனை வகுக்க லாமே.

(இ - ள்) இவ்வகைத்தாகிய ஐந்தும் உலகமானது இலயமெய்துகையில்
மகாசதாசிவத்தினின் றுதிக்கும். செலுத்திய ஐவகைச் சாதாக்கியங்களும் அந்தச்
சதாசிவப் பொருளினின்றுந் தோன்றியனவாம். புனிதமாகிய ஈசானாதிபஞ்சப்
பிரமத்துடன் இதயமுதலாகப் பொருந்திய ஆறங்கங்களோடு மிருப்பது அது
வாம், அதனைவகுத்துச்சொல்லுவாம். எ - று. (௪௩)

நீதறுமப் பொருளினைசச தாசிவம மாசதா சிவமென் றோது
மோதருமகேசசுரததி னையைநது மூாததியுதித துளவா மநத
வாதிமகேச சுரனைநது தொழிலுக்குங கருததனவ னனறி யுளள
பேதமலப படுமான் மாக களெயெலலாம பசுக்களென்று பேச லாமே.

(இ - ள்.) குறறமறற அபபொருளைச சதாசிவம் மகாசதாசிவமென்றுசொல லப்படும் சொலலுதறகரிய மகேசசுரததினின்றும் இருபததைநது மூர்ததிகள் உதிததுளளாாகள். அநதமுதலவனுகிய மகேச்சுரனே பஞசகிருததியஙகளுககும் கருததாவாவான அவ்விறைவனலலாமலுளள பேதமாகிய மலசம்பநதப்பட்ட ஆனமாககளெலலாவறறையும பசுககளென்று சொல்லுவதாகும. எ-று. (சச)

விளமபுமிநதப பசுககடமைப பாசததாற கட்டியருள் விளையாட் டாடு, மளநதறியி னபபசுவுக கனுககிரகிக தருளபுரியுமநத வீச, னுள நதெரிச தாசிவததை மகாசதா சிவததையொழிததிடையே நின்று, களங்க றுததமகேசசுரனேபொருளெனபதெனனையெனிறகழுப்பகேண்மின்.

(இ - ள்) அளவுபடுததி அறியுமிடததில அநதமகேச்சுரனே, சொல்லிய விநதப்பசுககளையெலலாம பாசபநதததாலவீககி அருட்டிரு விளையாடலைச் செய் யாநிற்பன. அநதபபசுககளுககு அநுககிரகஞ்செயயததகக காலததிலே அருள புரிவான. மனதால அறியததகக சதாசிவத்தையும் மகாசதாசிவததையும விலக்கி நடுவேயிருநது நீலகணடததையுடைய மகேச்சுரனையே பொருளெனறு சொல் லுவது யாதுகாரணமெனில அதனைச சொல்லககேட்பீாகளாக. எ- று. (சரு)

நிட்களமென றுரைபபாமகா சதாசிவததைச சகளநிட் களமென் றோதி, யுட்கருதி யுரைபபாசதா சிவததைமகேச சுரனுசகள மென்ப ருணமை, பெடபுறமுப பொருடகுமொரு பேதமிலை யவையுணாந்து பிரிததுச சொறறே, நட்புறமா தவததலைவீ ராஙகவைக ளொருபேத நடததற பாறறே.

(இ - ள்., மகா சதாசிவததை நிட்களமெனறு சொலலுவாாகள். சதாசிவத தைச் சகள நிட்களமெனககூறி மனதிற் றியானித துரைப்பார்கள். மகேச்சுரத் தைச் சகளமெனபாாகள. உணமைததனமைபொருநதிய அமமுப பொருளகளுக கும ஒரு பேதமுங கிடையாது அவறறையறிநது பிரிவுபடுததிக கூறினேம். அனபுபொருநதிய பெருநதவததலைவாகளே! அவைகள ஒருபேதமாக நடககுந தனமையவோ? எ - று. (சசு)

எடுததுரைககு மகேசசுரனு ரியலாத தொனறில்லை யெவைக்கு மேலாய்ப, பநததசததி யொடுமிருபப னினைததவைபெல லாமுடிக கும பரம னனறேனு, றெடுததறிதற கரியவனப பொருளறிநதோன பாசததின றொடாபை நீககி, விடுததுமுததி யடைவனினிச சரியைமுத னன்குதரு மேனமை கேணமின.

(இ - ள்.) எடுததுச சொலலிய மகேச்சுரனால முடியாததும மொன்று மிலலை. எலலாவற்றிறகும் மேலாகிவிளஙகிய சததியோடும வீற்றிருப்பன. கரு தியவறறையெலலாம் நிறைவேற்றும் மேலானவன. அவனே ஆலோசிததுணர் தற்கு அருமையானவன. அநதப்பொருளை யுணாநதவன் பாசபநதத்தை யகற்றிக் கொணடு ஜீவனமுததியெய்துவான இனி, சரியைமுதலியநான்கும் கொடுக்கத தகக மேன்மைகளைக கேட்பீர்களாக. எ - று. (சஎ)

முந்துரைத்த சரியையோன் சிவலோகம்பெறுங்கிரியை முயன்றோ
ன்மற்றை, யெந்தைசாமீபம்பெற றிருக்கும்யோ கத்தடைந்தோன்சாரூ
பத்தை, வந்தடைவன சிவஞானி சாயுச்சி யம்பெறுவன மறைவல்லோா
கள், சிந்தைதெரிந் திடுஞான மேமுத்தி தருவதுண்மை செப்புங்காலே

(இ - ள்.) முதலிற்கூறிய சரியையிலிருப்போன சிவலோகத்தை யெய்து
வான் கிரியையிற பழகினோன எமதுந்தையாகிய சிவபெருமானுடைய சாமீபத்
தையடைந்திருப்பான யோகநிலையெய்தியவன சிவசாரூபத்தைப் பொருந்து
வான். சிவஞானியாயுள்ளவன சாயுச்சிய முத்தியடைவான சொல்லுமிடத்தில
வேதத்தில வல்லவாகள் மனதாலுணாந்த சிவஞானமே மோக்ஷத்தைக் கொடுப்ப
துண்மை. எ - று (சஅ)

பரமஞா னந்தெரிந்தற கரிதரிதப பரமஞா னத்தா லானமா
விரவுமா யையைத்துரக்க லாமபலவாங் கலைகளைத்தும விரித்துக் கற்று
முரவுநான் மறையுணாந்தும புராணசாத்திரங்களா கமங்களோாந்துங்
கரவுதரு பதிபசுபா சத்தையறிந் தவாக்கல்லாற கதியுண் டாமே

(இ - ள்.) பரமஞானமானது எடுத்துச்சொலலுதற்கரியது அரியது. அந்த
மேலான ஞானத்தினாலேயே ஆனமாவானது பொருந்திய மாயையைத் துரந்து
விடலாகும பலவகைத்தாகிய கலைகளையெல்லாம விரித்துணர்ந்தும நானகுவே
தங்களை யறிந்தும புராணங்கள சாத்திரங்கள ஆகமங்களையெல்லாங் கற்றுமறை
பொருளாகிய பதிபசு பாசங்களை யுணாந்தவாகட்கேயல்லாமல ஏனையோாக்கு
மோட்சமுண்டாகுமோ? எ - று. (சகூ)

மோனத்தா லருந்தவங்க ளியற்றுமுனி வராகாளம முதலவன் றனனை
ஞானத்தா லலதுணரப படுமோவிஞ் ஞானமகத் திருப்ப நன்றென
றேனைப்பா சத்திலகப படடுமயங் குறுவாா்த் தொழிந்து ஞானத்
தானத்தா ாிறபாாலலோ ரவரடியை யருச்சிக்கத் தகுவ தாமே.

(இ - ள்.) மவுனநிலைமையால அருந்தவங்களபுரிந்த முனிவாகளே! அவவி
றைவனை ஞானமாாக்கத்தாலல்லாமல அறியபபடுமோ? விஞ்ஞானமானது மனத்
திலிருப்பவும, ஏனையபாசங்களில நன்றென்று அகப்பட்டு மயங்குவாாகள இதனை
யகற்றி ஞானத்தானத்திலே நல்லோா நிறபாாகள. அத்தகையினா பாதங்களை
அறிவுடையோா பூசிக்கத்தக்கும். எ - று. (ருo)

சரியையாதி மான்மியச்சருக்கம் முற்றிற்று

---

ஆகச்சருக்கம் ௯௧-க்குத் திருவிருத்தம்-௪௨௧௯.

---

## நாற்பதாவது

# மூர்த்திவிசேடச் சருக்கம்.

### கலிவிருத்தம்.

அருந்தவத் தலைவிர்கா ளையைந் தாநிலை
தருங்குண மூர்த்தியின் றன்மை பேசுவா
மொருங்குணர்ந் துளமொருப் படுத்திக் கேட்கெனப்
பெருங்குணத் தருந்தவச் சூதன் பேசுவான்.

(இ - ள்.) அரியதவச்செயலுடைய தலைவர்களே! இருபத்தைந்து நிலைமையாகிய மூர்த்தியின் தன்மைகளைச்சொல்வோம் நன்குணர்ந்து மனவொருமைப் பாட்டுடன் கேட்பீர்களாகவென்று பெருமைதங்கிய குணத்தையும் அரியதவத்தையுமுடைய சூதமுனிவர் சொல்வாராயினர். எ - று. (௧)

அத்திறத் தோதிய வையைந் தாந்திறத்
தொத்துநின் றியல்வது கயிலை யோங்கலின்
முத்தரோங் கியசிவ கதியின் மொய்ம்புனற்
றத்துமா கயிலையிற் சரிப்ப தாகுமால்.

(இ - ள்) அவ்வகையாகக்கூறியது இருபத்தைந்து மூர்த்தங்களாம். அவை வல்லபத்தில் ஒருபடித்தாக நின்றுவிளங்குவது, திருக்கைலாயகிரியின் சீவன் முத்தர்கள் மேம்பட்டுள்ள சிவபதவியில், நெருங்கிய நீரலம்புகின்ற பெரியகைலாயத்தில் சஞ்சரிப்பதாகும். எ - று. (௨)

ஆதிநா யகன்றிரு வருளி னப்பொருள்
பேதமின் மகேச்சுரப் பிரிவிற் றோன்றிய
சீதநீ ருலகிலா ருயிருண் டாகுவா
னேதமில் குணத்தர னிலிங்க மாயினன்.

(இ - ள்.) முதற்கடவுளாகிய சிவபெருமான் திருவருளினால் அப்பொருளானது பேதமில்லாத மகேசுவரப்பிரிவினாற்றோன்றிய குளிர்ச்சிதங்கிய கடல்சூழ்ந்த பூமியில், பொருந்திய உயிர்களைப்படைக்கும்படி, குற்றமில்லாத குணத்தோடு சிவபெருமான் சிவலிங்கமூர்த்தியாயினர். எ - று. (௩)

முக்கண னிலிங்கமா மூர்த்தி யாதலி
னக்குறி யுயிர்த்தொகை யனைத்து மெய்தின
வொக்கநோக் காவிடை யாளை யொண்டொடி
மைக்குழன் மடந்தையர் வதியப் பெற்றனர்.

(இ - ள்) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான்சிறந்த இலிங்கமூர்த்தியானபடியால், உயிர்த்தொகுதிகள்யாவும் அக்குறியையடைந்தன. அதுபோலவே ஒளிதங்கியவளையலையணிந்த கரியகூந்தலையுடைய மாதர்கள் ஆவுடையாளை எய்தப்பெற்றார்கள். எ - று. (௪)

ஆதலா லுயிர்த்தொகைக் கருளு மத்தனுந
தீதறு மன்னையுஞ் சிவனுந தேவியு
மாதல முயிர்த்தொகை வருகக வேண்டியே
யோதரு மிலிஙகததி னுருவ மாயினன்.

(இ - ள்.) ஆனபடியால் ஆன்மகோடிகளுக்கு அநுக்கிரகிக்குந் தநதையும் குற்றமற்றதாயுமாகிய சிவபெருமானும் உமாதேவியுடன், பெரிய உலகிலுள்ள பிராணகோடிகளைச் சிருட்டிககவிரும்பியே சொலலுதற்கரிய இலிஙகததினவடிவமாயினர். எ - று. (கூ)

முந்திய மூர்த்தமீ தடுதத மூர்ததமோர்
சுநதர வுருவமாய்ச சுகாச னததாய்
யெந்தைநா யகனெனும பெயர தாயிக
லுந்திய மழுபபடை யுழையுந தாஙகுமால்.

(இ - ள்) இதுவே முற்பட்டமூாததம் இதனையடுதத மூர்ததமாவது - ஒப்பற்ற சுநதரரூபமாயச் சுகாசனததிலுற்றதாய எமது தநதையாகிய சுகாசனமூாத்தியென்னும்பெயருடையதாய, பகைமையை நீககிய மழுவாயுததததையுமமானையுமேற்று நிற்கும். எ - று. (சு)

அப்பரி சிருத்தலா லுயிாகள் யாவையுஞ்
செப்பரு மிளமையிற சிலேக்கை மாரனுல
வெபபெழு விகாரமுற் றிருநத மெய்ததவத
தொப்பரு முனிவிரீ துபய மூாததமே.

(இ - ள.) அவவகையாக விளஙகுதலால ஆன்மாககளெலலாம சொல்லுதற்கரிய இளமைப்பருவததில விலலேநதியகையையுடைய மனமதனாற் கொடுமையாகிய காமவிகாரமெயதியிருநதன உண்மைத தவததினால் ஒபபுகூறற்கரிய முனிவர்களே! இது இரணடாவது மூர்ததம். எ - று. (எ)

மூன்றெனப் படுதனி மூர்த்தி யம்பிகை
யேன்றுறத் திருவுளத தெண்ண லானிலந
தோன்றிய வுயிாததொகை தொடுதத காமததி
னூன்றிய விருப்பினு லொருததி வேண்டின.

இ - ள் ) மூன்றாவதென்றுசொல்லப்படட ஒப்பற்ற உமேசமூர்ததி, உமாபிராட்டியாரை வாமபாகததிற்பொருநதுமபடி திருவுளததிற கருதியதால், உலகிற்றோன்றிய உயிாததொகைகள், உணடாகிய காமவேட்கையால மாதாகளை விரும்புவனவாயின எ - று. (அ)

நாலெனப படுவது நமப னமபிகை
வால்வளைக் கரநதொடு வதுவை வேண்டலாற்
பால்படு முயிர்த்தொகை வதுவைப பண்பொடுங
கோல்வளைக கரநதொடக குணிதது நின்றதால்.

(இ - ள்.) நானகாவதெனறு சொலலப்படுவது சிவபெருமான் உமாதேவியின் தெளளியவளையலணிநத திருககரததைப்பறறித திருககலியாணஞ்செய்ய விரும்பிய உமேசமாகையால், பகும்புகளையுடைய உயிாததொகைகள் கலியாணததன்மையோடும் அழகியவளையணிநத மாதாகளையப்பற்றககருதி நின்றன.

ஐந்தெனப் படுவது தம பிகையின் றன்மணச
சுந்தரக் கோலங்கொண் டிருந்த தோற்றத்தான்
மைந்தரு மாதரும வதுவை முற்றியே
தந்தமி லுவகைபெற றிருக்கத் தந்ததே

(இ - ள்.) ஐந்தாவதென்றுசொல்லப்படுவது உமாதேவியாரின் திருக்கலியாணசுந்தரகோலத்தைக்கொண்டிருந்த காட்சியினாலே ஆடவரும் மகளிரும் திருக்கலியாணச்சடங்குமுடித்துத் தங்கடங்களிற் சந்தோஷமெய்தியிருக்கத்தக்கதாயிற்று. எ - று. (௧௦)

ஆறெனப் படுவதி மாசலத்திமை
வேறுறா துருவொடு கலந்த மெய்ம்மையா
லூறிய கலையெலா முணர்ந்து மன்பதை
நாறுபூங் குழலொடு நயக்க வேண்டிற்றே

(இ - ள்) ஆறாவதென்றுசொல்லப்படுவது, இமாசலகுமாரியாகிய உமாதேவியைவேறுபடாமல் தமது திருவுருவோடும் அர்த்த நாரீசமாகக்கலந்த வுண்மையினாலே, அதிகரிக்கின்ற கலைஞானங்களையெல்லாந் தெரிந்திருந்தும் மாந்தர்கள், மணம்பொருந்திய அழகிய கூந்தலையுடைய மங்கையருடன் விரும்பவேண்டியதாயிற்று. எ - று. (௧௧)

ஏழெனப் படுவது குமர னெம்பிரான்
றூழ்குழ லுமையொடுந் தணப்பு றாமையால்
வாழிய நெடுநிலம் பிறந்த மன்பதை
யூழ்முறைத் தநயரோ டுவகை யுற்றதே.

(இ - ள்) ஏழாவதென்றுசொல்லப்படுவது எமது சிவபெருமான் ஸ்கந்தரையும் தொங்குகின்ற கூந்தலையுடைய உமாதேவியையும் பிரியாது சோமாஸ்கந்தராகவிளங்குதலால், பெரிய நிலவுலகத்திற்பிறந்த மாந்தர்கள் ஊழ்வினை வசத்தாற் புதல்வரோடுகளிப்புறுவாராயினர். எ - று. (௧௨)

எட்டெனப் படுமுரு விறைவன் பாலிள
மட்டுவார் துளவினோன் றிகிரி வாங்கிமேம்
பட்டெழு திதிமுறை பரிப்பப் பண்டையோர்
தொட்டநீ ருலகெலாம் போந்து தய்ப்பவே.

(இ - ள்.) எட்டாவதென்றுசொல்லப்படுஞ் சக்கிரதானமூர்த்தம், சிவபெருமானிடத்தில், இளமைதங்கிய மணமமைந்த நெடிய துளசிமாலைதரித்ததிருமால் சுதரிசனமென்னுஞ் சக்கிராயுதத்தைப்பெற்று மேம்பட்டுள்ள காத்தற்றொழிலை முறைப்படி தாங்குதலால், முன்னோர்[சகரர்] தோண்டியகடல்சூழ்ந்த உலகமுழுவதும் தோன்றிப்புசிக்கின்றன. எ - று. (௧௩)

ஒன்பதென் றுரைப்பதெம் மொருத னிப்பொரு
ளன்பொடு மூவுரு வெடுப்ப வாருயி
துன்புறு மாயமத் தூல சூக்கும
மென்பன முச்சட மெடுக்க வேண்டின.

(இ - ள்) ஒன்பதாவதென்றுசொல்லப்படுவது எமது ஒன்றியாகிய ஒப்பற்ற பரம்பொருளானது அன்புடன் திரிமூர்த்தவடிவம். அவ்வடிவெடுத்தலால் அரியு

வுயிர்கள் துன்பம்பொருந்திய மாயவுடல் தூலசரீரம் சூக்குமசரீரமெனனும் மூசசரீரஙகளெடுக்கவேண்டிவந்தன. எ - று. (௧௪)

பத்தெனப் படுவதப பரம நாயகன்
முத்தரிற றெகக்ணு மூரத்த மாயவாக்
கொத்தநின் றுண்மைசொற றுறுத லாருயி
ரித்தலைக் குருமுகத திறைஞசிக் கேட்கவே.

(இ - ள்.) பத்தாவதென்றுசொலலப்படுவது அம்மேலாகிய சிவபெருமான் சீவனமுத்தாபோலத் தக்ஷிணுமூர்த்தமாகி, அவாகட்குச் சமானமாயிருந்து சத்தியப்பொருளை உபதேசித்தபடியால், அரியமாந்தாகள இவ்வுலகத்திற குருமுகத்திலே வணஙகி உபதேசஙகேட்கக்கடவராயினா. எ - று (௧௫)

அமபணி வேணிபிச சாட னபபெயா
நமபனு யநதா நாத னுதலா
லெமபிரான ஞானநா யகனென றிவவுயி
ருமபரு முணாவாபன றென்றி னெனபரால்.

(இ - ள) பதினொனறாவதில, கஙகாசலத்தையணிந்த சடையையுடைய சிவபெருமான் பிக்ஷாடனப்பெயாமூர்த்தியாகி அநதரநாதனுராயினமையால, எமது சிவபெருமானே ஞானநாயகனென று இவவுலகிலுளள வுயிாகளுந தேவாகளும் தெரிவாாகள் எ - று. (௧௬)

பன்னிரண் டாவதப பால லோசனன
கன னிகை யொழிந்துகங் காள னுதலாற
றுன்னிலத் தியோகியா தூநி லாசசிறை
யன்னமன னவரிடத் தாசை நீத்ததே.

(இ - ள்.) பன்னிரணடாவது நெற்றிக்கணணையுடைய அந்தச் சிவபெருமான் உமாதேவியை விலக்கி (வாமனனமுதிகநதணடையேநதிய) கஙகாளமூர்த்தியானபடியால, பெரியபூமியில யோகிகள புனிதமானவெளளிய சிறையையுடைய அனனம்போனற மஙகையரிடத்தில ஆசையகனறதாம. எ - று. (௧௭)

மூன்றுபத தாவது முகக ணனிக
லேனறெழு மாரனை யெரிக்க வறறைநாட்
டோன்றரு வெடுத்தலாற றொனனி லத்தவ
ரானறெழு காமத்தீ யவிக்கப பெறறதே

(இ - ள்.) பதின்மூனறாவது சிவபெருமான, பகைமைகொணடெழுந்தமன் மதனை யெரிக்கும்படி அக்காலத்திற் றோனறிய காமசஙகாரமூர்த்தியுருவெடுத்ததால, பழயபூமியிலுளளவாகள, அதிகரித்தெழுந்தகாமாக்கினியை யடக்கப்பெற்றாாகள. எ - று. (௧௮)

ஈரெழு தொகுதிமற் றீச னநதகன
போாசெகுத் துறவெனப பொருந்து மூாத்தத்தாற
பாாமிசைப பகக்குவ மடைநத மேலவ
ரோாசிறி தவன்பய மொழிய நிற்பதே.

(இ-ள்.) பதினான்காவது சிவபெருமான் இயமனைப்போரிற் செயித்துக் கொன்றுவருகவென்றுபொருந்திய காலாரிமூர்த்தத்தால், உலகத்திற் பரிபக்குவமெய்திய மேலோர் அவ்வந்தகபயத்தினின்றும் ஒரு சிறிது நீங்கப்பெற்று நிற்பதாம். எ-று. (௧௯)

ஐந்துமூன் றெனப்படுமென் னீச னூர்மா
தந்தெதி ரெழுசலந் தரனை மாய்த்ததலான்
முந்தைநான் மறைந்தவர் முனிவு நீத்துநற்
சிந்தையி னருந்தவஞ் செய்து நிற்பரால்.

(இ-ள்.) பதினைந்தாவது மூர்த்தமாவது எனது சிவபெருமான் போர்புரிந்து எதிர்த்தெழுந்த சலந்தராசுரனைக்கொன்ற சலந்தராரிமூர்த்தம் அதனாலே பழமையாகிய நான்கு வேதங்களையுணர்ந்த தவசிகள் கோபநீக்கி நற்கருத்துடனே அரிய தவத்தைச்செய்துகொண்டிருப்பார்கள். எ-று. (௨0)

எண்ணிரண் டாகுவ தெந்தை யெம்பிரான்
றிண்ணெடு முப்புரஞ் செகுத்த தோற்றத்தா
னண்ணரு நிமலமாய நானி லத்துள
புண்ணியத் தவர்குணத் திரய மோனதே

(இ-ள்.) பதினாறாவது எமதுதந்தையாகிய சிவபெருமான் வலிதங்கியநெடிய முப்புரங்களையெரித்த திரிபுரசம்மாரமூர்த்தமாம். அதனால் அடைதற்கரிய மலரகிதராய உலகின் கண்வசிக்கும் புண்ணியசொரூபிகள் முக்குணங்களும் நீங்கப்பெற்றதாம் எ-று. (௨௧)

சொற்றிடப் படுபதி னேழிற் றொல்லையோன்
செற்றமுற் றெழுநர சிங்க மாய்ப்பதற்
குற்றதோர் சரபமா யுதிப்ப மேலவர்
பெற்றபா சங்களைந் தொழிக்கப் பெற்றனர்.

(இ-ள்) சொல்லப்பட்ட பதினேழிலே, பழையோனாகிய சிவபெருமான், (இரணியன்மீது) கோபங்கொண்டெழுந்த நரசிங்கத்தைச் சங்கரிப்பதற்குப்பொருந்திய ஒப்பற்ற சரபமூர்த்தியாய்த்தோன்ற, மேன்மைக்குணமுடையோர் தமக்குற்ற பாசங்களைக்களைந்து நீக்கப்பெற்றார்கள். எ-று. (௨௨)

ஒன்பதிற் றிரட்டியி னுமையொர் பாகத்தான்
றுன்புறத் தருவிட நுகர்ந்த தோற்றத்தா
லின்புறு மருந்தவ மியற்றித் தொன்னில
மன்பதை யாணவ மலத்தை நீத்ததே.

(இ-ள்.) பதினெட்டில் உமாதேவியை ஒருபாகமாகவுடைய சிவபெருமான், (உலகமானது) துன்பமெய்தும்படி (திருப்பாற்கடல்) தந்தவிஷத்தை ஆபோசனஞ்செய்த நீலகண்டமூர்த்தத்தால், பழயபூமியிலுள்ளமாந்தர்கள் இன்பம்பொருந்திய அருந்தவஞ்செய்து ஆணவமலத்தை நீக்கியதாம். எ-று. (௨௩)

ஒன்றொழி யிருபஃ துரைப்பிற் றேனுலாங்
கொன்றையோ னிருதலை மூன்று காலொடு
வன்றிறன் மருப்புநான் கெழுகை வாய்ந்தரு
ளன்புறு பிரம மேழென்ப தாயினன்.

(இ - ள்.) பத்தொன்பதாவது, மூர்த்தத்தைச்சொன்னால், தேனைபொருந்தியகொன்றைமாலையணிந்த சிவபெருமானை, இருசிரங்களும மூன்றுகால்களும் வலியவெற்றிதங்கிய நான்குகொம்புகளும் ஏழுகைகளுமபொருந்தி அருள்புரிகின்ற அன்புதங்கிய சப்தப்பிரமமெனனுமூர்த்தியாயினா. எ - று. (உச)

ஆதலா லுயிர்த்தொகை யனைத்து மவ்வழி
தீதறு கிரியையுந தெளிந்த ஞானமு
மூதறி வுடனடைந தடங்க முந்தையோன்
வேதநூற கைலையின விளங்கப பெற்றதே.

(இ - ள்.) ஆனபடியால ஆனமகோடிகளெல்லாம் அவவகையாகககுற்றமற்ற கிரியையும தெளிவுற்றஞானமுமம மூதறிவோடுபெற்று அடங்குமபடி ஆதிநாயகனுதிய சிவபெருமானுடைய வேதநூனமுழக்குடைய திருக்கைலையில விளக்கமெய்தியது. எ - று. (உரு)

இருபஃ தெனபபட லெமமை யாளுடை
யொருவனத தருமத்தி னுருவ மாதலாற
றருமமே யருங்கதி தருவ தாமெனக
கருதியிவ வுயிர்க்கெலாங கருத்து ளுற்றதே.

(இ - ள) இருபதாவதெனறு சொலலபபடுவது, எமமையடிமையாகவுடைய ஒப்பற்ற சிவபெருமான் அத்தருமத்தினசொரூபமானபடியால, தருமமே யடைதறகரிய முத்தியைககொடுப்பதாமெனறுகருதி இவவுயிர்கட்கெல்லாம மனத்திற் பொருந்தியது. எ - று. (உசு)

மூவெழு தொகுதியின முக்க ணையக
னேவரு வயிரவத் துருவ மாதலின
மேவரு மிருநிலப புனித மேலவா
தாவருந துறவராய்த் தணந்து நீத்தனர்.

(இ - ள்.) இருபத்தொனறில, திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் கெடுதலற்றவைரவமூர்த்தமானபடியால, அடைதறகரியபெரியபூமியிலுள்ளபரிசுத்தமானமேலோர்கள, பெறுதறகரியதுறவிகளாய (உலகவினபங்களை) விட்டுநீங்கினார்கள். எ - று. (உஎ)

பத்திரண் டேறறிடு மிரணடிற பண்ணவன்
றத்துவெள விடையிருந் தருளுந தனமையான
மொய்த்தெழு பஃறிரை மூரி நீரிடை
யித்தலத் துயிரெலா மினபம பெற்றதே.

(இ - ள்.) இருபத்திரணடில, சிவபெருமான தாவிசசெல்லும் வெள்ளிய இடபத்தினமீதெழுந்தருளியிருக்கும (ருஷபாரூட) மூர்த்தத்தால, நெருங்கியெழுகினறபல அலைகளையுடையவலிய சமுத்திரஞ்சூழ்ந்த இவவுலகத்தில உயிர்கள் யாவும் சுகமெய்தின. எ - று. (உஅ)

மும்மைசா லிருபஃ திமைபபின் முக்கணன்
வெம்மைதீர் பிறையணி வேடத் தாலுயிர்
தம்முடைப பிறபபிறப பொழிந்து சாவருஞ்
செம்மைசா லிருங்கதி செல்ல நிறபதே.

(இ - ள்.) இருபத்தொமூன்றாவது, இமைத்தலில்லாத திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான், வெப்பமொழிந்த பிறைச்சந்திரனைச்சூடிய (சந்திரசேகர) மூர்த்தத்தால், ஆன்மாக்களுடையபிறப்பும் இறப்புநீங்கி, அடைதற்கரியசெம்மைமிகுந்தமேலானமுத்தியை, அடைய நிற்பதாம். எ - று. (உகூ)

ஆறுநான் கெனப்படு மதனி லைமமுகன
சீறுமஞ் ஞானத்துச சிவந்த தாளுறுத
தூறுமா னந்தமா நடமு ஞற்றலாற
சீற்ரு முவகையி னுலகஞ் செலவதே.

(இ - ள்.) இருபத்துநான்கென்றுசொல்லப்படுவதில், ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான், கோபிக்கின்ற அஞ்ஞானத்திலே தமது செவ்வியதிருவடியையூன்றி ஆனந்தமபெருகுகின்ற சிறந்ததிருநடனம்புரிதலால், நீக்கற்கரிய சந்தோஷத்தோடு உலகத்திருத்தியங்கள் நிகழும். எ - று. (௩0)

உரைக்குமை யைந்தரு ளுடைய நாயகன
திரைக்குநீக கங்கையைச செறிக்குந் தோற்றத்தாற
றரைப்படு முயிர்த்தொகை தமது சிந்தையைக
கரைக்குமா னந்தமா கடலி ளுழ்வதே.

(இ - ள) சொல்லுகின்ற இருபத்தைந்தில், காருண்ணியத்திருமேனியுடைய சிவபெருமான் அலைகளவீசும கங்காசலத்தைச் சடையிலணிந்த, (கங்காதர) மூர்த்தத்தால, உலகிலுள்ள ஆன்மகூட்டங்கள் தமதுமனதைக்கரைக்கின்ற பெரிய ஆனந்தக கடலிலாழ்வதாம எ - று (௩க)

உரைக்குமற றுணர்வுக்கு மறிய வொண்கிலாப
பரபபிர மத்தினிற றோன்றிப் பல்லுயிரக
கிரக்கமுற றளித்திட வெய்து மிப்பொரு
ணிரப்புறு முயிர்த்தொகை நிறைந்து நிற்குமால்.

(இ - ள்.) வாக்குக்கும் அறிவுக்குந்தெரியமுடியாத பரப்பிரமத்தினின்றுமுதித்து, பலவகையுயிர்கட்கும இரக்கமெய்திக்காக்கும்படியெய்திய இப்பரம்பொருள், நிறைந்துள்ள ஆன்மாக்கடோறும நிறைந்துநிற்கின்றது. எ - று (௩உ)

வித்தெனப படுமுத லொன்றின் மென்சினை
கொத்தணை றலர்முறி குழைநற பாசடை
வைத்தகாய் பலமிவை திரிந்த வாறுபோன்
முத்தனிற பிரிந்ததிப பொருளகண் முற்றுமே

(இ - ள்.) விதையென்றுசொல்லப்படும முதற்பொருளானது, ஒன்றினுடைய மெல்லியகிளைகள் மலர்க்கொத்துகள் இலைகள் இளமைதங்கியபகிய தளிர்கள் பொருந்தியகாயகள் பழங்கள் இவை முதலியவாகத்திரிந்தவகைபோல், முத்தனாகிய சிவபெருமானிடத்திலிருந்து இப்பொருள்களெல்லாவற்றிலும் பிரிந்து விளங்கும். எ - று. (௩௩)

ஈதெலா மிப்பரி செடுத்துக் காட்டின்
வேதமப பொருளெலாம விரிந்தவாற்றினைப்
பேதுறப பொய்மையென் றிழியப பேசினோ
தீதுறு நரகெலாஞ் சென்று வீழ்வரே.

(இ - ள்.) அப்பரம்பொருள்யாவுமாகப் பரந்ததன்மையாகிய இவற்றையெல்லாம் இத்தன்மையாக வேதங்கள் எடுத்துரைத்தன இவற்றை மெய்யாகமெய்யைப் பொய்மைத்தன்மையுடையவென்று தாழ்த்திக்கூறினவர்கள், தீமைபொருந்திய நரகங்களிலெல்லாம் போய்ப்படிவார்கள். எ - று. (கூச)

இன்னண முரைத்தன வனைத்து மெம்பிரான்
றொன்னிலை யெனவகுத் துணருந் தொன்மையோர்
பின்னிய விருவினைத் தொடர்பின் பின்னனீத்
துன்னருங் கதியடைந் துறுவ துண்மையால்.

(இ - ள்.) இவ்வகையாகச்சொல்லினவற்றையெல்லாம் எமது சிவபெருமானுடைய பழய நிலைமையென்று தெரியத்தக்க பழமையானவர்கள், தம்மைப் பிணித்துள்ள இருவினைப்பாசபந்தத்தினையகற்றி அடைதற்கரிய சிவகதியைச் சேர்ந்துவசிப்பது சத்தியமென்று சூதமுனிவர் நைமிசாரணியவாசிகளுக்குக் கூறினர் எ - று. (கூரு)

மூர்த்திவிசேடச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் சo-க்குத் திருவிருத்தம். சஉ௫ச

---

நாற்பத்தொன்றாவது

## சிவகாட்சிப்பேற்றுச் சருக்கம்.

[*]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தத்து வங்கடந் தொருநிலை மனநிறீஇத் தற்பர முணர்ந்தீரின
றித்தி றத்துப தேசகாண் டத்துமுற் றிசைத்தன மிதன்முன்ன
ருய்த்த சம்பவ காண்டமுன் றெக்கிண காண்டமீ றுரைத்தெம்பால்
வைத்த சிந்தைய ராயினீ ரென்னுடை மாதவப் பயனென்றான்.

(இ - ள்.) தத்துவங்களைக்கடந்து ஒரேநிலையில்மனத்தை நிறுத்தித்தற்பரத்தையறிந்த முனிவர்களே! இப்பொழுது இவ்வகையாக உபதேசகாண்டத்தை முழுதுஞ்சொன்னோம் இதன்முன்னரே உற்பத்திகாண்ட முதல்தக்ஷகாண்டமிறுதியாகக்கூறிய எம்மிடத்தில் பொருந்திய மனமுடையவர்களானீர்கள். இதுவும் எம்முடையபெருந்தவப்பயனேயென்றனர். எ - று (க)

என்னு மாதவச் சூதனை யருந்தவ ரியாவரு மெழுந்தேத்திப்
பொன்னன் வைகுபுன் புரிசடை மாதவப் புனிதனைப் பொருட்டாலத்
தொன்னி லைப்படு ஞானமே முதலிய யாவையுந் தொகப்பெற்றே
மின்னி லைப்படு மியாக்கைநீத் திருங்கதி பெறப்பெறும் வியப்புற்றேம்.

(இ - ள்.) என்றுகூறிய பெருந்தவமுடைய சூதமுனிவரை, அருந்தவஞ்செய்த நைமிசாரணிய முனிவர்களெல்லாரும் எழுந்து துதிசெய்து, பொன்போலசைகின்றபுரிந்த சிறுசடையையுடைய பெருந்தவமுடைய பரிசுத்தராகிய சூத

முனிவரே! தேவரீர் காரணமாக அநதப்பழமையாகிய நிலையையுடைய ஞான முதலியவெல்லாமடையப்பெற்றேம மினனலபோலழியுந தன்மையுடைய உட லையொழிததுப் பெரியமோககததையடையததகக ஆசையுடையோம. எ-று. (உ)

ஈன்ற தாயருந தநதையுங கடவுளுங குரவரு மெமக்கிங்ஙன்
றேனறு நினனல தௗாகொலோ வீனறவா தொலகதி யளிப்பாரோ
வானற சோதிமா மயததவா மநதாயா மியையறி ததற்கெநற்
சான்றெனபபடு ஞானமுற றளிததனை யெதுசெயத தகுவேமே.

(இ - ள.) எஙகளைபபெறற அன்னையும அப்பனும் தெயவமும் குருவும் அடியேஙகட்கு இபபொழுது பிரததியட்சமாயுளள தேவரீரையனறிவேறெருவ ருணடோ? எமமைப் பெறற தாயதநதையா பெரிய மோக்ஷததைக கொடுப்பா களோ? அகனற சோதிமயமாகிய அநதாயாமியையுணாதறகாகவே நலல சாக்ஷியெனறுசொலலபபடும ஞானமுழுவதையுநதநதீா. (பிரதியுபகாரமாக) எத னைச்செயயக கடவோம? எ - று. (ங)

பெற்ற வன்பசிக கனஙகொடுத தளிததவன பெரிதுறு மிடுககண்டீாத
துறற ளிததவன முபபுரி நூலபூனைந துதவினே னெருஙகேதான
கறற வினைசைதந தருளினேன முழுமுதற காணகுறுஞ சிவஞான
முறறு ணாததினே னீஙகிவா பிதாவென மொழிகுவா பெரியோரே.

(இ - ள.) தனனையீனறவனும், பசிவேளையில உணவளிததுககாததவனும், பெரிதாகவெயதுநதுனபததைத தவிாததுதவியவனும், உபவீதமணிவிததவனும் தானுணாநதவிததையை ஒரு சோககறபிததவனும, முழுமுதறகடவுளாகிய சிவ பெருமானைத தரிசிககததகக சிவஞானததைமுழுவதுமதெரிவிததவனுமாகியவிவர் கள் தநதையராவரெனறுபெரியோாகள சொலவாாகள. எ - று. (ச)

உரைத்த மூவிரு தநதையி னறிவரு ஞானமுய்த துரைததுள்ளங்
கரைதத தநதையே தநதைமற றுஙகவா கதிதரக கடவாரோ
புரைதத மெய்யுயிா பொருளெனு மூனறுமப புனிதரேயுடையோரென்
றிரைததி ரஙகுநான மறைசகுல மாதலின யாமுனக் குரியேமால்.

(இ - ள.) சொலலிய இநத ஆறுதநதைகளிலும், அறிதற்கரிய ஞானததை யுபதேசிதது மனதைககரைவிதத பிதாவே பிதாவாவான. மற்ற ஐவரும்முததி யைககொடுகக வலலவாகளோ? புரைபட்ட உடலபொருளாவியெனறுகூறிய, மூனறையும் அபபுனிதரேயுடையவரெனறு, ஒலிகினற நான்குவேதஙகளுணாநத அநதணாகுலமாதலின் அடியேஙகளதேவரீருககு உரியோம எ - று. (ரு)

ஊதை மீபபடு புனசரு கருநதிநீ டுலவையுண டுலநதேமற, ருதி நாயகன திருவருள பெறபபெறே மஙஙன மருண்டேமுக, கோதி யப பொருளுணாததிமெய்ஞ ஞானமுற றுணாததினை யுனக்கென்னுப, பே தை யெங்களா லியற்றுகைம மாறுமொன றுண்டுகொல் பெரியோனே.

(இ - ள்.) பெருநதனமையுடைய சுழல்காற்றிலடித்துவநத சிறுசருகுகளைப் பக்ஷிதது, நெடியவாயுபக்ஷணஞ்செயது உடலிளைததும், சிவபெருமான் திருவரு

ளையடையப்பெற்றேமில்லை. அப்படிமயக்கியவெங்களுக்கு அப்பரம்பொருட் டன்மையை யோதியுணர்த்தி மெய்ஞ்ஞானமுழுவதையுந்தெளிவித்தீர். தேவரீ ருக்கென்று அறிவிலிகளாகிய எங்களால் செய்யத்தக்க பிரதியுபகாரமொன்றி ருக்கின்றதோ? எ - று. (கூ)

தனக்கு வேண்டுவ யாவையுங் குரவனிற் சாற்றியங் கவனன்பா
னினைந்து வேண்டுவ பெறுகவென் றுரைத்தன ருமறைநெறிநின்றோ
புனற்ச டாடவிப புங்கவற் காண்குறு வேட்கையுள் புகுகின்றேம்
வினைக்கு றும்பற நோற்றவா வருளுதி யென்றவ ணடிவீழ்ந்தார்.

(இ - ள்) ஒருவன் தனக்குவேண்டுவனவற்றையெல்லாம் ஆசிரியன்பால் தெரிவித்து அன்போடுகருதிவிரும்பியவற்றையடையக்கடவனென்று, அரியவை திகமார்க்கத்தில் நின்றவர்கள் சொன்னார்கள் கங்காசலத்தையணிந்த சடைக் காட்டையுடைய சிவபெருமானைத்தரிசிக்கும் விருப்பமானது மனதிற்குடிகொள் ளவிருக்கின்றோம் இருவினையாகிய சிறு குறும்புகள் நீங்கும்படி தவஞ்செய்தகூத முனிவரே! அருள்புரிவீராகவென்று அசுகூதமுனிவர் திருவடிகளிற் பணிந் தார்கள். எ - று. (எ)

வீழ்ந்த மாதவத் தலைவர்பாற் சூதமா முனிவரன் வியப்பெய்தித்
தாழ்ந்த சிந்தையி னவர்க்கெதிர் தாழ்தலு மெடுத்தனர் தழீஇக்கொள்ள
வாழ்ந்த பேரறி வுடையநீ ரிங்கென தருளினே பசுமபாவை
வாழ்ந்த பங்கனைக் காண்குதி ருமமுடை மாதவ மெளிதன்றே.

(இ - ள்) அப்படி நமஸ்கரித்த பெருந்தவத்தலைவர்களாகிய முனிவர்களி டத்தில், சிறந்த சூதமுனிவர் சந்தோஷித்து, கீழ்ப்படிந்தமனதோடு அவர்கட் கெதிரேவணங்கவும், அவர்களவரியெடுத்து ஆலிங்கனஞ்செய்துகொள்ள, ஆழ மாகிய பேரறிவுடைய நீங்கள் எமதுசொற்படி, பசியபதுமைபோன்ற உமா பிராட்டியார்பொருந்திய வாமபாகத்தையுடைய சிவபெருமானைத் தரிசிப்பீர்கள். உங்களுடைய பெருந்தவம் இலேசானதல்ல. எ - று. (அ)

வகுத்த வார்சடை மாதவத் தந்தணீர் நுமமுடை மரபோர்ந்து
நெகிழ்த்த சிந்தையி னெமபிரா னுமமுழைத் திருவரு ணீங்கானுற
ரொருகுத்த வாரணத் துறைமுறை மேயத்துதி யாமுமத் தொல்லோனைப
பகுத்த வாறுணர்ந் தேத்துது மென்றன னனைவரும் பரசுற்றார்.

(இ - ள்) பிரிந்தநெடியசடையையுடையபெருந்தவம்புரிந்த வேதியர்களே! உங்கள் வரன்முறையறிந்து உருகிய திருவுள்ளத்தோடு எமது சிவபெருமானும் உங்கள்பால் திருவருள் நீங்கமாட்டார். தொகுத்துள்ளவைதிகநெறிவழியே துதி புரியுங்கள். யாமும் அப்பழையோனைப்பகுப்புற்றவகையாகவே தெரிந்துதோத் திரஞ்செய்வோமென்றனர்-எல்லோருமசொல்லுவதானார்கள். எ - று. (கூ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒன்றாய்ப் பலவா யருவாகி யோருருவு மல்லையா யுட்புலத்துக் கெட்டாய், நின்று யகண்டபரி பூரணமாய் வாழி நிராதார மாகிநீ நிற் பதுண ரேமாற், பொன்றும் புரிசடையெம் புங்கவனே போற்றி புண் ணியனே புண்ணியபு ராதனனே போற்றி, யென்றாக்கெளிவரவி னெய் தினையே யெந்தா யாமுமடி கட்கடிமை யல்லாமை யுண்டே.

(இ - ள்.) ஏகமாகியும் அநந்தமாகியும் உருவமாகியும் அருவமாகியும் ஓருருவு மல்லாதவனாகியும் உள்ளத்திற்கும் ஐம்புலத்திற்கும் எட்டாதுநின்றவரே! அகண்டபரிபூரணமாய் நிறைந்தவரே! (நீரே சகலத்திற்கும் ஆதாரமாகி உமக்கு) யாதொரு ஆதாரமுமில்லாமல் நிற்பதைப் பறியேம் ஆனபடியால் பொன்னனைத்து வீழ்ந்தாற் போன்ற புரிந்த சடையையுடைய எந்துசிவபெருமானே! போற்றி. புண்ணியரே! புண்ணியசொரூபமாகிய பழைமையானவரே! போற்றியென்று துதித்தவர்கட்கு எளிதாகக் காட்சிதந்தருளினீரே. எந்தாயபோலவாரே! யாங்களும் தேவரீருடைய திருவடிகட்கு ஆளாகாமையுள்ளதோ? எ - று. (௧0)

ஐந்தாகி யையந்தா யப்புறத்துக் கப்பா லநாதியா யாருயிர்க்கு மாருயிரே யாகித், தந்தா யளவிறந்த பலகோடி யண்டந் தண்ணளியாற் றுய்ப்பனவுந் தாராநின் றனையா, லெந்தா யிமைப்பளவி லீங்கிவற்றை நீப்பாயீ துனக்கு விளையாட்டிவ்விளையாட் டயாந்தால, நந்தா விளக்கொளியே நின்னிலைமை யுணரே நாளகழிந்தே மெக்கால நம்பநிற்காண் குதுமே.

(இ - ள்.) ஐந்துமூர்த்திகளாகியும், ஐந்தாகிய அப்புறத்துக்கப்பாலாகியும், அநாதியாகியும், பொருந்திய உயிர்கட்கும் உயிராகியும், எண்ணிறந்த பலகோடி யண்டங்களையும் படைத்தவரே! குளிர்ந்த கருணையால் புசிக்கத்தக்க போகங்களையுங் கொடுத்தருளுகின்றீர். எமதுதாயானவரே! இவற்றையெல்லாம் ஒருகூணப்பொழுதில் துடைப்பீர். இது தேவரீருக்குத் திருவிளையாடல் இவ்விளையாடலை நீங்கினால் தேவரீர் நிலைமையை நாங்களறியோம். அழியாதசுடர் விளக்கொளியானவரே! பலகாலங்கழித்தோம். நம்பனே! எந்தக்காலத்தில் தேவரீரைத் தரிசிப்போம். எ - று. (௧௧)

ஆதியாய் நெடுமேரு வூடுருவிச் சுமக்கு மளவொழிந்த மண்டங்களண்டத்தோ டகன்று, பேதியா வுலகங்க ளுயிர்த்தொகுதி யிவற்றைப் பேதித்து நின்றிரைக்கும் பிரளயத்தி லொடுங்குஞ், சோதிமா மயமாகி நிராதார மாகுந் தொன்மையோ யீங்கிவற்றைத் தொட்டறியா தவரி, னேதில னாகியநந் நிரந்தரமாய் நின்று யெம்பிரா னேகனா யிருபாற்பட்டனையே.

(இ - ள்.) ஆதியாகியும், நெடியமேருமலையானது ஊடுருவித்தாங்குகின்ற எண்ணிறந்த அண்டங்களும் அவ்வண்டங்களோடுபரந்து பேதியாத உலகங்களும் உயிர்த்தொகுதிகளுமாகிய இவற்றைப்பேதித்து நின்று ஒலிக்கின்ற பிரளயகாலத்தில் இலயமெய்துஞ் சிறந்தசோதிமயமாகியும், தமக்கொரு ஆதாரமில்லாத பழைமையானவரே! அவ்விடத்தில் இவற்றைக்கலந்தும் அவர்களாலறியப்படாமல் அவர்கட்கு அன்னியமாகியும் அநந்த நிரந்தரமாகியும் நின்றவரே! எமது பெருமானே! தேவரீர் ஏகனாகி இருபகுப்பெய்தினீரே. எ - று. (௧௨)

இருநோக்கு நெடுமூக்கி னுதிக்கிடப்பக் கிடத்தி யிந்தியங்க ளவித்தைந்து புலனுமொருங் கிருத்தி, யொருநோக்கி னுளம்போக்கி விகாரப்பா டொழியா வுனையுணரி னினனுருமற றிவவுருவென் றுணரார், செருநோக்கிக் கழைகுனித்து மலரப்பகழி தெரிந்து சீறிளங்கா ளையைச்சீறுந் திருநுதலெம் பெருமா. னருநோக்கு நோக்கு மூவந் தருள்யுள மிரங்கி யருளுகக மெமக்களிப்ப தெம்பெருமாற் கழகே.

(இ - ள்.) இருபார்வையும் நெடியமூக்குமுனையிலிருக்கவிருத்தி, இந்திரியங்களையடக்கி, ஐம்புலன்களையும் ஒன்றுபடுத்தி, ஒரேயெண்ணத்தில் மனதைச்செலுத்தி, விகாரப்படுதலொழிந்து தேவரீரைத்தியானித்தாலுந் தேவரீர் திருவுருவம் இத்திருவுருவமென்றறியமாட்டார்கள் போர்செய்தலைக்கருதிக்கருப்புவில்லை வளைத்து மலர்ப்பாணங்களையெடுத்துக்கோபித்த இளமைதங்கிய மன்மதனைக்கோபித்தெரித்தருளிய நெற்றிவிழியையுடைய எமது சிவபெருமானே! அருமையாகநோக்குகின்ற நோக்கமானது களித்தருளித் திருவுளமிரங்கித்திருவருணோக்கத்தை அடியேங்கட்குத்தந்தருள்வது எம்பெருமானாகிய தேவரீருக்கு அழகாகும். எ - று. (௬௩)

காட்டியபல் லுயிர்த்தொகைக்கு மலபாசம் புரிந்த கருமத்தா லிருவினையுங் காட்டியந்த வினையா, லீட்டினவுண் பனவாக்கி யுண்பதற்குச் சரீ மேதுவாக் கினையுண்பா னின்னுயிரே யாக்கி, யூட்டியுறக் கினைமுடிவி னவ்வினையின் செயல்கண் டுறக்கியு நரகும்மீந் தொருங்கின்ற வுயிரை, யாட்டுவித்தா யீதுனது விளையாட லீசற் கவ்விளையாட் டினிற்பெறுவ தறிகிலமற் றருளே.

(இ - ள்) சிருட்டித்தபல உயிர்த்தொகைகளுக்கும் மலபந்தஞ்செய்த காமத்தினாலே இருவினைகளையுங்காட்டி, அந்தவினையினாலே தேடியபொசிக்கத்தக்க போகங்களையுண்டுசெய்து, அங்ஙனம் பொசிப்பதற்குச் சரீரத்தைக்காரணமாக்கினீர். உண்ணுதற்கு இனிய உயிரையே படைத்து உண்பித்து உறங்கச்செய்தீர். இறுதியில் அவ்வினைச்செயலைப்பார்த்து அடையத்தக்க மோட்ச நரகங்களைத்தந்து, சிருட்டித்தவுயிர்களை ஒருசேரவியங்கச்செய்தீர். இவைதேவரீருக்குத் திருவிளையாடல்கள் ஈசுவரனாகிய தேவரீருக்கு இத்திருவிளையாட்டினாற்பெறத்தக்கதியாது? அறியோம். அருள்புரிவீராக. எ - று. (௬௪)

ஆரணமா யாரணத்தி னுபநிடதப் பொருளா யப்பாலா யிப்பாலா யணுவினுக்கு மணுவாயப், பூரணமாய்ச் சச்சிதா னந்தமா யாக்கும் புலப்படா வொன்றாகிப் பொய்யாகி மெய்யாய்க், காரணமாய்க் காரியமாய்க் கருவியாய் முடிக்குங் கருத்தனுமா யாவாக்குங் கட்புலப்பட்டிடினு, நாரணமாயப் பிரமமாய் நின்றனையே யெந்தாய் நாயேமுக்குனைக்காட்டு நாளொருநா ளுளதோ.

(இ - ள்) வேதங்களாகியும், வேதங்களின் சிகையாகிய உபநிடதங்களிற் கூறப்பட்டபொருளாகியும், அதற்கப்பாலாகியும் இப்பாலாகியும், அணுவுக்கும் அணுவாகியும், எங்குமநிறைந்த பூரணமாகியும், சத்துச்சித்து ஆனந்தமாகியும், எத்தன்மையினருக்குங் காணப்படாத ஒருபொருளாகியும், பொய்யாகியும் மெய்யாகியும், காரணமாகியும் காரியமாகியும் கருவியாகியும், (செயலவினையை) முற்றுப்பெறச்செய்யுங் கர்த்தாவாகியும், யாவர்க்குங்கண்கூடாகக் காணப்பட்டாலுங் காரணமாகியும் பிரமமாகியும் விளங்குகின்றீரே! எமது தாய்போலவாரே! நாய்போலவாராகிய எங்களுக்குத் தேவரீரைக்காண்பிக்குந்தினம் ஒருதினமிருக்குமோ? எ - று. (௬௫)

எண்பாலா முட்சமயம் புறச்சமய மென்னு மீராறு யீராறுக்குளையாகி யிவைக்கு, நண்பாய கடவுளுமா யந்நெறிநின் றவர்க்கு நன்கள்த்திச்சமய நடத்துநூற் கெட்டாய், பெண்பாலோ வாண்பாலோ வலி

யோமற றுணரேம் பின்னறியே முனனறியேம பெருமானே யொருநீ, யுணபானு முண்பனவு மூட்டுவனு மானு யுததமனே யெததிறததுமு னேககாணப தரிதே.

(இ - ள்.) எணணததகக பகுதியவாகிய அகச்சமயம் புறசசமயமெனனும் ஈராறு சமயஙகளாகியும, இவவீராறு சமயஙகட்குட்பட்டவராகியும, இச்சமயங கட்கு நணபாகிய கடவுளுமாகியும, அமமாககததில நினறவாககு நனருக அநுககிரகிககிறீா அவவசசமயஙகளை நடைபெறசசெயயஞ சமயநூலகளுககும் அதீதபபட்டீா தேவரீா பெணபாலினரோ ஆணபாலினரோ அலியினரோ? அறியமாட்டோம பினனுமறியோம் முனனுமறியோம பெருமானரே! ஒப் பற்ற தேவரீரே உணபவனும உணபொருளும உணணச்செயபவனுமாக விருக கினறீா. உததமசொரூபியே! எவவகையாலாயினுநதேவரீரைத தரிசிப்பது அருமையாகும எ - று. (கரு)

அஞசெழுததி னுடபொருளா யகரமுதற றோனறு மைம்பததோ ரககரமா யாவையினுங கரநதாய், நெஞசழுததி நினைபபானு நினைநத னவு நினைபபு நீயாகி நினறனையா னினனையா ரறிவாா, மஞசனைய மேனி லததான் மலாயனே முதலோா மாணடிறவா திரைதிரைநீா வயிறுகநத தீன றளிதத, நஞசமுதது மணிமிடறறாய் சிறபரா னநத நாயகமே யுனைககாணு நாளொருநா ளுளதோ.

(இ - ள) பஞசாக்ஷரததின உடபொருளாகியும, அகாரமுதலாகததோன் றுகினற ஐமபததோரக்ஷரமாகியும், எலலாவறறினும் மறைநதுவிளஙகுபவரே! மனதிற்கருதி நினைபபவனும நினைககப்படுபொருளும நினைததலுநதேவரீரே யாகி விளஙகுகினறனிா. தேவரீரை எவா உணரவலலவா? மேகததையொதத திருமேனியையுடையவனாகிய திருமாலும பிரமனு முதலானவாகள இறநதுப டாமல, ஒலிககினற அலைகளையுடைய திருப்பாற்கடலானது அகடுவருநதிததநத ஆலாலததை நிலைநிறுததிய நீலமணிபோனற கணடததையுடையவரே! (சித = ஞானம், பரம = மேனமை, ஆனநதம் = இன்பம) சிதபரானநததலைவரே! தேவரீரைததரிசிககுநதினமாக ஒருதினம இருககுமோ? எ - று. (கசா)

என்றெனறு பலவாறறு னெடுதெடுததுப பரசி யிருகண்க ளா னநத வாரிநீாத தொழுக, நினறெனறு நெஞசுபுகா தொருநெறிகக ணிறுததி நினைவயாநது மெயயயாநது நாககுழறி நிறபக, குனறெனறு வரிசிலையான் றுழாயநாறுங கொடியோன குடைசஙக வாாகுழை யோன குதிததுகளுஞ சிறுமான, கனறெனறு திருககரததோன கண ணுதலெம பெருமான களிவிளைநது திருவுளளங கனிநதுருகி நெகிழநதான.

(இ - ள்) எனறிப்படிப்பலவகையாகப்பனமுறையெடுதெதுத துதிதது இரு விழிகளும ஆநநதபாஷபமபெருகியொழுககுமபடி நின்று, மனதில ஒன்றையுமகரு தாது அதனையொரேவழியிற்செலுததி எணணமற்று உடலசமபிதது, சொறகள தழதழததிருககையில, வரிககட்டுகளமைநதவில்போல மேருமலையையுடையவ ரும, துளவமாலிகை மணக்கும திருமாலாகிய இடபததைககொடியாகவுடைய வரும, தோணடியெடுத்த சஙகாலாகிய நெடியகுணடலமணிநதவரும், குதிததுப் புரளுகின்ற சிறுமான கன்றினைப்பொருநதிய திருக்கரமுடையவரும், நெற்றிக்

கண்ணைப்பொருந்தியவருமாகிய எமது சிவபெருமான் சந்தோஷமெய்தித்திருவுள்ளங்களிந்தருளியிருந்தனர் எ - று. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இனைய காலையி னந்தியை நோக்கி னொருதனி முக்கணெம் பெருமான், புனைந றுந்துணர்ப் பொதும்பர்சூழ் நைமிசா ரணியமா தவத்தரிற் போகி, யனைய வர்க்குநங் காட்சிதந் தருள்செய்வா னினைந்தன மாதலா னமது, துனைக டுங்கதி யடுதிறற் பொருவிடை யிங்கிலே கொணர்கெனச் சொற்றான்.

(இ - ள்.) இப்படிப்பட்ட காலத்தில், ஒப்பற்றசிறந்த திரிநேத்திரங்களையுடைய எமது சிவபெருமான் திருநந்திதேவரைநோக்கி, அலங்கரிக்கின்ற மணந்தங்கிய மலர்க்கொத்துக்களமைந்த சோலைசூழ்ந்த நைமிசவனத்திலுள்ள பெருந்தவசிகளிடஞ்சென்று அவர்கட்கு நமது தரிசனங்கொடுத்து அநுக்கிரகிக்கும்படி திருவுளங்கொண்டோம். ஆனபடியால், நீ நம்முடைய வேகமாகிய பெருநடையையுங்கொல்லத்தக்க வல்லபத்தையுமுடைய போர்செய்யத்தக்க இடபத்தை இப்பொழுதுகொண்டுவருக வென்றுகட்டளையிட்டனர். எ - று. (க௯)

பின்னு மன்னவன் றன்முக நோக்கியப் பெருக்கணத் தருந்தவத் தலைவர் மன்னு மாதவச் சூதனா னம்முடைக் குமரவேள் வரன் முறைச் சரிதை சொன்ன சம்பவ காண்டமே முதலிய வேழையும் வகுத்துற வுணர்ந்தா ரன்ன தன்மைய ரின்னுநின் றேத்தின ரெனக்கேட் டகமகிழ் சிறந்தான்.

(இ - ள்.) மேலும், அந்நந்தியம்பகவான் திருமுகத்தைப்பார்த்து, அப்பெருங்கூட்டமாகிய அருந்தவம்புரிந்த நைமிசாரணிய முனிவர்கள், நிலைபெற்ற சிறந்ததவமுடைய சூதமுனிவனால்நம்முடைய இளையபிள்ளையாராகிய குமாரசுவாமியின் சரிதையைக்கிரமமாகச்சொல்லிய உற்பத்திகாண்டமுதலாக வேழுகாண்டங்களையும் விளக்கிச்சொல்லக்கேட்டார்கள். அத்தகையினர் இதுகாறும் அந்நிலையிலேயேயிருந்து துதிசெய்கின்றார்கள் என்பதைக்கேட்டு மனமகிழ்ச்சிமிகுந்தனர். எ - று. (உ௦)

எல்லொ ளிப்பசும் பொன்னினு மணியினு மியன்றன வீரிரு பதத்துக், கல்லெ னக்கெழு தண்டையைப் புனைந்தனன் பன்மணித் தொடையலைப் புனைந்தான், மல்லன் மாமருங் கரசிலைக் கிடையிடை மணித்தொடர் பிணித்தனன் வனைந்தார், ஞெலிலை வெண்கதிர்ப் பிதிர்தொகுத் தன்னவெண் கவரிகீழ் விடுத்தருகுறுத்தான்,

(இ - ள்.) சூரியகாந்தியைச்செய்யும் பசும்பொன்னாலும் நவரத்தினங்களாலுஞ் செய்தனவாகிய கல்லெனவொலிக்கும் தண்டையை நான்குகால்களிலுங் கட்டினர். பலரத்தினமாலைகளைத்தரித்தனர். வளந்தங்கிய சிறந்த பக்கலிலே அரசிலைமாலையின் நடுவெல்லாம் மணிமாலைகளைக்கட்டி யலங்கரித்தனர். சிகரத்திலே சந்திரனுடைய அமிர்த தாராபிந்துகளைச் சேர்த்தாற்போல வெண்ணிறந்தங்கிய சாமரையைக்கீழே தொங்கவிட்டுப் பக்கலிலலங்கரித்தனர். எ - று.

மருப்பு மாமுகத் தியைவன வனைந்துபின் வேண்டுவ யாவையும் வனைந்தான், குருந்த வெண்ணிலா வெள்ளியங் கிரியெனு மால்விடை

வாயிலிற் கொணர்ந்தா, னெருக்க லாநதவார் சடைமுடி யெமபிராற்
கினமணிப பாதுகை யிட்டான, செருக்கு முப்புரங கடநதவ னநதிகை
கொடுததுறச சென்றெழுந தருளி.

(இ - ள) கொமபிலும பெரியமுகததிலும பொருந்திய ஆபரணஙகளா லலஙகரிததது, பினனா விருமபியவற்றையெல்லாம அணிநதனா. தனிரதத்வெள ளிய சநதிரிகையைவீசும அழகிய வெளளிமலையென்றுசொலலததகக பெரிய இடபததைதத திருவாயிலிடஙகொண்டுவநதனா. வெளவெருக்க மலாகள விக சிதத நீணடசடைமுடியையுடைய எமது சிவபெருமானுக்குஉபய(பாதஙகளில) இரததினபாதுகைகளைசசேர்ததனா இறுமாநத முப்புரஙகளையெரிதத சிவபெ ருமான திருநநதிதேவா கைலாசுகொடுபப ஆஸதானததினினறும எழுநதருளி.

வாயி லெய்தினன மழவிடைக கடவுளை நோக்கினன றிருவுள மகி
ழ்நதான, பாய வெளவிடை யடைநதுகும போதான புறத்திரு சேவ
திததது, மேய பனமணிக கமபள வொரிநகத தேறின னுமையோடும
வியநதா, னேய மாதவத தலைவரி னைமிசா ரணியமுற றெய்துவா னெ
ழுநதான.

(இ - ள, திருவாயிலையடைநது இளைததஙகிய இடபதேவரைககடைக கணிதது, திருவுளளங்களிதது, பாயநதுசெலலததகக வெணமையாகிய இட பததை நெருஙகி, குமபோதரனமுதுகிற் செவவிய உபயபாதஙகளைவைதது, பல மணிகள பதிததகமபளமபொருநதிய முதுகினபேரில உமாதேவியாரோடும ஆரோகணிததுககளிததனா. பெருநதவமபொருநதிய முனிவாகள வசிக்கும் நைமிசாரணியததையடையுமபடி புறபபட்டனா எ - று. (௨௧)

வேத யோகிய ருமமறைத திறமெலா மிடைவிடாா முனனரின விளம்
பூத ராயிர கோடிய ரெமபிரான றிறததியற கடடியம புகலப [பப
போத கததிரு முககளி ருசுவிற போதரப பொறிபயி லுகைதது
தாது லாநதொடைப பனவிரு தடமபுயக காளையு மருஙகயல சாா.

(இ - ள.) வேதயோகிகள அரியவேதநூலகளையெலலாம இடையீடிலலா தவாகளாய்த, திருமுனனே சொலலிவரவும, ஆயிரகோடிபபூதநாதாகள எமது பெருமானவலலபததிற கியைநதகட்டியஙகள சொலலவும, அழகிய யானை முகததையுடைய விநாயகபபெருமான பெருச்சாளிவாகனததில எழுநதருளவும, மகரநதஞ்சிநதும (கடபபமலா) மாலையணிநத பனனிருபாநத திருததோளகளை யுடைய இளைய குமாரககடவுள புளளிகளமைநத மயிலவாகனமூாநது ஒருபகக லிற் சமீபிததுவரவும. எ - று. (௨௨)

இரங்கு வெணடிரைப பாறகடற றுயினறவ னெறுழ்வலிக கலு
ழன்மீ தெழுநதான், பரந்த செவவிதழத தாமரை நாயக ஞெதிமமு
கைததனன் படாநதா, னரஙக டிநதவெங குலிசிவெள வாரணந தெ
ழுநதன னருநதவத தலைவா, புரங்க டநதவற சூழ்நதுடன போநதனா
தமமுடை யூாதியிற பொலிவாா.

இ - ள.) ஒலிக்கினற வெணமைதஙகிய அலைகளையுடைய திருப்பாற்கடலில் யோகநிததிரைசெய்யுநதிருமாலபெருவலிதஙகிய கருடவாகனததின்மீது புறப்

பட்டனா பரவிய சிவந்த இதழ்களையுடைய செந்தாமரைமலரில்வசிக்கும் பிரமதேவன் அன்னவாகனமூர்ந்துசென்றனன் அரத்தைவென்ற வெவ்விய வச்சிராயுதமேந்திய இந்திரன் வெள்ளானையின்மீது புறப்பட்டான். அரியதவசிரேஷ்டர்களாகிய ஏனையோர் தங்கள்வாகனங்களில் விளங்கி, புராரியாகிய சிவபெருமானைச் சூழ்ந்துகொண்டு வருவாராயினர். எ - று (உகு)

ஆய காலகா லாக்கினி யுருத்திர னனந்தகோ டியகணத் தோடும்,
போய டைந்தன னாடகேச சுரனகண மாயிர கோடியிற் புகுந்தான்,
காய்சி னத்தகூ மாண்டபா மாகோடிவெங் கணத்தோடு மடைந்தனன்
குருகிச, சேய கண்ணணி றைந்துகோ டியரொனுங் கணத்தோடுஞ் சென்
றெதி ரடைந்தான.

(இ - ள்) அக்காலத்திலே, காலாக்கினியுருத்திரதேவர் எண்ணிறந்தகோடியாகிய கணங்களோடும்போய்ச்சேர்ந்தனர். ஆடகேச்சுரர் ஆயிரகோடிகணங்களோடும் புகுந்தனர் ஜ்வாதிக்கின்றகோபத்தையுடைய கூஷ்மாண்டர் மகாகோடியாகிய வலிதங்கிய கணத்தினரோடும் வந்துசேர்ந்தனர் சிவந்தகுருதிக்கண்ணர் பத்துக்கோடிய ரெனனுங்கணத்தோடும்போய் எதிரிற்சேர்ந்தனர். எ - று.

வயிர்த்து வனகண ங்கோடிகொண டடைந்தனன வரைபெறு தடம
புய விசாகன, செயிர்ப்பு றுங்கணம பதுமங்கோ டியரொடுஞ் சென்ற
னன றிண்டிறற் கபில, னயிரப்பு றுங்கணம பராரார்த்தமோ டடைந்த
னன பிருங்கிகும பகன்சங் கிலாதன, மயிர்ப்பு றப்பொடித் தெழுந்தன
ரெழுந்தனா மற்றுள கணத்தவா யாரும.

(இ - ள்.) வயித்துவர் கோடிகணங்களோடுவந்து உடன்கூடினர் மலைபோன்றவிசாலமானதோளையுடைய விசாகர் சயமபொருந்திய கணங்கள் பதுமகோடியரோடு போயினர். பெருவலலபமுடைய கபிலர் பராரார்த்தங்கணங்களோடும் எய்தினர். பிருங்கி-கும்பகன-சங்கிலாதர் இவர்களும் மற்றுள்ள கணத்தலைவர்களெல்லாரும் உடலமுழுதும் மயிர்க்கூச்செறியப்புறப்பட்டார்கள்.

வளமை யிறுவர் ளசுரவெள ளப்படை வளைந்தன முறைமுறை
வணங்கி, வெள்ளி வெண்ணிறக் கவிகைக்குண் டோதா னிவத்தின னக்
குடை விளிமபி, னள்ளி நாற்றிய கொத்துமுத் தக்கொடை யெமபிரா
னணிதருங் கங்கை, துள்ளி நின்றசைந் திழிவன போன்றன வென்றுவா
னவரெலாந் துதிப்ப.

(இ - ள்.) கூர்மைபொருந்திய பல்லையுடைய வாளேந்திய அசுரர்களின் வெள்ளமாகிய சேனைகள் கிரமமாகப்பணிந்து, சூழந்துகொண்டன. வெள்ளியைப்போலும் வெண்ணிறந்தங்கிய குடையைக் குண்டோதரன் பிடித்தனன் அந்தக்குடையின் ஓரத்தில் அள்ளித்தொங்கவிட்ட கொத்தாகியமுத்துமாலைகள் எமது சிவபிரான் அணிந்துள்ள கங்காநதியானது துள்ளிநின்று அசைந்திறங்குவதுபோன்றனவென்று தேவர்கள்யாவருந்துதிசெய்ய. எ - று.

சித்தி ராசனன் றும்புரு நாரத ரேழிசைச் சித்திர சேனன்
மொய்த்த கந்தரு மன்னவர் கின்னர ரொழிந்தகிம் புருடரை முதலோ
ரத்த மூட்டிய நரப்பிசைக் கருவியர் விதிமுறை யடுக்கிய விரலி
னொத்த பாடலி னின்னிசை யாரமு திருக்குழைச் செவிவழி யொழுக்க.

(இ - ள்.) சித்திரரதன்-தும்புருநாரதர்-ஏழிசையில்வல்ல சித்திரசேனன் நெருங்கிய கந்தர்வமன்னர்கள்-கின்னரர்கள்-ஏனைய கிம்புருடர்கள்முதலானவர்கள் கைகளில் சுருதிசெய்த (யாழ்முதலிய) நரம்பிசைக்கருவியுடையவர்களாய் அடுக்கியவிரலிலொலிக்குஞ் சமானமானபாடலால் இனிய இசையாகிய அரிய அமிர்தத்தைக்கொண்டலமணிந்த இருசெவிகளின்வழியாக வொழுக்கிவார்க்கவும்.

வள்ளி தழைக்கும் லாலய பீடிகை யினிதுறை தருதிரு மடந்தை
வெள்ளி தழைக்கும லாலய பீடிகை நாமகள் சிவமொழிந் திமைய [ளிர்
கள்ள விழ்ந்தபைம் புரிகுழற் றம்பரிந்தழுங் கயலவிழிக் கனங்குழை மக
வெள்ள மாயிர முலகமீன் றளித்தரு ளம்பிகை மென்பதம் பரவ

(இ - ள்.) கூர்மையாகிய இதழ்களமைந்த கமலாலயமாகிய பீடத்திலே இனிதாகவசிக்கின்ற இலக்குமிதேவி, வெள்ளிய இதழ்களையுடைய தாமரைக்கோயிலாகிய இருக்கையிலுள்ள சரஸ்வதிதேவி ஆகியவர்களோடும் பொருந்திய தேன்சிந்துகின்ற மலர்பொருந்தகூந்தலையும் பவளம்போன்ற அதரத்தையும் சேல்போன்ற கண்ணையும் கனமாகிய காதணியையுமுடையமாதர்கள் ஆயிரவெள்ளக்கணக்கினர், சராசரத்தையும் பெற்றுக்காத்தருளிய உமாதேவியாரமெல்லிய திருவடியைத்துதிபுரியவும். எ - று. (௯௦)

அரன் ருச்சனை வரன் முறை யியற்றலா லங்கவன் றிருவுரு வடைந்து
வரனு வப்புறு மள்ளொழி நாரணர் வாகனத் துடனயன் மருவப்
பிரம ராயிர கோடிய ரவ்வழி யேகுறப் பெருந்தவத் தலைவர்
பரவ ருஞ்சன காதியர் யோகிகள் கபிலரை முதலினோர் பரவ.

(இ - ள்.) சிவார்ச்சனையை வரன்முறையாகச்செய்ததால் அவ்விறைவனது சாரூபமடைந்து, வரங்களை விரும்பியுள்ள கணக்கிறந்த நாராயணர்கள் வாகனங்களோடு பக்கத்திலவரவும் ஆயிரகோடிபிரமர்கள் அப்படியேசெல்லவும், பெருந்தவத்தலைவர்களாகிய துதிசெய்தற்கரிய சனகாதிமுனிவர்களும் யோகிகளாகிய கபிலரை முதலானவர்களுந் துதிபுரியவும். எ - று. (௯௧)

மூன்று பத்துமுக் கோடிய தீர்த்தமு மேருவே முதலிய வரையுங்
கான்ற வெண்டிரை யுததியோ ரேழுமக் கலைகளும் வருடமு மதியு
மேன்ற பக்கமு மிருத்தையு முதலிய வித்திறத் தியாவையு முருவிற் [டர்.
றோன்றி யெம்பிரான் றொழுத்தை மறந்திலா கூப்பிய கரத்தொடுந் தொ

(இ-ள்.) முப்பத்துமுக்கோடியாகிய தீர்த்தங்களும் மேருமுதலியமலைகளுஞ் சிந்துகின்றவெள்ளிய அலைகளையுடைய சப்தசமுத்திரங்களும், கலைகளும் வருடங்களும் மாதங்களும்பொருந்திய பக்ஷங்களும் இருதுக்களைமுதலிய இவ்வகைப்பட்டகாலநுட்பங்களெல்லாம் உருவத்தோடெழுந்து நமது சிவபெருமானைப் பணிந்தகைமை மறவாதவர்களாய எடுத்தகையோடுந் தொடர்ந்துவரவும். எ - று.

கான நாண்மலர்க் கற்பகஞ் சினைதொறும் பொதுளிய கடிமல
ரிறைப்ப, வான நாட்டர மடந்தையர் மற்றுள பெரும்பத மடந்தையர்
மருவி, யேனை மாகணத் திடையிடை கலந்தன ரெடுத்தவெண் சாமரை
யிரட்ட, வான தொல்லறந் திருவுருக் கொண்டிங்கி ரக்கமுற் றடைந்து
பின் றொடர.

(இ - ள்.) மணந்தங்கிய அன்றலர்ந்த மலர்களையுடைய கற்பக விருட்சமானது கிளைகளிலெல்லாம் நெருங்கிய வாசனைதங்கிய பூக்களைச் சிந்தி நிறைக்கவும் தேவலோகத்திலுள்ள அரம்பாஸ்திரீகளும் ஏனைய பெரிய பதவிகளில் வசிக்கும் மங்கையர்களும் பொருந்தி, பெரிய மற்றக்கண்களோடு நடுவே கலந்து நின்று கையிற் பற்றிய வெள்ளியகவரிகளைப் புரட்டவும், பழமையாகிய தருமமானது ஓர் திருவுருவேற்று மனவிரக்கமெய்திப் பின்றொடர்ந்து வரவும். எ - று. (௫௫)

தேவ துந்துமி மீச்சுரம் படுமொரு கரடிகை திண்டிமந் திமிலை
பாவு கோமுகை குடமுழ விடக்கைகின் றதிர்குரற் பேரிகை படக
மேவு சல்லரி முதலிய பல்லியந் துவைப்புற வளைக்குலம் விம்ம
வோவ ருந்திசை துளங்குறத் தொளைப்படு கருவிகின் றெங்கணுமோங்க.

(இ - ள்) தெய்வதுந்துமி பேரொலிமுழக்குடைய ஒப்பற்றகரடிகை தம்பட்டம் பம்பை பரந்தகோமுகை குடமுழவு உடுக்கை ஒலித்ததிர்கின்ற குரலையுடைய பேரிகை இரணபேரி பொருந்தியசல்லரி முதலிய பலவாத்தியங்கள் முழக்கவும், தொளைக்கருவிகளாகிய (நாகசுரம் புள்ளாங்குழல் பூரி எக்காளம் சின்னமுதலிய) வாத்தியங்கள் நின்று எங்குமொலிக்கவும். எ - று. (௫௪)

முக்கண் மைம்பிரா னைமிசா ரணியமுற் றெழுந்தனன் முயற்சியின் முறைமை, யொக்க நோக்கிய தெய்வமாத் தச்சனு துணர்ந்தன னொருநெறி யடைந்தான், பக்க நோக்கினன் வெள்ளிடை குணித்தவ வொருதனி மண்டபம் படைத்தா, னக்க ணுங்கவ னியற்றிய சித்திரத் தளவையை யாவரே யளப்பார்

(இ - ள.) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் நைமிசாரணியத்தை நோக்கி எழுந்தருளினார். முயற்சியின்முறைமையை ஒருசேரக்கண்ட சிறந்த தெய்வத் தச்சனாகிய விசுவகர்மா அதனையறிந்து ஒருபுறத்தெய்திப் பக்கலிற் பார்த்து, ஒருவெற்றிடத்தில் மானசீகமாக ஒருஒப்பற்றமண்டபத்தை நிருமித்தான் அவ்விடத்தில் அவ்விசுவகர்மனியற்றிய மண்டபத்தின் சிறப்பினையெவர்தாம் அளவிடுவார்கள்? எ - று. (௫௫)

கலிநிலைத்துறை.

அடுத்த யோசனை யக்கவை நூற்றுயிரத் தளவை
யெடுத்த கோபுர மாயிர நிலைநிறீஇ யதற்குத்
தொடுத்த பல்லுருப் பொன்னினு மணியினுந் தொகுத்தான
மடுத்த வுச்சியிற் றூபியோ ராயிரம் வகுத்தான.

(இ - ள்.) பொருந்திய நூற்றுயிரக்கணக்குயோசனையளவாக நிர்மித்தகோபுரமும் அதற்கு ஆயிரம் நிலைகளும் நிறுத்தி அதிற்சேர்த்தபலபிரதிமைகள்பொன்னாலும் இரத்தினங்களாலும் அமைத்தான். மேற்கொண்ட உச்சியிலே ஆயிரந் தூபிகளைப் பிரித்தான. எ - று. (௫௬)

பாரு மண்டமுந் தாங்குவான் பஃறலைப் பசும்பொன்
மேருவாற்றல் தென்றுகொண் டருமறை விரிஞசன
ரேரு நன்னெறிச் சிந்தையா னுலகெலாம் பொறுக்க
நேரு மேருவொத் தெழுந்ததக் கோபுர நிலையே.

(இ - ள்.) உலகத்தையும் அண்டத்தையும் தாங்கும்படி பலதலைகளையுடைய பசும்பொன்னாகிய மேருமலையான தீ சாத்தியமாகாதென்று, அரிய வேதங்களைக் கூறிய பிரமதேவன், நல்லவழியை ஆலோசித்தமனதோடு உலகத்தையெல்லாந் தாங்கும்படி இயைபித்தமைத்த (மற்றொரு)மேருமலைபோன்று அக்கோபுர நிலை தோன்றியது. எ-று. (௬௭)

தூண மென்பநூ றாயிர நிரைநிரை தொகுத்தான
சேணி வந்தபாற சந்திர காந்தமீச செறித்தா
னீணெ டுங்கொடுங் கபோதகம பசும்பொனி னிழைத்தான்
மாணி லக்குல மணியினா லல்லது வமையான.

(இ - ள்.) தூணகளென்றுசொல்லப்படுபவை நூறாயிரக்கணக்கில் வரிசை வரிசையாக அமைத்தான. ஆகாயத்திலுயர்ந்த வெண்மைதங்கிய சந்திரகாந்தக கற்களைமேலே பரப்பினான நீண்டுநெடிதாகவளைந்த கபோதவரிசையைப்பசும் பொன்னாலவரிசைப்படுத்தினான பெரியபூமியிலுள்ள சிறந்த இரத்தினங்களாலல் லாது பிறிதாலலங்கரியான். எ - று. (௬௮)

போதி கைக்குல மரகதத் தியற்றினன பொலங்கோ
மேத கத்தினு னெடுவடிம் பொழுக்கினன விளக்குரு
சோதி மாமணி குயிற்றின பல்லுருத் தொகுத்தான
சீத ளத்தர ளத்தொடை மேற்பட்ச செறித்தான.

(இ - ள்.) [போதிகை] தூணமீதிருக்குஞ் சுமையடைக்கட்டைகளை மரகத ரத்தினத்தினாறசெய்தான. அழகிய கோமேதகத்தினாலே நீண்டவிளிம்பினைச் செய்தான. சோதியைப்பரப்பும்பெரியமாணிக்கங்களாலியற்றியனவாகியபல உரு வங்களைச்சேர்த்தான. குளிர்ந்த முத்துமாலையைமேலேகட்டினான. எ-று. (௬௯)

பரந்த வாளொளி ததும்பிய வச்சிரப் பலகை
நிரந்து கீழ்ப்படப் படுத்தன னிரைக்கிரத தொகுதி
சுரந்த பன்மணிப் பலகையா னெடும்படி தொகுத்தான
புரந்த வானகதி ரொளிமழுங குறவொளி புரிந்தான்.

(இ - ள்,) பரவிய வெள்ளொளிவீசிய வச்சிரரத்தினப் பலகையை வரிசைப் படுத்திக் கீழ்ப்பொருந்தப்பதித்தனன வரிசையாகிய கிரணத்தொகுதி பெரு கிய பலவகை ரத்தினப்பலகைகளால நெடியபடிக்கட்டுகளமைத்தான. (உலகி னைக்)காத்த ஆகாயவழியிற செல்லுமசூரியகாந்தியும மழுங்கும்படி காந்திசெய தான. எ - று. (௭௦)

சூளி கைப்புறத திருக்கதி ரிடறவிண டுவனறு
மாளி கைக்குல மளவொழிந் தனவென வகுத்தான
சாள ரம்பல பன்மணி குயிற்றினன சமைத்தா
னீள நின்றெழு வாயிலக ளவணவ ணிரைத்தான.

(இ - ள்.) சூளிகையின்பக்கத்தில, (சூரியசந்திரர்களாகிய) இருசுடரும் வழி யிடறும்படி ஆகாயமளாவிய மாளிகைக்கூட்டங்களை அளவிறந்தனவெனச்சொல் லும்படி நிருமித்தான. பலசாளரங்களைப் பலரத்தினங்களாற் சமைத்தான. நீள மாகநின்றுதோன்றும வாயில்கள ஆங்காங்கு வரிசையாகச் செய்தான். எ - று.

வாயி லின்றிய கவாததலம வாயிலக டோன்ற
வேய வாயிலகள வாயிலன றெனமன மருட்டப்
பாய வச்சிரத் தளவிசை வெள்ளொளி படைத்தான
மேய வாருதித திரைபுரண் டனவென விதித்தான்.

(இ - ள்.) வாயில்களில்லாத சுவர்களில் வாயில்கள்போலத் தோன்றவும், பொருந்திய வாயில்களை வாயில்களல்லவென மனதை மயக்கவும், பரவிய வச்சிர ரத்தினத்தை அளவாகச்சொல்லும் வெள்ளியவொளியையுடைத்தான (சில விடங்களில்) கடலானது பொருந்திய அலைகளை புரண்டதென்று சொல்லும்படி நிர்மித்தான். எ - று. (௪௨)

இயங்கு பேரொளி வெள்ளியங் கயிலையொன் றிருப்ப
வயங்கு பொற்கயி லாயமீ தெனச்சில மதிப்பத்
தயங்கு வாளரி யாசன மகவையுட் டந்தான்
முயங்கு பன்மணித் தொகுதியிற் கதிரொளி முளைப்ப.

(இ - ள்.) பிரகாசிக்கின்ற பேரொளியையுடைய அழகிய வெள்ளிமலையாகிய கைலாயகிரியொன்றிருக்கவும், விளங்குகின்ற பொன்மயமாகிய கைலாயமிது வென்று உலகினர் மதிக்கும்படி அதனிடையே கூடிய பலரத்தினங்களின் கூட்டத்தார் சூரியகாந்தி தோன்றும்படி ஒளிர்ந்த சிங்காசனத்தைச் சிருட்டித்தான். எ - று. (௪௩)

இனைய வாகிய திருச்சபை யலங்கொளி யியங்கத்
தினக ரன்பசும் புரவியுந் தம்மொளி திரிந்த
கனைக ருங்கட லுலகெலா மவ்வொளி கரப்ப
வனைச ராசரத் துருவுகட் புலப்படா மயங்கும்.

(இ - ள்.) இத்தன்மைத்தாகிய சிறந்தசபையின் பிரகாசிக்கின்ற காந்தியானது விளங்குதலால், சூரியனும் அவன்பச்சைக் குதிரையும் தங்கள் தேகவொளி மாறின. சப்திக்கின்ற கரிய கடல்சூழ்ந்த வுலகமுழுவதும் அவ்வொளியில் மறைய, அழகிய சராசரப் பொருள்களின் வடிவங்கள் கட்புலனுக்குத் தெரியாமல் மயங்கின. எ - று. (௪௪)

சிகர மீப்படச் செறித்தன னப்பெருஞ் சிகரப்
புகரின் மாமணி யிமைத்தெழு கொழுந்தொளி போகிக்
ககன மெங்கணும் பன்மணிக் குழம்பொடு கரத்தா
னிகரி லன்னவன் றீற்றிய தொக்குமா னிகழ்த்தின.

(இ - ள்.) சிகரத்தைமேலோங்கச் சிறப்பச் சேர்த்தனன் அந்தப்பெரிய சிகரத்தின்கணுள்ள குற்றமில்லாத பருத்தமாணிக்கங்களை ஒளிவிட்டு வீசுகின்ற கொழுந்தின் காந்தியானது ஒப்புசொல்லுமிடத்தில் இந்திரனுடைய உலகமுழுவதையும், பலரத்தினக்குழம்பால் தன்கையைக்கொண்டு ஒப்பில்லாத அவன் தீட்டியதை யொத்திருக்கும். எ - று (௪௫)

எண்ணி றந்தொழி யண்டமுற் றுயிர்த்தொகை யாவு
நண்ணி யெய்தினு மோர்புடை யொடுங்குமா னவைநீர்
வண்ண வார்திரைப் பிரளயம் புகுதினு மருங்கோர்
கண்ண டங்குமென் றலினி யென்சொலக் கடவோம்.

(இ - ள்.) கணக்கின்றியுள்ள அண்டமுழுவதுமுள்ள உயிர்த்தொகுதிகளெல்லாம் அடைந்திருந்தாலும் அதில் ஒருபக்கலிலடங்கும் குற்றநீங்கிய அழகிய நெடிய அலைகளையுடைய பிரளயவெள்ளம் புகுந்தாலும் பக்கலில் ஓரிடத்தில் அடங்கிவிடுமென்று சொல்லுவோமானால், இன்னும் அதனை என்ன வர்ணித்துச் சொல்லக்கூடும்? எ - று. (௪௬)

இன்ன தன்மைய வாகிய தெய்வமா சபையிற்
பொன்ன லங்கொளித் திகிரியோன் முதலிய புலவர்
மன்னு மாகணத் தொகுதியா யாவரும் வணங்க
வென்னை யாளுடை நாயக னினிதெழுந் தருளி.

(இ - ள்.) இவ்வகைத்தாகிய பெரியதெய்வசபையில், பொன்போலப் பிரகாசிக்குஞ் சக்கிராயுதமுடைய திருமால் முதலாகிய தேவர்கள், நிலைபெற்ற பெரிய கூட்டமாகிய சிவகணங்கள் எல்லோரும் வணங்கும்படி, என்னை யடிமையாக வுடைய சிவபெருமான் இனிதாக வெழுந்தருளி. எ - று. (௪௭)

வள்ளை வார்குழை மரகதப் பசுங்கொடி யைங்கைப்
பிள்ளை வெள்ளிலை வேற்படை யொருதனிப் பெருமா
னுள்ளு வந்தெழு முவகையி னொருங்குவந் திருப்ப
வெள்ளின் மாமணி யாசனத் திருந்தன னெம்மான்.

(இ - ள்.) வள்ளைக்கொடிபோலும் நெடிய குண்டலமணிந்த காதினையுடைய பசியகொடிபோன்ற உமாதேவியார் ஐந்து திருக்கரங்களையுடைய மூத்தபிள்ளையார் வெள்ளிய அச்சவடிவாகிய வேலாயுதமேந்திய ஒப்பற்ற இளையபிள்ளையாராகிய குமாரசுவாமி மனத்தின்கண் சந்தோஷித்தெழுகின்ற ஆநந்தத்தோடு ஒருசேரவந்திருக்கவும், எமது சிவபெருமான் இகழ்ச்சியில்லாதபெரிய ரத்தினசிங்காசனத்தில் வீற்றிருந்தனர். எ - று. (௪௮)

இலகு மாமணி மண்டபத் தரிமுத லிவானத்
புலவர் யாவருஞ் சொற்றனர் முறைமுறை புகுந்தார்
விலகி நின்றனர் நந்திகை வேத்திரம் புடைப்ப
வலகி லீண்முடிப் பன்மணி தெறித்தன ரநேகர்.

(இ - ள்.) பிரகாசிக்கின்றபெரிய இரத்தினமண்டபத்திலே திருமால்முதலாக ஏறிய தேவர்களெல்லாருந் துதிசொன்னார்கள் வரிசைவரிசையாகப் பிரவேசித்தார்கள். தூரமாக நின்றார்கள் திருநந்திதேவர் தமது கையிலுள்ள பிரம்பினலடித்ததலால் அநேகர் தங்கள் குற்றமில்லாத நெடிய முடிகளிலிருந்து பலரத்தினங்களைச் சிந்தினார்கள் எ - று (௪௯)

இரும ருங்கினு மரிமுதற் புங்கவ ரெவரு
மருவி நின்றன ராங்கவ ரணிமணி மகுட
மருண ராயிரங் கோடியின் மேற்பட வடைந்து
பொருப சுங்கதி ருமிழ்ந்துமிழ்ந் திமைப்பது போன்ற.

(இ - ள்) இருபுறத்திலும் திருமால்முதலிய தேவர்களெல்லாரும் பொருந்தி நின்றார்கள். அப்பொழுது அத்தேவர்களணிந்த ரத்தினகிரீடங்கள் (எப்படியிருந்தனவென்றால்) சூரியர் ஆயிரங்கோடிக்கதிகமாகவந்து சுடுகின்ற பரிய கிரணத்தைச்சிந்திச்சிந்திப் பிரகாசிப்பதுபோன்று விளங்கின. எ - று. (௫0)

மலர்க்க ருங்குரு ளோதிய வானவர் மகளி
ரிலிர்த்த சாமரை யெடுத்தன ரிருமருங் கிரட்ட
வுலத்த டம்புயக் கணத்தவர் நறும்புகை யோட்டச்
சிலிர்த்த திணசினைக் கற்பகம் பூமழை சிதற.

(இ - ள்.) மலர்சூடிய கரிய சுருண்ட கூந்தலையுடைய அரம்பாஸ்திரீகள் தலைபரந்த சாமரைகளைக்கையிற்றாங்கி இருபக்கலிலும் புரட்டவும், திரண்ட கல் போன்ற பரந்த தோளையுடைய சிவகணங்கள் மணம்பொருந்திய தூபம்போட

வும், குளிர்ச்சிவாய்ந்தவலிய கிளைகளையுடைய கற்பகவிருட்சமானது மலர்மாரி சொரியவும். எ - று. (௩௧)

நார தாதிய ரெடுத்திய னரப்பிசை யமுதஞ்
சோர வாயினின் றதிர்குரற் பல்லிய நுவைப்ப
மூரி யெண்டிசை யரகர வெனுநதொனி முழங்க
வேர வார்சடை யெம்பிரான் றிருச்சபை விளங்க.

(இ - ள்.) நாரதர் முதலானவர்கள் எடுத்து நடத்துகின்ற நரம்புக் கருவியின் இசையமுதமுஞ் சோர்வெய்துமபடி வாயினின்று அதிர்கின்ற குரலொலியோடு பலவாத்தியங்கள் முழங்கவும், மணம்பொருந்திய நெடியசடையையுடைய எமது சிவபெருமானுடைய சிறந்த சபையானது விளங்க. எ - று. (௩௨)

அவிழ்ந்த வார்சடை குலைந்தலைந் தருஞ்சுவற் புறத்துக்
கவிழ்ந்து சோர்தரச் சிந்தனை முந்துறக் கரத்தாற்
குவிந்த சென்னிய ரோடினர் கொடுந்தவ மலலாற்
றவிர்ந்த சிந்தைய ரடைந்தனர் சந்நிதிச் சபையில்.

(இ - ள்.) வலியதவமேயல்லாமல் (மற்றெல்லாவற்றையும்) நீக்கிய மனமுடைய முனிவர்கள், தமது கட்டவிழ்ந்த நீண்டசடையானது குலைந்தலைந்து, அரியதோட்புறத்தில்வீழ்ந்து தொங்கவும், தங்களமனம முற்பட, கூப்பிய கையுடன் வணங்கிய சிரமுடையவர்களாயோடி, சபையின் சந்நிதியி லடைந்தார்கள்.

ஆடி னார்சில ரங்கையிற் குடந்தமிட் டசைந்து
பாடி னார்சில ருயிர்த்தனர் சிலர்சிலர் பதைத்தார்
வீடி னாருயிர்த் தாரெனு முவகையால் விழிநீ
ரோடி னார்சிலர் புரண்டனர் சிலர்சில ருருண்டார்.

(இ - ள்.) அப்பொழுது அவர்களிற் சிலர் ஆனந்தக்கூத்தாடினார்கள். சிலர் அழகியகையினால [குடந்தம்] நாலவிரன்முடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிடைவைத்து நின்று அசைந்து பாடினார்கள். சிலர்பெருமூச்சுவிட்டார்கள். சிலர் பதைத்து மரித்தார்கள் (அவர்கள் மீண்டும்) பிழைத்தார்களென்னுஞ் சந்தோஷத்தாற் சிலர் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார்கள். சிலர் நிலத்திசைப் புரண்டார்கள். சிலர் உருண்டார்கள் எ - று. (௩௩)

உயிர்த்தி லார்சில ரொருத்தனித் தங்களை மறப்புற்
றயிர்த்தி லார்சில ரானந்த வாரிவீழ்ந் துடலம்
பெயர்த்தி லார்சிலர் பேசினர் சிலர்சிலர் பிரியாக்
குயிற்கு லம்படு பாகனைக் கண்டுகண் குளிர்ந்தார்.

(இ - ள்.) சிலர் சுவாசமவிட்டாரில்லை சிலர்தனித்தனி ஒப்பற்ற தங்களை மறந்து சந்தேகித்தாரிலர். சிலர் ஆநந்தக்கடலிற்படிந்து தேகத்தை யசைத்தாரிலர். சிலர் பலவாறு பேசினார்கள் சிலர் குயின்மொழியுடைய உமாதேவியாரை யென்றும் பிரியாது வாமபாகத்திலுடைய சிவபெருமானைத் தரிசித்துக் கண்கள் குளிரப்பெற்றார்கள். எ - று. (௩௪)

மெய்பொ டித்தனர் சிலர்சிலர் விம்மலுற் றயர்ந்து
செய்கை யற்றனர் சிலருயிர்ப் பெறிந்தனர் சிலரான்
மைய லுற்றனர் நாத்தடு மாறினர் மருண்டார்
பொய்க டிந்தரு மாதவ மியற்றிய புனிதர்.

(இ - ள்.) பொய்யை யகற்றி அரும்பெருந்தவஞ்செய்த பரிசுத்தர்களாகிய அம்முனிவர்களிற் சிலர் உடன்முழுதும் மயிர்க்கூச்செறிந்தார்கள். சிலர் பூரித்துச்சோர்ந்து செயலற்றிருந்தார்கள் சிலர்சுவாசித்துக்கொண்டிருந்தார்கள். சிலர் மனமயக்கெய்தினார்கள் சிலர் சொற்றடுமாறினார்கள். சிலர்பிரமித்தார்கள். எ-று.

இன்ன தன்மைய சவுனக ராதியர் மிவரை
யென்னை யாளுடை நாயகன் குழாத்தொடு மெதிர்ந்த
மனனு ஞானமறை வசிட்டனே முதலமர் தவத்தோர்
முன்னை நாரதன் முதலிய கடவுண்மா முனிவர்.

(இ - ள்.) இத்தகையதன்மையராகிய சவுநகர் முதலாகச் சொல்லப்பட்ட இந்தநைமிசாரணியமுனிவர்களை, என்னையாளாகவுடைய சிவபெருமான் திருக்கூட்டத்துடன் எதிர்ந்த நிலைபெற்ற நான்குவேதங்களுமுணர்ந்த வசிட்டர்முதலாகிய பெருந்தவமுடையோர்களும், பழமையாகிய நாரதர்முதலிய தெய்வீகம் பொருந்திய முனிவர்களும். எ - று. (௫எ)

காசி பன்றவக் கணுவன் கவுதமன் பிருகு
கோசி கன்பரா சரர்ததீ சியொடுங் குச்சர்
மாச றுந்தவத் தேவலர் முற்கலர் மரீசி
யேச றுந்தவத் துரோமச ரங்கிர சிவர்கள்

(இ - ள்.) காசிபர் தவத்தையுடைய கண்ணுவர் கவுதமர் பிருகு கௌசிகர் பராசரர் ததீசி குச்சகர் குற்றமற்றதவத்தையுடைய தேவலர் முற்கலர் மரீசி ஏசு தலற்ற தவமகிமையுடைய உரோமசர் அங்கிரசு ஆகிய இவர்களும். எ - று. ()

ஏனை மாமுனித் தலைவரு முவகைமிக் கெழுந்து
மோன மாதவ ரிவரொடு மெதிரெதிர் முனனி
யான வன்பொடு மளவளாய்த் தழுவின ராகி
மான மாதவத் தந்தணீர் கேட்கென வலிப்பார்.

(இ - ள்.) சிறந்த மற்றைய முனிசிரேஷ்டர்களும் சந்தோஷமதிகரித்துப் புறப்பட்டு, மௌனநிலையையுடைய பெருந்தவசிகள் இவர்களோடும் எதிரெதிராகக் கருதிய அன்புடன் அளவளாவித் தழுவிக்கொண்டவர்களாய் மானத்தையும் சிறந்த தவத்தையுமுடைய அந்தணர்களே! கேட்பீர்களாகவென்று சொல்லவாரானார்கள். எ - று. (௫கூ)

மூரி நாண்மலர்க் கிழவனன் றருளிய மொழியா
லார்வ முற்றெழு நைமிசா ரணியமுற் றடைந்தீர்
வார்கொ டுஞ்சடைச் சூதனோர் முகக்கலை மதியாற்
சூர டிந்தவன் கதையமு தினிதுறத் துய்த்தீர்.

(இ-ள்.) பழமையாகிய அன்றலர்ந்த தாமரைமலரில் வசிக்கும்பிரமதேவன் அக்காலத்திற் கூறியருளிய சொற்படி ஆசையதிகரித்துண்டாக நைமிசாரணியத்தைச்சென்றடைந்தீர்கள். நீண்டுவளைந்த சடையையுடைய சூதமுனிவரது முகமாகிய ஒற்றைக்கலையையுடைய சந்திரனால், சூரபன்மனைச்சங்கரித்த குமாரசுவாமியின் சரிதமாகிய அமிர்தத்தை இனிமையுண்டாகப் புசித்தீர்கள். எ - று.

ஆத லானுமக் கரிக்குமற் றயனுக்கு மரிய
வேத நாயகன் காட்சிதந் தருளினன் விருப்பாற்
றீதின் மாதவச் செய்கையிற் பெறுவன சிறந்தீ
ரோத வேண்டுவ தில்லெனா விழுப்பமுற் றுரைத்தார்.

(இ-ள்.) ஆனபடியால், திருமாலுக்கும் பிரமதேவனுக்கும் அறிதற்கரியவேத நாயகராகிய சிவபெருமான உங்களுக்குத் தரிசனந்தந்தருளினார். குற்றமில்லாத பெருந்தவச்செய்கையில் அடையவேண்டுவனவற்றில் விருப்போடு மேம்பட்டீர்கள். இனி, சொல்லவேண்டியதில்லையென்று மேன்மையான வார்த்தைகளை யெல்லாஞ்சொன்னார்கள். எ-று. (௬௧)

ஆய மாதவத் தலைவருக் காங்கருந் தவத்துத்
தூய நைமிசா ரணியமா தவந்தருந் துவன்றி
யேய வேண்டிய யாவையு மிசைப்பன விசைத்தார்
பாய வெள்விடை யவற்றெழு தேத்தினார் பணிவார்.

(இ-ள்.) அப்படிச்சொன்னவர்களாகிய பெருந்தவத்தலைவர்களுக்கு அப்பொழுது அருந்தவமுடைய புனிதமாகிய நைமிசாரணியத்துப் பெருந்தவசிகளும் தோன்றிச்சொல்லவேண்டிய உபசாரங்களையெல்லாஞ் சொல்லத்தக்கனவாகச் சொன்னார்கள். பாய்ந்திசெல்லும் வெண்மையாகிய இடபவாகனமுடைய சிவபெருமானைப் பணிந்து நமஸ்கரித்துத்துதிப்பாரானார்கள். எ-று. (௬௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சங்கரா போற்றி போற்றி தற்பரா னந்தா போற்றி
கங்கரா போற்றி போற்றி கண்ணுதற் பரமா போற்றி
பொங்கரா வணிந்த வேணிப் புண்ணியா போற்றி போற்றி
திங்களங் கண்ணித் தொல்லோய் சிவசிவ போற்றி போற்றி

(இ-ள்.) [சங்கரா] சுகத்தைச் செய்பவரே! போற்றி போற்றி. [தற்பரா] தனக்குத் தானே பரமானந்தமானவரே! போற்றி. [கங்கரா] (பிரமன்) தலைபொருந்திய கையையுடையவரே! போற்றி போற்றி. நெற்றிக்கண்ணையுடைய மேலானவரே! போற்றி. கோபித்த சர்ப்பத்தையணிந்த சடையையுடைய புண்ணிய சொரூபியே! போற்றி போற்றி. அழகிய சந்திரனைச் சிரோமாலையாகவணிந்த பழமையானவரே! சிவசிவ! போற்றி போற்றி. எ-று. (௬௩)

அரியயற் கெட்டாய போற்றி யானந்த நிருத்தா போற்றி
கரியமா ணிக்க மன்ன கறைமிடற் றிறைவா போற்றி
புரிதரு முகுள மூரற் பொங்கொளி நிலவு காட்டித்
திரிபுர மெரித்தாய போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ-ள்.) திருமாலுக்கும் பிரமனுக்கும் அதீதப்பட்டவரே! போற்றி ஆநந்தத்திருநடனஞ் செய்பவரே! போற்றி. கருமாணிக்கம்போன்ற விஷம்பொருந்திய கண்டத்தையுடைய தலைவரே! போற்றி. புரிந்த அரும்புபோன்ற புன்னகையால், மிக்ககாந்தியுடைய சந்திரிகையைக் காண்பித்துத் திரிபுரதகனஞ் செய்தவரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி. எ-று. (௬௪)

பூகரா மூந்நீ யானைப் புரந்துல களித்தாய் போற்றி
நீக்கமி லுயிர்கட் டோறு நின்றுண வளித்தாய போற்றி
யாக்கிய முகங்கடோறு மலப்புர ணடிரைக்குங் கங்கை
யேத்தகெறி சடையாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ-ள்.) மணம்வீசுந் தாமரையுந்தியையுடைய திருமாலைக்காத்து உலகத்தைக் காத்தவரே! போற்றி, நீக்கமில்லாத உயிர்களிலெல்லாம் நின்று உணவுகளைக் கொடுப்பவரே! போற்றி. (ஆயிரமாக) ஆக்கிய முகங்களிலெல்லாம்

அலைகள் புரண்டொலிக்கும் கங்காநதியான தூற்றெடுத்து வீசுகின்ற சடையை யுடையவரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (சுஙி)

முக்கணு யகனே போற்றி முழுமுதற் றலைவா போற்றி
நக்கனே போற்றி போற்றி நான்மறைக் கொழுந்தே போற்றி
யெக்குவெண் பிறையி னொங்கி யிருவிசும் படைந்து நின்ற
செக்கரம் பரமே போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்.) திரிநேத்திரங்களையுடைய தலைவரே! போற்றி. முழுமுதற் கடவுளே! போற்றி. [நக்கனே] திகம்பரரே! போற்றி. போற்றி நான்குவேதங்களின் உச்சியில் விளங்குபவரே! போற்றி. ஏறுகின்ற வெள்ளியபிறைச் சந்திரன்போலுயர்ந்து, பெரிய ஆகாயத்திற் பொருந்தி நின்ற அழகிய செவ்வானம்போன்ற பரமனே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி எ - று. (சுசு)

ஒருதனித் தலைவா போற்றி யுயிர்க்குயி ரானாய் போற்றி
கருணையங் கடலே போற்றி கனங்குழை யிடத்தாய் போற்றி
பொருசிலை வேனிற் காளை பொங்கழற் கொளுந்தி வீழத்
திருநுதற் றிறந்தாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி

(இ - ள்) ஒப்பற்ற தனியாகிய தலைவரே! போற்றி. சீவான்மாக்கட்கெல்லாம் பரமான்மாவானவரே! போற்றி. அழகிய கிருபா சமுத்திரமே! போற்றி கனமாகிய காதணியையுடைய உமாதேவியை வாமபாகத்தி லுடையவரே! போற்றி. போர்செய்யுங் கருப்புவில்லேந்திய வேனிற்காலத்திற் குரிய காளையாகிய மன்மதனை, அதிகரித்த தீயினுலெரிந்து விழும்படி அழகிய நெற்றி விழியைத் திறந்தவரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (சுஎ)

முற்பரா போற்றி யையைந் தாகிய முதல்வா போற்றி
நிற்பரா வினாக்கி ரங்கி நின்னிலை யளித்தாய் போற்றி
தற்பரா போற்றி போற்றி சகளநிட் களமே போற்றி
சிற்பரா னந்தா போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்) முதலாகிய பரமானவரே! போற்றி. இருபத்தைந்து மூர்த்தங்களாகிய தலைவரே! போற்றி. தேவரீரைத் துதித்தவர்களுக்கிரங்கித் தேவரீர் நிலைமையை யளித்தவரே! போற்றி தற்பரா! போற்றி. போற்றி. சகள நிட்களமே! போற்றி. சிற்பரானந்தரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (சுஅ)

தருமத்தற் பரமே போற்றி தவம்புரி தவமே போற்றி
கருணைவா ருதியே போற்றி கட்புலத் தரியாய் போற்றி
யொருதனிக் கயிலை கீண்டோன் புயநிரை யொடிய வொற்றைத்
திருவிர லூன்றத்தாய் போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்.) தருமமயமாகித் தமக்குத்தாமே பரமானவரே! போற்றி. தவஞ்செய்கின்ற தவசொரூபியே! போற்றி. கருணைக்கடலானவரே! போற்றி. கட்புலனுக்கு அருமையானவரே! போற்றி. ஒப்பற்ற திருக்கைலாயகிரியை யசைத்த இராவணனுடைய தோள்வரிசை யொடிபடும்படி ஒரு திருவிரலை யழுத்தியவரே! போற்றி சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (சுகூ)

எந்தையே போற்றி போற்றி யிறைவனே போற்றி போற்றி
தந்தையே போற்றி போற்றி தாயுமே போற்றி போற்றி
முந்தையோய் போற்றி போற்றி முக்கண்எம் பெருமா போற்றி
செந்தழற் கொழுந்தே போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்.) எமது தந்தையானவரே! போற்றி போற்றி. தலைவராயுள்ளவரே போற்றி போற்றி. தகப்பனானவரே! போற்றி போற்றி. தருமசொரூபியே! போற்றி போற்றி. முற்பட்டவரே! போற்றிபோற்றி. திரிநேத்திரங்களையுடைய எமது பெருமானே! போற்றி. செவ்விய அக்கினிசொரூபமானவரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி எ - று. (௭௦)

வம்பவிழ் மலர்க்கு ழலோதி மலைமக ளுலைவா போற்றி
பம்புசெங் குருதிச் சூலப் படையுடைப் பரனே போற்றி
வெம்புலி யரவ நோக்கி வேட்கைமிக் கிரப்ப ஞானச்
செம்பொனம் பலத்து ளாடுஞ் சிவசிவ போற்றி போற்றி

(இ - ள்.) மணந்தோடலர்ந்த மலர்மாலையணிந்த கூந்தலையுடைய பார்வதராசகுமாரியின் கணவரே! போற்றி. சிவந்த உதிரந்தோய்ந்த சூலாயுதத்தையுடைய மேலானவரே! போற்றி. வெவ்வியபுலி(யாகிய வியாக்கிரபாத) முனிவரும் அரவமாகிய (பதஞ்சலி) முனிவரும் ஆசைமிகுந்து சேவிக்க, ஞானசொரூபமாகிய செம்பொன்னாலாகிய அம்பலத்திலே திருநடஞ்செய்கின்ற சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (௭௧)

மாசற விளங்குஞ் சோதி மாணிக்க மலையே போற்றி
பூசுவெண் பொடியாய் போற்றி புராதனா போற்றி போற்றி
யேசறு தவத்தோர்க் குள்ளத் திருளற விளக்கு ஞான
தேசிக பரமா போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்.) குற்றமறப் பிரகாசிக்குஞ் சோதிமாணிக்க மலையாயுள்ளவரே! போற்றி. பூசிய தாவள்யமான விபூதியையுடையவரே! போற்றி. பழைமையானவரே! போற்றி போற்றி ஏசுதலற்ற தவமுடையோர்களுக்கு மனத்திலுள்ள அஞ்ஞான நீங்கப் பிரகாசிக்கின்ற ஞானதீபமாகிய தேசிகரே! மேலானவரே! போற்றி. சிவசிவ! போற்றி போற்றி எ - று. (௭௨)

ஐயனே போற்றி போற்றி யமலனே போற்றி போற்றி
மெய்யனே போற்றி போற்றி விமலனே போற்றி போற்றி
பையரா வணியாய் போற்றி பவளமால் வரையே போற்றி
செய்யனே போற்றி போற்றி சிவசிவ போற்றி போற்றி.

(இ - ள்) ஐயரே! போற்றி போற்றி. அமலரே! போற்றி போற்றி உண்மையமானவரே! போற்றிபோற்றி. மலரகிதரே! போற்றி போற்றி படம்பொருந்திய பாம்பினை ஆபரணமாக வணிந்தவரே! போற்றி. பெரிய பவளமலைபோல்பவரே! போற்றி. செவ்வந்திருமேனியுடையவரே! போற்றி போற்றி. சிவசிவ! போற்றி போற்றி. எ - று. (௭௩)

என்பன பலவும் பன்னி யெடுத்தெடுத் திரங்கி [illegible]
யன்புநெக் குருகிச் சிந்தை யண்ணல்பாற் செலுத்தி நீளார்
புன்புறம் பொடிப்ப நின்று புரிசடைப் புனித னுடன்
மென்பதக் கமலந் தாழ்ந்து வீழ்ந்தனர் முனிவ ரியாரும்.

(இ - ள்.) என்பனவாகியவற்றையும் எடுத்தெடுத்துக்கூறியாசித்துத்துதித்து, அன்புடன் நெகுவிட்டு, மனத்தைச்சிவபெருமானிடத்திற்செலுத்தித்திருப்பாராய், முனிவர்களியாவரும் உடல்முழுதும் மயிர்க்கூச்செறியநின்று, புரிந்தசடையையுடைய பரிசுத்தராகிய சிவபெருமானது திருநடம்புரியும் மெல்லியபாததாமரையிற்படிந்து நமஸ்கரித்தார்கள். எ - று. (௭௪)

இத்திற முனிவா யாரு மென்புடை நதுருகி யுள்ள
மொத்துற நோக்கி யெம்மான் றிருவரு ளுவப்ப தானுன்
மெய்த்தவத் திறத்தீர் நீவிர் வேண்டிய விருப்பாற் சூத
னுய்த்துரைத் துணர்த்த வெம்பாற் சரிதைமுற் றுணரப் பெற்றீர்.

(இ - ள்) இவ்வகையாக முனிவர்களெல்லாரும் என்புகளுடைந்துருகு மன மொத்திருப்பக்கண்டு, எமது சிவபெருமானதிருவுள்ளங்களிப்பதானுர்-உண்மைத் தவத்திறமுடையவர்களே! நீங்கள்வேண்டியவிருப்பத்துடன், சூதமுனிவர் ஆலோசித்துச்சொல்லித்தெளிவிக்க எம்முடையசிவசரிதமுழுவதும் அறியப்பெற்றீர்கள்

பரமா சியமென் றோது மிக்கதைப் பரவை யாய்ந்து
விரவிய காண்ட மேழு மறுவற விளங்கப் பெற்றீ
ரொருவினன் மறையா லெம்மைப் பாசினீ ருமை நோக்கிக்
கரையழி யுவகை யோடு மெம்முழைக் காட்சி தந்தேம்.

(இ - ள்.) மேலான அந்தரங்கமென்றுசொல்லப்பட்ட இக்கதாசாகரத்தை [கந்தபுராணசிவரகசியக்கண்டத்தை] ஆராய்ந்து, பொருந்திய சப்தகாண்டங்களை யும் குற்றமற நன்குணரப்பெற்றீர்கள். நீக்கமில்லாதநல்ல வேதவாக்கியங்களால் நம்மைத்துதிபுரிந்தீர்கள் உங்களைப்பார்த்து எல்லையில்லாதபேரானந்தத்தோடும், எமது தரிசனத்தைக்கொடுத்தோம். எ - று. (எகூ)

நீவிரிங் கியற்று நின்ற மாதவ நினைந்தே மலலேந்
சேவலங் கொடியோன் றெய்வச் சரிதைநீர் தெளியப் பெற்றீ
ராவது கருதி நும்பா லளித்தன மருந்த வத்தீ
ரோவறு கருத்தில் வேட்கை யுரைத்திரென் றருளிச் சொல்வார்.

(இ - ள்) நீங்கள் இவ்விடத்திற்புரிகின்ற பெருந்தவத்தைக்கருதினேமல் லோம் அழகிய சேவற்கொடியையுடைய குமாரசுவாமியின தெய்வீகந்தங்கிய சரிதத்தை நீங்கள் அறியப்பெற்றீர்கள். ஆனதுபோசித்து உங்களுக்கு அநுக்கிர கித்தோம். அருந்தவம்புரிந்தமுனிவர்களே! கெடுதலற்றமனதில் விரும்பியதைச் சொல்லுங்களென்றருளிச்செய்ய, முனிவர்கள் சொல்லுகின்றார்கள் எ-று (எஎ)

இப்பெருஞ் சரிதை கேட்டோர்க் கெம்பிரான் காட்சி நல்கி
முப்பெருஞ் சிறப்பு நல்கி முத்தியீ றளித்தல் வேண்டுஞ்
செப்பருங் குணத்த ரன்பாற் சிந்தைகின் சரிதை கேட்ப
தொப்பரு நின்ம றமை வேண்டுது முடையோ யென்றார்.

(இ - ள்) எமதுபெருமானே! எம்மை உடையவரே! இம்மகாசரிதத்தைச் சிரவணஞ்செய்பவர்களுக்குத் தேவரீர்காட்சியளித்து, (அறம்பொருளின்பமென னும்)பெரியமூன்றுசிறப்புக்களுங்கொடுத்து, அவர்கள் தேகாந்தத்தில மோக்ஷ முந் தந்தருளல் வேண்டும் சொல்லுதற்கரிய நற்குணமுடையவர்கள் அன்பு பொருந்திய மனதுடன்தேவரீர்சரிதையைக்கேட்பதும், ஒப்பற்றதேவரீரை மற வாமையும்வேண்டுகின்றோ மென்றார்கள். எ - று. (எஅ)

எம்பிரான் றொண்ட ரோடு மளவளா யிருத்தன் மூக்கட்
டம்பிரா றுரிய வெண்ணீ றஞ்செழுத் திவற்றைச் சாத

னம்பரின் விளையாட் டெல்லாங் காண்வர நல்க வேண்டு
மிம்பரி னெமக்கு முத்தி யீதென விரந்து நின்றார்.

(இ - ள்.) கடவுளே! எமது பெருமானாகிய தேவரீருடைய அடியார்களோடும் அளவளாவியிருக்கவும், திரிநேத்திரங்களையுடைய தேவரீருக்குரிய திருவெண்ணீறு பஞ்சாக்ஷரமாகிய இவற்றையடையவும், தேவரீர் திருவிளையாடல்களை யெல்லாங் காணவுமவரந்தரவேண்டும் இவ்வுலகத்தில் அடியேங்கட்கு இதுவே முத்தி யின்பமென்றுயாசித்து நின்றார்கள். எ - று. (எகூ)

என்றிவ ரெடுத்துச் சொற்ற யாவையு மினிது நல்கிக்
கொன்றையஞ் சடிலி தேவர் குழாத்தொடுங் கைலை புக்கா
னின்றமா முனிவர் நோக்கி நெஞ்சழிந் திருகை கூப்பிக்
கன்றுதாய்ப் கிரங்கு மாபோற் கரைந்துகண் கலுழ்வ தானார்

(இ - ள்.) என்று இம்முனிவர்கள் எடுத்துக்கூறியவற்றையெல்லாம் இனிதாகப்பிரசாதித்து, அழகியகொன்றைமாலையணிந்த சடையையுடைய சிவபெருமானதேவர்கூட்டத்துடன் திருக்கைலாயத்தையடைந்தனர் அங்கிருந்த சிறந்த முனிவர்கள் அதனைக்கண்டு மனம்வருந்தி இருகரங்களைக்குவித்து, கன்றுக்குட்டியானது தாய்ப்பசுவுக்காகவருந்தும் வகைபோலவருந்திக்கண்ணீர்சொரிந்தார்கள்.

தெய்வமாக் கயிலை நோக்கி யெம்பிரான் சேற ஞெக்கிப்
பொய்யின்மா தவத்தர் யாரு மொருவழிக் கொண்டு போந்தார்
மையின்மா தவத்துச் சூத முனிவனை வணக்கம் போக்கி
யையநின் னருளாற் பெற்றே மிப்பய னளிய மென்றார்

(இ - ள்.) தெய்வீகம்பொருந்தியபெரிய கைலாயகிரியைநோக்கி எமது சிவபெருமான்செல்லுவதைக்கண்டு, பொய்மையில்லாத பெருந்தவசிகளெல்லாரும் மனதையொருவழிப்படுத்தித் திரும்பினார்கள். குற்றமில்லாத பெருந்தவமுடைய சூதமுனிவரை நமஸ்காரஞ்செய்து, ஐயனே! தேவரீர் திருவருளால் எளியேங்கள் இப்பெரும்பயனையடையப்பெற்றோமென்றார்கள். எ - று. (அக)

பூக்கமழ் கமலத் தோனு லிவ்வுழைப் போந்தே மெங்கள்
பாக்கிய மிருந்த வாநீ யிந்நிலை படரப் பெற்றேந்
தாக்குவெஞ் சமரில் வெஞ்சூர் தடிந்தவன் சரிதை யீங்குன்
வாக்கினு லுணரப் பெற்றே மினிப்பெறு வரனு முண்டோ.

(இ - ள்.) மணம்பொருந்திய தாமரைமலரிலெழுந்தருளிய பிரமதேவனால் இவ்விடத்திற்கு வந்தோமாகிய அடியேங்கள் பாக்கியம் இருந்தவகையாக, தேவரீர் இந்நைமிசாரணியத்திற்கு அடையப்பெற்றோம். மோதுகின்றகொடியயுத்தத்திலே வலியசூரபன்மனைச் சங்கரித்த குமாரக்கடவுளின் சரித்திரத்தை இப்பொழுது தேவரீர்திருவாக்கால் அறியப்பெற்றோம் இன்னும் அடையத்தக்க வரமொன்றுள்ளதோ? எ - று. (அஉ)

இப்பெரும் புராணங் கேட்ப திதுபடித் துரைப்ப தீது
செப்பருந் தலமற் றெல்லாம் வரன்முறை செப்பு கென்றா
துப்புவிட் டனைய வேணிச் சூதமா முனிவன் சொன்ன
வப்பரி சனையர்க் கெல்லா மெடுத்தெடுத் தறைவ தானன்.

